# مَغَانِي

# மார்க்க சட்டக் கருவூலம்
# 'மஙானீ'

(மாப்பிள்ளை லெப்பை ஆலிம் என்ற)

அல்லாமா செய்யிது முஹம்மது லெப்பை (றலி) அவர்கள்

வெளியிடுவோர்:

சுலைமான் ஆலிம் அறக்கட்டளை

நான்காம் மாடி, ஜாவர் பிளாஸா
1-A நுங்கம்பாக்கம் ஹைரோடு
சென்னை - 600 034.

# இந்த நூலைத் தொகுத்ததின் நோக்கம்

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ خَيَّرَ مَنْ تَفَقَّهَ فِي الدِّيْنِ.
وَصَيَّرَهُمْ مَا بَيْنَ الْهَادِيْنَ وَالْمُهْتَدِيْنَ.
وَصَلَّى اللّٰهُ وَسَلَّمَ وَبَارَكَ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدِنِ
الْقَائِلِ مَا عُبِدَ اللّٰهُ بِشَيْئٍ اَفْضَلَ مِنَ الْفِقْهِ
فِي الدِّيْنِ. وَاٰلِهٖ وَصَحْبِهٖ وَتُبَّاعِهٖ اَجْمَعِيْنَ.

அல்லாஹுத் தஆலாவைப் புகழ்ந்து, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மீதும் அவர்களின் கிளையார்கள், தோழர்கள் அன்னாரைத் தொடர்ந்தவர்கள் அனைவரின் மீதும் சலவாத்தும் ஸலாமும் கூறிய பின், கீழக்கரையைச் சேர்ந்த அஹ்மது லெப்பை ஆலிம் அவர்களின் குமாரன் அல்லாஹ்வின் ரஹ்மத்தை ஆதரவு வைத்துள்ள செய்யிது முஹம்மது ஆலிம் (மாப்பிள்ளை லெப்பை ஆலிம்) கூறுவதாவது:

நம் நாட்டில் முஸ்லிம்களில் பெரும்பாலோர் அரபி மொழியில் எழுதப்பட்டுள்ள மார்க்க நூல்களைப் பார்த்து, மார்க்க விளக்கங்களைத் தெரிந்துகொள்ள முடியாமலிருக்கிற காரணத்தினால், இதற்கு முன் நான் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்டுள்ள ஃபத்ஹுல் மதீன், ஃபத்ஹுஸ்ஸலாம், ஃபத்ஹுத்தய்யான் ஆகிய நூற்களிலிருந்தும், இன்னும் பிற நூற்களிலிருந்தும், திரட்டப்பட்ட கருத்துக்களை ஒன்று சேர்த்து ஒரே நூலாக வெளியிட வேண்டுமென பலர் என்னை வேண்டிக்கொண்டதனால் இந்த நூலை நான் தொகுத்தேன்.

நான் இந்த கிதாபுக்கு ஆதாரமாக இமாம் ஷாஃபிஈ (ரஹ்) அவர்களையும் அவர்களின் சொல் கொண்டு தொகுக்கப்பட்ட 'ஃபிக்ஹுல் அக்பர்' என்னும் கிதாபிலுள்ள சில விஷயங்களையும், இமாம் ஙஸ்ஸாலி (ரஹ்) அவர்களுடைய 'இஹ்யா உலூமித்தீன்' என்ற கிரந்தத்திலுள்ள பல விஷயங்களையும் எடுத்துக் கொண்டேன். ஆகையினால்தான் மற்ற இமாம்களைப் பற்றியோ மற்ற நூல்களைப் பற்றியோ இதில் நான் குறிப்பிடவில்லை. மற்றெல்லா கிதாபுகளிலுமுள்ள விஷயங்கள்

அனைத்தும் மேற்கூறப்பட்ட இரண்டு கிதாபுகளுக்குள் அடக்கமாகி விட்டபடியால் மற்றவை தேவையில்லாமல் ஆகிவிட்டன.

## இந்தப் பெயர் வைத்த காரணம்

ஆகையால் இந்த கிதாபில் அகீதா, (கொள்கை) தவ்ஹீத், (ஏகத்துவம்) மஃரிஃபா, (ஞானம்) ஃபர்ளு, (கடமை) ஷர்த்து, (நிபந்தனை) வாஜிப், (அத்யாவசியமானது) சுன்னத்து, (நபியவர்களின் நடைமுறை) ஹலால், (ஆகுமாக்கப்பட்டது) ஹராம், (தடை செய்யப்பட்டது) மக்ரூஹ், (வெறுக்கப்பட்டது) ஆகிய விபரங்கள் அனைத்தும் கூறப்படும். மேலும் சில ஹதீஸ்களும், சில உபதேசங்களும், மனதில் உறுதியும் ஆர்வமும் ஏற்படுவதற்காக, சில இடங்களில் சில பாடல்களும் இதில் சொல்லப்படும். ( இன்ஷா அல்லாஹு தஆலா.) எனவே இந்நூலுக்கு கீழ் கண்டபெயர் வைக்கப்பட்டது.

" مَعَانِيْ مُلَحِ التِّبْيَانِ فِيْ شَرْحِ مَعَانِيْ فَتْحِ الدَّيَّانِ "

"ஃபத்ஹுத்தய்யான்" என்ற நூலின் கருத்துக்களை விவரிப்பதில் தெளிவான நன் மொழிகளுடைய பொக்கிஷங்கள் " என்பது இதன் பொருளாகும். கருக்கமாக இந்நூல் مَعَانِيْ 'மஙானீ' (பொக்கிஷங்கள்) என்றே குறிப்பிடப்படும்.

அல்லாஹுத்தஆலா இந்த நூலை கலப்பற்ற அமல்களில் ஓர் அமலாக ஆக்கி, இதன் மூலமும் இதற்கு முந்திய நூல்களின் மூலமும் நானும் இந்த நூல்களை வாசிப்போரும் நற்செயல்புரிந்து, பாவங்கள் மன்னிக்கப்படுவதற்குக் காரணமாகவும் ஆக்கி வைத்திடுவானாக! மேலும் ஆலிம்கள், ஸாலிஹீன்கள் ஆகியோரிடம் இந்நூல் ஏற்கப்பட்டதாக ஆக்கி, எனக்கும் என்னுடைய பெற்றோர், மனைவி மக்கள், குடும்பத்தினர் அனைவருக்கும், என்னுடைய நேசர்கள், நான் கடமைப்பட்டவர்கள், என்னுடைய ஷைகுமார்கள், மாணவர்கள், முஸ்லிமான ஆண்கள், பெண்கள், பெரியோர், சிறியோர் ஆகியோருக்கும், இந்நூலில் சொற்குற்றம் பொருட்குற்றம் ஏதேனும் இருந்தால் அவற்றைத் தங்களின் அறிவினால் திருத்தித் தருகின்ற நல்லறிஞர்கட்கும் அல்லாஹுத்தஆலா தன்னுடைய ரஹ்மத்தையும் மன்னிப்பையும் தந்தருள்வானாக. ஆமீன்!

இங்ஙனம்
செய்யிது முஹம்மது (மாப்பிள்ளை லெப்பை)

(அஹ்மது லெப்பை ஆலிமின் குமாரன்)
கீழக்கரை.

# தீன் எனும் சொல்லுக்கு விளக்கம்

தீன் என்ற சொல்லுக்கு மூன்று பொருள்கள் உண்டு:

1. إِسْلَامٌ இஸ்லாம் (வழி பாடு)
2. عَادَةٌ ஆதத்து (வழக்கம்)
3. جَزَى ஜஸா (ஊதியம்)

இந்த முப்பொருளையும் பொதிந்ததுதான் தீன் எனும் மார்க்கம்.

தீன் என்பது வழிபாடு என்பதற்கு ஆதாரம் அல்லாஹு தஆலாவின் பின்வரும் திருவசனமாகும்:-

إِنَّ الدِّيْنَ عِنْدَ اللهِ الْإِسْلَامُ

"திட்டமாக தீன் என்பது அல்லாஹ்விடம் இஸ்லாம்தான்."

தீன் என்பது ஆதத்து (வழக்கம்) என்பதற்கு ஆதாரம்:-

لَكُمْ دِيْنُكُمْ وَلِيَ دِيْنِ

"நீங்கள் வழக்கமாக்கிக் கொண்ட இணைவைப்பது உங்களுடைய மார்க்கமாகவும் நான் வழக்கமாக்கிக்கொண்ட ஏகத்துவம் என்னுடைய மார்க்கமாகவும் இருக்கிறது" என்ற திருவசனமாகும்.

தீன் என்பது (ஜஸா) ஊதியம் பெறுதல் என்பதற்கு ஆதாரம் :-

مَالِكِ يَوْمِ الدِّيْنِ

"கைமாறு வழங்கப்படும் நாளின் அதிபதி" என்ற திருவசனமாகும். எனவே அல்லாஹு தஆலாவிற்கு வழிபடுதல் என்பது நம்முடைய வழக்கமாக இருந்தால் மறுமையில் நற்பிரதிபலன் உண்டு என்பது உறுதியாகிவிட்டது.

மேலும் ஹதீஸில் இதற்கு ஆதாரமாவது :-

كَمَا تَدِيْنُ تُدَانُ

"நீ வழிபடுவது போன்று கூலி கொடுக்கப்படுவாய்" என்பதாகும்.

தீன் என்பது இஸ்லாம் என்றும் இஸ்லாம் என்பது தீன் என்றும் கூறப்படும். இதற்கு ஆதாரம் பின்வரும் திருவசனமாகும்:-

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

إِنَّ اللّٰهَ اصْطَفٰى لَكُمُ الدِّيْنَ فَلَا تَمُوْتُنَّ إِلَّا وَاَنْتُمْ مُّسْلِمُوْنَ ۝ (2 :132)

"திட்டமாக அல்லாஹ் உங்களுக்கு இந்த தீனை தேர்ந்தெடுத்துக்கொண்டான். எனவே நீங்கள் முஸ்லிம்களாக இருந்தே தவிர மரணிக்கவேண்டாம்" இவ்வசனம் தீன், இஸ்லாம் இரண்டும் ஒன்று தான் என்பதற்கு ஆதாரமாகும்.

தீன் என்பதற்கு மார்க்கம் என்று பொருளாகும். மார்க்கம் என்பது நேரான மார்க்கம், தவறான மார்க்கம் என்று இரு வகையுண்டு. நேரான மார்க்கம் இஸ்லாம் ஒன்றுதான். தவறான மார்க்கங்கள் உலகத்தில் ஆயிரத்து எழுநூறு வரை இருப்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளது.

நாம் நேரிய தீனுல் இஸ்லாத்தில் நிலைத்திருக்க அவனிடம் துஆ செய்வது ஃபர்ளாகும். ஆகவேதான் :-

اِهْدِنَا الصِّرَاطَ الْمُسْتَقِيْمَ ۝

"எங்களை நேரான வழியில் நடத்தாட்டுவாயாக!" என்று ஒவ்வொரு தொழுகையிலும் கேட்பது ஃபர்ளாக்கப்பட்டுள்ளது. "

ஒருவருக்கு இவ்வுலகில் எவ்வளவு பாக்கியங்கள் கொடுக்கப்பட்டிருந்தாலும் இஸ்லாம் என்ற பாக்கியம் கிடைத்ததற்கு அவையெல்லாம் சமமாக மாட்டா. எனவே இஸ்லாம் நம்மிடம் நிலைத்திருப்பதற்காக நாம் துஆ கேட்பது ஃபர்ளாக்கப் பட்டிருப்பது போல், அந்த பாக்கியம் நமக்கு கிடைத்ததற்காக நன்றி செலுத்துவதும் ஃபர்ளாகும். முஸ்லிமான ஒருவர் தீனுல் இஸ்லாத்தை மகத்துவம் மிக்கதாக எண்ணாமலும் அதற்காக நன்றி செலுத்தாமலும் இருந்தால் அவருடைய கடைசி முடிவு தீய முத்திரை உடையதாக ஆகிவிடும் என்பதை பயப்பட வேண்டும். அவ்வாறு ஆவதை விட்டும் அல்லாஹ் நம்மைக் காத்தருள்வானாக!

தீன் என்னும் கட்டிடத்திற்கு நான்கு தூண்களுண்டு. முதலாவது ஈமான்; (நம்பிக்கை) இரண்டாவது இஸ்லாம்; (வழிபாடு) மூன்றாவது தவ்ஹீது; (ஏகத்துவம்) நான்காவது மஃரிஃபா, (அல்லாஹ்வை அறிதல்). இந்நான்கிலொன்று மாறுபட்டால் தீனும் மாறுபட்டுவிடும்.

# 1. ஈமான் பற்றிய பாடம்

அல்லாஹு தஆலா திருக்குர்ஆனில்

يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا آمِنُوا بِاللهِ وَرَسُولِهِ وَالْكِتَابِ الَّذِي نَزَّلَ
عَلَى رَسُولِهِ وَالْكِتَابِ الَّذِي أَنْزَلَ مِنْ قَبْلُ ، وَمَنْ يَكْفُرْ بِاللهِ
وَمَلَائِكَتِهِ وَكُتُبِهِ وَرُسُلِهِ وَالْيَوْمِ الْآخِرِ فَقَدْ ضَلَّ ضَلَالًا
بَعِيدًا ۝ (4:136)

"ஈமான் கொண்டவர்களே! நீங்கள் 'அல்லாஹ்வைக்கொண்டும், அவனுடைய தூதரைக்கொண்டும், அவன் தன்னுடைய (இத்) தூதர் மீது அருளிய இவ்வேதத்தைக் கொண்டும், இதற்கு முன்னர் அவன் அருளிய வேதங்களைக்கொண்டும் ஈமான் கொள்ளுங்கள். (அதில் நிலைத்திருங்கள்) எவன் அல்லாஹ்வைக்கொண்டும், அவனுடைய மலக்குகளைக் கொண்டும், அவனுடைய வேதங்களைக்கொண்டும், அவனுடைய தூதர்களைக்கொண்டும், இறுதிநாளைக்கொண்டும், நிராகரிக்கின்றானோ அவன், நிச்சயமாக வெகுதூரமான வழிகேட்டில்தான் செல்லுகின்றான்" என்று கூறியுள்ளான்.

ஈமான், இஸ்லாம், இஹ்ஸான் ஆகிய விபரங்களை மக்களுக்கு விளக்குவதற்காக ஹஜ்ரத் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் دَحِيَةُ الْكَلْبِيُّ 'தஹியத்துல் கல்பீ' என்ற ஸஹாபி யவர்களின் தோற்றத்தில் நபி (ஸல்) அவர்களிடம் வந்து கேள்விகள் கேட்டபோது, நபி (ஸல்) அவர்கள் பதிலளித்த ஹதீஸ் உமர் (ரலி) அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ளது. இதனை எல்லா இமாம்களும் அறிவித்துள்ளனர். இமாம் ஷாஃபிஈ (ரஹ்) அவர்கள் 'ஃபிக்ஹுல் அக்பர்' என்னும் கிதாபில் இதனை பின் வருமாறு விளக்கியுள்ளார்கள்:-

ஈமான் என்பது இதயத்தினால் உறுதிகொண்டு, நாவினால் கூறி, உறுப்புகளினால் அமல் செய்வதுமாகும். பிறகு ஈமானுக்கு அடிமரமும் பணர் (கிளை) களும் உள்ளன. ஈமானின் வேராகிறது: அல்லாஹ்வை அறிவதும், அவனை உண்மைகொள்வதும், நம்பிக்கை கொள்ளவேண்டியவற்றை நம்பிக்கை கொள்வதுமாகும். இவற்றை விட்டால் காஃபிராகிவிடுவான்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

அதன் கிளைகள் பல உண்டு. அவற்றில் சிலதை விட்டால் காஃபிராக மாட்டான். ஆனால் பெரும்பாவியாவான். ஐந்துநேரத் தொழுகைகள் போல், அதன் ஷர்த்துகளைப்போல். இன்னும் சிலதை விட்டால் பாவியாகமாட்டான். எனினும் சிறப்பை விட்டவனாவான், சுன்னத்தான தொழுகைகள் போல். இன்னும் சிலதைச்செய்வதாலோ, செய்யாமல் விடுவதாலோ நன்மையுமில்லை, குற்றமுமில்லை. இதனை முபாஹ் (ஆகுமாக்கப்பட்டது) என்று கூறப்படும். அரைகுறை பசியோடு உணவு சாப்பிடுவதுபோல். ஈமானில் கூடுதல், குறைவு உண்டாவது இந்தக்கிளைகளில் கூடுதல் குறைவு உண்டாகும் போதுதான். ஆனால், ஈமானின் அடிப்படையில் குறைவு ஏற்பட்டால் அது குஃப்ரை உண்டாக்கிவிடும்.

### ஈமான் கொள்ளும் விதம்

ஈமான் கொள்வதில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கற்றுத்தந்தவைகளை கீழே விவரிக்கப்படுகிறது. தீனுடைய கட்டாயக் கடமைகள் நான்கில் முதலாவது ஈமானாகும். இது ஆறு விஷயங்கள் கொண்டதாகும். இவை ஈமானின் ஃபர்ளுகள் எனப்படும்.

### ஈமானின் ஃபர்ளுகள் ஆறு.

1. **முதலாவது அல்லாஹ்வைக் கொண்டு நம்பிக்கை (ஈமான்) கொள்ளுதல்.** அதாவது அல்லாஹ் ஒருவன்; அவன் தன்னுடைய உள்ளமையிலும், பண்புகளிலும், செயல்களிலும், இணை துணையற்றவன்; அவனுக்கு மாதா,பிதா, மனைவி, மக்கள் உற்றார் உறவினர் எவருமில்லை; ஊண், குடிப்பு, உறக்கம், மறதி, அழுகை, சிரிப்பு, நோய், சுகம், இவை எதுவும் அவனுக்குக் கிடையா. பல நிறம் பல குணம் (குணம் மாறுதல்) நீளம், அகலம், நெட்டை, குட்டை ஆகிய அனைத்தை விட்டும் நீங்கியவன்; அவன் ஆணுமல்ல, பெண்ணுமல்ல; அலியுமல்ல. அவன் இப்படித்தான் என்ற மட்டு திட்டம் அனைத்தை விட்டும் தூய்மையானவன். முக்காலம், ஆறுதிசை, எண்கோணம், ஐயறிவு, சந்தேகம், ஊசாட்டம் அனைத்தைவிட்டும் பரிசுத்தமானவன் என்று நம்பிக்கை (ஈமான்) கொள்வதாகும். (அல்லாஹ்வின் உள்ளமை, பண்புகள், திருநாமங்கள், செயல்கள் ஆகிய நான்கில் ஒவ்வொன்றிலும் பத்து அடிப்படைகள் இருக்கின்றன. அவை பின்னால் விவரிக்கப்படும்.)
2. **இரண்டாவது அவனுடைய மலக்குகளைக் கொண்டு நம்பிக்கை கொள்ளுதல்.** அவர்கள் பூதங்களினால் படைக்கப்பட்ட மனிதர்களைப்போல் அல்லாமல் ஒளியினால் படைக்கப்பட்ட ஆத்மீகமானவர்கள் என்றும், அவர்கள் ஆண்களுமல்ல, பெண்களுமல்ல வென்றும், பல விதமான உருவங்களாய் மாறும் ஆற்றல் பெற்றவர்களென்றும், அவர்களிற்சிலர் ரசூல்மார்களிடம் தூதுவர்களாக வருகிறவர்களென்றும், அல்லாஹ் அவர்களுக்கு அறிவித்ததை அப்படியே எத்திவைப்பவர்களென்றும், சிலர் உயர் பதவியுடையவர்களாகவும், மற்றுஞ் சிலர் கீழ்ப்பதவி உடையவர்களாகவும், சிலர் ரஹ்மத்து, இரணம், மரணம் ஆகியவற்றைக் கொண்டு வருபவர்களாகவும், சிலர் இன்பம், துன்பம், சுகம் கஷ்டம், வித்தி (அறிவு,

ஆராய்தல், சம்பாதிப்பு) உதவி, நாசம் ஆகியவற்றைக் கொண்டு வந்து சேர்ப்பவர்களாகவும் இருக்கிறார்களென்றும், சிலர் பகலிலும் சிலர் இரவிலும் முறை வைத்து வருபவர் களென்றும், சிலர் அர்ஷை சுமந்து கொண்டிருப்பவர்கள், சிலர் வானிலுள்ள பைத்துல் மஃமூர் கட்டிடத்திலுள் நுழைந்து கொண்டே இருப்பவர்கள்; சிலர் வானத்திலும், சிலர் பூமியிலும் இருப்பவர்கள் என்றும், சிலர் மலையிலும்,சிலர் கடலிலும், சிலர் கரையிலும், சிலர் வணக்கத் தலங்களிலும், சாட்டப்பட்டவர் களென்றும், சிலர் எவ்வித வேலையு மின்றி தனித்த ரூஹ்களாய் இருப்பவர்களென்றும், சிலர் மக்கா, மதீனா, ஸஃபா, மர்வா ஆகிய இடங்களில் நியமிக்கப் பட்டுள்ளார் களென்றும், சிலர் திக்ரு, ஹதீஸ், உபதேசம் நடைபெறும் இடங்களுக்கு வருகை தருகிறவர்களென்றும், மனிதர்களின் நன்மை, தீமைகளைப் பதிவு செய்வதற்கு கிராமன்-காத்திபீன் என்னும் பெயருடைய மலக்குகள் ஒவ்வொரு மனிதனுடைய தோள்களின் மீதும் நியமிக்கப் பட்டிருக்கிறார்களென்றும், (அவ்விருவரில் நன்மை எழுதுகிறவர், தீமை எழுதுகிறவரின் மீது அதிகாரியாவார். ஒருவர் ஒரு நன்மை செய்தால் உடனே எழுதி விடுவார். தீமை செய்தால் ஆறுமணி நேரம் தாமதித்திருந்து அவர் அதற்கு தவ்பாச் செய்யாவிட்டால் அதனை பதிவு செய்யுமாறு தீமையை எழுதுபவருக்கு கட்டளையிடுவார் என்றும்;) ஃபத்தானூன் என்று கூறப்படும் சில மலக்குள் இறந்து விட்டவர்களுடைய கப்ருகளுக்கு வருகை தருவார்களென்றும், முன்கர், நகீர் என்னும் மலக்குகள் இறந்துவிட்டவர்களிடம் கேள்விகள் கேட்பார்க ளென்றும், அவர்களுக்கு இரண்டிரண்டாக, மும்மூன்றாக, நான்கு நான்காக இறகுகள் உண்டென்றும், அவர்களுடைய உணவும், குடிப்பும் தஸ்பீஹ், (சுப்ஹானல்லாஹ்) தஹ்மீது, (அல்ஹம்து லில்லாஹ்) தக்பீர் (அல்லாஹு அக்பர்), தஹ்லீல் (லா இலாஹ இல்லல்லாஹ்) ஆகியவையும், முஃமின்களுக்கு துஆ செய்வது மாயிருக்குமென்றும், பெருந்தொடக்குடையவர், காரணமில்லாமல் குளிப்பைப் பிற்படுத்துகிற இடங்களுக்கும், உருவச்சிலைகள், சிரசுடன் பின்தரிக்கப்பட்ட (வரையப்பட்ட) உருவப்படங்கள், நாய், அருவருக்கத்தக்க நாற்றங்கள் ஆகியவை இருக்குமிடங்களுக்கும் ரஹ்மத்துடைய மலக்குகள் வருகை தரமாட்டார்களென்றும், சிலர் சொர்க்கங்களிலும் சிலா நரகங்களிலும்,சிலர் இரண்டுக்கும் நடுவிலுள்ள அஃராஃப் (أَعْرَافٌ) விலும் இருக்கிறார்களென்றும், அவர்களுடைய எண்ணிக்கையை அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் அறியமாட்டார்களென்றும், அவர்கள் அனைவரிலும் மிகச்சிறந்தவர் வஹீ கொண்டு வரும் பொறுப்புடைய ஜிப்ரயீல் جِبْرَئِيْلُ (அலைஹிஸ்லாம்) அவர் களாவார்கள், அதற்குப் பின் சிறப்பிற்குரியவர் தண்ணீர், உணவு ஆகியவற்றின் பொறுப்புடைய மீக்காயீல் مِيْكَائِيْلُ (அலைஹிஸ்லாம்) அவர்களாவார்கள், அதன் பிறகு உயிர்களைக் கைப்பற்றுவதின் பொறுப்பிலுள்ள இஜ்ராயீல் عِزْرَائِيْلُ (அலைஹிஸ்லாம்) அவர்களாவார்கள், அதற்குப் பிறகு காற்றின் பொறுப்பு கொடுக்கப்பட்டுள்ள இஸ்ராஃபீல் إِسْرَافِيْلُ (அலைஹிஸ்லாம்) அவர் களாவார்கள் என்றும், அவர்கள் அனைவரும் அல்லாஹ்வுடைய கட்டளைக்கு ஒரு போதும் மாறு செய்யமாட்டார்களென்றும் நம்பிக்கை (ஈமான்) கொள்வதாகும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

ஹாரூத் மாரூத் என்ற இருவரும் மலக்குமாயிருந்தும், அவ்விருவரும் பெண் மாயையில் அகப்பட்டு இறைவனுக்கு மாறு செய்தார்கள் என்று சொல்வது, ஜரீதுப்னு அதா جَرِيْدُ بْنُ عَطَا வுடைய ரூஹை மலக்குல் மௌத்தாகிய இஜ்ராயீல் عِزْرَائِيْل அலைஹிஸ்ஸலாம் அவர்கள் பிசகுதலாக வாங்கினார்கள் என்று சொல்வது, அஃப்லாத்தூன் ஹகீம் اَفْلَاطُوْنُ حَكِيْمُ உடைய ரூஹை வாங்குவதில் மலக்குல் மௌத் திகைத்துப் போய்விட்டார் என்று சொல்வது, இவையெல்லாம் ஆதாரமற்ற செய்திகளாகும். எனவே இந்தச் செய்திகளை நம்பிக்கொண்டு மலக்குகளும் இறைவனுக்கு மாறுசெய்யக் கூடியவர்கள் தான் என்று கூறுகூது சரியல்ல.

மலக்குகள் எந்த நிலையிலும் இறைவனுக்குமாறு செய்யாமலும், இறைவனுடைய கட்டளைகளுக்கு வழிப்பட்டு நடக்கக்கூடிய குணங்களைக்கொண்டவர்களாகவும் படைக்கப்பட்டிருக்கிறார்கள். இப்லீஸ் இறைவனின் கட்டளைகளுக்கு மாறு செய்யும் குணத்தைக்கொண்டவனாகப் படைக்கப்பட்டிருக்கிறான். ஆனால் மனிதனோ மலக்குகளின் குணமாகிய இறைவனுக்குப் பிடித்தமான நற்செயல்களைச் செய்வது, மற்றும் இப்லீஸின் குணமாகிய தீய செயல்களைச் செய்வது ஆகிய இருவகைக் குணங்களையும் கொண்டவனாகப் படைக்கப்படடடிருப்பினும் எது நல்லது எது கெட்டது என்று சீர்தூக்கிப்பார்ப்பதற்குரிய பகுதிதறிவைக் கொடுக்கப்பட்டவனாகவும் படைக்கப்பட்டு இருக்கிறான். எனவே தனது பகுத்தறிவைப்பயன்படுத்தி இறைவன் விரும்பக்கூடிய நற்செயல்களைச் செய்து, ஈருலகிலும் நற்பேறு பெற்றவனாக ஆகிக்கொள்ள வேண்டும்.

அல்லாஹு தஆலா:

(16:102) قُلْ نَزَّلَهُ رُوْحُ الْقُدُسِ مِنْ رَّبِّكَ بِالْحَقِّ

"(நபியே!) மெய்யாகவே இதை உம் இறைவனிடமிருந்து "ரூஹுல்குத்ஸ்" (என்னும் ஜிப்ரயீல்) தான் இறக்கிவைத்தார் என்று நீர் கூறுவீராக!" என்று குர்ஆனில் கூறியிருப்பதும்,

اِنَّ جِبْرِيْلَ نَفَثَ فِيْ رُوْعِيْ

"நிச்சயமாக ஜிப்ரீல் எனது இருதயத்தில் ஊதினார்" என்று ஹதீஸில் வருவதும் ஒன்றுக்கொன்று பிணக்கமானதல்ல.

மேலும் இறைவன் குர்ஆனில்,

اَلْحَمْدُ لِلّٰهِ فَاطِرِ السَّمٰوٰتِ وَالْاَرْضِ جَاعِلِ الْمَلٰٓئِكَةِ رُسُلًا
اُولِيْٓ اَجْنِحَةٍ مَّثْنٰى وَثُلٰثَ وَرُبٰعَ ۚ يَزِيْدُ فِى الْخَلْقِ مَا يَشَآءُ ۚ
اِنَّ اللّٰهَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ (35:1)

*"புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே! அவன் வானங்களையும், பூமியையும் படைத்து, இரண்டு, மூன்று, நான்கு இறக்கைகளுடைய மலக்குகளை (தனது தூதைக் கொண்டு செல்லும்) ரசூல் மார்களாக ஆக்கியவன். அவன் விரும்பியதை (த்தன்) சிருஷ்டியில் (மேலும்) அதிகரிப்பான். நிச்சயமாக அல்லாஹ், யாவற்றின் மீதும் மிக்க ஆற்றலுடையோன்" என்று கூறியிருக்கின்றான்.*

மேலும் இறைவன் குர்ஆனில் :-

فَسَجَدَ الْمَلٰٓئِكَةُ كُلُّهُمْ اَجْمَعُوْنَ ۙ اِلَّآ اِبْلِيْسَ ؕ اِسْتَكْبَرَ
وَكَانَ مِنَ الْكٰفِرِيْنَ ۝ قَالَ يٰٓاِبْلِيْسُ مَا مَنَعَكَ اَنْ تَسْجُدَ
لِمَا خَلَقْتُ بِيَدَيَّ ؕ اَسْتَكْبَرْتَ اَمْ كُنْتَ مِنَ الْعَالِيْنَ ۝

*"அப்பொழுது மலக்குகள் எல்லோருமே சிரம் பணிந்தார்கள். (ஆனால்) இப்லீஸைத்தவிர. அவன் கர்வங்கொண்டு (நம் கட்டளையை) நிராகரிப்பவர்களில் ஆகிவிட்டான். (அதற்கு இறைவன்) "இப்லீஸே! நானே எனது இரு கரங்களால் படைத்த ஒருவருக்கு (ஆதமுக்கு) நீ சிரம் பணியாது உன்னை தடை செய்ததென்ன? நீ கர்வங்கொண்டு விட்டாயா? அல்லது நீ (ஆதமுக்கு சிரம் பணியும்படி ஏவப்படாத உல்வியியூன்கள் என்னும்) உயர்ந்த பதவியுடையவர்களில் ஆகிவிட்டாயா? என்றான்" என்றும் கூறியிருக்கின்றான்' (38 : 73,74,75) எனவே ஆதமுக்கு சுஜூது செய்யும் படி ஏவப்படாத மலக்குகள் எல்லோரும் உல்வியியூன்கள் என்னும் உயர் பதவியுடையோர்கள் என்றும், அப்படி சுஜூது செய்யும் படி ஏவப்பட்ட எல்லோரும் ஸுஃப்லியியூன்கள் என்னும் பதவி குறைந்தவர்கள் என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.*

(3) **மூன்றாவது அவனுடைய வேதங்களை நம்பிக்கை கொள்ளுதல்.** அதாவது அல்லாஹு த்தஆலா இறக்கிவைத்த வேதங்கள் சுஹுஃபுகள் (ஏடுகள்) அனைத்தும் உண்மையென ஈமான் கொள்ளுதல்.

வேதங்கள் நான்காகும். முதலாவது தவ்ராத் வேதம். இதனை அபரானீ (ஹிப்ரு) மொழியில் நபி மூஸா (அலை) அவர்களுக்கு இறக்கிவைத்தான். இரண்டாவது ஜபூர்

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

வேதம். இதனை நபி தாவூத் (அலை) அவர்களுக்கு யூனானி (கிரேக்க) மொழியில் இறக்கிவைத்தான். மூன்றாவது இன்ஜீல் வேதம். இதனை நபி ஈஸா (அலை) அவர்களுக்கு சுர்யானி மொழியில் இறக்கிவைத்தான். நான்காவது ஃபுர்கான் வேதம். இதனை நபி முஹம்மது (ஸல்) அவர்களுக்கு அரபி மொழியில் இறக்கிவைத்தான். இதைத்தவிர நபி ஆதம் (அலை) அவர்களுக்கு பத்து சுஹுஃபுகளும் (ஏடுகளும்), நபி ஷீது (அலை) அவர்களுக்கு ஐம்பது சுஹுஃபுகளும், நபி இத்ரீஸ் (அலை) அவர்களுக்கு முப்பது சுஹுஃபுகளும், நபி இப்றாஹீம் (அலை) அவர்களுக்கு பத்து சுஹுஃபுகளும், நபி மூஸா (அலை) அவர்களுக்கு தவ்ராத் வேதத்துடன் பத்து சுஹுஃபுகளும் அருளப்பட்டுள்ளன.

மேற்கூறப்பட்ட நான்கு வேதங்களும், நூற்றுப்பத்து சுஹுஃபுகளும் அல்லாஹுத்தஆலாவுடைய திருவசனங்களென்றும், அவை படைக்கப்படாத (பூர்வீகமான) வையென்றும், எழுத்தும் ஓசையு மில்லாதவை என்றும், உண்மையானவையென்றும் நம்பிக்கை (ஈமான்) கொள்ளவேண்டும். ஃபுர்கானுடைய கட்டளைகளைத்தவிர இதர வேதங்களுடைய கட்டளைகள் எல்லாம் மாற்றப்பட்டுவிட்டன என்றும், ஃபுர்கானுடைய கட்டளைகள் மறுமை நாள் வரை நிலைத் திருக்குமென்றும் ஈமான் கொள்ள வேண்டும்.

அல்லாஹுத்தஆலா படைக்கப்படாதவனாக இருப்பது போன்று அவனுடைய திருவசனங்களும் படைக்கப்படாதவையாகும். நம்முடைய நாவினால் ஓதுவதும், தாள்களில் எழுதப்பட்டிருப்பதும், நம் காதுகளினால் செவியுறுவதும் (கலாமுல்லாஹ் என்னும்) அல்லாஹ்வுடைய திருவசனத்தின் பிரதிபலிப்பாகும். இவையெல்லாம் படைக்கப்படாத வையல்ல. இவை படைக்கப்பட்டவைதாம். ஆனால் இவையெல்லாம் எதனை அறிவிக்கின்றனவோ, அந்த மூலம்தான் கலா முல்லாஹ்வாகும். அதுதான் படைக்கப் படாததாகும். இதற்கு உதாரணம் எவ்வாறென்றால் 'நெருப்பு' என்று ஒரு தாளில் எழுதினால் நெருப்பே அங்கு வந்து விடுவதில்லை. தாளில் எழுதப்பட்டிருப்பது நெருப்பல்ல; நெருப்பைக் குறித்துக்காட்டும் சொல்தான். அதனால் அந்தத் தாள் கரிந்து விடுவதில்லை. இவ்வாறே கலாமுல்லாஹ் என்பது வேறு, நாம் ஓதுவதும், தாளில் எழுதப்பட்டிருப்பதும் வேறு. முந்தியது படைக்கப்படாதது, பிந்தியது படைக்கப்பட்டது.

இக்கருத்தை அறியாத சிலர் அல்லாஹ்வின் திருவசனம் படைக்கப்பட்டது என்று கூறுகின்றனர். குர்ஆன் படைக்கப்பட்டது என்ற கருத்து கலீஃபா ஹாரூன் ரஷீதுடைய காலத்தில்தான் ஆரம்பமாயிற்று. சிலர் அதனை ஏற்றுக்கொண்டும் சிலர் மறுத்தும் வந்தார்கள். அவருடைய மக மஃமூன் ரஷீத் ஆட்சிக்கு வந்ததும் குர்ஆன் படைக்கப்பட்டது என்ற தவறான கருத்தை ஏற்க வலியுறுத்தி மக்களைத் தூண்டினார். இமாம் அஹ்மதுப்னு ஹன்பல் (ரஹ்) அவர்களையும் அவ்வாறு கூறும்படி நிர்பந்தித்தார். ஆனால் இமாமவர்கள் அதனை எதிர்த்து குர்ஆன் படைக்கப்பட்டதல்ல என்ற கருத்தை வலியுறுத்திச் சொல்லிக் கொண்டே இருந்ததால்

அவர்களை விலங்கிட்டுக் கொண்டு வருமாறு மஃமூன் கூறினார். அவ்வாறு இமாமவர்களைக் கொண்டு வரும்முன்பே மஃமூன் இறந்து விட்டார். இந்நிகழ்ச்சி ஹிஜ்ரி 208-ம் ஆண்டு ரஜப் மாதம் நிகழ்ந்தது. அதற்குப்பின் கலீஃபாவாக வந்த முஃதஸிம்பில்லாஹ் என்பவர் இமாமவர்களை சிறையிலடைத்து, சாட்டையடிகள் கொடுத்துத் துன்புறுத்தினார். அப்பொழுதும் இமாமவர்கள் குர்ஆன் படைக்கப்பட்டதல்ல என்ற தங்களின் கொள்கையில் உறுதியாக இருந்து உயர்வடைந்தார்கள்.

குர்ஆனாகிறது 'லவ்ஹுல் மஹ்ஃபூள்' என்னும் பாதுகாக்கப்பட்ட பதிவுப் பலகையிலிருந்து ரமழான் மாதம் லைலத்துல் கத்ரு இரவில் முழுமையாக முதல் வானத்திலுள்ள 'பைத்துல் உஜ்ஜா' بَيْتُ الْعِزَّةِ (கண்ணியத்திற்குரிய வீடு) என்னுமிடத்தில் இறக்கி வைக்கப்பட்டது. பின்னர் தேவைக்குத் தக்கவாறு இருபத்து மூன்று ஆண்டுகளில் முஹம்மது (ஸல்) அவர்களின் மீது ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் மூலம் இறக்கிவைக்கப்பட்டது.

குர்ஆனில் ஒரு அர்த்தமுள்ளது, பல அர்த்தங்களைக் கொண்டது, மூடலானது, தெளிவானது, மக்கத்தில் இறங்கியது (மக்கீ), மதீனத்தில் இறங்கியது (மதனீ), சொந்தமானது, பொதுவானது, பிரயாணத்தின் போது இறங்கியது, ஊரிலிருக்கும் போது இறங்கியது, பகலில் இறங்கியது, இரவில் இறங்கியது போன்ற ஆயத்துகள் இருக்கின்றன.

இன்னும் குர்ஆனில் முன்னால் அருளப்பட்ட சில வசனங்கள் பின்னால் அருளப்பட்ட வேறு சில வசனங்களைக் கொண்டு மாற்றப்பட்டுள்ளன, முந்தியதற்கு "மன்சூஃக்" مَنْسُوْخٌ (மாற்றப்பட்டது) என்றும், பிந்தியதற்கு "நாஸிஃக்" نَاسِخٌ (மாற்றியது) என்றும் கூறப்படும். இதைப்பற்றி இறைவன் தனது திருமறையில் குறிப்பிடும்பொழுது "யாதொரு வசனத்தை நாம் மாற்றிவிடுவோமாயினும், அல்லது அதனை மறக்கடித்து விடுவோமாயினும் அதைவிட மேலானதை அல்லது அதற்கு நிகரானதை நாம் கொண்டு வருவோம். திட்டமாக அல்லாஹ் எல்லா பொருட்களின் மீதும் ஆற்றலுடையோன் என்பதை நீர் அறியவில்லையா? (2:106) என்று கூறுகிறான்.

இவ்வாறு மாற்றப்பட்ட வசனங்களில் ஹுக்மு (கருத்து) மாற்றப்பட்டு ஓதுதல் (ஆயத்து) மாற்றப்படாத வசனங்களும் உண்டு. "குல் யா அய்யுஹல் காஃபிரூன்" என்ற சூரத்தைப்போன்று. இவ்விதம் ஹுக்மு மாற்றப்பட்டு ஓதுதல் மாற்றப்படாத வசனங்கள் இருபது மட்டும் உள்ளன என்று இமாம் சுயூத்தி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள். மேலும், ஓதுதல் (ஆயத்து) மாற்றப்பட்டு ஹுக்மு (கருத்து) மாற்றப்படாத வசனங்களும் உண்டு.

اَلشَّيْخُ وَالشَّيْخَةُ إِذَا زَنَيَا فَارْجُمُوْهُمَا نَكَالًا مِّنَ اللهِ
وَاللهُ عَزِيْزٌ حَكِيْمٌ

## மார்க்க சட்ட கருவூலம் 'மஙானீ'

"வயோதிக ஆணும், வயோதிகப் பெண்ணும் விபச்சாரம் செய்துவிடுவார்களேயானால் அவர்களை நாட்டி வைத்து கல்லால் அடித்துக் கொன்றுவிடுங்கள். இது இறைவனால் அளிக்கப்பட்ட தண்டனையாகும். இறைவன் மகத்துவ மிக்கவனும், பரிபூரண ஞானமுடையோனுமாக இருக்கிறான்" என்று வயோதிகர்களை மட்டும் குறிப்பிட்டுச் சொன்ன இந்த ஆயத்து பின் வரும் ஆயத்தைக் கொண்டு மாற்றப்பட்டது. அதாவது:

اَلزَّانِيَةُ وَالزَّانِيْ فَاجْلِدُوْا كُلَّ وَاحِدٍ مِّنْهُمَا مِائَةَ جَلْدَةٍ (24 :2)

"விபச்சாரம் செய்த பெண், விபச்சாரம் செய்த ஆண் ஒவ்வொருவரையும் நூறு கசையடி அடியுங்கள்" என்று பொதுவாக வயதைக் குறிப்பிடாமல் சொன்ன இந்த ஆயத்து ஓர் உதாரணமாகும்.

ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்கள் குர்ஆனின் ஆயத்துகளில் சிலது இறங்குமுன் அந்த ஆயத்தின் கருத்துக்கு ஒத்தாற் போல் சில வசனங்களைச் சொன்னதும், பின்னால் அவர்களின் கருத்தை அங்கீகரித்தாற்போல் அந்த ஆயத்துகள் இறங்கியதும் சரித்திர பிரசித்தமான சம்பவமாகும். இது அன்னாரின் மதி நுட்பத்திற்கும் சமயோசித புத்திக்கும் எடுத்துக் காட்டுதலாகும். அவ்விதம் *17* ஆயத்துகள் இறங்கியதாக இப்னு ஹஜர் (ரஹ்) சொல்கிறார்கள்.

وَلَا تُصَلِّ عَلٰۤى اَحَدٍ مِّنْهُمْ مَّاتَ اَبَدًا وَّلَا تَقُمْ عَلٰى قَبْرِهٖ (9:84)

என்ற ஆயத்தும்

وَاِذَا سَاَلْتُمُوْهُنَّ مَتَاعًا فَاسْـَٔلُوْهُنَّ مِنْ وَّرَآءِ حِجَابٍ (33:53)

என்ற ஆயத்தும் மேற்கண்ட *17* ஆயத்துகளில் சிலதாகும்.

இம்ரவுல் கைஸ் போன்ற உலகப்புகழ் பெற்ற சில புலவர்கள், வஹி இறங்கு முன்னரே சில ஆயத்துகளுக்கு ஏற்றாற் போல் வசனங்களை அமைத்து கவி புனைந்து (பைத்து) பாடி இருக்கிறார்கள். பின் வஹிவந்த பிறகு பார்த்ததில் அந்தப் புலவரின் கவிதைகள் ஆச்சரியப்படக் கூடிய முறையில் இருந்தன.

உதாரணமாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு நாள் தங்கள் மஜ்லிஸில் சூரத்து "ஸில்ஸால்" என்ற

اِذَا زُلْزِلَتِ الْاَرْضُ زِلْزَالَهَا

என்னும் சூராவை ஓதிக் காண்பித்துக்கொண்டு இருந்தார்கள். அந்த மஜ்லிஸில் இம்ரவுல் கைஸ் உடைய மகளும் இருந்தாள். (அங்கு இருந்தவள் இம்ரவுல் கைஸின் சகோதரி என்றும் சிலரால் கூறப் படுகிறது) அப்பொழுது நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைப் பார்த்து அல்லாஹ்வுடைய ரசூலே, என் தகப்பன் இயற்றிய பாடலில் இதைப் போன்ற சமாச்சாரம் எல்லாம் வருகிறதே என்று அவள் சொன்னாள். அந்தப்

பாடலைப் படித்துக் காண்பிக்கும்படியாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அவனிடம் கூறினார்கள். அப்பொழுது இம்ரவுல் கைஸின் கீழ் கண்ட கவிதையை அவள் பாடிக் காண்பித்தாள் :-

إِذَا السَّاعَةِ اقْتَارَبَتْ يَالَهَا
وَزُلْزِلَتِ الْأَرْضُ زِلْزَالَهَا

உடனே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சொன்னார்கள் :-

سَيِّدُ الشُّعَرَاءِ امْرَأُ الْقَيْسِ وَقَائِدُهُمْ
إِلَى النَّارِ تَكَلَّمَ بِالْوَحْيِ قَبْلَ أَنْ يُنْزَلَ.

"இம்ரவுல் கைஸ் புலவர்களுக்கெல்லாம் தலைமையானவர் தான். வஹிவருவதற்கு முன்னாலேயே அந்த ஆயத்துக்கு ஒத்தாற்போல் சில வசனங்களை அமைத்து கவிபாடும் ஆற்றலும் உடையவர் தான். எனினும் அவரைப் பின் தொடரும் புலவர்களை எல்லாம் அவர் நரகத்திற்கு இழுத்துச் செல்லக் கூடியவராகவும் இருக்கிறார்"என்று கூறினார்கள்.

மேலும் குர்ஆனுடைய வசன அமைப்பைப் போன்று ஒரு சிறிய வசனத்தைக் கூட உலகில் எவரும் கொண்டு வரமுடியாதபடி அது அற்புதமான அமைப்புடையதாக அருளப்பட்டுள்ளது என்றும் நம்பிக்கை கொள்ள வேண்டும். அவ்வாறு கொண்டு வர முயற்சித்தோரெல்லாம் இறுதியில் இயலாமலாகித் தோல்வியைத் தழுவி ஊமையர் போன்றாகிவிட்டனர்.

குர்ஆனிலுள்ள ஓர் அத்தியாயத்தை, அல்லது ஒரு வசனத்தை அல்லது ஒரு வார்த்தையை அல்லது குர்ஆனில் உள்ளது என ஏகோபித்துக் கூறப்பட்ட ஓர் எழுத்தை குர்ஆன் அல்லவென்று எவரேனும் ஒருவர் கூறி மறுத்தால், (விளையாட்டாக அல்லது பரிகாசமாகக் கூறினாலும் சரி) அவர் காஃபிராகி விடுவார். அவர் தவ்பாச் செய்து, கலிமாச் சொல்லி, திரும்பத் தன் ஈமானைப் புதுப்பித்துக் கொள்ள வேண்டும்.

குர்ஆனில் நூற்றுப்பதினான்கு அத்தியாயங்களும், 6666 திருவசனங்களும் உள்ளன. இவை அனைத்தைக் கொண்டும் நம்பிக்கை கொள்ள வேண்டும்.

**4) நான்காவது அவனுடைய தூதர்களைக் கொண்டு ஈமான் கொள்ளுதல்.** அல்லாஹ்வுடைய தூதர்களாகிய நபிமார்கள், ரசூல்மார்கள் அனைவரும் சிறிய, பெரிய பாவங்கள் அனைத்தை விட்டும் பாதுகாக்கப்பட்டவர்களென்றும், அவர்கள் அனைவரும் ஆண்கள், சுதந்திரமானவர்கள், அவர்களின் உடல்களில் எவ்விதக்

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

குறைகளுமில்லாதவர்கள், உண்மையும், நம்பிக்கையும் உடையவர்கள். அல்லாஹ்வின் கட்டளைகளை அணுவளவும் மறைக்காமல் மக்களுக்கு எத்திவைப்பவர்கள் என்றும் ஈமான் கொள்வதாகும்.

மேலும் நபிமார்கள் சிறிய பாவங்கள் செய்யக் கூடியவர்கள் தாம் என்று குர்ஆனுடைய சிலவசனங்களின் வெளிப்படையான கருத்தைக் கொண்டு அபூஅலி இஸ்பிராஈனீ போன்ற சில இமாம்கள் சொல்லியிருக்கும் கருத்தானது பலவீன மானதாகும். குர்ஆனுடைய வேறு பல உறுதியான ஆதாரங்களைக் கொண்டு அது மறுக்கப்பட்டுள்ளது. அல்லது அவர்களுடைய விஷயத்தில் சிறுபாவமென்பது சிறந்ததை விடுவதென்பதாகும். உதாரணமாக வெள்ளைத் துணியும், சிகப்புத் துணியும் இருக்கும்போது மேலான வெள்ளைத் துணியை விட்டு விட்டு சிகப்புத்துணியை அணிந்து கொள்வது போலாகும். இது நபிமார்களுடைய விஷயத்தில் சிறிய பாவத்தைப் போன்றதாகும்.

நபிமார்கள் அனைவரும் ஆண்கள் தாம்; பெண்களில் எவரும் நபியாக்கப்படவில்லை. மர்யம் (அலை) அவர்களை அல்லாஹுதஆலா குர்ஆனில் புகழ்ந்து கூறியிருப்பதனால் அவர்களும் நபிதான் என்று சில இமாம்கள் கூறியுள்ளது பின் வரும் குர்ஆனின் திருவசனங்களைக் கொண்டு மறுக்கப்பட்டுள்ளது.

(16-43) وَمَآ اَرْسَلْنَا مِنْ قَبْلِكَ اِلَّا رِجَالًا نُّوْحِيْٓ اِلَيْهِمْ

(நபியே) உமக்கு முன்னால் அவர்களின் பால் நாம் வஹீ கொடுத்து அனுப்பி வைத்த தூதர்கள் எல்லோரும் ஆண்களே தாம்.

(2-228) وَلِلرِّجَالِ عَلَيْهِنَّ دَرَجَةٌ

ஆண்களுக்குப் பெண்களை விட ஓர் உயர்ந்த அந்தஸ்து இருக்கிறது. இவ்விரு ஆயத்துகளும் நபிமார்கள் ஆண்கள் தாம் என்பதை உறுதிப் படுத்துகின்றன.

ஹஜ்ரத் லுக்மான் (அலை) அவர்களுக்கு ஹிக்மத் என்னும் ஞானத்தை வழங்கியதாக அல்லாஹுதஆலா குறிப்பிட்டு, அவர்களை உயர்வாகக் கூறியிருப்பதின் காரணத்தால் அவர்கள் நபிதான் என்று சிலர் கூறியுள்ளனர். ஆனால் அவர்கள் கருப்பு இனத்தைச் சேர்ந்த ஓர் அடிமையாக இருந்தார்கள் என்பதால் அவர்கள் நபியாக இருக்கமுடியாது. அடிமையின் அந்தஸ்து குறைவானதாகும். குறைவான அந்தஸ்துடையவருக்கு நபித்துவம் கொடுக்கப்பட மாட்டாது. நபி யூசுஃப் (அலை) அடிமை போன்று சிலகாலம் இருந்தார்களென்றால், அது அவர்களுடைய சகோதரர்கள் செய்த சதியாகும். அதனால் அவர்களை அடிமை என்று சொல்லக்கூடாது.

நபி அய்யூப் (அலை) அவர்கள் நோயினால் உடல் நலிவுற்றிருந்ததும், நபி யஃகூப் (அலை) அவர்கள் கண்பார்வை இழந்திருந்ததும் குறையாக கருதப்படமாட்டாது. ஏனெனில் அய்யூப் (அலை) அவர்களுடைய பொறுமையின் உச்சத்தைச் சோதித்து, அவர்களின் அந்தஸ்தை உயர்த்துவதற்காகவும், யஃகூப் (அலை) அவர்களை நபி யூசுஃப் (அலை) அவர்களைக் கொண்டு சோதித்து, இவர்களின் சட்டையை அவர்களின் முகத்தில் வைக்க, கண்பார்வை கிடைக்கச் செய்து யூசுஃப் (அலை) அவர்களின் முஃஜிஸாவை வெளிப்படுத்துவதற்காகவும் செய்யப்பட்டதாகும்.

நபி இப்றாஹீம் (அலை) அவர்கள் மூன்று காரியங்களில் பொய் சொன்னார்கள் என்பதாகக் கூறப்படுவது வெளித் தோற்றத்தில் அது பொய்யாகுமே தவிர உண்மையில் அது பொய்யாக மாட்டாது. முதலாவது! சிலைகளை அவர்கள் உடைத்தெறிந்தபோது, அதனைப் பற்றி அரசன் விசாரித்ததற்கு

قَالَ بَلْ فَعَلَهُ كَبِيرُهُمْ هَٰذَا فَاسْأَلُوهُمْ إِن كَانُوا يَنطِقُونَ (21:63)

"அச்சிலைகளில் பெரியது தான் இதனைச் செய்தது என்று கூறியுள்ளார்கள்." இது தங்களுடைய நஃப்ஸை சிலைகளில் பெரியதாகக் கருதிக் கூறிய வாசகமாகும். ஆகையால் அது உண்மையில் பொய்யாகாது. இரண்டாவது : அவ்வூர் மக்கள் அனைவரும் திருவிழாவிற்குப் போன சமயத்தில் நான் திருவிழாவிற்கு வரமுடியாது. "நான் நோயாளியாக இருக்கிறேன் என்று அவர் சொன்னார்"(37:89) قَالَ إِنِّي سَقِيمٌ என்பது அவர்களின் உள்ளம் நோயுற்றதாக இருக்கிறது என்பதைக் குறித்துக் கூறியதாகும். எனவே அதுவும் உண்மையில் பொய்யாகாது. மூன்றாவது : அநியாயக்கார ஓர் அரசனிடத்தில் தங்கள் மனைவி சாரா அம்மையாரை தங்கள் சகோதரி என்பதாகக் கூறியது ஈமானுடைய அடிப்படையில் "முஃமின்கள் அனைவரும் சகோதரர்கள்" என்ற கருத்தில் கூறியதாகும். (மேலும் சாரா அம்மையார் இப்றாஹீம் (அலை) அவர்களின் தந்தைக்கு மகளாவார். தாய்க்கு மகளல்ல. அதாவது இப்றாஹீம் (அலை) அவர்களுடைய தந்தைக்கு ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியர் இருந்தனர். ஒரு தாரத்தின் மூலம் இப்றாஹீம் நபியவர்களும், மற்றொரு தாரத்தின் மூலம் சாரா அவர்களும் பிறந்தனர். இவ்வாறான சகோதரியைத் திருமணம் செய்து கொள்ளலாம் என்ற சட்டம் அக்காலத்து ஷரீஅத்தில் இருந்தது. அந்த கருத்தின்படி தம் மனைவியை சகோதரி என்று அவர்கள் கூறியது பொய்யாகாது.)

ரசூல்மார்கள் முன்னூற்றிப் பதின் மூன்றுபேர் என்பதில் கருத்து வேற்றுமை இல்லை. ஆனால் லுக்மான் (அலை) மர்யம் (அலை) இருவரையும் ரசூல் என்பதாகக் கூறி முன்னூற்றிப்பதினைந்தாக சிலர் கணக்கிட்டுள்ளனர். இது ஆதாரமானதல்ல. எனினும் அவர்கள் இதற்கொரு கணக்கையும் குறிப்பிடுகிறார்கள். அதாவது, முஹம்மது என்னும் நம் நாயகமவர்களின் திருநாமத்திலுள்ள எழுத்துக்களை விரிவாக எழுதி, அப்ஜத் என்னும் இலக்கங்களைப் போட்டுக் கூட்டினால் அது முன்னூற்றுப்

பதினைந்து வருகிறது. எனவே முன்னூற்றுப் பதினைந்து நபர்கள் தாம் ரசூல் மார்கள் என்று கூறுகிறார்கள். அது எவ்வாறென்றால், مُحَمَّدٌ என்பது ஐந்து எழுத்துக்கள் உடையது (1) மீம் (2) ஹே (3) மீம் - (4) மீம் (5) தால். இதனை அரபியில் பின்வருமாறு எழுத வேண்டும்......

مِيْمٌ حَاءٌ مِيْمٌ مِيْمٌ دَالٌ

இவை 15 எழுத்துக்களாயின. இவற்றைத் தனித்தனியாக எழுதி இலக்கமிட்டுக் கூட்ட வேண்டும்.

م ي م ا ح ء م ي م م ي م د ا ل

.40 + .10 + .40 + .8 + 1 + .1 + .40 + .10 + .40 + .40 + .10 + .40 + .4 + 1 + .30 = 315.

ரசூல்மார்கள் 315 நபர்கள்தாம என்று கூறுபவர்கள் சொல்லுகின்ற காரணங்களில் இதுவும் ஒன்று. ஆனால் 313 என்பது தான் ஆதாரப்பூர்வமானதாகும்.

நபி ஆதம் (அலை) அவர்கள் சம்பந்தமாக குர்ஆனில் அருளப்பட்டு உள்ள இரண்டு ஆயத்துகள்

وَعَصٰٓى اٰدَمُ رَبَّهٗ فَغَوٰى (20:12)

"ஆதம் தம்முடைய இரட்சகனுக்கு மாறு செய்து வழிதவறிவிட்டார்" என்பதும்;.

وَلَقَدْ عَهِدْنَآ اِلٰٓى اٰدَمَ مِنْ قَبْلُ فَنَسِيَ وَلَمْ نَجِدْ لَهٗ عَزْمًا

"இதற்கு முன் ஆதமிடம் நாம் உறுதியாக வாக்குறுதி பெற்றோம். அவர் (அதனை) மறந்து விட்டார். (எனினும்) நாம் அவரிடம் (மாறுசெய்யும்) எண்ணத்தைப் பெற்றுக் கொள்ளவில்லை." (20:115) என்பதும் ஆதம் (அலை) அவர்களின் பரிசுத்தத் தன்மையைத் தான் அறிவிக்கிறது. இதன் விளக்கம் தஃப்ஸீர் பைளாவீ போன்ற விரிவுரை கிரந்தங்களில் கூறப்பட்டுள்ளது.

ஒரு ஹதீஸின் படி நபிமார்கள் ஒரு இலட்சத்து இருபத்து நான்காயிரம் என்று அறிவிக்கப்பட்டுள்ளது. அவர்களில் ரசூல்மார்கள் 313 நபர்கள். அவர்கள் அனைவரையும் தெரிந்து கொள்ள வேண்டுமென்பது கட்டாயமல்ல. ஆனால் குர்ஆனில் கூறப்பட்டுள்ள இருபத்தைந்து நபிமார்களின் பெயர்களைத் தெரிந்து கொள்வது கட்டாயமாகும். அவர்களில்

اُولُوالْعَزْمِ

உலுல் அஜ்மி (உறுதிவாய்ந்தவர்கள்) எனப்படுவோர் ஐந்து பேர் என்றும், ஆறு பேர் என்றும் கூறப்பட்டுள்ளது. ஆதம், நூஹ், இப்றாஹீம், மூஸா, ஈஸா, முஹம்மது (அலைஹிமுஸ்ஸலாத்து வஸ்ஸலாம்) ஆகியோராவர். ஐந்து பேர் என்பது ஆதம் (அலை) அவர்களை நீக்கிக் கூறியதாகும். ஆறு பேர் என்பதே பலமான சொல்லாகும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

நபி மார்களில் முதன்மையானவர் ஆதம் (அலை) அவர்கள். இறுதியானவர் முஹம்மது (ஸல்) அவர்கள். நபி என்பவருக்கும், ரசூல் என்பவருக்கும் வித்தியாசம் என்னவெனில் ரசூல் என்பவருக்கு ரிஸாலத் (தூதுத்துவம்) நுபுவ்வத் (நபித்துவம்) இரண்டு தன்மைகளும் இருக்கும். நபி என்பவருக்கு நுபுவ்வத் மட்டும் இருக்கும். ரிஸாலத் இருக்காது. அதாவது மார்க்கத்தின் புதிய சட்ட திட்டங்களைக் கொண்டுள்ள வஹீ இறக்கப்பட்டு அதனை மக்களுக்கு எத்தி வைத்தவருக்கு ரசூல் எனப்படும். அவருக்கு வேதமோ, சுஹுஃபோ வழங்கப்படாவிட்டாலும் சரி. நபி என்பவருக்கு புதிய சட்டங்களைக் கொண்ட வஹீ இறக்கப்படமாட்டாது. முந்திய ரசூலுடைய ஷரீஅத் சட்டங்களையே பின்பற்றி பிரச்சாரம் செய்பவராக இருப்பார். வேதமோ,

சுஹுஃபோ வழ்ஙகப்படாத ரசூலுக்கு உதாரணம் : யூஷஃ ( يُوْشَعُ ) அலைஹிஸ்ஸலாம் அவர்களாவார்கள்.

நபிமார்களுடைய எண்ணிக்கையைக் குறிப்பாக்காமல் இருப்பது சிறப்பாகும். ஏனெனில்:

مِنْهُمْ مَنْ قَصَصْنَا عَلَيْكَ وَمِنْهُمْ مَنْ لَمْ نَقْصُصْ عَلَيْكَ

"அவர்களிலிருந்து சிலரை உமக்கு நாம் விபரித்துள்ளோம். இன்னும் அவர்களிலிருந்து சிலரை நாம் விபரிக்கவில்லை" (40:78) என்று குர்ஆனில் அருளப்பட்டுள்ளது. எனவே நபிமார்களின் எண்ணிக்கையை மட்டுப்படுத்தாமல் ஈமான் கொள்ளுதல் சிறப்பாகும்.

மேலும் நபி மார்களின் உடல்களை மண் தின்னாது என்று கூறப்பட்டுள்ளது. மேலும் நம்முடைய நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நபிமார்கள் அனைவரைவிடவும், இன்னும் படைப்புகள் அனைத்தை விடவும் சிறப்பானவர்கள் என்றும் நம்புதல் வேண்டும். அன்னாருடைய தாயார் பெயர் ஆமினா, தந்தை பெயர் அப்துல்லாஹ், பாட்டனார் பெயர் அப்துல் முத்தலிப், பூட்டனார் பெயர் ஹாஷிம், முப்பாட்டனார் பெயர் அப்து மனாஃப் என்பதாகவும், அன்னார் மக்காவில் பிறந்து, நாற்பதாம் வயதினில் நபிப்பட்டம் கொடுக்கப்பட்டு ஐம்பத்து மூன்றாம் வயதினில் மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்று, அறுபத்து மூன்றாம் வயதினில் ரபீயுல் அவ்வல் மாதம் பனிரண்டாம் நாள் திங்கட்கிழமை லுஹர் நேரத்தில் இவ்வுலகை விட்டுப்பிரிந்தார்கள் என்றும் நம்பிக்கை கொள்ளவேண்டும். இரண்டு ஹிஜ்ரத்கள் நிகழ்ந்திருக்கின்றன. ஸஹாபாக்களில் சிலர் ஆரம்பத்தில் அபிசீனிய நாட்டிற்குச் சென்றது சிறிய ஹிஜ்ரத் என்றும், பிறகு நபி (ஸல்) அவர்களும், ஸஹாபாக்களும் மதீனாவிற்குச் சென்றது பெரிய ஹிஜ்ரத் என்றும் சொல்லப்படும். இவ்விஷயங்களையெல்லாம் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுப்பது பெற்றோரின் மீதும் பொறுப்பாளர்களின் மீதும் கடமையாகும். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் தலைமுறையை கீழ்க்கண்டவாறு சுருக்கமாக குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுப்பது உசுந்ததாகும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

அதாவது "எங்கள் நைனார் முஹம்மது நபி மக்கத்தில் பிறந்து, மதீனத்தில் வஃபாத்தாகி அடங்கப்பட்டார்கள். தாயார் பெயர் ஆமினா. தகப்பனார் பெயர் அப்துல்லாஹ். பாட்டனார் பெயர் அப்துல் முத்தலிப், பூட்டனார் பெயர் ஹாஷிம். முப்பாட்டனார் பெயர் அப்து மனாஃப்"

இன்னும் ரசூலுல்லாஹி (ஸல்) அவர்கள் 'காத்தமுன் நபிய்யீன்': நபி மார்களுக்கெல்லாம் முத்திரையானவர் என்பதாகவும், கியாமத்து நாள்வரை வேறு எந்த நபியும் வரமாட்டார் என்பதாகவும், அன்னாருக்கு அருளப்பட்ட குர்ஆன் வேதத்தைத் தவிர மற்ற எல்லா வேதங்களின் சட்டங்களும் மாற்றப்பட்டு விட்டன என்பதாகவும், குர்ஆனுடைய சட்டங்கள் தாம் கியாமத்து நாள் வரை நடைபெறும் என்பதாகவும் ஈமான் கொள்ள வேண்டும்.

மேலும் நபி ஈஸா (அலை) அவர்கள் கடைசி காலத்தில் உலகிற்கு வந்து இஸ்லாத்தின் பக்கம் மக்களை அழைப்பார்கள். அப்பொழுது அவர்கள் நம்முடைய நபியைத்தொடர்ந்து, இந்த தீனுக்கு உதவியாய் இருப்பார்களே தவிர, தங்களுடைய நபித்துவத்தை பிரச்சாரம் செய்யமாட்டார்கள். ஆனால் அவர்களுக்குரிய நபிப்பட்டம் அவர்களை விட்டும் நீங்காது. சூரியன் பிரகாசிக்கின்ற பகலில் சந்திரன் காணப்படும் பொழுது, சந்திரனுக்குரிய ஒளி மட்டும் இருக்காதே தவிர சந்திரன் என்ற பெயர் நீங்கி விடாதது போன்று ஈஸா நபியவர்களுக்கு நபி என்ற பெயர் நீங்கிடாது. இக்கருத்தையும் நம்புதல் வேண்டும்.

இன்னும் ஆயிரக்கணக்கான நபிமார்களிருக்க ஈஸா (அலை) அவர்களை மட்டும் கடைசி காலத்தில் உலகிற்கு அனுப்ப வேண்டிய காரணம் என்னவென்றால், கிறிஸ்தவர்கள் ஈஸா (அலை) அவர்களை அல்லாஹ்வுடைய குமாரன் (தேவகுமாரன்) என்றும், தேவனென்றும் கூறிக்கொண்டிருக்கின்றனர். அவர் தேவனாகவும், தேவகுமாரனாகவும் இருப்பதனால் தான் இறந்தவர்களை உயிர்ப்பிப்பதும், அவர் இறக்காமலேயே இருப்பதும் அவரிலிருந்து நிகழ்கிறது என்றும், இன்னும் நம்முடைய நபி முஹம்மது (ஸல்) அவர்களை விட அவர்களுடைய ஈஸா நபி உயர்வானவர் என்றும் சொல்லிக் கொண்டிருக்கின்றனர். ஆகையால், ஈஸா (அலை) அவர்களை அல்லாஹு தஆலா மரணிக்கச் செய்யாமல் வானத்தின் பால் உயர்த்தி, கிறிஸ்தவர்களுடைய தவறான கொள்கைகள் உச்ச நிலையை அடைந்திருக்கும் கியாமத்து நாளின் நெருக்கத்தில் அவர்களை வானத்திலிருந்து இறக்கிவைத்து, நம்முடைய தீனுக்கு உதவியாய் அவர்களை ஆக்கி வைத்து நம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடைய உம்மத்தில் ஒருவராய் அவர்கள் இருந்து, கிறிஸ்தவர்களுடனும், முஷ்ரிக்குகளுடனும் ஜிஹாது செய்து, (அவர்களில் ஏராளமான வர்களை இஸ்லாத்தில் கொண்டுவந்து) பிறகு எல்லோரும் அறியும் விதம் மரணத்தை அவர்களும் சுவைத்து, நம் நபியவர்களின் கப்ருக்கு அருகினில் அவர்கள் அடக்கப்படுவார்கள். இவை அனைத்தையும் நாம் நம்பவேண்டும்.

அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களின் வரலாற்றில், அவர்கள் இரண்டு நபிகளுடைய கபுருகளுக்கு மத்தியில் அடக்கப்படுவார்கள் என்று

சொல்லப்பட்டிருப்பது இதனால்தான். அதாவது நம் நாயகம் (ஸல்) அவர்களுடைய கப்ருக்கு அருகில் நபி ஈஸா (அலை) அவர்கள் அடக்கமாவதால் அவ்விரண்டு கப்ருகளுக்கு மத்தியில் அபூபக்கர் (ரலி) அவர்களுடைய கப்ரு அமைந்துவிடும்.

நபி உஜைர் (அலை) அவர்களை அல்லாஹுதஆலா மரணிக்கச் செய்து நூறு ஆண்டுகளுக்குப் பிறகு உயிர்ப்பித்ததின் காரணத்தால் யூதர்கள், அவர்களை அல்லாஹ்வுடைய மகன் என்று கூறினார்கள். ஆனால் அல்லாஹ்தஆலா, அவர்களைப் பிறகு மரணமடையச் செய்து விட்டதால் யூதர்களுடைய வாதம் தவறாகிவிட்டது. நபிமார்க ளெல்லாம் ஷரீஅத்தில் வேற்றுமையானவர்களாக இருந்தாலும் ஈமானில் ஒரேவிதமான அந்தஸ்துடையவர்கள் தாம்.

ரசூல் மார்களுக்குக் கட்டாயமாக இருக்க வேண்டிய சிறப்புத்தன்மைகள் மூன்று: 1) உண்மை 2) நம்பிக்கைக்குரியவராயிருத்தல் 3) இறைவன் ஏவிய விஷயங்களை எத்திவைத்தல் ஆகியவைகளாகும். அவர்களுக்கு இருக்கக்கூடாத தன்மைகள் மூன்று: 1) பொய் 2) மோசடி 3) ஏவப்பட்டதை மறைத்தல் ஆகியவைகளாகும்.

மேலும் அவர்களுடைய பதவிகளுக்கு குறை உண்டாக்காத மனிதப் பண்புகள் பல உண்டு. அவர்களிடத்தில் அவை இருப்பதும் இல்லாமலிருப்பதும் சமமாகும். அவையாவன : ஊண், குடிப்பு, உறக்கம், மறதி, பசி, தாகம், அழுகை, குறுஞ்சிரிப்பு, நோய், சுகம், மகிழ்ச்சி, கவலை, மலம், சிறுநீர், திருமணம், வியாபாரம், கூலி வேலை, கைத்தொழில், நீந்துதல், சிலம்பம் விளையாடுதல், குதிரை சவாரி செய்தல், உண்மையான பரிகாசம் செய்தல் ஆகியவற்றைப் போல்.

அவர்களுடைய பதவிகளுக்குக் குறை உண்டாக்கும் தன்மைகள் குருடு, செவிடு, ஊமை, சப்பாணி, மடமை, பாடல்கள் இயற்றுவது, எழுத்து வேலை ஆகியவையாகும். ஆனால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அருளிய சில பொன் மொழிகளை நாம் இணைத்துச் சொல்லிப் பார்த்தால் அவை பாடல்களைப் போல் தோன்றும். அவற்றை அவர்கள் பாடல்களாக அமைத்து உண்டாக்கியது என்று சொல்லக்கூடாது. உதாரணமாக :-

اَنَا ابْنُ عَبْدِ الْمُطَّلِبْ ؕ اَنَا النَّبِيُّ لَا كَذِبْ

"நான் அப்துல் முத்தலிபின் மகன் ; நான் நபிதான் பொய்யல்ல" இது ஒரு பாடலைப் போல் தோற்றமளிக்கிறதே தவிர, உண்மையில் பாடலல்ல. இவ்வாறே குர்ஆனுடைய வசனங்களையும் சிலர் பாடல் போல் அமைத்து கூறியுள்ளனர். மௌலானா ரூமி (ரஹ்) அவர்கள் தங்களுடைய மஸ்னவியில்,

اُطْلُبِ الْمَعْنٰى مِنَ الْفُرْقَانِ قُلْ ؕ

لَا نُفَرِّقُ بَيْنَ اَحَدٍ مِّنْ رُّسُلْ

என்று கூறியிருக்கின்றார்கள்.

அதாவது :-

புர்கானிலிருந்து இக்கருத்தை தேடிக் கொண்டு நீ சொல் "தூதர்கள் எவருக்கு மிடையில் பாகுபாடு செய்யமாட்டோம்" என்று. இதில் பிந்திய பகுதி குர்ஆனுடைய வசனமாகும். இவ்வாறு அவர் பாடியதால் குர்ஆன் பாடலாக ஆகாது.

மற்றொரு பெரியார் :-

هُوَالْقَيُّوْمُ حَيٌّ لَا يَمُوْتُ لِعِزِّ جَلَالِهِ عَنَتِ الْوُجُوْهُ ؛
يَقُوْلُ اِذَاتَدَايَنْتُمْ بِدَيْنٍ اِلَىٰ اَجَلٍ مُّسَمًّى فَاكْتُبُوْهُ.

"அவன் என்றும் நிலைத்திருப்பவன். நித்தியஜீவன். மரணமடையமாட்டான். மாண்புள்ள அவனுக்காகவே முகங்களெல்லாம் அடங்கி ஒடுங்கிவிட்டன. அவன் கூறுகிறான். ஒரு குறிப்பிட்ட தவணைவரை நீங்கள் கடன் கொடுக்கல் வாங்கல் செய்தால் அதனை எழுதிக் கொள்ளுங்கள்" என்று கூறுகிறார். மேலும் இந்நூலை எழுதிய மாப்பிள்ளை லெப்பை ஆகிய நான்

قَوْلُهُمْ هَيْهَاتَ بُوْنًا بَعْدَ بُوْنٍ
اِخْسَئُوْا فِيْهَا وَلَا تُكَلِّمُوْنِ .

'ஹைஹாத்த' என்னும் அவர்களுடைய சொல் அதிக தூரத்தை குறிப்பதாகும். அதில் நீங்கள் சிறுமையடைந்துகிடவுங்கள். என்னிடம் நீங்கள் பேச வேண்டாம் என்று அஹ்ஸனுல் மவா இள் என்ற நூலில் கூறியுள்ளேன்.

متى كنهو فى الحال جود يكاخدا ؛
اَيَحْسَبُ الْاِنْسَانُ اَنْ يُّتْرَكَ سُدًى

"அல்லாஹ் இப்பொழுது எதைக் கொடுப்பான் என்று சொல்லாதீர்' மனிதன் (கேள்வி கணக்கின்றி) வெறுமனே விட்டுவிடப் படுவான் என்று எண்ணிக் கொள்கிறானா?"

இப்பாடல்கள் எல்லாம் குர்ஆன் ஆயத்துகளைச் சேர்த்து சிலர் பாடல்களாக பாடியுள்ளார்கள் என்பதற்கு உதாரணங்களாகும். இதனால் குர்ஆன் பாடலாக ஆகாது.

மேலும் நபி (ஸல்) அவர்கள் கவிஞரல்லர் என்பது போன்றே மற்ற நபிமார்கள் எவரும் கவிஞராக இருக்கவில்லை என்று நம்பவேண்டும். ஆதம் (அலை) அவர்களின் ஒரு மகன் ஹாபிலை மற்றொரு மகன் காபீல் என்பவர் கொலை செய்திட்ட போது

ஆதம் (அலை) அவர்கள் தங்கள் மகனை நினைத்து கூறியதாகச் சில தஃப்ஸீர்களில் சொல்லப்பட்டிருக்கும் இரங்கற்பாவாகிறது, அவர்கள் வாசகமாகக் கூறியதை பின் வந்த உலமாக்கள் பாடலாக பாடியுள்ளார்கள். அவர்கள் அதனைப் பாடலாக கூறவில்லை. அந்தப் பாடலாகிறது,

تَغَيَّرَتِ الْبِلَادُ وَمَنْ عَلَيْهَا ۞ وَوَجْهُ الْاَرْضِ مُغْبَرٌّ قَبِيْحٌ
وَمَالِيْ لَا اَجُوْدُ بِسَكْبِ دَمْعٍ ۞ وَهَابِيْلُ تَضَمَّنَهُ ضَرِيْحٌ

ஊர்களும் அவற்றில் உள்ளவர்களும் மாறிவிட்டனர். பூமியின் முகமாகிறது பழிப்பிற்குரிய புழுதி படிந்ததாகிவிட்டது. ஹாபீலை மண்ணறையாகிறது, பொதிந்து கொண்டிருக்க, கண்ணீரைக் கொட்டுவது கொண்டு நான் கொடை கொடுக்காமலிருக்க எனக்கென்ன வந்தது?

'லபீத்' என்ற ஒரு புலவருடைய கவிதை ஒன்றை ரசூலுல்லாஹி (ஸல்) அவர்கள் புகழ்ந்து சொன்னது, அவர்கள் பாடியதாக ஆகாது. அது.

اَلَا كُلُّ شَيْءٍ مَا خَلَا اللّٰهُ بَاطِلٌ ۞
وَكُلُّ نَعِيْمٍ لَا مَحَالَةَ زَائِلٌ

"அறிந்து கொள், அல்லாஹ்வைத் தவிர மீதியுள்ள பொருட்கள் அனைத்தும் அழிந்து விடக் கூடியதாகும். செல்வங்கள் அனைத்தும் சந்தேகமின்றி நீங்கிவிடக் கூடியதாயிருக்கும்."

நமது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எவரிடத்திலும் கால் மடித்து மண்டியிட்டு எதனையும் படிக்காமல், கற்றுக் கொள்ளாமல் தாய் வயிற்றிலிருந்து வந்தது போன்றே இருந்து அல்லாஹ்தஆலாவே அனைத்தையும் கற்றுக் கொடுத்ததால் அவர்களுக்கு 'உம்மீநபி' என்று கூறப்பட்டுள்ளது.

பாடலும், சூனியமும் ஒரே தன்மையில் உள்ளவைதாம் என்று அரபியர்கள் கூறுவார்கள். எனவே தான் நபியவர்களைப்பற்றி அல்லாஹு தஆலா....

وَمَا عَلَّمْنٰهُ الشِّعْرَ وَمَا يَنْۢبَغِيْ لَهٗ (36 : 69)

" நாம் அவருக்கு கவிதை இயற்ற கற்றுக் கொடுக்கவுமில்லை, அது அவருக்குத் தகுமானதுமல்ல " என்று கூறியுள்ளான். அல்லாஹு தஆலா நபி (ஸல்) அவர்களுக்கு பிரத்தியேகமாக வழங்கி இருக்கும் சிறப்புகளைச் சொல்லி முடிக்க முடியாது.

கியாமத்து நாளில் நமது நபி (ஸல்) அவர்களை எல்லோருக்கும் முன்னதாக எழுப்பி, ஷஃபாஅத் செய்யும் உரிமையை அவர்களுக்குக் கொடுத்து, சொர்க்கத்தில் முதன்முதலாக அவர்களை புகுதவைப்ப தென்பதெல்லாம் அன்னாருக்குரிய

# மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

தனிச்சிறப்பாகும். நபி இப்றாஹீம் (அலை) அவர்களுக்கு முதன் முதலாக சொர்க்க ஆடைகளை அணிவிப்பதும், நபி மூஸா (அலை) அவர்கள் அல்லாஹ் உடைய தஜல்லியை (ஒளிப்பிழம்பைக்) கண்டு தடுமாறாமல் இருப்பதும் அவ்விருவருக்கும் உலகில் ஏற்பட்ட சோதனைக்குப் பிரதிபலனாக அங்கு கிடைப்பதாகும். அதாவது இப்றாஹீம் (அலை) அவர்களை நம்ரூத் அரசன் நெருப்பில் தூக்கிப் போடும் போது நிர்வாணமாகவே தூக்கி எறியச் செய்தான். அதற்குப் பிரதியாக அவர்களுக்கு சொர்க்கத்தில் முதன்மையாக ஆடை அணிவிக்கப்படும். மூஸா (அலை) அவர்கள் தூர்ஸீனா மலையில் அல்லாஹ்வின் தஜல்லியின் பிரதிபலிப்பைக் கண்டு மயங்கி விழுந்து முப்பது நாட்களுக்குப்பின் தெளிவு பெற்றதால் மறுமையில் அவர்களுக்கு மயங்கி விழாத நிலையை அளிப்பான். இவையெல்லாம் நபி (ஸல்) அவர்களின் தனிச்சிறப்புக்கு மாற்றமாக ஆகா.

தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் (ரலி) என்ற ஸஹாபி ஒரு தடவை, "ரசூலுல்லாஹி (ஸல்) அவர்கள் மரணமடைந்த பின் நான் உயிருடனிருந்தால் ஆயிஷா (ரலி) அவர்களை திருமணம் செய்து கொள்வேன்" என்று எண்ணினார். அப்பொழுது

(33:53) وَلَآ أَن تَنكِحُوٓا۟ أَزْوَٰجَهُۥ مِنۢ بَعْدِهِۦٓ أَبَدًا

"அன்றி அவருடைய மனைவியர்களை அவருக்குப்பின் ஒரு பொழுதும் நீங்கள் திருமணம் செய்து கொள்வதும் கூடாது" என்ற திருவசனம் இறங்கியது. இதனைத் தெரிந்த தல்ஹா (ரலி) அவர்கள் மிகுந்த கவலை கொண்டு, தாங்கள் தவறாக எண்ணியதற்குப் பிரதியாக மக்காவிற்குக் கால் நடையாகச் சென்று ஹஜ்ஜு செய்து, ஜிஹாதிற்காக பத்து குதிரைகளைக் கொடுத்து, ஓர் அடிமையையும் வாங்கி உரிமை விட்டார்.

நம்முடைய நாயகம் (ஸல்) அவர்களுக்கு முன்னூறுக்கு மேற்பட்ட பிரத்தியேகமான சிறப்புகள் வழங்கப்பட்டுள்ளன. இவ்வாறே மற்ற நபிமார்களுக்கும் சிற்சில பிரத்தியேகச் சிறப்புகள் உள்ளன. அவரவர்களுடைய உம்மத்தினரிலுள்ள மற்ற மனிதர்களுக்கு இந்தச் சலுகைகள் கொடுக்கப்படவில்லை. உதாரணமாக ஜகாத்துப் பொருளைச் சாப்பிடுதல் ஹராம் என்பதும், போரில் கிடைத்த (ஙனீமத் غَنِيْمَة ) பொருளில் ஐந்திலொரு பாகம் ஹலால் என்பதும், வித்ரு, தஹஜ்ஜுத், ழுஹா ஆகிய தொழுகைகள் ஃபர்ளாயிருப்பதும், மிஸ்வாக் செய்வது ஃபர்ளாக இருப்பதும், நான்கு பெண்களைவிட அதிகமாகத் திருமணம் செய்து கொள்ளுதல் கூடும் என்பதும், அவர்களுடைய மனைவிமார்களில் அல்லது அவர்களின் மனைவியராக இருந்த அடிமைப் பெண்களில் எவரையும் அவர்களுக்குப்பின் மற்றவர் திருமணம் செய்து கொள்ளுதல் ஹராமென்பதும் நபிநாயகத்திற்குரிய தனிச் சிறப்புகளாகும். ஷரஹுஉர்ரவ்ள், கிதாபுஸ்ஸியர் ஆகிய நூற்களில் இவை பற்றி விபரமாகக் கூறப்பட்டுள்ளது.

(5) **இந்தாவது, கியாமத்து நாள் வருவது உண்மை என்று ஈமான்கொள்ளுதல்.** அதாவது ஒருவர் மரணமடைந்தவுடன் மண்ணின் மீது இயற்கையாகவோ, அல்லது மீன், மிருகம் ஆகியவற்றின் வயிறுகளிலோ, அல்லது தண்ணீர், நெருப்பு போன்றவற்றினாலோ அல்லது வேறு எந்த விதத்திலோ ஒருவர் இறந்து அவர் கப்ரில் அடக்கப்பட்டாலும் அடக்கப்படாவிட்டாலும் அவரிடம் ஃபத்தான் என்ற ஒரு மலக்கானவர் வந்து அவருடைய உடலில் ரூஹை மீளவைத்து சில கேள்விகள் கேட்பார். பிறகு முன்கர், நகீர் என்னும் இருமலக்குகள் வருவார்கள். அவ்விருவரும் கருப்பு நிறமுடையவர்களாகவும், கண்களிரண்டும் செம்புச்சட்டிபோல் உள்ளவர்களாகவும், உருவம் மற்ற மலக்குகளைப் போன்றோ, அல்லது பறவைகள், மிருகங்கள் போன்றோ இல்லாமலும், பயங்கரமான தோற்றமுடையவர்களாவும் இருப்பார்கள். தல்கீனில் கூறப்பட்டுள்ள கேள்விகளையெல்லாம் அவ்விருவரும் கேட்பார்கள். நல்ல மனிதராக இருந்தால் அவர்களுடைய கேள்விகளுக்கு சரியாக பதில் கூறுவார். அவருக்கு சொர்க்க வாசலைத்திறந்து வைத்து அதன் இன்பத்தை அனுபவிக்கச் செய்வார்கள். தீயவராக இருந்தால் அவர்களுடைய கேள்விகளுக்கு பதில் கூறமுடியாமலாகிடுவார். அவருக்கு நரகத்தின் வாசலைத் திறந்து வைத்து, அதன் வேதனையை அனுபவிக்கச் செய்வார்கள்.

இறுதியில் கியாமத்து நாள் வரும். அதன் விபரமாவது; படைப்புகள் அனைத்தும் அழிவதற்காக இஸ்ராஃபீல் (அலை) அவர்கள் 'சூர்' என்னும் குழல் ஊதுவார். அதனால் படைப்புகள் அனைத்தும் அழிந்து விடும். பிறகு நாற்பது ஆண்டுகள் வரை இந்த பூமியாகிறது செம்புத்தரையாயிருக்கும். அதில் எந்த ஒரு ஜீவஜந்தும் இருக்காது. பிறகு இஸ்ராஃபீல் (அலை) அவர்களை அல்லாஹுதஆலா உயிர்ப்பித்து, இரண்டாவது முறை சூர் ஊதும்படி கட்டளையிடுவான். அவ்வாறு அவர் ஊதியவுடன் படைப்புகள் அனைத்தும் உயிர்பெற்று எழும்.

இமாம் கஸ்ஸாலீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:- அர்ஷுக்குக் கீழிருந்து அல்லாஹுதஆலா ஒரு மழையைப் பெய்யச் செய்வான். அதன் துளிகள் மனிதனின் விந்தைப் போன்றிருக்கும். அதற்குப் பெயர் ஜீவ நீர் (மாஉல்ஹயாத்) என்று கூறப்படும். அது பூமிக்குள் பன்னிரண்டு முழம் ஆழும் வரை செல்லும். அதன் காரணமாக மழையினால் கீரைகள் முளைப்பது போல் மனிதர்களெல்லாம் முளைத்தெழுவார்கள். அதில் முதன்மையாக நமது நாயகம் முஹம்மது (ஸல்) அவர்கள் எழுவார்கள். பிறகு ஷாம் தேசத்தின் பெருவெளியை மஹ்ஷர் மைதானமாக்கி அதில் படைப்பினங்கள் அனைத்தையும் நிறுத்தி, முஃமினானவர்களுக்கு நன்மையின் பட்டோலையை வலக்கரத்திலும், காஃபிர்களுக்கு தீமையின் பட்டோலையை இடக்கரத்திலும் கொடுப்பான். பிறகு அனைவருடைய அமல்களையும் மீஜான் என்னும் தராசில் எடைபோட்டு, அவன் நாடியவர்கள் அனைவரையும் கேள்வி கணக்குக்கேட்பான்.

நன்மையின் எடை அதிகமாக இருந்தவர்கள் சிராத்துல் முஸ்தகீம் என்னும் பாலத்தில் மின்னல் வெட்டி மறைவது போல கடந்து செல்வார்கள். மேலும் அவர்கள்

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

ஹவ்லுல் கவ்ஸர் என்னும் தடாகத்தில் நீரருந்தி, லிவாஉல் ஹம்து என்னும் கொடி நிழலிலும் அர்ஷின் நிழலிலும் தங்கி, சொர்க்கம் சேருவார்கள்.

கியாமத்து நாளில், மஹ்ஷர் மைதானத்தில் நம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் முஃமின்களில் பெரும்பாவம் செய்தவர்களுக்காக பன்னிரண்டு இடங்களில் (ஷஃபாஅத்து) அல்லாஹ்விடம் பரிந்துரை செய்வார்கள். பன்னிரண்டாவது தடவையில் பெரும்பான்மையானவர்களுக்கு நரக விடுதலை கிடைக்கும். இதற்குத்தான் (ஷஃபாஅத்தே குப்ரா) மாபெரும் மன்றாட்டம் என்று கூறப்படும். மற்றும் நபிமார்களுக்கும், ஆலிம்களில் முத்தகீனானவர்களுக்கும் அல்லாஹ்வின் பாதையில் உயிர் நீத்த ஷுஹதாக்களுக்கும் அங்கு பாவிகளுக்குப் பரிந்துரை செய்யும் உரிமை வழங்கப்படும்.

கியாமத்து நாளில் இவ்வாறு பரிந்துரை செய்யும் உரிமை இன்னாருக்குத் தான் என்று குறிப்பாக்குவது கூடாது என்று கூறுகின்ற அப்துல் வஹ்ஹாப் நஜ்தியுடைய சீடர்களான, வஹ்ஹாபீ மத்ஹபைச் சேர்ந்த மௌலவீ இஸ்மாயீல், மௌலவி முஹம்மது அலி ஆகியோருடைய விளக்கம் தவறானதாகும். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கும் ஷஃபாஅத்துச்செய்யும் உரிமை கிடையாதென்று அவர்கள் கூறுகின்றனர். "அவனுடைய உத்தரவைக் கொண்டல்லாமல் அவனிடம் சிபாரிசு செய்பவர் யார்?" என்ற ஆயத்திற்கும், "அவன் பொருந்திக்கொண்டவரைத் தவிர (வேறு எவரும் அவனிடம்) சிபாரிசு செய்யமாட்டார்கள்." என்ற ஆயத்திற்கும் தவறான விளக்கம் கொண்டதால் இவ்வாறு கூறுகின்றனர்.

"(நபியே!) உம்முடைய இரட்சகன் உமக்கு (உயர்ந்த பதவிகளை)க்கொடுப்பான்; நீர் (அவற்றைப்) பொருந்திக்கொள்வீர்" என்ற ஆயத்து இறங்கியபொழுது, "என்னுடைய உம்மத்தில் ஒருவராவது நரகத்தில் இருக்கும்வரை நான் பொருந்திக்கொள்ளமாட்டேன்" என்று நபியவர்கள் கூறியுள்ளதையும், மற்றுமுள்ள விளக்கங்களையெல்லாம் சிந்திக்காமல் அவர்கள் கூறுகிறார்கள். மேலும் நபி (ஸல்) அவர்கள் தங்களின் மகளார் ஃபாத்திமாவை நோக்கி, "மகளே! உன் தகப்பனாருடைய ஷஃபாஅத்தை நம்பிக்கொண்டு மருட்சியடைந்து விடவேண்டாம்." என்றுகூறியது பயமூட்டுவதற்காகக் கூறப்பட்டதாகும். வஹ்ஹாபிகள் இதைத் தவறாகப் புரிந்து கொண்டு மக்களை அல்லாஹ்வின் அருளைவிட்டும் நிராசையாக்குகின்றனர். நபியவர்களின் மீது சலவாத்துக் கூறுவதைவிட்டும் மக்களை வழி கெடுக்கின்றனர். அல்லாஹ், அவர்களுக்கு நேர்வழி காட்டவேண்டும். ஜும்ஆவுடைய பாடத்தில் இவ்விபரம் விரிவாகக் கூறப்படும்.

மேலும் சிராத்துல் முஸ்தகீம் பாலத்தைக் கடக்கும்பொழுது, தீமை அதிகமானவர்கள் அதனைக்கடக்கமுடியாமல் நரகத்தில் வீழ்ந்து, பாவத்திற்குரிய தண்டனையைப் பெற்று, பிறகு வெற்றியடைவார்கள். இதயத்தில் ஓர் அணுவளவு ஈமானுள்ளவர்களும் நரகத்தில் நிரந்தரமாக இருப்பதில்லை. காஃபிர்கள் ஒருபோதும் நரகத்தை விட்டும் வெளியாகவும் மாட்டார்கள்.

காஃபிர்களில் சிலர், தானதருமங்கள் செய்து, நீதியும் நேர்மையுங்கொண்டு வாக்குத் தவறாமல் வாழ்ந்திருக்கிறார்களே அவர்களும் நரகத்தில் நிரந்தரமாக இருப்பவர்கள் தானா? என்று கேட்டால், அவ்விதமானவர்கள் ஈமானில்லாத காரணத்தால் நரகில்தான் இருப்பார்கள். ஆனால் அவருடைய புண்ணியத்தினால் நரக வேதனை குறைக்கப்படும்; இலேசாக்கப்படும்.

"நான் துராபாக (மண்ணாக) ஆகியிருக்கவேண்டுமே! என்று காஃபிர் கூறுவான்" என அல்லாஹ் குர்ஆனில் கூறியுள்ளான். இந்த ஆயத்தின் விளக்கத்தில் ஒரு தஃப்ஸீரில் கூறப்பட்டிருப்பதாவது:

துராப் تُرَابٌ என்ற பெயருடைய காஃபிர் ஒருவன் இருந்தான். அவன் ஒரு நாள் வழியில் செல்லும்போது ஓர் ஆலிமுடைய பேனா கீழே விழுந்துவிட்டதைக்கண்டு, அதனை எடுத்து அவரிடம் கொடுத்து அவருக்கு கண்ணியம் செய்த காரணத்தால் அவனுக்கு நரகத்தில் வேதனையை அல்லாஹ் இலேசாக்குவான். அதனைப்பார்க்கின்ற மற்ற காஃபிர்கள், "நானும் துராபாக இருந்திருக்கக்கூடாதா!" என்று கூறுவார்கள். இவ்வாறு ஒரு விளக்கம் கூறப்பட்டுள்ளது. எனவே, நன்மை செய்த காபிர்களுக்கு நரகில் வேதனை குறைக்கப்படும்.

## மீஜான், சிராத்துல் முஸ்தகீம், ஹவ்லுல் கவ்ஸர், லிவாவுல் ஹம்து கொடி ஆகியவற்றின் விபரம்.

மீஜான் என்பது நன்மைதீமைகளை நிறுக்கும் தராசாகும். அதற்கு ஒரு நாவும், இரண்டு தட்டுகளும் இருக்கும். அதன் அளவாகிறது. ஏழுவானங்களையும், பூமியையும் அதனுடைய ஒரு தட்டில் வைத்து விடலாம். இந்த ஹதீஸ் ஸல்மான் (ரலி) அவர்களின் வாயிலாக அறிவிக்கப்பட்டுள்ளது.

சிராத்துல் முஸ்தகீம் பாலமாகிறது நரகத்துடைய முதுகின்மீது (மேற்பகுதியில்) அமைக்கப்பட்டுள்ளது. அது வாளை விடக் கூர்மை யானதாகவும், முடியைவிட மெல்லியதாகவும் இருக்கும். அது ஏற்றம், சமதளம், இறக்கம் ஆகிய மூன்று அமைப்பாக உள்ளது. ஏற்றம் பத்தாயிரம் ஆண்டுகள், இறக்கம் பத்தாயிரம் ஆண்டுகள், (நடுவில்) சமதளம் பத்தாயிரம் ஆண்டுகள், ஆக முப்பதினாயிரம் ஆண்டுகளின் தொலைதூரமாகும். அதனைக் கடப்பது அமல்களைக்கொண்டேயல்லாமல் கால்களைக் கொண்டல்ல. மின்னல் வெட்டி மறைவது போன்று சிலரும், காற்றைப் போன்று சிலரும், பறவை வேகத்தில் சிலரும், குதிரை வேகத்தில் சிலரும், மனிதர்களின் நடை வேகத்தில் சிலரும், தவழ்ந்து தவழ்ந்து சிலரும் அதனைக் கடந்துசெல்வார்கள்.

ஹவ்லுள் கவ்ஸர் என்பது ரசூலுல்லாஹி (ஸல்) அவர்களுக்கு அல்லாஹு தஆலா வழங்குகின்ற ஒரு நீர்த்தடாகமாகும் إِنَّا أَعْطَيْنَاكَ الْكَوْثَرَ ———

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

"இன்னா அஃதய்னா கல் கவ்ஸர் "(நபியே) உமக்கு கவ்ஸர் என்பதை வழங்கியுள்ளோம், என்ற திருவசனத்தை அல்லாஹுதஆலா இறக்கிவைத்தபொழுது நபியவர்கள் மிக்க மகிழ்ச்சியடைந்தார்கள்.

ஹவ்லுள் கவ்ஸர் என்பது என்ன? என்று கேட்கப்பட்ட போது, "அல்லாஹுதஆலா அதனை எனக்குத் தருவதாக வாக்களித்துள்ளான். அதில் ஏராளமான நன்மைகளுண்டு; கியாமத்து நாளில் என் உம்மத்தினர்கள் அங்கு வருவார்கள். அதில் தண்ணீர் அருந்தி தாகம் தீருவார்கள். அதில் தண்ணீர் குடிக்கும் பாத்திரங்கள் வானிலுள்ள நட்சத்திரங்களின் எண்ணிக்கையளவு இருக்கும். அதன் நீளம் ஒரு மாதத்தின் தொலைதூரமாயிருக்கும்" என்றும், அது எல்லையற்ற தொலைதூரமாயிருக்கும் என்றும் கூறப்பட்டுள்ளது. அதற்கு ஹவ்லுல் மவ்ருத் (மக்கள் வரும் தண்ணீர்த்துறை) என்றும் பெயர் கூறப்படும்.

## கொடிகளின் விபரம்

لِوَاءُ الْحَمْدِ —— லிவாஉல் ஹம்து என்றால் புகழ் கொடி என்று பொருளாகும்.

لِوَاءُ الصَّبْرِ —— லிவா உஸ்ஸப்ர் (பொறுமையின் கொடி) இது நபி அய்யூப் (அலை) அவர்களுக்கு வழங்கப்படும்.

لِوَاءُ الْعِفَّةِ —— லிவாஉல் இஃப்பத் (பத்தினித் தனக்கொடி) இது நபியூசுப்(அலை) அவர்களுக்கு வழங்கப்படும்.

لِوَاءُ الْبُكَاءِ —— லிவா உல் புகா (அழுகையின் கொடி) இது நபி நூஹ் (அலை) அவர்களுக்கு வழ்ங்கப்படும்.

لِوَاءُ الْفَقْرِ —— லிவாஉல் ஃபக்ர் (வறுமையின் கொடி) இது நபி ஈஸா (அலை) அவர்களுக்கு வழங்கப்படும்.

لِوَاءُ الشُّكْرِ —— லிவா உஷ் ஷுக்ர் (நன்றியின் கொடி) இது நபி சுலைமான் (அலை) அவர்களுக்கு வழங்கப்படும்.

لِوَاءُ الْعِلْمِ —— லிவா உல் இல்ம் (கல்வியின் கொடி) இது நபி இப்றாஹீம் (அலை) அவர்களுக்கு வழங்கப்படும்.

இந்த ஒவ்வொரு கொடியின் நிழலிலும் அந்தந்த அமல்களில் சிறப்பாகத் திகழ்ந்தவர்கள் இருப்பார்கள். ஆனால் பொதுவாக நபிமார்களும் மற்றும் நல்லடியார்களும் லிவாஉல் ஹம்தென்னும் கொடியின் நிழலிலிருப்பார்கள். அக்கொடியை நபி (ஸல்) அவர்கள் தங்கள் திருக்கரத்தினாலேயே பிடித்திருப்பார்கள் என்று அபூஸயீதில் குத்ரீ (ரலி) அவர்களுடைய அறிவிப்பில் கூறப்பட்டுள்ளது. நபியவர்களுடைய உத்தரவு கொண்டு பிலால் (ரலி) அவர்கள் அதனைப் பிடித்திருப்பார்கள் என்றும் கூறப்பட்டுள்ளது. அல்லாஹ் மிக அறிந்தவன்.

6) **ஈமானின் ஃபர்ளுகளில் ஆறாவது, நன்மையும், தீமையும் அல்லாஹு தஆலாவினால் ஏற்படுவது என்று நம்பிக்கை கொள்ளுதல்.** நன்மை, தீமை,இலாபம், நஷ்டம், இன்பம், துன்பம், பிறப்பு, இறப்பு, மகிழ்ச்சி, கவலை இவை அனைத்தும் அல்லாஹுதஆலாவினால் உண்டாக்கப்படுபவை என்றும், அவனுடைய கட்டளை என்றும் நம்பிக்கை கொள்வதாகும்.

"நீங்கள் நன்றி செலுத்தினால் (நற்செயல்புரிந்தால்) அவன் அதனை உங்களுக்குப் பொருந்திக்கொள்வான். அவன் தன் அடியார்களுக்கு குஃப்ரை (நன்றி கொல்லும் தன்மையெனும் நிராகரிப்பை) ப் பொருந்திக்கொள்ளமாட்டான்," என்று அல்லாஹ் கூறுகிறான். (39:7) எனவே நன்மை, தீமை இரண்டையும் அல்லாஹ்தான் உண்டாக்கினாலும் நன்மையைப் பொருந்துவான்; தீமையைப்பொருந்த மாட்டான் என்றும் நம்பவேண்டும்.

"நன்மை, தீமை இரண்டும் அவன் நாட்டமில்லாமல் நடக்காது என்று கூறும் பொழுது, நன்மை செய்தவருக்கு நற்பிரதி பலனும், தீமை செய்தவருக்கு தண்டனையும் கொடுப்பது நீதியாகுமா? என்று கேட்கப்பட்டால் பின் நடக்கவிருக்கிற காரியங்களை இன்னதென அவன் நமக்கு அறிவிக்க வில்லை. அவன் நமக்கு அறிவித்ததெல்லாம் ஏவல், விலக்கல்தான். எனவே, அறிவித்தபடி ஏவலை எடுத்து நடக்கவும், விலக்கியதைவிட்டு தவிர்ந்து கொள்ளவும் வேண்டும்.

அல்லாஹுதஆலா தனது திருமறையில் "ஆத்மாவின் மீதும் அதனைச் செவ்வையாக அமைத்த(இறை)வன் மீதும் சத்தியமாக, பிறகு (ஆத்மாவான) அதற்கு அதனுடைய தீமையையும் (தீமை எது என்பதையும்) அதனுடைய தக்வாவையும் (நன்மை எது என்பதையும் இறைவனாகிய) அவன் உணர்த்தினான். (எனவே) அதனைத்தூய்மைப்படுத்திக் கொண்டவன் திட்டமாக வெற்றியடைந்து விட்டான். அதனைப்(பாவமென்னும் அழுக்குக்குள்) புதைத்தவன் திட்டமாக நட்டமடைந்து விட்டான்" (ஸூரத்துஷ்ஷம்ஸ் 91) என்று கூறியிருப்பதிலிருந்து நன்மை தீமைகளைச் சீர்தூக்கிப்பார்த்து செயல்களில் ஈடுபடுவதற்குறிய தகுதியை அல்லாஹுத்தஆலா மனிதனுக்கு வழங்கியிருக்கிறான் என்பது தெளிவாகத் தெரிகிறது.

மேலும் நன்மை, தீமை இரண்டும் அவன் நாட்டப்படி நடந்தாலும், நன்மையை மட்டுந்தான் பொருந்திக்கொள்வான் என்பதற்கு உதாரணம் எல்வாறென்றால், ஒரு மனிதன் ஏராளமான பொருளைச் செலவு செய்து ஓர் அழகிய மாளிகையைக் கட்டி,

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

அதனைப் பராமரிப்பதற்கு ஒரு மனிதனை நியமித்தான். அப்பொழுது அந்த எஜமான் சில தினங்கள் வெளியூருக்குப் போகவேண்டிய நிலை ஏற்பட்டது. ஆகையால் ஒரு மாதத்திற்குத் தேவையான எல்லாப்பொருட்களையும் அம்மாளிகையில் வாங்கிவைத்து அம்மனிதனிடம், "இந்த மாளிகையில் நான் வரும்வரை நீ உஷாராக இருந்து கவனித்துக்கொள்ளவேண்டும். வெளியில் செல்லக்கூடாது" என்று சொல்லிவிட்டு அதனைப்பூட்டி சாவியை எடுத்துக்கொண்டு போய்விட்டான். இப்பொழுது உஷாராக இருந்து கவனித்துக்கொள்ளவேண்டும் என்றுதான் அவன் சொல்லிச் சென்றிருக்கிறானேதவிர, அதற்கு மாற்றமான மலம் ஜலம் கழிப்பதைப்பற்றி அவன் கூறவில்லை. எனினும், அவன் மலம் ஜலம் கழிப்பான் என்ற நாட்டம் அந்த எஜமானுக்கு இருக்கத்தான் செய்யும். இவ்வாறுதான் அல்லாஹு தஆலா நன்மையைக் கொண்டு மட்டும் ஏவுவானே தவிர, தீமையைக்கொண்டு ஏவமாட்டான். ஆனால், அது அவனுடைய நாட்டத்தில் இருக்கத்தான்செய்யும். ஒரு மனிதனுடைய நாட்டத்தை மற்றொரு மனிதன் அறியமுடியாது என்று சொல்லும்போது, அல்லாஹ்வுடைய நாட்டத்தை அடியார்கள் எவ்வாறு அறிய முடியும்? அல்லாஹ்வுடைய களாகத்ரை (விதிப்பை) க்கொண்டு ஈமான் கொள்வதுதான் நம்முடைய கடமையாகும். அதனைப்பற்றி தர்க்கம் செய்வது கூடாது.

இப்லீஸாகிறவன் அல்லாஹ்விடத்தில் களா கத்ரைப்பற்றியும், அவன் நாட்டத்தைப்பற்றியும் தர்க்கம் செய்தான். உன்னுடைய நாட்டத்தில் இந்த ஆதமுக்கு நான் ஸஜ்தாச் செய்வேன் என்றிருந்தால், அவ்வாறு நான் ஸஜ்தாச் செய்யாமலிருப்பதற்கு எனக்கு சக்தி இருக்குமோ!? என்று தர்க்கம் செய்தான். கட்டளையிட்டது யார் என்பதை அவன் உணரவில்லை. அதனால் அல்லாஹ்வுடைய நிரந்தரமான சாபத்திற்கு அவன் ஆளாகி விட்டான்.

கூஃபா நகரப் பள்ளியொன்றில் ஒரு மனிதர் களா கத்ரைப் பற்றி மக்களுக்கு பயான் செய்துகொண்டிருந்தார். அப்போது கலீஃபாவாக இருந்த ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் அதனைக் கேட்டு அம்மனிதரை அழைத்து கன்னத்தில் அறைந்து, இனிமேல் நம்முடைய மஸ்ஜிதுகளில் இப்படிப்பட்ட பேச்சைப் பேசக்கூடாது என்று எச்சரிக்கைசெய்து, கொஞ்சம் பணத்தையும் கொடுத்து அவரை விரட்டினார்கள் என்று ஒரு சம்பவம் கூறப்பட்டுள்ளது.

அடியானாகிறவன் அல்லாஹ்வுடைய கட்டளைக்குக் கட்டுப்பட்டு வாழ வேண்டுமேயல்லாது, அவனுடைய கட்டளைகளைக் குறை கூறி, தொழுகை போன்ற வணக்கங்களை குறை கூறி இப்லீஸுடன் சேர்ந்து விடக்கூடாது.

அல்லாஹ்வின் கட்டளைகளில் குறுக்கிட்டு, களா கத்ரைப்பற்றி வீணாகப் பேசி வழி கெட்டுப்போன ஜப்ரிய்யா, கத்ரிய்யா போன்ற கூட்டத்தினரைப் பற்றியும் அவர்களைத் துயர்ந்து வழி கெட்டு விட்ட எழுபத்திரண்டு கூட்டத்தினரைப்பற்றியும் இன்ஷா அல்லாஹ் பின்னால் கூறப்படும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மனாவீ'

### ஈமானில் சிலகேள்விகள்

நீ முஃமினா? என்று ஒருவன் உன்னிடம் கேட்டால் "இன்ஷா அல்லாஹ் நான் முஃமின்தான்" என்று பதில் கூறவேண்டும். இந்த இன்ஷா அல்லாஹ் என்பதைக்கொண்டு பரகத்தை நாடப்படும். ஆனால், ஹனஃபீ மத்ஹபில், "நான் முஃமின் இன்ஷா அல்லாஹ்" என்று சொன்னால் ஈமான் சரியாகாது. எனவே "உண்மையாக நான் முஃமின்தான்" என்று கூறுவது தான் சரி எனக்கூறப்பட்டுள்ளது. இதில் இவ்விரு இமாம்களுக்கும் ஆதாரங்கள் இருக்கின்றன.

"நீ எந்தமார்க்கம்? யாருடைய உம்மத்து?" என்று எவரேனும் கேட்டால், "நான் நபி இப்றாஹீம் (அலை) அவர்களுடைய மார்க்கத்தில் முஹம்மது (ஸல்) அவர்களுடைய உம்மத்தில் உள்ளவன்" என்று பதில் கூறவேண்டும்.

"நீ எந்த மத்ஹப்?" என்று உன்னைக்கேட்டால், பிரபலமான ஹனஃபீ, மாலிகீ, ஷாஃபியி, ஹன்பலீ ஆகிய மத்ஹபுகளில் எதில் நீ இருக்கிறாயோ அதனைச்சொல். மேற்கூறப்பட்ட நான்கைத் தவிர دَاءُوْدِيْ தாவூதி மத்ஹப், ثَوْرِيْ ஃதவ்ரி மத்ஹப், نَخَعِيْ நுகஈமத்ஹப், اَوْزَاعِيْ அவ்ஜாயிமத்ஹப் ஆகிய நான்கு மத்ஹபுகள் உண்டு. இவர்களும் முஜ்தஹிதீன்கள்தாம் என்று கூறப்பட்டாலும், இந்த மத்ஹபுகளைத் தொடருவது கூடாது.

நீ எப்போது ஈமான் கொண்டாய்? என்று கேட்கப்பட்டால், மனிதர்களைப் படைக்குமுன் வாக்குறுதி பெற்ற ஆன்மீக உலகத்தில் அல்லாஹுதஆலா தன் சந்நிதானத்தில் உயிர்களையெல்லாம் நிறுத்தி " நான் உங்களுடைய நாயனல்லவா?" என்று கேட்டபொழுது "ஆம்! நீ எங்களுடைய நாயன்தான்" என்று அந்த உயிர்களெல்லாம் கூறிய நேரத்தில் நானும் ஈமான் கொண்டேன் என்று கூறவேண்டும்.

"இன்ஷா அல்லாஹ் நான் முஃமின்" என்று கூறினால் அது உறுதியைக் குறிப்பதாகும். ஆனால் "இன்ஷா அல்லாஹ் (அல்லாஹ் நாடினால்) "நீ தலாக்" என்று மனைவியை நோக்கிக் கூறினால் அது 'தலாக்' ஆகாது என்று ஷாஃபியிமத்ஹபின் உலமாக்கள் சொல்லியிருப்பதின் விளக்கம் என்னவென்றால், ஈமான் என்பது அதனைச் சொல்லுகின்ற நேரத்தில் உறுதியாயிருக்கிறதால் அதனைச் சந்தேகம் கொண்டு சொல்வதல்ல. ஆனால் தலாக் என்பது இன்ஷா அல்லாஹ் சொல்வதால் அங்கு சந்தேகம் என்பது வந்துவிடுகிறது. ஆகையால் அவள் தலாக் ஆகமாட்டாள்.

ஈமானுக்குத் தலை, "லா இலாஹ இல்லல்லாஹு " முஹம்மதுர்ரசூலுல்லாஹ்" என்ற கலிமா தய்யிபாவாகும். அதற்கு இதயம் குர்ஆன் ஓதுதலாகும். அதற்கு உடல் அல்லாஹ்வை ஃதிக்ரு செய்வதும் தொழுவதுமாகும். அதனை செழிப்பாக்குவது பொருள் வசதியுள்ளவர்கள் ஜகாத் கொடுப்பதும், வசதியில்லாதவர்கள் இயன்ற அளவு தான தருமங்கள் செய்வதும், அதுவும் இயலாதவர்கள் நாவினால், கையினால் பிறருக்கு உதவி செய்வதுமாகும். ஈமானின் ரூஹ், (இக்லாஸ்) மனத்தூய்மையாகும். அதன் ஒளி பரிசுத்தமாகும். அதன் நண்பன் மார்க்கக் கல்வியாகும். அதன் சிம்மாசனம் நோன்பாகும். அதன் சட்டளை அல்லாஹ்வின் ரஹ்மத்தை ஆசை வைப்பதும், அவனுடைய தண்டனையை பயப்படுவதுமாகும்.

## ஈமானுக்கு ஆபத்து

ஈமானைக் கரித்து அழித்து விடும் நெருப்பாகிறது பொய், பொறாமை, கோபம் ஆகியவையாகும். ஈமானுக்குப் பகைவன், உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் (நிஃபாக்) நயவஞ்சகத்தனமாகும். வணக்கங்களில் நயவஞ்சகத்தனமாயிருப்பது குஃப்ரைவிடக் கொடியதாகும். அவர்கள் தாம் முனாஃபிக்குகள் என்றும், ஏழாம் நரகத்தில் போடப்பட்டு வேதனை செய்யப்படுவார்கள் என்றும் குர்ஆனில் கூறப்பட்டுள்ளது.

"நிச்சயமாக நயவஞ்சகர்கள் நரகத்தின் அடித்தளத்தில் இருப்பார்கள்" (4:145) என்பதாகவும், "நிச்சயமாக நயவஞ்சகர்கள் அல்லாஹ்வை ஏமாற்ற நினைக்கின்றனர்; அவனோ அவர்களை ஏமாற்றி விடுகிறான்." (4:142) என்ற வசனங்களும், இன்னும் "அவர்கள் தொழுகையில் நின்றால் மனிதர்களுக்குக் காண்பிப்பதற்காக சோம்பேறிகளாக நிற்கின்றனர்" (4:142) என்ற வசனமும் கவனிக்கத் தக்கவையாகும்.

நயவஞ்சகர்கள் ஏன் இவ்வாறு நரகின் அடித்தளத்தில் போடப்படுகிறார்கள் என்பதற்கு ஷைகுல் அக்பர் முஹ்யித்தீன் இப்னுல் அரபி (ரஹ்) அவர்கள் அழகிய விளக்கம் கூறுகிறார்கள். அதாவது சிலையை வணங்கும் முஷ்ரிகானவன் தான் வணங்கும் சிலையை ஒரு முழ தூரத்தில் வெளியில் வைத்து கும்பிட்டு சாஷ்டாங்கம் செய்கிறான். ஆனால் ஒரு நயவஞ்சகனோ தான் விரும்பும் மனிதனையோ அல்லது சிலையையோ தன் மனதுக்குள் வைத்துக் கொண்டும் ஆனால் வெளிப்பார்வைக்கு அல்லாஹ்வை வணங்குவது போலும் நடிக்கிறான். உண்மையில் நயவஞ்சகன் தன் மனோ இச்சையைத் தான் வணங்குகிறான். எனவே, முஷ்ரிக்குடைய சிலையை விட இவனுடைய சிலை இவனுக்கு மிக நெருக்கமாக இருப்பதால் இவ்வித தண்டனை வழங்கப்படுகிறது என்று கூறியுள்ளார்கள்.

பெருமையாகிறது, வேர்ப்பூச்சிபோல் ஈமான் என்னும் மரத்தை வேரோடு சாய்த்து விடுகின்ற குணமாகும். அந்தப் பெருமைக்குணம் ஒரு மனிதனை ஈமானை விட்டும் மாற்றி விடக்கூடிய (முர்தத்தாக்கக் கூடிய) காரியங்களில் ஒன்றாயிருக்கும். அப்படிப்பட்ட காரியங்கள் முன்னூறுக்கும் மேல் இருப்பதாக ஹதீஸ், ஃபிக்ஹு நூற்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அக்காரியங்கள் அனைத்தும் எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்று வழிகளில் உண்டாகும். ஆகையால் அவற்றில் ஏதும் நம்மிடம் வந்து விடாமல் பாதுகாப்பாக இருந்து அவ்விதமான தீமைகளை விட்டுப் பாதுகாக்கும் படியும், ஈமானைத் தரிபடுத்தி வைக்கும் படியும் அல்லாஹ்விடம் இறைஞ்சுதல் அவசியமாகும். ஈமான் ஸலாமத்தாக பாதுகாப்பாக இருப்பதற்குரிய சில துஆக்கள் பின்னால் கூறப்படும்.

### ஈமானைக்கெடுக்க அடர்ந்தேறிவரும் எண்ணங்கள்

ஈமானுக்கு மாற்றமான சில ஊசாட்டங்கள், ஷைத்தானுடைய எண்ணங்கள் ஒரு முஃமினுடைய உள்ளத்தில் வருவதின் காரணத்தால் அவன் காஃபிராகி விடமாட்டான். எனினும், அவ்வாறு ஊசாட்டங்கள் வருகின்ற நேரத்தில் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடி, பாவ மன்னிப்பும் தேடிக் கொள்ள வேண்டும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

காஃபிரான ஒருவன் முஃமினான ஒருவரை குஃப்ரை உண்டாக்கும் செயலைச் செய்யுமாறு நிர்பந்தித்தால், அவர் ஈமானை மனதில் உறுதியாக்கிக் கொண்டு வெளிப்படையாகக் குஃப்ருக்குரிய அக்காரியத்தைச் செய்வதால் அவர் காஃபிராகி விடமாட்டார். சொல்லிலும் அவ்வாறுதான். எனினும் அந்தச் சொல்லுக்கு தனக்குச் சாதகமான வேறொரு பொருள் இருக்கும் விதத்தில் அமைத்துக் கொள்வது விரும்பத்தக்கதாகும். நிர்பந்தமில்லாத நேரத்திலும் இவ்வாறு சொல்வது கூடும். உதாரணமாக: நான் தெய்வமென்று நீ கூறவேண்டும் என்று ஒரு முஃமினை ஒருவன் நிர்பந்தித்தான். அப்பொழுது நீ தெய்வம் தான் என்று நாவினால் கூறி இதயத்தில் "உன்னைச் சார்ந்தவர்களுக்கு; எனக்கல்ல," என்பதை எண்ணிக் கொள்வது போல.

*எவரொருவர் ஈமான் கொண்ட பின் அவர் அல்லாஹ்வை நிராகரித்து விடுகிறாரோ ஆனால், அவருடைய இதயம் ஈமானால் நிம்மதியடைந்திருக்கும் நிலையில் நிர்பந்திக்கப்பட்ட மனிதரைத் தவிர (அவர் மீது யாதொரு குற்றமுமில்லை)' (16:106)* என்ற இந்த ஆயத்தின் ஆதாரத்தைக் கொண்டு நிர்பந்திக்கப்பட்டவன் காஃபிராகிவிட மாட்டான் என்பது போல, நிர்பந்திக்கப்படுபவனுடைய தலாக்கும் செல்லாது என இமாம் ஷாஃபியீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். ஆனால், இமாம் அபூஹனீஃபா (ரஹ்) அவர்கள் நிர்பந்திக்கப் பட்டவனுடைய தலாக்கும் செல்லுபடியானது தான் என்று கூறுகிறார்கள். அவர்களும் இதே ஆயத்தைக் கொண்டுதான் ஆதாரம் கூறியுள்ளார்கள். ஆனால் இது இறங்கிய காரணத்தை அவர்கள் அடிப்படையாகக் கூறுகிறார்கள். அதாவது இந்த ஆயத்து அம்மார், யாஸிர், சுமைய்யா (ரலியல்லாஹு அன்ஹும்) ஆகியோருடைய விஷயத்தில் இறங்கியது. இம்மூவரையும் இஸ்லாத்தை விட்டு மாறி விடும்படி காஃபிர்கள் வற்புறுத்தி நிர்பந்தித்தார்கள். அப்பொழுது யாஸிரும், சுமய்யாவும் மறுத்ததனால் இவ்விருவரையும் கொலை செய்து விட்டனர். அம்மார் (ரலி) அவர்கள் தங்களுடைய இதயம் ஈமானைக் கொண்டு நிம்மதியடைந்திருக்கும் நிலையில் நாவினால் அந்த காஃபிர்களுடைய சொல்லுக்கு வழிப்பட்டார்கள்.

எனவே ஷாஃபியீ இமாம் அவர்கள் அம்மார் (ரலி) அவர்களுடைய செயலைக் கொண்டு ஆதாரம் எடுத்துள்ளார்கள். இமாம் அபூஹனீஃபா (ரஹ்) அவர்கள் யாஸிர், சுமைய்யா (ரலி) இருவருடைய செயலையும் ஆதாரமாக எடுத்துள்ளார்கள்.

இன்னும் மனதில் ஒரு கருத்தை மறைத்து வைத்துக் கொண்டு நாவினால் ஓர் வாசகத்தைக் கூறுவதற்கு ஓர் உதாரணம்

اَلنَّارُ فِي الشِّتَاءِ خَيْرٌ مِّنَ اللهِ وَرَسُوْلِهٖ

இவ்வாசகத்தின் நேரடிப்பொருள், "மழைகாலத்தில் நெருப்பானது அல்லாஹ்வை விடவும் அவனது தூதரை விடவும் சிறப்பானதாகும்" என்பதாகும். இதில் ஒரு வார்த்தைத் தொக்கி நிற்பதாகக் கருதி பின் வருமாறு கூறலாம்.

اَلنَّارُ فِي الشِّتَاءِ خَيْرٌ جَاءَ مِنَ اللهِ

"மழைகாலத்தில் நெருப்பானது, அல்லாஹ்விடத்திலிருந்து வந்துள்ள சிறப்பாகும்."

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

இவ்வாறே அஸ்ஸலாமு அலைக்கும் என்று காஃபிர்களுக்கு கூறும்பொழுது அஸ்ஸலாமு என்பதை அல்லாஹ்வின் பெயராக நினைத்துக் கூறலாம். அப்பொழுது "அல்லாஹ்வாகிறவன் உங்கள் மீது பாதுகாவலனாக இருக்கிறான்; நீங்கள் செய்பவற்றுக்கு நிச்சயம் உங்களுக்கு தண்டனை வழங்குவான்," என்ற கருத்து வந்துவிடும். அல்லது அஸ்ஸலாமு என்றால் மலை, இருள் என்னும் பொருள்களுமுண்டு. இவ்வாறு நிர்பந்திக்கப்படும் நேரத்தில் ஒரு கருத்தை மனதிற் கொண்டு ஈமானுக்கு மாறுபடாமல், வேறொரு கருத்தில் வெளிப்படையாக வாசகத்தைக் கூறுவது கூடும்.

முஃமின் ஒருவர் இறந்து விட்டால் அவருடைய ரூஹூம், ஈமானும் இல்லிய்யூன் என்னும் சொர்க்கத்தில் இருக்கும்.அல்லது பசுமை நிறமுள்ள பறவையின் உடலுக்குள் நுழைக்கப்பட்டு சொர்க்கத்தில் விருப்பமான இடத்திலெல்லாம் பறந்து திரியும். இவ்வாறு ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஈமான் என்னும் பெருமரத்தின் கிளைகள் எழுபத்தி ஏழாகும். அவற்றை விளக்கமாகத் தெரிய வேண்டுமானால் இமாம் பைஹகீ (ரஹ்) அவர்கள் எழுதியுள்ள

شُعَبُ الْإِيْمَانِ

'ஷுஅபுல் ஈமான்' என்ற நூலிலும், அதனைத் தமிழில் எனது மாமனார் கீழக்கரை தைக்கா சாஹிபு அவர்கள் பாடியுள்ள பாடலிலும் கண்டு கொள்ளலாம்.

### ஈமானின் வகைகள்

ஈமானில் ஐந்து வகைகளுண்டு. முதலாவது: பதிக்கப்பட்ட ஈமான். இது மலக்குகளுடைய ஈமான். இரண்டாவது: காக்கப்பட்ட ஈமான். இது நபிமார்களுடைய ஈமான். மூன்றாவது: ஒப்புக்கொள்ளப்பட்ட ஈமான். இது முஸ்லிம்களில் நற்செயல் புரிந்தவர்களின் ஈமான். நான்காவது: நிலையற்ற ஈமான். இது வழிகெட்ட எழுபத்திரண்டு கூட்டத்தினருடைய ஈமான். ஐந்தாவது: தட்டப்பட்ட ஈமான். இது முனாஃபிக்குகளுடைய ஈமானாகும்.

முஸ்லிம்களுடைய ஈமானில் இரண்டு வகைகள் உள்ளன. முதலாவது: தக்லீதுடைய ஈமான். அதாவது அல்லாஹ்வைப் பற்றி பெற்றோரும்,ஆசிரியர்களும் சொல்லிக் கொடுத்ததை ஒப்புக் கொண்டு ஈமான் கொள்வது.

இரண்டாவது: ஈமான் இக்தியார்(சுயவிருப்ப ஈமான்) அதாவது, அல்லாஹு தஆலாவுடைய மகத்துவத்தை தன் அறிவினால் சிந்தித்து உறுதிப் படுத்திக் கொள்ளும் ஈமானாகும். இவ்விதம் ஈமான் கொள்வதுதான் ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் ஃபர்ளு ஆகும். முந்தின ஈமான் தக்லீதின் மீதே ஆரம்பத்தில் இருந்தாலும், அதன் மீதே நிரந்தரமாக இருக்காமல் பிந்திய ஈமான் இக்தியாரின் மீது ஆகி விட வேண்டும். எனினும், முதல்வகை ஈமானாகிறது ஏற்கப்படக்கூடியதா என்பதில் உலமாக்களிடம் கருத்து வேற்றுமைகள் இருக்கின்றன. இத்துடன் ஈமானுடைய ஆறு ஃபர்ளுகள் முடிவடைந்தன.

## ஈமானுடையஷர்த்துகள்

ஈமானுடைய ஷர்த்துகள் எட்டாகும். அவற்றை அனைவரும் அறிந்து பாடமாக்க எளிதாக இருப்பதற்காக நம்முடைய உஸ்தாது அல்லாமா ஷைகு அப்துல் காதிர் தைக்கா சாஹிப் (ரஹ்) அவர்கள் தங்களுடைய ஷரீஅத்து மாலையில் பாடியுள்ளதை இங்கு கூறுகிறோம்.

### ஈமானின் ஷர்த்துகள்:

ரப்பைக் கொண்டு ஈமான் கொள்வதில்
இருநான்கு ஷர்த்துண்டது கேள்
ஒப்போடுவமை இல்லாதவன் மேல்
உவப்பு வைப்பதும்,மலக்குகளை
ஹுப்பு வைப்பதும்,நபிமார்களை
கொண்டு உவப்பதும் ஷர்த்தில் மூன்றாம்
தப்புச் செயல் செய்த பகையரின் மேல்
சாரும் கோபமா யிருப்பதுமே:

வல்லவன் ஏவின ஏவலுக்கு
வழிப்பாட்டில் ஐந்தாம் ஷர்த்தாகுமாம்
அல்லாஹ் விலக்கின விலக்கல்களை
அகல்வது ஆறாம் ஷர்த்தாகுமாம்.
நல்லோன் கருணையை ஆசைவைத்தல்
நாடும் ஷர்த்தினில் ஏழாவதாம்
பொல்லா அதாபினை பயப்படுதல்
பொருந்தும் ஷர்த்தினில் எட்டாகுமே

### ஈமானின் ஹகீகத்து (அந்தரங்கம்)

ஈமான் அகமியம் ஐந்துண்டுகேள்
இருதயத்துடன் விண்ணப்பமும்
நேமமாகவே அமல் செய்வதும்
நிய்யத்து கொண்டு அமல் செய்வதும்
கோமான் நபியுல்லாஹ் சுன்னத்துக்கு
கொள்ளும் நேர் பாடாயிருப்பதுவும்
சீமானெனும் ஙனீ யுடைய இரசூல்
செல்வவாயினால் செப்பினரே

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

**ஈமானுடைய அசல் :-**

ஈமானின் அசல் ஏழுண்டு கேள்
இறையை உவப்பதும் நிஜம் சொல்வதும்
கோமான் பேரிலே சாட்டுதலும்
குதாவைப் பயப்பாடும் ஆசையுடன்
நேமமாகவே வெட்கிப்பதும்
நிறைந்தோன் களாவினை பொருந்துவதும்
ஆமான தோழன் முஃமினுக்கு அறிவாகுமென அருளிச் செய்தார்

**ஈமானுக்கும் அமலுக்கும் வித்தியாசம் :-**

ஈமான் அமலிதற் கிடையிருபத்தோ
டிரண்டு விகற்பம் தானுண்டு கேள்
ஈமான் தொடரப்பட்டது அமல்தான்
ஈமானைத் தொடர்ந்தது தானொன்று
ஈமான் நேமமாய் இருக்கும் அமல்
இருக்க வக்திடப்பட்டதாகும்.
ஈமான் ஃபர்ளெல்லார் பேரிலேயும்
இறைவன் அமல் முஸ்லிமுக்கே
ஈமானுடனே தான் கொளுகினது
இஸ்லாமான பேர் ஹக்முகளெல்லாம்.
ஈமான் அமலின்றி மக்பூலாகும்
ஈமானின்றியே அமல் கூடாது
ஈமான் தனைக்கொண்டு சொர்க்கம் கிட்டும்
ஈமானல்லாத அமல் கொண்டல்ல
ஈமான் ஃதவாபினுக் குரியதல்ல
இனிய ஃதவாபு நல் அமலுக்கென்றார்
ஈமான் தன்னைத்தான் நிறைபடாது
எல்லா அமலையும் நிறுக்கப்படும்
ஈமான் கொண்டு வாஸிய்யத்தாகாது
எந்த அமல் கொண்டும் வாஸிய்யத்தாகும்
ஈமானை விட்டிடில் குஃப்ரேயாகும்.
இது போலில்லை அமலை விட்டால்
ஈமானைக் கொண்டு நபிமார்கள் தாம்
இறையோனிடத்தில் காக்கப்பட்டோர்.

### கஸ்ஸாலி இமாம் அவர்கள் சொற்படி ஈமானின் ஃபர்ளுகள் எட்டுக்கு விளக்கமும், ஹனஃபீ இமாம் அவர்கள் சொற்படி ஈமானின் ஃபர்ளுகள் ஏழுக்கு விளக்கமும்

ஈமானுடைய ஃபர்ளுகள் ஆறுக்கும் விவரம் மேலே விளக்கமாகக் கூறப்பட்டு விட்டது. எனினும், கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் தங்கள் 'இஹ்யா உலூமித்தீன்' என்ற நூலில் ஈமானின் ஃபர்ளுகள் எட்டு என்று விளக்கியுள்ளார்கள். மேலே சொன்ன ஆறைக்கொண்டு ஈமான் கொள்வதுடன் மௌத்துக்குப்பின் எழுப்புவது கொண்டும் மறுமையில் கேள்வி கணக்குகள் கேட்கப்படும் என்பது கொண்டும் ஆக எட்டுக் காரியங்களைக் கொண்டு ஈமான் கொள்ள வேண்டும் என்று கூறியிருக்கின்றார்கள். இந்த எட்டுக்குரிய விபரங்கள் குர்ஆனில் சில ஆயத்துகளில் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஹனஃபீ மத்ஹபின் படி முன்னால் கூறப்பட்ட ஆறு ஃபர்ளுகளுடன் மௌத்துக்குப்பின் எழுப்பப்படுவதைக் கொண்டும் ஈமான் கொள்ள வேண்டும் என்ற ஃபர்ளுடன் ஏழு பர்ளுகளாகும்.

### ஈமானும் இஸ்லாமும்

உள்ளத்தில் கொள்ளக்கூடிய நம்பிக்கை என்னும் ஈமானாகிறது இஸ்லாமென்னும் வழிபாட்டில் நுழையாது. ஏனெனில் ஈமான் என்னும் உண்மையை உள்ளத்தில் கொள்ளாதவன் வெளிப்படையில் நயவஞ்சகமாக வணங்குகிறான். மேலும் உள்ளத்தில் ஈமான் கொண்டுள்ள ஒருவன் வெளிப்படையில் வணங்காமல் இருக்கிறான். இவ்வாறு காஃபிரான ஞானிகளும் பலர் இருக்கின்றனர். ஆகையால் இஸ்லாமுடன் இரண்டறக் கலந்திருக்கும் நம்பிக்கை தான் பலன் தரும் ஈமானாகும். எனவே உள்ளத்தில் ஈமான் உள்ளவன் செய்யும் அமல் தான் தூய்மையான வணக்கமாகும்.

ஈமானுக்கும் இஸ்லாமுக்கும் இடையிலுள்ள தொடர்பு பற்றி—— அல்லாஹு தஆலா குர்ஆனில் பல வசனங்களில் விளக்கியுள்ளான். இறைவன் கூறுவதாவது:

قَالَتِ الْاَعْرَابُ اٰمَنَّا ۗ قُلْ لَّمْ تُؤْمِنُوْا وَلٰكِنْ قُوْلُوْٓا اَسْلَمْنَا *(49:14)*

"நாட்டுப்புறத்து அரபிகளில் பலர் நாங்களும் விசுவாசிக்கிறோம் எனக் கூறுகின்றனர். (அவர்களை நோக்கி நபியே) நீர் கூறும் ; நீங்கள் விசுவாசிப்பதில்லை. (ஆனால்,எங்களுக்குப் பயந்து வெளிப்படையாக) வழிபட்டோம் என்று சொல்லுங்கள்". என்றும்,மேலும்:

فَاَخْرَجْنَا مَنْ كَانَ فِيْهَا مِنَ الْمُؤْمِنِيْنَ ۝ فَمَا وَجَدْنَا فِيْهَا
غَيْرَ بَيْتٍ مِّنَ الْمُسْلِمِيْنَ ۝ *(51:34,35)*

"ஆகவே (லூத் நபியைக் கொண்டு) ஈமான் கொண்டவர்களில் நின்றும் அந்தப் பட்டணத்தில் இருந்தவர்களை (அவர்கள் அழிவதற்கு முன்னதாகவே அந்தப் பட்டணத்தை விட்டும்) வெளியேற்றி விட்டோம். அந்தப் பட்டணத்தில் (லூத் நபியையும் அன்னாரின் இரு மகள்களையும் கொண்ட) முஸ்லிம்களில் உள்ள ஒரு

வீட்டுக்காரரைத் தவிர (வேறு எந்த முஸ்லிமானவரையும்) நாம் காணவில்லை" என்றும்,மேலும்:

وَقَالَ مُوسٰى يٰقَوْمِ اِنْ كُنْتُمْ اٰمَنْتُمْ بِاللّٰهِ فَعَلَيْهِ
تَوَكَّلُوْٓا اِنْ كُنْتُمْ مُّسْلِمِيْنَ (10:84)

"மூஸா (தன் மக்களை நோக்கி) என்னுடைய மக்களே!நீங்கள் (மெய்யாகவே) அல்லாஹ்வை விசுவாசித்து (முஃமின்களாக இருந்து உண்மையாகவே) நீங்கள் அவனுக்கு முற்றிலும் வழிப்படு கிறவர்களாகவும் (முஸ்லிம்களாகவும்) இருந்தால், முற்றிலும் அவனையே நம்பி (அவனிடமே உங்கள் காரியங்கள் அனைத்தையும் ஒப்படைத்து) விடுங்கள் என்று கூறினார்"என்றும் இறைவன் கூறியிருக்கிறான்.

எனவே உள்ளத்தில் ஈமானென்னும் இறை நம்பிக்கையோடுதான் இஸ்லாமென்னும் வழிபாட்டில் ஈடுபட வேண்டும் என்பதும், ஒன்றைவிட்டு மற்றொன்று விலகியிருக்க முடியாது என்பதும் மேற்கண்ட திரு வசனங்களால் நன்றாக புலனாகிறது.

ஈமானின் அடிப்படையில் கூடுதலோ, குறைதலோ கிடையாது. அதிகமாக அமல் செய்பவர் ஈமான் நிரப்பமுள்ளவராவார். அமல் குறைவாகச் செய்பவர் குறையுள்ளவராவார். முஃமினானவர்களுக்கு சில அடையாளங்கள் குர் ஆனில் சொல்லப்பட்டுள்ளன. அவற்றை நம் வாழ்வில் மேற்கொண்டு நிரப்பமானவர்களாக ஆக வேண்டும். அவை: உண்மை, இறையச்சம், இறைவனையே முழுமையாக நம்பியிருத்தல், தூய்மை, தொழுகை, ஜகாத்து, சதக்கா, நாவைப் பேணுதல், மர்மஸ்தானத்தைப் பாதுகாத்தல், பிறருக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்து நாவினாலோ, செயலினாலோ பிறருக்கு இழைத்த தீங்குக்காக மன்னிப்புக் கேட்டல் ஆகியவையாகும்.

இவ்வாறே ஹதீஸிலும் சில அடையாளங்கள் கூறப்பட்டுள்ளன. அவை:அல்லாஹ்வின் களா கத்ரைப் பொருந்துதல், துன்பம் ஏற்படும் போது பொறுமையைக் கைக் கொள்ளுதல், இன்பம் ஏற்படும் போது நன்றி செலுத்துதல், விசுவாசம், வாக்கை நிறைவேற்றுதல், நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருத்தல் ஆகியவையாகும்.

ஒரு முஃமின் தன் நஃப்ஸை எல்லாவற்றை விடவும் தாழ்மையாக்கி நஃப்ஸு-அம்மாராவின் குணங்களாகிய கோபம், ஆசை, மேலெண்ணம், மனோ இச்சை, ஆகிய தீமைகளை விட்டும் தூய்மைப்படுத்தாத வரை முழுமையான முஃமினாக ஆகமுடியாது என்று சூஃபியாக்கள் கூறுகின்றனர். முனாஃபிக் என்னும் நயவஞ்சகனுக்கு மூன்று அடையாளங்களுண்டு. அவைகளாவன: பொய், வாக்கு மாற்றம், நம்பிக்கை துரோகம் ஆகியவைகளாகும். அல்லாஹு-தஆலா நம்மை நிரப்பமுள்ள முஃமின்களாக ஆக்கியருள்வானாக!

ஈமான் எதனைக் கொண்டு உய்வடையும்? என்று ஐந்நூறு ஷெய்குமார்களிடம் அபாயஸீத் பிஸ்தாமீ (ரஹ்) அவர்கள் கேட்டார்கள். ஒவ்வொருவரும் தங்களுக்குத் தெரிந்ததைக் கொண்டு பதில் கூறினார்கள். ஆனால் எந்த பதிலும் அவர்களுக்கு

திருப்தியளிக்க வில்லை. பிறகு அவர்கள் கஅபாவிற்கு வந்து,அதன் வாசற்படியில் நின்று கொண்டு,"என்னுடைய இரட்சகா! உன்னுடைய அடியார்கள் என்னுடைய கேள்விக்குச் சரியான பதில் சொல்ல இயலாமல் ஆகிவிட்டனர். எனவே, இதோ! உன் அடியான் அதே கேள்வியை உன்னிடம் கேட்கிறேன். நீ கேட்கப் படுவோரில் மிக உயர் வானவன்; பதில் அளிப்போரிலும் மிக உயர்ந்தவன். என் இரட்சகனே! ஈமான் சுகமடைவது எதனைக் கொண்டு?" என்று கேட்டார்கள். உடனே ஓர் அசரீரியான சப்தம், "அபாயஸீதே! ஈமான் ஸலாமத்தடைவது,— வாக்கை நிறைவேற்றுவது கொண்டு உண்டாகும்", என்று கேட்டது.

## உறுதிகொள்ளவேண்டியசிலவிஷயங்கள்

படைப்புகளில் எல்லாவற்றையும் விட மிகச் சிறந்தவர் நமது நாயகம் முஹம்மது (ஸல்) அவர்களாவார்கள். பிறகு முர்ஸலான நபிமார்கள்,பிறகு மற்ற நபிமார்கள், அதன் பிறகு விசேஷமான மலக்குகள். அவர்களில் முதலாமவர் ஜிப்ரயீல் (அலை) அவர்கள். பிறகு மீகாயீல் (அலை),அதன் பிறகு இஜ்ராயீல் (அலை), அதன் பிறகு இஸ்ராஃபீல் (அலை), பிறகு மற்ற மலக்குகள் அனைவரும் -ஆனால் முஃதஜிலா என்ற பிரிவினர் நபிமார்களை விட மலக்குகள் சிறந்தவர்கள் என்று கூறுகின்றனர். அவர்கள் இறைவனின் திருவசனமாகிய

مَا كَانَ لِيَ مِنْ عِلْمٍ بِالْمَلَإِ الْأَعْلَىٰ إِذْ يَخْتَصِمُونَ ۝
إِنْ يُوحَىٰ إِلَيَّ إِلَّا أَنَّمَا أَنَا نَذِيرٌ مُبِينٌ ۝

(ஆதமை சிருஷ்டித்து அவரை கலீஃபாவாக்குவதாக இறைவன் சொன்ன நேரத்தில் அவரை ஏன் படைக்கிறாய் என்று) மேலோர் (ஆகிய மலக்குகள்) தர்க்கித்துக் கொண்டது எனக் கொன்றும் தெரியாது. எனக்கு வஹீமூலம் அறிவிக்கப்பட்ட தெல்லாம் நிச்சயமாக நான் பகிரங்கமாக அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவன் என்பது தான் (என்று கூறுவீராக) (38:69,70) என்ற இறைவனின் இத்திருவசனத்தின் வெளிப்படையான அர்த்தத்தைக் கொண்டு அவர்கள் அவ்வாறு கூறுகின்றனர். இது முற்றிலும் தவறான கூற்றாகும்.

அதன் பிறகு அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள், பிறகு உமர் பிறகு உஸ்மான், பிறகு அலி (ரலியல்லாஹு அன்ஹும்). உஸ்மான் (ரலி) அலி (ரலி) இருவருடைய அந்தஸ்துகளும் சமமாக உள்ளவையாகும். எனினும், ஆட்சிப் பொறுப்பில் முன் பின்னாக இருந்ததால், வரிசையிலும் முன் பின்னாகக் கூறப்பட்டுள்ளது.

அதன் பிறகு நபியவர்களால் சொர்க்கத்தைக் கொண்டு நன்மாராயம் கூறப்பட்ட பத்து நபர்களில் மேற்கூறப்பட்ட கலீஃபாக்கள் நான்கு பேர் நீக்கி மீதியுள்ள ஆறுநபர்களாவர். அவர்கள் பெயர் வருமாறு : ஸயீதுப்னு ஜைது, ஸஃதுப்னு அபீவக்காஸ், தல்ஹா இப்னு அப்துல்லாஹ், ஜுபைர் இப்னு அவ்வாம், அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்,ஆமிர் இப்னு ஜர்ராஹ் (ரலியல்லாஹு அன்ஹும்). அதன் பிறகு ஹஸன் (ரலி), ஹுஸைன் (ரலி), ஹம்ஜா (ரலி), அப்பாஸ் (ரலி), பிறகு ஸஹாபாக்களில் முஹாஜிரீன்கள் (மக்காவாசிகள்). பிறகு அன்ஸாரிகள்

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

(மதீனாவாசிகள்) அதன் பிறகு மற்றுமுள்ள ஸஹாபாக்கள். அதற்கடுத்து தாபியீன்கள், பிறகு நான்கு இமாம்கள். பிறகு மற்றுமுள்ள முஜ்தஹிதுகள், பிறகு குத்புமார்கள், பிறகு இறைநேசர்களாகிய வலிமார்கள். பிறகு மற்றுமுள்ள நல்லடியார்கள்.

ரசூலுல்லாஹி (ஸல்) அவர்கள் இவ்வுலகை விட்டு மறைந்த போது இந்த பூமியாகிறது அல்லாஹுதஆலாவிடம், "இனி கியாமத்து நாள் வரை நபிமார்களுடைய பாதங்கள் என் மீது படாதே!" என்று கவலைப்பட்டுச் சொன்னது. அப்பொழுது அல்லாஹுதஆலா, "உன்மீது வலிமார்களை தொடர்ந்து அனுப்பிக் கொண்டே இருப்பேன். அவர்களின் இதயங்கள் நபிமார்களுடைய இதயங்களைப் போன்ற தாயிருக்கும்" என்று பூமிக்கு ஆறுதல் கூறினான்.

அத்தகைய வலிமார்களின் அந்தஸ்துகள் பல படித்தரங்களாக இருக்கின்றன. அவர்களின் படித்தரங்கள் கீழிலிருந்து மேலாக பின்வருமாறு: நுகபாக்கள், இவர்கள் 300 நபர்கள். அடுத்து நுஜபாக்கள்; இவர்கள் எழுபது நபர்கள். அடுத்து அப்தால்கள், இவர்கள் நாற்பது நபர்கள். அடுத்து அஃக்யார்கள், இவர்கள் பத்து நபர்கள். அடுத்து ஆரிஃபீன்கள், இவர்கள் ஏழு நபர்கள். அடுத்து அன்வார்கள். இவர்கள் ஐந்து நபர்கள். அடுத்து அவ்தாதுகள், இவர்கள் நான்கு நபர்கள். அடுத்து முக்தார்கள், இவர்கள் மூன்று நபர்கள், அடுத்து கௌது என்பவர்; இவர் ஒருவர் மட்டும். இவருக்குத்தான் குத்பு என்றும் சொல்லப்படும். இவர்களில் ஒருவர் இறந்து விட்டால் அவருக்குக் கீழ் தரஜாவிலுள்ள ஒருவர் அவ்விடத்தில் அமைக்கப்படுவார். இவ்வாறே கடைசியாக உள்ள ஒருவர் இறந்துவிடும் பொழுது நல்லடியார்களில் ஒருவர் அவ்விடத்தை நிரப்புவார். இந்த வலிமார்கள் அனைவருக்கும் இல்மு இருக்கும். அதாவது : எல்லோரும் ஆலிம்களாக இருப்பார்கள். ஆசிரியரிடம் படித்து தெரிந்து கொள்ளக் கூடிய இல்மு கஸ்பியும், படிக்காமலேயே அல்லாஹ்வின் புறத்திலிருந்து தெரிந்து கொள்ளக்கூடிய இல்மு வஹ்பியும் அவர்களுக்கு இருக்கும் அல்லது இரண்டிலொன்று இருக்கும். ஆகையினால் தான் உலமாக்கள் என்று தனித்துக் கூறவில்லை.

பெண்களில் மிகச்சிறந்தவர் மர்யம் (அலை). பிறகு ஃபாத்திமா (ரலி) இவ்விருவரில் முதல்வர் யார் என்பதில் கருத்து வேற்றுமை இருக்கிறது. பிறகு ஆயிஷா (ரலி) பிறகு கதீஜா (ரலி) பிறகு நபியவர்களின் மற்றுமுள்ள பரிசுத்த மனைவியர்கள். இவ்வாறு நிர்ணயம் கொள்வது சுன்னத்து ஜமாஅத்தினரின் கொள்கையாகும்.

ஓர் ஊரில் ஆலிம் ஒருவரை நீதிபதியாக நியமிப்பதும், கலிமாச் சொன்னவர் எப்படிப்பட்ட பாவியாக இருந்தாலும் அவர் இறந்து விட்டால் அவரைக் குளிப்பாட்டிக் கஃபனிட்டு தொழவைத்து அடக்குவதும் அவசியமாகும்.

காஃபிர்களுடைய குழந்தையை எடுத்து வளர்க்கும் பொழுது அது கலிமாச் சொல்லியிருந்தாலும், பருவமடைவதற்கு முன் இறந்து விட்டால் தொழவைக்கக் கூடாது என்பதும், அல்லாஹ்வுடைய பாதையில் போரில் இறந்து விட்ட ஷஹீதுகளின் பேரில் தொழ வைக்கக் கூடாதென்பதும் பின்னால் ஜனாஸாவுடைய பாடத்தில் வரும். இன்ஷா அல்லாஹ்!

ஓர் ஊரில் ஓர் இடத்திலாவது ஜமாஅத்தை நிலை நிறுத்தாட்டுவதும், ஓரிடத்திலாவது சப்த மிட்டு பாங்கு சொல்வதும், மார்க்கத்திலுள்ள ஆதாரங்களை கொண்டும்

சட்டங்களைக் கொண்டும் செயல்படுவதும் ஃபர்ளுகி ஃபாயாவாகும். அவை பல்வேறு செயல்கள் இருக்கின்றன. அவற்றில் சில இங்கு குறிப்பிடப்படுகின்றன.

ஓர் ஊரில் ஓர் ஆலிம் இருப்பதும், ஒரு வைத்தியர் இருப்பதும் ஃபர்ளு கிஃபாயாவாகும். ஏனெனில் மார்க்கத்தில் முக்கியமான விஷயங்களை அறிவதும், நோய்களில் முக்கியமானதை அறிந்து கொள்வதும் இவர்களால் நிறைவு செய்யப்படும்.

ஃபர்ளுகிஃபாயா வென்பது ஓர் ஊரில் ஒருவராவது செய்தால் எல்லோர் மீதும் ஏற்பட்ட கடமை நீங்கிவிடுவதாகும். யாருமே அதனைச் செய்யாவிட்டால் அனைவரும் குற்றவாளியாகி விடுவார்கள். 'ஃபர்ளுஐன்' என்பது ஒவ்வொருவரும் அதனைச் செய்வது கடமையாகும். சுன்னத்திலும், சுன்னத்து கிஃபாயா, சுன்னத்து ஐன் என்று இருவகையுண்டு. இது பின்னால் கூறப்படும் இன்ஷா அல்லாஹ்!

மார்க்கச் சட்டம் தெரிந்த நல்லவர் தீயவர் அனைவரையும் பின்பற்றித் தொழலாம். குஃப்ரைக் கொண்டு தீர்ப்புச் செய்யப்படாத எவரையும் பின்பற்றித் தொழலாம். ஹஜ்ஜாஜ் இப்னு யூசுபுத்தகஃபி اَلثَّقَفِيُّ حَجَّاجُ بْنُ يُوْسُفَ கஅபாவில் தொழ வைக்கும்போது அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் அவரைப் பின் தொடர்ந்து தொழுதார்கள். அவர் முஸ்லிம்களில் மூன்று இலட்சம் நபர்களை அநியாயமாகக் கொன்றவர். தன் கையாலேயே அறுபதினாயிரம் பேரைக் கொன்றிருக்கிறார். இறுதியில் ஸயீதுப்னு ஜுபைர் (ரலி) அவர்களையும் அவர் கொலை செய்தார். எனவேதான் அவர் யஜீதை விடக் கொடியவர் என்று கூறப்பட்டுள்ளது.

ஸஹாபாக்களைப் பற்றி தவறான விஷயங்களைக் கூறுவதும், அவர்களை அலட்சியமாகப் பேசுவதும் ஹராமாகும். ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களுக்கும், அன்னை ஆயிஷா (ரலி) அவர்களுக்குமிடையே ஏற்பட்ட ஜமல் போர் பற்றியும், அலி (ரலி) அவர்களுக்கும், முஆவியா (ரலி) அவர்களுக்குமிடையில் நடைபெற்ற ஸிஃப்பீன் صِفِّيْن போர்பற்றியும், ஹுசைன் (ரலி) அவர்களுக்கும் யஜீதுக்குமிடையில் நடந்த போர் பற்றியும் கூட்டியோ, குறைத்தோ பேசாமல், உள்ளதை உள்ளபடி கூறவேண்டும்.

எனினும், பேசாமல் இருப்பதே நல்லது என்று இமாம் நஸ்ஸாயீ (ரஹ்) இமாம் இப்னுஹஜர் போன்றோர் தீர்ப்பளித்துள்ளார்கள். ஏனெனில் அதனால் ஸஹாபாக்களைப் பற்றி குறை கூற வேண்டிய நிலை ஏற்பட்டு விடும்.

இறந்து விட்டவர்களின் பெயரால் செய்யப்படுகின்ற தான தருமங்கள், ஓதுதல், துஆ முதலியவை (ஓதியவர், இறந்தவர்) இருவருக்கும் பலன் தரும் என்பதாகவும், ஓர் ஆலிம் சட்ட நூல்களை ஆய்ந்து, சட்டங்களைக் கூறும்போது, அது உண்மையில் சரியாக இருந்தால் அவருக்கு இருவகை நற்கூலி கிடைக்குமென்றும், அது உண்மையில் சரியில்லை என்றால் ஒரு நற்கூலி மட்டும் கிடைக்குமென்றும் அவர் தவறியதற்கு தண்டனை வழங்கப்பட மாட்டாதென்றும் நம்பிக்கை (அகீதா) கொள்ள வேண்டும்.

ஓர் ஆலிம் ஆய்ந்தறிந்து கூறியதில் தவறு ஏற்பட்டால் அவருக்கு தண்டனை வழங்கப்படும் என்று முஃதஜிலாக்கள் கூறுகிறார்கள். இது தவறாகும்.

# 2. இஸ்லாம் பற்றிய பாடம்

தீனுடைய தூண்களில் இரண்டாவது இஸ்லாம். இது சொல்லாலும் செயலாலும், பொருளாலும் வழிபடுவதாகும். அதன் விபரமாவது:

بُنِيَ الْإِسْلَامُ عَلَىٰ خَمْسٍ شَهَادَةِ أَنْ لَا إِلَٰهَ إِلَّا اللَّهُ وَأَنَّ
مُحَمَّدًا رَسُولُ اللَّهِ.

"இஸ்லாமாகிறது ஐந்து காரியங்களின் மீது அமைக்கப் பட்டுள்ளது. அவற்றில் முதலாவது, லாஇலாஹ இல்லல்லாஹ் - வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எந்த நாயனுமில்லை என்று சாட்சி சொல்வதும், முஹம்மதுர் ரசூலுல்லாஹ் - நிச்சயமாக முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வுடைய தூதரென்று சாட்சி சொல்வதுமாகும்." இதற்கு 'ஷஹாதத் கலிமா' என்று பெயர் வந்ததற்கு அல்லாஹுதஆலா குர்ஆனில் கூறுகின்ற பின்வரும் ஆயத்து காரணமாகும்:

شَهِدَ اللَّهُ أَنَّهُ لَا إِلَٰهَ إِلَّا هُوَ وَالْمَلَائِكَةُ وَأُولُو الْعِلْمِ قَائِمًا
بِالْقِسْطِ ۚ لَا إِلَٰهَ إِلَّا هُوَ الْعَزِيزُ الْحَكِيمُ ۝ (3:18)

"நபியே! அல்லாஹ் சாட்சி கூறுகின்றான்: நிச்சயமாக அவனைத்தவிர வேறு நாயன் இல்லை. அன்றி, (அவ்வாறே) மலக்குகளும், (வேத ஞானம் பெற்ற) கல்வி மான்களும், நீதத்தை நிலை நிறுத்தி, அவனைத்தவிர வேறு நாயன் இல்லை (அவன் யாரையும்) மிகைத்தோன். ஞானமுடையோன். (என்று சாட்சி கூறுகின்றனர்)"

இந்த ஆயத்தின் மூலம்தான் ஷஹாதத் கலிமா (சாட்சி கூறும் கலிமா) என்று பெயர் ஏற்பட்டது.

இந்தக் கலிமாவானது, நான்கு வேதங்கள், மற்றுமுள்ள சுஹுஃபுகள் அனைத்தின் ஞானங்களையும், இரகசியங்களையும் உள்ளடக்கியதாகும். ஏழு நரகங்களின் அமளிகளை விட்டும் விலகுவதும் எட்டு சொர்க்கங்களின் மகிழ்ச்சியை அடைவதும் இந்தக் கலிமாவைக் கொண்டேயாகும்.

ஒரு போது சிலர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் ரசூலே! எல்லோரும் இக்கலிமாவையே கூறுகிறார்கள்: எனவே, எங்களுக்கு விசேஷமாக ஏதேனும் ஒன்றைச் சொல்லித் தாருங்கள் என்று கேட்டார்கள். அப்பொழுது நபியவர்கள், "மனிதர்களே! நான் சொல்லியிருப்பவை அனைத்திலும் எனக்கு

முன்னுள்ள நபிமார்கள் சொன்னவை அனைத்திலும் மிகச்சிறந்தது லாஇலாஹ இல்லல்லாஹ் என்ற கலிமா தான்" என்று கூறினார்கள்.

கண்ணால் கண்டதற்குத் தான் சாட்சி சொல்லுதல் என்று கூறப்படும். காணாத ஒன்றுக்கு சாட்சி சொன்னால் அது பொய் சாட்சி எனப்படும். கண்ணால் காணாத அல்லாஹ்விற்கு சாட்சி சொல்லுதல் என்பதன் கருத்தாகிறது, இந்தப் பிரபஞ்சத்தில் காணப்படுகின்ற ஒவ்வொரு பொருளும் அல்லாஹ்வுடைய சிஃபத்துகளை வெளிப்படுத்தக் கூடியவையாகவும், அவனைப்பற்றி அறிவிக்கக் கூடியவையாகவும் இருப்பதால், காணுகின்ற அனைத்தும் அவனுடைய ஆட்சியல்லாமல் வேறில்லை. எனவே அவனைப்பற்றி உறுதி என்பது உண்டாகி விட்டபடியால் நேரில் கண்டது போல் சாட்சி சொல்ல வேண்டியதாயிற்று. இதன்படி ஷஹாதத் கலிமாவின் பொருளாகிறது, "நிச்சயமாக வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு நாயனில்லை என்று சாட்சி சொல்கின்றேன். மேலும் நிச்சயமாக முஹம்மது (ஸல்) அவர்கள் அவனுடைய திருத்தூதராக இருக்கிறார்கள் என்று அறிந்து சாட்சி சொல்கின்றேன்" என்பதாகும்.

கலிமாவுக்கு ஷரீஅத், தரீகத், ஹகீகத், மஃரிஃபத் என்னும் நான்கு வழிகளில் நான்கு விதமான பொருள்கள் உள்ளன. ஷரீஅத்தாகிறது ரசூலுல்லாஹி (ஸல்) அவர்களுடைய சொல்லாகும். தரீகத்தாகிறது அவர்களுடைய செயலாகும். ஹகீகத்தாகிறது, அவர்களுடைய (ஹால்) நிலையாகும். மஃரிஃபத்தாகிறது அன்னாருடைய (ஸிர்ரு) இரகசியமாகும். இந்த நான்கும் ஒன்றை ஒன்று பிரியாமல் தொடர்புள்ளவையாகும்.

உதாரணமாக : கடலிலுள்ள சிப்பியில் மேல் ஓடு, சதை, எலும்பு, முத்து ஆகியவை இருக்கின்றன. முத்துக்குளிப்பவன் முத்தை எடுக்க நாடினால் சிப்பியிலுள்ள எல்லாவற்றையும் சேர்த்து எடுத்தால் தான் முத்தை எடுக்க முடியும்.

ஷரீஅத்தின் படி கலிமாவின் பொருள் :

لَا مَعْبُوْدَ بِحَقٍّ فِى الْوُجُوْدِ اِلَّا اللّٰهُ

"பிரபஞ்சத்தில் உண்மை கொண்டு வணங்கப்படுவதற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எவருமில்லை" என்பதாகும்.

தரீகத்தின் படி கலிமாவின் பொருள் :

لَا فَاعِلَ اِلَّا اللّٰهُ

"அல்லாஹ்வைத் தவிர செய்து முடிப்பவன் வேறு எவருமில்லை" என்பதாகும்.

ஹகீகத்தின் படி கலிமாவின் பொருள் :

لَا مَقْصُوْدَ اِلَّا اللّٰهُ

"அல்லாஹ்வைத் தவிர நாடப்படுகிறவன் வேறு எவருமில்லை" என்பதாகும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

மஃரிஃபத்தின் படி கலிமாவின் பொருள்:

لَا مَوْجُوْدَ اِلَّا اللّٰهُ

"அல்லாஹ்வைத் தவிர உண்மையான உள்ளமையுடையவன் வேறு எவருமில்லை" என்பதாகும்.

கலிமாவின் துவக்கத்தில் 'லா' (இல்லை) என்ற எழுத்தை வைத்ததற்குரிய காரணம், அடியானுடைய இதயத்தில் எப்பொழுதும் அநிய்யத், ஙைரிய்யத் ——— غَيْرِيَّة அனாநிய்யத் (தானென்ற, வேறென்ற, நானென்ற) அகம்பாவ அழுக்குகள் சேர்ந்து கொண்டே இருப்பதால் அவற்றை 'இல்லை' என்ற எழுத்தைக் கொண்டு முதலாவதாக சுத்தப்படுத்தி, பிறகு இல்லல்லாஹ் என்ற வாசகத்தின் மூலம் அல்லாஹ்வை அதில் தரிபடுத்துவதற்காக வைக்கப்பட்டதாகும்.

இதயம் என்பது ஒரு பாத்திரம். அதில் வேற்றுமை என்பது நிரம்பியிருந்ததால் அதனை 'லா' (இல்லை) என்பதைக் கொண்டு இல்லாமலாக்கி பிறகு தவ்ஹீத் என்னும் ஓர்மையை அதில் உண்டாக்குவதற்காக 'இல்லா' என்ற தரிபடுத்துதலுடைய எழுத்தைக் கூறி, அதன் பிறகு அல்லாஹ் என்பதைக் கூறும்பொழுது வேற்றுமை நீங்கி தரிபடுத்துதல் உண்டாகி விடுகிறது.

ஒரு பாத்திரத்தில் ஒரு பொருள் நிரம்பி இருந்தால் மற்றொரு பொருள் அதனுள் செல்லாது. முந்தியதை எடுத்தால் தான் மற்றொன்றைப் போட முடியும். அவ்வாறே இதயத்திலுள்ள அழுக்கை நீக்கும் பொழுது தான் தூய்மை என்பது அதில் நுழையும்.

### வணங்கப்படுவது நான்கு வகை உண்டு

இலாஹ் என்ற வார்த்தை படைத்தவனுக்கும், படைக்கப்பட்ட பொருளுக்கும் பொதுவாகச் சொல்லப்படும். அதன் பொருள்: வணங்கப் படக்கூடியது என்பதாகும். இலாஹ் என்பது நான்கு வகைப்படும். முதலாவது; நம் கண்ணுக்குத் தெரியாத ஜின், ஷைத்தான், தேவு, காற்று போன்றவையாகும். இவற்றைச் சிலர் வணங்குகின்றனர். இதற்கு "இலாஹுன் பாத்திலுன்" தவறான அழிந்து விடுகின்ற இலாஹ் எனப்படும். இரண்டாவது: சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், மண், தண்ணீர், நெருப்பு, சிலைகள் போன்ற உருவமுள்ள பொருட்களாகும். இவற்றைச் சிலர் வணங்குகின்றனர். இதற்கு "இலாஹுன் முகய்யதுன்" வரையறுக்கப்பட்ட இலாஹ் எனப்படும். மூன்றாவது: அரசன், தாய், தந்தை, குரு, முதலாளி ஆகியோர். இவர்களையும் சிலர் வணங்குகின்றனர். இவர்களுக்குப் பணிவிடை செய்வது கடமையாக இருப்பதால் இவர்களுக்கு "இலாஹுன் ஹக்குன்" கடமையுள்ள இலாஹ் என்று கூறப்படும். நான்காவது "இலாஹுன் முத்லகுன்" பொதுப்படையான இலாஹ். இது அல்லாஹு

தஆலாவைத் தவிர வேறு எவருக்கும் தகுதியில்லை. கலிமாச் சொல்பவர் முந்திய மூன்று வகை தெய்வங்களையும் இல்லாமையாக்கி கடைசி நாயனாகிய அல்லாஹ்வைத் தரிபடுத்துதல் வாஜிபாகும்.

இவ்வாறே இரண்டாம் கலிமாவாகிய ஷஹாதத்துக் கலிமாவின் இரண்டாவது வாசகமாகிய (வஅஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ்) மேலும் நிச்சயமாக முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதராக இருக்கின்றார்கள் என்று விண்ணப்பம் செய்கின்றேன் என்று சொல்வதற்கேற்ப "முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வுடைய தூதர்" என்பதற்கு பல அத்தாட்சிகள் உள்ளன. அவற்றில் சில இங்கு கூறப்படுகின்றன. அவர்களுக்கு அருளப்பட்ட குர்ஆனிலுள்ள அத்தியாயங்களைப் போல ஒரு சிறிய அத்தியாயத்தையாவது கொண்டு வர முடியாமலிருப்பது முதன்மையான அத்தாட்சியாகும். மற்ற மனிதர்களால் செய்ய முடியாத முஃஜிஸா என்னும் அற்புதங்களை செய்து காட்டியதும், முன்னால் நடப்பதைக் காண்பதைப் போல் பின்னால் நடப்பதைக் காணுகின்ற ஆற்றல் பெற்றிருந்ததும், ஒரு பிடி மண்ணை காஃபிர்கள் அனைவரின் கண்களும் மறையும்படி எறிந்ததும், இன்னும் ஏராளமான அத்தாட்சிகளுமாகும். இவ்வித அத்தாட்சிகள் ஏராளமாக இருந்தாலும் இதர மதத்தைச் சேர்ந்தவர்கள் தங்களின் நபிமார்களை கடவுள்களின் அந்தஸ்துக்கு உயர்த்திவிட்டது போல் நாமும் நமது நாயகம் (ஸல்) அவர்கள் விஷயத்தில் செய்து விடக்கூடாது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மனிதர்களிலேயே மிகச்சிறந்த மனிதராகத் திகழ்ந்தார்கள். எனினும் பிறருக்கு ஏற்படும் துன்பங்களும், துயரங்களும் அவர்களுக்கும் ஏற்பட்டன. ஒரு வேளை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உஷ்ணமான நடுப்பகல் நேரத்தில் அரஃபாவில் தங்கியிருக்கும் போது அவர்களிடம் ஒரு ஸஹாபி வந்து அவர்களுக்கு மேனியில் வெயில் விழாமல் நிழலிட்டுக் கொடுத்தார் என்பதாகவும், மேலும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு வேளை தொழுது கொண்டிருக்கும் பொழுது அவர்களை ஒரு தேள் கொட்டி விட்டது. அவர்கள் தொழுது முடித்தபின் தண்ணீரையும், உப்பையும் கொண்டு வரச் செய்து தேள் கொட்டிய இடத்தில் அத்தண்ணீரையும் உப்பையும் வைத்துத் தடவிய பின் நபியையோ, நபி அல்லாதவரையோ, தொழுபவரையோ, தொழாத வரையோ விட்டு வைக்காத தேளின் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாவதாக என்று சொன்னார்கள் என்பதாகவும் ஹதீஸ் கிரந்தங்களில் கூறப்பட்டுள்ளன.

மேலும் அவர்கள் கூறியதெல்லாம் உண்மையாக நடைபெற்று வருவதும் அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் தான் என்பதை நமக்கு உறுதியாக்குகின்றன. எனவே தான் அவர்கள் ரசூல் என்று சாட்சி கூறுதல் என்பது ஏற்பட்டது.

காஃபிராக உள்ள ஒருவர் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்வது, இவ்விரு ஷஹாதத் கலிமாக்களையும் சொல்லாமல் நிறைவேறாது. அவன் ஊமையாக இருந்தால் சாடையால் விளங்க வைக்க வேண்டும். கலிமாவுடைய பொருளை அறியாத காஃபிருக்கு அதன் பொருளையும் விளங்கவைக்க வேண்டும். முஸ்லிம் ஒருவர் இஸ்லாத்தை விட்டு மாறி (முர்தத்தாகி) விட்டால், பிறகு அவர் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்வதானால் ஷஹாதத் கலிமாவைச் சொல்லி, "எந்தச் செயலால் நான் மதம் மாறினேனோ அதனை நான் நிராகரித்தேன்."

كَفَرْتُ بِمَآ اَشْرَكْتُ بِهٖ

என்று சொல்ல வேண்டும். காஃபிரான ஒருவன் தனக்குக் கலிமாச் சொல்லிக் கொடுக்குமாறு கேட்டால் உடனடியாக சொல்லிக் கொடுப்பது ஃபர்லாகும். ஏதேனும் நிர்பந்தமான காரணமின்றி அவ்வாறு உடனடியாகச் சொல்லிக் கொடுப்பதைத் தாமதப்படுத்தி, அவன் குஃப்ரிலேயே இருப்பதை இவர் பொருந்திக் கொண்டால் இவர் காஃபிராகிவிடுவார்.

### கலிமாவின் ஷர்த்துகள்

கலிமாவுக்கு நான்கு ஷர்த்துகள் உண்டு. முதலாவது :

اِقْرَارٌ بِاللِّسَانِ

நாவினால் விண்ணப்பஞ் செய்வது, இரண்டாவது :

وَتَصْدِيْقٌ بِالْجَنَانِ

மனதினால் உண்மைப்படுத்துவது, மூன்றாவது :

وَاِخْلَاصُ اَعْمَالِ الْاَدْيَانِ

தீனுடைய அமல்களை உளத்தூய்மையுடன் செய்வது, நான்காவது

وَاَدَاءُ الْاَرْكَانِ

ஃபர்ளான காரியங்களை சரியாக நிறைவேற்றுவது. இந்த ஃபர்ளான காரியங்கள் என்பது ஐம்பதுக்கும் மேற்பட்ட காரியங்களாகும். இவை அனைத்தும் குர்ஆனில் கூறப்பட்டுள்ளன.

1. அல்லாஹ்வை அறிவது, இதற்கு ஆதாரம் (51:56)

وَمَا خَلَقْتُ الْجِنَّ وَالْاِنْسَ اِلَّا لِيَعْبُدُوْنِ ۝

2. மானத்தை மறைப்பது. இதற்கு ஆதாரம்.(7:31)

خُذُوْا زِيْنَتَكُمْ عِنْدَ كُلِّ مَسْجِدٍ ۔

3. உளூ செய்வது, இதற்கு ஆதாரம் (5:6)

فَاغْسِلُوْا وُجُوْهَكُمْ وَاَيْدِيَكُمْ اِلَى الْمَرَافِقِ ۔

4. தொழுவது. இதற்கு ஆதாரம்: (4:103)

اِنَّ الصَّلٰوةَ كَانَتْ عَلَى الْمُؤْمِنِيْنَ كِتَابًا مَّوْقُوْتًا ۝

5. தயம்மும் செய்வது. இதற்கு ஆதாரம்: (4:43)

فَلَمْ تَجِدُوْا مَآءً فَتَيَمَّمُوْا صَعِيْدًا طَيِّبًا ۝

6. ரசூலுக்கு வழிபடுவது. இதற்கு ஆதாரம்:(5:92)

وَاَطِيْعُوا اللّٰهَ وَاَطِيْعُوا الرَّسُوْلَ

7. ஷைத்தானைப் பகைப்பது. இதற்கு ஆதாரம் : (35:6)

اِنَّ الشَّيْطٰنَ لَكُمْ عَدُوٌّ فَاتَّخِذُوْهُ عَدُوًّا

8. நஃப்ஸுக்கு மாறு செய்வது. இதற்கு ஆதாரம் : (12:53)

اِنَّ النَّفْسَ لَاَمَّارَةٌ بِالسُّوْٓءِ ۝

9. இல்மைத் தேடுவது. இதற்கு ஆதாரம் : (16:43)

فَاسْئَلُوْٓا اَهْلَ الذِّكْرِ اِنْ كُنْتُمْ لَا تَعْلَمُوْنَ ۝

10. இக்லாஸுடன் வணங்குவது. இதற்கு ஆதாரம் : (39:2) :

فَاعْبُدِ اللّٰهَ مُخْلِصًا لَّهُ الدِّيْنَ ۝

11. தவ்பாச் செய்வது இதற்கு ஆதாரம் : (66:8)

يٰٓاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا تُوْبُوْٓا اِلَى اللّٰهِ تَوْبَةً نَّصُوْحًا ۝

12. ஹலாலான உணவைச் சாப்பிடுவது. இதற்கு ஆதாரம் : (5:88)

كُلُوْا مِمَّا رَزَقَكُمُ اللّٰهُ حَلٰلًا طَيِّبًا

13. நீதியாகப் பேசுவது. இதற்கு ஆதாரம் : (6:152)

وَاِذَا قُلْتُمْ فَاعْدِلُوْا

14. ஹராமானவற்றைப் பார்க்காமலிருப்பது. இதற்கு ஆதாரம் : (24:30)

قُلْ لِّلْمُؤْمِنِيْنَ يَغُضُّوْا مِنْ اَبْصَارِهِمْ

15. மர்மஸ்தானத்தைப் பாதுகாப்பது. இதற்கு ஆதாரம் : (23:5)

وَالَّذِيْنَ هُمْ لِفُرُوْجِهِمْ حٰفِظُوْنَ ۝

16. புறம் பேசாமலிருப்பது. இதற்கு ஆதாரம் : (49:12)

وَلَا يَغْتَبْ بَّعْضُكُمْ بَعْضًا

17. பரிகாசம் செய்யாமலிருப்பது. இதற்கு ஆதாரம் : (49:11)

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا لَا يَسْخَرْ قَوْمٌ مِّن قَوْمٍ

18. தீய பட்டம் சூட்டாமலிருப்பது. இதற்கு ஆதாரம் : (49:11)

وَلَا تَنَابَزُوا بِالْأَلْقَابِ

19. தீய எண்ணத்தை விடுவது. இதற்கு ஆதாரம் : (49:12)

إِنَّ بَعْضَ الظَّنِّ إِثْمٌ

20. ஒட்டுக் கேட்காமலிருப்பது. இதற்கு ஆதாரம் : (49:12)

وَلَا تَجَسَّسُوا

21. வட்டியை விடுவது. இதற்கு ஆதாரம் : (3:130)

لَا تَأْكُلُوا الرِّبَا

22. நம் காரியங்கள் யாவற்றிலும் அல்லாஹ்வின் மீதே நம்பிக்கை வைப்பது. இதற்கு ஆதாரம் : (5:23)

وَعَلَى اللَّهِ فَتَوَكَّلُوا

23. பொறுமை கொள்வது. இதற்கு ஆதாரம் : (3:200)

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اصْبِرُوا

24. நன்றி செலுத்துவது. இதற்கு ஆதாரம் : (16:114)

وَاشْكُرُوا نِعْمَةَ اللَّهِ

25. கண்ணையும், காதையும், இதயத்தையும், பாதுகாப்பது. இதற்கு ஆதாரம் : (17:36)

إِنَّ السَّمْعَ وَالْبَصَرَ وَالْفُؤَادَ كُلُّ أُولَٰئِكَ كَانَ عَنْهُ مَسْئُولًا ۝

26. மரணத்திற்காகச் சேமிப்பது. இதற்கு ஆதாரம் : (29:57)

كُلُّ نَفْسٍ ذَائِقَةُ الْمَوْتِ ۝

27. அல்லாஹ்வின் தண்டனையைப் பயப்படுவது. இதற்கு ஆதாரம் : (7:99)

فَلَا يَأْمَنُ مَكْرَ اللَّهِ

28. அல்லாஹ்வின் அருளை விட்டும் நிராசையாகாமலிருப்பது. இதற்கு ஆதாரம். (39:53)

لَا تَقْنَطُوا مِن رَّحْمَةِ اللَّهِ ۝

29. அமானிதத்தை ஒப்படைப்பது. இதற்கு ஆதாரம் : (4:58)

إِنَّ اللّٰهَ يَأْمُرُكُمْ أَنْ تُؤَدُّوا الْأَمَانَاتِ إِلَىٰ أَهْلِهَا

30. திக்ரு செய்வது. இதற்கு ஆதாரம் : (33:41)

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اذْكُرُوا اللّٰهَ ذِكْرًا كَثِيرًا

31. உலகத்தைக் கொண்டு மகிழ்ச்சியடையாமல் இருப்பது. இதற்கு ஆதாரம் : (57:23)

وَلَا تَفْرَحُوا بِمَا آتَاكُمْ

32. தவறிவிட்டதற்காக கவலைப்படாமலிருப்பது. இதற்கு ஆதாரம் : (57:23)

لِكَيْلَا تَأْسَوْا عَلَىٰ مَا فَاتَكُمْ

33. படிப்பினை பெறுவது. இதற்கு ஆதாரம் : (59:2)

فَاعْتَبِرُوا يَا أُولِي الْأَبْصَارِ

34. அளவு, நிறுவையில் நிறைவு செய்வது. இதற்கு ஆதாரம் : (6:152)

وَأَوْفُوا الْكَيْلَ وَالْمِيزَانَ بِالْقِسْطِ

35. அல்லாஹ் எப்பொழுதும் நம்மைக் கண் காணிக்கின்றான் என்று எண்ணங்கொள்வது. இதற்கு ஆதாரம் : (50:16)

نَحْنُ أَقْرَبُ إِلَيْهِ مِنْ حَبْلِ الْوَرِيدِ

36. அல்லாஹ்வே உணவளிப்பவன் என நம்புவது. இதற்கு ஆதாரம் : (11:6)

وَمَا مِنْ دَابَّةٍ فِي الْأَرْضِ إِلَّا عَلَى اللّٰهِ رِزْقُهَا

37. களாகத்ரைப் பொருந்துவது. இதற்கு ஆதாரம் : (43:32)

نَحْنُ قَسَمْنَا بَيْنَهُمْ مَعِيشَتَهُمْ

38. அல்லாஹ்விற்காக நட்பு கொள்வது கோபம் கொள்வது. இதற்கு ஆதாரம் : (60:4)

وَبَدَا بَيْنَنَا وَبَيْنَكُمُ الْعَدَاوَةُ وَالْبَغْضَاءُ

39. நன்மையை ஏவி தீமையைத் தடுப்பது. இதற்கு ஆதாரம் : (3:110)

كُنْتُمْ خَيْرَ اُمَّةٍ اُخْرِجَتْ لِلنَّاسِ تَأْمُرُوْنَ بِالْمَعْرُوْفِ وَتَنْهَوْنَ عَنِ الْمُنْكَرِ .

40. மனோ இச்சையைப் பின் பற்றாமலிருப்பது. இதற்கு ஆதாரம்: (4:135)

فَلَا تَتَّبِعُوا الْهَوٰى اَنْ تَعْدِلُوْا

41. அல்லாஹ்வைப் பயப்படுவது. இதற்கு ஆதாரம் : (3:102)

يٰاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوا اتَّقُوا اللّٰهَ حَقَّ تُقَاتِهٖ

42. தொழுகையைக் கடை பிடிப்பது. இதற்கு ஆதாரம் : (2:43)

وَاَقِيْمُوا الصَّلٰوةَ

43. ஜகாத்துக் கொடுப்பது. இதற்கு ஆதாரம் : (2:43)

وَاٰتُوا الزَّكٰوةَ

44. நோன்பு வைப்பது. இதற்கு ஆதாரம் : (2:183)

كُتِبَ عَلَيْكُمُ الصِّيَامُ

45. ஹஜ்ஜுச் செய்வது. இதற்கு ஆதாரம் : (2:196)

وَاَتِمُّوا الْحَجَّ

46. உம்ராச் செய்வது. இதற்கு ஆதாரம் : (2:196)

وَالْعُمْرَةَ لِلّٰهِ

47. பெற்றோருக்கு உபகாரம் புரிவது. இதற்கு ஆதாரம் : (46:15)

وَوَصَّيْنَا الْاِنْسَانَ بِوَالِدَيْهِ اِحْسَانًا

48. அல்லாஹ்விடம் அச்சமும் ஆதரவும் கொள்வது. இதற்கு ஆதாரம் : (7:56)

وَادْعُوْهُ خَوْفًا وَّطَمَعًا

49. அல்லாஹ்வின் உபகாரத்தைப் பெரிதாகக் கருதுவது. இதற்கு ஆதாரம் : (49:17)

بَلِ اللّٰهُ يَمُنُّ عَلَيْكُمْ

50. தாழ்மையாய் நடப்பது. இதற்கு ஆதாரம் : (28:83)

لَا يُرِيدُونَ عُلُوًّا فِي الْأَرْضِ وَلَا فَسَادًا

51. படைப்பினங்களை சிந்தனைச் செய்தல். இதற்கு ஆதாரம் : (3:191)

وَيَتَفَكَّرُونَ فِي خَلْقِ السَّمَوَاتِ وَالْأَرْضِ

52. தன்னையும், தன் குடும்பத்தினரையும் நரகத்தை விட்டுப் பாது காத்தல். இதற்கு ஆதாரம் : (66:6)

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا قُوا أَنْفُسَكُمْ وَأَهْلِيكُمْ نَارًا

53. தனக்கும், தன் பெற்றோருக்கும், மற்றும் முஃமின்களுக்கும் பாவமன்னிப்புத் தேடுதல், அவர்களுக்காக துஆ செய்தல். இதற்கு ஆதாரம் : (47:19)

وَاسْتَغْفِرْ لِذَنْبِكَ وَلِلْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ

இவை அனைத்தும் கலிமாச் சொன்னவர் கட்டாயம் செய்ய வேண்டிய காரியங்களாகும். மேலும் கலிமாவிலுள்ள எழுத்துக்களின் நுணுக்கங்களையும் அறிதல் அவசியமாகும். "அஸ்ஸைர் வஸ்ஸுலூக்" போன்ற நூல்களில் இதன் விபரங்கள் கூறப்பட்டுள்ளன.

லா இலாஹ என்று கூறும் பொழுது அலிஃபை 'இ' என்று அழுத்தங்கொடுத்து தொண்டையால் உச்சரிக்க வேண்டும். அவ்வாறின்றி 'இ' என்பதை 'யி' என்று 'யே' யுடைய உச்சரிப்பைக் கொண்டு கூறினால் அது கலிமாவாக ஆகாது. இவ்வாறே 'இஹ்தினஸ்ஸிராதல் முஸ்தகீம்' என்பதில் 'இ' என்பதை அழுத்தாமல் 'யே'யாக ஓதினால் அது சூரத்துல் ஃபாத்திஹாவாக ஆகாது. ஃபாத்திஹா கூடாவிட்டால் தொழுகையும் கூடாது.

மேலும் அல்லாஹ் என்பதை உச்சரிக்கும் பொழுது இரண்டு லாமாகவே உச்சரிக்க வேண்டும். மாறாக ளாவாகவோ, ளோயாகவோ உச்சரிக்கக் கூடாது. இதில் பெரும்பாலானவர்கள் தவறு செய்கிறார்கள். இந்தத் தவறு ஏற்படுவதற்குரிய காரணத்தைக் கவனிக்க வேண்டும். அதாவது, அல்லாஹ் என்ற வார்த்தை ஜலாலத்துடைய - வல்லமைமிக்க வார்த்தை என்று கூறப்படும். இதனை வலுப்பமாக, கனமாகச் சொல்வது சுன்னத்து. இவ்வாறு சொல்ல வேண்டுமென்பதற்காக நுனி நாவை முன் பல்லையடுத்த மேல் முரசில் சேர்த்துச் சொல்வதற்காக, நுனி நாவைச் சற்று அதிகமாக உயர்த்தி அழுத்திச் சொல்வதால் ளோயுடைய உச்சரிப்பிலும் அல்லது நாவை அலகு பக்கம் சாய்த்து ளாதுடைய உச்சரிப்பிலும் கூறுகின்றனர். இது பெரும் தவறாகும்.

அல்லாஹ் என்பதை லாமுடைய உச்சரிப்பிலேயே மெல்லினமாகவே உச்சரிப்பதால், அதனைக் கனதிப்படுத்திச் சொல்வது மட்டுந்தான் விடுபட்டு விடுகிறது. பொருளில் தவறு ஏற்படுவதில்லை. ஆனால் அதனை ளோயாக அல்லது ளாதாக உச்சரிப்பதில் பொருள் மாற்றம் ஏற்பட்டு விடுகிறது. இது பெரும் தவறாகும்

இதனை நம்முடைய ஷைகுசதக்கத்துல்லாஹ்(ரஹ்) அவர்கள் 'தஸ்ஹீஹுல் ஜலாலா' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்கள்.

## கலிமாவின் தத்துவம்

லாஇலாஹ இல்லல்லாஹ் என்ற அரபிவாசகத்தில் பன்னிரண்டு எழுத்துகள் உள்ளன. அந்த எழுத்துக்களின் கணக்குப்படி பன்னிரண்டு ஃபர்ளுகள் உள்ளன. அவை கலிமாவைச் சொன்னவர்களின் மீது ஃபர்ளாகும். ஆனால் அவை கலிமாவிலுள்ள ஃபர்ளுகளல்ல. அவை அந்தரங்கமான ஃபர்ளுகள் ஆறும், வெளிப்படையான பர்ளுகள் ஆறுமாகும்.

அந்தரங்க ஃபர்ளுகள் : அல்லாஹ்விடத்தில் பொறுப்புச் சாட்டுதல், போதுமென்ற மனம், பொறுமை, களாகத்ருக்குப் பொருந்திக் கொள்ளுதல், நிஃமத்துக்கு நன்றி செலுத்துதல், அல்லாஹ்வின் ஏவலுக்கு முற்றிலுமாகத் தலை சாய்த்தல்.

வெளிப்படையான பர்ளுகள் : உடல் தூய்மை. உடை தூய்மை, தொழுகை, ஜகாத்து, நோன்பு, ஹஜ்ஜு ஆகியவையாகும்.

பிறகு கலிமாவிலுள்ள ஃபர்ளுகள் நான்காகும்.

முதலாவது: إِثْبَاتُ ذَاتِ اللّٰهِ

அல்லாஹ்வுடைய (தாத்தென்னும்) உள்ளமையைத் தரிபடுத்துவது.

இரண்டாவது: إِثْبَاتُ صِفَاتِ اللّٰهِ

அல்லாஹ்வுடைய சிறப்புத் தன்மைகளை தரிபடுத்துவது.

மூன்றாவது: إِثْبَاتُ اَفْعَالِ اللّٰهِ

அல்லாஹ்வுடைய செயல்களைத் தரிபடுத்துவது.

நான்காவது: إِثْبَاتُ صِدْقِ رَسُوْلِ اللّٰهِ

அல்லாஹ்வுடைய ரசூலின் சொல் உண்மை என்பதை தரிபடுத்துவது.

இந்த நான்கில் ஒவ்வொன்றிலும் பத்து அசல்கள் உண்டென இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் இஹ்யா உலூமித்தீனில் எழுதியுள்ளார்கள்.

## கலிமாவின் முதல் ஃபர்ளின் அசல்கள் பத்து

கலிமாவின் முதல் ஃபர்ளாகிய அல்லாஹ்வின் உள்ளமையைத் தரிபடுத்துதல் என்பதிலுள்ள பத்து அசல்கள் பின்வருமாறு :

**முதலாவது அசல்** : அல்லாஹ்வின் தாத்து என்னும் உள்ளமை உண்டாயிருப்பதால் தான் இந்த வானங்கள், பூமி, இவையிரண்டுக்கு மிடையிலுள்ள பொருட்கள் அனைத்தும் உண்டாயின. அல்லாஹ்வின் தாத் இல்லாமல் இவை உண்டாகி இருந்தால் இவற்றின் இயக்கங்கள் முறையாக அமைந்திருக்க மாட்டா. இவற்றை நாம் ஆய்ந்தறிந்து உணர வேண்டும். மேலும், இவை எதுவும் அவனுடைய உள்ளமை இருப்பதற்குத் தேவையானவையல்ல என்பதையும் அறிய வேண்டும்.

**இரண்டாவது அசல்:** அவனுடைய தாத்து பூர்வீகம் என்று நம்பிக்கை கொள்வது. அது புதிதானது; படைக்கப்பட்டது என்றிருந்தால் அவனை உண்டாக்குவதற்கு ஒரு நாயன் தேவை என்றாகி விடும். பிறகு அந்த உண்டாக்கியவனை உண்டாக்க ஒருவன் தேவை என்று வரும். இவ்வாறே அது முடிவில்லாமல் போய்க் கொண்டே இருக்கும். எனவே, அல்லாஹ்வின் உள்ளமை பூர்வீகமென்பது உறுதியானதாகும்.

**மூன்றாவது அசல்:** அவனே (அல் அவ்வல், அல் ஆகிர்) முந்தினவன், பிந்தினவன், அதாவது: துவக்கமில்லாத முந்தியவன்;முடிவில்லாத பிந்தியவன். அவ்வாறே அவன் (அள்ளாஹிர், அல்பாத்தின் ) வெளிப்படையானவன், அந்தரங்க மானவன். அதாவது அனைத்தையும் மேலிட்ட வெளிப்படை யானவன். அனைத்திலும் மறைந்திருக்கும் அந்த ரங்கமானவன்.

**நான்காவது அசல்:** அவன் மற்றொரு பொருளைச் சார்ந்திருக்கும் அணுவுமல்ல. அவ்விதமிருந்தால் அப்பொருளைக் கொண்டு நிலையானவன் என்பது ஏற்பட்டு அதற்கு அசைவும் அமைதியும் உண்டாயிருப்பதாகிவிடும். அவ்வாறு உண்டானால் அது புதிதாகத் தானிருக்கும். அதனை விட்டும் அல்லாஹ் மகாத் தூய்மையானவன்.

**ஐந்தாவது அசல்:** அவன் திடப் பொருளுமல்ல, ஏனெனில், திடப் பொருள் பல அணுக்களைக் கொண்டு ஆக்கப்பட்டதாகும். அப்பொழுது அதனைப் பிரிக்கவும் சேர்க்கவும் முடியும். இவ்வாறு பிரித்தல், சேர்த்தல், அசைதல், அமைதியாகுதல் இவை அனைத்தும் புதிதாக உண்டானவற்றின் அடையாளங்கள். அல்லாஹ் தஆலா அவற்றை விட்டும் மகா தூய்மையானவன்.

**ஆறாவது அசல்:** அவன் ஓரிடத்தில் இருக்கும் பொருளல்ல. ஏனெனில் ஓரிடத்தில் இருக்கும் பொருள் அதுபோன்று புதியதுதான்; அது அவ்விடத்திற்குள் அடங்கியிருக்கும். ஆனால், அல்லாஹ்தஆலா இவ்வாறிருப்பதை விட்டும் தன்னில் தானானவனாகவும், பிரபஞ்சமெல்லாம் அவனளவில் தேவையாகின்ற நாயனாகவும் அவன் இருக்கின்றான்.

**ஏழாவது அசல்:** அவன் திசைகளை விட்டும் தூய்மையானவன். ஏனெனில் திசையென்பது, ஒரு பொருளுக்கு மேலாகவும் மற்றொன்றுக்கு கீழாகவும் இருக்கும். வலமும், இடமும் அவ்வாறு தான். இவ்வாறு இருப்பதை விட்டும் அல்லாஹ் மிகத் தூய்மையானவன்.

**எட்டாவது அசல்:** அல்லாஹ﹁ தஆலா அர்ஷின் மீது அவனுக்குத் தகுதியான விதத்தில் அமைந்துள்ளான். அதனை நாம் விளங்குதல் முடியாது. நம்முடைய அறிவில் தோன்றும் விதத்திலல்ல.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

**ஒன்பதாவது அசல்:** அல்லாஹு தஆலா அவனை உருவகப்படுத்துவதின் மட்டு திட்டத்தை விட்டும் தூய்மையானவன். உலகில் அவனை எவரும் பார்க்க முடியாது. "பார்வைகள் அவனை அடைய முடியாது" என்று குர்ஆனில் கூறியுள்ளான். ஆனால் மறுமையில் அவனைப் பார்ப்பது கண்களைக் கொண்டுதான். " அந்நாளில் சில முகங்கள் தம்முடைய இரட்சகனைப் பார்ப்பதினால் செழிப்புற்றிருக்கும் " என்று குர்ஆனில் கூறுகிறான். அல்லாஹு தஆலாவுக்கு கைகளும், கண்களும் மற்றும் சில உறுப்புகளும் இருப்பதாக குர்ஆனிலும் ஹதீஸ்களிலும் வந்திருப்பவற்றிற்கு வேறு விளக்கங்கள் கூறப்பட்டுள்ளன. எனவே, வெளிப்படையான அர்த்தங்களைக் கொண்டு ஏமாந்து விட வேண்டாம்.

**பத்தாவது அசல்:** அவன் ஒருவன் தனித்தவன். ஒன்றுக்கு மேற்பட்டவன் இருந்தால் ஒருவன் ஆக்கவேண்டுமென்பான்; மற்றொருவன் அழிக்க வேண்டுமென்பான். அவ்வாறு நிகழ்வதில்லை. அல்லது இருவரும் சேர்ந்து ஒற்றுமையாக ஒரு வேலையைச் செய்கிறார்கள் என்று கூறினால், ஒருவனுக்கு மற்றவனின் உதவி தேவை என்றாகி விடும். அதுவும் அல்லாஹ்வாயிருப்பதற்குத் தகாது. எனவே, அவன் ஏகனான ஒருவன்தான்!

"(வானம்,பூமி) இரண்டிலும் அல்லாஹ்வைத் தவிர வேறொருவன் இருந்தால் அவையிரண்டும் சீர்குலைந்து விடும்". என்பதாகவும், " அவனே அல்லாஹ், அவன் ஒருவனே என்று நீர் கூறுவீராக!" என்பதாகவும், "அவன் அதிகாரத்தில் வேறு ஒருவர் கூட்டாக முடியாது" என்பதாகவும் குர்ஆன் கூறுகிறது.

### கலிமாவின் இரண்டாம் ஃபர்ளின்
### அசல்கள் பத்து

கலிமாவின் இரண்டாவது பர்ளாகிய 'அல்லாஹ்வுடைய சிறப்புத்தன்மைகளைத் தரிபடுத்துதல்' என்பதிலுள்ள பத்து அசல்கள் பின்வருமாறு:

**முதலாவது அசல்:** ஆலம் என்னும் இப்பிரபஞ்சத்தைப் படைத்தவனுக்கு இதிலுள்ள அனைத்துப் பொருட்களின் மீதும் ஆற்றல் இருக்கிறது என்று அறிவதாகும். ஏனெனில், இப்பிரபஞ்சம் படைக்கப்பட்டது முதல் உறுதியாகவும்,ஒழுங்காகவும் இயங்கிவருவது இதற்கு ஆதாரமாகும். அழகிய வேலைப்பாடுள்ள ஒரு துணியைப் பார்க்கும் போது நல்ல திறனுள்ள ஒருவன் இதனைச் செய்திருக்கிறான் என்று தான் விளங்குவோமல்லாது, சக்தியற்ற, செத்தவன் ஒருவன் இதனை உண்டாக்கினான் என்று நினைக்க மாட்டோம்.

**இரண்டாவது அசல்:** அவன் அனைத்தையும் அறிகிறவன் என்று அறிவதாகும். உண்டாக்கியவன் தான் உண்டாக்கிய பொருளை அறிய மாட்டானென்று கூறுவது கூடாது.

**மூன்றாவது அசல்** : அவன் நித்திய ஜீவன் (ஹயாத்துள்ளவன்) என்று அறிவதாகும். உண்டாக்கியவன், அதை அறிந்தவனாகவும். நித்திய ஜீவனுள்ளவனாகவும் தான் இருப்பான் என்பதில் சந்தேகம் கொள்ளக் கூடாது.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

**நான்காவது அசல் :** அவன் நாட்டமுள்ளவனாகவே இருப்பான் என்று அறிவது நாட்டமில்லாமல் செயல்கள் நடைபெறமுடியாது.

**ஐந்தாவது அசல் :** கேள்வியும், பார்வையும் உள்ளவன் என்று அறிவது காரிருளில் ஆழிய குகையிலிருக்கும் கல்லின் மீது ஊர்ந்து செல்லும் சிற்றெறும்பைப் பார்த்து அதன் முனகலையும் அதன் சிந்தனையிலுள்ள ஊசாட்டத்தையும் கேட்டறிந்து அதற்குரிய இலாப நஷ்டம் அனைத்தையும் உண்டாக்குகிறவன்.

**ஆறாவது அசல் :** அவன் பேச்சுள்ளவன் என்று அறிவது. அவனுடைய பேச்சு அவன் உள்ளமையில் நிலைபாடானதாயிருக்கும். அதற்கு எழுத்தும், ஒசையும் கிடையாது. எழுத்து இருக்கிறதென்று கூறினால் ஒரெழுத்து முந்தியும் அடுத்த எழுத்து பிந்தியும் வரும். பிஸ்மில்லாஹ் என்று கூறும் பொழுது 'பே' முந்தியும் இரண்டாவதாக ஸீனும் வருகிறது. இரண்டாவதாக வரும் எழுத்து புதியது (பூர்வீகமல்ல) என்று கூற வேண்டும். இது சரியில்லை. அவன் பூர்வீகமானவனாக இருக்கும் பொழுது அவன்பேச்சு புதியதாக ஆகமுடியாது.

**ஏழாவது அசல் :** அவனுடைய (கலாமை) பேச்சை படைக்கப் பட்ட ஒருவர் கேட்டாலும் அவன்தன்னிலிருக்கும் கலாம் பூர்வீகமானதுதான் என்று அறிவது. நபி மூஸா (அலை) அவர்கள் அல்லாஹ்வுடைய பேச்சைக் கேட்டது மஃரிஃபா என்னும் ஞானத்தின் மூலமாகும்; காது கொண்டல்ல.

**எட்டாவது அசல் :** அவனுடைய (இல்மு) அறிவும் பூர்வீகமானது. அதாவது அவனுடைய தாத்து, சிஃபாத்து, படைப்பினங்கள் அனைத்தையும் அவன் அறிவது பூர்வீகமானதே. நம்முடைய அறிவு புதிதானது. ஒரு பொருள் சம்பந்தப்பட்டு, அப்பொருளைத் தொடர்ந்துதான் நம்முடைய அறிவு இருக்குமே தவிர, அதனைமுந்தாது. எனவே புதிதான பொருளைத் தொடரும் நம் அறிவும் புதிதானது தான்.

**ஒன்பதாவது அசல் :** அவனுடைய நாட்டம் பூர்வீகமானது என்று அறிவது. அது அவனுடைய தாத்துடன் சேர்ந்தது. அது புதிதென்று கூறினால் புதிதான இடங்களாகிவிடும். அது அவனுடைய தாத்து அல்லாததைக் கொண்டு சம்பந்தப்பட்டிருக்கிறது என்று சொன்னால், தன் தாத்தைக் கொண்டு நாடாதவனாகி விடுவான். அப்பொழுது அவன் நாட்டமில்லாமலேயே இந்தப் பிரபஞ்சம் உண்டான தென்று கூறவேண்டியதாகிவிடும். அது தவறாகும்.

**பத்தாவது அசல் :** தன் அறிவு கொண்டு அறிவுடையவன்; தன் தத்துவங் கொண்டு தத்துவமுடையவன் என்று அறிவது. அதாவது அறிவில்லாமலிருந்து பிறகு அறிவைப் பெற்றவன் என்பதல்ல. இது முதலில்லாத ஒருவனை முதலாளி என்று சொல்வதைப் போலாகும். எனவே, அறிவும், அறிவுடையவனும் அறியப்பட்டதும் மூன்றும் அனைாக இருப்பதால் அனைத்தையும் அவன் அறிவதென்பது உறுதியாகிவிட்டது.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மனானீ'

### கலிமாவின் மூன்றாம் ஃபர்ளின் அசல்கள் பத்து

கலிமாவின் மூன்றாவது ஃபர்ளாகிய 'அல்லாஹ்வுடைய செயல்களைத் தரிபடுத்துதல்' என்பதிலுள்ள பத்து அசல்கள் பின் வருமாறு :

**முதலாவது அசல் :** புதியவை அனைத்தும் அவனுடைய செயலும், படைப்பும், வேலையுமாயிருக்கும் என்று அறிவது.

**இரண்டாவது அசல் :** அடியார்களுடைய அசைவுகளைப் புதிதாக உண்டாக்குவது கொண்டு அவன் தனித்தவனாக இருப்பதாகும். ஆனால் அந்த அசைவுகள் அடியானுடைய தத்துவத்தை விட்டும் நீங்காது. அதாவது அடியானையும், அவனுடைய தத்துவத்தையும், அவனுடைய சுய விருப்பத்தையும் அவனால் விரும்பப்படக்கூடியதையும், அல்லாஹ்வே படைத்திருக்கிறான். எனவே, அடியானுக்குரிய தத்துவம் அவனுடைய சிஃபத்தாகவும், அல்லாஹ்வின் படைப்பாகவும் ஆகிறது. அவ்வாறே அடியானுடைய அசைவுகள் அல்லாஹ்வுடைய படைப்பாகவும் அடியானின் சிஃபத்தாகவும் ஆகிறது.

(37 : 96) وَاللّٰهُ خَلَقَكُمْ وَمَا تَعْمَلُوْنَ۝

"அல்லாஹ் தான் உங்களையும் நீங்கள் செய்கின்ற செயல்களையும் படைத்தான்" என்று குர்ஆனிலும்

إِنَّ اللّٰهَ خَالِقُ الْاَفْعَالِ وَاَنْتَ كَاسِبُهَا

"நிச்சயமாக அல்லாஹ் செயல்களைப் படைக்கிறவனாக இருக்கிறான்; நீயோ அவற்றை சம்பாதித்துக் கொள்கிறவனாக இருக்கிறாய்" என்று ஹதீஸிலும் கூறப்பட்டுள்ளது.

**மூன்றாவது அசல் :** அடியானுடைய செயல், அவன் சம்பாதிப்பதாகயிருந்தாலும் அல்லாஹ்வுடைய நாட்டத்தை விட்டும் நீங்காது. எனவே பிரபஞ்சத்தில் நடைபெறும் அனைத்தும் அல்லாஹ்வின் நாட்டமில்லாமல் நடைபெறுவதில்லை என்று அறிய வேண்டும். அவன் நாடியதைத் தடுத்து, நாடாததை ஏவுதல் அவனிடமிருந்து நிகழுமா? என்று நீ கேட்டால், நாட்டம் என்பது வேறு; ஏவல் என்பது வேறு என்பது பதிலாகும்.

**நான்காவது அசல்** அல்லாஹுதஆலா படைப்புகளை மிகநூதனமாகப் படைத்தது அவனுடைய கருணையினாலாகும் என்று அறிய வேண்டும். மாறாக முஃதஜிலாக்கள் கூறுவது போல் அது அவன் மீது கட்டாய விதி என்பதாக ஆகாது. இது சுன்னத்து ஜமாஅத்தின் கொள்கைக்கு மாற்றமாகும்.

**ஐந்தாவது அசல் :** அல்லாஹுதஆலா அடியார்களின் மீது அவர்களின் சக்திக்கு மீறியதைச் சுமத்தாதிருப்பது அவன் மீது கட்டாய விதியல்ல. இதனை முஃதஜிலாக்கள் அவன் மீது கட்டாய விதி என்று கூறுகின்றனர். இது தவறாகும். அவ்வாறு அது அவன் மீது விதியல்ல என்பதால் தான் குர்ஆனில்

(2:286) رَبَّنَا وَلَا تُحَمِّلْنَا مَا لَا طَاقَةَ لَنَا بِهٖ

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

"எங்கள் இரட்சகனே! எங்களுக்குச் சக்தியில்லாததை எங்கள் மீது நீசுமத்திவிடாதே" என்று துஆ கேட்குமாறு கூறியுள்ளான். அவ்வாறு சக்திக்கு மீறியதைச் சுமத்தாட்டுவதற்கு அவனுக்கு சக்தியிருக்கிறது என்பதால் தான் அவ்வாறு செய்திடாதே என்று அவனிடம் கேட்குமாறு கூறியுள்ளான். ஆனால், அல்லாஹ் தன் அடியார்களின் மீது அவ்வாறு சிரமத்தைச் சுமத்துவதில்லை என்பதற்கு

(2:286) لَا يُكَلِّفُ اللّٰهُ نَفْسًا اِلَّا وُسْعَهَا

"அல்லாஹ் எந்த ஆத்மாவிற்கும் அதன் சக்திக்குரியதைத் தவிர (வேறு) சிரமம் கொடுப்பதில்லை" என்ற இந்த ஆயத்தை அருளியுள்ளான்.

**ஆறாவது அசல்** : நன்மை செய்த தன் அடியார்களுக்கு நற்கூலி தருவதும், குற்றம் செய்தவருக்கு தண்டனை தருவதும் அவனுடைய விருப்பத்தைப் பொருத்ததாகும். அது அவன் மீது விதியல்ல. முஃதஜிலாக்கள் விதியென்று கூறுகின்றனர். அது தவறாகும்.

நன்மை செய்தவருக்கு சொர்க்கம் தருவதாகவும், தீமை செய்தவருக்கு நரகம் உண்டென்றும் குர்ஆனில் அவன் வாக்களித்திருக்கிறானே என்பதற்கு ......... அவ்வாறு அவன் வாக்களித்திருப்பதை நிறைவேற்றுவான் என்ற பொருள்தானே தவிர, அவனுடைய இலாஹிய்யத்தான தன்மைக்கு அது கட்டாயம் என்பது கருத்தல்ல.

**ஏழாவது அசல்** : தன் அடியார்களை தான் நாடிய விதத்தில் செய்வது அவனுக்குத் தகுமானதாகும். அவர்களுக்குச் சாதகமானதைத்தான் செய்ய வேண்டும் என்பது அவன் மீது கட்டாயமல்ல.

**எட்டாவது அசல்** : அல்லாஹ்வை அறிவதும் அவனுக்கு வழிபடுவதும் அவன் நம் மீது விதியாக்கியதைக் கொண்டாகும்; நம்முடைய அறிவைக் கொண்டல்ல.

**ஒன்பதாவது அசல்** : நபிமார்களை அனுப்புவது அல்லாஹ்வுக்கு அவசியமல்ல என்று சொல்லக்கூடாது; பராஹிமா என்ற கூட்டம் இதற்கு மாற்றமாகக் கூறுகின்றனர். வைத்தியனுடைய சொல்லுக்கு வழிப்பட்டால் நோய் சுகமடைவது போல், நபிமார்களுடைய சொல்லுக்கு வழிப்பட்டால் மறுமையில் தண்டனையை விட்டும் சுகமடையலாம்.

**பத்தாவது அசல்** : அல்லாஹு தஆலா நம்முடைய நாயகம் (ஸல்) அவர்களை நபிமார்கள் அனைவருக்கும் முத்திரையானவர்களாகவும், முந்தின வேதங்கள் சட்டங்கள் அனைத்தையும் மாற்றியவர்களாகவும் அனுப்பிவைத்தான் என்பதைத் திட்டவட்டமாக விளங்குவதற்குரிய காரண காரியங்களை அவன் ஏற்படுத்தி இருப்பதால், அவர்களுடைய சொல் அவனுடைய சொல்லாகவும், அவர்களுக்கு வழிப்படுவது அவனுக்கு வழிப்படுவதாகவும் ஆகிவிட்டது.

### கலிமாவின் நான்காம் ஃபர்ளு

கலிமாவின் நான்காவது ஃபர்ளாகிறது 'அல்லாஹ்வுடைய ரசூல் சொன்னது அனைத்தும் உண்மையே என்று உறுதி கொள்வதாகும். அதிலுள்ள ஏழு அசல்கள் பின் வருமாறு:

**முதலாவது அசல்:** படைப்புகள் அனைத்தும் அழிக்கப்பட்டபின் அவை அனைத்திற்கும் மீண்டும் உயிர் கொடுத்து எழுப்பி ஓரிடத்தில் ஒன்று சேர்த்து அல்லாஹ் கேள்வி கணக்குக் கேட்பான் என்பது உண்மை என்று உறுதிகொள்வது.

**இரண்டாவது அசல்:** முன்கர், நகீர் என்னும் மலக்குகள் கப்ரில் கேள்வி கேட்பார்கள் என்பது உண்மை என்று உறுதி கொள்வது.

**மூன்றாவது அசல்:** கப்ருடைய வேதனை உண்மையென்று உறுதிகொள்வது.

**நான்காம் அசல்:** நன்மை, தீமைகளை நிறுக்கின்ற மீஜான் என்னும் தராசு உண்டென்பது உண்மையென்று உறுதிகொள்வது.

**ஐந்தாவது அசல்:** சிராத்துல் முஸ்தகீம் பாலம் உண்டென்பதை உண்மையென்று உறுதிகொள்வது.

**ஆறாவது அசல்:** சொர்க்கமும், நரகமும் படைக்கப்பட்டிருக்கின்றன என்பது உண்மையென்று உறுதி கொள்வது.

**ஏழாவது அசல்:** கிலாஃபத்திற்காக ஏற்படுத்தப்பட்டவரில் இல்மும் பேணுதலும் இல்லாவிட்டால் முஸ்லிம்கள் அனைவரும் ஒற்றுமையுடனிருந்து இணக்கமாக வாழ்வது எல்லோரின்மீதும் ஃபர்ளாகும்.

இதுவரைக் கூறப்பட்ட முப்பத்தி ஏழு அசல்களும் சுன்னத்து ஜமாஅத்தின் கொள்கைகளாகும். இவற்றில் ஏதேனும் ஒன்றில் மாற்றம் செய்வதும் உகந்ததல்ல.

### அல்லாஹ்வுடைய சிஃபத்துகளின் விளக்கம்:

அல்லாஹ்வுடைய( كُنْهُ - ذَاتُ . என்னும்) உள்ளமையை எவராலும் விவரிக்க இயலாது ஆகையால்,

كُلُّكُمْ حَمْقٌ فِيْ ذَاتِ اللّٰهِ

"அல்லாஹ்வுடைய உள்ளமையின் விஷயத்தில் நீங்கள் அனைவரும் அறிவற்றவர்கள்தாம்" என்று நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்.

கலிமாவின் இரண்டாம் ஃபர்ளான, (ஏற்கனவே விவரமாக கூறப்பட்ட) சிஃபாத்தின் மூலமாகத்தான் மஃரிஃபா என்னும் ஞானமுண்டாகும். ஆகையினால்தான்:

اَعْرَفُكُمْ بِاللّٰهِ اَعْرَفُ بِصِفَاتِهٖ

"உங்களில் அல்லாஹ்வை மிக அறிந்தவர் (யாரென்றால்) அவனுடைய சிஃபத்துகளை நன்றாக அறிந்தவர்தான்" என்று நபி (ஸல்) அவர்கள்கூறியுள்ளார்கள்.

ஆனால் அல்லாஹ்வுடைய சிஃபத்துக்களை நாம் மட்டுதிட்டப் படுத்தமுடியாது. எனினும், அனைவரும் ஓரளவு விளங்கிக் கொள்வதற்காக ஞானவான்கள், அல்லாஹ்வுக்கு வாஜிபாகிய (கட்டாயமான) சிஃபத்துகள் இருபது என்றும், அவனுக்கு அறவே கூடாத சிஃபத்துகள் இருபது என்றும், இருப்பதும், இல்லாமலிருப்பதும் சமம் என்னும் ஆகுமான (ஜாயிஸான) சிஃபத்துகள் பலவுண்டு என்றும் கூறியுள்ளார்கள். இந்த மூவகை சிஃபத்துகளும் இப்பொழுது விளக்கப்படுகின்றன.

## அல்லாஹ்வுக்கு வாஜிபான சிஃபத்துகள்

1) وُجُوْدٌ உள்ளமை, இது நஃப்ஸிய்யா வென்னும் தாத்துடன் சமமான சிஃபத்து என்று கூறப்படும். இதனை தாத்தை விட்டும் நீக்கிச் சொல்லக்கூடாது. 2) قِدَمٌ பூர்வீகம். 3) بَقَاءٌ நிலைப்பாடு (முடிவில்லாத தரிபாடு) 4) مُخَالَفَةٌ لِلْحَوَادِثِ புதியவற்றிற்கு மாறுபட்டிருப்பது (புதிய புதிய நிகழ்ச்சிகள் என்பது அவனுக்குக் கிடையாது) . 5) قِيَامُهُ بِنَفْسِهٖ தன்னைக்கொண்டே தான் நிலைத்திருப்பது. 6) وَحْدَانِيَّةٌ அவன் ஒருவனாயிருப்பது (தனித்தவனாயிருப்பது) .

இந்த ஆறில் وُجُوْدٌ வைத் தவிர மீதியுள்ள ஐந்தும் 'ஸல்பிய்யா' என்று கூறப்படும். அல்லாஹ்வுடைய தாத்துக்குத் தகாத வர்ணிப்புகளை நீக்கிக் காட்டுவதாகும்.

7) حَيٰوةٌ நித்திய ஜீவியம். 8) عِلْمٌ அறிவு. 9) اِرَادَةٌ நாட்டம். 10) قُدْرَةٌ ஆற்றல். 11) سَمْعٌ செவியுறுதல். 12) بَصَرٌ பார்த்தல். 13) كَلَامٌ பேச்சு. இவை ஏழும் அரூபியான சிஃபத்துகள் என்று கூறப்படும்.

14) حَيٌّ அரூபியான நித்திய ஜீவன். 15) عَالِمٌ இதயமின்றி அறிகிறவன். 16) مُرِيْدٌ நஃப்ஸின்றி நாடுகிறவன். 17) قَادِرٌ ஆதாரமின்றி ஆற்றலுள்ளவன். 18) سَمِيْعٌ காதின்றி செவியேற்கிறவன். 19) بَصِيْرٌ — கண்ணின்றிப் பார்க்கிறவன். 20) مُتَكَلِّمٌ நாவின்றி பேசுகிறவன்.

இவை ஏழும் சுரூபியான சிஃபத்துகள் என்று கூறப்படும். இவை இருபதும் அல்லாஹ்வுக்கு வாஜியான சிஃபத்துகள்.

## அல்லாஹ்வுக்கு கூடாத சிஃபத்துகள்

1. இல்லாமை; 2. புதிது; 3. அழிவு; 4. ஒப்புவமை; 5. பிறரிடம் தேவையாகுதல் ; 6.இணை; 7. இறப்பு; 8. மடமை; 9. நாடாதிருத்தல்; 10. இயலாமை; 11. செவிடு; 12. குருடு; 13. ஊமை; 14. இறந்தவன்; 15. அறிவில்லாதவன்; 16. நாடாதவன்; 17. இயலாமையுள்ளவன்; 18. செவிடன்; 19. குருடன்; 20. ஊமையன்.

இந்த இருபதில் ஏதேனும் ஒன்று அல்லாஹ்வுக்கு உண்டென்று சொல்பவன் அல்லது நினைப்பவன் காஃபிராகி விடுவான்.

ஆகுமான (ஜாயிஸான) சிஃபத்துகள் மேற்குறிப்பிடப்பட்டவை அல்லாதவையாகும். அதாவது: படைத்தல், அழித்தல், உணவளித்தல், நேர்வழி செலுத்துதல், நேர்வழி செலுத்தாதிருத்தல், பலன் தருதல், இடர்தருதல், கொடுத்தல், தடுத்தல், படைக்கிறவன், அழிக்கிறவன், உணவளிக்கிறவன், நேர்வழி செலுத்துகிறவன், செலுத்தாதவன், பலன் தருகிறவன், இடர் செய்கிறவன், கொடுக்கிறவன், தடுக்கிறவன் இவை போலுள்ள சிஃபத்துகள் அல்லாஹ்வுக்கு இருப்பதும் இல்லாமலிருப்பதும் சமமாகும்.

இஸ்லாத்தின் மற்ற கடமைகளாகிய தொழுகை, ஜகாத்து, நோன்பு, ஹஜ்ஜு ஆகிய நான்கும் தனித் தனியான தலைப்புகளில் கூறப்படும்.

## 3) தவ்ஹீது பற்றிய பாடம்

தீனுடைய கடமைகளில் மூன்றாவது தவ்ஹீதாகும். அதாவது அல்லாஹு தஆலா ஒருவனென்பதைத் தன் இதயத்தில் தரிபடுத்துதல். "தவ்ஹீதென்பது என்னுடையது, உன்னுடையது என்ற தன்மைகளை விடுவதுதான்" என்று சில ஆரிஃபீன்கள் கூறியுள்ளார்கள். இன்னும் ஒருவர் " தவ்ஹீதாகிறது அல்லாஹ் ஒருவனென்பதைத் தன் சிந்தையில் அறிந்து, அவனல்லாததை சிந்தையிலிருந்து நீக்கி விடுவதாகும்" என்று கூறுகிறார்.

وَمَا خَلَقْتُ الْجِنَّ وَالْإِنْسَ إِلَّا لِيَعْبُدُوْنِ ۝ (51:56)

" மனிதர்களையும், ஜின்களையும் அவர்கள் என்னை (யறிந்து ஓர்மைப்படுத்தி) வணங்குவதற்கேயல்லாமல் நான் படைக்கவில்லை" என்று ஓர் ஆயத்திலும்,

أَفَحَسِبْتُمْ أَنَّمَا خَلَقْنَاكُمْ عَبَثًا وَأَنَّكُمْ إِلَيْنَا لَا تُرْجَعُوْنَ ۝ (23:115)

" நாம் உங்களை வீணாகப் படைத்துள்ளோம் என்றும், நீங்கள் நம் பக்கம் மீட்டப்படமாட்டீர்கள் என்றும் நீங்கள் எண்ணிக் கொண்டீர்களா?" என்று மற்றோர் ஆயத்திலும் அல்லாஹ் கூறுகிறான்.

**தவ்ஹீதில் மூன்று வகை உண்டு**

**முதலாவது تَوْحِيْدُ الذَّاتِ**

அவனுடைய உள்ளமையில் அவனை ஓர்மைப்படுத்துதல். அதாவது அல்லாஹு தஆலா தன் உள்ளமையினால் ஒரு பொருளில் இறங்கியவன், அல்லது அதை விட்டு நீங்கியவன், என்ற சந்தேகம், ஊசாட்டம் அனைத்தையும் நீக்கி அவன் தாத்தினால் ஒருவன் என்பதைத் தரிபடுத்துவது.

**இரண்டாவது تَوْحِيْدُ الصِّفَاتِ**

அவனுடைய வர்ணிப்புகளில் அவனை ஓர்மைப்படுத்துதல். அதாவது: அவனுடைய வர்ணிப்புகள் எதுவும் வேறு எவருக்கும் இருக்கிறது என்று எண்ணாமல் அவை அனைத்தையும் அவனுக்கே தரிபடுத்துவது. வெளித்தோற்றத்தில் சில பண்புகள் மனிதர்களிடத்தில் இருக்கின்றன வென்றாலும் அதன் தன்மையில் அவை அவனுக்கே

முழுமையாக இருக்கின்றன; வேறு எவருக்கும் அவ்வாறு இருக்க முடியாது. உதாரணமாக: நாமும் அறிவுள்ளவர் என்று கூறுகிறோம்; அல்லாஹ்வும் தன்னை அறிவுள்ளவன் என்று கூறுகிறான். இவ்விரண்டும் எப்பொழுதும் எவ்வகையிலும் சமமாக முடியாது. நாமும் நாடுகிறோம்; அவனும் நாடுகிறான். இரண்டு நாட்டங்களும் சமமாகாது. நிழலாகிறது நிழல் உடையவனுக்குள் பிணைந்திருப்பதுபோல்.

وَمَا تَشَآءُونَ إِلَّآ أَن يَشَآءَ ٱللَّهُ

"அல்லாஹ் நாடினாலன்றி நீங்கள் நாடுவதில்லை" என்று அல்லாஹு தஆலா கூறுகிறான். நம்முடைய தன்மைகள் அனைத்தும் மட்டுத்திட்டம் உடையவையாகவும், மற்றொன்றைத் தழுவி நிற்பவையாகவும் இருக்கும். ஆகையால், பொய்யான தன்மைகளைப் பொதிந்துகொள்ளாத மெய்யான தன்மைகள் அவனுக்கு உண்டென ஓர்மைப்படுத்துதலாகும்.

**மூன்றாவது** تَوْحِيدُ الْأَفْعَالِ

அவனுடைய செயல்களில் அவனை ஓர்மைப்படுத்துதல். அதாவது அல்லாஹ்வுடைய செயல்கள் அவனுடைய சிஃபத்துகளைத் தழுவியவையாகவும், சிஃபத்துகள் அவனுடைய தாத்தைத் தழுவியவையாகவும் இருப்பதால், அவனுடைய செயல்களுக்கு எதிராகச் செய்பவர் எவரும் கிடையாது என்று அவனுடைய செயல்களை ஓர்மைப்படுத்துவதாகும். நம்முடைய செயலும், செயலைச் செய்பவனும், செய்யப்படுகிற விஷயமும் நிலையற்றவையாகும்; ஒரு செயலில் பலரும் கூட்டாவதற்குரியவையாகும்.

## 4) மஃரிஃபா-ஞானம் பற்றிய பாடம்

தீனுடைய நான்காம் கடமை மஃரிஃபா என்னும் ஞானமாகும். இந்த ஞானம் (கஸ்பீ என்னும்) படித்துத் தெரிந்து கொள்வதாலும், (வஹ்பீ என்னும்) அல்லாஹ்வின் புறத்திலிருந்து கிடைப்பதாலும் வரும். இந்த இரண்டாவது இல்முக்கு இல்முல்லதுன்னீ, இல்முல் கஷ்ஃப் என்பதாகவும் கூறப்படும். முதல் வகையான கஸ்பீ இல்முக்கு மட்டு திட்டமுண்டு. (வரம்பு உண்டு) வஹ்பீ இல்முக்கு (கடாட்சிய அறிவுக்கு) மட்டுதிட்டமென்பதில்லை. ( வரம்பு கிடையாது)

இந்த இரண்டு இல்முகளும் இரண்டு தன்மையில் அடங்கிவிடும்.

முதலாவது تَنْزِيهُ தன்ஜீஹ்; அனைத்துப் படைப்பினங்களை விட்டும் அவனைத் தூய்மைப்படுத்துவது.

இரண்டாவது تَشْبِيهُ தஷ்பீஹ்; அவனை ஒப்பாக்குவது. முந்தியது உபயோகமற்றது; இரண்டாவது மோசமானது. இவ்விரண்டையும் ஒன்று சேர்த்துக்கொண்டிருக்கும் تَنْزِيهُ الْمَحْضِ கலப்பற்ற தூய்மைப்படுத்துதல் என்பதுதான் நேரானது. அதுதான் நபிமார்கள், நல்லடியார்கள் ஆகியோர்களுடைய ஞானமாகும். مَقْعَدِ صِدْقٍ என்னும் உண்மையின் இருப்பிடமாகிய மெய்ஞ்ஞானமுமாயிருக்கும்.

துஹ்ஃபத்துல் முர்ஸலா என்ற கிதாபில் முஹம்மதுப்னு ஃபள்லுல்லாஹ் என்பவர் கூறுவதாவது:- அல்லாஹு தஆலா படைப்புகளைப் படைப்பதற்கு முன் எவ்வாறு இருந்தானோ அவ்வாறே இருந்து கொண்டிருக்கிறான். இனி எப்பொழுதும் அவ்வாறே இருந்து கொண்டிருப்பான். ஆனால் எல்லாப் பொருட்களையும் தன்னுடைய சிஃபத்துகள் வெளியாகும்படியான மள்ஹராக (இடமாக) ஆக்கி அவன் தஜல்லீயாகி (வெளியாகி)க் கொண்டே இருக்கிறான். பூவினுள் வாசத்தைப் போன்று, எள்ளினுள் எண்ணெயைப் போன்று ஒட்டியும் ஒட்டாமலும், சேர்ந்தும், சேராமலும் இருக்கிறானென்று சொல்ல முடியாத வண்ணம் அமைந்திருக்கிறான். இதனால் தான்

لَيْسَ كَمِثْلِهِ شَيْءٌ (42:11)

"அவனைப் போன்று எப்பொருளும் இல்லை;- அல்லது அவனைப் போன்றதைப் போன்று எப்பொருளும் இல்லை" என்று அல்லாஹ் கூறியுள்ளான். எனவே தான்

كُلَّ يَوْمٍ هُوَ فِي شَأْنٍ (55:29)

"அவன் ஒவ்வொரு நாளும் தன்னுடைய (தஜல்லியத்தான) காரியத்தில் இருக்கிறான்" என்றும் கூறியுள்ளான். அல்லாஹ்வுடைய தஜல்லீ படைப்புகளில் பல்வேறு விதங்களில் வெளியாவதால் தான்

وَقَدْ خَلَقَكُمْ أَطْوَارًا (71:14)

"திடனாக உங்களைப் பல்வேறு விதங்களாகப் படைத்துள்ளான்" என்று கூறுகிறான். இந்த ஆயத்தின் கருத்தை மாற்றி சில அறிவீனர்கள், உங்களை மிருகங்களாக, பறவைகளாக பல்வேறு விதங்களாகப் படைப்பான் என்று கூறுவது முற்றிலும் தவறாகும்.

### அஹதிய்யத், வஹ்தத், வாஹிதிய்யத் பற்றிய விளக்கம்

அடுத்து மேலிருந்து கீழாக இறங்கிவரும் நுஜூலுடைய பதவிகள் நாற்பதென்று சிலரும், ஏழென்று சிலரும் கூறுகின்றனர். அந்த ஏழும் வருமாறு :-

1) அஹதிய்யத். இது مَرْتَبَةُ الْعَمَا "அமாவுடைய பதவி என்றும், مَرْتَبَةُ اللَّاتَعَيُّنِ குறிப்பற்ற பதவி என்றும், مَرْتَبَةُ الْإِطْلَاقِ பொதுப்படையான பதவி என்றும், مَرْتَبَةُ ذَاتِ الْبَحْتِ கலப்பற்ற பதவி" என்றும் கூறப்படும். இதைத்தவிர வேறு குறிப்பு எதுவும் அதற்குச் சொல்லக்கூடாது. "நம்முடைய ரப்பு படைப்புகளைப் படைக்கும் முன் எங்கிருந்தான்? என்று ரசூலுல்லாஹி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்ட போது "அமாவிலிருந்தான்" என்று பதிலுரைத்தார்கள். அவனைப் பற்றி இவ்வளவுதான் சொல்ல முடியும்.

2) வஹ்தத்-இது حَقِيْقَةٌ مُحَمَّدِيَّةٌ முஹம்மதியாவுடைய ஹகீகத் என்றும், شُئُوْنٌ ذَاتِيَّةٌ உள்ளமையைச் சேர்ந்த விஷயங்கள் என்றும், تَعَيُّنُ اَوَّلْ முதற்குறிப்பு என்றும் கூறப்படும்.

3) வாஹிதிய்யத். இது حَقِيْقَةٌ اٰدَمْ, ஆதமுடைய ஹகீகத் என்றும், اَعْيَانٌ ثَابِتَةٌ ———— தரிபட்டிருக்கும் பொருள்கள் என்றும், تَعَيُّنُ ثَانِيْ இரண்டா வது-குறிப்பு என்றும் கூறப்படும்.

4) ஆலமுல் அர்வாஹ் - عَالَمُ الْاَرْوَاحْ (உயிர்களின் உலகம்) - இது ஆலமுல் லாஹூத் عَالَمُ اللَّاهُوْتِ என்றும் சொல்லப்படும். அதாவது, அல்லாஹ்வுடைய ஜலாலிய்யத் ( جَلَالِيَّة ) தான (கம்பீரமான)திருநாமங்களும், ஜமாலியத் ( جَمَالِيَّة ) தான (சாத்வீகமான) திருநாமங்களும் கூடி, வடிவமில்லாத முறையில் நூரு முஹம்மதியாவும் மற்றும் அதிலடங்கிய உயிர்களும் இருந்த உலகம்.

5) ஆலுமுல் மிதால் عَالَمُ الْمِثَالِ (தோற்றத்தின் உலகம்) வடிவமில்லா திருந்த பொருட்களெல்லாம் வடிவமாய் ஆன உலகம். இது ஆலமுல் ஜபருத் عَالَمُ الْجَبَرُوْتِ என்றும் கூறப்படும்.

6) ஆலமுல் அஜ்ஸாம் عَالَمُ الْاَجْسَامِ (சடத்துவ உலகம்) மண், தண்ணீர், காற்று, நெருப்பு ஆகிய இந்நான்கு பூதங்களால் ஆன திடப்பொருள்களுடைய உலகம். இது ஆலமுஷ்ஷஹாதா عَالَمُ الشَّهَادَةِ என்றும், ஆலமுல் மலகூத்து —— عَالَمُ الْمَلَكُوْتِ என்றும் கூறப்படும்.

7) ஆலமுல் இன்ஸான் عَالَمُ الْاِنْسَانِ இது ஆலமுந்நாசூத் عَالَمُ النَّاسُوْتِ என்றும்கூறப்படும். இது மேற்கூறப்பட்ட பதவிகளையும் மனிதனின் ஆரம்பம் கடைசி இரண்டு நிலைகளையும் அறிந்து தியானம் செய்கின்ற உலகமாகும்.

இவ்வாறு பல்வேறு உலகங்களிலிருந்து வந்த "மனிதனை மிக அழகான வடிவமைப்பில் திட்டமாக நாம் படைத்தோம். பிறகு அவனைக் கீழ்த்தர மானவர்களிலும் கீழ்தரமானவனாக நாம் ஆக்கினோம்."

(95:45) لَقَدْ خَلَقْنَا الْاِنْسَانَ فِيْٓ اَحْسَنِ تَقْوِيْمٍ ۝ ثُمَّ رَدَدْنٰهُ اَسْفَلَ سٰفِلِيْنَ ۝

என்று அல்லாஹுதஆலா குர்ஆனில் கூறியிருப்பது நுஜூல் نُزُوْلْ என்றும் கீழிறங்கி வந்ததைக் குறிப்பிடுவதாகும். இதனை மன்கூஸ் مَنْكُوْسْ (தலைகவிழ்க்கப்பட்டது) என்று கூறுவார்கள். இதைத்தான் கீழ்தரமாக்கப்பட்டது என்றும் கூறுவர். இதையே அல்லாஹுதஆலா குர்ஆனில் மற்றொரு இடத்தில் "எவருக்கு நாம் நீண்ட ஆயுளைக் கொடுத்து முதுமையடையச் செய்கிறோமோ அவரை படைப்பில் நாம் தலை கீழாக்கிவிடுகிறோம். (பலவீனராய் ஆக்கிவிடுகிறோம்) எனவே (இந்த நிலைமை யைப்பார்த்து) அவர்கள் அறிவு பெற்றுக்கொள்ளவேண்டாமா?"

(36: 68) وَمَنْ نُّعَمِّرْهُ نُنَكِّسْهُ فِي الْخَلْقِ ۚ اَفَلَا يَعْقِلُوْنَ ۝

என்று கூறியுள்ளான். இதற்கு எதிரான ஏற்றத்தை مَعْكُوْسْ மஃகூஸ் என்றும் عُرُوْجْ உருஜ் என்றும் கூறுவார்கள் அல்லாஹுதஆலா குர்ஆனில்:

(7:29) كَمَا بَدَاَكُمْ تَعُوْدُوْنَ

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

"அவன் உங்களை (இல்லாமையிலிருந்து) வெளியாக்கியபடியே நீங்கள் மீளுவீர்கள்" என்றும், மேலும்

(11:123) وَإِلَيْهِ يُرْجَعُ الْأَمْرُ كُلُّهُ

"சகலகாரியங்களும் அவனிடமே கொண்டு வரப்படும்" என்றும் அருளியுள்ளான்.

### ஹகீகத்தே முஹம்மதிய்யா வின் விபரம்

'தாத்து' ذات என்பது அல்லாஹுதஆலா. 'ஷுஊன்' என்பது அல்லாஹ், தான் வெளியாக நாடிய நாட்டமாகும். இதனை ஹகீகத்தே முஹம்மதிய்யா என்றும் சொல்லலாம். 'ஃபைழு அக்தஸ்' என்பது மற்ற படைப்புகளை படைக்க நாடிய நாட்டமாகும். இது நஃப்ஸுர்ரஹ்மான் என்றும் சொல்லப்படும். 'சிஃபாத்து' என்பது தன்னுடைய தன்மைகளை வெளியாக்க நாடினானே அதுவாகும். 'தஅய்யுனாத்' என்பது அல்லாஹ் தன்னுடைய சிஃபத்துகளை எல்லாம் ஒவ்வொரு பொருளுக்கும் அதனதன் இடத்தில் வைத்துள்ள நிலையாகும். இது 'அஃயானே தாபிதா' என்றும் சொல்லப்படும். 'ஃபைளுன் முகத்தஸுன்' என்பது அல்லாஹுதஆலாவுடைய ஜமாலும், ஜலாலும் ஒன்றுடன் ஒன்றுசேர்ந்து அவனுடைய தாத்திலிருந்து ஒளியாக குமிழியிட்டுக் கொண்டிருந்ததாகும். இது ஹுவிய்யா என்றும், ஸாரிய்யா என்றும், நூருமுஹம்மது என்றும் கூறப்படும். ஆகையால் படைப்புகளில் எந்த ஒன்றும் அவனை விட்டும் நீங்காது. அவை எல்லாவற்றிலும் அவன் இருந்து கொண்டே இருக்கிறான்.

அஃயானே ஃ தாபித்தா என்பதற்கு நூரு முஹம்மதிய்யாவின் நிழல் என்பதாகவும் சொல்லப்படும். எனவே அந்த நூருமுஹம்மதியாவை பதின்மூன்று முறை வடித்து பதின்மூன்று விதமான படைப்புகளாக் கப்பட்டது. முதல் வடிப்பில் உலூல் அஜ்ம், இரண்டாம் வடிப்பில் முர்ஸலீன்கள், மூன்றாம் வடிப்பில் நபிமார்கள், நான்காம் வடிப்பில் குத்புமார்கள், ஐந்தாம் வடிப்பில் வலிமார்கள், ஆறாம் வடிப்பில் ஆலிம்கள், ஏழாம் வடிப்பில் நல்லடியார்களான முஃமின்கள், எட்டாம் வடிப்பில் பாவிகளான முஃமின்கள், ஒன்பதாம் வடிப்பில் காஃபிர்கள், பத்தாம் வடிப்பில் மற்ற ஜீவராசிகள், பதினொன்றாம் வடிப்பில் புற்பூண்டுகள், பன்னிரண்டாவது வடிப்பில் கற்கரடுகள், பதிமூன்றாவது வடிப்பில் 'துர்ரத்துபைளா' என்னும் வெண்முத்து.

அந்த வெண்முத்தை பதின்மூன்று தரம் வடித்தெடுத்தான். முதல் வடிப்பில் அர்ஷையும், இரண்டாம் வடிப்பில் குர்ஸியையும், மூன்றாம் வடிப்பில் ஏழாம் வானத்தையும், நான்காம் வடிப்பில் ஆறாம் வானத்தையும், ஐந்தாம் வடிப்பில் ஐந்தாம் வானத்தையும், ஆறாம் வடிப்பில் நான்காம் வானத்தையும், ஏழாம் வடிப்பில் மூன்றாம் வானத்தையும், எட்டாம் வடிப்பில் இரண்டாம் வானத்தையும், ஒன்பதாம் வடிப்பில் முதல் வானத்தையும், பத்தாம் வடிப்பில் நெருப்பு மண்டலத்தையும், பதினொன்றாம் வடிப்பில் காற்று மண்டலத்தையும், பன்னிரண்டாம் வடிப்பில் தண்ணீர் மண்டலத்தையும், பதின்மூன்றாம் வடிப்பில் மண் மண்டலத்தையும் படைத்தான். இவற்றை ஆலமுஷ்ஷஹாதா என்றும், ஆலமுல் முல்க் என்றும், ஆலமுல் அஜ்ஸாம் என்றும் சொல்லப்படும்.

## மனிதனின் பகைவர்கள்

மனிதனுக்கு நான்கு பகைவர்கள் உள்ளனர். அவர்களில் ஒவ்வொருவரும் அம்பெய்து மனிதனைக் கொல்வதற்குத் தயாராக இருக்கின்றனர். அவர்கள் நால்வரும் யாரென இமாம் ஷாஃபியீ (ரஹ்) அவர்கள் ஒரு பாடலில் கூறுகிறார்கள்.

إِنِّي بُلِيتُ بِأَرْبَعٍ يَرْمِينَنِي ؛

بِسِهَامِ قَوْسٍ مَّالَهَا تَفْتِيرُ ؛

إِبْلِيسُ وَالدُّنْيَا وَنَفْسِيْ وَالْوَرٰى ؛

يَارَبِّ أَنْتَ عَلَى الْخَلَاصِ قَدِيرُ ؛

"எந்த ஒய்வுமின்றி வில்லில் அம்பை வைத்து என்னை எறிகின்ற நால்வரைக் கொண்டு நான் சோதிக்கப்பட்டேன். அவர்கள் இப்லீஸூம், உலகமும், என் நஃப்ஸூம் மனிதர்களும் ஆவார்கள். நாயனே இவர்களை விட்டு என்னை விடுதலையாக்குவதற்கு நீயே சக்தி பெற்றவன்." இந்த நால்வரில் நஃப்ஸு என்னும் எதிரியை பற்றி இமாம் கஸ்ஸாலீ (ரஹ்) அவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள்.

تَوَقَّ نَفْسَكَ لَا تَأْمَنْ غَوَائِلَهَا ؛

فَالنَّفْسُ اَخْبَثُ مِنْ سَبْعِيْنَ شَيْطَانًا

"உன்னுடைய நஃப்ஸை நீ கவனித்துக்கொண்டே இரு. அதன் மோசடிகளை விட்டும் அச்சமற்று இருந்துவிடாதே. ஏனெனில், நஃப்ஸாகிறது எழுபது ஷைத்தான்களை விட மிக கெட்டதாய் இருக்கும்."

ஒரு ஹதீஸில்,

اَعْدٰى عَدُوِّكَ نَفْسُكَ الَّتِيْ بَيْنَ جَنْبَيْكَ

" உன்னுடைய விரோதிகளில் மிகப்பெரிய விரோதி உன் இரு விலாக்களுக்கு இடையில் உள்ள நஃப்ஸாகும்" என்று கூறப்பட்டிருக்கிறது.

இந்த நான்கு விரோதிகளினால் ஏற்படும் வெளிப்படையான மறைமுகமான பாவங்கள் பலரை நாசமாக்கி, தான் என்ற பெருந்தொடக்கிலும் வேறென்ற சிறு தொடக்கிலும் துவட்டி எடுத்து, மதியை மயக்கி அழித்து விடும். இந்த விரோதிகளை திக்ரு என்னும் வாளினாலும், தக்வா என்னும் கேடயத்தினாலும் போர் செய்தால் அல்லாஹ்வின் புறத்திலிருந்து வெற்றி கிடைத்துவிடும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

உன்னை தாக்க வரும் காஃபிர்களுடன் போர் செய்வதை சிறிய போர் என்றும் உன் நஃப்ஸுடன் போர் செய்வதை பெரிய போர் என்றும் ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது. ஒரு தடவை நபி (ஸல்) அவர்கள் ஒரு போருக்கு போய் விட்டு திரும்பி வந்த போது,

رَجَعْنَا مِنَ الْجِهَادِ الْاَصْغَرِ اِلَى الْجِهَادِ الْاَكْبَرِ

"நாம் சிறிய போரிலிருந்து பெரிய போருக்கு திரும்பியுள்ளோம்." என்று கூறினார்கள். மனிதன் எப்போதும் தன் நஃப்ஸுடன் போரிட்டுக் கொண்டே இருக்க வேண்டும் என்பதைக் குறித்து இவ்வாறு கூறியுள்ளார்கள்.

### ஏழு வகை நஃப்ஸுகள்

அல்லாஹ்வின் பால் நெருங்குகின்ற பாதையில் நடப்பதற்கு 'ஸுலூக்' என்று கூறப்படும். அல்லாஹுதஆலா மனிதனை நஃப்ஸெகுல்லு என்பதிலிருந்து படைத்ததால் மனிதனுடைய ஏழு தன்மைகளுடைய அளவுக்கு அவனுக்கு ஏழு நஃப்ஸுகள் உள்ளன.

முதலாவது, நஃப்ஸு அம்மாரா தீய வற்றைக் கொண்டே ஏவக்கூடிய நஃப்ஸு. இது மேலெண்ணம், இச்சை, கோபம், ஆசை, முகஸ்துதி, பெருமை, பொறாமை, வஞ்சகம், சூது போன்ற தீய வற்றையே ஏவும். இதன் தீமைகளை மாற்ற லாஇலாஹ இல்லல்லாஹ் என்ற கலிமாவை சப்தமிட்டு திக்ரு செய்து கொண்டே வந்தால், அது இவனுக்கு வழி பட்டு பின் இவன் ஷரீஅத்தைக் கடைப்பிடித்து ஒழுகவும் "மகாமேநாசூத்" என்னும் மனித தன்மைக்கு உற்ற தானத்தில் சேரவும் வழியேற்பட்டு விடும்.

இரண்டாவது,நஃப்ஸு லவ்வாமா. குற்றம் செய்தவனை பழித்துக்கூறும் நஃப்ஸு. இது பொய், பரிகாசம், வெடி சிரிப்பு, வீண் பேச்சு, அதிகம் சாப்பிடுதல், அதிகம் குடித்தல், ஆடம்பர ஆடைகள் அணிதல் போன்றவற்றைப் பழித்துக்கூறும். லாஇலாஹ இல்லல்லாஹ் என்ற கலிமாவை சற்று இரைந்து (ஜலிய்யாக) திக்ரு செய்து கொண்டே வந்தால் இந்த குணங்கள் மாறி தரீக்கத்தைக் கடைப்பிடித்து "மகாமே மலக்கூத்" என்னும் தானத்தில் ஆகிவிடுவான்.

மூன்றாவது, "நஃப்ஸு முல்ஹிமா" உதிப்பு உண்டாக்கும் நஃப்ஸு. இதில் எல்லாவித எண்ணங்களும் உதிப்பாகும். எனினும், நன்மையும், வணக்கமும் மேலோங்கும். இதில் விழித்திருப்பது, தனித்திருப்பது, பசித்திருந்து நோன்பு வைப்பது, சுன்னத்தான வணங்கங்களைச் செய்துவருவது, ஆகியவற்றுடன், லாஇலாஹ இல்லல்லாஹ் என்ற கலிமாவை தனக்கு மட்டும் கேட்கும் அளவுக்கு இரகசியமாக திக்ரு (ஸிர்ரீ) செய்து வருவது கொண்டு ஹகீகத் என்னும் அமல்களுடையவனாக ஆகி "மகாமே ஜபரூத்" என்னும் தானத்தில் ஆகிவிடுவான்.

நான்காவது; "நஃப்ஸு முத்மஇன்னா", அமைதி பெற்ற நஃப்ஸு இதில் தன்னை மண்ணைப்போன்று மனிதன் கருதுவான்; அல்லாஹு.தஆலா ஒருவனைத் தவிர மற்ற எதனையும் காணமாட்டான். இதனால்தான்

(89:27,28) يَآاَيَّتُهَا النَّفْسُ الْمُطْمَئِنَّةُ ارْجِعِيْٓ اِلٰى رَبِّكِ رَاضِيَةً مَّرْضِيَّةً

"அமைதிபெற்ற நஃப்ஸே! திருப்தி உள்ளதாகவும், திருப்தி கொள்ளப்பட்டதாகவும் உன்னுடைய இரட்சகனின் பக்கம் நீ மீளுவாயாக!" என்று அல்லாஹ் கூறியுள்ளான் (89:27.28) இதில் லாஇலாஹ இல்லல்லாஹ் என்ற கலிமாவை தன் மனதிற்குள்ளேயே திக்ரு (கல்பீ) செய்வது கொண்டு மஃரிஃபா உடைய அமல்கள் உடையவனாக ஆகி "மகாமே லாஹூத்" என்னும் தானத்தில் ஆகிவிடுவான்.

**ஐந்தாவது:** நஃப்ஸு ராளிய்யா, பொருந்திக்கொள்ளும் நஃப்ஸு. அல்லாஹ்வின் கட்டளைகளைப் பொருந்திக் கொள்ளக் கூடியது. இதற்குரிய திக்ரு, (திக்ரு ரூஹீ) தனது மூச்சு வெளியேறும் போதெல்லாம் திக்ருநடைபெறும்.

ஆறாவது : நஃப்ஸு மர்ளிய்யா, نَفْسُ مَرْضِيَّة பொருந்திக் கொள்ளப்பட்ட நஃப்ஸு. அல்லாஹ்வினால் பொருந்திக்கொள்ளப்பட்டது. இதற்குரிய திக்ரு خَفِيّ மறைமுகமான திக்ரு.

ஏழாவது : நஃப்ஸு காமிலா. பரிபூரணமானநஃப்ஸு. எல்லா மகாம்களிலும், நிலைகளிலும், அமல்களிலும் நிரப்பமாக இருக்கும் நஃப்ஸு. இதற்குரிய திக்ரு ( أَخْفَى அக்ஃபா) மிக மறைவான திக்ரு. பிந்திய இவ்விரண்டு திக்ரும், திக்ரு செய்கிறோம் என்ற எண்ணத்தையே மாற்றி, பிறகு மாற்றினோம் என்ற நினைவையும் மாற்றி, திக்ரு, திக்ரு செய்பவர் திக்ரு செய்யப்படுகிறவன் மூன்றையும் ஒன்றாக ஆக்கி திக்ரு செய்வதாகும்.

## நஃப்ஸுகளின் திக்ருகளும் தானங்களும்

மேலும் இந்த ஏழு நஃப்ஸுகளுக்குரிய திக்ருகளை பின் வருமாறும் குறிப்பிட்டுள்ளார்கள். முந்தின நஃப்ஸில் 'லா இலாஹ இல்லல்லாஹ்' என்பதாகவும்

இரண்டாவது நஃப்ஸில் லாஇலாஹ்வை மறைத்து இல்லல்லாஹ்வை வெளிப்படுத்தியும் திக்ரு செய்யவேண்டும். மூன்றாவது நஃப்ஸில் 'அல்லாஹ்' என்பதாகவும், நான்காவது நஃப்ஸில் 'ஹூ' என்பதாகவும், ஐந்தாவது நஃப்ஸில் 'ஹூஹக்' என்பதாகவும், ஆறாவது நஃப்ஸில் 'ஹூஅல்லாஹ்' என்பதாகவும், ஏழாவது நஃப்ஸில் "ஹூ, ஹூ" என்பதாகவும் திக்ரு செய்ய வேண்டும். இவை அனைத்தையும் தனக் கொரு நாட்டமின்றி திக்ரு செய்வதாயிருக்கவேண்டும்.

பிந்திய மூன்று நஃப்ஸுகளின் தானங்களை மகாமே 'ஹாஹூத்' மகாமே பாஹூத், மகாமே ஜம்ஹூத், என்று கூறப்படும். மேலும், மூச்சுவிடும் பொழுதும், உள்ளே இழுக்கும்பொழுதும் ஒரு நொடியையும் வீணாக்காமல் 'ஹூ' என்ற திக்ரைச் செய்து வருவது 'திக்ருல் அன்ஃபாஸ்' (சுவாசங்களின் திக்ரு) என்று சொல்லப்படும். இந்த ஹூ வென்ற திருநாமத்தின் நுட்பங்கள் ஏராளமாக இருக்கின்றன. அல்லாஹ்வுடைய ஹூவிய்யத் என்னும் தன்மை எல்லாப் பொருட்களிலும் ஊடுருவி இருப்பதால் எல்லாவற்றிற்கும் அந்த 'ஹூ' என்ற சொல்லே கருவாக இருக்கிறது.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

### "இஸ்முல் அஃளம்" மின் விவரம்.

'இஸ்முல்அஃளம்' என்னும் மகத்துவத்திருநாமம் எது என்பதில் உலமாக்களிடையே பல்வேறு அபிப்பிராயங்கள் இருக்கின்றன. சிலர், ரஹ்மான், ரஹீம் என்பதாகவும், வேறு சிலர், ஹய்யுன், கய்யூம் என்பதாகவும், இன்னும் சிலர், அல்லாஹ் என்பதாகவும் கூறியுள்ளனர்.

"இஸ்முல் அஃளம் எது?" என்பதாக ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் கேட்கப்பட்ட போது, "சூரத்துல்பகராவுக்கும், ஆல இம்ரானுக்குமிடையில் அது இருக்கிறது" என்று பதிலளித்தார்கள். நபியவர்கள் சொல்லிய அந்த வார்த்தை எது என்பதை அலி (ரலி) நன்கு விளங்கி இருந்தார்கள் என்பதாகவும் சொல்லப்பட்டுள்ளது. ஏனெனில், அலி (ரலி) அவர்களைப் பற்றி, "நான் அறிவின் பட்டணம்; அலி அதனுடைய வாசல்" என்று நபி (ஸல்) அவர்கள் அருளியுள்ளார்கள். மற்றொரு தடவை நபி (ஸல்) அவர்கள், அலி (ரலி) அவர்களைப்பற்றி பல்வேறு சிறப்புகளைச் சொல்லிய பின், "அலி என்னில் நின்றுமுள்ளவர்; நான் அவரில் நின்று முள்ளவன்" என்று கூறியுள்ளார்கள். எனவே, இஸ்முல் அஃளம் எது என்பதை ஞானமுள்ள சிலர் மட்டும் விளங்கிக் கொள்ளமுடியும். இறைவன் குர் ஆனில் :

قَالَ الَّذِيْ عِنْدَهٗ عِلْمٌ مِّنَ الْكِتٰبِ (27 :40)

"வேதஞானம் பெற்ற ஒருவர்" என்று சுலைமான் நபி அவர்களின் அமைச்சர் ஆஸிஃப் இப்னு பர்கயா آصِفُ اِبْنُ بَرْخِيَا விஷயத்தில் கூறியிருப்பது அவர் 'இஸ்முல் அஃளம்வைப்பற்றிய ஞானத்தைப் பெற்று இருந்தார் என்பதற்குரிய அறிகுறியாகும் என்று கூறப்பட்டுள்ளது.

### திக்ரின் முறைகள்

திக்ரு செய்யும் பொழுது இருக்கவேண்டிய முறைகள் பல விருக்கின்றன. சுருக்கமாக இங்கு சில சொல்லப்படுகின்றன. உளூ செய்து விட்டு. தனித்த ஓர் இடத்தில் இரண்டு ரகஅத் உளூவுடைய சுன்னத்து தொழுது, பிறகு கிப்லாவை முன்னோக்கி உட்கார்ந்து 25, அல்லது 15, அல்லது 5 தடவை இஸ்திகுஃபார் செய்துவிட்டு, இருளாக இருந்தாலும் இல்லாவிட்டாலும் கண்களை மூடிக்கொண்டு திக்ரு செய்யவேண்டும். திக்ரு மஜ்லிஸை ஊதுபத்தி, அல்லது அத்தர் போன்ற நறுமணத்தால் வாசனையாக்கிக்கொள்ளவேண்டும். திக்ரு செய்யும் போது இடையில் எதுவும் சாப்பிடுவதோ குடிப்பதோ கூடாது. அவ்வாறே திக்ரு முடிந்தபின் உடனடியாக எதுவும் பருகக்கூடாது. அது திக்ருடைய காந்தியை (சூட்டை) ப் போக்கிவிடும்.

திக்ரு மஜ்லிஸில் வெளிச்சமில்லாமலாக்கி, மண்டியிட்டு உட்கார்ந்து, இரண்டு கைகளையும் தொடையின் மீது வைத்துக்கொண்டு

اَللّٰهُمَّ اَنْتَ مَقْصُوْدِيْ وَرِضَاكَ مَطْلُوْبِيْ

"யா அல்லாஹ்! நீயே என்னுடைய நோக்கம்; உன் திருப்தியே என்னுடைய நாட்டம்" என்று கூறி திக்ரை ஆரம்பிக்கவேண்டும். லா என்ற எழுத்தை நீட்டி ஆரம்பித்து, இலாஹ என்று கூறும்போது தலையை வலது பக்கம் வளைத்துச் சாய்த்து, இல்லல்லாஹ் என்று கூறும்பொழுது இடப்பக்கம் தலையை வளைத்துக் கொண்டு வந்து, அதில் அல்லாஹ் என்னும்போது இடது பக்கம் தலையைச் சற்று வேகமாக அடித்து, கலிமாவின் கருத்தை மனதில் கொள்ளவேண்டும்.

"எட்டு சொர்க்கங்களுடைய கணக்கிற்கு எட்டுவிதமான முறையில் திக்ரு செய்யவேண்டும். இவற்றை எட்டு ஹள்ரத்துகள் (சந்நிதானங்கள்) என்று கூறப்படும்" என்று ஷைகுல் அக்பர் முஹ்யித்தீன் இப்னுல் அரபி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். அவை வருமாறு:-

1) லாஇலாஹ இல்லல்லாஹ் لَآاِلٰهَ اِلَّا اللّٰهُ இது ஹள்ரத்துல் அஹ்காம் حَضْرَةُ الْاَحْكَامِ (கட்டளைகளின் சந்நிதானம்) என்று கூறப்படும்.

2) இல்லல்லாஹ் اِلَّا اللّٰهُ இது ஹள்ரத்துத் தத்பீர் حَضْرَةُ التَّدْبِيْرِ (நிர்வாகத்தின் சந்நிதானம்) என்று கூறப்படும்.

3) அல்லாஹ் அல்லாஹ் اَللّٰهُ اَللّٰهُ இது ஹள்ரத்துல் இஸ்திஃ حَضْرَةُ الْاِبْدَاعِ (முன் உதாரணமின்றி புதுமையாகச் சமைத்தலின் சந்நிதானம்) என்று கூறப்படும்.

4) ஹு ஹு هُوْ هُوْ இது ஹள்ரத்துல் ஃகிதாப் حَضْرَةُ الْخِطَابِ (ஹக்கு தஆலாவை முன்னோக்குதலின் சந்நிதானம்) என்று கூறப்படும்.

5) கய்யூம் கய்யூம் قَيُّوْمُ قَيُّوْمُ இது ஹள்ரத்துல் ஹயாத் حَضْرَةُ الْحَيَاةِ (ஜீவியத்தின் சந்நிதானம்) என்று கூறப்படும்.

6) ஹக் ஹக் حَقٌّ حَقٌّ இது ஹள்ரத்துல் அஸ்ரார் حَضْرَةُ الْاَسْرَارِ (இரகசியங்களின் சந்நிதானம்) என்று கூறப்படும்.

7) கஹ்ஹார் கஹ்ஹார் قَهَّارُ قَهَّارُ இது ஹள்ரத்துல் முஷாஹதா حَضْرَةُ الْمُشَاهَدَةِ (கண் கூடாகப்பார்த்து செய்யும் சந்நிதானம்) என்று கூறப்படும்.

8) அல்லாஹ் اَللّٰهُ இது ஹள்ரத்துஸ் ஸமாஃ حَضْرَةُ السَّمَاعِ (செவியேற்பதின் சந்நிதானம்) என்று கூறப்படும்.

அல்லாஹ்வை நினைத்து எந்த நிலையிலும் வாய்மூடி, சரீரம் ஒடுங்கி குர் ஆனில் ஏதாலது ஒரு ஆயத்தை ஓதுவதும் திக்ராயிருக்கும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

### ஏழின் சிறப்பு

ஏழாம் பதவியிலிருந்து கீழிறங்கி இவ்வுலகிற்கு வந்து, வந்த வழி மறந்து மதிமயங்கி நிற்கும் மனிதனே! உனக்கு உணர்ச்சி உண்டாவதற்காக உன்னுடைய காரியங்களில் பெரும்பாலானவற்றை அல்லாஹ் ஏழாக்கி வைத்துள்ளான். இவ்வாறே இவ்வையகத்திலும் பல விஷயங்களை ஏழாக்கி வைத்துள்ளான். அவற்றை கவனிக்கவும்:-

வானங்கள் ஏழு, அவற்றில் சுற்றிவரும் நட்சத்திரங்கள் ஏழு, பூமி ஏழு, அதன் மண்டலங்கள் ஏழு. கடல்கள் ஏழு. நாட்கள் ஏழு. பூதங்களும் அவற்றின் பிறப்புகளும் ஏழு. நஃப்ஸுகள் ஏழு. திக்ரு வகைகள் ஏழு. தொழுகையின் செயல்கள் ஏழு. சுஜூது செய்யும் உறுப்புகள் ஏழு. சூரத்துல் ஃபாத்திஹாவின் வசனங்கள் ஏழு. ஜகாத்து விதியான பொருள்கள் ஏழு. நோன்புடைய செயல்கள் ஏழு. ஜகாத்து வாங்க தகுதிபெற்றவர்கள் ஏழு. ஹஜ்ஜுடைய செயல்கள் ஏழு. தவாஃப் ஏழு. கல்லெறிதல் ஏழு. ஸயீ ஏழு. வழிபடும் உறுப்புகள் அல்லது பாவங்கள் நிகழும் உறுப்புகள் ஏழு. திருமணம் செய்ய ஹராமாக்கப்பட்டவர்கள் ஏழு. சொத்துரிமை பெறுபவர்கள் ஏழு. குர்ஆனின் மன்ஜில்கள் ஏழு நரகங்கள் ஏழு. இவ்வாறு இன்னும் பல பொருட்களை அல்லாஹ் தஆலா ஏழு ஏழாக ஆக்கி வைத்தது பெரிய உலகமாகிய உன்னுக்குள் வெளியில் காணப்படும் சிறிய உலகின் அம்சங்களெல்லாம் அடங்கியுள்ளன என்பதால்தான்.

சுற்றிவரும் நட்சத்திரங்கள்: சூரியன், சந்திரன், செவ்வாய், வியாழன், வெள்ளி, புதன், சனி,

زُحَلُ عَطَارِدُ زُهْرَةُ مُشْتَرِيُ مِرِّيْخُ قَمَرُ شَمْسُ

பூதங்களும் அவற்றின் பிறப்புகளும்: நெருப்பு, தண்ணீர், காற்று, மண், கற்கரடு, புற்பூண்டு, உயிருள்ளவைகள்.

| | |
|---|---|
| தொழுகையின் செயல்கள்: | நிலை, ருகூவு, சிறுநிலை, சுஜூது, சிறு இருப்பு, இரண்டாம் சுஜூது, கடைசி இருப்பு. |
| சுஜூது செய்யும் உறுப்புகள்: | இரு முன்கைகள், இரு முழங்கால்கள், இரண்டுபாதங்கள், நெற்றி. |
| வழிபடும் உறுப்புகள்: | கண்கள் , காதுகள், நாக்கு, வயிறு, கைகள், கால்கள், மர்மஸ்தானம், பாவங்கள் நிகழ்வதும் இவை ஏழின் மூலம்தான். |
| திருமணத்திற்கு ஹராமாக்கப் பட்டவர்கள்: | தாய், மகள், சகோதரி, தந்தையுடன் பிறந்த பெண்கள், தாயுடன் பிறந்த பெண்கள், சகோதரன் மகள், சகோதரி மகள். |
| வாரிசுரிமை பெறுபவர்கள்: | தாய், தந்தை, மகன், மகள், சகோதரி, கணவன், மனைவி. |

| | |
|---|---|
| ஜகாத்து விதியான பொருட்கள்: | தங்கம், வெள்ளி, ஆடு, மாடு, ஒட்டகம், கொடி முந்திரிப்பழம், ஈத்தம் பழம், தானியம் |
| ஜகாத்து வாங்கத் தகுதி பெற்றவர்கள்: | ஜகாத்துக்குத் தகுதி உள்ளவர்கள் எட்டுக் கூட்டத்தார் என்று சொல்லப்பட்டிருப்பதில் ஜகாத்துக் கொடுப்பவனே ஜகாத்தைப் பிரித்துக்கொடுப்பவனாக இருந்தால் ஜகாத்தை வசூலிப்பவர் என்ற நிலை இல்லாமல் போய் விடுகிறது. எனவே இந்த நிலையில் தகுதி உள்ளவர்கள் ஏழு கூட்டத்தாராகி விடுகிறார்கள். |
| நோன்புடைய செயல்கள்: | இஸ்லாம், அறிவு, மாதவிடாய் பிள்ளைப் பேறு தொடக்கை விட்டும் துப்புரவாகுதல், ஃபர்லான நோன்பின் நிய்யத்தை இரவில் வைக்கிறது, ஊண், நீரை விடுகிறது, சரீரத்திலும் துவாரத்திலும் ஏதொரு வஸ்துவை செலுத்தாமல் இருப்பது, பகலில் உடலுறவு கொள்ளாமல் இருப்பது. |

ஏழாக இருக்கும் இவை அசலானவையாகும். இவற்றின் உட்பிரிவுகள் பலவிருக்கின்றன. அவற்றை விரிவாகக் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம்.

மனிதனே! உனக்குள் உலகமும் உலகத்திற்குள் நீயும் சுருண்டு இருக்கும் விதத்தை நீ அறிந்து கொள்ளவேண்டும். அல்லாஹ் தஆலா உன் உடலை இந்த உலகத்துக்கு ஒப்பாக்கினான். அலி (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

وَدَآءُكَ مِنْكَ وَمَاتَشْعُرُ ؛ دَوَآءُكَ فِيْكَ وَمَاتَبْصُرُ
وَتَزْعُمُ اَنَّكَ جِرْمٌ صَغِيْرٌ ؛ وَفِيْكَ انْطَوَى الْعَالَمُ الْاَكْبَرُ

"உன்னுடைய நோய் உன்னிலிருந்து தான் உண்டாகிறது. நீ அதனை உணர்வதில்லை. உனக்குரிய மருந்தும் உன்னில் தான் இருக்கிறது. நீ அதனைப்பார்ப்பதில்லை. நீ ஒரு சிறிய உருவம் என நீ எண்ணிக்கொண்டிருக்கிறாய். ஆனால், உன்னுக்குள் மிகப்பெரிய உலகம் சுருண்டு கிடக்கிறது."

உலகிலுள்ள அனைத்துப்பொருட்களுக்கும் மனிதன் ஒப்பாக இருக்கிறான். வானத்தில் பன்னிரண்டு பாதைகள் இருக்கின்றன. அவ்வாறே மனிதனுக்கும் இரண்டு கண்கள், இரு காதுகள், மூக்கின் இரு துவாரங்கள், வாய், இரு மார்பின் இருதுவாரங்கள், தொப்புள், முன் பின் இரு துவாரங்கள் ஆகிய பன்னிரண்டு பாதைகள் இருக்கின்றன. வானத்தில் இருபத்தெட்டு கிரக தானங்களிருக்கின்றன. அவ்வாறே மனிதனின் உடலில் இருபத்தெட்டு சவ்வுகள் உள்ளன. வானத்தில் சூரியனுக்குக் கோடைகாலத்தில் நூற்று அறுபது வழிகளும், மாரிகாலத்தில் நூற்று அறுபது வழிகளும் உள்ளன. அவ்வாறே மனிதனுக்கு வலப்பக்கத்தில் நூற்று அறுபது நரம்புகளும், இடப் பக்கத்தில் நூற்று அறுபது நரம்புகளும் இருக்கின்றன. வானத்தில் ஓடுகின்ற நட்சத்திரங்கள் ஏழுண்டு. அவ்வாறே மனிதனுக்கு தலை, இரண்டு கைகள், இரண்டு கால்கள், வயிறு, முதுகு ஆகிய ஏழு பிரதான உறுப்புகளுண்டு. இவ்வாறு வானத்திற்குப் பல் வேறு வகைகளில் மனிதன் ஒப்பாக இருக்கிறான்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

இவ்வாறே மனிதன் பூமிக்கும் ஒப்பாயிருக்கிறான். பூமியில் மலைகள் இருப்பதுபோல, உடலில் பெரும் எலும்புகள் அமைந்துள்ளன. பூமியில் மரங்கள் இருப்பது போல், உடலிலுள்ள முடிகள் இருக்கின்றன. பூமியில் ஏழு கண்டங்கள் இருப்பது போல உடலில் முக்கியமான ஏழு உறுப்புகள் அமைந்திருக்கின்றன. பூமியில் நடுக்கம் ஏற்படும். அவ்வாறே உடலில் தும்மலும், திடுக்கமும் உண்டு. பூமியில் சிறு சிறு புற்பூண்டுகள் முளைக்கின்றன. உடலில் மெல்லிய முடிகள் இருக்கின்றன. பூமியில் ஆறுகள், அருவிகள் ஓடுவது போல், உடலில் இரத்தமும், வியர்வையும் ஓடுகின்றன. பூமியிலுள்ள ஊற்றுக்களில் சில இனிமையாகவும், சில கசப்பாகவும், சில துவர்ப்பாகவும், சில உவர்ப்பாகவும் இருப்பது போல், மனிதனின் வாயிலுள்ள நீர் (இன்பங்களை அனுபவிக்க) மதுரமானதாகவும், கண்ணிலுள்ள நீர் (அதனைப் பாதுகாக்க) உப்பாகவும், மூக்கிலுள்ள நீர் (வாசனைகளை, கிரகிப்பதற்காக) துவர்ப்பாகவும் காதிலுள்ள நீர் (புழுப்பூச்சிகள் செல்லாமலிருப்பதற்காக) கசப்பாகவும் உண்டாக்கப்பட்டுள்ளன.

இன்னும் மனிதன் காலங்களுக்கு ஒப்பாகவும் இருக்கிறான். ஆண்டுக்குப் பன்னிரண்டு மாதங்கள் இருப்பதுபோல், முன்னால் கூறப்பட்டபடி மனிதனுக்குப் பன்னிரண்டு துவாரங்கள் இருக்கின்றன. ஓர் ஆண்டில் கோடைகாலம், மழைகாலம், இலையுதிர்காலம், வசந்தகாலம் என நான்கு காலங்களிருப்பது போல் மனிதனின் நான்கு விதமான நாடி நரம்புகள் உள்ளன.

இன்னும் நகரங்களுக்கு மனிதன் ஒப்பாக இருக்கிறான். நகரத்தில் அரசனும், அமைச்சரும், அதிகாரிகளும், குடிமக்களும், கொல்லன், தச்சன், வண்ணான், வாணியன், செம்படவன், மற்றும் பல தொழிலாளர்களும் இருப்பதுபோல் உடலிலும் இருக்கின்றன. உடல் ஒரு நகரம். அதில் ரூஹானது அரசனாகும். அறிவானது அமைச்சராகும். கோபமாகிறது அதிகாரியாகும். யோசனையும், சிந்தனைகளும் தூதர்களாகும். வெளி உறுப்புகளெல்லாம் குடிமக்களாகும். மற்றுமுள்ள உள்ளுறுப்புகளும், நஃப்ஸு, சக்தி ஆகியவையெல்லாம் தொழிலாளிகளைப் போன்றவை யாகும்.

### இறைவனின் பக்கம் நெருங்கிச் செல்லுதல்

மஃரிஃபா என்னும் ஞானத்தில் மிக நெருக்கமானது தன்னை அறிவதாயிருக்கும். தான் என்பது தன்னுடைய சிஃபத்துகளாயிருக்கும். இதற்கு ஆதாரம் பின்வருமாறு:- அல்லாஹ் ஆதம் (அலை) அவர்களைத் தன் வடிவத்தில் படைத்தான். அல்லது ரஹ்மானுடைய வடிவத்தில் படைத்தான் என்று ஹதீஸில் கூறப்பட்டு உள்ளது. தன்னுடைய வடிவம் என்றால், தன் சிஃபத்தில் படைத்தான் என்பது பொருளாகும். எனவே, மனிதன் தன்னுடைய சிஃபத்துகளை அறியும்போது, தன்னுடைய ரப்பை அறிந்தவனாக ஆகிவிடுவான். அதாவது: தன்னுடைய அரூபியான, இன்னும் ரூபமுள்ள சிஃபத்துகளை இல்லாமலாக்கி, தன் ரப்புடைய சிஃபத்துகளைத் தரிபடுத்தினால், அங்கு தன் சிஃபத்துக்குரிய ரப்பை அறிந்து கொள்வான் என்பதாகும். இதற்கு

قُرْبُ النَّوَافِلِ நஃபிலான நெருக்கம் - சுன்னத்தான வணக்கம் என்றும் கூறப்படும். இது பற்றி ஹதீஸ் குத்ஸியில் " என்னுடைய அடியான் என்னிடத்தில் நஃபிலான

வணக்கங்களைக் கொண்டு நான் அவனை நேசிக்கும்வரை நெருங்கிக்கொண்டேயிருப்பான். நான் அவனை நேசித்தால் அவன் பார்க்கும் பார்வையாக, அவன் கேட்கும் செவியாக, அவன் பிடிக்கும் கையாக, அவன் நடக்கும் காலாக ஆகிவிடுவேன்" என்று அருளப்பட்டுள்ளது.

பிறகு தன் உள்ளமையை இல்லாமலாக்கி அல்லாஹு தஆலாவுடைய உள்ளமையைக் காணுவானாகில் அதற்கு قُرْبُ الْفَرَائِضِ ஃபர்ளான நெருக்கம் என்று கூறப்படும். இவ்வாறு சிஃபத்துகளை இல்லாமலாக்குவதற்கு முன், நற்செயல்களனைத்தையும் நாயனளவில் சேர்த்து அதில் தன்னைக் காணாமலும், தீய செயல்கள் அனைத்தையும் தன்னளவில் சேர்த்து அதில் ரப்பைக் காணாமலும் இருக்கவேண்டும். "எந்த ஒரு நன்மை உனக்கு ஏற்பட்டாலும் அது அல்லாஹ்வில் நின்றுமுள்ளதாகும்; எந்த ஒரு தீமை ஏற்பட்டாலும் அது உன் புறத்தில் நின்று முள்ளதாகும்" என்று அல்லாஹ் குர்ஆனில் கூறியுள்ளான் (4:79) மற்றோர் இடத்தில், "அனைத்தும் அல்லாஹ்வின் புறத்திலிருந்து உள்ளவை என்று கூறுவீராக! "(4:78) என்று அருளியுள்ளான். மற்றொரு வசனத்தில், "நீர் எறிந்த நேரத்தில் நீர் எறியவில்லை; எனினும், அல்லாஹ் தான் எறிந்தான்" (8:17) என்றும் கூறியுள்ளான். இந்த மூன்று ஆயத்துகளையும் நன்கு சிந்தித்தால் மேற் கூறிய கருத்து விளங்கும்.

நபி மூஸா(அலை) அவர்கள் கிப்தீ மனிதன் ஒருவனை அடித்தவுடன் அவன் இறந்து விட்டான். அப்பொழுது மூஸா (அலை) அவர்கள் தான் செய்த அச்செயலை, "இது ஷைத்தானுடைய செயலில் உள்ளது" (28:15) هٰذَا مِنْ عَمَلِ الشَّيْطَانِ என்று கூறினார்கள். எனவே (ஃபனாவென்றும்) தான் என்னும் எண்ணத்தை, அழிப்பது, செயலிலும், சிஃபத்திலும், உஜூதிலும் உண்டாக வேண்டும். இவ்விதம் ஃபனாவானவர்களின் வாயிலும், கையிலும், சரீரத்திலும் அல்லாஹ்வின் கட்டளையல்லாது வேறொன்றும் நடைபெறாது. தங்களுக்கென எச்செயலும் இல்லாததாகக் கருதுவதால் தங்களை மௌத்தானவர்களாகவே காண்பார்கள். ஸய்யிதுனா அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களுடைய விஷயத்தில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்:

مَنْ اَرَادَ اَنْ يَّنْظُرَ اِلٰى مَيِّتٍ يَّمْشِيْ عَلٰى وَجْهِ الْاَرْضِ
فَلْيَنْظُرْ اِلٰى اَبِيْ بَكْرٍ۔

"பூமியின் மீது நடமாடும் மய்யித்தைப் பார்க்கவேண்டுமென விரும்புகிறவர் அபூபக்கரைப்பார்த்துக்கொள்ளவும்." தங்களுக்கென எந்த விருப்பமும் இல்லாது எல்லாவற்றையும் அல்லாஹ்வின் பக்கம் ஒப்படைத்து வாழ்வதைக் குறித்தே இவ்வாறு கூறினார்கள்.

இத்தகையோரைக் கொண்டு அல்லாஹு தஆலா இறந்தவரை உயிர்ப்பிப்பதும், அவர்களைத் தண்ணீரின் மீது நடக்கச்செய்வதும், ஆகாயத்தில் பறக்கச்செய்வதும்,

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஹானீ'

நெருப்பு சுடாதிருக்கச் செய்வதும், புதுமையான விஷயங்களல்ல. இவர்கள் தங்களுக்கென எவ்வித நினைவும் இல்லாத நிலையில் செயலாற்றினாலும் வெளிப்படையான ஃபர்லு, வாஜிபு, சுன்னத்து ஆகிய எதிலும் எவ்விதப் பிசகுதலும் ஏற்படாது. ஏனெனில் அல்லாஹுதஆலா தான் விதித்த கட்டளைகளை தானே அவர்களைக் கொண்டு நடத்தாட்டுகிறான் என்பதினாலாகும்.

ஸய்யிதுனா அலீ (ரலி) அவர்களுடைய காலில் அம்பு தைத்தபோது அதனைப்பிடுங்கி எடுப்பதில் வேதனை ஏற்பட்டதால், அன்னார் தொழும்போது அதனை எடுத்து விடுமாறு கூறினார்கள். அவ்வாறே அவர்கள் தொழும்போது அதனை எடுத்தனர். தொழுது முடித்த பின், "அம்பை எடுத்துவிட்டீர்களா?" என்று அவர்கள் கேட்ட நிகழ்ச்சியும், இமாம் ஜைனுல் ஆபிதீன் (ரலி) அவர்கள் தொழுதுகொண்டிருந்தபோது அவ்வீடு நெருப்புப்பிடித்து எரிந்து, ஆனால், அவர்கள் தொழுத இடம் மட்டும் நெருப்புப் பிடிக்காமல் இருந்து, தொழுது முடித்த பின்னரே அவர்கள் தெரிந்துகொண்ட இந்த நிகழ்ச்சியும். இமாம் அபூஹனீஃபா (ரஹ்) அவர்கள் கூஃபா நகரத்தின் பாழடைந்த பள்ளி ஒன்றில் தொழுது கொண்டிருந்தபோது, மேற்கூரையிலிருந்து ஒரு மலைப்பாம்பு அவர்களின் மேல் விழுந்து கழுத்தில் சுற்றிக் கொண்டதையும் அவர்கள் அறியாமல், தொழுது முடித்த பிறகே அதனைத் தெரிந்துகொண்ட நிகழ்ச்சியும், இன்னும் ஆரிஃபீன்களில் பெரும்பாலானவர்களுக்கு நடைபெற்ற இவை போன்ற நிகழ்ச்சிகளும், அவர்கள் ஹக்கைத் தவிர வேறு எதனையும், காணவில்லையென்பதினாலும், அல்லாஹுதஆலா, அவர்களைக் கொண்டு தானே காரியங்களை நடத்தி வைக்கிறான் என்பதினாலும் உண்டானவையாகும்.

### மஃரிஃபா வகைகளில் குறைந்தது

மஃரிஃபா என்னும் ஞானத்தில் மிகக்குறைந்தது படைப்பினங்களைச் சிந்தனை செய்வதாகும். வானங்கள், பூமி, அவ்விரண்டிலுமுள்ள பொருட்கள் அனைத்தையும் சிந்தனை செய்பவர்கள் தான் புத்திசாலிகள் என்பதாக அல்லாஹ் குர்ஆனில் கூறியுள்ளான். "சற்று நேரம் சிந்தனை செய்வது ஆயிரம் ஆண்டுகள் வணக்கம் புரிவதை விடச் சிறந்தது!" என்பதாக ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அருளியுள்ளார்கள். "உன்னையே நீ சிந்தித்துப் பார்ப்பது உனக்குப் போதுமானதாகும்." என்று அலீ (ரலி) அவர்கள் அருளியுள்ளார்கள்.

சிந்தனை செய்வதில் மூன்று வகைகளுண்டு. முதலாவது: முஸ்லிமான சகோதரர்களுக்கு உதவி செய்வதில் சிந்தனைசெய்வது. இது ஓராண்டு வணக்கம் செய்வதை விட மிகச்சிறந்தாகும். இரண்டாவது: தன்னுடைய குற்றங்குறைகளைப் பற்றி சிந்தனை செய்வது. இது எழுபது ஆண்டுகள் வணக்கங்கள் செய்வதைவிட மிகச் சிறந்ததாகும். மூன்றாவது: அல்லாஹுதஆலாவை தரிசிப்பதற்குரிய ஞானத்தைப் பெறுவதில் சிந்தனை செய்வது. இது மனிதர்கள், ஜின்கள் ஆகியோர் அனைவரும் செய்கின்ற வணக்கங்கள் அனைத்தைவிடவும் மிகச் சிறந்ததாகும்.

இமாம் கஸ்ஸாலீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

நபி ஈஸா (அலை) அவர்களிடம் அவர்களுடைய சீடர்கள், "மர்யமுடைய குமாரரே, இக்காலத்தில் தங்களைப் போன்று வேறு எவரேனும் இருக்கிறார்களா?" என்று கேட்டபோது, "யார் தன்னுடைய பேச்சை திக்ராகவும், தன்னுடைய மௌனத்தைச் சிந்தனையாகவும், தன்னுடைய பார்வையை உறுதிப்பாடானதாகவும் ஆக்கிக்கொள்கிறாரோ அவர் என்னைப் போன்றவராவார்" என்று பதில் கூறினார்கள்.

லுக்மானுல் ஹகீம் அவர்கள் பெரும்பாலும் தனிமையில் இருப்பார்கள். "நீங்கள் மக்களுடன் சேர்ந்திருந்தால் அவர்களுடன் நேசம் ஏற்படுமே!" என்று சிலர் அன்னாரிடம் கேட்டபோது "தனித்திருப்பது சிந்தனையைத் தூண்டும். சிந்தனை செய்தல் சொர்க்கத்திற்கு வழிகாட்டும்" என்று கூறினார்கள்.

அல்லாஹ்வுடைய நிஃமத்துகளைப் பற்றிச் சிந்தனை செய்தல் வணக்கத்திற் சேர்ந்ததாகும் என உமர் இப்னு அப்துல் அஜீஸ் (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

ஸுஃப்யானுப்னு உயைனா سُفْيَانُ بْنُ عُيَيْنَةَ அவர்கள் பெரும் பாலும் பின்வரும் பாடலைக் கூறிக் கொண்டிருப்பார்கள்.

إِذَا الْمَرْءُ كَانَتْ لَهُ فِكْرَةٌ ۚ فَفِي كُلِّ شَيْئٍ لَهُ عِبْرَةٌ

"ஒரு மனிதனுக்கு சிந்தனை செய்வதென்பது இருந்தால் (உலகின்) ஒவ்வொரு பொருளிலும் அவனுக்குப் படிப்பினை இருக்கிறது"

எனவே தான் تَفَكَّرُوْا فِيْ آلَاءِ اللهِ وَلَا تَفَكَّرُوْا فِيْ ذَاتِهٖ "அல்லாஹ்வுடைய அருட்கொடைகளைப் பற்றி சிந்தனை செய்யுங்கள், அவனுடைய உள்ளமையைப் பற்றி நீங்கள் சிந்தனை செய்ய வேண்டாம்" என்று கூறப்பட்டுள்ளது. அது குஃப்ரை உண்டாக்கிவிடும்.

அபூ சுலைமான் தாரானீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: உலகத்தைச் சம்பாதிப்பதில் சிந்தனை செய்வது மறுமைக்குத் தயார் செய்வதை விட்டும் மனிதனைத் தடை செய்துவிடும். ஆனால் மறுமைக்கு உதவியாயிருக்கும் விஷயங்களில் சிந்திப்பது செழிப்பான வாழ்வை உண்டாக்கி, இதயத்தை உயிர்ப்பிக்கும். இதற்கு ஓர் உதாரணம் எவ்வாறென்றால்:-

ஒரு மனிதன் சிறு வயது முதல் அல்லாஹ்வைப் பற்றிய எந்தச் சிந்தனையுமில்லாமல், நாம் அவனுக்கு அடிமை, அவனுக்கு வணக்கம் புரிய வேண்டும் என்ற எண்ணம் ஏதுமில்லாமல் காலத்தைக் கழித்து வருகிறான். ஒரு நாள் தனிமையில் பல்வேறு சிந்தனைகள் உடையவனாய் ஒரு கானகத்தின் வழியே செல்கிறான். அக்கானகத்தில் எந்த இடத்திலும் ஒரு சொட்டுத் தண்ணீர் கூட கிடையாது. அவ்வாறு அவன் போகும்போது ஒரு கரையான் புற்றைக் காணுகிறான். அவன் அக் கரையான் புற்றைத் தன் கையினால் தோண்டிப் பார்க்கும் போது அதன்கீழ் ஈரமும் குளிர்ச்சியும்

நிறைந்து அக்கரையான்களெல்லாம் செழிப்பாக இருந்து வருவதைக் கண்டு சிந்தனை செய்து இந்த ஜீவன்களுக்குத் தண்ணீர் இல்லாத இக்கானகத்தில் உணவளிக்கிற நாயன் நமக்கும் உணவளிப்பான் என்ற நம்பிக்கை கொண்டு, உணவைத்தேடுவதிலுள்ள உலக கவனத்தை நீக்கி, உணவளிக்கும் அல்லாஹ்வின் கவனத்தை மனதிற் கொண்டு, வணக்கம் புரிய ஆரம்பித்து, முந்திய பாவங்களுக்கெல்லாம் தவ்பாச் செய்து மீண்டுவிடுகிறான். இம்மனிதனுடைய சிந்தனையில் முன்னால் கூறப்பட்ட மூன்று வகைச்சிந்தனைகளும் வந்து விடுகின்றன! முதல் வகைச் சிந்தனையாகிய முஸ்லிம்களுக்கு உபகாரம் செய்வதில் சிந்திப்பதென்பது, இம்மனிதன் தன்னைப் பற்றிச் சிந்திப்பதில் அடங்கிவிடுகிறது. ஏனெனில், ஒரு மனிதன் தனக்கு மறுமையில் நன்மை பயக்கும்படியான காரியங்களைச் சிந்திப்பதுதான் எல்லா உபகாரங்களிலும் பேருபகாரமாகும்.

## ஏகத்துவத்தை நிலைநிறுத்துவதற்குரிய சான்றுகள்

அல்லாஹ்தஆலா ஒருவன் என்பதின் மீது அறிவிக்கின்ற அத்தாட்சிகள் இவ்வையகத்தில் ஏராளமாக இருக்கின்றன. எப்பொருளும் அவனைப் பற்றி அறிவிக்காமல் இல்லை. பெரியார் ஒருவர் தவ்ஹீது சம்பந்தமாக ஆயிரம் அத்தாட்சிகளைக் கொண்டு ஒரு நூலை எழுதியிருந்தார்.

அதனைப் பார்த்த மூதாட்டி ஒருவர், "இந்தப் பெரியாருக்கு அறிவு மழுங்கிப் போய்விட்டதா?" என்று கூறி பின் வரும் பாடலைக் கூறினாள்:

سَمَاءٌ وَّاَرْضٌ وَّثَمَّ الْجِبَالُ ؛ كَذَاكَ الْبِحَارُ لَهُ شَاهِدٌ
وَفِيْ كُلِّ شَيْئٍ لَّهُ اٰيَـةٌ ؛ تَدُلُّ عَلٰى اَنَّهُ وَاحِدٌ

"வானமும் பூமியும், மலைகளும், கடல்களும் அவனுக்கு சாட்சி கூறிக் கொண்டிருக்கின்றன. அவன் ஒருவன் தான் என்பதின் மீது அறிவிக்கின்ற அத்தாட்சி ஒவ்வொரு பொருளிலும் இருக்கிறது".

எனவே, அல்லாஹ்வை அறிவதற்கு இவ்வுலகிலுள்ள பொருட்கள் போதுமானவை. தனிப்பட்ட ஆதாரங்கள், அத்தாட்சிகள் எதுவும் தேவையில்லை. மனிதன் தன்னைப் பற்றிச் சிந்தித்தால் அதுவே அவனுக்குப் போதுமானதாகும். உறியில் தயிர் இருக்க ஊரெல்லாம் வெண்ணெய் தேடி அலைந்த கதையாய் இருக்கலாகாது.

ஆகையால், மனிதன் தன்னைத்தானே சிந்திக்கும் பொழுது இறந்த பின் நிலைத்திருக்கும் வழியைக் கண்டு கொள்வான். சிந்தனை செய்யுமிடம் இதயமாக இருப்பதால் தான் அதனைப் பற்றி,

قَلْبُ الْمُؤْمِنِ عَرْشُ اللهِ "முஃமினுடைய இதயம் அல்லாஹ்வின் சிம்மாசனம்" என்று கூறப்பட்டுள்ளது. அந்த இதயத்தின் மூலம் 'ஆலம்' என்ற இப்பிரபஞ்சத்தைச் சிந்திக்கும் பொழுது அது அதனைப் படைத்தவனின் மீது தெளிவாக அறிவிப்பதைக் கண்டு கொள்ளலாம்.

ஷைகுல் அக்பர் முஹ்யித்தீன் இப்னுல் அரபி (ரஹ்) அவர்களிடம் கிராமவாசி ஒருவர் வந்து, "அல்லாஹ் எங்கிருக்கிறான்?" என்று கேட்டபோது:

اَتَطْلُبُ الْاَيْنَ مَعَ الْعَيْنِ ——————"கண்ணால் கண்டு கொண்டே எங்கே என்று தேடுகிறாயா?" என்று அவருக்கு பதிலளித்தார்கள். இதனை விளங்கிக் கொண்ட அந்த கிராமவாசி பின்னால் பெரும் ஆரிஃபாகிவிட்டார்.

اَلْبَعْرُ يَدُلُّ عَلَى الْبَعِيْرِ . وَالرَّوْثُ عَلَى الْحَمِيْرِ

ஒட்டகப்புழுக்கை ஒட்டகத்தின் மீது அறிவிப்பது போலும் கழுதை விட்டை கழுதையின் மீது அறிவிப்பது போலும் இந்த ஆலம் - பிரபஞ்சம் - அதனைப் படைத்தவன் உண்டென்பதின் மீது அறிவித்துக் கொண்டிருக்கிறது.

### அல்லாஹ்வை அறிகிறவர்கள் ஏன் குறைவாக இருக்க வேண்டுமென்ற கேள்வியும், பதிலும்

"அல்லாஹ்வை அறிந்து கொள்வதற்குரிய வழி மிக எளிதாக இருந்தும் இலட்சத்தில் ஒருவர் தானே அல்லாஹ்வை நன்கு அறிந்தவராக - ஆரிஃபாக - ஆகின்றார்?" என்று கேட்கப்பட்டால், மனிதனுடைய அறிவு கூர்மையானதாகவும் அல்லாஹுதஆலா பொருட்களில் வெளிப்படுவது கடுமையாகவும் இருக்கின்ற காரணத்தினாலாகும். இதற்கு உதாரணம் : வௌவாலாகிறது, மிகவும் கூர்மையான பார்வையுடையதாகும். அதனால் தான் அதற்குக் கடும் இருளிலும் பார்க்கமுடிகிறது. ஆனால், சூரிய ஒளியில் அதனால் பார்க்க முடிவதில்லை. கூர்மையான பார்வையினால் சூரிய ஒளியைக் காண முடியாதது போல் கூர்மையான அறிவுள்ள மனிதனால் கடுமையாய் வெளிப்படும் அல்லாஹ்வின் ஆற்றலைக் கண்டு கொள்ள முடிவதில்லை. பெரியார் ஒருவர் பாடுகிறார்:

اَنّٰى يَغِيْبُ وَلَيْسَ يُوْجَدُ غَيْرُهٗ ؛
لٰكِنْ اَشَدُّ ظُهُوْرِهٖ اَخْفَاهُ

"அவனல்லாதது (எங்கும்) பெற்றுக் கொள்ளப்படாத நிலையில் அவன் எங்கே மறைந்திடுவான்? எனினும், அவன் கடுமையாக வெளியாகி இருப்பது அவனை மறைத்துவிட்டது," என்று பாடியுள்ளார். மனிதன் உலகப்பண்பாடுகளின் அழுக்குகளில் தோய்ந்து அதிலேயே தன்னுடைய பார்வையைக் கூர்மையாக்கி, அல்லாஹ்வின் பால் சேர வேண்டும் என்ற எண்ணம் அறவே இல்லாமல், அகக்கண் குருடாகிவிட்ட காரணத்தால், அல்லாஹு தஆலா வெளியாகி இருப்பது மனிதனுக்கு மறைவாகிவிட்டது. அந்த மறைவை வெளிப்படுத்துவதற்காக தன்னுடைய ளாஹிரான வெளித் தோற்றமுடைய திருநாமத்தைக் கூறியுள்ளான்.

அதனையும் அதனைச் சேர்ந்த மற்ற திருநாமங்களையும் நாம் சிந்தித்து அவற்றின் கருத்துக்களை விளங்கினால் மறைவு தெளிவாகும். அந்தத் திருநாமங்களுக்கு 'உம்மஹாத்துல் அஸ்மா' (திரு நாமங்களின் தாய்மார்கள்) என்று கூறப்படும். எனவே :

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

هُوَالْاَوَّلُ وَالْاٰخِرُ وَالظَّاهِرُ وَالْبَاطِنُ

"அவன் துவக்கமின்றி முந்தியவன்; முடிவின்றி கடைசியானவன்; ஏகமாய் வெளியானவன்; எல்லாப் பொருள்களிலும் மறைந்திருப்பவன்" என்பது இவற்றின் பொருளாகும்.

எனவே, சிந்தனையை வாகனமாக்கி, உனக்கு ஏற்படும் பலவகை இடையூறுகளைக் கடந்து அசல் நோக்கமாகிய எஜமானின் சந்நிதானத்தை அடைந்திட வேண்டும்.

### உடலை அறியும் ஞானம்

அடுத்து உடலை அறியும் ஞானம் என்பது சிந்தனையின் வகையைச் சேர்ந்ததாகும். ஆலமுல் அஃப்லாக்கிலிருந்து ஆலமுஷ் ஷஹாதா என்னும் இவ்வுலகிற்கு வந்த விதத்தை ஸீன், நூன், நூன், ஹே, மீம், தே என்று சொல்லப்படும். அதாவது ஸீன் என்பது ஸிர்ரு (இரகசியம்), நூன் என்பது நூர் (ஒளி), நூன் என்பது நார் (நெருப்பு), ஹே என்பது ஹவாஃ (காற்று), மீம் என்பது மாஉ (தண்ணீர்), தே என்பது துராப் (மண்) என்பதாகும். அதாவது : அல்லாஹ்வின் இரகசியத்தினால் ஒளியுண்டாகி, ஒளியினால் நெருப்பு உண்டாகி, நெருப்பினால் காற்றுண்டாகி, காற்றினால் தண்ணீர் உண்டாகி, தண்ணீரினால் மண்ணுண்டாகி மண்ணினால் மனிதனை அல்லாஹ் படைத்தான். பிறகு அந்த (ஆதுமாகிய) மனிதரிலிருந்தே அவருக்கொரு ஜோடியைப் படைத்து, அவ்விருவரிலிருந்தும் ஏராளமான ஆண்களையும் பெண்களையும் (வெளிப்படுத்தி) பரவச் செய்தான். இதனை குர்ஆனில் ஒரே ஆத்மாவிலிருந்து உங்களைப்படைத்தோம் என்பதாகவும் மண்ணிலிருந்து படைத்தோம், விந்திலிருந்து படைத்தோம், களிமண்ணினால் படைத்தோம், தட்டுவதால் ஓசை யுண்டாகும் காய்ந்த களி மண்ணினால் படைத்தோம் என்பதாகவும் பல்வேறு இடங்களில் அருளியுள்ளான்.

அதாவது : முதல் மனிதரை களி மண்ணின் சத்திலிருந்து படைத்து, பிறகு அந்த மண்ணிலிருந்து விளையும் காய்கள், தானியங்கள், கறிகள், ஆகியவற்றைப் புசித்ததினால் இரத்தம் ஊறச்செய்து, அதன் தெளிவினால் கணவன், மனைவி இருவருக்கும் விந்தை உண்டாக்கி பின் அது ஒன்றாகக் கலந்து சென்று கர்ப்பப்பையை அடையச்செய்து பின் இரத்தக்கட்டியாக ஆக்கி, சதைக்கட்டியாக ஆக்கி, பிறகு அதை எலும்பாக ஆக்கி, அந்த எலும்புக்கு மாமிசத்தை அணிவித்து பின்னர் அழகிய வடிவமாக்கி உயிரைக் கொடுத்து அதனை வெளிப்படுத்துகிறான்.

மனிதனுடைய அசலாகிய - முன்னால் கூறப்பட்ட அந்த ஆறு எழுத்துக்களின் அமைப்பை அவனுடைய உடலுக்குள் வைத்தான். ஸிர்ரு என்ற ரூஹை - உயிரை - உடல் முழுவதிலும், அமைத்து, ஒளிவை ஏகமாயும், அதன் இருப்பிடம் தாமரைக் காயாகவும் (இருதயமாகவும்), அதன் வாசல் மூளையாகவும், அதன் சுவை இனிமையானதாகவும், அதன் நிறம் கண்ணின் ஒளியாகவும் ஆக்கி வைத்தான். இதனை ஆகாயம் என்றும் கூறுவார்கள். நெருப்பின் இருப்பிடம் பித்தாகவும், அதன் சுவை கசப்பாகவும் நிறம் கருப்பாகவும், வாசல் செவியாகவும் ஆக்கிவைத்தான். காற்றின்

இருப்பிடம் நுரையீரலாகவும், அதன் வாசல் மூக்காகவும் அதன் சுவை புளிப்பாகவும், நிறம் பச்சையாகவும் ஆக்கினான். தண்ணீரின் இருப்பிடம் கல்லீரலாகவும், அதன் சுவை உவர்ப்பாகவும், நிறம் சிகப்பாகவும், வாசல் கண்ணாகவும், ஆக்கினான். மண்ணின் இருப்பிடம் பல்குத்தியாகவும் (மண்ணீரலாகவும்) அதன் சுவை துவர்ப்பாகவும், நிறம் வெள்ளையாகவும், வாசல் வாயாகவும் ஆக்கினான்.

பிறகு நெருப்பினால் பித்தத்தையும், காற்றினால் வாதத்தையும், தண்ணீரினால் சிலேற்பனத்தையும் மண்ணினால் ஐயத்தையும் பொதியவைத்து, அழகிய செவ்வையான வடிவமாய், ஏழு சிஃபத்துகளையும் (சிறப்புத் தன்மைகளையும்) ஐயறிவையும், ஐம்புலனையும், 96 தத்துவங்களையும் கொண்டவனாய் மனிதனைப் படைத்தான். இன்னும், தந்தையின் மூலம் எலும்பும் நரம்பும் சவ்வும் முடிகளும் பெற்று, தாயின் மூலம் சதையும் கொழுப்பும் இரத்தமும் தோலும் பெற்று, பிறக்கும் போதே சிலவற்றைப் பெற்றோரிடமிருந்து அனந்தரமாகப் பெற்று......; தாடி, பல், விந்து, மாதவிடாய் போன்றவற்றைச் சில காலம் கழித்துப் பெற்று ... அல்லாஹ்வின் நாட்டப்படி இவ்வுலகில் மனிதன் வாழ்கிறான்.

## ஆகாரத்தின் ஏழு தத்துவங்கள்

மேலும் ரஜ்ஜாக் - உணவளிப்பவனாகிய அல்லாஹ்வின் உணவை வாயில் வைத்தவுடன்

அதனை உள்ளே இழுத்துக் கொள்வதற்கு جَالِبَة என்னும் இழுக்கும் சக்தியையும்,

அதனைப் பிடிப்பதற்கு مُمْسِكَة என்ற தடுத்து நிறுத்துகின்ற சக்தியையும்,

சத்தை வேறாகவும் சக்கையை வேறாகவும் பிரித்தெடுக்க مُمَيِّزَة என்ற பிரிக்கும் சக்தியையும்

உணவினால் ஏற்படுகின்ற பல்வேறு சத்துக்களை அதனதன் இடங்களில் வாங்கிக் கொள்ள جَاذِبَة என்னும் வாங்குகின்ற சக்தியையும்,

கழிவுப் பொருட்களை வெளிப்படுத்துவதற்குரிய دَافِعَة என்ற சக்தியையும்,

உணவைச் செறிக்க வைப்பதற்குரிய هَاضِمَة என்னும் செறிக்கும் சக்தியையும்,

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

சாப்பிட்ட உணவின் மூலம் உடல் வளர்வதற்குரிய مُنَمِّيَة என்ற வளர்க்கும்

சக்தியையும் ,

உடலில் சில உருவங்களை உண்டாக்குவதற்குரிய مُصَوِّرَة என்னும் உருவகப் படுத்தும்

சக்தியையும் இம்மனிதனுக்கு அல்லாஹுதஆலா அமைத்துப் பிறக்கச் செய்து, பிறந்த பின் மழலையாய், பிறகு பாலகனாய், பிறகு விவரமறிந்தவனாய், பிறகு வரை கீறா வாலிபனாய், பிறகு பருவமடைந்த வாலிபனாய், பிறகு புத்தி நிரம்பிய நடுத்தர வயதினனாய், பிறகு வயோதிகனாய், பிறகு தள்ளாத கிழவனாய் பல்வேறு நிலைகளையுடையவனாக ஆக்கி, நடப்பதற்குக் காலும் பிடிப்பதற்கு கையும், பேசுவதற்கு நாவும், கேட்பதற்குச் செவியும், பார்ப்பதற்குக் கண்ணும், முகர்வதற்கு மூக்கும் தந்து, பசிக்கு உணவும், தாகத்திற்குத் தண்ணீரும், நோய்க்கு மருந்தும், உடுத்த ஆடையும், படுப்பதற்குப் பாயும், பயணத்திற்கு வாகனமும், இருப்பதற்கு இடமும், தேவைக்குத் தகுந்தவாறு வழங்கி அவ்வாறு வழங்குவது அவன் மீது கடமையாக இல்லாதிருக்க அவன் தனது பேரருளால் அவற்றையெல்லாம் வழங்கி இரட்சித்துக் காப்பாற்றுகிறான். அந்த அல்லாஹுதஆலாவின் பேரருளை நன்குணர்ந்து நன்றி மறவாமல் அவனை வணங்கி வழிபடுதல் கட்டாயக்கடமையாகும். அவனுடைய அமானிதத்திற்கு மோசம் செய்யாமல், அகப்பார்வை இழந்து விடாமல், முகஸ்துதி, பெருமை, அகம்பாவம், தற்பெருமை, பதவியாசை, பொருளாசை, உலகாசை, பொறாமை, வஞ்சகம், பொய், புறம், நயவஞ்சகம் போன்ற தீமைகள் அனைத்தையும் விட்டு நீங்கி மறுமையையும், மரணத்தையும் மனதிற்கொண்டு வாழ்வதும், இவ்வாறே நாவினாலுண்டாகும் பத்தொன்பது வகையான பாவங்களை விட்டு நீங்குதலும் அவசியமாகும். அவையாவன: வீண் பேச்சு பேசுதல், அதிகமாகப் பேசிக் கொண்டே இருத்தல், வீண்தர்க்கம், வீண் வழக்கு, அளவு கடந்து சமர்த்தாய்ப் பேசுதல், திட்டுதல், முனியக் கூடாதவரை முனிதல், பிறர் வம்சத்தைக் குறை கூறுதல், வீண்பாடல்களை ராகமாகப் பாடுதல், பொய் சாட்சி சொல்லுதல், கோள் சொல்லுதல், பொய் சத்தியம் செய்தல், பொய் வாக்குக் கொடுத்தல், குறி சொல்லுதல், முன்னுக்குப்பின் முரணாக இருவிதமாகப் பேசுதல், தகுதியில்லாதவற்றைத் துதித்தல், பழக்கத்தில் குற்றம் வருவதைக் கவனியாமல் பேசுதல், அல்லாஹ்வின் தன்மைகளை விளங்கிக் கொள்ளாத மடையர் அதைப்பற்றிக் கேட்குதல், பரிகாசம் செய்தல், இரகசியமானதை வெளியிற் சொல்லுதல் ஆகியவையாகும்.

இவ்வாறே காதினால் ஏற்படுகின்ற பாவங்களான ஒட்டுக் கேட்பது, குறிகேட்பது, இசைகளையும், இசைப் பாடல்களையும் வீண் பேச்சுக்களையும் கேட்பது, ஆகிய அனைத்தையும் விட்டு விட வேண்டும். இன்னும் கண்களால் ஹராமானவற்றைப் பார்ப்பது போன்ற தீமைகளையும் தவிர்த்துக் கொள்ள வேண்டும்.

அவ்வாறே செயலில் ஏற்படுகின்ற அநியாயம், கொலை, களவு, கொள்ளை, சண்டை, விபச்சாரம் (زِنَا), ஆண் ஆணுடன் சேரும் ஓரினச் சேர்க்கை (لِوَاط), பெண் பெண்ணுடன் சேரும் ஓரினச் சேர்க்கை (سِحَاق), இந்தச் செயல்களுக்கு உதவியாய் இருப்பது (قِيَادَة), கஞ்சா, அபின், கள், சாராயம் போன்ற போதைப் பொருள்களை அருந்துதல், பெற்றோரை நோவினை செய்தல், குரு நிந்தனை, அளவு, நிறுவையில் மோசடி செய்தல், நம்பிக்கை மோசம், சூனியம் செய்தல், சூதாட்டம், கோபம் கொள்ளுதல், வேலைக்காரர்களை துன்புறுத்துதல், நோவினை செய்யக்கூடாத பிராணிகளை நோவினை செய்தல், பக்கத்து வீட்டுக்காரருக்கு துன்பம் தருதல், உறவினர்களை பகைத்தல், முஸ்லிம்களுக்கு உதவி செய்ய இயலும்பொழுதும் உதவி புரியாமலிருத்தல், போரில் புறமுதுகிட்டு ஓடுதல், தருமம் செய்வதைத் தடுத்தல் போன்ற பாவங்களை விட்டும் நீங்கி இருக்கவேண்டும்.

இன்னும் பொருளின் மூலமாக ஏற்படுகின்ற பாவங்களான வட்டி வாங்குதல், கொடுத்தல், கஞ்சத்தனம் செய்தல், ஜகாத், ஃபித்ரா, நேர்ச்சை, குற்றப்பரிகாரம் போன்றவற்றை நிறை வேற்றாமல் இருப்பது, சொத்துரிமையில் மோசடி செய்வது, கட்டாயம் கொடுக்க வேண்டிய செலவினங்களை உரியவர்களுக்குக் கொடுக்காமலிருப்பது போன்றவற்றை விட்டு விடவேண்டும்.

மேலும்தான் செய்த பாவமான செயல்களை மறைத்து வருந்தாமலிருப்பதுடன் அவற்றைப்பலருக்கு முன்னால் பெருமையோடு பறைசாற்றிக்கொண்டிருப்பது, லஞ்சம் வாங்குவது, கொடுப்பது, குழந்தைகள் மற்றும் பெரியவர்களை (பணயக்கைதிகளாகக்) கடத்திக்கொண்டு போவது, தனிநபர்களுக்கிடையில், அல்லது இரண்டு கூட்டத்தாருக் கிடையில் பகைமையையும் குரோதத்தையும் உண்டுபண்ணுவதற்காகச் சூழ்ச்சி செய்வது, கூடுதலான லாபம் சம்பாதிக்கும் நோக்கத்தோடு பஞ்சகாலத்தில் தானியங்களைப் பதுக்கிவைப்பது மற்றும் பொதுவான பயங்கரவாதச் செயல்களில் ஈடுபடுவது போன்ற பாதகமான செயல்களில் ஈடுபடாமலிருக்கவேண்டும்.

மேலும் தன் மீது கடமையான ஃபர்லான தொழுகைகள், ஜகாத்து, நோன்பு, ஹஜ், ஆகியவற்றை விட்டு விடாமல் சரியாக நிறைவேற்ற வேண்டும். மேற்கூறிய துற்செயல்கள் என்னும் நோய்கள் ஏற்பட்டால் நற்செயல்கள் என்னும் மருந்துகளைக்கொண்டு அவற்றை நிவர்த்தி செய்திட வேண்டும்.

இன்னும் தன் மீது கடமையான அந்தரங்க வணக்கங்களாகிய தவ்ஹீது (ஏகத்துவம்) மஃரிஃபா (மெய்ஞ்ஞானம்), முஷாஹதா (காட்சி), முராகபா (எதிர்நோட்டமிடல்), முலாஹழா (நயன தரிசனம்), முஆயினா (கண்காட்சி), முகாஷஃபா (திரையை நீக்கிக்காணல்), முவாஜஹா (முகதரிசனம்), திக்ரு (தியானம்) ஆகியவற்றில் ஈடுபாடு கொண்டிருக்கவேண்டும். இவ்வாறே வெளிப்படையான வணக்கங்களாகிய தொழுகை, ஜகாத்து, நோன்பு, ஃபித்ரா, ஹஜ்ஜு, மார்க்கக்கல்வி கற்பது, குர்ஆன் ஓதுதல், சலவாத்துச் சொல்லுதல் முதலிய ஃபர்லான செயல்களை நிறைவேற்றிடவேண்டும்.

இன்னும் சுன்னத்தான வணக்கங்களான வழமையான சுன்னத்துத் தொழுகைகள்

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

(ﷺ) வித்ரு தொழுகை, பெருநாள் தொழுகைகள், கிரகணத்தொழுகைகள், மழை வேண்டித் தொழும் தொழுகை, தராவீஹ் இஷ்ராக், ளுஹா, அவ்வாபீன், தஹஜ்ஜுத், தஹிய்யத்துல் மஸ்ஜித், உளூவின் சுன்னத்துத் தொழுகை ஆகிய தொழுகைகள், சுன்னத்தான நோன்புகள், தானதருமங்கள், நலவு செய்தல், வாயினாலும் கையினாலும் பிறருக்கு உதவி செய்தல், பெரியோர்கள், ஆலிம்கள், உஸ்தாதுமார்கள், ஆகியோருக்கு சங்கைசெய்தல், ஏழைஎளியோரின் மீது அன்புவைப்பது, இரக்கங்கொள்வது, முஸ்லிம்களைச் சந்திக்கும்போதெல்லாம் சலாம் சொல்வது, அதனை முந்திக்கொண்டு சொல்வது, எல்லோரிடமும் முக மலர்ச்சியுடன் நடந்துகொள்வது, ஜும்ஆ, ஜமாஅத்து, மய்யித்து தொழுகைகளுக்கு விரைந்து செல்வது, நோயாளியை விசாரிக்கச் செல்வது, வெளியில் செல்லும்போதும், பிறர் மனையிலிருக்கும் போதும் தலை குனிந்து பார்வையைத் தாழ்த்திக்கொள்வது, மக்களுக்கு இடையூறு தரும் முறையில் வழியில் கிடக்கும் கல், முள் போன்றவற்றை அகற்றுவது ஆகிய அனைத்து நற்பண்புகளையும் கடைப்பிடித்திடவேண்டும்.

தக்வா என்னும் பயபக்தி மூன்று விதமான மனிதர்களுக்கு மூன்று வகைகளாகும். முதலாவது, சாதாரண முஃமின்களுக்குரியது. அது அவர்கள் பாவங்கள் அனைத்தை விட்டும் நீங்கி இருப்பதாகும். இரண்டாவது, ஸாலிக்கீன் என்னும் சீரிய பாதையில் செல்கிறவர்களுக்குரியது. அது அவர்கள் மறதியை விட்டும் தம்மைக் காத்துக்கொள்வதாகும். மூன்றாவது, ஆரிஃபீன்கள் என்னும் ஞானவான்களுக்குரியது. அது அவர்களில் நின்றும் தீமை ஏதும் ஏற்பட்டால் அது தங்களினால் உண்டானதென்றும், நன்மை ஏதும் ஏற்பட்டால் அது அல்லாஹ்வினால் உண்டானதென்றும் அவர்கள் எண்ணுவதாகும்.

தக்வா எனபதற்கு ஏராளமான பொருள்களுண்டு. அவற்றில் சுருக்கமான, தெளிவான பொருள், ஏவலுக்கு வழிபட்டு, விலக்கலைவிட்டும் தவிர்ந்திருப்பது என்பதாகும். அது அல்லாஹ்வுடைய வஸிய்யத்தாக இருப்பதால் ஜும்ஆ குத்பாவில் தக்வாவைக்கொண்டு வஸிய்யத்துச் செய்வது ஃபர்ளாக இருக்கிறது.

" தக்வா என்பது பன்னிரண்டு காரியங்கள்கொண்டது" என இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் தங்களுடைய இஹ்யாவிலும், மின்ஹாஜிலும் கூறியுள்ளார்கள். "அடியான் தக்வா உடையவனாக இருக்கும்பொழுது அவன் எவ்வித குறையுமுடையவனாக இருக்கமாட்டான்.

அவன் நெய்பவனாக இருந்தாலும் சரி, அல்லது இரத்தம் குத்தி எடுப்பவனாக இருந்தாலும் சரி" என்று ஒரு பாடலில் கூறப் பட்டுள்ளது. ஆட்டுரோமங்களால் கம்பளி நெய்பவரையும், இரத்தங்குத்தி எடுப்பவரையும் அரபியர்கள் கேவலமாகக் கருதி வந்தனர். எனவே தான், அவ்வித மனிதர்களாக இருப்பினும் தக்வா உடையவராக இருப்பின் அவர் உயர்ந்தவர்தான் என்று குறிப்பிடுகிறார்கள். ஆனால், இவை இரண்டு தொழில்களும் உண்மையில் கேவலமானவையல்ல. நூலாலும், ரோமங்களாலும், ஆடைகள் நெய்யும் தொழிலை நம் தந்தை ஆதம் (அலை) அவர்கள் செய்து வந்தார்கள். எனவே, அதனைக் கேவலமாகக் கருதினால், அவர்களைக் கேவலமாகக் கருதுவதைப் போன்றாகிவிடும்.

## முஷாஹதா (ஞானக்காட்சியைக் காணுதல்) வகைகள்

முஷாஹதா என்னும் ஞானக்காட்சியைக் காணுதல் என்பது பலவகைகளுண்டு அனைத்தையும் இரண்டாகச் சுருக்கிக்கூறப் பட்டுள்ளது. முதலாவது;-

شُهُوْدُ الْكَثْرَةِ فِى الْوَحْدَةِ பல (மவ்ஜூதாத் களை) படைப்புகளை ஒரு (உஜூதில்) உள்ளமையில் தரிசிப்பது. இரண்டாவது;

شُهُوْدُ الْوَحْدَةِ فِى الْكَثْرَةِ ஒரு உஜூதை பல மவ்ஜூதாத்துகளில் காண்பது. இவ்விரண்டில் பல பொருட்களில் அவனை தரிசித்தல் என்பது மிக நீளமான விஷயமாக இருப்பதால், விரைவாக ஞானச்சுவை கிடைப்பதற்காக, அல்லாஹுத ஆலாவுடைய ஹாதீ என்னும் திருநாமத்தின் வெளிப்பாடாக வந்த இன்ஸானே காமிலான (பரிபூரண மனிதரான) ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களில் அவனை தரிசித்துக் கொள்ளவும். அல்லாஹுதஆலா தன்னுடைய திக்ரை ஒருவருடைய நாவில் நடத்தாட்டுவதே மிகப்பெரும் பாக்கியமாகும். அதற்காக நன்றியுள்ளவனாக ஆகிடவேண்டும். திக்ரில் மனதை ஓர்மைப்படுத்த முடியாவிட்டாலும், அதனால் சடைந்துவிடாமல் நாவினால் திக்ரு செய்து கொண்டே முயற்சித்தால் விரைவில் மனம் ஒன்றிவிடக்கூடிய நிலை ஏற்பட்டுவிடும். ஆனால், எந்த நிலையிலும் ஷரீஅத்தின் வரம்பை மீறாமல் கவனமாக இருந்துவரவேண்டும். ஷரீஅத்தின் வரம்புக்கு உட்படாத எந்தச் செயலையும் இறைவன் அனுமதிப்பதில்லை.

## அல்லாஹுதஆலாவுடைய தஜல்லியாத் என்னும் வெளிப்பாடு

அல்லாஹுத்தஆலாவுடைய தஜல்லியாத் என்னும் வெளிப்பாடு தனது உள்ளமையின் புறத்தினாலும்,தனக்கே உரித்தான குணங்களென்னும் சிஃபத்துகளின் புறத்தினாலும், திருநாமங்களின் புறத்தினாலும், செயல்பாடுகளின் புறத்தினாலும் வெளியாகிறான். அல்லாஹ்வுடைய (தாத்தை) உள்ளமையை அறிவினால் விளங்கவோ வார்த்தைகளால் கூறிடவோ முடியாது. அந்த உள்ளமைக்கு மூன்று விதமாக வெளியாகும் தலங்களுண்டு. முதலாவது, 'அஹதிய்யத்து'என்பது. அதாவது; ஏகத்துவ நிலையைச் சேர்ந்தது. இரண்டாவது, 'ஹுவிய்யத்' என்பது. அதாவது; அவன்தான் என்ற நிலையைச்சேர்ந்தது. மூன்றாவது, 'அனாநிய்யத்' என்பது. அதாவது நான்தான் என்ற நிலையைச் சேர்ந்தது.

சிஃபத்துகளின் புறத்தினால் தஜல்லியாத்தாகிறது அடியான் அல்லாஹ்வுடைய சிஃபத்துகளைக்கொண்டு வருணிக்கப்படுவதை ஏற்றுக்கொள்வதாகும்.

ஆரிஃபீன்கள் இந்தத் தஜல்லியாத்தில் அவரவருடைய ஞானத்திற்கும் அமலுக்கும் தக்கவாறு பலன் பெறுபவர்களாக இருப்பார்கள்.

திருநாமங்களினால் ஏற்படுகின்ற தஜல்லியாத்தாகிறது, அந்தத்திருநாமத்தைக் கொண்டு அல்லாஹ்வுடைய தஜல்லீ அடியானின்மீது ஏற்பட்டால், அடியான் என்னும் பெயர் முற்றிலும் மறைந்துவிடும். எனவே, அந்த இஸ்மின் மூலம் அல்லாஹ்வைக் கூப்பிட்டால் அடியான் பதில் சொல்லுவான். அடியானைக்

கூப்பிட்டால் அல்லாஹ் பதில் சொல்லுவான். நபி மூஸா (அலை) அவர்களுக்கு தூர்மலையில் தஜல்லீ ஆனது இதற்கு உதாரணமாகும்.

செயல்களின் புறத்தின் தஜல்லீயாவதாகிறது. அடியானின் எல்லாச் செயல்களும் அல்லாஹ்விலிருந்து வெளிப்படுபவையாகவே அடியான் காண்பான்.

### அக்மலுஷ்ஷுஹூத் விபரம்

அடுத்து அக்மலுஷ்ஷுஹூத் أَكْمَلُ الشُّهُوْدِ என்பது அல்லாஹ்வை, செய்கிறவன் என்றும், தன்னை, செய்யப்படுகிறவன் என்றும் நிறைந்த எண்ணம் கொண்டிருப்பதாகும். தன் மனைவியுடன் கூடும் பொழுது கூட மனதில் அல்லாஹ்வின் திக்ரைத்தவிர வேறொன்றும் இருக்காது. அவளுடைய மனதிலும் "லாஇலாஹ இல்லல்லாஹ்" வைத்தவிர வேறொன்றும் இருக்காது. இந்நேரத்தில் அவன் கலம் என்னும் எழுதுகோலாகவும், அவள் லவ்ஹு என்னும் ஏடாகவும் ஆகி, நூரு முஹம்மதிய்யாவின் ஒரு பிரதியாக அவ்விருவரும் ஆகிவிடுவார்கள். இதனால்தான், "உங்களுடைய உலகில் மூன்று பொருட்கள் எனக்கு விருப்பமானவையாகும். மனைவிமார்கள், நறுமணம், என் கண் குளிர்ச்சி தொழுகையிலாகுதல்" என்று ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அருளியுள்ளார்கள். ஷைகுல் அக்பர் முஹ்யித்தீன் இப்னுல் அரபி (ரஹ்) அவர்கள் தங்களுடைய "ஃபுசூசுல் ஹிகம்" என்னும் நூலில் குர்ஆனிலுள்ள 27 நபிமார்களுடைய இரகசியமான விஷயங்களை 27 தலைப்புகளில் எழுதியுள்ளார்கள்.

அவற்றில் முஹம்மதிய்யா என்ற தலைப்பிலுள்ள பாடத்தில் மேற்கூறப்பட்ட இந்த ஹதீஸையும் எழுதியுள்ளார்கள்.

அடுத்து ஷுஹூதுல் முத்லக் என்பது படைப்பினங்களில் எந்த ஒன்றையும் குறிப்பாக்காமல் அனைத்திலும் ஹக்கை தரிசிப்பதாகும்.

ஷுஹூதுல் முகய்யத் என்பது, படைப்பினங்களில் ஏதேனுமொன்றில் ஹக்கை தரிசிப்பதாகும்.

### முராகபாவும் அதைப்பற்றிய நிகழ்ச்சிகளும்

முஷாஹதா, முராகபா என்ற இரண்டும் ஒரே அர்த்தமுள்ளதாக இருந்தாலும் பின்வரும் விளக்கத்தில் வித்தியாசத்தைப்புரிந்து கொள்ளலாம். "முராகபா என்பது, எல்லா நொடிகளிலும் மறைவான விஷயங்களை நோட்டமிடுவது கொண்டு அகமியத்தைப் பேணுவதாகும்" என்று مُرْتَعِشْ முர்தயிஷ் (ரஹ்) அவர்கள் கூறியுள்ளதாக இஹ்யாவில் எழுதப்பட்டுள்ளது. இறந்து விட்ட இதயத்தை உயிர்ப்பிக்கும்படியான தஸவ்வுஃபுடைய இல்மு, ஃபிக்ஹுடைய இல்மு, மற்றும்

எல்லா வகையான இல்முகளும் கூறப்பட்டுள்ள ஒரே கிரந்தம் இஹ்யா உலூமித்தீன் என்னும் கிரந்தந்தான். இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் இயற்றிய அந்நூலைப்போல் வேறெந்த நூலும் இயற்றப்படவில்லை. ஆகையால் அதிலிருந்து பல் வேறு விஷயங்கள் இதில் எடுத்துக்கூறப்பட்டுள்ளன.

"நிச்சயமாக அல்லாஹ் உங்களின் மீது கண் காணிப்பாளனாக இருக்கிறான்" என ஒரு ஆயத்திலும், "நிச்சயமாக அல்லாஹ் பார்த்துக்கொண்டிருக்கிறான் என்பதை நீர் அறியவில்லையா?" என்று மற்றொரு ஆயத்திலும் அல்லாஹ் அருளியுள்ளான். "இஹ்ஸான் என்றால் என்ன?" என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டபோது, அல்லாஹ்வை நேரில் பார்ப்பது போன்று நீ அவனை வணங்குவதாகும். நீ அவனைப் பார்க்கவில்லையானாலும் அவன் உன்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறான்" என்று பதிலளித்தார்கள். இது முராக்கபாவின் நிலையாகும்.

சுலைஹா அம்மையார் நபி யூசுஃப் (அலை) அவர்களைத் தம் விருப்பத்திற்கு அழைத்தபோது தனித்திருந்த அவ்வேளையில் அங்கிருந்த ஒரு சிலையின் முகத்தை ஜுலைஹா அம்மையார் ஒரு துணியினால் மூடினார்கள். அப்பொழுது யூசுஃப் (அலை) அவர்கள் "இந்தக்கற்சிலை உன்னைப்பார்க்குமென்று வெட்கப்படுகிறாய், ஆனால், மறைவானவற்றையும் வெளியானவற்றையும் நன்கு அறிந்திருக்கின்ற வல்ல நாயன் நம்மைப் பார்த்துக்கொண்டேயிருக்கிறான் என்பதை நினைத்து நீ வெட்கப்படவில்லையா! என்று கூறினார்கள்.

உமர் (ரலி) அவர்கள் நகர்ச்சோதனைக்காக இரவில் வெளியிற் சென்ற போது பாலில் தண்ணீரைக் கலந்து விற்குமாறு ஒரு தாய் தன் மகளிடம் கூறியதையும், அதற்கு "பாலில் தண்ணீரைக் கலக்கக்கூடாதென்பது கலீஃபாவுடைய உத்தரவல்லவா"? என்று மகள் கூறியதையும், "கலீஃபா இப்பொழுது பார்த்துக்கொண்டா இருக்கிறார்"? என்று தாய் கூறியதையும், கலீஃபா உமர் பார்க்காவிட்டாலும் உமருடைய ரப்பு பார்த்துக்கொண்டிருக்கிறான் அல்லவா என்று திரும்ப மகள் கூறியதையும் கேட்டு உமர் (ரலி) அவர்கள் தாங்களே அப்பெண்ணை மணம் முடித்துக்கொண்டார் களென்றும் (மற்றொரு சொல்படி தங்களுடைய மகனுக்கு மணம் முடித்துக் கொடுத்தார்களென்றும்) கூறப்பட்டுள்ளது. முராகபாவின் நிலையை அடைந்த அப் பெண்மணி சித்தீகீன்களுடைய தரஜாவை அடைந்தார். அவர் பெற்றெடுத்த சந்ததியிலிருந்துதான் நீதிவானாகிய இரண்டாம் உமர் என்று போற்றப்பட்ட உமர் இப்னு அப்துல் அஜீஸ் (ரஹ்) அவர்கள் தோன்றினார்கள்.

வாலிபன் ஒருவன் பத்தினிப்பெண் ஒருத்தியை விபச்சாரத்திற்கு அழைத்தபோது, "உனக்கு வெட்கமில்லையா?" என்று கேட்டாள். "நம்மை இந்த நட்சத்திரத்தைத் தவிர வேறு யாரும் பார்க்கவில்லையே! " என்றான் அவன். "அந்த நட்சத்திரத்தைப் படைத்தவன் எங்கே போனான்?" என்று கூறி அவள் விலகிக்கொண்டாள். இது அவள் பெற்ற முராகபாவின் நிலையாகும்.

சூஃபியாக்களில் சிலர் முராகபாவின் நிலையை அடைய இந்த திக்ரைக் கூறியுள்ளார்கள்:-

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

اَللّٰهُ حَيٌّ ۔ اَللّٰهُ نَاظِرٌ ۔ اَللّٰهُ حَيٌّ ۔ اَللّٰهُ حَاضِرٌ

"அல்லாஹ் நித்திய ஜீவன், அல்லாஹ் பார்த்துக்கொண்டிருக்கிறான்; அல்லாஹ் நித்திய ஜீவன்; அல்லாஹ் என் முன்னால் இருக்கிறான்." அதாவது: அல்லாஹ் எல்லா நேரங்களிலும் நம்முடனிருந்து பார்த்துக்கொண்டே இருக்கிறான் என்ற எண்ணங்கொண்டு, தூண்டில் போட்டிருப்பவனுடைய பார்வை மிதப்பின் மீதே இருப்பது போல், நம்முடைய நோட்டமெல்லாம் அல்லாஹ்வின் மீதே இருக்கவேண்டும்.

சகோதரர்களே! தீனுடைய நான்கு கடமைகளிலும் சுருக்கமாக சில விஷயங்கள் இதுவரை சொல்லப்பட்டன. எனவே ஞானத்தை விட அமல் அதிகமாக இருக்கவேண்டும். ரொட்டி சுடவேண்டுமானால் மாவு அதிகமாகவும் உப்பு குறைவாகவும் இருக்கவேண்டும். இல்மு உப்பைப் போன்றும் அமல் மாவைப்போன்றும் இருக்கவேண்டும். உப்பில்லாமல் ரொட்டி ருசிக்காதது போல் இல்மில்லாமல் அமல் முழுமை பெறாது. எனினும் அமலில்லாமல் இல்மு மட்டும் இருந்தால் மறுமையில் அது பெரும் துன்பத்தில்தான் அவனைக்கொண்டு போய்ச்சேர்க்கும்.

وَعَالِمٌ بِعِلْمِهٖ لَمْ يَعْمَلَنْ ۞ مُعَذَّبٌ مِنْ قَبْلِ عَابِدِ الْوَثَنِ

"தன் இல்மைக்கொண்டு அமல் செய்யாத ஆலிம் (மறுமையில்) சிலை வணங்குபவனை விட முன்னதாக வேதனை செய்யப்படுவார்" என்று ஒரு பாடலில் கூறப்பட்டுள்ளது.

ஒருவர் எந்த மொழியிலாவது ஃபர்லு, வாஜிப், ஹராம், ஹலால், ஏவல், விலக்கல் அனைத்தையும் தெரிந்து கொண்டால் அவர் ஆலிம் தான். அரபி மொழி தெரிந்த ஒருவர் இவற்றில் எதனையும் கற்றுக்கொள்ளவில்லையானால் அவர் (ஜாஹில்) அறிவற்றவர்தான். எனவே அரபிப் படிப்பினால் மட்டும் ஆலிமாகிவிட முடியாது. அவ்வாறு ஆலிமானவர் அமல் செய்யாமல் வெற்றி பெற முடியாது.

வெளிப்படையான இல்மில் இனிக்கூறப்படவிருக்கும் ஃபிக்ஹ¬டைய இல்மும், இதுவரை கூறப்பட்ட அந்தரங்க இல்மும் முஃமின்களுக்கு அவசியமானவையாகும். ஒரு பறவைக்கு இரண்டு இறக்கைகள் தேவைப்படுவது போல் இவ்விரு இல்முகளும் முஃமினுக்கு அவசியமாகும். இல்மைக் கற்றுக்கொள்வதில் இருக்கின்ற பலன்களையும், கற்றபடி அமல் செய்கிறவர்களுக்குக் கிடைக்கின்ற நன்மைகளையும் விரிவாகச் சொல்லவேண்டுமானால் இந்நூல் விரிவாகிவிடும். எனவே அந்தரங்க இல்மு பற்றிய விஷயங்களை இத்துடன் சுருக்கிக்கொண்டு ஃபிக்ஹ¬டைய இல்மை இனி கவனிப்போம்.

# தொழுகையின் பாடம்

இஸ்லாம் மார்க்கத்தின் இரண்டாவது கடமை தொழுகையாகும். அது வணக்கங்கள் அனைத்திலும் மிகச்சிறந்ததாகவும், தீனுக்கு அடிமூடாகவும், (ஆணி வேராகவும்) இஸ்லாத்தின் அடையாளத்தை வெளிப்படுத்தக்கூடியதாகவும், வெளிப்படையான, அந்தரங்கமான இருவகை வணக்கங்களையும் பொதிந்ததாகவும், சொல், செயல், எண்ணம் ஆகிய மூவகை வணக்கங்களைக் கொண்டதாகவும், இஸ்லாத்தைக் குஃப்ரை விட்டும் பிரிக்கக்கூடியதாகவும், முஃமின்களுக்கு (அல்லாஹ்வின் சன்னிதானத்திற்கு கொண்டு செல்லக்கூடிய) மிஃராஜாகவும், அல்லாஹ்வை திருப்தியுறச்செய்வதாகவும், தாவர இனங்களின் வணக்கமான நிலை, மிருக இனங்களின் வணக்கமான குனிதல்,(என்னும் ருகூவு) மலைகளின் வணக்கமான இருப்பு, மலக்குகளின் வணக்கமான சாஷ்டாங்கம், (என்னும் ஸுஜூது) ஊர்வன, பறப்பன, புழுப்பூச்சிகள் ஆகியவற்றின் வணக்கங்களான தஸ்பீஹ், தக்பீர், தஹ்லீல், தஹ்மீத், போன்ற திக்ருகளைப் பொதிந்ததாகவும், அல்லாஹ் அருள் கூரும் அத்தஹிய்யாத்து, சலவாத்து, ஸலாம் ஆகியவற்றைக் கொண்டதாகவும், நபிமார்கள் போற்றிய வணக்கமாகவும், குர்ஆனில் முப்பத்தி மூன்று இடங்களில் அதனைக் கடைபிடிக்கும்படி கட்டளையிடப்பட்ட வணக்கமாகவும் இருக்கிறது. இன்னும் ஏராளமான அகமியங்கள் நிரம்பியது தொழுகையைத் தவிர வேறெந்த வணக்கமும் கிடையாது.

நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் ஆரம்பத்தில் நபி இப்றாஹீம் (அலை) அவர்களுடைய மார்க்கத்தின் மீது ஹிரா மலைக்குகையில் வணக்கம் புரிந்து வந்தார்கள். துவக்கமாக மக்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதும், தவ்ஹீதின் பக்கம் மக்களை அழைப்பதும் அவர்களின் மீது கடமையாக்கப்பட்டது. அதன் பிறகு இரவில் நின்று வணங்குதல் கடமையாக்கப்பட்டது. பிறகு அது மாற்றப்பட்டு காலையில் இரண்டு ரகஅத், மாலையில் இரண்டு ரகஅத் கடமையாக்கப்பட்டது. பின் நபிப்பட்டம் பெற்று பத்து ஆண்டுகளும் மூன்று மாதங்களும் முடிந்தபோது ரஜப் மாதம் இருபத்தி ஏழாம் நாள் மிஃராஜுடைய இரவில் அது மாற்றப்பட்டு ஒவ்வொரு நாளும் ஐந்து நேரங்கள் தொழ வேண்டுமென விதியாக்கப்பட்டது.

## தொழுகையை விடுவதற்கு சமாதானம் கூறும் போலி ஷெய்குமார்கள்

அல்லாஹு தஆலா தனது திருமறையில்

إِنَّ الصَّلٰوةَ كَانَتْ عَلَى الْمُؤْمِنِيْنَ كِتَابًا مَّوْقُوْتًا

"திட்டமாக தொழுகை முஃமின்களின் மீது நேரங்குறிக்கப்பட்ட கடமையாக ஆகிவிட்டது" (4.103)என்று கூறியுள்ளான்." ஐந்து நேரங்களின் தொழுகைகளை அடியார்களின் மீது அல்லாஹ் கடமையாக்கியுள்ளான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். அந்தத் தொழுகையானது சொல், செயல், நினைவு ஆகிய மூன்று நிலைகளிலும் உண்டாகும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

இத்தகைய தொழுகை சூரிய வெளிச்சம் போல் மிகத் தெளிவாக இருந்தும் அறிவீனர்கள் சிலர் மனித வடிவத்தில் ஷைத்தானுடைய குணத்திலிருந்து கொண்டு வாயில் முணுமுணுப்புடன், வலக்கையில் தஸ்பீஹ்மணியும், கைத்தடியும் பிடித்து, தலையில் தலைப்பாகையும் மேனியில் நீண்ட சட்டையும் அணிந்து, காலில் மோஜாவும் பாதணியும் போட்டு தலை தாழ்த்தி தரையில் மெள்ள, மெள்ள நடந்து தங்களை, ஷைகுமார் என்பதாகச்சொல்லிக்கொண்டு தவறான சில பாடல்களையும், வசனங்களையும் கூறி, அதற்குத்தோதாக குர்ஆனிலுள்ள 'முதஷாபிஹாத்' என்னும் அர்த்தம் தெளிவில்லாத ஆயத்துகளையும் ஹதீதுகளையும் ஆதாரமாகக் கூறி, முன் சென்ற ஆரிஃபீன்கள் வலிமார்கள் ஆகியோருடைய, இருபொருட்களைக் கொண்ட ஞானக்கருத்துக்களில் தங்களுடைய மனதிற்குப்பிடித்தமான ஒரு பொருளை மட்டும் எடுத்துக்கொண்டு, அகமியத்தொழுகை, அகமிய நோன்பு, அகமிய வணக்கங்கள் என்று கூறிக்கொண்டு, வெளிப்படையான தொழுகை நோன்பு ஆகியவற்றில் பலன் ஏதுமில்லை, அது ஷிர்க் என்பதாகக்கூறி, அப்பாவி மக்களான அறிவு குறைந்த சிலரை ஏமாற்றித் தங்களுக்குச் சாதகமாக ஆக்கி வழி கெடுத்து வருகின்றனர். இவர்கள் தாங்களும் வழிகெட்டுப் பிறரையும் வழி கெடுப்பவர்களாக இருக்கிறார்கள்.

இஸ்லாத்தின் கடமைகளில் இரண்டாவது, தொழுகை என்பதைத் தெளிவாக சிறு வயது முதல் தெரிந்திருந்தும், உலகம் முழுவதிலுமுள்ள முஸ்லிமான ஆண்கள், பெண்கள், சிறியோர், பெரியோர், அரபியர், அஜமீ, அரசன், ஆண்டி அனைவரும் இந்தத் தொழுகையை ஒப்புக்கொண்டிருப்பதை அறிந்திருந்தும் இவர்கள் அறிவு மயங்கித் தடுமாறி நாசமடைந்துகொண்டிருப்பது மிகப்பெரிய விந்தையாகும்.

இவ்விதமான ஷைகுமார்களும் அவர்களுடைய முரீதுகளும் வழிதவறுவதற்குரிய காரணங்கள் இரண்டு. முதலாவது: தொழுகையிலுள்ள இரகசியங்களை, வழி கேடென்னும் பிணி கொண்ட அவர்கள் விளங்கிக்கொள்ளாததாலும், அதிலுள்ள அல்லாஹ்வுடைய தஜல்லீ என்னும் ஒளிப்பிழம்பை பார்வை குறைவான அவர்கள் காணமுடியாததாலும் அந்த ஷைத்தான்கள் இந்த சோம்பேறிகளை நரகக் கிடங்கில் தள்ளி விடுகிறார்கள்.

இரண்டாவது காரணம்: ஹிஜ்ரீ 1150 ஆம் ஆண்டுக்குப்பின் இந்நாட்டில் மஹ்மூது நைனா லெப்பை ஆலிம், ஜான் ஸாஹிப் லெப்பை ஆலிம் போன்ற தஸவ்வுஃபுடைய ஆரிஃபீன்களான உலமாக்கள் ஃபுதூஹாத்து மக்கிய்யா, ஃபுஸூஸுல் ஹிகம், இன்ஸானே காமில் போன்ற கிதாபுகளிலுள்ள ஞானவான்களுடைய சில இரகசியமான கருத்துக்களையும், ஹகீகத்துக்களையும் எடுத்து, நஃப்ஸுர்ரஹ்மான், அஸ்ராருஸ்ஸலாத், பயானுல்லாஹ் என்ற பெயர்களில் கோர்வை செய்து வெளியிட்ட கிதாபுகளைப் பார்த்து அதன் கருத்துக்களைச் சரியாக விளங்கிக் கொள்ளாமல் தவறாக விளங்கிக் கொண்டதால் ஏற்பட்ட சறுகுதலாகும்.

மேற்கூறப்பட்ட தவறான கொள்கையுள்ளவர்கள், பின்வருமாறு தவறான விளக்கங்களையும் கூறுகின்றனர். அல்லாஹு தஆலா குர்ஆனில் " நீங்கள் எங்கு திரும்பினாலும் அங்கு அல்லாஹ்வின் முகம் இருக்கிறது" என்று கூறியுள்ளான். இந்த ஆயத்தை மட்டும் எடுத்துக்கொண்டு அந்த மடையர்கள், கஅபா என்னும் அந்தக் கல் கட்டிடத்தை முன்னோக்க வேண்டிய அவசியமில்லை என்று கூறுகின்றனர். ஆனால் "மஸ்ஜிதுல் ஹராமின் பக்கம் உம்முடைய முகத்தைத் திருப்பிக்கொள்வீராக" என்ற

ஆயத்தைக்கொண்டு முன் சொன்ன ஆயத்தின் சட்டம் மாற்றப்பட்டுவிட்டது என்பதை அவர்கள் விளங்கவில்லை. அல்லது கிப்லாவை நோக்கித் தொழ முடியாமலிருக்கின்ற சந்தர்ப்பத்தில் எப்பக்கம் வேண்டுமானாலும் தொழலாம் என்பதையும், அல்லது மனத்தால் முன்னோக்குவதற்காக் அவ்வாறு கூறப்பட்டுள்ளது என்பதையும் அவர்கள் விளங்கவில்லை.

## ஐந்து வக்துத் தொழுகைகளை விட்டவனின் விபரம்

அறிந்துகொள்! வெளிரங்கமான இந்த ஐந்து நேரத்தொழுகையை விட்ட ஒருவன் எவ்வளவு பெரிய கராமத்துடையவனாக இருந்தாலும், அதாவது: அவன் வானில் இருந்து ஒரு பெருங்கூட்டத்துடன் கடலில் இறங்கி, தண்ணீரின் மீது நடந்து கரைக்கு வந்தபின், அவன் காலடிபட்ட இடங்களிலுள்ள கப்ருகளிலிருந்து இறந்தவர்களெல்லாம் உயிர்பெற்று எழும்பி வந்து அவரைப்பார்த்து "அஸ்ஸலாமு அலைக்கும் வலியுல்லாஹ் அவர்களே!" என்று சொல்லிவிட்டு மீண்டும் தங்களுடைய கப்ருகளுக்குள் அவர்கள் சென்றுவிட்டாலும்,

இன்னும் குருடர், செவிடர், நொண்டி போன்ற பெரும் நோயாளிகளெல்லாம் அவரிடம் வந்து சுகம்பெற்றுச்சென்றாலும், நெருப்பைத் தண்ணீராக்கினாலும், இன்னும் மறைவான செய்திகள் பலவற்றை அவர் அறிவித்து, அவர் அறிவித்தபடி அனைத்தும் நடந்துவிட்டாலும், இத்தனை கராமாத்துகளெல்லாம் அவருக்கு இருந்தாலும் அவர் வேணுமென்றே தொழாமலிருந்தால் உன்னால் முடிந்தால் - அவரிடம் ஹத்து என்னும் தண்டனையளித்து கசையடிகொடு, அது முடியவில்லையானால் மனதால் அவனை வெறுத்து, 'இந்த ஷைத்தானுடைய தீங்கைவிட்டும் அல்லாஹ்விடத்தில் பாதுகாப்புத் தேடுகிறேன்' என்று கூறிவிடு.

எவரேனும் ஒருவர், உன்னிடம், "இவ்வளவு பெரிய அற்புதங்களையெல்லாம் செய்கின்ற வலிய்யுல்லாஹ்வை நீ ஷைத்தானென்று சொல்லுகிறாயே - அவர் அல்லாஹ்விடத்தில் நெருக்கமானவராக இல்லையானால் இவ்விதமான கராமாத்துகளெல்லாம் அவருக்கு ஏற்படுமா?" என்று கூறினால், அவ்வாறு சொல்கிறவனை ஷரீஅத் சட்டப்படி கொலை செய்வது நன்மையானதாகும் என்று இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களும் இமாம் இப்னு ஹஜர் (ரஹ்) அவர்களும் தீர்ப்பளித்து உள்ளனர். இதற்கு உதாரணமாக மக்களின் ஆபரணங்களைக்கொண்டு ஒரு காளைமாட்டை சமைத்து அதற்கு காளையின் சப்தத்தையும் கொடுத்து அதுதான் கடவுள் என்று கூறி மக்களை வழி கெடுத்த சாமிரி என்ற பொற் கொல்லனின் சரித்திரத்தை எடுத்துக் கூறி இருக்கிறார்கள்.

நபிமார்கள், வலிமார்கள் அனைவரும் அல்லாஹ்விடம் நெருக்கம் பெற்றது தொழுகையைக் கொண்டல்லாது வேறில்லை. அவ்விதமான இந்தத் தொழுகையை விட்டும் தன்னை மறதியிலாக்கியதற்காக தங்களிடமிருந்த சொர்க்கத்தின் குதிரைகள் ஆயிரத்தையும் நபி சுலைமான் (அலை) அவர்கள் அறுத்து குர்பானி கொடுத்தார்கள். அல்லாஹுதஆலா அதற்குப் பகரமாக குதிரையைவிட வேகமாய்ச் செல்லுகின்ற காற்றினை அவர்களுக்கு வசப்படுத்திக்கொடுத்தான்.

# ஐங்காலத்தொழுகைகளும் அவற்றிற்குரிய தத்துவங்களும்

சுப்ஹு தொழுகையை நபி ஆதம் (அலை) அவர்கள் தொழுது வந்தார்கள். லுஹர் தொழுகையை நபி இப்றாஹீம் (அலை) அவர்கள் தொழுது வந்தார்கள். அஸர் தொழுகையை நபி சுலைமான் (அலை) அவர்கள் தொழுது வந்தார்கள். மஃரிப் தொழுகையை நபி ஈஸா (அலை) அவர்கள் தொழுது வந்தார்கள். இஷா தொழுகையை நபி மூஸா (அலை) அவர்கள் தொழுது வந்தார்கள். மூஸா (அலை) அவர்களுக்கு ஐம்பது நேரத்தொழுகை இருந்தது என்று பழக்கத்தில் சொல்லப்படுவதெல்லாம் ஐம்பது நேரம் என்பது அல்ல. அது ஐம்பது ரக்அத்துகள் என்பதாகும். அதாவது ஒரு நேரத்திற்குப் பத்து ரக்அத்துகள் வீதம் ஐந்து நேரங்கள் தொழுததாகும். நபிமார்களெல்லாம் தொழுத முறை நம்முடைய முறை போன்று இருக்கவில்லையானாலும் தொழுகையின் கோலம் அதில் இருந்தது. திருமணம் சம்பந்தமான விஷயமும் இவ்வாறுதான்.

மனிதனின் உடலிலுள்ள அருட் கொடைகளில் ஐம்புலன்கள் மிகப்பெரிய அருட்கொடையாகும். அந்த ஐந்தில் முகர்ந்தறிதல் என்பதில் நறுமணம் துர்நாற்றம் என்ற இரு விதத்தன்மைகள் உணரப்படுவதால் அவ்விரு நிஃமத்துகளுக்கு நன்றியாக சுப்ஹுடைய இரண்டு ரக்அத்துகள் கடமையாக்கப்பட்டன. சுவைத்தறிதல் என்பதில் இனிப்பு, புளிப்பு, கசப்பு, துவர்ப்பு ஆகிய நாலு வகைத்தன்மைகள் பெறப்படுவதால் அதற்கு நன்றி செய்வதற்காக லுஹருடைய நான்கு ரஅத்துக்கள் கடமையாக்கப்பட்டன. தொட்டறிதல் என்ற புலனில், மிருது, வன்மை, சூடு, குளிர்ச்சி என்னும் நான்கு தன்மைகள் உணரப்படுவதால் அதற்கு நன்றியாக அஸருடைய நான்கு ரக்அத்துகள் கடமையாக்கப்பட்டன. பார்த்தறிதல் என்பதில், வலது, இடது, முன்னால் என்னும் மூன்று திசைகள் பார்த்தறியப்படுவதால் அதற்குரிய நன்றியாக மஃரிப் தொழுகை மூன்று ரக்அத்துகள் கடமையாக்கப்பட்டன. கேட்டறிதல் என்பதில், முன்னால், பின்னால், வலது, இடது ஆகிய நான்கு திசைகளில் உள்ளவை உணரப்படுவதால் அதற்கு நன்றியாக இஷா தொழுகை நான்கு ரக்அத்துகள் கடமையாக்கப்பட்டன.

அல்லாஹுத்தஆலா தான் செய்த அளப்பரிய அருட்கொடை களுக்காக அடியான் தனக்கு நன்றி செலுத்த வேண்டுமென்பதற்காக இவ்வாறு கடமைகளை நிறைவேற்ற வேணுமாய் கட்டளையிட்டுள்ளான். அல்லாஹ் உடைய நிஃமத்துகளில் பெரும்பான்மையானவை ஜோடி ஜோடியாக இருப்பதால் சுன்னத்தான தொழுகைகளில் மிகுந்தது, இரண்டிரண்டு ரக்அத்துகளாக ஆக்கப்பட்டுள்ளன. வித்ரு தொழுகையை மூன்று ரக்அத்துகளாகவும் அதனை இரவின் கடைசியில் தொழவேண்டுமெனவும் ஆக்கியது அல்லாஹுதஆலாவை ஓர்மைப்படுத்துவதில் இறுதியாக இருப்பதற்காகத்தான். இவ்வாறு ஒவ்வொரு வணக்கத்திலும் பல்வேறு தத்துவ ஞானங்களை அமைத்து வைத்திருக்கிறான். ஆனால் அவற்றை ஆராய்ச்சி செய்வதில் காலத்தை வீணாக்கி விடக்கூடாது. அடியான் அல்லாஹ்வின் கட்டளைகளை நிறைவேற்றுவதில் ஈடுபடவேண்டுமே அன்றி அவற்றின் காரணங்களை ஆராய்ந்து கொண்டிருப்பது அழகல்ல. இங்கு சில விஷயங்களைக்

கூறியது, இவ்வாறு அனைத்து வணக்கங்களிலும் நுட்பங்கள் உண்டு என்பதைத் தெரிவிப்பதற்காகவேயாகும்.

இவ்வாறு காரணங்களைக் கேட்டுக்கொண்டிருப்பவர்களைக் கண்டால் இமாம் ஙஸ்ஸாலீ (ரஹ்) அவர்கள் விரண்டோடி விடுவார்களாம். அறிவீனர்களுக்கு பதில் கூறி அவர்களை வாயடைக்கச்செய்வதை விட இறந்து விட்டவர்களை உயிராக்குவது எளிதாகும் என்று இஹ்யாவில் எழுதியுள்ளார்கள். எனினும் இந்த நூலில் உளூ, தொழுகை, ஜகாத்து, ஹஜ்ஜு ஆகிய பாடங்களில் சில இரகசிய ஞானங்களைக் கூறியிருப்பது, வணக்கம் புரிபவர்களுக்கு ஆர்வம் ஏற்படவேண்டுமென்பதற்காகத்தான்.

## பெற்றோரின் கடமை

சிறு குழந்தைகளுக்குக் கற்பிக்கவேண்டிய விஷயங்களில் முதன் முதலாக நம் நபிகள் நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சுருக்கமான வரலாற்றைச் சொல்லிக்கொடுப்பது பெற்றோரின் மீது, பிறகு பொறுப்பாளரின் மீது, பிறகு வஸிய்யத்துச்செய்யப்பட்டவரின் மீது, பிறகு உறவினர்களின் மீது, பிறகு அவ்வூர் நீதிபதியின் மீது வாஜிபாகும். நபி (ஸல்) அவர்களின் நான்கு தலைமுறைகளையும், அன்னார் மக்காவில் எத்தனை ஆண்டுகள், மதீனாவில் எத்தனை ஆண்டுகள் இருந்தார்கள் என்பதையும் நபிப்பட்டம் பெற்றது, வாழ்ந்தது, இறந்தது போன்ற விபரங்களையும் சொல்லிக்கொடுப்பது மிகச்சிறந்ததாகும். முன்னால் ஈமானுடைய பாடத்தில் இது பற்றிய விபரங்கள் கூறப்பட்டுள்ளன.

குழந்தைகள் ஏழு வயதானவுடன் ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும், தொழும்படி ஏவுவதும், அதன் ஷர்த்துக்களைச் செய்யும் படி ஏவுவதும், பிறகு பத்து வயதானவுடன் தொழாவிட்டால் காயப்படாமல் அடிப்பதும் முன் கூறியவர்களின் மீது வாஜிபாகும்.

நோன்பு வைப்பதற்குச் சக்தியுள்ள குழந்தைகளையும் இவ்வாறே ஏவவேண்டும். இவ்வாறு குழந்தைகளை ஏவல் விலக்கல் செய்வது, அவர்கள் பருவமடைந்து சுய அறிவைப் பெறும்வரை உரியவர்களின் மீது கடமையாகும். மேலும் குழந்தைகளுக்கு குர்ஆனையும், ஒழுக்கங்களையும் கற்றுக்கொடுப்பதற்காகச் செலவு செய்ய நேரும்பொழுது அக்குழந்தைக்கென தனிச்சொத்திருந்தால் அதிலிருந்து செலவு செய்யவேண்டும். இல்லையெனில் தந்தையின்மீது, இல்லையெனில் தாயின் மீது கடமையாகும்.

## தொழுகை விதியாவதற்குரிய ஷர்த்துகள்

தொழுகை விதியாவதற்கு கீழ்கண்டபடி நான்கு ஷர்த்துகள் உள்ளன. முஸ்லிமாக இருத்தல், பருவமடைந்திருத்தல், புத்தி சுவாதீனமாக இருத்தல், மாதவிடாய், பிள்ளைப்பேறு தொடக்கு ஆகியவற்றை விட்டு நீங்கியிருத்தல் ஆகியவையாகும். இதற்கு மாறாக உள்ள காஃபிரானவன், பருவமடையாதவன், பைத்தியக்காரர் நினைவிழந்தவர், ஹைளு, நிஃபாசுக்காரி ஆகியோரின் மீது கடமையாகாது. உடன்

நிறைவேற்றுவதோ, அல்லது களாச் செய்வதோ எந்தக்கடமையும் இவர்களின்மீது கிடையாது. ஃபர்ளை மட்டும் தொழுது முடிக்கப் போதுமான ஆரம்ப நேரத்திற்குப் பின் ஹைளு, நிஃபாஸ், ஏற்பட்டிருந்தால் அந்த நேரத்தின் தொழுகையை களா செய்வது வாஜிபாகும். ஆனால், ஹைளு, நிஃபாஸ் உடையவள் நோன்பைக் களா செய்ய வேண்டும்.

இஸ்லாத்திலிருந்து நீங்கி (முர்த்தத்தாகி) திரும்ப இஸ்லாத்தில் சேர்ந்தவன், அவன் மதம் மாறிவிட்ட காலத்தொழுகைகளையும் நோன்பையும் களாச் செய்யவேண்டும். அவன் அக்காலத்தில் தொழுதிருந்தாலும் சரி.

திருமணம் செய்யப்பட்ட பெண் பருவமடையாத சிறுமியாயிருந்தால் அவளுடைய பெற்றோர் அவளுக்கு ஏவல் விலக்கல் செய்ய வேண்டும். பிணக்கம் ஏற்படாது என்றிருந்தால் கணவன் செய்யலாம். அப்பெண்ணுக்கு வலீகாரர், கணவன், வஸிய்யத்துச் செய்யப்பட்ட பொறுப்பாளர் எவரும் இல்லாவிட்டால் நீதிபதியாகிறவர் ஏவல் விலக்கல் செய்வார். நீதிபதியும் இல்லாவிட்டால் முஸ்லிமான அனைவரின் மீதும் அது கடமையாகும்.

## நின்று தொழ இயலாதவனுக்குரிய சட்டம்

நின்று தொழ முடியாதவர் உட்கார்ந்து தொழுவார். உட்காரவும் முடியாதவர் கிப்லாவை முன்னோக்கி வலப்பக்கம் சாய்ந்து படுத்தவராகத் தொழுவார். வலப்புறம் சாய்ந்து படுப்பது முஸ்தஹப்பு; இடையூறின்றி இடப்பக்கம் சாய்ந்து படுத்துத் தொழுவது மக்ரூஹ். அவ்வாறு சாய்ந்து படுக்க முடியாதவர் தலையணை வைத்து தலையை உயரமாக்கி மல்லாந்து படுத்து, வானத்தைப் பார்க்காமல் முகத்தால் கிப்லாவை முன்னோக்கித்தொழ வேண்டும். உள்ளங்கால் இரண்டையும் கிப்லாவை முன்னோக்கி கால்களை நீட்டிக் கொள்ளுதல் சுன்னத்தாகும். இவ்வாறு தொழும்போது ருகூவு, சுஜூது செய்ய முடியாதவர் சாடை செய்து தொழ வேண்டும். ருகூவுக்கு சாடை செய்வதை விடவும் அதிகமாக சுஜூதுக்கு செய்வதில் தனது நெற்றியை பூமிக்கு நெருக்கமாக ஆக்கி சாடை செய்யவேண்டும். அதுவும் இயலாவிட்டால் கை கால்களைக் கொண்டும், அதுவும் முடியா விட்டால் கண்ணிமை கொண்டும், அதுவும் இயலாவிட்டால் உள்ளத்தைக் கொண்டும் சாடை செய்து தொழுவான். நினைவிருக்கும்வரை தொழுகை கட்டாயம் என்பது நீங்காது.

وَاعْبُدْ رَبَّكَ حَتّٰى يَأْتِيَكَ الْيَقِيْنُ ۝ (15:99)

"உமக்கு மரணம் வருமவரை உம்முடைய ரப்பை வணங்குவீராக! இந்த ஆயத்தின் வெளிப்படையான, அந்தரங்கமான இரு கருத்துக்களும் ஒன்றாக அமைந்துள்ளன. ஆனால், சில அறிவீனர்கள் இதற்கு "யகீன் வரும் வரை உம்முடைய ரப்பைத் தொழுவீராக" என்ற தவறான விளக்கங்கூறி தொழவேண்டிய அவசியமில்லை என்று கூறுகின்றனர். அதாவது; யகீன் என்பதில் நான்கு வகைகள் உண்டு. முதலாவது, இல்முல் யகீன். (அல்லாஹ் ஒருவன் என்பதை உறுதியான அறிவாக அறிவது) இரண்டாவது, ஐனுல் யகீன் (அல்லாஹுதஆலாவின் திருநாமங்களுடைய தன்மைகள் பிரபஞ்சம் முழுவதும் நிறைந்திருப்பதை உறுதியான காட்சியாகக் கண்டு அறிவது) மூன்றாவது, ஹக்குல் யகீன், (அக்காட்சியில் அல்லாஹ்வைத்தவிர வேறெதுவும்

இல்லாத அறிவாக அறிவது) நான்காவது, கமாலுல் யகீன். (முந்திய மூன்று உறுதிப்பாடுகளும் அதனதன் தானத்தில் நிரம்பி இருப்பதை அறிவது. உறுதியில் நிரப்பமாகி விடுவது) இவ்வாறு நான்கு வகையான யகீன்களும் வந்துவிட்டால் வணங்க வேண்டிய அவசியமில்லை என்று கூறி வழிகெட்டும், வழி கெடுத்தும் விடுகின்றனர்.

தொழுகையாகிறது ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் மரணம் வரும்வரை கட்டாயமானதாகும். ஒருவன் உறக்கம், மறதி போன்ற இடையூறு ஏதுமின்றி லுஹர், அஸர் தொழுகைகளை சூரியன் மறையும் வரையிலும் தொழாமலிருந்தால், மற்றொருவன் மஃரிப், இஷா தொழுகைகளை கிழக்கு வெளுக்கும்வரை தொழாமலிருந்தால், இன்னும் ஒருவன் சுப்ஹு தொழுகையை சூரியன் உதிக்கும்வரை தொழாமல் இருந்தால் அவனைத் தொழும்படி ஏவிய பிறகும் தொழாமலிருந்தால் அவனுக்கு ஷரீஅத் சட்டப்படி உரிய தண்டனை கொடுக்க வேண்டும்.

முஸ்லிமான ஒருவன் தொழுகை என் மீது விதியல்ல என்று கூறினால், உடனே காஃபிராகி விடுவான். அவ்வாறு கூறிய ஒரு முஸ்லிமின் நிகாஹும் செல்லத்தகாததாகிவிடும். அவன் சொத்துரிமை பெற முடியாது. அவனுக்குச் சொத்திருந்தால் அதுவும் அனந்தரங்கொள்ளப்பட மாட்டாது. அவனுடைய சொத்தை பைத்துல் மாலில் சேர்க்கப்படும்.

## தொழுகையின் ஷர்த்துகள்

தொழுகையை ஆரம்பிப்பதற்கு முன் பத்து ஷர்த்துகள் கட்டாயமாகும். அவை தொழுகை முடியும் வரை அவனிடம் இருப்பது அவசியமாகும். முதலாவது: முஸ்லிமாக இருத்தல். இரண்டாவது: விபரம் தெரிந்தவராக இருத்தல். மூன்றாவது: ஜனாபத்து, ஹைளு, நிஃபாஸ் போன்ற பெருந்தொடக்கை விட்டும், சிறு தொடக்கை விட்டும் நீங்கி இருத்தல். நான்காவது: உடல், உடை, இடம் ஆகியவை, பொறுக்கப்படாத அசுத்தங்களை விட்டும் நீங்கி சுத்தமாக இருத்தல். ஐந்தாவது: மானத்தை மறைத்தல், அதாவது: ஆண் தொப்புளிலிருந்து முழங்கால் வரை மறைத்திட வேண்டும். பெண்ணும், அலியும் முகம்,மற்றும் மணிக்கட்டு வரை இருகைகளையும் தவிர, உடல் முழுவதையும் மறைத்திடவேண்டும். முடி, கால், நகங்கள், உள்ளங்கால் உட்பட அனைத்தையும் மறைத்திடவேண்டும். ஆறாவது: கிப்லாவை முன்னோக்குதல். அதாவது: பயம் கடுமையான நேரத்திலுள்ள தொழுகைகள், ஆகுமான பிரயாணத்தில் சுன்னத்துக் தொழுகைகள் ஆகியவற்றில் தவிர மற்ற எல்லாத் தொழுகைகளிலும் கிப்லாவை முன்னோக்கவேண்டும். ஹனஃபீ மத்ஹபில் கிப்லாவுடைய திசையை முன்னோக்கினால் போதுமானது. ஏழாவது: தன் மீது தொழுகை ஃபர்லென்பதை அறிதல். எட்டாவது: ஆஜராயிருக்கும் தொழுகையின் நேரத்தை அறிதல். ஒன்பதாவது: தொழுகை முறையை அறிதல். பத்தாவது: சுன்னத்தை விட்டும் ஃபர்லைப் பிரித்தறிதல்.

இந்தப் பத்து நிபந்தனைகளில் ஏதேனும் ஒன்று தவறினாலும் தொழுகை கூடாது. அதாவது: தொழும்பொழுது மதம் மாறி (முர்த்தத்தாகி) விடும் நினைவை வருத்தினாலும், தன் சுய நினைவு மாறினாலும், தொழும்பொழுது ஹைளு

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

ஏற்பட்டாலும், நஜீஸான பொருள் உடலில், உடையில், தொழுமிடத்தில் விழுந்து உடனே அதனை நீக்காவிட்டாலும், உடை தனது உடம்பில் மறைக்கவேண்டிய ஃபர்லான இடத்தை விட்டும் அகன்று உடனே அதை மறைக்காவிட்டாலும், தொழுகையின் நேரம் வரும் முன் தொழுதாலும், கிப்லாவை முன்னோக்குவதை விட்டும் நெஞ்சைத் திருப்பி விட்டாலும், ஃபர்லுகளில் ஏதேனும் ஒன்றை சுன்னத்தென்று நினைத்தாலும் தொழுகை கூடாது.

கிப்லாவின் திசை தெரியாத ஒருவர் சிந்தித்துப் பார்த்து ஒரு திசையை கிப்லாவாக முடிவு செய்து தொழும்போது, வேறு திசை கிப்லா என்பது தெரிந்தால் அந்தத் திசையில் திரும்பி தொழுது முடிக்க வேண்டும். இரண்டு திசையை நோக்கித் தொழுததும் சரியானதே. இவ்வாறு தெண்டித்துத் தெண்டித்து நான்கு ரகஅத்துகளை நான்கு திசையில் தொழுவதாலும் கூடும். முதல் ஆய்வை இரண்டாவது ஆய்வு முறித்து விடாது. ஆனால், கிப்லாவைத் தெரிந்ததாக நம்பப்படக்கூடிய ஒருவன் திசை தவறு என்று கூறினால், அப்பொழுது அந்த நேரம் செல்வதற்கு முன் அதனைத் திருப்பித் தொழுவான். நேரம் கடந்து விட்டால் களாச் செய்வான்.

அறிவில்லாத பாமரன் ஒருவன் தொழுகையில் செயல்கள் அனைத்தையும் ஃபர்லு என்பதாக விளங்கினாலும் குற்றமில்லை. மாறாக ஃபர்லை சுன்னத்தென்றோ, அல்லது அனைத்தையும் சுன்னத்தென்றோ விளங்கினால் தொழுகை கூடாது.

### துப்புரவு பற்றிய பாடம்

உளூ செய்வதும், ஜனாபத்து, ஹைளு, நிஃபாஸ், நஜீஸ் ஆகியவற்றை நீக்குவதும் ளளளளள மாவுன் முத்லகுன் என்னும் பொதுப்படையான தண்ணீரைக் கொண்டே செய்ய வேண்டும். அதற்கு தஹூர் என்றும் சொல்லப்படும். அதாவது துப்புரவானது, துப்புரவாக்கக்கூடியது. உளூவோ, முழுக்கோ சுன்னத்துானதாக இருந்தாலும் இந்தத் தண்ணீரைக் கொண்டேதான் நிறைவேற்றவேண்டும்.

ஃபர்லான கழுவுதலில் உபயோகிக்கப்பட்ட தண்ணீரும் (அதற்கு ளளளளளள மாவுன் முஸ்தஃமலுன் என்று சொல்லப்படும்) நஜீஸைக் கழுவுவதற்கு உபயோகிக்கப் பட்ட தண்ணீரும் (அதற்கும் முஸ்தஃமல் என்றே சொல்லப்படும்) வாடை, சுவை, நிறம் மாறிய தண்ணீரும், நஜீஸ் விழுந்த குறைவான தண்ணீரும் (அது வாடை, சுவை, நிறம் மாறாமல் இருந்தாலும் சரி), நஜீஸ் விழுந்து வாடை, சுவை, நிறம் மாறிவிட்ட அதிகமான தண்ணீரும் தொடக்கையும், நஜீஸையும் நீக்காது.

நஜீஸான தண்ணீர் இரண்டு குல்லத் அளவு இருந்து, அது வாடை, ருசி, நிறம் ஆகியவை மாறாமலிருந்தால் அது துப்புரவானதாக இருக்கும். அதுபோல் உபயோகிக்கப்பட்ட தண்ணீர் இரண்டு குல்லத் அளவிருந்தால் அதுவும் துப்புரவானதாயிருக்கும். இரண்டு குல்லத்தின் அளவு பின் விவரிக்கப்படும்.

ஃபர்லான உளூவில் உபயோகப்படுத்துவதில் முந்திய விடுத்தம் அல்லாத தண்ணீரும், (அதாவது ஒவ்வொரு உறுப்பையும் ஒரு தடவை கழுவுவது ஃபர்லு என்பதாக இருப்பதால் அதற்கு மேல் இரண்டு விடுத்தம் அதைக் கழுவுவது சுன்னத்தாக இருப்பதால் அவ்விதம் கழுவும் சுன்னத்தான கழுவுதலின் தண்ணீரும்) உளூ இருக்கும்பொழுது உளூவை புதுப்பிப்பதற்காக செய்யும் சுன்னத்தான உளூவில் உபயோகப்படுத்தப்பட்ட தண்ணீரும், அந்த உளூ நேர்ச்சையானதாக இருந்தாலும் சரி - ஃபர்ளான உறுப்புகளைக் கழுவுவதில் (உளூ செய்வதில்) உபயோகப்படுத்தப்

பட்ட தண்ணீரும் - அந்தத் தண்ணீர் உறுப்புகளை விட்டும் பிரிவதற்கு முன்னால் முஸ்தஃமலான தண்ணீராக (உபயோகப்படுத்தப்பட்ட தண்ணீராக)ஆகாது.

## பொதுப்படையான தண்ணீர் விபரம்

மழை, கடல், ஆறு, கண்மாய், ஏரி, குளம், கிணறு, வாய்க்கால், கேணி, பனி ஆகியவை போன்றவற்றின் தண்ணீராகிய இயற்கையான தண்ணீரெல்லாம் பொதுப்படையான தண்ணீராகும். (அதற்கு மாவுன் முத்லக் - என்று சொல்லப்படும்) இவையல்லாத ஒன்றுடன் தொடர்புள்ள ஆணம், சாறு, இளநீர், பனைநீர், பன்னீர் போன்றவையெல்லாம் பொதுப்படையான தண்ணீராகாது. அதுபோலவே அத்திமரத்தின் வேர், வேம்பு, வாழை மடல் போன்றவற்றிலிருந்து ஊறும் நீரும், ஆப்ரிக்கா கண்டத்தில் தண்ணீர் இல்லாத சில இடங்களில் வானில் காணப்படும் புகைபோன்ற பொருளினால் தரையில் உள்ள மரங்களில் வியர்த்து வடியும் தண்ணீரும் பொதுப்படையான தண்ணீராகாது. பொதுப்படையான தண்ணீருக்கு طَهُورٌ தஹூர் என்றும் சொல்லப்படும். அதாவது:- தான் துப்புரவாயிருப்பதுடன் பிற பொருளையும் துப்புரவாக்கக்கூடியது என்பதாகும். தாஹிர் طَاهِرٌ என்பது துப்புரவான தண்ணீராகும். ஆனால் அது பிற பொருளை துப்புரவாக்காது.

ஒரு பாத்திரத்தில் தண்ணீரும், மற்றொரு பாத்திரத்தில் பன்னீரும் இருந்து, எது தண்ணீர், எது பன்னீர் என்பது குழப்பமாகிவிட்டால் இரண்டைக் கொண்டும் இரு உளூ செய்யவேண்டும்.

ஒரு பாத்திரத்தில் துப்புரவான தண்ணீரும், மற்றொரு பாத்திரத்தில் துப்புரவற்ற தண்ணீரும் இருந்து, தடுமாற்றம் ஏற்பட்டு விட்டால், சிந்தித்துப்பார்த்தும் எது நல்ல தண்ணீர் என்பது தெரியவில்லையானால், வேறு தண்ணீரும் கிடைக்க வில்லையானால், அவ்விரண்டு தண்ணீரையும் கீழே ஊற்றி விட்டு தயம்மும் செய்து தொழ வேண்டும். கீழே ஊற்றாமல் தயம்மும் செய்தால் தயம்மும் கூடாது.

நீண்ட நாட்கள் தண்ணீர் கட்டுக்கிடையாக இருந்தால், அல்லது களிமண், பாசி, தானே உதிர்ந்த இலைகள் ஆகியவற்றினால் மாறிப்போன தண்ணீராக இருந்தாலும் அதைக் கொண்டு துப்புரவு செய்வதில் குற்றமில்லை. துப்புரவான தண்ணீர் கொதிக்கும் போது அதனை மூடி வைத்து அதிலிருந்து வியர்த்து வரும் நீராவியும் (தண்ணீரும்) தூய்மையானதாகும்.

எல்விதமான மாற்றத்தைக் கொண்டாவது தண்ணீர் என்னும் பெயர் நீங்கிவிட்டால் அதற்கு தண்ணீருடைய சட்டம் செல்லாது.

ஃபர்லான கழுவுதலில் உபயோகிக்கப்பட்ட தண்ணீர், கொஞ்சமாக இருக்கும் துப்புரவான தண்ணீரில் கலந்து விட்டால், அப்பொழுது அந்த உபயோகிக்கப்பட்ட தண்ணீரின் அளவுக்கு மாதுளம்பழச்சாறு போன்றதைக் கலந்து, அதனால் அந்தத் தண்ணீர் மாறுபடவில்லையானால் அது துப்புரவானதாயிருக்கும்.

ஃபர்லான கழுவுதலில் உபயோகிக்கப்பட்ட தண்ணீரை முஸ்தஃமல் என்று கூறப்படும். அது தானே துப்புரவானதாகும் (அதற்கு طَاهِرٌ தாஹிர் என்று சொல்லப்படும்) ஆனால், அது மற்றதையும் துப்புரவாக்காது. அதைக் கொண்டு ஃபர்லான உளூவோ, குளிப்போ நிறைவேறாது. அது நஜீஸையும் நீக்காது. அது தூய்மையாக இருப்பதால் குடிக்கலாம், குடிக்கச் செய்யலாம். (தானே துப்புரவாக இருப்பதுடன் மற்றதையும் துப்புரவாக்கக்கூடியதற்கு طَهُورٌ தஹூர் என்று சொல்லப்படும்.)

விட்டை போலுள்ள நஜீஸான பொருளை தண்ணீரில் எறியும்போது அத்தண்ணீர் ஓரிரு சொட்டுகள் தெறிப்பதால் அது நஜீஸாகாது. நஜீஸான ஓர் உடையை கொஞ்சமான தண்ணீரில் கழுவினால் அந்த உடை தூய்மையாவதுடன், அந்தத் தண்ணீர் வாடை, நிறம், சுவை ஏதும் மாறாதிருந்தால் இன்னும் அந்த உடை உறிஞ்சிக் கொண்ட தண்ணீர், எஞ்சி இருக்கும் தண்ணீரை விட அதிகமில்லாதிருந்தால் இரண்டும் தூய்மையானவையாகும். ஆனால், தண்ணீர் முஸ்தஃமலானதாகிவிடும்.

கொஞ்சமான தண்ணீரில் கண்ணுக்குத் தெரிகின்ற நஜீஸைப் போட்டால் அத்தண்ணீர் நஜீஸாகிவிடும். அந்தக் கொஞ்சத் தண்ணீரை நஜீஸான பொருளின் மீது ஊற்றினால் அப்பொருள் துப்புரவாகிவிடும். உதாரணமாக நஜீஸான கீரையின் மீது கொஞ்சம் தண்ணீரை ஊற்றினால் அது துப்புரவாகிவிடும். அந்தக் கீரையை தண்ணீரில் நனைத்தால் தண்ணீர் நஜீஸாகி விடும்.

தண்ணீரில் பொறுக்கப்படாத சில நஜீசுகள் தொழுகையில் பொறுக்கப்படும். அதாவது கொசுவின் இரத்தம், வௌவாலின் புழுக்கை போன்றவை கொஞ்சமான தண்ணீரில் விழுந்தால் அது நஜீஸாகி விடும். ஆனால் தொழும் பொழுது அவை உடலில் பட்டால் அது மன்னிக்கப்படும்.

உயிருடன் இருக்கும்போது அதன் உறுப்பை வெட்டினால் ஒலித்தோடும் இரத்தம் இல்லாத தேள், பல்லி போன்ற ஜீவராசிகள் இறந்த பின் கொஞ்சமான தண்ணீரில் விழுவதனால் அத்தண்ணீர் அசுத்தமாகாது. ஆனால், அதன் குணங்கள் மாறுபட்டால் தவிர. இதன் விபரம் பின்னால் நஜீஸுடைய பாடத்தில் சொல்லப்படும்.

இரண்டு குல்லத் அளவுக்கு குறைந்தது கொஞ்சத் தண்ணீர் என்பதாகும். அதை விடக் கூடியதும், சரியாக இரண்டு குல்லத் உள்ளதும், ஒரு இராத்தலோ அல்லது இரண்டு இராத்தலோ குறைவாக உள்ளதும் அதிகமான தண்ணீர் என்பதாகும்.

## இரண்டு குல்லத்(குல்லத்தைனி)அளவின் விவரம்

இரண்டு குல்லத் என்பதாகிறது பக்தாது இராத்தலில் ஐநூறு எடையுள்ள தண்ணீராகும். ஒரு இராத்தல் என்பது நூற்றி இருபத்தி எட்டு வெள்ளிக்காசும் ஒரு வெள்ளிக் காசில் ஏழில் நான்கு பங்கு எடையுள்ள வெள்ளிக்காசுகளுமாகும். ஒரு வெள்ளிக் காசு என்பது ஐம்பது கோதுமைகளும், ஒரு கோதுமையில் ஐந்தில் இரண்டு பங்கு எடையும் உடையதாகும்.

நீட்டல் அளவையினால் இரண்டு குல்லத் என்பதாகிறது ஒன்றேகால் முழம் நீளம், அகலம், ஆழம் உடைய ஒரு தொட்டியில் இருக்கும் தண்ணீராகும். விருத்தமான (வட்டமான) தொட்டியில் ஒரு முழ அகலம், இரண்டரை முழ ஆழமுள்ள தண்ணீர் இரண்டு குல்லத்தாகும்.

இரண்டு குல்லத் என்னும் இத்தண்ணீரில் ஃபர்லான கழுவுதலில் உபயோகிக்கப்பட்ட தண்ணீரும், நஜீஸும், நஜீஸானதும் விழுவதால் அத்தண்ணீர் அசுத்தமாகாது. ஆனால் அத்தண்ணீரின் நிறம், சுவை, வாடை, என்னும் குணங்களில் ஏதேனுமொன்று மாறினால் அது அசுத்தமாகி விடும்.

தண்ணீருள்ள இடத்திற்குத் தேவையில்லாத குங்குமம், சந்தனம் போன்ற சுத்தமான பொருட்களினால் தண்ணீர் மாறுபடாமலிருந்தால் அது ( طَهُوْر ) தஹூராயிருக்கும். தண்ணீர் அதிகமாயிருந்தாலும் நஜீஸ் விழுவதைக் கொண்டு அதன் குணங்கள் கொஞ்சமேனும் மாறுபட்டு விட்டாலும் அது அசுத்தமாகிவிடும்.

அதிகமான தண்ணீரில் ஒருவன் சிறுநீர் கழித்து, அதனால் ஒரு குமிழி உண்டாகி அது அந்தச் சிறுநீரினால் உண்டானது என்பது உறுதியானால் அது நஜீஸாயிருக்கும்.

### சிரங்கையால் அள்ளும் தண்ணீரின் விபரம்

கொஞ்சமான தண்ணீரில், கையால் அள்ளுகின்ற போது கையை ஒரு பாத்திரமாக எண்ணிக் கொண்டு அள்ளும் நிய்யத்தில்லாமல் உளுவை அல்லது முழுக்கை நிய்யத்துச் செய்து ஃபர்லான ஓர் உறுப்பை முக்கினால், அந்த உறுப்பைத் தவிர மற்ற உறுப்புகளுக்கு அந்த தண்ணீர் உபயோகிக்கப்பட்ட (முஸ்தஃமலான) தண்ணீராக ஆகி விட்டது. அந்த ஓர் உறுப்பின் தொடக்கு நீங்கி விட்டது.

தொட்டி, செம்புச் சட்டி போன்றவற்றில் இருக்கும் (இரு குல்லத்திற்குக்) குறைந்த தண்ணீரில் தொடக்கை நீக்குகிற நிய்யத்தில் உறுப்புகள் அனைத்தும் நனையும்படி ஒரே தடவையில் மூழ்கி எழுந்தால் ஜனாபத்து என்னும் பெருந்தொடக்கு நீங்கி விடும்.

இரண்டு ஜுனுபாளிகள் ஒரே நேரத்தில் நிய்யத்துச் செய்து கொஞ்சமான தண்ணீரில் மூழ்கி எழுந்தால், அவ்விருவரும் முன் பின்னாக நிய்யத்துச் செய்தார்களா? அல்லது ஒரே நேரத்தில் நிய்யத்துச் செய்தார்களா? என்பது தெரியவில்லையானால், அப்பொழுது இருவருடைய ஜனாபத்தும் நீங்கிவிடும். ஆனால் இருவரிலொருவர் மற்றவரைத் தொழுகையில் தொடருவது கூடாது.

ஒரு பட்டை அல்லது சிறிய வாளி போன்ற ஒரு பாத்திரத்தில் உள்ள கொஞ்சமான தண்ணீரை கையால் அள்ளும்போது கையைத் தண்ணீர் எடுக்கும் பாத்திரமாக நிய்யத்துச் செய்து கொள்ள வேண்டும். அப்படி நிய்யத்து செய்து அள்ளும் பொழுது கையில் இருக்கும் தண்ணீர் பாத்திரத்தினுள் விழுவதால் அந்தப் பாத்திரத்தில் உள்ள தண்ணீர் உபயோகிக்கப்பட்ட தண்ணீராக ஆகாது.

கிணற்று ஓரத்தில் நின்று தண்ணீர் இறைத்துக் குளிப்பவனுடைய கையின் தொடக்கு நீங்கு முன் இரண்டாவது வாளித் தண்ணீரில் கை விழுமாகையால் தனது கையை ஒரு பாத்திரமாக நினைத்து தண்ணீர் அள்ளுகின்ற நிய்யத்துச் செய்து கொள்ளுதல் அவசியமாகும்.

### மக்ரூஹான தண்ணீரின் விபரம்

மக்ரூஹான தண்ணீராகிறது குளிப்பதற்கோ, உளு செய்வதற்கோ மற்ற உபயோகத்திற்கோ உகந்ததல்ல.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

தங்கம், வெள்ளி அல்லாத அடித்த பாத்திரங்கள், அல்லது வார்ப்படபாத்திரங்களில் இருந்து வெயிலில் அல்லது நெருப்பில் காய்ந்து அதிக சூடேறிய தண்ணீரையும், அதிக குளிர்ச்சியான தண்ணீரையும், ஊற்றில்லாத இடத்தில் நெடு நாட்களாக கட்டுக்கிடையாக இருந்து அருவருப்பான பொருட்கள் கிடக்கும் தண்ணீரையும், மீஜான் என்ற நூலில் சொல்லியபடி அதிகமான நபர்கள் உளூ செய்த தண்ணீரையும், காஃபிர்களுடைய கோயில்களில் குளங்களிலுள்ள தண்ணீரையும் உபயோகிப்பதும் அவற்றில் உளூச் செய்வதும் மக்ரூஹ் ஆகும்.

தங்கம், வெள்ளிப்பாத்திரங்களில் களிம்பு ஏறாதுகையால் பாத்திரங்களிலுள்ள தண்ணீரில் சூடேறினால் அதனை தங்கம் வெள்ளி அல்லாத வேறு பாத்திரங்களில் மாற்றி வைத்து உபயோகிப்பது கூடும். அதனால் உடம்புக்கு கேடு ஏற்படாது. எனினும் தங்கம் வெள்ளிப்பாத்திரங்களில் தண்ணீர் வைத்துப் புழங்குவது ஹராமாகும். இவையிரண்டுமல்லாத செம்பு, பித்தளை, வெண்கலம் ஆகிய பாத்திரங்களிலுள்ள தண்ணீர் வெய்யிலில் காய்ந்து அதனை உடலில் ஊற்றினால் வெண்குஷ்டம் உண்டாகும். ஏனெனில் அவற்றில் களிம்பு இருக்கிறது. வெய்யிலினால் அல்லது நெருப்பினால் அதிகச் சூடேறிய தண்ணீர் பிறகு குளிர்ச்சியாகி விட்டால் அப்பொழுது மக்ரூஹ் என்பது இல்லை. அவ்வாறே மண்பாத்திரத்தி லிருந்து சூடேறிய தண்ணீரும் மக்ரூஹ் அல்ல.

மக்ரூஹ் என்பது நான்கு வகைகளாகும். முதலாவது மருத்துவத்திலும் மார்க்கத்திலும் மக்ரூஹ் என்பதாகும். இப்பொழுது மேலே கூறப்பட்டது போன்று. இரண்டாவது: மருத்துவத்தில் முஸ்தஹப்பு; (விரும்பத்தக்கது) மார்க்கத்தில் மக்ரூஹ். இஷாவுக்கு முன் தூங்குவது போன்று. மூன்றாவது: மருத்துவத்தில் மக்ரூஹ்; மார்க்கத்தில் முஸ்தஹப்பு. இரவில் விழித்து வணங்குவது போன்று. நான்காவது: மருத்துவத்திலும், மார்க்கத்திலும் முஸ்தஹப்பு, பேரீச்சம் பழத்தினால் நோன்பு திறப்பது போன்று. அது நோன்பினால் ஏற்படும் பார்வைக் குறைவைத் தடுக்கும்.

தண்ணீர்களிலேயே மிகச் சிறந்ததும் உயர்ந்ததுமாகிறது, நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடைய இரு விரல்களுக்கு இடையிலிருந்து பிறிட்டு ஓடிய தண்ணீராகும். அதற்கு அடுத்தது, ஜம் ஜம் நீராகும். அதற்கு அடுத்தது ஹவ்லுல் கவ்தருடைய நீராகும், அதற்குப் பிறகு உலகிலுள்ள எல்லா ஆறுகளுமாகும். ஜம் ஜம் தண்ணீரால் நஜீஸைக் கழுவுதல் சிறப்புக்கு மாறானது, மக்ரூஹ் என்று கூறப்பட்டுள்ளது.

அநியாயமாக அபகரிக்கப்பட்ட பூமியிலுள்ள தண்ணீரை உபயோகிப்பது மக்ரூஹ் ஆகும். அந்த பூமிக்கு உரியவன் பொருந்திக் கொள்ளமாட்டான் என்றிருந்தால் அது ஹராமாகும்.

## பாத்திரங்கள் பற்றிய விபரம்

தங்கம், வெள்ளி, ஐம்பொன் ஆகிய உலோகங்களினால் செய்யப்பட்ட பாத்திரங்களை உபயோகிப்பதும், அவற்றில் உளூ செய்வதும் ஹராமாகும்.

வெள்ளி, தங்கம் முலாம் பூசப்பட்ட பாத்திரத்தை நெருப்பில் வைத்தால் அது உருகி கொஞ்சமாவது தங்கமோ வெள்ளியோ வெளியாகும் என்ற நிலையிலிருந்தால் அதனை உபயோகிப்பதும் ஹராமாகும்.

தங்கம், வெள்ளி ஆகியவற்றால் செய்த சுருமாக் கோல், பல்குத்தி, காது குரும்பி வாங்கி, பாக்கு வெட்டி, சுண்ணாம்புக்கூடு, கத்திக் கூடு, காசுக்கட்டிக்கூடு, போன்றவற்றை வைத்துக் கொள்வதும், உபயோகிப்பதும், சேகரிப்பதும் ஆண், பெண் இரு பாலருக்கும் ஹராமாகும். சிறு குழந்தைகளுக்கும் பைத்தியக்காரர்களுக்கும் இப்பொருட்களை உபயோகிக்கக் கொடுப்பதும் ஹராம். பாத்திரங்கட்கு தங்கத்தினால் அண்டை போடுதல் (ஒட்டுப் போடுதல்) ஹராம். அவசியத் தேவைக்காக வெள்ளியினால் அதிகம் ஒட்டுப் போட்டுப் பற்றவைப்பதும், அழகுக்காக வெள்ளியினால் சிறிதளவு பற்ற வைப்பதும் மக்ரூஹ் ஆகும். வெள்ளி சேர்ந்திருப்பது அதிகமா? கொஞ்சமா என்று சந்தேகம் உண்டானாலும் அதனை உபயோகிப்பதும் மக்ரூஹ் ஆகும்.

தங்கத்தினால் பல் கட்டுவது கூடும். உஸ்மான் (ரலி) அவர்கள் இவ்வாறு பல் கட்டி இருந்ததை அக்காலத்தில் எவரும் குறை கூறவில்லை.

இரத்தினம், கற்பூரம் ஆகியவற்றினால் செய்யப்பட்ட பாத்திரங்கள் மக்ரூஹ் ஆகும். சந்தனம், அகில் ஆகியவற்றினால் செய்யப்பட்டவை மக்ரூஹ் அல்ல.

பித்தளை, செம்பு, வெண்கலம், தரா போன்ற பாத்திரங்களில்- முன்னால் கூறப்பட்டது போல் களிம்பு இருப்பதால்-சாப்பிடுவதும் குடிப்பதும் மக்ரூஹ்; களிம்பு இல்லாவிட்டால் மக்ரூஹ் இல்லை.

காஃபிர்களின் பாத்திரங்களும் உடைகளும் மக்ரூஹ் ஆகும். கள், சாராயம் வைத்திருக்கின்ற பாத்திரங்களையும், கோமயத்தை (பசுவின் சிறுநீரை) வணக்கமென்று கருதிக் குடித்தும், மேனியில் பூசியும் வருபவர்களுடைய பாத்திரங்களையும் உபயோகிப்பது மக்ரூஹ் ஆகும். அப்பாத்திரங்களில் அந்த நஜீஸ்கள் இருப்பதைக் கண்டுவிட்டால், அவற்றை உபயோகிப்பது ஹராம் ஆகும்.

இரவில் பாத்திரங்களை ஒரு கம்பு போன்றதைக் கொண்டாவது அகலத்தில் மூடி வைப்பதும், பிஸ்மில்லாஹ் சொல்லி வாசற்கதவுகளை அடைத்து வைப்பதும், தூங்கும் போது எண்ணெய்த்திரிகளைக் கொண்ட விளக்குகளை அணைத்து விட்டுத் தூங்குவதும் சுன்னத்தாகும். ஆனால் நிறைமாத கர்ப்பிணி, நோயாளி, அடிக்கடி விளக்கின் வெளிச்சம் தேவைப்படுபவர் வீட்டில் இருந்தால் அப்பொழுது விளக்கை அணைக்கக்கூடாது. எலி போன்ற ஜந்துக்கள் எரியும் விளக்கைத் தட்டி விட்டு வீட்டில் நெருப்புப் பிடிக்கும் அபாயமிருந்தால் விளக்கை அணைப்பது வாஜிபாகும்.

## குளிப்பைக் கடமையாக்கி வைப்பவை

குளிப்பை விதியாக்கும் ஆறு காரியங்களில் ஆண், பெண் இருவருக்கும் பொதுவானவை மூன்று; பெண்களுக்கு மட்டும் பிரத்தியேகமானவை மூன்று. பொதுவானவற்றில் முதலாவது: ஆண்குறியில் கத்னா செய்கிற அளவு பெண் குறியில்

நுழைவது. அவ்வாறு நுழைவது உயிருள்ளவர்கள், இறந்தவர்கள், அல்லது மிருகம், பறவை, மீன் எந்த உயிரினமாயிருந்தாலும் சரி. ஜின்களுக்கும் இதே சட்டந்தான். ஆணும் பெண்ணுமல்லாத அலியாக இருந்தால் அதனுடைய கத்னா அளவு நுழைய வைப்பதால், அல்லது முன் துவாரத்தில் நுழைய வைப்பதால் குளிப்பு விதியாகாது; மாறாக, பின் துவாரத்தில் நுழைய வைப்பது கொண்டு விதியாகும். இரண்டாவது: விந்து வெளியாவதாகும். அது முதல் தடவையாக இருக்க வேண்டும். அது ஒரு சொட்டாக இருந்தாலும், இரத்தத்தின் நிறமாக இருந்தாலும், வழமையான துவாரத்திலிருந்து வந்தாலும், வழமையில்லாத கெட்டியான துவாரத்திலிருந்து வந்தாலும் (அதாவது முதுகந்தண்டு ஒடிந்து அதில் இருந்து விந்து வெளியாகி வந்தாலும்) சரி, அவன் மீது குளிப்பது கடமையாகும். ஆனால், வழமையில்லாத கெட்டியில்லாத துவாரத்திலிருந்து வந்தால் குளிப்பு கடமையில்லை. மூன்றாவது: போர் புரிந்து (ஜிஹாதில்) இறந்து விடுபவரைத் தவிர–மரணம் உறுதியாகி விடுவதும் குளிப்பதை விதியாக்கும்.

பெண்களுக்கு மட்டும் பிரத்தியேகமானவற்றில் முதலாவது: மாதவிடாய் நின்று விடுவது. இரண்டாவது: பிள்ளைப்பேறு தொடக்கு நின்று விடுவது. மூன்றாவது: பிள்ளைப் பேறு தீருவது. அது ஈரமில்லாமல் இருந்தாலும் சரி.

இரட்டைப்பிள்ளைகளில் ஒரு பிள்ளை பிறந்ததற்கும் குளிப்பு கடமையாகும். பிறகு இரண்டாம் பிள்ளை பிறந்ததற்கும் கடமையாகும். இரத்தக் கட்டி, சதைக்கட்டியாக விழுந்தாலும் குளிப்பு கடமையாகும்.

ஒருவன் ஜனாபத்துடைய குளிப்பை நிறைவேற்றிய பின், தன் விந்துவை தன்னுடைய குறியினுள் செலுத்தி பிறகு அது வெளி வந்தால் அது முதன் முறையாக இல்லாததால் குளிப்பு கடமையாகாது. ஒரு பெண் ஜனாபத்துடைய குளிப்பை நிறைவேற்றிய பின் தன் குறியிலிருந்து கணவனின் விந்து வெளியாகக் கண்டால் அவளும் தன் கணவனுடன் உடலுறவு கொண்டவளாயிருந்தால் அவள் மீண்டும் குளிப்பது கடமையாகும்.

ஒருவன் பருவ வயதடைந்த மற்றொருவனுடன் சேர்ந்து படுத்திருந்து விழித்தவுடன் உடையில் அல்லது விரிப்பில் விந்து பட்டிருப்பதைக் காணுகிறான். ஆனால், அது யாரிடமிருந்து வெளியானது என்பதை அறிந்து கொள்ள முடியாதிருந்தால் இருவரும் குளிப்பது கடமையில்லை. எனினும், இருவரும் குளிக்குமுன் ஒருவரையொருவர் துயர்ந்து தொழுதல் கூடாது.

இச்சை கொண்ட ஒருவனுக்கு தன் குறியிலிருந்து வெளியானது விந்துவா? அல்லது மதியா? எனச் சந்தேகம் ஏற்பட்டால், விந்துதான் என முடிவு செய்து குளிப்பதும், மதிதான் என முடிவு செய்து அதனைக் கழுவுவதும் அவனுடைய விருப்பத்தைப் பொருத்ததாகும்.

தூங்கி விழித்தவன் தன் ஆடையில் அல்லது தனியே படுத்திருந்த விரிப்பில் விந்துவைக் கண்டால் தூக்கத்தில் அவ்வாறு வெளியானது நினைவில்லையானாலும் குளிப்பது கடமையாகும்.

## விந்துவை அறியும் விபரம்

விந்துதான் என்று அறிவதற்குரிய வழிகள் என்னவென்றால், அது வெளிப்படுவதால் இன்பமடைவது கொண்டும், அல்லது அது குதித்து விழுவது கொண்டும், அல்லது அது ஈரமாயிருக்கும்போது குழைத்தமாவின் வாடை அல்லது பாளையின் வாடையைக் கொண்டும், அல்லது அது காய்ந்திருக்கும் போது முட்டையுடைய வெள்ளைக் கருவின் வாடையைக் கொண்டும் அறியப்படும்.

ஒரு மனிதனின் மீது பல வகையான வாஜிபான குளிப்புகள் கடமையாயிருந்தால் அவை அனைத்திற்கும் ஒரே குளிப்பு போதுமானதாகும். அவ்வாறே பல வகை சுன்னத்தான குளிப்புகள் இருந்தாலும் ஒரே குளிப்பு போதுமாகும். ஜனாபத்து குளிப்பு, ஜும்ஆ குளிப்பு போன்ற வாஜிபு சுன்னத்து ஆகிய இருவிதக்குளிப்பும் ஒருவன் மீது கடமையாயிருந்தால்–இரண்டையும் நிய்யத்துச் செய்தால் இரண்டும் நிறைவேறிவிடும். இரண்டிலொன்றை நிய்யத்துச் செய்தால் நிய்யத்துச் செய்தது மட்டும் நிறைவேறும் மற்றது நிறைவேறாது.

குளிப்பு கடமையானவன் குளிக்கும் முன் தன் நகத்தை வெட்டுவதும், முடியைக் களைவதும் இரத்தங்குத்தி வாங்குவதும் மக்ரூஹ் ஆகும்.

குளிப்பு விதியான காஃபிர் ஒருவன் இஸ்லாத்திற்கு வந்தால் அவன் குஃப்ரிலிருக்கும்போது குளித்திருந்தாலும் சரி–அவன் மீது குளிப்பு கடமையாகும். அவ்விதம் குளித்தபின் தலை முடியை இறக்குவது சுன்னத்தாகும். அவ்வாறு முன்னால் குளிப்பு கடமையில்லையானால் இஸ்லாத்தில் சேர்ந்தவுடன் குளிப்பது சுன்னத்து; இப்பொழுது குளிக்கும் முன் தலை முடி இறக்குவது சுன்னத்தாகும்.

ஆண், பெண் இருவரிலும் விந்து உற்பத்தியாகும் வயதாகிறது மாதவிடாய் ஆரம்பமாகும் வயதாயிருக்கும். அந்த வயதினில் எவ்விதமாவது விந்து வெளியாவதை அறிந்தாலும், அல்லது மாதவிடாய் ஏற்பட்டாலும், அல்லது மறைவிடத்தில் சொர சொரப்பான முடி முளைத்தாலும், அல்லது பதினைந்து வயது நிரப்பமானாலும் பருவம் அடைந்து விட்டதாகத் தீர்ப்புச் செய்யப்படும். தாடி முளைப்பதாலும், அக்குள் முடி முளைப்பதாலும் மார்பு துடிப்பதாலும் பருவமடைந்ததாகச் சொல்லக் கூடாது. எனினும் இவையெல்லாம் பருவமடையும் பிராயத்தையடுக்கத்தான் உண்டாகும்.

## மாதவிடாய் விபரம்

ஆதம் (அலை) அவர்களுடைய பெண் மக்களின் மீது ஹைளு என்னும் மாதவிடாய் விதியாக்கப்பட்டுள்ளது என்று நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள். ஹவ்வா (அலைஹஸ்ஸலாம்) அவர்களுக்கு மாதவிடாய் ஏற்பட்டது பற்றி பல்வேறு காரணங்கள் சொல்லப் பட்டுள்ளன.

அவர்கள் சொர்க்கத்திலிருந்து வெளியாகும் பொழுது அத்திமரத்தின் இலையைக் கொண்டு வந்ததாகவும், பிறகு அதனைச் சாப்பிட்டதுதான் காரணம் என்றும் கூறப்பட்டுள்ளது.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

மிருகங்களில் பலவற்றிற்கு மாதவிடாய் ஏற்படுவதுண்டு. பசு, ஒட்டகம், நாய், முயல், வௌவால், மான், முள்ளங்கோழி, பல்லி இவற்றிற்கெல்லாம் மாதவிடாய் வருமென 'ஹயாத்துல் ஹயவான்' என்ற கிரந்தத்தில் எழுதப்பட்டுள்ளது.

மாதவிடாய் என்பது கர்ப்பப் பையின் கடைசியிலிருந்து வெளியாகும் இரத்தமாகும். பெண்களுக்கு சந்திரக்கணக்குப்படி ஒன்பது வயது பூர்த்தியாகும்போது, அல்லது அதற்குப் பதினைந்து தினங்களுக்கு முன்னதாக அவர்களின் முன் துவாரத்திலிருந்து வெளியாகும் இரத்தமாகும். அதில் மஞ்சள் நிறமுள்ளதும் கலங்கலானதும் மாதவிடாய்தான். மாத விடாயில் குறைந்த அளவு ஓரிரவும் ஒரு பகலுமாகும். வழக்கத்தில் உள்ளது ஆறு, ஏழு, எட்டு தினங்களாகும். அதிகபட்சம் பதினைந்து தினங்களாகும்.

ஒரு நேரம் மாதவிடாய் வருவதும், மற்றொரு நேரம் சுத்தமாவதுமாக பதினைந்து தினங்களைக் கடக்காமல் இருந்தால் அவ்வாறு வந்த இரத்தத்தின் நேரங்களையெல்லாம் கூட்டினால் ஒரு நாளுடைய அளவுக்கு இருக்குமென்றிருந்தால், அந்த நாட்கள் முழுவதும் மாத விடாயாகக் கணக்கிடப்படும்.

துப்புரவில் குறைந்தது பதினைந்து நாட்களாகும். வழக்கமாக உள்ளது ஒரு மாதத்தில் மாதவிடாய் வந்த நாட்களைத் தவிர மீதியுள்ள நாட்களாகும். அதில் அதிகபட்சத்திற்கு அளவில்லை. வாழ்நாள் முழுவதும் மாதவிடாய் இல்லாமலேயே துப்புரவாகவும் இருந்து விடலாம்.

பிள்ளைப் பேற்றின் இரத்தம், குறைந்தது ஒரு நொடியாகும். வழக்கத்திலுள்ளது நாற்பது நாட்களாகும். அதிகபட்சம் அறுபது நாட்களாகும். மாதவிடாய் பதினைந்து நாட்களுக்கு மேலும், பிள்ளைப்பேற்றின் இரத்தம் அறுபது நாட்களுக்கு மேலும் வந்தால் அது நோயினால் ஏற்படுவதென்று கூறப்படும். (அதற்கு 'பெரும்பாடு' என்றும் கூறப்படும்).

ஹவ்வா (அலைஹஸ்ஸலாம்) பூமியில் இறங்கிய காலம் முதல் கியாமத்து நாள் வரை பெண்களுக்கு மாதவிடாய் என்பது விதியாக்கப்பட்டு விட்டதால் அதனுடைய சட்டங்களைத் தீர்க்கமாய்த் தெரிந்து கொள்ள இமாம்கள் அனைவரும் முயற்சித்ததால் ஏராளமான சட்டங்கள் வெளியாக்கப்பட்டுள்ளன. அவற்றில் மறைவான சில சட்டங்களை நம்முடைய இமாம் ஷாஃபியீ (ரஹ்) அவர்கள் தெளிவாக்கி வைத்துள்ளார்கள்.

பக்தாது நகரை தோற்றுவித்த அப்பாஸிய்யா கலீஃபாக்களில் முதலாமவரான அபூ ஜஅஃபர் மன்சூர் என்பவருக்கு மகளும், ஹாரூன் ரஷீதுக்கு மனைவியுமான ஜுபைதா அம்மையார் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டிச் செல்லும்போது, மாதவிடாய் வருகிற நாளாய் இருந்தது. இதனால் மிகுந்த கவலையடைந்த ஜுபைதா அவர்கள், நாயனே! என்னுடைய கர்பத்திலிருக்கிற இரத்தத்தை இச்சமயத்தில் நீ தடை செய்திடுவாயானால் உன்னுடைய கஃபாவை நாடி ஹஜ்ஜு செய்ய வருகிறவர்களுக்கு உதவியாக எகிப்திலுள்ள நீல் நதியின் தண்ணீரை நான் கொண்டு வந்து சேர்ப்பேன் என்று துஆச்செய்தார். அவ்வாறே அவர்களுக்கு அதன் பிறகு மாதவிடாய் வரவேயில்லை. பிறகு அவருடைய பெரும் முயற்சியினால் மக்காவில் ஒரு கால்வாய்

தோண்டப்பட்டது. அது ஜுபைதா கால்வாய் என்றே இன்றளவும் கூறப்பட்டு பயன்பட்டு வருகிறது. (இப்பொழுது சவூதி அரசாங்கத்தினர் தண்ணீருக்கு ஏராளமான வசதிகளைச் செய்து விட்டதால்அக்கால்வாய் மூடப்பட்டு விட்டது.)

## நிஃபாஸின் விபரம்

நிஃபாஸ் نِفَاسْ என்னும் பிள்ளைப் பேற்றின் தொடக்கு குழந்தை பிறந்த உடனேயோ, அல்லது பதினைந்து தினங்களுக்குள்ளாகவோ வெளியாகும் இரத்தமாகும். அது ஒரு நொடியிலும் நின்றுவிடும். அது வருவதற்குரிய நடப்பு நாள் நாற்பதாகும். கூடியது அறுபது நாட்களாகும். அதன் கால அளவின் விபரம் முன்னால் கூறப்பட்டுள்ளது. ஈரமே இல்லாமலும் குழந்தை பிறக்கலாம். நிஃபாஸ் நின்ற பின் பதினைந்து நாட்களுக்குள் மறுபடி இரத்தம் காணப்பட்டால் அது மாதவிடாயாகும்.

ஈரமில்லாமல் பிள்ளை பெற்ற பிறகு பதினைந்து நாட்கள் கடந்து இரத்தம் காணப்பட்டாலும், கர்ப்பஸ்திரீ கருமாரி (பிள்ளைப்பேறு) உண்டாவதற்கு முன் ஓரிரவு ஒரு பகல் இரத்தத்தைக் கண்டாலும் அது மாதவிடாயாகும். கருமாரியுடன் (பிள்ளைப் பேற்றுடன்) வரும் இரத்தம் மாதவிடாயுமல்ல; நிஃபாஸுமல்ல.

### பெரும்பாட்டுக்காரி (நோய் இரத்தம் கண்டிருக்கும் பெண்ணு)க்குரிய சட்டம்

பெரும்பாடு (நோயினால் இரத்தம்) ஏற்படுகிற பெண்கள் ஏழு விதமாவார்கள். பிரித்தறிகிறவள், தட்டழிந்தவள், துவக்கமானவள், வழக்கமானவள், மட்டுத் திட்டத்தையும் நேரத்தையும் அறிந்தவள், இரண்டிலொன்றை மறந்தவள் இவை இரண்டையும் மறந்தவள், ஆகிய ஏழு விதமானவர்களாகும்.

வழக்கம் என்பது முன்னால் ஒரு தடவையாவது ஹைளையும் துப்புரவையும் கண்டிருப்பதாகும். இரத்தத்தின் வகையை நிறத்தைக் கொண்டும் கனத்தைக் கொண்டும் நாற்றத்தைக் கொண்டும் அறியப்படும்.

கறுப்பு, சிகப்பு, செங்கல் மங்கல், மஞ்சள், கலங்கல் ஆகிய நிறங்களில் அது வெளியாகும். ஓரிரவு ஒரு பகலுக்குக்குறையாமலும், பதினைந்து நாட்களை விட அதிகப்படாமலும் இருந்தால்தான் அது ஹைளாகும். இது பலமான சொல்லாகும்.

பிரித்தறிகிற தன்மை உடையவளுக்கு மாதவிடாய் பதினைந்து நாட்களைக் கடந்தால் முந்திய வழக்கத்தைக் கவனிக்காமல் அதிகப்படியான நாட்களை-பதினைந்தை-மாதவிடாயாக ஆக்கி மீதி நாட்களைத் துப்புரவானதாக ஆக்குவாள். ஒரு பெண்ணுடைய வழக்கம் ஐந்து நாட்களாக இருந்து, பிறகு நோய் கண்டு, பத்து நாட்கள் கறுப்பாகவும். இருபது நாட்கள் சிகப்பாகவும் இருந்தால், கறுப்புடைய பத்து நாட்களை மாதவிடாயாக ஆக்கி, மற்ற நாட்களைத் துப்புரவானதாக ஆக்குவாள். அல்லது ஐந்து நாட்கள் கறுப்பாகவும், ஐந்து நாட்கள்

சிகப்பாகவும், ஐந்து நாட்கள் கலங்கலானதாகவும் பிறகு மஞ்சளானதாகவும் கண்டால், மஞ்சளைத் தவிர மற்றதையெல்லாம் ஹைளாகக் கருதுவாள்.

வழக்கக்காரி தன் வழக்கத்தை நேரத்தினாலும் மட்டுத்திட்டத்தினாலும் ஹைளினாலும் துப்புரவினாலும் அறிந்து கொள்வாள். ஆனால், பிரித்தறிவதை வழக்கத்தைவிட முற்படுத்த வேண்டும். துவக்கமானவள் பிரித்தறியத் தகுந்தவளாயிருந்து, நான்கைந்து நாட்கள் பலமானதைக் கண்டு, பிறகு ஒரே மாதிரியாய் பலமில்லாததைக் கண்டால் பலமில்லாதது அனைத்தையும் துப்புரவானதாக ஆக்கிக் கொள்வாள். அது எத்தனை ஆண்டுகள் நீடித்தாலும் சரி.

துட்டழிந்தவள் என்பவள் ஹைளுடைய அளவையும் நேரத்தையும் மறந்தவள். அத்தகையவள் உடலுறவிலும் மற்றுமுள்ள சட்டங்களிலும் ஹைளுக்காரியைப் போன்றாவாள். ஆனால், தலாக்குடைய விஷயத்திலும், தான் நிய்யத்துச் செய்யவேண்டிய வணக்கங்களிலும் துப்புரவானவளைப் போன்றாவாள். எனவே, ஃபர்லான ஒவ்வொரு தொழுகைக்கும் குளித்துக்கொள்வாள்.

மேற்கூறப்பட்ட பெண் மாதவிடாய் நின்ற நேரம் (உதாரணமாக) மஃரிப் நேரம் தான் என்பதை அறிந்தவளாக இருந்தால் உடனே குளித்து, உளூ மட்டும் செய்து தொழுவாள். மற்ற நேரங்களுக்கு உளூ மட்டும் செய்து கொள்வாள்.ஆனால் பின் வரும் ஒவ்வொரு மஃரிபுக்கும் குளித்து உளூ மட்டும் செய்து ஒவ்வொரு நேரமும் தீட்டுத்துணியை மாற்றிக்கொள்வாள். நபி (ஸல்) அவர்கள் கூறியது போல் அத்துணிக்கு மேல் கடிவாளம் பூட்டி வரிந்து கட்டிக்கொள்வாள்.

ஒவ்வொரு நேரமும் முதலில் தன் மர்மஸ்தலத்தைக் கழுவிக் கொள்வாள். நேரம் வந்தவுடன் உளூச் செய்து தாமதமின்றி முந்தின சுன்னத்தையும் ஃபர்ளையும் தொழுவாள். ஆனால் ஜமாஅத்தை எதிர் பார்த்துச் சற்று நேரம் தாமதிக்கலாம். அந்த உளூவில் ஒரு ஃபர்லை மட்டும் தான் தொழ வேண்டும். வேறு ஃபர்லைத் தொழக்கூடாது. அவள் பிரயாணத்திலிருந்தால் இரண்டு நேரங்களின் தொழுகைகளைச் சேர்த்து (ஜம்வு செய்து) தொழும் பொழுது இரு தொழுகைகளுக்கு மிடையில் உளூ செய்து, தீட்டுத் துணியை மாற்றுகின்ற நேரம் மன்னிப்பிற்குரியதாகும்.

ஹைளு வரக்கூடிய பெண்ணுக்கு ஹராமாக்கப்பட்ட தொழுகை, குர்ஆன் ஓதுதல், இஃதிகாஃப் இருத்தல், தவாஃப் செய்தல், உடலுறவு கொள்ளுதல் போன்ற செயல்களெல்லாம் ஒரு பெரும்பாட்டுக்காரி (நோய் இரத்தம் கண்டிருக்கும் பெண்ணு)க்கு ஹராமல்ல. எனவே பெரும்பாட்டுக் காரியை இரத்தம் வெளியாகிக் கொண்டிருந்தாலும் உடலுறவு கொள்வது கூடும் (ஜாயிஸ் ஆகும்). (ஆதாரம்: இஆனத்துத் தாலிபீன்).

(ஆனால் ஹைளுக்காரியையும், நிஃபாஸுக்காரியையும் அவர்கள் சுத்தமாகி குளிப்பதற்கு முன்னால் உடலுறவு கொண்டால் அதன் மூலம் பிறக்கும் குழந்தைக்கு குஷ்டம் ஏற்படுமென்று கல்யூபி என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது)

ஆண் குறியில் ஏதேனும் நஜீஸ் பட்டிருந்தால் உடலுறவு கொள்வது ஹராமாகும். பெரும்பாட்டுக்காரி (நோய் இரத்தம் கண்டிருக்கும் பெண்) ரமழான் மாதம் முழுவதும் நோன்பு வைத்து, பிறகு ஏதாவது ஒரு மாதம் முழுவதும் நோன்பு வைத்தால் அவளுக்கு இருபத்தெட்டு நோன்புகள் தான் நிரப்பமானதாகும். மீதியுள்ள இரண்டு நோன்புகளை நிறைவேற்ற அடுத்து வரும் ஏதாவது ஒரு மாதத்தின் முந்திய பதினெட்டு நாட்களின் ஆரம்பத்தில் மூன்று நோன்புகளும், கடைசியில் மூன்று நோன்புகளும் ஆக ஆறு நோன்புகள் வைத்தால் அந்த இரண்டு நோன்புகள் கிடைத்துவிடும். ஆக இவை எல்லாவற்றையும் சேர்த்தால் அவள் முப்பது நோன்புகள் வைத்ததாக கணக்கிடப்படும்.

இத்தகைய பெண் ஒரு நோன்பைக் களா செய்ய வேண்டுமானால், முதலில் ஒரு நோன்பு பிடித்து, பிறகு மூன்றாம் நாள் ஒரு நோன்பு பிடித்து, அதன் பிறகு பதினேழாம் நாள் ஒரு நோன்பு பிடித்தால்தான் அவளுடைய ஒரு களா நோன்பு நிறைவேறும்.

ஒரு பெண் தன்னுடைய மாதவிடாயின் துவக்கத்தில் அதில் தடுமாறியவளாக இருந்து, நோய் இரத்தம் வருபவளாக ஆகிவிட்டால் அவளுக்கு மாதவிடாய் ஓரிரவும் ஒரு பகலும் என்பதாகத் தீர்ப்பளிக்கப்படும்; மற்ற இருபத்தொன்பது நாட்களும் துப்புரவு எனக் கொள்ளப்படும். அவள் கர்ப்பஸ்திரியாக இருந்தாலும் மாதவிடாய் கண்டவுடன் அதனுடைய சட்டங்கள் அனைத்தும் அவளுக்கு உண்டு. இவ்வாறே 'ஃபத்ஹுல் ஜவாத்' என்ற நூலில் எழுதப்பட்டு உள்ளது.

பெண்கள் பருவ வயதை அடைந்தவுடன் மாதவிடாயின் சட்டங்களை அறிந்து கொள்வது ஒவ்வொரு பெண்ணின் மீதும் 'ஃபர்ளு ஐன்' என்னும் கட்டாயக் கடமையாகும். பெற்றோரின் மீது அல்லது கணவனின் மீது அதனைக் கற்றுக் கொடுப்பது ஃபர்லாகும். இவ்விஷயத்தில் வெட்கப்படுவது கூடாது. மதீனாவின் அன்ஸாரிப் பெண்கள் நபி (ஸல்) அவர்களிடம் இவ்வாறானவிஷயங்களைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். நபியவர்கள் மகிழ்ச்சியடைந்து, "அன்ஸாரிப் பெண்கள் மிக நல்லவர்கள்" என்று புகழ்ந்து கூறினார்கள்.

## குளிப்பின் பாடம்

குளிப்பதற்குரிய ஷர்த்துகள் உளூவிற்குரிய ஏழு ஷர்த்துகளா யிருக்கும். (அவை உளூவுடைய பாடத்தில் கூறப்படும்) குளிப்புடைய ஃபர்லுகள் இரண்டு 1) குளிப்புடைய ஃபர்ளை நிறைவேற்றுகிறேன் என நிய்யத்து வைப்பது. 2) அந்த நிய்யத்துடன் உடல் முழுவதும் தண்ணீரை ஓட்டுவது. இமாம் ராஃபியி (ரஹ்) அவர்கள்-ஃபர்லுகள் மூன்று எனக் கூறுகிறார்கள். அதாவது: உடலின் மீது அசுத்தம் இருந்தால் முதலில் அதனை நீக்கிக் கொள்வதாகும்.

கண், வாய், செவி, மூக்கு ஆகியவற்றின் உட்புறத்தில் தண்ணீரைச் செலுத்துவது வாஜிபல்ல, முடிகளின் உட்புறமும் வெளிப்புறமும், நகங்களின்உட்புறமும், காதின் குழிக்குள் கண்ணுக்குத் தெரிகின்ற பகுதியிலும், கொப்புளங்கள், காயங்கள் ஆகியவற்றின் வெடிப்புகளிலும், கத்னா செய்யப்படாதவன் தோலின் உட்புறத்திலும், பெண்கள் குத்த வைத்து உட்காரும்போது மர்மஸ்தானத்தில் வெளிப்படும் பகுதியிலும்,

தண்ணீரைச் செலுத்துவது கட்டாயமாகும். தானாக சடை விழுந்து விட்ட உரோமங்களின் உட்புறத்தில் தண்ணீர் செலுத்துவது வாஜிபல்ல.

முடி அடர்த்தியாயிருந்தால் குளிப்பில் அதன் உள்ளும் புறமும் கழுவ வேண்டும். உளுவில் அதன் உட்புறத்தில் செலுத்துவது கட்டாயமல்ல; எனினும் அது சுன்னத்தாகும். ஏனெனில் உளு என்பது அடிக்கடி செய்ய வேண்டியிருப்பதால் அதில் சிரமம் ஏற்படும் என்பதால் உளுவில் அவ்வாறு செய்வது வாஜிபல்ல என்று ஆக்கப் பட்டுள்ளது.

## பெருந்தொடக்குடையவர்களுக்கு ஐந்து செயல்கள் ஹராம்

ஜனாபத்து என்னும் பெருந்தொடக்கு உடையவர்களுக்கு ஐந்து செயல்கள் ஹராமாகும் 1) தொழுவது 2) கஅபாவைத் தவாஃப் செய்வது 3) குர்ஆன் ஓதுவது 4) குர்ஆனைத் தொடுவது அல்லது ஓத வேண்டும் என்ற எண்ணத்தில் குர்ஆனுடைய ஆயத்துகள் எழுதப்பட்ட பலகை போன்றதைத் தொடுவது, சுமப்பது. (ஆனால் குர்ஆனுடன் அதன் தஃப்ஸீரும் கலந்து, அந்த தஃப்ஸீர் குர்ஆனுடைய எழுத்துக்களை விட அதிகமாக இருந்தால் அதனைத் தொடுவதும், சுமப்பதும் கூடும்) குர்ஆனுடைய எழுத்துக்களும் தஃப்ஸீர் உடைய எழுத்துக்களும் சமமாக இருந்தால் அல்லது கூடுதல் குறைவு என்பதில் சந்தேகமிருந்தால்-அது பற்றிய விளக்கம் பின்னால் கூறப்படும். தஃப்ஸீர் என்பது அரபி மொழியில்தான் இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. குர்ஆன் ஓதுகின்ற எண்ணமில்லாமல் பிஸ்மில்லாஹ்போல் உள்ளதை ஓதிக் கொள்ளலாம். 5) பள்ளிவாசலில் தரிபட்டிருப்பது.

ஹைளு உடைய பெண்களுக்கு மேற்கூறப்பட்ட ஐந்து செயல்களுடன் பின்வரும் மூன்று செயல்களும் ஹராமாகும். 1) அவளுடைய முழங்காலுக்கும்-தொப்புளுக்கும் இடையிலுள்ள பகுதியில் ஆண்பிள்ளை சுகம்பெறுவதற்கு இடமளிப்பது 2) உடலுறவு கொள்வது 3)நோன்பு வைப்பது ஆக எட்டுச் செயல்கள் அவளுக்கு ஹராமாகும்.

பெருந்தொடக்குள்ளவன் (ஜுனுபாளி) பள்ளிவாசலினுள் தரிபடாமல் விரைவாக நடந்து செல்வது ஹராமல்ல. ஹைளு, நிஃபாஸ் உடைய பெண்களும் இவ்வாறு தரிபடாமல் நடந்து செல்வது ஹராமல்ல. ஆனால் ஹைளு, நிஃபாஸ் உடைய இரத்தம் பள்ளியினுள் விழுந்து விடுமென்ற பயம் இல்லாதிருக்க வேண்டும். எனினும், அவ்வாறு செல்வது மக்ரூஹ் ஆகும்.

ஹைளு, நிஃபாஸ் உடைய பெண்கள் விட்ட நோன்பை துப்புரவான பின் களாச்செய்வது கட்டாயமாகும். ஆனால் விட்ட தொழுகையைக் களாச் செய்வது ஹராமாகும். ஹைளு நின்றவுடன் குளிப்பதற்கு முன் நோன்பு வைக்கலாம். ஆனால் குளிப்பதற்கு முன் உடலுறவு கொள்வது ஹராமாகும். அது மக்ரூஹ் தஹ்ரீம் என்று இமாம் சுயூத்தி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

ஹைளு, நிஃபாஸ் நின்றபின், குளிப்பதற்கு முன்னும்-அவ்வாறே பெருந் தொடக்குள்ளவன் குளிப்பதற்கு முன்னும் சாப்பிட, குடிக்க, தூங்க, மறுமுறை உடலுறவு கொள்ள நாடினால் மர்மஸ்தானத்தைக் கழுவி சுத்தம் செய்து உளுவும்

செய்து கொள்வது சுன்னத்து. இந்த சுன்னத்தின் மீது மிக்கப் பேணுதலாக இருக்க வேண்டும். தண்ணீரில்லா விட்டாலும், தண்ணீரை உபயோகிக்க முடியாவிட்டாலும் தயம்மும் செய்வது சுன்னத்தாகும்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஜுனுபாளியாக இருக்கும் நிலையில் அன்னார் பள்ளியில் தங்கியிருக்கலாம் என்பது அவர்களுக்குரிய பிரத்தியேகச் சலுகையாகும். மற்றவர்களுக்கு அது கூடாது. எனினும், ஒரு முறை அவர்கள் அவ்வாறு இருந்த போது ஒரு மனிதர் வந்து ஸலாம் சொல்லியவுடன் உடனே தயம்மும் செய்துவிட்டு பதில் கூறினார்கள்.

ஒருவன் தன் மனைவியை - அவள் ஹைளாயிருக்கும்போது மனமறிந்து உடலுறவு கொண்டால், அது ஹைளுடைய ஆரம்ப நேரமாக இருந்தால் அரைத்தங்கக்காசும், கடைசி காலமாக இருந்தால் கால் தங்கக்காசும் குற்றப்பரிகாரமாக தர்மம் செய்வது சுன்னத்தாகும்.

ஹைளு ஏற்பட்டிருப்பவள் அவள் துப்புரவாயிருக்கின்ற காலத்திலுள்ள வழக்கப்படி தொழுகை நேரங்களில் உளூச் செய்துவிட்டு முஸல்லாவில் உட்கார்ந்து குர்ஆன் அல்லாத வேறு திக்ருகளில் ஈடுபட்டிருந்தால் அவளுக்கு நன்மைகள் வழங்கப் படுமென்று "ஜம்உல் ஜவாமிஃ" என்ற கிரந்தத்தில் எழுதப்பட்டுள்ளது.

## சுன்னத்தான குளிப்புகள்

சுன்னத்தான குளிப்பு நிறைவேறுவதும், அதற்கு நன்மைகள் கிடைப்பதும் ஃபர்லான குளிப்புக்கு நியமனம் செய்யப்பட்ட தண்ணீரைக் கொண்டேயாகும்.

சுன்னத்தான குளிப்புகளில் மிகச்சிறந்தது வெள்ளிக்கிழமையின் குளிப்பாகும். இந்தக் குளிப்பு வெள்ளிக்கிழமை சுபுஹு ஸாதிக் நேரத்திற்குப் பின்னிருந்து ஜும்ஆ வரையிலாயிருக்கும். ஜும்ஆவுடைய நேரத்திற்குச் சற்றுமுன் குளிப்பது ஏற்றமாகும். ஜும்ஆ தொழுகை விதியாகாதவர்களாக இருந்தாலும், ஜும்ஆவுக்கு வரத் தகுதியில்லாத பெண்களாக இருந்தாலும் அன்று குளிப்பது சுன்னத்தாகும். அது வாஜிப் என்பதில் கருத்து வேறுபாடு உள்ளது. அதனுடைய நன்மையைப்பற்றி பல்வேறு ஹதீஸ்கள் வந்திருப்பதால் அந்த வேறுபாடுகள் ஏற்பட்டுள்ளன. ஹன்பலீ மத்ஹபில் "ஜும்ஆ அன்று குளிப்பது ஃபர்லாகும். அது தவறிவிட்டால் களா செய்வதும் ஃபர்லாகும்" என்று கூறப்பட்டுள்ளது. மேலும் அவர்களிடம் உளூவிலும் குளிப்பிலும் உறுப்புகளைத் தேய்ப்பது ஃபர்லாக இருப்பதால் களாச் செய்கின்ற குளிப்பில் உடலைத் தேய்த்துக்குளிக்காமலிருந்தால் அதையும் களாச் செய்வது ஃபர்லாக இருக்கும். இரண்டு பெருநாட்களிலும் இரவு நடுநிசியிலிருந்து மறுநாள் சூரியன் மறையும் வரை. குளிப்பது சுன்னத் தென்பதில் சுப்ஹு சாதிக்குக்குப்பின் குளிப்பது ஏற்றமாகும்.

மேலும் பின்வரும் நேரங்களிலும் இடங்களிலும் குளிப்பது சுன்னத்தாகும்.

1) ரமழான் மாதத்தின் இரவு நேரங்கள்;

2) சூரிய, சந்திர கிரகணங்கள் ஏற்பட்டபோது;

3) மழை தேடி தொழும் பொழுது;

4) மய்யித்தைக் குளிப்பாட்டியபோது;

5) மய்யித்துக்குத் தயம்மும் செய்வித்தபோது; (ஏனெனில் மய்யித்தைத் தொடுவது ஒருவனை பலகீனப்படுத்துகிறது. ஆனால் தண்ணீர் அவனை பலப்படுத்துகிறது. ஆதாரம் – பாஜூரி)

6) ஜுனுபாளியாக இல்லாத காஃபிர் இஸ்லாத்திற்கு வந்தபோது;

7) மக்காவில் அல்லது மதீனாவில் நுழையும்போது;

8) ஹஜ்ஜுக்கு அல்லது உம்ராவுக்கு இஹ்ராம் கட்டும்முன்;

9) தவாஃப் செய்யப்போகும்போது;

10) தலை, மீசை, மர்மஸ்தானம், அக்குள் ஆகிய உரோமங்களை எடுத்தபோது;

11) நகம் வெட்டியபோது;

12) இரத்தங்குத்தி வாங்கியபோது;

13) பைத்தியம், போதை, ஜன்னி ஆகியவை தெளிந்த பின்பு;

14) புதுவெள்ளம் வந்தபோது;

15) ஆண்டில் முதல் முறை மழை பெய்தபோது;

16) உடலின் நிறம், வாடை மாறுகின்ற போது;

17) அய்யாமுத்தஷ்ரீக் (ஹஜ்ஜுப் பெருநாளுக்கு அடுத்த) மூன்று நாட்கள்;

18) மினாவில் மூன்று இடங்களில் கல்லெறியச் செல்லும் போது;

19) அரஃபாத், முஸ்தலிஃபா, மினா ஆகிய இடங்களில் தங்கப் போகும்போது;

20) நபியவர்களுடைய கப்ரை ஜியாரத்து செய்யப்போகும் போது;

21) மற்றும் நபிமார்கள் வலிமார்களுடைய கப்ருகளை ஜியாரத்து செய்யப் போகும்போது;

22) குளிப்பு விதியானது சந்தேகமாகி, அது வாஜிபில்லை என்று எண்ணுகிறபோது.

மொத்தம் அறுபத்திநான்கு முழுக்குகள் சுன்னத்தான குளிப்புகளாகும்.

## குளிப்பின் சுன்னத்துகள்:

குளிப்பதற்குத் தண்ணீரை எடுக்கும்போது, அல்லது தண்ணீரில் மூழ்கும்போது:-

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ جَعَلَ الْمَاءَ طَهُوْرًا

(அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால் ஆரம்பிக்கின்றேன். தண்ணீரை சுத்தம் செய்யக்கூடியதாக ஆக்கித்தந்த அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும் உரியன) என்று ஓதுவதுடன் மேலும்

وَالْاِسْلَامَ نُوْرًا

(இஸ்லாத்தை ஒளியாக ஆக்கித்தந்த இறைவனுக்கே புகழனைத்தும்) என்று அதிகமாய்ச் சேர்த்தும் ஓதவேண்டுமென்று கூறப்பட்டுள்ளது. மேலும், நிய்யத்தை நாவினால் மொழிவதும் சுன்னத்தாகும். அதாவது :

نَوَيْتُ اَدَاءَ فَرْضِ الْغُسْلِ

"குளிப்பின் ஃபர்லை நிறைவேற்ற நிய்யத்துச் செய்தேன்" என்று கூறவேண்டும். இவ்வாறே சுன்னத்தான குளியல்களுக்கும் சொல்வது சுன்னத்தாகும்.

பிறகு மிகச் சரியான சொற்படி முதலில் உளூச் செய்துகொள்ள வேண்டும். பின்னர் வலதுபுறம் தண்ணீரை ஊற்றி உறுப்புகள் அனைத்தையும் மூன்று தடவை கழுவுவதும், அல்லது தண்ணீரில் மூழ்குவதும், வாய் கொப்பளிப்பதும், நாசிக்குத் தண்ணீர் செலுத்துவதும், கடைசியில் ஷஹாதத்து கலிமாச் சொல்வதும் சுன்னத்தாகும்.

ஹைளு, நிஃபாஸ் உடைய பெண் குளிக்கும்முன் தன்னுடைய மறைவிடத்தை நன்றாகத் தேய்த்துக் கழுவி, குளித்தபின் கஸ்தூரி, பலமணம் போன்றதைப் பஞ்சில் வைத்து அதன் மேல் பாகத்தில் வைப்பது சுன்னத்தாகும். இவ்வாறு செய்வதின் நோக்கம், அந்த இடத்தை மணமாக்குவதும், கர்ப்பமடைவதை தீவிரமாக்குவது மாயிருக்கும். இஹ்ராம் கட்டியிருப்பவள், இத்தாவில் இருப்பவள் ஆகியோரைத் தவிர மற்ற பெண்கள் இவ்வாறு செய்வது சுன்னத்து.

குளிப்பில் கிப்லாவை முன்னோக்குகிறதும், பேசாமலிருப்பதும், தேய்க்கிறதும், சதை மடிப்புகளைக் கவனித்துக் கழுவுகிறதும், அருவருப்பானதை நீக்குகிறதும், உளூவில் சொல்லப்படுகின்ற சுன்னத்தான காரியங்களில் பேணுதலாயிருக்கிறதும் சிறப்பானதாகும்.

ஃபர்லான குளிப்பின் போது சுன்னத்தான குளிப்பையும் நிய்யத்துச்செய்தால் அதுவும் நிறைவேறும்.

ஃபர்லான குளிப்பில் உளூவுடைய நிய்யத்து வைக்காமலிருந்தாலும் உளூ உண்டாகி விடும்.

குளிப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட பொதுக்குளியலறையில் குளிப்பது ஆண்களுக்கு ஆகுமாகும். பெண்களுக்கு அதில் குளிப்பது மக்ரூஹ் எனினும் பெண்களுக்கென தனிக்குளியலறை இருந்தால் அதில் அவர்கள் குளிப்பது ஆகுமாகும்.

## உளூவிற்கும் குளிப்பிற்கும் ஷர்த்துகள் ஏழு:

1) ஃபர்ளிலும், நஜீஸைக் கழுவுதலிலும் உபயோகிக்கப்படாத தண்ணீர்.

2) உறுப்புகளின் மீது தண்ணீரை ஓட்டுவது.

3) உறுப்புகளின் மீது தண்ணீர் படாமல் தடை செய்யும் பொருள் இல்லாமலிருப்பது.

4) தண்ணீரை மாறுதலடையச் செய்யும் சந்தனம் போன்றவை உறுப்புகளின் மீது இல்லாமலிருப்பது. கை, கால், நகங்களில் தானாக அடைந்துள்ள அழுக்கு, தண்ணீரைச் சேரவிடாதிருந்தால் குற்றமில்லை. ஆனால் சந்தனம், குழைத்த மாவு போன்றது மன்னிக்கப்படமாட்டாது.

5) சதா சிறு நீர் கசிவு ஏற்பட்டுக்கொண்டிருப்பதாலும், வாய்வு, வெட்டை, பெரும்பாடு ஆகியவற்றாலும் நெடுநேரம் உளூவுடன் இருக்க முடியாதவர்கள் உளூச் செய்யும் நேரம் வந்த பின் உளூச்செய்வது.

6) பிரித்தறியும் வயதை அடைதல்.

7) இஸ்லாமாயிருத்தல்.

இவை தவிர உள்ள ஷர்த்துகளின் படி ஒரு காஃபிர் குளித்தாலும் உளூ செய்தாலும் அவனுடைய தொடக்கு நீங்காது.

பெருந்தொடக்குள்ளவன் தன் உடலிலுள்ள நகம், முடி போன்றவற்றைக் களைவது மக்ரூஹ் ஆகும்.

## உளூவின் பாடம்

**உளூவின் ஃபர்லுகள் ஆறு:**

1. முதலாவது: நிய்யத்துச் செய்தல். அதாவது: உளூவின் ஃபர்ளை இறுக்குகிறேன், அல்லது உளூச் செய்கிறேன் என்று, அல்லது தொடக்கை விட்டு துப்புரவு செய்கிறேன் என்று நிய்யத்துச் செய்வதாகும். ஆனால், குளிப்பில் இவ்வாறு குளிக்கிறேன் என்று சொன்னால் மட்டும் போதாது. (நிய்யத்து என்பது ஹனஃபீ மத்ஹபில் ஃபர்ல் இல்லை)

2. இரண்டாவது: அந்த நிய்யத்துடன் முகத்தைக் கழுவுதல். முகம் என்பது, நீளத்தில் பெரும்பாலானவர்களுக்கு தலையின் முன் பகுதியில் முடி முளைக்கும் இடத்திலிருந்து தாழ்வாய்க் கட்டையின் கீழ்ப்பகுதியிலுள்ள நாடிக்குழி வரைக்கும், அகலத்தில் இரண்டு காதுகளுக்கும் மத்தியிலுள்ள பகுதியுமாகும். முகத்தின் இப்பகுதியிலுள்ள ரோமம், மேனி அனைத்தையும் கழுவ வேண்டும்.

3. மூன்றாவது: இரு கைகளையும் முழங்கை உட்பட கழுவுதல்.

4. நான்காவது: தலையில் சில பகுதியை மஸ்ஹு செய்வது. (ஹனஃபீ மத்ஹப் பின்படி தலையில் நாலில் ஒருபகுதியை மஸ்ஹு செய்வதும், மஸ்ஹை முன்நெற்றி ரோமத்திலிருந்து துவக்குவதும் ஃபர்லாகும். ஆனால் மாலிக் மத்ஹபின் படி தலை முழுவதையும் மஸ்ஹு செய்வது ஃபர்லாகும்)

5. ஐந்தாவது: இரு கால்களையும் பரண்டை (கணைக்கால்)முளி உட்படக் கழுவுதல்.

6. ஆறாவது: இங்கு சொல்லிய முறைப்படி வரிசையாய் முன் பின்னின்றி (தர்த்தீபாய்) உளூச் செய்வது. (தர்த்தீப் என்பது ஹனஃபீ மத்ஹபில் ஃபர்ல் இல்லை)

குளிப்பிலும் உளூவிலும் வெளிப்படையாக உள்ள உறுப்புகளில் தண்ணீர் அடைய வளைவது ஃபர்லாகும். எனவே ஒருவனுடைய காலில் முள் தைத்து அந்த வாய் திறந்திருந்தால், அதனைப் பிடுங்குவதும், அவ்விடத்தைக் கழுவுவதும் வாஜிபாகும். பிடுங்குவதால் அதிக வலி ஏற்படுமென்றிருந்தால் தயம்மும் செய்வதும் மற்ற இடங்களைக் கழுவுவதும் வாஜிபாகும். ஆனால், சிறிய முள் ஒன்று தைத்து, அதனைப்பிடுங்கினால் பிடுங்கின இடம் இடைவெளியில்லாமல் மூடிக்கொள்ளும் என்றிருந்தால் அதனைப் பிடுங்குவது வாஜிபல்ல. அதனைப்பிடுங்காமல் உளூச் செய்யலாம்.

உளூச் செய்த பின் ஃபர்லான விஷயங்களில் ஏதேனும் ஒன்றில் சந்தேகம் வந்தால் அது எவ்வித இடையூறுமாகாது. உளூச் செய்து முடிக்கும்முன் அவ்வாறு சந்தேகம் வந்தால், எந்த உறுப்பில் சந்தேகம் ஏற்படுகிறதோ அங்கிருந்து மீண்டும் தொடங்கி செய்து முடிப்பான். குளிப்பிலும் இவ்வாறே செய்யவேண்டும்.

ஒருவருக்கு உளூச்செய்தது நினைவிருக்கிறது. ஆனால் உளூ முறிந்து விட்டது என்பது நினைவில்லையென்றால் அவர் அப்படியே தொழலாம்.

ஒருவன உளூவுடைய நிய்யத்துச் செய்து தண்ணீரில் மூழ்கினாலும், அல்லது தண்ணீரை எடுத்து மேனியில் ஊற்றினாலும், பெய்கின்ற மழையில் நின்று தண்ணீர் உறுப்புகளில் முழுமையாகச் சேர்ந்தாலும் உளூ உண்டாகிவிடும். தண்ணீரில் மூழ்கும் போது உளூச் செய்கின்ற நேர அளவு அதில் தரிபடாவிட்டாலும் கூடும். மற்றவற்றில் உளூவுடைய உறுப்புகள் தர்த்தீபாய் (வரிசைக்கிரமமாய்) நனைவது ஷர்த்தாகும்.

## உளூவுடைய சுன்னத்துகள்

உளூவுடைய சுன்னத்துகள் முப்பத்தாறு: 1) கை கழுவும் போது அவூது ஓதுவது. 2) பிஸ்மில்லாஹ் சொல்வது. ஆரம்பத்தில் இதனை ஓத மறந்து விட்டால் இடையில் நினைவு வந்தவுடன் பிஸ்மில்லாஹி அவ்வலஹு வ ஆகிரஹு என்று ஓதிக் கொள்ள வேண்டும். அவூது பிஸ்மியை முழுமையாகச் சொல்லவேண்டும். மிஸ்பாஹ் என்ற நூலில்

وَقُلْ رَّبِّ اَعُوْذُ بِكَ مِنْ هَمَزَاتِ الشَّيَاطِيْنِ
(23 :97) وَاَعُوْذُ بِكَ رَبِّ اَنْ يَّحْضُرُوْنِ.

# மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

என்று ஓதுவதுதான் அந்த நிலைக்குப் பொருத்தமானது என்று எழுதப்பட்டுள்ளது. உளூச் செய்யும் தண்ணீர் ஹலாலாக இல்லா விட்டாலும் பிஸ்மில்லாஹ் சொல்வது சுன்னத்தாகும்.

3) கிப்லாவை முன்னோக்குவது. பெரிய ஹவுள் போன்றதில் அதிகமான மக்கள் உளூச் செய்யும்பொழுது இட நெருக்கடியால் கிப்லாவை முன்னோக்க முடியாவிட்டாலும், கிப்லாவை முன்னோக்க வேண்டுமென்ற எண்ணமிருந்தால் அதன் சிறப்பு கிடைத்து விடும். சிறிய ஹவுளிலும் அவ்வாறுதான்.

4) முன் கைகள் இரண்டையும் மணிக்கட்டு வரை கழுவுவது.

5) அந்த நேரத்தில் உளூவுடைய சுன்னத்தை நிய்யத்துச் செய்வது. (அதாவது:- மணிக்கட்டுகள் வரை முன் கைகளை கழுவும்போது உளூவின் ஃபர்ளையும் சுன்னத்தையும் நிறைவேற்றுவதாக மனதில் நிய்யத்து வைத்து வாயால் பிஸ்மி ஓதவேண்டும்.)

6) சாய்த்துக் கழுவும் கலயம் போன்ற பாத்திரத்தை இடப்புறம் வைப்பதும், கையினால் அள்ளிக் கழுவும் பெரிய பாத்திரத்தை வலப்புறம் வைத்துக் கொள்வதுமாகும்.

7) மிஸ்வாக்குச் செய்வது.

### மிஸ்வாக்கின் பலன்கள்

மிஸ்வாக்குச் செய்வதால் இருபத்திரண்டு பலன்கள் இருப்பதாகச் சொல்லப்பட்டுள்ளது.

நஜீஸான குச்சி, விஷத்தன்மை உடையது, கரி, செங்கல், மண் ஆகியவை அல்லாத சொறசொறப்பான பொருளினால் சுன்னத்துடைய நிய்யத்தில் மிஸ்வாக்குச் செய்வது சுன்னத்தை உண்டாக்கும். தன்னுடைய விரல் சொறசொறப்பாக இருந்தாலும் சரியான சொற்படி அதனால் மிஸ்வாக்குச் செய்தால் சுன்னத்துண்டாகாது. பிறருடைய விரல் சொறசொறப்பாக இருந்தால் அதன் மூலம் மிஸ்வாக்குச் செய்தால் சுன்னத்து உண்டாகும்.

நல்ல மணமுள்ள ஒரு சாண் அளவுக்கு மேல் போகாத ஒரு காய்ந்த குச்சியைத் தண்ணீரால் நனைத்து மிஸ்வாக்குச் செய்வது ஏற்றமாகும். அவற்றில் உகா மரத்தின் வேர், பிறகு அதன் குச்சி, பிறகு அதிக சொரசொரப்பான பயன் தரும் குச்சி சிறப்பானதாகும்.

பிறருடைய மிஸ்வாக்கை அவருடைய ஒப்புதலின்றி எடுத்துத் துலக்குவது ஹராமாகும். அவருடைய ஒப்புதல் கிடைத்தாலும் அதைக் கொண்டு துலக்குவது மக்ருஹ் ஆகும். அதனால் மறதி உண்டாகும். நோன்பாளியல்லாதவன் மிஸ்வாக்குச்

செய்யும்போது முதலில் ஏற்படும் உமிழ் நீரைக் கொஞ்சம் விழுங்குவது சுன்னத்தாகும். அது பல நோய்களுக்கு மருந்தாகும் என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது. அதன் பிறகு எச்சிலை விழுங்குவதும் மிஸ்வாக்கைச் சப்புவதும் மக்ரூஹ் ஆகும்.

மிஸ்வாக்குக் குச்சியைத் தன் காதின் மேல் அல்லது தலைப் பாகையில் வைத்துக் கொள்வது தவறில்லை. ஆனால், தரையில் படுக்க வைப்பது மக்ரூஹ். "மிஸ்வாக்கைத் தரையில் படுக்க வைத்து அதனால் பைத்தியம் பிடித்தால் அவன் தன்னையல்லாமல் வேறு எவரையும் குறை கூற வேண்டாம்" என்று ஜுபைர் (ரலி) جُبَيْر அவர்களின் வாயிலாக அறிவிக்கப் பட்டுள்ளது.

மாதுளம் குச்சி, துளசி போன்ற வாசனைச் செடிகளின் குச்சி போன்றவற்றாலும், அரத்தினாலும் மிஸ்வாக்குச் செய்வது மக்ரூஹ். "நஜீஸ் உள்ள குச்சி, விஷத்தன்மையுள்ள குச்சி போன்றவற்றினால் மிஸ் வாக்குச் செய்வது ஹராம் என்றிருந்தாலும், அவற்றினால் செய்தால் சுன்னத்து உண்டாகிவிடும்" என துஹ்ஃபா என்ற நூலில் கூறப் பட்டுள்ளது.

"மிஸ்வாக்குச் செய்த பின் அதனைக் கழுவாமல் கீழே வைப்பது மக்ரூஹ்" என்பதாக ஹஸன் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள். அவ்வாறு வைத்தால் அதனைக் கொண்டு ஷைத்தான் மிஸ்வாக்குச் செய்வான் என்றும் கூறியுள்ளார்கள்.

மிஸ்வாக்குச் செய்து துப்பிய உமிழ் நீரை மறைத்து விட வேண்டும். இல்லாவிடில் ஷைத்தான் அதைக் கொண்டு விளையாடுவான் என்று சிலர் கூறுகின்றனர். அந்த எச்சிலைத் தன் உடைகளின் மீது துப்பிக் கொள்வதால் ஆபத்து உண்டாகும் என்றும் கூறப் பட்டுள்ளது.

மிஸ்வாக்கு குச்சியின் இரண்டு தலைப்புகளைக் கொண்டும் பல் துலக்குவது மக்ரூஹ் ஆகும். பெருவிரலையும் சுண்டு விரலையும் குச்சிக்குக் கீழே வைத்து, மற்ற மூன்று விரல்களையும் மேலே வைத்து மிஸ்வாக்கைப் பிடிப்பது சுன்னத்து. விரல்கள் முழுவதையும் கொண்டு மூடிப்பிடிப்பது மக்ரூஹ். அவ்வாறு பிடித்துத் துலக்குவது மூல வியாதியை உண்டாக்குமெனக் கூறப்பட்டுள்ளது. பல் துலக்கிய மிஸ்வாக்கைக் கழுவாமல் வைப்பது மக்ரூஹ் ஆகும்.

உளுவில் இரண்டு தடவை மிஸ்வாக்குச் செய்வது சுன்னத்தாகும். உளுவுக்காக பிஸ்மி சொல்லும் முன் ஒரு தடவை. அது பிஸ்மிக்காகச் செய்யப்படும் மிஸ்வாக்காகும். பிறகு முன்கை கழுவிய பின் வாய் கொப்பளிக்கும் முன் இரண்டாவது தடவை. இது உளுவிற்காகச் செய்யப்படும் மிஸ்வாக்காகும்.

மிஸ்வாக்குச் செய்வதற்கு பிஸ்மில்லாஹ் சொல்வது அவசிய மாகவும், அதுபோல் பிஸ்மில்லாஹ்வுக்கு மிஸ்வாக்கு அவசிய மாகவும் இருப்பதால், உளுவுடைய சுன்னத்துகளில் செயல் அளவில் உள்ள முதல் சுன்னத்து மிஸ்வாக்குச் செய்தல் என்பதாகவும், சொல் அளவில் உள்ள முதல் சுன்னத்து பிஸ்மில்லாஹ் சொல்வது என்பதாகவும் கூறப்பட்டுள்ளது.

மிஸ்வாக்குச் செய்வதால் எழுபது வகையான பலன்கள் இருப்பதாக அறிஞர்களில் சிலர் (வைத்திய நிபுணர்கள்) எழுதியுள்ளனர். உணவைச் செறிக்கச் செய்தல், சளியை முறித்தல், இரத்தத்தை சுத்தம் செய்தல், பித்தம் தொடர்பான பல நோய்களைக் குணப்படுத்துதல் போன்ற பல வகையான பலன்கள் அதனால் உண்டாவதாகக் கூறப்பட்டுள்ளது. மேலும் ஹதீஸில்:-

مَنْ اَكَلَ الْبَغْبَغَةَ وَقَذَفَ الْوَغْوَغَةَ وَاسْتَعْمَلَ الْخَشَبَتَيْنِ اَمِنَ مِنَ الشُّوْصِ وَاللُّوْصِ وَالْعِلُّوْصِ

("சுஃப்ராவில்)விரிப்பில் விழுந்ததை எடுத்துச் சாப்பிட்டு (இரு குச்சிகளை உபயோகித்தால் அதாவது) பல் குத்தும் குச்சியைக் கொண்டு பல்லிடுக்கிலுள்ளதை எடுத்தெறிந்து, மிஸ்வாக்கைக்கொண்டு பல் துலக்கினால், கண்வலி, காதுக்குத்தல், வயிற்றுவலி ஆகிய நோய்கள் அணுகா" என்றும் அருளப்பட்டுள்ளது.

## மிஸ்வாக்குச் செய்தல் சுன்னத்தான இடங்கள் பின்வருமாறு:

1) ஒவ்வொரு தொழுகையிலும் தக்பீர் கட்டுவதற்குச் சற்று முன். 2) ஜனாஸாத் தொழுகைக்கு முன். 3) திலாவத் ஸஜ்தாவிற்கு முன் 4) ஷுக்ருடைய ஸஜ்தாவிற்கு முன். இவற்றைத் தயம்முமினால் செய்தாலும் சரி. 5) உணவு சாப்பிடும் முன்னும், சாப்பிட்ட பின்னும். 6) வாய் நாற்றமெடுக்கும்போது. 7) தூங்குவதற்கு முன், 8) தூங்கி விழித்தபோது. 9) மரண வேதனையின்போது 10) உபதேசம், ஹதீஸ் கூறும்போது. 11) குத்பா ஓதும் போது 12) குர்ஆன் ஓதும்போது. 13) திக்ரு செய்யும் போது. 14) தன் வீட்டில் நுழையும் போது. 15) வித்ரு தொழுத பிறகு 16) ஸஹர் நேரம். 17) குளிக்கும்போது 18) ஒவ்வொரு உளூவின் போதும்.

நோன்பாளி மதியத்திற்குப் பிறகு மிஸ்வாக்குச் செய்வது மக்ரூஹ். ஆனால், வாய் அதிக நாற்றமுடையதாய் இருந்தால் செய்யலாம். நாவின் நீளவாட்டத்திலும், பல்லின் அகல வாட்டத்திலும் மிஸ்வாக்குச் செய்வது சுன்னத்து. இதற்கு மாற்றமாகச் செய்வது மக்ரூஹ். மிஸ்வாக்குச் செய்து விட்டுத் தரையில் வைத்ததைக் கழுவாமல் மீண்டும் மிஸ்வாக்குச் செய்வது மக்ரூஹ். மிஸ்வாக்குச் குச்சியில் அழுக்கு நாற்றம் ஏதேனும் இருந்தால் அதனைக் கழுவுவது சுன்னத்து.

பல்லில்லாதவர்களும் மிஸ்வாக்குச் செய்வது சுன்னத்து. தங்கம், வெள்ளியினால் பல் கட்டியிருப்பவர்களுக்கும் அது சுன்னத்து. கண்வலி போன்ற ஏதேனும் ஒரு நோயின் காரணத்தால் மிஸ்வாக்குச் செய்ய முடியாதவர் முடிந்த மட்டும் இலேசான முறையில் செய்து கொள்வார்.

மிஸ்வாக்குச் செய்வதால் ஏராளமான பலன்கள் இருக்கின்றன. அது நபி இப்றாஹீம் (அலை) அவர்கள் முதலாக எல்லா நபிமார்களின் வணக்கமாகவும் முஹம்மது (ஸல்) அவர்களின் மீது ஃபர்ளாகவும் இருந்தது.

உளுவுடைய சுன்னத்துகளில் எட்டாவது: 8) பல் குத்துவது. 9) வாய் கொப்பளிப்பது, இதில் தலையை நிமிர்த்தி, தொண்டை வரை தண்ணீரைச் செலுத்தி களைத்துக் காறி கொப்பளிக்கவேண்டும். 10) நாசிக்குத் தண்ணீர் செலுத்துவது 11) இவ்விரண்டையும் ஒரு தடவையில் எடுத்த தண்ணீரில் சேர்த்துச் செய்வது. 12) நோன்பாளி யல்லாதவர் இவையிரண்டையும் மிகைப்பு படுத்திச் செய்வது. 13) முகங்கழுவும் போது காதுகளிலும் முன் தலையிலும் தாழ்வாய் கட்டையின் கீழ்பகுதியிலும் சிறிது பாகத்தைச் சேர்த்துக் கழுவுவது. 14) முகத்தில் மேற்புறமிருந்தும், கையில் முன் கையிலிருந்தும், தலையில் முன்புறமிருந்தும், காலில் விரல் நுனியிலிருந்தும் துவக்கிக் கழுவுவது. 15) கை கழுவும் போது அக்குள் வரை சேர்த்துக்கழுவுவது 16) தலை முழுவதையும் மஸ்ஹு செய்வது 17) தலையில் முடி அதிகமாயிருந்தால் இரு கையின் பெருவிரல்களையும் தலையின் இரு பொட்டுகளில் வைத்து இரு கலிமா விரல்களையும் தலையின் முன் புறத்தில் ஒன்று சேர்த்து வைத்து அந்தக் கலிமாவிரல்களை பிடரிவரை கொண்டு சென்று மீண்டும் துவக்கிய இடத்துக்கு மடக்கிக்கொண்டு வந்து முடிப்பது 18) இரு காதுகளையும் பெரு விரலால் வெளிப்புறமும், கலிமா விரலால் உட்புறமும் மஸ்ஹு செய்வது 19) புதிய தண்ணீர் எடுத்து இரு சுண்டு விரல்களாலும் இருகாதின் குழிகளையும் மஸ்ஹு செய்வது. 20) கால்விரல்களைக் கோதிக் கழுவுவது. அதாவது: இடது கை சுண்டு விரலால் வலது காலின் சுண்டு விரலில் கீழ்பாகத்திலிருந்து ஆரம்பித்து இடது கால் சுண்டு விரல் வரை எல்லா விரல்களின் இடுக்குகளையும் நன்றாகத் தேய்த்துக்கழுவுவது 21) இரு கால்களையும் குதிரைமுகம் முடிய (முழங்கால் வரை) கழுவுவது. 22) முதல் உறுப்பு உலர்ந்து விடுமுன் அடுத்த உறுப்பைக் கழுவுவது. இது சுன்னத்தாகும். (இந்த முறை மாலிக் மத்ஹபில் ஃபர்லென்று கூறப்பட்டுள்ளது) எனினும் முன் உறுப்பைக் கழுவி முடித்தவுடன் அடுத்த உறுப்பைக் கழுவுவது ஏற்றமாகும். 23) உறுப்புகளை நன்றாகத் தேய்த்துக் கழுவுவது. இது வாஜிப் என்றும் கூறப்பட்டுள்ளது. 24) உறுப்புகளில் இடதை விட வலதை முற்படுத்துவது. ஆனால், இரு காதுகளை மஸ்ஹு செய்யும்போதும், இரு கன்னங்கள், மணிக்கட்டு வரை இரு முன்னங்கைகள் ஆகியவற்றைக் கழுவும் போதும் இரண்டையும் சேர்த்துச் செய்வது சுன்னத்து. இவைதவிர மற்ற உறுப்புகளில் வலதை விட இடதை முற்படுத்துவது மக்ரூஹ்.

இமாம் இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: உளூவில் ஓர் உறுப்புண்டு. அதில் பன்னிரண்டு தடவை தண்ணீர் படுவது சுன்னத்தாகும். முகத்தை அடைய வளைந்து கழுவும் போது மூன்று தடவை, தலைக்கு மஸ்ஹு செய்யும் போது மூன்று தடவை, இரண்டு காதுகளையும் மஸ்ஹு செய்யும் போது மூன்று தடவை, காது துவாரங்களுக்கு மஸ்ஹு செய்யும்போது மூன்று தடவை. அந்த உறுப்பு காதுதான். மேற்கூறியவாறு பன்னிரண்டு தடவை ஒவ்வொரு காதிலும் தண்ணீர் படுவது ஏற்படுகிறது. இரண்டு காதுகளுக்கும் இருபத்து நான்கு தடவை ஆகிறது.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

### சங்கைக்குரிய செயல்களில் வலதை முற்படுத்துவது

வலது கையினால் வேலையைத் துவக்குவதும், கொடுப்பதும், வாங்குவதும் சுன்னத்தென்பது சங்கைக்குரிய செயல்களிலும் இடங்களிலுமாகும். அதாவது: ஒருவரிடம் ஒரு பொருளைக் கொடுப்பது, வாங்குவது, ஆடை அணிவது, காலணி அணிவது, சுருமாப் போடுவது, மிஸ்வாக் செய்வது, நகம் வெட்டுவது, மீசை கத்தரிப்பது, தலைமுடி, அக்குள் முடி, அரை முடி ஆகியவற்றை நீக்குவது, முஸ்லிம்களின் வீடுகளிலும், பள்ளிவாசல்களிலும், மத்ரசாக்களிலும், சுப்ருஸ்தான்களிலும் நுழைவது, சங்கைக்குரிய மிருகங்களுக்குத் தீனி கொடுப்பது, தண்ணீர் புகட்டுவது ஆகியவை போன்ற செயல்களைச் செய்யும் போது வலதை முற்படுத்துவது சுன்னத்தாகும்.

மேற்கூறப்பட்ட இடங்களிலிருந்து வெளியாகும் போதும், அசுத்தமான பொருள்களை துப்புரவு செய்யும் போதும், மல அறை, குளியலறை, ஆட்டு, மாட்டு மந்தை, அருவருப்பான இடங்கள் ஆகியவற்றில் நுழையும்போதும், துணியைக் கழற்றும்போதும், செருப்பைக்கழற்றும் போதும், டேலா பிடிக்கும்போதும் இடதை முற்படுத்திச் செய்யவேண்டும். 25)கண்களிலுள்ள நான்கு குழிகளையும் மடிப்புகளையும் சதையையும் தேய்த்துக் கழுவுவது 26) அடர்ந்த தாடியைத் தண்ணீரால் நனைத்த விரல்களைக் கொண்டு கீழ்ப்பக்கமாகக் கோதிக் கழுவுவது. அடர்த்தியில்லாத தாடியாயிருந்தால் அது முகத்துடன் சேர்ந்து விட்டதால் அதனைக் குடைந்து கழுவுவது வாஜிபாகும்.

27) விரல்களைக் கோதிக் கழுவுவது.

28) தேவையற்ற பேச்சுக்களைப் பேசாமலிருப்பது.

29) தண்ணீரை ஊற்றுவதில் பிறருடைய உதவியைத் தேடாமலிருப்பது. நோயாளியாய், இயலாதவராய், இருந்தால் தவிர.

30) நோயில்லாதவர், உளூச் செய்தபின் உறுப்புக்களைத் துடைக்காமலிருப்பது.

31) ஒவ்வோர் உறுப்பிற்கும் ஷஹாதத் கலிமாவை மும் மூன்று தடவை ஓதுவது.

32) கழுவுவதையும் மஸ்ஹையும் மும்மூன்று விடுத்தும் செய்கிறது.

33) நோன்பில்லாதவர் உளூச் செய்தபின் உளூவின் மீதித் தண்ணீரிலிருந்து கொஞ்சம் குடிப்பது (அப்படிக்குடிப்பதால் நோய்களுக்கு நிவாரணம் கிடைக்கின்றது என்று ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது)

34) உடுமானத்துக்குள் கொஞ்சம் தண்ணீரைத் தெளித்துக் கொள்வது.

35) உளூச் செய்தபின் கிப்லாவை முன்னோக்கிப்பார்வையை உயர்த்தி, கைகளை ஏந்தி பின் வரும் துஆவை மூன்று தடவை ஓதுவது.(அது இருள் நேரமாக இருந்தாலும், அவன் பார்வையற்றவனாக இருந்தாலும் சரி):-

أَشْهَدُ أَنْ لَّآ إِلٰهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ وَأَشْهَدُ أَنَّ
مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُوْلُهُ . سُبْحَانَكَ اللّٰهُمَّ وَبِحَمْدِكَ أَشْهَدُ

اَنْ لَّآ اِلٰهَ اِلَّا اَنْتَ اَسْتَغْفِرُكَ وَاَتُوْبُ اِلَيْكَ. اَللّٰهُمَّ اجْعَلْنِيْ مِنَ
التَّوَّابِيْنَ وَاجْعَلْنِيْ مِنَ الْمُتَطَهِّرِيْنَ وَاجْعَلْنِيْ مِنْ عِبَادِكَ الصّٰلِحِيْنَ.

36) உயர்த்திய கைகளை துஆ ஓதியபின் தாழ்த்திக் கொண்டு இன்னா அன்ஜல்னாஹு சூராவை மூன்று தடவை ஓதுவது.(இத்துடன் உளூச்செய்யும் பொழுதே செய்யவேண்டிய சுன்னத்தான செயல்கள் முப்பத்தியாறும் முடிந்து விட்டன)

37) பிறகு உளூவுடைய தண்ணீர் உலர்வதற்குமுன் உளூவுடைய சுன்னத்து இரண்டு ரக்அத்துகள் தொழுவதும் சுன்னத்தாகும். இந்தத் தொழுகையில் முதல் ரக் அத்தில் ஸூரத்துல் ஃபாத்திஹாவுக்குப்பின்

وَلَوْ اَنَّهُمْ اِذْ ظَّلَمُوْٓا اَنْفُسَهُمْ جَآءُوْكَ فَاسْتَغْفَرُوا اللّٰهَ
وَاسْتَغْفَرَ لَهُمُ الرَّسُوْلُ لَوَجَدُوا اللّٰهَ تَوَّابًا رَّحِيْمًا (4 :64)

என்ற ஆயத்தையும், இரண்டாவது ரக் அத்தில் ஸூரத்துல் ஃபாத்திஹாவுக்குப்பின்

وَمَنْ يَّعْمَلْ سُوْٓءًا اَوْ يَظْلِمْ نَفْسَهٗ ثُمَّ يَسْتَغْفِرِ اللّٰهَ يَجِدِ
اللّٰهَ غَفُوْرًا رَّحِيْمًا (4:110).

என்ற ஆயத்தையும் ஓதவும்.

## உளூவின் சில சட்டங்கள்.

உளூவுடைய செயல்களை மூன்று தடவையைவிட அதிகப்படுத்துவதும் குறைப்பதும் மக்ரூஹ் ஆகும்.

வக்ஃபு செய்யப்பட்ட தண்ணீரில் அதிகப்படியாக விரயம் செய்வது ஹராமாகும். உளூவுக்கென்றே குறிப்பாக்கப்பட்ட தண்ணீரை வேறு வகைக்குச் செலவு செய்வதும், குடிப்பதற்கென்று குறிப்பாக்கப்பட்ட தண்ணீரை உளூவுக்கு உபயோகிப்பதும் ஹராமாகும்.

ஃபர்லான கழுவுதலில் ஒரு தடவையில் அந்த உறுப்பு முழுவதும் நனையாவிட்டால், இரண்டாம் கழுவுதலை அத்துடன் சேர்த்து ஒரு தடவை என்பதாக எண்ணப்பட வேண்டும். அத்தகைய நிலையில் மூன்று தடவையைக் காண அதிகப்படுத்துவது மக்ரூஹ் ஆகாது.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

உளுவின் சுன்னத்துகளையெல்லாம் செய்து கொண்டிருந்தால் நேரம் களாவாகி விடும் என்றிருந்தால் அல்லது இருக்கும் தண்ணீர் ஃபர்லுகளுக்கு மட்டுந்தான் உபயோகிக்க முடியுமென்றிருந்தால், ஃபர்லின் மீது மட்டும் போதுமாக்கிக்கொள்வது வாஜிபாகும்.

ஃபர்லான உறுப்புகள் அனைத்தையும் கழுவுவதற்குப் போதுமான தண்ணீர் இல்லையானால் இருக்கும் அளவுக்குக் கழுவி மீதிக்காக ஒரு தயம்மும் செய்து கொள்வான். இந்தத் தயம்முமுக்கு தனியாக நிய்யத்து செய்து கொள்ளவேண்டும்.

ஒருவனிடம் உளுச் செய்யப் போதுமான தண்ணீர் இருக்கிறது. ஆனால், தனக்கு அல்லது சங்கையாக்கப்பட்ட மனிதர்கள், மிருகம் அதாவது, ஆடு, மாடு, ஒட்டகம், குதிரை, வேட்டை நாய் போன்ற பிராணிகளின் தாகத்திற்குத் தண்ணீர் தேவையாக இருந்தால், அவற்றிற்குத் தண்ணீரைக் கொடுப்பது வாஜிபாக இருப்பதால், அதனைக் கொடுத்து விட்டு அவன் தயம்மும் செய்து தொழுவான். சங்கை கொடுக்கப்படாத மிருகம், தொழுகையை விட்டவன், முர்த்தத்தானவன் (மதம் மாறியவன்), திருமணம் செய்து மனைவியுடன் உடலுறவு கொண்டபின் விபச்சாரம் செய்பவன், கடிநாய், பன்றி போன்ற மிருகங்கள் ஆகியவற்றின் தாகத்தைத் தீர்ப்பதற்காக அந்தத் தண்ணீரைக் கொடுப்பது வாஜிபில்லை.

ஒருவன் தண்ணீரில்லாத வனாந்தரத்தில் இருக்கின்றான். அவனிடத்தில் கொஞ்சம் தண்ணீர் இருக்கிறது. இன்னும் அவனுடன் தொழாத பருவ வயதை அடைந்த அவனுடைய மகனும், திம்மீ காஃபிரும், ஒரு மாடும் இருக்கின்றனர். அப்பொழுது அந்தத் தண்ணீரிலிருந்து அந்த திம்மீ காஃபிருக்குக் குடிப்பாட்டி, மீதியிருந்தால் அந்த மாட்டுக்கு குடிப்பாட்டி, இன்னும் மீதியிருந்தால் அவன் உளுச் செய்து கொள்வான். அவ்வாறின்றி அத்தண்ணீரை, தொழுகாத தன் மகனுக்குக் குடிப்பாட்டி தான் தயம்மும் செய்து தொழுதால் அந்த தயம்மும் செல்லாது; தொழுகையையும் திருப்பித் தொழுவது அவசியம்.

ஜமாஅத்துத் தொழுகை நடைபெற்றுக்கொண்டிருக்கும்போது உளுவுடைய சுன்னத்துகளை நிரப்பமாக செய்தால், அந்த ஜமாஅத்துத் தவறி மறு ஜமாஅத்தும் கிடைக்காது என்றிருந்தால், உளுவுடைய ஃபர்லுகளின் மீது மட்டும் போது மாக்கிக்கொள்வது சுன்னத்தாகும்.

## உளுவின் மக்ரூஹ்கள்

கைகளை உதறுவது, தண்ணீரை உதறுவது, இடையூறு இல்லையெனில் கழுவிய உறுப்புக்களைத் துடைப்பது, கிப்லாவைப் பின்னோக்கி உட்காருவது, பேச்சுக்கள் பேசுவது, தண்ணீரை முகத்தில் அடிப்பது, மார்க்கத்தில் கூறப்பட்ட திக்ருகளை துஆக்களை விடுவது ஆகியவை உளுவின் மக்ரூஹ்களாகும்.

"ஷைத்தான் மனிதர்களைப் பார்த்து பரிகாசமாக சிரிப்பதெல்லாம் உளுவில் தான்" என்று ஹஸன் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.

"மனிதர்களுக்குக் குழப்பமான எண்ணம் உண்டாவது உளுவிலும் குளிப்பிலும்தான்" என்று இப்றாஹீம் இப்னு அத்ஹம் (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

உளுவில் குழப்பத்தை உண்டாக்கும் ஷைத்தானுக்குப் பெயர் வல்ஹான் وَلْهَانُ (தடுமாறச் செய்கிறவன்) என்று கூறப்படும்.

உளுச் செய்யும் போது ஒவ்வொரு உறுப்பிற்கும் ஓதப்படுகிற துஆக்கள் பலவீனமான அறிவிப்பைச் சேர்ந்தவை என்பதாக 'மின்ஹாஜ்' என்ற நூலில் கூறப்பட்டுள்ளது. ஆனால், இஹ்யா போன்ற பல நூற்களில் அந்த துஆக்கள் கூறப்பட்டிருப்பதால் இங்கு அவை எழுதப்படுகின்றன.

கை கழுவும் போது:-

اَللّٰهُمَّ احْفَظْ يَدَيَّ مِنْ مَّعَاصِيْكَ كُلِّهَا

"யா அல்லாஹ்! என்னுடைய கைகளை உனக்குப் பாவங்கள் செய்வது அனைத்தை விட்டும் நீ பாதுகாப்பாயாக!"

வாய் கொப்பளிக்கும் போது:-

اَللّٰهُمَّ اَعِنِّيْ عَلٰى ذِكْرِكَ وَشُكْرِكَ وَحُسْنِ عِبَادَتِكَ

"யா அல்லாஹ்! உன்னை திக்ரு செய்வதற்கும் உனக்கு நன்றி செலுத்துவதற்கும் உன்னை அழகிய முறையில் வணங்குவதற்கும் எனக்கு நீ உதவி செய்தருள்வாயாக!"

நாசிக்குத் தண்ணீர் செலுத்தும்போது:-

اَللّٰهُمَّ اَرِحْنِيْ رَائِحَةَ الْجَنَّةِ

"யா அல்லாஹ்! சொர்க்கத்தின் வாடையை எனக்கு வீசச் செய்வாயாக!"

முகம் கழுவும் போது:-

اَللّٰهُمَّ بَيِّضْ وَجْهِيْ يَوْمَ تَبْيَضُّ وُجُوْهٌ وَتَسْوَدُّ وُجُوْهٌ

"யா அல்லாஹ்! சில முகங்கள் வெண்மையாகவும் சில முகங்கள் கருப்பாகவும் ஆகி விடும் நாளில் என் முகத்தை நீ வெண்மையாக்கி வைப்பாயாக!"

வலக்கையைக் கழுவும் போது:-

اَللّٰهُمَّ اَعْطِنِيْ كِتَابِيْ بِيَمِيْنِيْ

"யா அல்லாஹ்! என்னுடைய செயலின் ஏட்டை என் வலக்கரத்தில் தந்தருள்வாயாக!"

இடக்கையைக் கழுவும் போது:-

اَللّٰهُمَّ لَا تُعْطِنِيْ كِتَابِيْ بِشِمَالِيْ

"யா அல்லாஹ்! என்னுடைய செயல் ஏட்டை என் இடக்கரத்தில் தராதிருப்பாயாக!"

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

தலைக்கு மஸ்ஹ் செய்யும்போது:-

اَللّٰهُمَّ حَرِّمْ شَعْرِيْ وَبَشَرِيْ عَلَى النَّارِ

"யா அல்லாஹ்! என்னுடைய முடியையும் மேனியையும் நரக நெருப்பின் மீது ஹராமாக்கி வைத்திடுவாயாக!"

காதுக்கு மஸ்ஹ் செய்யும் போது:-

اَللّٰهُمَّ اجْعَلْنِيْ مِمَّنْ يَسْتَمِعُوْنَ الْقَوْلَ فَيَتَّبِعُوْنَ اَحْسَنَهُ

"யா அல்லாஹ்! உபதேசத்தை கேட்டு, அதில் அழகியதைத் தொடருகிறவர்களில் உள்ளவனாக என்னை நீ ஆக்கிடுவாயாக!"

இரண்டு கால்களையும் கழுவும் போது:-

اَللّٰهُمَّ ثَبِّتْ قَدَمَيَّ عَلَى الصِّرَاطِ يَوْمَ تَزِلُّ فِيْهِ الْاَقْدَامُ

"யா அல்லாஹ்! பாதங்கள் சறுகி விடும் நாளில் சிராத்துல் முஸ்தகீம் பாலத்தின் மீது என் இரு பாதங்களையும் தரிபடச் செய்திடுவாயாக!"

இப்லீஸுக்கு ஒன்பது விதமான மக்கள் இருக்கின்றனர். ஒவ்வொருவனையும் ஒவ்வொரு இடத்திற்குச் சாட்டுவான். அதில் உளூவிற்கும் குளிப்பிற்கும் சாட்டப்பட்டவன் வல்ஹான் என்பவனாகும்.

உளூவின் போது மனதில் பல ஊசாட்டங்கள் ஏற்படுகிறவர்கள் பின் வரும் ஆயத்துகளை ஓதுவது முஸ்தஹப்பு:

لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ "هُوَ الْاَوَّلُ وَالْاٰخِرُ وَالظَّاهِرُ وَالْبَاطِنُ وَهُوَ بِكُلِّ شَيْءٍ عَلِيْمٌ" (57:3)

இந்த ஆயத்திலிருந்து B'பி' ஃதாத்திஸ் ஸுதூர்' بِذَاتِ الصُّدُوْرِ "வரை உள்ள நான்கு ஆயத்துகளை ஓதினால் அல்லாஹுதஆலா அந்த ஊசாட்டத்தை இலேசாக்குவான் என்று " ஹாஷியத்துல் மன்ஹஜில்" எழுதப்பட்டுள்ளது.

இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:- தண்ணீரைக் கொண்டு உடல் துப்புரவு ஆவது போல், உள்ளம் துப்புரவு ஆவது தவ்பாவைக் கொண்டும், இக்லாஸைக் கொண்டும், தீய குணங்களை நீக்கிவிட்டு நற்குணங்களை மேற்கொள்வது கொண்டுமாயிருக்கும். வெளிப்படையான உளூவைக் கொண்டு மட்டும் போதுமாக்கிக் கொள்கிறவனுக்கு உதாரணமாகிறது:ஒருவன் ஒரு புதிய வீட்டைக் கட்டி அதன் வெளிப்பகுதியை நன்றாகப் பூசி பளிங்குக் கற்களைக் கொண்டு அழகு படுத்தி விட்டு, அதன் உட்புறத்தை அருவருப்பான குப்பை கூளத்தினால் நிரப்பி வைத்து ஓர் அரசனை அவ்வீட்டிற்கு அழைத்து வந்து பேசினால் அவ்வரசன் அவன் மீது எவ்வாறு அதிருப்தியுடையவனாக ஆவானோ அது போன்றதாகும்.

## தயம்மும் உடைய பாடம்

சிறு தொடக்கு அல்லது பெருந்தொடக்கு உள்ளவன் நோயினால் தண்ணீரை உபயோகிக்க இயலாதிருந்தாலும், அல்லது தண்ணீரை உபயோகித்தால் நோய் கூடுமென்றிருந்தாலும், அல்லது சில உறுப்புகளுக்கு தண்ணீரை உபயோகித்து, மற்றுஞ்சில உறுப்புகளுக்கு உபயோகிக்க முடியாது என்றிருந்தாலும், பிரயாணத்திலிருக்கும் போது தண்ணீர் கிடைக்க வில்லையானாலும் துப்புரவான புழுதியுடைய மண்ணினால் தயம்மும் செய்து தொழுவான். பிறகு அதனைக் களாச் செய்ய வேண்டியதில்லை.

பிரயாணத்திலிருக்கும் போது, அல்லது ஊரிலிருக்கும்போது தண்ணீர் இருப்பதை மறந்து விட்டால், அல்லது தண்ணீரில் உளூச் செய்தால் நேரம் களாவாகி விடும் என்றிருந்தால் கட்டாயமாக (வாஜிபாக) தயம்மும் செய்து தொழுது, பிறகு அதனைக் களாச் செய்வான்.

பிரயாணத்திலிருக்கும்போது தண்ணீர் கிடைக்காததால் தயம்மும் செய்து தொழுது கொண்டிருக்கும்போது தண்ணீரைக் கண்டால் அந்தத் தொழுகை முறியாது. எனினும், நேரம் விசாலமாக இருந்தால், உளூச்செய்து கொண்டு தொழுவதற்காக அத்தொழுகையை முறித்து விடுவது நல்லதாகும். நேரம் நெருக்கடியாக இருந்தால் அத்தொழுகையை முறிப்பது ஹராமாகும்.

ஒருவன் ஊரிலிருக்கும்போது தண்ணீரில்லாததால் தயம்மும் செய்தான்;ஆனால், அவன் தொழுவதற்கு முன் தண்ணீரைக் கண்டான். அப்பொழுது அந்தத் தயம்மும் முறிந்து விடும். தொழுகையிலிருக்கும் போது கண்டால் தொழுகை முறிந்து விடும்.

### தயம்மும் உடைய ஷர்த்துகள் பத்து

1) முதலாவது, மண்ணாக இருக்கவேண்டும்; சரளைக்கற்களும் ஓடும் போதாது.

2) இரண்டாவது, அது துப்புரவானதாக இருக்கவேண்டும்.

3) மூன்றாவது, அந்த மண் ஃபர்லில் உபயோகிக்கப்படாமல் இருக்கவேண்டும்.

4) நான்காவது, அதில் மாவு போலுள்ளது கலக்காமல் இருக்கவேண்டும்.

5) ஐந்தாவது, மண்ணை நாடுதல்.

6) ஆறாவது, முகத்திற்காக ஒரு தடவையும் கைக்காக ஒரு தடவையுமாக மண்ணை எடுப்பது.

7) ஏழாவது தயம்மும் செய்யுமுன் மேனியிலுள்ள நஜீஸை நீக்குவது. மேனியில் நஜீஸ் உள்ள ஒருவன் தயம்மும் செய்தபின் மேனியிலுள்ள நஜீஸ்களை நீக்கினால் பலமான சொற்படி அவனுடைய தய்ம்மும் கூடாது.

8) எட்டாவது, கிப்லாவைப்பற்றி தடுமாற்றமாயிருக்கும்போது, தயம்முமுக்கு முன் கிப்லாவை நிச்சயித்துக் கொள்வது. தயம்மும் செய்தபின் அதனை நிச்சயம் செய்தால் தயம்மும் கூடாது.

9) ஒன்பதாவது, தொழுகைக்குரிய நேரம் வந்த பின் தயம்மும் செய்வது.

10) பத்தாவது, ஃபர்லு ஐன் உடைய ஒவ்வொரு தொழுகைக்கும் ஒவ்வொரு தடவை தயம்மும் செய்வது.

## தயம்மும் உடைய ஃபர்லுகள் ஐந்து

1) முதலாவது புழுதியுடைய துப்புரவான மண்ணை எடுப்பது. அது வேறு ஃபர்லில் உபயோகிக்கப்பட்டதாக இருக்கக்கூடாது.

2) இரண்டாவது, மண்ணை எடுக்கும்போதே தொழுகையை ஆகுமாக்குகிறேன் என்று நிய்யத்துச் செய்வது. இதில் ஃபர்லான தொழுகையை ஆகுமாக்குகிறேன் என்று நிய்யத்துச் செய்தால் ஃபர்லு, சுன்னத்து, நஃபில் அனைத்துத் தொழுகைகளையும் தொழலாம். ஃபர்லு என்று குறிப்பிடாமல் பொதுவாகத் தொழுகை என்று நிய்யத்துச் செய்தால் அந்தத் தயம்முமின் மூலம் ஃபர்லைத் தொழக்கூடாது. ஆனால், மற்றொரு சொற்படி கூடும் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

3) மூன்றாவது, முகத்தைத் தடவுவது.

4) நான்காவது, இரு கைகளையும் தடவுவது.

5) ஐந்தாவது, மேற்கூறிய வரிசைப்படி (தர்த்தீபாய்) செய்வது.

ஒருவன் தயம்மும் செய்வதற்காக மண்ணெடுத்த பின் உளூமுறித்தல் ஏற்பட்டால் அந்த மண்ணினால் தடவுதல் கூடாது.

முகம், கைகள் ஆகிய இரு உறுப்புகளுக்கும், இரண்டு தடவை தனித்தனியாக அடித்து மண்ணெடுக்கவேண்டும். அடிக்குப்பின் முகத்தைத் தடவிய பின் மீண்டும் மண்ணில் அடித்து கைகளை தடவ வேண்டும். எனினும், ஒருவன் மிருதுவான மண்ணின் மீது கைகளை அடிக்காமல் மெதுவாக வைப்பதின் மூலம் கைகளின் மீது மண் ஒட்டிக் கொண்டால் அதுவே போதுமானதாகும்.

ஒருவன் முகத்தைத் தடவி விட்டோம் என்று எண்ணி, கைகளைத் தடவுவதற்கு மண்ணை எடுத்தான். ஆனால், முகத்தைத் தடவவில்லையென்று தெரிந்தால் அந்த மண்ணினால் முகத்தைத் தடவலாம்.

இமாம் நவவீ (ரஹ்) அவர்களுடைய ஃபத்வாவின்படி இரண்டு உறுப்புகளுக்கு இரண்டு அடி வாஜிபாகும். கை விரலில் மோதிரம் இருந்தால் இரண்டாவது அடிக்கு அதனைக் கழற்றுவது வாஜிப்.

ஒவ்வொரு அடியின் போதும் கை விரல்களை மண்ணின் மேல் விரித்து வைப்பதும், முதல் அடியின்போது மோதிரத்தைக் கழற்றுவதும், முகத்தைத் தடவும் போது மேற் புறத்தை முற்படுத்துவதும் சுன்னத்தாகும்.

## தயம்மும் உடைய சுன்னத்துகள் ஆறு

1) முதலாவது, புழுதியை இலேசாக ஆக்குவது.

2) இரண்டாவது, தொழுகையை ஆகுமாக்கத்தேடுவது அதாவது:-

குறிப்பிட்ட தொழுகையை தொழுவதற்கு நிய்யத்துச்செய்தேன் என்று நாவால் கூறுவது.

3) மூன்றாவது, பிஸ்மில்லாஹ் கூறுவது.

4) நான்காவது, இருகைகளில் இடதை விட வலதை முற்படுத்துவது.

5) ஐந்தாவது, தொடராக செய்வது.

6) ஆறாவது, கையை தடவும் போது முதலில் இடது கை பெரு விரலைத் தவிர மற்ற விரல்களை வலது கை விரல்களுடைய முதுகின் மீது வைத்து முழங்கை வரை செலுத்தி, திருப்பும் போது இடது உள்ளங்கையை வலது முழங்கையின் உட்பக்கம் செலுத்தி மணிக்கட்டை அடைந்தவுடன் இடது பெரு விரலின் உட் பகுதியை வலது பெருவிரலின் மீது செலுத்த வேண்டும். இவ்வாறே இடது கையையும் வலது கையால் தடவ வேண்டும்.

தயம்மும் உடைய சுன்னத்தில் பல, உளூவுடைய சுன்னத்தில் முன்னால் வந்துவிட்டது. அதில் கூறப்படாத சுன்னத்தாவது: கையைத் தடவுதல் முடியும் முன் உறுப்பை விட்டும் கையை உயர்த்தாமலிருப்பதாகும். உளூவுடைய சுன்னத்துகளில் கூறப்பட்ட மிஸ்வாக் செய்தல், அஊது, பிஸ்மி சொல்லுதல், கிப்லாவை முன்னோக்குதல் ஆகியவை தயம்முமிலும் சுன்னத்தாகும். ஆனால் உளூவில் உறுப்புகளை மூன்று தடவை கழுவுதல் போல் தயம்முமில் மூன்று தடவை தடவுதல் கிடையாது.

தொழுகையுடைய நேரம் வரும் முன் செய்த தயம்முமினால் தொழுவது கூடாது. அவ்வாறே உளூவை முறிக்கும் நோய் நிரந்தரமாக உள்ளவன் (நிரந்தரமாகக் காற்று பிரிபவன், நிரந்தரமாக நீர் சொட்டிக் கொண்டிருப்பவன்) நேரம் வரும்முன் உளூச்செய்தால் அதன் மூலம் தொழுவதும் கூடாது.

சில உறுப்புகளில் தண்ணீரை உபயோகித்து, வேறு சில உறுப்புகளில் உபயோகிக்கமுடியாது என்றிருந்தால், தண்ணீரை உபயோகிக்க முடிந்த உறுப்புகளுக்கு உளூச்செய்து, மற்றவற்றிற்குத் தயம்மும் செய்து கொள்வான். இதில் குளிப்புக் கடமையானவன், மாதவிடாய்க்காரி, நிஃபாஸ்காரி ஆகியோர் தயம்முமை முந்தியும் செய்யலாம், பிந்தியும் செய்யலாம். இதில் (தர்தீப்) வரிசை முறை இல்லை. உளூவுடைய உறுப்பில் காயமுள்ளவன் உளூச் செய்யும்போது கழுவுதலைக் கான தயம்முமை முற்படுத்தவும் செய்யலாம், பிற்படுத்தவும் செய்யலாம். உதாரணமாக: ஒருவனுக்கு ஒரு கையில் காயமிருக்கிறது. அதனைக் கழுவ முடியாது. அப்போது அவன் முதலில் முகத்தைக் கழுவிக்கொண்டு, பிறகு கைகளில் காயமில்லாததைக் கழுவி, பிறகு காயமுள்ள கைக்குத் தயம்மும் செய்வான். அல்லது முதலில் முகத்தைக் கழுவி பிறகு காயமுள்ள கைக்குத் தயம்மும் செய்து, பிறகு அடுத்த (காயமில்லாத) கையைக் கழுவலாம். இந்நிலையில் தயம்மும், கழுவுதல் ஆகிய இரு விதச் செயல்களில் எதை வேண்டுமானாலும் முற்படுத்தலாம் என்று சொல்லப்பட்டதெல்லாம் மேற்கூறப் பட்டவாறு இரு நிலைகளிலும் முகத்தை முற்படுத்த வேண்டுமேயன்றி முகத்தைவிட கைகளை முற்படுத்தலாம் என்று பொருளல்ல. அது போல் தலையை விடப் பிற்படுத்தவும் கூடாது.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

இரண்டு உறுப்புகள் காயமாக்கப்பட்டிருந்தால் இரண்டு தயம்மும் வாஜிபாகும். இரண்டு கைகளும் ஒரே உறுப்பாகக் கருதப்படும். அவ்வாறே இரண்டு கால்களும் ஒரே உறுப்புதான். எனினும், ஒவ்வொரு உறுப்பையும் தனித்தனியாகக் கருதி ஒவ்வொன்றுக்கும் தனித்தனியாக தயம்மும் செய்வது சுன்னத்து.

காயமடைந்த உறுப்பில் பாளத்துணி சுற்றப்பட்டிருந்து, அதனை எடுக்க முடியவில்லையானால் காயம் இல்லாத பகுதியைக் கழுவி, மற்றதை தயம்மும் செய்து கொள்வான். இவ்வாறு செய்தபின் அந்தத் துணியின்மீது முழுவதையும் அல்லது சில பகுதியை தண்ணீர் கொண்டு தடவிக்கொள்வது வாஜிபாகும்.

ஒரு காயத்தின் மீது பாளத்துணி அல்லது பிளாஸ்திரி அல்லது மட்டை கட்ட வேண்டிய அவசியம் ஏற்பட்டால், சிரமமில்லையானால் உளூச்செய்தவுடன் அதனை வைப்பது வாஜிபாகும். அவ்வாறு செய்யாமல் அணிந்தால் குற்றவாளியாவான். தயம்முமும் இவ்வாறுதான்.

தயம்முமுடைய உறுப்பல்லாத வேறு உறுப்பின் மீது காயமிருந்து, உளூச்செய்தபின் அதற்கு ஒரு துணியைக்கட்டி, அது தேவையான அளவு மட்டும் கட்டப்பட்டிருந்தால் அந்தத் தயம்முமின் மூலம் தொழுத தொழுகையை பிறகு மீட்டுவது வாஜிபில்லை. ஆனால், தயம்முமுடைய உறுப்பில் கட்டு இருந்தாலும், அல்லது உளூ இல்லாமல் கட்டப்பட்டிருந்தாலும், அல்லது தேவையான அளவை விட அதிகமாகக் கட்டப் பட்டிருந்தாலும் பிறகு மீட்டுவது வாஜிபாகும்.

ஒரு தயம்முமின் மூலம் ஃபர்லான ஒரு தொழுகை, அல்லது நேர்ச்சையின் ஒரு தொழுகை, அல்லது ஃபர்லான ஒரு தவாஃப், அல்லது ஃபர்லான குத்பா, சுன்னத்தான தொழுகை, ஜனாஸா தொழுகை ஆகியவை மட்டும் தொழலாம். இவற்றில் ஒரு ஃபர்லைத்தவிர மற்றொரு ஃபர்லை, ஒரு தவாஃபைத் தவிர மற்றொரு தவாஃபை செய்வது ஒரு குத்பாவைத்தவிர மற்றொரு குத்பாவை ஓதுவது கூடாது. இந்த ஃபர்லுகளை அதனதன் நேரம் வரும் முன் செய்த தயம்முமைக்கொண்டு நிறைவேற்றுவது கூடாது.

ஒரு சுதீப் ஒரு தயம்முமைக் கொண்டு குத்பா ஓதிய பிறகு மீண்டும் தயம்மும் செய்யாமல் ஜும்ஆ தொழுகையை தொழவைக்கக்கூடாது. ஆனால் தயம்மும் செய்து விட்டு குத்பா பிரசங்கத்தைக்கேட்ட மஃமூம்கள் அந்த தயம்முமைக் கொண்டே ஜும்ஆ தொழுகையையும் தொழுது கொள்ளலாம். கிரகணத் தொழுகைகளுக்காகவும், பெருநாள் தொழுகைகளுக்காகவும் தயம்மும் செய்த ஒருவர் அதே தயம்முமைக் கொண்டு அது அதனுடைய குத்பாவை ஓதுவது கூடாது. சுதீப் குத்பா ஓதுவதில் இரண்டு குத்பாக்களும் ஒரு ஃபர்லாக கணக்கிடப்படும் ஆகையால் ஒரு தயம்முமைக்கொண்டே இரண்டு குத்பாக்களையும் ஓதி முடிக்கலாம்.

ஃபர்லான செயல்களைச் செய்ய அதனதனுடைய நேரம் வரும்முன் செய்த தயம்மும் கூடாது. அவ்வாறே நேரங்குறிக்கப்பட்ட சுன்னத்தான தொழுகைக்கும் அதன் நேரம் வரும்முன் செய்த தயம்முமும் கூடாது.

ஒருவன் ஃபர்லான களாவைத் தொழுவதற்காக, அல்லது ஃபர்லான தவாஃபைச் செய்வதற்காகத் தயம்மும் செய்தான். ஆனால், அதனைத் தொழவில்லை; தவாஃபும் செய்யவில்லையென்றால் அந்தத் தயம்முமின் மூலம் அந்த நேரத்துத் தொழுகையைத் தொழலாம். இதே போல் அந்த நேரத்துத் தொழுகைக்குச் செய்த தயம்முமின் மூலம் களாவையும் தொழலாம்.

எவரேனும் ஒருவருக்கு ஐந்து நேரத்தொழுகைகளில் ஒன்று களாவாகி விட்டது; ஆனால், அது எந்த நேரமென்று தெரியவில்லையானால், ஐந்து நேரத்தையும் களாச்செய்யவேண்டும். இதற்கு ஒரு தயம்மும் போதுமாகும்.

ஒரே நாளில் அல்லது இரண்டு நாட்களில் மாறுபட்ட இரு நேரங்களுடைய இரண்டு தொழுகைகளை விட்டு விட்டான்; ஆனால், அவை எந்த நேரங்கள் என்பதை மறந்து விட்டால், அப்பொழுது ஐந்து தயம்மும்களைக்கொண்டு ஐந்து நேரங்களையும் தொழுவான். இன்னும் அவன் விரும்பினால் பின் வருமாறும் தொழலாம். அதாவது: ஒரு தயம்முமைக்கொண்டு நான்கு நேரங்களைத் தொழவேண்டும்.

பிறகு மற்றொரு தயம்மும் செய்து முன்னால் தொழுத நான்கு நேரங்களில் ஒரு நேரத்தை மட்டும் விட்டு மீதி நான்கு நேரங்களைத் தொழவேண்டும்.

ஒருவன் இரண்டு நாட்களின் ஒரே மாதிரியான தொழுகைகளை மறந்து விட்டால், இரண்டு தயம்மும் கொண்டு ஐந்து நேரங்களையும் இரண்டு தடவை தொழவேண்டும்.

தொழுத ஃபர்ளை மீண்டும் தொழ வேண்டிய நிலை சுன்னத்து என்பதாலும், அவ்வாறே ஜும்ஆவை மீண்டும் பேணுதலுக்காக லுஹராகத் தொழுவது ஏற்றம் என்பதாலும் முந்தின தயம்முமினால் இவ்விரண்டையும் மீண்டும் தொழலாம். உருவத்தில் இவை ஃபர்ளாக இருந்தாலும் செயல்பாட்டில் சுன்னத்தாக இருப்பதால் இது கூடும்.

### தயம்முமை முறிப்பவை மூன்று செயல்கள்

முதலாவது உளூவை முறிக்கும் செயல்கள் அனைத்தும் தயம்முமை முறிக்கும். இரண்டாவது தண்ணீரைக் காண்பது. மூன்றாவது மதம் மாறி (முர்த்தத்தாகி) விடுவது.

முர்த்தத்தாகி விடுவதால் உளூ முறியாது, தயம்மும் முறிந்துவிடும் என்று கூறப்பட்டிருப்பதற்குரிய காரணம், தயம்மும் பலவீனமான துப்புரவாகவும், உளூ பலமுள்ள துப்புரவாகவும் இருப்பதால்தான்.

ஒருவனுக்கு உளூச்செய்ய தண்ணீரும், தயம்மும் செய்ய மண்ணும் கிடைக்கவில்லையானால், இரண்டில் ஒன்றைத்தேடுவதற்குள் நேரம்போய் விடுமென்றிருந்தால், நேரத்தைக் கண்ணியப்படுத்துவதற்காக துப்புரவில்லாமலேயே ஃபர்லை மட்டும் தொழுது கொள்வான். பிறகு இரண்டில் ஒன்று கிடைத்தபின் அதனால் துப்புரவு செய்துகொண்டு உளூவோ, தயம்முமோ இல்லாமல் ஏற்கனவே தொழுத ஃபர்லான தொழுகையை மீண்டும் தொழுவான்.

## மோஜாவின் மீது மஸ்ஹ¬ செய்தல்

கால்களில் அணியும் மோஜாக்களின் மீது மஸ்ஹ¬ செய்து தொழுவது ஆகும் என்பதற்கு ஷர்த்தாவது: முதலில் பரிபூரணமான உளூச்செய்து, அல்லது தயம்மும் செய்து அணிய வேண்டும்; மோஜா சுத்தமானதாக இருக்க வேண்டும். அணிந்துகொண்டு நடப்பதற்கு வசதியான தாக இருக்கவேண்டும். கெட்டியானதாக இருக்கவேண்டும். இரு கால்களையும் கணுக்கால் முளி வரை முழுமையாய் மறைக்கக்கூடியதாக இருக்கவேண்டும். தண்ணீரை உள்ளே தீவிரமாய்ச் செல்ல முடியாமல் தடுப்பதாய் இருக்கவேண்டும். தேவைக்குத் தகுந்த நடையை தொடர்ச்சியாய் நடக்க வசதியானதாக இருக்கவேண்டும். இவ்வாறு இருந்தால், ஊரில் இருக்கின்ற முகீமானவனுக்கும், குறைந்த தூரம், (அதாவது: கஸ்ரு, ஜம்உ செய்வற்குரிய தூரத்திற்குக் குறைவான தூரம்) பிரயாணம் செய்கிறவனுக்கும் ஓரிரவு, ஒரு பகல் மோஜாவின் மீது மஸ்ஹ¬ செய்வதும், கஸ்ரு, ஜம்உ செய்வதற்குரிய தூரம் பிரயாணம் செய்கிறவனுக்கு மூன்று இரவு மூன்று பகல் மஸ்ஹ¬ செய்வதும் கூடும். அதாவது: மோஜா அணிந்த பின் உளூ முறியும் நேரத்திலிருந்து நேரக்கணக்கு ஆரம்பமாகும். மோஜா அணிந்தவன் தொழுகைக்கு உளூச்செய்யும்போதெல்லாம் மோஜாவின் மேல் புறத்தில், காலின் மேற்பகுதியில் கைவிரல்களால் கொஞ்சம் தண்ணீரைத் தொட்டுத் தடவிக்கொண்டால் போதுமானது. காலின் உட்புறத்திலும் கணுக்கால் முளியிலும் ஓரங்களிலும் மஸ்ஹ¬ செய்வது வாஜிபல்ல. ஆனால் சுன்னத்தாகும். மேலும் இடது கையை குதிகாலின் கீழும், வலது கைவிரல்களை கால் விரல்களின் மேற் புறத்திலிருந்தும் கால் முடியுமளவுக்கு விரல்களால் தடவுவது சுன்னத்தாகும்.

மேற்குறிப்பிட்ட நாட்களுக்கு இடையில் மோஜாவைக் கழற்றினாலும், அல்லது அதைக் கிழித்தாலும், அல்லது அது கிழிந்து போனாலும் பிரயாணியின் பிரயாணம் முடிந்து விட்டாலும் மஸ்ஹ¬ செய்வது கூடாது.

மோஜாவின் காலக்கெடு தீரும்முன் ஜு¬னுபாளியாக ஆகிவிட்டால் மோஜாவைக் கழற்றுவது வாஜிபு.

மோஜாவின் மீது மஸ்ஹ¬ செய்வதை ஹிஜ்ரி ஒன்பதாம் ஆண்டு தபூக் போரின்போது சட்டமாக்கப்பட்டது என்று கூறப்பட்டுள்ளது. மற்றொரு சொற்படி ஹிஜ்ரத்துக்கு ஓர் ஆண்டுக்கு முன் மிஃராஜ் இரவில் உளூ சட்டமாக்கப்பட்டபோது இதுவும் சட்டமாக்கப்பட்டது என்று எழுபது, எண்பது ஸஹாபாக்களின் வாயிலாக அறிவிக்கப்பட்டதாக ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் அறிவித்துள்ளார்கள். மோஜாவில் மஸ்ஹ¬ செய்வது ஷரீஅத்தில் சட்டமாக்கப்பட்டதல்லவென்று எவரேனும் மறுத்துக்கூறுவது சரியில்லை.

## உளூவை முறிப்பவை நான்கு செயல்கள்

1. முன், பின் துவாரங்களின் மூலம், அல்லது அவை அடைபட்டு அதற்குப்பகரமாக தொப்புளுக்குக் கீழ் வேறு துவாரமிட்டு அதன் மூலமாக கண்ணுக்குத் தெரிகின்ற அல்லது காற்றுபோல் கண்ணுக்குத்தெரியாத ஏதேனும் ஒருபொருள் வெளியாவதால் உளூ முறியும். ஆனால், தொப்புளுக்கு மேல் ஒரு துவாரம் ஏற்பட்டு அதன் மூலம் ஏதேனும் ஒன்று வெளியானால் உளூ முறியாது. வழமையான துவாரம் திறந்திருந்தாலும் அடைப்பட்டிருந்தாலும் சரி. முன் பின் துவாரங்களில்

இருந்து வழக்கமாக வெளிப்படுகின்ற மலம் ஜலம் போன்றதாலும், வழக்கத்திற்கு மாறாக வெளிப்படுகின்ற புழுக்கள் போன்றதாலும் உளூ முறியும். ஆனால் தொடர்ந்து சிறுநீர் வெளியாகுதல், காற்று வெளியாகிக்கொண்டே இருத்தல், தொடர்ந்து வெட்டை வெளியாகுதல், பெரும்பாடென்னும் நோய் இரத்தம் போய்க்கொண்டே இருத்தல், விந்து வெளியாகுதல், ஆகியவைகளைக்கொண்டு உளூமுறியாது. (உடலுறவுகொள்ளாத நிலையில் வெளியேறும் விந்துவினால் உளூ முறியாது. ஆனால் குளிப்பது வாஜிபாகும்)

2) மயக்கம், உறக்கம், பயித்தியம் போன்றவற்றால் சுய அறிவு நீங்கிவிடுவதால் உளூ முறிந்துவிடும். ஆனால் ஆசனப்பகுதியில் சதை அதிகமாக உள்ளவர்கள் சம்மணமிட்டுத்தூங்குவதால் உளூ முறியாது.

சதைப்பிடிப்பில்லாத மெலிந்தவனாக இருந்தாலும் சம்மணமிட்டு உட்கார்ந்தால் உளூ முறியாது என்பதுதான் தேர்ந்தெடுக்கப்பட்ட சொல்லாகும். ஒருவன் ஒரு பொருளின் மீது சாய்ந்து தூங்குகிறான்; அப்பொருளை எடுத்தால் அவன் கீழே விழுந்துவிடுவான் என்றிருந்தாலும் அல்லது உட்கார்ந்திருப்பவன் தூங்கி விழிக்கும்பொழுது ஆசனப்பகுதி தூக்கியிருந்தாலும் உளூ முறிந்து விடும். ஒருவன் தான் உறங்கியது சம்மணமிட்டா அல்லது சாய்ந்தா என்று தெரியவில்லையானால், அல்லது தான் உறங்கியது, சிறுதூக்கமா, அல்லவா என்று சந்தேகித்தாலும், அதில் கனவுகண்டிருந்தாலும் சரி, உளூ முறியாது. நன்கு உறங்கியதில் சந்தேகமில்லாமலும், கனவுகண்டது உறுதியானதாகவும் இருந்தால் உளூ முறியும்.

3) உள்ளங்கையைக் கொண்டும், விரல்களின் உட்பகுதி கொண்டும் மனிதர்களின் முன், பின் துவாரங்களைத் தொடுவதும் உளூவை முறிக்கும். உயிருள்ளவனுடைய மர்மஸ்தானமும் இறந்து விட்டவனுடைய மர்மஸ்தானமும் ஒரே சட்டத்திற்குரியவைதான். மர்மஸ்தானம் என்பது பெண்களுக்கு முடி முளைக்கிற இடத்தைத்தவிர பெண்குறியின் இரு ஓரங்களுமாகும். ஆண்களுக்கு ஆண்குறி முழுவதுமாகும். (ஹனஃபீ மத்ஹபில் இச்செயல்களால் உளூ முறியாது)

4) இச்சிக்கப்படுவதற்குரிய மஹ்ரம் அல்லாத (திருமணம் செய்வது ஹராம் அல்லாத) பெண்களைத் தொடுதல் உளூவை முறிக்கும். இச்சிக்கப்படாத ஆறு வயது ஏழு வயதுள்ள சிறிய பெண் குழந்தைகளையும் நிகாஹ் செய்வது ஹராமாக்கப்பட்ட இருவரில் ஒருவர் மற்றவரையும் தொடுதல் உளூவை முறிக்காது. இதில் மனைவியின் சகோதரிகள், மனைவியின் சகோதரர்களின் மகள்கள், அவளின் தாயுடன் பிறந்த பெரியம்மா, சின்னம்மாமார்கள், அவளின் தந்தையுடன் பிறந்த மாமிகள், இவர்களைத் திருமணம் செய்வது ஹராமென்றிருந்தாலும், இவர்களின் மேனியைத் தொடுவதினால் உளூ முறியும். ஏழெட்டு வயது பெண் குழந்தை இச்சிக்கப்படாததாக இருந்தால் அதனைத் தொடுவதால், பலமான சொற்படி, முறியாது. ஆனால், ஐந்து வயதுள்ள பெண் குழந்தை இச்சிக்கப்படக்கூடியதாக இருந்தாலும், அதனைத் தொட்டால் உளூ முறியும் .(நாலாவது குறிப்பில் கண்ட மேற்கண்ட செயல்களாலும் ஹனஃபீ மத்ஹபின் படி உளூ முறியாது)

நகமும், முடியும், பல்லும், கண்ணின் உட்பகுதியும் தவிர மீதியுள்ள பகுதியனைத்தும் மேனி என்பதாகும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

திருமணம் செய்ய ஹராமான ஒரு பெண், ஹலாலான பல பெண்களுடன் கலந்து இருளான ஓரிடத்தில் இருக்கின்றனர்; யார் யார் எனக்குறிப்பறிய முடியாத அவ்விடத்தில் ஒருவன் ஒருத்தியைத் தொட்டுவிட்டான்; அவள் இன்னாரென அறியமுடியவில்லையானாலும் உளூ முறியாது.

விந்து வெளிப்பட்டால் உளூ முறியாது என்பதுபோல் ஈரமின்றி குழந்தை பிறந்தாலும் உளூ முறியாது.

### உளூ [redacted] உளூச்செய்வது

உளூ [redacted] செய்வது பின்வரும் காரியங்களில் சுன்னத்தாகும். அவையா[redacted]ய்ய ஆகுமாக்கப்பட்ட பெண்ணின் கண்ணின் உட்பகுதி, முடி[redacted]டைய விதை, மர்மஸ்தான முடி, பின் துவாரத்தின் வட்டம், [redacted] தொப்புளுக்கும் இடையிலுள்ள பகுதி ஆகியவற்றைத் தொடுவதால் [redacted] முறியாவிட்டாலும்) மறுபடி உளூச்செய்வது சுன்னத்து. இவ்வாறே [redacted] வாங்கினாலும், கொம்புவைத்து இரத்த மெடுத்தாலும், முடி, நகம்[redacted]னாலும், யூதர், கிரிஸ்தவர், முஷ்ரிக், காஃபிர் ஆகியோரைத் தொட்டாலும், பருவமெய்தும் வயதிலிருக்கும், பருவ வயதையெத்தும் நிலையிலுள்ளவனைத் தொட்டாலும், வீண் பேச்சுப்பேசினாலும், கோபம் வந்தாலும், ஜனாஸாவைத் தொட்டாலும், சுமந்தாலும், அறுக்கப்பட்ட மாமிசத்தைச் சாப்பிட்டாலும், முந்திய உளூவினால் ஏதேனும் ஒரு தொழுகையைத் தொழுதிருந்தாலும் மறுபடியும் உளூச்செய்வது சுன்னத்தாகும்.

இவ்வாறே ஜுனுபாளியாக இருப்பவன், அவன் குளிக்கும் முன் சாப்பிடவோ, குடிக்கவோ, உறங்கவோ, மறுபடியும் உடலுறவு கொள்ளவோ நாடினால் உளூச்செய்து கொள்வது சுன்னத்தாகும்.

தொழுகையில் சப்தமிட்டுச்சிரித்தாலும், வாந்தி எடுத்தாலும், குர்ஆன் ஓத, ஹதீஸ் சொல்ல, உபதேசம் செய்ய, உபதேசம் கேட்க நாடினாலும், ஹதீஸ், ஃபிக்ஹ், தஃப்ஸீர் ஆகிய கிதாபுகளை ஓதிக்கொடுக்க நாடினாலும், திக்ரு செய்ய ஆரம்பிக்கும்போதும், சஃபா, மர்வாவுக்கிடையில் ஓடும்போதும், அரஃபாவில் தங்கும்போதும், பள்ளியில் நுழையும் போதும், நபி (ஸல்) அவர்களின் கப்ரை, அல்லது மற்ற நபிமார்களின் கப்ருகளை ஜியாரத்து செய்ய நாடினாலும், ஜும்ஆ அல்லாத வேறு குத்பாக்களை ஓத நாடினாலும், பாங்கு, இகாமத்துச் சொல்லும்போதும், ஏதேனும் ஒரு பொருளை இச்சையுடன் பார்த்து விட்டாலும், தூங்கச் செல்லும்போதும், தூக்கத்தை விட்டு விழித்தவுடனும், புறம் பேசிவிட்டாலும், உளூவை முறிக்குமா முறிக்காதாவென கருத்து வேற்றுமையுள்ள ஒன்றைச் செய்துவிட்டாலும், மார்க்க நூல்களை எடுத்துப்பார்க்கும் போதும், கண் திருஷ்டிபட்டுவிட்டதென எண்ணிய நேரத்திலும், தொழு நோயாளியைத் தொட்டு விட்டபோதும், ஒட்டகைப்பால் குடித்த பின்பும், சிலைகளைத் தொட்டாலும், இந்த நேரங்களிலெல்லாம் உளூ இருந்தாலும் மறுபடி உளூச்செய்வது சுன்னத்தாகும்.

### உளூ, மற்றும் தயம்முமின் இரகசியங்கள்

அல்லாஹு தஆலா திருக்குர்ஆனில்:-

(21:30) وَجَعَلْنَا مِنَ الْمَاۤءِ كُلَّ شَيْءٍ حَيٍّ

"உயிருள்ள எல்லாப் பொருட்களையும் தண்ணீரிலிருந்து நாம் படைத்தோம்" என்று கூறியுள்ளான். எனவே உளூச்செய்யும் பொழுது பின் வருமாறு அதனுடைய இரகசியத்தை மனதிற்கொள்ள வேண்டும்.

ஹயாத்தென்னும் தன்மையின் வெளிப்பாடாகிய தண்ணீரை எடுத்து, வாஹிதென்னும் அல்லாஹ்வுடைய திரு நாமத்தின் குணங்கொண்டு, நானென்ற, வேறென்ற இரண்டு தொடக்கையும் நீக்கி, வேற்றுமையளவில் முன்னோக்குதல் என்ற முகத்தைக்கழுவி, பிறகு (இம்மை மறுமை) ஈருலகின் பலனை நாடுதலென்ற இரு கைகளைக் கழுவி, பிறகு (அனாநிய்யத்) தானென்ற அகம்பாவமென்னும் தலையை மஸ்ஹு செய்து, பிரிதல், சேருதல், (ஃபர்கு - ஜம்உ) என்னும் இரு நிலைகளின் நாட்டத்துடன் இரு கால்களையும் கழுவி, பிறகு இறைவனுக்கு அடிமை என்ற நினைப்பில் அவனுக்குப்பணிவிடை செய்தல் என்னும் மானத்தை தக்வா என்னும் ஆடையினால் மறைத்து, பின்பு தொழுகை என்னும் மிஃராஜில் அல்லாஹு தஆலா உன் மீது தஜல்லியாக இருப்பதை தரிசிக்கின்ற நிய்யத்துச் செய்து, தாத்துல் முத்லக் என்னும் அல்லாஹு தஆலாவின் பால் உன்னுடைய உடல், குணம், செயல் ஆகியவற்றினால் முன்னோக்கி தக்பீர் தஹ்ரீமைக்கட்டிக்கொள்ளவும்.

பிறகு புகழப்பட்ட ஏழு ஆயத்துகள் என்கிற ஏழு சிஃபத்துக்களான சூரத்துல் ஃபாத்திஹாவை, உன்னை விட்டு, உன்னை நீக்கி அவனளவில் சேருகிறதாக நினைத்து நீ ஓதுவாயாக! அதனை பிஸ்மியிலிருந்து யல்மித்தீன் வரை அல்லாஹ்வுடைய பங்காகவும்) இய்யாக்கவிலிருந்து நஸ்தயீன்வரை உனக்கும் அவனுக்குமிடையிலுள்ள பொதுவான பங்காகவும், இஹ்தினாவிலிருந்து கடைசிவரை உனக்குரிய பங்காகவும் ஓதித் தொழுவாயாக!

## தயம்முமின் இரகசியங்கள்

தண்ணீரை இழந்துவிட்டாலும் அதனை உபயோகிக்க முடியாவிட்டாலும், ஹயாத்தென்னும் தன்மையின் வெளிப்பாடாகிய பொதுப்படையான தண்ணீரின் இரண்டாம் வெளிப்பாடாகிய துப்புரவான மண்ணைக்கொண்டு மஸ்ஹு செய்யுமாறு ஏவியுள்ளான். அதாவது, முந்தின ஹயாத்துடைய தன்மையின் வெளிப்பாட்டை தரிசிக்க இயலாமலாகி விட்டால் இரண்டாம் தரஜாவில் அவனுடைய தஜல்லீ உண்டாவதை தரிசித்துக்கொள்ளவேண்டும்.

அல்லாஹு தஆலா குர்ஆனில் :-

(25:49) وَأَنْزَلْنَا مِنَ السَّمَاۤءِ مَاۤءً طَهُوْرًا

"வானத்திலிருந்து பரிசுத்தமான தண்ணீரை நாம்தான் இறக்கி வைத்தோம்" என்று கூறுகிறான். இதன் அந்தரங்கப் பொருளாகிறது. அமா عَمَاۤءْ (ஏகாந்தம்)

என்னும் மேலான பதவியிலிருந்து ஹயாத் என்ற தன்மையை இறக்கி வைத்தோம் என்பதாகும். பிறகு அதனுடைய ரூஹானிய்யத்தான சக்தியினால் அதனுடைய அடிமண்டியான இரண்டாம் பதவியாக மண்ணைப்படைத்து, அதிலிருந்து அதன் அசலாகிய தண்ணீரை வெளியாக்கினான். பூமியிலிருந்து தண்ணீர் வெளிப்படுவதாகக் கூறியுள்ளான்.

இமாம் அபூஹனீஃபா (ரஹ்) அவர்களிடம் மண்ணும் அதிலிருக்கும் கல் இனமும் தயம்முமிற்கு ஆகுமானதே என்று [illegible]டிருப்பது, கல்லிலிருந்தும் தண்ணீர் வருவதால்தான். மூஸா ([illegible]) அவர்கள் தங்கள் கைத்தடியால் பாறையை அடித்தபோது அதிலிருந்து [illegible] ஓலித்தோடியதாக அல்லாஹ் கூறுகிறான். இதுவரை உளூ, தயம்மும் இர[illegible]ய சில இரகசியங்கள் சொல்லப்பட்டன.

## குர்ஆ[illegible]ய சட்டமும் மரியாதையும்

உளூவோ, அல்லது முறைப்படி செய்யப்பட்ட தயம்முமோ இல்லாமல் தொழுவதும், ஸஜ்தாச் செய்வதும், தவாஃப் செய்வதும், குர்ஆனைத் தொடுவதும், அதனைச்சுமப்பதும் ஹராமாகும். எனினும் குர்ஆனுடைய ஆயத்துகளை துஆ என்ற முறையில் அல்லது பரக்கத்திற்காக எழுதி அதனைச்சுமப்பதும், அல்லது பிரயாணத்தில் தட்டுமுட்டுச் சாமான்களுடன் சேர்த்து சுமப்பதும் உளூவின்றியே கூடும். சாமான் என்பது ஒர் ஊசியளவுக்குள்ளதாய் இருந்தாலும் சரி. இவ்வாறு சுமப்பது அவசியத் தேவையைப் பொறுத்து இருப்பதால் அது கூடும். ஆனால், பிரயாணத்தில் குர்ஆனுடைய எழுத்துக்களைத் தொடுவது அவசியத்தேவையில்லை என்பதால் உளூவின்றி தொடுவதை தவிர்த்துக்கொள்ளவேண்டும்.

குர்ஆனை பரக்கத்திற்காகவோ, அல்லது ஓதுவதற்கென்ற எண்ணங்கொண்டோ எழுதும் போது எழுதுகிற நேரத்தில் மட்டும் உளூவின்றிச் செய்வது கூடும். அதன் பிறகு கூடாது. அது தனக்காக எழுதினாலும் சரி, கூலிவாங்காமல் பிறருக்காக எழுதினாலும் சரி. கூலிக்காக எழுதுகிறவனுக்கு அவனை ஏவினவனுடைய நாட்டம்தான் நோக்கமாகும். எழுதுகிறவனுடைய நாட்டம் நோக்கமல்ல.

குர்ஆன் நஜீஸான இடத்தில் கிடப்பதைக் கண்டாலும், அல்லது, காஃபிர் உடைய கையில் இருக்கக் கண்டாலும், அல்லது அது சேதமடைந்து விடுமென்பதை பயந்த நேரத்திலும் உளூ இல்லாமலிருந்தாலும் அந்த நிலைகளிலிருந்து அதனை மீட்டிவிடுவது வாஜிபாகும்.

குர்ஆனின் தாள்களை மூக்குச்சளி, எச்சில் போன்ற அருவருப்பான பொருளில் போடுவதும், எச்சிலைக் கையால் தொட்டு குர்ஆனுடைய தாளைப்புரட்டுவதும் ஹராமாகும். ஆனால் எச்சில் எழுத்துகளில் படாமல் திருப்புவது ஹராமல்ல.

குர்ஆனை அணியும் துணியிலோ, சுவரிலோ எழுதுவதும், நெருப்பிலிட்டுக் கரிப்பதும் மக்ரூஹ். ஆனால் அது நஜீஸில் விழுந்து விடுமென்றோ, அல்லது கேவலப்படுத்தப் படுமென்றோ பயந்தால் நெருப்பில் கரிப்பது மக்ரூஹல்ல. எனினும் தண்ணீரில் கரைத்து விடுவது நல்லது.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

குர்ஆன் எழுதிய தாளை அப்படியே விழுங்குவது ஹராம். அதனைக் கரைத்துக்குடிப்பது ஆகும். குர்ஆன் ஆயத்துக்கள் எழுதப்பட்ட சுவரை இடிப்பதும் கூடும். குர்ஆனுக்கு நேரே காலை நீட்டுவது ஹராமாகும், உயரத்தில் இருந்தால் தவிர. மேற்கொண்டு விபரம் பின்னால் கூறப்படும். இவ்வாறே ஒரு மனிதனுக்கு நேரே காலை நீட்டுவதும் கூடாது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எவர் பக்கமும் காலை நீட்டியதே இல்லை என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

குர்ஆனை நஜீஸான மை, பேனா ஆகியவற்றினால் எழுதுவதும், வேறுமொழியில் எழுதுவதும், தலைக்கு வைத்துப் படுப்பதும் ஹராமாகும். இவ்வாறே மார்க்கக்கிரந்தங்களைத் தலைக்கு வைத்துப்படுப்பதும் ஹராம். ஆனால், திருட்டுப்போய் விடுமென்ற பயமிருந்தால் அவ்வாறு செய்யலாம். குர்ஆனின் மீது வேறு கிதாபுகளை வைப்பதும் கூடாது. ஆனால், பைண்டிங் செய்வதற்காகக்கூடும்.

குர்ஆன் ஓதுகிற இடத்தைச் சுத்தமாக வைப்பதும், நோன்பாளியையும், இஹ்ராம் கட்டியவனையும் தவிர மற்றவர் வாசனை பூசுவதும் முஸ்தஹப்பு. குர்ஆனுக்கு நாம் அளிக்க வேண்டிய மதிப்பு பற்றியும், நாம் அனுசரிக்க வேண்டிய ஒழுக்கங்களைப் பற்றியும் தனி நூல்கள் எழுதப்பட்டுள்ளன. உளூவுடனிருந்து கிப்லாவை முன்னோக்கி தலைதாழ்த்தி ஓதுவதும், சாய்ந்து உட்காராமலிருப்பதும், பெருமையுடன் அமராமலிருப்பதும், சம்மணமிட்டு உட்காரா மலிருப்பதும், தொழுகை யிலிருப்பதுபோல் காலை, மடித்து அமர்ந்து ஓதுவதும் அதனுடைய ஒழுக்கங்களில் உள்ளவையாகும்.

இஹ்யா உலூமித்தீனில் எழுதப்பட்டுள்ளதாவது: குர்ஆன் ஓதுவதில் மிகச் சிறந்த நிலையாகிறது, பள்ளிவாசலில் தொழுகையின் நிலையில் ஓதுவதாகும். உளூ இல்லாமல் ஓதினாலும், படுத்துக்கொண்டு ஓதினாலும் சிறப்புண்டு; ஆனால், முந்தின சிறப்பைப்போல் ஆகாது.

குர்ஆனைக் கேவலப்படுத்தும் முறையில் கிழித்தாலும், அதனைக் கேவலமாகக் கருதினாலும் முர்த்தத்தாக (இஸ்லாத்தை விட்டும் நீங்கியவனாக) ஆகிவிடுவான்.

குர்ஆனுடைய ஆயத்துக்களைத் தொடராக எழுதி அதைச்சுற்றி நாலு பக்கங்களிலும், குர்ஆனின் வரிகளுக்கு இடையிலும் எவ்வளவு விரிவுரை எழுதினாலும் அது குர்ஆன் என்றுதான் சொல்லப்படும். அது தஃப்ஸீர் ஆகாது.

குர்ஆனுடைய ஆயத்துக்களை ஒரு பக்கத்தில் ஒரு அளவு எழுதி அதற்குக்கீழ் அந்த பக்கத்தில் தஃப்ஸீரை எழுதி அந்த பக்கத்தில் குர்ஆனைவிட தஃப்ஸீர் அதிகமாக இருந்தால் அதனை உளூவில்லாமல் தொடலாம். அதிகம் என்பது மொழிவதில் கணக்கிடப்படும். (அதாவது ஆலமீன் عٰلَمِيْنَ - என்ற அரபி வார்த்தை எழுதுவதில் ع-ل-م-ي-ن என்று ஐந்து எழுத்துக்களாகவும், மொழிவதில் ع-ا-ل-م-ي-ن என்று ஆறு எழுத்துக்களாகவும் கணக்கிடப்படும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

குர்ஆனைவிட தஃப்ஸீர் அதிகமாக இருக்கின்றதா சமமாக இருக்கின்றதா என்பதில் சந்தேகம் ஏற்பட்டாலும் வெளிப்படையில் அதைத்தொடுவது ஹலாலாகும். ஆடைகளில் பட்டும் பருத்தியும் சமமாக இருக்கின்றதா அல்லது அதிகமாக இருக்கின்றதா என்று சந்தேகித்தாலும் அதை அணிவது ஆண்களுக்கு ஹலாலாகும். ஆனால் குர்ஆனும் தஃப்ஸீரும் சமமாக இருப்பதாக சந்தேகமறத்தெரிந்தால் அதைத்தொடுவதோ சுமப்பதோ ஹராமாகும். எனினும், பருத்தி பட்டு விஷயத்தில் அது சமமாக இருப்பது சந்தேகமறத் தெரிந்தாலும் அதனை ஆண்கள் அணிவது ஹராமல்ல என்று ஃபத்ஹுல் ஜவாதில் கூறப்பட்டுள்ளது. குர்ஆனுடைய எழுத்துக்களை எழுதுகின்ற மை அதன் தஃப்ஸீருடைய எழுத்துக்களை எழுதுகின்ற மையைவிடக் கூடுதல் எடைஉடையதாக இருக்கிறது. ஆனால் எழுத்துக்களின் எண்ணிக்கையில் குர்ஆனின் எழுத்துக்களின் எண்ணிக்கையைவிட தஃப்ஸீர் எழுத்துக்களின் எண்ணிக்கை கூடுதலாக இருக்கின்றது. இந்நிலையில் அதனை உளுவில்லாமல் தொடுவது கூடும். இதற்கு மாற்றமாக இருந்தால் கூடாது என்றும் கூறப்பட்டுள்ளது. எனினும், முந்திய முறையில் தொடாமலிருப்பதே சிறந்தது.

ஷிஹாப் ரமலீ (ரஹ்) அவர்களுடைய ஃபத்வாவில் "ஒரு தஃப்ஸீர் அது முழுமையும் குர்ஆனை விட தஃப்ஸீர் அதிகமாக இருக்கிறது. ஆனால், ஒரு தாளை மட்டும் எடுத்துப்பார்க்கும்பொழுது குர்ஆனுடைய எழுத்துக்களை விடத் தஃப்ஸீர் குறைந்திருந்தாலும், அல்லது சமமாக இருந்தாலும் அந்தத் தாளைத் தொடுவது ஹராம்" என்று கூறப்பட்டுள்ளது.

ஜமால் ரமலீ (ரஹ்) அவர்களுடைய ஃபத்வாவில் கூறப்பட்டுள்ளதாக குர்தீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளதாவது: தஃப்ஸீர் ஜலாலைனைப்பற்றி அன்னாரிடம் கேட்கப்பட்டபோது, யமன் நாட்டில் ஒரு மனிதர் தஃப்ஸீர் ஜலாலைனுடைய எழுத்துக்களை எண்ணிப்பார்த்தார். அதில் சூரா முஸ்ஸம்மில் வரை குர்ஆனுடைய எழுத்துக்களும் தஃப்ஸீருடைய எழுத்துக்களும் சமமாக இருந்தன. அதன் பிறகு தஃப்ஸீர் அதிகமாக இருப்பதாகக் கூறினார்.

உளுவில்லாத ஒருவர் குர்ஆனுடைய தாளை ஒரு குச்சியினால் புரட்டுவதானால், அந்த தாளின் கனம் அவருடைய கையின் மீதல்லாமல் அந்தக் குச்சியின் மீது இருக்குமளவுக்குக் குச்சி கனமானதாக இருந்தால் கூடும். துணிபோல் உள்ளதைக் கையில் சுற்றிக்கொண்டு பலகையில் குர்ஆன் ஆயத்துகளை எழுதுவதும் தொடுவதும் இவ்வாறுதான்.

ஒருவர் தன்னுடைய தேவைக்காக பருவமடையாத சிறுபிள்ளையை குர்ஆனைத் தொடும்படி, அல்லது எடுக்கும்படிச் சொல்வது ஹராமாகும். அவ்வாறின்றி, அப்பிள்ளை தான் படிக்கும் தேவைக்காகத் தொடுவதும் எடுப்பதும் கூடும். அதனைத் தடுக்கக் கூடாது.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

குர்ஆனை வைப்பதற்கு ஒரு சிறிய நாற்காலி போன்றது இருந்தால் குர்ஆன் இருக்கும் அந்த நாற்காலியைத் தொடுவதில் கருத்து வேறுபாடு உள்ளது. சுவரில், உத்திரத்தில் குர்ஆனுடைய ஆயத்துகள் எழுதப்பட்டு இருந்தால், எழுத்தில்லாத இடத்தை உளு இல்லாமல் தொடலாம். அந்த எழுத்துக்களை அழித்து விட்டால் அவற்றில் வடிவங்கள் முற்றிலும் போய், வாசிக்கமுடியாத நிலை ஏற்படும்வரை அதனைத் தொடுவது ஹராமாகும்.

உளுவில்லாமல் குர்ஆனைத் தொடக்கூடாது என்பதில் அதனுடைய பைண்டிங்கும் உறையும் அது வைக்கப்பட்டிருக்கும் ரைஹால் போன்றவைகளும் உட்பட்டவைதான். உளுவின்றி குர்ஆனை சுமக்கவேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டால் இமாம் அபூஹனீஃபா (ரஹ்)அவர்களின் மத்ஹபைத் தொடர்ந்து, ஒரு துணியைக் கையில் வைத்து அதற்கு மேல் குர்ஆன் இருக்கும் விதமாகத் தூக்கலாம் குர்ஆன் கையில் படக்கூடாது.

ஒரு கிதாபில் ஒரு பக்கம் சில சூராக்களும் மறுபக்கத்தில் அதன் உரை, வேறு அவ்ராதுகள் எழுதியிருந்தால், ஒவ்வொன்றுக்கும் அதனதனுடைய சட்டம் உண்டு என்பதாகவும், அந்தக்கிதாபை உளுவில்லாமல் தொடலாம் என்பதாகவும் இமாம் சுஃபிஈ (ரஹ்) அவர்கள் தீர்ப்பு வழங்கியுள்ளார்கள். தஃப்ஸீர் என்பது அரபு மொழியில் தான் இருக்கவேண்டுமென்று எவரும் கூறவில்லை.

குர்ஆனை, அல்லது அது எழுதப்பட்டிருக்கும் பலகையைப் பார்த்தாலும், அல்லது ஓர் ஆலிமைப் பார்த்தாலும், வயதில் மூத்தவரைக் கண்டாலும் எழுந்து நிற்பது சுன்னத்தாகும்.

குர்ஆனை வைத்துக்கொண்டிருக்கும் ஒரு மனிதனை குர்ஆன்உடைய நிய்யத்தில்லாமல் சுமப்பது கூடும்.

குல்ஹுவல்லாஹு போன்ற சூரத்து அல்லது ஆயத்துகள் எழுதப்பட்டிருக்கும் நாணயத்தைத் தொடுவதும், இவ்வாறே ஆயத்துகள் எழுதப்பட்ட துணிகளை அணிவதும் கூடும். அவன் ஜுனுபாளியாக இருந்தாலும் சரி.

குர்ஆனைத் தவிர மற்றுமுள்ள கிதாபுகள் அனைத்தும் ஒரே தரஜாவில் உள்ளவை அல்ல. புகாரி, முஸ்லிம் ஆகிய இரண்டு ஹதீஸ் கிதாபுகளும் இமாம்களுடைய ஏகோபித்த அபிப்பிராயப்படி மிகச்சரியான ஹதீஸ்களைக் கொண்டவையாக இருப்பதால் குர்ஆனுக்கு அடுத்த தரஜாவில் அவையிரண்டும் வைக்கப்படும்.

ஜுனுபாளியும், உளு இல்லாதவனும் குர்ஆனைக் கையால் தொடாமலும் எடுக்காமலும் அதனை எழுதுவது கூடும்.

குர்ஆனை ஓதிக்கொண்டிருப்பவன் காற்றுப்பரியும் நேரம்வந்தால் ஓதுதலை நிறுத்தி விடவேண்டும். அப்பொழுது ஓதுவது மக்ருஹ்.

குர்ஆன், தஃப்ஸீர் மற்றும் கிதாபுகள் வைக்கப்பட்டுள்ள பெட்டி பூட்டப்பட்டிருந்தால் அதன் மீது உட்காருவது ஆகுமென்று

சொல்லப்பட்டிருந்தாலும், அவ்வாறு உட்காராமல் [illegible]ப்பு. குர்ஆனை மிகவும் சிறியதாக எழுதுவது மக்ரூஹ்.

குர்ஆனில் ஏதேனும் தவற்றை [illegible]துவது வாஜிப். அது பிறருடைய குர்ஆனாக இ[illegible] வேறு கிதாபாக இருந்தால் **அதனை அனுமதியின்**[illegible] **ஆனை** வீணாகக் **கிழிப்பது ஹராம்.**

**குர்ஆன் ஓதப்பட்டால் அத**[illegible]கேட்பதும், அல்லாஹ்வை **பயப்படுவதும்,** அழுகை வராவிட்[illegible]ரவழைப்பதும், குர்ஆனுக்கு **மணம் பூசுவதும்,** அதனை முத்தமிடு[illegible]இடத்தில் வைப்பதும் சுன்னத்து. குர்ஆனைப்பார்ப்பதும், ஹாஃபிளா[illegible] பார்த்து ஓதுவதும் சுன்னத்து.

ஏழு கிராஅத் அல்லாத **வேறு**[illegible]ல் குர்ஆனை ஓதுவது ஹராமாகும். அர்த்தம் மாறுகின்ற முறையில் **இரு**[illegible]தொழுகையில் அதனை ஓதுதல் கூடாது. அது ஹராம் என்பதை அறிந்து **மனம்** மு[illegible]டாகச் செய்தால் தொழுகை கூடாது.

ஒரு மனிதரிடத்தில் குர்ஆன், தஃப்ஸீர், ஹதீஸ், ஃபிக்ஹு, நஹ்வு, போன்ற பல கிதாபுகள் இருந்து, அவற்றை, **ஒன்றன்** மேல் ஒன்றாக வைக்கவேண்டுமென்றால், முதலில் கீழே சர்ஃபு, நஹ்வு கிதாபுகளையும், அதற்கு மேல் வைத்தியக்கிதாபுகளையும், அதற்கு மேல் ஃபிக்ஹு கிதாபுகளையும், அதற்குமேல் ஹதீஸ் கிதாபுகளையும், அதற்கு மேல் தஃப்ஸீர் கிதாபுகளையும் அதற்கு மேல் குர்ஆனையும் வைக்கவேண்டும். இது சுன்னத்து. இதற்கு மாற்றமாக வைப்பது மக்ரூஹ்.

சுவர்களில் குர்ஆனை எழுதுவதும், அது மஸ்ஜிதுடைய சுவரின் மீதானாலும் சரி, **உணவுப்** பொருட்கள், உடைகள் போன்றவற்றின் மீது எழுதுவதும் மக்ரூஹ்.

இரத்தம் போன்ற நஜீஸான பொருளினால் குர்ஆனை எழுதுவது ஹராம். சில **ஆயத்துகளை** இரத்தத்தினால் எழுதினால் இன்ன பலன் கிடைக்குமென்று சில **அஸ்மா** கிதாபுகளில் எழுதப்பட்டிருப்பதைக் கண்டு ஏமாந்து விடவேண்டாம். அவ்வாறு எழுவது ஹராமாகும்.

ரூபாய் நோட்டு, பவுன் போன்றவற்றைக் குர்**ஆனுடைய தாள்களுக்கு** இடையிலும் **அதனுடனும்** வைப்பதும் ஹராம்.

குர்**ஆனுடைய** எழுத்தை ஒரு பொருளில் எழுதி அதனைக் கரைக்காமல் **அப்படியே** விழுங்குவது ஹராம். ஹதீஸ், **தஃப்ஸீர்,** ஃபிக்ஹு கிதாபுகளை **உளுவில்லாமல்** தொடலாம் என்றிருந்தாலும் உளுவுடன் தொடுவதுதான் சிறந்தாகும்.

## குர்ஆன் அல்லாஹ்வின் திருவசனம்

குர்ஆன் அல்லாஹ்வுடைய (கலாம்) திருவசனமாகும். அதற்கு எழுத்தும், ஓசையும், **முன் பின் மாறுதல்** என்பதும் **கிடையாது.** ஆனால், அது நம்மிடத்தில் எழுத்தும், ஓசையும் உள்ளதாகவும், தாளில் எழுதப்பட்டதாகவும், நாவினால் ஓதப்படக்கூடியதாகவும், இதயத்தினால் பாடமிடக்கூடியதாகவும், இருக்கிறது. இவ்விரண்டுக்கு மிடையிலுள்ள வித்தியாசம் சாயையும் (நிழலும்) நிழலுடையவனும்

போலாகும். நிழல் வேறு அதற்குரிய உருவம் வேறு. இரண்டும் ஒன்று எனச் சொன்னால், இமாம் அஹ்மதுப்னு ஹன்பல் (ரஹ்) அவர்களை சில அறிவீனர்கள் குர்ஆன் படைக்கப்பட்டது என்று சொல்லும்படி நிர்பந்தித்தது போலாகிவிடும். ஆனால் ஹன்பலீ இமாம் அவர்களோ குர்ஆன் கதீமானது (பூர்வீகமானது, படைக்கப்படாதது) என்ற தங்களது நிலையில் ஒரு சிறிதும் தளர்ந்தார்களில்லை.

அல்லாஹ்வுடைய கலாமிற்கும் நம்மிடமுள்ள குர்ஆனுக்கும் உதாரணமாகிறது: நெருப்பு என்று ஒரு தாளில் எழுதுவது போன்றாகும். அல்லது நாவினால் நெருப்பு என்று சொல்வது போன்றாகும். இதனால் தாள் கரிந்துவிடவோ நாக்கு வெந்துவிடவோ செய்யாது. இவ்வாறே அல்லாஹ்வுடைய கலாம் வேறு, நம்மிடமுள்ள குர்ஆன் வேறு. அல்லாஹ்வுடைய கலாம் இவ்வகை படைக்கப்பட்டவற்றை விட்டும் தூய்மையானதாகும்.

ஷைகு அப்துல் கரீம் ஜியலி (ரஹ்) அவர்கள் இன்ஸானுல் காமில் என்ற நூலில் கூறுவதாவது: "அல்லாஹ்வுடைய கலாமென்பது, அர்ஷுக்கு மேல் நாயகத்தனமென்னும் உலூஹிய்யத்துடைய ஏவல் கொண்டு சிறப்பென்னும் அந்தஸ்தின் மூலம் உண்டாவதாயிருக்கும். வானத்தையும், பூமியையும் நோக்கி "நீங்களிருவரும் மனமகிழ்வுடனோ, மன மடிவுடனோ (விரும்பி உற்சாகத்துடனோ, விரும்பாமல் உற்சாகம் குன்றியோ எனக்கு வழிப்பட்டவர்களாக என்னிடம்) வாருங்கள் என்று இறைவன் கூறியபோது வழிப்பட்டவர்களாகவே வந்தோம் என்று அவையிரண்டும் கூறின" (41:11) இது அல்லாஹ்வின் ஒரு வகையான கலாம். மற்றொரு வகை அவனுக்கும் அவன் படைப்பினங்களுக்குமிடையில் மனிதர்களுடைய மொழியில் ருபூபிய்யத்துடைய அந்தஸ்தின் மூலம் உண்டாவதாகும். அது நான்கு வேதங்களும் சுஹுஃபுகளும் போன்று.

அல்லாஹ்வுடைய கலாமாகிறது 'மும்கின்' என்னும் தோன்றுவதற்குச் சாத்தியமான பல்வேறு குறிப்புகளைக் கொண்டதாகும். மும்கின் என்னும் அக்குறிப்புகள் முடிவுடைய முடியாதவையாகும். ஆகையினால்தான் கடல்களெல்லாம் மையாக ஆக்கப்பட்டு ரப்புடைய கலிமாக்களுக்கு விளக்கம் எழுதினாலும் விளக்கம் முடியுமுன் கடல் மை தீர்ந்துவிடும் என்ற கருத்தை அல்லாஹ் குர்ஆனில் குறிப்பிடுகிறான். இதே கலாமைப் பற்றி "மெய்யாகவே ஜிப்ரீல் எனது உள்ளத்தில் ஊதினார்" என்று கூறியிருப்பதுடன் "அதை நான் ஓதினேன்" என்றும் நபி (ஸல்) அவர்கள் அருளியுள்ளார்கள். இதன் விளக்கம் சமானுடைய பாடத்திலும் கூறப்பட்டிருக்கிறது. எனவே தான், குர்ஆனை ஜுனுபாளிதொடுவதும், ஓதுவதும், சுமப்பதும் ஹராம், என்றும், உளூ இல்லாதவர் தொடுவதும், சுமப்பதும் ஹராம், ஓதுவது கூடும் என்றும் கூறப்பட்டுள்ளது. இதற்குரிய காரணம் என்னவெனில்:-

அல்லாஹுதஆலா குர்ஆனில், "நீங்கள் ஜுனுபாளியாக (முழுக் குடையவர்களாக) இருந்தால் (தண்ணீரினால்) சுத்தம் செய்து கொள்ளுங்கள். அன்றி (தண்ணீர் உபயோகிக்க முடியாமல்) நீங்கள் நோயாளிகளாக இருந்தாலோ, அல்லது யாத்திரையிலிருந்தாலோ, அல்லது உங்களில் எவரும் மலம் (ஜலம்) உபாதைக்குச் சென்று வந்திருந்தாலோ, அல்லது நீங்கள் பெண்களைத் தீண்டியிருந்தாலோ அப்போது தண்ணீரை நீங்கள் பெற்றுக் கொள்ளவில்லையானால் சுத்தமான

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஆனீ'

மண்ணை நாடிக்கொள்ளுங்கள். (தயம்மும் செய்துகொள்ளுங்கள்) எனவே, அதிலிருந்து உங்களுடைய முகங்களையும் கைகளையும் தடவிக்கொள்ளுங்கள்." (அல்குர்ஆன் 5:6) என்று கூறியிருப்பதாகும்.

இத்திருவசனத்தில் கூறப்பட்டுள்ள "நீங்கள் ஜுனுபாளியாக இருந்தால்" என்பதற் [redacted] படைக்கப்பட்டுள்ள தாழ்மையான பொருட்களால் ஊறிவு [redacted] பாது ஏற்படும் இன்பத்தினால் ஹக்கை மறக்குதல் என்னும் [redacted] வனை விட்டும் தூரமாயிருப்பதனால், அவனுடைய சந்நிதான [redacted] என்கிற தொழுகையைத் தொழுவதும், அவனுடைய வலுப்பம் [redacted] வத் தஸ்வாப் செய்வதும், அவனுடைய முனாஜாத்து என்னும் [redacted] ஆனை ஓதுவதும், அவனுடைய வீடாகிய மஸ்ஜிதில் தரிபடுவதும் [redacted] டுள்ளது. அந்த விலக்கலை நீக்க நாடினால் فَاطَّهَّرُوْا நீங்கள் சுத்தமாகிக் [redacted] ள் என்று கூறுகிறான்.

நீங்கள் நோயாளிகளாக இருந்தால், என்பதற்கு முஜாஹதாத் என்னும் மனப்பயிற்சியின் [redacted] லாதவர்களாக இருந்தால் பரிசுத்தமான மண்ணினால் [redacted] ளுங்கள் என்று கூறுகிறான். அதாவது: அனாநிய்யத் என் [redacted] ம்பாவ எண்ணத்தை விட்டுத் தூய்மையாகிய தண்ணீருக்கு அ [redacted] டியாகவும் வெளித்தோற்றத்தில் அசலாகவும் இருக்கின்ற மண்ணை [redacted] ளுங்கள் என்பது கருத்தாகும்.

அம்மண்ணைக்கொண்டு, உங்களுடைய முகங்களையும், கைகளையும், தடவிக்கொள்ளுங்கள் என்று கூறுகிறான். அதாவது பற்பல தோற்றங்களை முன்னோக்கும் முகங்களையும், இம்மை மறுமையிலுள்ள அல்லாஹ்வின் நிஃமத்துக்களைப் பற்றிப் பிடிப்பதற்காக கைகளையும் துடைத்துக்கொள்ளுங்கள் என்பதாகும்.

உளுவில் நான்கு உறுப்புகளைப்பற்றிக் கூறப்பட்டுள்ளதும், தயம்முமில் இரண்டு உறுப்புகளில் சுருக்கிக்கொண்டதும் தயம்மும் உளுவுக்குப் பகரமாக இருப்பதாலும், பெரும்பாலான சட்டங்களில் தயம்மும் குறை உள்ளதாக இருப்பதாலுமாகும். வெளிப்படையில் உளுவுக்கும் தயம்முமுக்கும் இடையில் உள்ள வேறுபாடு உயர் பதவியிலுள்ள ஒரு அதிகாரிக்கும் கீழ்நிலைப்பணியாளருக்கும் இடையில் நிலவும் வேறுபாடு போன்றதாகும்.

முழுக்கில் உளு நுழைந்துவிடும். உளுவில் முழுக்கு நுழையாது. உளுவில்லாதவன் குர்ஆனை ஓதலாம். ஜுனுபாளி குர்ஆனை ஓதக்கூடாது. முழுக்கு விதியான சில நிலைகளில் உளு முறியாது. ஆனால் ஹனஃபி இமாம் அவர்கள் சொற்படி முழுக்கு விதியாகும்போதெல்லாம் உளு முறிந்துவிடும்.

## அசுத்தம் பற்றிய பாடம்

மன்னிக்கப்படாத நஜீஸ்கள் பின் வருபவையாகும்: விட்டை, புழுக்கை, பித்துள்ளிருக்கும் நீர், எச்சம், மலம், சிறுநீர், மதீ, வதீ, சத்தி, இரத்தம், சீழ், ஊனம் ஆகியவையும், இன்னம் இறந்த மனிதன், செத்த மீன், செத்தவெட்டுக்கிளி ஆகிய மூன்றையும் தவிர மற்றுமுள்ள செத்த பிராணிகள் அனைத்தும், சாப்பிடுவது ஹராமான மிருகங்களிலுள்ள எலும்பு, தோல், கொம்பு, நகம், குளம்பு, பல், சதை, உரோமம் ஆகியவையும், கள்ளும், நாய், பன்றியும், இவையிரண்டிலொன்றுக்கு வேறு பிராணிகளின் மூலம் பிறந்த குட்டிகளாயினும் நஜீஸாயிருக்கும்.

மதீ என்பது இச்சையினால் முன் துவாரத்திலிருந்து வெளிப்படுகின்ற மெல்லிய நீராகும். இதனை வெள்ளை என்றும் கூறுவார்கள். வதீ என்பது உஷ்ணத்தினால் சிறுநீர் கழித்தபின், அல்லது கனமான பொருளைச் சுமக்கும்போது வெளிப்படுகின்ற நீராகும். இதனை வெட்டை என்றும் கூறுவார்கள். இந்த வெட்டை என்பது மேற்கண்ட காரணங்களால் வெளிப்படுவதுடன் வேறு சில காரணங்களாலும் வெளியாகும். வெட்டை என்ற இந்த நோயால் பீடிக்கப்பட்ட ஒரு ஆண் ஒரு பெண்ணுடன் உடலுறவு கொள்வதால் அந்தப்பெண்ணுக்கும், அதேபோல் அதனால் பீடிக்கப்பட்ட ஒரு பெண் ஒரு ஆணுடன் உடலுறவு கொள்வதால் அந்த ஆணுக்கும் இந்த நோய் ஏற்படும். உடலுறவு கொண்ட சிறிது நேரத்திலும் ஏற்படலாம். அடுத்த நாளும் ஏற்படலாம். அல்லது ஏழு நாட்களுக்குள் ஏதாவது ஒரு நாளிலும் இந்த நோயின் அறிகுறிகள் தெரியலாம். இந்த நோயின் அறிகுறிகள் தெரிந்தவுடன் மருத்துவம் செய்துகொள்ளவேண்டும். சத்தி என்பது வயிற்றுள் சென்ற வஸ்து வெளியாகுவது. அது பேதலித்திருந்தாலும், பேதலிக்காதிருந்தாலும் சரி, அது நஜீஸாகும்.

ஈ, எறும்பு, பேன், மூட்டை, கொசு, செள் இவற்றில் செத்தவற்றைச் சுமந்து கொண்டு தொழுதால், அவை செத்ததாக இருப்பதால், தொழுகை பாத்திலாகிவிடும். ஆனால் இவ்விதமான புழுப்பூச்சிகள் அதிகமாகப்பரவி இருக்கும் நிலையில் அவற்றில் செத்தவை ஆடையில் ஒட்டிக்கொள்வது தவிர்க்கமுடியாத நிலையாக ஆகிவிட்டால் அவற்றில் செத்தவற்றைச் சுமந்துகொண்டு தொழுவதால் தொழுகை முறியாது.

நாய், பன்றி போன்றவற்றின் உடலிலிருந்தும், மற்றும் செத்த பிராணிகளிலிருந்தும், மலம், ஜலம் போன்றவற்றிலிருந்தும் உற்பத்தியாகும் புழுக்கள் அவற்றில் உயிர் உண்டாகி இருப்பதால், அவை சுத்தமானவையாகும்.

## மன்னிக்கப்படும் நஜீஸ்கள்

மன்னிக்கப்படுகின்ற நஜீஸ்கள் பின் வருபவையாகும்: மூட்டைப்பூச்சி, செள், கொசு, ஈ, ஈசல் ஆகியவற்றின் இரத்தமும், தானாக உடைந்த சிலந்திப்புண் (சிரந்திப்புண்) போன்றவற்றின் இரத்தமும், இவை அதிகமாக இருந்தாலும் சரி, நாய், பன்றி இவையிரண்டைத் தவிர மற்றுமுள்ள பிராணிகளின் இரத்தத்தில் கொஞ்சமும், மாதவிடாய் இரத்தம், சின்னி மூக்குடைந்த இரத்தம் ஆகியவற்றில் கொஞ்சமாக இருந்தாலும், ஈயின் பீச்சல், வௌவாலின் நீர், புழுக்கை ஆகியவை அதிகமாக இருந்தாலும் இவை அனைத்தும் உடலில், உடையில், இடத்தில் எங்கிருந்தாலும் மன்னிக்கப்படும். இவை மன்னிக்கப்படும் என்பது, தொழுகையின்போது உடலில்,

உடையில், இடத்தில் பட்டிருந்தால் மன்னிக்கப்படும் என்பதாகும். அவ்வாறின்றி சிறிதளவு தண்ணீர், உணவுப் பொருட்கள் போலுள்ளவற்றில் இவைபட்டால் அவை நஜீஸாகி விடும்.

ஈயாகிறது தண்ணீர் போன்ற பானங்களில் விழும் போது ஒரு சிறகைத் தாழ்த்தியும் மற்றொரு சிறகை மேலே உயர்த்திக்கொண்டும் விழும். தாழ்த்திக்கொண்டு தண்ணீரில் விழுகின்ற சிறகில் ஒரு வித விஷமும் மற்றொரு சிறகில் அதற்கு மாற்று மருந்தும் இருக்கிறது. ஆகையால், விழுந்த ஈயின் மற்றொரு சிறகையும் நன்றாக அமிழ்த்தி எடுத்து எறிந்து விட்டு [redacted]ரை அருந்தவேண்டும். இவ்வாறு நபிகள் பெருமா[redacted]பதாக புஹாரீ, அபூதாவூது, நஸாயீ, இப்[redacted]ஆகிய கிரந்தங்களில் கீழ்காணும் ஹதீஸ் இடம்[redacted]



إِنَّ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ إِذَا [redacted]
اَحَدِكُمْ فَلْيَقْلِبْهُ فَاِنَّ فِيْ اَحَدِ جَنَاحَيْهِ دَاءً وَ[redacted]
وَاِنَّهُ يَتَّقِيْ بِجَنَاحِهِ الَّذِيْ فِيْهِ الدَّاءُ.

நெய் போன்ற உறைந்த வஸ்துவில் எலி போன்ற பிராணி விழுந்து விட்டால் அதனையும் அது விழுந்த [redacted]பொருளையும் எடுத்தெறிந்துவிட்டு மீதியை உபயோ[redacted]ணய் போன்றதில் விழுந்தால் அது முழுவதும் நஜீ[redacted] எண்ணெயை பள்ளிவாசல் அல்லாத இடங்க[redacted]லாம்.

நாய், பன்றி [redacted]லும், வியர்வையும், வித்தும் துப்புரவான[redacted]

அத்திப் பழம், இ[redacted] பழம் ஆகியவ[redacted] ஒட்டிக்கொண்டிருக்கும் புழுக்களை அத்துடன் சேர்த்துச் சாப்பிடுவது கூடும்; தனியாகச்சாப்பிடுவது கூடாது.

சர்க்கரை, கருப்பட்டி, தேன், நெய் போன்றவற்றில் சிற்றெறும்பு செத்துக்கிடந்தால் அதனை எடுக்காமல் சாப்பிடுவது கூடாது. ஆனால், அதனை எடுக்க முடியாதபடி அவற்றில் சூழ்ந்து கிடந்தால் அப்பொழுது மன்னிக்கப்படும்.

இஹ்யா உலூமித்தீனில் ஹலால் ஹராமுடைய பிரிவில் எழுதப்பட்டிருப்பதாவது: சமையல் செய்து வைக்கப்பட்டிருக்கும் சட்டியில் ஈ, எறும்பு போன்றவை விழுந்து அதனுடைய பாகங்களெல்லாம் சிதறி விடுமானால் அந்த உணவினைச்சாப்பிடுவது கூடும். ஏனெனில் ஈயை எறும்பை முழுமையாகச் சாப்பிடுவதுதான் ஹராமாகும்; அருவருப்புடையதாகும். ஆனால் இதில் அவ்விதமான அருவருப்பு கிடையாது.

மணற்பாங்கான பூமியில் நஜீஸ், சிறு நீர் போன்றவை பட்டு, பிறகு அது கண்ணுக்குத் தெரியாமல் ஆகிவிட்டால், அதன் மீது தண்ணீரை முழுமையாக ஊற்றுவது கொண்டுதான் அது துப்புரவாகும். கல்தரையாக இருந்தால் அதன்மீது தண்ணீரை ஊற்றி அது ஓடினால் தான் துப்புரவாகும்.

மன்னிக்கப்படாத நஜீஸினால் குர்ஆன் அசுத்தமாகிவிட்டால் அதனை உடனே கழுவுவது வாஜிபாகும். அது அதனால் சேதமடைந்தாலும் சரி; அல்லது அது அனாதைக்குரிய குர்ஆனாயிருந்தாலும் சரி உடனடியாகக் கழுவிடவேண்டும். ஆனால் நஜீஸ் பட்ட இடத்தை மட்டும் வெட்டி எடுத்துவிடக்கூடிய முறையில் இருந்தால் அவ்வாறு செய்வது போதுமாகும்.

### குல்லத்தைனிக்குக் குறைந்த தண்ணீர் நஜீஸானால்

ஒரு கிணற்றில் குல்லதைன் அளவுக்குக் குறைவான தண்ணீர் இருக்கும்போது அதில் ஏதேனும் நஜீஸ் விழுந்துவிட்டால் அதனை இறைத்துவிட்டால் மட்டும் துப்புரவாகாது. எனினும், அதனை குல்லதைன் அளவை எட்டும் வரை ஊறவிடவேண்டும். அதனுடைய நிறம், வாடை, ருசி ஏதேனும் ஒன்று மாறியிருந்தால் அந்த மாறுதல் நீங்கும் வரை இறைக்கவேண்டும். அல்லது அது தன்னால் நீங்கிடும்வரை விட்டுவைக்கவேண்டும். அவ்வாறு மாறுதல் ஏதும் இல்லாதபோது, அதில் தண்ணீரை இறைக்கும்போதெல்லாம் எலிபோலுள்ளதுடைய முடிகள் வந்து கொண்டேஇருந்தால் அத்தண்ணீர் முழுவதும் இறைக்கப்படும். அவ்வாறு முழுமையாக இறைக்கமுன் தண்ணீர் அள்ளி அதில் முடி எதுவும் வரவில்லையானால் அது துப்புரவானதாகும்; அதில் உளூவும் செய்யலாம்.

தேள், பாம்பு, பல்லி போன்றவற்றை அடித்து, அது சாகும்முன் அதிலிருந்து நீர் வெளியானால் அது சுத்தமானதாகும்; செத்தபின் வெளியானால் அது நஜீஸாகும்.

நெற்களத்தில் போரடிக்கும் மாடு சிறு நீர் கழித்தால் அதனைச் சுத்தம் செய்யாமல் அந்த நெல்லை உபயோகப்படுத்தலாம் என்பதில் கருத்து வேறுபாடு இருக்கிறது.

எண்ணெய் போலுள்ளதில் எலி போன்றவற்றின் புழுக்கை விழுவதைப் பாதுகாப்பது சிரமமாக இருந்தால் அது மன்னிக்கப்படும். ஷாஃபியீ மத்ஹபில் சில இமாம்களும், மாலிகீ ஹன்பலீ இமாம்களும் சாப்பிடுவதற்கு ஹலாலான பிராணிகளின் விட்டையும், புழுக்கையும், நீரும் சுத்தமானவை என்று கூறியிருந்தாலும் அதனை நிர்பந்தமான நேரத்தில் மட்டும்தான் துயரலாம்.

தொழுகையில் நஜீஸை முன்னோக்குவதும், அதற்கு அருகினில் நிற்பதும் எவ்வித இடையூறும் செய்யாது, எனினும் அது மக்ரூஹ் ஆகும்.

தலையிலிருந்து அல்லது நெஞ்சிலிருந்து வரும் கபம், சளி, அது நாற்றமுடையதாகயிருந்தாலும், மஞ்சளாக இருந்தாலும், துப்புரவானதுதான். வயிற்றிலிருந்து வரும் கபம் நஜீஸாகும். இவ்விதமான நோய் பீடிக்கப்பட்டிருப்பவனுக்கு அது (அதிகமாக இருந்தாலும்) மன்னிக்கப்படும். தூங்கும்போது வாயில் இருந்து வடியும் நீர் நாற்றமுள்ளதாக, மஞ்சளாக இருந்தாலும் அது குடலிலிருந்து வெளியானதென

உறுதியாகத் தெரியவில்லையானாலும், அல்லது சந்தேகமாக இருந்தாலும் அது துப்புரவானதாகும்.

சிறு நீர் கழித்து டேலாக்கட்டி பிடித்துக்கொண்டு இருப்பவனையும், துவாரத்தில் நஜீஸ் இருக்கின்ற உயிர்ப் பிராணியையும், அல்லது அறுக்கப்பட்ட பிராணியின் வயிற்றிலிருக்கும் நஜீஸை அகற்றாமல் அதனையும், வயிற்றில் இருக்கும் நஜீஸ் கழுவப்படாத கருவாட்டையும், உள்ளே இரத்தம் இருக்கின்ற முட்டையையும், துப்புரவான மைய்யித்தையும் (அதன் வயிற்றினுள் நஜீஸ் இருப்பதால்) சுமந்து கொண்டு தொழக்கூடாது. மலம், ஜலத்தைச் சுத்தம் செய்யாமலிருக்கும் குழந்தையையும் சுமந்துகொண்டு தொழுதால் தொழுகை கூடாது. நஜீஸ் பட்டிருக்கும் ஒரு பொருளைப் பிடித்திருப்பவனின் தொழுகை இவன் அசைவதின் மூலம் அப்பொருள் அசையவில்லையானாலும் சரி, கூடாது.

ஒருவன் தொழுவதற்குத் தயாராயிருக்கும்போது அவனுடைய உடையில் மன்னிக்கப்படாத ஏதேனும் ஒரு நஜீஸ் பட்டிருப்பதை ஒருவர் கண்டால் அதனை அவனுக்கு அறிவிப்பது கண்டவனின் மீது வாஜிபாகும். இவ்வாறே ஒரு மத்ஹபுக்காரன் மற்றவனுடைய மத்ஹபில் தொழுகையை வீணாக்கி விடக்கூடிய ஒரு செயலைச் செய்யக்கண்டால் அது கண்டவனின் மத்ஹபில் சரியானதாக இருந்தாலும் அதனை அவனுக்கு அறிவிப்பது வாஜிபாகும்.

பெண்களுடைய முன். துவாரத்தின் வெளிப்புறத்திலுள்ள ஈரம் துப்புரவானதாகும். நாய், பன்றியைத் தவிர மற்றுமுள்ள நஜீஸான பிராணிகளின் ஓரிரு உரோமங்களும் நஜீஸான பொருட்களின் புகையும் கொஞ்சமாக இருந்தால் அது பொறுக்கப்படும். நஜீஸின் மீது உட்கார்ந்துவிட்டு பறந்து வந்த ஈயின் காலிலுள்ள நஜீஸ் மன்னிக்கப்படும். பறவையின் எச்சமும் அதன் வாயிலுள்ள நஜீஸும் குறைவானதாக இருந்தால் மன்னிக்கப்படும். நீர் வாழும் உயிரினங்களின் விட்டையும் இவ்வாறுதான். காகம், குருவி ஆகிய பறவைகள் வீட்டுக்கூரையில் எச்சமிட்டு, அது மழையினால் கரைந்து விழும்பொழுது அதனைக்காப்பது சிரமமாக இருந்தால் அதுவும் மன்னிக்கப்படும்.

## குறைவான தண்ணீரில் பொறுக்கப்படும் அசுத்தங்கள்

குறைவான தண்ணீரில் மன்னிக்கப்படுவதெல்லாம் ஓலித்தோடும் இரத்தமில்லாத பொருள் அதில் செத்ததும், கண்ணுக்குத் தெரியாத நீர் போன்ற பொருள் அதில் விழுந்து கலந்ததுமாயிருக்கும். எனினும் இவையிரண்டினால் அந்தத் தண்ணீரின் சுவை, மணம், நிறம் ஆகியவற்றில் மாறுதல் ஏற்படாமலிருக்கவேண்டும்.

புனுகும், கஸ்தூரியும் துப்புரவானவையாகும். உபயோகிப்பதற்கு புனுகை பூனையிலிருந்து எடுக்கும்போது அதில் தனித்தனியாக மூன்று முடிகள் இருந்தால் மன்னிக்கப்படும்.

மாடு போன்ற மிருகம் குலையறுக்குதல் மன்னிக்கப்படும். அந்த வாயால் கன்றுக்குட்டி தாயிடம் பால் குடித்தாலும் கன்றின் வாயையும் மாட்டின் வாயையும் கழுவுதல் விதியல்ல. அதாவது, அந்தக் குலையறுத்த கன்றின் வாய், மற்றும் மாட்டின் வாயிலுள்ள குலையறுத்த நஜீஸ் ஆகியவை மன்னிக்கப்படும்.

மாடு, பூனை போன்றவை நஜீஸைத் தின்பதைக் கண்ணால் கண்டபின், அது நம்மை விட்டு மறைந்து குல்லத்தைன் அளவுள்ள தண்ணீரில் அதன் வாயை அமிழ்த்தி எடுத்துத் திரும்பி வருகின்ற நேரம் சென்றிருந்தால் அதன் வாய் துப்புரவானதென்று தீர்ப்புச் செய்யப்படும். அது தண்ணீரில் வாய் வைக்கின்ற நேரத்தில் நாம் பார்க்க வேண்டுமென்ற நிபந்தனையில்லை. அதுபோய்விட்டு வந்த இடத்தில் குறிப்பிட்ட அளவு தண்ணீர் இல்லையென்றாலோ அல்லது அது போய் வருவதற்குரிய நேரம் ஆக வில்லையென்றாலோ அதன் வாய் துப்புரவெனக் கூறப்படமாட்டாது.

ஒரு துப்புரவான பாத்திரம் நஜீஸாகிவிட்டபின் அதில் குல்லத்தைன் அளவு தண்ணீரை விட்டால் அப்பாத்திரமும் தண்ணீரும் துப்புரவானவையாகிவிடும்.

புலி, கரடி, கழுதை ஆகியவை போன்ற நாம் சாப்பிடாத பிராணிகளின் பாலும் நஜீஸாகும். அவற்றின் வியர்வை, எச்சில் ஆகியவை நஜீஸ் அல்ல. நாம் சாப்பிடக்கூடிய பிராணிகளின் வயிற்றிலுள்ள கேஸை நஜீஸல்ல; அதனைச் சாப்பிடுவதும் கூடும்.

வழக்கத்தில் பெரியது என்று கருதப்படும் பெரிய மீனைப் பிளக்காமல் அப்படியே கருவாடாக்கியபின் அதனைச் சாப்பிடும்போது அதன் வயிற்றிலுள்ள நஜீஸை நீக்காமல் சாப்பிடக்கூடாது.

இறந்து விட்டாலும் நஜீஸாகாத ஜீவன்களாகிய மனிதன், மீன், வெட்டுக்கிளி ஆகியவற்றின் உரோமம், பல், நகம், கொம்பு, சளி, காரல், வியர்வை ஆகியவை, அவை உயிருடன் இருக்கும்போது அவற்றிலிருந்து பிரிந்தாலும் அல்லது இறந்து விட்ட பின் பிரிந்தாலும் நஜீஸாகமாட்டா. இந்த மூன்று ஜீவன்களைத் தவிர மற்ற பிராணிகளில் இரண்டு வகைகள் உண்டு. முதலாவது: சாப்பிடுவதற்கு ஆகுமான பிராணிகளின் உறுப்புகளில் சில. அவை அந்தப்பிராணிகள் உயிருடன் இருக்கும்பொழுது பிரிந்தால் துப்புரவானதாகும். அவையாவன உரோமம், இறகு ஆகியவை போன்றவையாகும். மேலும் சில உறுப்புகள் அந்தப்பிராணிகள் உயிரோடு இருக்கும்பொழுது பிரிந்தாலும் நஜீஸாகும். அவற்றைச்சாப்பிடுவதும் ஹராமாகும். அவையாவன, கொம்பு, குளம்பு, நகம் ஆகியவையாகும்.

தக்பீர் சொல்லி அறுக்கப்பட்ட பிராணிகளின் இரத்தம், மலம், சிறு நீர், பித்துக்குள்ளிருக்கும் நீர் ஆகியவை நஜீஸாகும். இவை தவிர மீதியுள்ளவை அனைத்தும் துப்புரவானவையாகும்.

சாப்பிடுவது கூடாத பிராணிகளிலுள்ள முடி, கொம்பு, குளம்பு, நகம், எலும்பு, இறகு ஆகியவை எப்பொழுது பிரிந்தாலும் நஜீஸ் தான். இவ்விஷயத்தில், நிர்பந்தமான நேரத்தில் ஹனஃபீ மத்ஹபைப் பின் பற்றலாம். அதாவது: ஹனஃபீ மத்ஹபில் பன்றியைத் தவிர மீதியுள்ள சாப்பிடப்படாத பிராணிகள் இறந்துவிட்டாலும் அவற்றின் முடி, தறிக்கப்பட்ட இறகு, கொம்பு, குளம்பு, எலும்பு, நகம், அலகு, பல் ஆகியவை அனைத்தும் துப்புரவானவையாகும். அந்தப் பிராணிகளை ஷரீஅத்தின்படி அறுத்தால் அவற்றின் தோல்களும் துப்புரவானவையாகும்.

முடி, எலும்பு, கொம்பு, பல் ஆகியவை உயிருள்ள பிராணியிலிருந்து பிரிந்ததா? அல்லது இறந்த பிராணியிலிருந்து பிரிந்ததா? அல்லது சாப்பிடப்படுகின்ற பிராணியிலிருந்தா? அல்லது சாப்பிடக்கூடாத பிராணியிலிருந்தா? என்று சந்தேகம் ஏற்பட்டால் அது துப்புரவானதென்றே கூறப்படும்.

ஆடு, மாடு, போன்றவற்றின் முடிகள், கோழி போன்றவற்றின் இறகுகள் ஆகியவற்றை அவை உயிருடன் இருக்கும்பொழுது பிடுங்குவது, அது வலி தராதென்றிருந்தால் மக்ருஹ் ஆகும்; வலி தருமென்றிருந்தால் ஹராமாகும்.

## ஈ, சிலந்திப்பூச்சி ஆகியவற்றின் விஷயம்

சிலந்தியின் வலையும், கரையான் புற்றின் மண்ணும், அவற்றின் எச்சிலாக இருப்பதால், பலமான சொற்படி அவை துப்புரவானவையாகும்.

"எல்லாப் பிராணிகளிலும் அதிக வேட்கையுள்ளது ஈயாகும்; போதுமென்ற மனப்பான்மை அதிகம் கொண்டது சிலந்திப்பூச்சியாகும். அந்த ஈயை அந்த சிலந்திக்கு இரையாக ஆக்கிய இறைவன் தூயவன்" என்று ஹகீம் அஃப்லாத்தூன் (PLATO) என்ற ஞானி கூறியுள்ளார்.

## அடிப்பாகத்தில் ஓட்டையுள்ள கலயம், ஆடு, மாடு பால் கறக்கும்போது விழும் நீர் இவைகளைப் பற்றி

அடிப்பாகத்தில் ஓட்டையுள்ள கலயம் அல்லது சேத்தல் ஆகியவற்றிலிருந்து தண்ணீர் ஓடிக்கொண்டிருக்கும்போது நஜீஸான இடத்தில் அவற்றை வைத்தால் அவற்றிலிருக்கும் தண்ணீர் நஜீஸாக மாட்டாது. ஆனால், கலயத்திலுள்ள தண்ணீர் முழுவதும் வெளியாகி, பிறகு அந்த நஜீஸான இடத்திலுள்ள தண்ணீர் கலயத்தினுள் சென்றது உறுதியானால் அது நஜீஸாகும்.

ஆட்டில், மாட்டில், பால் கறக்கும்போது அதனுடைய சிறுநீர், புழுக்கை, சாணி, ஆகியவற்றிலிருந்து கொஞ்சம் அப் பாலில் விழுந்து விட்டால் அது நஜீஸாகாது. அதனால் அப்பாத்திரத்தையோ, அதனைக் குடித்த வாயையோ கழுவ வேண்டியதில்லை. வேறு ஆட்டிலிருந்து, மாட்டிலிருந்து கொஞ்சம் சிறு நீர், புழுக்கை, சாணி விழுந்திருந்தால் குடிப்பதற்கு அது மன்னிக்கப்படும். ஆனால், அந்த பாத்திரத்தையும், வாயையும் கழுவவேண்டும். இன்னும் அப் பிராணி தரையில் படுக்கும் நேரத்தில் அதன் உடலில் ஒட்டிக்கொள்ளும் நஜீஸ் அதன் பாலில் விழுந்தால் அதுவும் மன்னிக்கப்படும்.

இறைச்சியின் மீதும் எலும்பின் மீதும் காணப்படும் இரத்தம் மன்னிப்பிற்குரியதாகும். விராட்டி போன்ற நஜீஸான பொருளிலிருந்து வருகின்ற புகை நஜீஸ் என்பதில் கருத்து வேறுபாடு இருந்தாலும் அதனைப் பேணிக்கொள்வது சிறப்பாகும். கள், சாராயத்தின் புகை துப்புரவானது என நவவீ (ரஹ்) ராஃபியீ (ரஹ்) ஆகியவர்கள் கூறியுள்ளார்கள்.

மூட்டைப்பூச்சி, செள்ளு, ஆகியவற்றின் இரத்தமும், ஈயின் பீச்சலும் ஈரமான உடலிலும் மைக்கூடு போன்றதிலும் விழுந்தால் அது மன்னிக்கப்படும்.

மன்னிக்கப்படுகிற நஜீஸ் என்று கூறப்படுவது அது தானாக ஏற்பட்டு அதனை நீக்குவதை மார்க்கம் கட்டாயப் படுத்தாதிருப்பதெல்லாம் மனிதருக்கு அதிகமான சிரமத்தைக் கொடுக்கக்கூடாதென்பதற்காகத்தான். எனினும் மனமறிந்து அந்த சலுகையைப் பயன்படுத்திக்கொண்டு வேண்டுமென்றே அவ்வித நஜீஸை உண்டாக்கிக்கொண்டால் அது மன்னிக்கப்படமாட்டாது; அது நஜீஸ்தான். உதாரணமாக: கையாந்தகரை இலை, ஊமத்தை இலை ஆகியவற்றின் (சாகத்தை) சாற்றை ஓர் விளக்குத்திரியில் ஊற்றிக் காய வைத்து, பின் நஜீஸான எண்ணெயினால் விளக்கெரித்து அதன் புகையை புதுச்சட்டியில் சேகரித்து அதை அரைத்து அந்தச் சாற்றை அதனுடன் சேர்த்துக்கரைத்து மையாக்கி அதனைக்கொண்டு எழுதுவது ஹராமாகும். இந்த உதாரணத்தில் கருப்பு மை தயாரிக்கும் விபரமும் கூறப்பட்டுள்ளது.

## அசுத்தத்தைத் தூய்மைப்படுத்தும் விவரம்

நஜீஸ் என்னும் அசுத்தத்தை விரைவாகத் துப்புரவு செய்வது தொழுகைக்கு வாஜிபானதாகும். மற்ற நேரங்களில் விரைவாகத் துப்புரவு செய்தல் வாஜிபில்லை என்றிருந்தாலும், தேவையின்றி நஜீஸில் துவண்டுகொண்டிருப்பதும் அதைத் தொடுவதும் ஹராமாக இருப்பதால், அது தொடர்பான சட்டங்களைப் படிப்பதும் படித்துக்கொடுப்பதும் வாஜிபாகும்.

ஒரு மனிதனுடைய உடலில் அல்லது உடையில் மன்னிக்கப்படாத நஜீஸ் இருப்பதை மற்றொருவன் பார்த்தால் இவன் அவனுக்கு அதனை அறிவிப்பது வாஜிபாகும். அதாவது: இருவருடைய மத்ஹபுகளிலும் அது நஜீஸாக இருந்தாலும், அல்லது உடை அணிந்திருப்பவனின் மத்ஹபில் மட்டும் நஜீஸ் என்று இருந்தாலும், அறிவிப்பது வாஜிப். அவ்வாறின்றி பார்த்தவனின் மத்ஹபில் மட்டும் அது நஜீஸாக இருந்தால் அறிவிப்பது வாஜிபாகாது. உதாரணமாக: தொழுது கொண்டிருக்கும் ஹனஃபீ மத்ஹபைச் சேர்ந்த ஒருவருடைய உடையில் சிறிதளவு புறாவின் எச்சம் இருப்பதை ஷாஃபியீ ஒருவர் பார்த்தால் அதனை அவருக்கு அறிவிப்பது வாஜிபாகாது. மானத்தை மறைத்திருப்பதிலும் கிப்லாவை முன்னோக்குவதிலும் இவ்வாறுதான். ஹனஃபீ ஒருவர் நேர் கிப்லாவை முன்னோக்காமல் கிப்லாவின் திசையை முன்னோக்கித் தொழக் கண்டால் அதனை அவருக்கு அறிவிப்பது ஷாஃபியீ மத்ஹபுடையவரின் மீது வாஜிபல்ல.

## நஜீஸைக் கழுவும் முறை

நஜீஸான பொருளின் மீது தண்ணீரை ஓடச்செய்து கழுவவேண்டும். அவ்வாறின்றி சிறிதளவு தண்ணீரில் அந்த நஜீஸான பொருளைப் போட்டுவிட்டால் அந்தத் தண்ணீரும் அப்பொருளும் நஜீஸாகவேதான் இருக்கும். உதாரணமாக: எச்சம் பட்டிருக்கின்ற கீரையைக் கழுவுவதற்காக ஒரு சிறிய பாத்திரத்தில் இருக்கும் தண்ணீரில் அக்கீரையை முக்கினால் அக்கீரையும் பாத்திரமும் தண்ணீரும் நஜீஸாகிவிடும்.

நஜீஸைக் கழுவும் முறையில் நிபந்தனையாவது: அதனுடைய வாடை, நிறம், சுவை இம்மூன்றும் நீங்கவேண்டும். இம்மூன்றில் நிறம் மட்டும் அல்லது வாடை மட்டும் நீங்காதிருந்தால் குற்றமில்லை; வாடையும் நிறமும் சேர்ந்திருந்தாலோ அல்லது சுவைமட்டும் இருந்தாலோ அது துப்புரவாகாது.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

வாடையை கஸ்தூரி போலுள்ளதாலும் நிறத்தைக் குங்குமம் போலுள்ளதாலும் சுவையை சிர்கா (VINEGAR) போலுள்ளதாலும் மறைப்பதால் அது தூய்மையாகிவிடாது. அதன் சுவை நீங்கிவிட்டது என்பதில் தன் எண்ணம் மிகைத்திருந்தால் அந்த இடத்தை தன் வாயினால் சுவைத்துப்பார்ப்பது பலமான சொற்படி ஆகும்.

நஜீஸ்களில் மலம் போன்ற கண்ணுக்குத்தெரிகிற, பொருள் நீங்கி விட்டதென்பது உறுதியாகத் தெரியவேண்டும். கண்ணுக்குத் தெரியாத சிறுநீர் போன்றதின் மீது தண்ணீரை முழுமையாக ஊற்றி ஓட்டிவிட்டால் போதுமானதாகும்.

கொல்லனாகிறவன் ஒரு கத்தியைச் செய்ய இரும்பைக் காய்ச்சி அதனை நஜீஸான நஞ்சினால் தோய்த்து வைத்திருந்தாலும் இறைச்சி போலுள்ளதை நஜீஸான தண்ணீரினால் சமைத்திருந்தாலும் பிறகு அவற்றின் மீது தண்ணீரை அடைய வளைந்து ஊற்றிவிட்டால் அது துப்புரவாகிவிடும்.

### நஜீஸ்களில் மூன்று வகைகள் உள்ளன

1.) مُغَلَّظَةٌ கனமாக்கப்பட்டது. நாய், பன்றி ஆகியவற்றைப்போல்

2.) مُخَفَّفَةٌ இலேசாக்கப்பட்டது. பால் மட்டும் குடிக்கும் சிறு ஆண் குழந்தையின் சிறு நீரைப்போல் ,

3.) مُتَوَسِّطَةٌ நடுத்தரமானது. முந்திய இரண்டு நஜீஸ்கள் அல்லாதவை அனைத்தும் இதில் சேர்ந்ததாகும்.

நாய் பன்றியின் எந்தப்பொருளும் ஈரமாயிருக்கும்பொழுது உடலிலோ உடையிலோ பட்டுவிட்டால் அதனை ஏழுதடவை புதிய புதிய தண்ணீரைக் கொண்டு கழுவவேண்டும்; ஏழில் ஒரு தடவை மண்ணைப் பரவலாகத் தடவிக் கழுவ வேண்டும். இல்லாவிடில் அது துப்புரவாகாது. தண்ணீர் படும் இடமெல்லாம் மண்ணும் பட வேண்டும். அந்த மண் துப்புரவாக்கி வைப்பதற்குரிய மண்ணாக இருக்கவேண்டும். சவர்க்காரம், செங்கற்பொடி, மாவு போன்றவை, போதாது. இமாம் ஙஸ்ஸாலி(ரஹ்) அவர்களின் சொற்படி களிமண்ணும் போதுமானதாகும்.

ஜுனுபாளியான மனிதன் ஒருவன் ஆயிரம் தடவை பெரும் தண்ணீரில் மூழ்கிக் குளித்தும் அவன் ஜனாபத்து நீங்கவில்லை; அவன் யார்? என்று ஒரு விடுகதை போடப்பட்டால், "அவன் நாயினால் தொடப்பட்டு (நாய் தொட்ட) அந்த இடத்தை மண்ணைக் கொண்டு தேய்த்துக் கழுகாதவன்" என்று விடை கூறப்படும்.

அதிகமான தண்ணீருக்குள்ளிருந்து ஒரு நாயைத் தொட்டால் கை நஜீஸாகாது. ஆனால், நாய்க்கும் தண்ணீருக்கும் இடைவெளியில்லாமல் இறுக்கிப்பிடித்தால் அப்பொழுது நஜீஸாகி விடும்.

ஒரு பெரிய செம்புச்சட்டியினுள் நாய், பன்றி ஆகியவற்றின் எச்சில் விழுந்துவிட்டது. அதனைத் துப்புரவாக்குவதற்கு குல்லதைன் அளவு தண்ணீரை அதில் ஊற்றினால் அந்தத்தண்ணீர் மட்டும் துப்புரவானதெனக் கூறப்படும். அந்தச் செம்புச் சட்டி துப்புரவாகாது; அதனை மண்ணைக்கொண்டு துப்புரவு செய்தால்தான் துப்புரவாகும்.

அந்த இரண்டு வஸ்துக்களிலுள்ள நஜீஸ் கண்ணுக்குத் தெரிந்தால் எத்தனை தடவை தண்ணீர் ஊற்றினாலும் அத்தனை தடவைகளும் ஒரு தடவையென்றுதான் கணக்கிடப்படும். ஏனெனில் அந்த வஸ்துக்களிலுள்ள நஜீஸை முதலில் முழுமையாக நீக்கிய பின்பே ஏழில் ஒரு தடவை மண்ணினால் கழுவ வேண்டும்.

தங்கடம் உள்ளவன் நாய் இறைச்சியைத் தின்னவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டால், அவன் அடித்தொண்டை வரை ஏழு தடவை தண்ணீரைக்கொண்டும் ஒரு தடவை மண்ணைக்கொண்டும் கழுவுவது வாஜிபாகும்.

நாய், பன்றி ஆகியவற்றின் மாமிசத்தைச் சாப்பிட்டுவிட்ட ஒருவன் மலம் கழித்தபின் தன் பின் துவாரத்தை ஒரு தடவை மட்டும் தண்ணீரைக்கொண்டு கழுவினால் போதுமாகும். ஏழு தடவை கழுவுவது வாஜிபல்ல.

கொஞ்சமான தண்ணீரில் ஒரு நாய் தன் தலையைத் தண்ணீருக்குமேல் உயர்த்திக்கொண்டிருக்கிறது, அதன் வாயும் நனைந்திருக்கிறது. ஆனால், அத்தண்ணீரில் அது வாய் வைத்ததைக் காணாவிட்டால் அத்தண்ணீர் நஜீஸாகாது.

இமாம் மாலிக் (ரஹ்), இமாம் தாவூது (ரஹ்) இருவரும் "நாய் துப்புரவானது தான். அது வாய்வைத்த பொருள் (குல்லதைனை விடக்குறைவான தண்ணீர் உள்பட) நஜீஸ் ஆகுவதில்லை. எனினும் அது வாய் வைத்த பொருளைக் கழுவவேண்டும் என்பது வணக்கத்திற்காகவே (சுன்னத்திற்காகவே) அன்றி அது நஜீஸ் என்பதற்காக அல்ல ' என்று கூறியுள்ளார்கள்.

இமாம் மாலிக் (ரஹ்) அவர்கள் நாயை துப்புரவானது என்று சொல்லியிருப்பதைப்போல், பன்றியும் துப்புரவானது தான் என்று கூறியுள்ளார்கள். (ஆதாரம்: ஹாஷியத்து இஆனத்துத் தாலிபீன், பாகம்-1, நஜீஸ் பற்றிய பாடம்)

பால்மட்டும் குடிக்கின்ற, இரண்டு வயதிற்குட்பட்ட ஆண் குழந்தையின் சிறுநீர், அதன் மீது தண்ணீர் தெளிப்பது கொண்டு துப்புரவாகி விடும். தண்ணீரை அதன் மீது ஓட்டவேண்டுமென்பது ஷர்த்தில்லை.

மேற்குறிப்பிட்ட இரண்டு வகை நஜீஸ்கள் நீங்கலாக முதவஸ்ஸித் என்னும் நடுத்தரமான நஜீஸ் நீங்குவதற்கு, அது சுத்தமாகும் விதத்தில் ஒரு தடவை கழுவுவது வாஜிபாகும்; மூன்று தடவை கழுவுவது சிறப்பாகும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

ஏழு தடவை கழுவுவது விதியாக்கப்பட்ட பொருளில் கையினால் முன்னால் தடவிக்கொண்டு செல்வது ஒரு தடவை, பிறகு அங்கிருந்து மீண்டும் கையைத் தடவிக்கொண்டு வருவது இரண்டாவது என்று கணக்கிடவேண்டும்.

அவ்விதமான நஜீஸுடைய பொருளை ஓடுகிற தண்ணீரில் போட்டால் அதன் மீது ஏழு தடவை தண்ணீர் அலை மோதுவது போதுமானது.

நாய், பன்றி, ஆகியவற்றினால் மண்தரை நஜீஸாகிவிட்டால், அதனை மண்ணைப் போட்டுக்கழுவுவது விதியல்ல.

நடக்கும் பாதையில் கடினமான நஜீஸ் இருப்பது உறுதியாகத் தெரிந்து அதிலுள்ள,சேறு, சகதி கொஞ்சம் உடலில் அல்லது உடையில் தெளித்து, அது கண்ணுக்குத் தெரியாமலிருந்தால் அது மன்னிக்கப்படும். மன்னிக்கப்படும் என்பதில் காலத்தாலும் இடத்தாலும் உடையாலும் அது வேறுபடும். மாரிகாலத்தில் மன்னிக்கப்படுவது கோடையிலில்லை; கால் சட்டையில் மன்னிக்கப்படுவது ஜுப்பாவில் இல்லை.

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எந்தக் காரியங்களைச் செய்யும்படி ஏவி, எவற்றை விலக்கியுள்ளார்களோ அவற்றைக் கடைப்பிடித்து நடப்பதுதான் நம்முடைய கடமை. அவ்வாறின்றி அவற்றில் நம்முடைய பகுத்தறிவைப் பயன்படுத்துவது கூடாது. ஏனெனில் நபி ஸல்லல்லாஹு அலைஹுவஸல்லம் அவர்களின் பேச்சைப்பற்றி அல்லாஹுதஆலா பின் வருமாறு கூறியுள்ளான்:-

وَمَا يَنْطِقُ عَنِ الْهَوٰى ۝ إِنْ هُوَ إِلَّا وَحْيٌ يُوْحٰى ۝ (53:3,4)

"அவர் (தன்) மனோ இச்சையினால் (எதையும்) பேசுவதில்லை. இது (அவர் பேசுவதெல்லாம் அவருக்கு) அறிவிக்கப்படுகின்ற வஹீயைத் தவிர வேறில்லை".

மஹல்லீ என்ற கிரந்தத்தில் விளக்கப்பட்டிருப்பதாவது: நாயாகிறது நாற்றமுள்ள ஏதேனும் ஒரு பொருளைச் சாப்பிட்டு விட்டால் தன் வாயில் ஊறும் எச்சிலினால் வாயைச் சுத்தப்படுத்தி மணமாக்கிக்கொள்ளும். மற்ற மிருகங்களில் இவ்வித குணமில்லை. அவ்வாறிருக்க அது வாய் வைத்த பொருளை ஏழு தடவை கழுவவேண்டுமென விதியாக்கிய காரணம் நமக்குத் தெரியவில்லை. எனினும், மார்க்கம் அதனை விதியாக்கி இருப்பதால் அதில் ஏராளமான பலன்கள் உண்டு என்று நாம் உறுதி கொள்ளவேண்டும்.

### நஜீஸான கள் சிர்காவாக மாறிவிட்டால் துப்புரவாகும்

கள் சிர்காவாக (VINEGAR) மாறிவிட்டால் அது துப்புரவாகும். அது தானாக சிர்காவாக ஆகாமல் ஏதேனும் ஒரு பொருளை அந்தக் கள் இருக்கும் பாத்திரத்தில் போட்டு உடனே அப்பொருளை எடுத்துவிட்டாலும், அதன் மூலமாக அது சிர்காவாக மாறினால் அது துப்புரவாகாது. வெயிலிலிருந்து நிழலிலும், நிழலிலிருந்து

வெயிலிலும் எடுத்து வைப்பதால் தவறில்லை. அது பொங்கி வழியும் போது அதுபட்ட இடமெல்லாம் துப்புரவுதான்.

கள் சிர்காவாக மாறுவதற்கு எத்தனை தினங்கள் என்பதற்கு கணக்கில்லை. எனினும், புளிப்புண்டாகி விட்டதென்ற எண்ணம் ஏற்பட்டால் போதுமானது. "ஒரு வீட்டில் தேனும் சிர்காவும் இருந்தால் அந்த வீடு பரக்கத்தை விட்டும் நீங்காது" என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நவின்றுள்ளார்கள்.

சிர்காவில் பல்வேறு பலன்கள் இருக்கின்றன. அது உணவைச் செறிக்கச்செய்யும். சீக்கிரமாக நரை ஏற்படாது. நரை முடியில் சிர்காவைத் தடவி வந்தால் கருப்பாக்கும். ஆனால், மருந்தைக் கொண்டு நரை முடியைக் கருப்பாக்குவது ஹராம் என்று தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது. இவ்விடத்தில் சிர்காவின் பலனை விளக்குவதற்காக அது கூறப்பட்டதேயன்றி வேறில்லை.

நாய், பன்றியைத் தவிர மற்ற செத்த பிராணிகளின் தோலைப்பதனிடுவதால் அது துப்புரவாகும். அதிலிருக்கும் முடி, சவ்வு, ரணம், வாடை அனைத்தும் நீங்குதல் அவசியமாகும்.

ஒரு பொருள் துப்புரவானதா? நஜீஸானதா? என்று சந்தேகம் வந்தால், அது எந்த விதத்திலாவது துப்புரவானது என்பதற்குரிய சாத்தியமிருந்தால் அது துப்புரவானதுதான் என்று தீர்ப்பளிக்கப்படும்.

## ஒரு பொருளின் அசல் துப்புரவாக இருந்தால்

ஒரு பொருளின் அசல் துப்புரவாக இருந்து, பிறகு அதுபோலுள்ள பொருளில் நஜீஸ் அதிகமாக இருப்பதைக் காண்பதால் இதிலும் நஜீஸ் இருக்குமென்ற மிகைப்பான எண்ணம் ஏற்பட்டால், பலமான சொற்படி அது துப்புரவானதென்றே தீர்ப்புச்செய்யப்படும். உதாரணமாக, கள், சாராயம் விற்பவன், மாதவிடாய்க்காரி, சிறிய குழந்தைகள் ஆகியோர் அணிந்திருக்கும் உடைகள், நஜீஸை உபயோகிக்கின்ற காஃபிர்களின் பாத்திரங்கள் இவற்றில் நஜீஸைக் கண்ணால் கண்டால்தான் நஜீஸ் என்று தீர்ப்புச்செய்யப்படும். இல்லாவிட்டால் அவற்றைப் புழங்குவதும், தொழுகையில் அணிந்து கொள்வதும் மக்ரூஹ் ஆகும்.

சாணத்தால் மெழுகப்பட்டிருக்கும் காஃபிர்களின் வீட்டில் துப்புரவான ஒரு துணியை விரித்து அதன் மீது தொழுவது கூடும். அத்துணி ஈரமாக இருந்தால் அதனை ஆகுமாக்குவதற்காக ஹன்பலீ மத்ஹபைத் தொடர்ந்து தொழலாம். இது நிர்பந்தமான நேரத்திலாகும். இச்சட்டங்களையெல்லாம் விளங்காமல் சாதாரண விஷயத்திற்கெல்லாம் தொழுகையை விடுவது முனாஃபிக்குகளுடைய அடையாளமாகும். இத்தகைய காரியங்களை மிகுந்த கண்டிப்புடன் இமாம் ஙஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் இஹ்யாவில் எழுதியுள்ளார்கள்.

## நஜீஸான துணியைக் கழுவிய தண்ணீரின் சட்டம்

நஜீஸான துணியைத் தண்ணீரில் கழுவும் போது அத்தண்ணீருடைய வாடை, நிறம், சுவை மூன்றும் மாறாமலிருந்து, அந்த துணியிலுள்ள நஜீஸும் நீங்கி இருந்து, துணி தண்ணீரை உறிஞ்சிய அளவையும், தண்ணீரிலிருக்கும் துணியுடைய அழுக்கின்

அளவையும் நீக்கிப்பார்க்கும்பொழுது தண்ணீரின் அளவும் சரியாக இருந்தால் அந்தத் தண்ணீரும் துணியும் துப்புரவானதென்றும் உபயோகிக்கப்பட்ட தண்ணீர் என்றும் தீர்ப்புச்செய்யப்படும். தண்ணீரிலும் அந்தத் துணியிலும் நஜீஸுடைய வாடை, நிறம், சுவை எதுவும் இல்லாததால் அவையிரண்டும் துப்புரவானதென்றே தீர்ப்புச் செய்யப்படும். இந்த விபரம் முன்னால் தண்ணீருடைய பாடத்திலும் கூறப்பட்டுள்ளது. ஒரு விஷயம் சம்பந்தமான இஜ்திஹாத் (ஆய்வு) மற்றொரு விஷயம் சம்பந்தமான இஜ்திஹாதை (ஆய்வை) முறிக்காது.

## மலம் சிறுநீர் மற்றும் கழிப்பிடம் பற்றிய சட்டங்கள்

மலம், சிறுநீர் ஆகியவை கழிக்கப்போகும்பொழுது அல்லாஹ்வின் திருநாமங்கள், குர்ஆன், ஹதீஸ் ஆகியவற்றின் வாசகங்கள், இல்முடைய வாசகங்கள் ஆகியவற்றைச் சுமந்து செல்லாமலிருப்பதும், (அவற்றை மெழுகுத்துணியில் மூடி மறைத்திருந்தால் அவற்றைச் சுமக்கலாம்) தலையை மூடுவதும், காலணியை (உதறிய பின்) அணிந்து செல்வதும் அவசியமாகும். மலம், ஜலம் கழிக்கும் இடத்தை அடைந்தவுடன் முதலில் இடது காலை முற்படுத்தி வைத்து பின் வரும் துஆவை ஓதிக்கொண்டு செல்லவேண்டும்.

بِسْمِ اللهِ اَللّٰهُمَّ اِنِّيْٓ اَعُوْذُ بِكَ مِنَ الْخُبُثِ وَالْخَبَآئِثِ .

"பிஸ்மில்லாஹி யா அல்லாஹ்! நிச்சயமாக நான் ஆண், பெண் ஷைத்தான்களின் தீங்குகளை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்."

இதில் அர்ரஹ்மானிர்ரஹீம் என்பதைச் சொல்லாமலும், இந்த பிஸ்மியைக்கொண்டு குர்ஆனை நாடாமலும் இருப்பது சுன்னத்தாகும். ஒரு சொற்படி அவ்வாறு நாடுவது ஹராம் என்றும் வந்துள்ளது.

உபாப் என்ற கிதாபில் பின் வரும் துஆவை ஓதலாம் என்று கூறப்பட்டுள்ளது:-

اَللّٰهُمَّ اِنِّيْٓ اَعُوْذُ بِكَ مِنَ الرِّجْسِ النَّجَسِ الْخَبِيْثِ الْمُخْبِثِ
الشَّيْطَانِ الرَّجِيْمِ يَاذَا الْجَلَالِ .

"யா அல்லாஹ்! நிச்சயமாக நான் அசுத்தத்தைவிட்டும் அருவருக்கத் தக்கதை விட்டும், இடர்களை விட்டும், விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். மகத்துவமிக்க இறைவா!"

மலம் ஜலம் கழிப்பவர் கிப்லாவையும், பொழுதையும், பிறையையும் முன்னோக்குதலோ அவற்றிற்குப் புறங்காட்டுதலோ கூடாது. பேசுதலும் கூடாது. வேஷ்டியை இடது காலின் புறமாக மெல்ல மெல்ல உயர்த்தி கால் சட்டையாக இருந்தால் மெல்ல மெல்ல தாழ்த்திக்கொண்டே உட்கார வேண்டும். சுன்னங்களிலும்

தலையிலும் கைகளை வைத்தல், பல் குத்துதல், மிஸ்வாக் செய்தல் ஆகியவற்றைச் செய்யக்கூடாது. வீணாக அதிக நேரம் உட்கார்ந்து இருக்கக்கூடாது. பிறகு சற்றுதள்ளி உட்கார்ந்து, களைத்து பின் துவாரத்திற்கு மேலுள்ள நரம்பை இடது கை கலிமா விரலால் அழுத்தி முன் பகுதிவரைகொண்டு வந்து விட்டு சொர சொரப்பில்லாத மூன்று கல் அல்லது மண் கட்டிகள் போன்றவற்றால் துடைத்துத் துப்புரவு செய்த பின் வலது காலை முன் வைத்து வெளியே வரவேண்டும். (எலும்பு, காய்ந்த ரொட்டி போன்றவற்றால் துடைத்துத் துப்புரவு செய்யக் கூடாது) வெளியே வரும்பொழுது இந்த துஆவை ஓதவேண்டும்.

غُفْرَانَكَ اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ اَذْهَبَ عَنِّيَ الْاَذٰى وَعَافَانِيْ.

"உன்னுடைய மன்னிப்பை வேண்டுகிறேன். துன்பத்தை என்னை விட்டுப்போக்கி எனக்குச் சுகமளித்த அல்லாஹ்விற்கே எல்லாப்புகழும் உரியன!"

மலம் கழிக்கும்போதும், நடந்து செல்லும்போதும் மிஸ்வாக் செய்தல், பல் குத்துதல் ஆகியவற்றைச் செய்யக்கூடாது. நீண்ட நேரம் உட்கார்ந்திருப்பது மூல வியாதியை உண்டாக்கும். மூன்று கற்கள் கிடைக்காவிட்டால் சுமாரான ஒரு பெரிய கல்லின் மூன்று அருகுகளைக் கொண்டு மூன்று தடவை துடைத்துச் சுத்தம் செய்தால் போதும். (ஹனஃபீ மத்ஹபில் கூறப்பட்டுள்ளது போல், சிறுநீர்க் கழிப்பவர் எழுந்து சிறிது நடந்து, ஒரு தொடையை மற்றொரு தொடையின் மீது வைத்து அழுத்தினால் தங்கியிருக்கும் தொங்கு நீர் வெளிவந்து விடும்) பிறகு துப்புரவு செய்துவிட்டு எழுந்திருக்கும்போது துணியைக் கொஞ்சம் கொஞ்சமாக கீழே விடவும்; காற் சட்டையைக் கொஞ்சம் கொஞ்சமாக மேலே உயர்த்தவும், துப்புரவு செய்யும்போது நோன்பாளியாக இல்லாதவர் இறை மட்டும் (மலவாய் வரை) விரலைச்செலுத்திக் கழுவுவது சுன்னத்தாகும். கடைசியாகப் பின் வரும் துஆவை ஓதுவதும் சுன்னத்தாகும்:

اَللّٰهُمَّ طَهِّرْ قَلْبِيْ مِنَ النِّفَاقِ وَحَصِّنْ فَرْجِيْ مِنَ الْفَوَاحِشِ.

"யா அல்லாஹ்! என் இதயத்தை நய வஞ்சகத்தை விட்டும் தூய்மையாக்கி வைத்து என் மர்மஸ்தலத்தை அருவருக்கத் தக்க செயல்களை விட்டும் பாதுகாத்தருள்வாயாக!"

மலம், ஜலம் கழிக்கச் செல்பவர், வழு வழுப்பாக இல்லாததும், நீரை உறிஞ்சக்கூடியதுமான சொரசொரப்பான மூன்று கற்களையோ, அல்லது மூன்று மண் கட்டிகளையோ அல்லது மூன்று புறங்கள் உள்ள ஒரு பெரிய கல்லையோ எடுத்துச்செல்லவேண்டும். அதில் ஒரு புறத்தைக்கொண்டு துப்புரவு செய்யும் போது மறு புறத்தைத் தொடாமல் இருக்கவேண்டும். சிமெண்டு கட்டி, சாந்துக்கட்டி, சுண்ணாம்புக்கட்டி ஆகியவற்றால் துப்புரவு செய்வது மக்ரூஹ் ஆகும், அது வெள்ளையை உண்டாக்கும். எலும்பு, காய்ந்த ரொட்டி போன்றவற்றாலும் துடைத்துத்

துப்புரவு செய்வது கூடாது. நம் நாட்டில் பெண்கள் கட்டிக்கற்களை (டேலாக் கட்டிகளை) பயன்படுத்தாமல் இருப்பது அறிவீனமாகும்.

சிறு நீர் கழித்த இடத்திலேயே உட்கார்ந்து துப்புரவு செய்வது ஏற்றமான செயலல்ல; ஆனால், அதற்கென தயாரிக்கப்பட்ட கக்கூஸ் போன்ற இடமாக இருந்தால் செய்யலாம்.

## துப்புரவு செய்வதில் வாஜிபான முறை

துப்புரவு செய்வதில் வாஜிப் நிறைவேறுதல் என்பது கல்லினால் அல்லது தண்ணீரினாலாகும். மலம் கழிப்பதில் பின் துவாரத்தின் வட்ட வரையை விட்டும், சிறுநீர் கழிப்பதில் ஆண் குறியில் கத்னா செய்த பகுதிக்கு வெளிப்பகுதியிலும், பெண் குறியின் உதட்டு பகுதிக்கு வெளியிலும் நஜீஸ் கடந்திருந்தால் கல்லைக்கொண்டு துப்புரவு செய்வதுடன் தண்ணீரைக் கொண்டு துப்புரவு செய்வதும் வாஜிபாகும்.

மலம் கழிப்பவர் அதன் துர்வாடை மற்ற மனிதர்களை எட்டிக்கொள்ளாத அளவு தூரமாகச்செல்வதும், ஒரு முழத்தில் மூன்றிலொரு பங்கு உயரமான ஒரு பொருளை மறைப்பாக அமைத்துக்கொண்டு அதிலிருந்து மூன்று முழ விடைவுக்குள்ளிருந்து கழிப்பதும் உகந்ததாகும்.

மைதானமாக இருந்தால் கிப்லாவை முன்னோக்குவதும் புறங்காட்டுவதும் ஹராமாகும்; கக்கூஸில் அவ்வாறு இருப்பது மக்ரூஹ் ஆகும்.

"சிறு நீர் கழிக்கும்போது கிப்லாவுக்கும் சூரியன் சந்திரனுக்கும் புறங்காட்டுதலும் மலம் கழிக்கும் போது இவற்றை முன்னோக்குதலும் ஹராமல்ல" என்று 'ஜம்உல் ஜவாமிஃ' என்னும் நூலில் எழுதப்பட்டுள்ளது.

துப்புரவு செய்வதில் வாடை, நிறம், சுவை இம்மூன்றும் நீங்குதல் போதுமானது. அவ்விடத்தில் சொர சொரப்பு உண்டாக வேண்டுமென்ற அவசியமில்லை. ஆண், பெண் இருபாலரும் முதலில் கல்லைக் கொண்டும், பிறகு தண்ணீரைக்கொண்டும் துப்புரவுசெய்ய வேண்டும். இவ்வாறு செய்பவர்களைத் தான் விரும்புவதாக இறைவன் பின்வருமாறு குர்ஆனில் சுட்டிக்காட்டுவதாக குர்ஆனின் விரிவுரையாளர்கள் கருத்துத் தெரிவித்துள்ளார்கள்:- وَاللّٰهُ يُحِبُّ الْمُطَّهِّرِيْنَ

"அல்லாஹ் பரிசுத்தவான்களை விரும்புகிறான்." இவ்வித பரிசுத்தத்தினால் கப்ருடைய வேதனையும் இலேசாகும்.

இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் இஹ்யா உலூமித்தீனில் எழுதியுள்ளதாவது; "துப்புரவு என்பது நான்கு விதமாய் அமைந்துள்ளது. முதலாவது வெளிப்புற உறுப்புகளை நஜீஸை விட்டும், பெருந்தொடக்கு, சிறு தொடக்கு ஆகியவற்றை விட்டும் துப்புரவாக்குவது. இது முஸ்லிம்களுடைய தூய்மையாகும். இரண்டாவது அந்தத்தூய்மையுடன் பாவங்கள் செய்வதை விட்டும் உறுப்புக்களைத் தூய்மையாக்குவது, மூன்றாவது அந்த இரண்டு துப்புரவுத் தன்மைகளுடன் தீய குணங்களை விட்டும் மனதைத் தூய்மைப்படுத்துவது. இது ஞானப்பாதையில்

செல்லுகின்ற ஸாலிக்கீன்களுடைய தூய்மையாகும். நான்காவது அல்லாஹ்வைத் தவிர மற்றவை அனைத்தைவிட்டும் தன் அகமியத்தைத் தூய்மைப் படுத்துவதாகும்.

اَلطُّهُوْرُ نِصْفُ الْاِيْمَانِ. தூய்மை என்பது ஈமானில் பாதி என்பதாகவும்,

مِفْتَاحُ الصَّلٰوةِ الطُّهُوْرُ. தொழுகையின் திறவுகோல் தூய்மையாகும். என்பதாகவும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அருளியுள்ளார்கள்.

## மலம் சிறுநீர் கழிக்கும்போது ஏற்படும் மக்ரூஹ்கள் பற்றிய விவரம்

மலம் ஜலம் கழிப்பதில் இடத்தாலும் செயலாலும் எற்படுகின்ற மக்ரூஹ்கள் பின்வருமாறு: மிக அவசியமான பேச்சைத் தவிர மற்ற பேச்சுக்களைப்பேசுவது, பாடல் பாடுவது, ஏதேனும் சாப்பிடுவது, குடிப்பது, (வெற்றிலை, பாக்கு, பீடி, சுருட்டு, சிகரெட் போன்றவையும் இதில் அடங்கும்) மிஸ்வாக்குச் செய்வது, (அவ்வாறு செய்வது மறதியை உண்டாக்கி, கண் பார்வையைக் குறைக்கும்) பல் குத்துவது, மூக்கைச்சிந்துவது, (அது காதை செவிடாக்கும்) பேன் குத்துவது, கண்ணை மூடிக்கொள்வது, தலையை முழங்காலின் மீது வைப்பது, கையை நெற்றியில் வைப்பது, மலத்தில், ஜலத்தில் எச்சில் துப்புவது (அது தொண்டை வலியை உண்டாக்கும்). நீர் துவாரத்தை விரிப்பது ஆகியவை மக்ரூஹ்களாகும்.

பெரிய ஆறு, கடல் அல்லாத கட்டுக்கிடையான தண்ணீர், நெருப்பு, சாம்பல், மனிதர்கள் கூடும் இடம், நடக்கும் பாதை, சாப்பிடுவதற்குரிய கனிகள் தரும் மரத்தடி, அது தன்னுடைய சொந்த நிலமாக இருந்தாலும் சரி. (அது பிறருடைய இடமாக இருந்தால் உடையவனின் ஒப்புதலின்றி மலம் ஜலம் கழிப்பது ஹராமாகும்) புழுப்பூச்சிகளின் பொந்துகளிலும், கட்டியான தரை, கப்ரு, எலும்பு ஆகியவற்றிலும், மலம் கட்டியாக இல்லாதபொழுது கற்பாறை, கட்டியானதரை ஆகியவற்றிலும் மலம் ஜலம் கழிப்பது மக்ரூஹ் ஆகும். இவ்வாறே எதிர்காற்று வீசும் திசையை நோக்கியும், நிர்பந்தம் இல்லாதபொழுது நின்ற நிலையிலும் சிறுநீர் கழிப்பதும் மக்ரூஹ். தலையைத் திறந்துகொண்டு மலம் ஜலம் கழிப்பது கொடிய மக்ரூஹ் ஆகும்.

துப்புரவு செய்வதில் முன் துவாரத்தை முற்படுத்துவது சுன்னத்து. குழந்தைகட்கு தாய் போன்றவர் துப்புரவு செய்யும்பொழுது அங்கு கடை பிடிக்கவேண்டிய துஆவும் சுன்னத்தான முறைகளும் தாயின் மீது சுன்னத்தாகும். மலம் ஜலம் கழித்தவர் துப்புரவு செய்து முடித்த பின் முன் துவாரத்தைக் கழுவினோமா இல்லையா என்று சந்தேகம் வந்தால் திரும்பவும் கழுவுவது வாஜிபல்ல" என்று பகவி (ரஹ்) بَغَوِي அவர்கள் கூறியுள்ளார்கள்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

# தொழுகை நேரங்களின் பாடம்

நேரத்தை அறியாமல் தொழும் தொழுகை கூடாது. அது தொழுகை நேரத்தில் நிகழ்ந்திருந்தாலும் சரி. அவ்வாறே நேரம் வரும்முன் தொழுவதும் கூடாது. ஏனெனில், வணக்கங்களில் பருவமெய்திய ஒருவருடைய எண்ணமும் செயலும் ஒற்றுமையானதாக இருக்க வேண்டும். வியாபாரம், கொடுக்கல் வாங்கல், நிகாஹ் போன்ற விஷயங்களில் செயல்கள் மட்டும் சரியாக இருந்தால் போதுமானது.

லுஹருடைய நேரமாகிறது, சூரியன் உச்சியை விட்டும் சாய்ந்ததிலிருந்து துவங்கி ஒரு பொருளின் நிழல் (அதன் அசல் நிழலை நீக்கி) அதனுடைய ஒரு அளவு ஆகும் வரையிலாயிருக்கும். (ஹனஃபீ மத்ஹபின் படி அந்தப்பொருளின் நிழல் இரு அளவு ஆகும் வரையிலாயிருக்கும்.)

அஸருடைய நேரமாகிறது, லுஹருடைய கடைசி நேரத்திலிருந்து சூரியன் முழுதும் மறையும் வரையிலாயிருக்கும்.

மஃரிபுடைய நேரமாகிறது, சூரியன் முழுவதும் மறைந்ததிலிருந்து செம்மேகம் மறையும் வரையிலாயிருக்கும்.

இஷாவுடைய நேரமாகிறது. செம்மேகம் மறைந்ததில் இருந்து கிழக்கு வெளுக்கும் வரையிலாயிருக்கும். (மெய்வெள்ளை வெளுக்கும் வரை)

சுப்ஹுடைய நேரமாகிறது, சுபுஹ் ஸாதிக் என்னும் மெய் வெள்ளை தோன்றியதிலிருந்து சூரியன் உதயமாகும் வரையிலா யிருக்கும்.

இமாம் ஷாஃபியீ (ரஹ்) அவர்கள் இராக் நாட்டிலிருக்கும்போது சொல்லிய செய்திகள் கதீம்-பழைய சொல் என்றும், எகிப்து நாட்டிலிருக்கும்போது சொல்லிய செய்திகள் ஜதீத்-புதிய சொல்-என்றும் கூறப்படும். அனைத்துச்சட்டங்களிலும் ஜதீதான சொல்தான் பலமுள்ளதாகும். ஆனால், பதினாறு சட்டங்களில் கதீமான சொல் பலமுள்ளதாகும்.

மேற்கூறப்பட்ட நேரக்கணக்குகளில் மஃரிபுடைய நேரம் கதீமான-பழைய-சொல்படிதான் கூறப்பட்டுள்ளது. ஜதீதான சொல்படி அதனுடைய நேரமாகிறது, சூரியன் மறைந்தபின் உளூச்செய்து, சட்டையணிந்து மானத்தை மறைத்து, தலைப்பாகைக்கட்டி, பாங்கு சொல்லி, முந்தின சுன்னத்து இரண்டு ரக்அத்துக்கள் தொழுது, பிறகு இமாம் ஜமாஅத்துக்காக கொஞ்ச நேரம் நடந்து சென்று, இகாமத்துச்சொல்லி, ஃபர்லு மூன்று ரக்அத்துகள் தொழுது, பிறகு இரண்டு ரக்அத்துக்கள் சுன்னத்து தொழுது முடிக்கின்ற நேரம் வரையிலாயிருக்கும். இந்தச்சொல்படியும் இஷாவுடைய நேரம் செம்மேகம் மறைந்ததிலிருந்துதான்.

நம்முடைய நாட்டில் லுஹருக்கும் அஸருக்கும் அடிக்கணக்கு பார்ப்பது, சில காலத்தில் சரியாக வருவதில்லை. எனவே, அந்தக் கணக்கை முழுமையாக நம்புவது சரியல்ல.

இமாம் ராஃபியீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளதாவது: சுப்ஹு தொழுகையை நபி ஆதம் (அலை) அவர்களும், லுஹர் தொழுகையை தாவூத் (அலை) அவர்களும், அஸர் தொழுகையை சுலைமான் (அலை) அவர்களும் மஃரிப் தொழுகையை யஃகூப் (அலை) அவர்களும், இஷா தொழுகையை யூனுஸ் (அலை) அவர்களும் தொழுதார்கள். தஹஜ்ஜுத் தொழுகையையும் வித்ரு தொழுகையையும் நம்முடைய நபி நாயகம் (ஸல்) அவர்கள் தொழுதார்கள் என்று கூறியுள்ளார்கள். இது முன்னால் தொழுகையுடைய பாடத்தில் சொல்லப்பட்டுள்ளதற்குச் சிலது மாற்றமாக உள்ளது.

ஒவ்வொரு தொழுகை நேரத்திலும் ஆரம்ப நேரம், நடுமையமான நேரம், கடைசி நேரம் என்று மூன்று பகுதிகள் உள்ளன. எல்லாத் தொழுகைகளையும் எல்லாக் காலங்களிலும் ஆரம்ப நேரத்தில் தொழுவது தான் சுன்னத்து, கடைசி நேரத்தில் தொழுவது ஃதவாபைக் குறைக்கும். செம்மேகம் மறைந்த பின் காணப்படும் மஞ்சள் நிறம் நீங்கும்வரை இஷாவைப்பிற்படுத்துவது ஏற்றம் என்று மற்றொரு கருத்து சொல்லப்பட்டிருந்தாலும் ஆரம்ப நேரந்தான் சிறப்பாகும். ஏனெனில் அமல்களிலெல்லாம் அல்லாஹ்வுக்கு மிக விருப்பமானது ஆரம்ப நேரத்தில் தொழுவது தான் என்று நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லாம் அவர்கள் அருளியுள்ளார்கள். மேலும் இருக்கின்ற இந்த வினாடியைக்கடந்து அடுத்த வினாடி இருப்போம் என்பது உறுதியல்ல.

ஆனால், நேரம் வந்தவுடன் உளூச்செய்து உடைகளணிந்து ஜமாஅத்தை எதிர்பார்ப்பவராக இருப்பவருக்கும், தயம்மும் செய்திருப்பவர் கடைசி நேரத்தில் உளூச்செய்யத் தண்ணீர் கிடைக்குமென்பதை ஆதரவு வைத்துப் பிற்படுத்துபவருக்கும் கடைசி நேரத்தில் தொழுவதால் ஆரம்ப நேரத்தின் சிறப்பு கிடைத்துவிடும்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய காலத்திற்குப்பின் ஏற்பட்ட பித்அத்துகளில் முதல் பித்அத்து, மஃரிப் தொழுகையை நட்சத்திரங்களைக் கண்ணால் கண்டபின் தொழுவதுதான் என்று கூறப்பட்டுள்ளது.

"ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய காலத்திற்குப்பின் உண்டான பித்அத்துகளில் முந்தியது, சுளகு (முறம்) கொண்டு புடைப்பதும், உஷ்னான் பொடி கொண்டு பல்லைக் காவியாக்குவதும், முக்காலி, நாற்காலி, மேஜை போலுள்ளதின் மீது சாப்பிடுவதும், வயிறு நிறைய சாப்பிடுவதுமாகும் என்றும், முந்தியதில் சுகமும், இரண்டாவதில் அழகும், மூன்றாவதில் பெருமையும், நான்காவதில் மனோ இச்சையும் உண்டாகும்" என்றும் இமாம் கஸ்ஸாலீ (ரஹ்) அவர்கள் இஹ்யாவில் கூறியுள்ளார்கள்.

சூரியன் மறைந்த சிறிது நேரத்தில் கிழக்கு வெளுத்துவிடுகின்ற புல்கார் போன்ற மேற்கத்திய நாடுகளில் அக்காலங்களில் அவ்வூராருக்கு இஷா தொழுகை விதியாகாது. இது கை இல்லாதவனுக்கு உளூவில் கை கழுவுலது விதியாகாதது போன்றாகும். நோன்பு நாட்களில் அவ்வூர்க்காரர்கள் அந்தக் கொஞ்ச நேரத்தில் தான் ஸஹர் சாப்பிட்டுக்கொள்ளவேண்டும்.

உஷ்ணப்பிரதேசங்களில் கோடை தினங்களில் தூரத்திலிருந்து ஜமாஅத்துக்காக மஸ்ஜிதுக்கு வருபவர்களுக்கு வழியில் நிழலில்லாமலிருந்தால் லுஹரைக் கொஞ்சம் பிற்படுத்துவது சுன்னத்தாகும்.

ஒரு மனிதன் கிழக்குக்கோடியிலுள்ள ஊரில் ஒரு தொழுகையைத் தொழுது விட்டு உடனே மேற்குக் கோடிக்கு வந்து பார்க்கும் போது அப்பொழுதுதான் அந்த வக்து அங்கு ஆரம்பிப்பதாக இருந்தால், அந்தத் தொழுகையை மீண்டும் தொழுவது வாஜிப் என்பதாக 'கலாயித்' என்ற கிதாபில் அல்லாமா அஜ்ஹூரி (ரஹ்) அவர்கள் எழுதியுள்ளார்கள். இவ்வாறே ஒருவன் ஓர் ஊரில் பிறையைக்கண்டு நோன்பு வைத்தான். பிறகு வேறொரு ஊருக்குச் சென்றான். அங்கு இவன் பார்த்த நாளில் பிறை பார்க்கப்படவில்லை. அவ்வூரார் முப்பது தினங்கள் நோன்பு பிடித்தால் இவனும் அவர்களுடன் நோன்பு பிடிப்பது வாஜிப் என்று கூறப்பட்டுள்ளது. இவன் இந்த ஊருக்கு வருமுன் முப்பது நோன்புகள் பிடித்திருந்தாலும் இந்த ஊரைத் தொடர்ந்து இவன் நோன்பு வைக்கவேண்டும்.

## தொழுவது மக்ரூஹான நேரங்கள்

பின்னால் கூறப்படவிருக்கும் ஐந்து நேரங்களில் கீழ்கண்ட தொழுகைகள் தொழுவது மக்ரூஹ் தஹ்ரீமாகும். அதாவது: 1) யாதொரு காரணமும் இல்லாத பொதுவான நஃபில் தொழுகை, 2) தஸ்பீஹ் தொழுகை 3) பின்னால் காரணம் உண்டாகக்கூடிய இஸ்திகாரா தொழுகை ஆகியவை மக்ரூஹ் தஹ்ரீம் ஆகும். முன்னால் காரணமுள்ளதாகிய உளூவுடைய தொழுகை, ஷுக்ருடைய தொழுகை, கிரகணத் தொழுகை போல் உள்ளது, இமாம் ஜமாஅத்துடன் திருப்பித் தொழும் தொழுகை இவையனைத்தும் அந்த நேரங்களில் மக்ரூஹ் அல்ல. ஆனால், அந்தத் தொழுகைகளை அந்த நேரத்தில்தான் தொழ வேண்டுமென்று பிடிவாதமாகத் தொழுதால், முன்னால் காரணம் உள்ள தொழுகை, பின்னால் காரணம் உள்ள தொழுகை அனைத்துமே ஹராமாகும். தொழுகையே கூடாது. அந்தத் தொழுகை விரைவாகக் களாச் செய்யப்படவேண்டியதாக இருந்தாலும் சரி. ஏனெனில் அவன் மார்க்க விதியை மன முரண்டாக மீறுவதால் ஹராமாகும். ஆனால் காரணம் முந்தியுள்ள கிரகணத் தொழுகை, மழை வேண்டித் தொழுதல், அஸர், சுப்ஹு ஆகியவற்றின் சுன்னத்துகள் ஆகியவை அந்த நேரத்திலுள்ள தொழுகையாகையால், அவற்றை அந்த நேரத்தில் பிடிவாதமாகத் தொழுதாலும் மக்ரூஹ் ஆகாது என்று இமாம் குர்தீ (ரஹ்) இமாம் கல்யூபி (ரஹ்) இருவரும் கூறியுள்ளார்கள்.

காரணம் பின்னால் ஏற்படுகின்ற தொழுகைகள் என்பவை நன்மையைத் தேடித்தொழுதல், இஹ்ராம் கட்டுவதற்காகத் தொழுதல், ஏதேனும் பைஅத்து, உபதேசம் பெறுவதற்காகத் தொழுதல், பிரயாணத்திலிருந்து திரும்பி வருகிறவன் தன் வீட்டில் நுழையும் முன் தொழுதல், நிகாஹ் செய்ய நாடியவன் தொழுதல், மனைவியுடன் முதன் முதலில் உடலுறவு கொள்ள நாடியவன் தொழுதல் போன்ற நன்மையான காரியங்களையெல்லாம் நாடித் தொழுவது போன்றவை யாகும். இவ்வாறு தொழுவதில் ஏராளமான நன்மைகளும், மங்களகரமான வாழ்வும் ஏற்படுமென்று கூறப்பட்டுள்ளது.

காரணம் முந்திய தொழுகைகள் என்பவை, உளுவின் தொழுகை, தவாஃபுக்குப்பிந்திய தொழுகை, தஹிய்யத்துல் மஸ்ஜித் தொழுகை, கிரகணத் தொழுகை, ஜனாஸாத் தொழுகை, ஃபர்ளை முன் தொழுதவன் இமாம் ஜமாஅத்துக்காக மீண்டும் தொழும் தொழுகை, தப்பிப்போனதை களாச் செய்யும் தொழுகை, வழக்கமாக சுன்னத்துத் தொழுது வருபவன் ஒரு நேரம் தவறிவிட்டால் அதனைக் களாச் செய்யும் தொழுகை ஆகியவையாகும். ஆனால் இவற்றை அந்த மக்ரூஹான நேரங்களில்தான் தொழ வேண்டுமென்று பிடிவாதமாகச் செய்தல் கூடாது.

### மக்ரூஹ் ஆன அந்த நேரங்கள்:-

1) சுப்ஹு ஃபர்ளு தொழுத பின் சூரியன் உதிக்கும் வரை.

2) சூரியன் உதித்தபின் ஓர் வல்லயப்பிரமாணம் (ஓர் ஈட்டியின் அளவு) மேலே உயரும்வரை.

3) நடு உச்சிப்பொழுதில்.

4) அஸர் தொழுத பின் சூரியன் மறையும்வரை.

5) சூரியன் மஞ்சணித்தபின் மறையும் வரை.

இந்த ஐந்து நேரங்களை மூன்றாகவும் சுருக்கலாம். 1) சுப்ஹு தொழுதபின் சூரியன் உதயமாகி ஓர் ஈட்டியின் உயரம் வரும் வரை. 2) உச்சிப்பொழுதின் நேரம் 3) அஸர் தொழுதபின் சூரியன் மறையும்வரை.

பிரயாணத்தில் கஸ்ரு, ஜம்வு செய்கிறவன் லுஹருடன் அஸரையும் சேர்த்து முற்படுத்தித் தொழுது விட்டால், பிறகு சூரியன் மறையும் வரை முன் கூறப்பட்ட தொழுகைகளைத் தொழுவது ஹராமாகும்.

### மக்ரூஹான நேரங்கள் இல்லாத இடங்கள்

ஆனால் மக்கா நகரில் ஹரம் ஷரீஃபில் எல்லாநேரங்களிலும், ஜும்ஆ நாளன்று உச்சிப்பொழுதில் எந்த இடத்திலும் (அவர் ஜும்ஆவுக்கு வராதவராக இருந்தாலும் சரி) எந்தத் தொழுகையை வேண்டுமானாலும் தொழலாம். இவ்விரு விஷயங்களிலும் மக்ரூஹான நேரங்கள் இல்லை.

வெள்ளிக்கிழமை ஜும்ஆ தொழுகைக்கு இமாம் மிம்பரில் ஏறி குத்பா ஓதி முடிக்கும்வரை அங்கிருப்பவர்கள் எந்த தொழுகையும் தொழுவது ஹராமாகும். இமாம் மிம்பரிலேறியபின் குத்பா ஓதத் தொடங்காவிட்டாலும் சரி, அல்லது அவன் செவிடனாக இருந்தாலும், குத்பா ஓதுதல் காதில் விழாத தூரத்திலிருந்தாலும் சரி தொழுவது கூடாது.

ஒருவர் ஏதேனும் ஒரு தொழுகையைத் தொழ ஆரம்பித்தபின் இமாம் மிம்பரின் மீது ஏறிவிட்டால், அத்தொழுகை களாவான ஃபர்ளு தொழுகையாக இருந்தாலும், தொழுகையின் கட்டாய வாஜிபுகளை மட்டும் நிறைவேற்றி சீக்கிரமாகத் தொழுது முடிப்பது வாஜிபாகும். அதனைச் சிறிதளவு நீளப்படுத்துவதும் ஹராமாகும். உதாரணமாக அத்தஹிய்யாத்தில் முபாரகாத்துஸ் ஸலவாத்துத் தய்யிபாத்து என்ற

மூன்று வார்த்தைகளைச் சேர்ப்பது சுன்னத்தாகும். எனவே, அதனை ஓதுவதும் அந்நேரத்தில் ஹராமாகும்.

குத்பா ஓதிக்கொண்டிருக்கும்போது ஒருவன் மஸ்ஜிதினுள் நுழைந்தால் அவனுக்கு தஹிய்யத்துல் மஸ்ஜித் தொழுவதும், அந்தத் தொழுகையின் நிய்யத்துடன் ஜுமுஆவின் சுன்னத்துத் தொழுகையையும் நிய்யத்துச் செய்வதும் சுன்னத்தாகும். ஆனால் அதனை நீட்டுவது ஹராமாகும்.

ஜுமுஆ தொழுகையைத் தவிர மற்ற தொழுகைகளில் ஒரு ரக்கஅத்தாவது அந்த நேரத்தில் தொழப்பட்டுவிட்டால் அனைத்தும் அதாவாகவே நிறைவேறிவிடும். இதுவே பலமான சொல். ஆனால், தொழுகையை நேரத்தை விட்டும் மன முரண்டாக பிற்படுத்தினால் பாவியாவான். ஜுமுஆ தொழுகையில் ஸலாம் கொடுக்கும் வரையில் அந்த வக்து இருக்கவேண்டும். ஆனால் அந்தத் தொழுகையில் கொஞ்சமாவது அடுத்த நேரத்தில் நிகழ்ந்துவிட்டால் அது ஜுமுஆவாக நிறைவேறாது. எனினும் அதனை லுஹராக ஆக்கி நான்கு ரக்அத்துகள் தொழுது முடிக்கவேண்டும்.

கடைசி நேரத்தில் தொழுகிற ஒருவன் அத்தொழுகை முழுவதையும் அந்த நேரத்திற்குள் தொழுது விட முடியுமென்ற அளவுக்குரிய நேரத்தில் தக்பீர் கட்டி நின்றபின் நீளமான சூரா ஓதியதினால் அந்தநேரம் கடந்துவிட்டாலும் அது ஆகுமானதே, எனினும், இவ்வாறு செய்வது ஏற்றத்திற்கு மாற்றமாகும். நேரம் வந்தபிறகு தன்னை மிகைக்காத உறக்கத்தைத் தொடுப்பது ஹராமாகும்.

சங்கைக்குரிய ஆடு, மாடு போன்ற மிருகங்கள் நெருப்பு, வெள்ளம், கடல், கிணறு, புலி, பாம்பு போன்றவற்றினால் அழிவுக்குள்ளாவதைக் கண்டால் தன்னால் இயன்ற மட்டும் அவற்றை விடுவிக்க முயற்சிப்பது வாஜிபாகும். அதனால் தொழுகை களாவாகிவிட்டாலும் சரி. இவ்வாறே தனக்கு முக்கியத் தேவையான பொருளின் மீது ஆபத்து ஏற்படுவதை பயப்படும்போதும், தனக்குச் சிரமத்தை உண்டாக்கும் மலம், ஜலம் ஆகியவை ஏற்படும்போதும் அவற்றைக் கவனிப்பது அவசியமாகும். அதனால் தொழுகை களாவாகி விட்டாலும் சரி.

அரஃபாத் மைதானத்தில் துல் ஹஜ்ஜு ஒன்பதாம் நாள் ஸவாலுக்குப்பின் பத்தாம் நாள் சுப்ஹு வரை உள்ள நேரத்தில் சிறிதேனும் தங்கவில்லையானால் ஹஜ்ஜு நிறைவேறாது. எனவே மேற்கண்ட நேரத்தில் கடைசி நேரமாக அரஃபாத் மைதானத்திற்குப் போய் சேர வேண்டிய நிலையில் உள்ள ஒருவன் அவ்வாறு தங்க வாய்ப்புக்கிடைக்காமல் போய் விடுமோ என்று பயந்தால் இஷாவைக் கட்டாயம் பிற்படுத்துவான். அவ்வாறு பிற்படுத்துவது வாஜிபாகும். அப்படி பிற்படுத்தாமல் அந்தத் தொழுகையை பயமுடைய நேரத்தில் தொழுவது போன்று தத்தரமாக (மிகுவிரைவாக)க் கூடத் தொழமாட்டான். ஏனெனில் ஹஜ்ஜைக் களாச் செய்வது சிரமமாகும். ஆனால், தொழுகையைக் களாச்செய்வது அதைவிட இலேசான சிரமம் என்பதால் தான் இவ்வாறு செய்யுமாறு கூறப்பட்டுள்ளது.

சுப்ஹானல்லாஹ்! தொழுகை எல்லா அமல்களைவிடவும் ஏற்றமானதாயிருக்க, ஹஜ்ஜுக்காக அதைப் பிற்படுத்துவது வாஜிப் என்று கூறப்பட்டிருந்தும் ஹஜ்ஜு விதியான முஸ்லிம்களில் பலர் ஹஜ்ஜு செய்யாமல் அலட்சியமாக இருப்பதும்,

ஜகாத்துக் கொடுக்காமல் இருப்பதும், பணச் செலவில்லாத தொழுகை நோன்பு ஆகியவற்றை மட்டும் நிறைவேற்றி விட்டு, தலைப்பாகை அணிந்து, சுன்னத்துகளை எல்லாம் விடாமல் நிறைவேற்றி வருவதும் மிக வேடிக்கையான விஷயமாகும்.

இஷா தொழுத பின் இரவில் வீண் பேச்சுக்கள் பேசுவதும், வீணான பாடல்களைப் பாடுவதும் மக்ருஹ் ஆகும். நன்மையான பேச்சுக்களும் ஹதீஸ்களும் உபதேசமும் மிகச் சிறந்ததாகும். இதுவரை சொல்லப்பட்ட இச்சட்டங்கள் கதீப் ஷர்பீனி (ரஹ்) அபூ குஜாஷரீ (ரஹ்) ஆகியோருக்குரிய ஃபத்ஹுல் லதீஃப், கலாயித் என்னும் கிரந்தங்களிலும், மற்றும் பல கிரந்தங்களிலும் கூறப்பட்டுள்ளவையாகும்.

## தூங்குகிறவனைத் தொழுகைக்காக எழுப்புவது

தூங்குகிறவனைத் தொழுகைக்காக எழுப்புவது சுன்னத்து. நேரம் நெருக்கமாயுள்ள போது பலமான சுன்னத்தாகும். நேரம் வந்து விட்டதையறிந்து மன முரண்டாகத் தூங்குகிறவனை எழுப்புவது வாஜிப். ஆனால் அதனால் குழப்பம் ஏற்படுமென்றிருந்தால் வாஜிபில்லை.

தொழுபவர்களுக்கு முன்புறத்திலும், முந்தின 'ஸஃப்'ஃபிலும், மிஹ்ராபிலும் தூங்குகிறவர்களை எழுப்புவதும், கிழக்கு வெளுத்த பின்பும், சுப்ஹு தொழுத பின் பொழுதுகிளம்புமுன் தூங்குகிறவர்களை எழுப்புவதும், அஸருக்குப்பின் தூங்கு கிறவர்களை எழுப்புவதும், வீட்டில் தனிமையில் இருளில் தூங்குகிறவர்களை எழுப்புவதும், மல்லாந்து படுத்துறங்கும் பெண்ணையும், குப்புறப்படுத்துறங்கும் ஆணையும் எழுப்புவதும், மேலே மறைப்பில்லாத வெளியில் தூங்குபவர்களை எழுப்புவதும், கையில், வாயில் புலால் வாடை இருக்கின்ற நிலையில் தூங்கு கிறவர்களை எழுப்புவதும் சுன்னத்தாகும். ரமழான் ஸஹர் உணவு அருந்து வதற்காகவும், வழமையாக தஹஜ்ஜுத் தொழுபவர்களையும் எழுப்புவது சுன்னத்து.

தூங்குகிறவருக்கு ஏதேனும் ஆபத்து வருவதைக்கண்டால், அவரை எழுப்புவது வாஜிபாகும். நேரம் வந்த பின் தூங்குகிறவன் நேரம் தவறிவிடுமுன் தானாக விழித்துக்கொள்வான் என்ற எண்ண மிருந்தாலும், அல்லது எவரேனும் அவனை எழுப்பி விடுவார் என்ற நம்பிக்கையிருந்தாலும் அவன் தூங்குவது ஹராமல்ல. எனினும் மக்ருஹ் ஆகும்.

"தொழுகை நேரம் வந்தபிறகு தன்னை மிகைக்காத நிலையில் தூங்கும் தூக்கமும், இன்னும் கொஞ்சம் தேவையிருக்க கையை எடுக்காத உணவும் ஆகுமானதல்ல", என்று இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களும் மற்றும் பல சூஃபியாக்களும் கூறியுள்ளனர்.

நடுப்பகலில் சிறிது நேரம் தூங்குவது சுன்னத்து. ஆனால் தஹஜ்ஜுத் தொழுவதற்காக எழுந்திருக்கும் எண்ணத்தில் அது இருக்கவேண்டும்.

## மானத்தை மறைப்பது பற்றிய பாடம்

ஆண்கள் முழங்காலுக்கும், தொப்புளுக்கும் இடையிலுள்ள மேனியை மறைப்பதும், பெண்கள் முகத்தையும் இரு மணிக்கட்டுகளையும் தவிர உள்ள முடியும் நகமும் உட்பட, மேனி முழுவதையும் மறைப்பதும் வாஜிபாகும். மேனி தெரியாத கெட்டியான துணியினால் மறைத்திடவேண்டும். தொழுகை, தவாஃப், குத்பா

ஆகியவற்றில் மட்டுமல்லாமல் எல்லா நேரங்களிலும் மறைப்பது வாஜிபாகும். விபரம் பின்னால் கூறப்படும்.

மானத்தை மறைப்பது வாஜிப் என்பதற்கு ஆதாரம் பின்வரும் அல்லாஹ்வுடைய திருவசனங்களாகும்.

يَابَنِيْٓ اٰدَمَ خُذُوْا زِيْنَتَكُمْ عِنْدَ كُلِّ مَسْجِدٍ (7: 31)

"ஆதமுடைய மக்களே! தொழுமிடங்கள் அனைத்திலும் உங்களின் (ஆடை) அலங்காரத்தைப் பற்றிப் பிடித்துக்கொள்ளுங்கள்."

وَلَا يُبْدِيْنَ زِيْنَتَهُنَّ اِلَّا مَا ظَهَرَ مِنْهَا 24:31

(பெண்களாகிய அவர்கள் தங்கள் உடலில் பெரும்பாலும்) வெளியில் தெரியக்கூடியவை தவிர (ஆடை ஆபரணம் போன்ற) தங்கள் அலங்காரத்தையும் அவர்கள் வெளிப்படுத்தவேண்டாம்."

மேலே குறிப்பிட்டபடி ஆடையின்றி தொழுவது கூடாது. ஆடை என்பது சாக்கு போல் உள்ளதாக இருந்தாலும், அது துப்புரவான தோலாக இருந்தாலும், அல்லது காகிதம் போலுள்ளதாக இருந்தாலும் கூடும். சரீரத்தை எடுத்துக்காட்டும் (மஸ்லின் அல்லது ரவைசல்லா வெனப்படும்) கவணியாலும், பளிங்கு போன்ற பொருள்களினாலும் ஆடையணிதல் கூடாது. மேனியின் வடிவமைப்பை எடுத்துக்காட்டும் சிர்வால் போன்ற இறுக்கமான ஆடை அணியலாம். ஆனால் அது பெண்களுக்கு மக்ரூஹ். ஆண்களுக்கு சிறப்பிற்கு மாற்றமாகும்.

மானத்தை மறைப்பதில் வாஜிபாகிறது, சரீரத்தில் மேற்புறமும், சுற்றுப்புறமும்தான். கீழ்ப்புறத்தை மறைப்பது வாஜிபல்ல. உதாரணமாக: உயரமான ஓர் இடத்தில் நிற்கிறவனை அவனுடைய கீழ்புறத்திலிருந்து ஒருவன் அவனுடைய மர்மஸ்தானத்தைப் பார்த்திடுவான் என்றிருந்தாலும் கீழ்புறத்திலிருந்து மறைப்பது வாஜிபல்ல. ஏனெனில், இவ்வாறு நிகழ்வது அரிதான விஷயமாகும். ஆனால் இவ்வாறான நேரத்தில் வேஷ்டியின் இரு ஓரங்களையும் முடிச்சிட்டுக்கொள்ளவேண்டும்.

மானத்தை மறைப்பதற்குரிய உடை இல்லாதவன் இலை தழைகளால் மறைத்துக்கொண்டு தொழுவான். களிமண்ணைப் பூசி மறைத்துக்கொள்வான். அதுவும் கிடைக்கப்பெறாதவன் நிர்வாணமாகத் தொழுவான். பிறகு ஆடை கிடைத்தாலும் அதனைக் களாச் செய்ய வேண்டியதில்லை.

ஒருவனிடம் நஜீஸான துணி இருக்கிறது. ஆனால் அதனைக் கழுவி சுத்தம் செய்வதற்கு அவனால் முடியவில்லையென்றாலும், அல்லது வேறொருவனிடம் துணி இருக்கிறது. அவன் அதனை இரவலாகத் தர மறுத்தாலும், நிர்வாணமாகவே தொழுவான். அவன் அத்துணியை அன்பளிப்பாகத் தந்தால் அதனை ஏற்றுக்கொள்வது வாஜிபல்ல. ஏனெனில், அவன் அதனை சொல்லிக்காட்டலாம் என்பதற்காக.

தொழுகிறவனுக்கு உடை இல்லையானால் உடை உள்ளவன் அதனை இரவலாக (திரும்ப வாங்கிக்கொள்வதாக) கொடுப்பதும், அதனை அவன் ஏற்றுக்கொள்வதும் வாஜிபாகும். அதனை ஏற்றுக்கொள்ளாமல் நிர்வாணமாகத் தொழுதால் தொழுகை கூடாது.

நஜீஸான துணியுள்ளவன் அதனைத் துப்புரவு செய்வதற்குரிய லசதி இருந்தால் நேரம் தவறிப்போய் தொழுகை களாவானாலும் சரி, அத்துணியைத் துப்புரவு செய்து அணிந்து கொண்டுதான் தொழ வேண்டும்..

உளுவோ, தயம்முமோ இல்லாதவன், அதனைச்செய்தால் நேரம் போய்விடுமென்பதை பயந்தால், நேரத்தை கண்ணியப்படுத்துவதற்காகத் தொழுது கொண்டு, பிறகு உளுச்செய்து அத்தொழுகையைத் திருப்பித் தொழுவான். இந்த விஷயம் முன் சொல்லப்பட்டிருக்கிறது. மறைக்க வேண்டிய பகுதியில் சில பகுதியை மறைத்து, சில பகுதிகளை மறைக்க முடியாத அளவு ஆடை இருந்தாலும், அல்லது இருக்கின்ற துணி பல இடங்களில் கிழிசல் உடையதாக இருந்தாலும், இருக்கின்ற அளவு அணிந்து தொழ வேண்டும். ஆனால், முதலில் முன் துவாரத்தையும் பிறகு பின் துவாரத்தையும் மறைத்திட வேண்டும்.

மானத்தை மறைப்பதில் வெளிப்படுத்துவது ஆகுமானதும் ஆகாததும் பற்றிய விபரம் நிகாஹுடைய பாடத்தில் வரும். ஆடையணிதல் சம்பந்தமாக மீதியுள்ள விளக்கம் ஜும்ஆவுடைய பாடத்தில் வரும் இன்ஷா அல்லாஹ்!

வேறொருவனிடத்தில் துணியை வம்பு செய்து வாங்கக்கூடாது. கிழிந்த உடைகளை தைத்துக்கொள்ள முடிந்தவன் மர்மஸ்தானம் தெரியும் விதம் கிழிசலுடன் தொழக்கூடாது. அனைவரும் நிர்வாணிகளாக இருக்கின்ற நிலையிருந்தால் இமாம் நடுவில் நின்று கொள்வார்.

ஆணும், பெண்ணும் நிர்வாணமாக இருந்து, இருவருக்கும் போதாத துணி இருந்தால், முதலில் பெண்ணுக்கு அத்துணியைக் கொடுக்க வேண்டும். இவ்வாறே பார்வையுள்ளவனை விடப் பார்வையில்லாதவன் முற்படுத்தப்படுவான்.

### பட்டாடையும், நஜீஸான பருத்தி ஆடையும்

ஒரு மனிதனிடம் பட்டு ஆடையும் நஜீஸான பருத்தி ஆடையும் இருக்கின்றன. இப்பொழுது தொழும் பொழுது பட்டாடையையும் மற்ற நேரத்தில் அந்த நஜீஸான ஆடையையும் அணிந்து கொள்வான்.

ஒரு மனிதனிடம் அவனுக்குச் சொந்தமான பட்டாடையும், பிறருக்குரிய ஒரு பருத்தி ஆடையும் இருக்கின்றன. இப்பொழுது எந்த நிலையிலும் பிறருடைய அந்தப்பருத்தி ஆடையை அணியமாட்டான். அவனிடம் அப்பட்டாடையைத் தவிர வேறு ஆடை இல்லாதபொழுது பிறருடைய அப்பருத்தி உடையை அணிந்து கொண்டு அதற்குரிய விலையைக் கொடுப்பது வாஜிபாகும்.

ஒரு ஆண் தன் மனைவியைத் தவிரவும் ஒரு பெண் தன் புருஷனைத் தவிரவும் மற்ற எவருக்கும் அவ்ரத்தை (மறைவிடத்தை)க்காண்பிப்பது ஹராமாகும்.

பருத்தியும் பட்டும் சமமாக இருக்கின்ற துணியை அணிவது மக்ரூஹ் ஆகும். கொஞ்சமேனும் பருத்தி அதிகமாக இருந்தால் மக்ரூஹ் அல்ல.

நூலில் சாயம் காய்ச்சி பிறகு நெய்த துணி மக்ரூஹ் அல்ல. உடைகளில் வெள்ளையும், பின்னர் சாய நூலால் நெய்ததும் சிறப்பானதாகும்.

ஆண்கள் அழகிய உடையணிந்து, தலைப்பாகைக்கட்டி, அதில் தொங்கல் விட்டு மேலே போர்வை அணிந்து, தலைவழிய பச்சைப்போர்வையிட்டுத் தொழுவது சுன்னத்தாகும். பெருமையை நாடி காலிலும், கையிலும் தொங்கும்படி உடையணிவது ஹராம் ஆகும். பெருமையை நாடவில்லையானாலும், அவ்வாறு அணிவது மக்ரூஹ் ஆகும்.

நபி (ஸல்) அவர்களுடைய உடை முழங்காலுக்கும் பரண்டை (கணு)க் காலுக்கும் நடுவிலும், அவர்களுடைய சட்டைக் கை மணிக்கட்டுக்கு மேலுமாக இருந்தது.

நிர்வாணமாகத் தொழுகிறவனை உடையணிந்தவன் தொடர்ந்து தொழவேண்டுமானால், அவன் அவ்வாறு தொழுவது கூடும் என்பதை விளங்கியவனாக இருக்கவேண்டும்.

ஒருவனிடம் இரண்டு துணிகள் இருந்தால் ஒன்றை உடுத்திக்கொண்டும், மற்றொன்றை விரித்தும், தனக்கு முன்னால் மறைப்பாக ஆக்கிக்கொண்டும் தொழுவான். அவனுக்கு மறைப்பு இருந்தால் அத்துணியை மேனியில் போர்வையாகப் போட்டு தோளையும் மூடிக்கொள்வான். மறைப்பு பற்றிய விபரம் பின்னால் கூறப்படும்.

மேலே கூறப்பட்ட வாஜிபான அளவு ஆடையணிதல் தொழுகையில் கட்டாயமாக்கப்பட்டுள்ளது போல் மற்ற நேரங்களிலும் அந்த அளவு வாஜிப் ஆகும். வேறு ஆடை இல்லாத போது நஜீஸான உடையைக்கொண்டேனும் பட்டாடையைக் கொண்டேனும் (தனிமையிலிருந்தாலும்) மானத்தை மறைப்பது வாஜிபாகும். தொழாத நேரமானாலும் (அது தனித்திருக்கும் நேரமானாலும்) ஆண்கள் முன் பின் துவாரத்தை மறைத்துக்கொள்வதும், பெண்கள் முழங்கால் முதல் தொப்புள் வரை மறைப்பதும் வாஜிபாகும்.

குளிக்கும் போதோ, வீடு போலுள்ளவற்றைப் பெருக்கும்போது புழுதியை விட்டு காத்துக்கொள்வதற்கோ, அல்லது புழுக்கமான நேரத்தில் குளிர்ச்சியை உண்டாக்கிக்கொள்வதற்கோ, தனித்திருக்கும் போது அவ்ரத்தைத் திறந்து கொள்ளலாம். தனித்த இடத்திலிருக்கும் பொழுதும் எந்தத் தேவையுமின்றி வாஜிபான மறைத்தலைத் தவிர மற்றுமுள்ள உறுப்புகளில் ஆண்கள் தொடையையும் பெண்கள் முதுகுப் பகுதியையும் திறந்திருப்பது மக்ரூஹ் ஆகும். வேலைக்காரன் தேவைக்காக வேஷ்டியைத் தூக்கிக்கட்டிக்கொள்வது ஆகும் என்று 'கவாயித்' என்ற நூலில் கூறப்பட்டுள்ளது. எனினும் அவசியத்திற்காக மாலிக் மத்ஹபை பின்பற்றிக்கொள்ளலாம்.

பெண்களுக்கும் சிறிய ஆண் குழந்தைகட்கும் பட்டும், மற்றும் ஜர்ரீன் —— زَرِّيْنُ

என்னும் தங்க ஜரிகை உடைகளும் ஹலாலாகும். அழுக்குத்துணியும், கறுப்பு நிறமுள்ள காலணியும் வறுமையை உண்டாக்குமென சமாலுத்தீன் திம்யரி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

### கிப்லாவை முன்னோக்குதல் பற்றிய விவரம்

தொழுகையில் மஸ்ஜிதுல் ஹராம் என்னும் கஅபா தன்னையே முன்னோக்குதல் பலமான சொற்படி ஷர்த்தாகும்.

இதற்கு ஆதாரம்:

(2.144;2.149; 2.150). فَوَلِّ وَجْهَكَ شَطْرَ الْمَسْجِدِ الْحَرَامِ

"மஸ்ஜிதுல் ஹராமின் பக்கம் உம்முடைய முகத்தைத் திருப்பிக்கொள்வீராக!" என்ற ஆயத்தாகும்.

நம்முடைய ஷைகு அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள் தங்கள் ( غُنْيَة ) ஙுன்யாவில் கூறியுள்ளதாவது : "கிப்லா தன்னையே முன்னோக்குதல் என்பது மக்காவிலும் அதனைச் சுற்றியுள்ள ஊர்களிலும்தான். தூரமான ஊர்களில் அதன் திசையை நோக்கினால் போதுமானது." இவ்விஷயத்தில் கிப்லாவைச் சரியாகத் தெரிந்துகொள்ள முடியாத தடுமாற்றமான நேரத்தில் இமாம்கள் அபூஹனீஃபா, மாலிக், அஹ்மதிப்னு ஹன்பல் (ரஹிமஹுமுல்லாஹ்) ஆகிய மூவரில் ஒருவரைத் தொடர்ந்திடவேண்டும்.ஆனால்கடினமான பயமுடைய நேரத்தின் தொழுகையிலும், ஆகுமான பிரயாணத்தில் சுன்னத்தான தொழுகைகளிலும் கிப்லாவை முன்னோக்க முடியாத நிலையில் மேற்கூறிய இமாம்களைத் தொடர்ந்து கொள்ளாமலேயே எத்திசையில் வசதியோ அத்திசையில் தொழுது கொள்ளலாம். ஆனால் பிரயாணத்தில் ஃபர்லான தொழுகையில் கிப்லாவைத் தெரிந்துகொள்ள முடியாத தடுமாற்றமான நேரத்தில் மேற்கண்ட மூன்று இமாம்களில் ஒரு இமாமைப் பின்பற்றித் தொழவேண்டும்.

ஆகுமான பிரயாணம் என்பது,(குறைவான தூரம் சென்றாலும்) பாவமான காரியம் அல்லாததற்குப் பிரயாணம் செய்வதாகும். எனவே கடன் வாங்கியவன் அதைத் திருப்பிக்கொடுக்க வசதியிருந்தும் தவணையின்றிக் கடன் கொடுத்தவனுடைய அனுமதி யில்லாமல் பிரயாணம் செய்கின்ற கடனாளி, விபச்சாரம் புரிய, வட்டி வியாபாரம் செய்ய, மது அருந்துவதற்காக, கொலை, கொள்ளை, களவு முதலிய பாபமான செயல்களுக்காக பிரயாணம் செய்கிறவன் ஆகியவர்களுடைய பிராயாணங்கள் ஆகுமானவையல்ல. இவர்களுக்கு கஸ்ரு, ஜம்உ என்ற சலுகையும் கிடையாது.

ஆகுமான பிரயாணம் செய்கிறவன் சுன்னத்தான தொழுகையில் ருகூவு, சுஜூது, நடு இருப்பு, முதல் தக்பீர் ஆகிய நான்கிலும் நடக்காமல் நின்று கிப்லாவை முன்னோக்குவது வாஜிப். மற்ற செயல்களில் அவன் நாடி நடக்கின்ற திசையை முன்னோக்கிக்கொண்டு நடந்து கொண்டே தொழலாம். ஆனால், அவன் நாடிச்செல்லுகின்ற திசையைவிட்டு வேறு திசையில் திரும்பித் தொழுவது ஹராமாகும்; கிப்லாத்திசையின் பக்கமே தவிர.

வாகனத்தில் செல்லுகிறவன் ருகூவு, சுஜூதுக்கு சாடைசெய்து கொள்வதும் கிப்லாவை முன்னோக்குவதும் வாஜிப். வசதியிருந்தால் ருகூவுவையும் சுஜூதையும் நிரப்பமாகச் செய்வது வாஜிபாகும். இவ்வாறு தொழுகிறவன் நடக்கும்பொழுது தன் காலைத்தேவையின்றி அசைக்காமலிருப்பதும், காய்ந்த நஜீஸ் பாதை முழுவதும் கிடந்தாலும் அதனை மன முரண்டாய் மிதிக்காதிருப்பதும் ஷர்த்தாகும். காய்ந்த நஜீஸைத் தவறுதலாக மிதிப்பது குற்றமாகாது.

கிப்லாவை முகத்தைத் கொண்டு முன்னோக்குவது ஷர்த்தல்ல; நெஞ்சைக்கொண்டு முன்னோக்குவது தான் ஷர்த்து. எனினும், முகத்தை கிப்லாவை விட்டுத்திருப்புவது மக்ருஹ் ஆகும். இது பின்னால் கூறப்படும். இன்ஷா அல்லாஹ்.

கடலில் செல்லுகின்ற கப்பலில் தொழுகிறவன் சுன்னத்தான தொழுகையில் கிப்லாவை முன்னோக்குவது வாஜிப். ஆனால், கப்பலில் சுக்கான் பிடிப்பவனைத் தவிர. கப்பல் ஓடும்பொழுது மயக்கம் வருகிறவனைத்தவிர மற்றவர் ஃபர்லு தொழுகையில் நின்று தொழுவதை விடக்கூடாது.

காற்றினால் கப்பல் திரும்பினாலும் அல்லது மாலுமி அதனைத் திருப்பினாலும் கிப்லாவை விட்டு நெஞ்சு திரும்புகின்ற நேரத்தில் கிப்லாவின் பக்கம் நெஞ்சைத் திருப்பிக் கொள்வது வாஜிபாகும். கப்பல், திரும்பியவுடன் நெஞ்சை கிப்லாவுக்கு நேராக்கிக்கொண்டால் அத்தொழுகையை எடுத்துக்கொள்ளலாம். ஆனால், விரைவாக நெஞ்சை நேராக ஆக்காவிட்டால் திருப்பித் தொழவேண்டும்.

## கிப்லாத் திசை தெரியாமல் தடுமாறுகிறவன், பார்வையில்லாதவன் ஆகியோருக்குரிய சட்டம்

கிப்லாத்திசை தெரியாமல் தடுமாறுகிறவனும், பார்வை யில்லாதவனும் தெரிந்தவர்களிடம் கேட்பது, அல்லது பெரும்பாலானாவர்கள் தொழுது வரும் கிப்லா திசையை, மிஹ்ராபைப் பற்றிப்பிடிப்பது வாஜிபாகும்.

ஒருவன் தனிமையிலிருக்கும்போது கிப்லாத் தெரியாவிட்டால் ஏதேனும் ஒரு திசையை நோக்கித் தொழுதுவிட்டுப் பிறகு கிப்லாவைத் தெரிந்த பின் களாச்செய்வது வாஜிபாகும்.

ஒருவன் திசை தெரியாமல் திகைத்து, பிறகு சிந்தித்துப்பார்த்து ஒரு திசையை நிச்சயமாக்கி, அதனை நோக்கித் தொழுதபின், அது கிப்லாத்திசைத்தான் என்பது நிச்சயமானால் அத்தொழுகையை களாச்செய்யமாட்டான். தொழுதது தவறான திசை என்று தெரிந்தால் அதனைக் களாச் செய்வான்.

ஒருவன் நான்கு ரக்அத் தொழுகையில் ஒவ்வொரு ரக்அத்திலும் சிந்தித்துப்பார்த்து நான்கு ரக்அத்துகளையும் நான்கு திசைகளை நோக்கித்தொழுதால், திரும்ப அதனைக் களா செய்யமாட்டான். ஆனால், முந்தின சிந்திப்பை (இஜ்திஹாதை) விட இரண்டாவது சிந்திப்பு தெளிவாக இருக்கக்கூடாது. மாறாக முந்தினதை விட

இரண்டாவது தெளிவாக இருந்தால் முதல் இஜ்திஹாதில் ஏற்பட்ட திசையை நோக்கித்தொழுதது செல்லாது. அத்தொழுகை வீணாகிவிடும்.

ஒரு மனிதன் எந்த நாளும் சோதித்து அறிந்த ஒரு நட்சத்திரத்தை அடையாளமாக வைத்து, கிப்லாவின் திசையை நன்கு சோதித்து அறிந்து வைத்திருக்கிறான். அவனும் அவனுடைய சொல்லை ஏற்றுக்கொள்பவர்களும் அத்திசையை நோக்கித் தொழுவது கூடும்.

ஒரு சிந்திப்பு (இஜ்திஹாத்) மறு சிந்திப்பை முறிக்காது என்று இமாம்கள் எல்லோரும் ஏகோபித்து கூறி இருக்கிறார்கள்.

இமாம்களுடைய சிந்தனைகளெல்லாம் பலமான ஆதாரங்களின் அடிப்படையிலேயே உண்டாகி இருக்கின்றன. உதாரணமாக கீழே கண்ட சரித்திரத்தை சொல்லலாம். அதாவது: அம்மார் என்ற ஸஹாபியையும், அவர் தகப்பனார் யாஸிரையும், தாயார் ஸுமையாவையும் காஃபிர்கள் வம்பு செய்து நிர்பந்தித்து மதம் மாற்ற நாடினார்கள். ஸுமையாவை இரண்டு ஒட்டகைகளுக்கு இடையில் கட்டி மர்மஸ்தானத்தில் ஆயுதத்தைச்செலுத்தியும், யாஸிரை வாள் கொண்டு வெட்டியும் கொலை செய்துவிட்டார்கள். அம்மார் அவர்கள் மனதில் ஈமானை உறுதி செய்துகொண்டு வெளியில் காஃபிர்போல் நடித்தார்கள். இந்தச்செய்தி ஊரெல்லாம் பிரஸ்தாபமாகி விட்டது. அந்தச் சந்தர்ப்பத்தில் அல்லாஹு தஆலா கீழ்கண்ட ஆயத்தை இறக்கினான். அதாவது:

مَنْ كَفَرَ بِاللهِ مِنْ بَعْدِ إِيْمَانِهِ إِلَّا مَنْ أُكْرِهَ وَقَلْبُهُ
مُطْمَئِنٌّ بِالْإِيْمَانِ (16: 106).

"எவனேனும் விசுவாசம் கொண்டதன் பின்னர் அவன் அல்லாஹுதஆலாவை நிராகரித்தால் (அவனைப்பற்றி கவனிக்கப்படும். ஆனால்) அவனுடைய இதயம் விசுவாசத்தைக்கொண்டு முற்றிலும் திருப்தியடைந்து இருக்கும் நிலையில் எவருடைய நிர்பந்தத்தின் மீதும் அவன் (இவ்வாறு) நிராகரித்தால் (அவன் மீது யாதொரு குற்றமும் இல்லை)."

இந்த ஆயத்தை இமாம் அபூ ஹனீஃபா (ரஹ்) அவர்களும் ஆதாரமாக எடுத்துக்கொண்டார்கள். யாஸிரும் ஸுமையாவும் குஃப்ரு ஏற்பட்டுவிடுமே யென்பதை பயந்து மரணத்தைத் தேடிக்கொண்டார்கள். ஆனால் அம்மார் குஃப்ரு ஏற்படாது என்ற கருத்தின் மீது வெளியில் காஃபிராக நடித்துக்கொண்டாலும் மனதில் ஈமானை இழக்கவில்லை. இந்த ஆயத்தின்படி இருவரின் செயல்களும் சரியாகவே இருக்கும்.

கஅபாவிற்குள் நின்று தொழுதால் மூடப்பட்ட வாசலையாவது, அல்லது ஒரு முழத்தில் மூன்றிலொரு பாகம் உயரமுள்ள வாசற்படியையாவது முன்னோக்கித் தொழுவது ஏற்றம். கஅபாவிற்கு உள்ளிலும் வெளியிலும் தொழுகிறவன் ஏதேனும் ஒரு பக்கத்துச் சுவரை முன்னோக்குவான். கஅபாவுடைய சுவருடன் சேர்ந்த ஹுஜ்ரே இஸ்மாயீலை மட்டும் முன்னோக்கித் தொழுதால் கூடாது. கஅபாவின் மேல்தட்டில் தொழுதால் குறித்த உயரமுள்ள உயர்ந்ததை முன்னோக்கிக்கொள்வான்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

தொழுகைக்குரிய முதல் ஷர்த்து விரிவான முறையில் பத்தென்றும் சுருக்கமான முறையில் ஐந்தென்றும் சொல்லப்பட்டதில் இவ்விடத்தில் அடிப்படையான ஒரு விஷயத்தை மட்டும் திருப்பிச் சொல்லப்படுகிறது. அதாவது தொழுகைதன்னை ஃபர்லென்று அறிவது ஷர்த்தாயிருக்கும். ஒருவன் அந்த அறிவில்லாமலும் அல்லது இப்பொழுது தொழும் தொழுகை ஃபர்லு என்பதை அறியாமலும் தொழுதால் அது கூடாது.இன்னும் இது ஃபர்லு இது சுன்னத்து என்று பிரித்தறிவது ஷர்த்தாகும்.பொது மக்களில் ஒருவரோ அல்லது ஓர் ஆலிமோ அனைத்துச் செயல்களும் ஃபர்லென்று எண்ணினால் கூடிவிடும். ஆனால் அனைத்தையும் சுன்னத்தென்று எண்ணினால் கூடாது. இதில் ஃபர்லும் உண்டு சுன்னத்தும் உண்டு என்று பிரித்தறியாமல் எண்ணினால் பாமரனுடைய விஷயத்தில் அது கூடும். ஆலிமுடைய விஷயத்தில் கூடுமா கூடாதாவென்பதில் அபிப்பிராய பேதம் உண்டு.

## பாங்கு இகாமத் பற்றிய பாடம்

இதற்கு அடிப்படையான ஆதாரமாகிறது பின்வரும் ஆயத்து களாகும்.

وَمَنْ اَحْسَنُ قَوْلاً مِّمَّنْ دَعَآاِلَى اللّٰهِ وَعَمِلَ صَالِحًا

அல்லாஹ்வின் பக்கம் (மக்களை) அழைத்து நற்செயல் புரிந்தவரை விட அழகிய சொல்லுடையவர் யார்? *(41:33)* என்ற ஆயத்தும் இன்னும்

*(22:27)* وَاَذِّنْ فِى النَّاسِ بِالْحَجِّ

"ஹஜ்ஜைக்கொண்டு மனிதர்களுக்கு அறிவிப்பீராக." என்ற ஆயத்தும் மற்றும் பல ஆயத்துகளுமாகும்.

தொழுகைக்காக மக்களை எவ்வாறு ஒன்று சேர்க்கலாம் என்ற விஷயத்தைப்பற்றி நாயகம் (ஸல்) அவர்கள் எண்ணியபோது அதைப்பற்றி ஸஹாபாக்களிடத்தில் ஆலோசனை கலந்தார்கள். ஒரு கொடியை நட்டி மக்களுக்கு அறிவிக்கலாமே என்று சிலர் சொல்லியபோது அதை அவர்கள் பொருத்தமானதாகக் காணவில்லை. மற்றும் சிலர் குழலூதி அறிவிக்கலாமே என்று சொன்னபொழுது அது யூதர்களின் செயல் என்று சொல்லிவிட்டார்கள். வேறு சிலரோ மணி அடித்து அறிவிக்கலாம் என்று சொன்னதற்கு அது நஸாராக்களின் (கிறிஸ்தவர்களின்) பழக்கம் என்று சொன்னார்கள். ஒரு சிலர் நெருப்பைக் கொளுத்தி அறிவிக்கலாம் என்று சொன்னதற்கு அது மஜூஸிகளின் (நெருப்பை வணங்குபவர்களின்) செயல் என்று சொன்னார்கள். இந்த நிலைமையில் யாராவது ஒரு மனிதரை அனுப்பி தொழுகைக்காக அழைப்பு விடுக்கச்செய்யலாம் என்று ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்கள் சொன்ன யோசனையை அங்கீகரித்து ஹஜ்ரத் பிலால் (ரலி) அவர்களை அழைத்து பிலாலே! நீர் போய் தொழுகைக்காக அழைப்பு விடுப்பீராக என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். இந்தஅழைப்பு اَلصَّلٰوةُ جَامِعَةٌ 'அஸ்ஸலாத்து

ஜாமிஅத்தன்' ஜமாஅத்தாக தொழுவதற்கு விரைந்து கொள்ளுங்கள் என்று சொல்வதாக இருந்ததேயன்றி பாங்காக (அதானாக) இருக்கவில்லையென்றும் இதுதான் அதான், (பாங்கு நடைமுறைக்கு வருமுன் மார்க்கமாக்கப் பட்டிருந்தது என்றும் நவவீ இமாம் (ரஹ்) அவர்களும், இமாம் இப்னு ஹஜர் (ரஹ்) அவர்களும் கூறியிருக்கின்றார்கள். இந்த நிலையில் அப்துல்லாஹிப்னு ஸஜத் (ரலி) அவர்கள் அன்று இரவு ஒரு கனவு கண்டார்கள். அவர்கள் கூறுவதாவது: ஒரு மனிதர் தன் கையில் ஒரு மணியை வைத்துக்கொண்டு என்னைக் கடந்து சென்றார். அப்போது, அல்லாஹ்வின் நல்லடியாரே! அதோ (உமது கையிலிருக்கக்கூடிய) அந்த மணியை எனக்கு விலைக்குத்தருகிறீரா? என்று நான் அவரிடத்தில் கேட்டேன். இதை வாங்கி நீர் என்ன செய்யப்போகிறீர் என்று அவர் என்னிடத்தில் கேட்டார். மணியடித்து ஓசையெழுப்பி மக்களை தொழுகைக்கு அழைப்போம் என்று நான் சொன்னேன். அப்போதவர் இதைவிடவும் உயர்வான ஒரு செயலை நான் உமக்கு அறிவிக்கட்டுமா? என்று என்னிடம் கேட்டார். அப்படியே அறிவியுங்களேன் என்று நான் சொன்னேன். அவர், அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர் என்று பாங்கின் கடைசி வரை சொல்லித்தந்தார். பின் கொஞ்ச தூரம் என்னை விட்டும் பிரிந்து சென்று இகாமத் إِقَامَةٌ தின் முறையை எனக்குச்சொல்லித்தந்தார். அன்று அதிகாலை நான் விழித்தவுடன் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடத்தில் வந்து இரவில் நான் கண்ட கனவைப்பற்றி அவர்களிடம் சொல்லிக் காண்பித்தேன். அது ஒரு மெய்யான கனவென்று அவர்கள் கூறி, நீ கண்ட கனவை பிலாலுக்கு அறிவித்து அவரைக்கொண்டு பாங்கு சொல்லச்செய்யவும், ஏனெனில் அவர் உம்மைவிட குரல்வளம் மிக்கவர் என்று சொன்னார்கள். நான் பிலாலிடம் சென்று நடப்பைச் சொல்லிக்காண்பித்தேன். அவர் பாங்கு சொல்ல ஆரம்பித்தார். இந்த பாங்கை தங்கள் வீட்டிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த உமர் (ரலி) அவர்கள் தங்களின் போர்வையை எடுத்துப்போர்த்திக்கொண்டு நபிகள் (ஸல்) அவர்களிடத்தில் வந்து அல்லாஹ்வின் ரசூலே! அவர்கண்ட கனவுபோல் நானும் கண்டேன் என்று கூறினார்கள். உடனே நாயகம் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வுக்கே எல்லாப்புகழும் என்று கூறி இறைவனுக்கு நன்றி செலுத்தினார்கள். இதே விதமான கனவை மற்றும் பல நபித்தோழர்களும் அன்றிரவு கண்டதாகக் கூறப்பட்டிருக்கிறது.

தொழுகையின் வெளி சுன்னத்துகளில் நன்மையாலும் சிறப்பாலும் உயர்வுபெற்றது பாங்கைப்போன்று வேறில்லை. பாங்கு 'சுன்னத்து கிஃபாயா' வாக இருந்தபோதிலும், நன்மையில் அது சில ஃபர்ளு கிஃபாயாவை விட உயர்ந்ததாகும்.

اَذِّنْ وَاِنْ مَنَعُوْكَ وَلَا تَؤُمَّ وَاِنْ مَنَحُوْكَ "உன்னை அவர்கள் தடுத்தாலும் நீ பாங்குசொல், உனக்கு அவர்கள் (வெகுமதி) கொடுத்தாலும் நீ இமாமாக ஆகாதே" என்றும் اِشْتَرُوْا الْاَذَانَ بِالذَّهَبِ وَالْفِضَّةِ "தங்கம் வெள்ளியைக் கொடுத்தாவது பாங்கை விலைக்கு வாங்கிக்கொள்ளுங்கள்." என்றும் பழமொழிகள் கூறப்பட்டுள்ளன.

பாங்கு என்பது இஸ்லாத்தின் அடையாளச்சின்னமாக இருப்பதுடன் தங்கள் தங்கள் வேலைகளில் ஈடுபட்டிருக்கும் மக்களின் கவனங்களைத்தொழுகையின்பால் திருப்பக்கூடியதாகவும், அந்தந்த தொழுகையின் நேரம் வந்துவிட்டதை அறிவிக்கக் கூடியதாகவும் இருந்துகொண்டிருக்கிறது. எனவே ஓர் ஊரில் ஓர் இடத்திலாவது பாங்கு சொல்லவில்லையானால் அவ்வூரார் அனைவரும் குற்றவாளிகளாவார்கள். ஏனெனில், அது இல்லாவிட்டால் இஸ்லாத்தின் அடையாளமே இல்லாமலாகிவிடும். பாங்கு சொல்வதற்கு பின்வாங்குவதும், இமாமத் செய்வதற்கு முன்னேறுவதும் கெட்ட பித்அத்தாகும்.

ஃபர்ளு தொழுகிறவன் தனியாகவோ, அல்லது ஜமாஅத்தாகவோ, அதாவாகவோ, அல்லது களாவாகவோ எவ்விதம் தொழுதாலும் பாங்கும் இகாமத்தும் சொல்வது சுன்னத்தாகும். இவையிரண்டும் சேர்ந்து இமாமத்து செய்வதைவிடச் சிறந்ததாகும். இதில் இமாம்களுக்கிடையில் கருத்து வேற்றுமை இல்லை.

"பாங்கு சொல்வது, ஜும்ஆவுக்கு இமாமத் செய்வது, அதனுடைய குத்பா ஓதுவது ஆகியவற்றை விடச் சிறந்தது." என்று இமாம் நவவீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். ஆனால் ஜும்ஆவுக்கு இமாமத் செய்வது மற்றெல்லா இமாமத்களைவிடவும் சிறந்தது என்பது வெளிப்படையான விஷயமாகும்.

ஓரிடத்தில் சொல்லப்படும் பாங்கைக் கேட்டாலும் மற்றோரிடத்திலும் சொல்வது சுன்னத்து. எனினும், இஸ்லாமிய அடையாளத்தை வெளிப்படுத்துவதற்காக ஓரிடத்தில் மட்டும்தான் சப்தத்தை உயர்த்திச் சொல்லவேண்டும். மற்ற பாங்கை மெதுவாகச் சொல்வது போதுமானது.

முந்தின பாங்கினால் ஜமாஅத்து நடந்து முடிந்தபின், ஜமாஅத்தாகத் தொழுவதற்குரிய மனிதர்கள் வந்தால் மீண்டும் பாங்கு சொல்லி, சுன்னத்துத் தொழுது, பிறகு இகாமத்துச்சொல்லி ஜமாஅத்தாக ஃபர்ளைத் தொழுவது ஏற்றமாகும். ஆனால், ஜமாஅத்தாக தொழ நாட்டமுள்ளவர்கள் பாங்கு சொல்லாமல் முதலில் சுன்னத்தைத் தொழுதுவிட்டு, பிறகு பாங்கும், இகாமத்தும் சொல்லி ஜமாஅத்தாகத் தொழுகிறது நல்லதல்ல. ஏனெனில்,

مَا بَيْنَ كُلِّ اَذَانَيْنِ صَلٰوةٌ "பாங்கிற்கும் இகாமத்திற்குமிடையில் தொழுகை உண்டு" என்ற ஹதீஸின் படி பாங்கு சொல்லாமல் சுன்னத்துத் தொழுவது நல்லதல்ல.

"பாங்கு" بَانْگ என்ற வார்த்தை பார்ஸீ மொழியாகும். அதன் பொருள் அழைத்தல், சப்தமிடுதல் என்பதாகும்.

அரபியில் أَذَانْ அதான் என்று கூறப்படும். பாங்கு என்ற சொல்தான் தமிழில் வாங்கு என்று திரித்து கூறப்படுகிறது.

ஜமாஅத்தாகத் தொழுவது மார்க்கமாக்கப்பட்ட தராவீஹ் தொழுகை, ரமழானில் வித்ரு தொழுகை, இரு பெருநாள்களின் தொழுகைகள், கிரகணத்தொழுகைகள் ஆகிய சுன்னத்தான தொழுகை களை ஜமாஅத்தாக தொழும்போது இகாமத்துக்கு பதிலாக

اَلصَّلٰوةَ جَامِعَةً رَحِمَكُمُ اللّٰهُ

அஸ்ஸலாத்து ஜாமிஆ ரஹிமகுமுல்லாஹ் என்பதாகவோ அல்லது

اَلصَّلٰوةُ اَلصَّلٰوةُ

அஸ்ஸலாத்து அஸ்ஸலாத்து என்பதாகவோ அல்லது

هَلُمُّوْا اِلَى الصَّلٰوةِ

தொழுகையின் பக்கம் வாருங்கள் என்பதாகவோ ஒருவர் சப்தமிட்டுக் கூறவேண்டும். பாங்கிலும், இகாமத்திலும் சொல்வது போல் 'ஹய்ய அலஸ் ஸலாத்' என்று கூறுவது மக்ரூஹ் ஆகும்.

பல ஃபர்ளுகளைத் தொழுபவர்களும் பிரயாணத்தில் ஜம்உ செய்து தொழுகிறவர்களும் முந்திய ஃபர்ளுக்கு மட்டும் பாங்கு சொல்லி மற்ற தொழுகைகளுக்கெல்லாம் இகாமத்து மட்டும் சொல்லிக் கொள்ள வேண்டும். பெண்கள் இகாமத்து மட்டும் சொல்லிக் கொள்ளவேண்டும். ஆனால் பெண்கள் ஜமாஅத்தாகத் தொழுதால் அவர்களில் ஒருவர் மெதுவாக பாங்கு சொல்லிக்கொள்ளலாம். ஜமாஅத் அனைவரும் பெண்களாக இருந்து, இமாம் மட்டும் ஆணாக இருந்தால் அவருக்கும் பாங்கு சொல்வது சுன்னத்து.

நேரம் நெருக்கடியாக இருந்தால் பாங்கு, இகாமத்து இரண்டில் ஒன்றின் மீது சுருக்கிக்கொள்ளவேண்டியதிருந்தால் பாங்கை மட்டும் சொல்லிக்கொள்ளவேண்டும். நேரம் மிக நெருக்கடியாக இருந்தால் பாங்கையும் விட்டு விடலாம். பாங்கு சொன்னவரே இகாமத்து சொல்வதும் இமாமுக்கு வலப்பக்கமிருந்து அதை சொல்வதும் சிறப்பாகும்.

பாங்கு, இகாமத்து, இமாமத்து இம்மூன்றையும் ஒருவரே செய்வது ஏற்றத்திற்கு மாற்றம். மற்றவர் தகுதி இல்லாதவராகவோ, பெண்களாகவோ இருந்தால் அப்பொழுது மூன்றையும் ஒருவரே செய்யலாம்.

### பாங்கின் ஷர்த்துகள்

பாங்குடைய ஷர்த்துகள் பத்து. 1) முஸ்லிமாயிருத்தல், 2) விபரமறிதல், 3) வரிசைக்கிரமமாகச்சொல்லுதல் 4) தொடர்ச்சியாய்ச் சொல்லுதல், 5) அரபியில் சொல்லுதல், 6) ஜமாஅத்துக்காகச் சொல்லும் பாங்கை மக்கள் கேட்கும்படி சொல்வது 7) அதன் எழுத்துக்களையும் ஷத்துகளையும், இஃராபுகளையும் சரியாக உச்சரிப்பது 8)சுப்ஹுடைய முந்திய பாங்கு அல்லாத மற்ற எல்லா பாங்குகளையும் அதன் நேரம் வந்த பிறகு சொல்வது 9) சிற்றூர்களில் மக்கள் பாங்கைக் கேட்கவிரும்பினால், அவர்கள் கேட்குமளவிற்கு சப்தத்தை உயர்த்திச் சொல்வது. 10) ஒரு பாங்கை ஒன்றுக்கு மேற்பட்டோர் சேர்ந்தோ, மாறி மாறியோ சொல்லாமலிருப்பது.

பாங்குடைய வாக்கியங்கள் சுப்ஹில் பதினேழு மற்ற நேரங்களில் பதினைந்து. அல்லாஹு அக்பர்4, அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல்லாஹ் 2. அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ் 2, ஹய்ய அலஸ்ஸலாத் 2, ஹய்ய அலல் ஃபலாஹ் 2, சுப்ஹில் மட்டும் அஸ்ஸலாத்து கைருன் மினன் நவ்ம் 2. அல்லாஹு அக்பர் 2, லா இலாஹ இல்லல்லாஹ் 1, ஆக பதினேழு வாக்கியங்களாகும்.

முதலில் நான்கு தடவை அல்லாஹு அக்பர் சொல்லிய பின் உள் பாங்கு என்ற முறையில் தனக்குத்தானே கேட்கும் அளவுக்கு மெதுவாகப் பின்னால் சொல்லப்போகும் இரண்டு ஷஹாதத்தையும் இரண்டு இரண்டு தடவையாகச் சொல்லிக்கொண்டு பின் அந்த ஷஹாதத்துகளைச் சப்தமிட்டுச்சொல்லவேண்டும். (அது அஷ்ஹது அன்லா இலாஹ இல்லல்லாஹு என்று சப்தமிட்டுக் கூறுவதற்கு முன் அதையே மெதுவாக இரண்டு தடவையும் அஷ்ஹது அன்ன முஹம்மதர்ரஸூலுல்லாஹ் என்று மெதுவாக இரண்டு தடவையும், சொல்லிய பின் அஷ்ஹது அன்லா இலாஹவை சப்தமிட்டுச் சொல்வதாகும்) இந்த நான்கையும் சேர்த்து சுப்ஹில் 21 வாக்கியங்கள், மற்ற நேரங்களில் 19 வாக்கியங்கள். சுப்ஹுத் தொழுகையைக் களாச் செய்வதற்காகச் சொல்லும் பாங்கிலும் அஸ்ஸலாத்து கைருன் மினன் நவ்ம் என்பதை (தஃத்வீபு تَثْوِيْبُ வை) ச் சேர்த்தே சொல்லவேண்டும்.

## இகாமத்தின் வாக்கியங்கள்

இகாமத்துடைய வாக்கியங்கள் பதினொன்று. அதுவது: அல்லாஹு அக்பர் 2, அஷ்ஹது அன்லா இலாஹ இல்லல்லாஹ் 1, அஷ்ஹது அன்ன முஹம்மதர்ரசூலுல்லாஹ் 1, ஹய்ய அலஸ்ஸலாத் 1, ஹய்ய அலல் ஃபலாஹ் 1, கத்காமத்திஸ்ஸலாத் 2, அல்லாஹு அக்பர் 2, லாஇலாஹ இல்லல்லாஹ் 1, ஆக 11, ஹனஃபி மத்ஹபின்படி இது 17 வாக்கியங்கள் ஆகும்.

## பாங்கின் சுன்னத்துகள்

உளுவுடன் பள்ளியின் வலப்பக்கத்தில் உயரமான இடத்திலிருந்து இரண்டிரண்டு தக்பீரை ஒரு மூச்சிலும், மற்றவற்றை ஒவ்வொன்றாகவும், ஒவ்வொரு வாசகத்தின் கடைசியில் நிறுத்திச் சொல்வதும், சப்தமிட்டுச் சொல்வதற்காக இரு கலிமா விரல்களையும் இரு காதுகளினுள் நுழைத்து பொது பாங்கில் இயன்ற வரை சப்தமிட்டுச் சொல்வதும், அஷ்ஹதுவைச் சொல்லும்முன் இரண்டு அஷ்ஹது களையும் இரண்டிரண்டு தடவைவீதம் மெதுவாகச் சொல்லிக் கொள்வதும், கிப்லாவை முகத்தைக்கொண்டு முன்னோக்குவதும், ஓரிடத்தில் தரிபட்டு நிற்பதுவும், ஹய்ய அலஸ்ஸலாத் என்று கூறும்பொழுது ஒவ்வொரு தடவையிலும் வலப்புறமும், ஹய்ய அலல் ஃபலாஹ் என்று கூறும்பொழுது அவ்வாறே இடப்புறமும் முகத்தைத் திருப்புவதும் சுன்னத்தாகும். நெஞ்சைத் திருப்புதல் சுன்னத்தாகாது. இகாமத்திலும் இவ்வாறே முகத்தைத் திருப்பவும். ஆனால், இகாமத்தில் காதினுள் விரலை வைப்பது சுன்னத்தல்ல.

சுபுஹு பாங்கில் இரண்டு ஹய்ய அலவுக்குப்பின் அஸ்ஸலாத்து கைரும் மினன்நவ்ம் என்று இருதடவை கூறுவதும், இகாமத்தை ஜமாஅத்தினர் அனைவருக்கும் கேட்கும் படி சப்தமிட்டுக்கூறுவதும், அதன் சொற்களை பாங்கில் பாதி பாதியாக்கி சுருக்கிச்சொல்வதும், இரண்டு ஹய்ய அலவுக்குப்பின் கத்காமத்திஸ்ஸலாத் என்று இரண்டு தடவை சொல்வதும் சுன்னத்தாகும். இகாமத்துடைய ஷர்த்து, சுன்னத்து, முஸ்தஹப்பு ஆகியவற்றில் மிகுதமும் பாங்கைப்போன்றுதான்.

இகாமத்தை எல்லோரும் கேட்கும்படி சொல்வது சுன்னத்து. ஒருவரையேனும் கேட்க வைப்பது ஷர்த்து. இதற்கு மாற்றமாகச் செய்வது மக்ருஹ். இமாமிடம் அனுமதி பெற்று இகாமத்துச் சொல்வது சிறப்பாகும்.

இமாம் உட்கார்ந்து தொழவைப்பவராக இருந்தாலும், பாங்கு இகாமத்துச் சொல்லுகிறவர் நிற்கச் சக்தியுள்ளவராக இருந்தால், நின்று சொல்வதுதான் சுன்னத்து.

பாங்கு இகாமத்து சொல்கிறவருடைய முகத்தையும், குத்பா ஓதுகிறவருடைய முகத்தையும் பார்ப்பது அந்த நேரத்தில் சுன்னத்தாகும். அந்நிய பெண்கள் அவ்வாறு பார்ப்பது ஹராமாகும். பாங்கு, இகாமத்துச் சொல்வதற்கு முன் நபி (ஸல்) அவர்களின் மீது ஸலவாத்துச் சொல்வது சுன்னத்தாகும். பள்ளியின் வலப்பக்கத்தில் முஸ்லிம் அல்லாதவர்கள் குடியிருந்தால், அதற்கு எதிர்ப்பக்கம். இடப்புறம் பாங்கு சொல்வது முறையாகும்.

பாங்கு சொல்பவர் அழகிய குரலும் உயர்ந்த சப்தமும் உள்ளவராகவும், நேரத்தை அறிந்தவராகவும், பேணுதல் உடையவராகவும், வயது வந்தவராகவும் இருப்பது சுன்னத்தாகும். தொழுகையுடைய பாங்கல்லாத வேறு பாங்கை உளூவில்லாமல் சொல்லலாம். தொழுகைக்குரிய பாங்கு உளூவில்லாமல் சொல்வது மக்ருஹ். அவ்வாறே ஜுனுபாளி பாங்கு சொல்வதும் மக்ருஹ்; இகாமத்து சொல்வது கொடிய மக்ருஹ். பாங்கு சொல்லிக்கொண்டு இருக்கும்போது உளூ முறிந்து விட்டால் மீதியை அப்படியே சொல்லிமுடிப்பது சுன்னத்தாகும். பாங்கு சொன்ன இடத்தை விட்டு நீங்கி வேறு இடத்தில் இகாமத்துச் சொல்வது முஸ்தஹப்பு.

பாங்கு, இகாமத்து சொல்லும்போது நடக்காமல் இருப்பது சுன்னத்து. நடந்து கொண்டே சொன்னாலும் கூடும்.

பாவம் செய்கிறவன், பருவ வயதை அடையாத ஆனால், விபரம் தெரிந்த சிறுவன், நேரத்தைத் தெரிவிப்பதற்குரிய ஆள் இல்லாத போது கண் தெரியாதவன் ஆகியோர் பாங்கு சொல்வது மக்ருஹ். இத்தகையவர் ஜமாஅத்துக்காக இகாமத்துச்சொல்வதும் மக்ருஹ் ஆகும்.

ஸய்யித் ஹஸன் இப்னு கலீல் அல் ஹுஸைனீ (ரஹ்) அவர்களுக்குரிய "அர்ரஹீமிய்யா" என்ற நூலில் எழுதப்பட்டுள்ளதாவது: ஹிஜ்ரி 961,ஆம் ஆண்டு நஜ்முத்தீன் அத்தப்தீ (ரஹ்) அவர்களுடைய கட்டளையைக்கொண்டு சுல்தான் ஹாஜி இப்னு அஷ்ரஃப் என்பவர் எல்லா பாங்குகளுக்குப் பின்னும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மீது சலவாத்துச் சொல்லும் படியாகக் கட்டளையிட்டார். இவ்வாறே அதற்கு முன் சுல்தான் ஸலாஹுத்தீன்

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

அய்யூபி உடைய காலத்தில் எகிப்திலும் சிரியாவிலும் ஃபஜ்ருடைய பாங்குக்கு முன் சலவாத்துச் சொல்லுமாறு கட்டளையிட்டார். ஹிஜ்ரி 760-ல் மக்காவிலும் மதீனாவிலும் மற்றும் பல நகரங்களிலும் மினாராக்களிலும் மற்ற இடங்களிலும் சுப்ஹிலும், சில சமயங்களில் மற்ற நேரங்களிலும் சலவாத்து சொல்லப் பட்டு வந்தது அதனை அழகிய வாசகங்களாலும் இனிமையான குரலாலும் சொல்லி வந்தனர். அதனால் பல விதமான பலன்களும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது அன்பும் ஆசையும் அதிமாகிவந்தன. எனவே அதனை அனைவரும் விரும்பினர்.

பாங்கும் இகாமத்தும் சொல்வதற்கு தொடக்கை விட்டு நீங்கி இருப்பதும் மானத்தை (அவ்ரத்தை) மறைப்பதும் ஷர்த்தில்லை என்பதால் ஒருவர் பாங்கு சொல்லும் போது அவ்ரத் வெளியாகி விட்டாலும் அல்லது சிறு தொடக்கு பெருந்தொடக்கு ஏற்பட்டு விட்டாலும் அப்படியே மீதியை நிறைவேற்றுவது முஸ்தஹப்பு.

பாங்கு, இகாமத்துடைய வார்த்தைகளில் மனமறிந்து ஓர் எழுத்தையேனும் கூட்டுவதோ குறைப்பதோ ஹராமாகும். அஷ்ஹது வஅன்ன, அஷ்ஹதுன்ன என்பவைபோல். ஆனால் ஒரு எழுத்தையாவது அதிகப்படுத்தினாலும் குஃப்ரை உண்டாக்கிவிடும் உதாரணமாக அல்லாஹு அக்பர் என்பதை அல்லாஹு அக்பார் என்று கூறுவதுபோல். அதன் பொருள் மேளங்கள் என்பதாகும் மன முரண்டாக அதனைக் கூறினால் காஃபிராகிடுவான்.

ஆனால் ஒருவருக்கு இயற்கையாகவே எழுத்தின் உச்சரிப்பு திருத்தமாக வரவில்லையானால் குற்றமில்லை. பிலால் (ரலி) அவர்கள் அஷ்ஹது அன்ன முஹன்மதர் ரசூலுல்லாஹ் என்றே சொல்லி வந்தார்கள். நபி (ஸல்) அவர்களும், ஸஹாபாக்களும் அதனைத்திருத்தம் செய்து கொடுக்க முயன்றும் அவர்களுக்கு அது வரவே இல்லை. ஆகையால் அதனை நபியவர்கள் பொருந்திக்கொண்டார்கள். மேலும் பிலால் (ரலி) அவர்களுடைய மகத்துவம் மிகப்பெரியதாகும். கியாமத்து நாளில் லிவாவுல் ஹம்து என்னும் கொடி பிலால் (ரலி) அவர்களுடைய கரத்தினால் பிடிக்கப்பட்டிருக்கும் என்று கூறப்பட்டுள்ளது.

### பாங்கு சொல்வது சுன்னத்தாக்கப்பட்ட இடங்கள்

பாங்கு சொல்வது சுன்னத்தாக்கப்படும் இடங்கள் பின் வருமாறு: போதை ஏற்பட்டு கீழே விழுந்தவன், தீராத கோபமுள்ளவன், நீங்காத கவலையுள்ளவன், சண்டித்தனம் செய்யும் மிருகங்கள் ஆகியோருடைய காதுகளிலும், ஷைத்தான், ஜின், பிசாசுகள் ஆகியவை விஷமம் செய்யும் இடங்களிலும், ஹதீஸ், உபதேசம் செய்ய ஆரம்பிக்கின்ற இடங்களிலும், பிரயாணம் போகிறவரை அனுப்பி வைத்த இடத்திலும் பாங்கும் இகாமத்தும் சொல்வது சுன்னத்தாக்கப்படும். பிறந்த குழந்தையின் வலது காதில் பாங்கும், இடதுகாதில் இகாமத்தும் சொல்வது சுன்னத்தாகும்.

காலரா, பிளேக், அம்மை, காய்ச்சல் போன்ற பொது நோய்கள் ஊரில் பரவலாக ஏற்பட்ட நேரத்திலும், கடினமான காற்று, வெள்ளம், மழை போன்றவை ஏற்பட்ட நேரத்திலும் பாங்கு சொல்வது ஆகுமாக்கப்பட்டுள்ளது. மய்யித்தை கப்ரில்

வைக்கும்போது பாங்கும் இகாமத்தும் சொல்வது சுன்னத்து என்பது பலவீனமான அறிவிப்பாகும்.

சுப்ஹுக்கு மட்டும் நடுநிசிக்குப் பிறகு ஒரு பாங்கும், பிறகு மெய் வெள்ளை தோன்றியவுடன் மற்றொரு பாங்கும் மார்க்கமாக்கப் பட்டுள்ளது. நடுநிசிக்குப் பிறகு ஒரு பாங்கு சொல்லலாம் என்பதற்கு காரணமாகிறது: சுப்ஹுடைய நேரம் வரும்போது மக்களில் பலர் தூக்கத்தில் ஆழ்ந்தவராகவும், பெருந்தொடக்குடைய வராகவும் இருக்கலாம் என்ற காரணத்தினால், ஜமாஅத்திற்கு ஆரம்ப நேரத்தில் சேர்ந்துகொள்வதற்குத் தோதாக அவர்களை ஆயத்தப்படுத்து வதற்காகவும், நோன்பு காலங்களில் சஹர் நேரத்தில் தூக்கத்தை விட்டு காலாகாலத்தில் விழித்து சஹருக்குரிய உணவை தயார் செய்வதற்காகவும், அந்த உணவை புசிப்பதற்காகவும் மக்களுக்கு முன் அறிவிப்புச் செய்வதற்காக இந்த முதல் பாங்கு ஆகுமாக்கப்பட்டுள்ளது.

இதற்கு, "பிலால் இரவில் (நடுநிசிக்குப்பிறகு) சொல்லும் முதல் பாங்கிலிருந்து (சுப்ஹுடைய நேரம் வந்தவுடன்) இப்னு உம்மு மக்தூம் சொல்லும் (இரண்டாவது) பாங்குவரை நீங்கள் (சஹருக்காக) உணவை புசியுங்கள். நீரை அருந்துங்கள்." என்ற ஹதீஸ் ஆதாரமாக உள்ளது.

இவ்வாறு நடுநிசிக்குப் பிறகு பாங்கு சொல்லும் பழக்கம் நம் பகுதிகளில் இல்லையென்றாலும் வேறு பல பகுதிகளில் பழக்கத்தில் இருக்கிறது. குறிப்பாக மக்காவில் ஹரம்ஷரீஃபிலும், மதீனாவில் மஸ்ஜிதுன்னபவியிலும் சுப்ஹுக்கு இரண்டு பாங்குகள் சொல்லும் பழக்கம் இருந்து வருகிறது. அவ்வாறே ஜும்ஆவில் ஜவால் ஆனபின் ஒரு பாங்கும், பிறகு கதீப் மிம்பரில் ஏறி ஜமாஅத்தை நோக்கி ஸலாம் கூறிய பின் குத்பா ஓதுவதற்கு முன் ஒரு பாங்கும் விதியாக்கப்பட்டுள்ளது. ஜும்ஆவில் இரண்டாம் பாங்கு ஃபர்லு என்பதாகக் கூறப்பட்டுள்ள போதிலும் அதற்குரிய ஆதாரம் காணப்படவில்லை. எனினும், இது பலமான சுன்னத்தாகவும், முந்தின பாங்கை விடச்சிறந்ததாகவும் இருக்கும். இதனைப் பள்ளிக்கு வந்திருப்பவர்களுக்கு மட்டும் கேட்கச் செய்வது போதுமானது.

பாங்கு சொல்லும் போது "அல்லாஹு அக்பர்", "அல்லாஹு அக்பர்" என்பதில் முந்தின அக்பர் உடைய ராவுக்கு சுகூன் செய்வது சுன்னத்து. அவ்வாறின்றி சேர்த்துச் சொல்ல வேண்டுமென்றால் முந்திய ராவுக்கு மட்டும் பேஷ் கொடுத்து அல்லது ஜபர் கொடுத்து உச்சரிக்கலாம். உதாரணம்:

اَللّٰهُ اَكْبَرْ اَللّٰهُ اَكْبَرْ    اَللّٰهُ اَكْبَرُ اَللّٰهُ اَكْبَرْ    اَللّٰهُ اَكْبَرَ اَللّٰهُ اَكْبَرْ

### பாங்கிலும் இகாமத்திலும் மக்ரூஹ்கள்

பாங்கிலும் இகாமத்திலும் இதுவரை சொன்னதைத் தவிர மற்ற வார்த்தைகளை அதிகமாக நீட்டுவதும், இராகம் போடுவதும், அவசியத்தேவையின்றி இடையில் பேசுவதும், வீண் வேடிக்கை பார்ப்பதும், நிற்க சக்தி பெற்றவன் உட்கார்ந்து சொல்வதும் மக்ரூஹ் ஆகும்.

பாங்கு இகாமத் சொல்லும் பொழுது தும்மல் வந்தால் மனதுக்குள் அல்ஹம்துலில்லாஹ் என்று சொல்லிக் கொண்டு முன் விட்டதில் இருந்து தொடருவான். பிரயாணம் செல்கிறவன் பாங்கு சொல்லும்போது வாகனத்தில் ஏறுவது மக்ருஹ் அல்ல.

## பாங்கை முறிப்பவை

பாங்கு சொல்லும் போது முர்த்தத்தாகி (மதம்) மாறி விடுவதும், மயக்கம், போதை, பைத்தியம் ஆகியவை ஏற்படுவதும், நீண்ட நேரம் மௌனமாக இருப்பதும், நீண்ட நேரம் பேசுவதும் பாங்கை முறித்துவிடும். நீண்ட நேரம் என்பது முதல் வாசகத்திற்கும் இரண்டாவது வாசகத்திற்கு மிடையில் தொடர்ச்சி ஏற்படவில்லை என்று வழக்கத்தில் கூறப்படும் அளவாகும். மேலும், பாங்குடைய வாசகங்களிலிருந்து ஏதேனும் ஒன்றை விடுவதும் பாங்கை முறிக்கும். ஆனால் ஒரு வார்த்தையை விட்டுவிட்டவன் அதனைத் திரும்பச் சொல்லி மீதியுள்ளதையும் சொல்லி முடித்தால் கூடிவிடும்.

## பாங்குக்கும் இகாமத்துக்கும் பதில் கூறுவது

பாங்குக்கும் இகாமத்துக்கும் பதில் கூறுவது சுன்னத்து அய்னாகும். அதாவது பாங்கு இகாமத்தைக் கேட்கும் ஒவ்வொருவரும் பதில் சொல்ல வேண்டும். ஒவ்வொருவரும் பதில் சொல்ல வேண்டும் என்பதற்கு ஆதாரமாகிறது:

يَاقَوْمَنَآ اَجِيْبُوْا دَاعِيَ اللّٰهِ وَاٰمِنُوْا بِهٖ يَغْفِرْ لَكُمْ مِّنْ ذُنُوْبِكُمْ
وَيُجِرْكُمْ مِّنْ عَذَابٍ اَلِيْمٍ ۝ وَمَنْ لَّا يُجِبْ دَاعِيَ اللّٰهِ فَلَيْسَ
بِمُعْجِزٍ فِى الْاَرْضِ وَلَيْسَ لَهٗ مِنْ دُوْنِهٖٓ اَوْلِيَآءُ ۚ اُولٰٓئِكَ
فِيْ ضَلٰلٍ مُّبِيْنٍ ۝ (46:31)

"எங்களுடைய இனத்தார்களே! அல்லாஹ்வின் அளவில் அழைப்பவருக்கு பதில் கூறி அவரை விசுவாசியுங்கள். உங்களுடைய பாவங்களை உங்களுக்கு (அல்லாஹ்) மன்னித்துவிடுவான். துன்புறுத்தும் வேதனையிலிருந்தும் உங்களைக் காத்துக்கொள்வான். எவன் அல்லாஹ் அளவில் அழைப்பவருக்கு பதில் கூறவில்லையோ (அவனை அல்லாஹ் தண்டிப்பான். தண்டனை யிலிருந்து தப்ப) அவன் பூமியில் (எங்கு ஓடிய போதிலும் அல்லாஹ்வை) தோற்கடிக்கமுடியாது. (அல்லாஹ்வாகிய) அவனை யன்றி அவனைப் பாதுகாப்போர் கிடையாது. இத்தகையோர் பகிரங்கமான வழிகேட்டில்தான் இருப்பார்கள்"(என்று ஜின்கள் சொன்னார்கள்) என்ற இறைவசனங்களாகும்.

உளுச்செய்து கொண்டிருந்தாலும், குர்ஆன் ஓதிக்கொண்டிருந்தாலும், அல்லது ஜ"னுபாளியாக இருந்தாலும், ஹைளு, நிஃபாஸ் உடையவளாக இருந்தாலும் பாங்கு சப்தம் கேட்டவுடன் பின் வருமாறு கூறிக்கொள்ளவேண்டும்:-

مَرْحَبًا بِالصَّلٰوةِ اَهْلًا وَّسَهْلًا . وَمَرْحَبًا بِالْقَائِلِ عَدْلًا

பாங்கில் ஏதேனும் ஒரு வார்த்தையின் கடைசி எழுத்தைக் கேட்டு விளங்கினாலும் கேட்டது போல் பதில் சொல்வதும், சில வார்த்தைகளைக் கேட்டால் கேட்டதையும் கேட்காததையும் சேர்த்தே பதில் சொல்வதும் சுன்னத்தாகும். மெதுவாகச் சொல்லப்படுகின்ற உள்பாங்கிற்கும் பதில் சொல்வது சுன்னத்தாகும்.

ஹய்ய அலஸ்ஸலாத், ஹய்ய அலல் ஃபலாஹ் இரண்டிலும் லாஹவ்ல வலா குவ்வத்த இல்லாபில்லாஹில் அலிய்யில் அளீம் என்றும், சுப்ஹில் அஸ்ஸலாத்து கைருன் மினன் நவ்ம் இரண்டிலும்:

صَدَقْتَ وَبَرِرْتَ وَبِالْحَقِّ نَطَقْتَ என்றும்,

சுத்காமத்திஸ்ஸலாத் இரு தடவையிலும்:

وَجَعَلَنِيْ مِنْ صَالِحِيْ اَهْلِهَا

என்றும் கூறவேண்டும். சாப்பிடுகிறவன் சாப்பிடுவதை நிறுத்தாமலேயே பதில் சொல்லலாம்.

ஒரே நேரத்தில் பல பாங்குகளைக் கேட்டால் ஒரு பதில் போதுமாகும். முன் பின்னாகக் கேட்டால் வரிசைக் கிரமமாய் பதில் சொல்லவேண்டும்.

உடலுறவு கொள்கிறவன், மலம் கழிப்பவன், நஜீஸில் ஈடுபட்டிருப்பவன் ஆகியோர் பாங்கிற்கு பதில் சொல்வதை விட்டு விடுவார்கள். ஆனால் மேற்படி செயல்களை விட்டும் சிறிது நேரம் நீங்கினாலும் பாங்கிற்கு முழுமையாக பதில் சொல்வது சுன்னத்தாகும்.

அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ் என்று சொல்லப்படும்பொழுது அதே போன்று பதில் சொல்லவும்.(பின் இரு கைப் பெரு விரல்களையும் முத்தமிட்டு, இரு கண்களிலும் விரல்களைத் தடவிக்கொண்டு:

مَرْحَبًا بِحَبِيْبِيْ قُرَّةِ عَيْنِيْ رَسُوْلِ اللهِ என்று சொல்வது, அல்லது

مَرْحَبًا بِكَ وَقَرَّتْ عَيْنِيْ بِكَ يَارَسُوْلَ اللهِ என்று சொல்வது மிகுந்த பலன்கள்

உள்ளதாகும் என்று அல்லாமா பூனி (ரஹ்) அவர்களும் மற்றும் சில மஷாயிகுகளும் கூறியுள்ளார்கள்.

ஹய்ய அலல் ஃபலாஹ் என்பதற்கு லாஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹில் அலிய்யில் அளீம் என்று கூறிய பின் اَللّٰهُمَّ اجْعَلْنَا مِنَ الْمُفْلِحِيْنَ

என்று கூறுவதும், நஸ்ஸாயீ (ரஹ்) அவர்களின் சொற்படி சுப்ஹு பாங்கில் "வபில் ஹக்கி நதக்த" என்ற பதிலுக்குப்பின் வநஸஹ்த்த என்று கூறுவதும் சிறப்பாகும்.

பாங்கு, இகாமத்துடைய துஆவுக்குப் பின் ஷஹாதத் கலிமாவை ஓதி பிறகு பின்வரும் துஆவை ஓதவும்:

رَضِيتُ بِاللّٰهِ رَبًّا وَّبِالْإِسْلَامِ دِيْنًا وَّبِمُحَمَّدٍ صَلَّى اللّٰهُ
عَلَيْهِ وَسَلَّمَ رَسُوْلًا وَّبِالْقُرْاٰنِ إِمَامًا وَّبِالْكَعْبَةِ قِبْلَةً.
اَللّٰهُمَّ اكْتُبْ شَهَادَتِيْ هٰذِهٖ فِيْ عِلِّيِّيْنَ. وَاَشْهِدْ عَلَيْهَا
مَلٰٓئِكَتَكَ الْمُقَرَّبِيْنَ. وَاَنْبِيَآئَكَ الْمُرْسَلِيْنَ. وَعِبَادَكَ
الصَّالِحِيْنَ. وَاخْتِمْ بِهَا اٰمِيْنَ. وَاجْعَلْ لِّيْ عِنْدَكَ عَهْدًا
تُوَفِّيْنِيْهِ يَوْمَ الْقِيَامَةِ إِنَّكَ لَا تُخْلِفُ الْمِيْعَادَ

"அல்லாஹ்வை ரப்பு ஆகவும், இஸ்லாத்தை தீன் ஆகவும், முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை ரசூல் என்பதாகவும், குர்ஆனை இமாமாகவும், கஃஅபாவைக் கிப்லாவாகவும் நான் பொருந்திக்கொண்டேன். யாஅல்லாஹ்! என்னுடைய இந்தச் சாட்சியத்தை இல்லிய்யீன் எனும் நல்லவர்களின் பெயர்கள் பதிவாகி இருக்கும் அந்த உயர்வான புத்தகத்தில் எழுதிடுவாயாக. இதன் மீது உன்னுடைய நெருக்கமான மலக்குகளையும், முர்ஸலான உன்னுடைய நபிமார்களையும், உன்னுடைய நல்லடியார்களையும் நான் சாட்சியாக்கி வைக்கிறேன். இந்த எனது சாட்சியத்தை ஏற்றுக்கொள்வதின் மூலம் இந்த துஆக்களின் மீது ஆமீன் என்ற சொல்லுடன் நான் முடிக்கின்றேன். உன்னிடத்தில் நின்றும் எனக்கொரு வாக்குறுதியைத் தந்திடுவாயாக! அதனை கியாமத்து நாளில் நீ நிறைவேற்றித் தந்திடவேண்டும். நிச்சயமாக நீ வாக்கிற்கு மாறு செய்ய மாட்டாய்."

இவ்வாறு ஒருவர் ஓதி வந்தால் அர்ஷிலிருந்து ஓர் உரிமைச்சீட்டு அவருக்கு வழங்கப்படும்; அதில் அவர் நரகத்திலிருந்து பாதுகாக்கப்பட்டார் என்று எழுதப்பட்டிருக்கும். இதனை இமாம் பைஹகீ (ரஹ்) மற்றும் பலரின் மூலம் அறிவிக்கப்பட்டுள்ளதாக இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.

தும்மி, அல் ஹம்துலில்லாஹ் என்று சொன்னவருக்கு பாங்கு சொல்லும் போதும் பதில் சொல்வது சுன்னத்தாகும். எனினும், பாங்கு சொல்லி முடித்தபின் பதில் சொல்வது சுன்னத்தாகும். பாங்கு சொல்பவர் தும்மினால் தன் தும்மலுக்கு அவர் மெதுவாக அல்ஹம்து சொல்லிக் கொள்ளுதல் சுன்னத்தாகும்.

தொழுது கொண்டிருப்பவன் பாங்குக்கு பதில் சொல்லுதல் சுன்னத்து அல்ல, மேலும் ஹய்ய அலஸ்ஸலாத், ஹய்ய அலல்ஃபலாஹ் என்று பதில் சொன்னாலும், சுபுஹுவில் சதக்த வபரிர்த்த வபில் ஹக்கி நதக்த என்றாலும் தொழுகை முறிந்துவிடும். இந்த பதிலில் மனிதர்களுடன் உரையாடுவது போன்ற விஷயம் இருப்பதால் தொழுகையில் இது கூடாது.

நடந்து கொண்டிருப்பவனும் வாகனத்தில் செல்கிறவனும் ஓரிடத்தில் நின்று பதில் கூறுவதும், நிற்கிறவனும் படுத்திருக்கிறவனும் உட்கார்ந்து பதில் கூறுவதும் முஸ்தஹப்பாகும். இவ்வாறு செய்வதில் அல்லாஹ்வின் அழைப்பாளரை கண்ணியப்படுத்துவதும் இறைவனுக்கு வழிபடுதலை வெளிப்படுத்துவதும் அமைந்திருக்கிறது.

பாங்கு, இகாமத்து சொல்கிறவர் அவற்றின் ஆரம்பத்திலும் கடைசியிலும் சலவாத்துச்சொல்வதும், கேட்பவர் பாங்கின் கடைசியில் சலவாத்துச்சொல்வதும் சுன்னத்தாகும்.

பாங்கு சொன்னவரும் கேட்டவரும் பின் வரும் துஆவை ஓதவேண்டும்.

اَللّٰهُمَّ صَلِّ وَسَلِّمْ وَبَارِكْ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّاٰلِهٖ وَصَحْبِهٖ
اَللّٰهُمَّ رَبَّ هٰذِهِ الدَّعْوَةِ التَّامَّةِ وَالصَّلٰوةِ الْقَآئِمَةِ اٰتِ
سَيِّدَنَا مُحَمَّدَنِ الْوَسِيْلَةَ وَالْفَضِيْلَةَ وَالشَّرَفَ وَالدَّرَجَةَ
الرَّفِيْعَةَ الْعَالِيَةَ الشَّرِيْفَةَ وَابْعَثْهُ مَقَامًا مَّحْمُوْدَنِ الَّذِيْ
وَعَدْتَّهٗ وَارْزُقْنَا شَفَاعَتَهٗ وَاَوْرِدْنَا حَوْضَهٗ يَوْمَ الْقِيٰمَةِ
اِنَّكَ لَا تُخْلِفُ الْمِيْعَادَ ۔ اِنَّ اللّٰهَ وَمَلٰٓئِكَتَهٗ يُصَلُّوْنَ عَلَى
النَّبِيِّ يٰٓاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا صَلُّوْا عَلَيْهِ وَسَلِّمُوْا تَسْلِيْمًا
اَللّٰهُمَّ صَلِّ وَسَلِّمْ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّاٰلِهٖ وَصَحْبِهٖ
اَجْمَعِيْنَ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ ۔

இந்த துஆவிற்குப்பின் மீண்டும் சலவாத்துக்கூறி, பிறகு:-

اَللّٰهُمَّ رَبَّ هٰذِهِ الدَّعْوَةِ الْقَائِمَةِ وَالصَّلٰوةِ النَّافِعَةِ
صَلِّ عَلٰى مُحَمَّدٍ وَارْضَ عَنَّا رِضًا لَّا سَخَطَ بَعْدَهُ.

என்று ஓதவேண்டுமென்றும், இன்னும்;

اَللّٰهُمَّ رَبَّ هٰذِهِ الدَّعْوَةِ التَّامَّةِ الْمُسْتَجَابِ لَهَا
دَعْوَةُ الْحَقِّ وَكَلِمَةُ التَّقْوٰى اَحْيِنَا عَلَيْهَا وَاَمِتْنَا
عَلَيْهَا وَاجْعَلْنَا مِنْ خِيَارِ اَهْلِهَا مَحْيَانَا وَمَمَاتَنَا

என்று ஓத வேண்டுமென்றும் 'ரஹீமிய்யா' என்னும் நூலில் எழுதப்பட்டுள்ளது.

துஆ ஏற்கப்படுகின்ற பல இடங்களில் பாங்கு சொல்லிய பின் கேட்கப்படும் துஆவும் சேர்க்கப்பட்டுள்ளது.

பாங்கு சொல்கின்ற சத்தத்தைக் கேட்கின்ற மிருகங்கள், பறவைகள், ஊர்வினங்கள் அனைத்தும் அவனுக்குப்பிழை பொறுக்கத் தேடுகின்றன என்பதாகவும், யானை, புலி, சிங்கம், கரடி, பாம்பு, தேள் போன்ற பிராணிகளும் அவனுக்கு எவ்வித இடையூறும் தீங்கும் செய்யாது என்றும் கூறப்பட்டுள்ளது. ஆனால், அவனுடைய கொள்கையும், அமலும் சரியானதாக இருக்கவேண்டும்.

மஃரிபில் பாங்கு சொன்ன பிறகு முன் சொன்ன துஆவுடன் பின் வரும் துஆவையும் ஓதிக்கொள்ளவேண்டும்:

اَللّٰهُمَّ هٰذَا اِقْبَالُ لَيْلِكَ وَاِدْبَارُ نَهَارِكَ وَاَصْوَاتُ دُعَاتِكَ فَاغْفِرْ لِيْ

"யா அல்லாஹ்! இது உன்னுடைய இரவு முன்னோக்குதலும், உன்னுடைய பகல் பின்னோக்கிச் செல்லுதலும், உன்னுடைய அழைப்பாளர்களின் சப்தங்களுமாகும். எனவே, என்னை நீ மன்னிப்பாயாக! "

இவ்வாறே சுப்ஹுடைய பாங்கிற்குப் பின்:

اَللّٰهُمَّ هٰذَا اِقْبَالُ نَهَارِكَ وَاِدْبَارُ لَيْلِكَ وَاَصْوَاتُ دُعَاتِكَ فَاغْفِرْ لِيْ

என்று ஓதிக்கொள்ளவேண்டும்.

பாங்கிற்கும் இகாமத்திற்குமிடையே ஆயத்துல் குர்ஸியை வழக்கமாக ஓதிவருவது முஸ்தஹப்பு. பாங்குடைய கடைசியில் லா இலாஹ இல்லல்லாஹ் என்று சொல்லிய பின் முஹம்மதுர் ரசூலுல்லாஹ் என்று சொல்வதில் சுன்னத்து இல்லை.

பாங்கு சொன்ன இடத்தை விடும் இகாமத்துச் சொல்வதற்கு வேறு இடத்திற்குச் செல்வது சுன்னத்தாகும். இகாமத்தை நடையில் சொல்லாமல் ஒரு இடத்தில் நின்று சொல்வது சுன்னத்து.

ஹனஃபி மத்ஹபைச் சேர்ந்தவர் இகாமத்தில் வார்த்தைகளை இரண்டிரண்டாகச் சொன்னால் பதிலும் அவ்விதமே இரண்டி ரண்டாகச் சொல்வது சுன்னத்து.

பாங்கு இகாமத்து சொல்வதற்கு ஒருவர் நியமிக்கப்பட்டிருந்தால் அவருடைய ஒப்புதலின்றி மற்றவர் சொல்வது மக்ரூஹ்.

இரண்டாம் ஜமாஅத்து நடைபெற்றால் அதற்குச் சப்தமிட்டு பாங்கு சொல்வது அவசியமில்லாததால் எவரும் சொல்லலாம். சுபுஹு அல்லாத மற்ற நேரங்களில் ஒரு தொழுகைக்காக ஒரு இடத்தில் இரண்டு பாங்குகள் சொல்வது மக்ரூஹ். ஏனெனில் முந்திய பாங்கைக் கேட்டுத் தொழுதவர் இரண்டாவது பாங்கைக் கேட்டால் நேரம் வரும்முன் நாம் தொழுது விட்டோமோ என்ற சந்தேகங்கொள்ள வேண்டியவர்களாக ஆகிவிடுவார்கள்.

பள்ளியில் முஅத்தினை நியமிப்பது சுன்னத்தாகும். முஅத்தினுக்கும், பள்ளியைச் சுத்தம் செய்கிறவருக்கும், விளக்கேற்றி வைப்பவருக்கும் பைத்துல்மால் நிதியிலிருந்து சம்பளம் கொடுக்க வேண்டும்.. பைத்துல்மாலில் நிதி இல்லாவிட்டாலும் அல்லது அங்கு பைத்துல் மாலே இல்லாவிட்டாலும் அந்த மஹல்லாவில் இருக்கும் வசதியுள்ள முஸ்லிமானவர்களின் மீது கடமையாகும்.

ஒரு பள்ளியில் இரண்டு முஅத்தின்களை நியமிப்பது சுன்னத்தென்று 'பாஜூரி' என்ற நூலில் கூறப்பட்டுள்ளது. பள்ளியைப் பாதுகாப்பதற்குரிய முறையில் பள்ளியில் ஆட்களை நியமிக்க வில்லையானால் அதனைப் பாழாக்கிய குற்றத்திற்குரிய வராவார்கள்.

## தொழுகையின் வர்ணிப்புகள்

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நபிப்பட்டம் கிடைத்து பத்து ஆண்டுகளும் மூன்று மாதங்களும் சென்ற பின் ரஜப் மாதம் 27 ஆம் நாள் சனிக்கிழமை (மிஃராஜ்) இரவன்று தொழுகை ஃபர்லாக்கப்பட்டது. ஆனால் தொழும் முறைகளும் மற்றுமுள்ள சட்டங்களும் தெரியாததால் அன்று சுப்ஹு விதியாகவில்லை. பிறகு ஜிப்ரீல் (அலை) அவர்கள் மனித உருவில் வந்து கற்றுக் கொடுத்து அன்று ளுஹரிலிருந்து தொழ ஆரம்பித்தார்கள்.

தொழுகையாகிறது அல்லாஹ் என்ற வார்த்தையின் அமைப்பில் உண்டாக்கப் பட்டுள்ளதென்றும் அஹ்மது என்ற வார்த்தையின் அமைப்பில் உண்டாக்கப் பட்டுள்ளது என்றும் கூறப்பட்டுள்ளது. நிலை அலிஃபைப்போல்; ருகூஃ முதல் லாமைப்போல்; சுஜூது இரண்டாம் லாமைப்போல்; இருப்பு ஹேயைப்போல். அலிஃபைப்போல் நிலை; ஹேயைப்போல் ருகூஃ மீமைப் போல் சுஜூது; தாலைப்போல் இருப்பு, ஆக இரண்டு வடிவங்களிலும் அமைக்கப்பட்டுள்ளது.

குர்தீ(ரஹ்) அவர்கள், தொழுகை மனிதனுடைய படைப்புக்கு ஒப்பாக இருக்கிறதென்று கூறியுள்ளார்கள். தொழுகையின் ஃபர்லு தலையைப் போன்றும், அதன் ஷர்த்து ஹயாத்தைப் போன்றும், அப்ஆள் சுன்னத்து உறுப்புகளைப் போன்றும், அலங்கார சுன்னத்து முடிகளைப் போன்றும் இருக்கின்றன என்று கூறியுள்ளார்கள்.

அலிஃப் பே உடைய எழுத்துக்களில் கடைசியில் ஹம்ஜா வரும் எழுத்துக்களை ஹஃப்ஸ் حَفْصٌ (ரஹ்) அவர்களுடைய கிரா அத்தின்படி يَآءٌ - رَآءٌ - هَآءٌ என்று கூறப்படும். அபூ அம்ர் (ரஹ்) அவர்களுடைய கிரா அத்தின்படி ஹே, ரே, பே என்று சாய்த்து உச்சரிக்கப்படும். இவ்வாறே மற்ற எழுத்துக்களையும் கவனிக்கவேண்டும்.

## தொழுகையின் ஃபர்லுகள்

ஃபர்லான தொழுகையின் (அது நேர்ச்சையான தொழுகையாயினும் அல்லது ஒருதடவை தொழுத பின் மீண்டும் அதே ஃபர்ளைத் தொழுவதானாலும்) ஃபர்லுகள் பத்தொன்பதாகும். முதலாவது, நிய்யத்து. இதில் ஆறு நிபந்தனைகள் உள்ளன. 1) தொழுகையென்னும் செயலை நாடுதல் 2) எந்த நேரத்தொழுகை என்பதைக் குறித்தல். 3) சிறு குழந்தையாக இருப்பினும் ஃபர்லான தொழுகையை ஃபர்லென்று குறித்தல் 4) அது போன்ற தொழுகை களா செய்ய வேண்டியதிருந்தால் அது 'அதா'வா, அல்லது 'களா' வா என்பதைக் குறிப்பிடுதல். 5) இந்த எண்ணங்களை விபரமாய் மனதில் தரிபடுத்துதல் 6) முதல் தக்பீருடன் நிய்யத்தைச் சேர்த்தல். நிய்யத்தை நிரப்பமாக (முறையாக)ச் செய்ததில் சந்தேகம் ஏற்பட்டு, அல்லது நிய்யத்துச் செய்தது லுஹரா, அஸரா என்பதில் சந்தேகம் ஏற்பட்டு அந்த சந்தேகம் நீண்ட நேரம் சென்ற பிறகு நினைவு வந்தாலும், அல்லது சொல்லால் உள்ள ஒரு ஃபர்லை (சூரத்துல் ஃபாத்திஹா ஓதுவதை) நிறைவேற்றிய பிறகு நினைவு வந்தாலும் தொழுகை முறிந்து விடும். ஆனால் நீண்ட நேரம் செல்லாமலும் அல்லது மேற் குறிப்பிட்ட ஒரு ஃபர்லை நிறைவேற்றுவதற்கு முன்பும் நினைவு வந்தால் தொழுகை முறியாது.

இரண்டாவது ஃபர்லு முதல் தக்பீர் கட்டுவது. இதில் பத்து நிபந்தனைகள் உண்டு. 1) அல்லாஹு அக்பர் என்ற வாசகத்தையே கூறுவது 2) அதனை அரபியிலே சொல்வது. 3) எழுத்துக்களைப் பேணுதலாகக் கூறுவது 4) அல்லாஹ்வின் லாமில் உள்ள ஷத்தை சரியாக உச்சரிப்பது. 5) இரண்டு ஹம்ஜாக்களையும் ஹேயையும் நீட்டாமல் இருக்கிறது. 6) 'ரே'க்கு சுகூன் கொடுத்து உச்சரிப்பது. 7) அல்லாஹு என்பதை முந்தியும் அக்பர் என்பதைப் பிந்தியும் கூறுவது 8)அவ்விரண்டையும் தொடராய்ச் சொவ்வது. 9) வெளியில் சப்தமில்லாத நிலையில் தானும் செவிடில்லாமல் இருந்தால் தனக்குக் கேட்கும்படிச் சொல்வது. 10) நிலையிலேயே அதனைச் சொல்லி முடிப்பது. இமாம் ருகூஃவிலிருக்கும்போது வருகின்ற ஒருவர் தக்பீரை அவசரமாகச் சொல்ல நினைத்து அதை நிலையில் பாதியையும் பிறகு குனியும் பொழுது மீதியையும் சொன்னால் அந்த தக்பீர் கூடாது.

நிய்யத்தைத் தக்பீருடன் சேர்த்து அக்பர் என்ற 'ரே'க்கு முன் அந்த நிய்யத்தை முடிப்பது ஷர்த்தென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் அது எல்லோருக்கும் சாத்தியமாகாது. அது குழப்பதை ஏற்படுத்தும். எனவே தொழப்போகும் ஒருவனைப் பார்க்கும் பாமரர் முதல் எவரும் அவன் தொழத்தான் போகிறான் என்று எண்ணுகின்ற அளவுக்கு அவனுடைய நிலை இருந்தால் போதுமானது என்று இமாம் கஸ்ஸாலீ, நவவீ, இப்னுர்ரிஃப்ஆ, ஸுஃப்கீ (ரஹிமஹுமுல்லாஹ்) ஆகியோர் தீர்ப்பளித்துள்ளார்கள்.

மூன்றாவது நிற்க இயன்றவன் ஃபர்லான தொழுகையில் நிற்கிறது. இதில் நிபந்தனை ஒன்றுதான். அதாவது: வலம், இடம் சாயாமலும், முன் பின் குனியாமலும், மிகுதியாய் நிமிராமலும் நேராய் நிற்பது.

நான்காவது ஒவ்வொரு ரக்அத்திலும் சூரத்துல் ஃபாத்திஹாவை பிஸ்மியுடன் சேர்த்து ஒரு தடவை ஓதுவது (ஆனால் ஜமாஅத்தில் பிந்தி வந்து சேரும் மஃமூம்களைத் தவிர)

பிஸ்மில்லாஹ்வும் சூரத்துல்ஃபாத்திஹாவில் சேர்ந்ததாகும். பராஅத் என்று துவங்கும் "சூரத்துத் தவ்பா" தவிர மற்ற எல்லா சூரத்துகளின் ஆரம்பங்களிலும் பிஸ்மில்லாஹ் ஓர் ஆயத்தாகக் கணக்கிடப்படும். இதில் இமாம் அபூ ஹனீஃபா (ரஹ்) அவர்களுக்கு கருத்து வேறுபாடு உண்டு. அதாவது "சூரத்துந்நம்ல்" என்ற அத்தியாயத்திலுள்ள 'பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்' என்பது மட்டும்தான் குர்ஆனிலுள்ளது. மீதியுள்ள பிஸ்மிகள் அனைத்தும் சூராக்களைப் பிரித்துக் காட்டுவதற்காக எழுதப்பட்டுள்ளவையாகும். எனவே சூரத்துன் நம்லிலுள்ள பிஸ்மில்லாஹ்வைத் தவிர மற்றவற்றை மறுக்கிறவன் காபிராக மாட்டான் என்று கூறியுள்ளார்கள்.

எல்லா சூரத்துகளின் துவக்கத்திலும் அல்லது இடையில் எடுத்தோதும் பொழுதும் பிஸ்மில்லாஹ் கூறுவது சுன்னத்தாகும். ஆனால் சூரத்துத் தவ்பாவில் ஆரம்பம் முதல் கடைசிவரை எந்த இடத்தில் ஓதினாலும் பிஸ்மி ஓதுதல் கூடாது. சூரத்துல் ஃபாத்திஹா ஓதுவதற்கு எட்டு நிபந்தனைகள் உள்ளன.

1) எழுத்துக்களைப் பேணி உச்சரிப்பது 2) அதன் ஷத்துகளைப் பேணுவது 3) இஃராபுகளைப் பேணுவது. இதில் அர்த்தம் மாறுகின்ற முறையில் தவறாக ஓதினால் ஹராமென்பதை அறிந்து கொண்டே மன முரண்டாக ஓதினால் தொழுகை வீணாகிவிடும். உதாரணமாக 'அன்அம்த' என்ற வார்த்தையின் தே'க்கு ஜேர் கொடுத்து 'அன்அம்தி' என்று ஓதுவதுபோல். மனம் முரண்டாக இல்லாமல் நா தடுமாறி தவறாக ஓதி விட்டால் உடனடியாகச் சரியாக ஓதிக் கொண்டால் தொழுகை முறியாது. ஓதியதும் கூடிவிடும். சற்று நேரம் சென்று விட்டால் அந்த ஓதுதல் மட்டும் கூடாது. திரும்ப அதனை ஓதிக் கொள்ள வேண்டும்.

அர்த்தம் மாறுபடாத முறையில் தவறாக ஓதினால் தொழுகை முறியாது. எனினும், அதனை மன முரண்டாக ஓதுவது ஹராம். நஉபுது என்பதை நஉபுத என்று ஓதுவதுபோல்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

4) ஆயத்துகளை வரிசைக் கிரமமாய் ஓதுவது 5) தொடர்ச்சியாய் ஓதுவது. இதில் இடையில் தொழுகைக்கு சம்பந்தமான திக்ரில் ஈடுபட்டாலும், இமாமுடைய ஃபாத்திஹாவுக்கு ஆமீன் கூறினாலும், அவருடன் சேர்ந்து ஸஜ்தா திலாவத் செய்தாலும், இமாமுடைய ஓதுதல் நின்று விட்டதற்காகச் சொல்லிக் கொடுத்தாலும், அவருக்கு ஏற்பட்ட தவற்றை எடுத்துக் கொடுத்தாலும், தொடர்ச்சி என்பது நீங்காது. ஆனால், சொல்லிக் கொடுப்பதில் தான் ஓதுவதை நாடிக் கொள்ள வேண்டும். அல்லது ஓதுதல், சொல்லிக் கொடுத்தல் இரண்டையும் நாடினாலும் குற்றமில்லை. சொல்லிக் கொடுப்பதை மட்டும் நாடினால் பலமான சொற்படி தொழுகை முறிந்து விடும்.

ஒருவன் சூரத்துல் ஃபாத்திஹாவின் நடுவில் அல்ஹம்து லில்லாஹ் என்று சொன்னாலும் மற்றொருவன் தும்மி அல்ஹம்து லில்லாஹ் என்று சொல்லியதற்கு யர்ஹமுஹுல்லாஹ் என்று பதில் கூறினாலும் ஃபாத்திஹாவின் தொடர்ச்சி தவறிவிட்டது. ஆகையால் திருப்பி ஓத வேண்டும். இல்லாவிட்டால் ஃபாத்திஹா கூடாது. தும்மியவனுக்கு பதில் சொல்லும்பொழுது யர்ஹமுகல்லாஹ் என்று கூறினால், அதில் மனிதரை முன்னோக்குதல் இருப்பதால் தொழுகை முறிந்து விடும்.

6) அரபி மொழியிலேயே ஓதுவது 7) தன் காதுக்குக் கேட்கும்படி ஓதுவது, செவிடாகவோ, வேறு சப்தத்தின் காரணத்தினாலோ தனக்குக் கேட்காவிடில் குற்றமில்லை. தனக்குக் கேட்காத முறையில் வாய்க்குள்ளாகவே ஓதிக் கொள்வது ஓதுதலில் சேர்க்கப்படமாட்டாது. (ஆகையால்தான் ஜுனுபாளியும் தன் வாய்க்குள்ளாலேயே குர்ஆன் ஓதுவது ஆகும் என்பது ஏற்கனவே கூறப்பட்டிருக்கின்றது) குர்ஆனை கூலிக்காக ஓதுகிறவன் இவ்விதம் ஓதினால் அந்தக் கூலியும் ஹராமாகும்.

காதுக்குக் கேட்கும்படி ஓதுதல் ஷர்த்தாயிருப்பது போல் அதிலிருந்து ஒரு ஷத்தை விட்டாலும் ஓதுதல் கூடாது. சிலர் இதனைப் பேணாமல் இருப்பதால் அவர்களுடைய கிராஅத்தும் கூடாமல் ஆகிவிடும்.

சூரத்துல் ஃபாத்திஹாவில் பிஸ்மில்லாஹ்வுடன் நூற்று நாற்பத்தொரு எழுத்துக்கள் உள்ளன. இது அபூஅம்ர் (ரலி) அவர்களுடைய கிராஅத்தின் படியாகும். அதில் பதினான்கு ஷத்துகள் இருக்கின்றன. இவை அனைத்தையும் சரியான உச்சரிப்புடன் ஓத வேண்டும்.

8) சூரத்துல் ஃபாத்திஹாவை நிலையிலேயே ஓதி முடிப்பது. ஒருவருக்கு சூரத்துல் ஃபாத்திஹா முழுமையாகத் தெரியவில்லையானால் தெரிந்த அளவுக்கு ஓதி அதையே திரும்பவும் சூரத்துல் ஃபாத்திஹாவுடைய அளவுக்கு ஓதிக் கொள்ள வேண்டும். அதுவும் பாடமில்லாவிட்டால் ஃபாத்திஹாவுடைய அளவுக்கு வேறு ஆயத்துக்களை ஓதிக் கொள்ள வேண்டும். அதுவும் தெரியவில்லையென்றால் அந்த அளவுக்கு ஏழு தடவை திக்ரு செய்ய வேண்டும். திக்ரும் தெரியவில்லையென்றால் அந்த அளவுக்கு நிற்பது வாஜிபாகும்.

சூரத்துல் ஃபாத்திஹா ஓதி முடித்த பின் அதில் சிலது விடப்பட்டு விட்டதோ என்று சந்தேகம் வந்தால் அதனால் எவ்வித இடையூறும் இல்லை. ஓதி முடிக்கும்முன்

சந்தேகம் வந்தாலும் அசலில் ஓதினதிலேயே சந்தேகம் வந்தாலும் அதனை நிரப்பமாக ஓதி முடிக்க வேண்டும்.

சூரத்துல் ஃபாத்திஹாவில் இத்தனை எழுத்துக்கள் இத்தனை ஷத்துகள் என்று கூறப்பட்டுள்ளது போன்று குர்ஆன் முழுவதற்கும் கணக்கெடுக்கப்பட்டுள்ளது.

சூரத்து 114, ஜுஸ்வு 30, ஆயத்துகள் 6666, எழுத்துக்கள் 1270000 என்றும் 1027000 என்றும் 1006458 என்றும், பல விதமாகக் கணக்கிட்டுக் கூறுவதில் அவரவர்கள் கூற்றுக்கு அவரவர்களுக்கு ஆதாரங்கள் உள்ளன. இதில் இன்ன எழுத்து இத்தனையென்றும், இன்னின்ன எழுத்துக்கள் இன்னின்ன பூதத்தைப் பற்றியதாக இருப்பதாகவும் சொல்லப்படுகிறது. அதிலுள்ள

ا அலிஃபுகள் 48970. நெருப்பளவில் சேர்க்கப்பட்டது

ب பே. 11470 மண்ணளவில் சேர்க்கப்பட்டது.

ت தே 3128 மண்ணளவில் சேர்க்கப்பட்டது.

ث ஃதே 2454 காற்றளவில் சேர்க்கப்பட்டது.

ج ஜீம் 4322 காற்றளவில் சேர்க்கப்பட்டது.

ح ஹே 4130 தண்ணீரளவில் சேர்க்கப்பட்டது.

خ க்ஹே 2505 நெருப்பளவில் சேர்க்கப்பட்டது.

د தால் 5990 தண்ணீர் அளவில் சேர்க்கப்பட்டது.

ذ ஃதால் 4930 நெருப்பளவில் சேர்க்கப்பட்டது

ر ரே 12200 நெருப்பளவில் சேர்க்கப்பட்டது.

ز ஃஜே 1680 காற்றளவில் சேர்க்கப்பட்டது.

س ஸீன் 5996 காற்றளவில் சேர்க்கப்பட்டது.

ش ஷீன் 2615 நெருப்பளவில் சேர்க்கப்பட்டது.

ص ஸாத் 2037 மண்ணளவில் சேர்க்கப்பட்டது.

ض ழாத் 2037 மண்ணளவில் சேர்க்கப்பட்டது.

ط தோ 1274 காற்றளவில் சேர்க்கப்பட்டது.

ظ ளோ 842 காற்றளவில் சேர்க்கப்பட்டது.

ع ஐன் 9419 தண்ணீர் அளவில் சேர்க்கப்பட்டது.

غ ஙைன் 1214 தண்ணீர் அளவில் சேர்க்கப்பட்டது.

ف ஃபே 6613 நெருப்பு அளவில் சேர்க்கப்பட்டது.

ق காஃப் 6613 நெருப்பளவில் சேர்க்கப்பட்டது.

ك க்காஃப் 1522 தண்ணீர் அளவில் சேர்க்கப்பட்டது.

ل லாம் 33522 தண்ணீர் அளவில் சேர்க்கப்பட்டது.

م மீம் 26955 நெருப்பளவில் சேர்க்கப்பட்டது.

ن நூன் 45190 மண்ணளவில் சேர்க்கப்பட்டது.

و வாவு 25586 தண்ணீர் அளவில் சேர்க்கப்பட்டது.

ه ஹே 19008 நெருப்பளவில் சேர்க்கப்பட்டது.

لا லா 4720 தண்ணீர் மற்றும் நெருப்பளவில் சேர்க்கப்பட்டது.

ي யே 15919 காற்றளவில் சேர்க்கப்பட்டது

(இந்த விஷயங்களில் அறிஞர்களுக்கிடையில் பெரும் அபிப்பிராய பேதம் உண்டு)

அஸ்மாக்கள், துஆக்கள் ஓதி வாஸிலாத் செய்பவர்களுக்கு அந்தந்த எழுத்துக்களின் குணாகுணங்களை அறிந்து கொள்ள தோதாக இருக்கும் என்பதற்காக இந்த விஷயம் இவ்விடத்தில் விவரிக்கப்படுகிறது.

ஐந்தாம் ஃபர்லு ருகூஃ செய்தல். இதில் இரண்டு நிபந்தனைகள் உள்ளன. 1) இரண்டு முன்கைகளும் முழங்காலைத் தொடுகிற அளவுக்கு குனிவது. 2) ருகூஉடைய எண்ணத்தைத் தவிர வேறு எண்ணத்தில் குனியாமலிருப்பது. உதாரணமாக ஸஜ்தா திலாவத்திற்காக குனிகின்ற ஒருவன் ருகூவுடைய அளவை அடைந்தவுடன் ருகூஃ செய்வதை நிய்யத்துசெய்தால் அது செல்லாது. அவன் திரும்ப நிமிர்ந்து நின்று ருகூவுடைய நிய்யத்தில் திரும்பவும் குனிய வேண்டும். அல்லது மஃமூமாக இருக்கின்றவன் இமாம் ஸஜ்தா உடைய ஆயத்தை ஓதிக் குனியும்போது அவர் சுஜூதுக்கு போவதாக நினைத்துக் கொண்டு குனிகின்றான். ஆனால் இமாம் ருகூஇல் இருக்கக் கண்டால் நிலைக்கு வராமலேயே அவனும் அவரைத் துயர்ந்து ருகூஃ செய்து கொள்வான்.

ஆறாவது ஃபர்லு ருகூஇல் தரிபடுவது. இதில் ஷர்த்து ஒன்று. அதாவது: அசையுதல் ஒடுங்கி சிறிது நேரமாவது அசைவற்று இருப்பது.

ஏழாவது ஃபர்லு இஃதிதால் (சிறுநிலை). இதில் நிபந்தனைகள் மூன்று 1) நிமிர்ந்து நிற்குதல் 2) சிறு நிலை தன்னையே நாடி நிமிர்தல் 3) அதில் அனுமதிக்கப்பட்ட திக்ருடைய அளவுக்கு அதிகம் தாமதிக்காமலிருப்பது. இஃதிதாலை நிரப்பமாக்கியதில் சந்தேகம் உண்டானால் மஃமூம் அல்லாதவன் விரைவாக

கூட்டாயமாக (வாஜிபாக) அதன் பக்கம் திரும்புவான். இல்லையெனில் தொழுகை வீணாகிவிடும். மஃமூமாகிறவன் இமாமுடைய சலாமுக்குப் பிறகு ரக் அத்தைக் கொண்டு வருவான்.

எட்டாம் ஃபர்லு இஃதிதாலில் தரிப்பும் அசையாதிருத்தலும்.

ஒன்பதாம் ஃபர்லு முந்தின சுஜூது. இதில் நிபந்தனைகள் ஆறு 1) நெற்றியைத் தரையில் பொருத்தி வைப்பது. 2) இரு முழங்கால்களில் சில பாகத்தையும் இரு உள்ளங்கைகளில் சில பாகத்தையும் இரு கால்களுடைய விரல்களில் உட்பகுதியில் சிலதையும் தரையில் வைப்பது. 3) நெற்றியைத் தன் உடலுடன் ஒட்டியுள்ள எந்தப் பொருளின் மீதும் வைக்காமல் தரையிலோ அல்லது தரையுடன் ஒட்டியிருக்கும் பொருளின் மீதோ வைப்பது. 4) தன் தலை கழுத்து இவையிரண்டின் கனத்தை தரையில் அழுத்துவது. 5) தலை தாழ்ந்தும் பின்பகுதி உயர்ந்தும் இருப்பது. 6) சுஜூத அல்லாததை நாடாமலிருப்பது.

தன் உடலுடன் ஒட்டியிருக்கும் போர்வை போன்றதின் சில பகுதி அவன் உட்காரும் போதும் எழுந்திருக்கும்போதும் அசையாமல் இருக்கும் அமைப்பில் இருந்தால் அதன் மீது ஸஜ்தாச் செய்வது கூடும். அவனுடைய அசைதலால் அதுவும் அசைகின்ற தலைப்பாகை போன்ற பொருளின் மீது ஸஜ்தாச் செய்தல் கூடாது. இதனை அறிந்து கொண்டே செய்தால் அது ஹராமாவதுடன் தொழுகையும் முறிந்துவிடும். தவறுதலாகச் செய்து விட்டால் சுஜூதைத் திரும்பச் செய்ய வேண்டும்.

சுஜூது செய்யும்போது நெற்றியுடன் ஒட்டிக் கொண்ட பொருளை இரண்டாவது சுஜூது செய்வதற்காக நீக்குவது வாஜிபாகும். நெற்றியிலோ அல்லது தலையிலோ ஏற்பட்ட காயத்திற்காகச் சுற்றப்பட்டிருக்கும் பாளப்பிடவையை (பேண்டேஜ் பிடவையை) அகற்றுவது சிரமமாக இருந்தால் அதை அகற்றாமலேயே தொழுவது கூடும்.

இஃதிதாலில் (சிறுநிலையில்) இருக்கின்ற ஒருவனுக்கு மயக்கம் போன்றது ஏற்பட்டு கீழே சுஜூதில் விழுந்து அதனையே சுஜூதாக ஆக்கிக் கொண்டால் கூடாது. எனவே திரும்பவும் நிலைக்கு வந்து சுஜூதுடைய நிய்யத்தில் மீண்டும் சுஜூது செய்வது வாஜிபாகும்.

நோயின் காரணமாக தலையைத் தரையில் வைத்து சுஜூது செய்ய இயலாதவன் தலையணை போன்ற உயரமான பொருளின் மீது, அல்லது அவனுக்கு வசதியான முறையில் குனிந்து சுஜூது செய்து கொள்ளலாம்.

பத்தாம் ஃபர்லு சுஜூதில் தரிபட்டிருப்பது. இதில் ஷர்த்து ஒன்று. அதாவது, முந்தின அசைவுகள் அமைதி பெறுவதாகும்.

பதினொன்றாம் ஃபர்லு இரண்டு சுஜூதுகளுக்கிடையில் (சிறு இருப்பு) இருப்பது. இதில் நிபந்தனைகள் மூன்று 1) நேராக நிமிர்ந்து உட்காருவது 2) முதல் சுஜூதை விட்டும் எழுந்திருக்கும்போது இருப்பு அல்லாததை நாடாமலிருப்பது. 3) அதில் ஆகுமாக்கப்பட்டுள்ள திக்ருடைய கால அளவை விட அதிகநேரம் தரிபடாமலிருப்பது.

பன்னிரண்டாம் ஃபர்லு அதில் தரிபட்டிருப்பது. இதில் ஷர்த்து ஒன்று. அதாவது: முந்தின அசைவுகள் அமைதி பெறுவது.

பதின்மூன்றாம் ஃபர்லு இரண்டாம் சுஜூது. இதில் முந்தின சுஜூதில் கூறப்பட்ட ஆறு நிபந்தனைகளும் உண்டு. சுஜூதிலிருக்கின்ற ஒருவன் தேள் போன்ற ஏதேனும் ஒன்றைப் பார்த்து விட்டு திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தான். அப்பொழுது அதையே இருப்பாக ஆக்கிக் கொள்ளுதல் கூடாது. மீண்டும் அவன் சுஜூதுக்குப் போய் பிறகு எழுந்திருக்க வேண்டும்.

பதினான்காம் ஃபர்லு அதில் தரிபடுவது, இதற்கு நிபந்தனை ஒன்று மட்டும். அதாவது: முந்தின தரிபடுதல்களில் உள்ளதைப்போன்று அமைதி பெறுதலாகும்.

பதினைந்தாம் ஃபர்லு, பிந்திய அத்தஹிய்யாத்து ஓதுவது. இதில் ஃபர்லான ஓதுதலாகிறது பின் வரும் அளவு வாசகமாகும்:

اَلتَّحِيَّاتُ لِلّٰهِ سَلَامٌ عَلَيْكَ اَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللّٰهِ
وَبَرَكَاتُهُ سَلَامٌ عَلَيْنَا وَعَلٰى عِبَادِ اللّٰهِ الصَّالِحِيْنَ.
اَشْهَدُ اَنْ لَّآ اِلٰهَ اِلَّا اللّٰهُ وَاَنَّ مُحَمَّدًا رَّسُوْلُ اللّٰهِ.

இது ஃபர்லான அளவாகும். இதில் நிரப்பமான வாசகம் பின்வருமாறு:

اَلتَّحِيَّاتُ الْمُبَارَكَاتُ الصَّلَوَاتُ الطَّيِّبَاتُ لِلّٰهِ اَلسَّلَامُ
عَلَيْكَ اَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهُ اَلسَّلَامُ عَلَيْنَا
وَعَلٰى عِبَادِ اللّٰهِ الصَّالِحِيْنَ. اَشْهَدُ اَنْ لَّآ اِلٰهَ اِلَّا اللّٰهُ
وَاَشْهَدُ اَنَّ مُحَمَّدًا رَّسُوْلُ اللّٰهِ.

அத்தஹிய்யாத்துடன் அல்முபாரகாத்துஸ்ஸலவாத்துத் தய்யிபாத்து என்பதைச் சேர்ப்பது சுன்னத்தாகும்.

இதில் ஏழு நிபந்தனைகள் உள்ளன. 1) எழுத்துக்களைப் பேணுவது. 2) அதன் ஷத்துகளைச் சரியாக உச்சரிப்பது. 3) இஃராபுகளை (-ஜபர், ஜேர், பேஷ்களை)ப் பேணுவது. 4) வரிசைக்கிரமமாய் ஓதுவது 5) தொடராய் ஓதுவது. 6) தன் காதுக்குக் கேட்கும்படி ஓதுவது 7) இருப்பிலேயே ஓதி முடிப்பது.

பதினாறாம் ஃபர்லாகிறது பிந்தின (அத்தஹிய்யாத்தின்) இருப்பு. இதற்கு நிபந்தனைகள் இரண்டு (1) கோணலில்லாமல் உட்காருவது. 2) சுஜூதிலிருந்து எழும்பும்பொழுது இருப்பல்லாத வேறு எதனையும் எண்ணி எழாமலிருக்கிறது.

பதினேழாம் ஃபர்லு நபி (ஸல்) அவர்களின் மீது ஸலவாத்துச் சொல்வது. இதில் ஃபர்லான ஓதுதல்

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ என்றோ, அல்லது

صَلَّى اللّٰهُ عَلٰى مُحَمَّدٍ என்றோ அல்லது

صَلَّى اللّٰهُ عَلٰى رَسُوْلِهٖ என்றோ அல்லது

صَلَّى اللّٰهُ عَلَى النَّبِيِّ என்றோ ஓதுவதாகும். இதற்கு நிபந்தனை அத்தஹிய்யாத்தில் உள்ளது போலாகும்.

பதினெட்டாவது ஃபர்லு முந்தின ஸலாம் கொடுப்பது. இதில் ஃபர்லான அளவு அஸ்ஸலாமு அலைக்கும் என்பதாகும். இதற்கு நிபந்தனைகள் ஐந்து 1) எழுத்துக்களைச் சரியாக உச்சரிப்பது 2) ஷத்துகளைச் சரியாக உச்சரிப்பது 3) தொடராகச் சொல்லுவது 4) தன் காதுக்குக் கேட்கும்படி சொல்வது 5) இருப்பிலேயே சொல்லி முடிப்பது.

பத்தொன்பதாம் ஃபர்லாகிறது இதுவரை சொல்லிய வரிசைப்படி (தர்த்தீபாய்)ச் செய்வது.

எனவே, மேற்கூறப்பட்ட ஃபர்லுகளில் செயலாலுள்ள ஃபர்லை அதனுடைய இடமல்லாத வேறு இடத்தில் செய்தாலும், சொல்லால் உள்ள ஃபர்லுகளில் ஸலாமை வேறு ஃபர்லுகளை விட்டு முற்படுத்தினாலும், தொழுகையை ஆரம்பிக்கின்ற நிய்யத்தைக் கொண்டுள்ள தக்பீரை அந்த இடத்தில் சொல்லாமல் வேறு இடத்தில் சொன்னாலும் (இவற்றை மனமுரண்டாகச் செய்யும் பொழுது) தொழுகை முறிந்து விடும்.

இமாமாயிருப்பவர், அல்லது தனித்துத் தொழுபவர் குறிப்பான ஒரு ஃபர்லை மறதியாக விட்டபின் அல்லது அதில் சந்தேகம் வந்தபின் அடுத்த ரக்அத்தில் அதே போன்ற செயலைச் செய்யும் முன் நினைவு வந்தால் உடனடியாக அந்த விட்டு விட்ட செயலைச் செய்திட வேண்டும். இல்லா விட்டால் தொழுகை முறிந்து விடும்.

அடுத்த ரக்அத்தில் அந்தச் செயலை செய்தபின் அது நினைவு வந்தால் அதனை மட்டும் கணக்கில் சேர்த்துக் கொள்ள வேண்டும். இரு ரக்அத்துகளிலும் அவ்விரண்டு செயல்களுக்கும் இடையில் செய்த செயல்கள் வீணானவையாகிவிடும்.

"அதே போன்ற செயலைச் செய்யும் முன்" என்று மேலே கூறப்பட்ட வாசகத்திலிருந்து அது போன்றதல்லாத செயல் நீங்கி விட்டது. ஸஜ்தா திலாவத்தைப்போல். இதனை சுஜூதுக்குப் பதிலாக எண்ணக்கூடாது. ஆனால் விடப்பட்ட ஃபர்லு குறிப்பில்லாததாக இருந்தால், அதாவது விடப்பட்டது நிய்யத்து என்பதாகவோ, அல்லது முந்தின தக்பீர் என்பதாகவோ உத்தேசமாக நினைத்தால்

தொழுகை கூடாது. இவ்விடத்தில் சிறிது நேரம் செல்ல வேண்டுமென்பதோ, அல்லது சந்தேகத்துடன் ஒரு ஃபர்ளை நிறைவேற்ற வேண்டுமென்பதோ, ஷர்த்தல்ல. அல்லது, விட்டது ஸலாம் என்பதாக நினைத்தால் உடனே ஸலாம் கொடுக்க வேண்டும். பலமான சொற்படி அதிகமான நேரம் சென்றாலும் சரி.

மஃமூமானவர் அவ்வாறு (ஒரு ஃபர்ளை) விட்டிருந்தால் இமாமைத் துயர்ந்தே தொழுது ஸலாம் கொடுத்தபின் ஒரு ரக்அத்தைத் தனியாக தொழுது மஃமூமானவர் ஸலாம் கொடுப்பார். ஆனால், இமாம் ருகூஃவுக்குச் சென்றபின் நிலையில் மஃமூமானவர் சூரத்துல் ஃபாத்திஹா ஓதவில்லை என்பதை நினைத்தாலும், அல்லது அதில் சந்தேகம் உண்டானாலும் அதனை ஓதிக்கொண்டு நீளமான மூன்று ஃபர்ளுகளுக்குப் பிந்தாமல் இமாமுடன் போய்ச் சேர்ந்து கொள்வார்.

ஒரு மனிதனுக்கு தொழுகையின் கடைசியில் அல்லது ஸலாம் கொடுத்த பின் நீண்ட நேரம் இல்லாமலும், மன்னிக்கப்படாத நஜீஸ் படாமலும் இருந்து கடைசி ரக்அத்தில் ஒரு ஸஜ்தாவை விட்டு விட்டதை உறுதியாக நினைத்தால், அந்த ஒரு ஸஜ்தாவைச் செய்து அதற்குப் பின்னுள்ளதையும் செய்து முடிப்பான். இதில் அவன் கிப்லாவை விட்டு மாறினாலும் கொஞ்சம் பேசினாலும் சரி. கடைசி ரக்அத் அல்லாததில் ஒரு ஸஜ்தாவை விட்டிருந்தால் ஒரு ரக்அத் தொழுவது அவனுக்கு அவசியமாகும்.

நான்கு ரக்அத்துகளுடைய தொழுகையின் கடைசியி லிருக்கும்போது இரண்டு, அல்லது மூன்று ஸஜ்தாக்களை விட்டிருப்பதை அறிந்தால், இன்னும் அது எந்தெந்த ஸஜ்தா என்ற இடமும் தெரியாமலிருந்தால், அப்பொழுது இரண்டு ரக்அத்துகள் தொழவேண்டும். விடப்பட்டது நான்கு ஸஜ்தாக்கள் என்பது தெரிந்தால் அப்பொழுது ஒரு ஸஜ்தாவும் இரண்டு ரக் அத்துகளும் தொழுவது வாஜிப். அல்லது விடப்பட்டது ஐந்து அல்லது ஆறு ஸஜ்தாக்களாக இருந்தால் அப்பொழுது மூன்று ரக்அத்துகள் தொழ வேண்டும். விடப்பட்டது ஏழு ஸஜ்தாக்கள் என்று தெரிந்தால் ஒரு ஸஜ்தாவும் மூன்று ரக்அத்துகளும் தொழுவது வாஜிப். எட்டு ஸஜ்தாக்களும் அவற்றின் தரிப்பும் போன்ற ஷர்த்தும் தவறி விட்டதை அறிந்தால் இரண்டு ஸஜ்தாக்களும் மூன்று ரக்அத்களும் வாஜிபாகும். இவை அனைத்திலும் கடைசியில் ஸஜ்தா ஸஹ்வு செய்ய வேண்டும்.

## தொழுகையின் அப்ஆள் சுன்னத்துகள்

1) நடு அத்தஹிய்யாத்து ஓதுவது 2) அதற்காக உட்காருவது. 3) அதில் நபி (ஸல்) அவர்களின் மீது சலவாத்துச் சொல்வது. 4) சுபுஹுடைய கடைசி ரக்அத்தின் சிறு நிலையிலும் (இஃதிதாலிலும்) ரமலான் மாதத்தின் பிந்திய பதினைந்து நாட்களின் வித்ருடைய கடைசி ரக்அத்தின் சிறு நிலையிலும் குனூத்து ஓதுவது. 5) அதற்காக நிற்பது. 6) குனூத்து ஓதிய பிறகு நபி (ஸல்) அவர்களின் மீது சலவாத்துச் சொல்வது 7) நபியவர்களின் கிளையார்களை அந்த ஸலவாத்தில் சேர்ப்பது. 8) பிந்தின அத்தஹிய்யாத்துடைய சலவாத்தில் கிளையார்களைச் சேர்ப்பது, இவை எட்டாகும்.

ஆனால், குனூத்தில் நபியவர்களின் மீது ஸலவாத்துச் சொல்வதற்காக நிற்பதும், அந்த ஸலவாத்தில் நபியவர்களுடைய கிளையார்களின் மீது ஸலவாத்துச்

சொல்வதற்காக நிற்பதும், முந்தின அத்தஹிய்யாத்தில் நபியவர்களின் மீது ஸலவாத்துச் சொல்வதற்காக உட்காருவதும், கடைசி அத்தஹிய்யாத்தில் நபியவர்களுடைய கிளையார்களின் மீது ஸலவாத்துச் சொல்வதற்காக உட்காருவதும் சுன்னத்தாகும். ஆக இந்த நான்கையும் சேர்த்து மொத்தம் பன்னிரண்டு சுன்னத்துக்களாகும்.

இந்த பன்னிரண்டு சுன்னத்துகளில் ஏதேனும் ஒன்றையோ அல்லது ஒன்றில் சிலதையோ மறதியாகவோ அல்லது மனமறிந்தோ விட்டால் கடைசியில் ஸஜ்தா ஸஹ்வு (மறதிக்கு நஷ்ட ஈடாகும் ஸஜ்தா) என்று இரண்டு ஸஜ்தா செய்து ஸலாம் கொடுக்க வேண்டும். அந்த இரு ஸஜ்தாக்களும் சுன்னத்தாகும்.

ஸஜ்தா ஸஹ்வை இமாமோ தனித்துத் தொழுபவரோ விட்டு விட்டால் தொழுகையின் நன்மை குறைந்து விடும். இந்த அப்ஆள் சுன்னத்துக்களைத் தவிர வேறு எந்த சுன்னத்தை விட்டாலும் ஸஜ்தா ஸஹ்வு விதியாக்கப்பட மாட்டாது. இச்சட்டத்தைத் தெரிந்திருந்தும் ஒருவர் ஸஜ்தா ஸஹ்வு செய்தால் தொழுகை முறிந்து விடும்.

ஸஜ்தா ஸஹ்வு செய்வதை மறந்து ஸலாம் கொடுத்து விட்டால், கிப்லாவை விட்டும் நெஞ்சைத் திருப்பாமலும், மன்னிக்கப்படாத நஜீஸ்—உடலிலோ உடையிலோ படாமலும், அதிகம் பேசாமலும் இருக்கும் காலமெல்லாம் மீண்டும் அத்தஹிய்யாத்து இருப்புக்குத் திம்பி ஸஜ்தா—ஸஹ்வு செய்து ஸலாம் கொடுக்க வேண்டும்

ஸஜ்தா ஸஹ்வு சுன்னத்தாக இருக்கிறது என்பதைத் தெரிந்தும் மறதியாகவோ, நினைவுடனோ அல்லது மனம் முரண்டாகவோ செய்யா விட்டால் தொழுகைக்கு எவ்வித இடையூறும் ஏற்படாது. எனினும் இமாமுடன் சேர்ந்து தொழும் மஃமூம் இமாம் செய்யும் ஸஜ்தா ஸஹ்வை செய்யாவிட்டால் தொழுகை கூடாது.

ஸஜ்தா ஸஹ்வு இரண்டு செய்ததில் சந்தேகம் ஏற்பட்டால் இரண்டு ஸஜ்தாக்கள் செய்வான். ஒரு ஸஜ்தாவில் சந்தேகம் ஏற்பட்டால் ஒரு ஸஜ்தாச் செய்வான்.

ஒரு சொற்படி குனூத்தில் ஸஹாபாக்களை ஸலவாத்தில் சேர்ப்பதும், அதற்காக நிற்பதும் அப்ஆள் சுன்னத்து என்று கூறப்பட்டுள்ளது. இதன்படி அப்ஆள் சுன்னத்துகள் பதினான்காகும்.

இவற்றில் நிற்பதையும் உட்காருவதையும் எண்ணிக்கையில் சேர்க்கப்பட்டது ஏனெனில், ஓதத் தெரியாத ஒருவன் ஓதுவதின் நேர அளவுக்கு தரிபட்டிருப்பது சுன்னத்தாகும் என்பதற்காகத்தான். அவ்விதம் தரிபட்டிருப்பதை விடுவானெனில் ஸஜ்தா ஸஹ்வு இரண்டு செய்வது அவன் மீது சுன்னத்தாகும்.

தனியாகத் தொழுபவரோ, அல்லது இமாமோ இவற்றில் ஒன்றை மறந்து விட்டு, அதற்குப்பின்னாலுள்ள ஃபர்ளை அடைந்து விட்டால், பிறகு நினைவு வந்து அந்த சுன்னத்தின் பக்கம் திரும்புவது ஹராமாகும். இதனையறிந்து ஒருவர் முரண்டாக அதனைத் திரும்பிச் செய்தால் சுன்னத்திற்காக ஃபர்ளைவிட்டு விட்டான் என்பதற்காக தொழுகை பாத்திலாகி விடும். ஆனால், மறதியாக குனூத்தை விட்டவன் ருகூவுடைய அளவுக்குக் குனிந்திருந்தாலும், நடு அத்தஹிய்யாத்தை விட்ட ஒருவன் நிலையுடைய

அளவுக்கு நெருங்கியிருந்தாலும் அப்ஆள் அளவில் மீண்டும் செல்வதும், பிறகு ஸஜ்தா ஸஹ்வு செய்வதும் சுன்னத்தாகும்.

குனூத்தை ஓத மறந்து விட்டவன் நெற்றியைத் தரையில் வைக்கும் முன் அதன் பக்கம் மீள்வது ஆகும். மஃமூமாக இருப்பவன் மறதியாக குனூத்தை விட்டு ஃபர்ளை அடைந்து விட்டால் மீண்டும் இமாமுடன் வந்து சேர்ந்து கொள்வது வாஜிபாகும். இல்லாவிடில் தொழுகை பாத்திலாகும். அவ்விதமானவன் இமாமை விட்டுப் பிரிந்து விடுவதை நிய்யத்துச் செய்தால் தொழுகை பாத்திலாகாது.

இமாமோ, தனித்துத் தொழுபவரோ நினைவுடனேயே நடு அத்தஹிய்யாத்தை விட்ட பின் நிலையை நெருங்கி அல்லது குனூத்தை விட்டபின் ருகூவுடைய அளவுக்குக் குனிந்து மறுபடியும் மனம் முரண்டாக விட்டதைச் செய்ய மீண்டு வந்தால் தொழுகை பாத்திலாகி விடும்..

தொழுகையை ஆரம்பிக்கிற நிய்யத்தைக் கொண்டுள்ள தக்பீரையும் ஸலாமையும் தவிர மற்ற சொல்லால் உள்ள ஃபர்ளை, அல்லது ஆப்ஆள் சுன்னத்தை அதனுடைய இடமில்லாததில் மனமறிந்தோ, மறந்தோ செய்தாலும், இன்னும் மறதியாகச் செய்தால் தொழுகையை முறிக்காத குறைவான உணவு, குறைவான பேச்சு போன்றதை அறிந்து செய்தாலும், தான் தொழுததில் சந்தேகம் வந்து, அந்தச் சந்தேகத்தினால் தொழுகையின் ரக்அத்துகள் அதிகம் ஏற்பட்டு விடுமென்றிருந்தாலும் ஸஜ்தா ஸஹ்வு செய்வான்.-உதாரணமாக லுஹருடைய கடைசி ரக்அத்திலிருக்கும் போது தொழுதது நான்கு ரக்அத்களா? அல்லது மூன்று ரக்அத்துகளா? என்ற சந்தேகம் ஏற்பட்டால் ஒரு ரக்அத்துத் தொழுது கொள்ள வேண்டும். அவ்வாறு ஒரு ரக்அத் தொழுவதற்கு எழுந்து தொழுது ஸலாம் கொடுக்குமுன் சந்தேகம் நீங்கி இப்பொழுது கடைசியாகத் தொழுதது நான்காவது ரக்அத்துதான் என்று நினைவு வந்து விட்டாலும் சரி, தொழுது முடித்து ஸஜ்தா ஸஹ்வு செய்து கொள்ள வேண்டும். ஏனெனில், இந்த ரக்அத்தை அவன் சந்தேகங் கொண்டு அதிகமென எண்ணியதற்காக. அந்த ரக்அத்தைத் தொழுததில் அவன் தன்னுடைய சந்தேகம் நிறைந்த எண்ணங்களின் பக்கமும் பிறருடைய சொல்லின் பக்கமும் திரும்ப மாட்டான்; அவர்கள் அதிகமானவர்களாக இருந்தாலும் சரி. ஆனால், பெரும்பாலும் உண்மை சொல்வதில் ஒரே மாதிரியாய் இருக்கும் நாற்பது நபர்கள் சொன்னால் அதனை நம்பிச் செய்யலாம்.

மறதியாக ஐந்தாவது ரக்அத்துக்கு எழும்பித் தொழும் பொழுது, அது ஐந்தாவதென்று எப்பொழுது நினைவு வந்ததோ உடனே இருப்புக்குச் சென்று முதலில் நான்காவது ரக்அத்தில் அத்தஹிய்யாத்து ஓதாமலிருந்தால் அதனை ஓதுவான். முதலில் ஓதியிருந்தால் அதனைத் திரும்ப ஓதுவது வாஜிபில்லை. கடைசியில் ஸஜ்தா ஸஹ்வு செய்து கொள்வான். ஏனெனில் இரு மனதுடன் நான்கு ரக்அத் என்பதில் சந்தேகமும் மூன்று ரக்அத் என்பதில் உறுதியும் கொண்டதினாலாகும்.

அந்த ரக்அத்து அதிகமாகாதிருக்க முறையாவது, அந்தத் தொழுகையில் நான்காவது ரக்அத்துக்கு எழுந்திருக்கும் முன் முந்திய சந்தேகம் நீங்கி, தொழுதது மூன்றுதான் என உறுதியானால் ஸஜ்தா ஸஹ்வு செய்ய மாட்டான். நான்காவது ரக்அத்துக்கு எழுந்த பின் அந்த உறுதி ஏற்பட்டால் ஸஜ்தா ஸஹ்வு செய்வான்.

ஏனெனில், நான்காவது ரக்அத்துக்கு எழுந்திருக்கும் நேரத்தில் அவன் இரு மனம் உடையவனாக (சந்தேகம் உள்ளவனாக) இருந்தான் என்பதனால்.

## இமாமுடைய மறதிக்காக மஃமூம் ஸஜ்தா ஸஹ்வு செய்வது

இமாமுடைய மறதிக்காக மஃமூம் ஸஜ்தா ஸஹ்வு செய்வான். இமாமுடன் ஒத்திருக்கும் (முவாஃபிக்கான) மஃமூமாக இருந்தால் இமாம் ஸலாம் கொடுத்து இவன் ஸலாம் கொடுக்கும் முன் தன்னுடைய தொழுகையின் கடைசியில் ஸஜ்தா ஸஹ்வு செய்வான்; இமாம் செய்தாலும் சரி, செய்யாவிட்டாலும் சரி. ஆனால், அந்த இமாம் தொங்கு நீர் போன்ற நோயில்லாதவராக இருக்க வேண்டும். இமாமுடைய மறதி இவன் தொடருவதற்கு முன் உள்ளதாயிருந்தாலும் சரி, இமாம் ஸஜ்தா ஸஹ்வு செய்யும்பொழுது இவனும் செய்யவேண்டும்.

இமாமுடன் ஆரம்பத்திலேயே சேர்ந்தவனாக (முவாஃபிக்காக) இருந்தாலும், அல்லது பின்னால் வந்து சேர்ந்த மஸ்பூக்காக இருந்தாலும் இமாம் ஸஜ்தா ஸஹ்வு செய்யும் பொழுது அவனும் தொடர்ந்து செய்வது வாஜிப்; இமாம் மறந்ததை அவன் அறியாமலிருந்தாலும் சரி. அது வாஜிப் என்பதை அறிந்து இமாமைத் தொடராமலிருந்தால் தொழுகை பாத்திலாகி விடும்.

பின்னால் வந்து சேர்ந்தவன் (மஸ்பூக்) இமாமுடைய மறதிக்காக தன்னுடைய தொழுகையின் கடைசியில் ஸஜ்தா ஸஹ்வு செய்வான். இமாமைத்தொடர்ந்திருக்கின்ற நிலையில் மஃமூமுக்கு மறதி ஏற்பட்டால் ஸஜ்தாச் செய்யக் கூடாது. இமாம் ஸலாம் கொடுத்து இவன் தனியாகப் பிரிந்த பின் தனக்கு ஏற்படும் மறதிக்காக ஸஜ்தா ஸஹ்வு செய்வான்.

சுப்ஹில் ஹனஃபீ இமாமைத் தொடர்ந்து தொழும் பொழுது குனூத்து ஓதுவதற்குரிய அவகாசம் அவனுக்குக் கிடைத்தால், ஓதிக் கொண்டு இமாம் முதல் சுஜூதிலிருந்து எழும்புவதற்குள் அவருடன் போய்ச் சேர்ந்து கொள்ள வேண்டும். அவ்வாறு முதல் சுஜூதில் அவருடன் சேரமுடியாது என்றிருந்தால் இமாமை விட்டுத் தனியாகப் பிரிந்து விடுகிற நிய்யத்துச் செய்து பிரிந்து தொழலாம். அல்லது குனூத்து ஓதாமல் அவருடன் தொடர்ந்தும் தொழலாம். இரு விதமும் கூடும். ஆனால், அந்த ஹனஃபி இமாமுடன் சேர்ந்திருக்கும் பொழுது இவன் குனூத்து ஓதினாலும் ஓதா விட்டாலும், இவன் ஸஜ்தா ஸஹ்வு செய்வது சுன்னத்தாகும். சுப்ஹுடைய ஃபர்ஸைத் தொழ நினைப்பவர் சுப்ஹுடைய சுன்னத்து தொழுகிற மற்றொருவரை இமாமாகப் பின் பற்றினாலும், அல்லது குனூத்து ஓதாத இமாமை சுப்ஹில் பின்பற்றினாலும் இதே சட்டந்தான். (ஸஜ்தா ஸஹ்வு செய்ய வேண்டும்)

## சுருக்கமான குனூத்து

இமாமை முந்தின சுஜூதில் அடைய முடியாதென்ற அளவுக்கு நேரம் குறைவாக இருந்தால் மஃமூம் வழக்கமான குனூத்தை விட்டு விட்டு சுருக்கமான குனூத்தை ஓதிக் கொள்வது சுன்னத்தாகும். அது பின்வருமாறு:

اَسْئَلُكَ يَاغَفُوْرُ اَنْ تَغْفِرَ لِيْ. وَصَلَّى اللهُ عَلٰى
سَيِّدِنَا مُحَمَّدِنِ النَّبِيِّ وَعَلٰى اٰلِهٖ وَصَحْبِهٖ وَسَلَّمَ.

ஹனஃபீ இமாமை ஷாஃபியீ மஃமூம் எந்த நேரத்துத் தொழுகையில் தொடர்ந்தாலும் அந்த மஃமூம் ஸஜ்தா ஸஹ்வு செய்வான் என்று முஹம்மது்பனு சுலைமான் அல்குர்தீ (ரஹ்) அவர்கள் பலமான அத்தாட்சியுடன் கூறியுள்ளார்கள். இச்சட்டத்தைப் பின்னால் வந்த உலமாக்கள் ஏற்றுக் கொண்டுள்ளார்கள். எனினும், மக்களுக்கிடையே பகைமை ஏற்படாமலும் குழப்பம் உண்டாகாமலும் இமாம்களுக்கு மரியாதைக் குறைவு ஏற்படாமலும் இருந்தால்தான் ஸஜ்தா ஸஹ்வு செய்யலாம். இல்லாவிட்டால் செய்யாமல் விட்டு விடுவதே சிறந்தது என்று கூறியுள்ளார்கள்.

இமாமுடன் முழுமையாகச் சேர்ந்த (முவாஃபிக்கான) மஃமூம் அத்தஹிய்யாத்து ஓதி முடிக்கும் முன் இமாம் ஸஜ்தா ஸஹ்வுக்குப் போய் விட்டால் கட்டாயமாக அவரைத்தொடருவான.பிறகு தன்னுடைய அத்தஹிய்யாத்தில் ஃபர்லான அளவைப் பூர்த்தி செய்வது வாஜிபாகும்.

ஸலாம் கொடுத்த பிறகு நிய்யத்து, தக்பீர் தஹ்ரீம் இவையிரண்டும் அல்லாத மற்ற ஷர்த்துகளில், ஃபர்லுகளில் ஒருவனுக்குச் சந்தேகம் வந்தால், அச்சந்தேகம் எவ்வித இடையூறும் செய்யாது. நிய்யத்திலும் தக்பீர் தஹ்ரீமிலும் சந்தேகம் வந்தால், பலமான சொற்படி அது இடையூறாகும். ஆனால், ஸலாம் கொடுத்த பின் முன்னால் மறந்து விட்டது உறுதியாகித் தொழுகையை பாத்திலாக்கும் நஜீஸை இவன் மிதிக்காமலும் இடைப்பட்ட நேரம் நீளப்படாமலும் இருந்தால் விடப்பட்டதிலிருந்து எடுத்து மீதியைத் தொழுவது வாஜிபாகும். அவன் கிப்லாவை விட்டுத் திரும்பியிருந்தாலும், கொஞ்சம் பேசியிருந்தாலும், சற்று தூரம் நடந்து பள்ளியை விட்டு வெளியாகி இருந்தாலும் சரி.

குறைவான நேரம், அதிகமான நேரம் என்பது வழக்கத்தைக் கவனித்துக் கூறப்படும். மற்றொரு சொல்லில் நபி (ஸல்) அவர்களுக்கு ஏற்பட்ட ஒரு நிகழ்ச்சியைக் கவனிக்க வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது. அதாவது:

ஒரு தடவை நபி (ஸல்) அவர்கள் நான்கு ரக்அத்துடைய தொழுகையைத் தொழுதவர்கள், இரண்டு ரக்அத் தொழுது ஸலாம் கொடுத்துவிட்டு தொழுத இடத்தை விட்டும் சற்று தூரம் சென்று ஒரு மரக்கட்டையில் சாய்ந்தார்கள். அப்பொழுது (ஃதுல்யதைன்) ذُوالْيَدَيْنِ என்ற ஸஹாபி, "யாரசூலல்லாஹ்! தொழுகை சுருக்கப்பட்டு விட்டதோ? அல்லது தாங்கள் மறந்து விட்டீர்களோ? " என்று கேட்டார். "இவர் சொல்வது சரிதானா?" என்று நபி (ஸல்) அவர்கள் மற்ற ஸஹாபாக்களிடம் கேட்டார்கள். "ஆம்" என ஸஹாபாக்கள் கூறியதும், எழுந்து சென்று மீதி இரண்டு ரக்அத்துகள் தொழுது முடித்துப் பிறகு இரண்டு ஸஜ்தா ஸஹ்வு செய்து ஸலாம் கொடுத்தார்கள்.ஸஹாபாக்களும் அன்னாரைத்தொடர்ந்து அவ்வாறே செய்தார்கள்.

ஏதாவது ஒரு விஷயம் அதன் அசலை விட்டும் மாறி விட்டதாக சந்தேகம் எழுமாயின் அதன் அசல் அளவில் மீளப்படும். அந்த அசல் உண்டாயிருந்தால் நடந்து விட்ட தென்றும், இல்லாமலிருந்தால் நடக்கவில்லையென்றும் தீர்ப்புச் செய்து

சந்தேகத்தை விட்டும் நீங்கிக் கொள்ள வேண்டும். உதாரணமாக ருகூவுக்கு குனிந்தவன் ருகூவை நிறைவுபடுத்தாமல் எழுந்து நின்று கொண்டு ருகூவு உடைய எல்லையைச் செய்து விட்டோமா என்று சந்தேகப்பட்டால் உடனே ருகூவுவை மீண்டும் செய்வது வாஜிப்.

### ஸஜ்தா திலாவத் பற்றிய விபரம்

குர்ஆனில் பதினான்கு திலாவத் ஸஜ்தாக்களும் ஒரு ஸஜ்தா ஷுக்ரும் இருக்கின்றன. அந்த ஒரு ஷுக்ரு ஸஜ்தாவைத் தவிர மீதியுள்ள பதினான்கில் ஏதேனும் ஒன்றைத் தொழுகையில் ஓதினாலும் அல்லது வெளியில் ஓதினாலும் ஓதினவரும் ஓதக் கேட்டவரும் ஸஜ்தாச் செய்வது சுன்னத்தாகும். சூரத்துஸ்ஸாத் என்னும் ஸாத்வல் குர்ஆன் என்ற அத்தியாயத்தில் உள்ளது ஸஜ்தா ஷுக்ராகும். அதனைத் தொழுகையில் செய்யக் கூடாது. குர்ஆனைக் கேட்க வேண்டுமென்று நாடிக் கேட்டவருக்கு நாடாமல் கேட்டவரை விட ஸஜ்தாச் செய்வது கட்டாயமான சுன்னத்தாகும்.

ஸஜ்தாவுடைய ஆயத்தை ஓதுகிறவன் சிறுவனாக இருந்தாலும், உளு இல்லாதவனாக இருந்தாலும் காஃபிராக இருந்தாலும் அதனைக் கேட்டவர்கள் ஸஜ்தாச் செய்வது சுன்னத்தாகும்.

ஜுனுபாளி, மாதவிடாய்க்காரி, சுயநினைவற்றவர், தூங்குகிறவர், கிளி, மைனா, ஆகியோர் ஸஜ்தாவுடைய ஆயத்தை ஓதினால், கேட்டவர் ஸஜ்தாச் செய்வது சுன்னத்தல்ல. ஆனால், நபி (ஸல்) அவர்களின் திருநாமத்தை மேற்கூறிய எவர் கூறினாலும் கேட்பவர் ஸலவாத்துச் சொல்வது ஃபர்லாகும்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அருளியதாக ஸஹீஹ் முஸ்லிமில் அறிவிக்கப்பட்டுள்ளதாவது: ஆதமுடைய மகன் (மனிதன்) குர்ஆன் ஓதி ஸஜ்தாச் செய்தால் அவனை விட்டும் ஷைத்தான் நீங்கி, அழுது கொண்டே ஓடுகிறான். இன்னும் "ஸஜ்தாச் செய்யுமாறு ஆதமுடைய மகனுக்குக் கட்டளையிடப்பட்டது. கட்டளைப்படி செய்து அவன் சொர்க்கத்தைப் பெற்றுக் கொண்டான். எனக்கும் அவ்வாறே கட்டளையிடப்பட்டது. நான் விலகிக் கொண்டேன். அதனால் எனக்கு நரகம் விதியானது" என்றும் ஷைத்தான் கூறுகிறான்.

ஸஜ்தாவுடைய ஆயத்தை ஓதினவர் ஸஜ்தாச் செய்தாலும் செய்யாவிட்டாலும் கேட்டவர்கள் ஸஜ்தாச் செய்திட வேண்டும்

وَإِذَا قُرِئَ عَلَيْهِمُ الْقُرْآنُ لَا يَسْجُدُونَ ۩ *(84: 21)*

"மேலும் (காஃபிர்களாகிய) அவர்களிடம் குர்ஆன் ஓதப்பட்டால் அவர்கள் ஸஜ்தாச் செய்வதுமில்லை " என்று காஃபிர்களின் விஷயத்தில் அல்லாஹ் கூறி யிருப்பதால் நாம் ஸஜ்தாச் செய்வது அவசியமாகும்.

தனக்கோ தன் மக்களுக்கோ ஏதேனும் ஒரு பாக்கியம் ஏற்பட்டால் அதனை அவன் எதிர்பார்த்திருந்தாலும் எதிர்பார்க்காவிட்டாலும், அல்லது ஏதேனும் ஓர் ஆபத்து தவிர்க்கப்பட்டாலும் ஸஜ்தா ஷுக்ரு சுன்னத்தாக்கப்படும். அந்த நன்மையும்

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

ஆபத்தும் தனக்கு மட்டும் ஏற்பட்டாலும் சரி; அல்லது ஊரார் அனைவருக்கும் ஏற்பட்டாலும் சரி. பஞ்சம், புயல், மழை ஆகியவை அனைவரையும் பிடிப்பது போல்.

ஸஜ்தாச் செய்வதை மட்டும் நாடி குர்ஆன் ஓதுவதும், யாதொரு காரணமுமின்றி, அல்லாஹ்வின் பால் நெருக்கம் பெறுவதை நாடி ஸஜ்தாச் செய்வதும், ஷைகுமார்களுக்கு முரீதுகள் ஸஜ்தாச் செய்வதும் ஹராமாகும்.

தொழுகிறவன் தான் ஓதிய ஸஜ்தாவுடைய ஆயத்திற்கு ஸஜ்தாச் செய்வான். இமாம் ஸஜ்தா திலாவத் செய்யும்பொழுது அவருடன் மஃமூம் செய்யவேண்டும். இமாமுடன் செய்யவில்லையானாலும் அல்லது இமாம் செய்யாத நேரத்தில் ஸஜ்தாச் செய்தாலும் தொழுகை பாத்திலாகி விடும்.

ஆனால் இமாம் சுஜூது செய்ததை இவன் அறியாதிருக்கும் நிலையில் இமாம் ஸஜ்தாச் செய்து விட்டுத் தலையை உயர்த்திவிடுவாரானால் இவனுடைய தொழுகை முறியாது. எனினும், நின்றுகொண்டே அவரை எதிர் பார்ப்பான். ஆனால் அவர் தலையை உயர்த்தாமலிருந்தால் உடனே இவன் அவருடன் சுஜூதில் போய்ச் சேர்ந்துகொண்டு அவர் எழுந்திருக்கும் பொழுது இவனும் உடன் எழுந்துவிடுவான்.

தொழுபவனோ, தொழாதவனோ ஸஜ்தாவுடைய ஆயத்துகளை ஓதும்பொழுது தொழுகையிலிருக்கின்ற மற்றொருவன் அதனைக் காது தாழ்த்திக்கேட்பது மக்ரூஹ் ஆகும். ஏனெனில், அவ்வாறு கேட்பதால் தன்னுடைய தொழுகையின் மீதுள்ள கவனம் சிதறி விடும் என்பதற்காக. ஆனால் இமாம் ஓதுவதை, மஃமூம்கள் காதுதாழ்த்திக் கேட்கலாம்.

தொழுகையல்லாத நேரத்தில் ஸஜ்தா திலாவத் செய்வதற்கு நிபந்தனையாகிறது, தொழுகையின் நிபந்தனை போன்றாகும். அதன் ஃபர்லுகளாகிறது நிய்யத்தும், தக்பீரும், (தொழுகையின் சுஜூதைப் போன்று) ஒரு சுஜூதும், ஒரு ஸலாமுமாயிருக்கும்.

சப்தமிடாமல் ஓதும் தொழுகையில் இமாம் ஸஜ்தாவுடைய ஆயத்தை ஓதினால், தொழுது முடிக்கும்வரை ஸஜ்தாவைப் பிற்படுத்துவது இமாமுக்கு சுன்னத்தாகும். ஏனெனில், உடனே செய்தால் மஃமூம்களுக்கு குழப்பம் ஏற்பட்டுவிடுமென்பதற்காக.

ஸஜ்தாவுடைய ஆயத்தை ஓதிய இமாம் ஸஜ்தாவுக்குப் போகின்ற நிய்யத்தில்லாமல் ருகூஉ வுக்குப் போய் அந்த ருகூவின் அளவையும் அடைந்த பிறகு ஸஜ்தாவுக்குப் போவதை நாடுவாரானால் அவர் அப்படியே ஸஜ்தாச் செய்வது கூடாது. ஏனெனில், அதனுடைய இடம் தவறி விட்டதால்.

ஒருவன் தொழுகையிலோ அல்லது வெளியிலோ ஸஜ்தாவுடைய ஆயத்தை ஓதி ஸஜ்தாச்செய்து பிறகு மீண்டும் அதே ஆயத்தை ஓதினால் திரும்பவும் ஸஜ்தாச் செய்வான்.

திலாவத்துடைய ஸஜ்தாவில் மற்ற சுஜூதுகளில் வழக்கமாக ஓதுகிற தஸ்பீஹை ஓதிய பின் பின்வரும் தஸ்பீஹை ஓதுவதும் சுன்னத்தாகும். அதாவது:

سَجَدَ وَجْهِيَ لِلَّذِيْ خَلَقَهُ وَصَوَّرَهُ وَشَقَّ سَمْعَهُ
وَبَصَرَهُ بِحَوْلِهِ وَقُوَّتِهِ فَتَبَارَكَ اللّٰهُ اَحْسَنُ الْخَالِقِيْنَ

என்னுடைய முகம் இறைவனாகிய அவனுக்குப் பணிந்து (ஸஜ்தாச்செய்து) விட்டது. அவன் அதனைப் படைத்து, அதற்கு உருவம் அமைத்து, அதனுடைய (கேட்பதற்குரிய) செவியையும், (பார்ப்பதற்குரிய) கண்ணையும் தன் ஆற்றலால் பிளந்து வைத்தான். அல்லாஹ் மிக்க உயர்வானவன். படைப்பவர்களில் அவன் அழகானவன்.

## தொழுகையின் அலங்கார சுன்னத்துகள்

தொழுகிறவன் தனக்கு முன்னால் "சுத்ரா" என்னும் ஒரு மறைப்பை ஏற்படுத்திக்கொள்வது சுன்னத்தாகும். அது ஒரு சுவராகவும் இருக்கலாம். அல்லது ஏதாவது ஒரு உயரமான பொருளாக இருக்கலாம். அல்லது ஒரு கைத்தடியை நாட்டுவதாலும் அந்த மறைப்பு உண்டாகிவிடும். அல்லது ஒரு முஸல்லாவை விரித்துக்கொள்ளலாம். ஒன்றும் கிடைக்காத நேரத்தில் மூன்று முழ நீளமுள்ள ஒரு கோட்டை, நீளமாகவோ குறுக்காகவோ கீறிக்கொள்வதாலும் மறைப்பு உண்டாகிவிடும். மேற் கூறியபடியுள்ள மறைப்பை தனக்கு முன்னால் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். என்றாலும், அவைகளை தன் முகத்திற்கு நேராக வைக்காமல் சற்று வலப்பக்கத்தில் அல்லது இடப்பக்கத்தில் வைத்து வரம்பிட்டுத் தொழுவது சுன்னத்தாகும்.

மார்க்கத்தில் கூறப்பட்ட சுத்ராவை (மறைப்பை) ஏற்படுத்தித் தொழும்பொழுது அவனுக்கும் அந்த சுத்ராவுக்கும் இடையில் நடப்பது ஹராமாகும். அவன் அந்த மறைப்பைத் தவறாக ஏற்படுத்தினால் தவிர, அதாவது; தொழுகின்றவன் மனம் முரண்டாக நடைபாதையில் நின்றாலும், ஒருவன் இமாமுடன் சேருவதற்கு வேறு வழி இல்லையானாலும் குறுக்கே செல்லலாம்.

தொழுகிறவன் அமைக்கும் சுத்ரா எனும் மறைப்புக்கும் தனக்குமிடையில் மூன்று முழம் இடைவெளி இருக்க வேண்டும். அவ்வாறு ஏற்படுத்திய பின் ஒருவன் முரண்டாக மூன்று முழமுள்ள அந்த மறைப்பிற்குள் சென்றால் அவனைக் கையால் தடுப்பது சுன்னத்தாகும். தடுப்பதில் முதலில் இலேசாகவும், பிறகு கனமாகவும், அதன் பிறகு அதை விடக் கனமாகவும் தட்டித்தடுக்கப்படும். நடக்கிறவன் சிறு பிள்ளையாக அல்லது பைத்தியக்காரனாக இருந்தால், அல்லது தொழுகிறவன் திரையை ஏற்படுத்திக் கொள்ளாமலிருந்தால் இலேசாக மட்டுமே தடுக்கப்படும்.

அல்லாஹ்வுக்காகத் தொழுகிறேன் என்ற நிய்யத்தையும், ரக்அத்துகளின் எண்ணிக்கையையும், கிப்லாவை முன்னோக்குதலையும், முன்னால் ஃபர்லில் குறிப்பிட்ட முறைகளையும் சொல்லால் மொழிவதும் சுன்னத்தாகும். அதாவது:

اُصَلِّيْ فَرْضَ الظُّهْرِ اَرْبَعَ رَكَعَاتٍ اَدَآءً مُسْتَقْبِلًا اِلَى
الْكَعْبَةِ الشَّرِيْفَةِ لِلّٰهِ اَللّٰهُ اَكْبَرُ

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

"ளுஹருடைய ஃபர்லு நான்கு ரக்அத்தை, அதாவாக, கிப்லாவை முன்னோக்கி அல்லாஹு தஆலாவிற்காகத் தொழுகிறேன்; அல்லாஹு அக்பர்" என்று கூற வேண்டும்.

இவ்வாறே ஒவ்வொரு நேரத்திற்கும் அந்தந்த நேரத்தைக் கூற வேண்டும். களா தொழுகையை களாவென்றும் மஃமூமாக இருந்தால் இந்த இமாமைப் பின்பற்றி (மஃமூமன்) என்றும் கூற வேண்டும். சுன்னத்துத் தொழுகைகளை முந்திய சுன்னத்து (கப்லிய்யா) பிந்திய சுன்னத்து (பஃதிய்யா) என்றும் குறிப்பிட வேண்டும்.

தக்பீர் கட்ட ஆரம்பிக்கும் போது இரு கைகளையும் மணிக்கட்டு வரை சட்டைக்கைகளைப் போன்ற பிடவைகளை விட்டும் நீக்கி, உயர்த்தி, கை விரல்களின் நுனிகள் காதின் மேல் பாகத்திற்கு நேராகவும், இரு பெரு விரல்களை காதுகளின் சோனைகளுக்கு நேராகவும், இரு உள்ளங்கைகளையும் புயத்துக்கு நேர்மேலாகவும், கிப்லாவுக்கு நேராகவும், உயர்த்தி தக்பீர் கூறி, கைகளை நெஞ்சுக்குக் கீழும் தொப்புளுக்கு மேலும் கையை வைத்துக் கட்ட வேண்டும். வலது கையின் உள்ளங்கை இடது கை மணிக்கட்டின் முதுகின் மீது இருக்கும் விதத்தில் கையைப் பிடிக்கவேண்டும். இஹ்யா, மஹல்லி ஆகிய கிரந்தங்களிலுள்ள விளக்கப்படி நெஞ்சுக்குக் கீழ் கைகளை வைப்பதுடன் தக்பீரை முடிக்க வேண்டும்.

தக்பீர் கூற ஆரம்பிப்பதையும் கைகளை உயர்த்துவதையும் ஒரே நேரத்தில் சேர்த்து ஆரம்பிப்பது ஏற்றமானது என்று ஸஹீஹைனில் ஹதீஸ் பதிவாகியுள்ளது. தன்கீஹ் தஹ்கீக் تَنْقِيحُ تَحْقِيقُ எனும் நூலில் அவ்விரண்டையும் ஒரே நேரத்தில் முடிப்பது சுன்னத்தென்று கூறப்பட்டுள்ளது.

மேற்கூறப்பட்ட முறைப்படியே ருகூவுக்குப் போகும் போதும், எழுந்திருக்கும் போதும், நடு அத்தஹிய்யாத்திலிருந்து எழும்பிய பின்னும், ஜனாஸா தொழுகையிலும், இரு பெருநாட்களின் தக்பீர்களிலும் கைகளை உயர்த்துவதும் வைப்பதும் சுன்னத்தாகும். நிற்கும் போதும் ருகூஇலும் இஃதிதாலிலும் இருகால்களையும் கிப்லாவுக்கு நேராக வைத்து இரு கால்களுக்குமிடையே ஒரு சாண் அளவு இடைவெளி வைத்து, கால் விரல்களை சேர்க்காமலும் அதிகம் விரிக்காமலும் வைக்க வேண்டும். தலையை அதிகம் கவிழ்ந்து கொள்ளாமல் எல்லா நிலைகளிலும் பார்வையை சுஜூது செய்யுமிடத்தளவில் செலுத்த வேண்டும். அவன் பார்வையற்றவனாக இருந்தாலும், இருளிலிருந்தாலும், கஃபாவிலிருந்தாலும் சரி. அத்தஹிய்யாத்தில் இல்லல்லாஹ் என்ற ஹம்ஸாவுடைய இடத்தில் தனது கலிமா விரலைமட்டும் உயர்த்தி பெருவிரலை அந்த கலிமாவிரலுடன் பொருத்தி தன் பார்வையைக் கலிமா விரலின் மீது வைக்க வேண்டும்.

தக்பீர் கட்டிய பின் 'துஆவுல் இஃப்திதாஹ்' (துவக்க துஆ) வாகிய வஜ்ஜஹ்துவை ஓத வேண்டும்:-

وَجَّهْتُ وَجْهِيَ لِلَّذِيْ فَطَرَ السَّمٰوَاتِ وَالْاَرْضَ حَنِيْفًا
مُسْلِمًا وَّمَآ اَنَا مِنَ الْمُشْرِكِيْنَ. اِنَّ صَلٰوتِيْ وَنُسُكِيْ
وَمَحْيَايَ وَمَمَاتِيْ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ. لَا شَرِيْكَ لَهُ
وَبِذَالِكَ اُمِرْتُ وَاَنَا مِنَ الْمُسْلِمِيْنَ.

இந்த வஜ்ஜஹ்து ஒதிய பின் தனித்துத் தொழுகிறவரும், நீளமான கிராஅத் ஓதி தொழுவதற்கு அனுமதியுடைய இமாமும் பின் வரும் துஆவையும் ஓதலாம்:

اَللّٰهُمَّ اَنْتَ الْمَلِكُ لَآ اِلٰهَ اِلَّآ اَنْتَ سُبْحَانَكَ وَبِحَمْدِكَ
اَنْتَ رَبِّيْ وَاَنَا عَبْدُكَ. ظَلَمْتُ نَفْسِيْ وَاعْتَرَفْتُ بِذَنْبِيْ
فَاغْفِرْلِيْ ذُنُوْبِيْ جَمِيْعًا اَلَا يَغْفِرُ الذُّنُوْبَ اِلَّآ اَنْتَ.

இன்னும் பின் வரும் துஆவையும் ஓதலாம்:-

اَللّٰهُمَّ بَاعِدْ بَيْنِيْ وَبَيْنَ خَطَايَايَ كَمَا بَاعَدْتَّ بَيْنَ
الْمَشْرِقِ وَالْمَغْرِبِ. اَللّٰهُمَّ نَقِّنِيْ مِنْ خَطَايَايَ كَمَا يُنَقَّى
الثَّوْبُ الْاَبْيَضُ مِنَ الدَّنَسِ. اَللّٰهُمَّ اغْسِلْنِيْ مِنْ خَطَايَايَ
كَمَا يُغْسَلُ الثَّوْبُ الْاَبْيَضُ بِالْمَآءِ وَالثَّلْجِ وَالْبَرَدِ.

பிறகு அவூது பில்லாஹி ஓதி சூரத்துல் ஃபாத்திஹா ஏழு ஆயத்துகளையும் வக்ஃபு வைத்து ஓதவேண்டும். அதாவது, அதிலுள்ள ஏழு ஆயத்துகளில் ஒவ்வொரு ஆயத்தையும் நிறுத்தி ஓதவேண்டும். ஏனெனில், முன்னாலுள்ள ஆயத்து பின்னாலுள்ள ஆயத்துடன் கருத்தில் வேறாக இருப்பதனால். எனவே சில ஆயத்துகளின் முடிவில் சேர்த்து ஓதுவதற்குரிய 'ل' என்ற அடையாளம் போடப்பட்டிருந்தாலும் நிறுத்தியே ஓதவேண்டும்.

ஜூஃபிய்யாக்களிலும், ஃபுகஹாக்களிலும் சிலர், பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர் ரஹீமில் ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன் என்று சேர்த்தும், அன்அம்த அலைஹிம் என்பதில் நிறுத்தியும் ஓதுவார்கள். ஆனால், ஒரே மூச்சில் பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர் ரஹீம் அல் ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன் என்று ஓதினால் நிறுத்தி ஓதுகிற சுன்னத்தும், சேர்த்து ஓதுகிற சுன்னத்தும் உண்டாகிவிடும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

சூரத்துல் ஃபாத்திஹா ஓதி முடிந்தவுடன் சற்று நேரம் வாய் மூடி இருந்து

رَبِّ اغْفِرْلِيْ اٰمِيْنْ يَارَبَّ الْعَالَمِيْنَ.

என்று சொல்லவும். இவ்வாறே தக்பீருக்கும் வஜ்ஜஹ்த்துக்கு மிடையிலும், வஜ்ஜஹ்த்துக்கும் அஊதுக்குமிடையிலும், அஊதுக்கும் பிஸ்மில்லாஹ்வுக்கு மிடையிலும், இன்னும் சூரத்துல் ஃபாத்திஹா ஓதி முடிந்தபின் ஆமீனுக்கு மிடையிலும், ஆமீனுக்கும் சூரத்துக்கு மிடையிலும், சூரத்துக்கும் ருகூவுக்கு மிடையிலும் சிறிது நேரம் வாய் மூடி இருக்க வேண்டும்; இது சுன்னத்தாகும். வாய் மூடி இருப்பதனுடைய கால அளவு, சுப்ஹானல்லாஹ் என்று ஓதும் அளவாகும்.

"எவரேனும் ஒருவர் சூரத்துல் ஃபாத்திஹாவை பிஸ்மியுடன் சேர்த்து ஓதினால் அவருடைய பாவங்களை நான் மன்னிப்பேன்" என்று அல்லாஹு ஃதஆலா கூறியதாக ஜீப்ரீல், மீகாயீல், இஸ்ராஃபீல் (அலைஹிமுஸ்ஸலாம்) ஆகியோர் அறிவித்துள்ளார்கள் என ஷைகுல் அக்பர் முஹ்யித்தீன் இப்னுல் அரபீ (ரஹ்) அவர்கள் தங்களுடைய "புதூஹாத்" என்ற நூலின் 560 ஆவது பாடத்தில் கூறியுள்ளார்கள்.

ஐந்து நேர ஃபர்லான தொழுகைகளின் முந்திய இரண்டு ரக்அத்துகளிலும் ஜனாஸா தொழுகையைத் தவிர மற்றுமுள்ள தொழுகைகள் அனைத்திலும் சூரத்துல் ஃபாத்திஹாவுக்குப்பின் ஏதேனும் ஓர் ஆயத்தை ஓதுவது சுன்னத்தாகும். அதில் ஏற்றமாகிறது. மூன்று ஆயத்துகளாகும், இன்னும் அதைவிட ஏற்றமாகிறது முதல் ரக் அத்தில் மற்றொரு சூரத்தும் இரண்டாம் ரக் அத்தில் ஒரு சூரத்தும் ஓதுவதாகும். முதல் ரக்அத்தில் ஓதுகிற சூரத்தைவிட இரண்டாவது ரக்அத்தில் ஓதுகிற சூரத்து சிறியதாகவும் அடுத்த சூரத்தாகவும் இருக்கவேண்டும்.

ளுஹரிலும், சுப்ஹிலும் (ஃபர்ளில்) சூரத்துல் ஹுஜ்ராத்திலிருந்து அம்மயதஸாஅலூன் வரையிலுள்ள சூராக்களில் ஏதேனுமொரு சூரத்தையும், அஸ்ரிலும் இஷாவிலும் அம்மவிலிருந்து வள்ளுஹா சூராவரையிலும் மஃரிபில் வள்ளுஹா விலிருந்து கடைசி வரையிலும் ஏதேனுமொரு சூரத்து ஓதுவது சுன்னத்தாகும்.

சில தொழுகைகளுக்குச் சில சூராக்கள் குறிப்பாக ஓத வேண்டுமென ஹதீஸில் கூறப்பட்டுள்ளது. அவ்வாறு குறிப்பிடப்பட்ட இரண்டு சூராக்களில் முந்தியது நீளமாகவும் இரண்டாவது சிறியதாகவும் இருக்கவேண்டுமென்பதையோ, அவை அடுத்து அடுத்துள்ளதாயிருக்க வேண்டுமென்பதையோ கவனிக்கக்கூடாது. ஆனால் நேரம் நெருக்கமாயிருக்கும் பொழுது குறிப்பாக்கப்பட்ட நீளமான சூராவைவிட குறிக்கப்படாத சிறியதான இரண்டு சூராக்களை ஓதுவது ஏற்றமாகும்.

குறிப்பாக்கப்பட்ட சூரத்துகள் இரண்டில் ஒன்று அவனுக்குப் பாடமுள்ளதாகவும் மற்றொன்று பாடமில்லாமலும் இருந்தால், பாடமுள்ளதை முதல் ரக்அத்தில் ஓதிவிட்டு இரண்டாவது ரக்அத்தில் அதற்கு கீழுள்ள சிறிய சூரா ஒன்றை ஓதிக்கொள்ளலாம். தொடராய் ஓதுவது தவறிவிட்டாலும் பரவாயில்லை. முதலில் ஓதியதற்குக் கீழுள்ள சூரா எதுவும் பாடமில்லையானால் மேலே உள்ளதை ஓதிக்கொள்ளலாம்.

## குறிப்பான சூராக்களை ஓதவேண்டிய தொழுகைகள்

குறிப்பான சூராக்களை ஓத வேண்டிய தொழுகை நேரங்களாவன: வெள்ளிக்கிழமை இரவு மஃரிபில் முதல் ரக்அத்தில் சூரத்துல் ஃபாத்திஹாவுக்குப்பின் குல்யா அய்யுஹல் காஃபிரூன் சூராவும், இரண்டாவது ரக்அத்தில் குல்ஹுவல்லாஹு அஹத் சூராவும், இஷாவிலும், ஜும்ஆவிலும் முதலில் யுஸப்பிஹு லில்லாஹி என்று துவங்கும் (ஜும்ஆ) சூராவும், இரண்டாவது ரக்அத்தில் இதா ஜாஅகல் முனாஃபிகூன் சூராவும், அல்லது முதல் ரக்அத்தில் ஸப்பிஹிஸ்ம ரப்பிக சூராவும், இரண்டாவது ரக்அத்தில் ஹல் அதாக சூராவும், ஜும்ஆ நாளில் சுப்ஹில் முதலாவது ரக்அத்தில் அலிஃப்லாம் மீம் (ஸஜ்தா) சூராவும், இரண்டாவது ரக்அத்தில் ஹல்அதா அலல் இன்ஸானி சூராவும், சனிக்கிழமை இரவு மஃரிபில் முதலில் சூரத்துல் ஃபலக்கும், இரண்டாவதில் சூரத்துன்னாஸும் சுன்னத்தாக்கப்படும். பிரயாணத்தி லிருப்பவர் எந்த நாளிலும் சுப்ஹில் குல்யா அய்யுஹல் காஃபிரூன் சூராவும் குல்ஹுவல்லாஹு சூராவும் ஓதுவது சுன்னத்தாகும். இவ்வாறே ஃபஜ்ருடைய சுன்னத்து, மஃரிபுடைய சுன்னத்து, தவாஃப்தொழுகை, தஹிய்யத்துல் மஸ்ஜித், இஸ்திகாரா தொழுகை இஹ்ராமுடைய தொழுகை ஆகியவற்றில் இந்த இரண்டு சூராக்களையும் ஓதுவது சுன்னத்தாகும்.

குறிப்பாக்கப்பட்ட சூராக்களை ஓதும் தொழுகையில் முதல் ரக்அத்தில் அந்த சூராவை ஓதுவதற்கு மறந்துவிட்டு, வேறு சூராவை ஆரம்பித்துவிட்டாலும் அதனை முறித்துவிட்டு குறிப்பான சூரத்தை ஓதுவது சுன்னத்தாகும்.

குறிப்பான இரண்டு சூரத்துகளில் ஒன்றை முதல் ரக்அத்தில் ஓதாமல் வேறொன்றை ஓதிவிட்டால் இரண்டாவது ரக்அத்தில் அந்த இரண்டு சூராக்களையும் சேர்த்து ஓதுவான்.

இரண்டாம் ரக்அத்தில் ஓதவேண்டியதை முதல் ரக்அத்தில் ஓதிவிட்டால், முதல் ரக்அத்தில் ஓதவேண்டியதை இரண்டாம் ரக்அத்தில் ஓதுவான்.

ஒரு மனிதனுக்கு மூல வியாதி இருந்து நபி ஸல்லால்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம், "யாரசூல்லல்லாஹ், மூலத்தின் வேதனை உண்டாயிருக்கிறது" என்று கூறிய பொழுது சுப்ஹுடைய சுன்னத்தில் முதல் ரக்அத்தில் அலம் நஷ்ரஹ் சூராவும் இரண்டாவது ரக்அத்தில் 'அலம்தரகைஃப' வும் ஓதும்படியாக அந்த மனிதனுக்கு நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதாக ஹதீஸில் கூறப்பட்டுள்ளது. இவ்விரண்டு ஹதீஸ்களையும் ஒன்று சேர்ப்பதற்காக முதல் ரக்அத்தில் அலம் நஷ்ரஹ், குல்யா அய்யுஹல் காஃபிரூன் இரண்டையும், இரண்டாவது ரக்அத்தில் அலம் தரகைஃப, குல்ஹுவல்லாஹு ஆகிய இரண்டையும் ஓதி சுப்ஹுடைய சுன்னத்தைத் தொழலாம்.

சுன்னத்தான ஓதல்களை நிரப்பமாக ஓதுவது சுன்னத்தென்று கூறப் பட்டிருப்பதெல்லாம், தனித்துத் தொழுகிறவருக்கும், நீளமான சூரத்தை ஓதும்படி மஃமூம்களால் வாயால் சொல்லப்பட்ட இமாமுக்கும், இமாமுடைய கிராஅத்தை மஃமூம்கள் கேட்காதிருக்கும் பொழுதும், கணவனிடம் அனுமதி பெற்று வந்து மஃமூமாகத் தொழும் பெண்ணுக்கு இமாமத் செய்யும் பொழுதில்தான். இந்த நிலைகளிலெல்லாம் நீண்ட கிராஅத் ஓதித் தொழுவது கூடும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

### குர்ஆன் ஓதும்போது சில இடங்களில் ஓதவேண்டிய சுன்னத்தான ஓதல்கள்

தொழுகையிலோ, வெளியிலோ குர்ஆன் ஓதும்பொழுதும், அதனைக் கேட்கும்பொழுதும், ரஹ்மத்துடைய ஆயத்து வந்தால் அல்லாஹ்விடம் அந்த ரஹ்மத்தை வேண்டுவதும், வேதனையுடைய ஆயத்து வந்தால் அதனை விட்டுப் பாதுகாப்புத் தேடுவதும், தக்பீர், தஹ்மீது, தஸ்பீஹ், இஸ்திங்ஃபார் ஆகியவை வந்தால் பின்வருவது போல் அததற்குத் தோதுவாக உள்ளவைகளைச் சொல்வதும், தொழுகையிலும், வெளியிலும் சுன்னத்தாகும். ஆனால், சூரத்துல் ஃபாத்திஹா ஓதும்பொழுது இடையில் அவைகளை ஓதக்கூடாது. அவ்வாறு ஓதினால் ஃபாத்திஹாவைத் திரும்ப ஓதவேண்டும்.

سَبِّحِ اسْمَ رَبِّكَ الْأَعْلَى ۝ என்றோதும் பொழுது

سُبْحَانَ رَبِّيَ الْأَعْلَى۔ என்றும்

فَسَبِّحْ بِاسْمِ رَبِّكَ الْعَظِيمِ ۝ என்றோதும்பொழுது

سُبْحَانَ رَبِّيَ الْعَظِيمِ۔ என்றும்

وَرَبَّكَ فَكَبِّرْ ۝ وَكَبِّرْهُ تَكْبِيرًا ۝ ஆகியவற்றை ஓதும்பொழுது

اَللّٰهُ اَكْبَرُ۔ என்றும்

فَسَبِّحْ بِحَمْدِ رَبِّكَ وَاسْتَغْفِرْهُ ۚ إِنَّهُ كَانَ تَوَّابًا ۝ என்றோதும்பொழுது

سُبْحَانَ اللّٰهِ وَبِحَمْدِهٖ اَسْتَغْفِرُ اللّٰهَ وَاَتُوْبُ اِلَيْهِ۔ என்றும்

فَيُعَذِّبُهُ اللّٰهُ الْعَذَابَ الْأَكْبَرَ ۝ என்றோதும்பொழுது

اَللّٰهُمَّ ادْفَعْ عَنَّا الْعَذَابَ۔ என்றும்

إِنَّ عَلَيْنَا حِسَابَهُمْ ۝ என்றோதும்பொழுது

اَللّٰهُمَّ يَسِّرْ عَلَيْكَ حِسَابَنَا. என்றும்,

وَاَمَّا بِنِعْمَةِ رَبِّكَ فَحَدِّثْ ۝ என்றோதும்பொழுது

اَلْحَمْدُ لِلّٰهِ. என்றும்,

اَلَيْسَ ذٰلِكَ بِقَادِرٍ عَلٰٓى اَنْ يُّحْيِيَ الْمَوْتٰى ۝ என்றோதும்பொழுது

سُبْحَانَكَ فَبَلٰى. என்றும்,

فَمَنْ يَّأْتِيْكُمْ بِمَآءٍ مَّعِيْنٍ ۝ என்றோதும்பொழுது

اَللّٰهُ رَبُّ الْعٰلَمِيْنَ. என்றும்,

وَلَوْ اَنَّهُمْ اِذْ ظَّلَمُوْٓا اَنْفُسَهُمْ جَآءُوْكَ என்ற ஆயத்தின் கடைசி வரை ஓதினால்

اَللّٰهُمَّ اِنِّيْ ظَلَمْتُ نَفْسِيْ وَجِئْتُكَ مُسْتَغْفِرًا فَاغْفِرْلِيْ. என்றும்

تَبَارَكَ اسْمُ رَبِّكَ ذِى الْجَلَالِ وَالْاِكْرَامِ என்ற சூரத்துர் ரஹ்மானுடைய கடைசி ஆயத்தை ஓதும்பொழுது

وَلَا بِشَيْءٍ مِّنْ نِّعَمِكَ رَبَّنَا نُكَذِّبُ فَلَكَ الْحَمْدُ وَلَكَ الشُّكْرُ என்றும் ஓதிக்கொள்ள வேண்டும். இவ்வாறே ஓதுகின்ற ஆயத்துகளுக்குப் பொருத்தமானவற்றைக் கூறிக்கொள்ள வேண்டும்.

குர்ஆனில் எந்த இடத்தில் எந்த ஆயத்தை ஓதினாலும் துவக்கத்தில் அஊதுவும், பிஸ்மியும் ஓதுவது சுன்னத்து. பராஅத் என்று துவங்கும் சூரத்து தவிர. அதில் ஆரம்பத்திலிருந்து கடைசி வரை எந்த இடத்தில் ஓதினாலும் பிஸ்மில்லாஹ் ஓதுவது சுன்னத்தாக்கப்படவில்லை. ரமலான் மாதத்தில் தராவீஹ் தொழுகையில் குர்ஆனைத் தொடராக ஓதுபவர்கள் அஊதுவையும் சூராக்களின் ஆரம்பமல்லாத இடங்களில் பிஸ்மில்லாஹ்வையும் மெதுவாக ஓதுதல் சுன்னத்தாகும்.

நிலையிலிருந்து ருகூவுக்குப் போகும் பொழுது இரு கைகளையும் உயர்த்தி தக்பீர் சொல்லியவாறு குனிந்து, இருகைகளின் விரல்களை மூடாமலும் அதிகமாக விரிக்காமலும் முழங்கால்களின் மேல் அழுத்தி வைத்து, "சுப்ஹான ரப்பியல் அளீம் வபி ஹம்திஹி " என்று மூன்று தடவை ஓதவேண்டும். இதைவிட அதிகப் படுத்துவதை விரும்பாத ஜமாஅத்துடைய இமாமும், பல ஜமாஅத்துகள் நடத்தும் இமாமும் இதைவிட அதிகப்படுத்துவது கூடாது. அதிகப்படுத்தி ஓதுவது யாருக்கு கூடுமோ அவர்கள் அதை பதினொரு தடவை ஓதிய பிறகு:

اَللّٰهُمَّ لَكَ رَكَعْتُ وَبِكَ اٰمَنْتُ وَلَكَ اَسْلَمْتُ خَشَعَ لَكَ
سَمْعِيْ وَبَصَرِيْ وَعَظْمِيْ وَعَصَبِيْ وَشَعْرِيْ وَبَشَرِيْ
وَمَا اسْتَقَلَّتْ قَدَمِيْ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ سُبْحَانَكَ
اَللّٰهُمَّ وَبِحَمْدِكَ اَللّٰهُمَّ اغْفِرْلِيْ

என்று ஓதவும்.

ருகூஇலிருந்து (இஃதிதால்) சிறு நிலைக்கு வரும்பொழுது:

سَمِعَ اللّٰهُ لِمَنْ حَمِدَهٗ

என்று கூறி, நிலைக்கு வந்த பின்:

رَبَّنَا لَكَ الْحَمْدُ مِلْأَ السَّمٰوَاتِ وَمِلْأَ الْاَرْضِ وَمِلْأَ مَا شِئْتَ
مِنْ شَيْئٍ بَعْدُ

என்று கூறவேண்டும். இதைவிட அதிகமாக ஓதுவதற்கு ஆகுமான இமாமும், மஃமூமும், தனித்துத் தொழுகிறவரும் பின் வரும் திக்ரையும் சேர்த்து ஓதலாம்:

اَهْلَ الثَّنَاءِ وَالْمَجْدِ اَحَقُّ مَا قَالَ الْعَبْدُ وَكُلُّنَا لَكَ عَبْدٌ.
لَا مَانِعَ لِمَا اَعْطَيْتَ وَلَا مُعْطِيَ لِمَا مَنَعْتَ وَلَا يَنْفَعُ
ذَا الْجَدِّ مِنْكَ الْجَدُّ.

சுப்ஹுடைய இரண்டாம் ரக்அத்தின் இஃதிதாலில் இருகைகளையும் இரு புஜங்களுக்கு நேராக ஏந்தி குனூத்து ஓதவேண்டும். ஏதேனும் துன்பம், ஆபத்து, நோய் நொடிகள் ஊர் முழுதும் பிடித்தால், ஐந்து நேரத் தொழுகைகளிலும் கடைசி இஃதிதாலில் குனூத்து ஓதுவது சுன்னத்தாகும். அதில் அந்தத் துன்பத்தை நீக்குவதற்காகக் கேட்கும்பொழுது மட்டும் இருகைகளையும் கவிழ்த்து ஓதவேண்டும். ரமலானுடைய பதினாறாவது இரவு முதல் கடைசி வரை வித்ரின் கடைசி ரக்அத்தின் இஃதிதாலிலும் குனூத்து ஓதுதல் சுன்னத்தாக்கப்படும். ஆனால் சுப்ஹுடைய குனூத்தைத்தவிர மற்ற குனூத்தைவிட்டால் ஸஜ்தா ஸஹ்வு செய்ய வேண்டியதில்லை.

## குனூத்தும், அதனுடன் சேர்ந்த துஆக்களும்

குனூத்தில் இன்ன துஆதான் ஓதவேண்டுமென்பது குறிப்பாக்கப்படவில்லையானாலும், நபி (ஸல்) அவர்களின் மூலம் கூறப்பட்டுள்ள பின்வரும் துஆ ஏற்றமானதாகும்:-

اَللّٰهُمَّ اهْدِنِيْ فِيْمَنْ هَدَيْتَ . وَعَافِنِيْ فِيْمَنْ عَافَيْتَ
وَتَوَلَّنِيْ فِيْمَنْ تَوَلَّيْتَ . وَبَارِكْ لِيْ فِيْمَآ اَعْطَيْتَ . وَقِنِيْ رَبَّنَا
شَرَّ مَا قَضَيْتَ . فَاِنَّكَ تَقْضِيْ وَلَا يُقْضٰى عَلَيْكَ . فَاِنَّهُ لَا
يَذِلُّ مَنْ وَّالَيْتَ . وَلَا يَعِزُّ مَنْ عَادَيْتَ . تَبَارَكْتَ رَبَّنَا
وَتَعَالَيْتَ . فَلَكَ الْحَمْدُ عَلٰى مَا قَضَيْتَ . وَاَسْتَغْفِرُكَ
وَاَتُوْبُ اِلَيْكَ . وَصَلَّى اللّٰهُ عَلَى النَّبِيِّ مُحَمَّدٍ وَّاٰلِهٖ
وَصَحْبِهٖ وَسَلَّمَ .

என்று ஓதவும் (மேலும்:

رَبِّ اغْفِرْ وَارْحَمْ وَاَنْتَ خَيْرُ الرّٰحِمِيْنَ .

என்ற துஆவையும் சேர்த்துக்கொள்ளலாம்)

துன்பங்கள் ஏற்பட்ட நேரத்தில் பின் வரும் துஆவையும் சேர்த்து ஓதவும்:

اَللّٰهُمَّ ادْفَعْ عَنِّيْ مِنَ الْبَلَآءِ وَالْوَبَآءِ وَالْحُمّٰى وَالْجُدَرِيِّ
وَالطَّاعُوْنِ مَا لَا يَدْفَعُهُ اَحَدٌ غَيْرُكَ .

இமாம் குனூத்து ஓதும்போது மஃமூம் ஆமீன் கூறுவதும்,

فَاِنَّكَ تَقْضِيْ

என்பதிலிருந்து கடைசிவரை இமாமுடன் சேர்ந்து தானும் ஓதி சலவாத்துச் சொல்லும்போது ஆமீன் கூறுவதும் சுன்னத்தாகும்.

நீளமான குனூத்து ஓதுவதற்கு அனுமதியுள்ளவர்கள் உமர் (ரலி) அவர்களுடைய குனூத்தை அதிகப்படுத்திக்கொள்ளவும். அதாவது;

اَللّٰهُمَّ اِنَّا نَسْتَعِيْنُكَ وَنَسْتَغْفِرُكَ وَنَسْتَهْدِيْكَ وَ
نَسْتَنْصِرُكَ وَنَسْتَشْفِيْكَ وَنُؤْمِنُ بِكَ وَنَتَوَكَّلُ عَلَيْكَ
وَنُثْنِيْ عَلَيْكَ الْخَيْرَ كُلَّهٗ وَنَشْكُرُكَ وَلَا نَكْفُرُكَ وَنَخْلَعُ
وَنَتْرُكُ مَنْ يَّفْجُرُكَ . اَللّٰهُمَّ اِيَّاكَ نَعْبُدُ وَلَكَ نُصَلِّيْ

وَنَسْجُدُ وَإِلَيْكَ نَسْعٰى وَنَحْفِدُ اٰمَنَّا بِكَ وَنَرْجُوْا
رَحْمَتَكَ وَنَخْشٰى عَذَابَكَ اِنَّ عَذَابَكَ الْجِدَّ بِالْكُفَّارِ
مُلْحِقٌ. اَللّٰهُمَّ عَذِّبِ الْكَفَرَةَ الَّذِيْنَ يَصُدُّوْنَ عَنْ
سَبِيْلِكَ وَيُكَذِّبُوْنَ رُسُلَكَ وَيُقَاتِلُوْنَ اَوْلِيَآئَكَ وَ
يَجْعَلُوْنَ مَعَكَ اِلٰهًا اٰخَرَ. لَآاِلٰهَ اِلَّآ اَنْتَ تَبَارَكْتَ وَ
تَعَالَيْتَ عَمَّا يَقُوْلُ الظَّالِمُوْنَ وَالْجَاحِدُوْنَ عُلُوًّا كَبِيْرًا.
اَللّٰهُمَّ اغْفِرْ لِلْمُسْلِمِيْنَ وَالْمُسْلِمَاتِ وَالْمُؤْمِنِيْنَ وَ
الْمُؤْمِنَاتِ وَاَصْلِحْ ذَاتَ بَيْنِهِمْ وَاَلِّفْ بَيْنَ قُلُوْبِهِمْ
وَاجْعَلْ فِيْ قُلُوْبِهِمُ الْاِيْمَانَ وَالْحِكْمَةَ وَثَبِّتْهُمْ عَلٰى
مِلَّةِ خَلِيْلِكَ وَشَرِيْعَةِ رَسُوْلِكَ وَاَوْزِعْهُمْ اَنْ يَّشْكُرُوْا
نِعْمَتَكَ وَاَنْ يُّوْفُوْا بِعَهْدِكَ الَّذِيْ عَاهَدْتَّهُمْ عَلَيْهِ
وَانْصُرْهُمْ عَلٰى عَدُوِّكَ وَعَدُوِّهِمْ اِلٰهَ الْحَقِّ وَاجْعَلْنَا
مِنْهُمْ وَصَلَّى اللّٰهُ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِهٖ
وَصَحْبِهٖ وَسَلَّمَ.

ஒரு சொற்படி எல்லா தினங்களிலும் வித்ரில் குனூத்து ஓதலாம் என்று கூறப்பட்டுள்ளது. இதில் அபிப்பிராயபேதம் இருக்கிறது.

குனூத்திலும் மற்றுமுள்ள துஆக்களிலும் ஒருமையாகவோ, பன்மையாகவோ எவ்வாறு ஹதீஸில் வந்துள்ளதோ அவ்வாறே ஓதவேண்டும். ஆனால் رَبِّ اغْفِرْ لِيْ என்ற துஆவை மட்டும் இமாமாக இருந்தாலும் رَبِّ اغْفِرْ لِيْ என்று ஒருமையாகவே ஓத வேண்டும் என்ற ஹதீஸில் வந்துள்ளது.

சுஜூதில் இருகைகளின் விரல்களையும் இருகால்களின் விரல்களையும் கிப்லாவுக்கு நேராகவும், முழுமையாகச் சேர்க்காமலும், அதிகம் விரிக்காமலும், தோள் புஜத்திற்கு நேராகவும், தரையில் வைக்க வேண்டும்; மூக்கையும் நன்றாக அழுத்தி வைக்க வேண்டும்.

ருகூஇலும், சுஜூதிலும் ஆண்கள் இரு கைகளையும் விலாவை விட்டு நீக்கி இடைவெளி வைக்க வேண்டும்; பெண்கள் கைகளை விலாவுடன் சேர்த்து வைக்கவேண்டும். பிறகு மூன்று தடவை

سُبْحَانَ رَبِّيَ الْأَعْلَى وَبِحَمْدِهِ

கூறவேண்டும். இதைவிட அதிகப் படுத்த ஆகுமான இமாமும், மஉமூமும், தனித்துத் தொழுபவரும், பின்வரும் துஆவை ஒரு தடவை ஓதவும்.

اَللّٰهُمَّ لَكَ سَجَدْتُ وَبِكَ اٰمَنْتُ وَلَكَ اَسْلَمْتُ اَنْتَ رَبِّيْ
سَجَدَ وَجْهِيْ لِلَّذِيْ خَلَقَهُ وَصَوَّرَهُ وَشَقَّ سَمْعَهُ وَ
بَصَرَهُ بِحَوْلِهٖ وَقُوَّتِهٖ فَتَبَارَكَ اللّٰهُ اَحْسَنُ الْخَالِقِيْنَ.

பிறகு நடு இருப்பை இடது காலை மடக்கி விரித்து, வலது காலை, விரல்களின் உட்பாகத்தை பொருப்பாய் நட்டு வைத்து, இரு கைகளையும் இரு தொடைகளின் மீது வைத்து, விரல்களை கிப்லாவுக்கு நேராக ஆக்கிப் பின் வரும் துஆவை ஓதவேண்டும்:

رَبِّ اغْفِرْلِيْ وَارْحَمْنِيْ وَاجْبُرْنِيْ وَارْفَعْنِيْ وَارْزُقْنِيْ
وَاهْدِنِيْ وَعَافِنِيْ.

இத்துடன் وَاعْفُ عَنِّيْ என்றும் சேர்த்து ஓதலாம். இன்னும் ஆரம்பத்தில் رَبِّ اغْفِرْلِيْ என்பதை மூன்று தடவை ஓதிவிட்டு பிறகு மற்றதை ஓதலாம் என்றும் கூறப்பட்டுள்ளது.

இவ்லாறு இந்த துஆவைச் சேர்த்து ஓதுவதனால் குறுகிய ஒரு ஃபர்ளை நீள மாக்கியதாகக் கருதப்படமாட்டாது.

இரு சுஜூதுகளுக்குப்பிறகு நிலைக்குப் போகும்முன் இருக்கிற இஸ்திராஹத் (ஒய்வு) இருப்பிலும், நடு அத்தஹிய்யாத்துடைய இருப்பிலும், ஸஜ்தா ஸஹ்வு செய்ய வேண்டியிருக்கிறவனுடைய கடைசி அத்தஹிய்யாத்திலும், மஸ்பூக்கானவன் இமாமுடன் இருக்கிற கடைசி இருப்பிலும் மேற்கண்டவிதமான இருப்பு (இரண்டு ஸஜ்தாக்களுக்கிடையில் இருக்கும் நடு இருப்பு போல் இருப்பது) சுன்னத்தாகும். இதற்கு اِفْتِرَاشْ (காலின் மேல் சவனத்தை (புட்டத்தை) வைத்து உட்காருதல் என்று கூறப்படும்)

பிறகு அத்தஹிய்யாத்திற்காக வரும்பொழுது இருகைகளையும் தரையில் அழுத்தி எழுந்து உட்கார்ந்து, இடதுகைவிரல்கள் கிப்லாவை முன்னோக்கி இருக்கும்படி நீட்டி இடது முழங்காலின் மீது வைத்து, வலது கையில் கலிமா விரலைத் தவிர மற்ற விரல்களை மூடிக்கொண்டு, கலிமா விரலின் நுனியைச் சற்றுச் சாய்த்து நீட்டி, அதனருகில் பெருவிரலைச் சேர்த்து வலது முழங்காலின் மீது வைத்து அத்தஹிய்யாத்து ஓத வேண்டும். பெரு விரலின் நுனியைக் கலிமா விரலின் அருகில் வைத்து இல்லல்லாஹ் என்று கூறும் பொழுது ஹம்ஸைச் சொல்லும் நேரத்தில் கலிமா விரலை உயர்த்த வேண்டும்.

இவ்வாறு செய்வதற்குரிய காரணத்தை விளக்கி 'கல்யூபி' என்ற நூலின் விரிவுரையில் எழுதுவதாவது; அவ்விரலின் ஓரத்திலுள்ள நரம்பு இதயத்துடன் தொடர்பாக உள்ளதென்றும் அதனை அசைப்பதினால் இதயம் ஏகத்துவத்தன்மையின் நினைவில் ஈடுபடும் என்றும் கூறப்பட்டுள்ளது.

இவ்வாறே முஸாஃபஹா செய்கின்ற நேரத்தில் ஒருவருடைய வலக்கையை மற்றவருடைய வலக்கையுடனும், இடக்கையை இடக்கையுடனும் சேர்த்து மேற்கூறியபடி அழுத்துவதால் இருவருக்குமிடையில் அன்பு பிணைப்பு உண்டாகுமென்று கூறப்பட்டுள்ளது.

அத்தஹிய்யாத்தில் இல்லல்லாஹ் என்பதில் ஹம்ஸைக் கூறும்பொழுது கலிமா விரலின் நுனியை சற்று உயர்த்தி பார்வையை அதன் மீது வைக்க வேண்டும்.

## அத்தஹிய்யாத்தும் அதனுடன் ஓதக்கூடியதும்

اَلتَّحِيَّاتُ الْمُبَارَكَاتُ الصَّلَوَاتُ الطَّيِّبَاتُ لِلّٰهِ اَلسَّلَامُ عَلَيْكَ
اَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهُ. اَلسَّلَامُ عَلَيْنَا وَعَلٰى عِبَادِ
اللّٰهِ الصَّالِحِيْنَ. اَشْهَدُ اَنْ لَّآ اِلٰهَ اِلَّا اللّٰهُ وَاَشْهَدُ اَنَّ مُحَمَّدًا
رَّسُوْلُ اللّٰهِ. اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰٓى اٰلِ سَيِّدِنَا
مُحَمَّدٍ كَمَا صَلَّيْتَ عَلٰى سَيِّدِنَآ اِبْرَاهِيْمَ وَعَلٰٓى اٰلِ سَيِّدِنَآ اِبْرٰهِيْمَ
وَبَارِكْ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَعَلٰٓى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ كَمَا
بَارَكْتَ عَلٰى سَيِّدِنَآ اِبْرَاهِيْمَ وَعَلٰٓى اٰلِ سَيِّدِنَآ اِبْرَاهِيْمَ
اِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ. اَللّٰهُمَّ اغْفِرْلِيْ مَا قَدَّمْتُ وَمَآ اَخَّرْتُ وَ
مَآ اَسْرَرْتُ وَمَآ اَعْلَنْتُ وَمَآ اَسْرَفْتُ وَمَآ اَنْتَ اَعْلَمُ بِهٖ

مِنِّي إِنَّكَ أَنْتَ الْمُقَدِّمُ وَأَنْتَ الْمُؤَخِّرُ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ سُبْحَانَكَ
إِنِّي كُنْتُ مِنَ الظَّالِمِيْنَ. اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُبِكَ مِنْ عَذَابِ الْقَبْرِ
وَمِنْ عَذَابِ النَّارِ وَمِنْ فِتْنَةِ الْمَحْيَا وَالْمَمَاتِ وَمِنْ فِتْنَةِ
الْمَسِيْحِ الدَّجَّالِ. اَللّٰهُمَّ إِنِّيْ ظَلَمْتُ نَفْسِيْ ظُلْمًا كَثِيْرًا
كَبِيْرًا فَاغْفِرْلِيْ مَغْفِرَةً مِّنْ عِنْدِكَ إِنَّكَ أَنْتَ الْغَفُوْرُ
الرَّحِيْمُ. اَللّٰهُمَّ يَا مُقَلِّبَ الْقُلُوْبِ ثَبِّتْ قَلْبِيْ عَلٰى دِيْنِكَ
وَطَاعَتِكَ وَإِيْمَانِكَ يَا اَللّٰهُ.

எல்லாத் தொழுகைகளிலும் கடைசி அத்தஹிய்யாத்தில் உட்காரும்பொழுது வலது காலை நட்டு வைத்து, இடது காலை அதன் கீழ் வெளிப்படுத்தி உட்காரவேண்டும். இதற்கு அரபியில் تَوَرُّكْ தரையின் மேல் சவனத்தை வைத்து உட்காருதல் என்று கூறப்படும். நடு இருப்பில் காலின் மேல் சலனத்தை வைத்து உட்கார வேண்டும். அதற்கு اِفْتِرَاشْ என்று கூறப்படும்.

இமாமாகிறவர் அத்தஹிய்யாத்திலும், சலவாத்திலும் வாஜிபான அளவுக்கு சுருக்கமாக ஓதுதல் சுன்னத்தாகும். அத்தஹிய்யாத் ஓதி முடிந்தபின் ஸலாம் கொடுப்பவரின் கன்னத்தை அவருக்கு வலப்புறமிருப்பவர் பார்க்கின்ற அளவுக்குத் திரும்பி அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹி வபரக்காத்துஹு என்று கூறவேண்டும். ஸலாம் கூறும்பொழுது தொழுகையை விட்டு நீங்குவதை நிய்யத்துச் செய்வதுடன் வலப்புறம் ஸலாம் கொடுக்கும்பொழுது வலப்புறமிருக்கும் இமாமுக்கும், ஜமாஅத்தினருக்கும், முஃமின்களான மனிதர்களுக்கும், ஜின்களுக்கும், மற்றும் மலக்குகளுக்கும் ஸலாம் சொல்வதை நிய்யத்துச் செய்யவேண்டும். அவ்வாறே இடப்புறம் ஸலாம் கொடுக்கும்போதும் நிய்யத்துச் செய்து கொள்ளவேண்டும். இடப்புறம் ஸலாம் கொடுப்பதற்குச் சற்றுமுன் தலையை மேலே கொஞ்சம் உயர்த்தி, பிறகு கீழே கவிழ்த்து இடப்புறம் ஸலாம் கொடுக்கவேண்டும். அவர்களுக்கு தான் ஜவாப் சொன்னதாகவும் நிய்யத்துச் செய்யவேண்டும். பின்னால் உள்ளவர்களுக்கும் முன்னால் உள்ளவர்களுக்கும் இரண்டு ஸலாமில் ஒன்றைக் கொண்டு ஸலாம் சொன்னதாகவும் அவர்கள் பதில் சொன்னதாகவும் நினைக்கவேண்டும்.

தனக்கு முன்னால் நேராக இருப்பவருக்கு முதல் ஸலாமிலேயே ஸலாமையும் பதிலையும் நிய்யத்துச் செய்தல் சிறப்பு முதல் ஸலாமில் தனது வலது கன்னத்தைத் திருப்பியது போலவே இரண்டாம் ஸலாமிலும் இடப்பக்கம் இருப்பவருக்குத் தன் கன்னம் தெரியுமளவுக்குத் திரும்புதல் சுன்னத்தாகும். மேலும் ஸலாமை அதிகம் நீட்டாமல் கூறுவதும் சுன்னத்து.

வலப்பக்கம் ஸலாம் கொடுத்தவுடன்

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْئَلُكَ الْجَنَّةَ

என்பதாகவும், இடப் பக்கம் ஸலாம் கொடுத்தவுடன்

اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُ بِكَ مِنَ النَّارِ

என்பதாகவும் சொல்லிக் கொள்ளவும்.

தண்ணீர் கிடைக்காததால் தயம்மும் செய்தும், ஆடையில்லாததால் நிர்வாணமாகவும் தொழுகிறவன் முதல் ஸலாம் கொடுத்தவுடன் தண்ணீரையும் ஆடையையும் கண்டுவிட்டால் இரண்டாவது ஸலாம் கொடுப்பது ஹராமாகும்.

அவ்வாறே முதல் ஸலாமுக்குப்பின் உளூ முறிந்து விட்டாலும், ஜுமுஆவுடைய நேரம் கடந்துவிட்டாலும் இரண்டாம் ஸலாம் கொடுப்பது ஹராமாகும்.

தனித்துத் தொழுகிறவனும், இமாமும் சுப்ஹுவுடைய ஃபர்ழு இரண்டு ரக்அத்களிலும், மஃரிப், இஷாவுடைய முந்திய இரண்டு ரக்அத்களிலும், ஜுமுஆ தொழுகையிலும் சூரத்துல் ஃபாத்திஹாவையும் மற்றும் கிராஅத்தையும் தேவைப்பட்ட அளவு சப்தமிட்டு ஓதுவது சுன்னத்து. மேலும் சூரியன் மறைந்த பின் அது உதயமாகும்வரை களாச்செய்கின்ற ஃபர்லான தொழுகைகளின் முந்தின இரண்டு ரக்அத்களிலும், இரண்டு பெருநாள் தொழுகைகளிலும், சந்திர கிரகணத் தொழுகைகளிலும் அவ்வாறே சப்தமிட்டு ஓதுவது சுன்னத்து.(ஆனால் சூரிய கிரகணத் தொழுகையில் மெதுவாக ஓதுவது சுன்னத்து) மேலும் தராவீஹ் தொழுகையிலும், ரமழானுடைய வித்ருத் தொழுகையிலும், மழை வேண்டித் தொழும் தொழுகையிலும் அவ்வாறே சப்தமிட்டு ஓதுவது சுன்னத்து. (ஹனஃபி மத்ஹபின் படி அவ்வாறு சப்தமிட்டு ஓதுவது வாஜிபாகும்)

இரவு நேரங்களில் பொதுவான நஃபில் தொழுகைகளில் நடுத்தரமான சப்தத்தில் ஓத வேண்டும். வழக்கமான சுன்னத்துத் தொழுகைகளில் மெதுவாக ஓதவேண்டும்.

## ஐந்து இடங்களில் தவிர மஃமூம் சப்தமிட்டு ஓதுவது மக்ரூஹ் ஆகும்

அவையாவன: 1) இமாமுடன் சேர்ந்து ஆமீன் கூறுவது 2) சுப்ஹுடைய குனூத்து 3) ரமழான் பிந்திய பதினைந்தில் வித்ருடைய குனூத்து 4) முஸீபத்திற்காக ஓதுகிற குனூத்து ஆகிய மூன்று குனூத்துகளிலும் ஆமீன் கூறுவது. 5) இமாமுக்குத் தவறிவிட்டதை அல்லது தடங்கல் ஏற்பட்டதை எடுத்துக் கொடுப்பது. இவற்றில் சப்தமிட்டுக் கூறுவது சுன்னத்தாகும். எனினும், வழக்கத்தைவிட அதிக சப்தமிடுதல் மக்ரூஹ் ஆகும். இமாமுடைய சப்தம் எல்லோருக்கும் கேட்கும் என்றிருக்கும் பொழுது பின்னால் சப்தமிட்டுத் தக்பீர் கூறுகிற (முபல்லிஃ) ஒருவரை நியமிப்பது மக்ரூஹ் ஆகும். ஆனால் தேவைப்பட்ட நேரத்தில் அது சுன்னத்தாகும். அவ்வாறு முபல்லிகை ஏற்படுத்துவது தேவைக்குத் தகுந்தவாறு இருவர், மூவரையும் ஏற்படுத்திக்

கொள்ளலாம். முபல்லிஃ ﷺ என்பது பின் உள்ளவர்களுக்கு விளங்கும் எத்திவைப்பவர் என்பதாகும்.

ருகூவு, சுஜூதுடைய தக்பீர்களையும், ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் என்பதையும் இமாம் சப்தமிட்டும், மஃமூம்களும் தனியாகத் தொழுபவனும் மெதுவாகவும் சொல்வது சுன்னத்தாகும். இரு பெருநாட்களின் தொழுகைகளிலும் ஜனாஸாத் தொழுகைகளிலும் இவ்வாறுதான். அவன் போய்ச்சேரும் ருகூவு, சுஜூது போன்ற இடம் வரை அந்தத் தக்பீர்களை நீட்டுவது சுன்னத்தாகும். இஸ்திராஹத்துடைய இருப்பு இடையில் பிரிந்தாலும் அதனையும் சேர்த்தே நீட்டிச் சொல்ல வேண்டும்.

மற்றவர் தொழும் போதும் தூங்கும் போதும் அவர்களுக்கு இடையூறு உண்டாகுமென்றிருந்தால் தொழுபவரோ, மற்றவரோ இரைந்து ஓதுவது கூடாது. இது தூங்குபவர் முறையாகத் தூங்கினால்தான்.

பள்ளிவாசலில் யாராவது தொழுது கொண்டு இருக்கும் பொழுது மற்றொருவர் சப்தமிட்டு குர்ஆன் ஓதுவதோ உபதேசம் புரிவதோ கூடாது என்று கூறப்பட்டுள்ளது. ஏனெனில், பள்ளியாகிறது தொழுவதற்கு மட்டும் வக்ஃபு செய்யப்பட்ட இடமாகும்.

## தொழுகையை முறிக்கக் கூடியவை பற்றிய பாடம்

தொழுகை முறித்தல்களைப் பற்றிப் பேசப்படுவது. ஜனாஸாத் தொழுகை, ஸஜ்தா திலாவத், ஸஜ்தா ஷுக்ரு ஆகியவையும் இதிலடங்கும். தொழும் பொழுது தொழுகையை விட்டு விடலாம் என்று எண்ணினாலும், இருமனம் உடையவனாக இருந்தாலும் தொழுகை முறிந்துவிடும். ஆனால் இவ்விரு நிலைகளிலும் நோன்பு, இஃதிகாஃப், உளூ, ஹஜ் ஆகியவை முறியாது.

தொழுகையை விட்டு விடுவதை வழக்கத்தில் நிகழமுடியாத ஒரு விஷயத்தைக் கொண்டு சம்பந்தப்படுத்தினாலும் தொழுகை முறியும். உதாரணமாக:'மானும் புலியும் ஓரிடத்தில் சேர்ந்தால் நான் தொழுகையை முறித்து விடுவேன் என்று ஒருவன் எண்ணினால், அது நிகழவேண்டுமென்ற அவசியமில்லை. அவனுடைய நினைப்பைக் கொண்டே தொழுகை முறிந்து விடும். ஆனால் அறிவினால் நிகழ முடியாத ஒன்றை நினைத்தால் முறியாது. அதாவது நெருப்பும் தண்ணீரும் ஒன்று கூடினால் என்று நினைப்பது போல். எனினும் ஒருவருக்கு இப்படிப்பட்ட ஊசாட்டம் அடிக்கடி ஏற்படுகிறதென்றால் அவருக்கு முறியாது. இதனால் ஈமானும் மற்ற வணக்கங்களும் முறியா.

தொழுகையில் தொழுகையின் செயல் அல்லாததை மிக அதிகமாக அல்லது மனம் முரண்டாக அல்லது மறதியாக தொடராக மூன்று தடவை செய்தால் தொழுகை முறிந்து விடும். உதாரணமாக: தொடராக மூன்று அடி வைத்து நடப்பது, மூன்று தடவை வாயைச் சவைப்பது, மணிக்கூட்டு அசையும் படி கையினால் மூன்று செயல்களைத் தொடராகச் செய்வது, அவ்வாறே கால்களினால் செய்வதினாலும் தொழுகை முறியும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

இலேசான செயலை அதிகம் செய்தாலும், கனமான செயலை ஒரு தடவை செய்தாலும் தொழுகை முறியாது.

கையை எடுத்து மறுபடி வைப்பது ஒரு செயல்; ஒரு காலை எடுத்து மறுகாலை அதற்கு நேராக வைப்பது ஒரு செயல்; அக்காலை முந்தும் படி வைப்பது இரண்டு செயல்களாகும். குதிப்பதும், பாய்வதும் கடப்பான செயலாக இருப்பதால் தொழுகை முறிந்துவிடும்; இது ஒரு தடவையானாலும் சரி. ஆனால், தேள் போன்ற விஷ ஜந்துக்களைப் பார்த்ததால் அவ்வாறு குதித்தால் தொழுகை முறியாது.

நடுக்கு வாதம், வலிப்பு போன்ற நோயினாலும் கடினமான சொறியினாலும் கையின் மணிக்கட்டு தரிபட்டிருப்பதுடன் விரல்களை மட்டும் சொறிவதற்காக அல்லது தஸ்பீஹ், திக்ருடைய எண்ணத்தில் அசைத்தால் தொழுகை முறியாது. சொறியின் காரணமாக எவ்வளவு அதிகச் செயல்கள் ஏற்பட்டாலும் அது மன்னிக்கப்படும்.

குர்ஆனோ, அல்லது தொழுகையிலுள்ள திக்ருகளோ அல்லாமல் வேறு ஏதேனும் வாசகத்திலிருந்து இரண்டு எழுத்துக்களை தொடராக மொழிந்தாலும் தொழுகை முறிந்துவிடும். அந்த இரு எழுத்துக்களுக்குப் பொருளில்லாவிட்டாலும் சரி. அல்லது ஃபர்ளான ஓதல் அல்லாத ஓதுதலை ஓதுவதற்காகக் கனைப்பதினால் அவ்விரு எழுத்துக்கள் உண்டானாலும் சரி, அல்லது இருமல், தும்மல், அழுகை, சிரிப்பு போன்றவற்றால் உண்டானாலும் சரி. இவற்றை மனம் முரண்டாக நினைவுடன் செய்திருந்தால்தான் முறியும். மேலும், ஒரு பொருளை விளங்கும்படியான ஓர் எழுத்தைக் கூறுவது கொண்டும் முறியும்.

ع —— என்று கூறினால், இதில் எவ்விதப் பொருளும் இல்லாததால் முறியாது. 'ம்' என்று சொல்லி, இதன் மூலம் உறுமுவதை நாடினால், அர்த்தம் விளங்க வைப்பது ஏற்படுவதால் தொழுகை முறிந்து விடும். மேலும் قِ என்றோ, لِ என்றோ, عِ என்றோ கூறினாலும், அரபியில் இதற்கு அர்த்தம் இருப்பதால், ஓரெழுத்தானாலும் தொழுகை முறிந்து விடும்.

இரண்டு எழுத்துக்கள் மறதியாக வெளியானாலும், அல்லது ஃபர்லான ஓதுதலின் போது கனைப்பதால் எழுத்து வெளியானாலும், அல்லது நோன்பாளி நோன்பை முறிக்கும்படியான காறல் எச்சிலை வெளியாக்கக் கனைத்த பொழுது எழுத்து வெளியானாலும் முறியாது.

எனினும் இமாமானவர் மஃமூம்களுக்கு கேட்க வைப்பதற்காக குரலைச் சரி செய்யக் கனைப்பது தக்பீர்கள் கூறுவதிலும், ஸமிஅல்லாஹ் (தஸ்மீஃ) கூறுவதிலும் ஆகும்; இதனால் முறியாது. இவ்வாறு ரவ்ளாவில் வருவதாக இஆனா என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.

காசம், இருமல் போன்ற நோயுள்ளவர் இருமும் பொழுது எத்தனை எழுத்துக்கள் வெளியானாலும் தொழுகை முறியாது.

ஒருவன் தொழுகையில் கிரா அத் அல்லாத முறையில் قَالَ اللّٰهُ என்றோ, அல்லது قَالَ نَبِيُّ என்றோ அரபி மொழியில் சொன்னாலும் தொழுகை முறிந்துவிடும். இந்த வார்த்தைகளை அவன் கிரா அத்தைநாடிச் சொன்னால் தொழுகை முறியாது.

தும்மினவனுக்கு பதில் கூறுவதில்: يَرْحَمُكَ اللّٰهُ (அல்லாஹ் உனக்கு அருள் புரிவானாக) என்று கூறினால் தொழுகை முறிந்து விடும். ஆனால் يَرْحَمُهُ اللّٰهُ (அல்லாஹ் அவருக்கு அருள் புரிவானாக!) என்று கூறினால் முறியாது. ஏனெனில் முதல் வாசகத்தில் மனிதனை முன்னிலையாக்கிக் கூறுதல் உள்ளது. இரண்டாவது வாசகத்தில் மனிதனை முன்னோக்குவது என்பது இல்லை. எனினும் சூரத்துல் ஃபாத்திஹாவின் நடுவில் இவ்வாறு يَرْحَمُهُ اللّٰهُ என்று கூறினாலும் ஃபாத்தி ஹாவைத் திருப்பி ஓத வேண்டும்.

மனிதரல்லாத மற்றப் பொருளை முன்னிலையாக்கிப் பேசினால் தொழுகை முறியாது. உதாரணமாக : இப்லீஸை முன்னோக்கி لَعَنَكَ اللّٰهُ (அல்லாஹ் உன்னை சபிப்பானாக) என்று கூறினாலும், முதற்பிறையைப் பார்த்ததும்

رَبِّيْ وَرَبُّكَ اللّٰهُ

(என்னுடைய ரப்பும் உன்னுடைய ரப்பும் அல்லாஹ்தான்) என்று கூறினாலும் முறியாது.

இன்னும் நோன்பை முறிக்கும் காரியங்கள் அனைத்தும் தொழுகையையும் முறிக்கும். அது கொஞ்சமாக இருந்தாலும் சரி. ஆனால் மறதியாக அதிகம் சாப்பிடுவது நோன்பை முறிக்காது. தொழுகையை முறித்துவிடும்.

மறதியாக ஸலாம் கொடுத்தவன் மனம் முரண்டாகப் பேசினாலும், அல்லது பேசியது ஹராமென்று தெரியாமலிருந்தாலும், அல்லது பேசுவது ஹராம் எனத் தெரிந்து, இரண்டு எழுத்துக்கள் வெளிப்படுவது ஹராமெனத் தெரியாமல் இருந்தாலும் இவற்றில் எவ்விதத்திலும் ஒரு பாமரனுடைய தொழுகை முறியாது.

மாறுபட்ட உமிழ்நீரை விழுங்குவதும், சுத்தமான உமிழ்நீருடன் கலந்த தண்ணீரை விழுங்குவதும், தொண்டைக்கு வெளியில் வந்து விட்ட காரல் எச்சிலை விழுங்குவதும் தொழுகையை முறிக்கும்.

செயலால் உள்ள ஃபர்ளை மனம் முரண்டாக அதிகப்படுத்துவது, இமாமைத் தொடருவதற்காக இருந்தால் தவிர தொழுகையை முறிக்கும். ஒருவன் தான் முதலில் ருகூவு செய்துவிட்டு, பிறகு இமாமைத் தொடருவதற்காக மீண்டும் செய்தால் முறிக்காது உளுவை முறிக்கும் காரியங்கள் தொழுகையை முறிக்கும். ஆடையைக் காற்று போன்றது விலக்கிய பின் உடனடியாக மறைக்கா விட்டால் தொழுகை முறிந்து விடும். அவ்வாறு மறைப்பதற்காகச் செய்கின்ற செயல்களினாலும், தன்மேனியின் மீது விழுந்த செத்த புழு போன்றவைகளை உடனே தட்டி விடுவதாலும் தொழுகை முறியாது.

# மார்க்க சட்டக் கருவூலம் 'மங்கானீ'

## தொழுகையில் மன்னிக்கப்படாத நஜீஸ்கள்

மன்னிக்கப்படாத நஜீஸ் உடையிலோ உடலிலோ, உறுப்புகள்படுகிற இடங்களிலோ படுவதாலும், மானம் (அவ்ரத்து) வெளிப்படுவதாலும், கிப்லாவை விட்டும் நெஞ்சைத் திருப்புவதாலும், உளூ முறிந்து விடுவதாலும் தொழுகை முறிந்து விடும். தன்னையறியாமல் உளூ முறிந்தாலும் தொழுகை முறியும்.

தொழுகையில் மன்னிக்கப்படாத நஜீஸ் தன் மீது விழுந்து உடனே அதனை தட்டாவிட்டாலும், மனம் முரண்டாக ஒரு ஃபர்ளை விட்டாலும், நிய்யத்தில் அல்லது தக்பீர் தஹ்ரீமில், அல்லது அதன் ஷர்த்தில் சந்தேகம் ஏற்பட்டு, அந்த சந்தேகம் மற்றொரு ஃபர்லைச் செய்து முடிக்கும் வரை நீங்காமலிருந்தாலும், அல்லது அந்த சந்தேகத்திலேயே நீண்ட நேரம் சென்று விட்டாலும் தொழுகை முறிந்து விடும்.

தொழுகின்ற ஒருவனின் மீது நஜீஸ் இருக்கிற தென்றோ, அல்லது அவனது அவ்ரத்து வெளியானது என்றோ முஃமினான ஒருவர் அறிவித்தால், அதனை ஏற்றுத் தொழுகையைத் திருப்பித் தொழுவது வாஜிபாகும். தொழுகையை மனம் முரண்டாக முறிப்பது ஹராமாகும். ஆனால், மாடு போன்ற சங்கைக்குரிய ஏதேனும் ஒரு பிராணி அழிந்து விடுமென்றிருந்தாலும், அல்லது கொல்வது ஹராமான ஒரு பிராணிக்கு சேதம் ஏற்படுமென்றிருந்தாலும், தனக்கு தீங்கு விளைவிக்கும் எதிரி ஒருவன் வரக்கண்டாலும், அல்லது பாம்பைப் போன்ற விஷஜந்துக்களைக் கண்டாலும், அல்லது இவனுடைய பொருள் ஒன்றை திருடன் ஒருவன் எடுத்துச் செல்லக் கண்டாலும் இந்தக் கேடுகளை விட்டும் நீங்குவதற்காக தொழுகையை முறிப்பது கூடும்.

தனியாக ஃபர்லைத் தொழுகிற ஒருவன் ஜமாஅத்துத் தொழுகைக்காக இகாமத்துச் சொல்லப்படுவதைக் கண்டால், தன் தொழுகையை நஃபிலாக நிய்யத்துச் செய்து இரண்டு ரக்அத் தொழுது ஸலாம் கொடுத்து ஜமாஅத்தில் கலந்து கொள்வதும், இரண்டு ரக்அத் தொழுவதற்கு முன் ஜமாஅத் முடிந்து விடும் என்றிருந்தால், உடனே தன் தொழுகையை முறித்து விட்டு ஜமாஅத்தில் சேர்ந்து கொள்வதும் சுன்னத்தாகும். இரண்டு ரக் அத்தை முடித்துவிட்டு மூன்றாவது ரக்அத்திற்கு எழுந்து விட்டால் அந்தத் தொழுகையை நிரப்பமாக்குவது சுன்னத்தாகும். ஆனால், நடக்கக் கூடிய அந்த ஜமாஅத்து முடியுமுன் அதில் சேர்ந்து கொள்ளலாமென்றிருந்தால் தான், தான் தொழும் தொழுகையை நிரப்பமாக்குவது சுன்னத்தாகும்.

ளுஹர் தொழுகிறவன் அஸர் தொழுகிற ஜமாஅத்தைக் கண்டால் தன் தொழுகையை முறிப்பது கூடாது; அதனை சுன்னத்தாக மாற்றினால் குற்றவாளியாவான்.

# தொழுகையின் மக்ரூஹ்கள்

தொழுகையில் நிற்பவர் சுஜூதுடைய இடமல்லாததைப் பார்ப்பதும், உயரத்தில் பார்ப்பதும் மக்ரூஹ் ஆகும். ஆனால் ஜமாஅத்துக்காக இகாமத் சொல்வதையும், இடையூறு விளைவிக்கும் ஏதேனும் ஒரு பொருள் வருகிற சந்தேகத்திற்காகவும் பார்ப்பது கூடும்.

ரமலான் மாதம் முதற்பிறையைப் பார்ப்பது சுன்னத்தாக இருப்பதால், ஷஃஅபான் மாதம் முப்பதாம் நாள் மஃரிப் தொழுகையிலிருப்பவன் முகம் மட்டும் அசையுமளவுக்கு அண்ணாந்து பிறையைப் பார்ப்பது கூடும். ருகூஃவில் தலையை அதிகமாக தாழ்த்துவதும், அதிகமாக உயர்த்துவதும் மக்ரூஹ். தலையும் பின் பகுதியும் சமமாக இருக்கும்படி குனிவது சுன்னத்தாகும்.

மேலும் தொழுகையில் அதிகமாகத் தலையைத் தாழ்த்துவது, தொழுகையின் கவனத்தை திருப்பும் பொருளைப் பார்ப்பது, இருளில் தொழுவது, கண்ணை மூடித்தொழுவது, கவனத்தைத் திருப்புகின்ற வண்ணமுள்ள ஆடைகளை அணிந்து தொழுவது, அவ்வாறான இடத்தில் தொழுவது, அவ்லாறான விரிப்பின் (முஸல்லாவின்) மீது தொழுவது, ஒற்றைக் காலில் நின்று தொழுவது, ஒருகால் முந்தியும் மற்றொரு கால் பிந்தியுமாக நிற்பது, இரண்டு கால்களையும் சேர்த்து நிற்பது, பெண்களோ, ஆண்களோ ஆடைகளையோ உரோமங்களையோ முடிவது (ஆனால் பெண்கள் தங்கள் சடைகளையும் கொண்டைகளையும் அவிழ்த்து விடாமல் இருப்பதை மக்ரூஹ் என்று சொல்லக் கூடாது) தலையை அல்லது தோளைத் திறப்பது, உதடுகளை இலேசாக உகப்புவது, முகத்தை மூடுவது (சுஜூது செய்யும் போது நெற்றி தரையில்படாத விதத்தில் தான் அணிந்திருக்கும் ஆடையைக்கொண்டு முகத்தை மூடிக் கொண்டால் தொழுகை பாத்திலாகிவிடும் என்பது முன்பு சொல்லப்பட்டு விட்டது) மலம், சிறுநீர், காற்று முதலியவற்றை அடக்கிக் கொண்டு தொழுவது, பசி, தாகத்தின் நேரத்தில் உணவு முன்னாலிருக்கும் பொழுது சாப்பிடாமல் தொழுவது, மனிதர்கள் நடமாடும் பாதைகள், பாலங்கள், கோயில்கள், தண்ணீர்த் துறைகள், மதுபானக்கடைகள், கப்ருஸ்தான்கள், கழிப்பிடங்கள், கொல்லைகள், கசாப்புக் கடைகள், திடீரென வெள்ளம் வரும் ஆற்றின் ஓரங்கள், தவறான பொருளால் கட்டப்பட்ட மஸ்ஜிதுகள் ஆகியவற்றில் தொழுவது இவையனைத்தும் மக்ரூஹ் ஆகும். ஒரு மஸ்ஜித் ஹலாலான பொருளால் கட்டப்பட்டதா? இல்லையா? என்று சந்தேகமாயிருந்தால் அதில் தொழுவது மக்ரூஹ் அல்ல.

பரக்சத்தை நாடி, அல்லது மரியாதை செய்ய வேண்டுமென்ற எண்ணத்துடன் நபிமார்கள், வலிமார்கள் ஆகியோரின் கப்ருகளுக்கு அருகில் தொழுவதும், அநியாயமாய் அபகரிக்கப்பட்ட நிலத்திலோ, உடைகளிலோ தொழுவதும் ஹராமாகும்.

நேரம் நெருக்கடியாய் இருக்கும் சமயத்தில் மலஜல உபாதையேற்பட்டு, அதனை அடக்குவதால் பொறுக்க முடியாத வேதனையுண்டாகுமென்றிருந்தால் முதலில் மலம் ஜலம் கழித்து விட்டுப் பிறகு களாவாகத் தொழுவான். இதனால் களாவாக்கிய குற்றப்

ஏற்படாது. எனினும், இவனுடைய வழக்கத்தைத் தெரிந்தும் அந்த நேரம் வரை பிற்படுத்தினால் அவன் பாவியாவான்.

தொழுகையிலும் மற்ற நேரங்களிலும், கிப்லாவின் திசையிலும் தன் முகத்துக்கு எதிரிலும், தனது வலது பக்கத்திலும் எச்சில் துப்புவது மக்ருஹ்.

மேற்போர்வையின் அல்லது துண்டின் நடுப்பகுதியை வலது அக்குளின்கீழ் ஆக்கி அதன் இரு நுனிகளையும் இடதுதோளின் மீது போட்டுத் தொழுவதும் மக்ருஹ்.

இவ்வாறு துணியைப் போடுவது اِضْطِبَاعٌ ஹஜ்ஜின் போது சுன்னத்தாகும்.

தொழுமிடத்திலுள்ள பொடிக்கற்களை வீணாகத் தொடுவதும், அதனை ஊதுவதும், விரல்களை நெட்டி முறிப்பதும், மூக்கைச் சிந்துவதும், பெருமூச்சு விடுவதும், கழுத்தை நெளிப்பதும், சுஜூதின் போது நெற்றியில் ஒட்டிய புழுதியைத் துடைப்பதும் மக்ருஹ் ஆகும்.

மஸ்ஜித் அல்லாத ஒரு மைதானத்தில் தொழும் பொழுது எச்சில் வந்தால் தலையைக் கவிழ்த்து இடதுபுறம் துப்புவான். இடது பக்கம் மனிதர்கள் இருந்தால் இடது காலின் கீழ் துப்புவான்.

மஸ்ஜிதாக இருந்தால் இடது புறமிருக்கிற போர்வை துண்டு போன்றதில் அந்த எச்சிலை எடுத்துக் கொள்வான்.

ஒரு காரியத்தைச் செய்வது வாஜிபா அல்லவா என்பதில் அபிப்பிராய பேதம் இருப்பின் அதனைச் செய்யாமல் விட்டுவிடுவது மக்ருஹ். ஆனால் செய்யாமலிருப்பது வாஜிப் என்பதில் அபிப்பிராய பேதமிருப்பின் அந்தச் செயலைச் செய்வது மக்ருஹ் ஆகும். இதுதான் பலமான சொல்லாகும்.

## மஸ்ஜிதின் ஒழுக்கங்களும் சட்டங்களும்

பள்ளிகளை நிர்வாகம் செய்பவர்களைப் பற்றி இறைவன் கூறுவதாவது:-

إِنَّمَا يَعْمُرُ مَسَاجِدَ اللّٰهِ مَنْ اٰمَنَ بِاللّٰهِ وَالْيَوْمِ الْاٰخِرِ
وَاَقَامَ الصَّلٰوةَ وَاٰتَى الزَّكٰوةَ وَلَمْ يَخْشَ اِلَّا اللّٰهَ فَعَسٰٓى
اُولٰٓئِكَ اَنْ يَّكُوْنُوْا مِنَ الْمُهْتَدِيْنَ ۝ (9:18)

"எவர்கள் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் விசுவாசித்து தொழுகையையும் கடைப்பிடித்து, ஜகாத்தும் கொடுத்து வருவதுடன் அல்லாஹ்வையன்றி மற்றெவருக்கும் பயப்படாமலும் இருக்கிறார்களோ அவர்கள்தாம் அல்லாஹ்வுடைய பள்ளிகளைப் பரிபாலனஞ் செய்யக் கூடியவர்கள். இத்தகையோர் தாம் நேரான வழியில் இருப்பதாக நம்பத்தக்கவர்கள்."

பள்ளியோடு அதிக ஈடுபாடு கொள்பவர்களைப் பற்றி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கீழ் கண்டவாறு புகழ்ந்து கூறி இருக்கிறார்கள்:

فَقَدْ عَدَّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ مَنْ قَلْبُهُ مُتَعَلِّقٌ بِالْمَسْجِدِ
مِنْ سَبْعَةٍ يُظِلُّهُمُ اللّٰهُ بِظِلِّ الْعَرْشِ يَوْمَ لَا ظِلَّ إِلَّا ظِلُّهُ.

"பள்ளியில் தனது மனமார லயித்துப் போயிருப்பவர், இறைவனின் நிழலே அன்றி வேறு நிழல் இல்லாத மறுமை நாளில் (தனது) அர்ஷின் நிழலைக் கொண்டு நிழல் அளிக்கப்படும் ஏழுவகை மனிதர்களில் நின்றுமுள்ளவராவார்." (இந்த ஏழுவகை மனிதர்களின் விபரம் சதக்காவின் பாடத்தில் பார்த்துக் கொள்ளவும்)

மேலும் ஒரு பெரியார் சொல்கிறார்:

كَحُوْتِ الْمِيَاهِ فِيْ مَسْجِدِ اللّٰهِ مُؤْمِنٌ؛
وَكَالطَّيْرِ فِي الْأَقْفَاصِ فِيْهِ مُنَافِقٌ.

இறைவனின் இல்லமாகிய பள்ளியிலிருக்கும் ஒரு முஃமின் தண்ணீரில் சந்தோஷமாகத்திரியும் ஒரு மீனைப் போலிருப்பான். ஆனால், ஒரு நயவஞ்சகனாகிய முனாஃபிக்கோ பள்ளியிலிருக்கும்பொழுது கூட்டில் அடைப்பட்டிருக்கும் ஒரு பறவையைப் போலிருப்பான்.

பள்ளியில் புகும் பொழுது ஸலாம் சொல்வதும், அதைக் கொண்டு நிய்யத்து வைக்கும் விபரமும் பின்னால் கூறப்படும்.

சிறிய (இட நெருக்கடியான) பள்ளிகளில் தொழுவது முடிந்தவுடன் பின்னால் தொழ வருபவர்களுக்கு இடம் கொடுத்து நகர்ந்து போய் விட வேண்டும். அவ்ராது, துஆ, திக்ரு முதலியன ஓதிக்கொண்டிருப்பதால் பின்னால் தொழ வருபவர்களுக்கு இடைஞ்சலும் நெருக்கடியும் ஏற்படுத்தக் கூடாது.

பள்ளியில் யாராயினும் தொழுது கொண்டிருக்கும் பொழுது மற்றொருவர் குர்ஆனை இரைந்து ஓதுவதும், ஹதீஸ் வஃலு சொல்வதும் விலக்கப்பட்டிருக்கிறது. ஏனெனில் பள்ளி என்பது தொழுவதற்கு மட்டும் வக்ஃபு செய்யப்பட்ட இடமாகும்.

## மஸ்ஜிதின் மேன்மையைப்பற்றிய விவரம்

பள்ளிவாசல் என்பது தொழுவதற்காக ஓரிடத்தில் எல்லையைக் குறிப்பிட்டுக் கட்டப்பட்டு வக்ஃபு செய்யப்படுகின்ற இடத்திற்குப் பெயராகும். அது முகடும் சுவரும் இல்லாவிட்டாலும் சரி. குறிப்பிடப்பட்ட அந்த எல்லையைத் தவிர உள்ள இடம் மஸ்ஜித் உடைய சட்டத்திற்கு உட்பட்டதாக ஆகாது.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

ஜ"னுபாளி, மாதவிடாய், பிரசவத்தீட்டுள்ளவள் மஸ்ஜிதில் தங்குதல் கூடாது. இஃதிகாஃப் என்ற (பள்ளியில் தரிப்பு எனும்) வணக்கம் பள்ளியின் எல்லைக்குள் ஏற்படுமே அன்றி வேறிடத்தில் ஏற்படாது.

மூட்டைப்பூச்சி, கொசு ஆகியவற்றின் இரத்தமாக இருந்தாலும் சரி பள்ளியில் நஜீஸைத் தடவுவது ஹராமாகும். அதனுடைய மண்ணை, கல்லை எடுத்துப் போவதும், விரிப்பு, விளக்கு போன்றவற்றைக் கொண்டு போவதும், அல்லது இரவலாக எடுத்துப் போவதும் கூடாது. அவ்வாறே மஸ்ஜிதின் விரிப்புகளை வேறொரு காரியத்திற்காக உபயோகிப்பதும் கூடாது. மஸ்ஜிதிலுள்ள ஒரு பொருள் பழுதாகி விட்டால் அதனை விற்று விட்டால்தான் நல்லது என்றிருந்தால் விற்பது கூடும். பள்ளிவாசலுக்காக சில பொருட்களை வாங்கி அவற்றை வாடகைக்குக் கொடுத்து அந்த வருமானத்தைப் பள்ளிக்குச் சேர்ப்பது கியாஸ் என்னும் ஒப்பு நோக்குதலின் படியும், வழக்கத்தின் படியும் சரிகாணப்பட்டிருப்பதால் அவ்வாறு செய்வது ஏற்றுக் கொள்ளப்படும்.

மஸ்ஜிதில் படும்படி எச்சில் துப்புவதும், சளி சிந்துவதும், ஈரமான நஜீஸ் இருக்கின்ற காலணிகளை உள்ளே கொண்டு செல்வதும், சிறு குழந்தைகளை, பயித்தியக்காரர்களை உள்ளே அனுமதிப்பதும் மக்ரூஹ் ஆகும். இவர்கள் பள்ளியை நஜீஸாக்கி விடுவார்கள் என்பதாகவோ, அல்லது தொழுவோருக்கு அருவருப்பு உண்டாக்கி விடுவார்கள் என்பதாகவோ இருந்தால் அப்பொழுது இவர்களை அனுமதிப்பது ஹராமாகும்.

மஸ்ஜிதில் உறங்குவது மக்ரூஹ்; அங்கு காற்று விடுவது கொடிய மக்ரூஹ். பள்ளியிலிருந்து கொடுக்கல் வாங்கல் செய்வதும், வழக்குகளை பேசுவதும், முடி, நகம் ஆகியவற்றைக் களைவதும், கொட்டாவி விடுவதும் மக்ரூஹ் ஆகும். ஆனால், கொட்டாவி தன்னை மிகைத்தால் இடது முன்கையின் பின் புறத்தினால் வாயை மூடி இயன்ற அளவு அதனை அடக்க வேண்டும்.

ஒரு ருகூவு, சுஜூது துடைய நேர அளவு பள்ளியில் தங்கினாலும் இஃதிகாஃப் என்பது உண்டாகிவிடும். இஃதிகாஃபுக்கு நிய்யத் அவசியமாக இருக்கும். எனவே பள்ளியில் நுழையும் பொழுது வலது காலை முதலில் உள்ளே வைத்துப் பின்வரும் துஆவை ஓதிக் கொண்டே நுழைய வேண்டும்:

اَللّٰهُمَّ افْتَحْ لِيْ اَبْوَابَ رَحْمَتِكَ فَاغْفِرْ لِيْ ذُنُوْبِيْ.

"இறைவா! உனது அருளின் வாயில்களை எனக்குத் திறந்து விட்டு எனது பாவங்களையும் மன்னித்தருள்வாயாக!" என்ற துஆவை ஓதிவிட்டு அத்துடன் இஃதிகாஃப நிய்யத்து வைப்பவர்கள் கீழ்கண்ட விதமாக நிய்யத்து வைப்பதுடன் கீழ்கண்ட துஆவையும் சேர்த்து ஓதவும்:

اَللّٰهُمَّ اِنِّيْ نَوَيْتُ الْاِعْتِكَافَ مَادُمْتُ فِيْ هٰذَا الْمَسْجِدِ
فَاغْفِرْ لِيْ وَارْحَمْنِيْ بِرَحْمَتِكَ يَاأَرْحَمَ الرَّاحِمِيْنَ.

இறைவா! நான் இந்தப்பள்ளியில் தரிபட்டிருக்கும் காலமெல்லாம் இஃதிகாஃப் என்னும் வணக்கத்தைச் செய்வதற்கு நிய்யத்துச் செய்கிறேன். எனவே அருளாளர்களுக்கெல்லாம் மேலான அருளாளனே! எனது பாவங்களை மன்னித்து உனது அருட்கொடையைக் கொண்டு எனக்கு அருள்பாலிப்பாயாக!"என்று ஓதவும்.

பள்ளியை விட்டு வெளியேறும் பொழுது இடது காலை முன் வைத்து பின்வரும் துஆவை ஓதவேண்டும்:

اَللّٰهُمَّ افْتَحْ لِيْ اَبْوَابَ فَضْلِكَ فَاغْفِرْ لِيْ وَارْحَمْنِيْ
بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ.

"இறைவா! உனது அருளின் வாசல்களை எனக்குத் திறந்து விட்டு எனது பாவங்களையும் மன்னித்து உனது பேரருளைக் கொண்டு எனக்கு அருள் பாலிப்பாயாக. அருளாளர்களுக்கெல்லாம் அருளாளா" (இஃதிகாஃபின் விபரம் நோன்பின் பாடத்தில் கூறப்படும். இன்ஷா அல்லாஹ்!)

பள்ளி வாசலைச் சுற்றிலும் தாழ்வாரங்கள் வைத்துக் கட்டி அத்தாழ்வாரங்களில் மனிதர்கள் படுப்பதற்கும், ஜுனூபாளிகள் தங்குவதற்கும், மௌலிது, ராத்திபு முதலியவை நடப்பதற்கும் வசதி செய்து தருவது நம்முடைய நாட்டிலுள்ள பழக்கமாக இருப்பதால் உலமாக்கள் அதனை ஆதரித்துள்ளார்கள்.

பள்ளிவாசலைப் பரிபாலனம் செய்வதிலும், அதனைச் சுத்தம் செய்து விளக்கேற்றிவைப்பதிலும் மிகுந்த நன்மைகள் உள்ளன என்று ஹதீஸ்களில் கூறப்பட்டுள்ளது.

## பள்ளியில் ஓரிடத்தில் முந்தி இருப்பவரின் அந்தஸ்து

பள்ளிவாசல் முஸ்லிம்கள் அனைவருக்கும் பொதுவான இடமாகும். ஆகையால், அங்கு முதலில் வருகிறவரை பின்னால் வருகிறவர் தடுப்பதும் இடம் மாற்றம் செய்வதும் கூடாது. அதனைக் கட்டி வக்ஃபுச் செய்தவராக இருந்தாலும் சரி. பள்ளியில் ஓரிடத்தில் ஒருவர் அமர்ந்த பின் மற்றொருவர் அவருடைய பொருத்தமில்லாமல் அவ்விடத்தில் அமர நினைப்பது கூடாது. ஆனால் முந்தியவர் அந்த இடத்தை விட்டு எழுந்து சென்று, திரும்பி வருவதை அவர் எண்ணாமலிருந்து அதனை மற்றவர் அறிந்தால் அவருக்கு அவ்விடத்தில் அமர்வது கூடும். முந்தியவர் திரும்பி வருவதை நாடி, அவர் வருவது நீண்ட நேரமானாலும் அவ்விடத்தில் மற்றவர் உட்கார்வது கூடாது. ஓரிடத்தில் உட்கார்ந்திருந்தவர் எச்சில் துப்புவதற்காக வெளியில் எழுந்து சென்ற நேரத்தில் இகாமத் சொல்லப்பட்டு அணிவகுத்து நின்று விட்டால் அவருடைய இடத்தைப் பூர்த்தி செய்வதற்காக அவ்விடத்தில் மற்றவர் நிற்பது கூடும்.

# மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

## தொழுவது மக்ரூஹான இடங்கள்

பிறருடைய நிலத்தில் அவருடைய பொருத்தமின்றித் தொழுவது ஹராமாகும். எனினும், அவ்வாறு தொழுதால் தொழுகை கூடிவிடும். அவர் பொருந்திக் கொள்வாரா? இல்லையா? என்பதில் சந்தேகமிருந்தால் தொழுவது மக்ரூஹ். பொருந்திக் கொள்வாரென்பது உறுதியாக இருந்தால், அல்லது அந்த எண்ணம் மிகைத்திருந்தால் மக்ரூஹ் இல்லை.

ஒட்டகை மந்தை, மாட்டு மந்தைகளில் தொழுவது மக்ரூஹ். ஆனால் ஆடுகள் ஒட்டகங்களைப் போன்றும் மாடுகளைப் போன்றும் மிரண்டு தொழுபவரின் கவனத்தைத் திருப்பும் சந்தர்ப்பம் குறைவாக இருப்பதால் ஆட்டு மந்தையில் தொழுவது மக்ரூஹ் இல்லை.

பள்ளி வாசலில் கூடு கட்டியிருக்கும் பறவைகளை விரட்டுவது வாஜிபல்ல. அவற்றைக் கூட்டில் விட்டு வைப்பது ஆகும். எனினும் அவற்றின் எச்சம் பள்ளியை அசுத்தப்படுத்திவிடும் என்றிருந்தால் விரட்டுவது கூடும்.

தொழுகையில் பிரவேசிக்கும் பொழுது மனமகிழ்ச்சியாய் இருப்பதும், மனதை வேறு கவனத்தை விட்டும் நீக்கி வைப்பதும், உள்ளச்சமாய்த் தொழுவதும், குர்ஆனைப் பொருள் விளங்காவிட்டாலும் அல்லாஹ்வின் திருவேதம் என்ற அச்சத்துடன் ஓதுவதும், தொழுகையில் சுஜூதுடைய இடத்தைப் பார்ப்பதும், தொழுகை முடிந்தவுடன் ஹதீஸில் கூறப்பட்டுள்ள திக்ரு, துஆக்களை மெதுவாக ஓதுவதும் சுன்னத்து. இமாமானவர் துஆவையும் திக்ரையும் மற்றவர்களுக்குக் கற்றுக் கொடுப்பதை நாடினாலும் அல்லது இமாமுடைய துஆவைக் கேட்டு மஃமூம்கள் ஆமீன் கூற வேண்டுமென்பதை நாடினாலும் சப்தமிட்டு ஓதலாம். ஆனால், தொழுபவர்களுக்கு இடையூறு ஏற்படுத்தாமலிருப்பது ஷர்த்தாகும்.

தொழுது முடித்தவுடன் மறு தொழுகையை நாடினால் அவ் விடத்தை விட்டு வேறு இடத்திற்கு மாறிவிட வேண்டும். ஸலாம் கொடுத்தபின் இமாமானவர் மஃமூம்கள் பக்கம் வலப்பக்கத்தைத் திருப்பிக் கொள்ள வேண்டும்.

## துஆவின் போது கைகளை உயர்த்துதல்

துஆக்கேட்கும் பொழுது இரண்டு புஜங்களுக்கு நேராக இரு கைகளை உயர்த்துவதும், பார்வையை ஸஜ்தாவுடைய இடத்திலாக்குவதும் ஃபிக்ஹுடைய கிரந்தங்களில் சொல்லப்பட்டுள்ள முறையாகும். இமாம் கஸ்ஸாலீ (ரஹ்) அவர்கள் இஹ்யாவில், இரு கைகளையும் அக்குளின் வெண்மைப்பகுதி எதிரிலிருப்பவர்களுக்குத் தெரியுமளவு உயர்த்தி, பார்வையையும் சற்று உயர்த்தி, துஆக்கேட்க வேண்டும் என்று கூறியுள்ளார்கள்.

உவைஸுல் கர்னீ (ரலி) அவர்கள் வலது கையை இடது கைமேல் வைத்துக் கேட்பார்கள் என்பதாகவும், அவர்கள் துஆ ஏற்கப்படுபவர்களாக இருந்தார்களென்பதாகவும், கூறப்பட்டுள்ளது.

துஆக்கேட்கும் பொழுது துப்புரவான இரு கைகளையும் தோள் புஜங்களுக்கு நேராக உயர்த்தி, உள்ளங்கைகளை மேலாக்கி துவக்கமாக பிஸ்மில்லாஹ்வும், பிறகு

ஹம்தும், ஸலவாத்தும் கூறி துஆக்கேட்டு முடிந்தபின் கடைசியிலும் ஹம்து, ஸலவாத்து கூறி, ஆமீன் என்பதையும் சொல்லி, சுப்ஹானரப்பிக ரப்பில் இஸ்ஸத்தி என்பதைக் கடைசி வரை மூன்று தடவை சொல்லி முடித்து, கைகளை முகத்தில் தடவிக் கொள்ள வேண்டும். 'சுப்ஹானரப்பிக'வை கடைசிவரை மூன்று தடவை ஓதி முடிப்பவர், நிரப்பமான படியினால் நன்மைகளை அளந்து எடுத்துக்கொண்டார் என்று ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளதாக துர்ருல் மன்தூர் என்ற தஃப்ஸீரில் கூறப்பட்டுள்ளது.

திக்ரு, துஆ ஆகிய நேரங்களில், தனித்துத் தொழுபவனாயினும், மஃமூமாயினும் கிப்லாவை முன்னோக்குவது சுன்னத்தாகும். இமாமானவர் தான் தொழுத இடத்தை விட்டு வேறு இடம் மாறிக் கொள்வது சிறந்தது. அவ்வாறு செய்ய முடியாவிட்டாலும் தன்னுடைய வலது பக்கத்தை ஜமாஅத்தினரின் பக்கம் ஆக்கிக் கொள்வது சிறப்பாகும்.

சூஃபியாக்களும் ஆரிஃபீன்களும் சில ஃபுகஹாக்களும் தொழுகைக்கு இருபது பர்ளுகள் உள்ளதென்று கூறுகின்றனர். அவற்றில் இருபதாவது உள்ளச்சமாகும். உள்ளச்சத்துடன் தொழா விட்டால் தொழுகை கூடாது என்றும் கூறியுள்ளார்கள். உலமாக்களின் சொற்படி தக்பீர் தஹ்ரீமாவின் அளவுக்காவது உள்ளச்சம் இருத்தல் அவசியம் எனக் கூறப்பட்டுள்ளது.

அல்லாஹ் குர்ஆனில் "தங்களுடைய தொழுகையில் உள்ளச்சம் உள்ளவர்களான முஃமின்கள் திட்டமாக வெற்றியடைந்து விட்டார்கள்" என்று கூறியுள்ளான். எனவே, உள்ளச்சமில்லாமல் தொழுபவர்களுக்கு வெற்றி கிடைக்காது என விளங்குகிறது. ஆகையினால்தான் சூஃபிய்யாக்கள் அதனை ஃபர்லு ஐன் என்று கூறுகிறார்கள். அது உண்மையான சொல்லாகும். ஆனால், பெரும்பாலான மக்கள் அவ்விஷயத்தில் தகுதியற்றவர்களாகவும், குறை உள்ளவர்களாகவும் இருப்பதால் ஃபுகஹாக்கள் அதனை ஃபர்லென்று சொல்லாமல் சுன்னத் தென்று கூறியுள்ளார்கள்.

### ஃபர்லுஐனுக்கும் ஃபர்லுகிஃபாயாவிற்கும் இடையில் உள்ள வேறுபாடு

ஃபர்லு ஐன் என்பது வயது வந்த ஒவ்வொருவரின் மீதும் கட்டாயக் கடமையாகும். ஐங்காலத்தொழுகையைப்போல். ஃபர்லு கிஃபாயா என்பது சிலர் செய்தால் அனைவருடைய கடமையும் நீங்கி விடும் செயலாகும். ஜனாஸாத் தொழுகையைப் போல். ஜமாஅத் நடத்துவதைப்போல்.

ஒரு மனிதன் தனித்துத் தொழும்பொழுது உள்ளச்சம் ஏற்படுகிறது, ஜமாஅத்துடன் தொழும் பொழுது அது ஏற்படுவதில்லை என்றிருந்தால், தனித்துத் தொழுவது ஃபர்லு ஐன் என்பதாகவும் ஜமாஅத்துடன் தொழுவது ஃபர்லு கிஃபாயா என்பதாகவும் அவருக்குத் தீர்ப்பளிக்கப்பட்டு, ஃபர்லு ஐனுக்காக பர்லு கிபாயாவை விடுவது கூடும் என்று சூஃபிய்யாக்கள் கூறியுள்ளார்கள். ஆனால், கொஞ்சமாவது உள்ளச்சம் ஏற்படுவதாக இருந்தால் சூபியாக்களிடத்திலும், ஃபுகஹாக்களிடத்திலும் ஜமாஅத்துடன் தொழுவதுதான் சிறப்பாகும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

# களா தொழுகையின் பாடம்

எந்தக் காரணமுமின்றி தவறிவிட்ட ஃபர்லான தொழுகையை விரைவாகக் களாச்செய்வது வாஜிபாகும். உறக்கம் போன்ற ஒரு காரணத்தினால் தப்பிவிட்ட தொழுகையைக் களாச் செய்வதில் விரைந்து கொள்வது சுன்னத்தாகும்.

பல தொழுகைகள் ஒரே மாதிரி தப்பியிருந்தால் அவைகளைக் களாச் செய்வதில் ஒழுங்கை( تَرْتِيْب )க்கொண்டு வருவது சுன்னத்தாகும். (ளுஹருக்கு முன்னால் ஸுபுஹையும், அஸருக்கு முன்னால் ளுஹரையும் கொண்டு வருவது போல்)

ஒரு நேரத்தொழுகை தப்பிப்போகும் என்றிருந்தால் அதை நிறைவேற்றுவதில் தீவிரம் காண்பிப்பது வாஜிபாகும். ஃபர்லு களாவாக இருப்பவர்கள், தங்களுடைய ஜீவனத்திற்குத் தேவையான அளவு சம்பாதிக்கிற நேரமும், தூங்குகிற நேரமும், மலம் ஜலம் கழிக்கும் நேரமும், உணவு சாப்பிடுகிற நேரமும், தண்ணீரில் மூழ்கிக் கொண்டிருப்பவனையும், நெருப்பில் அகப்பட்டுக் கொண்டவனையும் காப்பாற்றுதல் போன்ற அவசரமாகச் செய்ய வேண்டிய காரியத்திற்குரிய நேரமும் போக மீதியுள்ள நேரங்களில் களாத்தொழுகைகளை விரைவாக நிறைவேற்றுவது வாஜிபாகும். அவ்வாறு களாச்செய்யாமல் வீணாக நேரத்தைக் கழிப்பதும், ஃபர்லு கிஃபாயா, சுன்னத்து தொழுகை, குர்ஆன் ஓதுதல், திக்ரு சலவாத்து ஆகியவற்றில் நேரத்தைச் செலவிடுவதும் ஹராமாகும். இதில் இரண்டு பெருநாட்களின் தொழுகை, கிரகணத்தொழுகை, மழை தேடித் தொழும் தொழுகை ஆகியவற்றைத் தொழலாம் என்று கல்யூபி என்ற கிரந்தத்தின் விரிவுரையில் கூறப்பட்டுள்ளது. சுன்னத்தான தொழுகைகளைக் களாச் செய்வதில் (தர்த்தீப்) ஒழுங்குமுறை சுன்னத்தாகும்.

தொழுகையைக் களாச் செய்யும் முன் மரணமடைந்து விட்டால் அதனைக் களாச் செய்யும்படி வஸிய்யத்துச் செய்திருந்தாலும், செய்யாவிட்டாலும் களாச் செய்யலாம். எனினும், அவனுடைய சொத்துக்கு வாரிசாகிறவர் அவனுக்காக களாச் செய்வது (பழைய சொற்படி) வாஜிபாகும். நோன்பும் அவ்வாறுதான். ஒவ்வொரு நேரத் தொழுகைக்கும் இரு கைகள் நிறைய (ஒரு முத்து مُدّ )உமி நீக்கப்பட்ட தானியம் கொடுக்க வேண்டுமென ஷாஃபியீ மத்ஹபைச் சேர்ந்த பெரும்பாலான இமாம்கள் தீர்ப்பளித்துள்ளார்கள்.

தவறிவிட்ட தொழுகையைக் கட்டாயம் களாச்செய்ய வேண்டுமென்பதை அனைவரும் தெளிவாக அறிந்திருந்தும், ஆலிம்கள் அதைப்பற்றி முறைப்படிக் கண்டித்துக் கூறாமல் இருக்கின்றனர். ஷைகுமார்கள் எனப்படுவோர் தங்கள் முரீதுகளுக்கு பைஅத் கொடுத்துவிட்டு அவர்களின் மீது பலஆண்டுத் தொழுகைகள் களா இருப்பதை அறிந்து கொண்டே அதனைக் கண்டிக்காமல், சில திக்ருகள், சில ஞானப்பாடல்கள் ஆகியவற்றைச் சொல்லிக் கொடுத்து உலகப் பொருட்களைச் சேகரிக்கும் முறைகளைச் சொல்லிக் கொடுத்து விடுகிறார்கள். களா தொழுகைகளைப் பற்றி எச்சரிக்கை செய்யாமல் தாங்களும் அந்தப் பாவத்தில் கூட்டாகி விடுகிறார்கள்.

## நஃபில் தொழுகைகளின் விளக்கம்

சுன்னத்தான தொழுகைகளில் சூராக்கள் குறிப்பாக்கப்படாத தொழுகையில் சூரத்துல் இக்லாஸை அதிகமாக ஒரு ஸஹாபி ஓதிவந்ததைத் தெரிந்த ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "உமக்கு வேறு சூரா பாடமில்லையா?"

எனக் கேட்டபோது "யாரசூலல்லாஹ்! நான் அதை விரும்புகிறேன்" என்று கூறினார். "அவ்வாறாயின் நீர் அதனை விரும்புவது உம்மை சொர்க்கத்தில் சேர்த்து வைக்கும்" என்று கூறினார்கள்.

வழக்கமாகத் தொழ வேண்டிய சுன்னத்துகளாவன: ளுஹருக்கு முன்னால் இரண்டு ஸலாமைக் கொண்டு நான்கு ரக்அத்துகள், அவ்வாறே ளுஹருக்குப்பின்னால் இரண்டு ஸலாமைக் கொண்டு நான்கு ரக்அத்துகள்; அஸருக்கு முன்னால் இரண்டு ஸலாமைக் கொண்டு நான்கு ரக்அத்துகள்; மஃரிபுக்கு முன்னால் ஒரு ஸலாமைக் கொண்டு இரண்டு ரக்அத்துகள், பின்னால் இரண்டு ரக்அத்துகள்; இஷாவுக்கு முன்னால் ஒரு ஸலாமைக் கொண்டு இரண்டு ரக்அத்துகள்; பின்னால் ஒரு ஸலாமைக் கொண்டு இரண்டு ரக்அத்துகள்; சுப்ஹுக்கு முன்னால் ஒரு ஸலாமைக் கொண்டு இரண்டு ரக்அத்துகள் ஆகிய இந்த இருபத்திரண்டு ரக்அத்துகளும் ஃபர்ளுகளுடன் சேர்ந்த சுன்னத்துகளாகும். இவற்றில் ளுஹருக்கு முன்னால் இரண்டு, பின்னால் இரண்டு, மஃரிபுக்குப்பின் இரண்டு, இஷாவுக்குப்பின் இரண்டு, சுபுஹுக்கு முன் இரண்டு ஆக இந்த பத்து ரக்அத்துகளும் கட்டாயமான (முஅக்கதாவான) சுன்னத்துகளாகும்.

முன் சுன்னத்துகளுக்கு ( قَبْلِيَّة ) முன் சுன்னத்தென்றும்

பின் சுன்னத்துகளுக்கு ( بَعْدِيَّة ) பின் சுன்னத்தென்றும்

கூறி நிய்யத்துச் செய்ய வேண்டும். முன் சுன்னத்தைப் பின்னால் தொழுதாலும் முன் சுன்னத்தென்றே நிய்யத்துச் செய்ய வேண்டும். உதாரணமாக முன் சுன்னத்திற்கு

أُصَلِّيْ سُنَّةَ الظُّهْرِ الْقَبْلِيَّةَ رَكْعَتَيْنِ لِلّٰهِ تَعَالٰى اَللّٰهُ اَكْبَرُ.

"ளுஹருடைய முன் சுன்னத்து இரண்டு ரக்அத்தையும் அல்லாஹ்வுக்காகத் தொழுகிறேன். அல்லாஹு அக்பர் " என்பதாகவும்

أُصَلِّيْ سُنَّةَ الظُّهْرِ الْبَعْدِيَّةَ رَكْعَتَيْنِ لِلّٰهِ تَعَالٰى اَللّٰهُ اَكْبَرُ.

"ளுஹருடைய பின் சுன்னத்து இரண்டு ரக்அத்தையும் அல்லாஹ்வுக்காகத் தொழுகிறேன். அல்லாஹு அக்பர்" என்பதாகவும் கூறவேண்டும்.

மஃரிபுக்கு முன்னும் இஷாவுக்கு முன்னும் தொழுகிற சுன்னத்தை இலேசான அளவில் தொழுது கொள்வது சுன்னத்தாகும்.

பிரயாணத்தின்போது இரண்டு நேரங்களைச் சேர்த்து முற்படுத்தித்தொழும் பொழுது சுன்னத்துத் தொழும் விபரமாவது:

லுஹரையும், அஸரையும் சேர்த்துத் தொழும்பொழுது முதலில் லுஹர் உடைய முந்தின சுன்னத்தையும், பிறகு இரண்டு நேரத்தின் ஃபர்ளுகளையும், பிறகு லுஹருடைய பிந்திய சுன்னத்தையும், பிறகு அஸருடைய சுன்னத்தையும் தொழுவான். அவ்வாறே மஃரிபையும், இஷாவையும் சேர்த்துத் தொழும் பொழுது மஃரிபுடைய முன் சுன்னத்தை முதலிலும் பிறகு இரண்டு நேரத்தின் ஃபர்ளுகளையும், பிறகு மஃரிபுடைய பின் சுன்னத்தையும், பிறகு இஷாவின் முன் சுன்னத்தையும் பிறகு, அதன் பிந்திய சுன்னத்தையும், அதன் பிறகு வித்ரையும் தொழுவான். முந்தின சுன்னத்தை ஃபர்ளுக்குப் பின்னும் தொழலாம். ஆனால் சுப்ஹுவிலும் அஸரிலும் அப்படி ஃபர்ளுக்குப்பின் தொழுவது மக்ரூஹ் ஆகும். எனினும் ஜமாஅத் தப்பிவிடுமென்றிருந்தால் அந்த இரு வக்துகளின் முந்தின சுன்னத்தை ஃபர்ளுக்குப் பிறகும் தொழலாம்.

சுன்னத்தான தொழுகைகளில் லுஹாவுடைய தொழுகையையும், ஜமாஅத்துடன் தொழுவது கடமையாக்கப்பட்ட தொழுகைகளையும் தவிர, மற்ற சுன்னத்தான தொழுகைகள் அனைத்தையும் பள்ளியில் தொழுவதைவிட தன் வீட்டில் தொழுவது சிறந்ததாகும்; மக்காவில் உள்ள ஹரம் ஷரீஃபாயிருந்தாலும் சரி.

## ஜமாஅத்துடன் தொழுவது விதியாக்கப்படாத சுன்னத்துத் தொழுகைகள்

ஜமாஅத்துடன் தொழுவது விதியாக்கப்படாத சுன்னத்துத் தொழுகைகளில் மிக ஏற்றமானது வித்ரு தொழுகையாகும். இமாம் அபூ ஹனீஃபா (ரஹ்) அவர்களிடம் வித்ரு வாஜிபாகும். அதனுடைய நேரமாகிறது, இஷா தொழுதபின் அதிகாலை சுபுஹ் சாதிக் (மெய் வெள்ளை) ஏற்படுகிற நேரம் வரையிலாயிருக்கும். வித்ரில் குறைந்தது ஒரு ரக்அத்; மிகக் கூடுதலானது பதினொரு ரக்அத்துகள். நிரப்பத்தில் தாழ்ந்தது மூன்று ரக்அத்துகள்; அதைவிட நிரப்பமானது ஐந்து ரக்அத்துகள்; அதைவிட நிரப்பமானது ஏழு ரக்அத்துகள்; அதைவிட நிரப்பமானது ஒன்பது ரக்அத்துகள்; அதைவிட நிரப்பமானது பதினொரு ரக்அத்துகள்.

வித்ருடைய எண்ணத்தில் பதினொரு ரக்அத்துகளை விட அதிகப்படுத்துவது கூடாது. இத்தனை ரக்அத்துகள்தான் தொழுவேன் என்று ஆரம்பத்திலேயே குறிப்பாக்க வில்லையானாலும் பதினொரு ரக்அத்துகள் வரை தொழலாம். இத்தனை ரக்அத்துகள் தொழுவேன் என்று ஆரம்பத்தில் குறிப்பாக்கியவர் பிறகு அதிகப்படுத்த நாடினால் முன் குறிப்பாக்கிய ரக்அத்துகள் முடிந்தபிறகு அதிகமானதைத் தொழுவதற்கு எழும்முன் அதிகப்படுத்துவதை நிய்யத்துச் செய்து கொள்ளவும். குறைக்க நாடுகிறவன் அத்தஹிய்யாத்தில் உட்காரும் முன் நிய்யத்துச் செய்து கொள்ளவும். வித்ரு தொழுகையின் நிய்யத்து பின்வருமாறு (வித்ரு இரண்டு ரக்அத்தின் தக்பீர்) :

أُصَلِّيْ صَلٰوةَ الْوِتْرِ رَكْعَتَيْنِ مُسْتَقْبِلًا اِلَى الْكَعْبَةِ
الشَّرِيْفَةِ لِلّٰهِ تَعَالٰى اَللّٰهُ اَكْبَرُ.

வித்ரு ஒற்றை ரக்அத்தின் தக்பீர் :-

اُصَلِّيْ صَلٰوةَ الْوِتْرِ رَكْعَةً مُّسْتَقْبِلًا اِلَى الْكَعْبَةِ
الشَّرِيْفَةِ لِلّٰهِ تَعَالٰى اَللّٰهُ اَكْبَرْ.

ஒவ்வொரு இரண்டு ரக்அத்திலும் ஸலாம் கொடுத்து இரண்டிரண்டு ரக்அத்தாகப் பிரித்துத் தொழுவது சேர்த்துத் தொழுவதை விடச்சிறந்ததாகும். பிந்திய மூன்று ரக்அத்துகளை மட்டும் மஃரிபு தொழுகையைப் போல் சேர்த்துத் தொழுவது மக்ருஹ். பிந்திய மூன்று ரக்அத் அல்லாததில் சேர்த்துத் தொழுவது ஏற்றத்திற்கு மாற்றமாகும். அவ்வாறு மூன்று அல்லது பதினொரு ரக்அத்துகள் வரை ஒற்றைப்படைச் சேர்த்துத் தொழும்போது கடைசி இரண்டு ரக்அத்தில் ஒரு அத்தஹிய்யாத்து, அல்லது இரண்டு அத்தஹிய்யாத்தைக் கொண்டு சேர்ப்பதும் ஆகும். ஒரு ஸலாமில் இரண்டு அத்தஹிய்யாத்தைக் காண அதிகத்தைக் கொண்டு சேர்ப்பது கூடாது.

மூன்று ரக்அத் தொழநாடியவர், முதல் ரக்அத்தில் ஸப்பிஹிஸ்ம சூராவும், இரண்டாவதில் குல்யா அய்யுஹல் காஃபிரூன் சூராவும், மூன்றாவதில் குல்ஹுவல்லாஹு, குல் அஊது பிரப்பில் ஃபலக், குல் அஊதுபிரப்பின் னாஸ் ஆகிய சூராக்களும் ஓதுவது சுன்னத்து. அதிகம் தொழ நாடியவர் பிந்திய மூன்று ரக்அத்துகளில் மேற்கூறப்பட்ட சூராக்களை ஓதுவது சுன்னத்து. ஸலாம் கொடுத்தபின்

سُبْحَانَ الْمَلِكِ الْقُدُّوْسِ என்று மூன்று தடவை சொல்லிக் கொள்ள வேண்டும். மூன்றாவது தடவை சத்தத்தை உயர்த்திக் கூற வேண்டும். அதற்குப் பிறகு இந்தத் தஸ்பீஹை கீழ்கண்டவாறு பரிபூரணமாக சேர்த்து ஓதுவது சிறப்பாகும்:

سُبْحَانَ ذِى الْمُلْكِ وَالْمَلَكُوْتِ. سُبْحَانَ ذِى الْعِزَّةِ -
وَالْعَظَمَةِ وَالْقُدْرَةِ وَالْهَيْبَةِ وَالْجَلَالِ وَالْجَمَالِ وَالْكَمَالِ
وَالْبَقَآءِ وَالضِّيَآءِ وَالثَّنَآءِ وَالْاٰلَآءِ وَالنَّعْمَآءِ وَالْكِبْرِيَآءِ
وَالْجَبَرُوْتِ. سُبْحَانَ الْمَلِكِ الْحَيِّ الَّذِيْ لَا يَنَامُ وَلَا يَمُوْتُ.
سُبُّوْحٌ قُدُّوْسٌ رَبُّنَا وَرَبُّ الْمَلٰٓئِكَةِ وَالرُّوْحِ. اَللّٰهُمَّ
اِنِّيْٓ اَعُوْذُ بِكَ بِرِضَاكَ مِنْ سُخْطِكَ وَبِمُعَافَاتِكَ مِنْ
عُقُوْبَتِكَ وَاَعُوْذُ بِكَ مِنْكَ لَآ اُحْصِيْ ثَنَآءً عَلَيْكَ اَنْتَ
كَمَآ اَثْنَيْتَ عَلٰى نَفْسِكَ.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

இஷாவையும் வித்ரையும் தொழுது முடித்த ஒருவனுக்கு இஷா தொழுகை பாத்திலாகி (முறிந்து) விட்டது என்று தெரிய வந்தால், அவன் தொழுத வித்ரு நஃபிலாக ஆகிவிடும். இஷாவைத் திருப்பித்தொழுத பின் வித்ரையும் திரும்பத் தொழ வேண்டும்.

ஃபஜ்ருக்கு முன் விழித்து (இரவின் கடைசி நேரத்தில்) வித்ரு தொழ முடியும் என்று நம்பிக்கையுள்ளவர், வித்ரை இரவின் கடைசியில் பிற்படுத்தித் தொழுவது சுன்னத்தாகும். ரமலானில் இவ்வாறு தொழுவதால் ஜமாஅத்து தவறிவிட்டாலும் சரி.

ஒருவர் இஷாவுக்குப்பின் வித்ரு தொழுது விட்டுத் தூங்கி, பிறகு தஹஜ்ஜுதுக்கு எழுந்து அதனைத் தொழுதபின் மீண்டும் வித்ரைத் தொழுவது சுன்னத்தல்ல. ஆனால், தஹஜ்ஜுதுடைய எண்ணத்தில் அதனை மீண்டும் தொழுதால் அது நஃபிலாகி விடும். எனினும் மீண்டும் வித்ரைத் தொழுவது சுன்னத்தல்லவென்பதை அறிந்து கொண்டே மனமுரண்டாகத் திரும்பத் தொழுதால் அத்தொழுகை பாத்திலாகிவிடும்.

அபூ பக்கர் ஸித்தீக் (ரலி) அவர்கள் வித்ரு தொழுது விட்டுத் தூங்கி , பிறகு எழுந்து தஹஜ்ஜுத் தொழுவார்கள். உமர் (ரலி) அவர்கள் தூங்கி எழுந்து வித்ரு தொழுதுவிட்டுப் பின் தஹஜ்ஜுத் தொழுவார்கள். இவ்விருவரும் நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் இவ்விஷயத்தைக் கூறிய பொழுது "அபூபக்கர் நற்கருத்தை எடுத்துக் கொண்டார். உமர் தன் சக்தியைப்பயன்படுத்திக் கொண்டார்" என்று கூறினார்கள்.

உஸ்மான் (ரலி) அவர்கள் அபூ பக்கர் (ரலி) அவர்களைப் போன்றும், அலீ (ரலி) அவர்கள் உமர் ( ரலி),அவர்களைப்போன்றும் செய்து வந்தார்கள். இமாம் ஷாஃபியீ (ரஹ்) அவர்கள் அபூபக்கர் (ரலி) அவர்களைப் போன்று செய்து வந்தார்கள்.

## இஷ்ராக், ளுஹா தொழுகைகளின் விவரம்

சூரியன் உதயமாகி ஓர் (வல்லயப்பிரமாணம்) ஈட்டியின் உயரம் மேலே உயர்ந்தபிறகு இஷ்ராக் தொழுகையின் நிய்யத்தில் இரண்டு ரக்அத்துகள் தொழுவது சுன்னத்தாகும். அந்த நேரத்திலிருந்து சூரியன் உச்சிக்கு வரும் நேரத்திற்குள் ளுஹா தொழுவதும் சுன்னத்தாகும். அதில் ஏற்றமான நேரமாகிறது முற்பகலில் ஏழரை நாழிகை கொண்ட ஒரு சாமம் (மூன்று மணி நேரம்) சென்ற பின்னராகும். அத்தொழுகை இரண்டு ரக்அத் முதல் எட்டு ரக்அத்துகள் வரை இரண்டிரண்டு ரக்அத்துகளாகத் தொழுவதாகும். இந்த ளுஹா தொழுகையை மஸ்ஜிதில் தொழுவது சிறப்பாகும்.

ளுஹா தொழுகையின் முதல் ரக்அத்தில் ஃபாத்திஹாவுக்குப்பின் வஷ்ஷம்ஸி சூராவும் இரண்டாவது ரக்அத்தில் வள்ளுஹா சூராவும் ஓத வேண்டும். அல்லது முதல் ரக்அத்தில் குல்யா அய்யுஹல் காபிஃரூன் சூராவும் இரண்டாவதில் குல்ஹுவல்லாஹு சூராவும் ஓதலாம்.

மஸ்ஜிதில் தொழுகின்ற சிறப்பு, ஏற்றமான நேரத்தில் தொழுகின்ற சிறப்பு ஆகிய இரண்டில் ஒன்றுதான் கிடைக்கும், மற்றது கிடைக்காது என்றிருந்தால், வணக்கத்தைத்

கொண்டு சம்பந்தப்பட்டிருக்கும் நேரத்தின் சிறப்பை, இடத்தைக் கொண்டு சம்பந்தப்பட்டிருக்கும் சிறப்பை விட முற்படுத்தவேண்டும்.

ழுஹாவுக்கும் இஷ்ராக்கிற்கும் ஆரம்ப நேரம் ஒன்றாக இருப்பதால் ழுஹாவிற்குள் இஷ்ராக் நுழைந்து விட்டதென்றிருந்தாலும் பேணுதல் உள்ளவர்கள் இஷ்ராக்கை முந்தித் தொழுது கொள்வார்கள்.

## தஹிய்யத்துல் மஸ்ஜித் தொழுகை

பள்ளிவாசலுக்குள் நுழைகிறவர் உட்காருவதற்கு முன் பள்ளியின் காணிக்கையாக இரண்டு ரக்அத்துகள் தொழுவது சுன்னத்தாகும். அறியாமல், அல்லது மறதியாக, அல்லது தண்ணீர் குடிப்பது போன்ற அவசியத்திற்காக உட்கார்ந்து விட்டாலும் அத்தொழுகை தவறிவிடாது.

பள்ளியில் நுழைந்தவுடன் வேறு சுன்னத்தான, ஃபர்லான தொழுகைகளை தொழுவதின் மூலம் தஹிய்யத்துல் மஸ்ஜித் நிறைவேறிவிடும். தஹிய்யத்துல் மஸ்ஜிதுக்கென்று தனியாக நிய்யத்து வைக்காவிட்டாலும் சரியே. ஆனால் ஒரு ரக்அத் தொழுவதினாலும், ஜனாஸாத் தொழுகை தொழுவதினாலும், ஸஜ்தா திலாவத், ஸஜ்தா ஷுக்ரு செய்வதினாலும் அது நிறைவேறாது.

தஹிய்யத்துல் மஸ்ஜித் தொழுதால் ஜமாஅத்துடன் முதல் தக்பீரில் போய்ச்சேருவது தவறிவிடுமென்றிருந்தாலும் அல்லது ஜும்ஆ நாளில் குத்பா முடிகிற நேரத்தில் வந்தாலும் நின்றவராகவே ஜமாஅத்தை எதிர் பார்க்க வேண்டும். அவ்வாறு எதிர்பார்த்து நின்று ஜும்ஆ தொழுவதின் மூலம் தஹிய்யத்துல் மஸ்ஜிதின் நன்மை கிடைத்துவிடும்.

பள்ளியில் நுழைந்தவர் தஹிய்யத்துல் மஸ்ஜித் தொழ வசதியில்லாவிட்டால், அல்லது தொழ நாடவில்லையானால், மூன்றாம் கலிமாவை நான்கு தடவை ஓதிக்கொள்வது சுன்னத்தாகும்.

குத்பாவுடைய நேரம் வந்த பிறகு பள்ளியில் நுழைகின்ற கதீப் தஹிய்யத் தொழுவது மக்ரூஹ். உளுவில்லாமல் பள்ளியில் நுழைவதும் மக்ரூஹ். அவ்வாறே பள்ளியில் நுழைந்தவர் எந்தக் காரணமுமின்றி தஹிய்யத்துல் மஸ்ஜித் தொழாமலிருப்பதும் மக்ரூஹ் ஆகும்.

## இஸ்திஃகாரா தொழுகை

வியாபாரம் தொடங்குவது, பிரயாணம் செய்வது, வீடு கட்டுவது, குடிபுகுவது, திருமணம் செய்வது போன்ற நன்மையான காரியங்களிலும், கப்பலில் ஏறு முன்பும், புதுமணமக்கள் வீடு கூடுவதற்கு முன்பும், எப்பொழுதும் போகாத ஓரிடத்திற்குப் போகும்போதும், முற்றிலும் காஃபிர்கள் இருக்குமிடத்திற்குப் போகும்போதும் நன்மைதேடி இரண்டு ரக்அத் தொழுது கொள்வது சுன்னத்தாகும்.

இவ்வாறே திருமணம் சம்பந்தமான பேச்சுப்பேசி ஒரு முடிவு எடுப்பதற்கு முன்னும், குர்ஆன் ஹிஃப்ளு செய்ய ஆரம்பிக்கும் முன்னும், ஹிஃப்ளு செய்து முடித்த

பின்னும், உளுச் செய்த பின்னும், குளித்த பின்னும், தயம்முமுக்குப் பின்னும், தலைமுடி, அரைமுடி, மீசை, அக்குள் முடி ஆகியவற்றை நீக்கிய பின்னும் இரண்டு ரக்அத் இஸ்திகாரா (நன்மைதேடி)த் தொழுவது சுன்னத்தாகும்.

இன்னும் உணவு, குடிப்பு ஆகியவற்றிற்குப்பின்பும், தவ்பாச் செய்யும் முன்னும் பின்னும் இதனைத் தொழ வேண்டும் என இஹ்யாவில் எழுதப்பட்டுள்ளது.

இஸ்திகாரா என்ற நிய்யத்தில் இரண்டு ரக்அத் தொழுத பின், பின்வரும் துஆவை ஓத வேண்டும்:

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْتَخِيْرُكَ بِعِلْمِكَ وَاَسْتَقْدِرُكَ بِقُدْرَتِكَ
وَاَسْئَلُكَ مِنْ فَضْلِكَ الْعَظِيْمِ. فَاِنَّكَ تَقْدِرُ وَلَا اَقْدِرُ
وَتَعْلَمُ وَلَا اَعْلَمُ وَاَنْتَ عَلَّامُ الْغُيُوْبِ. اَللّٰهُمَّ اِنْ كُنْتَ
تَعْلَمُ اَنَّ هٰذَا الْاَمْرَ خَيْرٌ لِّيْ فِيْ دِيْنِيْ وَمَعَاشِيْ وَ-
عَاقِبَةِ اَمْرِيْ فَاقْدُرْهُ لِيْ وَيَسِّرْهُ لِيْ ثُمَّ بَارِكْ لِيْ
فِيْهِ. وَاِنْ كُنْتَ تَعْلَمُ اَنَّ هٰذَا الْاَمْرَ شَرٌّ لِّيْ فِيْ دِيْنِيْ
وَمَعَاشِيْ وَعَاقِبَةِ اَمْرِيْ فَاصْرِفْهُ عَنِّيْ وَاصْرِفْنِيْ
عَنْهُ وَاقْدُرْ لِيَ الْخَيْرَ حَيْثُ كَانَ ثُمَّ اَرْضِنِيْ بِهٖ.

பொருள்:-

"யா அல்லாஹ்! உன்னுடைய அறிவின் பொருட்டால் நான் உன்னிடம் நன்மையைத் தேடுகிறேன். உனது ஆற்றலின் பொருட்டால் உன்னிடம் ஆற்றலைத் தேடுகிறேன். உன்னுடைய மகத்தான அருளிலிருந்து உன்னிடம் நான் கேட்கிறேன். நிச்சயமாக நீ (எல்லாப் பொருட்களின் மீதும்) ஆற்றல் பெறுவாய்; நான் (எதற்கும்) ஆற்றல் பெறமாட்டேன். நீ (அனைத்தையும்) அறிந்துள்ளாய்; நான் (எதனையும்) அறியமாட்டேன். நீ மறைவானவற்றை நன்கு அறிந்தவனாக இருக்கிறாய். யா அல்லாஹ்! இந்தச் செயல் எனக்கு என்னுடைய தீனிலும் என்னுடைய வாழ்விலும் என் செயலின் முடிவிலும் நன்மையாக இருக்குமென நீ அறிந்திருந்தால் அதற்கு எனக்கு நீ ஆற்றலளித்து, அதனை எனக்கு எளிதாக்கி வைத்து, பிறகு அதில் எனக்கு நீ பரக்கத்துச் செய்வாயாக! இந்தச் செயல் எனக்கு என்னுடைய தீனிலும் என்னுடைய வாழ்விலும் என் செயலின் முடிவிலும் தீமையாக இருக்குமென நீ அறிந்திருந்தால் அதனை என்னை விட்டும் நீ திருப்பிவிடுவாயாக! என்னையும் அதனை விட்டுத் திருப்பி விடுவாயாக! நன்மை எங்கிருந்தாலும் அதனைச் செய்ய எனக்கு ஆற்றலளிப்பாயாக! பிறகு அதனைக் கொண்டு என்னை பொருந்திக் கொள்ளச் செய்வாயாக!"

## அவ்வாபீன் தொழுகை

மஃரிபுடைய சுன்னத்தான தொழுகைகள், அவ்ராதுகள் ஆகியவற்றை முடித்தபின் மஃரிபுக்கும் இஷாவுக்குமிடையில் "ஸலாத்துல் அவ்வாபீன்" என்று இருபது ரக்அத்துகள் தொழுவது சுன்னத்தாகும். அது ஆறு ரக்அத்துகள் என்பதாகவும், நான்கு ரக்அத்துகள் என்பதாகவும், குறைந்தது இரண்டு ரக்அத்துகள் என்பதாகவும் கூறப்பட்டுள்ளது. மேலும் இத்தொழுகை தஹிய்யத்துல் மஸ்ஜிதைத் தொழுவது கொண்டும் ஃபர்லான அல்லது சுன்னத்தான ஏதாவது தொழுகைகளைக் களாச் செய்வது கொண்டும், அல்லது வேறு எந்தத் தொழுகைகள் தொழுவது கொண்டும் நிறைவேறிவிடும்.

உளுவுடைய தொழுகையும், ஷுக்ருடைய தொழுகையும் முன்னால் சொல்லப்பட்டுள்ளது. ஷுக்ருடைய தொழுகைக்கு நிய்யத்தாவது:

أُصَلِّيْ صَلٰوةَ الشُّكْرِ رَكْعَتَيْنِ مُسْتَقْبِلًا إِلَى الْكَعْبَةِ
الشَّرِيْفَةِ لِلّٰهِ تَعَالَى اَللهُ أَكْبَرُ

இந்தத் தொழுகையை தொழுது முடித்தபின் பின்வருமாறு துஆக்கேட்க வேண்டும்:

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْئَلُكَ خَيْرَ هٰذِهِ الزَّمَانِ وَخَيْرَ هٰذَا الْمَكَانِ
وَخَيْرًا كَامِلًا لِّيْ وَلِوَالِدَيَّ وَلِلْوُلْدَانِ فَاغْفِرْ لَنَا وَ
ارْحَمْنَا يَا ذَا الْمَنِّ وَالْإِحْسَانِ بِرَحْمَتِكَ يَا أَرْحَمَ
الرَّاحِمِيْنَ.

பொருள்:-

"யா அல்லாஹ்! நிச்சயமாக நான் இந்தக் காலத்தின் நன்மையையும் இந்த இடத்தின் நன்மையையும்-பரிபூரண நன்மையாக எனக்கும் என் பெற்றோருக்கும் என் குழந்தைகட்கும் உன்னிடத்தில் வேண்டுகிறேன். எனவே, பேருபகாரம் உடையவனே, கிருபையாளர்களுக்கெல்லாம் பெருங்கிருபையாளனே! உன்னுடைய கிருபையால் எங்களை மன்னித்து எங்களுக்கு அருள் புரிவாயாக!"

## தஸ்பீஹ் தொழுகை

இந்தத் தொழுகையை,முடிந்தால் நாள் தோறும் தொழுது வருவதும், இயலாவிடில் வாரத்திற்கொரு முறை தொழுவதும், இயலாவிடில் மாதத்திற்கொரு முறை தொழுவதும், இயலாவிடில் ஆண்டுக்கொரு முறை தொழுவதும், அதுவும் இயலாவிடில் ஆயுளில் ஒரு தடவையாவது தொழுவதும் சுன்னத்தாகும்.

இது நான்கு ரக்அத்துகளாகும். இரண்டிரண்டு ரக்அத்துகளாக இரண்டு ஸலாமில் தொழுவது ஏற்றமாகும். ஒரே ஸலாமில் நான்கு ரக்அத்துகளையும் தொழலாம்.

தக்பீர் தஹ்ரீமா கட்டியபின் வஜ்ஜஹ்த்து, சூரத்துல் பாத்திஹா, மற்றொரு சூரா ஆகியவை ஓதிய பின், ருகூவு செய்வதற்கு முன், நிலையில் 15 (பதினைந்து) தடவை ஓதவேண்டிய தஸ்பீஹ¨க்கு முன்

سُبْحَانَكَ اللّٰهُمَّ وَبِحَمْدِكَ وَتَبَارَكَ اسْمُكَ
وَتَعَالٰى جَدُّكَ وَلَآ اِلٰهَ غَيْرُكَ .

என்ற ஃதனா ( ثَنَاءٌ )வை ஓதவேண்டும். பிறகு மூன்றாம் கலிமாவில் "சுப்ஹானல்லாஹி வல்ஹம்துலில்லாஹி வலாஇலாஹ இல்லல்லாஹ¨ வல்லாஹ¨ அக்பர்" என்பது வரை நிலையில் பதினைந்து தடவையும், ருகூவில் பத்து தடவையும், சிறு நிலையில் பத்து தடவையும், முதல் ஸஜ்தாவில் பத்து தடவையும், சிறு இருப்பில் பத்து தடவையும் இரண்டாவது ஸஜ்தாவில் பத்து தடவையும், இஸ்திராஹத் இருப்பில் பத்து தடவையும் ஓதி எழும்ப வேண்டும். இவ்வாறு ஒரு ரக்அத்தில் எழுபத்தைந்து தடவை வீதம் நான்கு ரக்அத்துகளில் முன்னூறு தடவை ஓதவேண்டும். மேற்கூறப்பட்ட அந்தக் கலிமாவுடன் 'வலா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹில் அலிய்யில் அளீம்' என்பதையும் சேர்த்து ஓதலாம்.

இந்தத் தஸ்பீஹை ஒவ்வொரு தானத்திலும் அதிலதிலுள்ள திக்ருகளை ஓதிய பின் ஓதவேண்டும். இரண்டாவது ஸஜ்தாவில் இருந்து இஸ்திராஹத் இருப்பிற்கு எழுந்திருக்கும்போது தக்பீர் சொல்லி எழுந்து உட்கார்ந்து, பிறகு பத்து தடவை தஸ்பீஹ் ஓதியபின் தக்பீர் சொல்லாமல் எழுந்திருக்க வேண்டும். இரண்டாவது ரக்அத்தில் இரண்டாவது ஸஜ்தாவுக்குப்பின் எழுந்து, இருக்கும் இருப்பில் அத்தஹிய்யாத்துக்கு முன் பத்து தடவை தஸ்பீஹ் ஓத வேண்டும்.

நிலையிலுள்ள பதினைந்து தஸ்பீஹ்களை சூரத்துல் ஃபாத்திஹாவுக்கு முன்னால் ஓதி இஸ்திராஹத்தில் ஓதவேண்டிய பத்து தஸ்பீஹ்களை நிலையில் சூரா ஓதிய பின்பும் ஓதுவது ஆகும்.

ருகூஇல் ஓத வேண்டிய தஸ்பீஹை மறந்து சிறு நிலைக்கு வந்துவிட்டால் திரும்ப ருகூவுக்குப் போவதோ, மறந்த தஸ்பீஹை சிறு நிலையில் ஓதுவதோ கூடாது. எனினும், அந்த பத்து தஸ்பீஹையும் சுஜூதில் ஓதிக் கொள்ள வேண்டும்.

தஸ்பீஹ் தொழுகையில் முதல் ரக்அத்தில் சூரத்துல் ஃபாத்திஹாவுக்குப்பின் 'அல்ஹாக்குமுத் தகாதுர்' சூராவும், இரண்டாவது ரக்அத்தில் 'வல் அஸ்ரி' சூராவும் மூன்றாம் ரக்அத்தில் குல்யா அய்யுஹல் காஃபிரூன் சூராவும், நான்காம் ரக்அத்தில் குல்ஹ¨வல்லாஹ¨ சூராவும் ஓதுவது சிறப்பாகும்.

இத்தொழுகையை வெள்ளிக்கிழமை ஜும்ஆவுக்குமுன் தொழுவது நல்லதாகும். முன்னூறு தஸ்பீஹ் ஓதி முடித்து, கடைசி அத்தஹிய்யாத்து ஓதியபின் ஸலாம் கொடுப்பதற்கு முன் பின்வரும் துஆவை ஓதுவதும் நல்லதாகும்.

اَللّٰهُمَّ اِنِّيْٓ اَسْئَلُكَ تَوْفِيْقَ اَهْلِ الْهُدٰى وَاَعْمَالَ اَهْلِ
الْيَقِيْنِ وَمُنَاصَحَةَ اَهْلِ التَّوْبَةِ وَعَزْمَ اَهْلِ الصَّبْرِ
وَجِدَّ اَهْلِ الْخَشْيَةِ وَطَلَبَةَ اَهْلِ الرَّغْبَةِ وَتَعَبُّدَ
اَهْلِ الْوَرَعِ وَعِرْفَانَ اَهْلِ الْعِلْمِ حَتّٰى اَخَافَكَ. اَللّٰهُمَّ
اِنِّيْٓ اَسْئَلُكَ مَخَافَةً تَحْجُزُنِيْ عَنْ مَعَاصِيْكَ حَتّٰى
اَعْمَلَ بِطَاعَتِكَ عَمَلًا اَسْتَحِقُّ بِهٖ رِضَاكَ وَحَتّٰى
اُنَاصِحَكَ فِي التَّوْبَةِ خَوْفًا مِّنْكَ وَحَتّٰى اُخْلِصَ لَكَ النِّيَّةَ
حُبًّا لَّكَ وَحَتّٰى اَتَوَكَّلَ عَلَيْكَ فِي الْاُمُوْرِ كُلِّهَا وَحُسْنِ
الظَّنِّ بِكَ سُبْحَانَ خَالِقِ النُّوْرِ. رَبَّنَآ اَتْمِمْ لَنَا
نُوْرَنَا وَاغْفِرْ لَنَآ اِنَّكَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ بِرَحْمَتِكَ
يَآ اَرْحَمَ الرّٰحِمِيْنَ.

பொருள்:-

"*யா அல்லாஹ்! நிச்சயமாக நான் உன்னைப் பயப்படுவதற்காக நேர்வழி உடையவர்களுக்கு நீ செய்தது போன்ற நல்லுதவியையும் உறுதியுடையவர்களின் அமல்களையும், தவ்பா உடையவர்களின் தூய செயலையும், பொறுமை யுடையவர்களின் உறுதியையும் (உன்னை) பயந்தவர்களின் முயற்சியையும், ஆர்வமுள்ளோரின் தேட்டத்தையும், பேணுதலுடையவர்களின் வணக்கத்தையும், கல்விமான்களின் ஞானத்தையும் உன்னிடம் நான் வேண்டுகிறேன்.*

*யா அல்லாஹ்! உனக்கு மாறு செய்வதை விட்டும் என்னைத்தடுக்கும் படியான பயத்தை உன்னிடம் நான் வேண்டுகிறேன். (ஏனெனில்) உன்னுடைய திருப்திக்கு எதைக்கொண்டு நான் தகுதி பெறுவேனோ அத்தகைய அமலை செய்து உனக்கு வழிபடுவதின் மூலமும், உன்னை பயந்து தவ்பாச்செய்வதில் உனக்கு நான் கலப்பற்ற தூய எண்ணத்துடன் இருப்பதற்காகவும், நான் உன்னை தூய எண்ணத்துடன் நேசிப்பதற்காகவும், எல்லாக்காரியங்களிலும் உன்னிடம் நல்லெண்ணம் வைத்து உன்மீது நான் நம்பிக்கை வைப்பதற்காகவும் (உன் பயத்தை வேண்டுகிறேன்) ஒளியைப்படைத்த நீ மகாத்தூயவன். எங்களுடைய இரட்சகனே! எங்களின் ஒளியை எங்களுக்கு நீ நிரப்பமாக்கி வைத்து எங்களை மன்னிப்பாயாக! நிச்சயமாக நீ எல்லாப்*

பொருட்களின் மீதும் சக்தி பெற்றவன். அருளாளர்களிலெல்லாம் மாபெரும் அருளாளனே, உன்னுடைய அருளால் இவற்றை எங்களுக்கு அருள்வாயாக!"

இதனை ஓதி முடித்து ஸலாம் கொடுத்தபின் தன்னுடைய தேவைகளை அல்லாஹ்விடம் கேட்பான். தஸ்பீஹ் தொழுகையுடைய சிறப்பினைத் தெரிந்தபின் அதை விடுகிறவன் மார்க்கத்தை அலட்சியமாகக் கருதுகிறவனாவான்.

## தஹஜ்ஜுத் தொழுகை

இரவில் தூங்கிவிழித்துத் தொழுவது தஹஜ்ஜுத் என்ற சுன்னத்துத் தொழுகையாகும். தஹஜ்ஜுதும், வித்ரும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் மீது ஃபர்லாக ஆக்கப்பட்டிருந்தது. இலேசைக் கருதியும், சடைவு ஏற்பட்டு, அதை விட்டு விட்டால் குற்றவாளிகளாகி விடுவார்களே என்ற இரக்கத்தினாலும், உம்மத்தினர் மீது அவையிரண்டும் ஃபர்லாக்கப்படவில்லை. எனினும், ஞானவான்கள் அதனை ஃபர்லைப் போன்றே கருதி செயல்படுவார்கள்.

தஹஜ்ஜுதில் குறைந்தது இரண்டு ரக்அத்துகள்; அதிகத்திற்கு அளவில்லை. எனினும், பன்னிரண்டு ரக்அத்துகள் என்று கூறப்பட்டுள்ளது. அதில் சூராயாஸீன், சூரா முஸ்ஸம்மில் ஆகியவற்றை ஓதலாம் என்றும் கூறப்பட்டுள்ளது.

இதற்கு எழுதி முடிக்கமுடியாத அளவு சிறப்புகள் உண்டு. ஆகையால் கொஞ்சமானாலும் வழக்கமாகத் தொழுது வருவது சுன்னத்தாகும். தஹஜ்ஜுதிற்காக விழித்து எழுந்தவுடன் முகத்தை இருகைகளாலும் தடவிக்கொண்டு, வானத்தைப்பார்த்து,

(3:190) اِنَّ فِيْ خَلْقِ السَّمٰوٰتِ وَالْاَرْضِ

என்ற ஆயத்தைக் கடைசிவரை ஓதுவதும், முந்திய இரண்டு ரக்அத்துகளைச் சுருக்கமாகத் தொழுது மற்ற ரக்அத்துகளை நீளப்படுத்தித் தொழுவதும் சுன்னத்தாகும்.

தஹஜ்ஜுத் தொழுகை பன்னிரண்டு ரக் அத்துகளிலும் சூரத்துல் ஃபாத்திஹாவுக்குப் பின் குர்ஆனில் ரப்பனா..... என்று தொடங்குகின்ற துஆவுடைய ஆயத்துகளில் பன்னிரண்டு ஆயத்துகளை ஓதுவதும், அல்லது முதல் ரக்அத்தில் சூராஃபாத்திஹாவுக்குப் பின், சூரா யாஸீன் ஒரு தடவையும், சூரா முஸ்ஸம்மில் பன்னிரண்டு தடவையும், பிறகு இரண்டாம் ரக் அத்தில் சூரா ஃபாத்திஹாவுக்குப் பின் சூரா யாஸீன் ஒரு தடவையும் சூரா முஸ்ஸம்மில் பதினொரு தடவையும், மூன்றாம் ரக்அத்தில் யாஸீன் ஒரு தடவையும், முஸ்ஸம்மில் பத்து தடவையும் நான்காம் ரக்அத்தில் யாஸீன் ஒரு தடவையும் முஸ்ஸம்மில் ஒன்பது தடவையும் இவ்வாறே பன்னிரண்டு ரக்அத்துகளைத் தொழுவதில் அதிக பலன்கள் உள்ளதென சூஃபியாக்கள் கூறுவார்கள்.

ரக் அத்துகளை அதிகமாக்குவதைவிட நிலையில் நீண்ட நேரம் நின்று அதிகமாக ஓதித் தொழுவது சிறப்பாகும்.

தஹஜ்ஜுத் தொழுபவர் முற்பகலில் கைலூலா ( قَيْلُوْلَة ) என்னும் முற்பகல் தூக்கம் கொள்வதும், சுபுஹுடைய சுன்னத்திற்கும் ஃபர்ளுக்கும் இடையில் முகத்தை கிப்லாவின் புறம் வைத்து, வலப்பக்கம் ஒருச்சாய்ந்துபடுத்து, கப்ரில் இவ்விதம்தான் கிடப்போமென நினைத்து சற்று நேரம் இளைப்பாறுவதும் சுன்னத்தாகும். அவ்வாறே தஹஜ்ஜுத் தொழுதபின் துஆவையும் இஸ்திஃஃபாரையும் அதிகமாக்குவதும் சுன்னத்தாகும். மேலும் (3-190) اِنَّ فِيْ خَلْقِ السَّمٰوٰتِ وَالْاَرْضِ என்ற ஆயத்தை சூரத்து ஆல இம்ரான் கடைசிவரை ஓதவும்.

தஹஜ்ஜுதுக்கு விழித்தெழ வேண்டுமென நாடுகிறவர் தூங்கச் செல்லும்போது சூரத்துல் கஹ்ஃபின் கடைசியிலுள்ள (18:107) اِنَّ الَّذِيْنَ اٰمَنُوْا وَعَمِلُوا الصّٰلِحٰتِ என்ற ஆயத்திலிருந்து சூரத்து கடைசிவரை ஓதிப்படுத்தால், எந்த நேரத்தில் விழிக்க நாடுகிறாரோ அந்த நேரத்தில் அல்லாஹ் விழிக்கச் செய்வான். இது அனுபவப் பூர்வமான அமலாகும்.

தஹஜ்ஜுதுடைய துஆவில் பின்வரும் பிரபலமான துஆவையும் சேர்த்து ஓதிக் கொள்ளவும்:

اِلٰهِيْ نَامَتِ الْعُيُوْنُ وَاسْتَرَاحَتِ الْجُفُوْنُ يَامَنْ لَا تَأْخُذُهُ سِنَةٌ وَّلَا نَوْمٌ. وَيَامَنْ لَا يُشْغِلُهُ شَأْنٌ عَنْ شَأْنٍ. وَلَمْ يَفْلُتْهُ فِلْتَةُ نَاظِرٍ وَلَا لِفْتَةُ خَاطِرٍ اِغْفِرْ لِيْ وَارْحَمْنِيْ اِلٰهِيْ قَدْ اَغْلَقَتِ الْمُلُوْكُ اَبْوَابَهَا وَاَقَامَتْ عَلَيْهَا حُرَّاسَهَا وَحُجَّابَهَا. وَبَابُكَ مَفْتُوْحٌ لِّلسَّآئِلِيْنَ. فَهَا اَنَا فَقِيْرٌ بِبَابِكَ يَا اَللهُ. رَبِّ اِنِّيْ ظَلَمْتُ نَفْسِيْ فَاغْفِرْ لِيْ رَبِّ اغْفِرْ وَارْحَمْ وَاَنْتَ خَيْرُ الرَّاحِمِيْنَ.

பொருள்:-

"என்னுடைய நாயனே! கண்கள் தூங்கிவிட்டன. இமைகள் ஓய்வு பெற்றுள்ளன. சிறுதூக்கமோ, ஆழ்ந்த தூக்கமோ பிடிக்காதவனே! ஒருவேலைக்காக மற்றொரு வேலையின் கவனத்தை விட்டும் திருப்பி விடப்படாதவனே! எவனுடைய கண் சிமிட்டுதலும், மன ஊசலாட்டமும் தன்னை விட்டும் தப்பி விடாதவனே! என்னை நீ மன்னித்து எனக்குக் கிருபை செய்வாயாக! என்னுடைய நாயனே! அரசாங்கங்கள்

தம்முடைய வாசல்களை அடைத்து அவ்வாசல்களின் மீது பாதுகாவலர்களையும் ஏற்படுத்தியுள்ளன. ஆனால் உன்னுடைய வாசலோ கேட்பவர்களுக்குத் திறந்ததாகவே இருக்கிறது. இதோ தேவையுள்ள நான் உன்னுடைய வாசலில் நிற்கிறேன். யா அல்லாஹ்! ஒரு மிஸ்கீன் உன் வாசலில் நிற்கிறேன். யா அல்லாஹ்! என்னுடைய இரட்சகனே! நிச்சயமாக நான் எனக்கே அநியாயம் செய்து கொண்டேன். எனவே, என்னை மன்னிப்பாயாக. என்னுடைய இரட்சகனே மன்னித்துக் கிருபை செய்வாயாக. நீ கிருபை செய்வோரில் மிகச் சிறந்தவன்."

## பொதுவான நஃபில் தொழுகை

பொதுவான நஃபில் தொழுகை என்பது நேரத்தையோ, இடத்தையோ, ஏதேனும் ஒரு செயலையோ தொடர்பு படுத்தாமல் தொழுவதாகும். அது ஒரு ரகஅத் தொழுது அத்தஹிய்யாத்து ஓதி ஸலாம் கொடுப்பதும் கூடும். அல்லது அதிகம் தொழ நாடினால் இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து எத்தனை ரக்அத்துகள் வேண்டுமானாலும் ஒற்றைப்படையாகவோ, இரட்டைப்படையாகவோ தொழுவது கூடும். எத்தனை ரக்அத்துகள் தொழுதாலும் அவைகளை ஒரே அத்தஹிய்யாத்து ஒரே ஸலாம் கொண்டு நிறைவேற்றலாம். எனினும் இரண்டிரண்டாகத் தொழுது ஸலாம் கொடுப்பது சுன்னத்தாகும்.

ஒருவன் இத்தனை ரக்அத்துகள் தொழ வேண்டுமென்ற எண்ணத்தில் தொழுகையை ஆரம்பித்தால் அத்தனை ரக்அத்துகளைத் தொழுது முடிப்பான். அல்லது அவன் நினைத்ததை விடக் குறைவாக அல்லது கூடுதலாகத் தொழ வேண்டும் என்று எண்ணினால், நாடியதின் பால் எழுந்திருக்கு முன் அல்லது உட்காருமுன் நிய்யத்துச் செய்து கொண்டால் கூடிவிடும். உதாரணமாக: இரண்டு ரக்அத் தொழ நினைத்தவன், அதனை மூன்றாகத் தொழ வேண்டுமென நினைத்தால் இரண்டாம் ரக்அத்தின் கடைசியில் உட்காரும் முன் மூன்றென நிய்யத்துச் செய்து கொள்ள வேண்டும். இரண்டு ரக்அத் தொழ நாடியவன் மறதியாக மூன்றாவது ரக்அத்திற்கு எழுந்து விட்டால், திரும்பவும் உட்கார்ந்து கொள்ள வேண்டும். பிறகு அதிகப்படுத்துவதை நிய்யத்துச் செய்து எழ வேண்டும். தொழுகையின் கடைசியில் ஸஜ்தா ஸஹ்வு செய்து கொள்ள வேண்டும்.

பொதுவான நஃபில் தொழுகையை மக்ரூஹான நேரங்களைத் தவிர மற்றெல்லா நேரங்களிலும் தொழுவது கூடும். நேரம் குறிக்கப்பட்ட வழக்கமான சுன்னத்துகள், ளுஹா, பெருநாள் தொழுகைகள் தவறிவிட்டால் அவற்றைக் களாச் செய்வது சுன்னத்து.

ஹைளுடையவளுக்கும் பைத்தியக்காரருக்கும் ஃபர்லான தொழுகை கடமை இல்லாததால் அதைக் களாச் செய்வது கூடாது. அவ்வாறே அந்நாளில் தப்பிப் போன வழக்கமான சுன்னத்துகளை களாச் செய்வதும் கூடாது. பொதுவான நஃபில் தொழுகையை வழக்கமாகத் தொழுது வருகிற ஒருவருக்கு அது தவறி விட்டால் அதனை அவர் களாச் செய்வது சுன்னத்து. ஹாஜத்துத் தொழுகை என்பது இஸ்திகாராத் தொழுகையில் நுழைந்ததாகும்.

சுன்னத்துகளில் மிக ஏற்றமானது ஹஜ்ஜுப் பெருநாள் தொழுகையாகும். பிறகு நோன்புப் பெருநாள், பிறகு சூரிய கிரகணத்தொழுகை, பிறகு சந்திர கிரகணத் தொழுகை, பிறகு மழை தேடித் தொழும் தொழுகை, பிறகு வித்ரு தொழுகை, பிறகு சுப்ஹு உடைய சுன்னத்து, பிறகு வழக்கமான சுன்னத்துகள் அனைத்தும் சமமான அந்தஸ்துகள் உடையவை. பிறகு தராவீஹ் தொழுகை, பிறகு ளுஹா தொழுகை, பிறகு தவாஃபுடைய தொழுகை, பிறகு தஹிய்யத் தொழுகை, பிறகு இஹ்ராமுடைய தொழுகை, பிறகு உளுவுடைய தொழுகையாகும்.

ரஜப் மாதம் முதல்வெள்ளியிரவில், "ஸலாத்துர்ரஙாயிப்———— صَلٰوةُ الرَّغَائِبِ

என்ற பெயரில் பன்னிரண்டு ரக்அத்துகளும், பராஅத் இரவில் நூறு ரக் அத்களும், ஆஷூரா நாளில் ஒரு தொழுகையும் தொழ வேண்டுமெனக் கூறுப்பட்டிருப்பது பித் அத்தென்றும், அது சம்பந்தமான ஹதீஸ்கள் கற்பனையானவை என்றும் கூறப் பட்டுள்ளது. ஆகவே இவ்விதமான தொழுகைகளை விட்டு விட வேண்டும்.

சில போலி ஷைகுமார்கள், களா உம்ர் قَضَاءُ الْعُمُرِ என்று இரண்டு ரக்அத்தை ரமழானுடைய கடைசி ஜும்ஆவில் தொழுது விட்டால் வாழ்நாள் முழுதும் விடுபட்ட (களா ஏற்பட்ட) தொழுகைகளுக்குச் சரியாகி விடுமென்று அவர்களுடைய முரீதுகளுக்குச் சொல்லிக்கொடுப்பதும், அதைத் தெரிந்தும் அவரைத் தடை செய்யாமலிருப்பதும் ஹராம் ஆகும்.

## ஜமாஅத்து விதியாக்கப்பட்ட சுன்னத்தான தொழுகைகள்

ஜமாஅத்தாகத் தொழுவது விதியாக்கப்பட்ட சுன்னத்தான தொழுகைகளில் நோன்புப் பெருநாளின் தொழுகையும், ஹஜ்ஜுப் பெருநாளின் தொழுகையும் உள்ளவையாகும். நோன்புப் பெருநாள் தொழுகையின் நிய்யத்து பின்வருமாறு:

أُصَلِّيْ صَلٰوةَ عِيْدِ الْفِطْرِ رَكْعَتَيْنِ لِلّٰهِ تَعَالٰى اَللّٰهُ اَكْبَرْ.

"ஈதுல் பித்ருடைய தொழுகை இரண்டு ரக்அத்தை அல்லாஹ்வுக்காகத் தொழுகிறேன்".

ஹஜ்ஜுப் பெருநாள் தொழுகையின் நிய்யத்து பின்வருமாறு:-

أُصَلِّيْ صَلٰوةَ عِيْدِ الْاَضْحٰى رَكْعَتَيْنِ لِلّٰهِ تَعَالٰى اَللّٰهُ اَكْبَرْ.

"ஈதுல் அல்ஹாவுடைய தொழுகை இரண்டு ரக்அத்தை அல்லாஹ்வுக்காகத் தொழுகிறேன்".

துல்ஹஜ் மாதம் பிறை ஒன்று முதல் பத்துவரை ஆடு, மாடு, ஒட்டகம் இவற்றில் எதைப்பார்த்தாலும், அல்லது இவற்றின் சப்தத்தைக் கேட்டாலும் அல்லாஹு அக்பர் என்று ஒரு தடவை சொல்வது சுன்னத்தாகும்.

அரஃபாவுடைய நாளாகிய துல்ஹஜ் ஒன்பதாம் நாள் சுபுஹிலிருந்து அய்யாமுத் தஷ்ரீக் (பதின்மூன்றாம் நாள் அஸர் நேரம்) முடிவடையும் வரை ஃபர்ழு, சுன்னத்து, அதா, களா, ஜனாஸா தொழுகை, நேர்ச்சைத் தொழுகை, ஆகிய ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் ஒரு தடவை தக்பீர் சொல்வது சுன்னத்தாகும். அவ்வாறே நோன்புப் பெருநாள் இரவு மஃரிபிலிருந்து பெருநாள் தொழுகையின் தக்பீர் தஹ்ரீமா கட்டும் வரை எல்லா இடங்களிலும் தக்பீர் சொல்வது சுன்னத்தாகும்.

நோன்புப் பெருநாளில் தக்பீர் சொல்வது சம்பந்தமாக திருக்குர்ஆனில் கீழ் கண்ட திருவசனம் அருளப்பட்டுள்ளது:

وَلِتُكْمِلُوا الْعِدَّةَ وَلِتُكَبِّرُوا اللّٰهَ عَلٰى مَا هَدٰىكُمْ وَلَعَلَّكُمْ تَشْكُرُوْنَ ○ (2:185)

"(உங்கள் மீது கடமையாக உள்ள ஒரு மாத நோன்பின்) **எண்ணிக்கையை நீங்கள் நிரப்பமாக்குவதற்காகவும், அல்லாஹ் உங்களை நேரான பாதையில் நடத்தியதற்காக (அவனை) நீங்கள் பெருமைப் படுத்துவதற்காகவும் (தக்பீர் கூறுவதற்காகவும்) நீங்கள் இறைவனுக்கு நன்றியுடையவர்களாக ஆகுவதற்காகவும் (அல்லாஹ் உங்களுக்கு இலகுவான சட்டங்களை கொடுக்க விரும்புகிறானே அன்றி கஷ்டத்தைக் கொடுக்க விரும்பவில்லை)"**

இந்தத் திருவசனத்தை அடிப்படையாகக் கொண்டுதான் நோன்புப் பெருநாளில் தக்பீர் சொல்வது வலுப்பமான சுன்னத்தாகும். மேலும் இந்தத் திருவசனத்தை அனுமானித்தே ஹஜ்ஜுப் பெருநாளில் தக்பீர் சொல்வதும் சுன்னத்தாக்கப்பட்டுள்ளது. இந்தத் தக்பீர் ஹாஜிகளுக்கு சுன்னத்தல்ல. அவர்கள் தக்பீருக்கு பதிலாக தல்பிய்யா சொல்ல வேண்டும்.

தக்பீரில் சுருக்கமானது ( مُقَيَّدٌ )ம், நீளமானது ( مُرْسَلٌ )ம் உண்டு.

அதன் விபரம் வருமாறு:- சுருக்கமானதாகிறது:-

اَللّٰهُ اَكْبَرُ اَللّٰهُ اَكْبَرُ اَللّٰهُ اَكْبَرُ. لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ وَاللّٰهُ اَكْبَرُ.
اَللّٰهُ اَكْبَرُ وَلِلّٰهِ الْحَمْدُ.

என்பதாகும்.

அத்துடன் கீழ்கண்டதையும் சேர்த்து ஓதினால் நீளமான தக்பீராகும். அதாவது:

اَللّٰهُ اَكْبَرُ كَبِيْرًا وَالْحَمْدُ لِلّٰهِ كَثِيْرًا وَسُبْحَانَ اللّٰهِ
بُكْرَةً وَّاَصِيْلًا. لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ وَلَا نَعْبُدُ اِلَّآ اِيَّاهُ-
مُخْلِصِيْنَ لَهُ الدِّيْنَ وَلَوْ كَرِهَ الْكَافِرُوْنَ. لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ

وَحْدَهُ صَدَقَ وَعْدَهُ وَنَصَرَ عَبْدَهُ وَعَزَّ جُنْدَهُ
وَهَزَمَ الْاَحْزَابَ وَحْدَهُ. لَآاِلٰهَ اِلَّا اللّٰهُ وَاللّٰهُ اَكْبَرُ
اَللّٰهُ اَكْبَرُ وَلِلّٰهِ الْحَمْدُ.

என்பதாகும்.

இந்த இரண்டையும் சேர்த்துச் சொல்வது சிறந்ததாகும்.

مُرْسَلٌ ——— என்ற) நீளமான தக்பீரை இருபெரு நாட்களிலும் எல்லா நேரத்திலும், (கக்கூஸ் போன்ற இடங்கள் தவிர மற்ற) எல்லா இடங்களிலும் சொல்வது சுன்னத்தாகும். எனினும் இதை நோன்புப் பெருநாளில் சொல்வது ஏற்றமாகும்.

مُقَيَّدٌ ——— என்ற) சுருக்கமான தக்பீரை ஹஜ்ஜுப் பெருநாள் லுஹ்ரு தொடுத்து அய்யாமுத் தஷ்ரீக் அஸரு வரையிலும், அரஃபா நாளின் சுப்ஹு முதல் அதன் அஸரு வரையிலும் தொழுகைக்குப் பின்னால் மட்டும் சொல்வது சுன்னத்தாகும்.

தக்பீர் சொல்வது சுன்னத்தான வேளைகளில் தொழுகை களாவாகி விட்டால், அதனை மற்ற நாட்களில் களாச் செய்யும் பொழுது தக்பீர் சொல்வது சுன்னத்தல்ல. ஆனால், மற்ற நாட்களில் களாவானதை தக்பீருடைய நாட்களில் களாச் செய்தால் அப்பொழுது தக்பீர் சொல்வது சுன்னத்து. (ஏனெனில் தக்பீராகிறது காலத்தைக் கொண்டு மட்டும் தொடர்புடையதாயிருக்கும்.) ஏதாவது குறித்த தொழுகைக்குப் பின் தக்பீர் சொல்வதை மறந்து விட்டால் நினைவு வந்தவுடன் சொல்லிக் கொள்ள வேண்டும்.

இரண்டு பெருநாட்களின் இரவுகளையும் திக்ரு, சலவாத்து, தக்பீர், குர்ஆன் ஓதுதல் ஆகியவற்றைச் செய்து விழித்திருந்து கழிப்பது சுன்னத்து.

இருபெருநாட்களின் தொழுகை விபரமாவது: தக்பீர் கட்டி வஜ்ஜஹ்த்து ஓதிய பின், அஊது ஓதுவதற்கு முன் இரு கைகளையும் ஏழு தடவை உயர்த்தி தக்பீர் கட்ட வேண்டும். பிறகு இரண்டாவது ரக்அத்திற்கு எழுந்தவுடன் அஊது ஓதுவதற்கு முன் ஐந்து தடவை கைகளை உயர்த்தி தக்பீர் கட்டி வழமைபோல் தொழ வேண்டும்.ஒவ்வொரு தடவையும் கைகளை உயர்த்தி உயர்த்தி தக்பீர் கட்ட வேண்டும். தக்பீருகளுக்கிடையில் "சுப்ஹானல்லாஹி வல்ஹம்துலில்லாஹி வலா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர்" என்ற மூன்றாம் கலிமாவை ஓதிக் கொள்ள வேண்டும்.

ஒருவர் பெருநாள் தொழுகையில் இரண்டாவது ரக்அத்தில் வந்து சேர்ந்தால் அவர் இமாமுடன் சேர்ந்து ஐந்து தக்பீரைக் கட்டிக் கொள்வார். பிறகு அவர் எழுந்து தொழ வேண்டிய இரண்டாவது ரக்அத்திலும் ஐந்து தக்பீர்கள் மட்டுமே கட்டுவார். முந்திய ரக் அத்தில் தவறிவிட்ட தக்பீர்களை இரண்டாவது ரக்அத்தில் கொண்டு வருதல் கூடாது.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஹானீ'

ஒருவர் வஜ்ஜஹ்த்து ஓதிய பின் மறந்து விட்டு அஊதை ஓதி விட்டாலும் தக்பீர்களைத் தொடர்ந்து சொல்லலாம். ஆனால், மறந்து சூரத்துல் ஃபாத்திஹாவை தக்பீர் சொல்வதற்காக சூரத்துல் ஃபாத்திஹாவை முறிக்கக் ஒத ஆரம்பித்து விட்டால் தக்பீர் சொல்வதற்காக சூரத்துல் ஃபாத்திஹாவை முறிக்கக் கூடாது. ஆனால் சூரத்துல் ஃபாத்திஹா ஓதிய பின் தக்பீரைக் கூற வேண்டும். எனினும் சூரத்துல் ஃபாத்திஹாவைத் திரும்பவும் ஓதுவது சுன்னத்தாகும்.

பெருநாள் தொழுகையில் முதல் ரக்அத்தில் ஃபாத்திஹாவுக்குப் பின் 'காஃப்' சூராவும், இரண்டாவது ரக்அத்தில் 'இக்தரபத்திஸ்ஸாஅத்து' சூராவும், அல்லது முதல் ரக்அத்தில் 'ஸப்பிஹிஸ்ம'வும், இரண்டாவது ரக்அத்தில் 'ஹல்அதாக'வும் ஓதுவது சுன்னத்தாகும்..

இரு பெருநாள் தொழுகைகளின் நேரமாவது, சூரிய உதயத்திலிருந்து ஜவால் ஆகும் வரையிலாகும். ஏற்றமான நேரம் ளுஹாவுடைய நேரமாகும்..

சூரியன் உதயமாகும் நேரம் மக்ரூஹான நேரமென்பது இத்தொழுகைகளில் கிடையாது. ஏனெனில், இத்தொழுகைகளும், இது போன்ற தொழுகைகளும் ஒரு காரணத்துக்காக நிறைவேற்றப்படக் கூடியதாகும். இத்தொழுகைகள் மற்றொரு காரணத்தளவில் தேவையாக மாட்டாது.

நோன்புப் பெருநாள் தொழுகையைக் காலை உணவு சாப்பிட்ட பின் தொழுவதும், அந்த உணவு பேரீச்சம் பழமாக இருப்பதும் ஏற்றமாகும். அதனை ஒற்றைப் படையாக சாப்பிடுவது சுன்னத்தாகும். ஹஜ்ஜுப் பெருநாளில் தொழுத பின் உணவு சாப்பிடுவது ஏற்றம். அன்று கிழக்கு வெளுக்கும் முன்பிலிருந்து சூரியன் ஒரு ஈட்டியின் அளவு உயரும் வரை எதுவும் சாப்பிடாமல் இருப்பது சுன்னத்தாகும்.

இரண்டு பெருநாள் தொழுகைகளுக்குப் பின் இரண்டு குத்பா ஓதுவது சுன்னத்தாகும். முதல் குத்பாவை ஒன்பது தக்பீர் கொண்டும், இரண்டாவது குத்பாவை ஏழு தக்பீர் கொண்டும் ஆரம்பிப்பது, மேலும் வாசகங்களை முடிக்கும் இடங்களிலெல்லாம் தக்பீர் சொல்லிக் கொள்வது சுன்னத்தாகும். இந்தத் தக்பீர்களை கதீப் மட்டும் கூறுவார். குத்பாவைக் கேட்பவர்கள் கூறுவது சுன்னத்தல்ல.

பெருநாள் தொழுகையை அன்று அதற்குரிய நேரத்தில் தொழா விட்டால் மறுநாள் அது களாச் செய்யப்படும். ஹனஃபி மத்ஹபில் நோன்புப் பெருநாள் தொழுகையை இரண்டாம் நாளிலும், மூன்றாம் நாளிலும் களா செய்யலாம். முதல் ரக்அத்தில் இமாம் சில தக்பீர்களைச் சொல்லியபின் வந்து சேரக்கூடியவர் அவருடன் கிடைக்கும் தக்பீரை மட்டும் சொல்லிக் கொள்வார். விடுபட்ட தக்பீர்களைக் கூற மாட்டார். உதாரணமாக முந்திய ரக்அத்தில் இமாமுடன் சேரும் போது ஒரு தக்பீர் மட்டும் கிடைத்தால் அதை மட்டும்தான் சொல்லிக் கொள்ள வேண்டும்..

பெருநாளன்று குளிப்பதும், அலங்கரிப்பதும், வாசனை பூசுவதும், ஜும்ஆ நாளன்று உள்ளதைப் போன்றாகும். பார்த்துக் கொள்ளவும்.

# கிரகணங்களின் தொழுகைகள், அதற்குரிய குத்பாக்களின் விபரம்

சூரிய, சந்திர கிரகணத் தொழுகை சுன்னத்தாகும். இமாமுடன் ஜமாஅத்தாகத் தொழுவதும், தொழுகைக்குப் பின் இரண்டு குத்பாக்கள் ஓதுவதும் இதில் மார்க்கமாக்கப்பட்டுள்ளன.

கிரகணம் பிடித்த நேரத்திலிருந்து அது முடியும் வரை ளுஹருடைய சுன்னத்தைப்போல் இரண்டு ரக்அத்துகள் தொழுவது சுன்னத்து. இதில் நிரப்பமான தொழுகையாவது, ஒவ்வொரு ரக்அத்திலும் இரண்டு நிலைகளும் இரண்டு ருகூவுகளும் உள்ளதாகும். இன்னும் நிரப்பமாவது, முதல் நிலையில் சூரத்துல் ஃபாத்திஹாவுக்குப்பின் சூரத்துல் பகராவையோ, அல்லது அதன் அளவுள்ள ஆயத்துகளையோ ஓதுவதும், இரண்டாம் நிலையில் ஃபாத்திஹாவுக்குப் பின் இருநூறு ஆயத்துகள் ஓதுவதுமாகும். இரண்டாம் ரக்அத்தின் முதல் நிலையில் ஃபாத்திஹாவுக்குப் பின் நூற்றி ஐம்பது ஆயத்துகளும், இரண்டாம் நிலையில் ஃபாத்திஹாவுக்குப்பின் நூறு ஆயத்துகளும் ஓதுவதாகும். அவ்வாறே முந்தின ரக்அத்தின் முதல் ருகூஇல் நூறு ஆயத்துகள் ஓதும் அளவுக்கும், இரண்டாம் ருகூஇல் எண்பது ஆயத்துகள் ஓதும் அளவுக்கும், இரண்டாவது ரக்அத்தின் முதல் ருகூஇல் எழுபது ஆயத்துகள் ஓதும் அளவுக்கும், இரண்டாவது ருகூஇல் ஐம்பது ஆயத்துகள் ஓதும் அளவுக்கும் தஸ்பீஹ்கள் செய்வதாகும்.

ஒருவர் எந்த ரக்அத்தின் இரண்டாம் நிலையில் இமாமுடன் வந்து சேர்ந்தாலும் அந்த ரக்அத்து கணக்கில் சேராது. ஏனெனில், இரண்டாம் நிலை அதிக பட்சமாகச் செய்யப்படுவதாகும்.

தக்பீர் கட்டிய பின் கிரகணம் முடிந்து விட்டாலும், அல்லது சூரியன் மறைந்து விட்டாலும், அல்லது சூரியன் உதயமாகி விட்டாலும் தொழுகை நிரப்பமாக்கப்படும். பிறகு குத்பாவும் ஓதப்படும்.

இந்தத் தொழுகையைக் குறிப்பிட்ட நேரத்தில் தொடுத்துக் கொள்ளாவிட்டால் அது தவறிவிடும். கிரகணத்திற்குப் பின் தொழுகையை ஆரம்பிக்கக் கூடாது.

சூரிய கிரகணத்திற்கு மெதுவாக கிராஅத் ஓதுவதும், சந்திர கிரகணத்திற்கு சப்தமிட்டு ஓதுவதும் சுன்னத்தாகும்.

சூரிய கிரகணத் தொழுகையில் ஒரு ரக்அத் முடிந்தவுடன் சூரியன் மறைந்து விட்டாலும், சந்திர கிரகணத் தொழுகையின் போது சூரியன் உதயமாகிவிட்டாலும் முந்தியதில் சப்தமிட்டும் இரண்டாவதில் மெதுவாகவும் ஓதுவது, பலமான சொற்படி, சுன்னத்தாகும்.

கிரகணத் தொழுகையை ஜும்ஆ பள்ளியில் ஜமாஅத்துடன் தொழுவதும், அவ்விடத்திலேயே குத்பா ஓதுவதும் ஏற்றமாகும். தனியாகத் தொழுபவனுக்கு தொழுவது மட்டும் சுன்னத்தாகும்; குத்பா சுன்னத்தல்ல.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

வெள்ளிக்கிழமையும், பெருநாளும் ஒரே நாளில் வந்தால், இரண்டிற்கும் அதனதன் தொழுகைகளையும், குத்பாக்களையும் தனித்தனியாக ஓத வேண்டும். அல்லது ஜும்ஆவுடைய குத்பா ஒன்றே இரண்டுக்கும் போதுமானதாகும். எனினும், ஜும்ஆவுடைய குத்பாவைக் கொண்டு ஜும்ஆவை மட்டும் நாடுவது ஷர்த்தாகும். ஜும்ஆ குத்பாவைக் கொண்டு இரண்டையும் நாடினாலும், அல்லது பெருநாள் குத்பாவை மட்டும் நாடினாலும் ஜும்ஆ நிறைவேறாது.

பெருநாளும், கிரகணமும், ஒன்றாக வந்தால் அதனதன் தொழுகைக்குப்பின் இரண்டுக்கும் ஒரு குத்பா போதுமானதாகும். ஜும்ஆவும், கிரகணமும், பெருநாளும் ஒரே நாளில் ஏற்பட்டால் அனைத்திற்கும் சேர்த்து ஜும்ஆவுடைய குத்பா போதுமாகும். எனினும் அதில் கிரகண சம்பந்தமான விஷயங்களையும், பெருநாளுடைய ஃபித்ரா, அல்லது உள்ஹிய்யா, மற்றும் சதக்கா ஆகியவற்றையும் எடுத்துக் கூறுவது சுன்னத்தாகும். எனினும் அந்த குத்பா ஜும்ஆவுடைய குத்பாவைக் கொண்டு மட்டும் நிய்யத்துச் செய்யப்பட்டதாக இருக்கவேண்டும்.

பூமியதிர்ச்சி, கடினமான புயல், இடி போன்ற ஆபத்துகள் ஏற்படுகின்ற நேரங்களில் ஊரைவிட்டு வெளியிலுள்ள மைதானத்திற்குச் சென்று தனித்தனியாகத் தொழுது அல்லாஹுதஆலாவிடம் கெஞ்சி துஆக் கேட்பது சுன்னத்தாகும்.

## மழைவேண்டித் தொழுதல்

ஊரில் மழை குறைவாக இருந்தாலும், அல்லது தண்ணீர் குறைந்து போனாலும், அல்லது தண்ணீர் கசந்து போனாலும், அரசன், அல்லது ஊரின் தலைவர் அவ்வூர் மக்கள் அனைவரையும் மூன்றுதினங்கள் நோன்பு வைக்கும்படிச்செய்து, நான்காம் நாள் நோன்பு வைத்தவர்களாக தாழ்மையான உடையணிந்து, மனநெகிழ்வோடு, அதிகம் பாவ மன்னிப்புத் தேடியவர்களாக, குழந்தைகளையும், நல்லடியார்களையும் ஆடு, மாடு, ஒட்டகம் முதலிய மிருகங்களையும் உடன் அழைத்துக்கொண்டு சென்று, அவரவர் செய்திருக்கும் நற்செயல்களைக் கொண்டு சிபாரிசு தேடியவர்களாக ஊரைவிட்டு வெளியிலுள்ள ஒரு மைதானத்திற்குச் சென்று, மழையை வேண்டியவர்களாக, இமாம் ஜமாஅத்துடன் இரண்டு ரக்அத்து தொழுவது சுன்னத்தாகும். இந்த நோன்பு வைக்குமாறு அரசர் கட்டளையிட்டிருந்தால் அது வாஜிபாகும். இவ்வாறே பேதி, காலரா போன்ற நோய்கள் ஏற்பட்டு அதற்காக நோன்பு வைக்கும் படிக் கட்டளையிட்டாலும் அதுவும் வாஜிபாகும்.

மழை தேடித் தொழச் செல்லும்பொழுது குளித்துச் சுத்தமாகி, மிஸ்வாக்குச் செய்து, அருவருப்பான வாடைகளை நீக்கி, மணம்பூசிச் செல்வது சுன்னத்தாகும்.

முதியவர்களையும், பால் குடிக்கும் குழந்தைகளையும், மிருகங்களையும் கட்டாயம் கொண்டு செல்லவேண்டும். ஏனெனில், அவர்களின் துஆ இறைவனிடத்தில் ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு மிகவும் உகந்ததாயிருக்கும்.

"அல்லாஹ்வைப் பணியும் அடியார்களும், பால்குடிக்கும் குழந்தைகளும், மேய்ந்து திரியும் மிருகங்களும் இல்லையானால் உங்களின் மீது வேதனை

பொழியப்பட்டுவிடும்." என்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அருளியுள்ளார்கள்.

திம்மீ காஃபிர்கள் அந்த மைதானத்திற்கு வந்து ஒதுங்கி நின்றால், அவர்களைத் தடுக்கக்கூடாது.

இந்தத் தொழுகைக்குரிய நிய்யத்தாவது:

أُصَلِّيْ صَلٰوةَ الْإِسْتِسْقَاءِ رَكْعَتَيْنِ مُسْتَقْبِلًا إِلَى الْكَعْبَةِ
الشَّرِيْفَةِ لِلّٰهِ تَعَالٰى اَللّٰهُ اَكْبَرُ

"மழை தேடும் தொழுகை இரண்டு ரக்அத்தை கிப்லாவை முன்னோக்கி இமாமாக நின்று அல்லாஹ்விற்காகத் தொழுகிறேன்" என்று தக்பீர் கட்டவேண்டும். மஃமூமாக இருந்தால், "இந்த இமாமைப் பின்பற்றி" என்று சொல்லிக் கொள்ள வேண்டும்.

தொழுகை முடிந்தபின் பெருநாள் குத்பாவைப்போல் இரண்டு குத்பாக்கள் ஓதவேண்டும். அவ்விரண்டிலும் பெருநாளில் தக்பீர் சொல்லும் இடங்களில் அஸ்தஃகு ஃபிருல்லாஹ் என்று இஸ்திஃகுஃபார் சொல்லிக்கொள்ளவேண்டும். இரண்டாம் குத்பாவில் மூன்றில் ஒரு பங்கு முடிந்து துஆஉடைய இடம் வரும்பொழுது கதீப் கிப்லாவை முன்னோக்கி நின்று, கதீபும் மக்களும் தங்களின் மேற்போர்வையைப் புரட்டவேண்டும். அதாவது: வலப்பக்கத்தை இடப்பக்கமாகவும் உள்பக்கத்தை வெளிப்பக்கமாகவும் மேல் பக்கத்தை கீழாகவும் புரட்டவேண்டும். இது, இருக்கும் வறட்சி நிலை நீங்கி செழிப்பான நிலை ஏற்படவேண்டு மென்பதற்கு அடையாளமாகச் செய்யப் படுவதாகும். அவரவர் தங்கள் வீடு திரும்பும்வரை இவ்வாறே போர்வையை வைத்துக்கொண்டு செல்லவேண்டும்.

துஆக் கேட்கும் பொழுது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் கொண்டும், அன்னாரின் கிளையார்கள் தோழர்கள், அன்னாரின் சிறிய தந்தை அப்பாஸ் (ரலி) ஆகியோரைக் கொண்டும் வஸீலா தேடிக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு செய்து மழை பெய்தால் போதுமாக்கிக் கொள்ளவும், இல்லாவிடில் மறுபடியும் இரண்டாம் தடவை, மூன்றாம் தடவை, இவ்வாறு செய்யவும், பிறகு இஸ்திஃகுஃபாரை அதிகமாகச் செய்து வரவும்.

மழை வேண்டிப் பெரியோர்களால் பாடப்பட்ட சில பாடல்களை ஊர்த் தெருக்களில் மக்கள் கூடி உருக்கமாகப்பாடிச் செல்வதை உலமாக்கள் உவந்துள்ளனர். மழை வேண்டிப் பின் வரும் துஆவை அனைவரும் ஓதிவரவேண்டும். அதாவது:

اَللّٰهُمَّ اسْقِنَا الْغَيْثَ وَلَا تَجْعَلْنَا مِنَ الْقَانِطِيْنَ.
اَللّٰهُمَّ اسْقِنَا وَاسْقِ الْمُجْدِبِيْنَ.
اَللّٰهُمَّ اسْقِنَا غَيْثًا مُّغِيْثًا صَيِّبًا نَّافِعًا سَحًّا مُغْدِقًا.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

هَنِيْئًا مَرِيْعًا مَدِيْعًا. وَقُلْتَ وَقَوْلُكَ الْحَقُّ فَقُلْتُ
اسْتَغْفِرُوْا رَبَّكُمْ اِنَّهٗ كَانَ غَفَّارًاۙ يُّرْسِلِ السَّمَآءَ
عَلَيْكُمْ مِّدْرَارًاۙ فَاغْفِرْلَنَا يَاخَيْرَ الْغَافِرِيْنَ
وَاَرْسِلِ السَّمَآءَ عَلَيْنَا مِدْرَارًا بِرَحْمَتِكَ يَااَرْحَمَ
الرَّاحِمِيْنَ.

பொருள் ;

"யா அல்லாஹ்! எங்களுக்கு மழையைப் பொழியச் செய்வாயாக! (உன் அருளை விட்டும்) ஏமாற்றம் அடைந்தவர்களாக எங்களை நீ ஆக்கி விடாதே!

யா அல்லாஹ்! எங்களுக்கு மழைபெய்யச் செய்வாயாக! பஞ்சம் பீடித்தவர்களுக்கும் பெய்யச் செய்வாயாக!

யா அல்லாஹ்! எங்களுக்கு மீட்சி தரும், பலன் தரும் மழையை, தங்கு [illegible] வாழ்வைச் செழுமையாக்கும், அதிகமான, மகிழ்ச்சிகரமான, பூமியைச் [illegible]க்கும், பெருக்கெடுத்து ஓடும் மழையை எங்களுக்கு பொழியச்செய்வாயாக! [illegible]கள் ரப்பிடம் மன்னிப்புக் கோருங்கள். நிச்சயமாக அவன் அதிகம் [illegible]ாக இருக்கிறான் (அவ்வாறு நீங்கள் மன்னிப்புக் கோருவீர்களாயின் [illegible]க்கும்) மழையை உங்களுக்குத் தொடராகப் பெய்யச் செய்வான், என்று [illegible] மக்களை நோக்கிக்) கூறினேன்" என நூஹ் (அலை) அவர்கள் [illegible]றையைப்பாடு பண்ணியதை நீ குர்ஆனில் கூறியுள்ளாய். உன்னுடைய [illegible]யானதாகும். எனவே மன்னிப்பவர்களில் சிறந்தவனே! எங்களை [illegible]ாக. அருளாளர்களிலெல்லாம் பேரருளாளனே! உனது அருளால் [illegible]டராக மழையைப் பொழியச் செய்வாயாக!"

### காற்று, மழை, இடி, மின்னல் வெட்டும்போது ஓதும் துஆக்கள்

காற்றைத் திட்டுவது மக்ரூஹ். எனினும் காற்று பலமாக வீசும் பொழுது பின்வரும் துஆவை ஓதவும்:

اَللّٰهُمَّ اجْعَلْهَا رِيَاحًا وَّلَا تَجْعَلْهَا رِيْحًا.
اَللّٰهُمَّ اجْعَلْهَا رَحْمَةً وَّلَا تَجْعَلْهَا عَذَابًا.

"யா அல்லாஹ்! இதனை நன்மை தரும் காற்றாக ஆக்கிடுவாயாக! வேதனை தரும் புயலாக ஆக்கிவிடாதே! இதனை ரஹ்மத்தாக ஆக்கிடுவாயாக! வேதனையாக ஆக்கிவிடாதே! இந்த விதமாக துஆகேட்பது சுன்னத்தாகும்."

மின்னல் வெட்டும்போது கண்ணை மூடிக்கொள்ளவும். இடி முழங்கும்போது பின்வரும் துஆவை ஓதவும்:

اَللّٰهُمَّ لَا تَقْتُلْنَا بِغَضَبِكَ وَلَا تُهْلِكْنَا بِعَذَابِكَ وَعَافِنَا قَبْلَ ذَالِكَ.

"யா அல்லாஹ்! உன்னுடைய கோபத்தினால் எங்களை அழித்துவிடாதே; உன்னுடைய வேதனையால் எங்களை நாசப்படுத்திவிடாதே; அதற்கு முன்னதாகவே எங்களுக்குப்பாதுகாப்பு அளித்திடுவாயாக!"

பிறகு இந்த தஸ்பீஹையும் ஓதவும்:

سُبْحَانَ الَّذِيْ يُسَبِّحُ الرَّعْدُ بِحَمْدِهٖ وَالْمَلٰٓئِكَةُ مِنْ خِيْفَتِهٖ.

"அல்லாஹ் மகாத் தூய்மையானவன். அவன் எத்தகையவனெனில், அவனுடைய புகழைக் கொண்டு இடியும், அவனுடைய பயத்தினால், மலக்குகளும் தஸ்பீஹ் செய்கின்றனர்."

ஆண்டின் துவக்கத்தில் பெய்கின்ற மழையில் அல்லது வெள்ளத்தில் நனைந்து அதில் குளித்து உளூவும் செய்து கொள்ளவும். மழை பெய்யு ம் போது:

اَللّٰهُمَّ صَيِّبًا هَنِيْئًا وَّسَيْبًا نَّافِعًا

" யா அல்லாஹ்! மகிழ்ச்சிகரமான மழையை, பலன்தரும் மழையைப் பொழியச் செய்வாயாக!" என்று ஓதவும்.

மழை பெய்து நின்றவுடன் பின்வரும் துஆவை ஓதவேண்டும்:

مُطِرْنَا بِفَضْلِ اللّٰهِ وَرَحْمَتِهٖ

"அல்லாஹ்வின் கருணையாலும் அவனுடைய அருளாலும் நாங்கள் மழை கொடுக்கப்பட்டோம்." என்று ஓதி நன்றி பாராட்டவும்.

மழை அதிகமாகப் பெய்து அதனால் மக்களுக்குக் கஷ்டமும் நஷ்டமும் ஏற்படின் பின்வரும் துஆவை ஓதவேண்டும்;

اَللّٰهُمَّ حَوَالَيْنَا وَلَا عَلَيْنَا. اَللّٰهُمَّ عَلَى الْاٰكَامِ
وَالْاٰجَامِ وَالظِّرَابِ وَالْاَوْدِيَةِ وَمَنَابِتِ الشَّجَرِ.
اَللّٰهُمَّ سُقْيَا رَحْمَةٍ وَّلَا سُقْيَا عَذَابٍ وَّلَا مَحْقٍ
وَّلَا بَلَاءٍ وَّلَا هَدَمٍ وَّلَا غَرَقٍ.

"யா அல்லாஹ்! எங்களைச் சுற்றியுள்ள பகுதிகளில் (இதனைப்) பெய்யச் செய்வாயாக! எங்களுக்கு இடையூறாகப் பெய்யாதிருக்கச் செய்வாயாக! யா அல்லாஹ்! மலைகள், காடுகள், ஆறுகள், ஓடைகள், மரங்கள் முளைக்குமிடங்கள் ஆகியவற்றின் மீது பொழியச் செய்வாயாக!

யா அலலாஹ்! ரஹ்மத்துடைய் பொழிதலாக (இதனைப்) பொழியச் செய்வாயாக! வேதனையின் பொழிதலாக, அழிக்கும் பொழிதலாக, துன்பத்தின் பொழிதலாக, இடிந்துவிழும் பொழிதலாக, நீரில் மூழ்கும் பொழிதலாக ஆக்கிவிடாதே!"

மழை பெய்யும்போது கேட்கப்படும் துஆ ஏற்றுக்கொள்ளப்படும் என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

# தராவீஹ் தொழுகை

ரமலான் மாதம் முழுவதும் இஷாவுக்குப் பிறகு பத்து ஸலாமுடன் இருபது ரக்அத்துகள் தராவீஹ் தொழுவது சுன்னத்தாகும். பத்து ஸலாம் இல்லாமல் தராவீஹுடைய நிய்யத்துடன் ஒரு ஸலாமைக் கொண்டு நான்கு ரக்அத்துகள் தொழுதால் அது கூடாது. தெரியாமல் அவ்வாறு செய்தால் அது நஃபிலாகி விடும். தராவீஹ் தொழுகையை ஜமாஅத்தாகத்தொழுவது சுன்னத்தாகும்.

மதீனாவாசிகள் அல்லாதவர்களுக்கு இருபது ரக்அத்துகள் சுன்னத்தாகும். மதீனாவாசிகளுக்கு முப்பத்தாறு ரக்அத்துகள் தொழுவது கூடும். ஆனால், அவர்களும் இருபதை மட்டும் தொழுவது ஏற்றமாகும்.

மக்கா வாசிகள் தராவீஹில் ஒவ்வொரு நான்கு ரக்அத்திற்குப் பிறகும் ஒரு தடவை (ஏழு) தவாஃப் செய்வது வழக்கம். இவ்வாறு இருபது ரக்அத்துகள் தொழுவதற்குள் நான்கு தடவை தவாஃப் செய்து விடுவார்கள். ஆகையால், மதீனாவாசிகள் ஒவ்வொரு தவாஃபுக்குப் பகரமாக மேலதிகமாக நான்கு ரக்அத்துகளைச் சேர்த்துத் தொழுவார்கள். மொத்தம் முப்பத்தாறு ரக்அத்துகள் தொழுவார்கள்.

வீஹ் தொழுகைக்கு ஜமாஅத் கிடைக்கா விட்டாலும் தனியாகத் தொழுவதும் ாகும். ஒவ்வொரு ரக்அத்திலும் சூரத்துல் ஃபாத்திஹாவுக்குப் பின் ஏதேனும் வை ஓதுவது சுன்னத்தாகும். எனினும், ஒவ்வொரு நாளும் தர்த்தீபாக ரமளான் ழுமாக ஒரு தடவை குர்ஆன் முழுவதையும் ஓதி முடிப்பது முஸ்தஹப்பாகும்.

வொரு ஸலாமிற்குப் பிறகும் கலிமா, சலவாத்துக் கூறுவதும், ஒவ்வொரு க்அத்திற்குப் பிறகும் வரிசைக் கிரமமாக நான்கு குலஃபாயே ராஷிதீன்களின் க் கூறி அவர்களுக்கு வாழ்த்துக் கூறுவதும் புகழுக்குரிய வழக்கமாகும்.

மாதத்தின் முதல்பத்தில் அல்லாஹ்வுடைய ரஹ்மத்து எனும் கிருபையும், பத்தில் அவனுடைய மஃகுஃபிரத் எனும் பாவமன்னிப்பும், மூன்றாவது விடுதலையும் அருளப்படுவதால் அம்மூன்றையும் அந்தந்தப் பகுதியில் ஸ்தஹப்பாகும். முதல் பத்தில்:

اَللّٰهُمَّ ارْحَمْنِيْ

ஹ்! எனக்கு அருள் புரிவாயாக"! என்றும், இரண்டாவது பத்தில்:

اَللّٰهُمَّ اغْفِرْ لِيْ

...லாஹ்! என்னை மன்னித்தருள்வாயாக!" என்றும், மூன்றாவது பத்தில்:

اَللّٰهُمَّ اَعْتِقْنِيْ مِنَ النَّارِ

யா அல்லாஹ் நரக நெருப்பை விட்டும் எனக்கு விடுதலையளிப்பாயாக!" என்றும் கேட்டுக் கொள்ள வேண்டும்.

ஜமாஅத்துடன் தொழுவது ஆகுமாக்கப்பட்ட சுன்னத்தான தொழுகைகள் அனைத்திற்கும் ஜமாஅத் கூடுவதற்காக இகாமத்திற்கு பதிலாக اَلصَّلٰوةُ جَامِعَةً رَحِمَكُمُ اللّٰهُ

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

(அஸ்ஸலாத்து ஜாமிஆ ரஹிமகுமுல்லாஹு) இந்தத் தொழுகையை ஜமாஅத்தாக நிலைநிறுத்துங்கள். அல்லாஹ் உங்களுக்கு ரஹ்மத்துச் செய்வானாகவும் என்று சப்தமிட்டு ஒருவர் கூறுவது சுன்னத்தாகும்.

நம்முடைய நாட்டில் தராவீஹ் முடிந்தபின் வழக்கமாக ஓதி வரும் துஆ இதுவாகும்:

اَللّٰهُمَّ صَلِّ وَسَلِّمْ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّاٰلِهٖ وَصَحْبِهٖ
اَجْمَعِيْنَ. اَللّٰهُمَّ اجْعَلْنَا بِالْاِيْمَانِ كَامِلِيْنَ. وَلِفَرَآئِضِكَ
مُؤَدِّيْنَ. وَلِلصَّلٰوةِ حَافِظِيْنَ. وَلِلزَّكٰوةِ فَاعِلِيْنَ. وَلِمَا
عِنْدَكَ طَالِبِيْنَ. وَلِعَفْوِكَ رَاجِيْنَ. وَبِالْهُدٰى مُتَمَسِّكِيْنَ
وَعَنِ اللَّغْوِ مُعْرِضِيْنَ. وَفِى الدُّنْيَا زَاهِدِيْنَ. وَبِالْاٰخِرَةِ
رَاغِبِيْنَ. وَبِالْقَضَآءِ رَاضِيْنَ. وَلِلنَّعْمَآءِ شَاكِرِيْنَ. وَعَلَى
الْبَلَآءِ صَابِرِيْنَ. وَتَحْتَ لِوَآءِ حَبِيْبِكَ وَنَبِيِّكَ وَصَفِيِّكَ
مُحَمَّدٍ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ يَوْمَ الْقِيَامَةِ لَآئِذِيْنَ وَاِلَى
الْحَوْضِ وَارِدِيْنَ. وَمِنْ سُنْدُسٍ وَّاِسْتَبْرَقٍ مُّتَلَبِّسِيْنَ.
وَمِنْ حُوْرٍ عِيْنٍ مُّتَزَوِّجِيْنَ. وَمِنْ طَعَامِ الْجَنَّةِ اٰكِلِيْنَ.
وَمِنْ لَبَنٍ وَّعَسَلٍ مُّصَفًّى شَارِبِيْنَ. بِاَكْوَابٍ وَّاَبَارِيْقَ وَ
كَأْسٍ مِّنْ مَّعِيْنٍ. مَعَ الَّذِيْنَ اَنْعَمْتَ عَلَيْهِمْ مِّنَ النَّبِيِّيْنَ
وَالصِّدِّيْقِيْنَ وَالشُّهَدَآءِ وَالصَّالِحِيْنَ. اَللّٰهُمَّ اجْعَلْنَا فِيْ
هٰذَا الشَّهْرِ الشَّرِيْفِ مِنَ السُّعَدَآءِ الْمَقْبُوْلِيْنَ. وَلَا تَجْعَلْنَا
يَآ اَللّٰهُ مِنَ الْاَشْقِيَآءِ الْمَطْرُوْدِيْنَ. اَللّٰهُمَّ وَاِنَّ لَكَ فِيْ كُلِّ
لَيْلَةٍ مِّنْ لَيَالِيْ شَهْرِ رَمَضَانَ عُتَقَآءَ وَطُلَقَآءَ وَاُمَنَآءَ وَ

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

خُلَصَاءَ. فَاجْعَلْنَا يَآ اِلٰهَنَا مِنْ عُتَقَآئِكَ وَطُلَقَآئِكَ وَاُمَنَآئِكَ وَخُلَصَآئِكَ مِنَ النَّارِ وَالْعَفْوَ عِنْدَ الْحِسَابِ. وَصَلَّى اللّٰهُ وَسَلَّمَ وَبَارَكَ عَلٰى خَيْرِ خَلْقِهٖ سَيِّدِنَا مُحَمَّدٍ وَّاٰلِهٖ وَصَحْبِهٖ اَجْمَعِيْنَ.

பொருள்:

யா அல்லாஹ் எங்களை ஈமானைக் கொண்டு நிரப்பமானவர்களாகவும், உன்னுடைய ஃபர்லுகளை நிறைவேற்றுபவர்களாகவும், தொழுகையைப் பேணுபவர்களாகவும், ஜகாத்தைக் கொடுப்பவர்களாகவும், உன்னிடம் உள்ளதைத் தேடுபவர்களாகவும், உன்னுடைய மன்னிப்பை ஆதரவு வைத்தவர்களாகவும், நேர்வழியைப் பற்றிப் பிடித்தவர்களாகவும், வீணானதைவிட்டும் புறக்கணிப் பவர்களாகவும், உலகில் பற்றற்றவர்களாகவும், மறுமையைக் கொண்டு ஆவலுள்ளவர்களாகவும், விதியைக் கொண்டு பொருந்திக் கொண்டவர்களாகவும், [illegible]பாக்கியங்களுக்கு நன்றி செலுத்துபவர்களாகவும், துன்பத்தின் மீது பொறுமையுள்ள [illegible]ர்களாகவும், கியாமத்து நாளில் உன்[illegible] உன்னுடைய நபியும் [illegible]ன்னால் தெளிவாக்கப்பட்டவருமான எ[illegible]து ஸல்லல்லாஹு [illegible]லைஹி வஸல்லம் அவர்களுடைய கொடியின் [illegible]வும் பெற்றவர்களாகவும், [illegible]ல் கவ்தரின்பால் வருபவர்களாகவும், [illegible], இஸ்தப்ரக் என்னும் [illegible]ட்டாடைகளை அணிபவர்களாகவும், ஹூருல்ஈன்களைத் திருமணம் செய்பவர் [illegible]ாகவும், சொர்க்கத்தின் உணவினைச் சாப்பிடுகிறவர்களாகவும், பாலையும் [illegible]ந்த தேனையும் சுவைமிக்க பானம் நிறைந்த கிண்ணங்களிலும் கூஜாக்களிலும், [illegible]களிலும் உனது அருளைப் பெற்ற நபிமார்கள், சித்தீகீன்கள், ஷுஹதாக்கள், [illegible]யார்கள் ஆகியோருடன் சேர்ந்து பருகுபவர்களாகவும் ஆக்கியருள்வாயாக!

[illegible]ா அல்லாஹ்! சிறப்பான இம்மாதத்தில் உன்னால் ஏற்றுக் கொள்ளப்பட்ட [illegible]க்கியவான்களில் உள்ளவர்களாக எங்களை ஆக்கிடுவாயாக! யா அல்லாஹ்! [illegible]டப்பட்டவர்களான துர்பாக்கியவான்களிலுள்ளவர்களாக எங்களை ஆக்கி [illegible]டாதே!

[illegible]ா அல்லாஹ்! ரமலான் மாதத்தின் இரவுகளின் ஒவ்வொரு இரவிலும் உன்னால் [illegible]லை விடப்படுபவர்கள் ஏராளம் உண்டு. ஆகையால், எங்கள் நாயனே! நரகத்தை [illegible]ிலும் உன்னால் விடுதலை செய்யப்பட்டவர்களில் நின்றும் உள்ளவர்களாக எங்களை ஆக்கிடுவாயாக! மேலும் கேள்வி கணக்கின் போது எங்களுக்கு மன்னிப்பளித்திடுவாயாக.

## ஜமாஅத்தொழுகையின் பாடம்

அதாவான ஃபர்லு தொழுகைகளை இமாமுடன் சேர்ந்து ஜமாஅத்தாகத் தொழுவது சுன்னத்து முஅக்கதாவாகும். அது 'ஃபர்லு கிஃபாயா' என்று இமாம் நவவீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். அவர்களுடைய சொற்படி ஓர் ஊரில் ஓரிடத்திலாவது பகிரங்கமாக இமாம் ஜமாஅத் நடைபெறாவிட்டால் அனைவரும் குற்றவாளிகளாக ஆகிவிடுவார்கள்.

இமாமும் மஃமூமும் அதாவால், அல்லது களாவால் ஒன்றாவார்களானால் இமாம் ஜமாஅத் சுன்னத்தாகும். ஒன்றாகவில்லையானால் சுன்னத்தல்ல. ஆனால், தொழுகை கூடிவிடும். உதாரணமாக களாத்தொழுபவர் பின்னால் அதா தொழுவதும், சுன்னத்துத் தொழுபவர் பின்னால் ஃபர்லு தொழுவதும் இவை இரண்டிற்கு மாற்றமான முறையிலும் தொழுவது கூடும். ஆனால் இன்னான்கு வகையிலும் ஜமாஅத்து சுன்னத்தல்ல.

இமாம் ஜமாஅத் ஆண்களுக்கு பலமான சுன்னத்தாக இருப்பதால் அதனை விடுவது அவர்களுக்கு மக்ரூஹ். பெண்களுக்கு ஜமாஅத் சுன்னத்தாக இருந்தாலும் அதனை விடுவது அவர்களுக்கு மக்ரூஹ் அல்ல. பள்ளியில் தனித்துத் தொழுவதைவிட வேறு இடத்தில் ஜமாஅத்தாகத் தொழுகை நடைபெற்றால் அங்கு சென்று ஜமாஅத்தில் சேர்ந்து தொழுவது ஏற்றம்.

ஃபர்லான தொழுகையைத் தனியாகத் தொழுத ஒருவர் மீண்டும் அந்தத் தொழுகை அந்த வக்துக்குள் ஜமாஅத்தாக நடப்பதைக் கண்டால் ஒரு விடுத்தம் அதில் சேர்ந்து தொழுவது சுன்னத்தாகும். இந்த ஜமாஅத் தொழுகை அவனுக்கு சுன்னத்தாக இருந்தாலும் ஃபர்லான தொழுகையை மீளவைப்பதாக நிய்யத்துச் செய்ய வேண்டும். இவ்விதம் இரண்டு தடவை ஜமாஅத்துடன் சேர்ந்து தொழலாம் என்றும் கூறப்பட்டுள்ளது. முதலில் தனியாகத் தொழுது இருந்தாலும் சரி அல்லது ஜமாஅத்தாகத் தொழுது இருந்தாலும் சரி.

மேற்கூறியது போன்று ஜமாஅத்துடன் தொழுகையைத் திரும்பத் தொழுவது சுன்னத்தென்பதற்கு பன்னிரண்டு ஷர்த்துகள் உண்டு. 1) ஜமாஅத் விதியாக்கப்பட்ட ஃபர்லான அல்லது சுன்னத்தான தொழுகையாக இருத்தல் 2) அது அதாவாக இருத்தல் 3) அந்தத் தொழுகைக்குரிய குறிப்பிட்ட நேரத்திற்குள் நிறைவேற்றுதல். இதில் பெருநாள் தொழுகையை மீட்டித் தொழுவதில் குற்றமுமில்லை, சுன்னத்துமில்லை. 4) கடினமான பயத்துடன் தொழும் தொழுகையாக இல்லாமலிருத்தல் 5) வித்ரு தொழுகையாக இல்லாமலிருத்தல் 6) இரண்டாவது ஜமாஅத்தாக தொழ நாடுபவர்கள் முதலில் ஜமாஅத்தாக தொழுத அதே நபர்களாக இல்லாமலிருத்தல். எனினும், இந்த விஷயம் கிரகணத் தொழுகையில் மட்டும்தான். 7) ஜனாஸா தொழுகையாக இல்லாமலிருத்தல் 8) ஒரு விடுத்தம் மட்டும் திரும்பத் தொழுதல் 9) மீள வைப்பவன் சுன்னத்துத் தொழ ஆகுமானவனாகவும், உளு அல்லது தயம்முமை இழக்காதவனாகவும் இருத்தல் 10) மீள வைப்பது ஆகுமென்ற உறுதியுள்ளவனாக இருத்தல் 11) இரண்டாவது ஜமாஅத்துடனாக இருத்தல் 12) அந்த ஜமாஅத்து ஷரீஅத்தில் விதியாக்கப்பட்ட சிறப்பை அடைந்ததாக இருத்தல்.

இவ்வாறே ஜமாஅத்து விதியாக்கப்பட்ட சுன்னத்தான தொழுகைகளையும் மீள வைப்பது சுன்னத்தாகும். ஆனால், களா தொழுகை, ஜனாஸாத் தொழுகை ஆகியவற்றை மீளவைப்பது சுன்னத்தல்ல. எனினும், அவ்வாறு செய்தால் அது கூடும்.

அதிகமான மக்கள் கூடும் ஒரு பள்ளிவாசல் தனது வீட்டிலிருந்து தூரத்தில் இருந்தாலும் அங்கு போய்த்தொழுவது, குறைவான மக்கள் கூடும் தனது வீட்டுக்குச் சமீபத்தில் இருக்கும் ஒரு பள்ளிவாசலில் தொழுவதைவிட ஏற்றமாகும். ஆனால், அதிகக் கூட்டத்திற்கு இமாமாயிருப்பவர் பாவம் புரிந்தவராக, அல்லது ஷீஆ, ராஃபிழி போன்ற கொள்கைக் காரராக இருந்து, குறைவான கூட்டத்தின் இமாம் மார்க்கக் கல்வி உடையவராக இருந்தால், குறைந்த ஜமாஅத்துடன் சேர்ந்து தொழுவதுதான் நல்லது. ஆரம்ப நேரத்தில் குறைவான ஜமாஅத்துடன் தொழுவது, கடைசி நேரத்தில் அதிகமான ஜமாஅத்துடன் தொழுவதைவிட ஏற்றம்.

ஜமாஅத்திற்குக் குறைந்தது இருவர் இருக்க வேண்டும். ஒருவர் இமாம், மற்றொருவர் மஃமூம். மஃமூம் ஒரு பெண்ணாக இருந்தாலும் சரி.

பள்ளியில் குறைந்த ஜமாஅத்தும் பள்ளியல்லாத இடத்தில் அதிகமான ஜமாஅத்தும் இருந்தால், இப்னு ஹஜர்(ரஹ்) அவர்களின் சொற்படி பள்ளியில் தொழுவது ஏற்றமாகும்.

ஒருவன் தன் வீட்டில் மனைவி மக்களுடன் சேர்ந்து ஜமாஅத்தாகத் தொழுதால் அவர்களுக்கும் ஜமாஅத்துடைய பலன் கிடைக்குமே என்று கருதினால், அவ்வாறு வீட்டில் தொழுவதே ஏற்றமாகும். அவன் பள்ளிக்குச் செல்வதனால் அவனுக்குக் கிடைக்கும் நன்மையை மற்றவருக்காக விடுவது மக்ரூஹ் என்று சொல்லப்பட்டிருப்பதையும், இவன் பள்ளிக்குச் சென்று தொழுது விட்டு வந்து தன் வீட்டாருக்கு ஜமாஅத் நடத்தலாமே என்று சொல்வதையும் கவனிக்கக் கூடாது. ஏனெனில் அவர்களுக்கு ஃபர்லில் ஜமாஅத்துத் தவறிவிடாமலிருப்பதைக் கவனிப்பது, அவனுக்குப் பள்ளியில் கிடைக்கும் பலனை விட அதிகமாகும். இது எவ்வாறென்றால், முன்னாலுள்ள வரிசையில் இடமில்லாத பொழுது, பின்னாலுள்ள வரிசையில் தனித்தவனாக நின்று தக்பீர் கட்டப் போகின்ற ஒருவன், முன் வரிசையில் உள்ள ஒருவரைத் தன்னுடன் நிற்க பின் வரிசைக்கு இழுத்தால் இழுத்தவனுக்கு இணங்கினால் இழுக்கப்படுகிறவன் உதவி செய்வது போலாகும். இதன் ஷர்த்துகள் பின் விவரிக்கப்படும்.

இமாமாகிறவர், ஃபர்லுகள், வாஜிபுகள், ஷர்த்துகள் ஆகியவற்றில் சிலதைக் கடைப் பிடிக்காதவராக இருந்தால் அவரை விட்டுத் தனித்துத் தொழுவதே ஏற்றம். அவர் தான் செய்வதை சுன்னத்தெனக் கருதினாலும் சரி.

ஒரு பள்ளியில் வழக்கமாக இத்தனை பேர்கள் தொழுவார்கள் என்ற நிர்ணயமிருந்து, அப்பள்ளிக்கு வழமையான ஓர் இமாமும் இருந்தால் அவர் வருவதற்கு முன் ஜமாஅத்தை நிலை நிறுத்துவது மக்ரூஹ். எனினும், அவருடைய அனுமதியிருந்தாலும், அல்லது குழப்பம் உண்டாகாது என்றிருந்தாலும் ஜமாஅத்தினர் இத்தனை பேர்தான் என்ற நிர்ணயம் இல்லாதிருந்தாலும் ஜமாஅத்தை நிலைநிறுத்துவது மக்ரூஹ் அல்ல.

முந்தின இமாம் தொழ வைத்த முஸல்லாவை சுருட்டி வைப்பதும், அவ்விடத்தில் மற்றொருவர் நின்று இமாமத் செய்வதைப் பொருந்தாமலிருப்பதும் பித்அத்தாகும்.

தனித்துத் தொழுவதைவிட ஜமாஅத்துடன் தொழுவது இருபத்தேழு மடங்கு அதிக நன்மையுள்ளதாகும்.

இரகசியமாக கிராஅத் ஓதும் தொழுகைகளுக்கு இருபத்தைந்து மடங்கு நன்மைகளென்றும், சப்தமிட்டு கிராஅத் ஓதும் தொழுகைகளுக்கு இருபத்தேழு மடங்கு நன்மைகளென்றும் கூறப்பட்டுள்ளது.

இருபத்தேழு மடங்கு கிடைப்பதற்குரிய காரணமாவது: 1) ஜமாஅத்துடன் தொழும் எண்ணத்துடன் முஅத்தினுடைய அழைப்புக்கு பதில் கூறுவது. 2) ஆரம்ப நேரத்தில் ஜமாஅத்துக்குச் செல்வது 3) பள்ளிவாசலை நோக்கி நடப்பது 4) பள்ளிவாசலில் நுழைவது 5) பள்ளியில் நுழைந்து தஹிய்யத்துல் மஸ்ஜித் தொழுவது 6) ஜமாஅத்தை எதிர் பார்ப்பது 7) மலக்குகள் இவர் மீது சலவாத்துச் சொல்வது 8) மலக்குகள் இவருக்கு சாட்சி கூறுவது 9) இகாமத்துக்கு பதில் கூறுவது 10) இகாமத்துச் சொல்லும் போது ஷைத்தான் அங்கிருந்து ஓடுவதால் அவனுடைய தீங்கை விட்டும் ஸலாமத் பெறுவது 11) இமாமுடைய தக்பீரை எதிர்பார்ப்பது, 12) இமாமுடன் முதல் தக்பீரை அடைவது 13) வரிசைகளை சரியாக்கி, இடைவெளி இல்லாமல் நிற்பது 14) ஸமிஅல்லாஹ் லிமன் ஹமிதஹ் என்று இமாம் சொல்லும் போது அதற்கு பதிலைப்போல் ரப்பனா லகல் ஹம்து என்று கூறுவது 15) பெரும்பாலும் மறதியில்லாமல் இருப்பது இமாமுக்கு மறதி ஏற்பட்டாலும் தஸ்பீஹ் கூறி அதனை அவருக்கு அறிவிப்பது. 16) பெரும்பாலும் உள்ளச்சம் ஏற்படுவது 17) பெரும்பாலும் தன் கோலத்தை அழகாக்குவது 18) மலக்குகள் சூழ்ந்து கொள்வது 19) அப்ஆள் சுன்னத்துகள், கிராஅத், ஃபர்ளுகள் ஆகியவற்றின் மீது வழக்கப்படுத்துவது 20) இஸ்லாத்தின் அடையாளத்தை வெளிப்படுத்துவது 21) ஷைத்தானைக் கேவலப்படுத்துவது 22) இமாமுக்கு ஸலாம் கூறுவது 23) நயவஞ்சகத்தை விட்டும் நீங்குவது 24) துஆவில் கூட்டாவது 25) ஜமாஅத்தில் பக்கத்திலுள்ளவருடன் கூட்டுறவாகுவது 26) சப்தமிட்டு ஓதும் தொழுகையில் கிராஅத்தை செவியுறுவது 27) அதில் இமாமுடைய ஓதுதலுக்கு ஆமீன் கூறுவது. இவை இருபத்தேழு மடங்கு நன்மைகளின் காரணங்களாகும்.

ஒருவர் தனித்துத் தொழும் போது இமாமைக் கண்டால், உடனே ஜமாஅத்தை நிய்யத்துச் செய்து அவரைத் தொடரலாம். இருவருடைய ரக்அத்துகள் ஏற்றத் தாழ்வாக இருந்தாலும் சரி. ஆனால், அவ்வாறிருந்தால் மக்ரூஹ் ஆகும்.

இமாமுக்கு முன் இவனுடைய தொழுகை முடிந்தால் இமாமைப் பிரிந்து விடுகிற நிய்யத்துச் செய்து ஸலாம் கொடுப்பான். எனினும், ஸலாம் கொடுக்காமல் அத்தஹிய்யாத்திலேயே இருந்து இமாமை எதிர்பார்த்து அவருடன் சேர்ந்து ஸலாம் கொடுப்பது ஏற்றமாகும்.

இமாமிடம் யாதொரு குறையும், தனக்கு எவ்வித இடையூறும் இல்லாமலிருக்கும் போது அவரைப்பிரிகிற எண்ணம் கொண்டால் ஜமாஅத்தின் பலன் தப்பி விடும். ஆனால் இமாமிடம் தொழுகையை முறிக்கும் ஏதேனும் ஒரு குறையை அறிந்தவுடன்

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

நிய்யத்துச் செய்து அவரை விட்டுப் பிரிவது வாஜிபாகும். அவ்வாறு நிய்யத்துச் செய்து பிரியவில்லையானால் தொழுகை முறிந்து விடும். நிய்யத்துச் செய்யாமல் அவரைத் தொடர்வதாகப் பாவனை செய்யாவிட்டாலும், அல்லது அவரைத் தொடராத பாவனை செய்தாலும் தொழுகை முறிந்துவிடும்.

இமாம் முந்திய ஸலாம் கொடுக்கும் முன் எந்த இடத்தில் அவரைத் தொடர்ந்தாலும் ஜமா அத்தின் பலன் கிடைக்கும். அவருடன் சற்று நேரம் இருக்க வில்லையானாலும் சரி. ஆனால் முழுமையாக இமாமுடன் சேர்ந்தவருக்குரிய நன்மைக்குக் குறைவாகவே கிடைக்கும்.

இமாமானவர் கடைசி ரக்அத்தின் ருகூஃவை விட்டும் தலையை உயர்த்திய பின் தொழுவதற்காகச் சிலர் வந்தால், அவருடன் சேராமல் அவர் ஸலாம் கொடுத்த பின் இவர்கள் வேறு ஜமாஅத்தாக தொழுவதற்குரிய தகுதியுள்ளவர்களாக இருப்பின் அவ்வாறே வேறு ஜமாஅத் தொழுவது சுன்னத்தாகும். அவ்வாறு தொழுவதற்கு நேரம் விசாலமாக இருக்க வேண்டும்.

இமாமுடன் முந்திய தக்பீரை எட்டிக் கொள்வது தனிப்பட்ட சிறப்பாக இருப்பதால், அவருடைய தக்பீருக்கு அடுத்து உடனடியாக தக்பீர் கட்டுவதின் மூலம் அந்தச் சிறப்பு கிடைக்கும். எனினும், இலேசான வஸ்வாஸினால் சற்று தாமதித்தாலும் அந்த சிறப்பு தவறி விடாது.

முதல் தக்பீரின் சிறப்பு கிடைக்க வேண்டுமென்பதற்காக, அல்லது ஜமாஅத் தவறி விடுமென்பதை பயந்ததற்காக விரைவாக நடக்காமல் இருப்பது சுன்னத்து ஆகும். ஆனால், ஜும்ஆவில் ஜமாஅத்துத் தவறி விடுமென்று பயந்தால் விரைந்து நடப்பது வாஜிபாகும்.

ஒருவர் ஜமாஅத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டுமென்ற நல்லெண்ணத்தில் தன் வீட்டிலிருந்து புறப்பட்டு வந்து, அவர் மீது எவ்விதக் குறையுமில்லாமல் ஜமாஅத்துத் தவறி விட்டால் அவருக்கு ஜமாஅத்துடைய நன்மை கிடைக்கும்.

இமாமோ அல்லது தனித்துத் தொழுபவரோ, ருகூஃவிலோ அல்லது கடைசி அத்தஹிய்யாத்திலோ இருக்கும் போது, யாரேனும் அவரைத் தொடருவதற்காக அவ்விடத்திற்கு வருகிற ஓசை கேட்டால், முகஸ்துதியின்றியும் அதிக நேரமாகாமலும் அவரை எதிர் பார்ப்பது சுன்னத்தாகும். ஆனால், அவ்வாறு வருகிறவர் அலட்சிய மானவராகவோ பெரும் வஸ்வாஸ் உள்ளவராகவோ இருந்தால் அவரை எதிர் பார்ப்பது சுன்னத்தல்ல. அவ்வாறே கிரகணத் தொழுகையின் இரண்டாம் ருகூஃவில் எதிர்பார்ப்பதும் சுன்னத்தல்ல. இந்த நிலைகளில் அவர் மீதுள்ள பாசத்திற்காக இமாம் அவரை எதிர் பார்ப்பது ஹராமாகும்.

ஜமாஅத்தார் சம்மதித்தாலும் பெரிய மனிதர் ஒருவருக்காக, அல்லது அதிகமான மக்கள் கூடுவார்கள் என்பதற்காக தொழுகையை நீளப்படுத்துவது மக்ரூஹ் தஹ்ரீமாகும்.

வரிசையைச் சரியாக்கிக் கொள்ளுமாறு ஏவுகிறதும், அதனைச் செயல்படுத்துவதும், வலமும் இடமும் திரும்பிப் பார்த்துச் சரி செய்வதும் இமாமுக்கும் ஜமாஅத்தினருக்கும் சுன்னத்தாகும். இதில் اِسْتَوُوْا رَحِمَكُمُ اللّٰهُ "வரிசைகளில் சரியாக நேராக நில்லுங்கள்; அல்லாஹ் உங்களுக்கு ரஹ்மத்துச் செய்வானாக!" என்று கூறுவதும் சுன்னத்தாகும்.

இகாமத்துச் சொல்லி முடிந்த பிறகுதான் தொழுகைக்காக அனைவரும் எழுந்திருப்பது முஸ்தஹப்பாகும். இகாமத்துச் சொல்லுகிறவரும், அந்த நேரத்தில் பள்ளியில் வந்து நுழைகிறவரும் நிற்பது சுன்னத்து.

அப்ஆள் சுன்னத்துகள், அலங்கார சுன்னத்துகள் ஆகியவற்றைச் செய்வதுடன் தொழுகையைச் சுருக்கித் தொழுவது இமாமுக்கு சுன்னத்தாகும். ஜமாஅத்தினர் அனைவரும் பொருந்திக் கொண்டும், அதன் பிறகு வேறு யாரும் ஜமாஅத்தில் வந்து சேராமலும் இருந்தால், அந்தந்த இடங்களிலுள்ள ஹதீஸில் வந்துள்ள சுன்னத்தான திக்ருகளையும், துஆக்களையும் ஓதி நீண்ட நேரம் தொழுவது கூடும். இமாமுடைய அனுமதியின்றி இகாமத்துச் சொல்லப்பட்டாலும், சுன்னத்தான தொழுகையைத் துவக்குவது மக்ரூஹ் ஆகும். மஃமூமின் ஃபாத்திஹாவைச் சுமக்கத் தகுமான இமாமின் பின்னால் நிலையில் தக்பீர் கட்டி அவருடைய ருகூஃவில் போய் சேர்ந்து, உறுதியாய் அதில் தரிபட்டால் அந்த ரக்அத்தைப் பெற்றுக் கொண்டவனாவான். நிரந்தரமாக உளூமுறித்தல் உள்ளவனும், மறதியாக அதிக ரக்அத்துகளைத் தொழுபவனும், பருவமடையாதவனும் ஃபாத்திஹாவை மஃமூமில் நின்றும் சுமக்கத் தகுதியற்றவர்களாவார்கள். ஆனால் பலமான சொற்படி சுமக்க தகுதி உள்ளவர்கள் என்றும் சொல்லப்படுகிறது.

நேரம் முடிவதற்குள் ஒரு ரக்அத்தும் தொழ முடியாது என்ற நெருக்கடியான நேரத்தில் ஒருவனை ருகூஃவில் இருக்கக் கண்டால் அவனும் இமாமத்துக்குத் தகுதியானவனாக இருந்தால் அவனுடன் ருகூஃவில் போய்ச் சேர்ந்து கொள்வது வாஜிபாகும்.

நடுத்தரமான ஓதுதலாக ஸூரத்துல் ஃபாத்திஹாவை ஓத முடியாத நேரத்தில் வந்து சேர்ந்தவனுக்கு மஸ்பூக் (பிந்தியவன்) என்று சொல்லப்படும். ஒரு மஸ்பூக்கானவன் தக்பீர் கட்டியவுடன் வஜ்ஜஹ்து அஊது ஓதாமல் சூரத்துல் ஃபாத்திஹாதான் ஓத வேண்டும். அவ்வாறின்றி வஜ்ஜஹ்து அஊது ஓதுவதில் ஈடுபட்டாலும் அல்லது வாய் மூடி நின்றாலும் அவனுக்கு ஃபாத்திஹா முழுமையாக ஓத முடியாத நிலைமையில் இமாம் ருகூஃவுக்குப் போய் விட்டால் இவனுக்கு தொழுகை பாத்திலாகி விடும். அவ்வாறின்றி வஜ்ஜஹ்து அஊது ஓதாமல் ஃபாத்திஹா ஓத ஆரம்பித்து அது முழுமையடையாமல் இருக்கும் பொழுதேனும் இமாம் ருகூஃவுக்குப் போனால் இவனும் ருகூவுக்குப் போய்விட வேண்டும். அந்த ருகூஃவில் இமாமைச் சேர்ந்து கொண்டால் இவனுக்கு அந்த ரக்அத் கிடைத்து விடும். அந்த அளவுக்காவது ஃபாத்திஹா ஓதாமல் ருகூவுக்குப் போனால் தொழுகை வீணாகி விடும். அந்த வஜ்ஜஹ்து அஊது அளவுக்காவது ஃபாத்திஹாவில் கொஞ்சத்தை ஓதியபின் இமாம் சுஜூதுக்குக்

குனிவதைப் பார்த்தால், இவன் ருகூஃவுக்குப் போகாமல் இமாமைத் தொடருவான். அதனால் அந்த ரக்அத் தவறிவிடுமே தவிர தொழுகைக்குக் குறை ஏற்படாது. அவ்வாறு இமாமைத் தொடராமலிருந்தால் தொழுகைபாத்திலாகிவிடும். அந்த அளவு நிரப்ப மாகுமுன் இமாம் சுஜூதுக்குப் போவதைப் பார்த்தால் இமாமை விட்டுப் பிரிவதை நிய்யத்துச்செய்து கொள்ளவேண்டும். அவ்வாறு பிரியாவிட்டாலும் அல்லது இமா முடன் குனிந்தாலும் தொழுகை பாத்திலாகிவிடும். இதனை அறியாத மஸ்பூக்கானவன் நீளமான மூன்று பர்ளுகளுக்குப் பிந்தாமல் வந்து இமாமுடன் சேர்ந்து கொள்வான். இமாம் ஸலாம் கொடுத்த பிறகு மஃமூம் தன் மீது மீதியிருந்தால் அதற்காக எழுந்திருக்கும் போது அது தன்னுடைய அத்தஹிய்யாத்தின் இடமாக இருந்தால் தக்பீர் சொல்லி எழுவான்; இல்லாவிடில் சொல்லாமல் எழுவான் (ஏனெனில் மஸ்பூக்கானவன் நிலைக்குப் போகும் போது சொல்ல வேண்டிய தக்பீரை அத்தஹிய்யாத்தில் உட்காரும் போது சொல்லி விட்டதால்.)

## இமாமைத் தொடருவதற்கு ஏழு ஷர்த்துகள் உண்டு

முதலாவது, இந்த இமாமைத் தொடர்ந்தேன் என்று தக்பீர் ஆரம்பத்திலேயே நிய்யத்துச் செய்தல், இல்லாவிடில் ஜும்ஆவைத் தவிர மற்ற தொழுகைகள் தனித்துத் தொழுததாக ஆக்கப்படும். ஜும்ஆ கூடாது. ஒருவன் இந்த நிய்யத்தை விட்டு விட்டு மற்றொருவரைப் பின்பற்றி நீண்ட நேரம் எதிர் பார்த்துத் தொழுதால் தொழுகை பாத்திலாகி விடும். தொழுகையின் நடுவில் ஓர் இமாமைப் பின் பற்றலாம் என்பது முன்னால் கூறப்பட்டுள்ளது. இமாமத்துச் செய்வதை இமாம் நிய்யத்துச் செய்வது ஜும்ஆவில் வாஜிப்; மற்ற நேரங்களில் சுன்னத்து.

இரண்டாவது, நிற்குமிடத்தில் இமாமுடைய குதிங்காலை விட மஃமூமுடைய குதிங்கால் முந்தாமல் இருக்க வேண்டும். இமாமுக்குச் சரியாக நிற்பது மக்ரூஹ் ஆகும். விரல்கள் முந்தியிருப்பதாலும், குதிங்கால் முந்தியிருப்பதில் சந்தேகமுண்டானாலும் எவ்விதக் குற்றமுமில்லை.

மஃமூம் ஒருவனாக இருந்தால் இமாமின் வலப்பக்கம் நிற்பான், மற்றொருவன் வந்தால் இமாமின் இடப்பக்கம் நின்று தக்பீர் கட்டி பிறகு இருவரும் இமாமுக்கு நேர் பின்னால் வரிசையாக நிற்பார்கள். அதற்குப் பிறகு வருகிறவர்கள் ஒருவர் வலப்பக்கமும் மற்றொருவர் இடப்பக்கமும் நின்று வரிசையை நிரப்பிய பிறகு இரண்டாவது வரிசையில் தொடர்ந்து நிற்பார்கள்.

துவக்கத்தில் இரண்டு அல்லது பலர் வந்தால் இமாமுக்கு நேர் பின்னால் நிற்பார்கள். வலப்பக்கம் தூரமாக இருந்தாலும் நெருங்கியிருக்கும் இடப்பக்கத்தை விட ஏற்றமாகும்.

வரிசையை விட்டுத் தனித்திருப்பதும், முந்திய வரிசை நிரம்பும் முன் அடுத்த வரிசையைத் துவக்குவதும் மக்ரூஹ் ஆகும்.

முந்திய வரிசையில் இடமில்லாவிட்டால் அடுத்த வரிசையில் தனியாக நின்று தக்பீர்கட்டி, பின், முதல் வரிசையிலிருந்து ஒருவரை இழுத்து தன்னுடன் நிறுத்திக் கொள்ள வேண்டும். இழுக்கிறவருக்கு இழுக்கப்படுகிறவர் இணங்குவது சுன்னத்தாகும். இவன் தொழுகையில் நுழையும் முன் அவனை இழுப்பது ஹராமாகும். ஏனெனில்,

தொழுகிறவன் சுன்னியத்திற்குரியவன். இவன் அவனைப் போன்று ஆகும் வரை அவனை இழுப்பது கூடாது. இழுப்பதிலும் இழுக்கப்படுவதிலும் தொடர்ந்து மூன்று செயல்கள் ஏற்படாமலிருக்க வேண்டும். மூன்று எட்டுகள் போல்.

தொழுகிறவனை இழுப்பது ஆகுமாகுவதற்குச் சில ஷர்த்துகள் உள்ளன. அவையாவன.

1) இருவரும் ஒன்றாக நிற்பதற்கு ஆகுமானவர்களாக இருக்க வேண்டும்..

2) இழுக்கப்படுகிற வரிசையில் இரண்டு நபர்களை விட அதிகமாக இருக்க வேண்டும்.

3) தக்பீர் கட்டிய பிறகு இழுக்க வேண்டும்.

இந்த ஷர்த்துகளின் அடிப்படையில் இழுப்பதும் இழுபடுவதும் சுன்னத்தாகும். முன்னாலுள்ள வரிசையில் நிற்பதற்குரிய இடமிருந்தால் அதனை நிரப்புவதற்காக வரிசைகளில் நுழைந்து செல்வதும் கூடும். அவன் நுழைந்து செல்வதற்கு அவர்கள் இடங்கொடுப்பது சுன்னத்து.

இமாமுக்குஅடுத்து பருவமடைந்துள்ள ஆண்கள் அணிவகுத்து நிற்க வேண்டும். அதற்கு அடுத்து பருவமடையாத சிறுவர்களும், அதற்கு அடுத்து (ஆணும் பெண்ணுமல்லாத) அலிகளும், அதற்கு அடுத்து பருவமடையாத சிறுமிகளும், அதற்கு அடுத்து கிழவிகளும், அதற்கு அடுத்து குமரிகளும் அணிவகுத்து நிற்பது முறையாகும்.

தனித்து ஒரு பெண் மட்டுமிருந்தால் இமாமுக்கு நேர்பின்னால் நிற்பாள். அவள் தாயாயினும், மனைவியாயினும் சரியே. முன் வரிசையில் இடமிருக்கும்பொழுது அதில் நிற்பதற்காக சிறுவர்கள் வந்து விட்டால், பெரியவர்களுக்காக அவர்களைப் பின்னால் போகச் சொல்வது கூடாது.

இமாமுக்கும் முதல் வரிசைக்குமிடையில் மூன்று முழ இடைவெளியை விடக் கூடாமல் இருப்பதும், அவ்வாறே எல்லா வரிசைகளுக்குமிடையில் இடைவெளி இருப்பதும் சுன்னத்தாகும். இதைவிட அதிகமாக இடைவெளியிருப்பது மக்ரூஹ் என்பதுடன் ஜமாஅத்துடைய சிறப்பும் கிடைக்காது.

மூன்றாவது:- இமாம் குனிவதை நிமிர்வதைக் காண வேண்டும். அல்லது வரிசையிலுள்ள சிலரைக் காண வேண்டும். அல்லது திரையில்லாத போது அவருடைய சப்தத்தைக் கேட்க வேண்டும். இமாமின் சப்தத்தை எட்டி வைக்கும் விசுவாசியான முபல்லிஃகு உடைய சப்தத்தைக் கேட்பது இமாமுடைய சப்தத்தைக் கேட்பது போலாகும்.

நான்காவது:- இமாம், மஃமூம் இருவரும் ஓர் இடத்தில் இருக்க வேண்டும். இமாம் ஓரிடத்திலும் மஃமூம் வேறோர் இடத்திலும் இருந்தால் கூடாது. ஒரே இடத்தில் இருவருக்குமிடையே முன்னூறு முழங்களுக்கு அதிகமாக இடைவெளி இருந்தாலும் தொடருவது கூடும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

ஒருவர் பள்ளியிலும் மற்றொருவர் சட்டத்தால் அதனுடன் சேராத வெளியிலும் இருந்தால் அது முன்னூறு முழங்களுக்கு அதிகப்படாமலும் திரையில்லாமலும் இருக்க வேண்டும். எனினும், திரை (தடுப்பு) இருந்து அந்தத் தடுப்பிலிருக்கும் பாதைக்கு நேராக ஒருவன் இருந்தால், அவன் இமாமுடைய குனிதலை நிமிர்தலைக் காணும் முறையில் நிற்பது ஷர்த்து. பார்வையைத் தடுக்கும் மூடப்பட்ட கதவும் திரையும், நடமாடுவதை தடுக்கும் ஜன்னல் போன்றதும் இருந்தால் அப்பொழுது கூடாது. நடப்பதையும் பார்வையையும் தடுக்காத திறந்த கதவுக்கு நேராக ஒருவன் நின்றால் கூடும். அவன் அந்தத்திரைக்குப் பின்னாலிருக்கிறவர்களுக்கு இமாமைப் போலாவான். ஆகையால், எவ்விதம் இமாமை முந்தாமலிருக்க வேண்டுமோ அவ்விதமே இவனையும் முந்துதல் கூடாது. முதல் தக்பீரிலும், தரிபடும் தலங்களிலும் அவனை முந்தினால் தொழுகை பாத்திலாகி விடும். அவனுடைய தொழுகை இவர்கள் தக்பீர் கட்டியபின் பாத்திலாகி விட்டால் இவர்களுக்கு எவ்வித இடையூறுமில்லை.

எவ்வித அவசியமுமின்றி இமாம், மஃமூம் இருவரில் ஒருவர் மற்றவரை விட உயரமான இடத்தில் நிற்பது மக்ரூஹ். அவசியமென்றது பிறருக்கு எட்டி வைத்தல் போன்றதும் இடமில்லாமல் சிரமமாவது போன்றதுமாகும்.

இமாம் மாடியிலும் மஃமூம் கீழ்ப்பகுதியிலும் நின்றால் இருவருக்குமிடையே திரையில்லாமல் இருப்பது ஷர்த்தாகும். மேலே நிற்பவனுடைய கால் கீழே நிற்பவனுடைய தலைக்கு நேராக இருக்க வேண்டுமென்பது ஷர்த்தல்ல. அவர்களிருவரும் பள்ளியில் இல்லாவிடினும் சரி, பலமான சொற்படி, மாடிக்குச் செல்வதற்கு ஏணிப்படி இருந்து அதன் வாயிலும் அடைக்கப்படாமல் இருக்க வேண்டும்.

ஐந்தாவது: குனூத்து, முந்தின அத்தஹிய்யாத்து போன்ற சுன்னத்துகளில் இமாமுடன் நேர்பட்டிருக்க வேண்டும். அதாவது அவர் செய்தால் இவனும் செய்வான். அவர் விட்டால் இவனும் விட்டு விடுவான்.

அப்ஆள் சுன்னத்துகளில் ஏதேனும் ஒன்றை இமாம் விட்டு விட்டால், மஃமூம் அதனைச் செய்ய நாடினால், இமாமை விட்டுப் பிரிகிற நிய்யத்தைக் கொண்டு பிரிந்து அதனைச் செய்து கொண்டால் ஜமாஅத்துடைய பலன் தவறி விடாது. அவ்வாறு செய்தல் ஏற்றமாகவும் இருக்கும்.

இமாம் நடு அத்தஹிய்யாத்தில் இருக்காமல் இஸ்திராஹத் இருப்பிலும் இருக்காமல் நிலைக்குப் போய் விட்டால் மஃமூமும் நிலைக்குப் போய் விட வேண்டும். அதற்கு மாறாக மஃமூம் அத்தஹிய்யாத்தில் இருந்தால் தொழுகை பாத்திலாகி விடும். இமாம் நடு அத்தஹிய்யாத்தை மறந்து இஸ்திராஹத் இருப்பில் மட்டும் இருந்து எழுந்து விட்டால் மஃமூம் அத்தஹிய்யாத்து ஓதி அந்த இமாமை நிலையிலேயே போய்ச்சேர்ந்து கொள்ள வேண்டும்.

இது போன்றே தஸ்பீஹ் தொழுகையில் இமாம் இஸ்திராஹத் இருப்பை விட்டுவிட்டு நிலைக்குப் போய் விட்டாரானால் மஃமூம் இஸ்திராஹத் இருப்பினுடைய தஸ்பீஹை ஓதுவதற்காக உட்காரக் கூடாது. ஆனால் இமாம்

இஸ்திராஹத் இருப்பிலிருந்து விட்டு தஸ்பீஹ் ஓதாமல் எழுந்து விட்டால் மஃமூம் உட்கார்ந்து ஓதுவதில் குற்றமில்லை.

இமாம் குனூத்து ஓதாதிருக்கும் போது மஃமூம் குனூத்து ஓதினால், முந்தின சுஜூதில் அவருடன் போய்ச் சேராத வரையில் வெளிப்படையான சொற்படி பாத்திலாகிவிடும்.

இமாம் ருகூவு செய்த பிறகு ஒருவன் அவரைப் பின்பற்றினால் அவர் எந்த நிலையில் இருக்கிறாரோ அதில்போய் சேர்ந்து கொள்வான்.

இரண்டாம் சுஜூதுக்கு முன்னால் இமாமுக்கு உளூமுறிந்து விட்டால் மஃமூம் அந்த சுஜூதைச் செய்யாமல் உடனே எழும்புவது வாஜிபாகும்.

இமாம் இரண்டு ஸலாமும் கொடுத்த பிறகுதான் மஸ்பூக் எழுந்திருப்பது சுன்னத்தாகும். ஒரு ஸலாம் கொடுத்தவுடன் எழுந்திருப்பது மக்ரூஹ் ஆகும்.

ஆறாவது:- எவ்விதத் தங்கடமுமில்லாமல் செயலாலுள்ள இரண்டு ஃபர்லுகளுக்குத் தொடராக பிந்தாத முறையில் இமாமைத் தொடர்ந்து கொண்டே இருக்க வேண்டும். மஸ்பூக் அல்லாத ஒரு மஃமூம் ஃபாத்திஹா ஓதுவதற்காகப் பிந்தினால், இமாம் ருகூஃவு, இஃதிதால் , முந்தின சுஜூது, சிறு இருப்பு ஆகியவற்றைச் செய்து இரண்டாம் சுஜூதில் இருக்கும் போது, இவன் ஃபாத்திஹாவை முடித்து ருகூவுக்குப் போனால் அந்த ரக்அத் கணக்கில் சேர்ந்து விடும். அவ்வாறு முடியாதிருந்தால் நீண்ட ஃபர்லாகிய நான்காவதான நிலையில் அல்லது அத்தஹிய்யாத்திலிருக்கும் போது சேர்ந்து கொண்டு பிறகு ஒரு ரக்அத் தொழுது கொள்ளவும். இஃதிதாலும், சிறு இருப்பும் குட்டையான ஃபர்லாகும்.

ஏழாவது: செயலாலுள்ள எந்த ஃபர்லானாலும் இரண்டு ஃபர்லுகளைக் கொண்டு இமாமை முந்தாமலிருக்க வேண்டும். ஒரு ஃபர்லைக் கொண்டு முந்துவது தொழுகையை முறிக்காது. எனினும் ஹராமாகும். செயலாலுள்ள ஃபர்லுகளில் இமாமுடன் ஒத்தாற்போல் சேர்ந்து செய்வது மக்ரூஹ். அதில் இமாமுக்குப் பிந்திக் கொள்ள வேண்டும். நிரப்பமான முறை என்ன வென்றால் மஃமூமுடைய செயலின் துவக்கம் இமாமுடைய செயலின் அசைவுகள் அடங்கிய பிறகாக இருக்க வேண்டும்.

"உம்தா" عُمْدَة என்ற நூலில் 'மஃமூமுடைய செயலின் துவக்கம் இமாமுடைய செயலின் துவக்கத்திற்குப் பிறகாக இருக்க வேண்டும்' என்று எழுதப்பட்டுள்ளது.

சொல்லாலுள்ள ஃபர்லுகளில் தக்பீர் தஹ்ரீமாவையும், ஒரு ஸலாமையும் தவிர மற்றுமுள்ள ஃபர்லுகளைக் கொண்டு முந்துவது மக்ரூஹ் ஆகும். அவ்விரண்டையும் கொண்டு முந்துவது தொழுகையை பாத்திலாக்கும்.

மெதுவாக ஓதும் தொழுகையில் தன்னுடைய ஃபாத்திஹாவை இமாமுடைய ருகூஃவுக்கு முன் ஓதி முடிக்க முடியுமென்றிருந்தாலும் அவன் ஓதி முடிப்பதை இமாம்

ஓதி முடிப்பதை விடப் பிற்படுத்துவது சுன்னத்து. இது முந்திய இரண்டு ரக்அத்துகளிலாகும். ஆனால் இமாமுடைய ஃபாத்திஹா முடிந்து விட்டதென மஃமூம் அறிவதற்காக இமாம் ஃபாத்திஹாவின் கடைசியைக் கொஞ்சம் இரைந்து ஓதுவதில் குற்றமில்லை.

முன்னால் கூறப்பட்டவற்றில் ஜமாஅத்துடன் தொழுவதினால் உண்டாகும் மக்ரூஹ் எதுவிருக்கிறதோ அதனைச் செய்வதால் தொழுகை கூடிவிடுமென்றிருந்தாலும் ஜமாஅத்தின் பலன் கிடைக்காது. உதாரணமாக இமாமுக்கும் ஜமாஅத்தினருக்கு மிடையில் மூன்று முழ தூரத்தை விட அதிகமாக இருப்பதைப் போலும், ஒரு வரிசைக்கும் மற்றொரு வரிசைக்குமிடையில் அவ்வாறு இருப்பதைப் போலுமாகும். இன்னும் இமாமுடன் தொழும் பொழுது தன்னுடைய தக்பீர்கள், ஓதுதல்கள் ஆகியவற்றை சப்தமிட்டு ஓதுவது போலும். மேலும் லுஹர், அஸர் அல்லாத தொழுகைகளில் இமாமுடைய கிராஅத்தைக் கேட்ட பொழுது சூரத்தை ஓதுவது போலும். அப்படிச் செய்வது மக்ரூஹ் ஆகும்.

இவ்வாறு இன்னும் பல மக்ரூஹ்கள் இருக்கின்றன. ஆனால் ஜமாஅத்துடன் தொழுதாலும், தனியாகத்தொழுதாலும் எல்லா நேரங்களிலும் மக்ரூஹாக இருக்கின்ற ஒன்றை ஜமாஅத்துடன் தொழும் பொழுது செய்தால் ஜமாஅத்தின் பலன் தவறி விடாது. உதாரணமாக: கண்ணை மூடிக் கொண்டு தொழுவது போல்.

இரைந்தோதும் தொழுகையில் இமாமுடைய கிராஅத்தைக் கேட்க முடியாத நேரத்திலும், மெதுவாக ஓதும் எல்லாத் தொழுகைகளிலும் மஃமூம் சூரத்து ஓதுவது சுன்னத்தாகும்.

இமாமுடைய தொழுகை பாத்திலாகிவிட்டது என்பதை அறிந்த மஃமூம் அவரைத் தொடருவதும், தன்னைவிட மோசமாக சூரா ஃபாத்திஹா ஓதுகிறவனைத் தொடருவதும், ஒரு இமாமைத் தொடர்ந்து தொழுது கொண்டிருப்பவனைத் தொடருவதும் , மறதியாக ஐந்தாம் ரக்அத்திற்கு எழுந்திருக்கிறவனைத் தொடருவதும், ஓர் எழுத்தை மற்றோர் எழுத்தாக மாற்றி ஓதுகிறவனையும், அழுத்தி ஓதக் கூடாத இடத்தில் அழுத்தங்கொடுத்து ஓதுகிறவனைத் தொடருவதும், அர்த்தம் மாறுபடுமளவுக்குத் தவறாக ஓதுகிறவனைத் தொடருவதும், ஆண்கள் பெண்களைத் தொடருவதும், உடையின் வெளிப்பகுதியில் நஜீஸ் இருப்பவனைத் தொடருவதும் கூடாது. தவறாக ஓதுவதில் இமாம், மஃமூம் இருவரும் சமமாக இருந்தால் தொடருதல் கூடும்.

ஒரு பள்ளியில் ஒரு ஜமாஅத் நடந்து கொண்டிருக்கும் பொழுது அது முடிவடையும் முன் மற்றொரு ஜமாஅத்தைத் தொடுப்பது ஏற்றத்துக்கு மாற்றமாயிருக்கும். இரண்டு ஜமாஅத்துகளிலும் எவ்விதக் குறையுமில்லாமல் முடிவடைந்தாலும் சரி. ஏனெனில், அவ்வாறு செய்வது குழப்பத்தையும் பொறாமையையும் உண்டாக்கும் என்பதால் அதனைவிடுவது வாஜிபு என்று சிலரால் சொல்லப்பட்டிருக்கிறது.

### மஸ்பூக்காகிய மஃமூமைப் பின்பற்றுதல்

இமாம் ஸலாம் கொடுத்தபின் மஸ்பூக்கான மஃமூம் தன் பெயரில் விதியாயிருக்கும் மீதியை எழுந்து தொழும் பொழுது ஒருவன் அவரைப்பின் பற்றினாலும் அல்லது

மஸ்பூக்குகளிலேயே ஒருவரை மற்றவர்கள் பின்பற்றினாலும் கூடும்; ஆனால், மக்ரூஹ் ஆகும். இவ்விரு நிலைகளில் இரண்டாவதில் மட்டும்தான் மக்ரூஹ் என்று இப்னு ஹஜர் (ரஹ்) அவர்களும் இரண்டிலுமே மக்ரூஹ்தான் என்று ரமலீ (ரஹ்) அவர்களும் கூறியுள்ளார்கள். இமாம் அபூ ஹனீஃபா (ரஹ்) அவர்களிடத்தில் இந்த இரு நிலைகளும் கூடாது. (ஜாயிஸ் இல்லை)

ஜனாஸா தொழுகிறவன், மற்றும் ஸஜ்தா திலாவத், ஸஜ்தா ஷுக்ரு செய்கிறவன் ஆகியோரை அது அல்லாத வேறு தொழுகைகளைத் தொழுகிறவன் தொடருவது கூடாது.

தஸ்பீஹ் தொழுகை தொழுகிற ஒருவனை வேறு தொழுகையென நினைத்து மற்றொருவன் தொடர்ந்தால் இஃதிதாலிலும் நடு இருப்பிலும் அவன் நீண்ட நேரம் இருப்பதால்தொடருபவன் அடுத்த ஃபர்ளுக்குச் சென்று அதில் அவனை எதிர்பார்த்துக் காத்திருப்பான். அச்செயலில் மஃமூம் இமாமை ஒரு ஃபர்லில் நிரப்பமில்லாமல் முந்துவது மக்ரூஹ் என்பதாக இருந்தாலும் சரி.

அர்த்தம் மாறாத அளவில் தவறாக ஓதுகிறவனைத் தொடருவது மக்ரூஹ். இமாமத்திற்குத் தகுதியானவன் என்றெண்ணித் தொடர்ந்து தொழுதபின், தகுதி யற்றவன் எனத் தெரிந்தாலும், உடையின் வெளிப்புறத்தில் மன்னிக்கப்படாத நஜீஸ் இருக்கிறதென்று தெரிந்தாலும் (அவன் இருளில் தொழுதிருந்தாலும் சரி) உடனே தொழுகையை மீள வைப்பது வாஜிப். ஆனால் கண்ணில்லாதவனாக இருந்தால் மீள வைப்பது வாஜிபல்ல. மறைவான நஜீஸ் உள்ளவன் என்பதாகவோ பெருந்தொடக்கு, சிறு தொடக்கு உள்ளவனென்பதாகவோ தெரிந்தால் மீள வைக்க மாட்டான்.

பெண்களுக்குப் பெண்கள் இமாமத் செய்வது கூடுமென்பதும் அது சுன்னத்தென்பதும் முன்னால் கூறப்பட்டுள்ளது. ஆனால், இமாமத் செய்கிறவள் வரிசையின் நடுவில் நிற்க வேண்டும். தனித்து முன்னால் நிற்கக் கூடாது. அப்படிச் செய்வது மக்ரூஹ் ஆகும். இது விஷயம் ஏற்கனவே கூறப்பட்டு விட்டது.

பெரும் பாவம் செய்தவனையும், அதிகமாக வஸ்வாஸ் உள்ளவனையும், கத்னா இல்லாதவனையும் தொடருதல் மக்ரூஹ். எனினும், தொழுகை கூடிவிடும். அதில் ஃதவாபு ثَوَابٌ (நற்கூலி) இல்லை. விபச்சாரத்தில் பிறந்தவனைத் தொடருதல் ஏற்றத்திற்கு மாற்றமாகும். "இமாமத் செய்பவர் நல்லவராக இருந்தாலும், தீயவராக இருந்தாலும் அவருக்குப் பின்னால் நின்று தொழுங்கள்" என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். صَلُّوْا خَلْفَ كُلِّ بَرٍّ وَّفَاجِرٍ என்று ஹதீஸில் அருளப்பட்டுள்ளது.

பருவமடையாத சிறுவன் சிறந்த ஹாஃபிளாகவும், காரியாகவுமிருந்தாலும் அவனைவிட பருவமடைந்தவனை இமாமத்துக்கு முற்படுத்துவதும், முஸாஃபிரைவிட முகீமை முற்படுத்துவதும், தொழும் ஊருக்குரியவனை மற்றவரை விட முற் படுத்துவதும் சிறப்பிற்குரியதாகும். இமாமத் செய்வதற்கு பார்வையுள்ளவனும், பார்வையில்லாதவனும் சமமானவர்களே.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

ஜமாஅத்தினரில் பெரும்பாலோர் திருப்தி கொள்ளாத ஒருவர் அதை அறிந்து கொண்டு இமாமத் செய்வது மக்ரூஹ்.

இமாமத்துக்குத் தகுதியானவர்கள் பலர் இருக்கும் பொழுது, ஃபிக்ஹுச் சட்டங்கள் நன்கு தெரிந்தவரை முற்படுத்த வேண்டும். பிறகு நன்கு கிராஅத் ஓதத் தெரிந்த காரியை, பிறகு ஹாஃபிளாக இருப்பவரை, பிறகு நுணுக்கமானவரை, பிறகு வயது முதிர்ந்தவரை முற்படுத்த வேண்டும்.

எல்லாச் சிறப்புகளிலும் எல்லோரும் சமமாக இருந்தால் சீட்டுப் போட்டு பார்க்க வேண்டும்.

ஒரு பள்ளிக்கு இமாம் நியமிக்கப்பட்டிருந்தால் அதில் அவருடைய அனுமதியின்றி மறு ஜமாஅத்தை நடத்துவது மக்ரூஹ் ஆகும். அது அவருக்கு முன்னாலோ, அல்லது பின்னாலோ, அல்லது அவர் ஜமாஅத் நடத்திக் கொண்டிருக்கும்போதோ இருந்தாலும் சரி.

ஜமாஅத்துக்கும் ஜுமுஆவுக்கும் செல்லாமலிருக்கும் குற்றம் சில காரணங்களால் நீங்கிவிடும். அதாவது: உடையை நனைத்து விடும் மழை, வழியில் சேறும் சகதியும் இருப்பது, கடினமான சூடும் குளிரும் இருப்பது, கடுமையான இருள் சூழ்ந்திருப்பது, கடினமான நோய் ஏற்பட்டிருப்பது, மலம், ஜலம், வாய்வு போன்ற உபாதைகள் உண்டாவது, தொழ இணக்கமான உடை இல்லாமலிருப்பது, வழித்தோழர்கள் இல்லாமலிருப்பது, கொடுக்க முடியாத நேரத்தில் கடன்காரன் வழிமறிப்பான் என்றிருப்பது, வழியில் அநியாயக்காரன் தனக்கோ, தன் முதல் அல்லது உடைமைகளுக்கோ இடையூறு செய்திடுவான் என்று உறுதி கொள்வது, கடினமான பசி, தாகம் உண்டாயிருப்பது, ஏதேனும் ஒரு குழப்பம் உண்டாகும் என்றிருப்பது, துணையில்லாத நோயாளி ஒருவருக்குத் துணையாயிருப்பது, இனபந்துக்களில் உள்ளவருக்கு மரணவேளை நெருங்கியிருப்பது, ஜனாஸாவை விரைவாக அடக்குவதற்கு ஏற்பாடு செய்வது, இவ்விதக்காரணங்களால் ஜமாஅத்திற்கும் ஜுமுஆவுக்கும் செல்லா விட்டால் குற்றம் ஏதும் ஏற்படாது.

இவ்வாறே ஒருவருக்கு வாய் நாற்றம், அக்குள் நாற்றம், குஷ்டம் ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றிருந்து, அதனால் அவரும் வெட்கமடைந்து, ஜமாஅத்தினரும் அவர் ஜமாஅத்துடன் சேர்ந்திருப்பதை திருப்திப்படாமலிருந்தால், இன்னும் இவைபோன்ற காரணங்களாலும் ஜமாஅத்தையும் ஜுமுஆவையும் விடலாம்.

ஜுமுஆவுக்கு ஜமாஅத் ஃபர்லு என்கிற சொற்படி அந்த ஜமாஅத்தை விட்ட குற்றமோ, ஐங்காலத் தொழுகைகளில் ஜமாஅத் சுன்னத்து என்கிற சொற்படி அந்த ஜமாஅத்தை விட்டதால் மக்ரூஹ் என்ற குற்றமோ ஏற்படாது, ஜுமுஆவுக்குச் செல்லாமலிருக்கிற குற்றமும் ஏற்படாது.

பெரு வியாதி உள்ளவர்கள் ஜமாஅத்திற்கு வந்து கொண்டிருந்தால் அவர்களை இழிவாகப் பேசாமல் மிருதுவான வார்த்தைகள் கூறி ஜமாஅத்திற்கு வராமலிருக்கச் செய்ய வேண்டும். அவர் அதனை ஏற்காவிட்டால் நிர்பந்தமாக விலக்கி வைக்க வேண்டும்.

பெரு வியாதிக்காரரைக் கண்டால் ஆறுமுழம் தள்ளி நிற்பதும், அவர்களுக்குத் தெரியாமல்:

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ عَافَانِيْ مِمَّا ابْتَلَاكَ بِهٖ

"எதனைக்கொண்டு உன்னை சோதித்தானோ அதனை விட்டும் எனக்குச் சுகமளித்த அல்லாஹ்விற்கே புகழனைத்தும்" என்று துஆவை ஓதுவதும், அவர்களுக்கு சுகம் கிடைக்க துஆச் செய்வதும் முஸ்தஹப்பு. இதற்காக ஸஜ்தா ஷுக்ரு செய்வது முஸ்தஹப்பு என்றும் கூறப்பட்டுள்ளது. (வெண்குஷ்டம் என்பது தொற்று வியாதி அல்ல. மேலும் பெருவியாதி சில நிலைகளில்தான் தொற்றாக இருக்கும். எனினும் பெருவியாதியென்னும் குஷ்ட நோய்க்குச் சிறந்த மருந்துகள் கிடைக்கிறது. முந்நாளைப் போல் அது ஒரு பயங்கரமான நோய் அல்ல.)

"பெரும் வியாதியுள்ளவனைக் கண்டால், சிங்கத்தைக் கண்டு விரண்டோடுவது போல் விரண்டோடு" என்று ஒரு ஹதீஸிலும் பெரும் வியாதி உள்ளவருடன் ஒரே தட்டையில் நபி (ஸல்) அவர்கள் சாப்பிட்டதாக மற்றொரு ஹதீஸிலும் அறிவிக்கப்பட்டுள்ளது.

மாறுபட்ட கருத்துகளுள்ள இவ்விரு ஹதீஸ்களுக்கும் விளக்கம் கூறும் உலமாக்கள், முந்தியது தவக்குல் (இறைநம்பிக்கை) இல்லாதவர்களுக்கும், இரண்டாவது தவக்குல் உடையவர்களுக்கும் கூறப்பட்டதாகும் என்று விளக்கியுள்ளார்கள்.

பெரு வியாதி உள்ளவர்களுடன் சாப்பிட வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டால் இந்த துஆவை ஓதிக் கொள்ள வேண்டும்:

بِسْمِ اللّٰهِ وَثِقَةً بِاللّٰهِ وَتَوَكُّلًا عَلَيْهِ

வயலில் பூச்சி, விட்டில் , மிருகங்கள் போன்றவை பயிரை நாசப்படுத்துவதாக இருந்து, ஜுமுஆ விதியாகாதவர்களினால் அதனைக் காப்பாற்ற முடியாது என்றிருந்தால் அதனைக் காப்பாற்றுவதற்காக ஜுமுஆ கடமையானவர் ஜுமுஆவை விட்டால் குற்றவாளியாக மாட்டார். இவ்வாறே வெள்ளம் வரும் பொழுது வயலுக்கு அதனைப் பாய்ச்சுவதற்காக ஜுமுஆவை விடலாம்.

மேற்கூறப்பட்ட காரணங்களுக்காக ரமழான் மாதத்தில் நோன்பை விடுவதும் இவ்வாறுதான். காரணமின்றி ஜுமுஆவை விட்டவர் ஒரு தங்கக் காசு அல்லது அரைத் தங்கக்காசு தருமம் செய்வது முஸ்தஹப்பாகும்

## ஜுமுஆவின்பாடம்

ஜுமுஆ தொழுகை ஹிஜ்ரத்துக்கு முன் மக்காவில் கடமையாக்கப்பட்டது. ஆனால், மக்காவில் ஜுமுஆ தொழாமல் இருந்த காரணம், அந்த நேரத்தில் இஸ்லாத்தைத் தழுவியவர்களின் எண்ணிக்கை (ஜுமுஆ நடத்துவதற்குரிய அளவு இல்லாமல்) குறைவாக இருந்ததாலும், தொழுகை முதலிய இஸ்லாமியக் கடமைகளை காஃபிர்களுக்குப் பயந்து மறைமுகமாகச் செய்து வந்ததாலுமாகும். பிறகு நபி (ஸல்) அவர்கள் மதீனாவிற்கு ஹிஜ்ரத் செல்லும்போது மதீனாவிலிருந்து ஒரு மைல்

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

தொலைவிலுள்ள جُوَاثَى ஜவாதை என்னும் சிற்றூரில் அஸ்அது இப்னு ஸுராரா أَسْعَدُ بْنُ زُرَارَةَ என்ற ஸஹாபி அவர்கள் முதல் ஜும்ஆவை நிறுத் தாட்டினார்கள். ஜும்ஆ என்று முதன் முதலில் பெயர் சொல்லியது கஅபு இப்னு லுஅய் (ரலி) كَعْبُ بْنُ لُؤَيٍّ என்று கூறப்பட்டுள்ளது.

எல்லாத் தொழுகைகளிலும் ஜும்ஆ தொழுகை சிறப்பானதென்று எல்லா மத்ஹபுகளுடைய எல்லா இமாம்களும் ஏகோபித்துக் கூறியுள்ளனர்.

ஜும்ஆ நாள், நாட்களுக்கெல்லாம் தலையானது என்றும், அதில் தான் நபி ஆதம் (அலை) அவர்களை அல்லாஹுதஆலா படைத்தான், அதே நாளில்தான் சொர்க்கத்தில் நுழைய வைத்தான், அதே நாளில்தான் சொர்க்கத்தை விட்டு வெளியாக்கினான், அதே நாளில்தான் அவர்களுடைய தவ்பாவை ஏற்றுக் கொண்டான் என்று அறிவிக்கப்பட்டுள்ளது. மற்றோர் அறிவிப்பின் படி, ஜும்ஆ-அரஃபா நாளை விடவும், இரு பெருநாட்களை விடவும் சிறந்தது என்றும் கூறப்பட்டுள்ளது. அன்றைய தினம் நரகவாசிகளின் தண்டனை இலேசாக்கப் படுமென்றும் சொல்லப்பட்டுள்ளது.

ஜும்ஆவைக் கொண்டு சமுதாயத்திற்கு அளப்பரிய நன்மைகள் கிடைக்கக்கூடியதாக இருக்கிறது. முஸ்லிம்கள் அனைவரும் இறைவனை பயந்தவர்களாக, ஒரே இடத்தில் கூடும் வாய்ப்பு ஏற்படுகிறது. அதனால் அவர்களுக்கிடையில் நட்பும் பிணைப்பும் உறுதிப்படும். பாசமும் நேசமும் அதிகமாகும். வன்மமும் கோபமும் நீங்கும். ஒருவர் மற்றவரை சகோதர வாஞ்சையோடும் அன்போடும் பார்த்துக்கொள்வார்கள். அவர்களில் வலியவர் எளியவருக்கு உதவிடுவர். அவ்வாறே சிறியவர் பெரியவரைக் கண்ணியப்படுத்தவும், பெரியவர் சிறியவர் மீது இரக்கம் கொள்ளவும் செய்வர். அவர்கள் எல்லோரும் எல்லாம் வல்ல ஏக இறைவனுக்கு முன்னால் எவ்வித ஆற்றலுமற்ற அடிமைகள் என்ற உணர்வு மேலோங்கியவர்களாக இருப்பர். இன்னும் இதுபோன்ற நல்ல பண்புகளையெல்லாம் வெளிப்படுத்துவதற்கு ஜும்ஆ ஓர் அரிய வாய்ப்பினை உண்டுபண்ணித் தரக்கூடியதாக இருக்கிறது.

ஜும்ஆ தொழுகையாகிறது பருவமடைந்த, உள்ளூரிலிருக்கும் مُقِيْمٌ முகீம் ஆகிய எவ்வித தங்கடமுமில்லாத ஆண்களின் மீது ஃபர்ளு ஐனாக இருக்கும். அவர்களாலேயே ஜும்ஆவும் நடத்தப்படும்.

ஒருவனுக்குக் குடியிருப்பு இல்லாவிட்டாலும், அவ்வூரில் தரிபட்டிருப்பதனால் ஜும்ஆ அவனுக்கு விதியாகும். ஆனால் நாற்பது நபர்களில் ஒருவனாக அவனைக் கணக்கிடக் கூடாது. அவ்வாறே பெண்கள், சிறுவர்கள் ஆகியோர்களால் ஜும்ஆ நிறைவேறாது. ஆனால் அவர்கள் ஜும்ஆ தொழுவதால் லுஹர் நிறைவேறிவிடும். எனினும், ஜும்ஆ தொழுகையாகிறது தனித்த தொழுகையாகும்; அது சுருக்கப்பட்ட

லுஹர் என்று கூறியதும், அதில் வஜ்ஜஹ்த்து ஓதக் கூடாதென்று 'அன்வார்' போன்ற கிதாபில் சொல்லப்பட்டிருப்பதும் சரியல்ல; அது ஷாஃபிஈ இமாம் அவர்களின் புதிய சொற்படி ரத்து செய்யப்பட்டுள்ளது.

ஜும்ஆவுக்கு ஆறு ஷர்த்துகள் (நிபந்தனைகள்) உள்ளன. அவையாவன:

(1) முதலாவது: முந்தின ரகஅத் முழுவதிலும் ஜமாஅத் உண்டாகி இருக்க வேண்டும். இரண்டாம் ரகஅத்தின் ருகூவுக்குப் பின் வந்து சேர்ந்தவன் ஜும்ஆ தொழுகின்றேன் என்று நிய்யத்து வைத்தாலும், அவன் நான்கு ரகஅத்துகள் தொழ வேண்டும். இதைப்பற்றி அரபிகள் பின் வருமாறு ஒரு விடுகதை ஹாஸ்யமாகச் சொல்வார்கள்:

صَلَّى مَالَمْ يَنْوِ - وَنَوَى مَالَمْ يُصَلِّ நிய்யத்துச் செய்யாததைத் தொழுதான்; தொழாததை நிய்யத்து வைத்தான்.

ஒருவன் ஜும்ஆவுடைய இரண்டாவது ரகஅத்தின் ருகூவை அடைந்து கொண்டால், இமாம் ஸலாம் கொடுத்த பின் ஒரு ரகஅத் தொழுவான்; அவனுக்கு ஜும்ஆ நிறைவேறிவிடும். இன்னொருவன் அவனை இவ்விதமே கடைசி நேரம் வரை தொடர்ந்தாலும் அனைவருக்கும் ஜும்ஆ கிடைத்துவிடும்.

(2) இரண்டாவது: சூரத்துல் ஃபாத்திஹாவைத் தவறில்லாமல் ஓதுகின்ற நாற்பது நபர்கள் இருக்க வேண்டும். குறிப்பிட்ட நாற்பது நபர்களில் சிலர் ஃபாத்திஹாவையோ, அல்லது பிஸ்மில்லாஹ்வையோ ஃபர்ளென்று நிர்ணயங்கொள்ளாமல் இருந்தாலும் அவர்களையும் கணக்கில் சேர்க்கப்படும். உளுவில் நிய்யத்து வைப்பது ஃபர்ளென எண்ணாதவனுடைய உளுவைக் கூடுமென்றும், அவன் உளுச் செய்த தண்ணீரை முஸ்தஃமலான (உபயோகிக்கப்பட்ட) தண்ணீரென்றும் தீர்ப்புச் செய்யப் படுவதுபோல்.

(3) மூன்றாவது: நான்கு எல்லைக்குள்ளடங்கிய இடத்தில் இருக்கவேண்டும்.

(4) நான்காவது: இரண்டு ரகஅத்துகளும் ஸலாம் உட்பட லுஹருடைய நேரத்திற்குள் முடிவடைய வேண்டும்.

(5) ஐந்தாவது: இரண்டு குத்பாக்களுக்குப் பிறகு தொழ வேண்டும்.

(6) ஆறாவது: ஓர் ஊரில் இரண்டு ஜும்ஆ நடைபெறாமலிருப்பது. அதாவது: ஊரில் நெருக்கடி, தொலைதூரம், அனைவரையும் சூழ்ந்து கொண்ட குழப்பம் ஆகியவை இல்லாமலிருக்கும்பொழுது இரண்டு ஜும்ஆ நடைபெறுதல் கூடாது. மேற்கூறப்பட்ட நிர்ப்பந்தமின்றி இரண்டு ஜும்ஆ நடைபெற்றால் தக்பீர் தஹ்ரீமாவில் முந்தியதுதான் கூடும். எனினும், சென்னை, கொழும்பு போன்ற பெரும் நகரங்களில் எல்லோரும் ஓரிடத்தில் வந்து தொழுவது சிரமமானால் தேவைக்குத் தகுந்த அளவு பல இடங்களில் ஜும்ஆவை ஏற்படுத்திக் கொள்ளலாம்.

நாற்பது, ஐம்பது அல்லது எழுபது, எண்பது பேர்கள் உள்ள சிற்றூரில் சூரத்துல் ஃபாத்திஹாவைச் சரியாக ஓதத்தெரிந்தவர்கள் நாற்பது பேர்கள் இருப்பார்களோ,

இருக்க மாட்டார்களோ என்று சந்தேகமிருந்தால் ஜும்ஆவுக்குப் பின் லுஹரைத் தொழுவது சிறப்பாகும்.

நாற்பது நபர்களில் பலர் ஃபாத்திஹா தெரியாதவர்கள் என்று உறுதியாகத் தெரிந்தால் லுஹரைத்தான் தொழ வேண்டும். அனைவரும் (அதாவது நாற்பது நபர்களுக்குக் குறையாதவர்கள்) ஃபாத்திஹா தெரிந்தவர்கள் என்பது உறுதியாக இருந்தால் ஜும்ஆ மட்டும்தான் தொழ வேண்டும். லுஹரை மீண்டும் தொழுவது ஹராமாகும். சந்தேகமாக இருந்தால், அந்த சந்தேகத்தில் முன் சொன்ன சட்டம் شُكَّ தெரிந்தவர்கள் (அதாவது முறையோடுஃபாத்திஹா ஓதத் தெரிந்தவர்கள்) நாற்பது நபர்களுக்குக் குறையாதவர்கள் இருப்பார்கள் என்ற எண்ணம் மிகைத்திருந்தால் ஜும்ஆவைத் தொழ வேண்டும். அப்போது லுஹரை மீட்டக் கூடாது. ஏனெனில் மனிதர்களைப் பற்றி தவறான எண்ணம் கொள்வது கூடாது. எனவே அவ்விதமான நேரத்தில் திருப்பித் தொழுவதும் கூடாது.

ஒரு சிற்றூரில் ஜும்ஆ நடத்துவதற்குரிய ஷர்த்துகள் இல்லையானால், அருகிலிருக்கும் ஜும்ஆ உள்ள மற்றோர் ஊரில் மேற்படி ஊருக்கு நேர் எதிரான எல்லையில் நிதானமான சப்தமுடையவன் அவ்வூரின் ஜும்ஆவுடைய இடத்தில் இருந்து சப்தமிட்டால், அதனை நிசப்தமான நேரத்தில் இந்த ஊரிலுள்ள நடுநிலையான கேட்கும் தன்மையுள்ள ஒருவன் கேட்க முடியுமென்றிருந்தால் அச்சிற்றூரார் ஜும்ஆ நடக்கும் இடத்தில் போய் ஜும்ஆ தொழுவது வாஜிபாகும்.

பல சிற்றூர்கள் அடுத்தடுத்து பக்கத்தில் பக்கத்திலிருந்தாலும், வழக்கத்தில் தனித்தனியான ஊர் என்று சொல்லப்படுவதால் ஒவ்வோர் ஊரிலும் ஜும்ஆ நடத்தப்படும்.

எவ்விதக் காரணமுமில்லாமல் ஜும்ஆவை விட்டு லுஹர் தொழுதல் கூடாது. அவ்வாறு தொழுவது கூடாதென்பதை அறியாதவனாக இருந்தால் அது நஃபிலாகி விடும். அறிந்தவனாக இருந்து அவ்வாறு தொழுதால் அது வீணாகி விடும். ஜும்ஆவுடைய இமாம் ஸலாம் கொடுத்ததை திட்டமாகத் தெரிந்து தொழுதால் தவிர.

ஜும்ஆ விதியாகாதவர்களுடைய காரணம் மறைவானதாக வெளியில் சொல்லமுடியாததாக இருந்தால் அவர்கள் லுஹரை ஜமாஅத்துடன் தொழுவது சுன்னத்தாகும். மேலும் அதை மறைவாகத் தொழுவதும் சுன்னத்து.

ஜும்ஆவுக்குப் போக முடியாத, ஆனால் அது நீங்கி விடுமென்று நினைக்கக் கூடிய தலைவலி, காய்ச்சல் போன்ற தங்கடம் ஏற்பட்டுள்ளவர்கள் லுஹரை பிற்படுத்துவதும், பெண்கள், சப்பாணி போன்றவர்கள் லுஹரை விரைவாகத் தொழுவதும் சுன்னத்தாகும்.

ஜும்ஆ விதியான ஊரில், அதனை விட்டுவிட்டு லுஹரைத்தொழுதால் கூடாது. இரண்டு குத்பாக்களிலுள்ள ஃபர்லுகளை மட்டும் ஓதி இரண்டு ரக்அத்துகளைச் சுருக்கமாகத் தொழுவதற்குரிய நேரம் போதாது என்ற அளவுக்கு பிற்படுத்தி பிறகு

ளுஹர் தொழுதால் கூடும். அவர்களுடைய வழக்கம் ஜும்ஆ தொழாமலிருப்பது என்றிருந்தாலும் சரி.

ஜும்ஆ விதியாகாத பெண்கள், சிறுவர்கள், பிரயாணி, இன்னும் தங்கடமுள்ளவர்கள் ஆகியோர் அவர்கள் விருப்பப்படி ளுஹரை அதன் நேரத்திற்குள் தொழுது கொள்ளலாம். அவர்கள் ஜும்ஆ தொழுதாலும் ளுஹர் நிறைவேறும்.

ஒருவனுக்கு இரண்டு ஊர்களில் மனைவிமக்கள் வியாபாரம் ஆகியவை சமமாக இருந்தால், அவன் ஜும்ஆ நேரம் எந்த ஊரிலிருக்கிறானோ, அங்கு அவனைக் கணக்கில் சேர்க்கப்படும். ஓர் ஊரில் அவனுக்குரிய சொத்துக்களும், மற்றோர் ஊரில் மனைவி மக்களும் இருந்தால் பிந்தியதில்தான் அவன் சேர்க்கப்படுவான்.

ஓர் ஊரில் நாற்பது பேர் இல்லை, ஆனால் அவர்கள் ஜும்ஆத் தொழ விரும்புகிறார்கள். அந்த சந்தர்ப்பத்தில் பன்னிரண்டு நபர்கள் இருந்தால் ஜும்ஆ தொழலாம் என்று சொன்ன மாலிக்கி மத்ஹபின் படியும், அதுவும் இல்லாவிட்டால் இமாம் உள்பட நான்கு நபர்கள் இருந்தால் ஜும்ஆ தொழலாம் என்ற ஹனஃபீ மத்ஹபின் படியும் இமாமைப் பின்பற்றி குத்பா ஓதி ஜும்ஆ தொழலாம். ஆனால், அவ்விதம் தொழுத பின் ளுஹரைத் தொழுவது சிறப்பாகும்.

## இரண்டு குத்பாக்களின் ஃபர்ளுகள்

ஜும்ஆவின் ஐந்தாம் ஷர்த்தாகிய இரண்டு குத்பாக்களின் ஃபர்ளுகளின் விவரமாவது; இரண்டு குத்பாக்களுக்கும் எட்டு ஃபர்ளுகள் உண்டு. 1) அல்ஹம்து லில்லாஹ் என்று ஓதுவது 2) ரசூலுல்லாஹி (ஸல்) அவர்களின் மீது சலவாத்துச் சொல்வது 3) வருகை தந்திருப்பவர்களுக்கு தக்வாவைக் கொண்டு வஸிய்யத்துச் செய்வது. இம்மூன்றும் இரண்டு குத்பாக்களிலும் ஃபர்லாகும். ஆக ஃபர்ளுகள் இரண்டிலும் சேர்த்து ஆறு.

7) இரண்டு குத்பாக்களில் ஒன்றில் விளக்கம் பொதிந்த ஒரு சிறு ஆயத்தையாவது ஓதுவது 8) இரண்டாவது குத்பாவில் முஃமின்களுக்கு துஆ செய்தல்.

அரபி மொழியில் அல்ஹம்து லில்லாஹ் என்று கூறுவதும், ஸல்லல்லாஹு அலா முஹம்மத் என்று சொல்வதும், ஊஸீகும் பிதக்வல்லாஹ் என்று கூறுவதும் இரண்டு குத்பாக்களிலும் ஃபர்ளாகும். வரப்பக ஃபகப்பிர் போன்ற ஓர் சிறிய ஆயத்தையாவது இரண்டில் ஏதேனும் ஒரு குத்பாவில் ஓத வேண்டும். பிந்திய குத்பாவில் اَللّٰهُمَّ ارْحَمْنَا என்ற துஆவை ஓதுவது போதும். இவை தவிர மற்றவையெல்லாம் சுன்னத்து, முஸ்தஹப்பு, முஸ்தஹ்ஸின், ஜாயிஸ் என்பவையாகும்.

### இரண்டு குத்பாக்களின் ஷர்த்துகள்:

இரண்டு குத்பாக்களின் ஷர்த்துகள் ஏழு: 1) அவற்றிலுள்ள ஃபர்ளுகளை சுத்தீப் சாஹிபுவைச் சேர்த்து நாற்பது நபர்கள் கேட்பது. 2) ஃபர்ளுகளை மட்டும் அரபி

மொழியில் ஓதுவது. மற்றவற்றை அரபியிலோ அல்லது வேறு மொழிகளில் மொழி பெயர்த்தோ ஓதலாம். அதனால் உபதேசம் நீண்டாலும் தொடர்ச்சி முறியாது. எனினும் அது குத்பாவுடைய செய்திகளைப் பற்றியதாக இருக்க வேண்டும். அவ்வாறு குத்பா சம்பந்தப்பட்டதாக இல்லையெனில் அது கொஞ்சமாக இருந்தால் தங்கடம் செய்யாது. உதாரணமாக: ஹஜ்ரத் உமர் இப்னு கத்தாப் (ரலி) அவர்கள் ஒரு நாள் மதீனாவில் குத்பா ஓதிக் கொண்டிருக்கும்போது, ஷாம் தேசத்தில் முஸ்லிம்களுக்கும் எதிரிகளுக்குமிடையில் யுத்தம் நடந்து கொண்டிருந்தது. அப்பொழுது ஸாரியா வெனும் சஹாபி யுத்தம் நடக்கும் பகுதிக்கு அருகாமையில் உள்ள ஓர் மலையில் மற்ற சஹாபாக்களுடன் டேரா அடித்திருந்தவர்கள், அந்த மலையினின்று கீழே இறங்க நினைத்த நேரம் ஷாமை நோக்கி, "யா ஸாரியத் -அல் ஜபல்- -அல்ஜபல்" ...

يَاسَارِيَةَ الْجَبَلَ الْجَبَلَ

(ஸாரியாவே நீர் மலையிலேயே இருந்து கொள்ளும் கீழே இறங்க வேண்டாம்) என்று குத்பாவின் இடையே இந்த சிறிய வசனத்தை மொழிந்தார்கள். உமர் (ரலி) அவர்களின் அந்த சப்தத்தை அல்லாஹுதஆலா ஸாரியாவுக்கு கேட்கவைத்தான். ஸாரியாவும் அவ்விதமே மலையை விட்டும் இறங்காமல் அந்த யுத்தத்தில் வெற்றி வாகை சூடினார்கள்.

மற்றொரு உதாரணமாகிறது: ஒரு சமயம் ஹஜ்ரத் அலி (ரலி) அவர்கள் கூஃபா என்னும் ஊரில் குத்பா ஓதிக் கொண்டிருந்தபோது, அந்த குத்பாவின் இடையே ஒரு மனிதர் வந்து, ஒருவனுக்குத் தாயும், தகப்பனும், இரு பெண் மக்களும் ஒரு மனைவியும் இருக்க அவன் இறந்து விட்டால் அவனுடைய ஆஸ்தியில் யாருக்கு எவ்வளவு பங்கு கிடைக்கும் என்று கேட்டார். அப்போது அவர்கள் குத்பாவிலேயே வாசக அமைப்பில் எவ்வித முரண்பாடும் ஏற்படாத வகையில் முன்னால் கேட்டவரின் கேள்விக்கு பதில் அளிப்பதுபோல் அந்த குத்பாவை ஓதினார்கள். அதாவது:

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ يَحْكُمُ بِالْحَقِّ قَطْعًا ۔ وَيَجْزِيْ كُلَّ نَفْسٍ بِمَا تَسْعٰى
وَاِلَيْهِ الْمَاٰبُ وَالرُّجْعٰى

என்ற வாசகத்தை ஓதிக் கொண்டிருக்கும் பொழுது இந்தக் கேள்வியைக் கேட்கப்பட்டது. உடனே எவ்வித சுணக்கமுமின்றி முன் ஓதிய பதக்கட்டு முறியா வண்ணம் صَارَ ثُمُنُ الْمَرْاَةِ تُسْعًا என்ற பதத்தைச் சேர்த்துச் சொன்னார்கள். இதனால் குத்பாவின் தொடரும் முறியவில்லை. அதே சமயத்தில் கேள்வி கேட்பவருக்கும் பதில் கிடைத்துவிட்டது.

இந்த மஸ்அலாவின் கருத்தாவது: தாய் தகப்பன் இருவருக்கும் (ஒவ்வொருவருக்கும்) ஆறில் ஒன்றாக நான்கு, நான்கு வீதம் எட்டும், பெண் மக்கள் இருவருக்கும், (ஒவ்வொருவருக்கும்) 8 வீதம் 16-ம் மனைவிக்கு மூன்றும் கொடுக்கப்படும்.

இது அவ்ல் عَوْلٌ மஸ்அலா என்று கூறப்படும். (இதன் விவரத்தை அறிந்தவர் களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளவும்) மொத்தப் பங்குகள் இருபத்தி நான்காக இருந்தது அவ்லின் முறைப்படி இருபத்தி ஏழாக ஆனது. 3) இயன்றவர் நின்று குத்பா ஓதுதல். 4) சிறு தொடக்கு, பெருந்தொடக்கு, நஜீஸ்கள் ஆகியவற்றை விட்டும் துப்புரவாக இருத்தல். 5) மானத்தை மறைத்தல். 6) இரண்டு குத்பாக்களுக்கிடையில் சிறிது நேரம் உட்காருதல். 7) தொடராக ஓதுதல் (ஃகதீப் குத்பாவை புறக்கணித்து விட்டால் தொடர் முறிந்ததாகக் கருதப்படும்)

குத்பா முடிந்தவுடன் தாமதிக்காமல் தொழுகையை ஆரம்பிப்பது ஷர்த்தாகும்.

## ஜுமுஆவுக்கு இரு பாங்குகள் மார்க்கமாக்கப்பட்ட விபரம்

ஜுமுஆவுக்கு ஃகதீப் மின்பரில் உட்கார்ந்த பிறகு சொல்லக்கூடிய பாங்கு மட்டுமே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்திலும், அதற்குப் பிறகு அபூபக்கர் (ரலி), உமர் (ரலி), அவர்கள் காலங்களிலும் மார்க்கமாக இருந்து வந்தது. பின் உஸ்மான் (ரலி) அவர்கள் காலத்தில் மக்கள் தொகை பெருகி விட்டதால் மற்ற நாட்களில் ளுஹருக்கு சொல்வது போல் ஜவால் زَوَالٌ ஆனவுடன் ஒரு பாங்கு சொல்லும் பழக்கத்தை ஏற்படுத்தினார்கள். ஆகவே எல்லா மத்ஹபுகளிலும் ஜுமுஆவுக்கு இரண்டு பாங்குகள் மார்க்கமாக்கப்பட்டுள்ளது.

## இரு குத்பாக்களின் சுன்னத்துகள்

ஃபர்ளுகளை தர்த்தீபாய்ச் செய்வது சுன்னத்தாகும். அதாவது முதலில் அல்ஹம்து ஓதுவது. பிறகு சலாவாத்துக் கூறுவது. பிறகு தக்வாவைக் கொண்டு வஸிய்யத்துச் செய்வது. பிறகு குர்ஆன் ஆயத்தை ஓதுவது. பிறகு துஆச் செய்வது. குர்ஆன் ஓதுவது என்பது காஃப் (قٓ ۚ وَالْقُرْاٰنِ الْمَجِيْدِ) விலிருப்பது முஸ்தஹப்பு.

இரண்டாவது குத்பாவில் ஸஹாபாக்களில் ஆட்சி செலுத்திய கலீஃபாக் களுக்கும், இப்பொழுது ஆட்சியிலுள்ள முஸ்லிம் ஆட்சியாளருக்கும், அவர்களுடைய நீதமான படைகளுக்கும், குடிமக்களுக்கும் வெற்றி வேண்டி துஆச் செய்வது சுன்னத்தாகும். ஒரு தனி ஆட்சியாளரையாவது குறிப்பிட்டு துஆச் செய்வது சுன்னத்தல்ல. எனினும், அவ்விதம் செய்யாவிட்டால் குழப்பம் உண்டாகுமென்பதை பயந்தால் அவ்வாறு ஓதுவது வாஜிப். குழப்பம் வாதென்றிருந்தால் அவரிலுள்ள சிறப்புகளை மட்டும் மிகைப்படுத்தாமல் கூறலாம்.

மக்காவிலும், மதீனாவிலும், ஆலிம்களிருக்கும் நாடுகளிலும் பெயரைக் குறித்து ஓதுவதை எல்லோரும் விரும்புவதால் அவ்வாறு செய்வது அழகானதாகும். எனினும், அவர்களைப் பொய்யான விஷயங்களைக் கொண்டு வர்ணிப்பது கூடாது. ஸஹாபாக்களின் சிறப்புகளைக் கூறுவது குத்பாவின் தொடரை முறிக்காது. ஃகதீப் குத்பாவைப் புறக்கணித்து விட்டாரெனக் கருதினால் அப்பொழுது தொடர் முறிந்து விடும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

ஜு^ம்ஆவில் மக்களனைவரும் பள்ளிக்குள் வந்து கூடியபின், கதீப், அவர்களுக்கு ஸலாம் கூறியவராக உள்ளே நுழைந்து, தஹிய்யத்துல் மஸ்ஜித் தொழாமல் மிஹ்ராபுக்கு இரண்டு முழ தூரத்தில் வலப்புறமிருக்கும் மிம்பரில் ஏறும்போது அவ்விடத்தில் இருப்பவர்களுக்கு மீண்டும் ஒரு தடவை ஸலாம் கூறுவார். பிறகு படிகளில் ஏறி இஸ்திராஹத் உடைய (உட்காரும்) படிக்குக் கீழுள்ள படியில் நின்று மக்களை முன்னோக்கி மூன்றாம் முறையாக ஸலாம் கூறுவார். பிறகு இஸ்திராஹத் படியில் உட்காருவார் (இஸ்திராஹத்: ஓய்வுபெறுதல்) இந்த மூன்று ஸலாம்களும் கதீபுக்கு சுன்னத்தாகும்.

பிறகு முஅத்தின் கதீபுக்கு வலப்புறம் நின்று ஜமாஅத்தினருக்குக் கேட்கும்படி பாங்கு சொல்வார். பாங்கு சொல்லி முடிந்தவுடனே கதீப் இடக்கையினால் ஒரு வாள் அல்லது தடி போன்றதைப் பிடித்து ஊன்றி நின்று, வலமிடம் திரும்பாமல், அழகிய முறையில் சப்தத்தை உயர்த்தி கெஞ்சும் குரலில் குத்பாவை ஓதுவார். அதில் ஃபர்ளானவற்றை மக்களுக்கு நன்றாக கேட்கும்படி ஓதவேண்டும்.

இரண்டு குத்பாக்களுக்கு நடுவில் குல்ஹு^வல்லாஹு^ சூரா ஓதுகின்ற நேரத்தின் அளவு உட்காருவதும், அந்த நேரத்தில் அவரும் ஜமாஅத்தினரும் அந்த (குல்ஹு^வல்லாஹு^) சூராவை ஓதிக் கொள்வதும் சுன்னத்தாகும். குத்பா அழகாகவும், நளினமாகவும், அனைவருக்கும் விளங்குவதாகவும் இருப்பது சுன்னத்து, குத்பாவை இஸ்திஃகுஃபாரைக் கொண்டு முடிப்பது சுன்னத்து.

குத்பா ஓதியவரே இமாமத்துச் செய்வது ஏற்றமாகும். ஜு^ம்ஆ தொழுகையை சிறுபிள்ளை, பிரயாணி ஆகியோரும் தொழ வைக்கலாம். ஆனால், இவ்விதமான இமாமைத் தவிர மீதியுள்ளவர்கள் நாற்பது நபர்கள் இருக்க வேண்டும்.

குத்பா ஓதும் போதோ, அல்லது குத்பாவுக்கும் தொழுகைக்குமிடையிலோ இமாமுக்கு உளூ முறிந்து விட்டால், குத்பாவைக் கேட்டவர்களில் யாரேனும் ஒருவரை விரைவாக, அவருக்குப் பகரமாக்கி தொழுகையை நிறைவேற்றினால் அது கூடும். ஆனால் நேரம் விசாலமாக இருந்தால் அவ்வாறு செய்வது மக்ரூஹ்.

மிம்பர் நான்கு படிகள் முதல் ஒன்பது படிகள் வரை இருக்கலாம் என்று கூறப்பட்டுள்ளது. ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு^ அலைஹிவஸல்லம் அவர்களுடைய காலத்தில் நான்கு படிகள்தான் இருந்தன. அன்னார் (இரண்டு குத்பாக்களுக்கிடையில் உட்காரும்) இஸ்திராஹத்துடைய படிக்கு கீழுள்ள மூன்றாவது படியில் நின்று குத்பா ஓதுபவர்களாயிருந்தார்கள். ஒன்பது படிகளாக இருந்தால் ஏழாவது படியில் நின்று ஓதுவது ஏற்றமாகும். இடம் நெருக்கடியானால் நான்கு படிகளை விட அதிகமாக்குவது மக்ரூஹ் ஆகும். இவ்வாறே "ஹாஷியத்துல் இக்னாஃ" ( حَاشِيَةُ الْإِقْنَاعِ ) என்ற கிரந்தத்தில் எழுதப்பட்டுள்ளது. மிம்பர் விசாலமானதாக இருந்தால் கதீபு அதன் வலப்புறத்தில் நின்று ஓதுவது முஸ்தஹப்பாகும்.

குத்பாவில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு^ அலைஹி வஸல்லம் அவர்கள் மீது ஸலவாத்துச் சொல்லது வாஜிபான (அவசியமான) நேரம் உண்டு. அதாவது:

إِنَّ اللّٰهَ وَمَلٰٓئِكَتَهٗ يُصَلُّوْنَ عَلَى النَّبِيِّ يٰٓاَيُّهَا الَّذِيْنَ
اٰمَنُوْا صَلُّوْا عَلَيْهِ وَسَلِّمُوْا تَسْلِيْمًا

"நிச்சயமாக! அல்லாஹ்வும் அவனின் மலக்குகளும் நபியின் மீது ஸலவாத்துக் கூறுகிறார்கள். ஈமான் கொண்டவர்களே, நீங்களும் அன்னார் மீது சலவாத்தும் சொல்லி சலாமும் கூறுங்கள்" என்ற ஆயத்தை ஓதும் நேரம் அது வாஜிபாகும்.

அதேபோல் ஸலவாத்துக் கூறுவது சுன்னத்தான நேரமும் உண்டு. அதாவது அவர்களின் திருநாமத்தைக் கேட்டாலும், அவர்களின் வர்ணிப்புகளை, சிறப்புப்பெயர்களைக் கேட்டாலும் ஸலவாத்துச் சொல்வது சுன்னத்தாகும். ஆனால் ஸலவாத்தை இரைந்து சொல்வது சுன்னத்தல்ல. எனினும் இரு குத்பாக்களிலும் கதீபு, நபி (ஸல்) அவர்களின் பெயரையோ அல்லது வர்ணிப்புகளையோ சொல்லும் போது ஜமாஅத்தார்கள் மிகைப்படுத்தாமல் சப்தத்தை மெதுவாக உயர்த்திச் சொல்வது சுன்னத்தாகும்.

ஸஹாபாக்கள், நபியவர்களின் மனைவியர்கள், அன்னாரின் சந்ததிகள் பெரியோர்கள் ஆகியோரின் பெயர்களைக் கேட்கும் பொழுது ரலியல்லாஹு அன்ஹு என்றும் ரஹ்மத்துல்லாஹி அலைஹி என்றும் சொல்வது சுன்னத்தை விட்டு தூரமாகாது. இதில் ஆண்பால், பெண்பால், ஒருமை, பன்மை ஆகியவற்றைக் கவனித்துக் கொள்ள வேண்டும்.

குத்பா ஓதிக் கொண்டிருக்கும்போது பள்ளியில் நுழைகிறவன் ஸலாம் சொல்வது மக்ரூஹ். அவ்வாறு ஒருவர் ஸலாம் சொல்லி விட்டால் பதில் சொல்வது வாஜிபாகும். இவ்விடத்தில் ஸலாம் சொல்வது மக்ரூஹ் என்றிருந்தாலும் பதில் சொல்வது வாஜிபில்லை என்று கூறப்பட மாட்டாது. குத்பா ஓதும் பொழுது தும்மியவர் "அல்ஹம்து லில்லாஹ்" என்று கூறுவதும் அதனைக் கேட்டவர் "எர்ஹமு கல்லாஹ்" என்று பதில் கூறுவதும் சுன்னத்து.

குத்பா ஓதும் பொழுது வாய்மூடி, காது தாழ்த்திக் கேட்பது சுன்னத்தாகும். குத்பா ஓதுவது காதில் விழாத தூரத்தில் இருந்தால், அல்லது செவிடனாக இருந்தால் மெதுவாக குர்ஆன் ஓதுவதோ, அல்லது திக்ரு செய்து கொண்டிருப்பதோ ஏற்றமாகும். மற்ற மூன்று மத்ஹபுகளிலும் குத்பாவின் போது பேசுவது ஹராமாகும். ஷாஃபிஈ மத்ஹபில் மக்ரூஹ் என்பதாக இருந்தாலும் அதனைப் பேணுவது அவசியமாகும்.

## குத்பாவைத் துவக்குவதற்கு சற்று முன்னதாகச் சொல்ல வேண்டியது

கதீப் குத்பாவைத் துவக்குவதற்கு சற்று முன்னதாக ஒருவர் ஜமாஅத்தினரை நோக்கி, இமாம் குத்பா ஓதும் பொழுது பேசாமலிருக்கும்படி அறிவிக்கப்பட்டுள்ள ஹதீஸை சொல்லிக் காட்டுவது அழகியதாகும். அதாவது:-

إِذَا قُلْتَ لِصَاحِبِكَ يَوْمَ الْجُمُعَةِ أَنْصِتْ وَالْإِمَامُ يَخْطُبُ فَقَدْ لَغَوْتَ

என்ற ஹதீஸை போதித்துக் காட்டுவது உசிதமாகும்.

குத்பாவின் போது உபமானங்களுக்காகப் பாடல்களைக் கூறுவதும், அரசர்களின் புகழ்ச்சியை, அது உண்மையாக இருந்தாலும் மிகைப்படுத்திக் கூறுவதும் மக்ரூஹ் ஆகும். உமர் (ரலி) அவர்கள் குத்பாவின் போது பாடல்களைக் கூறியதாக சொல்லப்பட்டிருப்பது, அவர்களாக அமைத்த பாடல்களாகும். அதனை ஒப்பு நோக்கி மற்றவர்கள் செய்யக் கூடாது (ஹாஷியா இஃனாஃ)

கதீபுக்கு அருகிலிருப்பதும், அவரைப் பார்ப்பதும் சுன்னத்தாகும். ஒருவர் தான் உட்கார்ந்திருக்கும் இடத்தில் மற்றவரை உட்கார வைத்து விட்டு அவர் வேறு இடத்திற்கு மாறிச் செல்வது மக்ரூஹ். அந்த மற்றவர் தந்தையாக, உஸ்தாதாக இருந்தாலும் சரி. ஆனால், இமாமின் பக்கம் நெருங்குவதற்கும், முன் வரிசையை நிரப்புவதற்கும் அவ்வாறு செய்வது கூடும்.

மனிதர்களை மிதித்துக் கொண்டு செல்வது ஹராம். முந்தின வரிசையில் இடமிருந்தால் அதனை நிரப்புவதற்காக ஓரிரு வரிசைகளைத் தாண்டிக் கொண்டு செல்லலாம். தான் உட்காருவதற்காக மற்றொருவரை அவ்விடத்தை விட்டு எழுப்புவது ஹராம். ஆனால், அவர் இவருடைய விஷயத்தில் குறையாக நடந்திருந்தால் அவ்வாறு செய்வது கூடும்.

ஜும்ஆவுக்குப் போகும் போது தூரம் கூடுதலான வழியில் கண்ணியமான முறையில் காலால் நடந்து போய், பிறகு தூரம் குறைவான வழியில் திரும்பி வருவது சுன்னத்தாகும். இவ்வாறே ஜமாஅத்துக்கும், குர்ஆன் ஓதுவதற்கும் ஹதீஸ் கேட்பதற்கும், திக்ரு செய்வதற்கும், ஜியாரத் செய்வதற்கும், போகும் போதும், வரும் போதும் முன் சொன்ன முறையைக் கடைப்பிடிப்பது சுன்னத்தாகும். ஆனால், நேரம் நெருக்கடியாக இருந்தால் சுன்னத்தல்ல.

## ஜும்ஆ நாளின் குளிப்பு முதலிய சுன்னத்துகள்

ஜும்ஆவை நாடியவருக்கு- மற்றொரு சொற்படி நாடாதவருக்கும்-சுன்னத்தான முறையாவது: கிழக்கு வெளுத்ததிலிருந்து ஜும்ஆவுக்குப் போகும் நேரம் வரை எந்த நேரத்திலாவது குளிக்கலாம். அது சுன்னத்து முஅக்கதாவாகும். ஆனால், ஜும்ஆவுக்கு நெருக்கமான நேரத்தில் குளிப்பது ஏற்றமாகும். ஜும்ஆவுடைய குளிப்பு தவறிவிட்டால் அந்த நிய்யத்தைக் கொண்டு மறுபடி களாச் செய்வதும் சுன்னத்தாகும். தண்ணீரை உபயோகிக்க முடியா விட்டால் அதற்குப் பகரமாக தயம்மும் செய்வது சுன்னத்து. நோன்பாளி ஜும்ஆவுடைய குளிப்பினாலோ, அல்லது மற்றுமுள்ள சுன்னத்தான குளிப்பினாலோ நோன்பு முறிந்து விடுமென்பதை பயந்தால் குளிப்பதை விடுவது அவசியம். ஆனால் ஜும்ஆவில் குளிப்பதை வாஜிப் என்று கருதியவர் சுன்னத்தான நோன்பு வைத்திருந்தால் அக்குளிப்பிற்காக நோன்பை விடுவது கூடும்.

ஜும்ஆவிற்கு கதீப் அல்லாதவர்கள் ஃபஜ்ரு நேரம் முதல் மதியம் வரை செல்லலாம்.

ஜும்ஆவின் குளிப்பு தவறிவிட்டால் அதனைக் களாச் செய்வது சுன்னத்தென்று கூறப்பட்டதாகிறது, அதனை எப்படியும் பேணுதலாகக் குளித்து விட வேண்டுமென்பதற்காகத்தான்.

ஹன்பலீ மத்ஹபில் ஜுமுஆவின் குளிப்பு வாஜிபாகும். அதில் தேய்த்துக் குளிப்பதை விட்டாலும் அதனைக் களாச் செய்வது அந்த மத்ஹபில் அவசியமாகும்.

"ஜுமுஆ நாளன்று குளிப்பது பருவமடைந்த ஒவ்வொரு ஆண், பெண்ணின் மீதும் வாஜிப்" என்றே ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது.

வெள்ளிக்கிழமை கிழக்கு வெளுத்ததிலிருந்து மதியம்வரையிலுள்ள நேரத்தை ஆறு பகுதிகளாகப் பங்கிட்டு முதற் பகுதியில் ஜுமுஆவுக்குப் பள்ளிக்குச் செல்பவர்களுக்கு ஓர் ஒட்டகத்தை குர்பானி கொடுத்த நன்மையும், இரண்டாம் பகுதியில் செல்பவர்களுக்கு ஒரு மாடு கொடுத்த நன்மையும், மூன்றாம் பகுதியில் செல்பவர்களுக்கு ஒரு கொம்பங்கிடாய் கொடுத்த நன்மையும், நான்காம் பகுதியில் செல்பவர்களுக்கு ஒரு கோழி கொடுத்த நன்மையும், ஐந்தாம் பகுதியில் செல்பவர்களுக்கு ஒரு குருவி கொடுத்த நன்மையும், ஆறாம் பகுதியில் செல்பவர்களுக்கு ஒரு முட்டை கொடுத்த நன்மையும் கிடைக்குமென ஹதீஸில் வந்துள்ளது.

ஜுமுஆவுக்குச் செல்வதற்கு அழகிய உடையணிவதும் நோன்பாளியல்லாதவன் கண்ணுக்குத் தோற்றாத மணம் பூசுவதும், தாடியை ஒதுக்கி முகவேலை செய்து மூக்கு, அக்குள் ஆகியவற்றின் முடிகளைக் களைந்து நகம் வெட்டிக் கொள்வதும் சுன்னத்தாகும்.

நகம் வெட்டுகின்ற சுன்னத்தான முறையாவது: முதலில் வலதுகை கலிமா விரலின் நகத்திலிருந்து ஆரம்பித்து சுண்டு விரல்வரை வரிசையாக வெட்டி, பிறகு பெருவிரலின் நகத்தை வெட்டி, அதன் பிறகு இடது கை சுண்டுவிரலிலிருந்து ஆரம்பித்து பெருவிரல் வரை வரிசையாக நகம் எடுக்க வேண்டும். பிறகு வலதுகால் சுண்டு விரலிலிருந்து ஆரம்பித்து வரிசையாக இடது கால் சுண்டு விரலில் முடிக்க வேண்டும்.

தாடியைச் சரிபடுத்தி, சீப்பைக் கொண்டு சீவுவதும், ஒற்றைப் படையாகக் கண்களுக்கு சுருமாக்கோலால் சுருமா இடுவதும், தனக்குத் தகுதியான தலைப்பாகைக் கட்டுவதும், அதைப் பின் பக்கத்தில் தொங்க விடுவதும் சுன்னத்தாகும். வாசனையை முகர்வதால் இச்சை உண்டாகுமாகையால் அதற்காக இஸ்திஃபார் செய்வது நல்லதாகும், அதற்காக சலவாத்துச் சொல்வது சுன்னத்தாகாது.

## கதீப் மிம்பரில் உட்கார்ந்த பிறகு விலக்கப்பட்டவைகள்

கதீப் மிம்பரில் உட்கார்ந்த பிறகு எந்தத் தொழுகையைத் தொழுவதும் மக்ரூஹ் தஹ்ரீம் ஆகும். ஜுமுஆ விதியாகாதவர்களா யிருந்தாலும் சரி, குத்பா ஓதுகின்ற சப்தம் கேட்காவிட்டாலும் சரி, விரைவாக களாச் செய்ய வேண்டிய களா தொழுகையாக இருந்தாலும் சரி, அரசர்களுக்கு துஆ செய்யக் கூடிய நேரத்திலானாலும் சரி பலமான சொற்படி, தொழுவது கூடாது. ஆனால் ஒருவர் தொழ ஆரம்பித்த பின் குத்பா துவக்கப்பட்டு விட்டால் விரைவாகத் தொழுது முடிப்பது வாஜிபாகும்.

குத்பா ஓதும் பொழுது ஒருவர் வந்தால் அவர் தஹிய்யத்துல் மஸ்ஜித் மட்டும் தொழுவது சுன்னத்து; அதனை விரைவாக முடிப்பது வாஜிப். குத்பாவின் கடைசியில் ஒருவர் வந்தால் தஹிய்யத் தொழாமலும் உட்காராமலும் நின்று கொண்டே சற்று நேரம் எதிர்பார்த்து இமாமுடன் சேர்ந்து தொழுவார். இதனால் தஹிய்யத் தொழுகையின் பலனும் தக்பீர் தஹ்ரீமாவில் சேர்ந்த பலனும் கிடைத்து விடும். ஒருவர் இச்சட்டத்தைப் புரியாமல் தஹிய்யத் தொழ ஆரம்பித்து விட்டால், அதனை கதீப் பார்த்து விட்டால், அவனுக்குத் தக்பீர் தஹ்ரீமா கிடைப்பதற்காக குத்பாவை ஓரளவு நீளப்படுத்துவது சுன்னத்தென்றும், முஸ்தஹப்பென்றும் கூறப்பட்டுள்ளது. ஜும்ஆவுடைய முன் சுன்னத்தைத் தொழாதவனாக இருந்தால் அத்துடனேயே தஹிய்யத்தை நிய்யத்துச் செய்வது ஏற்றம்.

குத்பா ஓதும் போது ஜமாஅத்தினர் ஒட்டியாணம் கட்டியவர்களாக ( إِحْتِبَاءٌ செய்தவர்களாக அதாவது கால்களை நட்டிவைத்து ஒரு பட்டியைக் கொண்டு முதுகையும் முழங்கால்களையும் சுற்றிக் கட்டிக் கொண்டு) இருப்பதும், ரமலான் மாதம் கடைசி ஜும்ஆவிற்குப் பிறகு பாதுகாப்பிற்காக அஸ்மாக்கள், துஆக்கள் எழுதுவதும் மக்ரூஹ் ஆகும்.

ஈமான் பாதுகாப்பிற்காக ஜும்ஆ தொழுதபின் பின்வரும் இரண்டு பாடல்களையும் ஐந்து தடவை மன நெகிழ்வுடன் படிப்பது நல்லதென்று அப்துல் வஹ்ஹாப் ஷஃரானி (ரஹ்) அவர்களின் மூலமாக பாஜூரி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

إِلٰهِيْ لَسْتُ لِلْفِرْدَوْسِ اَهْلًا ؛
وَلَآ اَقْوٰى عَلٰى نَارِ الْجَحِيْمِ ؛
فَهَبْ لِيْ تَوْبَةً وَّاغْفِرْ ذُنُوْبِيْ ؛
فَاِنَّكَ غَافِرُ الذَّنْبِ الْعَظِيْمِ ؛

என்னுடைய இரட்சகனே! நான் ஃபிர்தவ்ஸ் என்னும் சொர்க்கத்திற்குத் தகுதியானவனல்லன்; நரக நெருப்பின் மீது நான் சக்தி பெறவும் மாட்டேன்.

எனவே, எனக்கு தவ்பாச் செய்யும் தன்மையை வழங்கி, என்னுடைய பாவங்களை மன்னித்திடுவாயாக! நிச்சயமாக நீ மிகப்பெரும் பாவத்தையும் மன்னிக்கிறவனாக இருக்கிறாய்.

- வெள்ளிக்கிழமை இரவிலும், பகலிலும் சூரத்துல் கஹ்ஃபு (سُوْرَةُ الْكَهْفِ)

ஓதுவதும், அதிகமாக ஸலவாத்து ஓதுவதும், அதிகம் துஆ கேட்பதும், ஜும்ஆ தொழுது ஸலாம் கொடுத்தவுடன் கால் மடிப்பை எடுக்க முன்னும், ஏதும் பேச்சு பேச முன்னும் அப்படியே உட்கார்ந்தவாறு, சூரத்துல் ஃபாத்திஹா, குல்ஹுவல்லாஹு, குல்அஊது பிரப்பில் ஃபலக், குல் அஊது பிரப்பின்னாஸ் ஆகியவற்றை ஏழுதடவைகள் ஓதுவதும் சுன்னத்தாகும்.

குத்பாவுடைய பாங்குக்குப்பின் ஜும்ஆ தொழுது முடிக்கும்வரை வியாபாரம் தொழில் ஆகியவை செய்வது ஹராமாகும். மேலும், அன்று ஜவால் ஆனபின் குத்பாவுடைய பாங்குக்கு முன் வியாபாரம் தொழில் செய்வது மக்ரூஹ்.

### வெள்ளிக்கிழமையில் கிழக்கு வெளுத்த பின் பிரயாணம் செல்வது

வெள்ளிக்கிழமை கிழக்கு வெளுத்த பிறகு ஆகுமான பிரயாணம் செல்வதும் ஹராம். ஆனால் இடைவழியில் ஜும்ஆ கிடைக்குமென்ற நம்பிக்கையிருந்தால், அல்லது வழித்தோழர்கள் அவனை விட்டுச் சென்று அதனால் சிரமம் ஏற்பட்டு விடுமென்றிருந்தால் செல்வது ஹராமல்ல. இவ்வாறு பிரயாணம் செய்வது வாஜிபான காரியத்திற்காக இருந்தாலும் சரி, அது ஹராமாகும்.

வெள்ளிக்கிழமை இரவில் பிரயாணம் செல்வதும் மக்ரூஹ். மேற்சொல்லப்பட்ட பிரயாணம் செய்பவர் ஜும்ஆ விதியாகாதவராக இருந்தாலும் சரி.

### வெள்ளிக்கிழமையில் துஆ ஏற்றுக்கொள்ளப்படக்கூடிய நேரம்

வெள்ளிக்கிழமையில் துஆ ஏற்றுக் கொள்ளப்படுகிற ஒரு நேரம் உண்டு என ஹதீஸில் வந்துள்ளது. அது எந்த நேரமெனக் கூறுவதில் இமாம்களுக்கிடையே ஐம்பது விதமான கருத்துகள் உள்ளன. "ஹாஷியா இக்னாஃ" என்ற நூலில் எழுதப்பட்டுள்ள மிகப் பொருத்தமான நேரமாகிறது, கதீப் மின்பரில் ஏறிய நேரத்திலிருந்து தொழுது முடிக்கும் நேரம் வரையிலாயிருக்கும். ஆகையால், கதீப் குத்பாவில் ஓதுகின்ற துஆவுக்கு உள்ளச்சத்துடன், மெதுவாக, கைகளை உயர்த்தாமல் ஆமீன் கூறிக் கொள்ள வேண்டும்.

## ஆடைகள் பற்றிய விபரம்

ஆடைகள் பற்றி இதற்கு முன் தொழுகையுடைய பாடத்தில் மானத்தை மறைத்தல் என்பதில் சில விஷயங்கள் கூறப்பட்டுள்ளன. இங்கு அது சம்பந்தமாக வேறு சில

சட்டங்களைக் கூறுகிறோம்.

தொழுகையல்லாத நேரத்தில் ஈரமில்லாத பொழுது நஜீஸ்பட்டிருக்கும் உடையை அணியலாம். பருவவயதடைந்த ஆண்களுக்கு பட்டாடை ஹராம் என்பதில் அதனை அணிவது, உபயோகிப்பது, போர்த்திக் கொள்வது, விரிப்பாக்குவது, மானத்தை மறைப்பதற்கு உபயோகிப்பது அனைத்தும் ஹராமாகும்.

பட்டு அணிந்து கொண்டிருக்கும் தன் மனைவியுடன் உடலுறவு கொள்ளும் பொழுது, அல்லது அவளுடன் சுகம் பாராட்டும் பொழுது அதைக் கொண்டு அவள் அவனைப் போர்த்தினால் அது ஹராமல்ல. பட்டு மெத்தை, தலையணை அனைத்திற்கும் இதே சட்டந்தான்.

பட்டு விரிப்பின் மீது பருத்தித் துணியை விரித்து அது மிக மெல்லியதாக இருந்தாலும் அதன் மீது உட்காரலாம்.

சொறி, சிரங்கு, கடுமையான சூடு, குளிர், ஆகியவற்றின் இடையூறு, பேன், மூட்டைப்பூச்சி, செள்ளு ஆகியவற்றின் தொந்தரவு ஆகியவை பட்டுத் துணியினால் போகுமென்றிருந்தால் அதனை உபயோகிப்பது ஆகும். இவ்வாறே பட்டும், பருத்தியும் சமமாக இருக்கின்ற ஆடையில் பட்டு அதிகம் இருப்பதாகத் தோற்றமளித்தாலும் அல்லது சமமாக இருப்பதில் சந்தேகமிருந்தாலும் அந்த உடையை உபயோகிப்பது கூடும்.

பெண்களும் பட்டுத்துணியால் திரை போடுவதும், அதனால் சுவர்களை அலங்கரிப்பதும் ஹராமாகும். ஆண்கள் தங்களுக்கு ஹலாலான துணிகளின் ஓரக்கரையை பட்டினால் நெய்து அணியலாம். அது நான்கு விரல்களின் அகலத்தை விட அதிகமாக இருந்தாலும் சரி. தலையணை, ஜுப்பா போன்றவற்றில் உட்பகுதிக்கும் வெளிப் பகுதிக்குமிடையில்-நடுவில்-மிருதுவாக இருப்பதற்காக பட்டுத் துணியைத் திணித்து வைத்து உபயோகிக்கலாம். உட்பகுதியில் வைத்துத் தைப்பது கூடாது.

ஆண்கள் பட்டு நூலால் தையல் வேலை செய்யலாம்; தஸ்பீஹ் மணிகளையும் கோக்கலாம். குங்கும நிறம் கொண்ட சந்திர காவி நிறமும், குசும்பாவெனும் வெண்மைகலந்த சிவப்பு நிறமும் ஆண்கள் அணிவது ஹராம். இவற்றில் கருத்து வேற்றுமை உள்ளதைக் கவனிக்கக் கூடாது.

உடையில் மிக ஏற்றமானது-பெருநாளல்லாத நேரங்களில்- வெள்ளை நிறமாகும். பெருநாளில் மிகவும் ஏற்றமானது விலை உயர்ந்த ஆடையாகும். அது எந்த நிறத்தையுடையதாயினும் சரியே. வெள்ளைக்கு அடுத்தது பச்சை நிறமாகும். சொர்க்கத்தின் உடை பச்சை நிறமுள்ளதாகும்.

ஆண்களும், பெண்களும், அழுக்கும், நாற்றமும் இல்லாத ஆடைகளை அணிவதினால் கவலை நீங்கி, அறிவு வளர்ச்சியும் ஏற்படுமென்று இமாம் ஷாஃபியீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

காற் சட்டையோ, கைலியோ அணிவதில் சுன்னத்தாவது: காலின் குதிரை முகத்தில் பாதி வரை தாழ்த்திக்கட்டுவதாயிருக்கும்; பரண்டை முளி வரை (கணைக்கால்வரை) தாழ்த்துவதில் சுன்னத்து விடுபட்டு விடும். சட்டைக்கையை மணிக்கட்டு வரை தாழ்த்திக் கொள்ளலாம். தலைப்பாகையின் பின்புறத் தொங்கலை முதுகின் நடுவில் தொங்கவிடுவது, வலப்புறத்தில் தொங்க விடுவதை விடச் சிறந்ததாகும். இடப்பக்கம் தொங்க விடுவதற்கு ஆதாரம் இல்லை. தொங்கலை ஒரு முழம் வரை விடலாம். ஒரு முழ அளவை விட அதிகப்படுத்துவது மக்ருஹ். பெருமையைக் கருதி அவ்வாறு செய்தால் அது ஹராமாகும்.

தலைப்பாகையின் நீள அகலத்தைப் பற்றி உறுதியான ஹதீஸ் வரவில்லை. எனவே, அணிகிறவனுக்குத் தகுதியான வழக்கத்தைக் கவனித்துக் கொள்ள வேண்டும்.

தலைப்பாகையின் நீள அகலத்தைப் பற்றி அன்னை ஆயிஷா (ரலி) அவர்களைத் தொட்டும் வந்ததாகக் கூறப்படும் ஹதீதுக்கு ஆதாரம் இல்லை. பொதுவாகத் தலைப்பாகை அணிவது மிகச் சிறப்பாகும். ஜும்ஆ நாளில் தலைப்பாகை அணிபவர்களின் மீது அல்லாஹ்வும், அவன் மலக்குகளும் சலவாத்துச் சொல்வார்கள்" என்றும், "தலைப்பாகை அணிந்து கொண்டு இரண்டு ரக்அத் தொழுவது, தலைப் பாகை அணியாமல் எழுபது ரக்அத் தொழுவதை விடச் சிறந்தது" என்றும் ஹதீஹில் வந்துள்ளது. ஆடைகளை அணியும் பொழுது வலப்புறத்தையும், கழற்றுவதில் இடப்புறத்தையும் முற்படுத்துவது சுன்னத்து.

மார்க்கத்தில் கூறப்பட்ட பலன் ஏதும் இல்லாமல் சொரசொரப்பான துணியை அணிவது மக்ருஹ். புலித்தோலை அணிவதும் அதில் உட்காருவதும் ஹராம்.

ஆண்கள் வெள்ளியினால் ஒரு மோதிரம் அணிந்து கொள்வது சுன்னத்து. அதனை வலக்கரத்தில் அணிவது ஏற்றம். அதனைச் சுண்டு விரலில் அணிவது மற்றொரு சுன்னத்து. அதனை வலக்கை சுண்டு விரலில் அணிவது ஏற்றமாகும்.

மோதிரங்களில் வலுப்பமான அஸ்மாக்களை எழுதிக்கொள்வதும் அவற்றின் கிண்ணங்களில் நக்ஷா (சித்திர) வேலைப்பாடுகள் செய்வதும் மக்ருஹ் அல்ல. ஃபைரோஜ் கல் வைத்த மோதிரம் அணிவது நல்லது. அந்தக் கை பரக்கத்தை விட்டும் நீங்காது என்றும், அகீக் என்னும் கல்லினால் அதிகமான பலன்களுண்டு என்றும் கூறப்பட்டுள்ளது.

ஒரு கையில் ஒரு மோதிரத்தை விட அதிகப்படுத்துவது கூடாது. மேற்கூறிய முறையில் மோதிரம் அணிவதில் உறுதியான ஒரு நிலை உண்டாகும் என்னும் தத்துவம் அடங்கியிருப்பதுடன் அல்லாஹுத்தஆலா, உயர்ந்திருப்பதை தாழ்மையாகவும், தாழ்ந்திருப்பதை உயர்த்தியாகவும் ஆக்கிடுவான் என்னும் தத்துவமும் அடங்கியிருக்கிறது. அதாவது: ஐந்து விரல்களில் சிறியது சுண்டு விரல். எனவேதான் அதில் மோதிரத்தை அணிவது கொண்டு அதனைப் பெருமைப்படுத்த வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. "பணிந்தவர் பதியாள்வர்" என்பது முதுமொழியாகும். பெண்கள் இரண்டுக்கு மேற்பட்ட கால்தண்டைகளை அணிவது மக்ருஹ் ஆகும்.

மோதிரத்தின் அளவு ஒரு கழஞ்சு இருக்கலாம். அதாவது, உலக வழக்கில் அது

கூடப்பானது என்று சொல்லாத அளவுக்கு இருக்க வேண்டும். இரும்பு, செம்பு, ஈயம் ஆகிய உலோகங்களாலும் மோதிரம் அணியலாம். ஆனால், இரும்பு மோதிரம் அணியக்கூடாது என்பதற்கு ஆதாரமாக ஒரு பலவீனமான ஹதீஸும் வந்திருக்கிறது.

வெள்ளி மோதிரத்தில் கல் பதிக்கும் கிண்ணத்தின் ஓரங்களில் தங்கத்தை ஒரு கடுகளவேனும் சேர்த்து அலங்கரித்து அணிவது ஆண்பிள்ளைக்கு ஹராமாகும்.

புதிய மாப்பிள்ளை ராஜாவைப் போன்றிருப்பதால் தங்கம், வெள்ளி ஆபரணங்கள் அணியலாம் என்றும், திருமணம் முடிந்து ஏழு தினங்கள் வரை ஜும்ஆவுக்கும், ஜமாஅத்திற்கும் போக வேண்டிய அவசியமில்லை என்றும், அவ்வாறு ஹதீஸில் வந்துள்ளது என்றும் சிலர் கூறுவது மிகப் பெரிய தவறாகும்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தங்களின் அருமைத் தோழர் ஹஜ்ரத் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களுடன் மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்ற பொழுது மூன்று நாட்கள் "ஸவ்ர்" என்னும் குகையில் மறைந்திருந்து நான்காவது நாள் அக்குகையை விட்டும் வெளியேறி மதீனாவை நோக்கி தங்களின் பயணத்தைத் துவக்கலானார்கள். அப்பொழுது முன்னரே ஏற்பாடு செய்திருந்தவாறு பெருமானார் அவர்கள் விலை கொடுத்து வாங்கிய "கஸ்வா" வெனும் ஒட்டகத்தையும் மற்றொரு ஒட்டகத்தையும் அவர்களின் முன் கொண்டு வந்து நிறுத்தினார் "அரீகத்" எனும் முஸ்லிம் அல்லாத ஒட்டகை ஓட்டி ஒருவர். யத்ரிபுக்குச் செல்லும் வழிகளை எல்லாம் அவர் நன்கு அறிந்தவராக இருந்ததால் அவரைத் தங்களுடன் லந்து வழி காண்பிக்குமாறு ஏற்பாடு செய்திருந்தனர் ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்கள். அண்ணல் அவர்கள் "கஸ்வா"வெனும் தங்கள் ஒட்டகத்தின் மீதும் அபூபக்கர் (ரலி) அவர்களும் அரீகத்தும் மற்றொரு ஒட்டகத்தின் மீதும் ஏறித் தங்களின் பயணத்தைத் தொடர்ந்தனர். ஒட்டகங்களும் பாலைவன மணலில் விரைந்து சென்றன. கொடிய வெய்யிலில் தொடர்ந்து பயணம் செய்ததன் காரணமாக அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மிகவும் களைப்புற்று சோர்வடைந்திருந்தார்கள். அந்த நேரத்தில் கொஞ்சம் தொலைவில் காணப்பட்ட நிழல் தரும் மரத்தை நோக்கி அண்ணல் (ஸல்) அவர்களை அபூபக்கர் (ரலி) அவர்கள் அழைத்துச் சென்று அந்த மரத்தின் அடியில் தரையைப் பெருக்கித் தூய்மையாக்கி தம் போர்வையை விரித்து அதன்மீது அண்ணல் (ஸல்) அவர்களைப் படுக்க வைத்தார்கள். அந்த மரத்தடியில் ஓய்வெடுத்துக் களைப்பு தீர்ந்தபின் வெய்யில் தணிந்ததும் மீண்டும் தங்கள் பயணத்தைத் துவக்கினர்.

கொஞ்சம் தூரம் சென்றதும் சிறிது தொலையில் ஒருவர் குதிரையில் அவர்களைப் பின் தொடர்ந்து பாய்ந்து வருவது அவர்களுக்கு நன்கு தெரிந்தது. ஒட்டகைகளை விரைவாக ஓட்டியும் குதிரையில் வருபவர் தங்களை நெருங்கி விட்டார், அவர் 'சுராகா' தான் என்பதையும் அவர்கள் அறிந்து கொண்டார்கள். அப்பொழுது அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள் 'நாம் இனி என்ன செய்வோம்' என்று ஏங்கினர். 'இறைவன் நம்மைக் காப்பாற்றுவான்' என்று கூறிவிட்டு அண்ணல் அவர்கள் ஒட்டகத்திலிருந்தபடியே தங்களின் இரு கைகளையும் உயர்த்தி இறைவா, 'எங்களைக்காப்பாற்றுவாயாக' என்று இறைஞ்சி விட்டுத் திரும்பிப்பார்த்தார்கள். 'சுராகா' ஏறி வந்த குதிரை கால் தடுமாறிக் கீழே விழுந்ததினால் சுராகா உயரமாகத் தூக்கி எறியப்பட்டு மணலில் விழுந்தார். எனினும் உயிருடனோ, கொலை செய்தோ முஹம்மதைக் கொண்டு வந்தால் நூறு

ஒட்டகங்கள் தரப்படுமென்று குறைஷிகள் விடுத்த அறிவிப்பின்படி தனக்கு நூறு ஒட்டகங்கள் கிடைக்குமென்ற ஆசையின் மேலீட்டால் மீண்டும் குதிரையின் மீதேறி அதனை விரட்டினார். குதிரை சில கெஜ தூரம் சென்றதும் மறுபடியும் தடுமாறிக் கீழே விழுந்தது. சுராகாவும் கீழே தூக்கி எறியப்பட்டு புழுதியிலே புரண்டார். எனினும் அவர் மனம் தளர்ந்தாரில்லை. மூன்றாவது முறையும் குதிரையின் மீதேறி அண்ணல் அவர்களை நெருங்கி அவர்களின் அருமைத் திருமேனியில் அம்பைச் செலுத்துவதற்கு வில்லை வளைத்தார். அந்தோ அவருடைய குதிரையின் கால்கள் முழங்கால்கள்வரை மணலில் புதைந்து அவரும் கீழே புரட்டப்பட்டார். இப்பொழுது சுராக்காவுக்கு சொல்லொணாத் துயரமும், நடுக்கமும் ஏற்படலாயின. ஒரு மாபெரும் வலிமை தன் நோக்கம் ஈடேறவிடாமல் தடுப்பதை அவர் உணர்ந்தார். அந்த வலிமையை எதிர்த்துத் தாம் யாதொன்றும் செய்யமுடியாதென்ற முடிவுக்கு வந்தார். 'என் பெயர் சுராகா. நான் உங்களுக்கு எவ்விதத் தீங்கும் இழைக்க மாட்டேன் என்று இறைவன் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன். என்னைக் காப்பாற்றுங்கள். என்னைக் காப்பாற்றுங்கள்' என்று அலறினார் சுராகா. அவரின் அபயக் குரலைக் கேட்டு அண்ணல் (ஸல்) அவர்களும் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களும் தங்கள் ஒட்டகங்களை நிறுத்தினர். சுராகாவும் அவர்களை நெருங்கி வந்தார். தாம் செய்த தவற்றை மன்னித்தருளுமாறும், அவர்கள் (அண்ணல் அவர்கள்) உன்னத நிலையை எய்தியக்கால் தனக்கு யாதொரு இன்னலும் இழைப்பதில்லை என்று அபயக் கடிதம் எழுதித் தருமாறும் அண்ணல் அவர்களை வேண்டினார். இறைவனிடமிருந்து வஹீவந்தால் அதனைக் குறித்து வைத்துக் கொள்ளச் செய்வதற்காக தோல், மை, எழுதுகோல் ஆகியவைகள் எல்லாம் இப்பிரயாணத்தின் போது அண்ணல் அவர்களிடம் தயாராக இருந்தன. எனவே அவர் வேண்டிய வண்ணம் எழுதிக் கொடுக்கப்பட்டது.

அப்பொழுது அண்ணல் அவர்கள் சுராகாவைப் பார்த்து நீர் நூறு ஒட்டகங்களுக்கு ஆசைப்பட்டீர். ஆனால் பின் ஒரு நாள் நீர் பாரசீக மன்னர் அணிந்திருக்கும் பொற்காப்புகளை அணியும் பேறு பெறுவீர் என்று வாழ்த்தினர். சுராகாவும் மகிழ்ச்சியோடு மக்கா திரும்பினார்.

பின்பு உமர் (ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தில் பாரசீக நாடு வெற்றி கொள்ளப்பட்டு அந்த மன்னன் அணிந்திருந்த பொற்கடயங்கள் உள்பட எல்லாப் பொருள்களும் கலீபா அவர்கள் முன் கொண்டு வந்து குவிக்கப்பட்டன. அப்பொழுது அவ்விடத்தில் நின்று கொண்டிருந்த பரம ஏழை சஹாபியான சுராகாவைத் தம் அருகில் அழைத்து அந்த பொற்கடயங்களை அவர் கைகளில் அணிவித்து ' நீர் ஒரு காலத்தில் நூறு ஒட்டகங்களுக்காக நபிகள் நாயகம் அவர்களைப் பிடித்துக் கொடுக்க முன் வந்தீர். இப்பொழுது அவைகளை விடப் பன்மடங்கு விலைமதிப்புள்ள (பொற்கடயங்களாகிய) ஆபரணங்களை உமக்கு நான் வெகுமதியாக்குகிறேன்' என்று கூறினார்கள். அவர் கைகளில் அந்தத் தங்க ஆபரணங்களை அணிவித்து (அது தங்கமாக இருப்பதால்) அவற்றை உடனே கழற்றச் சொல்லி விட்டார்கள். இந்தச் செயல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் முன்னறிவிப்பை உண்மைப்படுத்து வதற்காக செய்த செயலாக இருப்பதால் தங்க நகைகள் அணிவதற்கு இதை ஒரு முன்மாதிரியாக எடுத்துக் கொள்ளக் கூடாது.

குர்ஆனுக்கு பட்டினால் உறை போடுவது ஆகும். அதுபோல் பணம் காசு வைப்பதற்குரிய வட்டுவங்களைப் பட்டினால் செய்வதும் ஆகும். அது ஆண்களுக்காக இருந்தாலும் சரி. ஆனால், தஸ்பீஹ் மணிக்குப் பட்டினால் குஞ்சம் போடுவது கூடாது. கஃபா அல்லாத எந்த இடத்தையும் பட்டல்லாத மற்ற துணிகளால் அலங்கரிப்பது மக்ரூஹ் ஆகும். அது பெண்களுக்காக இருந்தாலும் சரி. ஆனால் பல்லியின் எச்சம் போல் உள்ள அருவருப்பை விட்டும் பாதுகாப்பதற்காக பட்டல்லாத துணியைக் கொண்டு மேற்கட்டி கட்டலாம். அது மக்ரூஹ் அல்ல; மாறாக அது அவசியமாகும். ஆனால், பட்டுத் துணியால் மேற்கட்டி கட்டுவது ஆண் பெண் அனைவருக்கும் ஹராமாகும்.

நின்று கொண்டு தலைப்பாகை கட்ட வேண்டுமென்றும் உட்கார்ந்து கொண்டு கைலி காற்சட்டை போன்றவற்றை அணிய வேண்டுமென்றும் ஹதீஸில் வந்துள்ளது. ஒரு காலுக்கு மட்டும் காலணி அணிந்து நடப்பதும், நின்ற நிலையில் காலணியைத் தொடுவதும், காலணிகளுக்கு வெண்டையம் (சலங்கை) கட்டுவதும் மக்ரூஹ் ஆகும்.

ஏதேனும் ஓரிடத்தில் இருந்து அல்லாஹ்வை திக்ரு செய்யாமல் அவ்விடத்தை விட்டும் பிரிவது மக்ரூஹ் ஆகும்.

## நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மீது ஸலவாத்துச் சொல்லும் வரிசை

ஜும்ஆ தினத்தில் பலன்தரும் சுன்னத்தான அமல்களில் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் மீது சலவாத்து சொல்வதுபோல் வேறு எந்த சுன்னத்தான காரியமும் இல்லை. ஆகையால் அது சம்பந்தமான சில விஷயங்களைக் கூறுகிறோம்.

إِنَّ اللَّهَ وَمَلَٰئِكَتَهُۥ يُصَلُّونَ عَلَى النَّبِيِّ ۚ يَٰٓأَيُّهَا الَّذِينَ
ءَامَنُوا صَلُّوا عَلَيْهِ وَسَلِّمُوا تَسْلِيمًا (33:56)

"நிச்சயமாக அல்லாஹ்வும் அவனுடைய மலக்குகளும் நபியின் மீது சலவாத்துச் சொல்லுகின்றனர். ஈமான் கொண்டவர்களே! அவரின் மீது நீங்களும் சலவாத்துச் சொல்வதுடன் ஸலாமும் கூறிக் கொண்டு இருங்கள்" என்று அல்லாஹுத்த ஆலா குர்ஆனில் கூறுகிறான்.

நபியவர்களின் மீது சலவாத்துச் சொல்லுகின்ற இந்த அமலை அடியார்களுக்கு ஏவி இருப்பதுடன் தானும் தனது மலக்குகளும் அந்த சலவாத்தைச் சொல்வதாகவும் அல்லாஹுத்ஆலா கூறியுள்ளான். மற்றெல்லா அமல்களிலும் அதைச் செய்யும்படி அடியார்களை ஏவுவதன்றியே அதில் தானும் கூட்டாக இருப்பதாகச் சொன்னதாகத் தெரியவில்லை.

மேற்கூறப்பட்ட ஆயத்தில் முதலாவதாக உறுதியைக் கூறுகின்ற எழுத்தை உபயோகித்து அந்தச் செயலில் தன்னை முற்படுத்தி, இரண்டாவதாக மலக்குகளையும்

சேர்த்து, மூன்றாவதாக முஃமின்களை அழைத்து பிறகு சலவாத்தையும், அத்துடன் ஸலாமையும் கூறுமாறு கட்டளையிட்டிருப்பதை நோட்டமிட்டுப் பார்த்தால் அது மிக மகத்தான அமல் என்பதை சாதாரண அறிவுள்ளவரும் விளங்கிக் கொள்ளக்கூடியதாக இருக்கிறது.

நற்பாக்கியம் என்பது நன்மையை நாடியவருக்கும் சலவாத்தை மிகுதமாக ஓதுபவருக்கும் கிடைப்பதாகும்.

இந்த ஆயத்தின்படி சலவாத்துச் சொல்வது எல்லா மனிதர்களின் மீதும் ஃபர்லாக ஆக்கப்பட்டுள்ளது என்று விளங்குகிறது. ஹதீஸ்களுடைய அறிவிப்பின்படி, தொழுகையின் பிந்தின அத்தஹிய்யாத்திலும், ஜனாஸா தொழுகையிலும், குத்பாவிலும் நபி அவர்களின் மீது ஸலவாத்து கூறுவது ஃபர்லாகும்.

மேலும் எந்த நேரத்திலானாலும் நபியவர்களுடைய பெயரையோ அல்லது சிறப்புப் பெயர்களையோ எவர் சொன்னாலும் அதாவது: சொல்பவர் முஸ்லிமாக இருந்தாலும், காஃபிராக இருந்தாலும், மிருகம், பறவை, மீன் ஆகியவையாக இருந்தாலும் சலவாத்துச் சொல்வது கேட்டவர் மீது ஃபர்லாகும். ஜுனுபாளியாக இருந்தாலும், தூக்கத்தில் உளறுபவனாக இருந்தாலும், ஜின், ஷைத்தானாக இருந்தாலும் இவர்களில் யாரேனும் நாயகம் (ஸல்) அவர்களின் பெயரையோ, வர்ணிப்பையோ உச்சரித்தால் அதைக் கேட்டவர் மீது ஸலவாத்து ஃபர்லாகும். ஒரு சபையில் பல தடவை கேட்டாலும் ஒவ்வொரு தடவையும் சலவாத்துச் சொல்வது ஃபர்லாகும்; ஒரு சபையில் ஒரு தடவை சொன்னால் போதுமென்றும் சிலர் கூறியுள்ளார்கள்.

எட்டு வகையான திக்ருகளில் மூன்று வகை திக்ருகளை சலவாத்து பொதிந்துள்ளது என்றும் 'வலதிக்ருல்லாஹி அக்பர்' என்ற பெரிய திக்ரையும், வணக்கங்களுக்கெல்லாம் மூளையாக இருக்கும் துஆவையும், முஃமின்களுக்கு மிஃராஜாகிய முனாஜாத்தையும் சலவாத்து பொதிந்துள்ளது என்றும் பல கிதாபுகளில் எழுதியுள்ளனர்.

اَلدُّعَاءُ مُخُّ الْعِبَادَةِ . لَادَوَاءَ كَالصَّلٰوةِ

"துஆவாகிறது வணக்கத்தின் மூளையாகும்; சலவாத்தைப் போன்று எந்த மருந்துமில்லை" என்று ஹதீஸில் அறிவிக்கப் பட்டுள்ளது.

சலவாத்தில் அப்ஆள் சுன்னத்தாக கணிக்கப்படும் சலவாத்தும் உண்டு. குனூத்து நடு அத்தஹிய்யாத்து ஆகியவற்றில் சலவாத்துச் சொல்வது போல். பிந்திய அத்தஹிய்யாத்தில் கிளையார்களின் மீது சொல்வதும் அப்ஆள் சுன்னத்தை சேர்ந்ததாகும். இன்னும் சில சலவாத்து அலங்கார சுன்னத்தில் சேரும். பாங்கு இகாமத்துச் சொல்கின்ற நேரத்திலும், பிராணிகளை அறுக்கின்ற நேரத்திலும் சலவாத்துச் சொல்வது போல். இன்னும் சில நேரங்களில் சலவாத்துச் சொல்வது மக்ரூஹ் ஆகும். அதாவது குப்பை கூளங்கள் இருக்குமிடங்கள், நஜீஸான இடங்கள் ஆகியவற்றில் சலவாத்துச் சொல்வதுபோல். இந்த மக்ரூஹான நேரங்கள், இடங்கள் தவிர மற்றுமுள்ள நேரங்களிலும் இடங்களிலும் சலவாத்தைக் கொண்டு ஈடுபடுவது

போல் வேறு எந்த நன்மையுமில்லை.

எல்லா அமல்களும் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு இஃக்லாஸ் மனத்தூய்மை ஷர்த்தாகும் என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் சலவாத்திற்கும், ஹஸ்பியல்லாஹு லாஇலாஹ இல்லாஹு(வ) அலைஹி தவக்கல்து வஹுவ ரப்புல் அர்ஷில்அளீம்

حَسْبِيَ اللّٰهُ لَآ اِلٰهَ اِلَّا هُوَ عَلَيْهِ تَوَكَّلْتُ وَهُوَ رَبُّ الْعَرْشِ الْعَظِيْمِ

என்ற (ஹஸ்பலா) ஆயத்துக்கும் ஷர்த்தில்லை என்று கூறப்பட்டுள்ளது. இவை இரண்டையும் எப்படி ஓதினாலும் பலன் கிடைக்கும் என்று கூறப்பட்டிருந்தாலும், இஃக்லாஸுடன் ஓதுவதற்குரிய பலன் ஏராளமானது!

சலவாத்தாகிறது அறுந்து விடாத உறுதிமிக்க கயிறாகும். இதற்கு இஃக்லாஸ் ஷர்த்தில்லை என்று சொல்லப்பட்டிருப்பினும் அதனை இலேசாகக்கருதி இஃக்லாஸை இழந்து விடாதீர்கள். எனினும் சலவாத்தில் இஃக்லாஸ் இருந்தாலும் இல்லாவிட்டாலும் நபி நாயகம் (ஸல்) அவர்களின் சங்கைக்காக அது ஆண்டவனிடத்தில் ஒப்புக் கொள்ளப்படும். சலவாத்தென்பது, பாவிகளின் பாவங்களை அழிக்கும் மாபெரும் மருந்தாகவும், சஞ்சலக்கடலில் மூழ்கியிருப்போரைக் கரை சேர்க்கும் நூஹ் நபியவர்களின் கப்பலாகவும், தேடியவர் திரவியமாகவும், நாடியவர் நலம் பெறும் நற்பலனாகவும், காதலித்தவருக்குக் கற்பகத் தருவாகவும், பேதலித்தவர்களின் பிழைகளை நீக்குவதாகவும் அருளப்பட்டுள்ளது.

"நபியே! உலகத்தார் அனைவருக்கும் ரஹ்மத்தாகவே உம்மை நாம் அனுப்பியிருக்கிறோம்" என்று நபி (ஸல்) அவர்களைப்பற்றி அல்லாஹ் கூறியுள்ளான். ஈருலக சுகமளிக்கும் அன்னாரின் ரஹ்மத்திற்குரியவர்களாக நாம் ஆவதற்கு சலவாத்தைப் போன்று வேறு எந்த அமலுமில்லை.

சலவாத்து பற்றிய ஆயத்தில் அல்லாஹ் தன்னை முற்படுத்திக் கூறியது போன்று திக்ருடைய ஆயத்தில் கூறவில்லை.

فَاذْكُرُوْنِيْٓ اَذْكُرْكُمْ

"என்னை நீங்கள் திக்ரு செய்யுங்கள்; உங்களை நான் நினைவு கூர்கிறேன்" என்று முதலில் அடியார்கள் திக்ரு செய்ய வேண்டுமெனக் கட்டளையிட்டு பிறகு தன்னுடைய நினைவு கூர்தலை பதிலாகக் கூறியுள்ளான். ஆனால் நபி(ஸல்) அவர்களின் கண்ணியத்திற்காக ஸலவாத்து பற்றிய அந்த ஆயத்தில் தன்னை முற்படுத்திக் கூறினான்.

ஒரு தடவை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் ஸஹாபாக்கள் கூடி இருக்கும் மஜ்லிஸிற்கு மிக்க மகிழ்ச்சியுடன் வந்து அன்னாரின் செவ்விதழால் முத்தி தரும் மொழியினை முத்தைப்போல் உதிர்க்கலானார்கள்.

அப்பொழுது ஸஹாபாக்கள் அதன் காரணத்தைக் கேட்டபோது, ஜிப்ரீல் (அலை) அவர்கள் என்னிடம் வந்து, "முஹம்மதே! உங்களுடைய உம்மத்தில் ஒருவர் உம்மீது ஒரு சலவாத்துச் சொல்வாரானால் நான் அவர் மீது பத்து சலவாத்துச் சொல்லுவேன்; அவர் பத்து சொல்வாரானால் நான் அவர் மீது நூறு சலவாத்தைச் சொல்லுவேன் என்று அல்லாஹுதஆலா கூறுவதாகக் கூறிச் சொன்றார்கள்", என்று பதில் கூறினார்கள்.

பின்வரும் சலவாத்தை ஒரு வெள்ளிக்கு ஏழு தடவைகள் வீதம் ஏழு வெள்ளிக் கிழமைகளுக்கு ஓதி வந்தால் அவருக்கு என்னுடைய ஷஃபாஅத் வாஜிப் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளதாக இமாம் ஙஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் இஹ்யாவில் கூறியுள்ளார்கள். அந்த சலவாத்தாகிறது:

اَللّٰهُمَّ صَلِّ وَسَلِّمْ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ مُحَمَّدٍ
صَلٰوةً تَكُوْنُ لَكَ رِضًا وَّلِحَقِّهٖ اَدَآءً وَّاَعْطِهِ الْوَسِيْلَةَ
وَابْعَثْهُ الْمَقَامَ الْمَحْمُوْدَ الَّذِيْ وَعَدْتَّهٗ وَاجْزِهٖ عَنَّا
اَفْضَلَ مَا جَازَيْتَ نَبِيًّا عَنْ اُمَّتِهٖ . وَصَلِّ عَلَيْهِ وَعَلٰى
جَمِيْعِ اِخْوَانِهٖ مِنَ النَّبِيّٖنَ وَالصّٰلِحِيْنَ يَآ اَرْحَمَ
الرّٰحِمِيْنَ .

"வெள்ளிக்கிழமை இரவிலும் பகலிலும் என்மீது அதிகமாக சலவாத்துக் கூறுங்கள்" என்றும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அருளியுள்ளார்கள்.

மனிதர்களின் தலைவர் ஆதம் (அலை) அவர்களாவார்கள். சகல படைப்புகளின் தலைவர் முஹம்மது (ஸல்) அவர்களாவார்கள். மலக்குகளின் தலைவர் ஜிப்ரீல் (அலை) அவர்களாவார்கள். ரோமர்களின் தலைவர் ஸுஹைப் (ரலி) அவர்களும் பாரஸீகர்களின் தலைவர் ஸல்மான் ஃபார்ஸீ (ரலி) அவர்களுமாவார்கள். மாதங்களில் தலைமை ரமலானாகும். நாட்களில் தலைமை வெள்ளிக்கிழமையாகும். எனவே, தலைமையான நாளில் படைப்புகளின் தலைவரானவர் மிக விரும்பியது சலவாத்தாக இருப்பதால், அந்த சலவாத்து அமல்களிலெல்லாம் தலைமையாக இருக்கப்போதும் என ஒரு பெரியார் கூறியுள்ளார்கள்.

இன்னும், "கியாமத்து நாளில் எனக்கு நெருக்கமானவர்கள் என்மீது அதிகமாக சலவாத்துச் சொல்பவர்கள்தாம்" என்றும், "முஹம்மதே, உம்மீது ஒரு சலவாத்துச் சொல்பவர் மீது எழுபதினாயிரம் மலக்குகள் சலவாத்துச் சொல்வார்கள். எவர்மீது மலக்குகள் சலவாத்துக் கூறுகிறார்களோ அவர் சொர்க்க வாதியாகிவிடுவார்" என்று ஜிப்ரயீல் (அலை) கூறினார்கள் என்பதாகவும், "என் மீது அதிகமாக சலவாத்துச் சொல்பவர்களுக்கு சொர்க்கத்தில் அதிகமான ஹூருல் ஈன்கள் கொடுக்கப்படுவார்கள்"

என்றும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அருளியுள்ளார்கள்.

'ஒருவருடைய நாட்டம் நிறைவேற வேண்டுமென்றால் அவர் என் மீது அதிகமாக சலவாத்துச் சொல்லி வரவும். அது அவருடைய கவலையையும் துயரத்தையும் நீக்கும். அவருடைய தேவைகளை நிறைவேற்றும். இரணத்தில் பரகத்தும் ஏற்படும்" என்றும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

சலவாத்துடைய சிறப்புகள் பற்றிய ஹதீஸ்களைச் சொல்லி முடித்து விட முடியாது. ஆகையால், இத்துடன் அதனைச் சுருக்கிக் கொண்டு, சலவாத்தை விடுவதினாலும் அலட்சியப்படுத்துவதினாலும் ஏற்படுகின்ற நஷ்டத்தில் சிலதை இங்கு எழுதுகிறோம்.

ஒரு தடவை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் (ஷஅபான் மாதக்கடைசியில்) மிம்பர் மீது ஏறியபோது, முதல் படியில் ஏறியதும் ஆமீன் என்று ஒரு தடவை கூறினார்கள்; இரண்டாம்படியில் ஏறியதும் ஆமீன் என்று மறுதடவையும் கூறினார்கள்; மூன்றாம் படியில் ஏறியதும் மீண்டும் ஆமீன் என்று ஒரு தடவை கூறிவிட்டு மிம்பரிலிருந்து இறங்கி விட்டார்கள். ஸஹாபாக்கள் அதன் விளக்கத்தை நபியவர்களிடம் கேட்டபோது, நான் முதற்படியில் ஏறியபோது, ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் என்னிடம் வந்து, 'முஹம்மதே, எவன் தன் பெற்றோருக்குப் பணிந்து வாழவில்லையோ அவனை அல்லாஹ் தன்னுடைய ரஹ்மத்தை விட்டுத் தூரமாக்குவானாக! என்று கூறி அதற்கு ஆமீன் சொல்வீராக என்றார்கள்.' .ஆமீன் என்று கூறினேன். இரண்டாம் படியில் ஏறியபோது, ரமலான் மாதத்தில் நோன்பை விட்டவனை அல்லாஹ் தன் ரஹ்மத்தை விட்டும் தூரமாக்குவானாக! என்று கூறி அதற்கு ஆமீன் சொல்வீராக என்றார்கள்'. நான் ஆமீன் கூறினேன்.

மூன்றாம் படியில் நான் ஏறியபோது, 'முஹம்மதே, தங்களுடைய திருநாமத்தைக் கேட்டு எவர் சலவாத்துச் சொல்லவில்லையோ அவரையும் அல்லாஹ் தன் ரஹ்மத்தை விட்டும் தூரமாக்குவானாக! என்று கூறி, ஆமீன் சொல்வீராக என்றார்கள்'. நான் ஆமீன் கூறினேன் என்றார்கள்.

வேடன் ஒருவன் ஒரு மானை வேட்டையாடி வைத்திருப்பதை ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கண்டபோது, அந்த மான் தன் குட்டிக்குப் பாலூட்டி வர வேண்டுமென்றும் அதுவரை தனக்குப் பிணையாக இருக்க வேண்டுமென்றும் நபியவர்களிடம் வேண்டிக் கொண்டது. அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் நீ திரும்ப வராவிட்டால்? என்று கேட்டார்கள். அப்பொழுது, "நபியே, நான் அவ்வாறு செய்தால் தங்களின் திருநாமத்தைக் கேட்டு சலவாத்துச் சொல்லாத துர்ப்பாக்யவான்களில் ஒருத்தியாக ஆகிடுவேன்" என்று கூறியது. பிறகு அந்த மான் வேகமாகச் சென்று தன் குட்டிக்குப் பாலூட்டித் திரும்பியதைக் கண்ட வேடன் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டான்.

அன்னை ஆயிஷா (ரலியல்லாஹு அன்ஹா) அவர்கள் ஓரிரவில் ஒரு துணியைத் தைத்துக் கொண்டிருந்த சமயம் விளக்கு அணைந்துவிட்டது. அப்பொழுது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அங்கு வந்தார்கள். அன்னாருடைய திரு முகத்தின் ஒளியினால்

ஊசியில் நூலைக் கோர்த்து மீதியைத் தைத்து முடித்தார்கள். பிறகு நபியவர்களிடம், "யாரசூலல்லாஹ், தங்கள் திருமுகத்தின் ஒளி ஆச்சரியம் மிக்கதாக இருக்கிறதே!" என்று வியப்புடன் கூறினார்கள். அப்பொழுது, "என் முகத்தைக் காணாதவனுக்குக் கேடு உண்டாவதாக!" என்றார்கள். "தங்கள் முகத்தைக் காணாதவன் யார்?" எனக் கேட்டபோது, "கஞ்சன்" என்றார்கள். "கஞ்சன் என்றால் யார்?" என்று கேட்டதற்கு, "என் பெயரைக் கேட்டு என்மீது சலவாத்துச் சொல்லாதவன்" என்று கூறினார்கள்.

"என் பெயரைக் கேட்டு சலவாத்துச் சொல்லாதவன் மூதேவியாவான்" என்பதாகவும், "ஒருவர் ஒரு சபையில் ஒரு சலவாத்துக் கூறினால் அந்தச் சபையில் ஏற்பட்ட குறைகள் அனைத்தும் அதனால் நிவர்த்தியாகிவிடும்" என்பதாகவும் கூறியுள்ளார்கள்.

அன்னை ஆயிஷா (ரலி) அவர்களுக்கு ரஸுலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் சொல்லிக் கொடுத்த சலவாத்து இதுவாகும்:

اَللّٰهُمَّ صَلِّ وَسَلِّمْ وَبَارِكْ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّاٰلِهٖ وَصَحْبِهٖ
عَدَدَ مَا فِيْ عِلْمِ اللّٰهِ صَلٰوةً دَآئِمَةً بِدَوَامِ مُلْكِ اللّٰهِ.

பின்வரும் சலவாத்து குதுபுல் அக்தாப் ஷைகு அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள் ஓதி வந்ததாகும்:-

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ طِبِّ الْقُلُوْبِ وَدَوَآئِهَا وَعَافِيَةِ
الْاَبْدَانِ وَشِفَآئِهَا وَنُوْرِ الْاَبْصَارِ وَضِيَآئِهَا وَعَلٰى اٰلِهٖ وَ
صَحْبِهٖ وَسَلِّمْ.

இந்த சலவாத்தை நோய் நொடிகள் நீங்குவதற்கு ஓதுமாறு கூறப்பட்டுள்ளது.

இதில் طِبُّ 'திப்' எனும் வார்த்தையிலுள்ள ط தோ'வும்,

عَافِيَة ஆஃபியத் என்ற வார்த்தையிலுள்ள ع ஐனும்

نُوْرٌ நூர் என்ற வார்த்தையிலுள்ள ن நூனும்

ஆக இந்த மூன்று எழுத்துக்களையும் சேர்த்தால் طَعْنٌ என்று வருகிறது.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

يُغْنِ என்பது பிளேக் போன்ற வியாதிக்கும் சொல்லப்படும். எனவே, அவ்விதமான நோய்களுக்கு இதனை ஓதினால் சுகமாகும் என்று கூறப்பட்டுள்ளது.

ஏதேனுமொரு துஆ ஏற்றுக் கொள்ளப்பட வேண்டுமென்றால் அதன் ஆரம்பத்திலும் கடைசியிலும் சலவாத்தைக் கூறுவது அவசியமாகும்.

ஆதம் (அலை) அவர்களின் காலம் முதல் கியாமத்து நாள் வரை நபி(ஸல்) அவர்களின் மீது சொல்லப்படுகின்ற சலவாத்தின் பலன்கள் ஏராளமானவையாகும். அவற்றில் பல விஷயங்கள்

مِنْحَةُ سَرَنْدِيْبِ فِيْ مَوْلِدِ الْحَبِيْبِ.

என்ற கிதாபில் கூறப்பட்டுள்ளன.

பனூ இஸ்ராயீல் சமூகத்தாரில் கொடிய பாவி ஒருவன் இருந்தான். அவன் இறந்து விட்டபொழுது அவனுடைய காலில் கயிற்றைக் கட்டி இழுத்துச் சென்று காட்டில் எறிந்து விட்டார்கள். உடனே அல்லாஹுதஆலா ஜிப்ரீல் (அலை) அவர்களிடம், "நீர் மூஸா (அலை) அவர்களிடம் சென்று, அந்த மய்யித்தைக் குளிப்பாட்டிக் கஃபனிட்டு அடக்கம் செய்யுமாறு கூறிவாரும்" என்று சொல்லி அனுப்பினான். மூஸா (அலை) அவர்கள் மிக ஆச்சரியமடைந்து, "யா அல்லாஹ், அந்த மனிதன் என்ன அமல் செய்து வந்தான்?" என்று கேட்டபொழுது, மீண்டும் ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்து, "அவன் தவ்ராத் வேதத்தை ஓதிவரும் பொழுது என்னுடைய ஹபீப் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய திருநாமத்தைப் பார்த்து அவர்மீது அவன் சலவாத்துச் சொன்னான். ஆகையால், அவன் பிழைகளை பொறுத்து அவனை சங்கைப்படுத்தினேன்" என்று அல்லாஹ் சொல்வதாகக் கூறினார்கள்.

மற்றொரு சமயம் மூஸா (அலை) அவர்கள், "யா அல்லாஹ், நீ எனக்கு என்னை விட மிக நெருங்கியிருக்க விரும்புகிறேன்" என்று கூறினார்கள். அதற்கு அல்லாஹுதஆலா "உம்முடைய பேச்சு உம்முடைய நாவிற்கு நெருக்கமாயிருப்பதை விடவும், உம்முடைய நாவில் உம்முடைய உமிழ்நீர் நெருக்கமாயிருப்பதை விடவும் அதிகமாக நான் உமக்கு நெருங்கியிருக்க வேண்டுமென்பதை நீர் விரும்புவீராயின், என்னுடைய ஹபீப் முஹம்மது (ஸல்) அவர்களின் மீது அதிகமாக சலவாத்துச் சொல்லி வருவீராக!" என்று கூறினான்.

ஷைகு செய்யிது முஹம்மது புகாரீ (ரஹ்) அவர்கள் தங்களுடைய முரீதுகளுக்குப் பின்வரும் சலவாத்தை ஓதுமாறு கட்டளையிடுவார்கள்:

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدِنِ النُّوْرِ الذَّاتِيِّ السَّارِيْ
سِرُّهٗ فِيْ جَمِيْعِ اٰثَارِ الْاَسْمَآءِ وَالصِّفَاتِ وَعَلٰٓى اٰلِهٖ
وَصَحْبِهٖ وَسَلِّمْ عَدَدَ مَآ اَحَاطَ بِهٖ عِلْمُ اللّٰهِ مُضَاعَفًا
بِدَوَامِ مُلْكِ اللّٰهِ.

எவரேனும் ஒருவர் ஒவ்வொரு நாளும் ஐநூறு சலவாத்துகளை ஓதி வருவாரானால் அல்லாஹுதஆலா அவரை விட்டும் வறுமையைப் போக்கிடுவான் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

என்னுடைய உஸ்தாது கீழக்கரை தைக்கா சாஹிபு வென்ற செய்யிது அப்துல் காதிர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: மதறாஸில் பிரதம காழியாயிருந்த முஸ்தஃபா அலிகான் பஹாதுர் அவர்கள் அல்லாமா அப்துல்காதிர் காஹிரீ (ரஹ்) அவர்களுடன் பல இரகசியங்களைப் பேசிக் கொண்டிருந்த பொழுது, நீதிபதியவர்கள் தங்கள் தலைப்பாகையைக் கழற்றி தலையைக் காண்பித்தார்கள். அதில் ஒரு கையின் ஐந்து விரல்கள் பதிந்து இருந்தன. அதனைப்பற்றி விபரம் கேட்டபோது, அல்லாஹ் எனக்களித்த நிஃமத்தை நன்றி பாராட்டும் விதத்தில் இதனைக் கூறுகிறேன்; பெருமைக்காக அல்ல, என்பதாகச் சொல்லிப் பின் அவர்கள் கூறியதாவது: நான் ஹிந்துஸ்தானில் இருக்கும்பொழுது ஒவ்வொரு இரவும் ஆயிரம் தடவை சலவாத்து ஓதாமல் தூங்கமாட்டேன். அப்பொழுது ஓரிரவில் கனவில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைக் கண்டு மிக்க மரியாதையாய் அவர்கள் முன் நின்றேன். என்னைப் பார்த்துப் புன்னகை செய்தவர்களாக தங்களின் திருக்கரத்தை என் தலையின் மீது வைத்தார்கள். உடனே என் மனதிலிருந்து எல்லாக் கவலைகளையும் நீக்கி இல்மையும், யகீனையும், அல்லாஹுதஆலா நிரப்பமாக்கித் தந்தான். அந்தக் கரத்தின் பதிவுதான் இது என்று கூறினார்கள். இவ்வாறே முன்னால் பல பெரியார்களுக்கும் பலவிதமான கனவு நிகழ்ச்சிகள் நடைபெற்றுள்ளன.

அதிகமாக சலவாத்துச் சொல்லிக் கொண்டிருப்பவர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் மிகுந்த சிறப்புகள் உண்டு. விலாயத் உடைய நிலையையும் கராமத்து உடைய தன்மையையும் பெற்றிடுவார்கள்.

தலாயிலுல் கைராத் என்ற கிதாபைத் தொகுத்த முஹம்மதுப்னு சுலைமான் (ரஹ்) அவர்களுடைய மகத்துவம் மிக மேலானது. அவர்களுக்குரிய சீடர்கள் மட்டும் இருபதினாயிரம் பேர் இருந்தனர். அவர்கள் தலாயிலுல் கைராத் என்ற கிதாபில் சலவாத்தின் மகிமையைப்பற்றி விரிவாக எழுதியுள்ளார்கள்.

சலவாத்தை ஸலாம் இல்லாமலும், நபியவர்களுடைய கிளையார்களையும் ஸஹாபாக்களையும் சேர்க்காமலும் தனித்துச் சொல்வது மக்ரூஹ் என்று கூறப்பட்டுள்ளது. ஆகையால், பின்வருமாறு சலவாத்துச் சொல்வது சிறப்பாகும்; மக்ரூஹை விட்டு நீங்கியதுமாகும்.

اَللّٰهُمَّ صَلِّ وَسَلِّمْ عَلٰى مُحَمَّدٍ وَّعَلٰٓى اٰلِهٖ وَصَحْبِهٖ •

இத்துடன் வபாரிக் என்ற வார்த்தையைச் சேர்த்துக் கூறுவது நிரப்பமானதாகும். இதனால்தான் சலவாத்து இப்றாஹீமை நிரப்பமான சலவாத்து என்று கூறப்பட்டுள்ளது. இந்த சலவாத்தில், இப்றாஹீம் நபியின் மீது சொன்ன சலவாத்தைப் போலும், ஸலாமைப் போலும் எங்கள் நபியின் மீதும் சலவாத்தும் ஸலாமும் சொல்வாயாக என்று கூறியதால் இப்றாஹீம்நபி நம்முடைய நபியை விடச் சிறந்தவர்

என்பதாக ஆகாது.

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் படைப்பினங்களில் அனைத்தைவிடச் சிறந்தவர்கள் என்பதற்கு அல்லாஹுதஆலா பல ஆயத்துகளில் விளக்கம் கூறியுள்ளான்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மீது ஸலாம் சொல்லுவது சலவாத்துச் சொல்வதின் உடன் பிறப்பாயிருப்பதால்தான். இன்னல்லாஹ வமலாஇகதஹு என்ற ஆயத்தில் சலவாத்துடன் ஸலாமும் சொல்லும்படி கட்டளையிட்டு, இறுதியில் "தஸ்லீமா" - என்ற வார்த்தையைக் கூறி ஸலாமை உறுதிப்படுத்தியும் உள்ளான்.

மிஃராஜில் தன்னுடைய ஹபீபுக்கு "அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹன்னபிய்யு" என்று ஸலாமையும் சேர்த்துக் காணிக்கையாக வைத்துக் கூறியதின் காரணத்தால் சலவாத்துடன் ஸலாமையும் சேர்த்துக் கூறுவது மிகச் சிறந்தது என்பது தெரிய வருகிறது. ஆகையால்தான் எல்லாத் தொழுகைகளின் கடைசி அத்தஹிய்யாத்தின் போது அது ஃபர்லாக ஆக்கப்பட்டுள்ளது. மேலும், தொழுகையின் முடிவை ஸலாமைக் கொண்டு முடிப்பதும் ஃபர்லு ஆகும். நடு அத்தஹிய்யாத்தில் அது 'அப்ஆள்' சுன்னத்தில் சேர்க்கப் பட்டிருப்பதுடன், ஒருவருக்கொருவர் சந்திக்கும் போது ஸலாம் சொல்லிக்கொள்வதும் சுன்னத்தாக்கப்பட்டிருக்கிறது. ஜவாப் சொல்வது ஃபர்லென்று ஆக்கப்பட்டிருப்பதும் ஸலாமின் சிறப்பைக் குறிப்பிடுவதாகும்.

மேலும், மலக்குகள், மனிதர்கள், ஜின்கள், உயிருள்ளவை, உயிரில்லாதவை, அறிவுள்ளவை, அறிவில்லாதவை, சிறியவை, பெரியவை, மண், விண், மலைகள், கதிரவன், திங்கள், உடு (நட்சத்திரங்கள்) அர்ஷு, குர்ஸீ, லவ்ஹு, கலம், சொர்க்கம், நரகம், அனைத்தும் நபியுல்லாஹ் அவர்களின் மீது ஸலாம் சொல்லிக் கொண்டே இருக்கின்றன.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் பிறந்த சமயத்தில் பாலூட்டுவதற்காக ஹலீமா ஸஅதிய்யா அம்மையார் அவர்கள் நபியவர்களை லாங்கிக் கொண்டு தம்முடைய ஹுனைன் என்ற ஊருக்குப் பிரயாணம் சென்ற பொழுது வழியிலிருந்த கற்களும், மரங்களும், மான்களும், மரைகளும் 'அஸ்ஸலாமு அலைக்க யா கைரல் பஷர்' என்று ஸலாம் சொன்னதாகக் கூறப்பட்டுள்ளது.

ஒரு தடவை நபி (ஸல்) அவர்கள் வழியில் நடந்து செல்லும் பொழுது ஒரு கல் அவர்களுக்கு ஸலாம் கூறி ஒரு கவிதையும் பாடியது. அக்கவிதை:-

أَنَا الْحَجَرُ الْمُسَلِّمُ كُلَّ حِيْنٍ ؛
عَلٰى خَيْرِ الْوَرٰى فَلِيَ الْبِشَارَةُ .

"நான், ஒவ்வொரு நேரமும் படைப்பினத்தில் சிறந்தவரின் மீது ஸலாம் சொல்லிக் கொண்டிருக்கும் கல். எனக்கு நற்செய்தி உண்டாவதாக!"

அந்தக கல் மஸ்ஜிதுந் நபவியின் கட்டடத்தில் வைத்துக் கட்டப்பட்டுள்ளது என்று கூறப்பட்டுள்ளது.

காஃபிர்கள் ஒரு குளத்தின் அருகில் கூடியிருந்த சமயத்தில் நபியவர்களிடம், "இக்குளத்தின் அக்கரையிலுள்ள கல்லை இக்கரைக்கு வருமாறு செய்யுங்கள் பார்க்கலாம்" என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் அக்கல்லை நோக்கி, வா என்றழைத்தவுடன் அது நீந்தி வந்து சாட்சி கூறி நபியவர்களுக்கு ஸலாம் சொல்லியது.

பட்டுப்போன ஒரு ஈத்தம் குத்தி (ஈச்சம் குற்றி - ஈத்தமரத்தின் அடிபாகம்) நபி (ஸல்) அவர்கள் மீது அன்புகொண்டு ஸலாம் சொன்னது. நபியவர்கள் இவ்வுலகைப் பிரிந்த பின் அது அழுது கண்ணீர் வடித்ததாகக் கூறப்பட்டுள்ளது.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நுபுவ்வத்துக்கு முன் வியாபாரத்திற்காக ஷாம் தேசம் சென்ற போது மிருகங்களும் மரங்களும் ஸலாம் சொல்லியதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

பனூ ஸலீம் என்ற கூட்டத்தாரில் உடும்பு பிடிக்கும் ஒருவர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட பொழுது அந்த உடும்பு நபி (ஸல்) அவர்களுக்கு ஸலாம் சொல்லியதைக் கேட்டதும் அதே இடத்தில் ஆயிரம் நபர்கள் இஸ்லாத்தை ஏற்றார்கள்.

அபூ ஜஹ்ல் கொண்டு வந்த ஒரு சிப்பிக்குள்ளிருந்த புழு நபி (ஸல்) அவர்கள் கையில் வந்தவுடன் ஸலாம் கூறி தஸ்பீஹும் செய்தது. அந்தப்புழு கூறிய தஸ்பீஹும் அறிவிக்கப்பட்டுள்ளது. அதாவது:

سُبْحَانَ مَنْ يَرَانِيْ - وَيَعْلَمُ مَا فِيْ جَنَانِيْ
وَيَسْمَعُ كَلَامِيْ - وَيَعْرِفُ مَقَامِيْ.

என்னைப் பார்க்கின்ற ஒருவன் மகாத் தூய்மையானவன். அவன் என் உள்ளத்தில் உள்ளதை அறிகிறான்; என்னுடைய பேச்சைக் கேட்கிறான்; என்னுடைய இடத்தையும் அறிகிறான்.

அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களைப் புறம்பேசிய ஒருவனை ஒரு நாய் கடித்தது; பிறகு அது வந்து ஸலாம் சொல்லியது.

இவ்வாறே முயல், பாம்பு, ஆடு, மாடு, ஒட்டகம், போன்ற பல பிராணிகள் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு ஸலாம் கூறியுள்ளன. இவை அனைத்தும் நமக்கு ஆச்சரியமாக இருந்தாலும் உண்மையாக நடந்தவையாகும்.

இன்னும் நபி(ஸல்) அவர்களின் மீது ஸலாம் சொல்வதினால் ஏற்படுகின்ற பலன்கள் எண்ணிலடங்காதவையும் ஏட்டிலடங்காதவையுமாகும். அவற்றை வசனங்களாலும் பாடல்களாலும் பல நூல்களிலும் பலரும் தொகுத்துள்ளனர்.

ஷஃபாஅத் சம்பந்தமான ஆயத்துகளுக்கு சரியான விளக்கம் புரியாமலும் இறந்தவர்களுக்கு நன்மைகளைச் சேர்த்து வைப்பது ( إِيْصَالُ الثَّوَابِ ) ஈஸாலுத்ஃதவாப்

என்பது கிடையாதென்றும் சிலர் கூறுகின்றனர்

இவர்கள்:-

يَاأَيُّهَا النَّبِيُّ حَسْبُكَ اللَّهُ وَمَنِ اتَّبَعَكَ مِنَ الْمُؤْمِنِينَ ۝ (8 :64)

என்ற குர்ஆனின் திருவசனத்துக்கு "நபியே அல்லாஹ்வும் உம்மைத் தொடர்ந்த மூமின்களும் உமக்குப் போதும்" என்ற அர்த்தம் துலாம்பரமாயிருக்க "நபியே உமக்கும் உம்மைத்தொடர்ந்த முமின்களுக்கும் இறைவன் போதும் என்று விபரீதமான முறையில் அர்த்தம் செய்து கொண்டிருக்கின்றனர். இத்தகையோர் இஹ்யா உலூமித்தீன் கிதாபைப்படித்திருப்பதாகவும், கஸ்ஸாலி (ரஹ்) அவர்களின் கருத்தை விளங்கி அதற்கு ஏற்றாற் போலவே தாங்கள் பேசுவதாகவும் கூறிக்கொள்வது விந்தையாக இருக்கிறது.

மேற்கண்டவர்களின் குதர்க்க வாதத்தை நவாப் அஃலம் ஜாஹ் பஹாதுர் அவர்கள் கூட்டிய ஒரு மஜ்லிஸில் உலமாக்கள் முன்னிலையில் மலிகுல் உலமாவின் குமாரர் மவுலவி ஜமாலுத்தீன் லக்னவீ அவர்கள் தங்கள் வாதத்திறமையால் முறியடித்து நாயகம் (ஸல்) அவர்களுக்குத் தங்கள் உம்மத்துக்காக அல்லாஹ்விடம் ஷஃபா அத்துச் செய்து மன்றாடும் தகுதி உண்டு என்னும் உண்மையை நிரூபித்துக் காட்டினார்கள்.

சலவாத்தும், ஸலாமும் நபிமார்கள், மலக்குகள், லுக்மான், மர்யம் அலைஹிமுஸ்ஸலாம் மீதும் மற்றும் இவர்கள் போன்றவர்கள் மீதும் தான் கூற வேண்டும். இவர்கள் அல்லாத மற்றவர்களின் மீது கூறுவது மக்ரூஹ். மஹ்தீ அலைஹிஸ்ஸலாம் என்று அவர்களின் மீது ஸலாம் கூறுவது பற்றிய விளக்கம் பின்னால் ஸலாமுடைய பாடத்தில் வரும். நபி மார்களுக்குப் பின்னால் மற்றவர்களைக் கூறி அலைஹிஸ்ஸலாம் என்று கூறலாமே தவிர, தனித்து மற்றவர்களுக்குக் கூறுவது மக்ரூஹ் ஆகும். உதாரணமாக: அபூபக்கர் அலைஹிஸ்ஸலாம்; உமர் அலைஹிஸ்ஸலாம் என்று கூறுதல் கூடாது. ஏனெனில் அலைஹிஸ்ஸலாத்து வஸ்ஸலாம் என்பது நபிமார்களுக்கும் மலக்குகளுக்கும் குறிப்பாகச் சொல்லப்படும் வாசகமாகும்.

தஆலா تَعَالَى என்ற வார்த்தையும், அஜ்ஜ வஜல்ல عَزَّ وَجَلَّ என்ற வார்த்தையும் அல்லாஹு தஆலாவுக்கு மட்டுமே சொல்லப்படுவது போல் அலைஹிஸ்ஸலாம் என்பதை நபிமார்களுக்கும், மலக்குகளுக்கும் மட்டுமே சொல்ல வேண்டும். ராஃபிளிய்யாக்கள், ஷீஆக்கள் அலி அலைஹிஸ்ஸலாம், ஹுஸைன் அலைஹிஸ்ஸலாம் என்று கூறுவார்கள். அவர்கள் அஹ்லுஸ்ஸுன்னத் வல் ஜமாஅத்தை விட்டும் அப்பாற்பட்டவர்கள்.

# பிரயாணத்தில் தொழும் முறை

## கஸ்ரு, ஜம்உ தொழுகை பற்றிய விளக்கம்

பிரயாணி (முஸாஃபிர்) என்பவன், மார்க்கத்தில் ஆகுமாக்கப்பட்ட ஒரு காரியத்தை நாடி, நிதானமான நடையாக இரண்டு தினங்கள் ஒட்டகம் நடக்கின்ற தூரத்திற்குச் சரியாக குறிப்பான ஓரிடத்தை நோக்கி கடலிலோ அல்லது கரையிலோ பிரயாணம் செய்கிறவனாவான்.

அவன் மீது விதியான நான்கு ரக்அத்து தொழுகையை-அது அதாவாக இருந்தாலும் அல்லது பிரயாணத்தில் களாவாகிவிட்டதாக இருந்தாலும்- இரண்டு ரக்அத்தாகச் சுருக்கி ( قَصْرٌ செய்து) தொழுவதும், லுஹரையும் அஸரையும், அவ்வாறே மஃரிபையும் இஷாவையும், முற்படுத்தி அல்லது பிற்படுத்தி சேர்த்துத்தொழுவதும் ஆகும்.( جَمْعٌ செய்து தொழுவது ஆகும்)

ஹராமான விஷயத்தை நாடி பிரயாணம் செய்கிறவனுக்கு கஸ்ரு தொழுகையோ, ஜம்உ தொழுகையோ கூடாது. அதாவது: வட்டி வாங்குவதற்காக, வட்டி கொடுப்பதற்காக அல்லது, ஹராமான வியாபாரம் செய்வதற்காக, அல்லது நஷ்ட ஈட்டு உத்தரவாதத்துடன் கூடிய தொழில் செய்வதற்காக, விபச்சாரம் புரிவதற்காக, அல்லது தனக்கோ, பிறருக்கோ ஏதேனும் துன்பத்தை ஏற்படுத்திக் கொள்வதற்காக பிரயாணம் செய்வது போல். இவ்வாறே ஹராமான கேளிக்கை விளையாட்டுக்களுக்காக ஊர்களைப் பார்ப்பதற்காக உல்லாசப் பிரயாணம் செல்கிறவர்களுக்கும் கஸ்ரும், ஜம்உவும் கிடையாது. ஆனால் அந்தப் பிரயாணம் ஹராமல்ல.

இரண்டு தினங்களுடைய தூரமென்பது பதினாறு ஹாஷிமீ காத தூரமாகும். ஒரு காதம் மூன்று மைல்களாகும். (அது நம் நாட்டு மைல் அல்ல) ஒரு மைல் என்பது காலால் போடும் நாலாயிரம் எட்டுகளைக் கொண்ட ஆறாயிரம் முழங்களாயிருக்கும். ஒரு முழம் இருபத்து நான்கு விரல்களுடைய அகலமாயிருக்கும். ஒரு விரலின் அகலம் நடுத்தரமான ஆறு கோதுமையின் அகலமாயிருக்கும். ஒரு கோதுமையின் அளவு குதிரையின் ஆறுமுடிகளின் கனமாயிருக்கும். இது நீளமான பிரயாணமென்று சொல்லப்படும். இந்தக் கணக்குப்படி நம் நாட்டு மைல் சுமார் எண்பத்தி இரண்டு ஆகிறது. கிலோ மீட்டர் சுமார் 131-1/4 தூரம் ஆகும். இதுதான் பலமான சொல்லாகும். மற்றொரு சொல்படி, பிரயாணத்தின் நீளம் நம் நாட்டு மைல் பதின்மூன்றே முக்கால் (13-3/4) ஆகும்.(இருபத்திரண்டு கிலோ மீட்டர் தூரமாகும்)

மேற்குறிப்பிட்ட இந்த தூரத்தை கரையிலோ, கடலிலோ கால் நடையாகவோ,

இரயில், பஸ் மூலமாகவோ, விமானம் மூலமாகவோ, அல்லது வேறு எவ்வித வாகனங்களின் மூலமாக எவ்வாறு கடந்தாலும் நாடிப்போகும் இடத்திற்குப் போய்ச் சேரும் வரை கஸ்ரும் ஜம்உம் தொழலாம்.

ஒருவன் கடந்து வந்த பிரயாண தூரத்தில் சந்தேகம் வந்து அதனை ஆராய்ச்சி செய்து பார்க்கும் பொழுது மேற்கூறிய அளவுக்குக் குறையாமல் இருப்பதாகத் தெரிந்தால் கஸ்ரும், ஜம்உம் செய்யலாம். இல்லாவிட்டால் கூடாது.

ஒருவன் தன்னுடைய ஊரின் நான்கு எல்லைகளை விட்டும் கடந்தபின், தான் நாடிய இடத்தை அடையும் வரை, அல்லது இடையில் ஓரிடத்தில் நான்கு நாட்கள் தங்க வேண்டுமென எண்ணுகிறவரை கஸ்ரும், ஜம்உம் ஆகும். ஒருவன் குறிப்பிட்ட எண்ணமில்லாமல் இன்று, நாளை என்று எண்ணிக் கொண்டே நாட்கள் கடந்து சென்றால் பதினெட்டு நாட்கள் வரை கஸ்ரும் ஜம்உம் தொழலாம்.

கஸ்ராகத் தொழுவதற்கு மூன்று ஷர்த்துகள் உண்டு. 1) முதல் தக்பீரிலேயே கஸ்ராகத் தொழுவதை நிய்யத்துச் செய்வது 2) நிரப்பமாகத் தொழும் இமாமைத் துயராமல் இருப்பது 3) தொழுகை முடியும் வரை அந்த நிய்யத்து மாறாமலும், பிரயாணம் முடியாமலும் இருப்பது.

மஃரிபில் கஸ்ரு இல்லை, சுப்ஹில் கஸ்ரும், ஜம்உம் இல்லை. ஒரு பிரயாணி நிரப்பமாகத் தொழுகிறவரைத் துயர்ந்தாலும், அல்லது ஓர் இமாமை பிரயாணி என்றெண்ணித் துயர்ந்தபின் அவர் முகீம் என்பது தெரியவந்தாலும் அல்லது கஸ்ரு தொழ நாடித் தக்பீர் கட்டியபின் கஸ்ராகத் தொழலாமா, நிரப்பமாகத் தொழலாமா என்று இருவிதமான எண்ணமுண்டானாலும், அல்லது கஸ்ருடைய நிய்யத்துச் செய்தோமா, இல்லையா என்று சந்தேகங் கொண்டாலும் இவை அனைத்திலும் நிரப்பமாகத் தொழுவது வாஜிபாகும்.

## முற்படுத்தியும், பிற்படுத்தியும், சேர்த்தும் தொழுவதின் ஃபர்ளுகள், ஷர்த்துகள்

ளுஹருடைய நேரத்தில் அஸரைச் சேர்த்து முற்படுத்துவதும், அஸருடைய நேரத்தில் ளுஹரைச் சேர்த்து பிற்படுத்துவதும், அவ்வாறே மஃரிப் நேரத்தில் இஷாவைச் சேர்த்து முற்படுத்தித் தொழுவதும் இஷாவுடைய நேரத்தில் மஃரிபைச் சேர்த்துப் பிற்படுத்தித் தொழுவதும் ஆகும். முற்படுத்திச் சேர்த்துத் தொழுவதற்கு நான்கு நிபந்தனைகள் உண்டு: 1) முந்திய தொழுகையின் ஆரம்பத்திலோ, அல்லது ஏதேனும் ஓரிடத்திலோ (ஸலாம் கொடுக்க முன்) பிந்தின தொழுகையை இத்துடன் சேர்த்துத் தொழுவேன் என்று நிய்யத்துச் செய்தல் 2) அந்த நேரத்துடைய தொழுகையை முதலில் தொழுவது 3) இரண்டு தொழுகைக்கிடையில் இலேசாக இரண்டு ரக்அத் தொழப் போதுமான நேரமளவுக்குக்கூட இடைவெளி விடாமலிருப்பது 4) இரண்டாம் தொழுகைக்குத் தக்பீர் கட்டும் வரை பிரயாணம் முடியாமலிருப்பது.

பிற்படுத்திச் சேர்த்துத் தொழுவதற்கு இரண்டு நிபந்தனைகள் உண்டு. 1) முந்தின தொழுகை நேரத்தில்-ஒரு ரக்அத் தொழப் போதுமான நேரம் இருக்கும் வரையிலும்-அடுத்த நேரத்தில் (அடுத்த வக்த்தில்) இந்தத் தொழுகையைச் சேர்த்துத் தொழுவேன் என்று நிய்யத்துச் செய்தல். அவ்வாறு நாடி இருந்தவன் மறந்து விட்டாலும் ஜம்உ செய்வது ஆகும். அவனுடைய மறதி அவனை மன்னிக்கக் காரணமாகும். இவ்வாறே இஹ்யாவில் கூறப்பட்டுள்ளது. 2) இரண்டாம் தொழுகையின் கடைசி வரை பிரயாணம் முடிவடையாமல் இருப்பது.

பிற்படுத்திச் சேர்த்துத் தொழுவதில் முந்தின தொழுகையை முதலாவதாகவும், இரண்டாம் தொழுகையைப் பிந்தியும் தொழுவது சுன்னத்தாகும். இதற்கு மாற்றமாக முந்தினதைப் பிந்தியும் பிந்தினதை முந்தியும் தொழுவதும் ஆகும்.

பிரயாணத்தில் இல்லாத ஒருவனாக இருந்தாலும், நோயின் காரணமாக ஒரு நேரத்துத் தொழுகையை மற்றொரு நேரத்துடன் சேர்த்துத் தொழுதல் கூடும். கஸ்ரு செய்வது கூடாது. அஸர் நேரத்தில் காய்ச்சல் வருவது வழக்கமாக இருந்தால் லுஹரில் முற்படுத்தித் தொழுது கொள்ளலாம். லுஹரில் காய்ச்சல் வருவது வழக்கமானால் அஸரில் பிற்படுத்தித் தொழுது கொள்ளலாம்.

மேலும் புதிய (ஜதீதான) சொற்படி கடுமையான மழையின் காரணத்தாலும், முன் கூறிய நிபந்தனையின்படி இரண்டு தொழுகைகளை முற்படுத்திச் சேர்த்துத் தொழலாம். இதிலும் கஸ்ராகத் தொழக் கூடாது. பிற்படுத்தியும் தொழக்கூடாது.

மேற்கூறப்பட்ட 82 மைல் தூரத்தை விடக்குறைவான தூரம் உள்ள ஓர் ஊருக்குப் பயணம் செய்வது சுட்டை ஸஃபர் என்று சொல்லப்படும். இந்தச் சுட்டை ஸஃபர் செய்பவர்கள் முன் கூறப்பட்ட நிய்யத்தின் ஷர்த்தின்படி முற்படுத்தியோ, பிற்படுத்தியோ சேர்த்து (ஜம்உ செய்து) தொழலாம். ஆனால் கஸ்ரு செய்வதும் (சுருக்கித் தொழுவதும்) நோன்பை விடுவதும் கூடாது.

முற்படுத்திச் சேர்த்துத் தொழுகின்ற தொழுகையில் முந்தின தொழுகையின் முந்திய சுன்னத்தை தொழுது விட்டு, பிறகு இரண்டு ஃபர்ளுகளையும் தொடர்ந்து தொழுது முடித்து, பிறகு முந்தின தொழுகையின் பிந்திய சுன்னத்தையும், அதன் பிறகு இரண்டாம் தொழுகையின் முந்திய சுன்னத்தையும், பிறகு அதனுடைய பிந்திய சுன்னத்தையும் தொழுவான்.

பிற்படுத்திச் சேர்த்துத் தொழும் தொழுகையிலும் அவ்வாறே தொழ வேண்டும். விரும்பினால் பிந்தின ஃபர்ளின் முந்தின சுன்னத்தை இரண்டு ஃபர்ளுகளுக்கு முன்னதாகத் தொழுவதும் ஆகும். இன்னும் எல்லா நிலைகளிலும் எல்லா சுன்னத்துகளையும் பிற்படுத்தியும் தொழலாம். இதில் முந்தின சுன்னத்துகளை முற்படுத்தித் தொழுதல் சிறப்பாகும்.

பிரயாணத்தில் தவறி விட்ட தொழுகையைப் பிரயாணத்திலேயே களாச் செய்வதானால் கஸ்ராக களாச் செய்யலாம். பிரயாணத்தில் எவ்வித சிரமமில்லாமலிருந்தாலும் கஸ்ரு செய்வதினாலோ, ஜம்உ செய்வதினாலோ நன்மைகள் குறையாது.

மருந்து சாப்பிடும்படி ஒருவரை வற்புறுத்துவதும், வலுக்கட்டாயமாக அதனை ஊட்டுவதும், தண்ணீர் கொடுக்காமல் தடுப்பதும் கொடிய மக்ருஹ் ஆகும்.

நோயைத் திட்டுவதும், நோயின் வருத்தத்தைத் தாங்க முடியாமல் மரணிப்பதை ஆசை வைப்பதும் மக்ருஹ் ஆகும். இவ்வாறு சிரமமான நேரத்தில் பின்வரும் துஆவை கேட்குமாறு ஹதீஸில் வந்துள்ளது:-

اَللّٰهُمَّ اِنْ كَانَ الْحَيَاةُ خَيْرًا لِّيْ فَاَحْيِنِيْ عَلَى الْاِسْلَامِ
وَاِنْ كَانَ الْمَمَاتُ خَيْرًا لِّيْ فَاَمِتْنِيْ عَلَى الْاِيْمَانِ.

"யா அல்லாஹ்! வாழ்வது எனக்கு நல்லதாக இருந்தால் இஸ்லாத்தின் மீது என்னை நீ வாழச் செய்வாயாக, மரணமடைவது எனக்கு நல்லதாக இருந்தால் ஈமானின் மீது என்னை நீ மரணமடையச் செய்திடுவாயாக"

ஒருவருக்கு மௌத்துடைய நேரம் நெருங்கி விட்டால் அவருடைய முகத்தைக் கிப்லாவுக்கு நேராகத் திருப்பி வலப்பக்கத்தில் ஒருச்சாய்த்துப் படுக்க வைப்பது சுன்னத்தாகும். அப்பொழுது அவருக்கு உரியவர் யாரேனும் ஒருவர் அருகிலிருந்து லாஇலாஹ இல்லல்லாஹு என்ற கலிமாவை அதட்டாத முறையில் சொல்லிக் கொடுக்க வேண்டும். அவ்வாறு அவர் சொல்லி விட்டால் மறுபடி சொல்லிக் கொடுக்க வேண்டியதில்லை. ஆனால், அவர் உலகப் பேச்சைப் பேசிவிட்டால் மறுபடியும் கலிமாவைச் சொல்லச் செய்ய வேண்டும். அவரருகிலிருந்து சூரத்துயாஸீன் சூரத்துர்ரஃது سُوْرَةُ الرَّعْدِ ஆகியவற்றை ஓதுவது சுன்னத்து.

மௌத்தாகி விட்டது உறுதியானவுடன், பிஸ்மில்லாஹி வஅலா மில்லத்தி ரசூலில்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் என்று கூறி அவருடைய இரு கண்களையும் மூடிவிட்டு, நாடியைக் கட்டி, கைகால் முளிகளை மெல்ல நீட்டி மடக்கி பின் நீட்டிவிட்டு வயிற்றில் (இருபது கழஞ்சு எடையுள்ள) கனமான ஏதேனும் ஒரு பொருளை வைத்து, தலையை நிமிர்த்தி வைத்து, மௌத்தான நேரத்திலிருந்த துணிகளைக் களைந்து (கசப்பு மாற்றி) கட்டில் போன்ற உயரமான இடத்தில் கிப்லாவுக்கு நேரே முகத்தையும் உள்ளங்கால்களையும் வைத்துப் படுக்கச் செய்து, மெல்லிய துணியால் தலையுட்பட மேனி முழுவதையும் மூடி மறைத்து, துணியின் ஒரு தலைப்பைத் தலைக்குக் கீழும் மற்றொரு முந்தியை காலின் கீழும் ஆக்குவது சுன்னத்தாகும்.

மௌத்தான நேரம் முதல் குளிப்பாட்டும் வரை அருகில் வாசனைப் புகை போடுவது நல்லது.

மௌத்தான பின் குளிப்பாட்டி முடியும் வரை மய்யித்திற்காக குர்ஆன் ஓதுவதை

நிறுத்திக் கொள்ளவும்-என கல்யூபி, துஹ்ஃபா. நிஹாயா போன்ற கிரந்தங்களில் கூறப்பட்டிருக்கிறது. ஆனால், ஒருவருக்கு சக்ராத்தின் நிலை போன்ற மரணத்தின் அறிகுறிகள் தென்பட்டால் 'அவருக்குப் பக்கத்திலிருந்து மரணம் ஏற்படும் வரை யாஸீன் ஓதுவது சுன்னத்தாகும்.

தொட்டால் உளூமுறியாதவர்கள் மய்யித்தை முத்தமிடலாம். அந்நிய மய்யித்தைத் தொடுவதால் அவர்களுக்கு உளூ முறிந்து விடும்; மய்யித்திற்கு உளூ முறியாது. எனினும், அந்த மய்யித்து ஸாலிஹாயிருந்தால் முத்தமிடுவது சுன்னத்தாகும்.

ஜுனுபாளியும், ஹைளுகாரியும் மய்யித்தைவிட்டும் தூரமாக இருந்து கொள்வார்கள். ஆனால், அவ்விடத்தில் வேறு எவரும் இல்லாதிருந்தால் அவ்விருவரும் இருப்பதினால் குற்றமில்லை. எனினும், ஹைளுக்காரியைத் தடுப்பது பற்றி பலமான சொல் இல்லை. ஆனால், ஜுனுபாளி விலகி இருப்பதுதான் சரியாகும். ஏனெனில் "எந்த வீட்டில் நாயும், உருவப்படமும், ஜுனுபாளியும் இருக்கின்றனவோ அங்கு ரஹ்மத்துடைய மலக்குகள் வரமாட்டார்கள்" என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது. (இந்த விஷயம் வலீமாவின் பாடத்திலும் கூறப்படும்)

(1) மய்யித்தைக் குளிப்பாட்டுவது (2) கஃபனிடுவது, (3) தொழ வைப்பது (4) அடக்குவது இந்த நான்கும் ஃபர்லு கிஃபாயாவாகும். முஸ்லிமான பருவமடைந்த மனிதர்கள் இதனைச் செய்யக் கடமைப்பட்டவர்களாவார்கள். ஒரு மய்யித்தை மலக்குகளோ, ஜின்களோ குளிப்பாட்டி, கஃபனிட்டு, தொழ வைக்கக் கண்டாலும் மனிதர்களின் மீதுள்ள கடமை விழாது. எனினும், விபரமறிந்த சிறிய பையன் இந்த நான்கு ஃபர்லுகளையும் செய்து விட்டால் மற்றெல்லா மனிதர்களின் மீதும் ஏற்பட்ட கடமை நீங்கிவிடும்.

மய்யித்திற்குத் தேவையான கஃபன் மற்றுமுள்ள செலவினங்கள் அனைத்தும் மய்யித்தினுடைய சொந்தப் பொருளிலிருந்தே செய்ய வேண்டும். மனைவிக்கும் அவளுடைய வேலைக்காரிக்கும் (அவளுக்குரிய சொத்திருந்தாலும் சரி) அந்த மய்யித்துகளுக்குச் செலவழிப்பது வசதியுள்ள கணவன் மீது கடமையாகும்.

இறந்து விட்டவருக்கு சொத்து இல்லாவிட்டால் அந்த மய்யித்துடைய வாழ்நாளில் அவருக்கு உணவு உடை அளிப்பது யார் மீது கடமையாயிருந்ததோ அவர் மீது அக்கடமை சாரும். அவ்வாறு எவருமில்லாமலும் சொத்தில்லாமலும் இருந்தால் அந்த மய்யித்திற்குரிய செலவுகள் பைத்துல்மால் என்னும் பொது நிதியைச் சேர்ந்ததாகும். பைத்துல் மால் இல்லாவிட்டால் முஸ்லிம்களில் வசதி பெற்றவரின் மீது கடமையாகும்.

## மய்யித்தைக் குளிப்பாட்டும் முறை

தண்ணீரில் தாழ்ந்து மிதந்த மய்யித்தாக இருப்பினும் மேனி முழுவதும் ஒரு தடவை தண்ணீரை ஓட்டுவது ஃபர்லாகும். கத்னா செய்யப்படாதவராக இருந்தால் தோலினுள் தண்ணீர் செல்லாத நிலையிருந்தால் தயம்மும் செய்விக்க வேண்டும். உள்ளே தண்ணீரைச் செலுத்துவதற்காக மய்யித்தை வருத்தப்படுத்துவது ஹராமாகும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

முஸ்லிமான ஜனாஸாவை ஒரு காஃபிர் குளிப்பாட்டினாலும் அது போதுமாகும். உரியவர் எவருமில்லாத ஆதரவற்ற ஒரு மய்யித்தை அடக்க ஏற்பாடு செய்வதில் ஏராளமான நன்மைகள் இருக்கின்றன.

குளிப்பாட்டுவதில் சிறந்த முறையாவது: மேலே முகடு உள்ள ஓரிடத்தில் ஒரு கட்டில் போன்ற உயரத்தில் மய்யித்தை வைத்து, குளிப்பாட்டுகிறவர்களைத் தவிர, மற்றவர்களை அப்புறப்படுத்தி, ஒரு பழைய போர்வை (இளப் போர்வை)யால் மூடி குளிர்ந்த தண்ணீர் கொண்டு குளிப்பாட்ட வேண்டும். குளிர்ந்த தண்ணீர் என்பது உப்புத் தண்ணீராக இருப்பது சிறந்ததாகும். ஏனெனில், உப்பு உடலை உப்ப விடாமல் தடுப்பதால் உப்புத் தண்ணீர் சிறந்ததென்று கூறப்பட்டிருக்கிறது. உடலில் உள்ள பூச்சுப் பத்து, ஏதேனும் சாயம், அல்லது அழுக்கு ஆகியவற்றை நீக்குவதற்காகவும், அல்லது கூதலாக இருக்கும் காரணத்திற்காகவும், தண்ணீரை வெது வெதுப்பாக்கிக் கொள்வது நல்லது. ஜம்ஜம் நீரினால் குளிப்பாட்டுவது கூடாது என ஜர்கஷீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

குளிப்பாட்டுவதில் ஒற்றைப்படையாய் இருப்பதும், குளிப்பாட்டுபவர்கள் நான்கு பேருக்கு மேல் இல்லாதிருப்பதும், மய்யித்தின் முகத்தை மூடி வைப்பதும், அல்லாஹ்வை திக்ரு செய்வதும், கடைசியில் ஷஹாதத் கலிமா சொல்வதும், குளிப்பாட்டுகிறவர் மய்யித்தை மெதுவாக இருப்பாட்டித் தன்னுடைய வலது முட்டுக்காலில் கொஞ்சம் சாய்த்து வைப்பதும், மய்யித்தில் ஏதேனும் குறையைக் கண்டால் அதனை மறைப்பதும் சுன்னத்தாகும்.

முதலில் மய்யித்தின் மேனியிலுள்ள நஜீஸை நீக்கிக் கொள்ள வேண்டும். குளிப்பாட்டுகிறவர் தன்கையில் ஒரு துண்டுத்துணியைச் சுற்றிக் கொள்ள வேண்டும். உயிருள்ளவர் எவ்விதம் உளூச் செய்வாரோ அவ்விதமே நிய்யத்துச் செய்து ஃபர்லு, சுன்னத்து ஆகியவற்றை நிரப்பமாகச் செய்து உளூச் செய்விக்க வேண்டும்.

குளிப்பாட்டும் தண்ணீர், தண்ணீர்ப் பாத்திரத்தில் தெறிக்காமல் தூரமாக்கிக் கொள்ள வேண்டும். உளூச் செய்து வைக்கும் போது செயலாலும் சொல்லாலும் உள்ள சுன்னத்துகளை மூன்று தடவை ஆக்கிக் கொள்ள வேண்டும் உறுப்புகளுக்குரிய துஆக்களையும் திக்ரையும் சொல்லி உளூச் செய்து அதற்குரிய துஆவை ஓதியபின் கையைக் கீழே போட்டு ஸூரத்துல் 'கத்ர்' என்னும் إِنَّا أَنْزَلْنَاهُ சூராவை 3 தடவை ஓதிக் கொள்வது சுன்னத்தாகும்.

பின்வருவது போல் தனக்கும் மய்யித்திற்கும் சேர்த்து துஆ கேட்க வேண்டும். அதாவது:

اَللّٰهُمَّ اجْعَلْنِيْ وَاِيَّاهُ مِنَ الْمُتَطَهِّرِيْنَ. وَاجْعَلْنِيْ
وَاِيَّاهُ مِنْ عِبَادِكَ الصَّالِحِيْنَ. وَاجْعَلْنِيْ وَاِيَّاهُ
مِنَ الَّذِيْنَ لَاخَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُوْنَ.

இந்த துஆவின் பொருளாவது:

*"யா அல்லாஹ்! என்னையும் இவரையும் பரிசுத்தவான்களில் உள்ளவர்களாக ஆக்கியருள்வாயாக! என்னையும் இவரையும் உன்னுடைய நல்லடியார்களில் உள்ளவர்களாக ஆக்கியருள்வாயாக! என்னையும் இவரையும் அச்சமும் கவலையும் இல்லாதவர்களில் உள்ளவர்களாக ஆக்கியருள்வாயாக!"*

குளிப்பாட்டுகிறவர் தன்னுடைய கலிமா விரலால் மிஸ்வாக் செய்வித்து, சுண்டு விரலால் மூக்கைச் சுத்தம் செய்ய வேண்டும். இலந்தை இலை, சீயக்காய், அரப்பு, சோப்பு போன்றவற்றால் சிரமப்படுத்தாமல் மெதுவாகத் தேய்த்துக் கடப்புச் செய்யாமல் வலப்பக்கம் தொடங்கி, உடல் முழுவதும் மூன்று துடவை தண்ணீரை ஓட்டிக்குளிப்பாட்ட வேண்டும். கடைசியில் சிறிதளவு சூடம் கலந்த தண்ணீரால் குளிப்பாட்ட வேண்டும். குளிப்பாட்டி முடிந்தவுடன் மெல்லிய துணியால் துடைப்பது சுன்னத்து.

தண்ணீர் கிடைக்காவிட்டாலும், அல்லது மய்யித்து நெருப்பில் வெந்திருப்பதினாலோ, அல்லது தண்ணீரில் நீண்டநேரம் கிடந்ததினாலோ அதைக் குளிப்பாட்டுவதால் உடல் சேதமடைந்து விடுமென்றிருந்தாலும் தயம்மும் செய்து வைப்பது வாஜிபாகும். குளிப்பாட்டி முடிந்த பின் கஃபனிடுவதற்கு முன் மய்யித்திலிருந்து ஏதேனும் நஜீஸ் வெளியானால் அதை மட்டும் கழுவுவது வாஜிபாகும். கஃபனிட்ட பிறகு வெளியானால் வாஜிபில்லை. தானே உயிரை மாய்த்துத் தற்கொலை செய்து கொண்டவனாயினும் நான்கு ஃபர்லுகளையும் நிறைவேற்றுவது ஃபர்லாகும்.

ஆண்கள் ஆண்களையும், பெண்கள் பெண்களையும் குளிப்பாட்ட வேண்டும். கணவன், மனைவி இருவரில் ஒருவர் மற்றவரைக் குளிப்பாட்டலாம். எனினும், கையில் ஒரு துண்டுத் துணியைச் சுற்றிக் கொள்வது சுன்னத்தாகும். தொடுவதும் பார்ப்பதும் ஆகுமான சிறுவர் சிறுமியரை யார் வேண்டுமானாலும் குளிப்பாட்டலாம். மய்யித்தைக் குளிப்பாட்டுவதற்கு தகுதியுள்ளவரே அதற்குத் தொழ வைப்பதற்கும் தகுதியானவராவார்.

ஒரு கைப்பிடி மண்ணெடுத்து அதில் 'இன்னா அன்ஜல்னாஹு' சூராவை ஏழு துடவை ஓதி அதில் ஊதி அந்த மண்ணைக் கஃபனில் அல்லது கப்ரில் வைத்து விட்டால் அவருக்குக் கப்ருடைய வேதனை இலேசாக்கப்படும் என்பதாக அல்லாமா புஜைரமீ (ரஹ்) அவர்கள் 'ஃபத்ஹுல் வஹ்ஹாபு' எனும் நூலின் குறிப்புரையில் கூறியுள்ளார்கள்.

# கஃபனிடுதல் பற்றிய விவரம்

கஃபனிடுவதில் பெண்களுக்கு முகமும் மணிக்கட்டுவரை இரு கைகளையும் தவிர மீதியுள்ள உடல் முழுவதையும், ஆண்களுக்கு முழங்காலிலிருந்து தொப்புள் வரைக்கும் மறைப்பது ஃபர்ளாகும்.

ஆண்களுக்குக் கஃபனில் நிரப்பமானது மூன்று அடையவளைந்தானாகும். பெண்களுக்கு நிரப்பமானது இரண்டு அடையவளைந்தானும் ஒரு கைலியும் ஒரு சட்டையும் ஒரு முகமூடியுமாகும். ஆண்களுக்கு ஒரு சட்டையும் ஒரு தலைப்பாகையையும் அதிகமாகவும் ஆக்கிக் கொள்ளலாம்.

இறந்து விட்டவர் கொடுக்க வேண்டிய கடனுக்கு அவர் விட்டுச் சென்ற பொருள் போதவில்லையென்றால் ஒரு அடையவளைந்தானைக் கொண்டு மட்டும் போதுமாக்கிக் கொள்ளலாம். கஃபனில் மிகச் சிறந்தது கிழிசல் இல்லாத கெட்டியான பழைய வெள்ளைத் துணியாகும். அறவே துணி கிடைக்காவிட்டால் தோலால் கஃபனிடலாம். தோலும் கிடைக்காவிடில் இலை தழைகளின் மூலம் மறைக்க வேண்டும். அதுவும் இல்லாவிடில் களிமண்ணைக் கொண்டு பூசுவது வாஜிபாகும்.

பெண்களுக்கும் சிறு குழந்தைகட்கும் பட்டுத் துணியினால் கஃபனிடுவது மக்ரூஹ். பெண்களின் ஜனாஸாவாக இருந்தாலும் பட்டினால் மறைப்பது ஹராம். அவ்வாறே வெள்ளி, தங்க ஜரித்துணியால் மறைப்பதும் ஹராமாகும்.

ஜனாஸாவுடைய நெற்றியில் தண்ணீரினால் 'லாஇலாஹ இல்லல்லாஹு' என்றும், நெஞ்சில் 'முஹம்மதுர் ரசூலுல்லாஹ்' என்றும் எழுதுவது வழக்கத்தில் இருந்து வருகிறது; அது நல்லதுதான்; அதனைத் தடுப்பதற்கு ஆதாரமில்லை. மேனியிலோ, கஃபனிலோ குர்ஆனை அல்லது கண்ணியமான அஸ்மாக்களை மையினால் எழுதுவது ஹராமாகும்.

கஃபனை அம்பர், சாம்பிராணி போன்றவற்றால் மூன்று தடவை புகைப் பிடிப்பதும் அடையவளைந்தானை ஒவ்வொன்றாக விரித்து அதில் பல மணத்தை வைப்பதும், ஜனாஸாவுடைய உடல் துவாரங்களிலும், ஸஜ்தாவுடைய ஏழு உறுப்புகளின் மீதும் சூடத்துடன் கலந்து பஞ்சை மெதுவாக வைப்பதும், பிறகு அதற்கு மேல் சூடத்தை அதிகமாக வைப்பதும், ஜனாஸாவை மெதுவாக கஃபனில் வைத்து முகம் கவிழ்க்காமல் கஃபனிடுவதும் சுன்னத்தாகும்.

ஸஜ்தாவுடைய இடங்கள்:- நெற்றி, இருகைகள், இரு கால்கள்,இரு முழங்கால்கள், ஆகியவையாகும்.

துவாரங்கள்:- கண்கள், மூக்கு துவாரங்கள், காதுகள், வாய், முன் துவாரம், பின் துவாரம், ஆகியவையாகும்.

காயங்கள்பட்ட இடங்களிலும் மேற் கூறப்பட்ட வாசனைப் பொருட்களை வைப்பது சுன்னத்தாகும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

கஃபனில் தலைப்பக்கம், கால்பக்கம் ஆகிய இரு பக்கங்களையும் துண்டுக்கரையால் கட்டுவது சுன்னத்தாகும்.

ஜனாஸாவில் இருவகை இருப்பதில் நம் நாட்டில் வழமையான சந்தூக்கு என்னும் பெட்டகத்தில் அதன் தலைப்புறத்தில் மய்யித்தின் தலையை வைக்க வேண்டும். அப்படி வைக்காமல் தலைகீழாக மாற்றி வைப்பது ஹராமாகும். பெட்டகத்தின் தலைப்புறத்தில் மய்யித்தின் தலையை வைத்து ஜனாஸாவைத் தூக்கிச் செல்பவர்கள் கிப்லாவுக்கு மாறி நடக்கும் பொழுது மய்யித்தின் கால்கள் கிப்லாவை முன்னோக்கியதாக ஆகிவிட்டாலும் பெட்டகத்தின் தலைப்பக்கத்தில் தான் மய்யித்தின் தலையை வைக்க வேண்டும்.

ஜனாஸாவை மூன்று நபர்களுக்குக் குறைவாகச் சுமந்து செல்வது மக்ரூஹ் ஆகும். எனினும் கைகளில் ஏந்திச் செல்லப்படும் குழந்தையாக இருந்தால் மூன்று நபர்களுக்குக் குறைவாக இருப்பது கூடும். தேவைக்குத் தகுந்தாற் போல் அதிகப்படுத்திக் கொள்ளலாம்.

ஜனாஸாவைத்தொடர்ந்து செல்பவர்கள் அதனைச்சேர்ந்தார்ப்போல் முன்னால் கால் நடையாய்ச் செலவதும், மரணத்தை நினைத்து அதற்காகச் சேமிக்க வேண்டுமென்ற தவ்பாச் செய்கிற நல்லெண்ணத்துடன் செல்வதும், விரைந்து ஓடாமல் மெதுவாக திக்ரு செய்து கொண்டு செல்வதும் சுன்னத்தாகும்.

திக்ரு, ஷஹாதத் கலிமா சொல்லிக் கொண்டு செல்வதில் வழக்கத்தைப் போல் செய்யலாம்; ஆனால் சுடப்பின்றி இரைந்து சொல்லலாம் என்று ஹுஸைனுல் அஹ்தலீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

ஜனாஸாவுடன் சாம்பிராணி புகைச் சட்டியைக் கொண்டு செல்வதும், சப்தமிட்டுக் கொண்டு செல்வதும், கப்ருக்குப் புகை பிடிப்பதும் மக்ரூஹ் ஆகும். உடன் செல்லாதவர் அதற்காக எழுந்து நிற்பது மக்ரூஹ் என்று சில உலமாக்கள் கூறியிருப்பினும், பல உலமாக்கள் ஜனாஸா காஃபிராக இருந்தாலும் எழுந்து நிற்பதை அழகாகக் கருதியுள்ளார்கள். ஏனெனில் மனிதன் என்பவன் முதலில் ஆதம் (அலை) அவர்களுடைய விந்திலிருந்து தோன்றியவனாக இருக்கிறான் என்பதால்.

ஜனாஸா தொழுகை நடைபெறும் பொழுது அவ்விடத்தில் தொழாமல் இருந்தவன் பிறகு அதனைத் தொழுவது சுன்னத்தாகு மென்றிருந்தாலும் அவனுக்கு ஃபர்லாகவே ஆக்கப்படும். எனவே, ஃபர்லென்றே நிய்யத்துச் செய்வான். ஃபர்ளுடைய கூலியும் அவனுக்குக் கொடுக்கப்படும். ஒருவன் ஜனாஸா தொழுகையைத் தனித்து தொழுதவனாக இருந்தால்' பிறகு ஜமாஅத்துடன் சேர்ந்து தொழுவது ஏற்றத்திற்கு மாற்றமாகும்.

இமாமுடன் துவக்கும் முதல் சேர்ந்து தக்பீர் கட்டிய (ஒற்றுமையான) ஒரு மஃமூம்,

தன்னுடைய இமாம் மற்றொரு தக்பீரை ஆரம்பிக்கும் வரை எவ்வித தங்கடமுமின்றி ஒரு தக்பீருக்குப் பிந்தினால் அவருடைய தொழுகை பாத்திலாகி விடும். ஆனால், மறதியினால் ஒரு தக்பீர் அல்லது இரண்டு தக்பீர் பிந்தினாலும் தொழுகை முறியாது. அவ்வாறே ஒரு தக்பீருக்கு முந்தினாலும் அல்லது ஐந்தாவது தக்பீர் கூறினாலும் தொழுகை முறியாது.

இமாம் ஐந்தாவது தக்பீர் கூறினால் அவரைத் தொடருவது சுன்னத்தாகாது. இருப்பினும் அவர் ஸலாம் கொடுக்கும் வரை அவரை எதிர்பார்த்திருப்பது ஏற்றமாகும்.

மஸ்பூக் (பின்னால் வந்து சேர்ந்தவன்) சூரத்துல் ஃபாத்திஹா ஓதி முடிக்கும் முன் இமாம் அடுத்த தக்பீரை ஆரம்பித்துவிட்டால் அவரைத் தொடர்ந்தே செல்வான். ஃபாத்திஹா ஓதுவது அவனைவிட்டும் விழுந்து விடும். ஃபாத்திஹாவை பூர்த்தி செய்வது தேவையில்லை.

இமாம் ஸலாம் கொடுத்தபின் மஸ்பூக் மீதியைத் தொழ வேண்டும். அப்பொழுது அந்தந்தத் தக்பீருக்குப் பின்னால் ஓத வேண்டிய வாஜிபான கிராஅத்தை வாஜிபாகவும். சுன்னத்தான திக்ருகளை சுன்னத்தாகவும் கொண்டு வருவான். ஜனாஸாவை எடுத்துக் கொண்டு போய்விட்டாலும் மஸ்பூக் தன்னுடைய மீதியை தொழுது முடிக்க வேண்டும். ஆனால், தொழுது முடிக்கும் வரை ஜனாஸாவைத் தூக்கிச் செல்லாமலிருப்பது சுன்னத்தாகும்.

விபரமறிந்த ஆனால் பருவமடையாத சிறுவர்கள் மட்டும் ஜனாஸா தொழுது விட்டாலும் மற்றவர் மீது கடமை நீங்கி விடும். அவ்விடத்தில் பருவமடைந்தவர்கள் இருந்தாலும் சரியே. ஆனால் பருவமடைந்த ஆண்கள் அவ்விடத்தில் இருக்கும் நிலையில் பெண்கள் தொழுவதால் மற்றவரின் கடமை நீங்காது.

பல ஜனாஸாக்களுக்கு ஒரு தொழுகை போதுமானது. அனைவருக்கும் தொழுவதாக நிய்யத்துச் செய்து கொள்வான். அல்லது இத்தனை ஜனாஸாக்களுக்குத் தொழுகிறேன் என்று நிய்யத்துச் செய்யலாம். ஆனால், குறிப்பிட்ட ஜனாஸாக்களை விட அதிகமாக இருந்தால் அந்தத் தொழுகையே கூடாது.

ஜனாஸாவை அடக்கிய பின் தொழுவது ஹராமாகும். ஆனால் கப்ரின் அருகில் தொழுதால் ஃபர்ளு நீங்கி விடும்.

ஜனாஸாவைக் கண்டவுடன் பின்வருமாறு கூறுவது சுன்னத்தாகும்:

لَآ إِلٰهَ إِلَّا اللّٰهُ سُبْحَانَ الْحَيِّ الَّذِيْ لَا يَمُوْتُ .

அல்லது பின்வருமாறு கூறுவதும் சுன்னத்தாகும்:

سُبْحَانَ الْحَيِّ الَّذِيْ لَا يَمُوْتُ . سُبْحَانَ الْمَلِكِ الْقُدُّوْسِ

## ஜனாஸா தொழுகை பற்றிய விபரம்

ஜனாஸாவுக்குரிய நான்கு ஃபர்ளுகளில் மூன்றாவது, தொழவைப்பதாகும். அதற்கு ஏழு ஃபர்ளுகள் உள்ளன.

1) நிய்யத்துச் செய்தல், ஜனாஸா முன்னிலையில் இருந்தால் அதற்குத் தொழவைப்பதை மட்டும் நிய்யத்துச் செய்வான். நிய்யத்தாவது:

أُصَلِّي الْفَرْضَ عَلٰى هٰذَا الْمَيِّتِ اَرْبَعَ تَكْبِيْرَاتٍ
لِلّٰهِ تَعَالٰى اَللّٰهُ اَكْبَرُ

இந்த மய்யித்திற்காக ஃபர்ளான தொழுகையை நான்கு தக்பீர்களாகத் தொழுகிறேன்.

ஜனாஸா மறைவானதாக இருந்தால் அதன் பேர் போன்றதை நிய்யத்துச் செய்வது வாஜிப் எனச் சிலர் கூறியுள்ளனர்.

2) நிற்பதற்குச் சக்தியுள்ளவர் நின்று தொழுவது.

3) முதல் தக்பீரைச் சேர்த்து நான்கு தக்பீர்கள் கட்டுவது.

4) முந்திய தக்பீருக்குப் பிறகு சூரத்துல் ஃபாத்திஹா ஓதுவது. இதில் அஊதுபில்லாஹி ஓதுவதும், தக்பீரைத் தவிர மற்ற திக்ருகளை மெதுவாக ஓதுவதும், சுன்னத்தாகும். வஜ்ஜஹ்த்தை விடுவதும் சுன்னத்தாகும். இரவில் தொழுதாலும் மெதுவாகவே ஓத வேண்டும். மறைவான ஜனாஸாவிற்கோ, அல்லது கப்ரின் அருகிலோ தொழுவதானால் வஜ்ஜஹ்த்தும் சூரத்தும் ஓதலாம்.

5) இரண்டாம் தக்பீருக்குப் பிறகு சலவாத்து ஓதுவது, அதில் நிரப்பமாவது,

اَلْحَمْدُ لِلّٰهِ اَللّٰهُمَّ صَلِّ وَسَلِّمْ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّاٰلِهٖ

என்று கூறி, பிறகு

اَللّٰهُمَّ اغْفِرْ لِلْمُؤْمِنِيْنَ وَالْمُؤْمِنَاتِ .

என்று ஓதுவதாகும்.

6) மூன்றாவது தக்பீருக்குப் பிறகு மய்யித்துக்கு துஆ செய்வதாகும். அது குழந்தையாயினும் சரியே. அதாவது:

اَللّٰهُمَّ اغْفِرْ لَهُ وَارْحَمْهُ ———————— என்று ஓதினால் போதுமானது. ஆனால் ஹதீஸில் வந்துள்ள துஆவை ஓதுவது சுன்னத்தாகும்.

7) நான்காம் தக்பீருக்குப்பின் ஸலாம் கொடுப்பது. ஸலாம் கொடுப்பதற்கு முன்

اَللّٰهُمَّ لَا تَحْرِمْنَا اَجْرَهُ وَلَا تَفْتِنَّا بَعْدَهُ وَاغْفِرْ لَنَا وَلَهُ.

என்று ஓதிக் கொள்வது சுன்னத்தாகும்.

மூன்றாம், தக்பீருக்குப் பிறகு **ஓதும்** துஆக்களில் ஏற்றமானது ஹதீஸில் வந்துள்ள அடுத்து வரும் துஆ வாகும்:

اَللّٰهُمَّ اغْفِرْ لَهُ وَارْحَمْهُ وَاعْفُ عَنْهُ وَعَافِهِ وَاَكْرِمْ
نُزُلَهُ وَوَسِّعْ مُدْخَلَه وَاغْسِلْهُ بِالْمَآءِ وَالثَّلْجِ
وَالْبَرَدِ. وَنَقِّهِ مِنَ الْخَطَايَا كَمَا يُنَقَّى الثَّوْبُ الْاَبْيَضُ
مِنَ الدَّنَسِ. وَاَبْدِلْهُ دَارًا خَيْرًا مِّنْ دَارِهِ. وَاَهْلًا
خَيْرًا مِّنْ اَهْلِهِ. وَزَوْجًا خَيْرًا مِّنْ زَوْجِهِ. وَاَدْخِلْهُ
الْجَنَّةَ وَاَعِذْهُ مِنْ عَذَابِ الْقَبْرِ وَفِتْنَتِهِ وَمِنْ
عَذَابِ النَّارِ. اَللّٰهُمَّ اغْفِرْ لِحَيِّنَا وَمَيِّتِنَا وَشَاهِدِنَا
وَغَآئِبِنَا وَصَغِيْرِنَا وَكَبِيْرِنَا وَذَكَرِنَا وَاُنْثَانَا. اَللّٰهُمَّ
مَنْ اَحْيَيْتَهُ مِنَّا فَاَحْيِهِ عَلَى الْاِسْلَامِ. وَمَنْ تَوَفَّيْتَهُ
مِنَّا فَتَوَفَّهُ عَلَى الْاِيْمَانِ.

"யா அல்லாஹ், இவருக்கு நீ மன்னிப்பளித்து கிருபையும் செய்வாயாக! இவரை விட்டும் பாவங்களைப் போக்கி இவருக்கு சுகமளிப்பாயாக! இவர் தங்கும் இடத்தை கண்ணியப்படுத்தி இவர் நுழையும் இடத்தை விசாலமாக்குவாயாக! இவரை தண்ணீர், பனிக்கட்டி, ஆலங்கட்டி ஆகியவை கொண்டு கழுவி விடுவாயாக. வெள்ளைத் துணி அழுக்கை விட்டும் சுத்தமாக்கப்படுவதுபோல் தவறுகளை விட்டும் இவரைச் சுத்தப்படுத்துவாயாக! இவருடைய (உலக) வீட்டை விடச் சிறந்த வீட்டையும் இவருடைய குடும்பத்தை விடச் சிறந்த குடும்பத்தையும், இவருடைய ஜோடியை விடச் சிறந்த ஜோடியையும் இவருக்குப் பகரமாக்குவாயாக! சொர்க்கத்தில் இவரை நுழையச்

செய்து, கப்ருடைய வேதனையை விட்டும், அதன் குழப்பத்தை விட்டும், நரக வேதனையை விட்டும் இவரை நீ பாதுகாப்பாயாக!

யா அல்லாஹ், எங்களில் உயிராயிருப்பவருக்கும், இறந்து விட்டவருக்கும் எங்களில் முன்னிலையில் இருப்பவருக்கும், மறைவானவருக்கும், எங்களில் சிறியவருக்கும், பெரியவருக்கும், எங்களில் ஆணுக்கும், பெண்ணுக்கும் நீ மன்னிப்பருள்வாயாக! யா அல்லாஹ், எங்களில் எவரை நீ உயிர் வாழச் செய்கிறாயோ அவரை இஸ்லாத்தின் மீது வாழச் செய்வாயாக! எங்களில் எவரை மரணிக்கச் செய்கிறாயோ அவரை ஈமானின் மீது மரணிக்கச் செய்வாயாக!»

மய்யித்து சிறு குழந்தையாக இருந்தால் மேற்கூறிய துஆவுடன் பின்வரும் துஆவையும் ஓத வேண்டும்:

اَللّٰهُمَّ اجْعَلْهُ فَرَطًا لِاَبَوَيْهِ وَسَلَفًا وَّذُخْرًا وَّعِظَةً ـ
وَّاعْتِبَارًا وَّشَفِيْعًا. وَثَقِّلْ بِهٖ مَوَازِيْنَهُمَا وَاَفْرِغِ الصَّبْرَ
عَلٰى قُلُوْبِهِمَا وَلَا تَفْتِنْهُمَا بَعْدَهٗ وَلَا تَحْرِمْهُمَا اَجْرَهٗ.

"யா அல்லாஹ், இதனை இதன் பெற்றோருக்கு முன்னோடியாகவும், சேமிப்புப் பொருளாகவும், உபதேசமாகவும், படிப்பினையாகவும், பரிந்துரை செய்யக்கூடியதாகவும் ஆக்கிடுவாயாக! இதன் மூலம் அவ்விருவரின் நன்மைத் தட்டுகளை கனமாக்கி வைப்பாயாக! அவ்விருவருடைய இதயங்களின் மீது பொறுமையை ஊட்டுவாயாக! இக்குழந்தைக்குப் பின் அவ்விருவரையும் நீ குழப்பத்திலாக்கி விடாதே! இதனுடைய கூலியை எங்களுக்கு நீ தடை செய்திடாதே!»

அது ஜினாவில் பிறந்தது என்று தெரிந்தால் اَللّٰهُمَّ اجْعَلْهُ فَرَطًا لِاُمِّهٖ என்று சொல்லி அதற்குப் பின்னுள்ளதை ஓதவும்.

## ஜனாஸா தொழுகையை ஜமாஅத்தாகத் தொழும் முறை

தொழுபவர்கள் மூன்று வரிசைகளுக்குக் குறையாமல் இருப்பது சுன்னத்து. நாற்பது நபர்கள் கூடித் தொழுதால் மய்யித்திற்கும், தொழுபவர்களுக்கும் ஏராளமான நன்மைகள் உண்டு.

ஜனாஸா தொழுகைக்கு ஸஃப் ( صَفّ ) நிறுத்துவது மற்ற தொழுகைகளைப் போலவே இடைவெளி இருக்க வேண்டும். எனினும் மக்கள் அதிகமாகக் கூடி இடமும் நெருக்கடியாக இருந்தால்- ஸஃப்-களுக்கிடையில் இடைவெளியைக் குறைத்து நெருங்கி நிற்கலாம். ஆனால் ஜமாஅத்துக்கு அதிகமான பேர் வரவேணுமென்று எதிர்பார்த்துத் தொழுகையைப் பிற்படுத்துவது கூடாது. மய்யித்துடைய உடல் கெட்டுவிடுமென்றிருந்தால் பிற்படுத்துவது ஹராமாகும்.

நூறுபேர் சேர்ந்து தொழுதால் அந்த மய்யித்தின் பேரில் அவர்கள் செய்யும் துஆவும், சிபாரிசும் ஏற்றுக் கொள்ளப்படுமென்று ஒரு ஹதீஸ் வந்திருக்கிறது. நாற்பது பேரின் துஆவும் சிபாரிசும் அவ்விதம்தான்.

மய்யித்துடைய உடல் கெட்டு விடாதென்றிருந்தால் நூறு பேர் அல்லது நாற்பது பேர் வருவதை எதிர்பார்த்து சிறிது நேரம் தாமதிப்பது உசிதமாயிருக்கும்.

மய்யித்துத் தொழுகை ஜமாஅத் நடக்கும் பொழுது அவ்விடம் இருந்து கொண்டு ஜமாஅத்தில் சேர்ந்து தொழாத ஒருவன் பின்னாலாவது அதைத் தொழுவது அவனுக்கு சுன்னத்தாகும். எனினும் அதை அவன் ஃபர்ளாக நினைத்து ஃபர்ளென்றே நிய்யத்துச் செய்து கொள்வான். ஃபர்ளுக்குரிய கூலியும் அவனுக்குக் கொடுக்கப்படும்.

மய்யித்துத் தொழுகையை தனித்துத் தொழுதுவிட்டவனுக்கு மீண்டும் ஜமாஅத்துடன் தொழுவது சுன்னத்தில்லை. எனினும் அப்படி அவனாக ஜமாஅத்தில் சேர்ந்து தொழுதால் அவன் ஒரு சுன்னத்தை நிறைவேற்றியவனாகவே கருதப்படுவான்.

கடல், கிணறு போன்றவற்றில் விழுந்து இறந்துவிட்டவனை எடுக்கவோ, குளிப்பாட்டவோ, தயம்மும் செய்விக்கவோ முடியாமல்போய் விட்டால் சரியான சொற்படி தொழ வைக்க வேண்டியதுமில்லை.

ஜனாஸாவிற்கென்று வந்தவர்கள் அங்கு வீண் பேச்சுகள் பேசிக் கொண்டிருந்தால் அவர்கள் முறை தவறியவர்களாவார்கள். அவர்களுடைய மரணத்திற்குப்பின் இவ்வாறே அவர்களுக்கும் மரியாதைக் குறைவான செயலை இறைவன் நடத்தி வைக்க இயன்றவன் என்பதை உணர்ந்து பயந்து கொள்ள வேண்டும்.

மய்யித்திற்கு உரிமையானவன் வெளியூரிலிருந்தால், மய்யித்துக் கெட்டுவிடுமுன் வந்து சேர்ந்திடுவான் என்ற நம்பிக்கையிருந்தால் தொழுகையைச் சற்று நேரம் பிற்படுத்தலாம்.

ஜனாஸா தொழுகைக்கு மற்ற தொழுகைக்குரிய ஷர்த்துகளுடன் வேறு இரு ஷர்த்துகளுண்டு 1) குளிப்பாட்டுதல்; அல்லது தயம்மும் செய்தல். இது தொழுகைக்கு முந்திவிட வேண்டும். 2) தொழுகைக்கு நிற்பவர் மய்யித்தை முந்தாமல் இருத்தல். கப்ருக்கு அருகில் தொழுதாலும் சரி.

அந்த ஊரை விட்டும் மறைவான வேறு ஊரில் இறந்தவருக்கு தொழ வைக்கலாம். ஆனால், பெரும் பட்டணமாக இருந்தாலும் அவ்விடத்திலும், அதனைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் மய்யித்து ஆஜராக இல்லாமல் தொழவைக்கக் கூடாது. அது அடக்கப்பட்டு விட்டாலும் நாயிப் غَائِبٌ ஜனாஸா தொழுகையும் தொழக்கூடாது.

## மய்யித்துத் தொழுகை தொழ வைக்க முற்படுத்தப்படவேண்டியவர் விபரம்

தொழ வைப்பதற்கு தந்தை முதலாவதாக முற்படுத்தப்படுவார். பிறகு மகன், பிறகு மகனுடைய மகன், பிறகு சகோதரன், பிறகு உரிமைவிட்ட எஜமான். பிறகு மகளின் மகன், சகோதரியின் மகன், தாய்மாமன், தாயின் தகப்பன் போன்ற ( ذَوُوالْأَرْحَامِ

எனும்) உறவினர்கள். பிறகு கணவன், பிறகு இவர்களுடைய அனுமதி பெற்றவர்கள். இறந்து விட்டவர் உயிருடனிருக்கும் பொழுது, தான் இறந்துவிட்டால் இன்னார் தொழவைக்க வேண்டுமென்று வஸிய்யத்துச் செய்திருந்தால் அவர் முற்படுத்தப்படுவார்.

மய்யித்து ஆணாக இருந்தால் இமாமும் தனியாக தொழுபவரும் மய்யித்தின் தலைக்கு நேராக பின்னால் நிற்க வேண்டும். பெண்ணாக இருந்தால் இடுப்புக்கு நேராக நிற்க வேண்டும். இது சுன்னத்தாகும்.

மய்யித்து அழுகி கெட்டு விட்டபின் அதிலிருந்து நஜீஸ் வெளிப்படாதென்றிருந்தால் பள்ளியினுள் வைத்து தொழ வைப்பது சிறப்பாகும்.

குளிப்பாட்டாமலும் தயம்மும் செய்யாமலும் அடக்கப்பட்டு விட்டால் கப்ரைத் தோண்டி எடுத்து நான்கு ஃபர்ளுகளையும் நிறைவேற்றுதல் அவசியமாகும். ஆனால் உடல் அழுகி விட்டால் தேவையில்லை.

இறந்து விட்ட ஒரு பெண்ணின் வயிற்றில் குழந்தை இருக்கும்பொழுது அக்குழந்தை இறந்து விட்டதென உறுதியாகும் வரை அப்பெண்ணை அடக்கக் கூடாது. அது உயிருடனிருக்கிறது என்பது உறுதியானால் வயிற்றைக் கிழித்து அக்குழந்தையை எடுத்த பின்னர் தான் அடக்க வேண்டும்.

காஃபிர்களுடைய சிறு குழந்தைகள்-பருவமடையுமுன் கலிமாச் சொல்லி இறந்து விட்டால் கட்டாயமாகக் கஃபனிட்டு அடக்க வேண்டும். அதனைக் குளிப்பாட்டுவதும் ஆகும். நான்கு மாதங்கள் முடியும் முன் விழுந்த கட்டியும் அவ்விதம்தான். நான்கு மாதங்கள் முடிந்திருந்தால் குளிப்பாட்டிக் கஃபனிட்டு அடக்குவது வாஜிபாகும். அது வெளிவரும் பொழுது சிறிதளவு துடித்திருந்தாலும், அல்லது சப்தமிட்டிருந்தாலும் ஜனாஸாவின் நான்கு ஃபர்ளுகளையும் அதற்கு நிறைவேற்றுவது ஃபர்ளாகும்.

இரத்தக்கட்டி, சதைக்கட்டி, மய்யித்தின் பல், நகம் ஆகியவற்றையும் புதைப்பது சுன்னத்தாகும். விழுபிள்ளை என்பது இரத்தக்கட்டிக்கும் சதைக்கட்டிக்கும் பின்னுள்ள நிலையாகும்.

மய்யித்தை ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குக் கொண்டு செல்வது அது நல்ல நிலையிலிருந்தாலும், அல்லது வஸிய்யத்துச் செய்திருந்தாலும் ஹராமாகும்.

தனியாக கண்டெடுக்கப்பட்ட ஓர் உடலுறுப்பு முஸ்லிமுடையது தான் என்று உறுதியாகத் தெரிந்தால் அதனைக் குளிப்பாட்டி கஃபனிட்டுத் தொழவைத்து அடக்கம் செய்ய வேண்டும். அதாவது: அந்த உறுப்புக்குரியவருக்குத் தொழ வைப்பது என்ற நிய்யத்தில் தொழ வைக்க வேண்டும். அதன் பிறகு அந்த உடலோ அல்லது வேறு உறுப்புகளோ எடுக்கப்பட்டால் முந்திய தொழுகையே போதுமானது. ஆனால் குளிப்பாட்டுதல், அல்லது தயம்மும் செய்தல் தொழுகைக்கு முந்தி நடந்திருக்க வேண்டும். அது ஷர்த்தாகும்.

## மய்யித்தை அடக்கம் செய்யும் முறை

4) நான்காவது ஃபர்ளு அடக்கம் செய்வது. கப்ருடைய ஆழத்தில் குறைந்த அளவாகிறது ஜனாஸாவின் நாற்றம் வெளியில் வராமலும், ஐவாய் மிருகங்கள் தோண்டி எடுத்து விடாத அளவிலும் இருப்பதாகும். இதில் நிரப்பமாகிறது:

"சுமார் நாலரை முழம் ஆழமும் ஒன்றரை முழ அகலமும் உள்ளதாகும். கப்ருடைய அடிபாகத்தில் கிப்லாவின் புறத்தில் பிள்ளைக்குழி தோண்டி அதில் ஜனாஸாவை நுழைய வைப்பது சிறந்ததாகும். கெட்டியான பூமியாக இருந்தால் இவ்வாறு தோண்டலாம். இல்லாவிட்டால் கப்ரின் நடுவில் மய்யித்துக்கு அளவான குழியைத் தோண்ட வேண்டும். பெட்டியில் வைத்து அடக்குவது மக்ருஹ். பூமி மணற்பாங்கானதாக, அல்லது தண்ணீர் ஊறும்படியானதாக இருந்தால் தவிர."

மண்வெட்டி அல்லாத கருவிகளால் கப்ரைத் தோண்டுவதும் மூடுவதும் மக்ருஹ். கப்ரில் ஜனாஸாவை இறக்கும் பொழுது தேவையான அளவுக்கு ஆட்கள் ஒற்றைப்படையாக இருந்து, கப்ரின் கால்மாட்டின் பக்கமாக மய்யித்தின் தலையைக் கொண்டு போய் கப்ருக்குள் இறக்கிவைத்து ஒரு திரையினால் மூடிக் கொண்டு, வலது கன்னத்தை விட்டும் கஃபனை நீக்கி மண்ணில் அதனைச் சேர்த்து வைத்து, பச்சைச் செங்கல் போன்றதை தலைக்குத் தலையணை போன்று வைத்து, கட்டுகளை அவிழ்த்து விட்டு, பிறகு பிள்ளைக் குழியைச் செங்கல் போன்றவற்றால் அடைப்பது சுன்னத்தாகும். சுட்ட செங்கல்லையோ, அல்லது நெருப்பில் வெந்த ஏதேனும் ஒரு பொருளையோ கப்ருக்குள் வைப்பது நான்கு இமாம்களிடத்திலும் மக்ருஹ் ஆகும்.

கப்ரில் மய்யித்தின் முகத்தை கிப்லாவுக்கு நேராகத் திருப்பி வைப்பது வாஜிபாகும். ஏதேனும் ஒரு மய்யித் கிப்லா அல்லாத திசையில் முகந்திருப்பி அடக்கப்பட்டு விட்டால் அந்த கப்ரைத் தோண்டி கிப்லாவின் பக்கம் முகத்தைத் திருப்பி வைப்பது வாஜிபாகும். ஆனால் அந்த மய்யித்தின் உடல் நிலையில் மாறுதல் தோன்றியிருந்தால் அவ்வாறு செய்வது கூடாது.

கப்ரில் மய்யித்தை இறக்கும் போது

بِسْمِ اللّٰهِ وَعَلٰى مِلَّةِ رَسُوْلِ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ.

என்று சொல்வது சுன்னத்து. அதன் பிறகு பின்வரும் துஆவை ஓத வேண்டும்:

اَللّٰهُمَّ اَسْلَمَهُ اِلَيْكَ الْاَشِحَّآءُ مِنْ اَهْلِهٖ وَقَرَابَتِهٖ
وَاِخْوَانِهٖ. وَفَارَقَهُ مَنْ كَانَ يُحِبُّ قُرْبَهُ. وَخَرَجَ
مِنْ سَعَةِ الدُّنْيَا وَالْحَيٰوةِ اِلٰى ظُلْمَةِ الْقَبْرِ وَضِيْقِهٖ
وَنَزَلَ بِكَ وَاَنْتَ خَيْرُ مَنْزُوْلٍ بِهٖ. وَاِنْ عَاقَبْتَهُ
فَبِذَنْبِهٖ. وَاِنْ عَفَوْتَ عَنْهُ فَاَنْتَ اَهْلُ الْعَفْوِ وَاَنْتَ

غَنِيٌّ عَنْ عَذَابِهِ وَهُوَ فَقِيْرٌ اِلَى رَحْمَتِكَ يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ.

"யா அல்லாஹ்! இவருடைய நலவை நாடிய மனைவி, மக்கள், உறவினர், சகோதரர் ஆகியோர் உன்னிடம் இவரை ஒப்படைத்து விட்டார்கள். இவரிடம் நெருங்கியிருப்பதை விரும்பியவர் இவரைப் பிரிந்து விட்டனர். உலக வாழ்வின் விசாலத்தை விட்டும் கப்ருடைய இருளின் பக்கமும் அதனுடைய நெருக்கடியின் பக்கமும் இவர் புறப்பட்டு வந்து விட்டார். இவர் உன்னருகில் தங்கியுள்ளார். நீயே இவருக்குச் சிறந்த விருந்தோம்பல் செய்பவன். இவரை நீ தண்டித்தால் அது அவருடைய பாவத்தின் காரணமாகும். இவரை நீ மன்னித்தால் அப்பொழுது நீ மன்னிக்கத் தகுதியானவன்தான்; இன்னும் நீ இவரை வேதனை செய்வதை விட்டும் தேவையற்றவன். இவரோ உன்னுடைய ரஹ்மத்தின் பால் தேவையானவர். கிருபையாளர்களிலெல்லாம் மிகுந்த கிருபையாளனே!"

மய்யித்தை கப்ரில் இறக்கும் பொழுது பாங்கும் இகாமத்தும் சொல்வது சுன்னத்தென்பது பலவீனமான சொல்லாகும்.

முன்னால் அடக்கப்பட்ட மய்யித்து முற்றிலும் மக்கி அழிவதற்கு முன் அந்தக் கப்ரைத் தோண்டுவதும், அதில் வேறொரு மய்யித்தை அடக்குவதும் ஹராமாகும். சில முக்கியமான காரியங்களுக்காகவே தவிர பொதுவாகக் கப்ரைத் தோண்டுவது ஹராம். அவையாவன:

* குளிப்பாட்டாமல் அடக்கியிருந்தால்,
* முதலில் அடக்கப்பட்ட மய்யித்து முற்றிலும் மக்கிப்போயிருந்தால்,
* வம்பாக அபகரிக்கப்பட்ட பிறருடைய நிலத்தில் அல்லது உடையில் அடக்கப்பட்டிருந்தால்,
* பிறருடைய பொருளை அவன் வயிற்றில் விழுங்கியிருந்தால்,
* கப்ரில் ஒரு மோதிரம் போன்ற பொருள் விழுந்திருந்தால்,
* கிப்லா அல்லாத திசையில் அடக்கப்பட்டிருந்தால்,
* ஒரு காஃபிரை ஹரம் ஷரீஃபின் பூமியில் அடக்கியிருந்தால்,
* வாரிசுக்காரர்கள், அடக்கப்பட்டவர் ஆணா, பெண்ணா என்று தர்க்கம் செய்து கொண்டால்,
* வயிற்றில் குழந்தையுடன் ஒரு பெண் அடக்கப்பட்டு, அக்குழந்தை உயிருடனிருக்கிறது; உயிருடன் அதனை வயிற்றிலிருந்து வெளியே எடுக்க முடியும் என்ற நம்பிக்கையிருந்தால்,
* ஒருவன், கர்ப்பமுற்றிருக்கும் தன் மனைவியை நோக்கி உன் வயிற்றிலிருப்பது ஆணாக இருந்தால் நீ தலாக் என்று சொல்லியிருக்க, அவள் இறந்து, அதனை அறிவதற்கு முன் அடக்கப்பட்டு விட்டால்,

ஆக இத்தகைய நிர்பந்தமான நிலைகளில் கப்ரைத் தோண்டலாம்.

ஒரு கப்ரைத் தோண்டிக் கொண்டிருக்கும்போதே எலும்பு காணப்பட்டால் அந்த எலும்பை அதே இடத்தில் போட்டு மூடி விட்டு, வேறு இடத்தில் கப்ரு தோண்டுவது வாஜிபாகும்.

ஒரே கப்ரில் ஆண், பெண், இருவரை அடக்குவது ஹறாமாகும். ஆனால் திருமணம் செய்ய ஹறாமானவர்களாக இருந்தால், அல்லது கணவன் மனைவியாக இருந்தால் அவ்வாறு அடக்கலாம்.

கப்ரின் நடுவில் குழி அமைத்து அடக்கப்பட்டால் மய்யித்தின் மீது மண் விழாதவாறு பச்சைச் செங்கல் போன்றதை வைத்து அடைப்பது வாஜிபாகும்.

கப்ரின் அருகில் நிற்பவர்கள் இரு கைகளினாலும் கப்ரின் தலைப்பக்கத்தில் மூன்று தடவை மண் எடுத்து, முதல் தடவையில்,

مِنْهَا خَلَقْنَاكُمْ என்று கூறி கப்ரில் போடவும். இரண்டாவது தடவையில்

وَفِيهَا نُعِيدُكُمْ என்றும், மூன்றாவது தடவையில்

وَمِنْهَا نُخْرِجُكُمْ تَارَةً أُخْرَى என்றும் கூறி அம் மண்ணை கப்ரில் போடுவது சுன்னத்து.

இரவில் அடக்கினால் வெளிச்சத்தை உண்டாக்கிக் கொள்வது நல்லதாகும். கப்ருக்குள் ஏதேனும் விரும்பத்தகாத புதுமையைக் கண்டால் அதனை மறைத்து விடவும்.

கப்ரை ஒரு சாண் அளவு உயர்த்தி முகடு போன்று ஆக்குவதும், ஒரு பெரிய கல்லை, அல்லது குறிப்பு பலகையைத் தலைமாட்டில் ஊன்றி வைப்பதும், அதன் கால் பக்கமும் அவ்விதம் செய்வதும், செடி கொடிகளை ஊன்றி வைப்பதும், இனபந்துக்களை அருகருகில் ஒன்று சேர்த்து அடக்குவதும் சுன்னத்தாகும்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உஸ்மான் பின் மள்ஊன் (ரலி) அவர்களுடைய கப்ரின் தலை மாட்டில் ஒரு கல்லை ஊன்றினார்கள் என்று அறிவிக்கப்பட்டுள்ளது. அதனை ஆதாரமாகக் கொண்டு கால்மாட்டிலும் ஊன்றப்படும். "ஒரு முஸ்லிமுடைய இறப்பின் தேதியையும் மற்றும் செய்தியையும் ஒருவர் எழுதி வைத்தால் அல்லாஹ் அவருடைய வாழ்வை நீளமாக்குவான்"

مَنْ وَرَّخَ مُسْلِمًا اَحْيَاهُ اللّٰهُ

என்று நபிகள் நாயகம் (ஸல்) அருளியுள்ளார்கள்.

கப்ரின் மீது தண்ணீர் தெளிப்பது சுன்னத்து, பன்னீர் தெளிப்பது, சந்தனம் பூசுவது, பலமணம் பூசுவது, வீணாக விளக்கேற்றுவது, நிழலிடுவது ஆகியவை மக்ரூஹாகும். எனினும் மலக்குகள் கப்ருகளுக்கு வருவதாலும் அவர்கள் வாசனையை

விரும்புவதாலும் அவர்களை கண்ணியப்படுத்த வேண்டுமென்ற எண்ணத்தில் லேசான வாசனை வைப்பதும் அந்த எண்ணத்துடன் பன்னீர் தெளிப்பதும் மக்ரூஹ் அல்ல.

பொது வக்ஃபு செய்யப்பட்ட கப்ருஸ்தானில் கப்ரைச் சுற்றிச் சுவர் கட்டுவதும், குப்பா போன்றதை எழுப்புவதும், மினாரா கட்டுவதும் ஹராமாகும். அவ்வாறு எவரேனும் கட்டினால் அதனை இடித்து அதன் கற்களை உரியவர்களிடம் கொடுத்து விட வேண்டும். அவர்கள் யாரெனத் தெரியா விட்டால் பைத்துல் மாலில் சேர்க்கப்படும்.

கப்ரை களிமண்ணால் பூசுவது ஆகும். கப்ரை அறிந்து ஜியாரத் செய்வது தேவையென்றிருந்தால் ஒரு மீஜான் கல்லையோ, பலகையையோ ஊன்றி அதில் அவருடைய பெயரை எழுதுவது முஸ்தஹப்பாகும். அவர் நல்லடியாராக இருந்தால் அது இன்னும் சிறப்பாகும்.

முஸ்லிம்களின் கப்ரை மிதிப்பது மக்ரூஹ். எனினும், மய்யித்தை அடக்குவதற்காகச் செல்லும் போதும், பெற்றோரின் கப்ருகளை ஜியாரத்துச் செய்யச் செல்லும் போதும் கப்ருகளை மிதிக்காமல் செல்ல முடியாதென்றிருந்தால் மிதிப்பதில் தவறில்லை.

அடக்கிய பின் அனைவரும் கப்ருக்கருகிலிருந்து துஆ செய்வதும், குர்ஆன் ஓதி ஹதியாச் செய்வதும் சுன்னத்தாகும். குர்ஆன் முழுமையாக ஓதி ஹதியாச் செய்வது அழகாகும். பருவமெய்திய மய்யித்தாக இருந்தால் அதன் தலை மாட்டில் ஒருவர் உட்கார்ந்து தல்கீன் ஓதுவது சுன்னத்து. மற்றவர் நிற்பது நல்லது. மய்யித்து பெண்ணாக இருந்தால் கிப்லாவை முன்னோக்கியும் ஆணாக இருந்தால் கிப்லாவை பின்னோக்கியும் (மய்யித்தை முன்னோக்கியும்) உட்கார்ந்து ஓதுவது முஸ்தஹப்பாகும்.

தோணி, கப்பல் ஆகியவற்றில் இறந்து கடலில் தாழ்த்திப் போட்டாலும், மீன், முதலை வயிற்றுக்குள் போனாலும், அடங்கிய இடத்தில் நிற்காமல் அந்தக் கப்பல் வேறு இடத்திற்குச் சென்றாலும் தல்கீன் ஓத வேண்டும்.

ஹனஃபீ மத்ஹபில் தல்கீன் ஓதுவது அவசியமில்லை என்பதை கவனிக்கக் கூடாது. ஷாஃபிஈ மத்ஹபுக்காரர் ஓதுவதை அவர்கள் தடுப்பதும் அந்த மத்ஹபின் படி கூடாது.

தல்கீனின் விவரம் இந்த நூலின் கடைசியில் சேர்க்கப்பட்டிருக்கும் துஆக்கள், அவ்ராதுகள், வளாயிஃப்கள் பற்றிய பாடத்தில் கூறப்படும்.

காஃபிருடைய ஜனாஸாவுக்குத் தொழ வைப்பது ஹராமாகும். எனினும், அந்த ஜனாஸாவை ஒரு துணியால் மூடிச் சுமந்து கொண்டு போய் ஒரு குழியில் புதைப்பது வாஜிபாகும். இவை மூன்றையும் காஃபிரைக் கொண்டே செய்வித்தாலும் வாஜிபு நீங்கி விடும். எந்த மய்யித்தாக இருந்தாலும் அலங்கோலமாகச் சுமந்து செல்வதும், கயிற்றால் கட்டி இழுத்துச் செல்வதும், நாற்றமெடுக்குமளவுக்குப் போட்டு வைப்பதும் ஹராமாகும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

### ஜிஹாத் என்னும் மார்க்கப் போரில் ஷஹீதானவர்கள்

ஜிஹாத் என்னும் மார்க்கப் போரில் ஷஹீதானவர்களைக் குளிப்பாட்டுவதும் தொழ வைப்பதும் ஹராம். அவர்களை அவர்களுடைய இரத்தம் தோய்ந்த துணியைக் கொண்டே கஃபனிடுவது ஏற்றம். அவர்களுடைய உடலில் படிந்திருக்கும் இரத்தக் கறைகளை நீக்குவது ஹராமாகும்.

ஷஹீதானவர்களைப் போன்று மற்றும் பத்து நபர்களுக்கு மறுமையில் நன்மை வழங்கப்படும். ஆனால், அவர்களையெல்லாம் குளிப்பாட்டி, கஃபனிட்டு, தொழுவைத்து அடக்குவது வாஜிபாகும். அவர்கள்:- அநியாயமாகக் கொலை செய்யப்பட்டவர்கள், காலரா, பிளேகு போன்ற நோயினால் இறந்தவர்கள், தாய், தந்தை, மக்கள் அனைவரை விட்டும் தனித்திருக்கும் நிலையில்-பரதேசியாய்- இறந்தவர்கள், நெருப்பினால் கரிந்து, நீரில் மூழ்கி, வீடு போன்றது இடிந்து விழுந்து, பாம்பு போன்ற விஷஜந்து கடித்து இறந்தவர்கள், பிள்ளைப் பேறுடைய வருத்தத்தினால் இறந்தவர்கள், பிள்ளைப் பேறு தொடக்கு (-நிஃபாஸ்) தீரும்முன் இறந்தவர்கள், மார்க்கக் கல்வியைக் கற்கும் காலத்தில் இறந்தவர்கள், உண்மைக் காதலினால் இறந்தவர்கள், (அது எவ்வித இஷ்காக இருந்தாலும் சரி) ஆகியோராவார்கள். கடைசியில் கூறப்பட்டிருக்கும் இரு சாராரையும் சேர்த்தால் பன்னிரெண்டு கூட்டத்தாராவர்.)

கடலில் கப்பலில் இறந்தவர்களைக் கரைக்குக் கொண்டு வருவது சிரமமானால் நான்கு ஃபர்ளுகளையும் நிறைவேற்றி இரண்டு பலகைகளுக்கிடையில் அல்லது இரண்டு கம்புகளுக்கிடையில் ஜனாஸாவை வைத்து கனமான பொருளை அத்துடன் கட்டிக் கடலில் இறக்கி விட வேண்டும்.

### கப்ருகளை ஜியாரத்துச் செய்யும் விவரம்

கப்ரை ஜியாரத்துச் செய்வது ஆண்களுக்கு சுன்னத்தாகும்; பெண்களுக்கு மக்ரூஹ். ஆனால், ஆண்கள், பெண்கள் அனைவருக்கும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்-அவர்களுடைய கப்ருஷரீபை ஜியாரத்துச் செய்வது பலமான சுன்னத்தாகும். இன்னும் வாஜிபென்று சொல்லப்படும் அளவுக்குச் சிறந்த தொரு வணக்கமாகும்.

கப்ரை ஜியாரத்துச் செய்யும் பெண்களை அல்லாஹ் சபிக்கிறான் என்று ஒரு ஹதீஸில் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

நபிமார்களுடைய கப்ருகளை ஜியாரத்துச் செய்வது ஆண், பெண் அனைவரின் மீதும் சுன்னத்தாகும். பெண்கள் அலங்காரமான உடைகளை அணிந்து செல்லாமலும் ஆண்களை விட்டுத் தனித்தும் அதிகப் பேச்சுகள் இல்லாமலும் செல்ல வேண்டும்.

கப்ரை ஜியாரத்துச் செய்வது சுன்னத்தென்று கூறப்பட்டிருப்பதில் பலவிதமான பலன்கள் உள்ளன. நாமும் ஒரு நாள் இவ்விதம் கப்ரில் அடக்கப்படுவோம் என்ற எண்ணம் ஏற்பட்டு அதற்காக நற்செயல்களை விரைவாகத் தேடிக்கொள்ள வேண்டுமென்ற உணர்வு உண்டாகும். கப்ராளிக்காக தான் ஓதுகின்ற ஆயத்துகள்,

சலவாத்துகள் ஆகியவற்றின் நன்மை அவர்களைச் சேர்வதுடன் தனக்கும் அந்த ஓதல்களின் நன்மைகள் கிடைக்கக் கூடியதாகவும் இருக்கிறது.

ஜியாரத்துச் செய்வதற்குச் சிறந்த நேரங்கள், வியாழனிரவு, வெள்ளியிரவு, திங்களிரவு ஆகியவையாகும். குர்ஆனில் யாஸீன், ஃபாத்திஹா, குல்ஹுவல்லாஹு, குல்அஊது பிரப்பில் ஃபலக், குல்அஊது பிரப்பின்னாஸ், ஆயத்துல் குர்ஸீ ஆகிய சூராக்களை ஓதி அவற்றின் நன்மைகளை கப்ராளிக்குச் சேர்த்து வைத்து துஆச் செய்ய வேண்டும். கிப்லாவை முன்னோக்கி துஆச் செய்ய வேண்டும். கப்ரு அவனுக்குப் பின்னால் இருந்தாலும் சரி. பெற்றோர் போன்ற குறிப்பானவர்களின் கப்ருகளுக்குப் போய் துஆச் செய்வதானால் அவர்களை முன்னோக்கிச் செய்ய வேண்டும். இவ்வாறே عُبَابُ உபாப் என்ற கிரந்தத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

முதலில் கப்ராளிகளுக்குப் பொதுவாக ஸலாம் சொல்வதும், பிறகு தான் நாடியவருக்குப் பிரத்தியேகமாக ஸலாம் சொல்வதும் சுன்னத்தாகும்.

اَلسَّلَامُ عَلَيْكُمْ دَارَ قَوْمٍ مُّؤْمِنِيْنَ. وَاِنَّا اِنْ شَاءَ اللّٰهُ بِكُمْ لَاحِقُوْنَ.

"முஃமினான மக்களின் வீட்டினரே, உங்களின் மீது ஸலாம் உண்டாவதாக! இன்ஷா அல்லாஹ் நிச்சயமாக நாங்களும் உங்களுடன் வந்து சேரக்கூடியவர்கள்தாம்" என்று பொதுவாக ஸலாம் கூற வேண்டும். பெற்றோர், உஸ்தாது ஆகியோரை ஜியாரத் செய்யும் பொழுது அவர்களுடைய அருகில் நெருங்கி முகத்தை நோக்கி வாழ்நாளில் எவ்வாறு சங்கை செய்தாரோ அதே போன்று சங்கையுடன் நின்று அல்லது உட்கார்ந்து ஸலாம் சொல்லி குர்ஆனிலிருந்து ஏதேனும் சிலதை ஓதி துஆச் செய்ய வேண்டும்.

ஓதியதை ஹதியா (ஈஸால் ஃதவாப்) செய்வதற்குரிய துஆ பின்வருமாறு:

اَللّٰهُمَّ رَبَّ الْاَرْوَاحِ الْعَالِيَةِ وَالْاَجْسَادِ الْبَالِيَةِ وَالْعِظَامِ
النَّخِرَةِ الَّتِيْ خَرَجَتْ مِنَ الدُّنْيَا وَهِيَ بِكَ مُؤْمِنَةٌ. اَدْخِلْ
عَلَيْهَا رَوْحًا مِّنْ عِنْدِكَ وَسَلَامًا مِّنَّا. اَللّٰهُمَّ اجْعَلْ قُبُوْرَهُمْ
رَوْضَةً مِّنْ رِيَاضِ الْجِنَانِ. وَلَا تَجْعَلْ قُبُوْرَهُمْ حُفْرَةً
مِّنْ حُفَرِ النِّيْرَانِ. اَللّٰهُمَّ اَوْصِلْ مِثْلَ ثَوَابِ مَا قَرَأْنَاهُ مِنْ
كَلَامِكَ الْعَزِيْزِ اِلٰى اَرْوَاحِهِمْ وَاغْفِرْ لَهُمْ وَارْحَمْهُمْ
وَاحْشُرْهُمْ وَاِيَّانَا فِيْ زُمْرَةِ الْمُتَّقِيْنَ. وَصَلَّى اللّٰهُ عَلٰى
مُحَمَّدٍ وَّاٰلِهٖ وَصَحْبِهٖ وَسَلَّمَ.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

" யா அல்லாஹ்! உயர்வான ரூஹ்களுக்கு இறைவனே, மடிந்து விடுகின்ற சடலங்களுக்கும், உக்கிப்போகும் எலும்புகளும் இரட்சகனே! அவை உன்னைக் கொண்டு ஈமான் கொண்டிருக்கும் நிலையில் உலகத்தை விட்டுப் புறப்பட்டு (உன்னிடம்) வந்து விட்டன. உனது அருளையும் எங்களின் ஸலாமையும் அந்த ரூஹ்களின் மீது நீ நுழைய வைப்பாயாக!

யா அல்லாஹ், அவர்களுடைய கப்ருகளை சொர்க்கப் பூங்காக்களில் உள்ள ஒரு பூங்காவாக ஆக்கிடுவாயாக! அவர்களின் கப்ருகளை நரகக்கிடங்குகளில் உள்ள கிடங்காக ஆக்கிடாதே!

யாஅல்லாஹ், உன்னுடைய கண்ணியம்மிக்க திருவசனங்களிலிருந்து எதனை நாங்கள் ஓதினோமோ அதனுடைய நன்மை போன்றதை அவர்களுடைய ரூஹ்களுக்கு நீ சேர்த்து வைப்பாயாக! அவர்களை மன்னித்து அவர்களுக்கு கிருபை செய்து, அவர்களையும் எங்களையும் மறுமை நாளில் பக்திமான்களுடைய கூட்டத்தில் ஒன்று சேர்ப்பாயாக! ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம். "

முகத்தை வைத்து அல்லது கையால் தொட்டு கப்ரை முத்தமிடுவது மக்ரூஹ். வக்ஃபு செய்யப்பட்ட கப்ருஸ்தானில் வேறு ஜனாஸாக்களை அடக்கவிடாத முறையில் பழைய கப்ரை மண்ணைப் போட்டு புதியது போன்று ஆக்குவது ஹராம். பழைய கப்ருகளைப் புதியதாக ஆக்குவதை நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் விலக்கியுள்ளார்கள். மய்யித்துகள் மக்கிப்போவதால் இடிந்து மேல் மண் உள்வாங்கிப் பள்ளம் விழுந்த கப்ருகளை மட்டும் மணல் போட்டு நிரப்பலாம். ஆனால் எந்த கப்ரையும் புதியதைப் போன்று ஆக்குவது கூடாது. அவ்வாறு இரண்டாவது முறை புதிய கப்ரைப் போன்று ஆக்கினால் இரண்டாது தடவையும் மய்யித்திற்குக் கேள்வி கேட்கப்படும் என்று 'கஜானத்துல் ஃபிக்ஹ்' என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.

### துக்கம் விசாரித்தல்

கவலை உண்டு பண்ணும் நிகழ்ச்சிகள் அனைத்துக்கும் துக்கம் விசாரித்தல் சுன்னத்தாகும். கடிதங்களின் மூலம் துக்கம் விசாரிப்பதும் சுன்னத்துதான். தனக்கு முடியாத வேளையில் தனக்குப் பகரமாக வேறொரு நபரை அனுப்பி விசாரிக்கச் செய்வதும் சுன்னத்து.

இறந்தவர்களுக்காக மூன்று தினங்கள் வரை துக்கம் விசாரிக்கலாம். மூன்று தினங்களுக்குப்பின் துக்கம் விசாரித்தல் மக்ரூஹ். ஆனால் மௌத்துடைய நேரத்தில் வெளியூரிலிருந்தால் ஊர் வந்தவுடன் விசாரிக்க வேண்டும். எவ்வளவு காலம் கழித்து வந்தாலும் துக்கம் விசாரித்தல் சுன்னத்தென்பது நீங்காது. அவன் ஊருக்கு வந்ததிலிருந்து மூன்று நாட்களுக்குள் துக்கம் விசாரிப்பது சுன்னத்தாகும்.

முஸ்லிமான மய்யித்திற்காக ஒரு முஸ்லிம், முஸ்லிமானவர்களை துக்கம் விசாரிக்கச் சென்றால் பின் வருமாறு கூற வேண்டும்:-

أَعْظَمَ اللّٰهُ أَجْرَكَ وَأَحْسَنَ عَزَاكَ وَغَفَرَ لِمَيِّتِكَ
وَأَخْلَفَهُ عَلَيْكَ.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

"அல்லாஹ் உனக்கு மகத்தான நற்கூலி வழங்குவானாக! உனது பொறுமையை அழகாக்கி வைப்பானாக! உன்னுடைய மய்யித்தை மன்னிப்பானாக! அதற்கு பகரத்தை உனக்கு வழங்குவானாக!"

மய்யித்து குழந்தையாக இருந்தால் غَفَرَ لِمَيِّتِكَ என்பதற்கு பதிலாக وَجَعَلَهُ لَكَ فَرَطًا "அதனை உனக்கு முன்னோடியாக ஆக்குவானாக!" என்று கூறவேண்டும்.

மய்யித் அடக்கப்பட்ட பின்னர்தான் துக்கம் விசாரிப்பது சிறந்தது. ஆனால் மய்யித்திற்குரியவர் அதிகமாகப் பதற்றம் அடைந்துள்ளாரென்றால் முன்னால் விசாரிப்பது சிறந்தது.

. துக்கம் . விசாரிப்பது, பொறுமையைக் கொண்டு ஏவி உற்சாக மூட்டி, இறந்து விட்டவருக்கு துஆச் செய்வதாயிருக்கும்.

பொறுமையுடைய வகைகள் பல உண்டு. அவற்றில் தாழ்ந்த பொறுமைக்குக் கிடைக்கும் நன்மைகளைக்கூட அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறிய முடியாது என்று கூறப்பட்டுள்ளது.

இறந்துபோனவருடைய வீட்டாருக்கு ஓரிரவு ஒரு பகல் சாப்பிடுமளவுக்கு உணவு சமைத்துக் கொண்டு போய்க் கொடுப்பதும், சாப்பிடும்படி வற்புறுத்துவதும் இறந்தவரின் உறவினர்கள், அண்டை வீட்டார்கள், நண்பர்கள் ஆகியோரின் மீது சுன்னத்தாகும். ஒப்பாரி வைப்பவர்களுக்கு உணவு கொடுப்பது ஹராமாகும்.

### ஒப்பாரி வைப்பது

ஒப்பாரி வைப்பது ஹராமாகும். ஒப்பாரி வைப்பதென்பது, உள்ளதுடன் இல்லாததையும் சேர்த்துச் சொல்லிப் புலம்புவது, அல்லது உண்மையாக இருந்தாலும் சத்தத்தை உயர்த்தி கன்னத்தில், நெஞ்சில் அடித்துக் கொண்டும், உடைகளைக் கிழித்தும் கதறி அழுவது, வழக்கமில்லாத உடைகளை அல்லது கறுப்பு உடைகளை அணிவது, அல்லது மண்ணை, சாம்பலை வாரித்தலையில் போட்டுக் கொள்வது, செருப்பு அணிபவன் வெறுங்காலுடன் நடப்பது இவையெல்லாம் ஒப்பாரியில் சேர்ந்தவையாகும். அவ்வாறே மௌத்துக்கு அடுத்து வரும் பெரு நாளில் துக்கம் அனுஷ்டிப்பதும் கூடாது.

ஒப்பாரி வைப்பதால் மய்யித்துக்கு எவ்வித வேதனையும் ஏற்படாது. ஆனால், அவர் ஒப்பாரிவைக்குமாறு வஸிய்யத்துச் செய்து, பின் - தவ்பா செய்யாமல் இறந்திருந்தால் அதற்காக தண்டிக்கப்படுவார். ஒப்பாரி இல்லாமலும் சத்தத்தை உயர்த்தாமலும் அழுவது கூடும்; எனினும், அழாமலிருப்பது ஏற்றம்.

எவருக்காகவும் மூன்று தினங்களுக்கு மேல் துக்கம் அனுஷ்டிப்பது கூடாது; ஆனால் ஒரு மனைவி தன் கணவன் இறந்து விட்டதற்காக அவள் இத்தா தீரும் வரை (நான்கு மாதங்கள் பத்து நாட்கள் வரை) துக்கம் அனுஷ்டிக்கலாம். இந்த இத்தா

உடைய காலத்தில் அவள் வேறு திருமணம் செய்து கொள்ளக்கூடாது.

மக்களுக்கு அறிவைப் புகட்டி நேர்வழிகாட்டும் ஆலிமுக்காக அனைவரும் வருந்துவது சுன்னத்தாகும்.

ஏதேனும் ஒரு முஸீபத்து ஏற்பட்டு விட்டால் பொறுமையைக் கடைப் பிடித்து :

إِنَّا لِلّٰهِ وَإِنَّا إِلَيْهِ رَاجِعُوْنَ. وَإِنَّا إِلَى رَبِّنَا لَمُنْقَلِبُوْنَ.

என்றும்,

اَللّٰهُمَّ اٰجِرْنِيْ فِيْ مُصِيْبَتِيْ وَاخْلُفْ عَلَيَّ خَيْرًا مِّنْهَا

என்றும் ஓதிக் கொள்வது சுன்னத்தாகும்.

மரண நோய் ஏற்பட்டிருக்கும் நேரத்தில் குல்ஹுவல்லாஹு சூராவை நூறு தடவை ஓதினால் கப்ருடைய வேதனை, குழப்பம், நெருக்கடி ஆகியவற்றை விட்டும் அச்சமற்றவனாக ஆகிடுவான் என்றும், யூனுஸ் நபி (அலை) அவர்களுடைய —— தஸ்பீஹாகிய

لَا إِلٰهَ إِلَّا أَنْتَ سُبْحَانَكَ إِنِّيْ كُنْتُ مِنَ الظَّالِمِيْنَ.

என்பதை நாற்பது தடவை ஓதிய பின் மரணம் ஏற்பட்டால் ஷஹீதுடைய பலன் கிடைக்கு மென்றும், அவ்வாறு ஓதியவன் சுகமடைந்து விட்டால் அவனுடைய பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப்படுமென்றும் கூறப்பட்டுள்ளது.

தாய், தந்தை, மனைவி, கணவன் போன்றவர்கள் உலகை விட்டும் பிரிந்தால் ஏற்படும் துக்கத்தை விட அதிகமான துக்கம், நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய பிரிவினால் ஒவ்வொரு முஸ்லிமுக்கும் ஏற்படுவது வாஜிபாகும். ஏனெனில், அன்னாரை நேசங்கொள்வது, உலகிலுள்ள அனைவரை விட அதிகமாக இருக்க வேண்டுமென்பது கட்டாயமாக இருப்பதனால் அது வாஜிபாகும்.

## இறந்து விட்டவருக்கு இரங்கற்பாக்கள் பாடுவது மக்ரூஹ்

இறந்து விட்டவருக்கு இரங்கற்பாக்கள் பாடுவது அது எந்த மொழியிலிருந்தாலும் மக்ரூஹ் ஆகும். அது அவரிடத்திலுள்ள சிறப்புகளைச் சொல்லிக் காட்டுவதாக இருந்தாலும் சரி. ஏனெனில், அது துக்கத்தைப் புதுப்பித்துக் கொண்டே இருக்கும். ஆனால், வலிமார்கள், ஆலிம்கள், நல்லடியார்கள், ஆகியோரின் நற்செயல்களைப் பாடலாகக் கூறுவதால் பின்னுள்ளவர்களுக்கு அது படிப்பினையாக இருக்குமானால் அவ்வாறு செய்வது முஸ்தஹப்பாகும். ஸஹாபாக்களும் இமாம்களும் இவ்வாறு இரங்கற்பாக்கள் கூறியுள்ளார்கள். ஃபாத்திமா (ரலி) அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மீதுபின்வரும் இரங்கற்பாவைக் கூறினார்கள்:-

مَاذَاعَلَى مَنْ شَمَّ تُرْبَةَ اَحْمَدِ ،

اَنْ لَّا يَشُمَّ مَدَى الزَّمَانِ غَوَالِيَا ؛

صُبَّتْ عَلَيَّ مَصَائِبُ لَوْ اَنَّهَا ،

صُبَّتْ عَلَى الْاَيَّامِ عُدْنَ لَيَالِيَا ؛

"அஹ்மது (ஸல்) அவர்களின் மண்ணை முகர்ந்தவருக்கு காலம் முழுவதும் உயர்தர நறுமணங்களை முகர வேண்டிய தேவை ஏற்படாது! என் மீது பல துன்பங்கள் கொட்டப்பட்டுள்ளன. அந்த அளவு துன்பங்கள் வெளிச்சம் நிறைந்த பகல்களின் மீது ஊற்றப்பட்டிருந்தாலோ அந்தப் பகல்களெல்லாம் இருள்மயமான இரவுகளாகத் திரும்பிவிடும்".

நபிமார்களும் இரங்கற்பா கூறியுள்ளார்கள். ஆனால், பாடல்களாக இல்லாமல் வசனங்களாகக் கூறியுள்ளார்கள். காபீல் என்பவர் ஹாபீலைக் கொலை செய்த பொழுது ஆதம் நபி (அலை) அவர்கள் சொன்ன இரங்கல் வசனத்தின் கருத்தை அரபி மொழியில் பின்னால் வந்தவர்கள் பாடலாக அமைத்துள்ளார்கள். அது:-

تَغَيَّرَتِ الْبِلَادُ وَمَنْ عَلَيْهَا ،

فَوَجْهُ الْاَرْضِ مُغْبَرٌّ قَبِيْحٌ

وَمَالِيْ لَا اَجُوْدُ بِسَكْبِ دَمْعٍ ،

وَهَابِيْلٌ تَضَمَّنَهُ ضَرِيْحٌ

"நாடுகளும் அதிலுள்ளவர்களும் மாறிவிட்டன. பூமியின் மேற்பரப்பு பழிப்பிற்குரிய புழுதியாக்கப்பட்டு விட்டது. ஹாபீலை மண்ணறை பொதிந்து கொண்டிருக்கும் நிலையில் கண்ணீரை மழைபோல் கொட்டாமலிருக்க எனக்கென்ன வந்தது?".

## ஜகாத்துடைய பாடம்

இஸ்லாத்தின் கடமைகளில் மூன்றாவது ஜகாத். இது ஹிஜ்ரீ இரண்டாம் ஆண்டு ஃபித்ரா கொடுப்பது கடமையாக்கப்பட்டபின் கடமையானது.

ஜகாத்துடைய வெளிப்பொருள், தன்பொருளை அதற்கு விதியானதிலிருந்து நீக்கித் தூய்மைப்படுத்துதல் என்பதாகும். அதனுடைய உட்பொருள், அல்லாஹுதஆலா அல்லாததை விட்டும் தன் மனதைத் தூய்மைப்படுத்துவது என்பதாகும்.

சுதந்திரமுள்ள முஸ்லிமான மனிதரிடம் சுத்த தங்கமாக இருபது கழஞ்சு எடையுள்ளது ஓராண்டு முழுவதும் இருந்தால் நாற்பதில் ஒரு பங்கு (1/40) அரைக்கழஞ்சு விதியாகும். இருநூறு (திர்ஹம்) வெள்ளிக்காசுகள் இருந்தால் அதில் ஐந்து காசுகள் விதியாகும். வியாபாரச் சாமான்களின் விலை ஆண்டுக்கடைசியில் மேற்படி தொகையின் அளவுக்கு இருந்தால் அதிலும் ஜகாத் கடமையாகும்; எவ்வளவு கூடுதலாக ஆகிறதோ அந்தக் கணக்குப்படி ஜகாத்தை நிறைவேற்ற வேண்டும்.

மேற்குறிப்பிட்ட அந்த அளவுக்கு நிஸாப் என்று சொல்லப்படும். நிஸாபை விடக்குறைந்தால் ஜகாத் வாஜிபாகாது. ஜகாத்தை நிறைவேற்றாமலிருக்கத் தந்திரம் செய்து ஆண்டின் நடுவில் தன்னிடமுள்ள பொருளை வேறொருவருக்கு உரிமையாக்கி விடுவதால் பாவியாவான். ஒரு கழஞ்சு என்பது நடுத்தரமான 72 தொலிக் கோதுமைகளின் எடையாகும். ஒரு வெள்ளிக் காசு என்பது 50-2/5 தொலிக் கோதுமைகளின் எடையாயிருக்கும். எனவே 10 வெள்ளிக்காசு ஏழு கழஞ்சுகளாகும். (504 தொலிக் கோதுமைகளின் எடையாகும்).

தங்கம், வெள்ளி இரண்டைத் தவிர செம்பு, பித்தளை, வெண்கலம், ஈயம், துத்தநாகம், இரும்பு ஆகியவற்றில் ஜகாத் கடமையில்லை. ஆனால், இவற்றை வியாபாரம் செய்தால் அப்பொழுது அவைகளை வியாபாரப் பொருள்களாகக் கருதி அதற்கு ஜகாத் கடமையாகும்.

நிஸாபு என்பது வெள்ளியில் 612 -1/2 கிராமும், தங்கத்தில் 87- 1/2 கிராமுமாகும். இந்த அளவு வெள்ளியோ தங்கமோ வைத்திருந்தாலும் அல்லது அந்தந்தக் காலத்தின் பெறுமதிக்குத் தகுந்த பணம் வைத்திருந்தாலும் நிஸாபை எத்தியவனாவான். அதற்கு அவன் ஜகாத் கொடுக்க வேண்டும்.

மஹர்த்தொகை மேற்கூறப்பட்ட 612 -1/2 கிராம் வெள்ளியினுடைய கிரயத்திற்கு சமமாகவோ, அல்லது 87-1/2 கிராம் தங்கத்தினுடைய கிரயத்திற்கு சமமாகவோ அல்லது அதைவிட கூடுதலாகவோ இருந்தால் ஆண்டு தோறும் 40ல் ஒரு பாகத்தை ஜகாத் கொடுத்து வருவாள்.

தங்கம், வெள்ளி ஆகியவற்றை ஒரு பெண்ணுக்கு மஹராக வைத்து நிகாஹ் எழுதினால், அது நிஸாபுடைய அளவு இருக்கும் காலமெல்லாம் ஒவ்வொரு ஆண்டும் ஜகாத்தை கொடுத்து வருவாள். கடன் வாங்கியவன், தன்னிடம் அந்த முதல், நிஸாபுடைய அளவை எட்டி இருக்கும் வரை ஜகாத் கொடுப்பான். கடன் கொடுத்தவன் அந்தத் தொகைக்கு ஜகாத் கொடுப்பதற்கு, வாங்கியவன் பணக்காரனாயிருப்பதும், வாங்கியதை மறுக்காமலிருப்பதும், அல்லது சாட்சி உண்டாகி இருப்பதும் நிபந்தனைகளாகும்.

செம்பு நாணயங்கள், தாளினால் உள்ள நாணயங்கள், கடன் பத்திரங்கள், செக்குகள் ஆகியவை அந்தக் காலத்தில் புழக்கத்தில் இல்லையாகையால் அவற்றில் ஜகாத்துக் கொடுக்க வேண்டுமென்ற சட்டமும் ஏற்பட வில்லை. எனினும் உமர் (ரலி) அவர்களின் காலத்தில் கடன் பத்திரங்கள் புழக்கத்தில் கொண்டுவரப்பட்டு அந்தப் பத்திரங்களை எழுதிக் கொடுத்தவர், எழுதி வாங்கியவர் பேரில் கடன் கொடுத்ததாகவும் கடன் வாங்கியதாகவும் கணக்கிடப்பட்டதாக மாலிக் (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். எனவே தாள் ரூபாய்கள், செம்பு நாணயங்கள், தங்கக் காசுகள் ஆகியவற்றிலும் ஜகாத் கடமையாகும். அதில் ஏற்ற வாட்டம் செய்வது வட்டியாகிவிடும். உவமையில் வசதியுள்ளவன் பேரால் சில தொகைக்கு கடன் பத்திரம் இருந்தால், அது நிஸாபை எத்தி வருஷம் நிரம்பினால் ஜகாத் கடமையாகுமல்லவா? அவ்விதமே இந்த நாணயத்தில் அரசாங்கத்தின் உத்தரவாதம் எழுதப்பட்டிருப்பதால் அந்த அரசாங்கம் அந்த நாணயத்தை வைத்திருப்பவருக்கு கடன் பட்டதைப் போன்றாகும். எந்த வேளை நாம் அதைக் கொண்டு போய் கொடுத்துப் பணம்

கேட்டாலும் தருவதற்கு கடமைப் பட்டிருப்பதால் அதிலும் ஜகாத்து கொடுப்பது அவசியமாகும்.

ஆகுமான ஆபரணங்களில் தேவைக்கும், வழமைக்கும் மேலாக மிக அதிகமாக இல்லையானால் ஜகாத்து கடமையாகாது. சிலர் ஜகாத்து கொடுக்காமலிருப்பதற்காக தங்கள் வசமிருக்கும் பணத்தை ஆபரணங்களாக்கி வழமைக்கும், தேவைக்கும் அதிகமாக வைத்துக் கொள்கிறார்கள். இத்தகையோரின் எண்ணங்களை அல்லாஹ் நன்கு அறிந்திருக்கிறான். மறுமையில் இவர்கள் என்ன பதில் சொல்வார்களோ!

## தானியத்திலும், ஆடு, மாடு, ஒட்டகை ஆகியவற்றிலும் ஜகாத்து

கூலிக்கு இறைத்தல் இல்லாமல் (மழைத் தண்ணீரால்) விளைந்த கோதுமை, நெல், சோளம், மொச்சை, சிறுபயறு, பெரும்பயறு, கேப்பை, கம்பு, சாமை, வரகு, தினை, இறுங்கு என்னும் காக்காச் சோளம், முத்துச் சோளம், உளுந்து, கடலை, காடைக் கண்ணி ஆகிய தானியங்கள், பயறுகள் அனைத்திலும் வைக்கோல், சாவி, உமி ஆகியவற்றைப் போக்கியபின் ஐந்து கோட்டையிருந்தால், இவ்வாறே ஈத்தம்பழம், திராட்சைப் பழம் ஆகியவற்றிலும் ஐந்து கோட்டையிருந்தால் ஒரு போகத்திற்கு பத்திலொரு பாகம் ஜகாத்து கொடுக்க வேண்டும். ஐந்து கோட்டையை விட அதிகமானால் அதன் அளவுக்கு கணக்கிட்டுக் கொடுக்க வேண்டும். (ஐந்து கோட்டை என்பது 300 மரக்கால், அல்லது 1600 ராத்தல்கள் அல்லது 725 கிலோவும் 765 கிராமும் கொண்ட எடையளவாகும்.)

கூலி கொடுத்து இறைத்து, பணம் செலவிட்டு விளைந்தவற்றிற்கு பத்திலொன்றில் பாதி இருபதிலொன்று - ஜகாத்து கொடுக்க வேண்டும். பாதி மழைத் தண்ணீரினாலும் பாதி இறைவையினாலும் விளைந்ததாக இருந்தால் அதனதன் கணக்குப்படி கொடுக்க வேண்டும்.

ஒரு கோட்டை என்பது அறுபது மரக்கால்களாகும். ஒரு மரக்கால் நடுத்தரமான கையினால் இரு கை நிரம்பிய சிரங் கைகளில் - நான்கு சிரங்கைகளாகும். ஒரு இருகை நிறை என்பது ஒரு ராத்தலும் அதில் மூன்றிலொரு பாகமுமாகும். (ஒரு மரக்கால் என்பது ஐந்துராத்தலும், ஒரு ராத்தலில் மூன்றிலொரு பாகமுமாகும்).

காடுகளுக்கு சென்று தானாக மேய்ந்து வரும் ஆடு, மாடு, ஒட்டகை ஆகிய கால்நடைகளுக்கும் ஆண்டில் ஒரு தடவை ஜகாத் வாஜிபாகும். எருமை, பசு, கிடாய், காளை, செம்மறியாடு, பள்ளாடு, வெள்ளாடு, தும்பை ஆடு அனைத்திற்கும் ஒரே சட்டம் தான். இவைகள் பலனுள்ளதாகவும் பலனற்றதாகவும் (கலவனாக) இருந்தால் பலனுள்ள வற்றிற்கு மட்டும் ஜகாத் கொடுக்க வேண்டும்.

ஐந்து ஒட்டகங்கள் இருந்தால் அதற்கு ஓராண்டு பூர்த்தியான செம்மறியாட்டுக் குட்டி ஒன்று, அல்லது இரண்டு ஆண்டுகள் பூர்த்தியான வெள்ளாட்டுக் குட்டி ஒன்று கொடுக்க வேள்டும். பத்து ஒட்டகங்களுக்கு, முன் சொன்ன கணக்குப்படி இரண்டு ஆட்டுக்குட்டிகளும் பதினைந்திற்கு மூன்றும், இருபதிற்கு நான்கும், இருபத்தைந்திற்கு ஓராண்டு நிரம்பிய பெண் ஒட்டகக்குட்டி ஒன்றும், முப்பத்தாறு ஒட்டகங்களுக்கு இரண்டு ஆண்டு நிரம்பிய பெண் ஒட்டகக் குட்டி ஒன்றும், நாற்பத்தாறுக்கு மூன்று ஆண்டு நிரம்பிய பெண் குட்டி ஒன்றும், அறுபத்தொன்றுக்கு நான்கு ஆண்டு நிரம்பிய

பெண்குட்டி ஒன்றும், எழுபத்துறுக்கு இரண்டு ஆண்டு பெண்குட்டிகள் இரண்டும், தொண்ணூற்று ஒன்றுக்கு மூன்று ஆண்டு பெண்குட்டிகள் இரண்டும், நூற்றி இருபத்தொன்றுக்கு இரண்டு ஆண்டு பெண் குட்டிகள் மூன்றும் கொடுக்க வேண்டும். இதன் பிறகு ஒவ்வொரு நாற்பதிற்கும் இரண்டாண்டுப் பெண் ஒட்டகக் குட்டி ஒன்றும், பின் ஒவ்வொரு ஐம்பதுக்கும் மூன்று ஆண்டு பெண் குட்டி ஒன்றும் கொடுத்து வர வேண்டும்.

மாடுகளில் முப்பது இருந்தால் ஓராண்டு நிறைவான காளங் கன்று ஒன்றும், நாற்பது இருந்தால் இரண்டு வருஷத்து கிடாரி (ஈனாத இளம் பசு) ஒன்றும், அறுபது இருந்தால் ஓர் ஆண்டு காளைக் கன்று இரண்டும், பிறகு – ஒவ்வொரு முப்பதுக்கும் ஒரு வருஷத்துக் காளங் கன்று ஒன்று வீதமும், பின் ஒவ்வொரு நாற்பதிற்கும் இரண்டு வருஷத்துக் கிடாரி ஒன்றும் கொடுக்க வேண்டும். (இவற்றில் இரண்டு நிஸாபுக்கு இடையிலுள்ளதற்கு கணக்குப் பார்க்க வேண்டாம்).

ஆடுகளில் நாற்பது இருந்தால் நூற்று இருபது வரை ஓர் ஆடும், நூற்று இருபத்தொன்று முதல் இருநூறு வரை இருந்தால் இரண்டு ஆடுகளும், இருநூற்றி ஒன்றும் அதற்கு மேலும் இருந்தால் மூன்றும், நானூறுக்கு நான்கும், பிறகு ஒவ்வொரு நூறுக்கும் ஒரு வருஷத்து செம்மறிக்குட்டி ஒன்றும் அல்லது இரண்டு வருஷத்து வெள்ளாடு ஒன்றும் கொடுக்க வேண்டும்.

பொதுவான தரிசு நிலத்திலோ, அல்லது சொந்த நிலத்திலோ எடுக்கப்படுகின்ற புதையல்களுக்கும், விளைகின்ற தங்கம், வெள்ளிக்கும் உடனே ஜகாத்து கொடுக்க வேண்டும். அதற்கு ஓராண்டு பூர்த்தியாக வேண்டும் என்பது ஷர்த்தல்ல.

அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள் "தொழுகைக்கும் ஜகாத்திற்குமிடையில் நான் வித்தியாசப்படுத்த மாட்டேன்" என்று கூறியது, இரண்டும் ஃபர்லு என்பதில் சமமானதாகும் என்ற கருத்துதான். அதனை விட்டு விட்டால் மன்னிக்கப்படும் என்ற கருத்துக்கே இடமில்லை. ஜகாத்து கொடுக்காமலிருப்பதால் அதை வாங்குவதற்குத் தகுதியானவர்களின் பாத்தியதை நிறை வேற்றப் படாமல் ஆகிவிடுகிறது. இது கடினமான குற்றமாகும்.

## ஜகாத்து பெறுவதற்குத் தகுதியானவர்கள்

ஜகாத்து பெறுவதற்குத் தகுதியானவர்கள் எட்டுக் கூட்டத்தார்களாகும். (1) எவ்வித வசதியுமில்லாத புகலற்ற ஃபகீர், (2) பற்றாத வசதியுள்ள மிஸ்கீன், (3) ஜகாத்துடைய தொகையை வசூலிப்பவர், (4) புதிதாக இஸ்லாத்தை ஏற்றவர். (5) தவணைச் சீட்டெழுதிக் கொடுத்த ஆனால் தவணைப்படி பணம் செலுத்த வசதி ஏற்படாத அடிமைகளை விடுவிப்பதற்காகவும், (6) நிறைவேற்ற முடியாத கடனாளி, (7) அல்லாஹ்வின் பாதையில் ஈடுபட்டிருப்பவர், (8) பிரயாணத்திலிருப்பவர். கடைசி இருவரும் பணக்காரராக இருந்தாலும் சரி.

இதைப் பற்றி அல்லாஹு தஆலா திருமறையில் இவ்வாறு கூறுகிறான்:

إِنَّمَا الصَّدَقَاتُ لِلْفُقَرَاءِ وَالْمَسَاكِينِ وَالْعَامِلِينَ
عَلَيْهَا وَالْمُؤَلَّفَةِ قُلُوبُهُمْ وَفِي الرِّقَابِ وَالْغَارِمِينَ

وَفِي سَبِيلِ اللَّهِ وَابْنِ السَّبِيلِ فَرِيضَةً مِّنَ اللَّهِ
وَاللَّهُ عَلِيمٌ حَكِيمٌ (9:60)

"(ஜகாத்து என்னும்) தானங்களெல்லாம் தரித்திரர்களுக்கும், ஏழைகளுக்கும், தானத்தை வசூலிப்பவர்களுக்கும், புதிதாக இஸ்லாத்தைத் தழுவியவர்களுக்கும், அடிமைகளை விடுதலை செய்வதற்கும், கடனில் மூழ்கி இருப்பவர்களுக்கும், அல்லாஹ் உடைய பாதையில் (தன்னை அர்ப்பணித்துக் கொண்டு) ஈடுபட்டிருப்பவருக்கும், வழிப்போக்கர்களுக்கும் (உரித்தானதாக) அல்லாஹ் ஏற்படுத்திய கடமையாகும். அல்லாஹ் யாவற்றையும் மிக்க அறிந்தோனும், ஞான முடையோனுமாயிருக்கிறான்".

காஃபிர், அடிமை, ஹாஷிம் கிளையினர், முத்தலிப் கிளையினர், அறுபது ஆண்டுகளுக்குப் போதுமான பொருளாதார வசதி பெற்றவர் , தாய், தந்தை, மக்கள், கணவன் இவர்களுடைய பராமரிப்பில் உள்ள வசதியுள்ளவர்கள் ஆகியோருக்கு ஜகாத்துடைய பொருளைக் கொடுப்பது கூடாது. ஜகாத் வாங்கிய ஒருவனுக்கு ஜகாத்துடைய தொகை (நிஸாப்) உண்டாகி விட்டால் ஒரு வருஷம் பூர்த்தியானவுடன் அவனும் ஜகாத்து கொடுக்க வேண்டும்.

ஜகாத்து நிறைவேறுவதற்கு ஷர்த்துகள் இரண்டு:(1) நிய்யத்துச் செய்வது, அதாவது தன் பொருளை விட்டும் ஜகாத்துடைய தொகைளைத் தனியாக எடுக்கும் பொழுது, அல்லது பொறுப்பாளர் ஒருவரிடம் அதனை ஒப்படைக்கும் பொழுது இது என் பொருளுக்குரிய – ஃபர்லான ஜகாத்து என்று நிய்யத்துச் செய்வது. இந்த நிய்யத்தைக் குறித்த நேரத்தில் செய்யாமல் ஒருவன் தன் பொருள் முழுவதையும் கொடுத்து விட்டாலும் ஜகாத்துடைய கடமை நீங்காது. நிய்யத்தில்லாமல் நிறைவேற்றிய உளூவும் தொழுகையும் கூடாதது போல்.

(2) மேற் கூறப்பட்ட ஜகாத்து வாங்கத் தகுதியான நபர்களுக்குக் கொடுப்பது.

ஆண்டு முடிந்தவுடன் பணமும் கையிலிருந்து, அதை வாங்குவதற்குரிய நபர்களும் இருந்தால் உடனே நிறைவேற்றி விடவேண்டும். பிற்படுத்துவது ஹராமாகும். அவ்வாறு அவன் பிற்படுத்தி, பிறகு பொருள் அழிந்து அவனும் வசதியற்றவனாக ஆகி விட்டாலும் அது அவன் மீது கடனாகவே இருக்கும்.

ஜகாத்தில் பணத்திற்கு பதிலாக துணியாகவோ, உணவாகவோ கொடுத்தாலும் ஜகாத்து நிறைவேறாது. மேற் கூறப்பட்ட எட்டுக் கூட்டத்தினரும் இருந்தால் ஒவ்வொரு கூட்டத்தினரிலும் மும்மூன்று நபருக்குக் குறையாமல் கொடுப்பது வாஜிபாகும். மூன்று பேர் இல்லையானால் இருக்கிற அளவுக்குக் கொடுக்க வேண்டும். பிரயாணி என்பவர் ஓரிடத்தை நாடிப் பிரயாணம் செய்பவராக இருக்க வேண்டும். ஓர் குறிப்பிட்ட இடத்தின் நோக்கமில்லாமல் பிரயாணம் செய்பவனுக்கும், ஹராமான காரியத்திற்குப் பிரயாணம் செய்பவனுக்கும் கொடுத்தால் கூடாது.

ஜகாத்தின் முதல் இருக்கின்ற ஊரை விட்டு வேறு ஒரு ஊருக்கு ஜகாத்துடைய பொருளைக் கொண்டு போய்க் கொடுப்பது ஷாஃபியீ மத்ஹபில் கூடாது. எனினும்

பின்னால் வந்த ஷாஃபியி உலமாக்கள் அதனை மக்ரூஹ் என்று தீர்ப்பளித்துள்ளார்கள்.

ஒருவன் தன்னுடைய கடனாளிக்கு ஜகாத் கொடுக்கும் போது என்னுடைய கடனுக்கு இதனை நீ திருப்பிக் கொடுத்துவிட வேண்டுமென்ற ஷர்த்துடன் கொடுத்தால் ஜகாத்தும் நிறைவேறாது; அந்தப் பணத்தைக் கொண்டு கடனை நிறைவேற்றுவதும் கூடாது. இருவரும் எவ்வித ஷர்த்துமில்லாமல் மனதில் மட்டும் நினைத்துக்கொடுத்தால் ஜகாத்தும் கூடும், அதனைக் கொண்டு கடனை இறுப்பதும் கூடும்.

இமாம் அஹ்மது (ரஹ்) அவர்கள் கூறியுள்ளதாக கலாயித் என்ற நூலில் எழுதப்பட்டுள்ளதாவது: ஜகாத்துடைய விஷயத்தில் இமாம் அபூ ஹனீஃபா (ரஹ்) அவர்களை மூன்று விஷயத்தில் தொடரலாம். அதன்படி ஃபத்வாவும் கொடுக்கலாம். முதலாவது, ஜகாத்துடைய தொகையை வேறு ஊருக்குக் கொண்டு செல்வது, இரண்டாவது, அதனை ஒருவருக்கே கொடுப்பது, மூன்றாவது, அதனை (மேற் குறிப்பிட்ட எட்டுக் கூட்டத்தாரில் நின்றும்) ஏதாவது ஒரு கூட்டத்தாருக்கு மட்டுமே கொடுத்து விடுவது. இப்படிச் செய்வது ஹனஃபீ மத்ஹபின்படி ஆகுமானதாயிருக்கும்.

## சதக்கத்துல் ஃபித்ருவின் பாடம்

நோன்புப் பெருநாளன்று இரவு, பகல் ஒரு நாளைக்கு தனக்கும், தன்மீது நஃப்கா கடமையுள்ளவர்களுக்கும், கொடுக்க வேண்டிய கடனுக்கும், குடி இருக்கும் வீட்டுக்கும், தேவையான அடிமைக்கும், தேவையான வாகனத்துக்கும் போதுமான செலவு போக மீதிப் பொருளிருந்தால், பெருநாள் இரவு வந்தவுடன் சுதந்திரமான ஒரு முஸ்லிம் தனக்காகவும் தன் மீது நஃப்கா கடமையுள்ள முஸ்லிம்களுக்காகவும் ஒவ்வொருவருக்கும் (அவ்வூரில் அதிகமாக உபயோகப்படுத்தப்படும்) தானியத்தில் ஒரு மரக்கால் வீதம், உமி, பதர் ஆகியவற்றை நீக்கிய பின், ஃபித்ரா என்ற நிய்யத்தில் கொடுப்பது ஃபர்ளாகும். அரிசி போன்ற தானியம் ஈரமானதாகவும், பழுத்ததாகவும் இருந்தால் அதைக் கொடுக்கக் கூடாது.

ஃபித்ராவை ரமலான் மாதம் ஆரம்பத்திலிருந்தும் கொடுக்கலாம். பெருநாள் தொழுகைக்குப்பின் கொடுப்பதற்காக அதைப் பிற்படுத்துவது மக்ரூஹ் ஆகும். எனினும், இனபந்துக்களில் உள்ள ஒருவரை எதிர் பார்த்து பிற்படுத்தவாம். ஆனால், பெருநாளை விட்டும் பிற்படுத்துவது ஹராமாகும்.

பெருநாள் இரவில் பிறந்த குழந்தைக்காகவும், அப்பொழுது திருமணம் செய்து கொண்ட மனைவிக்காகவும், அன்றிரவு உடைமையாக்கிக் கொண்ட அடிமைக்காகவும் கொடுப்பது கடமையில்லை. ஆனால், பெருநாள் இரவிற்குப் பிறகு மரணிப்பதாலும் இவனுடைய பொறுப்பு நீங்குவதாலும் ஃபித்ரா விழுந்து விடாது. ஃபித்ரா கொடுக்கக் கடமையானவர் தனது ஊரிலுள்ள ஏழைகட்குக் கொடுக்க வேண்டும். கொடுப்பது விதியானவன் வேறு ஊரிலிருந்தால் அங்குள்ள ஏழைகட்குக் கொடுப்பதல்ல.

ஒரு மரக்கால் என்பது நான்கு இரு கையளவு தானியமாகும். அது நெல்லாக இருந்தால் எட்டு இரு கையளவாகும். அதாவது: இரண்டு மரக்கால்களாகும். (ஒரு

மரக்கால் அரிசி என்பது 5 -1/3 ராத்தல் அல்லது 2 கிலோவும் 420 கிராமும்கொண்ட எடையளவாகும்).

## சதக்கா வெனும் தருமம் செய்தல்

ஒவ்வொரு நாளும் இடைவிடாமல் இயன்ற அளவு கொஞ்சமேனும் மனிதர்களுக்குத் தேவையான - ஆகுமான - பொருளைக் கொடை கொடுப்பது சுன்னத்தாகும். தண்ணீர் தேவையுள்ள இடங்களிலும் தேவையான தருணங்களிலும் கொடைகளில் சிறந்தது தண்ணீர்தான். தன்னிடமுள்ள சிறிதளவு பொருளையாவது கொடை கொடுக்க வெட்கப்படக் கூடாது.

கொடை கொடுத்தல் சுன்னத்தெனபது எல்லோரின் மீது மாயிருக்கும். தனக்கும், தன் மீது நஃபகா கடமையாகவுள்ள உயிருள்ள பிராணிகள் அனைத்திற்கும் தற்காலத் தேவைக்கு (அன்றைய பகல், இரவு செலவுக்கு) சுண்டு மிஞ்சியபின் மீதிப் பொருளிருக்கின்ற ஒவ்வொருவரும் கொடை கொடுப்பது சுன்னத்தாகும். ஆனால், மேற்குறித்தவர்களுக்கு மேலே சொன்னபடி உடனடித் தேவைக்குரிய செலவைச் செய்யாமலும், அடைக்க வேண்டிய கடனை அடைக்காமலும் இருக்கும் நிலைமையில் அந்தப் பணத்தையோ, பொருளையோ கொடை கொடுப்பது ஹராமாகும். அந்தக் கடன் தவணையிடப்பட்டதாக இருந்தாலும் சரிதான்.

இரகசியமாகக் கொடை கொடுப்பது மிகச் சிறந்ததாகும். ஆனால், முகஸ்துதி ஏற்படாதென்றிருந்தாலும், அவன் கொடுப்பதைப் பார்த்து மற்றவர்களும் கொடுப்பார்கள் என்றிருந்தாலும் பகிரங்கமாகச் செய்யலாம்.

மறுமை நாளில் அர்ஷின் நிழலைத் தவிர வேறு நிழலே இல்லாமல் இருக்கும் நிலையில் அந்த அர்ஷின் நிழலைக் கொண்டு நிழலிடப்படுபவர்கள் ஏழு கூட்டத்தார்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கணக்கிட்டுச் சொல்லியிருக்கிறார்கள். அவர்களின் விவரம் வருமாறு:

(1) தனது வலக்கரத்தைக் கொண்டு கொடுக்கும் கொடையை தனது இடக்கரத்திற்குக் கூட தெரியாத முறையில் மிக இரகசியமாகக் கொடுப்பவர்.

(2) நேர்மை புரளாத தலைவர்.

(3) இறைவனின் வழிப்பாட்டிலேயே ஈடுபட்டிருக்கும் வாலிபர்

(4) இறை இல்லங்களின் பக்கம் எந்நேரமும் தொடர்பு கொண்டிருக்கும் மனதையுடைய ஒரு மனிதர்.

(5) இறைவனுக்காகவே ஒருவரை ஒருவர் நேசங்கொண்டு, இறைவனுக்காகவே ஒன்று சேர்ந்து, இறைவனுக்காகவே பிரிந்து கொள்ளும் இரண்டு மனிதர்கள்.

(6) உயர்ந்த அந்தஸ்திலுள்ள அழகிய ஒரு பெண் தனது இச்சைக்கு இணங்கும்படி அழைத்த நேரத்தில் நான் இறைவனை பயப்படுகிறேன் என்று சொல்லி அதற்கு இணங்காத ஒரு மனிதர்.

(7) மனிதர்களின் சஞ்சாரமில்லாத இடத்திலிருந்து தனித்தவராக இறைவனை 'திக்ரு' செய்து இறைவனின் அச்சத்தால் அவரின் இரு கண்களிலும் கண்ணீர் வடிந்து கொண்டிருக்கும் ஒரு மனிதர்.

اَنَّهُ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ عَدَّ مِنَ السَّبْعَةِ الَّذِيْنَ يَسْتَظِلُّوْنَ
بِالْعَرْشِ مَنْ اَخْفٰى صَدَقَتَهُ حَتّٰى لَا تَعْلَمَ شِمَالُهُ مَا يُنْفِقُ
يَمِيْنُهُ. وَتَمَامُ السَّبْعَةِ اِمَامٌ عَادِلٌ. وَشَابٌّ نَشَأَ فِيْ عِبَادَةِ
اللهِ تَعَالٰى. وَرَجُلٌ قَلْبُهُ مُعَلَّقٌ بِالْمَسَاجِدِ. وَرَجُلَانِ تَحَابَّا
فِى اللهِ اِجْتَمَعَا عَلَيْهِ وَتَفَرَّقَا عَلَيْهِ. وَرَجُلٌ دَعَتْهُ اِمْرَأَةٌ
ذَاتُ مَنْصَبٍ وَّجَمَالٍ فَقَالَ اِنِّيْ اَخَافُ اللهَ. وَرَجُلٌ ذَكَرَ اللهَ
خَالِيًا فَفَاضَتْ عَيْنَاهُ .

ஆக மேற்கண்ட ஏழு கூட்டத்தாரும் மறுமையில் அர்ஷின் நிழலில் ஒதுங்கக் கூடியவர்களாயிருப்பார்கள்.

மேலும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அருளியுள்ளார்கள்:

صَدَقَةُ السِّرِّ تُطْفِئُ غَضَبَ الرَّبِّ.

"இரகசியமாகக் கொடுக்கும் கொடை இறைவனின் கோபத்தைத் தணிக்கும்."

பெண்களுக்கு கொடை கொடுப்பது ஆண்களுக்குக் கொடுப்பதை விட ஏற்றமானது. உடல் நலமுள்ளவர்களைவிட உடல் ஊனமுற்றோருக்குக் கொடுப்பதும், பருவமெய்தியவர்களுக்குக் கொடுப்பதைவிட பிராயமெத்தாத சிறுவர்களுக்குக் கொடுப்பதும் நல்லதாகும்.

சொந்தமில்லாத பக்கத்து விட்டாருக்குக் கொடை கொடுப்பதைவிட தனது ஊரிலேயே தூரத்திலிருக்கும் சொந்தக் காரர்களுக்கு கொடுப்பது ஏற்றமாயிருக்கும்.

"உபகாரம் செய்வது கொண்டு சுதந்திரமானவரையும் நீ அடிமையாக்கிக் கொள்வாயாக!" என்று அலீ (ரலீ) அவர்கள் கூறியுள்ளார்கள். அதாவது, அடிமை போல் பணிந்து விடுவான் என்பது கருத்தாகும். எதிரிக்குக் கொடுப்பது சிறந்ததெனக் கூறப்பட்டுள்ளது. ஏனெனில், அதன் மூலம் முகஸ்துதி நீங்கி, அவனுடைய அன்பும் உண்டாகும். மேலும், ஜகாத்து விதியானவர் அதில் ஏதேனும் குறை செய்திருந்தால் அவன் செய்கின்ற ஸதகாவை அல்லாஹுதஆலா அந்தக் குறைக்கு ஈடாக ஆக்கிவிடப்போதும் என்று ஹதீஸில் அருளப்பட்டுள்ளது.

துல்ஹஜ் மாதம் முந்திய பத்து நாட்களிலும், இரண்டு பெருநாட்களிலும், ஆஷூரா நாளிலும், பராஅத் இரவிலும், வெள்ளிக் கிழமைகளிலும், கிரகண நேரங்களிலும், ரமலான் மாதத்திலும், மக்காவிலும் மதீனாவிலும் சதக்கா கொடுப்பது அவை அல்லாத நாட்களிலும் இடங்களிலும் கொடுப்பதைவிட அதிகச் சிறப்புடையதாகும்.

நோயுற்றிருக்கும் நேரத்திலும், ஏதேனும் துன்பம் ஏற்பட்டிருக்கும் நேரத்திலும் சதக்கா கொடுப்பது சுன்னத்து. ரமலான் மாதத்திலும், ஆஷூரா நாளிலும் குழந்தைகளுக்கும், பந்துக்களுக்கும், அடுத்த வீட்டாருக்கும் தாராளமாகச் செலவு செய்வது சுன்னத்தாகும்.

மிக நெருக்கமானவர்கள், பிறகு அடுத்த வீட்டுக்காரர்கள். பிறகு அவர்களில் எதிரிகளாக இருப்பவர்கள், பிறகு பால்குடியால் திருமணம் செய்ய ஹராமானவர்கள், பிறகு சம்பந்தத்தினால் திருமணம் செய்ய ஹராமானவர்கள் இவர்களனைவரும் மற்றவர்களை விடக் கொடை கொடுக்கப்படத் தகுதியானவர்கள்.

மார்க்கப் பணியில் ஈடுபட்டிருக்கும் ஆலிம்கள், மாணவர்கள் இவ்மின் மூ நபிமார்களுக்கு வாரிசுகளாக இருக்கிறார்கள். அவர்களுக்குக் கொடுப் நபிமார்களுக்குக் கொடுப்பதைப் போலாகும். அதனால்தான் அவர்களுக்குக் கொ கொடுப்பதில் ஒன்றுக்கு எழுபதினாயிரம் நன்மைகள் கிடைக்கும் என் கூறப்பட்டுள்ளது.

ஒருவரிடம் பொருள் வசதியும் நல்ல பொருட்களும் இருக்கும்பொழுது அ நின்றும் கொடுக்காமல் கெட்ட பொருளை சதக்கா கொடுப்பது மக்ரூஹ் ஆ காஃபிருக்குக் கொடுத்தாலும், வாகன வசதி உள்ளவனுக்குக் கொடுத்தாலும் நன் கிடைக்கும்.

அல்லாஹ்விற்காகக் கொடுங்கள் என்று கேட்பது மக்ரூஹ், அல்வா கேட்டவனுக்கு இல்லை என்று சொல்வதும் மக்ரூஹ். சதக்கா கொடுத்தவ வாங்கியவனிடத்தில் துஆ செய்யும்படி கூறுவதும் அல்லது அதனை ஆசைவைப்ப கூடாது. அவனாக துஆச் செய்தால் அதற்கு பதிலாக இவனும் அவனுக்கு து செய்வது சுன்னத்தாகும்.

இயன்றவன் எவ்வித காரணமும், நிர்பந்தமுமில்லாத நேரத்தில் அடுத்தவரி கேட்பதும், அதற்காக ஓரிடத்திற்கு செல்வதும் ஹராமாகும். மார்க்க இல் படித்துக் கொண்டிருப்பவன் அதன் காரணத்தால் சம்பாதிக்க இயலாத நிலை இருக்கும் போது கேட்பது கூடும். தேடாப்புறத்தினால் (தான் கேட்காமலே எதிர்பாராத விதமாக) வந்த சதக்காவை ஒப்புக் கொள்வது சுன்னத்தாகும். ஆனா அப்படி வந்த பொருள் இவனைக் கொண்டு ஒரு தகாத செயலுக்கு உதவிதேடி கொடுக்கப்பட்டதாயிருந்தால் அதை ஒப்புக் கொள்வது ஹராமாகும்.

வீட்டில் ஆணம் காய்ச்சும் பொழுது கொஞ்சம் அதிகமாகச் சமைத்து பக்கத்து வீட்டாருக்குக் கொடுப்பது சுன்னத்தாகும். ஹலாலான முறையில் சம்பாதித்து ஏழை

எளியவருக்குக் கொடுப்பது, சம்பாதிக்காமலிருந்து வணக்கத்தில் ஈடுபடுவதை விடச் சிறந்ததாகும். இவ்வாறே தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது.

ஜகாத், சதக்கா ஆகியவற்றைக் கொடுக்கும் போது:

رَبَّنَا تَقَبَّلْ مِنَّا إِنَّكَ أَنْتَ السَّمِيعُ الْعَلِيمُ

"எங்கள் இரட்சகனே, எங்களிடமிருந்து ஏற்றுக் கொள்வாயாக. நிச்சயமாக நீயே (எங்களின் இப்பிரார்த்தனையைச்) செவியுறுபவனாகவும், நன்கு அறிந்தவனாகவும் இருக்கிறாய்" என்று கூறுவதும், வாங்குகிறவர் :

أَجَرَكَ اللهُ فِيمَا أَعْطَيْتَ وَجَعَلَهُ لَكَ طَهُورًا

"நீர் கொடுத்ததில் அல்லாஹ் உமக்கு நற்கூலி வழங்கி, உம்மைத் தூய்மைப்படுத்தக் கூடியதாகவும் இதை ஆக்கிடுவானாக!" என்று துஆ செய்வதும் சுன்னத்தாகும்.

ஆகுமான நகைகளையும், ஆளும் (பயன்படுத்தும்) பதார்த்தங்களையும் இரவல் கொடுத்து வாங்குவது சுன்னத்து. ஆண்கள் தங்கம், வெள்ளி நகைகளை அணிவதற்காக இரவல் கேட்டால் கொடுப்பதும், அதனைப் பொருந்திக் கொள்வதும் ஹராம். அவர் காஃபிராக இருந்தாலும் சரியே.

முட்டுப்பாடுள்ளவர்களுக்கு கடன் கொடுத்து வாங்குவது சுன்னத்து. அது சதக்கா செய்வதை விடச் சிறப்பானதாகும்.

ஒருவரிடம் ஹராமான பொருளும் ஹலாலான பொருளும் கலந்திருந்தால் அவருடைய ஹதியாவை ஏற்றுக் கொள்வது மக்ரூஹ்; ஹராமல்ல. மிகுதமான பொருள் ஹராமாயிருந்தால் அதனை ஏற்பது-ஙஸ்ஸாலி (ரஹ்) அவர்களுடைய சொற்படி ஹராம். மற்றவர்களின் சொற்படி மக்ரூஹ் தஹ்ரீம் ஆகும்.

சதக்காவிற்குரிய நன்மைகள் ஏராளமாக இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது. எனினும் அந்த நன்மைகள் கிடைப்பதற்கு நிபந்தனையாவது, அல்லாவிற்காகவே அதனைக் கொடுப்பதாகும். அவ்வாறின்றி உலகில் இலாபம் கிடைப்பதையும், ஆபத்துகளை விட்டு நீங்குவதையும், பிள்ளைச் செல்வத்தையும், பொருள் பாக்கியத்தையும் ஆயுள் விருத்தியையும் நாடிக்கொடுத்தால் குறிப்பிடப்பட்ட நன்மை கிடைக்காது. எனினும், அல்லாஹ்விற்காக இவற்றையெல்லாம் நாடினால் அவனுடைய நாட்டப்படி இவை உலகில் கிடைப்பதுடன் மறுமையிலும் பெரும் நன்மை கிடைத்துவிடும். "தருமமாகிறது துன்பத்தையும் தீய மரணத்தையும் தடுக்கும்."

اَلصَّدَقَةُ تَرُدُّ الْبَلَاءَ وَتَدْفَعُ مِيتَةَ السُّوْءِ

என்று ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அருளியுள்ளார்கள்.

# நோன்பின் பாடம்

இஸ்லாத்தின் நான்காவது கடமை நோன்பாகும். ஷஅபான் மாதம் முப்பது நாட்கள் நிறைவுபெறுவதாலும், அல்லது சொல் உறுதியான பருவமடைந்த, நீதமான முஸ்லிமான ஆண் ஒருவர் ஷஅபான் முப்பதாம் இரவில் பிறையைக் காண்பதினாலும், அல்லது எழுவானிலுள்ள (கிழக்குத் திசையிலுள்ள) ஊரில் பிறை காணுவதினாலும், அல்லது இருபத்து நான்கு ஹாஷிமி காதம் (ஒரு ஹாஷிமி காதம் என்பது 3- 1/4 மைல்களாகும்) தூரத்திற்குள் இருக்கும் ஊர்களில் எப்பொழுதும் தர்க்கம் தாலாச் செய்து கொள்ளாமல் ஒற்றுமையாகப் பிறையைக்காணுகின்ற ஓர் ஊரில் பிறையைக் காண்பதினாலும் ரமலான் மாதம் நோன்பு பிடிப்பது, புத்திசுவாதீனமுள்ள, உடல் நலமுள்ள முஸ்லிமான ஆண் பெண் அனைவரின் மீதும் ஃபர்லாயிருக்கும்.

பருவமடையாத சிறுவர் சிறுமியர், பைத்தியக்காரன், சுகமடைவதை எதிர்ப்பார்க்க முடியாத நோயாளி, தள்ளாத வயதை அடைந்த முதியவர் ஆகியோரின் மீது உரிய காலத்தில் நிறைவேற்றுவதோ (அதாவதாகப் பிடிப்பதோ) களாச் செய்வதோ விதியாகாது. மாதவிடாய்க்காரி, பிள்ளைப் பேறு துடக்குடையவள் ஆகியோரின் மீது களாச் செய்வது விதியாகும். இப்பெண்கள் ரமலான் மாதப் பகலில் துப்புரவானால் மீதியுள்ள நேரத்திலும் நோன்புபோல் இருப்பது சுன்னத்தாகும். துப்புரவில்லாத நாட்களுடன் அந்த நாளையும் சேர்த்து களாச் செய்வது வாஜிபாகும்.

நோன்பு வைக்காத பிரயாணி முகீமாகிவிட்டால் நோன்பாளியைப் போல் இருந்து கொள்ள வேண்டும். பின் களாச்செய்வது வாஜிபாகும். நோயாளி சுகமாகி விட்டாலும் நோன்பாளியைப் போன்றிருப்பது சுன்னத்தாகும். சந்தேகத்திற்குரிய நாளின் பகலில் பிறை கண்டதாக உறுதியானால் மீதி நேரம் நோன்பு போல் இருப்பதும் அதனைக் களாச் செய்வதும் வாஜிப். ஷஅபான் முப்பதாம் நாள் பகலில் பிறை கண்டால் அது எதிர்வரும் இரவின் பிறையேயாகும்; சென்ற இரவின் பிறையல்ல. ஆகையால், அன்று பகலில் நோன்பு போலிருப்பது கூடாது. ரமலான் மாதம் முப்பதாம் நாள் பகலில் பிறையைக் கண்டால் நோன்பை விடுவது கூடாது.

பிறையைப் பார்த்த ஊரில் நோன்பு பிடித்த ஒருவன் பிறையைப் பார்க்காத வேறு ஊருக்குச் சென்றால் அவ்வூரார் நோன்பு பிடிப்பதைப் போன்றே இவனும் நோன்பு பிடித்து அவர்களுடன் சேர்ந்தே பெருநாளையும் கொண்டாடுவான்; தன் ஊருடைய கணக்கை எடுக்க மாட்டான். இவ்வாறே பிறையைப் பார்க்காத ஊரிலிருந்து பிறையைப் பார்த்த ஊருக்குச் சென்றாலும் அவ்வூராரைப் போன்றே நடந்து கொள்வான். இவனுக்கு முப்பது நிரப்பமாக வில்லையானாலும் சரி. ஆனால் இவன் இருபத்தெட்டு நோன்பு பிடித்தவனாக இருந்தால் ஒரு நோன்பைக் களாச் செய்வான்.

கியாமத்து நாளில் ஒருவருக்கு வழக்காளிகள் இருந்தால் அவர்களுக்கு அவருடைய அமல்கள் பரித்துக் கொடுக்கப்படும். ஆனால், நோன்பைத் தவிர. நோன்பு அல்லாறு கொடுக்கப்பட மாட்டாது. "நோன்பு எனக்குரியது; அதற்கு நானே கூலி கொடுப்பேன், என்று நான் வாக்களித்துள்ளேன்", என்று அல்லாஹ் கூறிடுவான். எனவே, மனிதர்களுக்கு ஆதரவாக நோன்பைப்போல் வேறு எந்த அமலும் இல்லை.

நோன்பு வைத்திருப்பவனைப் புலியும், பாம்பும் அணுகாதென்பது நோன்பின் பிரத்தியேகத் தன்மையிலுள்ளதாகும். இது அனுபவப்பூர்வமாகச் சோதிக்கப் பட்டதாகும்.

ஷஅபான் மாதம் முப்பதாம் இரவில் ரமலான் பிறையைப் பார்ப்பது சுன்னத்தாகும். ரமலான் முப்பதாம் இரவில் (பெருநாளைக்காக) ஷவ்வால் பிறையைத் தேடுவது மக்ரூஹ் ஆகும்.

பிறையைக் கண்டால் பின்வரும் துஆவை ஓதிக் கொள்ள வேண்டும்:-

اَللّٰهُ اَكْبَرُ اَللّٰهُمَّ اَهِلَّهُ عَلَيْنَا بِالْيُمْنِ وَالْاِيْمَانِ وَالسَّلَامَةِ
وَالْاِسْلَامِ وَالتَّوْفِيْقِ لِمَا تُحِبُّ وَتَرْضٰى رَبِّيْ وَرَبُّكَ -
اَللّٰهُ هِلَالَ خَيْرٍ وَّرُشْدٍ. اَللّٰهُمَّ اِنِّيْٓ اَسْئَلُكَ مِنْ خَيْرِ
هٰذَا الشَّهْرِ وَخَيْرِ هٰذَا الْقَدْرِ. وَاَعُوْذُ بِكَ مِنْ شَرِّهٖ .

இதனை மூன்று தடவை சொல்லிக் கொள்ள வேண்டும். இதன் பொருள்:-

“ அல்லாஹ் மிகப்பெரியவன். யா அல்லாஹ்! இதனை எங்களுக்கு பரக்கத்து, ஈமான், சாந்தி, இஸ்லாம் ஆகியற்றைக் கொண்டுள்ள பிறையாக ஆக்கிடுவாயாக! இன்னும் நீ விரும்புகின்ற, பொருந்திக் கொள்கின்றதைச் செய்வதற்கு நல்லுதவி செய்யும் பிறையாகவும் ஆக்கிடுவாயாக! (பிறையே!) என்னுடைய இரட்சகனும் உன்னுடைய இரட்சகனும் அல்லாஹ்தான். இதனை நன்மையின், நேர்வழியின் பிறையாக ஆக்கிடுவாயாக! யா அல்லாஹ், இந்த மாதத்தின் நன்மையிலிருந்தும், இந்த ஏற்பாட்டின் நன்மையிலிருந்தும் உன்னிடத்தில் நான் கேட்கிறேன். இதனுடைய தீமையை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். ”

இளம் பிறையைப் பார்த்தவுடன் பின்வரும் துஆவையும் ஓதவேண்டும்

اَعُوْذُ بِاللّٰهِ مِنْ شَرِّ هٰذَا الْغَاسِقِ.

“இந்த இருளின் தீங்கை விட்டும் அல்லாஹ்விடம் நான் பாதுகாப்புத் தேடுகிறேன்.”

இவ்விரண்டு துஆக்களையும் ஓதுவது சுன்னத்தாகும். பிறை கண்டவுடன் அந்தந்த மாதத்தின் பெயரைச் சொல்லி ஸலாம் சொல்ல வேண்டும். அதாவது:

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ خَلَقَنِيْ وَخَلَقَكَ وَصَوَّرَنِيْ وَصَوَّرَكَ
وَجَعَلَكَ اٰيَةً لِّلْعَالَمِيْنَ
اَلسَّلَامُ عَلَيْكَ يَاهِلَالَ رَمَضَانَ.
(அல்லது ————— اَلسَّلَامُ عَلَيْكَ يَاهِلَالَ شَعْبَانَ. என்பது போல்

" என்னையும் உன்னையும் படைத்து, என்னையும் உன்னையும் உருவமைத்து, அகிலத்தினருக்கு அத்தாட்சியாக உன்னை ஆக்கிய அல்லாஹ்வுக்கே எல்லாப்புகழும். ரமலானின் பிறையே! உன் மீது ஸலாம் உண்டாவதாக! "

இவ்வாறே மற்ற மாதங்களிலும் சொல்லிக் கொள்ள வேண்டும்.

ஏழுவயதான சிறு குழந்தையை நோன்பு வைக்குமாறு ஏவ வேண்டும். பத்து வயதான பின் நோன்பு வைக்காவிட்டால் அடிக்க வேண்டும்.

## நோன்பின் ஃபர்லுகள்

நோன்பின் ஃபர்லுகள் இரண்டு 1)ஒவ்வொரு நாளும் ஒரு தடவை இதயத்தால் நிய்யத்துச் செய்தல் 2) கிழக்கு வெளுத்ததிலிருந்து சூரியன் மறையும் வரை நோன்பை முறிக்கும் காரியங்களை விட்டும், தன்னைத் தடுத்துக் கொள்ளுதல். ரமலானுடைய நோன்பென்றும், களாவுடைய நோன்பென்றும், நேர்ச்சை நோன்பென்றும், குற்ற பரிகார நோன்பென்றும் குறிப்பிட்டு நிய்யத்துச் செய்தலும், அதனை சூரியன் மறைந்ததிலிருந்து சுப்ஹு சாதிக் வரையிலுள்ள நேரத்தில் நிர்ணயம் செய்தலும் இவையிரண்டும் ஷர்த்தாகும். இவ்வாறு நிய்யத்துச் செய்யாமல் ஸஹர் சாப்பிடுவதாலும், நோன்பை முறிக்கும் காரியங்களைச் செய்யாமல் இருப்பதாலும் நோன்பு உண்டாகாது.

நிய்யத்துச் செய்தபின் கிழக்கு வெளுப்பதற்குமுன் உடலுறவு கொள்வதும் உணவு சாப்பிடுவதும் எவ்வித இடையூறையும் உண்டாக்காது.

ரமலான் மாதத்தின் முதலிரவில் இந்த ரமலானுடைய முப்பது நோன்புகளை வைக்கிறேன் என்று நிய்யத்துச் செய்தாலும் அன்றைய ஒரு நாளின் நோன்பு மட்டுந்தான் கூடும். ஆனால், இவ்வாறு மொத்தமாக நிய்யத்து வைப்பது சுன்னத்து. ஏனெனில், பிறகு ஏதேனும் ஒரு நாளில் நிய்யத்தை மறந்து விட்டால், மாலிகீ மத்ஹபின்படி அந்த முந்திய நிய்யத்தின் மூலம் நோன்பு கூடிவிடும். மேலும் ஏதேனும் ஓர் இரவில் நிய்யத்துச் செய்ய மறந்து விட்டால் ஹனஃபீ மத்ஹபின் படி அன்று பொழுது விடிந்த பிறகாவது (சூரியன் நேர் உச்சிக்கு வருவதற்கு முன்) நிய்யத்துச் செய்து கொள்வது சுன்னத்து. நோன்பு கூடிவிடும். ஆனால் இவ்வாறு நிய்யத்து வைக்கும் நேரங்களில் அந்தந்த மத்ஹபை நான் தொடர்ந்தேன் என்று நிய்யத்துச் செய்து கொள்ள வேண்டும்.

நாளைக்கு ரமலானாக இருந்தால் நோன்பு வைக்கிறேன் என்று சந்தேகமான எண்ணத்தில் நிய்யத்துச் செய்தபின் மறுநாள் ரமலானாகவே இருந்தாலும் அந்த நிய்யத்துச் செல்லாது. எனினும், ரமலான் முப்பதாம் இரவில் அவ்வாறு நிய்யத்துச் செய்து பிறகு மறுநாள் ரமலானாகவே இருந்தால் அந்த நிய்யத்துச் செல்லுபடியாகும்.

சுன்னத்தான நோன்புக்கு மத்தியானம் வரை நிய்யத்து வைக்கலாம். ஆனால், சுப்ஹு சாதிகிற்குப் பிறகு நோன்பை முறிக்கும் எச்காரியத்தையும் செய்யாதிருக்க வேண்டும்.

நிய்யத்தை நாவினால் மொழிவது முஸ்தஹப்பு. அதில் நிரப்பமாவது:-

نَوَيْتُ صَوْمَ غَدٍ عَنْ اَدَآءِ فَرْضِ رَمَضَانَ
هٰذِهِ السَّنَةِ لِلّٰهِ تَعَالٰى.

"இந்த வருடத்தின் ரமலான் மாதத்தினுடைய ஃபர்லான நோன்பை அதாலாக நாளைப் பிடிக்க நிய்யத்துச் செய்கிறேன். அல்லாஹ்வுக்காக" என்று நிய்யத்துச் செய்தபின்:-

اَللّٰهُ لَآ اِلٰهَ اِلَّا هُوَ الْحَيُّ الْقَيُّوْمُ. اَلْقَآئِمُ عَلٰى
كُلِّ نَفْسٍ بِمَا كَسَبَتْ.

என்று ஓதுவது சுன்னத்தாகும். இதையே ஏழு தடவை ஓதுவது மேலதிகமான சுன்னத்தாகும்.

### நோன்பை முறிப்பவை

நோன்பை முறிக்கும் காரியங்களைச் செய்வது ஹராம் என்பதை அறிந்து முரண்டாக அதனைச் செய்தால் நோன்பு முறிந்து விடும். அவை:

1) தன் துவாரங்களில் கண்ணுக்குத் தெரியும் பொருளை அது புகை போன்றதாக இருந்தாலும் சரி-நுழைய வைப்பது.

2. கன்னிப் பெண், குத்தவைத்திருக்கும் போது முன் துவாரத்தில் வெளியாகும் பகுதியினுள் விரலை நுழைய வைப்பது.

3. பின் துவாரத்தில் சுத்தம் செய்யும் பொழுது வட்ட வளைய சுருக்குக்குள் விரலைச் செலுத்துவது.

4. வாந்தி எடுப்பது.

5. உடலுறவு கொள்வது (விந்து வெளியாகாவிட்டாலும் சரியே)

6. எந்த முறையிலாவது விந்துவை வெளியாக்குவது.

7. சுன்னத்தான கழுவுதலில் சுடப்புச் செய்யும் பொழுது தண்ணீர் உள்ளே செல்வது.

8. வெற்றிலை போன்ற பொருளை மெல்லுவதால் தன்மை மாறிய உமிழ் நீரை விழுங்குவது

9. சுத்தமான உமிழ்நீரை நாவல்லாத பொருளினால் வெளியிலெடுத்து பிறகு அதனை விழுங்குவது.

10. நஜீஸான வாயைக் கழுவும் முன் உமிழ் நீரை விழுங்குவது

11. தொண்டையை விட்டும் வெளிப்பட்டு விட்ட காறலை விழுங்குவது

12. உடலுறவு கொள்ளும் பொழுது கிழக்கு வெளுத்து விட்டதென்பதைத் தெரிந்த பின்னும் உறுப்பை வெளிப்படுத்தாமலிருப்பது.

13. பகலில் மறதியாக உடலுறவு கொள்கிறவன் நினைவு வந்தவுடன் உறுப்பை வெளியாக்காமலிருப்பது.

14. உணவு வாயிலிருக்கும் போது ஸஹர் நேரம் முடிந்து, கிழக்கு வெளுத்து விட்டது தெரிந்த பிறகும் அவ்வுணவை வாயிலிருந்து வெளியில் துப்பாமலிருப்பது

இவை அனைத்திலும் நோன்பு முறிந்து விடும்; களாச் செய்வது வாஜிபாகும்.

சுருமாயிடுவதால் நோன்பு முறியாதென்றிருந்தாலும் அதனைச் செய்யாமல் விடுவது ஏற்றமாகும்.

தானாக வாந்தி எடுக்கச் செய்வது நோன்பை முறிக்கும். காதில் அல்லது வாயில் ஈ போன்றது நுழைந்த பின் அதனை வெளிப்படுத்துவதாலும் நோன்பு முறியும்.

இரவில் விழுங்கிய நூலின் நுனியைப் பகலில் வெளியே எடுப்பதாலும் நோன்பு முறியும். அதனை வெளியில் எடுக்காமல் விட்டு விட்டால் நோன்பு கூடிவிடும். ஆனால் அதனை வெளியில் எடுக்காமல் தொழுதால் தொழுகை கூடாது. ஏனெனில், அந்த நூலின் ஒரு நுனி வயிற்றினுள் நஜீஸைத் தொட்டுக் கொண்டிருக்கிறது; மற்றொரு நுனி வெளியிலிருக்கிறது. இப்பொழுது நஜீஸைச் சுமந்து கொண்டு தொழுகிறான் என்ற நிலை ஏற்படுவதால் தொழுகை கூடாது. ஆனால், அவன் அறியாத முறையில் மற்றொருவன் அந்த நூலை இழுத்து விட்டால் நோன்பும் முறியாது; தொழுகையும் கூடும்.

## நோன்பு நிறைவேறுவதற்கு ஷர்த்து

நோன்பு நிறைவேறுவதற்கு ஷர்த்தாவது, பகல் முழுவதும் இஸ்லாமும், அறிவும் உண்டாகியிருக்க வேண்டும். இன்னும் மாதவிடாய், பிள்ளைப் பேறுத் தொடக்கு, மயக்கம், போதை ஆகியவை ஏற்படாமலும் இருக்க வேண்டும்.

ஒருவன் பகல் முழுவதும் தூங்கிக் கொண்டிருந்தாலும் நோன்பு முறியாது. அவ்வாறே பகல் முழுவதும் ஜனாபத்துடையவனாக இருந்தாலும் நோன்பு முறியாது. எனினும் பிந்தியதில் அவன் பாவியாவான்.

பிள்ளைப் பேறு நோன்பை முறித்து விடும். இரத்தம் காணப்படாவிட்டாலும் சரி. உடலுறவினால் ரமலானுடைய அதாவான நோன்பை முறித்தவன் அதனைக் களாச் செய்வதும், அத்துடன் குற்றப்பரிகாரம் (கஃப்பாரா) கொடுப்பதும் வாஜிபாகும். அதாவது: முஃமினான ஓர் அடிமையை உரிமை விடுவது, முடியாவிடில் இரண்டுமாதங்கள் தொடராக நோன்பு வைப்பது, அது முடியாவிடில் அறுபது மிஸ்கீன்களுக்கு உணவளிப்பது. அதற்கும் முடியாவிடில் அதற்குரிய வசதி ஏற்படுகிறவரை அவன் மீது அது கடனாகவே இருக்கும்.

உடலுறவு கொள்ளப்படுகிற பெண்ணின் மீது கஃப்பாரா விதியாகாது. உடலுறவு என்பதில் பின் துவாரத்தில், மிருகத்திடத்தில் உறவு கொள்வது, ஜினா, லிவாதத் (ஓரினப்புணர்ச்சி) செய்வதும் சேரும். இவற்றிலெல்லாம் கஃப்பாரா விதியாகும். ஹலாலான உறவானால் களாவும் கஃப்பாராவும் செய்ய வேண்டும். மிருகத்துடன் உறவாடினாலும், ஹலாலான உடலுறவாக இருந்தாலும் களாவும், கஃப்பாராவும், அவன் மீது வாஜிபாயிருப்பதுடன் தஃஜீர் تَعْزِيْرٌ எனும் தண்டனையும் அவன் மீது நடத்தப்படும் (தஃஜீரின் விபரம் பின்னால் சொல்லப்படும்) விபச்சாரம், லிவாதத் ஆகியவற்றில் களாவும் கஃப்பாராவும் அவன் செய்ய வேண்டியதிருப்பதுடன் அதற்குரிய தஃஜீரும், ஹத்து என்னும் தண்டனையும் அவன் மீது நிறைவேற்ற வேண்டும்.

ரமலானுடைய களா நோன்பு, நேர்ச்சை நோன்பு, கஃப்பாராவுடைய நோன்பு ஆகியவற்றின் போது உடலுறவு கொண்டு விட்டால் களா மட்டும் செய்ய வேண்டும். கஃப்பாரா கிடையாது.

கிழக்கு வெளுக்கவில்லையென்று நினைத்துக் கொண்டு சாப்பிட்டபின் கிழக்கு வெளுத்து விட்டதென்பது தெரிந்தாலும், சூரியன் மறைந்து விட்டதில் சந்தேகத்துடன் நோன்பு திறந்த பின் அச்சந்தேகம் நிவர்த்தியாக வில்லையானாலும் நோன்பு கூடாது; களாச் செய்ய வேண்டும். கிழக்கு வெளுக்க வில்லையென்று நினைத்துக் கொண்டு சாப்பிட்ட பின் அது சந்தேகமாக இருந்தால் களாச் செய்ய வேண்டியதில்லை.

## நோன்பை முறிக்காதவை

1. நோன்பை முறிக்கும் காரியங்களை மறதியாகவோ, தெரியாமலோ, நிர்பந்திக்கப்பட்டவனாகவோ செய்வது,

2. தன்னையறியாமல் தன் சக்திக்கு மீறி வாந்தி வருவது,

3. கனவின் மூலம், அல்லது ஆசை ஏற்படுவதின் மூலம் விந்து, தானாக வெளியாலது,

4. ஃபர்லான குளிப்பில் தண்ணீரில் மூழ்காதிருக்கும் நிலையில் தண்ணீர் உள்ளே செல்வது,

5. கொஞ்ச நேரம் போதையுண்டாகி தெளிவு பெறுவது,

6. சுத்தமான உமிழ் நீரைக் கூட்டி விழுங்குவது ,

7. சுவையேதுமில்லாத "முஸ்தகா" ( مُصْطَكَى ) என்னும் பூனைக்கண் குங்கிலியப் பிசின் (Mastic) போன்ற பொருளை வாயில் போட்டு அதனால் ஊறிய உமிழ் நீரை விழுங்குவது. இவற்றினால் நோன்பு முறியாது.

## நோன்பை விடுவதை அனுமதிக்கும் கருமங்கள்

தயம்முமை ஆகுமாக்கும் நோயும், கடினமான பசியும், தாகமும், கஸ்ரு தொழுகையை ஆகுமாக்கும் பிரயாணமும் நோன்பை விடுவதை ஆகுமாக்கி வைக்கும் எனினும் இவர்கள் எல்லோரும் நோன்பை களா செய்ய வேண்டும். பிரயாணத்தில் சிரமமில்லையானால் நோன்பு வைப்பது ஏற்றமாகும்.

## நோன்பை விடுவதை வாஜிபாக்கும் கருமங்கள்

தான் பிடித்திருக்கும் நோன் பினால் தனக்கு மரணம் ஏற்பட்டு விடுமென்று நினைத்தாலோ, அல்லது தனது நோய், மிகுந்த துன்பத்தை உண்டுபண்ணுமென்று நினைத்தாலோ தான் பிடித்திருக்கும் நோன்பை விட்டுவிடுவது அவன்மீது வாஜிபாகும்.

இறந்து விடுவதற்கு நெருங்கிக் கொண்டிருக்கும் சங்கைக்குரிய ஒரு பிராணியைக் காப்பாற்றுவதற்கு நோன்பை விட்டால்தான் முடியும் என்றிருந்தாலும், கர்ப்பமுற்றிருப்பவள் சிரமம் ஏற்படுவதை பயந்தாலும், குழந்தைக்குப் பால் கொடுப்பவள் பால் வற்றிவிடுவதை பயந்தாலும் நோன்பை விடுவது வாஜிபாகும்.

## நோன்பின் சுன்னத்துகள்

நோன்பின் சுன்னத்துகள்:- 1) இரவுக்குப் பின் ஸஹர் நேரத்தில் சாப்பிடுவது 2) அதனைக் கடைசி நேரத்தில் பிற்படுத்திச் சாப்பிடுவது. 3) அந்த சாப்பாட்டில் பேரீச்சம்பழத்தைச் சேர்த்துச் சாப்பிடுவது. 4) உணவு ஏதும் இல்லாவிட்டாலும் ஒரு மிடறு தண்ணீரைக் குடித்தாவது ஸஹர் செய்வது 5) நேரம் சந்தேகமாகி விட்டால் ஸஹர் சாப்பிடுவதை விட்டு விடுவது 6) சூரியன் மறைந்தது உறுதியானவுடன் நோன்பு திறப்பது 7) அதனைப் பேரீச்சம் பழத்தைக் கொண்டு திறப்பது 8) இயன்ற அளவு மற்றொரு நோன்பாளியைத் தன்னுடன் சேர்த்துக் கொண்டு நோன்பு திறப்பது 9) நோன்பு திறக்கும் போது இந்த துஆவை ஓதுவது:

اَللّٰهُمَّ لَكَ صُمْتُ (وَبِكَ اٰمَنْتُ وَعَلَيْكَ تَوَكَّلْتُ)

وَعَلٰى رِزْقِكَ اَفْطَرْتُ .

"யா அல்லாஹ்! உனக்காக நோன்பு நோற்றேன். (உன்னைக் கொண்டு ஈமான் கொண்டேன், உன் மீது நம்பிக்கை வைத்தேன்) உன்னுடைய உணவைக் கொண்டு நோன்பு திறந்தேன்."

பேரீச்சம்பழம் இல்லாவிட்டால் தண்ணீரைக் கொண்டு நோன்பு திறப்பது. தண்ணீரினால் நோன்பு திறந்தால் முந்திய துஆவுடன்:

ذَهَبَ الظَّمَأُ وَابْتَلَّتِ الْعُرُوْقُ وَثَبَتَ الْاَجْرُ

اِنْ شَآءَ اللّٰهُ .

என்பதையும் சேர்த்து ஓதிக் கொள்வது.

நோன்பு திறக்கும் முன் வாய் கொப்பளிப்பதும் மிஸ்வாக்குச் செய்வதும் மக்ரூஹ். ஸஹர் சாப்பிடுவதால் தங்கடம் ஏதேனும் உண்டாகுமென பயந்தால் ஸஹர் செய்வது சுன்னத்தல்ல.

இரண்டு தினங்களுடைய நோன்புகளுக்கிடையில் இரவில் எதுவும் சாப்பிடாமல் மனமறிந்து இரண்டு நோன்புகளையும் சேர்ப்பது ஹராம். இரண்டையும் ஒன்றாகச் சேர்க்கும் எண்ணம் இல்லாவிட்டாலும் சரி.

நோன்பாளி குழந்தைகளுக்கு இறைச்சி போன்றதை அவசியமின்றி சவைத்துக் கொடுப்பதும், ஆணத்தில் உப்புப் பார்ப்பதும், மதியத்திற்குப்பின் வாய் நாற்றமில்லாமலிருக்கும் போது மிஸ்வாக்குச் செய்வதும் மக்ரூஹ் ஆகும்.

ஜும்ஆ நாளின் குளியலைப் போன்ற சுன்னத்தான குளிப்பினால் நோன்பு முறிந்து விடுவதை பயந்தால் குளிப்பதை விடுவது அவசியம்.

பஜ்ருக்கு முன்னதாகவே ஜனாபத்துடைய குளிப்பை நிறைவேற்றுவதும், வீணான கேள்வி, வீணான பார்வை, வாசனை முகர்வது ஆகியவற்றை விட்டுத் தன்னைத் தடுத்துக் கொள்வதும், ஆகுமான இச்சை, சந்தேகத்திற்குரிய உணவு ஆகியவற்றை

விட்டுவிடுவதும் சுன்னத்தாகும். அதிகமான ஆசையை உண்டாக்கும் முத்தமிடுதல் போன்றது ஹராமாகும்.

பொய், புறம், கோள், பரிகாசம், வீண்பாடல்கள் ஆகியவற்றை விட்டும் தவிர்ந்திருப்பது எல்லாக் காலங்களிலும் வாஜிபாகும். எனினும் குறிப்பாக நோன்பு நேரங்களில் மிக அவசியமாகத் தவிர்ந்திருக்க வேண்டியவையாகும்.

நோன்பாளி ஒருவரை எவரேனும் ஏசினால் "நான் நோன்பாளியாய் இருக்கிறேன்" என்று மூன்று தடவை மனதிற்குள்ளேயே சொல்லிக் கொள்ள வேண்டும். முகஸ்துதி ஏற்படாமலிருந்தால் வெளிப்படையாகவும் அவனிடம் சொல்லலாம்.

ரமலான் மாதத்தில் குப்பை கூளமில்லாத தூய்மையான இடத்தில் இருந்து அதிகமாகக் குர்ஆன் ஓதுவதும், ஓதிக் கொடுப்பதும், திக்ரு செய்வதும், சலவாத்துக் கூறுவதும், தராவீஹ், தஹஜ்ஜுத், வித்ரு ஆகியவற்றைத் தொழுவதும், தாராளமாக சதக்காச் செய்வதும் சுன்னத்தாகும்.

## லைலத்துல் கத்ர் பற்றிய விபரம்

லைலத்துல் கத்ர் இன்ன இரவுதான் என்பதில் ஏராளமான கருத்து வேறுபாடுகள் கூறப்பட்டுள்ளன. அது ஆண்டில் ஓர் இரவென்றும், பராஅத் இரவென்றும், ரமழானில் ஓர் இரவென்றும், ரமழானுடைய இருபத்தேழாம் இரவென்றும் பல கருத்துகள் கூறப்பட்டுள்ளன. இவற்றில் நம்பிக்கையான சொல் ரமழான் இருபதுக்குமேல் ஒற்றைப்படையாக வரும் நாட்களில் உள்ள இரவுகளில் ஒரு இரவென்றும் கூறப்பட்டிருப்பதால் ரமழான் மாதத்தின் கடைசி பத்து நாட்களும் இஃதிகாஃப் இருப்பது மிகச் சிறப்பானதாகும்.

லைலத்துல் கத்ரு இரவின் சிறப்பு அது அல்லாத மற்ற ஆயிரம் மாதங்களை விட மேலானதாகும். அதாவது அந்த ஓரிரவு முப்பதினாயிரம் நாட்களைவிட மேலானதாகும். இரவு என்பது ஒரு நாளில் பாதியாக இருப்பதால் முப்பதினாயிரம் நாட்களை இரண்டாக ஆக்கிக் கணக்கிட்டால் அறுபதினாயிரம் இரவுகளை விடமேலானது என்பது தெரியவருகிறது.

இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களும் மற்றும் இமாம்கள் சிலரும் கூறியுள்ளதாவது: ரமழானின் முதற்பிறை ஞாயிறு அல்லது புதன்கிழமையாயிருந்தால் லைலத்துல் கத்ரு இருபத்தொன்பதாம் இரவு என்பதாகவும், முதற்பிறை திங்கட்கிழமையாயிருந்தால் லைலத்துல் கத்ரு இருபத்தொன்றாம் இரவென்பதாகவும், செவ்வாய்க்கிழமை அல்லது வெள்ளிக்கிழமையாக இருந்தால் லைலத்துல் கத்ரு இருபத்தேழாம் இரவென்றும், வியாழக்கிழமையாக இருந்தால் இருபத்தைந்தாம் இரவென்றும், சனிக்கிழமையாக இருந்தால் இருபத்திமூன்றாம் இரவென்றும் கூறியுள்ளார்கள். "இந்தக் கணக்குப்படி நான் பருவமடைந்தது முதல் எனக்கு லைலத்துல் கத்ரு தவறியதே கிடையாது" என்று ஷைகு அபுல்ஹஸன் ஜுர்ஜானி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

லைலத்துல் கத்ரு இரவிலும் மற்ற நாட்களிலும் பின்வரும் துஆவை அதிகமாக ஓதுவது சுன்னத்து :

اَللّٰهُمَّ اِنَّكَ عَفُوٌّ تُحِبُّ الْعَفْوَ فَاعْفُ عَنِّيْ

"யா அல்லாஹ்! நிச்சயமாக நீ மன்னிப்பவன்; நீ மன்னிப்பை விரும்புகிறாய் ஆகையால், என்னை மன்னித்தருள்வாயாக!"

ஒருவன் தன் மனைவியைப் பார்த்து, "லைலத்துல் கத்ரு வந்தால் நீ தலாக்" என்று சொன்னால் அவன் சொன்ன நாளிலிருந்து ஓராண்டு முடியும்வரை அவள் தலாக் ஆகமாட்டாள். ஏனெனில் லைலத்துல் கத்ரு என்பது ஒரு ஆண்டில் ஏதேனும் ஒரு நாளின் இரவில்தான் வரும். ஆனால் அது எந்த நாளென்று அல்லாஹ் குறிப்பிடவில்லை.

லைலத் துல் கத்ரைப் பற்றிக் கூறப்பட்டுள்ள "இன்னா அன்ஜல்னாஹு" சூராவில் லைலத்துல் கத்ரு என்ற வார்த்தை மூன்று தடவை கூறப்பட்டுள்ளது. ஒரு வார்த்தையில் ஒன்பது எழுத்துக்கள் வீதம் மூன்று தடவைக்கு இருபத்தேழு எழுத்துக்கள் ஆகின்றன. ஆகவே, இருபத்தேழாம் இரவுதான் லைலத்துல் கத்ரு என்று சிலர் கூறியுள்ளனர். இவ்வாறு சில காரியங்களில் இமாம்களில் சிலர் எழுத்துக்களின் எண்ணிக்கைக்குத் தோதாக விஷயங்களைக் கூறியிருப்பது அறிவுக்குப் பொருத்தமாகவும் அமைந்துள்ளது.

இவ்வாறே சுன்னத்து-ஜமாஅத் கூட்டத்தினருக்கு மாற்றமான பித்அத்துடைய கூட்டங்கள் எழுபத்திரண்டு என்பதாக ஹதீஸில் அறிவிக்கப்பட்டு உள்ளது. இவர்கள் சுன்னத்து ஜமாஅத்துக்கு மாற்றமாகப் பிரிந்ததற்குக் காரணம் பொறாமையாகும். பொறாமைக்கு அரபியில் ஹஸத் என்று சொல்லப்படும்.

'ஹே' என்ற எழுத்துக்கு எண் 8 'ஸீன்' என்ற எழுத்துக்கு எண் 60 'தால்' என்ற எழுத்துக்கு எண் 4. ஆக எழுபத்திரண்டானது. எனவே அவர்களும் 72 கூட்டங்களாகப் பிரிந்துள்ளனர் என விளக்கம் கூறியுள்ளனர்.

லைலத்துல் கத்ரு இரவுக்கு சில அடையாளங்கள் ஹதீஸில் கூறப்பட்டுள்ளன. அவை: அன்றைய இரவில் நட்சத்திரம் எரிந்து விழாது; நாய் குரைக்காது; சூடும் குளிர்ச்சியும் இல்லாமல் மிதமான தன்மையாக இருக்கும்; அன்று சூரியன் உதிக்கும்போது சுடர் அதிகமின்றி பிறையைப் போல் இருக்கும். மேலும் ஷைத்தான் வெளியில் வரமாட்டான் என்றும் கூறப்பட்டுள்ளது.

லைலத்துல் கத்ரு இரவில் தராவீஹுக்குப்பின் இரவு முழுவதும் அல்லது முடிந்த அளவு திக்ரு, கிராஅத், தஸ்பீஹ் ஆகியவற்றில் ஈடுபட்டிருக்க வேண்டும்.

"ரசூலுல்லாஹி (ஸல்) அவர்கள் பிறந்த இரவு லைலத்துல் கத்ரு இரவை விட மிகச் சிறந்ததாகும்" என "மவாஹிபுல்லதுன்னிய்யா" என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.

ரமழானுடைய முந்திய பத்தில் :—

اَللّٰهُمَّ ارْحَمْنِيْ என்று அல்லாஹ்வுடைய ரஹ்மத்தையும், நடுப்பக்கத்தில் اَللّٰهُمَّ اغْفِرْلِيْ என்று அவனுடைய மன்னிப்பையும், கடைசிப்பக்கத்தில் اَللّٰهُمَّ اَعْتِقْنِيْ مِنَ النَّارِ என்று நரக வேதனையை விட்டு விடுதலையையும் கேட்பது சுன்னத்து ஆகும்.

### நோன்பைக் களாச் செய்ய வேண்டிய காரணங்களிற் சில

ரமழான் மாதத்தில் எவ்விதக் காரணமுமின்றி நோன்பை விட்டாலும், அல்லது இரவில் நிய்யத்தை மறந்து விட்டாலும், அல்லது ஷஅபான் மாதம் முப்பதாம் நாள் பிறை காணப்படாததால் நோன்பில்லாமல் இருந்து, பிறகு பிறைக் கண்டதாகத் தெரிந்தாலும், அல்லது ஸஹர் செய்தபின் ஃபஜ்ருக்குப் பிறகு சாப்பிட்டதாகத் தெரிந்தாலும் அந்த நாளைக் களாச் செய்வது வாஜிபாகும். அன்று பகல் முழுவதும் நோன்பாளியைப் போல் இருந்து கொண்டு நோன்பை முறிக்கின்ற காரியங்களை விட்டும் தன்னைத் தடுத்துக் கொள்வது அவசியமாகும்.

### தள்ளாத வயது, நீங்காத வியாதி போன்றவற்றால் தப்பிய நோன்புக்கு ஃபித்யா

தள்ளாத வயதின் காரணத்தாலும், நீங்காத நோயின் காரணத்தாலும் நோன்பை விட்டவர்கள் நாளொன்றுக்கு இரு கையளவு (ஒரு முத்து- مُدّ) தானியம் நஷ்ட ஈடாக கொடுப்பது வாஜிபாகும். பிறகு அவர்கள் நோன்பு வைக்கச் சக்தி பெற்றாலும் களாச் செய்வது விதியாகாது.

கர்ப்பவதியும், பால் கொடுப்பவளும் குழந்தையின் உடல் நலனை பயந்து நோன்பைவிட்டால் களாச் செய்வதுடன் மேற்குறிப்பிட்டபடி நஷ்டஈடு கொடுப்பதும் வாஜிபாகும்.

ரமழானில் தவறிய நோன்பை அடுத்த ரமழானுக்குள் களாச் செய்து விட வேண்டும். காரணம் ஏதுமின்றி அடுத்த ரமழானுக்குப்பிறகு களாச் செய்தால் ஒவ்வொரு நோன்பிற்கும் ஒரு முத்து مُدّ (இரு கையளவு) தானியம் நஷ்ட ஈடு கொடுக்க வேண்டும். இவ்வாறே எவ்விதக் காரணமுமின்றி வருஷங்கள் பிந்தும் போதெல்லாம் ஒவ்வொரு வருஷத்திற்கும் ஒரு முத்து مُدّ வீதம் நஷ்ட ஈடு அதிகப் படுத்தப்படும். களாச் செய்ய வசதியிருந்தும் மறு ரமழானுக்குள் களாச் – செய்யாமல் மரணமடைந்து விட்டால், அவனுடைய சொத்திலிருந்து ஒரு நோன்பிற்கு இரண்டு முத்து مُدَّيْن (அரைமரக்கால்) வீதம் நஷ்டஈடு கொடுக்கப்படும்.

உயிராயிருக்கும் ஒருவருக்காக மற்றொருவர் நோன்பு வைப்பது கூடாது. அவர் தள்ளாத வயதானவராயிருந்தாலும் சரி. இறந்து விட்டவருக்காக நோன்பு வைப்பது உறவினருக்கும் அவன் வஸிய்யத்துச் செய்து சென்ற அந்நியருக்கும் கூடும். மற்றொரு சொற்படி சொத்திருக்குமானால் அவன் விட்ட நோன்பையும் தொழுகையையும் வலியாக உள்ளவன் அந்த சொத்திலிருந்து ஃபித்யா கொடுத்து கடமையை நிறைவேற்றுவது வாஜிபாகும்.

இறந்து விட்டவருக்காகச் செய்யப்படுகின்ற அமல்கள் ஃபர்ளாக இருந்தாலும், சுன்னத்தாக இருந்தாலும் அது அவருக்குப் போய்ச் சேரும் என முஹிப்புத் திப்ரீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். ஒருவன் தன்னுடைய தொழுகை, நோன்பு போன்ற அமல்களுடைய நன்மை போன்றதை மற்றவருக்கு ஹதியாச் செய்யலாம் என்பதும், அது அவனுக்குப் போய் சேருமென்பதும் சுன்னத்து வல்ஜமாஅத்தின் அகீதாவாக இருக்குமென்று ஷரஹுல் முக்தார் என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.

## சுன்னத்தான நோன்புகள்

துல்ஹஜ் மாதம் ஒன்பதாம் (அரஃபா) நாள், முஹர்ரம் ஒன்பது, பத்தாம் (ஆஷூரா) நாட்கள், ஷவ்வால் மாதம் துவக்கத்தில் ஆறு நாட்கள், துல்ஹஜ் அல்லாத மற்ற எல்லா மாதங்களிலும் பிறை 13, 14, 15 ஆகிய மூன்று 'இரவு வெளிச்சமான' (அய்யாமுல் பீள் என்ற) நாட்கள், ஒவ்வொரு மாதத்திலும் பிறை 27, 28, 29 ஆகிய மூன்று 'இரவு இருளான' (அய்யாமுஸ் ஸூத் என்ற) நாட்கள் ஆகியவற்றிலும் நோன்பு வைப்பது சுன்னத்து ஆகும். இன்னும் திங்கள், வியாழன் இரு தினங்களில் நோன்பு வைப்பது சுன்னத்து முஅக்கதாவாகும். துல்ஹஜ் மாதம் பதிமூன்றுக்குப் பதிலாக பதினாறில் நோன்பு வைக்க வேண்டும். ஹஜ்ஜு செய்கிறவன் அரஃபா நாளன்று நோன்பை விடுவது சுன்னத்து.

ஷவ்வால் மாதம் பெருநாளைக்கு மறுநாள் முதல் ஆறு தினங்கள் தொடராக நோன்பு வைப்பது சுன்னத்து. ரஜப் மாதமும், ஷஃபான் மாதமும், துல்ஹஜ்ஜு ஒன்பது தினங்களும், முஹர்ரம் பத்து தினங்களும் நோன்பு வைப்பது ஏற்றமானதாகும்.

ஆஷூரா தினத்தை முந்திய நபிமார்களும் கொண்டாடி வந்திருப்பதால் அந்நாளில் நோன்பு வைப்பது ஓராண்டு நோன்பு வைப்பதற்குச் சமம் என்று அல்லாமா பாகுஷைர் ஹள்ரமீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். அரஃபா நாளை நமது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கொண்டாடி வந்ததால் அன்றைய தினம் நோன்பு வைப்பது அதற்கு முந்திய ஓராண்டின் பலனையும், பிந்திய ஓராண்டின் பலனையும் தருவதாகும். ஆகையால், இரண்டாண்டுகள் நோன்பு வைப்பதைப் போலாகுமென்று கூறப்பட்டுள்ளது.

சுன்னத்தான இந்த நோன்புகளை வைப்பதால் தாய் தந்தையருக் குரிய கடமைகளை, அல்லது மனைவிக்குரிய கடமைகளைச் செய்ய முடியாது என்றிருந்தால் எல்லா நாட்களும் தொடராக நோன்பு வைப்பது மக்ரூஹ். அவ்வாறே காலமெல்லாம் நோன்பு வைப்பதும், எவராயிருந்தாலும், வெள்ளியும் ஞாயிறும் இடையில் ஒருநாள் இடைவெளி விட்டு பிரித்து நோன்பு வைப்பதும் அல்லது சனிக்கிழமை மட்டும்

தனியாக ஒரு நாள் நோன்பு வைப்பதும், ஃபர்ளான நோன்பு களா இருக்க சுன்னத்தான நோன்பு வைப்பதும் மக்ரூஹ் ஆகும்.

ஃபர்ளான நோன்பை எக்காரணமுமின்றி விட்டால் அதனை விரைவாகக் களா செய்வது வாஜிப். ஆகவேதான் சிறப்பான நாட்களிலும் சுன்னத்தான நோன்பை வைப்பது சிலருக்கு மக்ரூஹ் என்று கூறப்பட்டிருப்பதெல்லாம் எவ்வித காரணமுமின்றி ஃபர்லான நோன்பை விட்டவனுக்கே அல்லாது மற்றவனுக்கு இல்லை. மேற் கூறப்பட்ட தினங்களில் ஃபர்லான களா நோன்பை வைக்கும் பொழுது சுன்னத்தான நோன்பையும் நிய்யத்துச் செய்து கொண்டால் இரண்டும் நிறைவேறிவிடும். நிய்யத்துச் செய்யவில்லையானால் அதில் அவன் சுன்னத்தான நோன்பு வைக்க வேண்டுமென்ற சட்டம் விழுந்து விடும்.

விட்ட நோன்பை தீவிரமாக களாச் செய்யவேண்டுமென்ற விதி இல்லா மலிருப்பதாலும், பிரயாணத்தில் விட்டால் குற்றமில்லை என்பதாலும், நீங்காத நோயாளியும், தள்ளாத வயோதிகரும் விட்டு விடலாமென்பதாலும், ஃபர்லான நோன்பு களா இருக்கும்பொழுது சுன்னத்தான நோன்பு வைப்பது ஹராம் என்று கூறாமல் மக்ரூஹ் என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் தொழுகை அவ்விதமல்ல. (அதாவது ஃபர்லான தொழுகை களா இருக்கும்பொழுது சுன்னத்தான தொழுகைகள் தொழுவது ஹராம் என்று கூறப்பட்டுள்ளது.)

எவ்வித இடையூறும் இல்லாத திடகாத்திரமாக உள்ள ஒருவர் தினமும் நோன்பு வைக்க வேண்டுமென விரும்பினால் நபி தாவூது (அலை) அவர்களின் நோன்புபோல் ஒரு நாள் விட்டு ஒரு நாள் நோன்பு வைப்பது ஏற்றம்.

ஹஜ்ஜுப் பெருநாளன்று கிழக்கு வெளுத்து சூரியன் ஒரு வல்லயத்தின் (ஈட்டியின்) உயரம் மேலே வரும்வரை நோன்பாளிபோல் நோன்பை முறிக்கும் உணவுப் பொருளைச் சாப்பிடாமல் இருப்பது சுன்னத்தாகும்.

தினந்தோறும் வழக்கமாக சுன்னத்தான நோன்பு வைத்துவரும் ஒருவன், திருமணம் செய்துகொண்டால் மணவறை நாட்களில் நோன்பை விடுவதும், விருந்துக்குச் செல்லாவிட்டால் அழைத்தவன் மனம் வருந்துவான் என்றிருந்தால் நோன்பை விடுவதும், அதற்கு பதில் வேறு ஒரு நாள் நோன்பு வைத்துக்கொள்வதும் சுன்னத்தாகும். ஏனெனில் முஃமினான ஒருவருடைய மனதை மகிழ்விப்பது நஃபில் நோன்பு வைப்பதை விடச் சிறந்ததாகும். மேலும், அழைத்தவன் அன்பு மனதுடன் அழைத்து, அந்த உணவும் சந்தேகத்தை விட்டு நீங்கியதாக இருந்தால் அதனை ஏற்பதால் ஒரு பரிபூரணமான நோன்பின் நன்மை கிடைத்துவிடும் என்று இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள். இதனை அறியாத சிலர் உணவுக்காக நோன்பை விடுவதா என்று கூறுகின்றனர். அவர்கள் மார்க்கத்தின் உண்மை நிலையை அறியாதவர்கள்! ஆனால், ஃபர்லான நோன்பை விடுவது ஹராம். வீடு கூடும் (மணவறை) நாட்கள் என்பது கன்னிப்பெண்ணுக்கு ஏழு நாட்களும், மற்றவளுக்கு மூன்று நாட்களுமாகும்.

கணவன் தன் மனைவியை வியாழன், திங்கள் நோன்பையும் பொதுவாக உள்ள நஃபில் நோன்புகளையும், பொதுவான நஃபில் தொழுகைகளையும் விட்டு விடுமாறு

கூறுவதற்கு அனுமதியுண்டு. ஆஷூரா, அரஃபா போன்ற சிறப்பான நாட்களின் நோன்புகளையும், முக்கிய சுன்னத்தான தொழுகைகளையும் தடுப்பது கூடாது. கணவன் ஊரிலிருக்கும்போது அவனுடைய அனுமதியின்றி ஆஷூரா, அரஃபா தவிர மற்ற சுன்னத்தான நோன்புகளை வைப்பதும், சீக்கிரமாகக் களாச் செய்யவேண்டிய நோன்பு இருக்க அவசியமில்லாத நோன்புகளைப் பிடிப்பதும் ஹராமாகும்.

இரண்டு பெருநாட்களிலும் (துல்ஹஜ் பிறை *11, 12, 13,* ஆகிய) அய்யாமுத் தஷ்ரீக் நாட்களிலும், ஷஅபான் முப்பதாம் இரவு ரமலானுடைய பிறையைக் கண்டது சந்தேகமாயிருக்கும் நிலையிலும் நோன்பு வைப்பது ஹராம். ஆனால் பிந்தியது வழக்கமாக அவர் நோன்புவைக்கும் கிழமையாக இருந்தால் தவிர.

ஷஅபான் பதினைந்துக்குப் பின் கடைசிவரை நோன்பு வைப்பது ஹராம். ஆனால், அதற்கு முந்திய நாளுடன் சேர்த்து வைத்தாலும், அல்லது தன்னுடைய வழக்கப்படி அந்தக் கிழமைகளில் வைப்பவராக இருந்தாலும், அல்லது நேர்ச்சை செய்திருந்தாலும், அல்லது களா நோன்பு வைத்தாலும் கூடும். ஷஅபான் பதினைந்திலும் பதினாறிலும் நோன்பு வைத்து, பதினேழில் விட்டு விட்டால் பதினெட்டிலிருந்து பிறகு வைப்பது ஹராமாகும்.

## இஃதிகாஃபின் விபரம்

இஃதிகாஃபின் விபரங்களை பள்ளியின் ஒழுக்கங்கள் என்னும் பாடத்திலும் கூறியிருப்பதுடன் இங்கும் ஓரளவு கூறப்படுகிறது.

இஃதிகாஃப் என்பது பள்ளியில் தரிபடுவதாகும். உறுப்புகளின் அசைவுகள் அமைதி பெற்றபின் சிறிது நேரமாவது தங்குவதால் இஃதிகாஃபின் குறைந்தபட்ச அளவு உண்டாகும். ரமலானின் பிந்திய பத்திலும், அதிலும் ஒற்றைப்படையான இரவுகளிலும் தங்குதல் சிறப்பானதாகும். இதற்கு ஆதாரம்:

وَأَنتُمْ عَاكِفُونَ فِي الْمَسَاجِدِ *(2:187)*

*"நீங்கள் மஸ்ஜிதுகளில் தங்கியிருக்கும் நிலையில்..." என்று அல்லாஹ் கூறியுள்ள திருவசனமாகும்*

இஃதிகாஃபின் உண்மையான தன்மையாகிறது, தன் எஜமானுடைய சந்நிதானத்தில் அடியான் தன்னுடைய இதயத்தை நிம்மதிபெறச் செய்வதும், அவன் பக்கமே திரும்புதலுமாகும். அவனுடைய இந்த ஈடுபாட்டைத் தவிர வேறு எதன் பக்கமும் வெளியாகுதல் கூடாது.

இஃதிகாஃபுக்காகத் தரிபடுவது என்பது தொழுகையில் ஒவ்வொரு செயலிலும் தரிபடுவதை விடவும் கொஞ்சமேனும் கூடுதலான தரிபடுதல் உண்டாகவேண்டும். உளூ இல்லாவிட்டாலும் இஃதிகாஃப் இருக்கலாம்.

இஃதிகாஃபுக்கு ஷர்த்துகள் இரண்டு, *1)* நிய்யத்து. (அல்லாஹ்விற்காக இந்த மஸ்ஜிதில் இஃதிகாஃப் இருப்பதை நிய்யத்துச் செய்தேன்;

نَوَيْتُ الْاِعْتِكَافَ فِيْ هٰذَا الْمَسْجِدِ لِلّٰهِ تَعَالٰى.

2) மேலே குறிப்பிட்ட குறைந்த நேரமாவது தங்குவது, தொடர்ச்சியாக பத்து நாட்களுக்கு இஃதிகாஃப் இருப்பேன் என்று நிய்யத்துச் செய்தால் அந்நாட்களில் முழுமையாகத் தங்கவேண்டும். மலம், ஜலம் கழிப்பதற்காகவோ, ஜனாபத்துக் குளிப்பிற்காகவோ, சாப்பிடுவதற்காகவோ வெளியில் சென்றால் தாமதிக்காமல் உடனடியாக வந்து விடவேண்டும். இவற்றினால் இஃதிகாஃப் முறியாது.

விந்தை வெளியாக்கினாலும், ஜனாஸா தொழ, ஜுமுஆ தொழ வெளியே புறப்பட்டாலும் அந்தத் தொடர் பாத்திலாகி (முறிந்து) விடும். நோன்பு வைத்தவனாகவும், ஜுமுஆ மஸ்ஜிதிலும் இஃதிகாஃப் இருப்பது சிறப்பாகும். ஓரிரவு ஒரு பகலை விடக் குறையாமல் இருப்பதும் நல்லதாகும்.

ஒருவர் ஒரு மஸ்ஜிதைக் குறிப்பிட்டு அதில்தான் இஃதிகாஃப் இருப்பேன் என்று கூறினால் அதிலேயே இருக்கவேண்டுமென்பது கட்டாயமில்லை; ஆனால், அதில் இருப்பது ஏற்றமாகும். எனினும், மக்காவிலுள்ள மஸ்ஜிதுல் ஹராமில் தங்குவதாக நிய்யத்துச் செய்தால் அதில்தான் இருக்கவேண்டும். மதீனாவின் மஸ்ஜிதுந் நபவியில் இருப்பதாக நிய்யத்துச் செய்தால் மக்காவின் மஸ்ஜிதில் தங்கலாம்; இதற்கு மாற்றம் கூடாது. பைத்துல் முகத்தஸின் மஸ்ஜிதுல் அக்ஸாவில் தங்குவதாக நிய்யத்துச் செய்தால் மதீனா மஸ்ஜிதில் தங்கலாம்; இதற்கு மாற்றம் கூடாது.

மற்ற எந்த ஊருடைய மஸ்ஜிதும் இம்மூன்று மஸ்ஜிதுகளுக்குப் பகரமாக (ஈடாக) ஆகாது. ஆனால் ஏதாவது ஒரு குறிப்பிட்ட மஸ்ஜிதில் இஃதிகாஃப் இருப்பதை நேர்ச்சை செய்தால் அதில் நிறைவேற்றுவது வாஜிபாகும். எனினும் மேற்குறிப்பிடப்பட்ட மூன்று மஸ்ஜிதுகளில் ஏதாவது ஒன்றிலும் அதை நிறைவேற்றலாம். அதுபோல் காலத்தை நேர்ச்சை செய்தாலும் அந்தக்காலத்தில் நிறைவேற்றுவது வாஜிபாகும். எந்த மஸ்ஜிதில் எந்த நேரத்தில் எவர் நுழைந்தாலும் இஃதிகாஃபை நிய்யத்துச் செய்வது சுன்னத்தாகும்.

## ஹஜ்ஜு உம்ரா பற்றிய பாடம்

இஸ்லாத்தின் கடமைகளில் ஐந்தாவது, ஹஜ்ஜும் உம்ராவுமாகும். வசதிபெற்றவர்கள் ஆயுளில் ஒரு தடவை மக்காவுக்குச் சென்று ஹஜ்ஜும் உம்ராவும் செய்வது கடமையாகும். மற்றொரு சொற்படி வசதியுள்ளவர்களின் மீது ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு தடவை ஹஜ்ஜு செய்வது கடமை என்று கூறப்பட்டுள்ளது. ஹன்பலி மத்ஹபில் இதுவே பலமான சொல்லாகும்.

சுப்ஹனால்லாஹ்! அல்லாஹ்வின் மீது ஆணையாகச் சொல்கிறேன். தொழுகை, நோன்பு, ஜகாத்து இம்மூன்றிலும் கிடைக்காத பெரும் பலன் இந்த ஹஜ்ஜில் உண்டாயிருப்பதை மக்கள் அறிந்தால் ஒருவரேனும் ஹஜ்ஜு செய்யாமல் இருக்கமாட்டார்கள். அந்தப்பலனைப்பற்றி இரண்டாவது ஷாஃபியீ என்று பிரபல

மடைந்த இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களும் மற்றுமுள்ள முஜ்தஹிதீன்களும் எழுதியுள்ளார்கள்.

ஹஜ்ஜினால் பெரும் பாவங்களும் மன்னிக்கப்படும். சிரமங்களைச் சகித்துக்கொள்ளும் பழக்கம் ஏற்படும். உணர்வு பெறுவோர் உணர்வு பெறுவர்; படிப்பினை பெறுவோர் படிப்பினை பெறுவர். ஒரு முஸ்லிம் இதில் குறை செய்யமாட்டார். அகக் கண் குருடர் இத்தனை விஷயங்களையும் தெரிந்து கொள்ள மாட்டார்கள்.

"அல்லாஹு தஆலாவுக்கு வானத்திலும் பூமியிலும் பதினைந்து வீடுகள் உள்ளன. வானத்தில் ஏழு, பூமியில் ஏழு என பதினான்கு வீடுகள் இருப்பதில் அந்த பதினான்கும் கஅபாவுக்கு எதிர்ப்புறமாகவே இருக்கின்றன." என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியுள்ளார்கள்.

"கஅபாதான் பைத்துல் மஃமூர்; அதனை அல்லாஹு தஆலா அடியார்களுக்காக பூமியில் வைத்துள்ளான்," என ஹஸன் (ரலி) அவர்கள் கூறியுள்ளார்கள்.

ஹஜ் என்னும் சொல்லுக்கு எண்ணிக்கை பதினொன்று; எனவே ஹஜ்ஜில் பதினொரு காரியம் புகுந்திருக்கிறது. ஹஜ்ஜில் உள்ள ஜீமைப் பிரித்துக் கணக்கிட்டால் எண்ணிக்கை பதினான்கு ஆகும், எனவே பதினான்கு வாஜிபான சிஃபத்தை அறிந்தவன்தான் ஹஜ்ஜு செய்வான்.

பருவமடைந்த, முஸ்லிமான, சுயபுத்தியுள்ள, சுதந்திரமானவனின் மீது அலட்சியமில்லாத தாமதத்துடன் ஹஜ்ஜு கடமையாகும். சிறு குழந்தை, பைத்தியக்காரன், அடிமைகள் மீதும், போய்வரப் பொருள் வசதியும், தகுந்த வாகன வசதியும் கிடைக்காதவன் மீதும், கப்பல், ரயில்,(கார், பிளேன்)போன்ற வாகனங்களின் கேள்வுக்குச் செலுத்துவதற்குரிய பணவசதி இல்லாதவன் மீதும், தன் மீது கடமையிருப்பவர்களுக்குச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்ய வசதியில்லாதவன் மீதும், வழியில் அச்சம் கொண்டிருப்பவன் மீதும், கணவனோ, அல்லது மணம் செய்ய ஹராமான வேறு ஆண்களோ, அல்லது பெண்களோ துணையில்லாத பெண்கள் மீதும் ஹஜ்ஜு வாஜிபாகாது. கணவன் தன் மனைவியை ஹஜ்ஜுக்கு அழைத்துச் செல்வதும், அவன் அவனுடைய அனுமதி பெற்று இஹ்ராம் கட்டுவதும் சுன்னத்தாகும்.

ஹஜ்ஜையும், உம்ராவையும் மூன்று விதமாகச் செய்யலாம். அவை:1. ஹஜ்ஜுக்காக மட்டும் முதலில் இஹ்ராம் கட்டி, ஹஜ்ஜை நிறைவேற்றி விட்டு இஹ்ராமைவிட்டும் நீங்கி அதே ஆண்டில் உம்ராவுக்காக இஹ்ராம் கட்டுவது (இதற்கு

إِفْرَادٌ இஃப்ராது என்று சொல்லப்படும்)

2) முதலில் உம்ராவுக்காக இஹ்ராம் கட்டி, அந்த உம்ராவைச் செய்து முடித்து விட்டு இஹ்ராமை விட்டும் ஹலாலாகி, பிறகு ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டுவது இதற்கு تَمَتُّعٌ தமத்துவு என்று சொல்லப்படும்)

3) ஹஜ்ஜுக்கும் உம்ராவுக்கும் சேர்த்து இஹ்ராம் கட்டுவது. (இதற்கு قِـرَانٌ கிரான் என்று சொல்லப்படும்)

இவை மூன்றிலும் சிறந்தது முந்தினதாகும். அதாவது, ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டி, ஹஜ்ஜை செய்து முடித்துவிட்டு அந்த இஹ்ராமை விட்டும் நீங்கியபின், அதே ஆண்டில் உம்ராவிற்காகவும் இஹ்ராம் கட்டி உம்ரா செய்வதாகும். பிறகு இரண்டாவது வகையாகும். பிறகு மூன்றாவது வகை சிறப்பானதாகும்.

(மாலிக் மத்ஹபின் படி இரண்டாவது வகையான 'தமத்துவு' சிறந்ததாகும். ஹனஃபீ மத்ஹபின்படி மூன்றாவது வகையான 'கிரான்' சிறந்ததாகும்)

முதலாவது முறைப்படி ஹஜ்ஜை மட்டும் முதலில் செய்பவர்களின் மீது ஃபித்யாவெனும் தண்டப்பரிகாரமாக மிருகத்தை அறுத்துக்கொடுப்பது வாஜிபில்லை. மற்ற இருமுறைகளின்படி செய்பவர்களின் மீது அந்த ஃபித்யா வாஜிபாகும். அவர்களும் வெளியூர்க்காரர்களாக இருக்கவேண்டும். ஹரம் எல்லைக்குள் குடியிருப்பவர்களின் மீது அந்த ஃபித்யா வாஜிபாகாது. (இவ்விரு ஃபித்யாக்களுக்கும் 'ஹத்யு' என்றும் சொல்லப்படும்)

இவ்விரு ஃபித்யாக்களையும் பெருநாள் அன்றுதான் கொடுக்கவேண்டும். மேலும் அதை ஹரம் ஷரீஃபின் எல்லைக்குள் உள்ள (மினா போன்ற) ஒரு இடத்தில் கொடுக்கவேண்டும்.

## கஅபத்துல்லா, ஹரம் ஷரீஃப் ஆகியவற்றின் செய்திகள்

நபி (ஸல்) அவர்களுடைய காலத்திலும், அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களுடைய காலத்திலும் கஅபாவைச் சுற்றிலும் இருக்கும் ஹரம் கட்டடமாக இருக்கவில்லை. அது வெட்ட வெளியாக இருந்தது. எனினும் அதில் தொழுகை நடைபெற்று வந்தது. அந்த ஹரமைச் சுற்றி வீடுகளும் இருந்தன. பிறகு உமர் (ரலி) அவர்களுடைய காலத்தில் அவ்வீடுகளை விலைக்கு வாங்கி அவற்றை இடித்து இடத்தை விசாலப்படுத்தி சுற்றிலும் சுவர் எழுப்பினார்கள். பிறகு உஸ்மான் (ரலி) அவர்களுடைய காலத்தில் மேலும் விசாலமாக்கி சுற்றுச்சுவர் எழுப்பி மேற்கூரையும் அமைத்தார்கள். பிறகு அப்துல்லாஹிப்னு ஜுபைர்(ரலி) அவர்களுடைய காலத்தில் அதைவிடச் சற்று விசாலமாக்கினார்கள். பிறகு அப்துல் மலிக் இப்னு மர்லானுடைய காலத்தில் அதனை அலங்காரம் செய்து பரிபாலனம் செய்தார்கள். அதன் பிறகு அவருடைய மகன் வலீது அதை மிகவும் விசாலமாக்கினார். அதன் பிறகு மன்சூரும், பிறகு மஹ்தீயும் விரிவுபடுத்தி அழகிய முறையில் நிர்வகித்து வந்தனர்.

ஷைகுனா முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள் பக்தாதில் இருந்து கால் நடையாகவே சென்று ஹஜ்ஜு செய்தார்கள். ஹஜ்ஜு முடிந்தபின் அனைவரும் ஜியாரத்திற்காகச் சென்ற பொழுது இவர்கள், "நான் ஹஜ்ஜு செய்யவந்த வழியில் என்னுடைய பாட்டனாரை ஜியாரத்துச் செய்வதை விரும்பவில்லை. அன்னாரை ஜியாரத்துச் செய்வதை நான் ஃபர்ளாக எண்ணியுள்ளேன். ஆகவே,

ஊருக்குச் சென்று அங்கிருந்து கால்நடையாகவே ஜியாரத்துக்குப் போவேன் என்று கூறினார்கள். அவ்வாறே பக்தாது வந்த பின் குதிரைகள் ஒட்டகங்கள் ஆகியவற்றுடன் புறப்பட்ட அவர்கள் அவற்றில் சவாரி செய்யாமல் கால்நடையாகவே சென்று ஜியாரத்துச் செய்து திரும்பினார்கள். அல்லாஹுதஆலா நம்மையும் ஹஜ்ஜாஜ் களாகவும், ஜியாரத்துச் செய்பவர்களாகவும் ஆக்கிடுவானாக!

அல்லாஹ்வின் திருவீடு என்று கூறப்படும் கஃபாவிற்குப் பல சிறப்புகள் குர்ஆனிலும் ஹதீஸிலும் கூறப்பட்டுள்ளன. அவற்றில் அணுவளவுதான் இங்கு கூறப்பட்டுள்ளது. அதற்கு பைத்துன் அதீகுன் (பூர்வீக வீடு) என்று கூறப்படும். ஆதம் (அலை) உலகிற்கு வருவதற்கு ஏழாயிரம் ஆண்டுகளுக்கு முன் மலக்குகளைக் கொண்டு அதனை தவாஃப் செய்வித்தான். பிறகு நபிமார்களில் எவரும் அங்கு ஹஜ்ஜு செய்யாமல் இருந்ததில்லை. ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் இந்தியாவிலிருந்து கால் நடையாக நாற்பது தடவை ஹஜ்ஜு செய்ததாக அறிவிக்கப்பட்டுள்ளது.

இமாம் அபூஹனீஃபா (ரஹ்) அவர்கள் ஒரு தடவை ஹஜ்ஜு செய்த பொழுது கஃபாவின் திறவுகோலை வைத்திருந்த பனூஷைபா கூட்டத்தாரிடம் ஆயிரம் தங்கக் காசுகளைக் கொடுத்து அந்தத் திறவுகோலை வாங்கித்திறந்து அதனுள் இரவு முழுவதும் ஒரே நிலையாக நின்று வணங்கினார்கள். பின் விடிந்தபிறகு திறவுகோலைத் திருப்பிக் கொடுத்து விட்டார்கள். இமாமவர்கள் கொடுத்த அந்த ஆயிரம் காசுகள் தூய்மையான ஹலாலான பொருளாக இருப்பதால் அதன் பரக்கத்து முஸ்லிம்கள் அனைவருக்கும் கிடைக்க வேண்டுமென அன்றைய தலைவர்கள் கூடி முடிவெடுத்து அப்பொருளைக் கொண்டு கஃபாவுக்கு ஒட்டுச் சுவர் கட்டினார்கள் (இந்த கிதாபையெழுதும் பொழுது அந்த சுவர் இருந்தது)

கஃபாவாகிறது ஏழு தடவை கட்டப்பட்டுள்ளது. முதலில் மலக்குகள் கட்டினார்கள். பிறகு ஆதம் (அலை) அவர்கள், பிறகு நூஹ் (அலை) அவர்கள், பிறகு அமாலிக்கா என்ற கூட்டத்தினர், பிறகு இப்ராஹீம் (அலை) அவர்கள், பிறகு முஹம்மது (ஸல்) அவர்கள் சிறுவராயிருந்த காலத்தில் குரைஷிகள் அதைக் கட்டினார்கள். அப்பொழுது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தங்கள் திருக்கரங்களால் ஹஜருல் அஸ்வதை எடுத்து அதன் இடத்தில் வைப்பதற்கு உதவினார்கள். பிறகு ஹஜ்ஜாஜ் இப்னு யூசுபுத் தகஃபி حَجَّاجُ بْنُ يُوسُفَ الثَّقَفِيُّ கட்டினார்.

ஹஜ்ஜாஜ் இப்னு யூசுபுத் தகஃபி என்பவர் அப்துல் மலிக் இப்னு மர்வானுடைய ஆட்சியில் கவர்னராக இருந்தவர். ஹஜ்ஜாஜ் யஜீதை விட மிகக் கொடியவர் என்பதாகவும், அவர் மூன்று இலட்சம் முஸ்லிம்களைக் கொலை செய்துள்ளார் என்பதாகவும், தன் கரத்தால் மட்டும் அறுபதினாயிரம் பேரைக் கொலை செய்திருப்பதாகவும் கூறப்பட்டுள்ளது. இவ்வாறிருந்தும் அவர் கஃபாவைக் கட்டிய பரக்கத்தால் அவர் மன்னிக்கப்படலாம் என்றும் சொல்லப்பட்டுள்ளது. அப்துல் மலிக் இப்னு மர்வானுடைய ஆட்சி காலம் ஹிஜ்ரி 86ஆகவும், முஹம்மது மஹ்தியின் ஆட்சிகாலம் ஹிஜ்ரி 169 ஆகவும் இருக்கும்.

எழுவான் தொடுத்து படுவான் வரையில் உலகிலுள்ள முஸ்லிம்கள் அனைவரின் மீதும் கஃஅபாவைப் பரிபாலனம் செய்வது ஃபர்ளு கிஃபாயாவாக இருக்கும். ஒவ்வோர் ஆண்டும் ஆறு இலட்சம் பேருக்குக் குறையாமல் ஹஜ்ஜு செய்வார்கள் என்றும், குறைந்தால் மலக்குகளைக் கொண்டு நிறைவு செய்யப்படுமென்றும் கூறப்பட்டுள்ளது. சிலகாலங்களில் பத்து இலட்சம், பதினைந்து இலட்சம் வரையிலும் அதற்கு அதிகமாகவும் கூடுகிறார்கள்.

மக்கா நகரம் சிறிய ஊராக இருந்தும் இலட்சக்கணக்கான மக்கள் நடமாடுவதற்கும் தங்குவதற்கும் வசதி ஏற்படுவதுடன், ஆறு, குளம் இல்லாமலிருந்தும் அத்தனை மக்களுக்கும் போதுமான தண்ணீர் வசதியும், உணவு வசதியும், தொழுவதற்கு இட வசதியும் கிடைப்பது அல்லாஹுதஆலாவின் மிகப்பெரிய வல்லமையின் அத்தாட்சி களாகும். இதனைத்தான் அல்லாஹு தஆலா குர்ஆனில் :

فِيهِ ءَايَٰتٌۢ بَيِّنَٰتٌ

"அதில் தெளிவான அத்தாட்சிகள் இருக்கின்றன" என்று கூறியுள்ளான்.

இப்புனித கஃஆபாவை இடிப்பதற்காக ரசூலுல்லாஹி (ஸல்) அவர்கள் பிறப்பதற்கு ஐம்பது நாட்களுக்கு முன் அப்ரஹா என்ற அரசன் தீய எண்ணத்துடன் யானைப் படையுடன் வந்த பொழுது, அபாபீல் என்னும் பறவைகளின் மூலம் அப்படையிலுள்ள ஒவ்வொருவரின் பெயரும் ஒவ்வொரு கல்லின் மீது எழுதப்பட்ட கடப்பட்ட பொடிக்கற்களைக் கொண்டு அவர்களின் மீது எறியச் செய்து அவர்களையும் அவர்களின் யானைகளையும் அழித்து, மெல்லப்பட்ட வைக்கோல் சக்கையைப் போல் இறைவன் ஆக்கிவிட்டான்.

மேலும் அங்குள்ள ஜம்ஜம் கிணற்று நீர் நோய்க்கு மருந்தாகவும் பசிக்கு உணவாகவும் இருக்கிறது.

நபி இப்றாஹீம் (அலை) அவர்களின் காலம் முதல் இதுநாள் வரை ஒவ்வொரு ஆண்டும் ஆறு இலட்சம் பேருக்குக் குறையாமல் ஹஜ்ஜு செய்கின்றனர். ஒவ்வொரு ஹாஜியும் மினாவில் எழுபது கற்கள் வரை எறிகின்றனர்.

மேலும், அங்கு சென்றவர்கள் உலக துன்பங்களிலிருந்து அச்சமற்றிருப்பதுபோல் மறுமையின் வேதனையை விட்டும் அச்சமற்றவராகி விடுவார்கள் என்றும், அரஃபாத்தில் தங்குகின்ற ஒருவன் தன்னுடைய பாவங்கள் மன்னிக்கப்படுமா? இல்லையா என்று சந்தேகம் கொள்வது கூடாது என்றும் கூறப்பட்டுள்ளது.

மேலும் ஹஜ்ஜின் மூலம் பிறருடைய குற்றங்களையும், இவன் பொருட்டால் அல்லாஹுதஆலா தன் கிருபையால் மன்னிக்கிறான் என்பதையும், ஹஜ்ஜு விதியானவர்கள் அலட்சியமாக அதனை விட்டால் மரணிக்கும் போது யூதனாகவோ, கிருஸ்தவனாகவோ இறந்து விடுவதை பயந்து கொள்ளட்டும் என்ற ஹதீஸைத் தெரிந்திருந்தும் விரைவாக ஹஜ்ஜை நிவேற்றாமலிருப்பது நயவஞ்சகத் தனமாகும். அல்லாஹ் நம்மைக் காப்பாற்றுவானாக!

## ஹஜ்ஜின் ஃபர்ளுகள் ஆறு:

1) மனதினால் நிய்யத்துச் செய்வது

نَوَيْتُ الْحَجَّ وَاَحْرَمْتُ بِهٖ لِلّٰهِ تَعَالٰى.

"அல்லாஹுதஆலாவுக்காக ஹஜ்ஜை செய்வதற்காக இஹ்ராம் கட்டினேன்" என்று நிய்யத்துச் செய்வது.

2) துல்ஹஜ் ஒன்பதாம் நாள் பகல் ஜவாலுக்குப் பிறகு பத்தாம் நாள் (பெருநாள்) ஃபஜ்ருக்குள் கொஞ்ச நேரமாவது அரஃபாத்தில் தங்குதல்

3) பெருநாள் நடு இரவுக்குப்பின் ஃபர்ளான தவாஃபுஸ் ஸியாரா செய்தல்

(இந்த தவாஃபுக்கு தவாஃபு ருக்னு என்பதாகவும், தவாஃபு இஃபாளா என்பதாகவும் கூறப்படும்)

4) அரஃபாவுக்குச் செல்லும் முன் தவாஃபுல் குதூம் என்னும் சுன்னத்தான தவாஃபுக்குப்பின் ஸஃபா, மர்வா மலைகளுக்கிடையில் தொங்கோட்டம் (ஸயீ) ஓடுவது. அவ்வாறு தவாஃபுல் குதூமுக்குப்பின் ஸயீ செய்யவில்லையானால், அரஃபாவில் தங்கிய பின் செய்யப்படும் தவாஃபுல் இஃபாளாவுக்குப் பின் ஸயீ செய்வது. ஸயீ செய்வதின் முறையாகிறது ஸஃபாவிலிருந்து மர்வா வரை செல்வது ஒரு சுற்றாகும். பின் மர்வாவிலிருந்து ஸஃபாவரை செல்வது இரண்டாவது சுற்றாகும். இவ்வாறே சந்தேகமற ஏழு சுற்றுகள் ஓட வேண்டும். ஸஃபாவில் ஆரம்பித்து ஏழாம் சுற்று மர்வாவில் முடிக்க வேண்டும்.

5) தலைமுடியிலிருந்து மூன்று முடிக்குக்குறையாமல் அகற்றி இஹ்ராமிலிருந்து தஹ்லீல் ஆவது.(இஹ்ராமை விட்டு நீங்கிக் கொள்வது).

6) முன் சொல்லப்பட்ட ஐந்தையும் வரிசைக் கிரமமாய்ச் செய்வது.

**உம்ராவின் ஃபர்ளுகள்:** ஹஜ்ஜுடைய ஆறு ஃபர்ளுகளில் அரஃபாவில் தங்குவதைத் தவிர மீதியுள்ள ஐந்துமாயிருக்கும்.

### தவாஃபின் ஷர்த்துகள் ஆறு:

1) சிறு தொடக்கு, பெருந்தொடக்கு இரண்டை விட்டும் சுத்தமாயிருத்தல்

2) மானத்தை மறைத்தல்

3) தவாஃபு செய்கிறேன் என நிய்யத்துச் செய்தல் (ஃபர்லென்பது தவாஃபை மட்டும் செய்வதாகயிருந்தால்தான். ஹஜ்ஜோடு சேர்ந்த தவாபுல் இஃபாளாவுக்கு நிய்யத்து சுன்னத்தாகும்)

4) ஹஜருல் அஸ்வதிலிருந்து ஆரம்பித்தல், தன் உடல் அதனை முன்னோக்கும்படி நிற்பது.

5) கஃஅபாவை தனக்கு இடப்புறமாக்கிச் சுற்றுவது

6) ஏழுதடவை சந்தேகமில்லாமல் திட்டவட்டமாக தவாஃபு செய்வது

ஏழுதடவை தவாபு செய்து முடிக்கும் முன் உளூ முறிந்து விட்டால் உளூச்செய்துவிட்டு வந்து முன் செய்த எண்ணிக்கை போக மீதியைச் சுற்றிமுடிக்க வேண்டும். உளூ செய்து வர நீண்ட நேரமானாலும் சரி.

ஃபர்ளான தவாஃப் செய்ய ஆரம்பிப்பதற்கு முன்னதாகவோ, அல்லது செய்து கொண்டிருக்கும் போதோ ஒரு பெண்ணுக்கு மாதவிடாய் ஏற்பட்டு விட்டால், அவள் சுத்தமான பிறகுதான் அதனை செய்ய வேண்டும். இவ்வாறு ஏற்பட்ட வெளியூர் பெண் சுத்தமாவதற்கு முன் ஊருக்குப் புறப்பட வேண்டிய நிர்பந்தமாகி விட்டால், அவள் மக்காவிலிருந்து நீண்ட தூரம் சென்ற பின்னால் அதாவது: எளிதில் மக்காவுக்குத் திரும்பி வரமுடியாத தூரத்திற்குச் சென்ற பின்னால் தன் தலைமுடியில் கொஞ்சத்தை வெட்டி அல்லது நறுக்கி அல்லது கறுக்கி எப்படியாவது நீக்கி தஹ்லீல் ஆகிவிடுவாள். ஆனால் அவள் மீதுள்ள அந்த தவாஃபின் பொறுப்பு நீங்காமலேயே இருக்கும். எனவே அப்படிப்பட்டவள் மக்காவிலிருந்து புறப்படுவதற்கு முன்தன் பொறுப்பை நீக்கிக் கொள்வதற்குரிய ஏதேனும் ஒரு மத்ஹபைத் துயர்ந்து கொள்வது பேணுதல் ஆகும். எனவே, ஹனஃபீ மத்ஹபின் படி ஃபர்லான தவாஃபை ஒரு ஆணோ அல்லது பெண்ணோ சிறு தொடக்குடனோ, பெருந்தொடக்குடனோ அல்லது ஹைளு, நிஃபாஸுடனோ செய்வது குற்றமாகும். ஆனால் தவாஃபு கூடிவிடும். எனினும் தொடக்கை நீக்கிய பின் அந்த தவாஃபை மீட்ட வில்லையானால் உளூ இல்லாமல் செய்தவர்கள் ஒரு ஆடும், பெருந்தொடக்குடனும், ஹைளு, நிஃபாஸுடனும் செய்தவர்கள் ஒரு ஒட்டகம் அல்லது ஒரு மாடு அறுத்துக் கொடுப்பது வாஜிபாகும்.

தலைமுடி இறக்குவதில் பெண்களுக்குக் கத்தரிப்பதும், ஆண்களுக்குச் சிரைப்பதும் ஏற்றமாகும்.

## தவாஃபின் சுன்னத்துகள்

தவாஃபின் ஆரம்பத்தில் ஹஜருல் அஸ்வதைத் தொட்டு முத்தமிட்டு துவக்கி, பிறகு ஒவ்வொரு சுற்றிலும் அதனை முத்தமிடுவது சுன்னத்து.

அதிலும் தவாஃபின் எண்ணிக்கை ஒற்றைப் படையாக வரும்போது அப்படிச் செய்வது பலமான சுன்னத்து. இன்னும் மூக்கையும் நெற்றியையும் அதன் மீது வைப்பதும், இவ்வாறு ஏழு சுற்றிலும் முத்தமிடுவதும் சுன்னத்து. ருக்னுயமானியைத் தனது கையால் தொட்டு கையை முத்திக் கொள்ள வேண்டும்.

பின்னால் ஸயீ செய்ய வேண்டிய தவாஃபில் ஆண்கள் முந்திய மூன்று சுற்றில் தொங்கோட்டமாக ஓடுவதும், கஃஅபாவை நெருங்கிச் சுற்றுவதும், إضطباع இள்திபாஉ (அதாவது: மேற்போர்வையை வலது தோளுக்குக் கீழ்ப் போட்டு, போர்வையின் இரு ஓரங்களையும் இடது தோளின் மேலே) போடுவதும், தவாஃப் முடிந்த பின் மகாமே இப்றாஹீமுக்குப் பின்னால் நின்று இரண்டு ரக்அத் தொழுவதும் சுன்னத்தாகும். அனைவரும் ஜம்ஜம் நீரை விலாபுடைக்கக் குடிப்பதும் சுன்னத்தாகும்

(ஆனால் இள்திபாஉ செய்வது தொழுகையில் மக்ரூஹ் ஆகும் என்று ஏற்கனவே கூறப்பட்டிருக்கிறது)

ஹஜ்ஜின் வாஜிபுகள்

*1)* ஒவ்வோருவரும் அவரவர்களுக்குரிய மீகாத்தில் இஹ்ராம் கட்டுவது.

ஒவ்வொரு திசையிலிருந்து ஹஜ்ஜுக்கு வருபவருக்கும் இஹ்ராம் கட்டுவதற்காக குறிப்பிட்ட இடம் நியமனம் செய்யப்பட்டுள்ளது. அவற்றிற்கு مِيْقَاتٌ மீகாத் எனக் கூறப்படும்.

மக்காவிலிருப்பவருக்கு மக்காதான் மீகாத் ஆகும். மதீனாவின் பக்கமிருந்து வருபவருக்கு (பீர் அலி بِئْرُ عَلِيٍّ என்ற) துல்ஹுலைஃபா என்ற இடமும், ஷாம், எகிப்து மற்றும் மேற்குப் பகுதிகளிலிருந்து வருபவருக்கு ஜுஹ்ஃபா جُحْفَةُ என்ற இடமும், யமன் பகுதியிலிருந்து தரை மார்க்கமாக வருபவருக்கு யலம்லம் يَلَمْلَمُ என்ற இடமும் (இந்த இடம்தான் இந்தியாவிலிருந்து கப்பலில் செல்பவர்களுக்கும்) மீகாத்தாகும். ஹிஜாஸ் மற்றும் யமன் கடல் வழியாக வருபவருக்கு கிரன் قَرَنٌ என்ற இடமும், மஷ்ரிக் எனும் கிழக்கு பகுதியிலிருந்து வருபவருக்கு தாத்து இர்க் ذَاتُ عِرْقٍ என்ற இடமும் மீக்காத்துகளாகும். (இந்தியாவிலிருந்து விமானத்தில் செல்பவர்கள் அவர்கள் விமானமேறும் இடத்திலேயே இஹ்ராம் கட்டிக்கொள்ள வேண்டும். சென்னையில் விமானமேறுபவர்கள் சென்னையிலும், பம்பாயில் விமானமேறுபவர்கள் பம்பாயிலும் இஹ்ராம் கட்டிக்கொள்ளவேண்டும்.

ஜுஹ்ஃபா என்பது மக்காவுக்கும் மதீனாவுக்கும் இடையிலுள்ள ஒரு குக்கிராமமாகும். இப்பொழுது அந்தக் கிராமம் சிதைந்த நிலையில் இருக்கிறது. அதற்கு சமீபமாக 'ராபிங்' என்ற ஒரு கிராமம் இருக்கிறது. அங்கும் இஹ்ராம் கட்டலாம். ஃதாத்து இர்க் என்பது மக்காவிலிருந்து இரண்டு மர்ஹலா தொலைவிலுள்ள ஒரு கிராமமாகும். ஃதுல் ஹுலைஃபா என்பது மதீனாவிலிருந்து 5 மைல்களுக்குள் உள்ள ஒரு இடமாகும். மக்காவிலிருந்து மிக தூரமான மீக்காத்தாகும். எலம்லம் என்பது மக்காவிலிருந்து இரண்டு மர்ஹலா தொலைவிலுள்ள ஒரு மலையாகும்.

இந்தியாவிலிருந்து கப்பலிலோ (விமானத்திலோ) செல்பவர்கள் ஜித்தா போய்ச் சேர்ந்தவுடன் அவ்விடத்திலும் இஹ்ராம் கட்டிக் கொள்ளலாமென்று இப்னுஹஜர் (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

*2)* பெருநாளிரவு (துல்ஹஜ் பத்தாம் நாளிரவு) நடு சாமத்திற்குப்பிறகு இரவில் சிறிது நேரமேனும் முஜ்தலிஃபாவில் தங்குவது.

*3)* அய்யாமுத் தஷ்ரீக் உடைய தினங்களின் இரவுகளின் பெரும்பாலான நேரங்களில் மினாவில் தங்குவது.

*4)* தவாஃபுல் விதாஉ (பயணத்தவாஃப்) செய்வது.

*5)* பத்தாம் நாளிரவு (பெருநாளிரவு) நடு நிசிக்குப்பின் ஜம்ரத்துல் உக்பா என்ற இடத்தில் ஏழு கற்கள் எறிவதுடன் பிறை 11, 12, 13 ஆகிய (அய்யாமுத்தஷ்ரீக்) மூன்று நாள்களிலும் மதியம் ஜவாலுக்குப் பிறகு ஜம்ரத்துல் ஊலா, ஜம்ரத்துல் உஸ்தா,

ஜம்ரத்துல் உக்பா ஆகிய மூன்று கல்லெறியுமிடங்களிலும் ஒவ்வொன்றிலும் ஏழு, ஏழு கற்கள் வீதம் எறிவது (ஆக, ஒவ்வொரு ஹாஜியும் எழுபது கற்கள் எறிய வேண்டும்) ஆக மொத்தம் வாஜிபு ஐந்தாகும்.

இந்த வாஜிபுகளில் எதனை விட்டாலும் ஃபித்யா فِدْيَة என்னும் குர்பான் கொடுப்பது வாஜிபாகும்.

## ஹஜ்ஜின் சுன்னத்துகள்

1) இஹ்ராம் கட்டுவதற்காகவும், மக்காவினுள் நுழைவதற்காகவும், அரஃபா, முஜ்தலிஃபா ஆகிய இடங்களில் தங்குவதற்காகவும், மினாவில் அய்யாமுத்தஷ்ரீக்கில் கல்லெறிவதற்காகவும் குளிப்பது.

2) இஹ்ராம் கட்டுவதற்குக் கொஞ்சமுன் மணம் பூசிக் கொள்வது,

3) لَبَّيْكَ اَللّٰهُمَّ لَبَّيْكَ لَا شَرِيْكَ لَكَ اِنَّ الْحَمْدَ
وَالنِّعْمَةَ لَكَ وَالْمُلْكَ لَا شَرِيْكَ لَكَ.

என்று தல்பியாச் சொல்வது,

இந்த தல்பியாவை எல்லா நேரங்களிலும் அதிகமாகச் சொல்ல வேண்டும். மேட்டிலிருந்து பள்ளத்திலும், பள்ளத்திலிருந்து மேட்டிலும், வீட்டிலிருந்து வெளியிலும், வெளியிலிருந்து வீட்டினுள்ளும், இரவிலிருந்து பகலிலும் பகலிலிருந்து இரவிலும் மாறும் போதெல்லாம், ஹாஜிகள் ஒருவரையொருவர் சந்திக்கும் போதெல்லாம் தல்பியாவை அதிகமாகச் சொல்வது சிறப்பாகும். இஹ்ராமை விட்டுத் தஹ்லீல் ஆனவுடன் தக்பீர் சொல்வது சுன்னத்தாகும். தக்பீருடைய வாசகத்தில் சுருக்கமானது, அதிகமானது, நிரப்பமானது ஆகியவை முன்னால் ஈதுடைய பாடத்தில் கூறப்பட்டுள்ளன.

4) நிய்யத்தை நாவினால் கூறுவது, அதாவது:

نَوَيْتُ الْحَجَّ وَاَحْرَمْتُ بِهٖ لِلّٰهِ تَعَالٰى.

என்று கூறுவதும் சுன்னத்தாகும்.

5) சலவாத்துக் கூறுவது,

6) சொர்க்கத்தைக் கேட்பது,

7) நரகத்தை விட்டுப் பாதுகாப்புத் தேடுவது,

கடைசி மூன்று விஷயங்களையும் அதிகமான இடங்களில் செய்து வருதல் சுன்னத்தாகும்.

இதில் தவாஃபிலும் மற்ற நேரங்களிலும் அந்த அந்த இடங்களில் ஓத வேண்டிய அவ்ராதுகள் பல இருக்கின்றன. இமாம் ஷாஃபியீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அவை அனைத்தையும் பாடமாக்க முடியவில்லையானால் "ரப்பனா ஆத்தினா ஃபித்துன்யா ஹஸனத்தன் வஃபில் ஆகிரத்தி ஹஸனத்தன் வகினா அதாபன்னார்" என்பதை ஓதிக் கொள்வது போதுமானதாகும்.

மேலும் கீழ்க்காணும் துஆவை ஓதிக் கொள்ளவும்:

اَللّٰهُمَّ اِنَّ لِيْ ذُنُوْبًا فِيْمَا بَيْنَنَا وَبَيْنَكَ وَذُنُوْبًا فِيْمَا
بَيْنَنَا وَبَيْنَ خَلْقِكَ. اَللّٰهُمَّ مَا كَانَ مِنْهَا لَكَ فَاغْفِرْهُ
وَمَا كَانَ مِنْهَا لِخَلْقِكَ فَتَحَمَّلْهُ عَنِّيْ.

“ யா அல்லாஹ்! நிச்சயமாக எங்களுக்கும் உனக்குமிடையே உள்ள விஷயத்தில் எத்தனையோ பாவங்கள் இருக்கின்றன; இன்னும் எத்தனையோ பாவங்கள் எங்களுக்கும் உன்னுடைய படைப்புகளுக்கும் மத்தியில் உள்ள விஷயத்தில் இருக்கின்றன.

யா அல்லாஹ்! அவற்றில் உனக்கு உள்ளதை நீ மன்னித் தருள்வாயாக! அவற்றில் உன் படைப்புகளுக்காக உள்ளதை என்னைத் தொட்டும் நீ பொறுப்பேற்றுக் கொள்வாயாக! ”

கஃபாவைக் கண்டவுடன் பின்வரும் துஆவை ஓத வேண்டும்:

اَللّٰهُمَّ زِدْ هٰذَا الْبَيْتَ تَشْرِيْفًا وَّتَكْرِيْمًا وَّتَعْظِيْمًا
وَّمَهَابَةً. وَزِدْ مَنْ شَرَّفَهُ وَعَظَّمَهُ مِمَّنْ حَجَّهُ
اَوِاعْتَمَرَهُ تَشْرِيْفًا وَّتَكْرِيْمًا وَّتَعْظِيْمًا. اَللّٰهُمَّ اَنْتَ
السَّلَامُ وَمِنْكَ السَّلَامُ فَحَيِّنَا رَبَّنَا بِالسَّلَامِ. اَللّٰهُمَّ
اِنَّا كُنَّا نَحُلُّ عُقْدَةً وَنَشُدُّ اُخْرٰى. وَنَهْبِطُ وَادِيًا
وَنَعْلُوْا اٰخَرَ حَتّٰى اَتَيْنَاكَ غَيْرَ مَحْجُوْبٍ اَنْتَ عَنَّا
اِلَيْكَ خَرَجْنَا وَبَيْتَكَ حَجَجْنَا فَارْحَمْ مُلْقِيْ
رِحَالِنَا بِفِنَآءِ بَيْتِكَ.

"யா அல்லாஹ்! இந்த (உன்) இல்லத்திற்கு சிறப்பையும், கண்ணியத்தையும், மகத்துவத்தையும், வலுப்பத்தையும் அதிகப்படுத்து வாயாக! இதனை ஹஜ்ஜு செய்து, அல்லது உம்ராச் செய்து இதனை சிறப்பாக்கி வைத்து பெருமைப்படுத்தியவருக்கும் சிறப்பையும் கண்ணியத்தையும் மகத்துவத்தையும் அதிகப்படுத்துவாயாக! யா அல்லாஹ், நீ சாந்திமயமானவன்; சாந்தி உன்னிலிருந்தே உள்ளது. எனவே, எங்கள் இரட்சகனே, சாந்தியுடன் எங்களை வாழச் செய்வாயாக! யா அல்லாஹ், நாங்கள் ஒரு முடிச்சை அவிழ்ப்பவர்களாகவும் மற்றொரு முடிச்சைப் போடுபவர்களாகவும் ஒரு பள்ளத்தாக்கில் இறங்குபவர்களாகவும் மற்றொன்றில் ஏறுபவர்களாகவும் ஆகி, எங்களுக்கும் உனக்குமிடையில் எவ்வித திரையுமில்லாத அளவுக்கு நாங்கள் உன்னிடம் வந்து விட்டோம். உன் பக்கம் நாங்கள் வெளியாகி வந்தோம்; உன் வீட்டை நாங்கள் ஹஜ்ஜு செய்தோம். உன் வீட்டு முற்றவெளியில் விட்டு வந்திருக்கும் எங்களின் ஏறுவாகனங்களுக்கும் கிருபை செய்தருள்வாயாக!"

மக்காவை அடைந்தவுடன் செய்யப்படும் சுன்னத்தான தவாஃப் குதூமிலும், ஸயீயிலும் அதற்குரிய திக்ருகள் கூறப்பட்டிருப்பதால் அவற்றை ஓதுவது சுன்னத்தாகும். அரஃபா இரவில் மினாவிலும், முஸ்தலிஃபாவில் இருக்கும் மஷ்அருல் ஹராமிலும் தங்குவதும் அதற்குரிய திக்ருகளை ஓதுவதும் சுன்னத்தாகும்.

## இஹ்ராமினால் ஹராமாகும் செயல்கள்

இஹ்ராம் கட்டிய பின் உடலுறவு கொள்வது, முத்தமிடுவது, அது சம்பந்தமான ஏதேனும் ஒரு வேலையைச் செய்வது, விந்தை வெளியாக்குவது, திருமணம் செய்வது, செய்து கொடுப்பது, தரையிலுள்ள வேட்டை மிருகங்களைக் கொல்வது, ஹரமிலுள்ள பச்சையான மரங்களையும், புற்பூண்டுகளையும் பிடுங்குவது, மணம் பூசுவது, தலைக்கு தாடிக்கு எண்ணெய் தடவுவது, உடலிலுள்ள முடியைக் களைவது, நகம் அறுப்பது, ஆண்கள் தலையை மறைப்பது, உடல் முழுவதும் மூடும்படியான கைலி, சட்டை அணிவது, பெண்கள் முகத்தில் ஒரு பகுதியை மறைப்பது ஆகிய இவையனைத்தும் ஹராமாகும்.

பெண்ணுக்குத் தாடி, மீசை,முளைத்திருந்தாலும் அதில் ஆணுக்குரிய சட்டந்தான். ஐந்தைவிட அதிகமாக முளைத்திருக்கும் விரல்களிலுள்ள நகத்தையும் வெட்டுதல் கூடாது.

கடலிலுள்ள மீன் போன்றவற்றைப் பிடிக்கலாம். ஆடு, மாடு, ஒட்டகம், வீட்டுக்கோழி, புறா போன்றவற்றை அறுப்பது கூடும். பட்டுப் போன மரம், புற்பூண்டுகள் ஆகியவற்றைப் பிடுங்கலாம்.

சாப்பிடுவதற்கு ஹலாலான காட்டுப்புறா, மான், மரை, காட்டுக்கோழி, முயல், காட்டு மிருகங்களோ, பறவைகளோ பழக்கப்படுத்தப்பட்டு அது ஒருவருக்குச் சொந்தமாக இருந்தாலும் இல்லாவிட்டாலும் அவற்றை அறுப்பது கூடாது.

மேற்கூறப்பட்ட செய்யக் கூடாத ஒன்றை இஹ்ராம் கட்டியிருப்பவர் செய்து விட்டால் குற்றப்பரிகாரமாக (ஃபித்யா) ஒரு வருஷத்து செம்மறியாடு, அல்லது இரண்டு வருஷத்து வெள்ளாடு அறுத்து கொடுக்க வேண்டும். அல்லது ஹரமிலுள்ள

ஆறு மிஸ்கீன்களுக்கு நபர் ஒன்றுக்கு அரை மரக்கால் வீதம் மொத்தம் மூன்று மரக்கால் தானியம் கொடுக்கவேண்டும். (அரை மரக்கால் என்பது இரு சிரங்கைகளைக் கூட்டி இரண்டு தடவை அள்ளும் அளவாகும்.) அல்லது மூன்று நோன்புகள் வைக்கவேண்டும். எனினும் மேற்கூறப்பட்ட செய்யக்கூடாத செயல்களில் நின்றும் எவ்வித சேதமும் ஏற்படுத்தாத செயல்களான மணம் பூசுவது, எண்ணெய் தடவுவது ஆகிய செயல்களைச் செய்வதினால் குற்றப்பரிகாரம் வாஜிபாகாது. (உதாரணமாக: நகம் வெட்டுவது என்பது நகத்திற்கு சேதம் உண்டாக்கும் செயலாகும். எனவே அதைச் செய்தால் குற்றப்பரிகாரம் வாஜிபாகும். ஆனால் எண்ணெய் தேய்ப்பதோ, மணம் பூசுவதோ எவ்வித சேதமும் உண்டாக்காத செயலாகும். எனவே அதைச் செய்தால் குற்றப்பரிகாரம் வாஜிபாகாது.)

பருந்து, காகம், பாம்பு, எலி, கடிநாய் ஆகிய ஐந்தையும் இஹ்ராம் கட்டியவராயினும், மற்றவராயினும் ஹரமில் கொல்வது கூடும். அவைகளைக் கொல்வது சுன்னத்துமாகும். இவ்வைந்து பிராணிகளுடன் சேர்க்கப்படும் வேறு சில பிராணிகளின் விபரம் உணவு பற்றிய பாடத்தில் கூறப்படும்.

ஈறு, பேன் போன்றவற்றை நசுக்கினால் சதக்கா கொடுப்பது சுன்னத்தாகும். ஏவப்பட்ட காரியங்களில் ஏதேனும் ஒன்றைவிட்டால் ஓர் ஆடறுத்து குர்பான் கொடுக்கவேண்டும். அது இயலாவிட்டால் இஹ்ராமுக்குப் பின் பெருநாளைக்கு முன் மூன்று நோன்புகளும், தன் ஊருக்கு வந்தபின் ஏழு நோன்புகளும் வைக்கவேண்டும்.

இவ்வாறே மதீனாவின் ஹரமிலுள்ள வேட்டை மிருகங்களைக் கொல்வதும், புற்பூண்டுகளைப் பிடுங்குவதும் கூடாது. அவ்வாறு செய்தால் ஃபித்யா கொடுப்பது சுன்னத்தாகும்.

உடலுறவு கொண்டு ஹஜ்ஜை முறித்து விட்டால், அது சுன்னத்தான ஹஜ்ஜாக இருந்தாலும் ஓர் ஒட்டகம், இயலாவிடில் ஒரு மாடு, அதுவும் இயலாவிட்டால் ஏழு ஆடுகள் அறுப்பது வாஜிபாகும். அந்த ஹஜ்ஜை விரைவாகக் களாச் செய்வதும் வாஜிபாகும்.

## கஃபாவின் வாசனைப் பொருள், போர்வை முதலியவற்றின் விவரம்

கஃபாவிலுள்ள வாசனைப் பொருட்களையும் அங்குள்ள கல், களிமண், மணல், போன்றவற்றையும் வெளியிலெடுத்து வருவது ஹராம். எவரேனும் அதனுடைய பரக்கத் வேண்டுமென எண்ணினால் தன்னிடமுள்ள வாசனைப் பொருளை அந்த மண்ணில் துடைத்து வைத்துக்கொள்ளலாம் என்று கலாயித் قلائد என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.

கஃபாவின் போர்வையை அங்குள்ள அதிகாரி கஃபாவின் பலனைக் கருதி விற்பனை செய்தால் பரக்கத்திற்காக அதனை வாங்கி வைத்துக்கொள்ளலாம். அணிந்தும் கொள்ளலாம்.

ஜம்ஜம் தண்ணீரைக் கொண்டு வருவது சுன்னத்து. ஜம்ஜம் நீர் ஹவ்லுல் கவ்தர் தடாகத்தின் நீரைவிடச் சிறப்பானதென்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது. "சூரா யாஸீன் எதை நாடி ஓதப்படுகிறதோ அதற்காக பலன் தரும்; ஜம் ஜம் நீர் எதை நாடி குடிக்கப்படுகிறதோ அதற்காக அது பலன் தரும்" என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

ஹஜ்ஜுடைய விஷயம் சுருக்கமாகவே இங்கு கூறப்பட்டுள்ளது. ஏனெனில், அதற்காகத் தனி கிதாபுகள் இருக்கின்றன. அங்கு எப்பொழுதும் வழிகாட்டிகளும் இருக்கின்றனர்.

ஹஜ்ஜுக்கோ அல்லது உம்ராவிற்கோ இஹ்ராம் கட்டியவனை பகைவர் எவரேனும் தடுத்து நிறுத்தினால் நாளும் நெருக்க மாகிவிட்டால், தடுக்கப்பட்ட இடத்திலேயே தஹல்லீல் ஆகிற நிய்யத்து வைத்து, ஓர் ஆட்டை அறுத்து குர்பானி கொடுத்து, தஹல்லீல் ஆகும் இடத்திலுள்ள மிஸ்கீன்களுக்குப் பங்கிட்டுக்கொடுப்பான்.

தொழுகைக்குத் தக்பீர் கட்டினால் அதற்கு முன் ஹலாலாக இருந்த பல செயல்கள் ஹராமாகி விடுவது போன்று இஹ்ராம் கட்டியவுடன் ஹலாலான பல செயல்களைச் செய்வது ஹராமாகிவிடும். தொழுகையை முடித்து ஸலாம் கொடுத்தவுடன் எல்லாம் ஹலாலாகி விடுவது போல் இஹ்ராமை விட்டு தஹல்லீல் ஆனவுடன் எல்லாம் ஹலாலாகி விடும்.

## நாயகம் (ஸல்) அவர்களின் கப்ரை ஜியாரத்துச் செய்தல்

நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய புனித ரவ்லாவை ஜியாரத் செய்வது அனைவருக்கும் சுன்னத்து முஅக்கதாவாகும். அது ஹஜ்ஜுக்குப் பிறகு மிக ஏற்றமாயிருக்கும்.

"எவரேனும் ஹஜ்ஜு செய்து, பிறகு என்னை ஜியாரத்துச் செய்ய வில்லையானால், திட்டமாக அவர் என்னை வெறுத்து விட்டார்" என்று ஒரு ஹதீஸிலும்,

"என்னுடைய கப்ரை ஜியாரத்துச் செய்தவருக்கு என்னுடைய ஷஃபாஅத்து வாஜிபாகிவிட்டது" என்று மற்றொரு ஹதீஸிலும் அறிவிக்கப்பட்டுள்ளது.

மதீனாவுக்குப் போகும்பொழுது வழியிலும் தங்குமிடங்களிலும் அதிகமான சலவாத்தைச் சொல்லிக்கொண்டே இருக்கவேண்டும்.

மதீனாவுக்கு அருகில் செல்லச் செல்ல, அங்குள்ள மரங்களும் கட்டிடங்களும் தெரிய ஆரம்பித்தவுடன் இன்னும் அதிகமாக சலவாத்துச் சொல்ல வேண்டும்.

மஸ்ஜிதுந் நபவிக்கு செல்லும் முன் குளித்து, மணம் பூசி, அழகிய ஆடைகளை அணிந்து, மனதில் பயத்தை நிரப்பி, நாயகம் (ஸல்) அவர்களை நேரடியாகச் சந்திப்பது போன்ற உணர்வுடன் மஸ்ஜிதில் நுழைந்து, மிம்பருக்கு அருகிலிருந்து தஹிய்யத்துல் மஸ்ஜித் இரண்டு ரகஅத் தொழுது, இந்த பாக்கியம் கிடைத்ததற்காக அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தி, தன் நாட்டம் நிறைவேறுவதற்கும், இந்த அமல் ஏற்கப்படுவதற்கும் அல்லாஹ்விடம் கேட்டுக்கொண்டு, பிறகு சங்கைக்குரிய கப்ரில் நாயகம்

ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் முகத்தை முன்னோக்கி, தலையைத் தாழ்த்தி உள்ளச்சத்துடன் :

اَلسَّلَامُ عَلَيْكَ يَا رَسُوْلَ اللهِ صَلَّى اللهُ عَلَيْكَ يَا رَسُوْلَ اللهِ وَسَلَّمَ .

என்று நின்ற நிலையில் சலாம் சொல்லி, பிறகு வலபபக்கமாக ஒரு முழம் தள்ளி நின்று, அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களுக்கு சலாம் சொல்லி, பிறகு மேலும் வலப்பக்கமாக மற்றொரு முழம் தள்ளி நின்று, உமர் (ரலி) அவர்களுக்கு சலாம் சொல்லி, பின்னர் மீண்டும் நபியவர்களின் கப்ரருகில் வந்து அன்னாரைக்கொண்டு வஸீலா தேடி, தனக்கும் தன் குடும்பத்தினருக்கும் மற்றும் முஸ்லிம்களுக்கும் நபியவர்களின் ஷஃபாஅத்தை வேண்டுதல் செய்து, பிறகு கிப்லாவின் பக்கம் திரும்பி தனக்குத் தேவையான துஆக்களைக் கேட்டுக்கொள்ளவேண்டும்.

பிறகு ஜன்னத்துல் பகீஃ என்ற பொது கப்ருஸ்தானத்திற்குச் சென்று ஃபாத்திமா நாயகி (ரலி), அப்பாஸ் (ரலி), ஹஸன் (ரலி), உஸ்மான் (ரலி), ஆகியோரையும்,மற்றும் அஹ்லுல் பைத்களையும், ஸஹாபாக்களையும், தாபியீன்களையும், இமாம்களையும், மற்றும் அங்கு அடக்கப்பட்டிருப்பவர்களையும் ஜியாரத்துச் செய்யவேண்டும். கடைசியாக ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் மாமி சஃபிய்யா (ரலி) அவர்களுடைய கப்ரைக்கொண்டு முடிக்க வேண்டும்.

அதன் பிறகு உஹதுக்குச் சென்று ஸய்யிதுனா ஹம்ஜா(ரலி) அவர்களுடைய கப்ரையும், மற்றும் ஷுஹதாக்களுடைய கப்ருகளையும் ஜியாரத்துச் செய்துவிட்டு, பிறகு பழைய மதீனாவிலுள்ள குபாவுக்குச் சென்று, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் உளுச்செய்த கிணற்றில் உளுச்செய்வதும், தண்ணீர் குடிப்பதும் சுன்னத்தாகும்.

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் உயிருடன் இருந்தால், அன்னாரின் மேலான அந்தஸ்துக்குமுன் நம்முடைய மிகக் கீழ்த்தரமான அந்தஸ்து எப்படியிருக்கும் என்பதைச் சிந்தனைசெய்து, அஞ்சிக்கெஞ்சி, அழுது புலம்பி அல்லாஹ்விடம் பாவமன்னிப்புத் தேடுவது அவசியம்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய கப்ரை தவாஃப் செய்வது ஹராமாகும். ஆனால், பரக்கத்தை நாடி தொடுவதும், கையால் தொட்டு தன் கையை முத்திக்கொள்வதும் கூடும். முகத்தை வைத்து முத்தமிடுவது மக்ரூஹ். ஜியாரத்துக்கு முன் சதக்காச் செய்வது சுன்னத்தாகும்.

ஹஜ்ஜு செய்து வந்தவருக்காக பின் வருமாறு துஆச்செய்வதும், அவர் தன் வீட்டிற்குச் செல்லுமுன் துஆச் செய்யுமாறு அவரிடம் கேட்டுக்கொள்வதும் சுன்னத்து:

قَبِلَ اللهُ حَجَّتَكَ وَغَفَرَ ذَنْبَكَ وَاَخْلَفَ عَلَيْكَ

"அல்லாஹ் உம்முடைய ஹஜ்ஜை ஏற்றுக்கொள்வானாக! உம்முடைய பாவத்தை மன்னித்து, ஹஜ்ஜுக்குரிய கூலியை உமக்கு பகரமாக்கித் தருவானாக" என்று துஆச் செய்யவேண்டும்.

அல்லாமா அபூகுஷைரீ (ரஹ்) அவர்கள் தங்களின் கலாயித் என்ற நூலில் இந்தப்பாடத்தில் வாசகர்களிடம் கேட்டுக்கொண்டுள்ளது போல், இந்தக் கிதாபை எழுதுகின்ற பாவியான ஃபகீர் சய்யித் முஹம்மது இப்னு அஹ்மது ஆலிம் அல்காஹிரிய்யுல் கிர்கரியாகிய நானும் வாசகர்களைக்கேட்டுக்கொள்வது என்னவெனில், "உங்களில் எவரேனும் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் ரவ்ளாவை எப்பொழுதாவது ஜியாரத்துச் செய்கின்ற பாக்கியம் பெற்றால் என்னுடைய ஸலாமை அண்ணாருக்கு எத்திவைத்து, அல்லாஹுதஆலா என் பாவங்களை மன்னிப்பதற்கு ஷஃபாஅத்து செய்யவேண்டுமென்றும் கூறுமாறு கேட்டுக்கொள்கிறேன்."

## உள்ஹிய்யாவுடைய பாடம்

வசதிபெற்ற, சுதந்திரமுள்ள, முஸ்லிமான ஆண் பெண் அனைவரின் மீதும் ஹஜ்ஜுப் பெருநாள் பொழுது விடிந்து ஓர் ஈட்டியின் உயரம் சூரியன் மேலே உயர்ந்த நேரம் முதல் பதின்மூன்றாம் நாள் கடைசி நேரம் வரையிலும், ஒரு வருஷம் நிரம்பிய செம்மறி, அல்லது இரண்டு வருஷம் நிரம்பிய வெள்ளாடு, அல்லது மூன்று வருஷம் நிரம்பிய மாடு, அல்லது ஐந்து வருஷம் நிரம்பிய ஒட்டகம் ஏதேனும் ஒன்றை உளுஹிய்யா எனும் குர்பானியுடைய நிய்யத்துகொண்டு அறுத்துக்கொடுப்பது பலமான சுன்னத்தாகும். سنة مؤكدة كفاية

இதுதான் சிறப்பான நேரமாகும். ஆனால், சூரிய உதயத்திற்குப் பின் இரண்டு ரக்அத் தொழுது, சுருக்கமாக இரண்டு குத்பா ஓதிமுடிக்குமளவு நேரத்திற்குப் பின் அறுப்பது போதுமாகும். மேலும், அதைப்பெருநாளன்று அறுப்பது ஏற்றமாகும்.

ஓர் ஆடு ஒருவருக்காகவும், ஒரு மாடு, ஒரு ஒட்டகம் ஏழு பேருக்காகவும் கொடுக்கலாம். குறையுள்ளது, வறட்சியானது, காது, வால் அறுந்தது, கர்ப்பமானது ஆகியவற்றைக்கொடுப்பது கூடாது. கொழுத்த ஓர் ஆடு, கொழுப்பில்லாத இரண்டு ஆடுகளைவிடச் சிறந்ததாகும். புருவை, விதையடிக்கப்பட்டது, காது கிழிந்தது ஆகியவற்றைக் கொடுப்பதில் குற்றமில்லை.

தன் கையால் அறுப்பது, அல்லது அறுக்குமிடத்தில் தான் இருப்பது சுன்னத்தாகும். பெண் ஓர் ஆணைத் தனக்குப் பிரதிநிதியாக ஆக்கிக்கொள்வது ஏற்றமாகும்.

அறுக்கும்போது அல்லாஹு அக்பர் என்று மூன்று தடவை சொல்லி, பிஸ்மில்லாஹ் சொல்லி பிறகு மூன்று தடவை தக்பீர் சொல்லி, மூன்றாவது தடவையில் அல்லாஹு அக்பர் வலில்லாஹில் ஹம்து என்று கூறி

اَللّٰهُمَّ هٰذَا مِنْكَ وَاِلَيْكَ اَللّٰهُمَّ فَتَقَبَّلْ مِنِّيْ.

'யா அல்லாஹ், இது உன்னிலிருந்து உள்ளது. உனக்காக அறுக்கப்படுவதாகும். யா அல்லாஹ், என்னிடமிருந்து ஏற்றுக் கொள்வாயாக!' என்ற இந்த துஆவையும் ஓதுவது சுன்னத்தாகும். இந்த துஆவை இபாதத் முறையில் அறுக்கின்ற எல்லாவற்றிற்கும் சொல்வது சுன்னத்தாகும். நபி (ஸல்) அவர்களின் மீது சலவாத்துச் சொல்லிக்கொள்வது முஸ்தஹப்பு.

உள்ஹிய்யா இறைச்சியை மூன்று பங்குகளாக்கி ஒரு பங்கைத் தனக்கும், மற்றொரு பங்கை தகுதியானவர்களுக்கு ஹதியாவாகவும், மூன்றாவது பங்கை ஏழைகட்கு சதக்காவாகவும் கொடுப்பது சுன்னத்தாகும்.

பச்சை இறைச்சியைக் கொஞ்சமேனும் ஒரு ஏழைக்காவது சதக்கா கொடுப்பது வாஜிப். பரக்கத்தை நாடி அதில் கொஞ்சத்தைத் தான் சாப்பிடுவதற்கு எடுத்துக்கொள்வதும் அது ஈரலாக இருப்பதும் மீதியுள்ளது அனைத்தையும் சதக்காச் செய்வதும், மூன்றிலொரு பங்கைக் காண அதிகத்தைத் தான் எடுக்காமலிருப்பதும் தோலை சதகாச்செய்வதும் சிறப்பானவையாகும்.

அதில் எந்தப்பகுதியையும் விற்பது கூடாது. பணக்காரர்களுக்கும் சாப்பிடக்கொடுக்கலாம். எனினும், அதனை அவர்கள் (பணக்காரர்கள்) மற்றவர்களுக்கு விற்பதற்கோ, ஹதியா கொடுப்பதற்கோ தோதாக அவர்களுக்கு உடையதாக்கி கொடுக்கக்கூடாது. ஆனால் ஏழைகளுக்குக் கொடுப்பதில் நின்றும் அவர்கள் (ஏழைகள்) விருப்பம் போல் விற்பதற்கோ, ஹதியா கொடுப்பதற்கோ அவர்களுக்கு உடையதாக்கிக் கொடுக்கலாம். நேர்ச்சையுடைய குர்பானியில் தான்சாப்பிடுவது கூடாது. உள்ஹிய்யா இறைச்சியையும் அகீகா இறைச்சியையும் காஃபிருக்குக்கொடுப்பது கூடாது.

உள்ஹிய்யா கொடுக்க விரும்புகிறவர் துல்ஹஜ்ஜு முதல் பிறையிலிருந்து உள்ஹிய்யா கொடுக்கும் வரை தன்னுடைய முடிகளையும், நகங்களையும் வெட்டுதல் மக்ரூஹ், இரவில் உள்ஹிய்யா அறுப்பதும் மக்ரூஹ் ஆகும்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் செய்த ஹஜ்ஜத்துல் விதாஃ என்னும் மதீனாவிலிருந்து மக்காவுக்கு வந்து பின் மக்காவுக்குப் பிரியாவிடை கொடுத்துச் செய்த ஹஜ்ஜின் போது நூறு ஒட்டகங்களை உள்ஹிய்யா கொடுத்தார்கள். அவற்றில் அறுபத்து மூன்று ஒட்டகங்களைத் தங்கள் கரத்தினாலேயே அறுத்தார்கள். மீதியை அலி (ரலி) அவர்களை அறுக்குமாறு கூறினார்கள். தங்களுக்கு வயது அறுபத்து மூன்று தான் என்பதின் பக்கம் சுட்டிக்காட்டுவதாக அது அமைந்தது. தங்களுக்காக அவர்கள் அறுத்தது போக மீதியை தங்களின் உம்மத்தினருக்காகக் கொடுத்தார்கள்.

## அகீகாவுடைய விவரம்

ஒரு பெண்ணுக்கு கருமாரி (பிரசவ) வேதனை ஏற்படும்பொழுது அவளருகிலிருந்து பின்வரும் ஆயத்துக்களையும் தஸ்பீஹையும் ஓதுவது சுன்னத்தாகும்:-

إِنَّ رَبَّكُمُ اللَّهُ الَّذِي خَلَقَ السَّمٰوَاتِ وَالْأَرْضَ فِي
سِتَّةِ أَيَّامٍ ثُمَّ اسْتَوٰى عَلَى الْعَرْشِ يُغْشِي
اللَّيْلَ النَّهَارَ يَطْلُبُهُ حَثِيثًا وَّالشَّمْسَ وَالْقَمَرَ
وَالنُّجُومَ مُسَخَّرَاتٍ بِأَمْرِهِ أَلَا لَهُ الْخَلْقُ وَالْأَمْرُ
تَبَارَكَ اللَّهُ رَبُّ الْعَالَمِينَ. (7:54)

பின்பு குல்அஊது பிரப்பில் ஃபலக், குல்அஊது பிரப்பின்னாஸ் ஆகிய இரண்டு சூராக்களையும்,

யூனுஸ் நபி (அலை) அவர்கள், மீன் வயிற்றுக்குள்ளிலிருந்து ஓதி நிவாரணம் அடைந்த:

لَا إِلٰهَ إِلَّا أَنْتَ سُبْحَانَكَ إِنِّي كُنْتُ مِنَ الظَّالِمِينَ.

என்ற தஸ்பீஹையும் ஓதவேண்டும்.

குழந்தை பிறந்தவுடன் வலது காதில் பாங்கும், இடது காதில் இகாமத்தும் சொல்வதும், இரண்டு காதுகளிலும்:

وَإِنِّي أُعِيذُهَا بِكَ وَذُرِّيَّتَهَا مِنَ الشَّيْطَانِ الرَّجِيمِ.

என்று ஓதுவதும், எவரேனும் நல்லடியார் ஒருவரின் மூலம், இல்லாவிட்டால் ஒரு ஸாலிஹான பெண்ணின் மூலம் பேரீச்சம்பழத்தை ஊட்டுவதும், அது இல்லாவிடில் நெருப்புத் தொடாத இனிப்பை ஊட்டுவதும் சுன்னத்தாகும். பெற்றோருக்காக:

بَارَكَ اللَّهُ لَكَ فِي الْمَوْهُوبِ لَكَ

என்று துஆச் செய்து சோபனம் கூறுவதும், அதற்கு பதிலாக:

جَزَاكَ اللَّهُ خَيْرًا

என்று பெற்றோர் சொல்வதும் சுன்னத்தாகும்.

குழந்தை பிறந்தது முதல் அது பருவமடையும் வரை அக்குழந்தைக்காக அகீகாவென்னும் குர்பானீ கொடுப்பது தந்தைமீது அல்லது தாய்மீது சுன்னத்தான கடமையாகும். பிறந்த ஏழாம் நாள் சூரியன் உதயமானவுடன் ஆண் குழந்தை பெண் குழந்தை இரு சாராருக்காகவும் கொடுப்பது சுன்னத்தாகும். இதில் ஆண் குழந்தைக்கு இரண்டு ஆடுகள் கொடுப்பது தனியான சுன்னத்தாகும்.

குழந்தைபிறந்த ஏழாம் நாள் அகீகா கொடுத்தபின் குழந்தையின் முடியை இறக்கி அந்த முடியின் எடைக்குச் சமமாக தங்கத்தை இல்லாவிட்டால் வெள்ளியை தருமம் செய்வதும் சுன்னத்தாகும்.

அகீகா இறைச்சியின் எலும்பைத் துண்டு துண்டாக்காமல் இறைச்சியை எலும்பை விட்டும் கழற்றி எடுத்து இனிப்புப் போட்டு ஆக்கிக்கொடுப்பதும், இஸ்லாமான மருத்துவச்சிக்கு அதனுடைய வலது தொடைச் சந்தைக் கொடுப்பதும் சுன்னத்தாகும். எலும்பை துண்டுதுண்டாகத் தரிப்பது சிறப்பானதல்ல. அந்த இறைச்சியைத் தான் சாப்பிடுவதிலும் ஹத்யா, சதக்கா கொடுப்பதிலும் உள்ஹிய்யாவுடைய சட்டத்தைப் போன்று செய்துகொள்ளவும்.

அகீகா கொடுக்கும்போது சூரா 'அன்ஆம்' துவக்கம் முதல் 'கிதாபின் முபீன்' என்ற 60-ஆவது ஆயத்து முடிய ஓதுகின்ற பழக்கம் பித்அத் ஆகும். குடுமி வைப்பது மக்ரூஹ் ஆகும்.

'லம்அத்துந் நூரானிய்யா' என்ற கிதாபில் அல்லாமா பூனி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளதாக மின்ஹாஜ் என்னும் நூலின் விரிவுரையாளர் கமாலுத்தீன் திம்யரி (ரஹ்) அவர்கள் 'ஹயாத்துல் ஹயவான்' என்ற நூலில் எழுதியுள்ளதாவது; ஏதேனும் நோய் நொடி ஆபத்து ஏற்படுவதை பயந்தால் உள்ஹிய்யாவுக்கு இணக்கமான ஓர் ஆட்டை ஒரு திறந்த வெளியில் வைத்து அறுத்து, "யா அல்லாஹ், இது உனக்காக, உன்னிடமிருந்து உள்ளதாகும்; யா அல்லாஹ், இதனை என்னிடமிருந்து நீ ஏற்றுக்கொள்வாயாக!" என்று துஆச் செய்து அந்த இரத்தத்தை யாரும் மிதிக்காமல் புதைத்து, பிறகு ஒவ்வோர் உறுப்பாக அறுத்து அறுபது பங்கு வைத்து அறுபது மிஸ்கீன்களுக்குக் கொடுத்தால் அல்லாஹுதஆலா அந்த ஆபத்துகளை விட்டும் காத்துக்கொள்வான். எந்த நாளிலும் இந்த அமலைச் செய்யலாம் என்றும் கூறியுள்ளார்கள்.

அகீகா ஆட்டின் இரத்தத்தை குழந்தையின் தலையில் தடவுதல் அறியாமைக்காலத்தின் பழக்கமானதால் அவ்வாறு செய்வது மக்ரூஹ் ஆகும். அது நஜீஸாக இருந்தும் சில சந்தர்ப்பங்களில் சில ஸஹாபாக்கள் அவ்வாறு செய்திருப்பதால் அதனை ஹராமென்று கூறுவதற்கில்லை.

பிறந்த குழந்தையின் வலதுகாதில் "இன்னா அன்ஜல்னாஹு" சூராவை ஒரு தடவை ஓதி ஊதினால் அக்குழந்தை அல்லாஹ்வின் கிருபையினால் ஜினாவை விட்டும் பாதுகாப்புப் பெறும். அது ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் எவ்வளவு காலம் ஜீவித்திருந்தாலும் சரி என்று ஷைகு தரீனி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். இதனைப் பெற்றோர், அல்லது அதற்கு உரிமையாளர்கள் செய்யவேண்டும்.

## குழந்தைக்குப் பெயர் வைக்கும் விவரம்

குழந்தை பிறந்த ஏழாம் நாள் பெயரிடுவது சுன்னத்து. அக்குழந்தை அதற்கு முன்னதாக இறந்துவிட்டாலும் சரி. ரூஹ் ஊதப்படும் காலமாகிய நான்கு மாதங்களுக்குப் பின் விழுகின்ற அரைகுறை உருவமான கட்டியாக இருந்தாலும் பெயரிட்டு அடக்குவது சுன்னத்தாகும்.

பெயர்களில் மிக உயர்ந்தது அஸ்மாவுல் ஹுஸ்னா என்னும் அல்லாஹ்வின் அழகிய திருநாமங்களோடு அப்து என்பதைச் சேர்த்து வைப்பதாகும். அதிலும் உயர்ந்தது அப்துல்லாஹ், அப்துற்றஹ்மான் என்பதைப் போன்ற பெயர்களாகும்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பெயர்களாகிய முஹம்மது, அஹ்மது, மஹ்மூது, ஹாமிது, ஹமீது, ஹம்மாது, ஹம்தூன், தாஹா, யாஸீன் போன்றவற்றை வைப்பதும் நல்லதாகும். மற்றுமுள்ள நபிமார்களுடைய பெயர்களைக்கொண்டு பெயரிடுவதும் கூடும். மக்ருஹ் அல்ல.

மலிக்குல் முலூக், அப்துர்ரசூல், அப்துன் நபீ, ஷாஹின் ஷாஹ், ஷா(ஹ்)ஜஹான், காளியுல் குளாத், ஜாருல்வாஹ், ஃரஃபீக்குல்லாஹ் இவ்வாறான பெயர்களை வைப்பது ஹராம். மலக்குளின் பெயரை வைப்பது ஹராமல்ல. அபுல் அர்வாஹ் என்பது போலுள்ள பெயர்கள் ஹராமாகும். ஷிஹாப், ஹர்ப் போன்ற பெயர்களை சூட்டுவது மக்ருஹ்.

அலீ (ரலி) அவர்கள் தங்களுடைய குழந்தைகள் மூவருக்கும் ஹர்ப், ஹர்ப், ஹர்ப் என்று பெயரிட்டபோதெல்லாம் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அதனை மாற்றி முதல் குழந்தைக்கு ஹஸன் என்றும் இரண்டாம் குழந்தைக்கு ஹுஸைன் என்றும், மூன்றாம் குழந்தைக்கு முஹ்ஸின் என்றும் பெயரிட்டு, "இவர்கள் மூவருக்கும் நபி ஹாரூன் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் மக்கள் மூவருடைய பெயர்களை வைத்துள்ளேன்" என்று கூறினார்கள். அதாவது: ஹாரூன் (அலை) அவர்களின் மூன்று குழந்தைகளுக்கும் ஷப்ர், ஷிப்ர், ஷப்பீர் என்று பெயரிட்டிருந்தார்கள். ஹிப்ரு (அப்ரானி) மொழியிலுள்ள இம்மூன்றின் அரபி வார்த்தைகள் தான் ஹஸன், ஹுஸைன், முஹ்சின் என்பவை.

ஒருவருக்கு காஸிம் என்ற குழந்தையிருந்தால் அவரை அபுல்காஸிம் என்று சொல்வது ஹராம். ஏனெனில், அபுல்காஸிம் என்பது நபி (ஸல்) அவர்களின் சிறப்புப் பெயராகும்.

சிறப்பானவர்களை சிறப்புப் பெயர் கொண்டு அழைப்பது சுன்னத்து. அதாவது: அபூபக்கர், அபூஸாலிஹ், அபூஅஹ்மது, உம்மு ஹஃப்ஸா, உம்மு ஸல்மா என்பது போல், பிரபலமானவர்களை நான்கு விதமான பெயர்களால் அழைக்கலாம் 1) பட்டப்பெயர் (லகப்) 2) இடுகுறிப்பெயர், சைக்கினைப் பெயர் (குன்யத்), 3) வைத்த பெயர் (அலம்) 4) இணைப்புப்பெயர், சேர்மானப் பெயர் (நிஸ்பத்). உதாரணமாக: அல் இமாமுல் அஃளம், அபூஹனீஃபா, நுஃமான், கூஃபீ (ரஹ்), குத்புல் அக்தாப், அபூமுஹம்மது, அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) என்பவை போல். இவற்றில் முதலாவது லகப், இரண்டாவது குன்யத், மூன்றாவது அலம், நான்காவது நிஸ்பத்.

தீய பட்டப் பெயரிடுவதும், அது கொண்டு அழைப்பதும் ஹராமாகும். ஆனால் அவ்வாறான பெயரைக் கொண்டு தான் அவரைத் தெரிந்து கொள்ள முடியு மென்றிருந்தால் அவ்வாறு அழைப்பது கூடும். உதாரணமாக: ஒட்டகூழக்கன், ஆந்தைக் கண்ணன் என்பது போல். வைக்கப்படும் பெயர், (இண்டிப் பெயர்) இடுகுறிப்பெயர், காரணப்பெயர் ஆகிய மூன்றையும் ஒருவருக்கு வைக்கலாம்.

பெண்களுடைய பெயர்களில் மர்யம், ஃபாத்திமா, ஆயிஷா, கதீஜா மற்றும் நபியவர்களின் பரிசுத்த மனைவியரின் பெயர்கள், பின் ஆஸியா, ஸாரா, ஹாஜரா, ஹவ்வா, ரஹ்மத், ஸஃபூரா ஆகிய பெயர்களெல்லாம் சிறப்பானவையாகும். இன்ன கிழமையில் பிறந்தால் இன்ன பெயர் வைக்க வேண்டுமென்பதற்கு ஆதாரம் எதுவுமில்லை.

நாபிஙா (نَابِغَة) ஹாரிதா, தல்ஹா, ஹம்ஸா போன்ற பெண்பாலான பெயர்களை ஆண்களுக்கு வைப்பதும், அதுபோல் ஆண்பாலான பெயர்களை பெண்களுக்கு வைப்பதும் வழக்கத்திற்கு மாற்றமாக இருந்தாலும், சட்டத்துக்கு மாற்றமில்லை; கூடும்.

அடிமைகளுக்கு பெயரிடுவதில் வழமைப்படி செய்யப்படும். ஷஅபான், ரமலான், ஷவ்வால் போன்ற மாதங்களுடைய பெயர்களையும், அல்மாஸ், மர்ஜான், குன்புர் (قُنْبُرٌ) போன்ற அழகான பொருள் உள்ள பெயர்களையும் வைக்கலாம். மேலும் ஸல்மான், பிலால், மர்ஜானா, லைலா, சுஅதா, மாரியா, ஜஹ்ரா, (زَهْرَة) ஸவ்தா போன்ற பெயர்களையும் வைக்கலாம்.

### தாய்தந்தை ஆசிரியர் ஆகியோரைப் பெயர் சொல்லிக் கூப்பிடுவது மக்ரூஹ்

தாய், தந்தை, உஸ்தாது ஆகியோரைப் பெயர் சொல்லிக் கூப்பிடுவது மக்ரூஹ். கணவன், மனைவி இருவரும் ஒருவரை மற்றவர் பெயர் சொல்லிக்கூப்பிடுவது மக்ரூஹ் அல்ல. ஆனால் கணவனை மனைவி கூப்பிடுவது மரியாதைக் குறைவு என நினைக்கும் ஊர்களில் அதனை விட்டு விடுவது நல்லது.

தன் மகனையும் அடிமைகளையும் ஒழுக்கம் கற்பிப்பதற்காக தீய பெயர்களைக் கொண்டு கூப்பிடலாம். ஆனால், நிரந்தரமாகக் கூப்பிடக்கூடாது. ஒருவர் ஜீவித்திருக்கும் காலமெல்லாம் தன்னுடைய பெயரைத் தன் மக்களுக்கு வைக்காமல் இருப்பது சுன்னத்தாகும்.

தன் வீட்டிலுள்ள பழகிய ஆடுமாடுகளுக்கு ஏதேனும் ஒரு பெயரிடுவதும், வீடு. வாகனம், தோட்டம் ஆகியவற்றிற்கும் பெயரிட்டுச் சொல்வதும் கூடும்.

## பலன் தரும் பல செய்திகள்

அனைவரும் முறை வைத்து எண்ணெய் தேய்ப்பது, தூங்கச் செல்லும் போது ஒவ்வொரு கண்ணிலும் மும்மூன்று தடவை சுர்மா இடுவது, ஜும்ஆ பாடத்தில் கூறப்பட்ட படி நகம் வெட்டுவது, அரைமுடி, அக்குள் முடி ஆகியவற்றை நாற்பது தினங்களுக்கு ஒரு தடவை நீக்குவது, அரை முடியைத் தவிர மற்ற முடிகளை மண்ணில் புதைப்பது, மீசையை உதட்டின் ஓரம் தெரியும் அளவுக்குக் கத்தரிப்பது, தலையிலும், தாடியிலும் உள்ள நரைக்கு சிகப்பு அல்லது மஞ்சள் (கப்பு) சாயம் பூசுவது, தலை, தாடி முடிகளை சீப்பைக்கொண்டு விடுத்து சீவுவது, பெண்களுக்கு தாடி, மீசை

முளைத்தால் அதனைப் பிடுங்குவது, கணவன் ஊரிலிருக்கும்போது கை, கால்களுக்கு மருதாணியால் சாயம் பூசுவது ஆகிய அனைத்தும் சுன்னத்தாகும்.

அரை முடியைப் புதைப்பது வாஜிபாகும். ஆண்கள் தலைமுடியை வளர்ப்பது சக்தியைக் குறைக்கும். மேல் உதட்டில் உள்ள மீசையை இறக்காமல் விட்டு விடலாம்.

எவரேனும் ஒருவர் நாற்பது புதன் கிழமைகளில் வாரத்திற்கு ஒரு தடவை வீதம் நாற்பது தடவை தலை முடி இறக்கினால், அவர் ஃபிக்ஹில் பெரிய அறிவாளியாகி விடுவாரென்று 'கலாயித்' என்ற நூலில் வரையப்பட்டுள்ளது. (இவ்வாறு கேள்விப்பட்டு என் தாயார் நான் குழந்தையாய் இருக்கும்போது எனக்கு இவ்விதம் செய்து வந்தார்கள். அல்லாஹுதஆலா எனக்குத் தந்ததையெல்லாம் தந்தான். எல்லாப் புகழும் நன்றியும் அவனுக்கே உரியன)

மார்க்கத் தீர்ப்பின் படி தாடியைச் சிரைப்பது ஹராமாகும். அவ்வாறே கருப்பு மையினால் சாயம் பூசுவதும், பல்லை இராவுவதும், தலை முடியுடன் நஜீஸான முடியை அல்லது வேறு மனிதருடைய முடியைச் சேர்ப்பதும், நிரந்தரமாக இருக்கின்ற பச்சை குத்துவதும், ஆண்கள் தேவையின்றி கை கால்களுக்கு மருதாணிச்சாயம் இடுவதும் ஹராம். பெண்கள் கணவனின் ஒப்புதலின்றி தங்கள் விரல்களின் ஓரங்களுக்கு மருதாணிச் சாயம் பூசுவதும் ஹராமாகும். ஆனால் கணவன் அனுமதியளித்தால் கூடும். கணவனுள்ள பெண் மருதாணிச் சாயம் போடுவது சுன்னத்து; கணவன் இல்லாதவளுக்கு மக்ரூஹ். பெண்கள் விரல்களின் அருகுகளுக்கு சாயம் பூசுவது தனது கணவனின் அனுமதி இருந்தாலும் கூடாது என்று சில இமாம்களும், அது கூடுமென்று வேறு சிலரும் கூறி இருக்கிறார்கள். கணவனின் அனுமதியுடன் பெண்கள் தலைமுடிக்குக் கருப்புச் சாயம் பூசுவது ஆகும் என்று இமாம் ரமலீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். தொண்டைக்கு மேலுள்ள தாடி முடியை நீக்குவதும் தலைமுடியில் ஒரு பகுதியைச் சிரைத்து மற்றொரு பகுதியைவிட்டு விடுவதும் மக்ரூஹ். முடியைப்போன்றுள்ள பட்டு நூல், கம்பளி நூல் ஆகியவற்றைக் கூந்தலுடன் சேர்த்து முடிந்து கொள்ளலாம்.

சாப்பிடும் பொருட்களை மூடிவைப்பது முஸ்தஹப்பாகும். மூடி கிடைக்காவிட்டால் அந்தப் பொருளிருக்கும் பாத்திரத்தின் மேல் குறுக்கில ஒரு கம்புக்குச்சியையாவது வைக்கவேண்டும். வாசற் கதவுகளை மூடும் பொழுது பிஸ்மில்லாஹ் சொல்லிக்கொள்வதும், தூங்கும்போது விளக்கை அணைப்பதும் முஸ்தஹப்பாகும். ஆடைகளை அணியும்போதும், காலணிகளை மாட்டிக்கொள்ளும் போதும் அவைகளை உதறிவிட்டு அணிந்து கொள்வது முஸ்தஹப்பாகும்.

## வேட்டை மிருகம், அறுப்பு ஆகியவை பற்றிய பாடம்

சாப்பிடுவது ஆகுமான பிராணிகளில் காட்டிலுள்ள பிராணிகளை வேட்டையாடி இறந்ததாலும், வீட்டு மிருகங்களை அறுத்ததாலும் சாப்பிடுவது ஹலாலாகும். வேட்டையாடிய மிருகம் ஹலாலாவதற்கு ஆறு ஷர்த்துகள் உள்ளன: 1) வேட்டைக்காரன் முஸ்லிமாக இருக்கவேண்டும்.2) வேட்டையை நாட வேண்டும். 3) பார்வை உள்ளவனாக இருக்கவேண்டும். 4) பகுத்தறியும் தன்மையுள்ளவனாக இருக்கவேண்டும். 5) ஹஜ்ஜுக்கு இஹ்ராம் கட்டாதவனாக இருக்கவேண்டும். 6)

காயப்படுத்தும் கூர்மையான அம்பினால் தைக்கப்பட்டு இறந்ததாகவும், பழகிய நாய், வல்வத்தான், ராஜாளி, ஆகியவையை ஏவி அது பிடித்துச் செத்ததாகவும், அல்லது இறந்துவிடப்போகிற துடிப்புடன் அதைக்கண்டபின் செத்ததாகவும் இருக்கவேண்டும்.

உயிர் தரிபட்டிருப்பதைக்கண்டு உடனே அறுப்பதாலும், அல்லது தன்மீது குற்றமின்றி அறுப்பது பிந்தியதால் இறந்து விட்டாலும் ஹலாலாகும். வேட்டை நாய் கடித்திருக்கும் இடத்தை முன் சொன்னபடி கழுவி விடவேண்டும். அந்த நாய் பிடித்ததில் கொஞ்சத்தை அது தின்று விட்டாலும், அல்லது உடையவனைக்கண்டு அந்த நாய் விரண்டு பயப்படவில்லையானாலும், அந்த வேட்டைப்பொருளை அவனுக்குத் கொடுக்கவில்லையானாலும் வேட்டையின் ஷர்த்து தவறி விட்டதால் அது ஹலாலாகாது.

வேட்டைப் பொருளைப் புசிப்பதில் இமாம்களுக்கிடையில் சிறிது கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன. அவை: 1) வேட்டையாடும் மிருகமோ, பறவையோ வேட்டைப்பொருளிலிருந்து சிறிது சாப்பிட்டுவிட்டால் அதைச்சாப்பிடுவது ஹராமாகும். ஏனெனில் அந்த வேட்டைப்பிராணி வேட்டைப்பொருளைப் பிடித்தது தனக்கே அல்லாது தனது எஜமானனுக்காக அல்ல. இது இமாம் ஷாஃபிஈ (ரஹ்) அவர்களின் சொல்லாகும். 2) வேட்டைப்பிராணி தான் பிடித்த வேட்டைப் பொருளிலிருந்து மூன்றில் ஒரு பாகம்வரை சாப்பிட்டு விட்டாலும், மீதி இரண்டு பாகத்தைச் சாப்பிடுவது ஹலாலாகும். இந்த விவகாரத்தில் வேட்டை மிருகத்திற்கும், வேட்டைப் பறவைக்கும் இடையில் வித்தியாசம் இல்லை. இது இமாம் மாலிக் (ரஹ்) அவர்களின் சொல்லாகும். 3) வேட்டைமிருகம் வேட்டைப் பொருளிலிருந்து சிறிது சாப்பிட்டு விட்டாலும் அதைப்புசிப்பது ஹராமாகும். ஆனால் வேட்டைப்பறவை அதிலிருந்து சிறிது சாப்பிட்டு விட்டால் அதைப்புசிப்பது ஹராமல்ல, ஹலாலாகும். ஏனெனில் வேட்டை மிருகம் வேட்டைப்பொருளிலிருந்து சிறிதையும் சாப்பிடாமல் அதை தனது எஜமானனுக்காகப் பிடித்து வைத்துக்கொள்ளும் விதமாக அதைப் பழக்கமுடியும். ஆனால் வேட்டைப் பறவையை அவ்விதம் பழக்கமுடியாது என்பது அனுபவத்தால் ஊர்ஜிதமாகியுள்ளது. இது இமாம் அபூஹனிஃபா (ரஹ்) அவர்களும், அவர்களின் சீடர்களும் சொன்னசொல்லாகும். 4) வேட்டைப்பறவையைக் கொண்டு கிடைத்த வேட்டைப் பொருளை சாப்பிடுவது ஹலால் அல்ல. ஏனெனில் தான் பிடித்த வேட்டைப்பொருளை தான் சாப்பிடாமல் தனது எஜமானனுக்கே கொண்டு வந்து கொடுக்கும் பழக்கத்தை எந்த ரூபத்திலும் அது படித்துக்கொள்ளாது. இது ஹஜரத் அலி (ரலி) அவர்களின் சொல்லாகும்.

துப்பாக்கியால் சுட்டு அந்தத் துப்பாக்கிக்குண்டின் கனத்தினால் வேட்டைப் பொருள் இறந்து விடுமானால் அதைப்புசிப்பது ஹராமாகும். அது வேட்டைப் பொருளை சுட்டுக்கரிக்கும் தன்மை உள்ள தோட்டாவாக இருந்தாலும் சரி, அல்லது கரிக்காத குண்டாக இருந்தாலும் சரி. அதுபோல் சுங்குத்தான் குழலில் களிமண் உருண்டை அல்லது ஈய உருண்டை போன்ற குண்டுகளை வைத்து ஊதியதில் அந்தக் குண்டு அடிபட்டு இறந்துவிடுமானால் அவைகளைப்புசிப்பதும் ஹராமாகும். ஆனால் அவைகளை அவ்வாறு வேட்டையாடிய பிறகு அந்த வேட்டைப்பொருளில் உயிர் தரிபட்டு இருக்குமானால் அவைகளை அறுத்து சாப்பிடுவது ஹலாலாகும்.

அறுக்கின்ற ஆயுதம் கூர்மையாக இருக்கவேண்டும். கத்தி, கூர்மையான மூங்கில், கண்ணாடி போன்றவற்றைக் கொண்டு அறுக்கலாம். ஆனால் பல், நகம், எலும்பு போன்றவற்றைக் கொண்டு அறுப்பது கூடாது.

நாம் திருமணம் செய்து கொள்ள ஆகுமான வேதக்காரர்கள் வேட்டையாடிய பிராணிகளையும், அவர்களால் அறுக்கப்பட்டதையும் (அது ஃபிக்ஹில் சொல்லப்பட்டுள்ள முறைப்படி இருந்தால்) சாப்பிடுவது கூடும்.

## அறுப்பின் ஷர்த்துகள்

அறுப்பில் ஐந்து ஷர்த்துகளுண்டு 1) அறுப்பதினால் ஹலாலாக்குகிறேன் என்று நாடுவது 2) அறுப்பவன் முஸ்லிமாக இருப்பது 3) மூச்சுப் பறிகிற (வெளியேறும்) முடிச்சை அறுப்பது 4) மரியை (தொண்டைக்குக் கீழுள்ள உணவுக் குழலை) அறுப்பது 5) அறுப்பு முடிகிற வரை கையை உயர்த்தாமலிருப்பது. ஆனால் அறுக்கும்போது அது துள்ளியதால் பதறிப்போய் கையை எடுத்து விட்டால் சற்றும் தாமதிக்காமலும் இடையூறு செய்யாமலும் உடனே திரும்ப அறுத்தால் ஹலாலாகிவிடும்.

கூர்மையான ஆயுதத்தின் கனத்தினாலோ, அல்லது மழுங்கிய கத்தியினால் அறுப்பவனுடைய பலத்தைக் கொண்டோ ஒரு பிராணியின் தலையை துண்டித்து விட்டால் (இரத்தம் ஓலித்தோடினாலும் சரி) அது ஹலாலாக மாட்டாது. ஆனால் தலையை துண்டிக்க வேண்டும் என்ற நாட்டம் இல்லாமல் அவன் அறுக்கும்பொழுது தலை உடலை விட்டும் பிரிந்து விட்டால் அதைப் புசிப்பது மக்ரூஹ் ஆகும். இதனால் தான் அறுப்பு முடியும் முன் அப்பிராணி துள்ளாமலிருப்பதற்காக முடிச்சை விரைவாக அறுப்பது வாஜிபென்று சொல்லப்பட்டுள்ளது.

தொண்டையிலுள்ள முடிச்சு முழுவதையும் தலையுடன் சேர்த்து அறுத்தால் சுன்னத்துத் தவறி விடுமே தவிர ஹராமாக மாட்டாது. முடிச்சில் கொஞ்சமாவது தலையுடன் சேராமல் முழுவதும் உடலின் பக்கம் சேர்ந்து விட்டால் அது ஹராமாகி விடும்.

தாயை அறுக்கும் போது வயிற்றிலுள்ள குட்டி உடனே இறந்து விட்டாலும், அல்லது உடனே வயிற்றைக் கிழித்து எடுத்ததில் அந்தக் குட்டி துடித்ததாக வெளியாகி இறந்தாலும் அந்தக்குட்டி ஹலாலாகும்.

நோயில்லாத பிராணிகளை அறுப்பதில் இரண்டு செயல்கள் ஷர்த்தாகும் 1) அறுப்பைத் தொடங்கும் போது தரிபாடான உயிர் இருக்க வேண்டும். அல்லது இருப்பதாக உள்ள எண்ணம் அவனுக்கு இருக்க வேண்டும். அதாவது: அதை அறுத்த பின் அதற்கு கடினமான துடிப்பு ஏற்பட வேண்டும். அவ்வாறு ஏற்படுவதின் மூலம் உயிர் இருப்பதாக அவன் எண்ணிய எண்ணம் நிறைவேறிவிடும். 2) பிராணியை அறுக்கும் போது இரத்தம் ஓலித்தோடுவதாலும் அல்லது பீறிட்டு அடித்து வெளியேறுவதாலும் தரிபாடான உயிர் இருக்கிறது என்ற அவனுடைய எண்ணம் நிறைவேறிவிடும். அல்லது தொண்டையில் இருந்து கரட்டு சப்தம் வெளியாகுவதும் தரிபாடான உயிர் இருந்திருக்கிறது என்பதற்குரிய அடையாளமாகும். இந்த

அடையாளங்களில் ஏதும் இல்லாமற் போய் தரிபாடான உயிர் இருந்ததில் சந்தேகம் கொள்ளப்படுமானால் அதைப் புசிப்பது ஹராமாகும்.

வேட்டையாடுவது பற்றியும், பிராணிகளைச் சாப்பிடுவது பற்றியும் அல்லாஹு தஆலா குர்ஆனில் பின்வருமாறு கூறியுள்ளான்:

حُرِّمَتْ عَلَيْكُمُ الْمَيْتَةُ وَالدَّمُ وَلَحْمُ الْخِنْزِيرِ وَمَا أُهِلَّ لِغَيْرِ اللَّهِ بِهِ وَالْمُنْخَنِقَةُ وَالْمَوْقُوذَةُ وَالْمُتَرَدِّيَةُ وَالنَّطِيحَةُ وَمَا أَكَلَ السَّبُعُ إِلَّا مَا ذَكَّيْتُمْ وَمَا ذُبِحَ عَلَى النُّصُبِ وَأَنْ تَسْتَقْسِمُوا بِالْأَزْلَامِ ذَٰلِكُمْ فِسْقٌ (5:3)

"(விசுவாசிகளே! தானாகச்) செத்த வஸ்துவைச் சாப்பிடுவதும், ஓலித்தோடும் இரத்தத்தை சாப்பிடுவதும், பன்றி இறைச்சியைச் சாப்பிடுவதும், அறுக்கும்போது அல்லாஹ் அல்லாதவற்றின் பெயர் சொல்லப்பட்டதைச் சாப்பிடுவதும் (அதாவது: சாமிகள் பெயர் சொல்லி அறுக்கப்பட்டதைச் சாப்பிடுவதும்) கண்ணியில் மாட்டிச் செத்தது (கம்பு, கல் போன்றதைக் கொண்டு) அடித்துச் சாகடிக்கப்பட்டு செத்தது (உயரத்தில் இருந்து) கீழே விழுந்து செத்தது (ஒன்றோடொன்று முட்டிக்கொண்டு) கொம்பால் குத்தப்பட்டுச் செத்தது (சிங்கம், புலி சிறுத்தை போன்ற) ஐவாய் மிருகங்கள் கடித்(துச் செத்)தது ஆகியவற்றைச் சாப்பிடுவதும் உங்கள் பேரில் விலக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் இந்த வஸ்துக்களில் நின்றும் நீங்கள் (அதில் தரிபாடான உயிரைப் பெற்று முறைப்படி) அறுத்தவைகளைத் தவிர. (அவ்வாறு நீங்கள் அறுத்தவைகளைப் புசிக்கலாம்) இன்னும் நட்டப்பட்ட கற்களுக்காக (அதாவது: பூஜை செய்வதற்காக நட்டப்பட்ட ஸ்தம்பம், கொடி, பாவட்டா, விக்ரகம் போன்றவைகளுக்காக) அறுக்கப்பட்டதும், இன்னும் கட்டையுருட்டி நீங்கள் குறி பார்ப்பதும் உங்கள் பேரில் விலக்கப்பட்டிருக்கின்றன. (அல்லது அம்பு எய்து குறிகேட்டு பாகம் பிரித்துக் கொள்வதும் உங்கள் மீது விலக்கப்பட்டிருக்கின்றன, அதாவது: அந்நாளில் கஃஅபாவுடைய பூசாரியிடம் மூன்று அல்லது ஏழு கட்டைகள் இருந்தன. அதில் சூலம் போட்டிருந்தது. ஒரு சொற்படி அதில் ஆம் என்றும் இல்லை என்றும் இன்னும் ஒரு சொற்படி என் நாயன் செய்யச் சொன்னான் என்றும் எழுதப்பட்டிருந்தது. அதை உருட்டி பார்த்து அதில் செய்யும்படி வந்தால் செய்வார்கள், வேண்டாம் என்றால் விட்டுவிடுவார்கள்) இவையாவும் பாவங்களாகும்."

மற்றொரு ஆயத்தில் அல்லாஹு தஆலா பின்வருமாறு கூறுகிறான்:

يَسْـَٔلُوْنَكَ مَاذَآ اُحِلَّ لَهُمْ ۭ قُلْ اُحِلَّ لَكُمُ الطَّيِّبٰتُ ۙ وَمَا عَلَّمْتُمْ مِّنَ الْجَوَارِحِ مُكَلِّبِيْنَ تُعَلِّمُوْنَهُنَّ مِمَّا عَلَّمَكُمُ اللّٰهُ ۡ فَكُلُوْا مِمَّآ اَمْسَكْنَ عَلَيْكُمْ وَاذْكُرُوا اسْمَ اللّٰهِ عَلَيْهِ ۠ وَاتَّقُوا اللّٰهَ ۭ اِنَّ اللّٰهَ سَرِيْعُ الْحِسَابِ (5:4)

"(நபியே! புசிக்க) தங்களுக்கு அனுமதிக்கப்பட்டவை எவை? என்று அவர்கள் உம்மிடம் கேட்கின்றனர். (அதற்கு) நீர் கூறும்: (சுத்தமான) நல்ல பொருட்கள் உங்களுக்கு ஆகுமாக்கப்பட்டுள்ளன. அன்றி, அல்லாஹ் உங்களுக்குக் கற்பித்திருக்கிற பிரகாரம், வேட்டையாடும் (நாய், சிறுத்தை போன்ற) மிருகங்களுக்கு (ம், ராஜாளி போன்ற பட்சிகளுக்கும்) நீங்கள் வேட்டையாடக் கற்பித்து அவை (வேட்டையாடி, தாம் புசிக்காமல்)உங்களுக்காகத் தடுத்(துவை)த் திருப்பலறறையும் (அவை இறந்துவிட்டபோதிலும்) நீங்கள் அதைப் புசிக்கலாம். (எனினும் வேட்டைக்கு விடும் பொழுது 'பிஸ்மில்லாஹ்' என்று) அவற்றின் மீது அல்லாஹ்வின் பெயரைக் கூறியே விடுங்கள். அல்லாஹ்வுக்குப் பயந்து கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் கேள்விகணக்குக் கேட்பதில் மிகத் தீவிரமானவன்."

மேலும் வேறொரு ஆயத்தில் பின்வருமாறு கூறுகிறான்:-

وَلَا تَاْكُلُوْا مِمَّا لَمْ يُذْكَرِ اسْمُ اللّٰهِ عَلَيْهِ وَاِنَّهٗ لَفِسْقٌ ۭ (6:122)

"முஃமினானவர்களே! அல்லாஹ்வுடைய பெயர் சொல்லப்படாததில் நின்றும் நீங்கள் புசிக்காதீர்கள், (அதாவது: தானாகச் செத்ததையும், அல்லாஹ் அல்லாதவைகளின் பெயர் சொல்லி அறுக்கப்பட்டதையும் புசிக்காதீர்கள். அதுவன்றி நினைவுடனோ, அல்லது மறதியாகவோ பிஸ்மி சொல்லாமல் ஒரு முஸ்லிம் அறுத்ததை புசிக்கக் கூடாது என்பது இதன் பொருளல்ல. ஒரு முஸ்லிம் பிஸ்மி சொல்லாமல் அறுத்தாலும் அதைப் புசிப்பது ஹலாலாகும்) நிச்சயமாக அது (அல்லாஹ் அல்லாதவைகளின் பெயர் சொல்லி அறுத்ததையும் செத்ததையும் தின்பது) பெரும்பாவமாகும்."

பூனை கோழியைக் கடித்து சற்று நேரத்தில் கோழி இறந்து விடுமென்று உறுதி ஏற்பட்டாலும், அல்லது மரணத்தை உண்டு பண்ணும் விஷமுள்ள புற்பூண்டை அது தின்றிருந்தாலும், அல்லது முகடு போன்றது இடிந்து அதன் மீது விழுந்தாலும் இந்த நிலைகளிலெல்லாம் அந்தப் பிராணியை அறுக்கும்பொழுது அதற்கு உயிர் இருந்தால் புசிப்பது ஹலாலாகும்.

நோயினால் அல்லது பசியினால் அரைகுறை உயிராக இருந்து அறுத்தால் ஹலாலாகும். இதில் தரிபாடான உயிர் இருக்க வேண்டும் என்பது ஷர்த்தல்ல.

முடிச்சுக்கு மேல் அறுத்திருந்தாலும், குண்டு போன்றதால் தலை உராயப்பட்டிருந்தாலும், பிடரியின் புறத்திலிருந்து அறுத்து, தொண்டையின் முடிச்சை அடையும்முன் இறந்து விட்டாலும் ஹராமாகும். ஆனால் கடைசியில் உள்ளதில் தரிபாடான உயிர் இருந்து உடனே முடிச்சை அறுத்து விட்டால் அது ஹலால் ஆகிவிடும். எனினும் அறுத்தவன் பாவியாவான்.

## அறுப்பின் சுன்னத்துகள்

அறுக்கப்படவிருக்கும் பிராணி தாகித்திருந்தால் தண்ணீர் புகட்டுவது, அறுக்குமிடத்திற்கு மெதுவாக இழுத்துச் செல்வது, கத்தியைக் கூர்மையாக்கிக் கொள்வது, அதன் கழுத்தையும் அறுப்பவன் முகத்தையும் கிப்லாவின் பக்கம் திருப்புவது, அறுக்கும்போதும் வேட்டையில் குறிவைக்கும் போதும், வலை வைக்கும் போதும், கண்ணி வைக்கும் போதும், தூண்டில் போடும் போதும் "பிஸ்மில்லாஹி வல்லாஹு அக்பர் அல்லாஹும்ம சல்லி வஸல்லிம் அலா ஸய்யிதினா முஹம்மதின் வஆலிஹி" என்று ஓதுவது, கத்தியைக் கழுத்தில் (தொண்டையில்) பொறுப்பாக வைத்து மெதுவாகத் தன் சக்தியைக் கொண்டு நடத்தாட்டிப் பின் மீள வைத்து இரண்டு பக்கங்களின் நரம்புகளை அறுப்பது ஆகியவை சுன்னத்தாகும். ஒட்டகத்தை நிற்க வைத்து, அல்லது முழங்கால்களை மடிக்கச் செய்து அவற்றின் மீது உட்கார வைத்து அறுக்க வேண்டும். மற்ற பிராணிகளை ஒருச் சாய்த்து படுக்க வைத்து அறுக்க வேண்டும். கரைக்கு வந்த பின்னும் உயிருடனிருக்கும் பெரிய மீனை அறுப்பின் பாங்கு (முறை) போல் அறுப்பது சுன்னத்தாகும்.

அறுப்பதற்கு முன்னாலும் தக்பீர் சொல்லிக் கொண்டிருப்பது நல்லது. பிஸ்மில்லாஹ்வுடன் அர்ரஹ்மானிர் ரஹீம் என்பதைச் சேர்ப்பது தேவையில்லை. அது நிலைமைக்குப் பொருத்தமானதல்ல. ஆனால் சலவாத்தைச் சேர்த்துச் சொல்லிக் கொள்ளலாம்.

அறுக்கும் போது மற்றொருவரைப் பிடித்துக் கொள்ளும்படி உதவி தேடலாம். பிடித்துக் கொள்பவர் ஹைளு, ஜனாபத்துடையவராக இருந்தாலும் காஃபிராக இருந்தாலும் கூடும்.

அறுக்கப்படவிருக்கும் பிராணிக்கு எதிரில் கத்தியைத் தீட்டுவதும், அதன் முன்னிலையிலேயே மற்றொரு பிராணியை அறுப்பதும், இரவில் அல்லது இருட்டில் அறுப்பதும், பிஸ்மில்லாஹ்வை, சலவாத்தை விடுவதும், மழுங்கின கத்தியால் அறுப்பதும், பிராணியின் உயிர் போகும் முன் தலையைத் திருகுவதும், தோலை உரிப்பதும், உயிருள்ள சிறிய மீனை அறுப்பதும், அவசரத்திற்காக உயிருடனே அதை சமைப்பதும், பொரிப்பதும் மக்ரூஹ் ஆகும். மற்றொரு கிதாபில் மீனை உயிருடன் சுடுவதும், பொரிப்பதும் ஹராமென்று கூறப்பட்டுள்ளது.

அறுக்கிறவன் பருவமடைந்த ஆணாக இருப்பது சிறப்பாகும். அதன் பிறகு பெண், அதன் பிறகு விபரமுள்ள ஆண் (அவன் பருவமடையாதவனாக இருந்தாலும் சரி) ஹைளு ஜனாபத்து உள்ளவர்களும் அறுக்கலாம்.

## சாப்பிடப்படக்கூடியஉயிரினங்கள்

நீரில் வாழும் பொருட்களில் மீன் இனம் அனைத்தும் ஹலாலாகும். விலாங்கு, திருக்கை, சுறா, இறால், கணவாய், ஈக்கி இறால் (LOBSTER), ஆவுலியா என்னும் காவ்தர்யா (இதற்கு அரபியில் بَقَرُالْبَحْرِ கடற்பசு என்றும் نَاقَةُالْبَحْرِ கடல் ஒட்டகை என்றும் சொல்லப்படும். ஆங்கிலத்தில் DUGONG என்று சொல்லப்படும். இதை கடற்பன்றி என்று அழைப்பது தவறு) இவை அனைத்தும் மீன் இனத்தில் உள்ளவையாகும். தானாகச் செத்து மிதக்கின்ற மீன் மக்ருஹ் ஆகும்.

மட்டி, சங்கு, சிப்பி, ஜவிரலி இவைகள் ஹராமாகும். மற்றொரு சொற்படி மக்ருஹ் ஆகும். நண்டு, தவளை, ஆமை, முதலை, அட்டை, அஞ்சாலை, பேத்தை, சொறி, நீர்ப்பாம்பு இவைகளெல்லாம் ஹராமாகும்.

கரையிலுள்ள பிராணிகளில் ஆடு, மாடு, ஒட்டகம், மான், குழி மான், கலைமான், மறை, முயல், உடும்பு, மாநிறமுள்ள வெள்ளெலி, முள்ளங்கோழி,முள்ளெலி, மரநாய், குழிநரி, மலை அணில், குதிரை இன்னும் காலினால் அடித்துத் தின்னாத பிராணிகள் அனைத்தும் ஹலாலாகும்.

பறவைகளில் கோழி, சேவல், வான்கோழி, கானாங்கோழி, கின்னிக்கோழி, நெருப்புக்கோழி, புறா, அன்னம், தாரா, குயில், காடை, கௌதாரி, சிட்டு, கொண்டைக்களாத்தி, பயிர்க்காகம், பொன்னி, அடைக்கலத்தான், அரபு நாட்டிலுள்ள பயிரில் விழும் ஒரு வகை வெட்டுக்கிளி, அன்றில், கொக்கு, குருகு, நாரை, புல்புல் (பாடும் பறவை), சிறகி, உள்ளான், பூணி (ஒருவகை நீர்ப்பறவை), தூக்கணங் குருவி, மற்றும் காலினால் இடுக்கித் தின்னாத பறவைகள் அனைத்தும் ஹலாலாகும்.

செத்தவற்றில் மீனும், மீன் வயிற்றில் செத்து நாறிவிடாத மீனும், பயிரில் விழும் மேற் கூறப்பட்ட வெட்டுக்கிளியில் செத்ததும் தவிர அறுக்காமல் செத்தவை அனைத்தும் ஹராமாகும். இவ்வாறே பன்றி, நாய், கழுதை, கோவேறு கழுதை, பூனை, கீறி, பெருநரி, மந்தி, குரங்கு, அழுங்கு, அணில், ஓணான், அரணை, மூஞ்சூறு, எலி, பெருச்சாளி, சிலந்தி, பாச்சை, உண்ணி, வண்டு, குளவி, வண்ணத்துப் பூச்சி, தும்பி, ஈசல், ஓலுங்கு, மின்மினிப்பூச்சி, ஈ, எறும்பு, மூட்டை, செள்ளு, கொசு, புழு, யானை, புலி, கரடி, செவ்வங்கு, ஓநாய், பாம்பு, பல்லி, தேள், நட்டுவாக்காலி, மற்றும் விஷப்பூச்சிகள், ராஜாளி, வல்லத்தான், வல்லூறு, காகம், கழுகு, பருந்து, ஆந்தை, கூகை, கரிக்குருவி, செம்புகம், மரங்கொத்தி, நங்கணவாய்ச்சி, மைனா, கிளி, மயில், வௌவால், பழந்தின்னி வௌவால், மற்றும் காலினால் இடுக்கித்தின்னும் பறவைகள் அனைத்தும் ஹராமாகும்.

சாப்பிடுவது ஹலாலான மிருகத்தில் உள்ள கூம்பிய உறுப்பு, முன்துவாரம், பின்துவாரம், ஆணுறுப்பு, கழலை, ஊத்தாம்பிட்டி, தோல், சவ்வு, நரம்பு ஆகியவற்றைச் சாப்பிடுவது மக்ருஹ் ஆகும். ஆனால் அதிலுள்ள உரோமம், கொம்பு,

திணியனான எலும்பு ஆகியவற்றை சாப்பிடுவது ஹராமாகும். அவற்றைத் தூளாக்கிச்சாப்பிட்டாலும் சரி. சாப்பிடுவது ஆகுமாக்கப்பட்ட பிராணியை அறுப்பதற்கு முன் அதனுடைய ஓர் உறுப்பைப் பிரித்துச் சாப்பிடுவது ஹராமாகும்.

நஜீஸில் முளைத்த கீரை, காய்கனிகளைச் சாப்பிடுவது மக்ரூஹ் அல்ல. எனினும், மனிதர்களின் மலத்தில் முளைத்தவற்றைச் சாப்பிடுவதால் விதை வீக்கம் போன்ற நோய்கள் ஏற்படும். ஆகையால் அதைத் தவிர்த்துக் கொள்ள வேண்டுமென மருத்துவர்கள் கூறுகின்றனர்.

இறைவனின் படைப்புகளில் மனிதர்களுடன் இணங்கி வாழும் மிருகங்களும், பறவைகளும் உண்டு. ஒதுங்கி வாழ்பவையும் உண்டு. எல்லாவற்றிலும் ஹராம் ஹலால் என்ற சட்டத்தைத் தெளிவாகக் கூறியுள்ளனர். சில பிராணிகளைச் சாப்பிடும் விஷயத்தில் கருத்து வேற்றுமையும் கூறப்பட்டுள்ளது. உதாரணமாக: ஒட்டைச் சிவிங்கி என்னும் ஒரு வகை மிருகம் ஆஃப்ரிக்காவில் இருக்கிறது. அதின் முன்னங்கால்கள் இரண்டும் மிகுந்த உயரமாகவும், பின்னங்கால்கள் இரண்டும் கட்டையாகவும், அதின் கொம்பு மாட்டின் கொம்பைப் போலும், அதின் தோல் புலித்தோலைப் போலும், அதின் கால்களும் குளம்புகளும் மாட்டின் கால்கள் குளம்புகளைப் போலும், அதன் வால் மானின் வாலைப் போலும் இருக்கும். அதின் பின்னங்கால்களில் மட்டும் மொழிகள் இருக்கும். முன்னங்கால்களில் இருக்காது. அது நடக்கத்துவங்கும் போது இடது முன்னங்காலையும் வலது பின்னங்காலையும் முற்படுத்தி வைக்கும். இது மற்ற மிருகங்களுக்கு மாற்றமான செயலாகும். அது மரக்கிளைகளை உணவாக உட்கொள்ளும். புற்பூண்டுகளை உட்கொள்ளாது. இதற்கு பாரசீக மொழியில்
شُتَرْ گَاوْ مَكْتَكْ ஷுதர் கா(G)வ்மக்தக் என்று சொல்லப்படும்

شُتَرْ ஷுதர் என்பதற்கு ஒட்டகம் என்பதும்

گَاوْ கா(G)வ் என்பதற்கு மாடு என்பதும்

مَكْتَكْ மக்தக் என்பதற்கு மான் என்பதும் பொருளாகும்.

இந்த மூன்று பிராணிகளின் குணங்கள் அந்தப் பிராணியில் இருப்பதால்தான் அதற்கு அந்தப் பெயர் வந்தது. இதற்கு அரபியில் زَرَافَةٌ என்று சொல்லப்படும்.

இதைப்புசிப்பது ஹராம் என்று தன்பீஹ் என்ற நூலில் கூறப்பட்டுள்ளது. ஆனால் ஷரஹுல் முஹத்தப் என்ற நூலில் அதைப் புசிப்பது ஹலால் என்று தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு கருத்து வேற்றுமை சொல்லப்பட்ட பிராணிகளைச் சாப்பிடாமல் இருப்பதே பேணுதலாகும்.

ஒட்டகை, மாடு, ஆடு, கோழி ஆகியவை நஜீஸைத் தின்பவையாக இருந்தால் அதின் நஜீஸின் வாடை வெளிப்பட்டால் அதனுடைய பாலும், முட்டையும், இறைச்சியும் மக்ரூஹ் ஆகும். அவ்வாறு நஜீஸைத் தின்ற ஒட்டகத்திற்கு நாற்பது நாட்களுக்கும், மாட்டுக்கு முப்பது நாட்களுக்கும், ஆட்டுக்கு ஏழு நாட்களுக்கும்,

கோழிக்கு மூன்று நாட்களுக்கும் சுத்தமான தீனியைக் கொடுத்தால் மக்ரூஹ் நீங்கி விடும். கழுவுவதினால் நீங்காது.

ஹனஃபீ மத்ஹபின்படி மயில், கிளி, ஆந்தை ஆகிய பறவையினங்கள் சாப்பிடுவதற்கு ஹலாலானவையாகும். மரங்கொத்திப்பறவையும், சாக்குருவியும், செம்புகமும், அந்த மத்ஹபின்படி புசிப்பது ஹலாலானவையே, எனினும் மக்ரூஹ் ஆகும்.

மாலிக்கி மத்ஹபின்படி உடலுக்குத் தீங்கு விளைவிக்காத சுத்தமான உயிரினங்கள் அனைத்தும் சாப்பிடுவதற்கு ஹலாலானவையே. எனவே, அந்த மத்ஹபின்படி கழுகு, இராஜாளி, வல்லூறு போன்ற, காலால் இடுக்கித் தின்னும் பறவைகள் சாப்பிடுவதற்கு ஹலாலானவையாகும். காக்கை இனம் அனைத்தும் ஹலாலானவையே.

மேலும் சிங்கம், புலி, கரடி, ஓநாய், சிறுத்தை, யானை, கீரி, பூனை ஆகிய காலாலடித்துத் தின்னும் மிருக இனங்களைப் புசிப்பதும் ஹலாலாகும். எனினும் மக்ரூஹ் ஆகும்.

பாம்பை அதன் தலைப்பறத்திலும், வால் புறத்திலும், அறுத்து அதில் உள்ள நஞ்சை நீக்கிய பின் அதில் நின்றும் உடலுக்கு எவ்விதத் தீங்கும் விளையாதென்று உறுதியாகத் தெரிந்தபின் அதைச் சாப்பிடுவதும் அந்த மத்ஹபின்படி ஹலாலாகும்.

மேலும் கடல் ஆமை, கரை ஆமை ஆகியவைகளை முறைப்படி அறுத்துச் சாப்பிடுவது அந்த மத்ஹபின்படி ஹலாலாகும்.

அந்த மத்ஹபின்படி கடல் வாழ் உயிரினங்கள் அனைத்தும் சாப்பிடுவதற்கு ஹலாலானவையாகும்.

### பெரியமீன் வயிற்றினுள் இருக்கும் நஜீஸ் பற்றிய விவரம்

பெரிய மீனின் வயிற்றினுள்ளிருக்கும் நஜீஸை நீக்காமல் கருவாடாக்கினால், பிறகு கழுவுவது கொண்டு துப்புரவாகிவிடும். கழுவாமல் ஹலாலாகாது. எறும்பு போன்றது தேன் போன்ற சாப்பிடப்படுகின்ற பொருட்களில் விழுந்து செத்து, அதனை நீக்குவது சிரமமாக இருந்தால் அது ஹலாலாகும். காய், கனிகளிலுள்ள புழுக்களை அகற்றுவது சிரமமாக இருந்தால் அதனை எடுக்காமல் அப்படியே சாப்பிடலாம்.

சாப்பிடுவது ஹராமாக்கப்பட்ட ஆமை, காகம், பருந்து போன்றவற்றின் முட்டைகள் தீங்கு செய்யாததாக இருப்பதால் அதனைச் சாப்பிடலாம். ஆனால் மக்ரூஹ் தஹ்ரீமாகும். அறுக்காமல் தானே செத்த கோழி போன்றதின் வயிற்றிலுள்ள முட்டை முழுமையாக இருந்தால் ஹலாலாகும். கோழி முட்டையில் குஞ்சு உண்டாவதற்கு இணக்கமாக ஆகியிருந்தால் அது ஹலாலாகும். மஞ்சள் கரு வெள்ளைக்கருவுடன் கலந்து விட்டாலும் சரி. ஹலாலான பிராணிகளில் செத்ததை அல்லது எலிபோல் உள்ளதை காஃபிருக்குச் சாப்பிடக் கொடுப்பதும், உயிருள்ளதை ஹலாலான முறையில் அறுக்காமல் சாப்பிடுவான் என்பதை அறிந்து கொண்டே

விற்பதும் ஹராமாகும். ஆனால் நஜீஸானதையும், செத்ததையும் காகம், பூனை, புலி போன்றவற்றிற்குப் போடலாம்.

## வீணாக பிராணிகளை அறுப்பது

சாப்பிடாமலிருக்கும் நோக்கத்தில் ஒரு பிராணியை அறுப்பது ஹராமல்ல. எனினும் பாவியாவான். ஏனெனில், அதில் பொருளை வீணாக்குதல் ஏற்படுகிறது. ஆனால் ஏதேனும் ஆபத்து ஏற்பட்டுச் சிரமப்பட்டுக் கொண்டிருக்கும் ஒரு பிராணியை அறுத்தால் தான் அதற்கு சுகம் ஏற்படுமென்றிருந்தால் அறுக்கலாம்.

கன்றுக்குட்டிக்குப் பால் தேவையில்லை என்ற நிலை ஏற்படும் முன் அதனைத் தாயை விட்டுப் பிரிப்பது ஹராம். எனினும், கன்றை அறுப்பது கூடும். ஆடு, மாடு போன்ற சங்கைக்குரிய பிராணிகளின் உரிமையாளர் அதற்குத் தீனியும், தண்ணீரும் கொடுப்பதும், புல், தீனி தின்னாத கன்றுக்குத் தாயின் மடுவில் பாலை விட்டு வைப்பதும் வாஜிபாகும். பாலை முற்றிலுமாகக் கறக்காமலிருப்பதும், கறப்பவன் தன் நகத்தை அறுப்பதும் சுன்னத்தாகும்.

தேவையில்லாமல் மிருகங்களை அடிப்பது, அதிகச் சுமையை ஏற்றுவது, வழக்கமாக உள்ள சுமையை எப்பொழுதும் சுமத்திக் கொண்டே இருப்பது, எப்பொழுதும் வண்டியில் பூட்டிக் கொண்டே இருப்பது, அவற்றின் உரோமங்களை ஒட்ட வெட்டுவது, சிரைப்பது, வாலை வெட்டுவது ஆகியவை அனைத்தும் ஹராமாகும். கன்று செத்து விட்டால் ஏதேனும் தந்திரம் செய்து பால் கறப்பது கூடும்.

சாப்பிடப்படும் மிருகங்களில் சிறியதை விதையடிக்கலாம். பெரியதை விதையடிப்பது ஹராம். காதை வெட்டுவதும், முகத்தில் சூடு போடுவதும் ஹராம். நோய் நீங்குவதற்காகவோ, அடையாளத்திற்காகவோ குறை ஏற்படாத முறையில் முகம் அல்லாத இடங்களில் சூடு போடலாம். ஓர் எழுத்தினால் அடையாளமிடலாம் என்றிருந்தால் இரண்டு எழுத்துக்களைப் போடுவது ஹராம். உதாரணமாக: ஜகாத்துடைய பிராணியை அடையாளம் காணுவதற்காக 'ஜ' என்றும், உளுஹிய்யா உடைய பிராணிக்கு 'உ' என்றம் அடையாளமிடுவதுபோல். நோயின் காரணமாக மனிதர்களுக்கும் சூடு போடலாம். மனிதனின் ஓர் உறுப்பில் புழுவைத்து சிரமம் ஏற்பட்டிருந்தால் அந்த உறுப்பையும் வெட்டலாம்.

மிருகங்கள் உடற்சேர்க்கை கொள்ளும் காலங்களில் ஒரே இடத்தில் ஆணையும் பெண்ணையும் சேகரமாக்குவது வாஜிப். குதிரை போன்ற பெரிய ஆண் குறி உடைய பிராணியை மாடு போன்ற பிராணியுடன் சேரவிடுவது ஹராம். தமர்க்கிடாய், காளை போன்றதைச் சேர்க்கைக்காக விட்டு கூலி பெறுவதும் ஹராம்.

ஏதேனும் ஒரு மிருகத்தை, அல்லது பறவையைச் சண்டைக்காக விடுவதும், அதற்காக வளர்ப்பதும், அதற்கு உதவி செய்வதும் ஹராம். அவை ஒன்றுக்கொன்று சண்டையிட்டு முட்டிக் கொள்வதைக் கண்டால் கூடிய மட்டில் அதனை விலக்குவது வாஜிப். முட்டுகின்ற மாட்டை மனிதர்கள் நடமாடும் பாதையில் விடாமலிருப்பது உரிமையாளர் மீது வாஜிப். கால் குளம்பு வளர்ந்து சிரமப்பட்டால் அதனை வளையம்

போல் வெட்டி விட வேண்டும். அதற்கு வருத்தம் ஏற்படாத முறையில் லாடம் அடிக்கலாம்.

## மனிதனையோ, மிருகத்தையோ சபிப்பது கூடாது

மனிதனையோ (அவன் காஃபிராக இருந்தாலும் சரி) அல்லது ஏதேனும் மிருகத்தையோ மூதேவி என்று சபிப்பது கூடாது. ஏனெனில், எவருடைய இறுதிநிலை நல்லதாயிருக்கும், எவருடைய நிலை தீயதாயிருக்கும் என்று எவருக்கும் தெரியாது.

இது சம்பந்தமாக ஒரு நிகழ்ச்சி கூறப்படுகிறது. அதாவது "நபி ஈஸா (அலை) அவர்களின் நண்பர் ஒருவரின் மனைவி இறந்து விட்டாள். அவர் மிகவும் கவலை அடைந்திருந்ததைத் தெரிந்த நபி அவர்கள் அவர் மீது இரக்கம் கொண்டு அவரை அழைத்துப் போய் அவளுடைய கப்ரை அறிவிக்கச் சொல்லி பின் நபியவர்கள் அந்தத் திசையை நோக்கி அல்லாஹ்வின் உத்தரவு கொண்டு நீ உயிர் பெற்று எழுந்து வாவென்று சொன்னார்கள். உடனே அந்தக் கப்ரு பிளந்து ஒரு ஆண் எழுந்து நபி அவர்களிடம் வந்து: اَشْهَدُ اَنْ لَّآ اِلٰهَ اِلَّا اللّٰهُ وَاَنَّكَ عِيْسٰى رَسُوْلُ اللّٰهِ.

என்று ஷஹாதத்துக் கலிமா சொன்னார். இதைக் கண்ட நபியவர்களின் நண்பர் எனது மனைவியின் கப்ரு வேறு என்று சொன்னார். இப்பொழுது உயிர்பெற்று எழுந்தவர் முன் ஒரு காஃபிராக இருந்து இறந்தவர். இப்பொழுது இவர் மீண்டும் உயிர் பெற்று எழுந்து நபியவர்களின் முன்னிலையில் கலிமாச் சொல்லி முஸ்லிமாகிவிட்டார். பின் நபியவர்கள் அவரைப் பார்த்து நான் தந்த அமானிதத்தைத் தந்து விடு என்று சொல்லவும் மீண்டும் அவர் முஸ்லிமான நிலையில் உயிர் நீத்து மண்ணறையில் மறைந்து விட்டார்.

பின் அடுத்தாண்மையாக இருந்த தனது மனைவியின் கப்ரை அந்த நண்பர் காண்பிக்கவும் நபியவர்கள் அல்லாஹ்வின் பெயர் சொல்லி அவளை உயிர்ப்பித்து அவளை அவளின் கணவனிடம் ஒப்படைத்துவிட்டார்கள். பின் அவள் தன் புருஷனுடன் சேர்ந்து வாழ்ந்து கொண்டிருந்த நேரத்தில் ஒரு ராஜகுமாரன் இந்த அதிசயத்தைப் பார்க்க வந்தவன், புருஷனுக்குத்தெரியாமல் அவளுக்குக் கண்சைக்கினை செய்து அவளை அழைத்து தனது குதிரையின் மீது ஏற்றிக் கொண்டு போய்விட்டான். பின் புருஷன் விழித்துப் பார்த்தபொழுது தனது மனைவி அங்கு இல்லாமலிருப்பதை உணர்ந்து பின் அவள் சென்ற விபரத்தை அறிந்து மிகவும் கவலையுற்றவராக நபியவர்களிடம் சென்று விவரத்தைச் சொல்லியதில் நபியவர்கள் அந்த மனிதனைக் கூட்டிக் கொண்டு அவள் இருக்கும் இடத்துக்குப் போய் இதோ உன் புருஷனுடன் நீ சேர்ந்து கொள் என்று அவளிடம் சொன்னார்கள். ஆனால் அவளோ நபியவர்களைப் பார்த்து நாயகமே இப்பொழுது என் புருஷன் இந்த ராஜகுமாரன் தானேயன்றி இந்த மனிதர் இல்லை என்று சொன்னாள். ஆனால் நான் உயிர் பெறச் செய்தது உன்னைத்தானே என்று நபியவர்கள் கூறிய பொழுது இல்லையே என்று கூறி நபியவர்களைப் பொய்யாக்கி வைத்தாள். உடனே நபியவர்கள் நான் தந்த அமானிதத்தை தந்து விடு என்று சொல்லவும் அவள் காஃபிராக இருக்கும் நிலையில் அடித்து விழுந்து இறந்தாள்.

முந்தியவர் காஃபிராக இறந்தவர் உயிர் பெற்று எழுந்து முஸ்லிமாகி இறந்தார். பிந்தியவள் முஸ்லிமாக இறந்தவள் உயிர் பெற்று எழுந்து காஃபிராக இறந்தாள்"

இப்லீஸ், ஃபிர்அவ்ன், ஹாமான், ஷத்தாது, நம்ரூத், காரூன், அபூஜஹ்ல், முஸைலமா போன்ற காஃபிரென உறுதியாகத் தீர்ப்பளிக்கப்பட்டவர்களையும், மற்றும் பெரும்பாவிகளையும் பேர் குறிப்பிடாமல் சபிக்கலாம். எனினும், அது சுன்னத்து மல்ல, தேவையுமல்ல. அவ்வாறு ஒருவரை சபிப்பதில் நிரந்தர துன்பத்தை நாடாமல் அவருக்கு ஒழுக்கம் கற்பிக்க வேண்டி ஏசுவது கூடுமென்று கூறப்பட்டுள்ள போதிலும், அதனை விட்டு விடுவதே சிறந்ததாகும். யஜீதைச் சபிக்கலாமா என்பதில் கருத்து வேறுபாடு உள்ளது. இமாம் கஸ்ஸாலீ (ரஹ்) அவர்கள் கூடாதென்று கூறியுள்ளார்கள்.

ஒருவருடைய நிலத்தில் கூடுகட்டிய பறவையின் முட்டையை எடுப்பதும் அவனுடைய வலையில் சிக்கிய பிராணியைப் பிடிப்பதும், ஒருவன் தண்ணீரில் விரித்த வலையில் அல்லது வைத்த கூட்டில் சிக்கிய மீனை எடுப்பதும் ஹராமாகும்.

ஆடு, மாடு, போன்றவற்றின் தோலை விரிப்பாக உபயோகிக்கலாம். ஆனால், புலி போன்றவற்றின் தோலை விரித்து உட்காருவதால் பெருமை ஏற்படுமென்றிருப்பதால் அது ஹராமாகும் என்ற விஷயம் முன்னால் கூறப்பட்டுள்ளது.

## இடையூறு செய்கின்ற தேள், நட்டுவாக்காலி, பாம்பு போன்றவைபற்றி

இடையூறு செய்கின்ற தேள், நட்டுவாக்காலி, பாம்பு, பல்லி, எலி, காகம், பருந்து, கடிநாய், கரடி, புலி இனம் மற்றும் காட்டு மிருகங்கள், மூட்டை, செள்ளு, வண்டு, குளவி, பூரான், பெருச்சாளி, கழுகு, பெருநரி, ஓநாய், சீரி, சுள்ளெறும்பு, வெருகு போன்றவற்றைக் கொல்வது சுன்னத்து. இவை ஹரம் ஷரீஃபில் இருந்தாலும் சரி. இடையூறும் பலனும் இரண்டும் தருகின்ற ராஜாளி வல்லத்தான் போன்றவற்றைக் கொல்வதும் கொல்லாமலிருப்பதும் சமமே. இடையூறோ, பலனோ எதுவுமே இல்லாத ஆமை, நண்டு, தவளை, மலவண்டு, கடிக்காத நாய் ஆகியவற்றைக் கொல்வது மக்ரூஹ். இடையூறு செய்யாத தேன்குளவி, வேட்டை நாய் போன்றவற்றைக் கொல்லது ஹராம். இவ்வாறே சுலைமானி எறும்பு, சாக்குருவி صُرَدْ ஆகியவற்றைக் கொல்வதும் ஹராமாகும்.

சித்தனுக்கு சர்ப்பமும், மாவுத்தனுக்கு மதகரியும், வேடனுக்கு வைரியும் களிப்பானுக்குக் கரடியும் இவற்றை வளர்க்கிறவனுக்கு அவை தரும் பலனை பலன் என்பதாகச் சொல்லப்பட மாட்டாது. "பாம்புக்குப் பால் வார்த்தாலும் பாம் பாட்டியைக் கடிக்கவே செய்யும்" என்ற பழமொழிபோல். இடையூறு செய்யாத பிராணி இடையூறு செய்ய ஆரம்பித்தால் அதனைக் கொல்லலாம். இவ்வாறே தாக்க வரும் மனிதனைக் கொஞ்சங் கொஞ்சமாகத் தடுத்து நிறுத்த வேண்டும். அவன் அடங்காவிடில் கனமான பொருளைக் கொண்டு தடுக்கப்படும்.

# போதையுண்டு பண்ணும் பொருட்கள் ஹராமாக்கப்பட்ட விவரம்

கள் ஹராமாக்கப்பட்ட விஷயத்தில் மூன்று தடவை ஆயத்துகள் இறக்கப்பட்டுள்ளன. முதலாவது "கள், சூதாட்டம் பற்றி உம்மிடத்தில் அவர்கள் கேட்கின்றனர். அவ்விரண்டிலும் மனிதர்களுக்கு பெரிய பாவமும் சில பலன்களும் இருக்கின்றன என்று நீர் கூறுவீராக" (2:219) என்ற ஆயத்திறங்கியது. இந்த ஆயத்திற்குப் பின், பலன்களை ஆசை வைத்தவர்கள் குடித்துக் கொண்டிருந்தனர், பாவத்தை பயந்தவர்கள் விட்டுவிட்டார்கள். பிறகு இரண்டாவது, "ஈமான் கொண்டவர்களே! நீங்கள் போதை யுடையவர்களாயிருக்கும் நிலையில் தொழுகைக்கு நெருங்க வேண்டாம்" (4:43) என்ற ஆயத்து இறங்கியது. இந்த ஆயத்திற்குப் பின் தொழுகை நெருங்கும் நேரங்களில் குடிக்காமல் இருந்தார்கள். எனினும் ஒருவர் அவ்விதம் குடித்ததில் தொழுகையின் நேரம் வந்தும் மஸ்து நீங்காதிருந்ததால் மூன்றாவதாக "ஈமான் கொண்டவர்களே! கள்ளும், சூதாட்டமும், விக்கிரகங்களும், அம்பெறிந்து குறி பார்ப்பதும் ஷைத்தானுடைய அருவருக்கத்தக்க செயல்களில் உள்ளவையாகும். எனவே அதனைத் தவிர்ந்து கொள்ளுங்கள். நீங்கள் வெற்றி பெற்றுவிடலாம்" (5:90) என்ற ஆயத்து இறங்கியது. இதற்குப்பின் கள் முழுமை யாகத் தடை செய்யப்பட்டது.

அறிவுக்கு இடையூறு செய்யும் கள், சாராயம், கஞ்சா, ஊமத்தை, மிகுதி அபின், ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி ஆகியவற்றையும், உடலுக்கு இடையூறு செய்யும் கல், மண், செங்கல், களிமண், சுண்ணாம்பு, கரி, சாம்பல், உமி, விஷப் பொருள், நஜீஸான பொருள் ஆகியவற்றையும், துப்புரவான பொருட்களில் அருவருப்பான காறல், சளி, விந்து, செத்தபிராணியின் ஊறப்போட்ட தோல் ஆகியவற்றையும் சாப்பிடுவது ஹராமாகும்.

கள், சாராயம், அரக்கு குடிப்பவரின் மீது ஹத்து நிறைவேற்றப்படும். மருந்துக்காக கொஞ்சம் அபின் சாப்பிடலாம். ஊமத்தை, கஞ்சா, பாஷாணம் ஆகியவையும் சேர்க்கலாம். போதை வராத அளவுக்கு அம்பர், ஜாதிக்காய், பத்திரி ஆகியவற்றைச் சாப்பிடலாம். வெற்றிலையினால் சுண்ணாம்பின் தங்கடமும், சுண்ணாம்பினால் பனைநீர் போதையும் நீங்கி விடுவதால் அவை கூடும்.

நஜீஸில் அதிகமாகப் புரளும் தோட்டி, கசாப்புக்காரன், இரத்தம் குத்தி கோப்பையில் வாங்கும் ஹஜ்ஜாம், ஃகத்னா செய்கிறவன், இரத்தமெடுப்பவன் ஆகியோர் சம்பாதிக்கும் பொருளிலிருந்து எதையும் பெற்றுக் கொள்வது மக்ரூஹ் ஆகும். ஆனால் சவரத்தொழில் வேலை பார்த்து சம்பாதிப்பதில் இருந்து எதையும் பெற்றுக் கொள்வது மக்ரூஹ் ஆகாது.

## நிர்பந்தமான நேரத்தில் விலக்கப்பட்டதெல்லாம் ஆகும்.

நிர்பந்தமான நேரத்தில் விலக்கப்பட்டது ஆகுமென்று கூறப்பட்டிருப்பதில் உயர்ந்தது, தாழ்ந்தது என்பதைக் கவனிக்க வேண்டும். உதாரணமாக: செத்த கோழியும், செத்த மயிலும் இருக்கிறது. இந்த நேரத்தில் நிர்பந்தமானவன் செத்த கோழியைச்

சாப்பிடுவதுதான் முறையாகும். செத்த பிராணியும், அடுத்தவர் உடைய உணவும் இருக்கும்பொழுது உயிரைக் காப்பாற்ற செத்ததைத் தின்பதுதான் முறையாகும். அடுத்தவர் அங்கிருந்து அந்த உணவைக் கொடுக்காவிட்டாலும், அல்லது மிக அதிகமான விலை சொன்னாலும் அவ்வாறுதான். இதனால் அவனுடன் தர்க்கம் செய்வது கூடாது. அதிக விலைக்குச் சம்மதித்து வாங்கினாலும் பிறகு பெறுமான அளவைக் கொடுப்பதுதான் வாஜிபாகும்.

ஒருவனிடம் உணவும், தண்ணீரும் இருக்கிறது. அதே நேரத்தில் ஒரு சங்கைக்குரிய பிராணி அத்தண்ணீரின் பால் தேவையாயிருந்து, அதற்கு வேறு தண்ணீரும் கிடைக்காத சூழ்நிலையிலிருந்தால், இன்னும் தனக்கும் அதன்பால் உடனடியாகத் தேவையில்லாமலிருந்தால், உடனே அதை அப்பிராணிக்குக் கொடுப்பது வாஜிப் ஆகும். அவ்வாறு கொடுக்காவிட்டாலும், அதிக விலை கேட்டு விலகிக் கொண்டாலும் பாவியாவான்.

## நேர்ச்சையின் பாடம்

நேர்ச்சை என்பது தனித்த ஒரு வணக்கமாகும். அதாவது முஸ்லிமான பருவமடைந்தவர் மீது 'ஃபர்லு ஐன்' என்பதல்ல; அல்லது 'சுன்னத்து ஐன்' என்பதுமல்ல. ஆனால் அதனைச் செய்தால் அது வணக்கம் என்னும் நிலையைப் பெறும்.

ஃபர்லு ஐன் என்பது, தானே அதனைச் செய்தால்தான் கடமை நீங்கும். ஐங்காலத் தொழுகையைப் போல். சுன்னத்து ஐன் என்பதும் அவ்வாறுதான், பாங்குக்கு பதில் சொல்வது போல். ஃபர்லு கிஃபாயா என்பது ஊரிலுள்ள எவரேனும் ஒருவர் செய்து விட்டால் எல்லோருடைய கடமையும் நீங்கிவிடும், ஜனாஸாத் தொழுகையைப் போல். சுன்னத்து கிஃபாயா என்பதும் அவ்வாறுதான், நான்கு பேரில் ஒருவர் தும்மினவனுக்கு ஜவாப் சொல்வது போல்.

நேர்ச்சை என்பது அல்லாஹ்விற்காக இத்தனை ரக்அத்துகள் தொழுகை, அல்லது இத்தனை நோன்புகள் என்மீது நேர்ச்சைக் கடமை என்று சொல்வதாகும். பலமான சொற்படி அதனை நாவினால் மொழிவது கொண்டுதான் கடமையாகும். அவ்வாறு நேர்ச்சை செய்ததை உடனடியாக நிறைவேற்றுவது ஃபர்லாகும்.

நானோ, என் குழந்தையோ இந்த நோயை விட்டும் சுகம் அடைந்தால், அல்லது இன்ன காரியம் நிறைவேறினால் இத்தனை தடவை குர்ஆன் ஓதி (கத்ம் செய்கிறேன்) முடிக்கிறேன், இவ்வளவு தர்மம் செய்கிறேன் என்று நேர்ச்சை செய்த ஒருவர் தனது நாட்டம் நிறைவேறியவுடன் அதைச்செய்வது வாஜிபாகும். அக்காரியம் நிறைவேறாவிட்டால் வாஜிபில்லை. ஆனால் சதகா (தருமம்) செய்வது மட்டும் வாஜிபில்லாவிட்டாலும் சுன்னத்தாகும். ஏனெனில் எல்லா இபாதத்களும் அதற்கு உரிய நேரம் வரும்முன் செய்வது கூடாது; ஆனால் ஜகாத்தையும், ஃபித்ராவையும், சதகாவையும் தவிர. தருமம் எல்லா நேரங்களிலும் சுன்னத்தாகும்.

கடன் வாங்கிய ஒருவன் கடன் கொடுத்தவனுக்கு தான் கடனாளியாக இருக்கும் காலமெல்லாம், கடன் கொடுத்தவனுக்கு இன்னதை நான் நேர்ச்சை செய்தேன் என்று

நிய்யத்துச் செய்வதை உலமாக்களில் சிலர் கூடுமென்றும், வேறு சிலரோ கூடாதென்றும் கூறுகின்றனர். ஏனெனில் அப்படி நேர்ச்சை செய்வது வட்டியைப் போலாகும் என்று கூறி அது கூடாது என்கின்றனர். வேறு சிலரோ அது உபகாரம் செய்ததற்குரிய பகரமாகும், அதனால் கூடுமென்றும் கூறி இருப்பதுடன் அவ்வாறு செய்வது சுன்னத்தென்றும் பலர் கூறியுள்ளனர்.

நம்முடைய ஷைகாகிய தன்பதாவீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:ஒரு பூமியை ஈடாக வைத்துக் கடன் வாங்கியவன் கடன் கொடுத்தவனுக்கு தான் ஈடாக வைத்த பூமியின் வருமானம் முழுவதையும் கடனிருக்கும் காலமெல்லாம் கொடுப்பதாக நேர்ச்சை செய்து கொண்டால் அது கூடும். இவ்வாறே யமன் நாட்டிலுள்ள நம்முடைய இமாம்கள் ஹுஸைன் இப்னு அப்துர் ரஹ்மான் (ரஹ்) முஹம்மதுப்னு ஹுஸைன் (ரஹ்) ஆகியோரும் தீர்ப்பளித்துள்ளனர்.

இன்ன இடையூறை விட்டு அல்லாஹ் என்னைக் காப்பாற்றினால் இன்ன பெரியாரின் பேரில் துஆ ஓதுவேன்; இன்ன தர்காஹ்வின் கண்காணிப்பாளர்களுக்கு (முஜாவிர்களுக்கு) இன்னதைக் கொடுப்பேன் என்று, நேர்ச்சை செய்யலாம். அது நிறைவேறினால் அவ்வாறு கொடுப்பது லாஜிபாகும்.

நேர்ச்சை என்பது இபாதத் ஆகும். இபாதத் அல்லாஹ் ஒருவனுக்கேயன்றி வேறு எவருக்கும் கூடாது. ஆகையால் பாலமான காரியங்களுக்கு நேர்ச்சை செய்வது ஹராமாகும். இதிலடங்கிய வலியுல்லாஹ்வுக்கு இன்னதைக் கொடுப்பேன் என்று நேர்ச்சை செய்வது கூடாது. ஆனால் அதைக் கொண்டு அங்குள்ள ஆகுமான செலவுகள், அல்லது முஜாவிர்களுக்குக் கொடுத்தல் ஆகியவற்றை நாடினால் கூடும்.

இக்காலத்தில் முஸ்லிம்களில் பொதுமக்கள் நேர்ச்சை பற்றிய வாசகங்களையோ எது கூடும், எது கூடாது என்பதையோ விளங்கிக் கொள்ள வில்லை. ஆகையால் அவர்கள் நேர்ச்சை செய்திட்ட நோக்கத்தை அறியாமல் அவர்களை ஷிர்க்கின் பக்கம் சேர்ப்பது கூடாது.

அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும், அவர் நபியாக இருந்தாலும் வலியாக இருந்தாலும் நம்முடைய காரியங்களை நிறைவேற்றித் தருவார்களென நம்புவது குஃப்ராகும். என்னுடைய எஜமானே, என் பிழையைப் பொறுத்திடுங்கள்; எனக்கு பிள்ளை பாக்கியம் தாருங்கள், என் வயிற்று வலியைக் குணப்படுத்துங்கள் என்று அந்த வலியுல்லாஹ்வை கர்த்தாவாக நினைத்துக் கேட்பது குஃப்ராகும்

அல்லாஹுதஆலாவை அழைத்தாலும் அவனுடைய நபிமார்கள், வலிமார்கள் ஆகியோரை அழைத்தாலும் அல்லாஹ்தான் பதில் சொல்லுவான் என்று கூறப்பட்டிருப்பதால், யாரசூலல்லாஹ் என் கையைப் பிடியுங்கள், என்று கூறும் பொழுது அல்லாஹ்விடம் உதவி தேடுவதும் இரட்சிப்புத் தேடுலதுமாகும். ஏனெனில், அல்லாஹு தஆலா, அவர்களைத் தன்னுடைய வஹ்தானிய்யத்தினால் மஃரிஃபா என்னும் ஞானச்சுவையை அனுபவிக்கும்படிச்செய்து, அவர்கள் அவனில் ஃபனாவாகி, அவர்களின் ஸ்தானத்தில் அவனிருந்து அவர்களின் மூலம் புதுமைகளை வெளியாக்கி வைக்கிறான்.

எனவே, இவ்வாறு அழைக்கிறவன் அவர்களில் உலூஹிய்யத்தை (நாயனாக இருக்கும் தகுதியை) உண்டாக்கி விட்டானென்றோ, அவ்வாறு அழைத்தவன் முஷ்ரிக்காகி விட்டானென்றோ ஹகீகத்தை விளங்காமல் முஸ்லிம்களை முஷ்ரிக்குகள் என்று கூறுவது ஹராம் ஆகும்.

தாகித்த நேரத்தில் ஒருவனிடம் "தண்ணீர் தா" என்று கேட்டாலோ, அல்லது யானையைக் கண்டு பயந்தவன் யானைக்காரனிடம் "பாகனே காப்பாற்று" என்று கூறினாலோ, இந்தக் கூற்றுக்களினால் ஒருவன் முஷ்ரிக்காகி விடுகிறான் என்று சொல்ல முடியாது. இதுபோல்தான் மேற்கண்ட விஷயமும். அவ்வாறு சொல்கிறவன் நுனிக் கிளையில் நின்று கொண்டு அடிக்கிளையை வெட்டுகிறவன் போலாவான்.

## ரித்தத் (மதம் மாறுதல்) பற்றிய பாடம்

குஃப்ருடைய வகைகள் அனைத்திலும் முர்த்தத் ஆவது (இஸ்லாத்தை விட்டு மதம் மாறுவது) மிகக் கொடியதாகும். முர்த்தத் ஆனவுடன் மரணம் வந்து விட்டால் அவன் செய்த நற்செயல்கள் அனைத்தும் அழிந்து விடும்.

ஒருவன் முர்த்தத் ஆகி விட்டால் அவன், முன் செய்த நற்செயல்களெல்லாம் அழிந்து விடுமென்று அல்லாஹுதஆலா கூறியுள்ளான். மதம் மாறிய ஒருவன் இஸ்லாத்தின் பால் திரும்பி விட்டால் அவன், முன் செய்த நற்செயல்கள் அழியாமல் இருப்பதுடன் அவற்றிற்குரிய நற்கூலியும் அவனுக்குக் கொடுக்கப்படும் என்றும், ஆனால் அந்த நாட்களில் அவன் செய்த எந்த நற்செயலும் ஏற்றுக் கொள்ளப்படமாட்டது எனவே, அந்த நாட்களில் செய்ய வேண்டிய எல்லா அமல்களையும் திரும்பக் களாச் செய்ய வேண்டும் என்று இமாம் ஷாஃபியீ (ரஹ்) அவர்களும், மதம் மாறியதற்கு முன்னுள்ள, மற்றும் மதம் மாறிய காலத்தில் உள்ள எல்லா அமல்களையுமே திருப்புவது வாஜிப் என்று இமாம் அபூ ஹனீஃபா (ரஹ்) அவர்களும் கூறியுள்ளார்கள்.

பருவமடைந்த முஸ்லிம் ஒருவர் முர்த்தத்தாகிப் போவதற்கு முன்னூற்றுக்கும் மேற்பட்ட காரியங்கள் இருக்கின்றன. அவற்றில் ஏதேனும் ஒன்றை மனமறிந்து செய்வதால், அல்லது எண்ணுவதால், அல்லது பொருந்திக் கொள்வதால், அல்லது செய்விப்பதால் ரித்தத் (=மதம் மாறுதல்) என்பது உண்டாகும். அவற்றில் சில இங்கு சொல்லப்படுகின்றன:

குஃப்ரை உண்டாக்கும் ஒரு சொல்லில் நாவு முந்தி விடுவதாலோ, முன்னேறி வரும் வஸ்வாஸினாலோ, முன் நடந்த குஃப்ரான சொல்லை எடுத்துக் கூறுவதாலோ, பாதகன் ஒருவனுடைய நிர்பந்தத்தை மீற முடியாமல் ஏதேனும் குஃப்ரான விஷயத்தைச் செய்வதாலோ காஃபிராகி விட மாட்டான். வலிமார்களில் சிலர் நினைவு மாறி ஜத்புடைய நிலையில் நான் தான் அல்லாஹ், நான் தான் ஹக் என்று சொன்னதும் இதே போன்றுதான். அது குஃப்ரை உண்டாக்கி விடாது. அவர்கள் சுய நினைவு இழந்த நிலையிலும்,மனமுரண்டு இல்லாமலும் கூறிய அந்தச் சொல்லை அவர்கள் சுய நினைவு பெற்றபின் அவர்களுக்கு எடுத்துச் சொல்லப்பட்டதில் உடனே தவ்பாச் செய்து, இனிமேல் நான் அவ்வாறு சொன்னால் என்னைக் கொலை செய்து விடுங்கள் என்றும் சொன்னார்கள். எனவே ஷைகுல் அக்பர் முஹ்யித்தீன் இப்னுல் அரபீ (ரஹ்)

போன்றவர்களின் கிதாபுகளை பக்குவமடையாதவர்கள் பார்த்து அதற்குத் தங்களுடைய மனம் போனவாறு பொருள் கூறுவது ஹராம். அதனால் சருகுதல் உண்டாகும்.

## முர்தத்தாக்கி வைக்கும் செயல்கள்

முர்தத்தாக்கி வைக்கும் காரியங்களுக்கு உதாரணம்: படைத்தவன் என்று ஒருவன் (அல்லாஹ்) இல்லை என்றும், நபி இல்லை என்றும் கூறுவது; நபியைப் பொய்யாக்குவது; நபியைவிட வலீ உயர்ந்தவர் என்று கூறுவது; குஃப்ரான காரியத்தில் இருமனதாக (உறுதி இல்லாமல்) இருப்பது; சிந்திக்கும் அறிவுள்ளவன் ஏவல் விலக்கலென்பது எனக்கில்லை, அந்த எல்லையை விட்டும் நான் கடந்து விட்டேன் என்று சொல்வது; அல்லாஹ்வைக் கண்ணால் கண்டேன் என்று கூறுவது; அவனுடைய உதட்டுடன் உதட்டை வைத்துப் பேசினேன், அவன் அழகான வடிவத்தில் வெளியாகி இருக்கிறான் என்று கூறி காலத்தாலும் கோலத்தாலும் இடத்தாலும் அவனுக்கு வரம்பு உண்டு பண்ணி வாதிடுவது; அல்லாஹ்வுடைய வேதத்தில் ஓர் எழுத்தையேனும் வேணுமென்றே கூட்டுவது, அல்லது குறைப்பது ஆகிய செயல்கள் குஃப்ரை உண்டாக்கிவிடும்.

ஐந்து நேரங்களின் ரக்அத்துகளில் ஒன்றையேனும் மறுப்பது, வியாபாரம், கொடுக்கல், வாங்கல், நிகாஹ் போன்ற ஷரீஅத்தில் ஹலா லாக்கப் பட்ட வற்றை மறுப்பது, கள், சாராயம், வட்டி, சூது, விபச்சாரம், லிவாதத் (ஆண் ஆணுடன் சேருதல்) தஸாஹுக் (பெண் பெண்ணுடன் சேருதல்) ஆகிய ஹராமானவற்றை ஹலாலென்று கூறுவது; இன்னும் மார்க்கத்தில் தெளிவாக உள்ள ஹலாலை ஹராமென்றும், ஹராமை ஹலாலென்றும் கூறுவது; பெரு நாட்களின் தொழுகைகள், நியமமாகத் தொழும் சுன்னத்தான தொழுகைகளை சுன்னத்து அல்ல என்று கூறுவது போன்ற செயல்களும் குஃப்ரை உண்டாக்கும். ஆனால், நான்கு இமாம்களும் ஏகோபித்துக் கூறிய சில காரியங்கள் பொது மக்களுக்கு விளங்காமலிருக்கலாம், அவற்றை மறுப்பதால் காஃபிராக மாட்டான். அதாவது தன் ஒரு மகளுடன் தன் மகனுடைய மகளுக்கு ஆறிலொரு பாகம் கிடைக்கும் என்ற மஸ்அலா சட்டத்தை மறுப்பது போல், அல்லது தலாக் சொல்லப்பட்டதினால், அல்லது கணவன் இறந்து விட்டதினால் இத்தா இருக்கின்ற பெண்ணைத் திருமணம் முடிப்பது ஆகாது என்பது மார்க்கமாய் இருக்க அது ஆகும் என்று சொல்வது போல். இந்தத் தவறான சொல்களினால் அவன் காஃபிராகி விடமாட்டான்.

பின்வரும் காரியங்களைச் செய்வதினாலும் குஃப்ர் உண்டாகும்; அவன் காஃபிராகிவிடுவான். அவையாவன:

1)குர்ஆனை அலட்சியமாகக் கருதுவது 2) அதனை இழிவாகப் பேசுவது 3) அதனைப்பார்த்துத் துப்புவது 4) அருவருப்பான பொருளை அதன் மீது போடுவது 5) குர்ஆனை ஓதினால் வயிறு நிரம்புமா? என்று இகழ்ச்சியாகக் கேட்பது 6) பாங்கு சொல்கிறவன் வீணுக்குச் சத்தம் போடுகிறான் என்று பாங்கை தூஷணை செய்து சொல்வது 7) ஹதீஸ் சொல்லும் ஆலிம் ஒருவரைப் பார்த்து, கோவிலிலுள்ள பூசாரியைப் போல் பாதிரியைப் போல் இவரும் பிரசங்கம் செய்கிறார் என்று

சொல்வது. 8) ஃபர்லு ஐனான இல்மைப்படிப்பதை, இந்த வீண் வேலை எனக்குத் தேவையில்லை என்று சொல்வது 9) இந்த இல்மைப் படித்தவரெல்லாம் கெட்டவர்கள் என்று எல்லோரையும் சேர்த்துப் பேசுவது, 10) தொழுது தொழுது கண்ட பலனென்ன? என்று கூறுவது. 11) நபி (ஸல்) அவர்களுக்கு அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள் தோழரல்லர் என்று கூறுவது 12) ஆயிஷா (ரலி) அவர்களின் மீது கூறப்பட்ட அவதூறு உண்மைதான் என்று கூறுவது. 13) நபி (ஸல்) அவர்கள் அரபியரல்லர் சிறப்பானவரல்லர் என்று கூறுவது 14) அவர்கள் பெண்ணாசை பிடித்தவர்கள் என்று சொல்வது 15) சய்யிது வம்சம் என்று உறுதியாகத் தெரிந்த ஒருவரைப் பார்த்து 'அல்லாஹ்வுடைய சாபம் உன்னுடைய மூதாதையர் மீது ஏற்படுவதாக' என்று கூறுவது 16) ஜின்னை அதனுடைய அசல் தோற்றத்தில் காண்பது முடியும் என்று சொல்வது 17) முஹம்மது நபி (ஸல்) அவர்களுக்குப் பின் நபி உண்டென்று கூறுவது 18) விபச்சாரத்தையும், ஒப்பாரி இடுவதையும், சங்கீதத்தைக் கேட்பதையும் ஹராமாக்கப்படாமலிருந்திருக்கலாமேயெனக் கூறுவது 19)சுன்னா செய்வது அநியாயம் என்று சொல்வது 20) நகத்தை வெட்டுவது சுன்னத்து என்று சொன்னவரிடம், சுன்னத்தாயிருந்தாலும் நான் வெட்டமாட்டேன் என்று கூறுவது 21) அநியாயம் செய்கிற ஒருவனிடம் நீ நல்ல வேலை செய்தாய் என்று சொல்வது 22) ஹராமான உணவை, இதுவும் அல்லாஹ் கொடுத்த ரிஜ்குதான் என்று கூறுவது; ஹராமான உணவை, அவன் நமக்கு விலக்கி இருக்க அதனைக் குறித்து, நாயனே, இது நீ தந்த உணவுதான்; புகழனைத்தும் உனக்கே என்று கூறினால் அது அவனைப் பரிகாசம் செய்ததாகும்.

23)"ஊரில் ஆயிரம் பேரிருக்க, என்னுடைய பிள்ளையையா மௌத்தாக்க வேண்டும். அல்லாஹ்வே! உனக்குக் கண்ணில்லையா?" என்று சொல்வது 24) இந்த கிரகத்தினால்தான் மனிதனும் ஜின்களும் ஜீவித்திருக்கின்றனரென்று சொல்வது 25) இந்த பஞ்ச பூதம் இல்லாவிட்டால் எவ்விதம் இவ்வுலகைப்படைத்திருப்பான் என்று கூறுவது 26) உணவுதான் பசியைத் தீர்க்கிறது, தண்ணீர்தான் தாகத்தைத் தணிக்கிறது, மருத்துவர்தான் நோயைக் குணப்படுத்தினார் என்று ஹகீகத்தை நாடிச் சொல்வது 27) ஒரு ரொட்டித் துண்டு மார்க்க இல்மைக் காண சிறந்ததாயிருக்கும் என்று சொல்வது 28) முஸ்லிம் அரசர்களெல்லாம் அநியாயக்காரர்கள் என்று கூறுவது 29) ஆய வரி அரசனின் தனி உரிமையெனக் கூறுவது 30) திருநீறு பூசிக் கொள்ளுதல் பூணூல் அணிதல் போன்ற காஃபிர்களுடைய கோலம் பூண்டு அவர்களுடன் இருப்பது, அல்லது இல்லாமலிருப்பது 31)படைப்பினங்களில் எவரேனும் ஒருவருக்கு ஸஜ்தாச் செய்வது, அல்லது ஸஜ்தா செய்வது ஆகுமென்று கூறுவது 32) உளு இல்லாமல் தொழலாம் என்று சொல்வது 33) ஹராமான காரியத்தைச் செய்கிற ஒருவன் மற்றொருவரிடம், 'அல்லாஹ்வுக்காக இக்காரியத்தில் எனக்கு உதவி செய்யுங்கள்' என்று கூறுவது 34) நான் கியாமத்து நாளை பயப்படமாட்டேன் என்று கூறுவது 35) இஸ்லாத்தில் சேர விரும்புகிறேன் எனச் சொல்பவருக்கு கலிமாச் சொல்லிக் கொடுப்பதைக் காரணமின்றி தாமதப்படுத்துவது 36) முஸ்லிமான ஒருவரைப் பார்த்து காஃபிரே என்று (மாற்றுக்கருத்து எதனையும் நாடாமல்) கூறுவது; குஃப்ரை உண்டு பண்ணுமென்று தெரிந்து கொண்டே மனமறிந்து நினைவுடன் இவற்றில் ஏதேனுமொன்றைச் சொன்னாலும் அல்லது ஏதேனும் ஒன்றைச் செய்ய வேண்டுமென எண்ணினாலும் உடனே காஃபிராகிடுவான்.

ஒரு காஃபிர் இஸ்லாத்திற்கு வருவது இரண்டு ஷஹாதத் கலிமாக்களைச் சொல்லுவதினாலேயே உண்டாகும். அதனைத் தனக்கு விளங்குகின்ற எந்த மொழியிலும் கூறலாம்.

## ரித்தத் விஷயத்தில் ஃபத்வா (மார்க்கத் தீர்ப்பு) கொடுப்பதில் நோட்டம்

ஃபத்வா (மார்க்கத் தீர்ப்பு) வழங்கும் ஆலிம்கள் மதம் மாறியது பற்றி தீர்ப்பு வழங்குவதில் மிக்க கவனத்துடன் நடந்துகொள்ள வேண்டும். எவ்வித மாற்றுக் கருத்துக்கும் இடங்கொடுக்காமல் ஃபத்வாக் கொடுக்க வேண்டும். அதில் அவசரப்பட்டு விடக்கூடாது. நன்றாக யோசித்துச் செய்ய வேண்டும். ஒருவன் உன்மீது ஆணையாக, கண்மீது ஆணையாக, உன் தந்தை மீது ஆணையாக என்று சத்தியம் செய்து கூறினால் அவனைக் காஃபிர் என்பதாகக் கூறிவிடக் கூடாது. இவற்றினால் அவன் அருமையை நாடினானே தவிர வலிமையை நாடவில்லை. இவ்விதமான நிலைகளைக் கவனித்துக் கொள்ளவும்.

ஒருவன் முர்தத்தாகி விட்டால் அவனுடைய நிகாஹ் முறிந்து விடும். அவன் முர்தத்தாக இருக்கும் காலத்தில் அவன் வலிய்யாக இருந்து முடித்து வைத்த நிகாஹும் கூடாது. அவனால் அறுக்கப்பட்ட பிராணிகளைச் சாப்பிடுவதும் ஹராமாகும். அவனுடைய சொத்தில் எவரும் வாரிசுரிமை பெறமாட்டார். அவனும் முஸ்லிமான எவருடைய சொத்துக்கும் வாரிசாக ஆகவும் மாட்டான். அவன் முர்தத்தானவுடன் அவன் மனைவி இத்தா இருப்பாள். அவளுடைய இத்தா முடியும் முன் அவன் திரும்ப இஸ்லாத்திற்கு வந்தால் அவனுடன் அவள் சேர்க்கப்படுவாள். மதம் மாறிய காலத்திலுள்ள தொழுகைகளையும், நோன்புகளையும் களாச் செய்ய வேண்டும்.

முர்தத்தான ஒருவன் இஸ்லாத்தில் மீண்டு வருவதற்கு கலிமா ஷஹாதாவைச் சொல்லி, எந்த விஷயத்தினால் அவன் முர்தத் ஆனானோ அதனை எடுத்துச் சொல்லி அந்தத் தவறுக்கு இப்பொழுது நான் மாற்றம் செய்கிறேன் என்று சொல்லி விண்ணப்பிக்க வேண்டும்.

உதாரணமாக, தொழுகையை மறுத்து முர்தத்தாகி இருந்தால், அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல்லாஹ் வ அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹி என்று கலிமாவைச் சொல்லி ஐங்காலத் தொழுகையும் என் மீது கட்டாயக் கடமை என்பதை நான் ஏற்றுக் கொள்கிறேன் என்று கூற வேண்டும். இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களும் மற்றும் சிலரும் அவன் மனதினால் ஈமான் கொண்டு தௌபாச் செய்தால் போதுமானது, நாவினால் சொல்ல வேண்டிய அவசியமில்லை என்று கூறியுள்ளார்கள்.

## வியாபாரத்தின் பாடம்

இதுவரை வணக்கங்கள் சம்பந்தமாக உள்ள சட்டங்கள் கூறப்பட்டன. இப்பொழுது வியாபாரம், கொடுக்கல் வாங்கல் சம்பந்தமான சில சட்டங்கள் கூறப்படுகின்றன. இக்காலத்தில் சட்டப்படி வியாபாரம் செய்கிறவர்கள் குறைவாக இருந்தாலும் நல்லடியார்கள் உண்டாவார்கள் என்பது அல்லாஹ்வுடைய நாட்டத்தில் முடியாதது அல்ல. எனவே அத்தகையோருக்கு உதவியாக இருக்கும் என்பதற்காக இந்தச் சட்டங்கள் இவ்விடத்தில் விவரிக்கப்படுகின்றன.

# மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

விற்பனை செய்யப்படுகிற பொருள் குறைகளை விட்டும் சுத்தமாயிருப்பதும், அவை கண்ணால் காணப்படுவதாய் இருப்பதும், அதனை உரிமையாக்குதலும் ஷர்த்தாகும். முஸ்லிமான அடிமையையும் குர்ஆனையும் விற்பனை செய்வதற்கு வாங்குகிறவன் முஸ்லிமாயிருப்பது ஷர்த்தாகும். படையின் ஆயுதங்களாகிய கத்தி, ஈட்டி போன்ற ஆயுதங்களை ஹர்பீ காஃபிர் அல்லாதவனுக்கு விற்பனை செய்தல் ஷர்த்தாகும். இன்னும் வாங்குகிறவனும் விற்பவனும் பருவமடைந்தவனாக இருப்பதும் ஷர்த்தாகும்.

குர்ஆனை வாங்குவதும் விற்பதும் மக்ரூஹ் என்று ஷரஹ் முஹத்தபில் கூறப்பட்டுள்ளது. மற்றொரு சொல்லில் வாங்குவது மக்ரூஹ் அல்ல என்றும் கூறப்பட்டுள்ளது. வியாபாரத்தில் பொருளுக்குரியவன் ஈஜாப் என்னும் உரித்தாக்கு தலும், வாங்குகிறவன் கபூல் என்ற ஏற்றுக் கொள்ளுதலும் ஷர்த்திடப்படும். இது உலகில் இப்பொழுது வழக்கத்தில் இல்லாமலிருப்பதைக் கவனிக்கக்கூடாது. ஈஜாப், கபூல் இல்லாமல் வியாபாரம் செய்தால், அக்காரியத்தில் பொருத்தம் இருந்தாலும் அந்தப் பொருத்தத்தை வாயால் சொல்லாதவரை உலகில் அது ஒரு ஆட்சேபனைக் குரிய விஷயமாகவே இருக்கும். ஆனால் அது மறுமையில் ஆட்சேபனைக்குரிய விஷயமாக ஆகாது.

விலை நிர்ணயிக்கப்பட்ட சில பொருட்களுக்கு ஈஜாப், கபூல் ஷர்த்தில்லை.

"வியாபாரம் என்பது மனப் பொருத்தத்தைக் கொண்டுள்ளதாகும்" என்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள். பொருத்தம் என்பது மறைந்த விஷயமாகும். அதனை வெளியாக்குவது மொழிவதைக் கொண்டுதான் உண்டாகும்.

பொருட்கள் சுத்தமானதாயிருக்க வேண்டுமென்று கூறப்பட்டிருப்பதால், நஜீஸான கள், சாராயம், செத்த பிராணியின் தோல் போன்றவற்றை விற்பனை செய்வது கூடாது. ஊற வைத்து, அல்லது சிர்க்காவாக (காடி) ஆக்கிக் கொள்வதற்கு சாத்தியமாக இருந்தாலும் கூடாது. நஜீஸான எண்ணெயை விற்கக் கூடாது. ஆனால் அன்பளிப்புக் கொடுக்கலாம். நஜீஸுடன் கலந்த ஒரு பொருளை விட்டும் நஜீஸைப் பிரிக்காமலேயே அதனைத் துயர்ந்தே விற்கலாம். உரத்திற்காக சாணி போன்றதை விற்கலாம்; கடல் அட்டையை விற்கலாம். ஆனால் கடல் அட்டையைச் சாப்பிடுவது ஹராமாகும்.

கண்ணால் காண்பது ஷர்த்து என்பதில் அந்தப் பொருள் கண்ணால் காணத்தகுந்ததாயிருக்க வேண்டும். தவணை வியாபாரம் போன்று காணப்பட முடியாததாக இருந்தால் ஷர்த்தில்லை. ஒரு பொருளில் சிலது மற்றதின் மீது அறிவிக்கிறதாக இருந்தால் அந்தச் சிலதைப் பார்ப்பது போதுமானது. அரிசி, நெல் ஆகியவற்றின் குவியல் அல்லது மூட்டைகளைப் போல். சிலது மற்றதின் மீது அறிவிக்கவில்லை; ஆனால், அது மீதியுள்ளதைக் காப்பாற்றுவதற்காக இருந்தால், அப்பொழுதும் அந்தச் சிலதைக் காண்பது போதுமானது. மாதுளம்பழத்தோடு, தேங்காய்ச் சிரட்டை, முட்டைத்தோடு ஆகியவற்றைப் போல்.

ஒரு பொருளை விற்பதற்கும் வாங்குவதற்கும் மற்றொன்றை சம்பந்தப்படுத்துவதோ, அல்லது காலத்தைக் குறிப்பிதோ கூடாது. உதாரணமாக, ஜைது வந்தால் இந்தப் பொருளை உனக்கு விற்றேன் என்றோ, இத்தனை மாதத்திற்கு இதனை உனக்கு விற்றேன் என்றோ கூறி விற்பனை செய்வது கூடாது.

விற்கப்பட்ட பொருள் வாங்கியவனிடம் ஒப்புவிக்கப்படக் கூடியதாக இருக்க வேண்டும். ஓடிப்போன அடிமையையோ, காணாமற் போன மாட்டையோ, திரும்பக் கிடைக்க முடியாத முறையில் காணமற்போன பொருளையோ, வலைபோட்டுப் பிடிக்க முடியாத குளத்திலுள்ள மீனையோ விற்பது கூடாது. காணாமற் போன பொருளைப் பெற்று விடலாம் என்ற நம்பிக்கை இருந்தால் அதனை விற்பது கூடும்.

சுதந்திரமான மனிதனை விற்பது கூடாது. "ஆனால் ஒரு மனிதன் கடுந் துன்பத்திலிருந்து மீளுவதற்காக வாங்கிய கடனை திருப்பிச் செலுத்துவதற்குத் தன்னையே விற்றால் தவிர வேறு வழியில்லை என்றிருந்தால் அப்பொழுது தன்னை விற்கலாம்" என்று 'முஹீத்' என்ற கிரந்தத்தில் வரையப்பட்டுள்ளது.

தனக்கு பாத்தியமில்லாத சொத்தில் தன் மனம் போன போக்கில் வரம்பு மீறி ஏதேனும் கொடுக்கல் வாங்கல் செய்தால் அது கூடாது. ஆனால், அவ்வேளையில் அது அவனுக்கு உரிமையாகி விட்டதென்பது பின்னால் தெரிந்தால் கூடும். உதாரணமாக தன் தந்தை உயிருடனிருக்கும்போது அவருடைய சொத்தை அவர் அனுமதியின்றி விற்கவோ, கொடுக்கவோ, அல்லது அவருடைய அனுமதியின்றி அவருடைய மகளைத் திருமணம் செய்து கொடுக்கவோ கூடாது. ஆனால், அவ்வேளையில் அதில் அவனுக்கு உரிமை உண்டாகி விட்டதாக பின்னால் தெரிந்தால் அது கூடிவிடும். அதாவது; கல்கத்தாவில் தந்தையிருக்கும்பொழுது அவர் அனுமதியின்றி அவருடைய மகளை அவர் மகன் ஒரு மாப்பிள்ளைக்கு நிகாஹ் செய்து கொடுத்தால் அது செல்லாது. ஆனால், அவ்வாறு நிகாஹ் செய்து கொடுக்கும் வேளையில் அந்தத் தந்தை இறந்து விட்டதாக இருந்தால் அது கூடும். அப்பொழுது அந்தப் பெண்ணுக்கு இவன் வலீயாகி விடுவதால் கூடும். வியாபாரத்திலும் இவ்வாறுதான்.

இது ஏனெனில் இபாதத்தில் வயது வந்தவனுடைய எண்ணமும் அந்தக் காரியமும் ஒத்திருக்க வேண்டும். ளுஹருக்கு நேரம் வந்து விட்ட விஷயம் அவனுடைய எண்ணத்திலும் உண்மை நிலையிலும் சரியாக இருந்தால்தான் ளுஹர் தொழுகை கூடும். ளுஹருடைய நேரம் வராமல் அவனுடைய எண்ணம் மட்டும் ளுஹர் வந்து விட்டதாக இருந்தால் கூடாது. இபாதத் அல்லாத (திருமணம், வியாபாரம் போன்ற) விஷயங்களில் அக்காரியத்தை மட்டும் கவனிப்பது ஷர்த்தாகும்.

## வியாபாரத்தில் வட்டியைத் தவிர்த்துக் கொள்ளும் விபரம்

உணவுப் பொருட்களும் பொன்னும் வெள்ளியும் மிகுந்த தீவிரத்துடன் மேபாலிசை (இலாபம்) தரக்கூடிய பொருட்களாக இருப்பதால் அந்தப் பொருட்களை அதன் இனத்துக்குப் பகரமாய் விற்கப்படும் பொழுது விற்பதும் வாங்குவதும் சரிசமமாக இருக்க வேண்டும். அதாவது: மணிக்கோதுமைக்குப் பகரமாக மணிக்கோதுமையும், தங்கத்திற்குப் பகரமாகத் தங்கமும் விற்கப்பட்டால் இரண்டு பொருளும் அந்த இடத்தில் ஆஜராக இருப்பதும், இருவரும் பிரியும் முன் அப்பொருளைக்

கைப்பற்றுவதும், நிறுக்கப்படும் பொருளானால் நிறுத்தும், அளக்கப்படும் பொருளானால் அளந்தும் சரிக்குச் சரியாக (கூடுதல் குறைவின்றி) இருப்பதும் அவசியமாகும். இவற்றில் ஏதேனும் ஒன்று இல்லையானாலும் ஹலாலாகாது.

இவ்வாறு செய்வதில் என்ன பலன்? இதில் இருவருக்கும் எவ்வித இலாபமுமில்லையே? என்று கேட்டால், அதற்கு பதில் வருமாறு: உணவுப் பொருளில் சுவைத்தல் சாப்பிடுதல் இருப்பதாலும், தங்கம் வெள்ளி இரண்டும் மற்ற பொருட்களுக்கு விலையாகக் கொடுக்கப்படுவதாலும், சுவையும் விலையும் மட்டுப்படுத்த முடியாததாக இருப்பதால் மேற்கண்ட நிபந்தனைகள் பூர்த்தியாகாமல் கூடாது.

"தங்கத்திற்கு பதில் தங்கத்தையும், வெள்ளிக்கு பதில் வெள்ளியையும் மணிக்கோதுமைக்கு பதில் மணிக் கோதுமையையும், தொலிக்கோதுமைக்குப் பதில் தொலிக் கோதுமையையும், பேரீச்சம் பழத்திற்கு பதில் பேரீச்சம் பழத்தையும் உப்புக்கு பதில் உப்பையும்-சரிக்குச் சரியாக, கண்ணுக்கு எதிராக, உடனுக்குடனாகவே தவிர விற்காதீர்கள். இவ்வகைகள் மாறுபட்டிருந்தால்-அவற்றை உடனுக்குடன் நீங்கள் விரும்பிய விதத்தில்-கூடுதல், குறைவாக விற்றுக் கொள்ளலாம்" என்று நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.

## பின்னால் கிடைக்கவிருக்கும் பொருளுக்காக முன்பணம் (அட்வான்ஸ்) கொடுத்து ஒப்பந்தம் செய்து கொள்ளல்

பின்னால் கிடைக்கவிருக்கும் பொருளுக்காக முன்பணம் (அட்வான்ஸ்) கொடுத்து ஒப்பந்தம் செய்து கொள்ளல் என்பது அந்தப்பொருளுக்காக இன்ன சரக்கு, இன்ன விலை என்று பேசியும்,அதனை இன்ன நாளில் ஒப்படைக்க வேண்டுமென்றும்பேசியும் முன் பணம் (அட்வான்ஸ்) கொடுத்து ஒப்பந்தம் செய்து கொள்வதாகும். உதாரணமாக கோதுமை போன்ற பொருளை கோட்டை ஒன்றுக்கு இன்ன விலையென்றும், இன்ன நாளில் கொடுப்பது என்றும் பேசி முன் பணம் கொடுப்பது. இதில் நிபந்தனையாவது, அந்த வியாபாரம் பேசி முடிவான மஜ்லிஸிலேயே அந்தத் தொகையைப் பெற்றுக் கொள்ள வேண்டும்; மேலும், அந்தப் பொருளைக் கொடுப்பதாகப் பேசிய குறிப்பிட்ட காலத்தில் அது கிடைக்கக் கூடியதாக இருக்க வேண்டும். குறிப்பிடப்பட்ட காலத்தில் கிடைக்காத பொருளாக இருந்தால் அதில் முன்பணம் வாங்கி ஒப்பந்தம் செய்து கொள்வது கூடாது. மாரிகாலத்தில் பச்சை (உலர்ந்தது அல்லாத) ஈத்தம் பழம் தருவதாகப் பேசி முன்பணம் வாங்குவது கூடாது. இன்னும் அந்தப் பொருள் நிறுத்தலளவு, முகத்தலளவு, நீட்டலளவு ஆகியவற்றில் எதனைக் கொண்டு ஒப்பந்தம் செய்யப்படுமோ அதனைக் கொண்டு இருப்பதும் ஷர்த்தாகும்; பொருளை ஒப்படைக்கும் இடமும் நிர்ணயிக்கப்பட வேண்டும்.

மேற்கூறிய நிபந்தனைகளில் ஏதேனும் ஒன்று தலறினாலும் அது வட்டியாக-பெரும்பாவமாக ஆகிவிடும் "வட்டிப் பொருளைச் சாப்பிடுகிறவனையும், சாப்பிடச் செய்கிறவனையும், அதற்குக் கணக்கெழுதுகிறவனையும், அதற்கு சாட்சி சொல்கிறவனையும் அல்லாஹுதஆலா சபிப்பான். அவனைக் கேள்வி கணக்கும் கேட்பான்" என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

தவணை முறையில் விற்கப்படும் பொருள் அப்பொழுது காணப்படுவதாக இருக்கக் கூடாது. உதாரணமாக: வீட்டிலிருக்கும் தேங்காயை தவணை முறைக்கு விலை பேசக் கூடாது. அதனை ரொக்க விலைக்குத்தான் கேட்க வேண்டும்.

முட்டை போன்ற பொருளில்-மட்டுப்படுத்திக் கொள்வது முடியாததால் அதில் தவணை முறை கூடாது.

## வட்டியின் விபரம்

"ஈமான் கொண்டவர்களே, இரட்டிப்பாக்கப்பட்ட பன்மடங்காக வட்டியை நீங்கள் சாப்பிடாதீர்கள்" என்றும் "அல்லாஹ் வியாபாரத்தை ஹலாலாக்கி, வட்டியை ஹராமாக்கியுள்ளான்" என்றும் அல்லாஹுதஆலா கூறியுள்ளான். "வட்டியின் மூலம் கிடைக்கும் ஒரு திர்ஹம் முப்பத்து மூன்று தடவை விபச்சாரம் செய்வதை விட அல்லாஹ்விடத்தில் மிகக் கடினமானது" என்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அருளியுள்ளார்கள்.

வட்டி ஹராம் என்பதில் பல வகைகள் உள்ளன. முதலாவது இரண்டிலொரு பகரத்தை அதிகமாக்குவது. இது தானியங்களிலும் தங்கம், வெள்ளியிலும் உண்டாகும். இரண்டாவது: கடன் வட்டி. அதாவது கடன் கொடுத்தவனுக்குக் கடன் வாங்கியவன் அதிகமாகக் கொடுக்க வேண்டுமென நிபந்தனையிடுவது. மூன்றாவது, விற்ற சரக்கைக் கைப்பற்றாமல் விற்ற இடத்தை விட்டும் இரண்டிலொருவர் பிரிந்து செல்வது. நான்காவது: தவணை வட்டி. இரண்டிலொரு பகரத்தில் தவணையை நிபந்தனையிடுவது. இந்த நான்கு வகையும் ஹராமாகும்.

"வட்டி கொடுக்காவிட்டால் கடன் கிடையாது என்று ஒருவன் சொல்கிறான். இவனுக்கு அதைத்தவிர வேறு எவ்வித வழியும் இல்லையானால் நிர்பந்தத்திற்காக அவனிடம் கடன் வாங்கி வட்டியுடன் கொடுக்கலாம். அதனால் வட்டியின் பாவம் ஏற்படாது" என்று இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். "அதிகம் கொடுப்பதை வட்டி என்று கொடுக்காமல் அவனுக்கு நேர்ச்சை என்று பெயர்-வைத்துக் கொடுக்கலாம். அப்பொழுதுதான் பாவம் ஏற்படாது" என்று இப்னு ஜியாத் (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். நேர்ச்சையில் அதனை ஒப்புக் கொண்டேன் என்று கூற வேண்டியதில்லை என்பதால் அது நல்ல முறையில் கூடும்.

முன்னால் கூறப்பட்ட நாணயம், தானியம் ஆகியவற்றில் ஏற்படும் வட்டியை விட்டும் நீங்குவதற்கு ஓர் உபாயம் செய்யலாம். அதாவது: ஒருவர் மற்றவருக்குத் தன்னுடைய பங்கை அன்பளிப்பாக்குவது. அல்லது கடன் என்பதாகக் கொடுத்து பிறகு அந்தக் கடனை (திருப்பித்தர வேண்டாமென்று சொல்லி) நீக்கி விடுவது.

நம்முடைய நாட்டில் வீட்டுக்கு வீடு அரிசியை விலைபேசாமல் கடனாக வாங்கி பிறகு அதனை அரிசியாகவே திருப்பிக் கொடுப்பதென்பது வழக்கத்தில் இருப்பதால் உலமாக்கள் எவரும் அதனைத் தடை செய்யவில்லை. அதனால் ஏழைகள், கையில் அரிசி இல்லாதவர்கள் ஆகியோரின் சிரமம் நீங்குகிறது. ஆனாலும் இவ்வாறான சிரமத்தைக் காரணமாக வைத்துப் பேசினால் விலக்கல்கள் அனைத்தையும்

ஆகுமாக்குவதற்குக் காரணங்களும் உபாயங்களும் கண்டு பிடிக்கப்பட்டுக் கொண்டே இருக்கும்.

வட்டியாகிறது மாபெரும் பாவமாகும். வட்டியில் ஒரு வெள்ளிக்காசு முப்பத்து மூன்று தடவை விபச்சாரம் செய்வதை விடக் கடினமான தென்று நபி(ஸல்) அவர்கள் அருளியிருப்பதுடன், அன்னார் மிஃராஜுக்குச் சென்றபோது பாவிகள் பல்வேறு தண்டனைகளுக்குள்ளாக்கப்படுவதைக் கண்டார்கள். அவர்களில் வட்டி வாங்கியவர்களுக்குக் கடினமான வேதனை கொடுக்கப்படுவதாக கூறினார்கள்.

வட்டியின் மூலம் ஏற்படுகின்ற இக்கடினமான வேதனையை விட்டு நீங்கிட பணம் கொடுக்கிறவனும் வாங்குகிறவனும் சில உபாயங்களைக்கையாளுகின்றனர். அதாவது: எவ்வித நிபந்தனையுமின்றி பணங்கொடுத்து, பிறகு வாங்கியவன் மனமுவந்து ஏதேனும் கொடுப்பது. வட்டியுடைய சில விளக்கங்கள் பின்னர் கடனுடைய பாடத்தில் கூறப்படும்.

ஒரு அடிமைப் பெண்ணையும் அவளுடைய சிறு குழந்தையையும் பிரித்து ஒருவரை விற்பது கொண்டோ, அல்லது அன்பளிப்பாகப் பிறருக்குக் கொடுப்பது கொண்டோ பாகப்பிரிவினையின் மூலம் பிரித்தோ வைப்பது ஹறாமாகும். அவள் அதை சம்மதித்தாலும் சரி, அவள் காஃபிரானவளாக இருந்தாலும் சரி, தாயையும் பிள்ளையையும் பிரிப்பது ஹறாம். "ஒரு குழந்தையை அவளுடைய தாயை விட்டும் பிரித்து வைப்பவனை அவனுடைய நேசர்களை விட்டும் கியாமத்து நாளில் அல்லாஹ் பிரித்து வைத்திடுவான்" என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நவின்றுள்ளார்கள்.

வட்டி சம்பந்தமான எந்த வியாபாரமாயினும் சரி, அல்லது இங்கு குறிப்பிட்ட முறையில் ஓர் அடிமைப் பெண்ணையோ அல்லது அவளுடைய குழந்தையையோ ஒருவரை மற்றவரை விட்டும் பிரித்து விற்பதாயினும் சரி, அவை பாத்திலான வியாபாரங்களாகும். இமாம் கஸ்ஸாலீ (ரஹ்) அவர்களுடைய சொற்படி பிரயாணத்தினால் இவ்வாறு தாயையும் பிள்ளையும் பிரிப்பதும் ஹறாமாகும். ஆனால், குழந்தை பருவ வயதை அடைந்தபின் தன் தாயை விட்டும் பிரிப்பது கூடும். எனினும் பகுத்தறியக் கூடிய தன்மையுள்ள (சுமார் ஏழு வயதை அடைந்த) ஒரு குழந்தையை அது பருவமடையும் வரை தாயை விட்டுப் பிரிப்பது மக்ரூஹ் ஆகும்.

மிருகங்களை விட்டும் கன்றுகளை, பால்குடி மாறிவிட்டால் பிரிக்கலாம். பால் குடித்துக் கொண்டிருக்கும் கன்றிருக்க, தாயை அறுப்பது ஹறாம் என்று சுபுகீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். ஆனால் தாயிருக்க, கன்றை அறுக்கலாம்.

திராட்சைப் பழத்திலிருந்து மது வடிப்பான் என்று திட்டமாகவோ, அல்லது பெரும்பாலும் செய்வான் என்ற எண்ணம் மேலிட்டிருந்தாலோ அப்படிப்பட்டவனுக்கு திராட்சைப் பழத்தை விற்பதும், ஓரினப்புணர்ச்சியில் ஈடுபடுபவனுக்கு அருப்பம் இறங்காத வாலிபப் பையனை விற்பதும், சண்டைக்கு விடுவதற்காக ஒருவனுக்குச் சேவலையும், பாய்ச்சலுக்கு விடுவதற்காக ஆட்டுக் கிடாயையும் விற்பதும், பட்டுத்துணி அணிபவனுக்கு அதை விற்பதும், விக்கிரகத்திற்கு வாசனை பூசும் பூசாரி போன்றவர்களுக்கு கஸ்தூரி, சந்தனம், பூ போன்ற மணப் பொருட்களை விற்பதும், தக்பீர் சொல்லி அறுக்காமல் அடித்துச் சாப்பிடுவான் என்று தெரிந்த

ஒருவனுக்கு ஆடு, மாடு, கோழி போன்றவற்றை விற்பதும் ஹராமாகும். ஹர்பி காஃபிருக்கு ஆயுதங்களை விற்பது ஹராமாகும் என்ற விஷயம் ஏற்கனவே கூறப்பட்டு விட்டது. மேற்கூறப்பட்ட காரியங்களைச் செய்வான் என்பதில் சந்தேகமிருந்தால் அப்பொழுது விற்பனை செய்வது மக்ரூஹ் ஆகும்.

வழிப்பறிக் கொள்ளையனுக்கு ஆயுதங்களை விற்பதும், ஹலாலும் ஹராமுமான பொருள் கலந்து வைத்திருக்கும் ஒருவனுடன் கொடுக்கல் வாங்கல் வைத்துக் கொள்வதும் மக்ரூஹ். அவனுடைய கொடுக்கல் வாங்கல் அனைத்தும் ஹராமான பொருளிலிருந்துதான் என்றிருந்தால் அவனுடன் தொடர்பு வைப்பது ஹராமாகும்.

சரக்குடைய விலையை நிர்ணயம் செய்தபின் அதற்கு முன் பணமாகக் கொஞ்சம் தொகையை (அச்சாரம் என்ற பெயரால்) கொடுப்பது நம் நாட்டில் வழக்கத்திலிருக்கிறது. இதில் ஏதேனும் பிணக்கு ஏற்பட்டு சரக்கை கொடுக்கவில்லை என்றால் அந்த அச்சாரத்தை திருப்பிக் கொடுக்காமல் வைத்துக் கொள்வது கொடிய ஹராமாகும்.

## உணவுப் பொருட்களைப் பதுக்கி வைத்தல்

பின்னால் அதிக விலைக்கு விற்கலாம் என்ற நோக்கத்தில் தானியங்களை பதுக்கி வைத்தல் ஹராமாகும். தானியத்திற்கு உதவியாயிருக்கின்ற மீன், கருவாடு, இறைச்சி போன்றவையும் தானியம் போன்றுதான் என்று இமாம் நவ்ஸாவீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

பதுக்கி வைத்தல் என்பது தன்னிடமுள்ள உணவுப்பொருட்கள் மக்களுக்குத் தேவையாயிருக்க, அதிக விலையை எதிர்பார்த்து விற்காமல் வைத்தலாகும். அதுதான் ஹராமாகும். தன்னுடைய தேவைக்காக தானியங்களை வாங்கி வைத்திருப்பவனும், விலை சவுதமான நாளில் விற்க மாட்டேன் என்று சொல்கிறவனும் பதுக்கி வைப்பவனல்ல.

ஒருவரிடம் ஒருவர் ஒரு சரக்கை விலைபேசி முடித்திருக்க, மற்றொருவர் அதனையபகரிப்பதற்காக அதிக விலை கொடுப்பதாகக் கூறுவதும், அல்லது சரக்குடையவனுக்கு ஆசை காட்டி அதனை விட்டு மாறும்படிச் செய்வதும், சரக்குடையவன் மாறுவதும் (இருவருடைய செயலும்) ஹராமாகும்.

## வியாபாரத்தில் கயிறு கட்டிவிடுதல்

தன் சரக்கிற்குக் கூடுதலான விலை சொல்கிற ஒருவன் மீது ஆத்திரம் அடைந்து அவன் அலைந்து திரியட்டும் என்று எண்ணி பெறுமதிக்கு மேல் கூடுதலான விலைக்குக் கேட்டு அதை வாங்காமல் விட்டு விடுவதும், பெறுமானமில்லாமல் கூடுதலாகக் கேட்டு இருக்க மாட்டான் என்று நினைத்து அந்த விலையை ஒட்டி வாங்குவதால் நஷ்டப்படுவதும் முடக்கமடைவதும் ஏற்படுமாதலால் அது ஹராமாகும். இந்த நிலைகள் அனைத்திலும் தெரிந்து கொண்டே செய்வதுதான் ஹராமாகும்; அதற்குத் தண்டனை உண்டு. எனினும், ஹராமாக இருந்தாலும் வியாபாரம் என்பது கூடும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

### விற்பனைப் பொருளில் நடந்து கொள்ளும் உரிமைகள்

விற்பனைப் பொருளில் மூன்று விதமாக நடந்து கொள்ளும் உரிமைகள் இருக்கின்றன. முதலாவது: வியாபாரம் நடைபெற்ற இடத்தை விட்டும் பிரிவதற்குமுன் வாங்கியவன் அதனைத் திருப்பிக் கொடுப்பதற்கோ, விற்றவன் அதனைத் திரும்பப் பெறுவதற்கோ உரிமை இருக்கிறது. வியாபாரம் முடிவான பின் இருவரிலொருவர் அவ்விடத்தை விட்டுப் பிரிவதைக் கொண்டு அந்த உரிமை விழுந்து விடும். அந்த இடத்தை விட்டும் ஒருவனுடைய உடல்-அவன் மய்யித்தாகப் பிரிந்தாலும் சரி அல்லது தெரியாத்தனமாகப் பிரிந்தாலும் சரி, அந்த உரிமை விழுந்து விடும். இருவரும் ஒரு சிறிய வீட்டிலிருந்தால் அவ்வீட்டை விட்டு வெளியேறுவது கொண்டும், பெரிய வீட்டிலிருந்தால் வியாபாரம் முடிவான அறையை விட்டும் வெளியேறுவது கொண்டும் பிரிதல் உண்டாகி விடும். வியாபாரம் நடைபெற்ற இடத்தை விட்டும் எவ்வளவு நேரம் பிரியாமலிருந்தாலும் அந்த உரிமை இருக்கும். இருவரிலொருவன் இறந்து விட்டால், அந்த உரிமை வாரிசுக்காரனுக்குத் திரும்பும்.

இரண்டாவது, மூன்று தினங்கள் வரை நிபந்தனை செய்து கொள்வது. அதாவது, ஒரு பொருளை வாங்கும் பொழுது மூன்று தினங்களுக்குள் இது எனக்குத் தேவையா? இல்லையா? என்று சொல்லி விடுகிறேன் என இருவருமோ, இருவரிலொருவனோ தவணையைக் கூறுவது. மூன்று தினங்கள் முடிந்தால் அந்த உரிமை விழுந்து விடும். ஒப்புக்கொண்டேன் என்று கூறுவது கொண்டு அந்த வியாபாரத்தை ஏற்றுக் கொள்வதும், உடைத்து விட்டேன் என்று கூறுவது கொண்டு அதனை மறுப்பதும் உண்டாகிவிடும்.

மூன்றாவது, பொருளிலிருக்கும் குறையைப் பாராமல் வாங்கி விட்டால் அவருக்கும் உரிமை உண்டு. அந்தக் குறை விற்பனைக்கு முன் உள்ளதாக இருக்க வேண்டும். இந்த உரிமையைப் பெறுவதற்குரிய குறையாகிறது, அடிமைப்பெண்ணில் பெரும்பாடு உள்ளவளாக இருப்பதும், முன்னால் ஒரு மாப்பிள்ளைக்குத் திருமணம் செய்யப்பட்டவளாக இருப்பதும், ஆண் அடிமையில் விபச்சாரம், திருட்டு ஆகியவை உள்ளவனாக இருப்பதும், ஏழு வயதடைந்த பிறகும் அவன் படுக்கையில் சிறு நீர்க்கழிப்பவனாக இருப்பதும், வாய், அக்குள் ஆகியவற்றின் நாற்றமுடையவனாக இருப்பதுமாகும். மேலும் கோழையாகவும், பொய்யனாகவும், சண்டை போடுகிறவனாகவும், களிமண், கரி, செங்கல் போன்றவற்றைத் தின்பவனாகவும், தொழுகையை விடுகிறவனாகவும் இருப்பதுமாகும். இச்செயல்களை விட்டும் தவ்பாச் செய்தால் அக்குறை நீங்கிவிடும்.

செவிடனாகவும், கூடுதலான மடமைத்தனம் உள்ளவனாகவும் இரண்டு முழங்கால்களையும் ஒன்றோடு ஒன்று உராயும் விதமாக வளைத்து நடக்கிறவனாகவும் இருப்பதும், மர்மஸ்தானத்தில் சதையடைப்பு உள்ளவளாக, வயதாகியும் மாதவிடாய் வராதவளாக இரு மார்புகளில் ஒன்று பெரிதாய் இருப்பவளாக இருந்தால் இவையெல்லாம் குறைகளாகக் கருதப்படும்.

மிருகங்களில் காலால் எத்தக் கூடியதும், கடிப்பதாக உள்ளதும், குறும்புத்தனம் செய்யக்கூடியதாக இருப்பதும், குறைகளாகும். வீட்டில் ஜின், ஷைத்தானுடைய

கோளாறு இருப்பதும். வயல்களில் குரங்குகள் நாசப்படுத்துவதும் குறைகளாகும் இவை அனைத்திலும் திருப்பிக் கொடுப்பதற்குரிய உரிமை வாங்கியவனுக்கு உண்டு.

விற்பவன் செய்யும் சில செயல்களைக் கொண்டும் மேற்கூறிய உரிமை வாங்கியவனுக்குக் கிடைக்கும். அதாவது: மாட்டின் மடுவைக் கட்டி வைத்து பால் சோதனை செய்தபின், அப்படியே விற்ற பிறகு அதனை வாங்கியவன் பின் அதனை அறிந்து கொண்டால் அப்படி அறிந்தவனுக்கும் அந்த உரிமை உண்டு. இது செயலாலுள்ள உரிமை எனப்படும். மடுவைக்கட்டுவது ஹராமாகும்.

வியாபாரத்திற்காக முத்து, இரத்தினக்கல், போன்றவற்றை வாங்கும் பொழுது அதனை நோட்டமிடுகிறவனுடைய ஆலோசனையின் மீதுதான் வாங்க முடியும் என்ற நிபந்தனையில் வாங்கி பின் நோட்டமிடுபவன் அதை வீதர் என்று சொல்லிவிட்டால் அதைத்திருப்பிக் கொடுக்கும் உரிமை உண்டு.

பொருளில் ஏதேனும் குறையிருந்தால் விரைவாக அதனைத் திருப்பிக் கொடுத்து விட வேண்டும். காரணமின்றி பிற்படுத்தினால் அவ் வியாபாரத்தை முறிப்பது செல்லாது. நேரம் வந்து விட்ட தொழுகையினாலும், சாப்பிடுவதாலும், மலம், ஜலம் கழிக்கச் செல்வதினாலும் விரைவாகத் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்பது தவறிவிடாது. விற்றவனுக்கு ஸலாம் சொல்வதினாலும் தவறிவிடாது.

இரவில் குறையை அறிந்தால் விடியும் வரை பிற்படுத்தலாம். நோயின் காரணத்தால் விற்றவனுடைய இடத்திற்கு செல்ல முடியவில்லையானால் இரண்டு சாட்சிகளை வைத்து அவ்வியாபாரத்தை முறித்திடுவான்.

வாங்கிய அடிமையில் ஏதேனும் குறையைக் கண்டால் அவனிடம் எந்த வேலையையும் வாங்கக் கூடாது. எனக்குத் தண்ணீர் கொண்டு வா என்றாலும், இந்தக் கதவை அடைத்து விடு என்று சொன்னாலும் அவனைத் திருப்பிக் கொடுப்பது கூடாது.

எந்தக் குறையுமில்லை என்ற நிபந்தனையில் ஒரு பிராணியை விற்றால், அவ்வது குறையிருந்தாலும் திருப்பிக் கொடுப்பதில்லை என்ற நிபந்தனையில் விற்றால், விலைபேசும் அந்த ஒப்பந்த நேரத்தில் அந்தக் குறையிருந்து, விற்றவன் அதை அறியாமலிருந்தால் அந்தக் குறை அனைத்தை விட்டும் அவன் நீங்கிவிடுவான். ஆனால், பிராணி அல்லாத இதர பொருட்களில் மறைவான, வெளிப்படையான எல்லாக் குறைகளை விட்டும் நீங்க மாட்டான்.

குறையாகிறது பழையதா, புதியதா என்பதில் இருவரும் தர்க்கம் செய்து கொண்டால் விற்றவன் சத்தியம் செய்வது கொண்டு உண்மையாக்கப்படும்.

பழைய குறையை புதிய ஒரு குறையைக் கொண்டுதான் அறியப்படுமென்றிருந்தால், உதாரணமாக: அழுகிய முட்டையை உடைத்துத்தான் பார்க்க வேண்டுமென்பது போல், கொஞ்சம் புழுத்திருக்கும் வத்தக்காயைக் குடைந்து பார்த்துத் தெரிய வேண்டுமென்பதுபோல் இருந்தால், அதனைக் கொடுத்துவிட வேண்டும். அதனை உடைத்ததற்காக ஏதேனும் கொடுப்பது ஏற்படாது. ஆடு, மாடு போன்றவற்றில் ஏதேனும் குறைக்காகத் திருப்பிக் கொடுக்கும் பட்சத்தில் இடைக்கால வளர்ப்புக்காக

ஏதும் சேர்த்துக் கொடுக்க வேண்டியதில்லை. இது போல் வாங்கப்பட்ட அடிமை ஒரு தொழிலைக் கற்றுக் கொண்டான், அல்லது சிலம்பம் கற்றுக் கொண்டான்; அவனில் உள்ள ஒரு குறைக்காகத் திருப்பிக்கொடுக்கும்பொழுது அவன் படித்த வித்தைக்காக ஏதும் அதிகம் வாங்கக் கூடாது.

அதைவிட்டும் பிரிந்ததாக இருந்தால் அது வாங்கியவனையே சேரும். இவ்வாறே வாங்கியவனின் ஆட்சிக்கு வந்த பின் ஏற்பட்ட கர்ப்பமும் இது போன்றதாகும்.

## விற்கப்பட்ட பொருளின் சட்டம்

விற்கப்பட்ட பொருளை வாங்கியவன் ஒப்புக் கொள்வதற்கு முன் அது விற்றவனின் பொறுப்பில் உள்ளதாகும். அப்பொழுது அதில் ஏற்படும் இலாபமும் நஷ்டமும் விற்றவனையே சாரும். அவன் அதனைச் சேதப்படுத்தினால் அவ்வியாபாரத்தை முறித்ததாக ஆகிவிடும். இவ்வாறே மற்றவர் எவரேனும் அதனைச் சேதப்படுத்தினாலும், ஏதேனும் ஆபத்தினால் சேதமடைந்தாலும் விற்பனை முறிந்துவிடும்.

விற்றவனிடம் இருக்கும்போது வாங்கியவன் அதனைச் சேதப்படுத்தினால் வியாபாரத்தை ஒப்புக் கொண்டதாக ஆகிவிடும். வாங்கியவன் அதில் ஏதேனும் விற்பனையோ, ஹதியாவோ, சதக்காவோ செய்தால் அது பாத்திலாகி விடும். விற்றவன் முன்னிலையில் அதனைச் செய்தாலும் சரி. ஈடுவைத்தல், கூலிக்குக் கொடுத்தல், கடன் கொடுத்தல் போன்றவையும் இவ்வாறுதான். ஆனால் அதனை உரிமை விட்டாலும், வக்ஃப் செய்தாலும், கல்யாணம் முடித்துக் கொடுத்தாலும் செல்லுபடியாகும்.

அசையாப் பொருட்களான வீடு, தோட்டம் போன்றவற்றை ஒப்புவித்தல் என்பது அதனுடைய சாவியை ஒப்படைப்பதுடன் விற்றவனின் பொருட்களையும் அங்கிருந்து நீக்கிக் கொள்ள வேண்டும். அசையும் பொருட்களான கப்பல், மிருகங்கள் போன்றதை வாங்கியவனின் இடத்திற்குச் சேர்த்திட வேண்டும். தன் பொருட்களையும் கப்பலை விட்டும் இறக்கிட வேண்டும். அல்லது அப்பொருளுக்கென்று தனியாக விலைபேசி அல்லது கேள்வு பேசி அல்லது ஏதேனும் ஒப்பந்தம் செய்து உத்தாரம் பெற்றுக் கொள்ள வேண்டும். (உத்தாரம்-ஒப்புதல்)

சரக்குடைய விலையாக ஒரு நாணயத்தைப் பேசி முடிவு செய்த பின் அந்த நாணயத்திற்கு பதிலாக அதே அளவு மதிப்புள்ள வேறொரு நாணயத்தைக் கொடுப்பது கூடும்.

நிலம் விற்றால் அதிலுள்ள மரங்களும் எடுப்புகளும் (கட்டிடங்களும்) சேர்ந்ததாகும். அவ்வாறே தோட்டத்தை விற்றாலும் அதிலுள்ள பூமியும் மரங்களும் எடுப்புகளும் சேர்ந்ததாகும். வீட்டை விற்றால் மேற்குறிப்பிட்ட மூன்றும் அதிலுள்ள பல கட்டிடங்களும் அதன் தரை பூமியின் கீழ்கடைசிவரையும் சேர்ந்ததாகும். இன்னும் நட்டப்பட்டிருக்கும் நிலைகளும் மரமும் அதில் சேர்ந்திடும். கழற்றப்பட்ட நிலைகளும் கட்டில்களும் பூமியில் புதைக்கப்பட்டிருக்கும் கற்களும் அதில் சேரா.

அடிமையாய் இருக்கும் ஒரு ஆணையோ பெண்ணையோ விற்றால் அவர்களின் உடலிலுள்ள ஆபரணங்களும் மோதிரமும் செருப்பும் இன்னம் பலமான சொற்படி மானத்தை மறைக்கும் ஆடைகளும் சேரா.

மரத்தை விற்றால் பூமியை நீக்கி பச்சை மரத்தை மட்டும் விற்கலாம். அதனுடைய வேரும் கிளைகளும் அதில் சேர்ந்தவையாகும். பூமி அதில் சேராது. விற்கும் போது வெளியாகி இருக்கும் பழங்களும் தேங்காய்களும் இளநீரும் அதில் சேராது. நம் ஊர்களில் நடைபெறுவது போன்று உரிப்பதற்குரிய தேங்காய்களைத் தனக்கு ஒதுக்கிக் கொண்டு மற்ற காய்களை வாங்குகிறவனுக்குக் கொடுப்பது ஷரீஅத்தின்படி சரியல்ல. எனினும், அதனை திருப்தி கொண்டால் ஆகுமாக்கப்படும்.

மரத்திலுள்ள பழங்களைப் பற்றிப் பேசி முடிவு செய்தால் பேசியபடி நடந்து கொள்ள வேண்டும். பழம் வெளியாகி இருந்தாலும் சரி, வெளியாகா விட்டாலும் சரி! வெளியாகி விட்ட பழங்களையும் மரத்தையும் சேர்த்துப் பேசியிருந்தால் பழம் பறிக்கும் காலம் வரை மரத்தை வைத்திருக்க வேண்டும்

ஒரு பிராணியை விற்றால், அதன் வயிற்றிலுள்ள குட்டியும் சேர்ந்தது தான். ஆனால் அக்குட்டி முன்னமே விற்றவனுக்குச் சொந்தமாக இருக்க வேண்டும். தாய் ஒருவனுக்கும் வயிற்றிலிருக்கும் குட்டி மற்றவனுக்கும் உடையதாய் இருந்தால் குட்டி சேராது. உதாரணமாக: அப்பிராணியின் வயிற்றிலுள்ள குட்டியை எவரேனும் ஒருவருக்கு வஸிய்யத்துச் செய்திருப்பதுபோல்.

### விற்பவன் வாங்குபவன் இருவருக்குமிடையில் தர்க்கம்

விற்பவன் வாங்குபவன் இருவருக்கும் எவ்விதப் பிணக்குமில்லாமல் ஒரு வியாபாரம் முறையோடு முடிந்தபின் உடையக் காரனோ அல்லது அவனுடைய காரியக்காரனோ அல்லது உடையக்காரன் இறந்து விடுகிறான் என்றால் இறந்து விட்ட பிறகு இறந்தவனுடைய வாரிசுக்காரானோ அதனுடைய விலையில் அல்லது தன்மையில் அல்லது தவணையில் தகராறு செய்தால், இருவருக்கும் சாட்சியும் இல்லையானால், அல்லது சாட்சி இருந்தும் அது இட்டோட்டாக இருக்குமானால் இருவரிலொருவர் தன் சொல்லை உறுதிப்படுத்தி சத்தியம் செய்ய வேண்டும். இருவருமே தான் சொல்வதுதான் சரி என்று சொன்னால் வழக்குத் தொடுத்தவனுடைய சத்தியம் ஏற்றுக் கொள்ளப்படும். சாட்சிகள் இருக்கின்றனர். ஆனால் ஒருவன் தேதியைக் குறிக்காமலும், மற்றொருவன் தேதியைக் குறிப்பிட்டும் சொன்னால், அல்லது இருவரும் ஒரே தேதியை முன்பின்னாகச் சொன்னால் முதலில் சொல்லியவனின் சொல்லை ஏற்று தீர்ப்புச் செய்யப்படும். இருவரிலொருவன் மற்றவனின் சொல்லைப் பொருந்தி, சகித்துக் கொள்வது நல்லது. அவ்வாறின்றி ஒருவர் தன் சொல்லிலேயே நின்றால் நீதிபதி அவ்வியாபாரத்தை உடைத்து விடுவார்.

ஒருவன் ஒரு பொருளை நான் உனக்கு விற்றேன் என்கிறான்; வாங்கியவனோ, இல்லை; நீ ஈடு வைத்தாய் என்கிறான்; அல்லது நன்கொடையாகத் தந்தாய் என்கிறான். இருவரும் ஒரே விஷயத்தில் பிணங்கிக் கொண்டதால் இதில் வழக்குத் தொடுத்தவன் உண்மையாக்கப்படுவான். வியாபார விஷயத்தில் தம்முடைய உம்மத்தினர் சகோதர

மனப்பான்மையோடு நடந்து கொள்ள வேண்டுமென்பது முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் விருப்பமாகும்.

நோயுற்றிருக்கும் ஒருவன் ஒரு பொருளை மற்றொருவருக்கு அன்பளிப்புச் செய்தான். அதனை அவனுடைய அனந்திரக்காரன் ஒருவன், அவன் புத்தி மாறிய நிலையில் அதனை அவ்வாறு சொல்லியதாகக் கூறினால் அச்சொல்லை ஏற்றுக் கொள்ளக் கூடாது. ஆனால், மயக்கம் ஏற்பட்டு அவன் அன்பளிப்புச் செய்யும் வரை அந்த மயக்கம் நீடித்திருந்தது என்று வழக்குத் தொடுத்தால் அப்பொழுது அவ்வழக்கு ஏற்றுக் கொள்ளப்பட்டு விசாரணை செய்யப்பட்டு அது உண்மையென்று உறுதியானால் நோயுற்றவன் செய்த அன்பளிப்பு ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது.

ஒரு பொருளை வாங்கியவன் அதில் குறை இருப்பதாகத் திருப்பிக் கொடுக்கும் பொழுது, விற்றவன் அதனை மறுத்தால், விற்றவனை சத்தியம் செய்யுமாறு கூறி உண்மையாக்கப்படும். ஒருவன் எண்ணெய் வாங்கிக் கொண்டு போனான். பிறகு திரும்பி வந்து அதில் எலி விழுந்து கிடக்கிறது என்று கூறுகிறான். அப்பொழுது விற்றவன் அதனை ஏற்றுக் கொண்டால் சரி. இல்லாவிட்டால் விற்றவனை சத்தியம் செய்யச் சொல்லி உண்மையாக்கப்படும்.

ஒருவன் ஒரு கலயத்தைக் கொண்டு வந்து அதில் நெய் ஊற்றச் சொன்னான். அதிலிருந்து ஒரு எலி வெளியானது. விற்றவன் கலயத்தில் இருந்தது என்றான்; வாங்கியவன் நெய்யில் உள்ளது என்றான். இப்பொழுதும் விற்றவன் சொன்னதையே உண்மையாக்கப்படும்.

ஆனால் வம்பாக ஒரு பொருளை அப்பிக் கொண்டு (பலவந்தமாக எடுத்துக் கொண்டு) போனவன் அதனைத் திருப்பிக் கொண்டு வந்து கொடுத்தால், பொருளுக்குரியவன் அது என்னுடையதல்லவென மறுத்தால், வம்பரி செய்து வாங்கிச் சென்றவன் உண்மையாக்கப்படுவான். அமானிதமும் இவ்வாறுதான்.

## கடன் பற்றிய பாடம்

"அழகிய கடனாக அல்லாஹ்விற்குக் கடன் கொடுங்கள்" என்றும் "அழகிய கடனாக அல்லாஹ்வுக்குக் கடன் கொடுப்பவர் யார்?" என்றும் அல்லாஹு தஆலா குர்ஆனில் கூறியுள்ளான். "எவரொருவர் இரண்டு தடவை அல்லாஹ்வுக்காக கடன் கொடுக்கிறாரோ அவருக்கு அந்த இரண்டில் ஒன்றை தர்மம் (சதக்கா) செய்தால் எவ்வளவு நன்மை கிடைக்குமோ அவ்வளவு நன்மை கிடைக்கும்" என்றும், "முஸ்லிமான தன் சகோதரனுக்கு உதவி செய்யும் காலமெல்லாம் அல்லாஹ் அந்த அடியானுக்கு உதவி செய்துகொண்டே இருப்பான்" என்றும் ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

கடன் கொடுத்து வாங்குவது சதக்காச் செய்வதைவிடச் சிறந்தது என்று சிலரால் கூறப்பட்டுள்ளது. ஏனெனில், சதக்காவைப் பெறுபவன் அது தேவையுடையவனாகவும் இருக்கலாம். தேவையற்றவனாகவும் இருக்கலாம். ஆனால், கடன் கேட்பவன் தன்னிடம் பொருள் இல்லாத போதுதான் கேட்பான்.

பசியால் துயருறும் ஒருவனுக்கு ஒருவன் உணவு கொடுத்தான். பிறகு உன்னிடமிருந்து பிரதி உபகாரத்தை எதிர்ப்பார்த்துத்தான் உனக்கு உணவு

கொடுத்தேன் என்று அவன் சொல்ல, மற்றவன் அதனை மறுத்தால் உணவு கொடுத்தவனின் பேச்சே உண்மையாக்கப்படும்.

பிரதி உபகாரத்தை எதிர்பார்த்துத்தான் உனக்கு நன்கொடை தந்தேன் என்று ஒருவன் சொல்ல, இல்லை, சும்மாதான் தந்தாய் என்று அதை வாங்கியவன் கூறினால் அன்பளிப்பைப் பெற்றவனின் சொல்தான் உண்மையாக்கப்படும்.

கடன் கொடுத்து வாங்குவது சுன்னத்தாகும். அதற்கு ஈஜாபும் கபூலும் தேவை. உனக்கு நான் இதனைக் கடனாகத் தந்தேன், இந்தப் பொருளைப் போலுள்ளதைத் திருப்பித் தர வேண்டுமென்ற நிபந்தனையில், என்று கடன் கொடுப்பவன் சொல்லியவுடன் தாமதிக்காமல் அவன் சொன்ன சொல்லுக்கு நேர்பாடாக "நான் அதனை ஒப்புக் கொண்டேன்" என்று பெற்றுக் கொண்டவன் சொல்ல வேண்டும்.

கடன் கொடுத்து வாங்குவதில் ஈஜாப் கபூல் தேவையில்லை என்றும் பல இமாம்களால் கூறப்பட்டுள்ளது. ஒருவன் எனக்குக் கடன் கொடு என்று கேட்டான். மற்றவன் கொடுத்தால் அது கடன்தான். ஒருவன் வெறுமனே பணம் கொடு என்று கேட்க, அவன் கொடுத்தால் அது அன்பளிப்பாகும். ஆனால், அந்தப் பணத்தைத் திருப்பித்தர வேணுமென்றுதான் கொடுத்தேன் என்று கொடுத்தவன் சொல்வதில் கருத்து மாறுபடுவார்களானால் கொடுத்தவனுடைய சொல்தான் உண்மையாக்கப் படும். ஏனெனில், அவனுடைய எண்ணம் அவனுக்குத் தான் தெரியும்.

சட்டத்தளவில் சேர்க்கப்பட்ட கடன் (துன்பத்தில் சிக்குண்டவர்களுக்கு உதவி செய்ய வேணுமென்று மார்க்கத்தில் ஏவப்பட்டதின் அடிப்படையில் செய்யும் உதவி) ஈஜாப் கபூலின்பால் தேவையாகாது. உதாரணமாக: அனாதையல்லாத ஆனால் கண்டு எடுக்கப்பட்ட பிள்ளைக்குச் செலவு செய்வது, பசித்தவருக்கு உணவளிப்பது, நிர்வாணமாக இருப்பவனுக்கு உடுமானமளிப்பது ஆகியவற்றைப்போல்.

ரொட்டி, குழைத்தமாவு, புளித்ததயிர் ஆகியவற்றைக் கடன் கொடுக்கலாம். பலமான சொற்படி உறைமோர் கடன் கொடுப்பது கூடாது. ஏனெனில், அதனைத் திருப்பிக் கொடுக்கும்பொழுது குறிப்பிட்ட புளிப்பு வித்தியாசப்படும் என்பதால் கூடாது.

ஒருவன் மற்றொருவனிடம், பத்து ரூபாய் கடனாகக் கேட்டான்; அவன் இன்ன மனிதனிடம் நீ வாங்கிக் கொள் என்று சொன்னான். பிறகு பார்க்கும்பொழுது அவனிடம் இவனுக்குப் பணம் வரவேண்டியதிருக்கிறது. இப்பொழுது இந்த மூன்றாமவனிடம் இவன் வாங்கிக் கொள்வது கூடும். இல்லையெனில், அந்தப் பணத்தைக் கைப்பற்றுவதில் கடன் கேட்டவன், கடன் வாங்கச் சொல்லியவனின் வக்கீலாக இருப்பான். எனவே, அக்கடனைப் புதுப்பித்துக் கொள்ள வேண்டும். சிறு குழந்தை, பயித்தியக்காரன் ஆகியோருடைய பொருளை நீதிபதியானவர் விசுவாசமுள்ள வசதியுள்ளவனுக்குக் கடன் கொடுத்து வாங்கலாம்.

## கடன் கொடுத்தவனுக்கு வாங்கினவனால் உண்டாகும் பிரயோஜனம்

கடன் கொடுத்தவனுடைய அனுமதியினால் கடன் வாங்கியவன் கைப்பற்றுவது கொண்டு தனக்கு உடைமையாக்கிக் கொள்வான். ஒருவன் பருவ வயதடைந்த, அறிவுள்ள தன் சகோதரன் ஒருவனுக்கு சில காலம் தன் பொருளை செலவு செய்து வந்தான்; அவனும் எதுவும் பேசாமல் வாங்கிச் சாப்பிட்டு வந்தான். பிறகு அதனைத் திருப்பிக் கொடுக்க வேண்டியதில்லை; அவன் கேட்டாலும் கொடுப்பது வாஜிபில்லை.

கடன் வாங்கியவனின் கைவசத்தில் கடன் கொடுத்தவனுடைய உடைமை ஏதேனும் இருந்தால் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். இவன் கையை விட்டு நீங்கி பிறகு மீண்டு வந்ததாக இருந்தாலும் சரி. ஆனால், அதனை ஈடு வைத்திருந்தாலும், அடிமையை உரிமையிடுவதாகச் சீட்டு எழுதிக் கொடுத்திருந்தாலும் திருப்பக் கூடாது.

கடன் வாங்கிய பொருள் போல் உள்ளது கிடைக்கக் கூடியதாக இருந்தால் அதே போன்றதையும், கிடைக்க முடியாத பொருளாக இருந்தால் விலையிலும் தோற்றத்திலும் அது போன்றதையும் கொடுப்பது கடன் வாங்கியவனின் மீது வாஜிபாகும். நல்லதுக்குப் பதிலாகக் கெட்டதை ஏற்றுக் கொள்வதும் கடன் கொடுத்த இடமல்லாததில் அது போன்றதை ஏற்றுக் கொள்வதும் வாஜிபல்ல. கடன் வாங்கியவனிடம் வாங்கிய இடமல்லாததில் அந்தப் பொருளைத் திருப்பிக் கேட்டால் அப்படிக் கொடுக்க வேண்டுமென்பது அவசியமில்லை. அதனைச் சுமந்து கொண்டு செல்வதற்கு கடன் கொடுத்தவனுக்கு செலவு மேலதிகம் ஏற்படும் என்று இருக்கும் நிலைமையில் அந்தச் செலவை கடன் கொடுத்தவன் ஏற்றுக் கொண்டால் வேறு இடத்தில் கொண்டு போய்க் கொடுக்கலாம். எனினும், கொடுத்த இடத்தில் அந்த நேரத்தில் என்ன விலையோ அதனை வேறு இடத்தில் கேட்கலாம்.

கடன் வாங்கும் நேரத்தில் எவ்வித நிபந்தனையுமின்றி வாங்கியிருந்தால் கடன் கொடுத்தவனுக்கு ஏதேனும் அன்பளிப்புச் செய்யலாம். அது சுன்னத்துமாகும். "கடனை நிறைவேற்றும் பொழுது மிக அழகான முறையில் நிறைவேற்றுபவரே உங்களில் அழகானவர்" என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது. இச் சந்தர்ப்பத்தில் அந்த அன்பளிப்பை ஏற்றுக் கொள்வது கடன் கொடுத்தவனுக்கு மக்ரூஹ் அல்ல. ஏதேனும் நிபந்தனையிட்டுக் கடன் கொடுத்தாலும், வாங்கினாலும் அது வட்டியாகும்; அது ஏகோபித்த அபிப்பிராயப்படி ஹராமாகும். "ஏதேனும் ஒரு பலனை இழுத்துக் கொண்டுவரும் கடன் அனைத்தும் வட்டியாகும்" என்று நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அருளியுள்ளார்கள்.

ஒருவன் தன் தோட்டத்தை, அல்லது வீட்டை, அல்லது தோணி, கப்பல் போன்றவற்றை பாட்டத்துக்கோ, வாடகைக்கோ, கொடுக்கும் போது அதனதனுடைய பெறுமதியான கூலிக்கும் மேலாகக் கொடுக்க வேண்டுமென்று கடன் கொடுக்கும் ஆரம்பத்தில் பேசிக் கொடுப்பது ஹராமாகும். அதனைக் கட்டாயப்படுத்தாமல் சாடையாகக் குறிப்பிடுவது மக்ரூஹ் ஆகும். பெரும் பாலான உலமாக்களிடம் இதுவும் ஹராமாகும்.

ஏதேனும் ஒரு பொருளை பிணையாக வாங்கிக் கொண்டு கடன் கொடுப்பது கூடும்.

எவ்வித நிபந்தனையும் பேசாதிருக்கும் நிலைமையில் கடன் கொடுத்தவனுக்குக் கடன் வாங்கியவன் ஏதாவது ஒரு பொருளை ஹத்யாவாக (அன்பளிப்பாக)க் கொடுப்பது எல்லா இமாம்களின் ஒருமித்த சொல்படி ஆகுமானதாக இருக்கும்.

"அவனுக்கு நூறு ரூபாய் கடன் கொடு; நான் அதற்குப் பொறுப்பாளி" என்று ஒருவன் சொன்னால், அவன் அதற்கு பொறுப்பாளியாகிடுவான். (எனினும் இதில் இமாம்களிடையே கருத்து வேற்றுமை இருக்கிறது) இவ்வாறே உன் தட்டுமுட்டு சாமான்களைக் கடலில் போட்டு விடு; நான் அதற்குப் பொறுப்பாளி என்று சொன்னாலும் பொறுப்பாளியாவான்.

ஒருவன் ஒரு பொருளைக் கடனாகக் கொடுத்தேன் என்கிறான். வாங்கியவனோ, அமானிதமாகத் தந்தாய் என்கிறான். அப்பொழுது வாங்கியவன் சொல்லே உண்மையாக்கப்படும் என்று (ரஹ்) பஙவீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

நிலத்தை அல்லது தோட்டத்தை பணம் கொடுத்து ஒத்திக்கு எடுத்து, அதன் வருமானத்தை அனுபவிப்பது ஹராமாகும். ஆனால்,

அந்த வருமானத்தை அவன் கொடுத்த தொகையில் கழித்துக் கொண்டாலும், அல்லது அந்த நிலத்துக்குக் கூலியாக ஒரு தொகையைப் பேசி இருவரும் பொருந்திக் கொண்டாலும் அது கூடும்.

## ஈடு (அடகு) பற்றிய பாடம்

கொடுக்கும் கடனுக்கு நம்பிக்கைக்காக ஒரு பொருளை ஈடாகப் பெற்றுக் கொள்ளலாம். இதனை வயது வந்தவர் ஈஜாப் கபூல் கொண்டு நிறைவேற்ற வேண்டும். வக்பு செய்யப்பட்ட சொத்தையும் பிள்ளை பெற்ற உம்முவலத் (அல்லது சுர்ரிய்யத்) என்ற அடிமைப் பெண்ணையும் ஈடாக வைப்பது கூடாது.

சிறு குழந்தை, பயித்தியககாரன் ஆகியோரின் பொருட்களை ஈடுவைக்கக்கூடாது; அதற்கு அதிகாரியாக இருப்பவர் தந்தையாக பாட்டனாக இருந்தாலும் சரி. எனினும், ஈடுவைத்து வட்டியில்லாமல் பொருளைப் பெற்று, அதில் வியாபாரம், விவசாயம் ஏதேனும் செய்து அவர்களின் வாழ்க்கைத் தேவையை நிறைவேற்றுவதற்காக வைக்கலாம்.

ஈடுவைக்கும் பொருள் பொதுவுடைமையாக இருந்தாலும், இரவலானதாக இருந்தாலும் ஈடுவைப்பது ஆகும். ஈடு பிடித்தவனுக்கு அல்லது ஈடு வைத்தவனுக்கு இடையூறுதரும் காரியத்தைக் கொண்டு நிபந்தனையிடுவது கூடாது. பொருளுக் குரியவனின் அனுமதியின்றி ஈடுபிடிக்கிறவனின் ஆட்சிக்கு அது வராது. ஈட்டு உடைமையில் ஆட்சியாகிறது ஈடு வைக்கப்பட்ட பின் பிடித்தவனுக்காயிருக்கும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

அமானிதப் பொருளை வைத்திருப்பவன் அதற்குப் பொறுப்பாளியாக மாட்டான்; அவனுடைய கவனக்குறைவினால் சேதமானால் தவிர. ஈடு வைக்கப்பட்டதும் பிணையாகக் கொடுக்கப்பட்ட பொருளும் கூலிக்கு (வாடகைக்கு) எடுத்த பொருளும் அமானிதங்களாகும். இரவல் பொருள் அவ்விதமல்ல.

ஈடுபிடிப்பவன் அதனைக் கைப்பற்றுமுன் உடைமைக்காரன், அதனை மற்றொருவனுக்கு அன்பளிப்புச் செய்வதினாலோ அல்லது மற்றொருவனிடம் ஈடு வைப்பதினாலோ முதல் ஈட்டை விட்டும் மீண்டு கொண்டவனாவான்.

ஈடு வைக்கப்பட்ட அடிமைப் பெண்ணை உடலுறவு கொள்வதாலும், திருமணம் செய்து கொடுப்பதாலும், ஈடுவைத்தவனோ, பிடித்தவனோ இறந்து விடுவதாலும், அடிமை ஓடி விடுவதாலும் ஈடு வைத்தல் முறியாது.

பொருள் சேதமடைந்து விட்டால் ஈடுபிடித்தவனையும் வாடகைக்கு எடுத்தவனையும் சத்தியம் செய்யச் சொல்லி உண்மையாக்கப்படும். ஆனால், அப்பொருளை உரிமையாளனிடம் கொடுத்து விட்டதாகக் கூறினால் உண்மையாக்கப்பட மாட்டாது. ஏனெனில், அவர்களிருவரும் தங்கள் பிரயோஜனத்திற்காக கைப்பற்றியிருப்பதால் இரவல் வாங்கியவர்கள் போலாகி விடுகிறார்கள்.

கிதாபு போன்றதை ஈடுபிடித்தவன் அதனை மறந்து விட்டால், அல்லது கரையான் இருக்குமிடத்தில் வைத்து சேதமாகி விட்டால் அதற்குப் பொறுப்பாளியாகிடுவான்.

ஒருவன் மற்றொருவனிடம் ஓர் அடிமையை ஈடு வைத்தான்; பிறகு தவணைப்படி பணம் தராமல், கொடுத்த பணந்தான் அதனுடைய விலை என்று சொன்னால் அந்த வியாபாரம் முறிந்து விடும்; (செல்லுபடியாகாது) ஈடு வைத்தது முறியாது. பருவ வயதையடைந்த புத்தி சுவாதீனமான நேர்மையானவன் ஒரு தப்பான வியாபாரத்தைச் செய்தாலும் அது கூடுமா? கூடாதா? என்பதில் அது சரியான வியாபாரமாயிருந்தால் எப்படி தீர்ப்புச் செய்யப்படுமோ அப்படியே இதற்கும் தீர்ப்புச் செய்யப்படும்.

ஈடுவைத்தவன் அவன் வாங்கிய கடனை நிறை வேற்ற முடியாவிட்டால், அந்தப் பொருளை விற்றாவது கடனை நிறைவேற்றத் தேடலாம். அவ்வாறு நிறைவேற்றா விட்டால் நீதிபதியிடம் அறிவித்து அவர்மூலம் அதனை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும். நீதிபதியுடைய சொல்லையும் அவன் ஏற்காவிட்டால், அவன் கொடுக்க வேண்டியது உறுதியாகி, ஈடுவைத்த பொருளும் அவனுடையதுதான் என்று தெரிந்தால் அதனை விற்று கடனை நிறைவேற்றுவது நீதிபதியின் பொறுப்பாகும். இவ்வாறு செய்வது நீதிபதி வேலை செய்யும் இடத்திற்குள்ளிருக்க வேண்டும்.

ஈடுவைத்த பொருள், வீடு, தோட்டம், குதிரை, மாடு, வண்டி போன்றவையாக இருந்தால் அதைப் பாதுகாக்க வேண்டி ஏற்படும் செலவுகளும், பழுது பார்க்கும் (மராமத்து செய்யும்) செலவுகளும் பொருளுக்குரியவனின் மீதே விதியாகும்.

ஈடுவைத்த பின் அந்தப் பொருளை மற்றொருவனுக்கு ஈடு வைப்பதும், விற்பதும், வக்ஃபு செய்வதும் ஈடுவைத்தவனுக்குக் கூடாது. மேலும் அடிமைப் பெண்ணிடம் உடலுறவு கொள்வதும், இன்னுமொருவனுக்குத் திருமணம் செய்து கொடுப்பதும் ஈடுவைத்தவனுக்குக் கூடாது. எனினும் ஈடுவாங்கியவனுக்கே திருமணம் செய்து கொடுக்கலாம். அல்லது அவனுடைய அனுமதி பெற்று வேறொருவனுக்குத் திருமணம் செய்து கொடுப்பதும் அனுமதி பெற்று உடலுறவு கொள்வதும் கூடும்.

பெண்களின் ஆடை ஆபரணங்களை ஈடு பெற்று அவற்றை அணிந்து கொள்வதற்கு அனுமதி பெற்று அணிந்து கொள்ளலாமா என்பது பற்றி இமாம் நாஷிரி (ரஹ்) அவர்கள் கூறுவதாவது: நகைகளை அணிந்து கொள்வதற்காகவே அவற்றை ஈடுபிடித்துப் பணம் கொடுத்திருப்பதால் ஈடு பிடித்தவளின் மீது நகைகளுக்குரிய பொறுப்பு ஏற்படாது. ஆனால், அந்த அடகு வீணானதாயிருக்கும்.

ஈடு வைத்தவனும், ஈடுபெற்றவனும் அதில் தர்க்கம் செய்து கொண்டால், அதாவது: நீ ஈடு வைத்தாய் என்கிறான். மற்றவன் அதனை மறுக்கிறான். அல்லது அதனுடைய முறையில் தர்க்கம் செய்து கொண்டால், அதாவது, பூமியை மரத்துடன் சேர்த்துத்தான் நீ ஈடு வைத்தாய் என்கிறான். மற்றவன் பூமி மட்டும்தான் என்கிறான். அல்லது அதன் தொகையில் தர்க்கம் செய்து கொண்டால்-அதாவது: இவன் ஆயிரம் என்கிறான்; அவன் இரண்டாயிரம் என்கிறான். இந்த நேரங்களில் ஈடு வைத்தவனின் சொல்லே உண்மையாக்கப்படும்.

இவன் அவனுக்கு இரண்டாயிரம் கொடுக்க வேண்டும். இதில் ஒரு ஆயிரத்திற்கு மட்டும் நகையை (யோ அல்லது ஆள் ஜாமீனையோ) ஈடாக இவன் அவனிடம் கொடுத்து மிருக்கிறான். இந்த நிலைமையில் இவன் அவனுக்கு ஒரு ஆயிரத்தை மட்டும் செலுத்தி விட்டு ஈட்டை திருப்பிக் கேட்டான். அவன் (பணம் கொடுத்தவன்) இவனிடம் (பணம் வாங்கியவனிடம்) நீ தந்த ஈடு மறு ஆயிரத்திற்காக உள்ளது; ஆகையால் ஈட்டுப் பொருளைத் திருப்பித்தர முடியாது என்று கூறினான். ஆனால் இவனோ அந்த ஈட்டுப் பொருள் மொத்தத்திற்குள்ளது என்று கூறி இருவரும் தர்க்கித்துக் கொண்டால் ஈட்டுப் பொருளின் சொந்தக்காரனைத்தான் சத்தியம் செய்யச் சொல்லி உண்மையாக்க வேண்டும்.

அடகுப் பொருளை வைத்திருப்பவன் அப்பொருளுக்குரியவனின் அனுமதி கொண்டுதான் வாங்கினேன் என்கிறான். ஈடு வைத்தவன் அதனை மறுத்து, நீ அதனைப் பிடுங்கிக் கொண்டு போனாய் என்கிறான். அல்லது உனக்கு இரவல் தந்தேன், அல்லது கூலிக்குத் தந்தேன் என்கிறான். இப்பொழுதும் ஈடு வைத்தவனுடைய சொல்தான் உண்மையாக்கப்படும்.

## நிறைவேற்றமுடியாதகடனாளியாகிப்போதல்(இன்ஸால்வெண்ட் அல்லதுபேங்க்ரப்ட்-அல்லதுதிவாலாவாகுதல்)பற்றியபாடம்

அல்லாஹ்விற்குரிய கடன்களில் விரைவாக நிறைவேற்ற வேண்டிய கடனோ, அல்லது மனிதர்களுக்குரிய கடன்களில் தவணையல்லாத கடனோ ஒருவனின் மீது இருந்து, அவனிடம் இருக்கும் பொருளைவிடக் கடன் அதிகமாக இருந்தால் அவனிடம் இருக்கும் அப்பொருளைத் தன்பேரில் தடை செய்ய வேணுமாய்த் தானே கேட்க வேண்டும். அல்லது அவனுக்குக் கடன் கொடுத்தவர்கள் அப்படிக் கேட்க வேண்டும். அவ்விதமாக யார் கேட்டாலும் அந்தத் தடை ஏற்படும். அந்தத் தடையினால் அவனுடைய அப்பொருளில் கடன்காரர்களின் பாத்தியதை தொடர்புடையதாகி விட்டது. அதற்குப் பின் அவனுடைய பொருளில் தன் விருப்பப்படி கடன் கொடுத்தவர்களுக்கு இடையூறு வருத்தும் முறையில் லேவாதேவி செய்வதோ வக்ஃபு, அன்பளிப்பு ஆகியவற்றை நிறைவேற்றுவதோ கூடாது. அவனுக்குக் கடன் கொடுத்தவனுக்காய்னும் நீதிபதியின் உத்தரவின்றி விற்கக்கூடாது. நீதிபதியானவர் அவனையும் கடன் கொடுத்தவர்களையும் ஒன்றாக வைத்து அவனுடைய எல்லாச் சொத்துக்களையும் (அவனுக்குத் தேவையான அவன் குடியிருக்கும் வீடு உட்பட எல்லா சொத்துகளையும்) சுணக்கமின்றி விற்று கடன்காரர்களுக்கு அவரவர்களுக்குரிய விகிதாச்சாரப்படி பங்கிட்டுக் கொடுப்பார். ஒருவருடைய பொருளை வைத்துக் கொண்டு வம்பாக கொடுக்க மறுக்கும் ஒருவனுக்குச் செய்வது போலவே இதிலும் செய்யப்படும்.

கடன் வாங்கிய ஒருவனுக்குப் பொருளிருக்கிறது என்று தெரிந்தால் அதனைத் தடை செய்து வைக்க வேண்டும், அது எவ்வளவாக இருந்தாலும் சரி.

தந்தை மகனுக்குக் கடன் கொடுக்க வேண்டியதிருந்தால் தடை செய்யக் கூடாது. தந்தையும், தந்தையின் தந்தையும், தாயும் தாயின் தந்தையும் தாயின் தாயும் இவ்வாறுதான்.

ஆனால், ஒரு கடனாளி எவ்விதப் பொருளாதார வசதியும் இல்லாதவன் என்று உறுதியானால் அவனுக்கு வசதி ஏற்படும் வரை அவனைத் தடை செய்யக் கூடாது. பொருள் வசதி இல்லாதவன் என்று உறுதியாகாத வரை கடன் கொடுத்தவன் அவனை சிறையிலடைக்க முயற்சிக்கலாம். கடனாளி தானே சிறையில் அடைக்கப்படுவதைத் தேர்ந்தெடுத்துக் கொண்டால் அவனுக்கு அனுமதி கொடுக்கப்படும். சிறையின் வாடகையும் அவனுக்குப் பாதுகாப்பு அளிக்கக் கூடியவனுடைய கூலியும் கடன் வாங்கியவன் பொறுப்பில் உள்ளதாகும். அவனிடத்தில் வசதி இல்லாவிடில் அச்செலவுகளை பைத்துல் மாலும் அது இல்லையெனில் வசதி உள்ள முஸ்லிம்களும் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

சிறையிலடைக்கப்பட்டவன் வேறொருவருடன் பேசுவதையும், ஜும்ஆ வுக்குப் போவதையும், ஏதேனும் தொழில் செய்வதையும் நீதிபதி தடை செய்யலாம். அவ்வாறு தடை செய்வதில் ஏதேனும் ஒரு பலனைக் கண்டால் செய்யலாம். கடனாளிக்கு உணவும் தண்ணீரும் கொடுக்காமல் தடுப்பது கூடாது.

பொருளேதும் இல்லாத, சிறையிலடைக்கப்பட்ட ஒரு கடனாளியின் சொத்தில் அல்லது இறந்துவிட்ட ஒருவனுடைய சொத்தில் தன்னுடைய சொத்திருக்கிறது என்று கடன்காரனுக்குத் தெரியவந்தால் அச்சொத்தின் பக்கம் அவன் விரைவாகச் செல்லலாம். அதனால் வக்ஃப், ஈடு போன்ற மார்க்கத்தில் விதியான 'ஹக்கு' கொழுகாதிருக்கும் நிலைமையில் கடனாளி கடன்காரனுக்குக் கொடுக்க வேண்டியதற்கு ஒரு தவணையும் குறிப்பிடாமலிருக்கும் பொழுது விற்கப்பட்ட முட்டை குஞ்சு பொறித்திட்டாலும், அல்லது வித்து முளைத்து விட்டாலும் (இதுவெல்லாம் அவனுடைய முதலில் நின்றும் வெளியானதாக இருப்பதால்) கடன்காரன் தன் முதல் அளவில் திரும்பலாம். (அதைக் கைப்பற்றுவதற்குரிய நடவடிக்கை எடுக்கலாம்.)

விற்றவன் அதே இடத்தில் தன்னுடைய சரக்கை மீட்டிக் கொள்ளலாம். நான் விற்ற பொருளில் மீண்டுவிட்டேன், விற்பனையை உடைத்து விட்டேன் என்று சொல்வதினால் மீட்சி உண்டாகிவிடும். அவ்வாறின்றி அதனை மற்றொருவனுக்கு விற்பனை செய்வது கொண்டோ, விற்கப்பட்ட அடிமையை உரிமை விடுவது கொண்டோ மீட்சி உண்டாகாது.

பைத்தியத்தினால் தடை செய்யப்படும். மேலும் மயக்கம் தெளியும் வரையிலும், சிறு குழந்தை பருவமடையும் வரையிலும் தடுத்து வைக்கப்படும். இந்த விஷயங்களில் பிறை கணக்கின்படி சந்தேகமின்றி பதினைந்து ஆண்டுகள் எய்திய, நடப்புகளை விளங்கி அறியக் கூடிய இரண்டு நீதமானவர்கள் சாட்சி சொல்வதை ஏற்றுக் கொள்ளப்படும். அல்லது விந்து வெளியாவது கொண்டோ ஹைளு வெளியாவது கொண்டோ சாட்சி சொல்வதற்குரிய பருவம் அடைந்து விட்டதாக ஏற்படும். ஹைளும் விந்தும் உண்டாவதற்கு சாத்தியமான காலம் பிறைக் கணக்கில் ஒன்பது ஆண்டுகளாகும்.

ஹைளு ஏற்பட்டு விட்டதென்றும் விந்து வந்து விட்டது என்றும் கூறுபவரின் சொல் சத்தியமின்றியே உண்மையாக்கப்படும். ஏனெனில் அது அவர்களுக்கே தெரியும்.

சொரசொரப்பான அரை (மர்மஸ்தான) முடிமுளைப்பதும், காஃபிரான ஆண்களும் பெண்களும் வயதை அடைவதும், அல்லது கனவு காண்பதும் பருவமெய்தியதிற்குரிய அடையாளங்களாகும். அரைமுடியுடன் அக்குளில் சொரசொரப்பான முடி முளைப்பதையும் சிலர் சேர்த்துள்ளார்கள்.

பருவமடையாத சிறுவர்களிடம் பொருளை ஒப்படைப்பதாக இருந்தால், அவர்கள் சிறு வயதில் தீனிலும் துன்யாவிலும் ஒழுக்கமாக இருந்து, பருவமடைந்த பின் பெரும்பாவத்தைச் செய்யாமலும், சிறுபாவங்களை நிரந்தரமாகச் செய்யாமலும், வியாபாரத்தில் பெரும் நஷ்டத்தை ஏற்படுத்தாமலும், பொருளைப் பழுதாக்காமலும், வீண் செலவு செய்யாமலும் இருப்பார்கள் என்றிருந்தால் ஒப்படைக்கலாம். நன்மையான காரியங்களில் எவ்வளவு செலவு செய்தாலும் அது வீணானதல்ல. பைத்தியக்காரன் பைத்தியம் தெளிந்து, சிறுபிள்ளை யுக்த வயதையடையா விட்டாலும் அவனிடம் பொருளை ஒப்படைக்கலாம்.

பருவமடைவதினால் இஸ்லாம், தலாக், குல்உ சம்பந்தமான சட்டங்கள் அனைத்தும் அவன் மூலம் கூடும். சிறுகுழந்தைக்குப் பொறுப்பாளி (வலீகாரர்) அவனுடைய தந்தையாகும். பிறகு தந்தையுடைய தந்தையாகும். பிறகு அவனால் வஸிய்யத்துச் செய்யப்பட்டவனாவான். பிறகு அக்குழந்தை இருக்கும் ஊரின் (காளீ) நீதிபதி, அவன் நீதிவானாக இருந்தால். அக்குழந்தையின் சொத்து வேறு ஊரில் இருந்தால், அந்த ஊரின் நீதிபதிதான் பொறுப்பாளியாவார். அந்த சொத்துக்குப் பொறுப்பானவர் அதனைப் பேணுவதும் அது சேதமாவதை பயந்தால் கூலிக்கு ஆள் வைத்துப் பாதுகாப்பதும் அவசியமாகும்.

மேற்கூறப்பட்ட பொறுப்பாளிகள் (வலீகாரர்கள்) இல்லா விட்டால் அவ்வூரிலுள்ள நல்லடியார்கள் பொறுப்பேற்பார்கள். சிறுகுழந்தைகளின் வியாபார சரக்குகளை இணக்கத்துக்காக தவணைக்கு விற்று, ஏதேனும் ஓர் ஈட்டுப் பொருளை வாங்கிக் கொள்ளலாம்.

தன் பொறுப்பிலுள்ள குழந்தைகளின் பொருளைப் பாதுகாப்பதும், அதில் அவர்களின் செலவுக்குரிய வருமானத்தை உண்டாக்குவதும் வலீகாரரின் மீது அவசியமாகும். அப்பொருளைத் தரைப்பிரயாணத்தில் அச்சமற்ற பாதையில் எடுத்துச் செல்வது கூடும். கடல் பிரயாணத்தில் எடுத்துச் செல்வது ஹராமாகும். அப்பொருளில் அவர்களுடைய செலவுக்குரிய வருமானமுள்ள தோட்டத்தை வாங்குவதும், வியாபாரம் செய்வதும் சிறப்பானதாகும்.

ஒரு குழந்தைக்குரிய சில பொருட்கள் வேறொருவரிடமிருந்து வரவேண்டியதிருக்கிறது. அவற்றில் கொஞ்சத்தைத் தள்ளுபடி செய்து விட்டால் மீதி வந்து சேரும். இல்லாவிட்டால் முழுவதும் வராது என்றிருந்தால், கொஞ்சத்தைத் தள்ளுபடி செய்வது ஆகுமென்று ஒருவரால் ஃபத்வா தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது.

ஒரு குழந்தைக்கு வரவேண்டிய சொத்து மறைமுகமாக இருந்தால் வலீகாரர் தன் பொருளிலிருந்து அக்குழந்தைக்குரிய செலவுகளைச் செய்து, பிறகு அச் சொத்து வந்தபின் எடுத்துக் கொள்ளலாம் என இமாம் ஜலால் புல்கைனீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். தந்தையும் பாட்டனும் அவ்வாறு செய்யலாம். ஏனெனில் மக்களுடைய பொருளில் கொடுக்கல் வாங்கல் செய்வதற்கு அவ்விருவருக்குத்தான் தகுதி இருக்கிறது என்றும் கூறி இருக்கிறார்கள்.

சிறு குழந்தையின் பொருளை தகப்பன், பாட்டன் வைத்துச் செலவு செய்து வந்ததில் பின்னால் தகராறு ஏற்பட்டால் தகப்பனோ, பாட்டனோ சத்தியம் செய்வது கொண்டு உண்மையாக்கப்படும். நீதியான காளியாக இருந்தால் சத்தியமில்லாமல் உண்மையாக்கப்படும்.

ஒரு குழந்தையுடைய பொருளிலிருந்து அதற்கு குர்ஆன் கற்றுக் கொடுப்பதற்கும் தீனுடைய ஒழுக்கம் கற்பிப்பதற்கும் செலவழிக்கப்பட்டது என்று சொன்னால் அதனை ஒப்புக் கொள்ள வேண்டும். ஏழையான வலீகாரர் அக்குழந்தையைப் பராமரிப்பதால் தன்னுடைய வருமானம் கெட்டு விடுகிறதென்று நினைத்தால் அவருடைய செலவின் அளவுக்கு அக்குழந்தையின் சொத்திலிருந்து

எடுத்துக் கொள்ளலாம். பணக்காரராக இருந்தால் கூடாது. தந்தையைப் பெற்ற பாட்டனாக இருந்தால் அவர் பணக்காரராக இருந்தாலும் போதுமான அளவு எடுக்கலாம்.

மகளுடைய மகனிடம் வேலை வாங்கினால் அதற்காக ஏதேனும் கூலி கொடுப்பது வாஜிபாகும். அவன் அதனைக் கேட்காவிட்டாலும் சரி. அப்பையன் பருவமடைந்து அறிவுள்ளவனாக இருந்தால் கூலி வாஜிபில்லை.

## சாட்டுதல்பற்றியவிவரம்(ஹவாலா)

சாட்டுதல் (ஹவாலா حَوَالَةٌ ) என்பது ஒருவனிடமிருந்து தனக்கு வர வேண்டிய பொருளை தான் கொடுக்க வேண்டிய மற்றொருவனுக்குக் கொடுக்கும்படி சாட்டி விடுதலாகும். அந்த சாட்டுதலால் சாட்டுகிறவன், சாட்டுதல் பெற்றவனுடைய கடனைவிட்டும் நீங்கிவிடுவான். அவ்வாறே சாட்டப்பட்டவன் சாட்டினவனுடைய கடனை விட்டும் நீங்கிவிடுவான். சாட்டுதலைப் பொருந்திக்கொண்டவனுடைய உரிமை சாட்டப் பட்டவனின் மீது திரும்பி வரும். இது எல்லா இமாம்களுடைய ஏகோபித்த முடிவாகும்.

இவ்வாறு சாட்டப்பட்ட பின் கொடுக்கல் வாங்கல் முடியவில்லையானால் அதாவது: சாட்டப்பட்டவன் வறுமையினாலோ அல்வது மறுப்பதினாலோ கொடுக்காவிட்டால் சாட்டுதலைப் பொருந்திக்கொண்டவன் சாட்டியவனின் பால் திரும்பக்கூடாது. அவன் அதனை அறியாமலிருந்தாலும் அவனுக்கு சம்மதம் கொடுக்கக்கூடாது. அவன் வசதியில்லாதவன் என்பது தெரிந்தாலும் சரி. முன்னால் அவன் செல்வமுள்ளவன் என்பது ஷர்த்திடப்பட்டிருந்தாலும் சாட்டியவனின் பால் திரும்பக் கூடாது.

இவ்வாறு சாட்டுதலுக்கு ஏழு ஃபர்ளுகள் உண்டு. 1) சாட்டுகிறவன். 2, சாட்டுதலை ஏற்றுக்கொள்கிறவன் 3) சாட்டப்படுகிறவன். 4) சாட்டுகிறவனுடைய கடன் சாட்டப்பட்டவனின் மீது தரிபட்டிருத்தல். 5) சாட்டுதலை ஏற்றுக்கொள் கிறவனுடைய கடன் சாட்டுகிறவன் மீது தரி படுதல். 6) ஈஜாப் 7) கபூல்.

مُحِيْلٌ சாட்டிவிடுகிறவன்: مُحَالٌ அல்லது مُحْتَالٌ சாட்டப்படுகிறவன்: مُحَالٌ عَلَيْهِ அல்லது مُحْتَالٌ عَلَيْهِ சாட்டிவிடப்படுகிறவன்: مُحَالٌ بِهِ சாட்டிவிடப் பட்ட பொருள் இவை அரபிச் சொற்களாகும்.

கடன் வாங்கியவனும், கடன் கொடுத்தவனும் சாட்டுதல் செய்வித்த சங்கதியில் விரோதித்துக் கொண்டால், (அதாவது; பொருளைக் கைப்பற்றுவதற்காக உன்னை வக்கீலாக ஆக்கினேன் என்று கடன் வாங்கியவன் கூறுகிறான். கடன் கொடுத்தவனோ, நீ என்னைச் சாட்டிவிட்டாய் என்று கூறுகிறான். அல்லது, உன்னை நான் சாட்டிவிட்டேன் என்று கடன் வாங்கியவனும், என்னை நீ வக்கீலாக ஆக்கினாய் என்று கடன் கொடுத்தவனும் கூறுகின்றனர்) அப்பொழுது சாட்டுதல் இல்லையென்று கூறுகிறவன் சத்தியம் செய்வது கொண்டு உண்மையாக்கப்படுவான். எனவே, முதல் மஸ்அலாவில் கடன் வாங்கியவனும் இரண்டாவது மஸ்அலாவில் கடன்

கொடுத்தவனும் உண்மையாக்கப்படுவார்கள். ஏனெனில், கடனாளியாவதற்குப் பிணையேற்றுக்கொண்டவன் மீது கடன் தரிபடுவதுதான் அசலாகும்.

ஏவல் விலக்கல் எவன் மீது சார்ந்திருக்கிறதோ அத்தகைய பருவமடைந்த ஒருவன் மற்றொருவனின் கடனுக்காகப் பிணை நிற்கலாம். இதில் கடனாளி, முதலாளி ஆகியோரின் பொருத்தம் ஷர்த்தல்ல. ஓர் அடிமை தன் எஜமானுடைய அனுமதி கொண்டு பிணை நிற்கலாம். இவ்வாறே பிணையாக்கப்பட்டவனுடைய கழுத்தின் மீது பொறுத்துப்போயிருக்கும் கடனுக்காகவும், (உதாரணமாக: மனைவிக்காக கணவனின் மீது விதியான இன்றைய செலவும் நேற்றைய செலவும் போல்) அல்லது இனிமேல் ஏற்படவிருக்கின்ற கடனுக்காகவும், (உதாரணமாக: விற்பனை முடிந்து கைப்பற்றப் படாத சரக்குக்காக கொடுக்க வேண்டிய பணத்தைப்போல்) பிணை நிற்கலாம்.

மேற்கூறப்பட்ட இரண்டு வகையான கடன்களைத் தவிர இனிமேல் விதியாகும் கடனுக்கு பிணை நிற்பது கூடாது. (உதாரணமாக: மனைவிக்குரிய நாளைய செலவினைப்போல். அல்லது ஜைதுக்கு ஆயிரம் ரூபாய் கொடு; நான் உனக்கு பிணை என்று சொல்வது போல்) இந்தச் செயல்களில் இக்காலத்தில் நடைபெறுவதைக் கவனிக்கக் கூடாது. மார்க்கத்தில் சொல்லப்பட்டதை மட்டும் கவனிக்கவேண்டும். வருங்காலத்தில் நடக்கக்கூடியதைக் கொண்டு செய்யப்படும் ஒப்பந்தங்கள் மார்க்கத்தில் கூடாது.

## பிணை நிற்பதின் விளக்கம்

பொருளுக்கு அல்லது கடனுக்கு பிணையேற்பது, மற்றும் ஆளுக்கு அல்லது குறிப்பான வஸ்துவுக்குப் பிணையேற்பது என்று இரு வகைப்படும். உனக்கு இன்னான் கொடுக்கவேண்டிய பணத்திற்கு நான் பிணை, அல்லது நான் அதனைச் சுமந்து கொண்டேன் என்று கூறுவதும், அவனுடைய சரீரத்தைக்கொண்டு, அல்லது குறிப்பான ஒரு பொருளைக்கொண்டு நான் பிணை என்று கூறுவதும் ஷர்த்தாகும். பணத்தைக்கொண்டு பிணையேற்பதற்கு அரபியில் ضَمَانٌ ளமான் என்றும், ஆளைக் கொண்டு பிணையேற்பதற்கு كَفَالَةٌ கஃபாலா என்றும் கூறப்படும்

இரவலுடைமை அல்லது வம்பரியுடைமை போன்ற குறிப்பான வஸ்துவுக்காகவும், (கோர்ட்டு) காழி போன்ற நியாயஸ்தலத்துக்கு ஆஜராக வேண்டிய அவசியம் உள்ள ஒரு மனிதனுக்காகவும் பிணையேற்கலாம்.

இவ்வாறு பிணை என்று கூறாமல், நான் அந்தப் பணத்தைத் தருவேன் என்றோ நான் அந்த மனிதனைக் கொண்டு வருவேன் என்றோ கூறினால் அது பிணையாக ஆகாது. மாறாக அது வாக்காக ஆகிவிடும். ஆனால் அந்த வாக்கை நிறைவேற்றுவது வாஜிபென்று காழி தீர்ப்புச் செய்யக்கூடாது. எனினும் வாக்கை நிறைவேற்றாமல் இருப்பது நயவஞ்சகனின் அடையாளமென்றும், ஈமான் முழுமை பெறாதென்றும், மறுமையில் வேதனை உண்டென்றும் ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு பிணையேற்பதை இத்தனை நாட்களுக்கு என்று சொல்வதும், இவ்விதமிருந்தால் என்று ஒன்றைத் தொடர்பு படுத்திச் சொல்வதும் கூடாது. இன்னும் இந்தப் பிணையினால் பழைய கடன்காரன் நிறைவேற்றாமல் நீங்கிவிட்டான் என்று ஷர்த்திடுவதும் கூடாது. உரியவனுக்கு அவனுடைய உரிமை சேரும்வரை கடனாளியும் பிணையாளியும் துயரலாம். கடனாளி நீங்குவதால் பிணையாளி நீங்கிடுவான்; பிணையாளி நீங்குவதால் கடனாளி கடனை நிறைவேற்றாமல் நீங்கமாட்டான்.

ஒருவனுடைய கடனை அவனுடைய அனுமதி கொண்டு நிறைவேற்றினால் பிறகு அவனைத் துயர்ந்து பணத்தை வாங்கலாம். கொடுக்கும்போது அதனை நிபந்தனையிடாவிட்டாலும் சரி.

ஒருவனுக்கு இரண்டு பேர் பிணையாக ஆவார்களானால், ஒவ்வொரு வரிடமும் பொருள் முழுவதையும் கேட்கலாம் என்பதாக சில இமாம்களும், பாதி பாதியாகக் கேட்கலாம் என்பதாக வேறு சில இமாம்களும் கூறியுள்ளனர்.

கப்பல் தத்தளிக்கும் நேரத்தில் சரக்குகள் வைத்திருக்கும் ஒருவனிடம், நீ உன் சரக்கைக் கடலில் எறிந்துவிடு; நானும் இக்கப்பலில் உள்ளவர்களும், உனக்குப் பிணையாளிகளாக இருக்கிறோம் என்று ஒருவர் சொன்னால், அவ்வாறே அவன் எறிந்துவிட்டால் சொன்னவரை மட்டும் பொறுப்பாளியாக்காமல் எல்லோரையும் சேர்ப்பது திட்டமான பிணையாக ஆகாது. ஆனால், கப்பலிலுள்ள பாரத்தைக் குறைத்தால் கப்பலும் அதிலுள்ளவர்களும் கடைத்தேறுவார்கள் என்றிருந்தால் சொன்னவரை மட்டும் பொறுப்பாளியாக்கினால் பெரும் துன்பங்கள் ஏற்படும்.

## சமாதானம் பற்றிய விளக்கம்

"சமாதானம் மிகச் சிறந்ததாகும்."

"உங்களின் இரு சகோதரர்களுக்கிடையே சமாதானம் செய்து வையுங்கள்."

"அவர்களுக்கு சமாதானந்தான் மிகச்சிறந்ததாகும் என்று (நபியே) நீர் கூறுவீராக!"

"அவர்களுக்கு மத்தியில் சமாதானம் செய்து வையுங்கள்."

இவை சமாதானம் பற்றி அல்லாஹுதஆலா குர்ஆனில் கூறியுள்ள சில வசனங்களாகும். ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளதாவது;

"சதக்காச் செய்வது, நோன்பு வைப்பது, ஹஜ்ஜு செய்வது ஆகியவற்றைவிடவும் மேன்மையான அந்தஸ்து உடைய ஒரு விஷயத்தை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா"? என்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கேட்டபொழுது," அறிவியுங்கள் யாரசூலல்லாஹ், என்று ஸஹாபாக்கள் கூறினார்கள். "அது பிணக்குண்டானவர்களுக்கிடையில் ஒற்றுமை ஏற்படுத்துவதாகும்" என்று கூறினார்கள். மேலும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியிருக்கிறார்கள்:"ஒரு விஷயத்தில் (சமாதானம் ஆகாமல்) வழக்காடிக் கொண்டிருப்பது நன்மை பயக்காது."

# மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

சமாதானம் என்பது வழக்குத் தொடுக்கப்பட்ட பொருளோ அல்லது அதன் தொகையோ அல்லாததில்தான். இன்னும் பிரதிவாதி விண்ணப்பம் செய்யாமல் அதனை மறுப்பதினாலோ அல்லது மௌனமாக இருப்பதினாலோ சமாதானம் ஏற்படாது. வாதியின் சொல் உண்மையாக இருந்தாலும் சரி. வாதிக்கு சாட்சி இல்லையானால் பிரதிவாதி மறுத்தாலும், மௌனமாக இருந்தாலும் சமாதானம் வீணாகி விடும்.

## பொதுப்பாதையில் மரங்கள் நடுவதைப் பற்றிய விபரம்

மக்கள் நடக்கும் பொதுப்பாதையின் நடுவில் மரங்களை நடுதல் அது முஸ்லிம்களுக்குப் பலனுள்ளதாக இருந்தாலும் சரி-ஹராமாகும். இவ்வாறே வழியின் நடுவில் மடம் கட்டுவதும் ஹராமாகும். ஏனெனில், இப்பொழுது எவ்வித இடைஞ்சலும் அதில் இல்லாவிட்டாலும், பிற்காலத்தில் நடப்பவர்கள் அதிகமாகி இடையூறாக ஆகி விடலாம் என்பதாலும், நாளடைவில் வேறொருவருடைய உரிமை போல் அது ஆகிவிடக்கூடும் என்பதாலும் ஹராமாகும். இதில் பூமி விசாலமாக இருந்து அரசாங்கம் அனுமதியளித்தாலும் கூடாது. ஆனால், பொதுமக்கள் அனைவருக்கும் தேவையான கிணறு, கேணி போன்றவற்றை ஏற்படுத்துவதால் ஏராளமான நன்மைகள் உள்ளன. வக்ஃபுடைய பாடத்தில் அதுபற்றிக் கூறப்படும்.

பள்ளிவாசலுடைய நிலத்தில் மரம் நடுவது ஹலாலாகும்; இது அந்த வருமானத்தைப் பள்ளிக்கும் முஸ்லிம்களுக்கும் செலவு செய்வதாக இருக்க வேண்டும். எவரேனும் கையாடல் செய்வதற்காக அவ்வாறு நட்டால் அது ஹராமாகும்.

## வகாலத்துடைய பாடம்

ஒருவருடைய காரியத்திற்கு மற்றொருவரை வக்கீலாக (பொறுப்பாளியாக) நியமிப்பது கூடும். விற்பனை, கொள்வினை, அன்பளிப்பு, அடகுவைத்தல், நிகாஹ், குறிப்பாக்கப்பட்ட தலாக் போன்ற இணைக்கும் அல்லது பிரிக்கும் காரியங்களுக்கு தனக்கு வக்கீலாக மற்றொருவரை நியமிக்கலாம். இனிமேல் தன் உரிமைக்கு வரப்போகின்ற ஒரு பொருளை விற்பதற்கும், இனிமேல் நிகாஹ் செய்ய போகின்ற ஒரு பெண்ணை தலாக் சொல்வதற்கும் வகீலை ஏற்படுத்துவது கூடாது. அடிமையையும் பாவியையும் நிகாஹை ஏற்றுக் கொள்வதற்கு வகீலாக ஆக்கலாம். ஆனால் நிகாஹ் முடித்து வைப்பதற்கு வகீலாக்கக் கூடாது. குறிப்பில்லாத தலாக்கிற்கும் வகீல் ஏற்படுத்துவதும் கூடாது.(அதாவது) ஒருவனுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிகள் இருக்கும் பொழுது ஏதாவது ஒரு மனைவியை குறிப்பில்லாமல் தலாக் சொல்வதற்கு உன்னை வகீலாக ஏற்படுத்தினேன் என்று, தான் நியமித்த வகீலிடம் சொன்னால் அந்த வகாலத்து கூடாது)

தானே விண்ணப்பம் செய்ய வேண்டிய காரியத்திற்கும், சத்தியம் செய்ய வேண்டிய காரியத்திற்கும் வக்கீல் வைப்பது கூடாது. இவ்வாறு வணக்கங்களில் வக்கீலை ஏற்படுத்துவதும் கூடாது. எனினும், ஹஜ்ஜு, உம்ரா ஆகியவற்றை ஒருவர் செய்ய இயலாமலாகி விட்ட நேரத்திலும் உள்ஹிய்யாவை அறுப்பதிலும் வக்கீலை ஏற்படுத்திக் கொள்ளலாம்.

ஒருவரைத் தனக்கு வக்கீலாக ஆக்கும் பொழுது, உன்னை இன்ன காரியத்திற்கு நான் வக்கீலாக்கினேன். அல்லது உன்னை எனக்குப் பகரமாக ஆக்கினேன், அல்லது என் மகளுக்கு நீ திருமணம் செய்து வை; என் சரக்கை விற்றுக் கொடு; இன்ன பொருளை வாங்கு என்பது போல் நாவினால் அதனைச் சொல்வது ஷர்த்தாகும். வக்கீல், அதனை ஒப்புக் கொண்டேன் என்று சொல்வது ஷர்த்தல்ல. எனினும், அந்த வக்காலத்தை அவன் மறுக்காமல் இருக்க வேண்டும்.

ஒருவன் மற்றொருவனை வக்கீலாக நியமித்தது தெரியாமலிருக்கும் போது முதலாளியின் வேலையை அவன் செய்தால் அது கூடாது. ஆனால் அவன் செய்த வேலையின் காலம் வக்கீலாக்கியதின் காலத்திற்குப் பின் இருந்தால் கூடும். உதாரணமாக, தந்தை இறந்து விட்டிருக்கும் நிலையில், உயிருடனிருக்கிறார் என்ற எண்ணத்தில் ஒருவன் அவருடைய பொருளை விற்பது கூடும்.

ஒருவன் முதலாளியுடைய அனுமதி பெற்று மற்றொருவனை வக்கீலாக ஆக்கினால் அந்த வக்கீல் அந்த முதலாளியுடைய வக்கீலே தவிர அவனுடைய வக்கீலல்ல. இந்த நேரத்தில் முந்திய வக்கீல் நீங்கி விடுவதால் இரண்டாவது வக்கீல் நீங்க மாட்டான். அவனால் இவனை நீக்கவும்முடியாது. நீ ஒரு வகீலை ஏற்படுத்திக் கொள் என்று ஒரு முதலாளி ஒருவனிடத்தில் சொல்லி அவனும் அவ்விதமே ஏற்படுத்திய பிறகு முதல் வகீல் நீங்குவதால் இரண்டாவது வகீலும் நீங்கிவிடுவான்.

வகாலத்தாக நியமிக்கப்பட்ட காரியம் என்னவென்று வக்கீலுக்குத் தெரிந்திருப்பது ஷர்த்தாகும். ஒருவன் என்னுடைய சரக்குகள் முழுவதையும், அல்லது என்னுடைய அடிமைகள் முழுவதையும் விற்பதற்கு அல்லது உரிமை விடுவதற்கு உன்னை வக்கீலாக்கினேன் என்று கூறினால், முழுவதையும் கூறி அறியப்பட்டதாக ஆகிவிட்டதால் அது கூடும். இதையாவது அல்லது அதையாவது என்று குறிப்பில்லாமல் சொன்னால் கூடாது.

குறிப்பில்லாத காரியத்தில், என்னுடைய பெரிய வேலைக்கு அல்லது சிறிய வேலைக்கு, அல்லது என்னுடைய காரியங்கள் அனைத்திற்கும் உன்னை வக்கீலாக ஆக்கினேன் என்றாலும், என் காரியங்களில் நீ நாடியபடி செய்து கொள் என்றாலும் கூடாது.

உடனிருக்கும் பங்காளி விற்பது போல் வக்கீலும் பெறுமதியான விலைக்கு விற்க வேண்டும். தவணைக்கு அல்லது கெட்ட நஷ்டத்திற்கு விற்கக் கூடாது. பத்து ரூபாய்க்கு விற்க வேண்டியதை ஒன்பதுக்கு விற்றால் நஷ்டமாகும்; எனினும் அது பொறுக்கப்படும், எட்டுக்கு விற்றால் கெட்ட நஷ்டமாகும். அது பொறுக்கப்பட மாட்டாது. தவணைக்கு விற்பதை முதலாளி குறிப்பிட்டாலும் விலையைக் குறிப்பாக்கினாலும்-அது நஷ்டமாக இருந்தாலும் அதன் படி நடக்கலாம்.

வக்கீலானவன் முதலாளியின் சரக்கைத் தனக்கோ தன் பாராமரிப்பிலுள்ள சிறு குழந்தைகட்கோ விற்பனை செய்து கொள்ளக் கூடாது. முதலாளியால் விலை குறிப்பிடப்பட்டிருந்தாலும் சரி. எனினும், இப்னுர் ரிஃப்ஆ (ரஹ்) அவர்கள் இதனைக் கூடுமென்று கூறியுள்ளார்கள். ஒரு வியாபாரி கிராக்கியான நேரத்தில் அந்தச் சரக்கிற்கு

பெறுமதிக்கு அதிகமாக ரொக்கமாகவே கொடுப்பான் என்று தெரியும்போது பெறுமதிக்கு விற்பது கூடாது.

குறை இருக்கும் சரக்கை வாங்குவது வக்கீலுக்குக் கூடாது. தனக்குரிய வேலையில் முதலாளியின் அனுமதியின்றி மற்றொருவனை தனக்குப்பகரமாக வக்கீலாக ஆக்குவது கூடாது. கடன் பாக்கியை வசூல் செய்ய ஒருவனை வக்கீலாக்கியதில், அவன் அதனை வசூல் செய்து தன் மக்களில் ஒருவரிடம் அதனைக் கொடுத்தனுப்புகிறான். அதில் சேதம் ஏற்பட்டால் அந்த வக்கீல் பொறுப்பாளியாக மாட்டான்.

தனக்கு முடியாத வேலையாக இருந்தாலோ, அல்லது அதனை நல்ல முறையில் தன்னால் செய்து முடிக்க முடியாது என்று இருந்தாலோ, அல்லது தனக்குத் தகுதியில்லாத வேலையாக இருந்தாலோ தன் முதலாளிக்காக மற்றொருவரை வக்கீலாக்கிக் கொள்ளலாம். ஆனால், வக்கீலாகிய தனக்காக வக்கீலாக்கிக் கொள்வது-சரியான சொற்படி-கூடாது.

வக்கீலுக்கு திடீரென ஏதேனும் இயலாமையேற்பட்டுவிடின் அல்லது பிரயாணம் செல்ல வேண்டியது ஏற்படின் முதலாளியுடைய அனுமதியின்றி வேறொருவரைத் தனக்கு வக்கீலாக ஆக்குவது கூடாது. ஆனால் முதலாளியின் ஒப்புதலுடன் ஏற்படுத்தலாம்.

ஒரு வக்கீல் தனக்கு மற்றொருவரை வக்கீலாக நியமிக்கும் பொழுது அந்த வக்கீல் நம்பிக்கைக்குரியவனாகவும் முதலாளியால் ஏற்றுக் கொள்ளப்படுபவனாகவும் இருப்பது வாஜிபாகும். இன்னும் அவனல்லாத வேறொருவனை முதலாளி குறிப்பிடாமலிருக்கிறார். ஆனால், அவனுடைய நிலையை அறிந்திருக்கிறார். இப்படிப்பட்ட நிலையில் நீ விரும்பியவனை வக்கீலாக ஆக்கிக் கொள் என்று முதலாளி தன் வக்கீலிடத்தில் கூறுகிறார். அப்பொழுது தன் விருப்பப்படி வேறொரு வக்கீலை அவன் நியமித்துக் கொள்ளலாம்.

அந்த வக்கீல் நம்பிக்கைக்குரியவனாக இருந்து, அவன் கைவசமிருக்கும் பொருள் அவனுடைய அலட்சியமின்றி சேதமானால் அவன் பொறுப்பாளியாக மாட்டான். அவனுடைய சொல் சத்தியங் கொண்டு உண்மையாக்கப்படும்.

வக்கீலானவன் தானாகவே நீங்கிக் கொள்வது கொண்டும் அல்லது முதலாளி அவனை நீக்குவது கொண்டும், இருவரிலொருவர் இறந்து விடுவது கொண்டும், அல்லது பயித்தியம் பிடிப்பது கொண்டும் வக்காலத்தை விட்டும் நீங்கிவிடுவான். எந்தக் காரியத்திற்காக வக்கீலாக நியமிக்கப்பட்டானோ அந்தக் காரியம் முதலாளியுடைய உரிமையை விட்டும் நீங்குவது கொண்டும் வக்காலத்தை விட்டும் நீங்கிடுவான். அதாவது: அந்தப் பொருளை அவன் விற்று விடுவது, அல்லது வக்ஃபு செய்வது, அல்லது ஈடுவைப்பது போல். மேற்கூறிய நிகழ்ச்சிகளை வக்கீல் அறியாதவனாக இருந்தாலும் நீங்கிடுவான். ஆனால், வேலை முடிந்த பிறகு, முன்னமே உன்னை நீக்கி விட்டேன் என்று முதலாளி சொன்னால் அதனைச் சாட்சியைக் கொண்டுதான் ஒப்புக் கொள்ளப்படும்.

வக்கீலை நீக்கி விட்டேன் என்றோ, வகாலத்தைச் செல்லாத்ததாக ஆக்கி விட்டேன் என்றோ, அல்லது உடைத்து விட்டேன் என்றோ சொல்வதால் நீக்குதல் உண்டாகும். நீக்கப்பட்டவன் அதனை அறியாதவனாக இருந்தாலும் சரி.

வக்கீல் தன் வசம் ஒப்படைக்கப்பட்ட பொருளில் வரம்பு மீறினால் பொறுப்பாளியாவான். உதாரணமாக: விற்பனைக்குரிய குதிரையில் தான் ஏறுவது, ஆடைகளை அனுமதியின்றி தானே அணிவது ஆகியவற்றைப் போல்.

ஒரு பொருளை தவணைக்குத்தான் விற்கச் சொன்னீர் என்று வக்கீல் கூறுகிறான்; இல்லை, ரொக்கத்திற்கு விற்கச் சொன்னேன் என்று முதலாளி சொல்கிறான். இவ்வாறே இருபது ரூபாய்க்கு வாங்கும்படி சொன்னீர் என்று வக்கீல் கூறுகிறான்; இல்லை பத்து ரூபாய்க்கு வாங்கும்படி தான் கூறினேன் என்று முதலாளி கூறுகிறான். இவ்வாறு இருவருக்கிடையில் கருத்து வேற்றுமை ஏற்பட்டால் முதலாளியைச் சத்தியம் செய்யச் சொல்லி உண்மையாக்கப்படும்.

குறிப்பான ஒரு மனிதனுக்கு விற்கும்படி சொன்னால் அவனல்லாதவனுக்கு விற்பது கூடாது. இன்ன நாணயத்திற்கு விற்றுவிடு என்று சொன்னால் அது அல்லாத வேறு நாணயத்திற்கு விற்பது பெரும்பாலான இமாம்கள் சொல்படி கூடாது. இன்ன இடத்தில் வில், இன்ன நாளில் வில் என்று கூறினால் அதே இடத்தில் அதே நாளில் தான் விற்க வேண்டும். அதற்கு முன்னாலும் கூடாது; பின்னாலும் கூடாது. அது தலாக்காக இருந்தாலும் சரி.

முதலாளி ஒருவனைப் பார்த்து, "நீ எனக்குக் கொடுக்க வேண்டிய பணத்துக்கு ஓர் அடிமையை வாங்கிவா" என்று சொன்னால், அவ்வாறே அவன் வாங்கி வந்தால், அந்த அடிமை முதலாளியின் அடிமைதான். அவனுடைய கடனும் நிறைவேறி விட்டது. அந்த அடிமை வந்து சேரும்முன் ஏதேனும் சேதமாகி விட்டாலும் அது முதலாளியைச் சேர்ந்ததே.

இந்த சரக்கை விற்று ஓர் அடிமையை விலைக்கு வாங்கிவா என்று தன் காரியஸ்தனாகிய வக்கீலிடம் ஒருவன் கூறினான். வாங்கி வரும் பொழுது வழியில் நம்பிக்கையான தலைமைக்காரனிடமோ, அல்லது நம்பிக்கையான வேறு எவரிடமோ அந்த அடிமையை அமானிதமாக வைக்கலாம். அதனால் அந்த காரியஸ்தனாகிய வக்கீல் மோசக்காரனாக மாட்டான்.

## முதலுடையவனும் உழைப்பவனும் கூட்டாகச் சேர்ந்து வியாபாரம் செய்யும் விபரம்

கூட்டு வியாபாரம் செய்வதற்காக ஒருவன் தன்னுடைய முதலை மற்றொருவனிடம் கொடுத்து, வியாபாரம் செய்து கிடைக்கும் இலாபத்தில் ஆளுக்கு இவ்வளவு என்று ஒப்பந்தம் செய்து கொள்வது கூடும். இலாபத்தில் ஆளுக்குப் பாதி என்றோ, அல்லது மூன்றிலொரு பங்கு, மூன்றிலிரண்டு பங்கு என்றோ, அல்லது வேறு எவ்வளவு என்றோ நிர்ணயம் செய்து கொள்வது அவசியம்.

செம்பு, பித்தளை போன்றதிலும், அவை கலந்த வெள்ளி தங்கம் போன்ற நாணயத்திலும் இந்த வியாபாரம் கூடாது. இக்காலத்தில் கலப்பில்லாத நாணயம் மிகக் குறைவு. ஒரு சொற்படி கலப்பு இல்லாமற் போய்விட்டால் கூடுமென்றும், இன்னொரு சொற்படி அந்த நாணயம் மக்களிடையே தடையின்றி செல்லுபடியாவதாக இருந்தால் கூடுமென்றும், மற்றொரு சொற்படி அளவு, நிறையுள்ளவை அனைத்திலும் இவ்வியாபரம் கூடுமென்றும் கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு வியாபாரத்திற்குக் கொடுக்கும் நாணயம் கண்ணால் காணப்படுவதாக இருப்பது அவசியம் என்று கூறப்படாததால், ஒரு சரக்கை ஒரு நாணயத்தைக் கொண்டு விலைபேசி, அந்த நாணயத்தை அவ்வியாபாரத்திற்கு முதலாகக் கொடுத்தால் கூடுமா கூடாதா என்பது இமாம்களால் தெளிவாகக் கூறப்படாததால் இந்தக் காலத்தில் நடந்து வருவதை கூடுமென்று சொல்லலாம்.

இதில் வகாலத்தைப் போல் வாசகத்தைக் கூறுதல் ஷர்த்தாகும். வியாபாரத்திற்குப் பொருள் தந்தேன் என்று முதலாளி ஈஜாப் சொல்வதும், அதனை நான் ஒப்புக் கொண்டேன் என்று வியாபாரத்தை நடத்துபவன் கபூல் செய்வதும் அவசியம். வகாலத்தில் காரியஸ்தன் கபூல் செய்வது ஷர்த்தில்லை என்றாலும் அதனை அவன் மறுக்காமல் இருக்க வேண்டும் என்ற விஷயம் முந்திய பாடததில் வந்துள்ளது.

பொருளில் சேதம் ஏற்படுவதும் நஷ்டம் வருவதும் முதலாளியைச் சேர்ந்ததாகும். நஷ்டத்தில் பாதியை அல்லது ஒரு பகுதியை வியாபாரத்தை நடத்துபவன் மீது வைப்பது ஹராமாகும்.

இலாபத்தில் பங்கு நிர்ணயிக்கப்பட்டு விட்டதால் வியாபாரததை நடத்துபவனின் படிச்செலவுகள் அனைத்தும் அவனையே சேரும். சரக்குடன் உள்ள செலவுகள் சரக்கின் புறத்திலேயே போடப்படும்.

வியாபாரத்தை நடத்தும் காரியஸ்தன் சரக்கில் இலாபமில்லை என்று சொன்னாலும், அல்லது இலாபம் இவ்வளவுதான் என்று கூறினாலும், அல்லது நஷ்டமாகிவிட்டது என்றாலும், அல்லது முதலை முதலாளியிடம் கொடுத்து விட்டதாகச் சொன்னாலும் சத்தியம் செய்யச்சொல்லி அவன் சொல் உண்மையாக்கப்படும். ஆனால், இலாபம் கிடைத்ததெனச் சொல்லிவிட்டுப் பிறகு நஷ்டம் ஏற்பட்டுவிட்டதென்று சொன்னாலும், கணக்கில் தவறாகிவிட்டது என்று சொன்னாலும் ஏற்றுக்கொள்ளக்கூடாது. எனினும், பின்னால் நஷ்டமாகி விட்டதென்று சொல்வதில் சவுதம் (சரக்குகளின் விலையில் வீழ்ச்சி) ஏற்படுவதற்கு வழி இருந்ததெனத்தெரிந்தால் அது ஒப்புக்கொள்ளப்படும் எனக் கூறப்பட்டுள்ளது.

இருவரும் முன் பேசிக்கொண்ட இலாபத்தின் அளவில் கருத்து வேற்றுமை கொண்டால், இருவரும் அவரவருடைய சொல்லுக்குச் சத்தியம் செய்யவேண்டும். இருவருமே சத்தியம் செய்தால் அந்த ஒப்பந்தம் உடைந்துவிடும். அந்த காரியஸ்தனுக்கு அவன் போன்றவனின் கூலி கொடுக்கப்படவேண்டும்.

அந்த வியாபாரி முதலாளியின் அனுமதியின்றி தவணைக்கோ, கெட்ட நஷ்டத்திற்கோ விற்கக்கூடாது. சாட்டுமாற்று செய்யலாம். அனுமதியின்றி சரக்கைக் கொண்டு பிரயாணம் செய்யக்கூடாது.

## கூட்டுவியாபாரம்

கூட்டு வியாபாரத்தில் இரண்டு வகைகளுண்டு. முதலாவது, அனந்தரங் கொள்வது கொண்டு, அல்லது ஒவ்வொருவரும் மற்றவருக்கு அதிகாரம் கொடுத்து ஒரு பொருளை விலைக்கு வாங்குவதினால் அப்பொருளின் மீது ஒவ்வொருவரும் கூட்டாகுதல்.

இரண்டாவது, நான்கு விதங்களிருக்கின்றன. அவற்றில் ஒரு விதம் மட்டும் கூடும்; மற்றவை மூன்றும் தவறானவையாகும். முதலாவது, இருவரும் தத்தம் முதலைப்போட்டு வியாபாரம் செய்து, இலாபம் நஷ்டம் இரண்டிலும் சரிசமமாகப் பகிர்ந்து, ஒருவர் தன் விருப்பப்படி லேவாதேவி செய்வதை மற்றவர் பொருந்திக்கொள்வதாகும்.

தவறான மூன்று விதங்களானவை: *1)* ஒரு கைத்தொழிலை இருவரும் சமமாகச் செய்து, அல்லது கூடுதல் குறைவாகச் செய்து, பிறகு இலாப நஷ்டத்தை இருவரும் சமமாகப் பங்கிட்டுக்கொள்வது *2)* இருவரும் ரொக்கமாகவோ, தவணையாகவோ தத்தம் பொறுப்பில் சரக்குகள் வாங்கி வியாபாரம் செய்வதில் இலாபம் கிடைத்தால் பங்கிட்டுக்கொள்வது. *3)* இருவரும் தங்களின் முதலைக்கொண்டு, அல்லது உடல் உழைப்பைக்கொண்டு செய்யும் தொழிலில் இலாபம் வந்தால் பங்கிட்டுக் கொள்வதுடன் ஒருவர் வாங்கிய கடனுக்கு மற்றவர் பொறுப்பேற்றுக் கொள்வது; ஆனால், இருவருடைய முதலையும் ஒன்றாகக் கலந்து வியாபாரம் செய்வதில்லை. எனவே, இம்மூன்று வகை வியாபாரங்களும் கூடாது.

## கூலிக்கு, வாடகைக்குக் கொடுப்பது பற்றிய விவரம்

இந்த வீட்டை, இந்த வாகனத்தை, இன்னபொருளை உனக்கு ஒரு மாதத்திற்கு வாடகைக்குக் கொடுத்தேன். அல்லது கூலிக்கு விட்டேன் என்றோ, அல்லது அதன் பிரயோஜனத்தை உனக்கு உரித்தாக்கினேன் என்றோ (ஈஜாப்) கூறுவது கொண்டும் அதனைப் பெறுகிறவன் ஒப்புக்கொண்டேன் என்று சொல்வது கொண்டும் இந்த ஒப்பந்தம் கூடும். இதில் ஈஜாப், கபூல் இல்லாமலேயே கூடும் என்பதாக இமாம் நவவீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

வாடகை, அல்லது கூலி இவ்வளவு தான் என்று முடிவானதாகவும், அளவு, வர்ணிப்பு ஆகியவை அறியப்பட்டதாகவும் இருக்கவேண்டும். வாடகைப் பொறுப்பிலிருந்து அது இன்ன கூலி என்றும் குறிப்பிடப்பட்டிருந்தால் அதனைக் காண்பது போதும். உதாரணமாக: இந்த வீட்டை, இந்தப் படகை ஒரு மாதத்திற்கு வாடகைக்கு எடுத்துக்கொண்டேன்; நான் தந்தேன் என்பதைப்போல். அதன் பிரயோஜனம் வாடகைக்குப் பிடித்தவனுக்காயிருக்கும். அந்தப் பிரயோஜனம்

தன்னைத் தானே அழித்துக்கொள்ளும் பிரயோஜனத்தைப் பொதிந்ததாக இருக்கக்கூடாது. வாடகைக்கு விடப்பட்ட பொருள் தரிபாடாக இருக்கக்கூடியதாக இருக்கவேண்டும். அந்தப் பிரயோஜனம் விலை பெற்றதாக இருக்கவேண்டும். எனவே, மெழுகுவத்தி போன்றதை அதன் வெளிச்சத்திற்காக வாடகைக்குக் கொடுப்பதோ, பிடிப்பதோ கூடாது. ஏனெனில், அது அழியாமல் வெளிச்சத்தைக்கொண்டு பிரயோஜனம் கொடுப்பது சாத்தியமாமாகாது.

இந்த மாட்டை வாடகைக்குக் கொடுத்தேன்; அதற்குப் புல் போடுவது தான் அதன் வாடகை என்பதாகவும், இந்த வீட்டை வாடகைக்குத் தந்தேன்; அதனைப் பராமரிப்பதுதான் அதற்கு வாடகை என்பதாகவும், இந்த ஆட்டை அறுத்துக்கொடு; அதன் தோலைக் கூலியாகக் தருகிறேன் என்பதாகவும், இந்த கோதுமையை மாவாக அரைத்துக்கொடு; கொஞ்சம் மாவைக்கூலியாகத் தருகிறேன் என்பதாகவும் பேசிக்கொண்டு கொடுப்பது கூடாது.

வாடகைக்குப் பிடிக்கக்கூடியது குறிப்பிடப்பட்டதாக இருக்கவேண்டும். எனவே, இந்த இரண்டு வீடுகளில் ஒன்றை உனக்கு வாடகைக்குக் கொடுத்தேன் என்று கூறுவது கூடாது.

விலையில்லாத பிரயோஜனத்தை வாடகைக்கு எடுப்பதும் கொடுப்பதும் கூடாது; எனவே, ஒரு சரக்கை விற்பனை செய்வதற்காக ஒரு தரகனை கூலிக்கு ஏற்படுத்துவது பலமான சொற்படி கூடாது. அவனுடைய சொல்லால் சரக்கு விற்கப்பட்டாலும் சரி. ஏனெனில் சொல்லுக்கு இன்ன கூலி யென்று நியமிக்கப்படவில்லை. ஆனால், இக்காலத்தில் தரகனைக் கொண்டுதான் பல வியாபாரங்கள் நடைபெறுவதால், சில வியாபாரங்களுக்கு கூலி நியமிக்கப்படுவது கூடுமெனக் கூறப்பட்டுள்ளது.

தரகனைச் சில வியாபாரங்களுக்குக் கூலிபேசி நியமிக்கக் கூடாதென்பது விலை நிர்ணயிக்கப்பட்ட சரக்குகளில்தான். ஆனால், கூடாதெனச் சொன்ன நேரத்தில் தரகனின் பேச்சு அதிகமாகி, அவனுடைய போக்குவரத்தும் அதிகமாக இருந்து, அவன் வருத்தப்படுவான் என்றிருந்தால் அது போன்ற உழைப்புக்குக் கொடுக்கும் கூலியை அவனுக்கும் கொடுக்கவேண்டும்.

தங்கம், வெள்ளிக்காசுகளை அழகுக்காக வாடகைக்கு வாங்குவது கூடாது. ஆனால் அந்தக்காசுகளின் ஓரத்தில் தங்கம், வெள்ளி வேலைப்பாடு செய்யப்பட்டிருந்தால் அதனை வாடகைக்கு வாங்கலாம். ஏனெனில் அது நகையாக ஆகிவிட்டது.

நிகாஹ் நடத்துவதற்காக காளீயானவர் கூலிபெறுவது கூடும் என்பதில் கருத்து வேறுபாடு இருக்கிறது. ஆனால், காளீயைத்தவிர வேறு வலிகாரர் இல்லாதிருந்தால் அவரே ஈஜாப் சொல்லிக்கொடுப்பது வாஜிபாகும். எனவே அவர் கூலிபெறுவது கூடாது.

வாடகைக்குப் பிடிக்கப்படுகிற பொருளின் பலன் வாடகைக்குப் பிடிக்கிறவனுக்குக் கிடைப்பதாக இருக்கவேண்டும். பிடிப்பவனின் கூலிக்காரனுக்குக் கிடைப்பதாக இருக்கக்கூடாது. எனவேதான் வணக்கங்களில் ஹஜ்ஜைத் தவிர மற்ற எந்த வணக்கத்திற்கும் கூலிக்கு ஆள் பிடிப்பது கூடாது. ஆகையால், தொழுவதற்கும், இமாமத் செய்வதற்கும் கூலிக்கு ஆள் பிடிப்பது கூடாது. ஆனால், நிய்யத்து ஷர்த்தில்லாத பாங்கு, இகாமத்து போன்றவற்றிற்கு கூலிக்குப் பிடிக்கலாம். இன்னும் மய்யித்தைக் கழுவிக் குளிப்பாட்டிக் கஃபனிட்டுத் தயார் செய்வதற்கும், குழி வெட்டுவதற்கும், குர்ஆனைக் கற்றுக்கொடுப்பதற்கும் கூலி பெறலாம். குர்ஆனைகற்றுக் கொடுப்பது ஃபர்லு ஐனாக இருந்தாலும் கூலிபெறுவது கூடும்.

## கூலிக்கு குர்ஆன் ஓதுவது

குர்ஆன் ஓதுவதற்கென கூலிக்குப் பிடிக்கலாம். அல்லது கடைசியில் துஆ ஓதுவதற்கும் சேர்த்துப்பிடிக்கலாம். துஆ இல்லாமலேயே அதனுடைய நன்மையை ஓதச்செய்பவனுக்கோ, அல்லது ஓதச்செய்பவனின் மய்யித்திற்கோ நிய்யத்துச் செய்யலாம் என்று சிலரும், துஆ இல்லாமல் அப்படி நிய்யத்து வைப்பதினால் ஓதச்செய்பவன் வகையறாவுக்கு எவ்வித பயனும் கிட்டாது என்று மற்றும் சிலரும் கூறியிருக்கிறார்கள். எனவே துஆவையும் ஓதச்செய்வதுடன் அந்த தவாபு யாருக்கென்று நிய்யத்தும் வைத்துக் கொள்ளச் செய்யவேண்டும்.

கூலிக்குக் குர்ஆன் ஓதுகிறவன் மனமறிந்து கொஞ்சத்தை விட்டு விட்டாலும், அல்லது தவறாக ஓதினாலும் அந்தக்கூலி அவனுக்கு ஹலாலாகாது. உளூவுடன் ஓதவேண்டுமென்றும், ஒழுங்காக ஓதவேண்டுமென்றும், தொடர்ச்சியாய் ஓதவேண்டுமென்றும் ஷர்த்திட்டிருந்தாலும் அதனையும் நிறைவேற்றவேண்டும். கூலிக்குக் குர்ஆன் ஓதக்கூடாதென்று சொல்வது சரியல்ல. ஏனெனில் "எதற்காக நீங்கள் கூலிபெறுகிறீர்களோ அதில் மிகத்தகுதியானது அல்லாஹ்வுடைய வேதமாகும்."

إِنَّ أَحَقَّ مَا أَخَذْتُمْ عَلَيْهِ أَجْرًا كِتَابُ اللّٰهِ.

என்று ரசூலுல்லாஹி (ஸல்) அவர்கள் அருளியுள்ளார்கள்.

வீட்டுச்சாவியை, வீட்டை வாடகைக்கு எடுத்தவனிடம் ஒப்படைப்பதும், இடிந்த பகுதிகளையும், ஒடிந்த பொருட்களையும் செப்பனிட்டுக்கொடுப்பதும், தரையை மெழுகிக்கொடுப்பதும், வெள்ளையடித்துக்கொடுப்பதும் வாடகைக்குக் கொடுப்பவனின் பொறுப்பாகும். இவற்றை அவன் விரைவாகச்செய்து தராவிட்டால் விருப்பமிருந்தால் குடியிருப்பான். இல்லாவிட்டால் விட்டுவிடுவான். அதற்காக அவனை நிர்பந்தம் செய்வதோ, தர்க்கம் செய்வதோ கூடாது.

வாடகைக்குப்பிடித்தவன் மீது அவ்வீட்டைச் சுத்தம் செய்வது கடமையாகும், இத்தனை நாட்களுக்கு என்று பேசிக்கொடுப்பதிலும், அல்லது குதிரை போன்றதில்

பலன் பெற்றுக் கொள்ள குறிப்பிடப்பட்ட காலஅளவு ஆகும் வரையிலும் வாடகைக் காரன் நம்பிக்கைக்குரியவனாக இருக்க வேண்டும். அந்தக் கால அளவு சென்ற பிறகும் அப்பொருளை அவன் உபயோகிக்காமலிருந்தால் அப்பொழுதும் அதே கால அளவு உண்டு. கூலிக்காரனை நம்புவது போல் இதிலும் நம்புதல் வேண்டும். எனவே, அவர் களின் கவனக்குறைவின்றி நிர்பர்தமான நிலையில் சேதமானதற்கு பொறுப்பாளி யாக மாட்டார்கள். ரொட்டி சுடுகிறவன் நெருப்பை அதிகமாக்கியதால் ரொட்டி கரிந்து போய் விட்டாலோ, கல்வி கற்பிக்கும் ஆசிரியர் அடித்ததால் மாணவன் இறந்து விட்டாலோ அவர்கள் பொறுப்பாளியாவார்கள். ஏனெனில் இது இவர்களின் கவனக் குறைவினால் நிகழ்ந்ததாகும்.

ஒரு குதிரையை இன்று எடுத்துப் போய் நாளைக்கு ஒப்புவிப்பதாக வாடகைக்கு எடுத்துச் சென்றவன், அன்று உபயோகிக்காமல் மறுநாள் உபயோகித்து மூன்றாம் நாள் கொண்டு வந்து கொடுக்கும் பொழுது சேதமாகி இருந்தால் அந்த சேதத்துக்கு அவன் பொறுப்பாளியாவான். ஏனெனில் அவன் பேசிய நாளல்லாததில் அதிகபட்சமாக அவன் உபயோகித்திருப்பதால்.

முடி எடுத்தல், துணிவெளுத்தல், எழுதுதல் போன்றவற்றில் கூலி பேசாமல் செய்தால் அதற்குரிய கூலி கிடையாது. ஏனெனில், கூலியையோ அதனை விளக்கி வைப்பதையோ இருவரிலொருவர் பேசாததால் அது இழந்து விட்டதைப் போன் றாகும். எனினும் இத்தகைய செயல்களுக்கு அந்தப்பகுதியில் பழக்கத்தில் இருக்கும் கூலியைக் கொடுத்து விடுவதே சரியாகும்.

ஒருவன், உடையவனின் உத்தரவுடன் வாடகை பேசாமல் அவனுடைய வீட்டில் குடியிருந்தால், பிறகு அவன் வாடகை கேட்டால் கொடுப்பது கடமையல்ல. "உன்னுடைய வீட்டில் என்னை ஒரு மாதத்திற்கு குடியிருக்கச் செய்" என்று ஒருவன் சொன்னான். அவ்வாறே அவன் செய்தானென்றால் ஏகோபித்த அபிப்ராயப்படி வாடகை கொடுக்க வேண்டிய அவசியமில்லை. ஒருவனுடைய கப்பலில், உடையவனின் அனுமதியின்றி, ஏறி, பலனடைந்தால் அதற்குரிய கூலி கொடுப்பது கடமையாகும். ஆனால் அவனுடைய அனுமதியுடன் கூலி பேசாமல் ஏறினால் கூலி விதியாகாது.

ஒரு பொருளை நேரங்குறிப்பிட்டு வாடகைக்குக் கொடுத்தால் அந்த நேரம் செல்வது கொண்டு வாடகை விதியாகிவிடும். வாடகைக்கு எடுத்தவன் வேலையை நிறைவேற்றிக் கொள்ளவில்லையானாலும் சரி.

பேசி முடியும் போது குறிக்கப்பட்ட வீட்டை அல்லது குதிரையை வாடகைக்குப் பிடித்தவனின் செயலைக் கொண்டு அவை சேதமடைந்தால் பின்வரும் நாட்களில் அந்த ஒப்பந்தம் உடைந்து விடும். பேசப்பட்ட கூலியிலிருந்து சென்ற நாட்களுக்கு விதம் போல் கணக்கிட்டுக் கொடுக்க வேண்டும். பிடித்தவன் சேதமடைந்தாலும், அல்லது குதிரையின் கடிவாளம், கலணை (தவிசு, சேணம்) சேதமடைந்தாலும் ஒப்பந்தம் உடைந்து விடாது.

உறுதியான மருத்துவர் ஒருவருக்கு மருந்துக்குரிய செலவும் கொடுத்து,லோச்சி (மருத்துவம்) செய்வதற்குக் கூலியும் பேசப்பட்டது. ஆனால் அந்த மருத்துவத்தினால்

நோய் சுகமாக வில்லையானாலும் பேசப்பட்ட கூலியைக் கொடுத்திட வேண்டும். நோய் சுகமாவதை ஷர்த்திட்டிருந்தால் ஒப்பந்தம் முறிந்து விட்டதால் பேசப்பட்ட கூலி கிடையாது. ஆனால் அது போன்ற செயலுக்குரிய கூலி கொடுக்கப்படும். மருத்துவன் தெம்மாடியாக (ஒன்றுக்கும் உதவாத அறிவீனனாக) இருந்தால் கூலியும் கொடுக்கப்படக்கூடாது. மருந்துச் செலவும் அவனிடம் வசூல் செய்யப்படும்.

வண்ணான் தனது கூலிக்காக வெளுத்த துணியைத் தடுத்து வைத்துக் கொள்ளலாம். கூலிக்காக அதனை அடகும் வைக்கலாம்.

ஒரு வாகனத்தை வாடகைக்குப் பிடித்தால், வழக்கமாக வாகனத்தில் உறங்கும் நேரமளவுக்குத்தான் உறங்க வேண்டும். அதிகமாக உறங்குவது கூடாது. ஆனால், அதனை நிபந்தனையிட்டிருந்தால் கூடும். ஒரு நோயாளியை ஏற்றிக் கொண்டு போகும்போது மரணமடைந்து விட்டாலும் அவ்வாறுதான். ஏனெனில், விழித் திருப்பவனை விடத் தூங்குகிறவனும், உயிராயிருப்பவனை விட மரணித்தவனும் அதிகமான கனமாக ஆகிவிடுவதால் கூடாது.

ஓர் ஆடையை அணிவதற்காக வாடகைக்கு எடுத்தால் தூங்கும் நேரத்தில் அதனை அணியமாட்டான். அது அவனுடைய வழக்கமாக இருந்தாலும் சரி.

கூலிக்கு எடுத்த வீடு, குதிரை போன்றதை தவணை முடிந்தவுடன் காலியாக்கிக் கொடுப்பது கடமையாகுமேயல்லாது, செலவு செய்து அதனைக் கொண்டு வந்து ஒப்படைப்பது வாஜிபல்ல. எனினும், அவன் வந்த பொழுது தடை செய்யாமல் இருப்பது வாஜிபாகும்.

பத்துக்கோட்டை நெல்லுக்குப் பத்துப் பணம் என்று கூலி பேசினான். பிறகு பார்த்தால் ஒன்பது கோட்டை இருந்தால் ஒன்பது பணந்தான் கொடுக்கப்படும். ஆனால் இதில் கூலியாகிறது முன்னால் கொடுக்கப்பட்டு விட்டதாக இருந்தால், அதில் எதையும் பிடிக்கக் கூடாது. நம் நாட்டில் சரக்குக் குறைந்தால் அவன் மீது சுமத்தி அவனைக் கடனாளியாக ஆக்குவது மார்க்கத்தில் ஆகுமானதல்ல. அவன் நம்பிக்கைக்குரியவனாக இருந்து, அவன் தவறு செய்து விட்டான் என்பதற்கு இரண்டு சாட்சிகள் இருந்தால் அவனிடம் வசூலிக்கப்படும்.

கூலிக்குக் கொடுத்தவனும் எடுத்தவனும் கூலியில், அல்லது நேரத்தில் அல்லது தொலைதூரத்தில் தர்க்கம் செய்து கொண்டால் பரஸ்பரம் சத்தியம் செய்யச் சொல்லி அந்த ஒப்பந்தத்தை உடைத்து விட வேண்டும். பிறகு கூலிக்கு எடுத்தவன் கொடுத்தவனுக்கு அது போன்ற செயலுக்கு வழக்கத்தில் உள்ள கூலியை கொடுத்துவிட வேண்டும்.

ஒருவன் ஒரு தோணியை வாடகைக்குப் பிடித்தான். ஒரு மீன் அதில் துள்ளி வந்து விழுந்தது. அம்மீன் தோணிக்காரனுக்கா? வாடகைக்குப் பிடித்தவனுக்கா என்பதில் கருத்து வேறுபாடு கூறப்பட்டுள்ளது.

## இரவல்கொடுத்துவாங்குவதுபற்றியபாடம்

وَتَعَاوَنُوْا عَلَى الْبِرِّ وَالتَّقْوٰى ۖ وَلَا تَعَاوَنُوْا عَلَى الْاِثْمِ وَالْعُدْوَانِ ۖ (5:2)

"(விசுவாசிகளே) மேலும் நன்மைக்கும் (அல்லாஹ்வுடைய) பயபக்திக்கும் நீங்கள் ஒருவருக்கொருவர் உதவியாக இருங்கள். பாபத்திற்கும் அக்கிரமத்திற்கும் நீங்கள் ஒருவருக்கொருவர் உதவியாக இருக்க வேண்டாம்", என்றும்

اَرَاَيْتَ الَّذِيْ يُكَذِّبُ بِالدِّيْنِ ۚ فَذٰلِكَ الَّذِيْ يَدُعُّ

الْيَتِيْمَ ۚ وَلَا يَحُضُّ عَلٰى طَعَامِ الْمِسْكِيْنِ ۚ فَوَيْلٌ

لِّلْمُصَلِّيْنَ ۚ الَّذِيْنَ هُمْ عَنْ صَلَاتِهِمْ سَاهُوْنَ ۚ

الَّذِيْنَ هُمْ يُرَآءُوْنَ ۚ وَيَمْنَعُوْنَ الْمَاعُوْنَ ۚ

"(நபியே! மறுமையின்) தீர்ப்பை பொய்யாக்குவோனை நீர் (கவனித்துப்) பார்த்தீரா? அவன்தான்(திக்கற்ற) அநாதைகளை வெருட்டுபவன் . அவன் ஏழைக்கு (அன்னமளிக்காததுடன்) அன்னமளிக்கும்படி (பிறரைத்) தூண்டுவதுமில்லை. தவிர, தங்கள் தொழுகையில் பாராமுகமாயிருக்கும் (நயவஞ்சகமான) தொழுகையாளிகளுக்கும் கேடுதான். அவர்கள் (தொழுத போதிலும் ஜனங்களுக்கு) காண்பிக்கவே தொழுவார்கள். (பீங்கான், கோடாலி, ஊசி போன்ற) அற்பப் பொருள்களைக்கூட (இரவல் கொடுக்காது) தடுத்துக் கொள்வார்கள்".(சூரா 107) என்று மற்றொரு இடத்திலும் இறைவன் அருளியுள்ளான்.

எனவே இரவல் கொடுத்து வாங்குவது தனக்குரிய ஒரு குறிப்பிட்ட ஆகுமான பொருளை மற்றொருவனுக்கு இரவல் தந்தேன், அல்லது அதன் பிரயோஜனத்தை உனக்கு ஆகுமாக்கினேன் என்று சொல்வது கொண்டு செல்லுபடியாகும். இருவரிலொருவர் சொல்வதைக் கொண்டும், மற்றவர் செயலைக்கொண்டும் இருப்பது போதுமானது. உதாரணமாக இரவல் தா என்று ஒருவன் கேட்க, மற்றவன் எதுவும் பேசாமல் அதனைக் கொடுப்பதும், அல்லது இரவல் தந்தேன் என்று ஒருவன் சொல்ல மற்றவன் அதனையெடுத்துக் கொள்வதும் போதுமானதாயிருக்கும்.

இரவல் கொடுத்து வாங்குவது முஸ்தஹப்பாகும். சில நேரங்களில் வாஜிபாகவும் இருக்கும். அதாவது: நிர்வாணமான ஒருவனுக்கு தொழுவதற்காக உடையை இரவலாகக் கொடுத்து வாங்குவது போல். சாகப்போகின்ற நிலையிலிருக்கும் ஆடு கோழி போன்றவற்றை அறுப்பதற்காக இரவலாகக் கத்தியைக் கொடுத்து வாங்கிக் கொள்வது போல் உள்ள நேரங்களில் அது வாஜிபாயிருக்கும். சில நேரங்களில் இரவல் கொடுப்பது ஹராமாகும். ஆண்கள் அணிந்து கொள்வதற்காக பட்டாடைகள், தங்கம், வெள்ளி நகைகள் ஆகியவற்றைக் கொடுப்பதுபோல். மற்றும் சில நேரங்களில் இரவல் மக்ருஹாயிருக்கும். யானை தந்தத்தினால் செய்யப்பட்ட சீப்பை ஈரமாயில்லாத பொழுது தலை சீவிக் கொள்வதற்காகக் கொடுப்பது போல்.

இரவல் வாங்கிய பொருளை இரவல் கொடுத்தவருடைய ஒப்புதலின்றி மற்றொருவருக்குக் கொடுப்பது கூடாது. ஆனால், அந்தப் பொருளின் பலனை

தனக்குப் பதிலாக மற்றொருவன் அடைந்து கொள்ளக் கொடுப்பது கூடும். எனினும், இரவல் வாங்கிய குதிரையை மற்றவனுக்கு கொடுக்கும்போது தன்னைப் போன்றோ, அல்லது தன்னைவிடக் குறைவான கனமுள்ளவனாகவோ அவன் இருக்க வேண்டும்.

மெழுகுவத்தி போன்றதை இரவல் கொடுப்பது கூடாது. ஏனெனில் அது அழியாமல் அதன் பலனை பெற்றுக் கொள்வது முடியாது. எனினும் அதனைக் கொளுத்தாமல்அதனைக் கொண்டு அலங்காரம் செய்வதற்காக இரவல் கொடுக்கலாம். வாங்கலாம்.

என் பூமியில் உனக்காக ஒரு கிணற்றைத் தோண்டிக் கொள் என்று ஒருவன் சொல்ல, அவ்வாறே தோண்டினால், அக்கிணற்றைத் தோண்டியவன் உரிமையாக்கிக் கொள்ளமாட்டான். ஏவினவனாகிய பூமிக்காரன் மீது அதற்குரிய கூலியும் விதியாகாது. பிறகு கிணற்றைத் தோண்டியவனுக்கும் ஏவிய நிலத்துக்காரனுக்கும் கூலியின் சங்கதியில் பிணக்கு ஏற்பட்டால், நீ கூலியில்லாமல் தோண்டினாய் என்று இவன் சொல்கிறான். கூலிக்குத்தான் தோண்டினேன் என்று தோண்டியவன் கூறுகிறான். அப்போது நிலத்துக்காரனுடைய சொல்தான் உண்மையாக்கப்படும். அவன் இல்லையானால் அவனுடைய வாரிசுக்காரன் உண்மையாக்கப்படுவான்.

இரவல் பொருள் சேதமாகிவிட்டால் இரவல் வாங்கியவனின் தேவைக்காக அது கொடுபட்டிருப்பதால் அவன்தான் பொறுப்பாளியாவான். அது சேதமடைந்த நாளில் என்ன விலை இருந்ததோ அதனைக் கொடுத்து விட வேண்டும்.

ஈட்டுடமை கொடுத்தவன் முதலைக்காப்பாற்ற வேண்டியிருந்தாலும் கடன் வாங்கினவனுக்குக் கடன் கிடைத்ததால் ஈடு பெற்றவன் பொறுப்பாளியாக மாட்டான். கூலி, வாடகை ஆகியவையும் ஈட்டைப் போன்றுதான்.

இந்தப் பொருளைக் கொடுத்து இன்ன பரிவர்த்தனை செய்து கொள் என்று ஒருவன்அனுமதி கொடுத்தான். அவ்விதமே மற்றொருவன் அப்பொருளைப் பரிவர்த்தனை செய்ததில் சேதம் ஏற்பட்டால் அவன் பொறுப்பாளியாக மாட்டான்.

ஒரு பொருளை இரவல் வாங்கிவருமாறு ஒரு சிறு குழந்தையை அனுப்பினான். வாங்கி வரும்பொழுது அது சேதமாகி விட்டால், அல்லது அக்குழந்தை சேதமாக்கிவிட்டால் அக் குழந்தையோ, ஏவினவனோ பொறுப்பாக மாட்டார்கள்.

ஒருவன் ஒரு பொருளை நியாயமான கூலிக்குப் பிடித்தான். அவனிடமிருந்து அதனை இரவலாக வாங்கிச் சென்ற மற்றொருவனிடம் அந்தப் பொருள் இருக்கும்பொழுது சேதமாகிவிட்டால் இவன் (இரவல் வாங்கியவன்) பொறுப்பாளியாக மாட்டான். ஏனெனில் இவன் (இரவல் வாங்கியவன்) அவனுக்கு (கூலிக்குப் பிடித்தவனுக்கு)ப் பகரமானவனாக இருப்பதால். இவ்வாறே பொது வக்ஃபு செய்யப்பட்டிருக்கும் கிதாப் ஒன்றை ஒருவர் எடுத்துப்படிக்கும்பொழுது சேதமாகிவிட்டாலும் அவர் பொறுப்பாளியாக மாட்டார்.

உத்தரவு கொடுக்கப்பட்ட பரிவர்த்தனையில் சேதம் ஏற்பட்டதென்றும் இல்லையென்றும் இரவல் வாங்கியவனுக்கும் கொடுத்தவனுக்கும் வழக்கு ஏற்பட்டால்

கொடுத்தவன்தான் உண்மையாக்கப்படுவான். ஏனெனில் இரவலில் அசலாலது வாங்கினவன் பொறுப்பாளியாக வேண்டியதால் அந்தப் பொறுப்பை நீக்கும் காரணம் மார்க்க முறைப்படி நிரூபிக்கும்வரை கொடுத்தவன்தான் உண்மையாக்கப்படுவான்.

இரவல் உடைமையைக் கொண்டு வந்து ஒப்படைக்கும் செலவு வாங்கியவனையே சாரும். இரவல் இத்தனை நாட்களுக்கென்று குறிப்பிடப் பட்டிருந்தாலும் அல்லது குறிப்பிடப்படாமலிருந்தாலும் இருவரில் எவரும் மறுபடியும் அதனைக் கூறும் பொழுது உடையவர் ஒப்புக் கொள்ளலாம்.

ஒரு பொருளை கூலிக்குத் தந்தேன் என்று பொருளுடையவன் கூறுகிறான். இரவலாகத்தான் தந்தாய் என்று மற்றவன் கூறுகிறான். இவ்வாறு இருவரும் கருத்து வேறுபாடு கொண்டால் பொருளை வைத்திருப்பவன் சத்தியம் செய்வதுகொண்டு உண்மையாக்கப்படுவான். ஆனால் அந்தப் பொருள் சேதப்படாமலும் கூலிலிதியாகும் நேரம் கடந்து விடாமலும் இருக்க வேண்டும். அவ்வாறு இல்லையானால் பொருளுடையவன் சத்தியம் செய்து அதனைப் பெற்றுக் கொள்வான்.

ஒருவனுடைய உணவைச் சாப்பிட்ட மற்றொருவன், நீ எனக்கு உணவை இலவசமாகக் கொடுத்தாய் என்கிறான்; அவன் இல்லை இரவலாகக் கொடுத்தேன் என்கிறான். இவ்வாறே பொருளை வைத்திருப்பவன் கூலிக்குத் தந்தாய் என்கிறான். பொருளுக்குரியவன் இரவலாகத் தந்தேன் என்கிறான். அப்பொருளும் சேதப்படாமல் இருந்தால், இவ்விரு நிலைகளிலும் உடைமைக்காரன் சத்தியம் செய்வது கொண்டு உண்மையாக்கப்படுவான்.

மரம் நட்டுக் கொள்ள, அல்லது வீடு கட்டிக் கொள்ள ஒரு நிலத்தை இரவலாக வாங்கினால் ஒரு தடவை மட்டும் அதனை உபயோகித்துக் கொள்வது கூடும். கட்டியதை இடித்தாலும் நட்டு வைத்ததைப் பிடுங்கிவிட்டாலும் மறுமுறை அதனைச் செய்வதற்கு புதிய அனுமதியில்லாமல் கூடாது.

குடிப்பதற்கு எனக்குத் தண்ணீர் கொண்டு வந்து கொடு என்று ஒருவனிடம் இவன் சொன்னான். அவன் ஒரு கூஜாலில் தண்ணீரைக் கொடுத்தான். அதனைக் குடிப்பதற்கு முன்னாலோ அல்லது பின்னாலோ இவன் கையிலிருந்து தவறி கீழே விழுந்து அக்கூஜா உடைந்து விட்டது. இப்பொழுது அத்தண்ணீரை விலையில்லாமல் கேட்டிருந்தால் கூஜாவுக்கு இவன் பொறுப்பாளியாலான். தண்ணீருக்கு இவன் பொறுப்பில்லை. தண்ணீரை விலைக்கு கேட்டிருந்தால், அந்தத் தண்ணீரும் இவனுடைய தாகத்தைத் தீர்ப்பதற்குப் போதுமானதாக இருந்தால் தண்ணீருக்குப் பொறுப்பளியாவான். கூஜாவுக்குப் பொறுப்பில்லை. தண்ணீர் தனது தேவைக்கு மேல் அதிகமாக இருந்தால், அந்த அதிகத் தண்ணீர் இவன்கையில் அமானிதமாக ஆகிவிட்டது. அதற்கு இவன் பொறுப்பாகமாட்டான்.

ஒருவன் மற்றொருவனிடம் ஒரு கடையையும் கொஞ்சம் பணத்தையும் கொடுத்து இதனை வைத்து நீ வியாபாரம் செய்துகொள் என்று சொன்னால், பலமான சொற்படி அந்தக்கடை இரவலாகவும் அந்தப் பணம் கடனாகவும் இருக்கும். வெகுமதியல்ல. இவ்வாறே ஒரு நிலத்தையும் கொஞ்சம் விதைகளையும் கொடுத்து விவசாயம்

செய்துகொள் என்று கூறினால், நிலம் இரவலாகவும், விதைகள் கடனாகவும் ஆகிவிடும்.

ஒருவன் மற்றொருவனிடம் சில ஆபரணங்களை இரவலாக வாங்கி தன் பெண் குழந்தைக்கு அணிவித்து, பிறகு வேறொருவனைத் தன் வீட்டுக்குக்காவல் வைத்தான். பின் அந்த ஆபரணங்கள் திருடப்பட்டுவிட்டது. இரவல் கொடுத்தவன் இரவல் வாங்கினவனைத்தான் கடனாளியாக ஆக்குவான். அது இரவல் என்று அக்காவலாளி அறிந்திருந்தால் வாங்கியவன் காவலாளியைப் பிடித்துக்கொள்ளவேண்டும். இரவலென்று அவன் அறியாமல், அவனுக்குரியது என்று அறிந்திருந்தால் காவலாளி பிணையாக மாட்டான்.

ஒருவன் ஒரு கிதாபை இரவலாக வாங்கிச்சென்றான். அதில் ஏதேனும் தவற்றைக்கண்டால் உரியவனிடம் அனுமதியின்றி அதனைத்திருத்தக்கூடாது. அல்லது திருத்தினால் அவன் பொருந்திக்கொள்வானென்று கருதினால் திருத்தலாம். ஆனால், அது குர்ஆனாக இருந்தால் அதனைத் திருத்துவது வாஜிபாகும். எனினும் குர்ஆனைத் திருத்துகிறவனின் எழுத்து முன் உள்ள எழுத்துக்கு ஒத்ததாக இல்லாமல் அதனுடைய ஹதியா குறைந்து விடுமென்றிருந்தால் திருத்துவது வாஜிபல்ல. வக்ஃபுடைய கிதாபு, குர்ஆன் ஆகியவற்றில் தவற்றைக்கண்டால் திருத்துவது வாஜிப்.

## அபகரித்தல் பற்றிய விளக்கம்

ஒருவரின் உரிமையை மற்றொருவர் அபகரித்தல் ஹராமாகும். அது அவனுக்குத் தேவையானதாயிருந்தாலும் சரி. உதாரணமாக: மஸ்ஜிதில் அல்லது பொதுவான ஓரிடத்தில் முன்னதாக வந்தவனை எழும்பச் செய்து தான் உட்காருவது போன்று. மற்றொருவனுக்குரிய விரிப்பில் அமர்வது போன்று. தன் வீட்டிவ் இருப்பவனை வெளியாக்குவது போன்று. இவன் அந்த வீட்டில் நுழையாவிட்டாலும் அவனை வெளியாக்குவது அபகரித்தவாகும்.

ஒரு பொருளை அபகரித்தவன் அதனை உரியவனிடத்தில் ஒப்படைப்பதும், அது சேதப்பட்டிருந்தால் அதை அபகரித்த நாளில் நிலவும் விலையைக் கவனிக்காமல் அது சேதப்பட்ட நாளில் நிலவும் ஏறிய விலைக்கு அதற்குப் பொறுப்பேற்பதும் வாஜிபாகும்.

அளவு நிறுவையைக் கொண்டு நிர்ணயிக்கப்படுகின்ற பொருளில் முன் பணம் கொடுப்பது, ஆகுமாயிருக்கின்ற பொருட்களான பருத்தி, மாவு, கஸ்தூரி, செம்பு, வெள்ளிக்காசு, தங்கக்காசு, பேரீச்சம்பழம், திராட்சை, உலர்ந்த வித்துக்கள், நெய், எண்ணெய் போன்றவற்றில் அபகரிப்புக்குப்பின் சேதமாகிவிட்டால் அது போன்றதைக்கொண்டு அவன் பொறுப்பாக்கப்படுவான். அதனை எந்த இடத்தில் அபகரித்தானோ அந்த இடத்தில் வாங்கிக்கொடுக்கப் பொறுப்பேற்றுக் கொள்ளவேண்டும். அபகரித்த இடத்தில் அது கிடைக்கவில்லையானால், அல்லது கிடைக்கிறது. ஆனால் விலை அதிகமாக இருக்கிறது, அல்லது ஆடு, மாடு போன்று அளவு, நிறுவையில்லாததாக இருக்கிறது. அப்பொழுது அதன் பெருமதியான விலை அவனிடம் வாங்கப்படும். சேதமடைந்த பொருளுக்கு ஒப்பானது இருக்கும் பொழுதும் அவனுடைய பொருத்தத்தின் பேரில் விலையை வாங்கலாம்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

ஒருவன் ஒரு வலையை, அல்லது வில்லை, அல்லது வேட்டையாடும் நபரை, அல்லது வேட்டையாடப்பயன்படும் வைரி அல்லது கருவியை அபகரித்து வேட்டையாடி இருந்தால், அந்த வேட்டைப் பொருள்களை தனக்குரியதாக்கிக் கொள்ளலாம். ஆனால் அக்கருவிகளால் வேட்டையாடியதால் உடையவனுக்கு கூலி கொடுத்திடவேண்டும். நாயை வேட்டையாடியிருந்தால் தவிர, அதற்காக கூலி கொடுக்கக்கூடாது.

கட்டப்பட்டிருக்கும் ஒரு மிருகத்தின் கயிற்றை அவிழ்த்தான். அல்லது ஒரு பறவையின் கூட்டைத் திறந்துவிட்டான். இவற்றை அவன் அங்கிருந்து விரட்டி விட்டாலும் அல்லது தாமாகவே ஓடிவிட்டாலும் அவன் பொறுப்பாளியாவான். இவ்வாறே கரையில் கட்டப்பட்டிருக்கும் ஒரு தோணியை அவிழ்த்து விட்டு, அது சேதமடைந்தால் அவன் பொறுப்பாளியாவான். ஆனால், அதனை அவிழ்க்கும் பொழுது ஒரு புயல் அடித்தோ, வேறு ஏதேனும் காரணத்தினாலோ சேதமானால் பொறுப்பாளியாகமாட்டான்.

அபகரித்தவன் அப்பொருளை உடையவனிடம் ஒப்படைத்தால் அவன் குற்றத்தை விட்டு நீங்கிடுவான். அதனை அவன் முன்னிலையில் கொண்டு வந்து வைப்பது போதுமானது. உடையவன் யாரென்பதை மறந்துவிட்டால் நீதிபதியிடம் அதனை ஒப்படைப்பது கொண்டு நீங்கிவிடுவான்.

அபகரிக்கப்பட்ட எண்ணெய் அல்லது வித்து போன்ற பொருளை அதே மாதிரியுள்ள தன்னுடைய பொருளுடன் கலந்துவிட்டபின் அதனைப் பிரித்து எடுக்கமுடியாவிட்டால் அது சேதப்பட்டது போன்றாகிவிடும். எனவே, அதனை அவன் தனக்கும் அபகரிக்கப்பட்டவனுக்குமான பொது சொத்தாக நினைக்காமல் தனக்குரியதாக்கிக்கொண்டு உடையவனுக்குக்கடனாளியாக ஆகிவிடுவான். அதற்குப் பகரத்தை உரியவனுக்குக் கொடுக்கும் வரை அப்பொருளை உபயோகிக்க விடாமல் அவன் தடுக்கப்படுவான்.

### அன்பளிப்பு நன்கொடை பற்றிய பாடம்

நன்கொடை (ஹிபத்) என்பது, பெரும்பாலும் விற்பனைக்குரிய ஒரு பொருளை பருவமடைந்த விபரமறிந்த ஒருவன் ஈஜாபைக் கொண்டும், அதனைப் பெறுகிறவன், ஒப்புக்கொண்டேன் என்று சொல்வதைக் கொண்டும் உண்டாகும். உனக்கு நன்கொடையாகத் தந்தேன் என்பது ஈஜாப், அதனை நான் ஒப்புக்கொண்டேன் என்று கூறுவது கபூல்.

ஸதக்கா (தருமம்) கொடுப்பதில் ஈஜாப், கபூல் நிபந்தனையிடப்படவில்லை. ஹதியாவிலும் (வெகுமதியிலும்) அவ்வாறுதான். இன்னும் ஈஜாப் கபூல் இல்லாமல் இருவரின் பொருத்தத்தைக்கொண்டும் உண்டாகும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

சில சமயங்களில் ஈஜாப் கபூல் வாசகம் வெளிப்படையாக இன்றி மறைமுகமாக இருக்கும். உதாரணமாக: என் சார்பாக (எனது) நன்கொடையாக உன்னுடைய அடிமையை நீ உரிமை விடு என்று ஒருவன் சொல்ல, அவ்வாறே அவன் உரிமை விடுவது போல். தன்னுடைய சிறு குழந்தைக்கு ஆபரணங்களை அணிவிப்பது போல். இப்படிச் செய்வதற்கு ஈஜாப் கபூல் தேவையில்லை.

இந்த மரத்தை என் மகனுக்காக நான் நடுகிறேன் என்று ஒருவன் சொன்னால் அது (ஹிபத்) அன்பளிப்பாக ஆகாது. என் மகனுக்காக இதை விலைக்கு வாங்கினேன் என்று சொன்னால் அது அன்பளிப்பு பற்றி விண்ணப்பிப்பதாகும்.

ஒருவன் தன் மகளுக்குச் சில வீட்டுச் சாமான்களைச் சீதனமாகக் கொடுத்து கணவன் வீட்டுக்கு அனுப்பிவைத்தபின், அவற்றை அவளுக்குரியதாக ஆக்கவில்லை என்று சொன்னால், சத்தியம் செய்யச்சொல்லி உண்மையாக்கப்படுவான்.

ரமழான் மாதம் வந்தால் உனக்கு அன்பளிப்பு ஆகிவிடும் என்று ஒன்றை நிபந்தனையிட்டுக்கூறுவது அன்பளிப்பில் கூடாது. அதுபோல் ஒரு குறிப்பிட்ட நேரத்தைக் குறித்துச் சொன்னாலும் அன்பளிப்புக்கூடாது. அன்பளிப்பைப் பெறுபவனுடைய வாழ்நாளைக் குறிப்பிட்டுக்கூறினால் கூடும். நீ ஜீவித்திருக்கும் காலம்வரை இதனை உனக்கு அன்பளிப்பாகக் கொடுத்தேன் என்று சொல்வது போல். ஆனால் அன்பளிப்பு கொடுப்பவனுடைய வாழ்நாளையோ அல்லது ஒரு மூன்றாம் நபரின் வாழ்நாளையோ குறிப்பிட்டு, நானிருக்கும் காலமெல்லாம், அல்லது இன்ன மனிதன் வாழ்ந்திருக்கும் காலமெல்லாம் உனக்கு இதனை அன்பளிப்புச்செய்தேன் என்று கூறினால் கூடாது.

என் வீட்டில் உள்ளதை, என் திராட்சைக்கொடியில் உள்ளதை உனக்கு ஆகுமாக்கினேன் என்று ஒருவன் கூறினால் அதிலிருந்து சாப்பிடலாமே தவிர அதனை எடுத்துச்செல்வதோ, மற்றவருக்குக் கொடுப்பதோ கூடாது.

ஒருவன் ஒரு பொருளை அன்பளிப்பாகக் கொடுத்தபின் அதனை மீட்டிக்கொள்ளவிரும்பினால் அதனை மீட்டிக்கொள்ளமுடியாது. ஒருவருக்கு ஒரு கடிதத்தை அனுப்பி, அதனை திருப்பி அனுப்பும்படி சொல்லவில்லையானால் அக்கடிதம் அனுப்பப்பட்டவனுக்கு உரியதாகும்.

என்னுடைய சொத்திலிருந்து இன்னதை நீ எடுத்தாலும் கொடுத்தாலும், சாப்பிட்டாலும் ஹலாலென்று ஒருவன் சொன்னால், அதிலிருந்து சாப்பிடுவது மட்டுந்தான் ஹலாலாகும், மற்ற இரண்டும் ஹலாலாகாது.

ஒருவன் என்னுடைய சொத்துமுழுவதையும் அல்லது அதில் பாதியை உனக்கு அன்பளிப்புச் செய்துவிட்டேன் என்று சொன்னால், அது இருவருக்கும் தெரிந்த சொத்தாக இருந்தால் கூடும்.

சில பொருட்களில் அன்பளிப்பு மட்டும் கூடும், விற்பனை கூடாது. இரண்டு வித்துக்கோதுமை, இரண்டு அரிசி, நஜீஸான தோல், நஜீஸான எண்ணெய் ஆகியவற்றைப்போல். இவற்றை அன்பளிப்புச்செய்யலாம், விற்பது கூடாது.

ஹிபத் என்னும் அன்பளிப்பு என்பது அப்பொருளை கைப்பற்றுவதின் மூலம்தான் கூடும். வெறும் உடன்படிக்கையினால் உண்டாகாது. சதக்காவும் ஹதியாவும் இவ்விதந்தான். கைப்பற்றுதல் என்பது கொடுத்தவன், அல்லது அவனுடைய காரியஸ்தன் அனுமதியளிப்பது கொண்டு உண்டாகிவிடும். அது ஹிபத் பெற்றவனின் கைவசத்திலிருந்தாலும் சரி. அவன் முன்னிலையில் அப்பொருளை வைப்பது மட்டும் போதாது.

பொருளை கைப்பற்றுவதற்கு முன் இருவரிலொருவர் இறந்துவிட்டால் அவனுடைய வாரிசுக்காரன் கைப்பற்றுவதிலும் கைப்பற்றிக்கொடுப்பதிலும் பொறுப்பேற்பான். நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அபிசீனிய மன்னர் நஜ்ஜாஷு என்பவருக்கு முப்பது ஊகியா கஸ்தூரியை அன்பளிப்பாக அனுப்பி வைத்தார்கள். அது அவரிடம் போய்ச்சேருவதற்கு முன் அவர் இறந்துவிட்டார். கஸ்தூரி திரும்பிவந்துவிட்டது. அதனை பரிசுத்த மனைவியருக்குப் பங்கிட்டுக்கொடுத்தார்கள். (12 ஊகியா ஒரு ராத்தலாகும். 7 கழஞ்சு ஒரு ஊகியாவாகும். ஒரு ஊகியா என்பது ஒரு அவுன்ஸ். 28.35 கிராம் ஆகும்)

சதக்கா என்பது பகீர்களுக்கும் மிஸ்கீன்களுக்கும் வழங்கும் தர்மமாகும். ஹத்யா என்பது மேற்கூறப்பட்டவர்களுக்கும் சங்கைக்குரியவர்களுக்கும் கொடுக்கும் அன்பளிப்பாகும். ஹிபத் என்பது பகரத்தை எதிர்பார்க்காமல் கொடுக்கும் நன்கொடையாகும். பகரத்தை நாடினால் அது வியாபாரமாகிவிடும்.

ஜகாத்து, நேர்ச்சைப்பொருள், கஃப்பாரா பொருள் ஆகியவற்றைக் கொடுத்த பின் திரும்பப் பெறுவது கூடாது.

ஹிபத் (நன்கொடை) பற்றி சொல்லிக்காண்பிப்பதும், சாட்சி வைத்துக்கொடுப்பதும் ஹிபத்தைத் திரும்பப்பெறுவதை ஆகுமானதாக ஆக்கிவிடாது.

நன்கொடை (ஹிபத்) கொடுத்தவன் இறந்தபின், அவனுடைய வாரிசுக்காரனுக்கும் ஹிபத் பெற்றவனுக்கும் கருத்து வேற்றுமை ஏற்பட்டால், அதாவது அவன் மரண நேரத்தில் அதனைக் கொடுத்ததாக வாரிசு சொல்கிறான். இல்லை, சுகமாக இருக்கும் பொழுதுதான் கொடுத்தான் என்று பெற்றவன் சொல்கிறான். இப்பொழுது ஹிபத் பெற்றவன்தான் உண்மையாக்கப்படுவான். ஆனால் இருவரும் சாட்சியைக் கொண்டு வந்தால் வாரிசின் சாட்சிதான் முற்படுத்தப்படும்.

தன்னுடைய மக்களுக்கோ பேரன் பேத்திகளுக்கோ கொடுத்த நன் கொடைகள் அவர்களின் ஆட்சியில் தரிபட்டிருந்தால் அவற்றை மீட்டிக் கொள்ளலாம். அவர்கள் ஆட்சியை விட்டு நீங்கி, பிறகு அவர்களிடம் வந்திருந்தாலும் மீட்டிக் கொள்ளக் கூடாது.

ஒருவன் தன் மகனுக்கு ஒரு பொருளைக் கொடுத்து, அவன் அவனுடைய மகனுக்குக் கொடுத்தால் அதில் மீட்சி என்பது கிடையாது. மக்களுக்குக் கொடுத்த ஹிபத்தை மீட்டுவது மக்ரூஹ். ஆனால் அந்த மக்கள் தாய் தகப்பனை நோவினை

செய்பவராக, அல்லது பாவத்தில் செலவு செய்பவராக இருந்தால் மீட்டிக் கொள்வது மக்ரூஹல்ல.

ஒருவனிடம் வரவேண்டிய கடன் தொகையை அவனுக்கு நன்கொடை செய்து விட்டால் அவனைக் கடனை விட்டும் நீக்கியதாக ஆகிவிடும். அவர்களிருவரும் அதன் மதிப்பை அறிந்தால் அவனல்லாதவனுக்குக் கொடுப்பது உயர்வான நன்கொடையாகும்.

கடன் கொடுத்தவனுக்கும் வாங்கியவனுக்கும் அது எவ்வளவு என்று தெரியாமலிருந்தால் நீக்குவது கூடாது. எனினும், பகரம் உண்டாகியிருந்தால் அதில் கூடும். உதாரணமாக: கணவன் மனைவியைப் பார்த்து உன் மஹரை விட்டும் என்னை நீக்கி விட்டால் நீ தவாக் என்று கணவன் சொல்வது போல்.

மக்களுக்கு நன்கொடை கொடுப்பதில் ஏற்றத்தாழ்வு செய்வது மக்ரூஹ். ஹராம் என்றும் சிலர் கூறியுள்ளனர். மக்களிருக்கும் போது பேரன்மார்களுக்குக் கொடுப்பதானாலும், அல்லது அவர்களின் மக்களுக்குக் கொடுப்பதானாலும், அது ஹிபத்தாக இருந்தாலும், சதக்காவாக இருந்தாலும், ஹதியாவாக இருந்தாலும், வக்ஃபாக இருந்தாலும், ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் சமமாகவே கொடுக்க வேண்டும்.

தாய் தந்தை இருவரிலொருவருக்கு நன்கொடை செய்வதில் ஏற்றவாட்டம் செய்ய விரும்பினால் தாயை முற்படுத்த வேண்டும். ஆனால் ஏற்ற வாட்டம் செய்வது மக்ரூஹ். தந்தைக்குச் செய்யும் நன்றியில் தாய்க்கு இரு மடங்கு செய்ய வேண்டும் என ஹதீஸில் வந்துள்ளது.

மக்களுக்கு ஏற்றத்தாழ்வாக கொடுப்பது மக்ரூஹ் என்றிருக்க, ஒருவருக்கு அதிகமாகக் கொடுக்க வேண்டுமென விரும்பினால் பெண் குழந்தைதான் சிறப்பிக்கப்படுவாள். ஏனெனில் நன்கொடையாகிறது பலவீனமானவருக்குத்தான் தகுதியானது. இதற்கு மாறாக, வாரிசுப் பொருளில் ஆண் சிறப்பாக்கப்படுவான்.

கத்னா செய்யும்போது மொய் எனப்படும் ஹதியாக்கள் தந்தையைச் சேர்ந்தது என சிலர் கூறியுள்ளனர். இல்லை மகனுக்குத்தான் என்று வேறு சிலர் கூறியுள்ளனர். இந்தக் கூற்றின்படியும் அதனை ஏற்றுக் கொள்வது தகப்பனுடைய பொறுப்பேயாகும். இந்தக் கருத்துவேறுபாடு, ஹத்யா கொடுக்கிறவன் பொதுவாகக் கொடுக்கும் பொழுதுதான். தந்தையை அல்லது மகனைக் குறிப்பிட்டுக் கொடுத்தால் ஏகோபித்த அபிப்பிராயப்படி குறிப்பிடப்பட்டவரையே சேரும். இவ்வாறான கருத்து வேற்றுமை சூஃபியாக்களுடைய பணிவிடையாளர்களுக்குக் கொடுக்கப்படும் ஹதியாக்களிலும் ஏற்படும். அதாவது ஹதியாக் கொடுக்கிறவன் யாரையும் குறிப்பாக்காமல் பொதுவாகக் கொடுக்கும்போது பணிவிடையாளருக்கும், சூஃபியாக்களை மட்டும் குறிப்பிட்டுக் கொடுத்தால் சூஃபியாக்களுக்கும், சூஃபியாக்களையும், பணிவிடையாளர்களையும் குறிப்பிட்டுக் கொடுத்தால் இருவருக்கும் சேரும்.

அநியாயக்காரன் ஒருவனுடைய இடையூறை விட்டு நீக்குவதற்காக ஒரு ஹதியாவை ஒருவனுக்குக் கொடுத்தால் அவன் அதனை உபகாரம் என்ற முறையில் ஏற்றுக் கொண்டால் ஹலாலாகும். இடையூறை விட்டு நீக்கியவனுக்கு ஹதியா கொடுக்கவில்லையென்றால் இடையூறை விட்டு நீக்கியவன் தன்னை மீண்டும் அநியாயக்காரனின் கையில் மாட்டி விடுவான் என்று பயந்து கொடுத்தால் ஹலாலாகாது.

ஒரு தேவையை நிறைவேற்றுவதற்காக ஒரு ஹதியாவை ஒருவன் கொடுத்தான். அது நிறைவேறாவிட்டால் வாங்கிய ஹத்யாவைத் திருப்பிக் கொடுத்து விடுவது வாஜிப். வாங்கிய ஹத்யா தன் வசத்தில் இல்லாவிட்டால் அதற்கு பதிலாக ஏதேனும் கொடுப்பது வாஜிபாகும்.

ஒருவருக்கு ஹதியாவை அனுப்பி, அது போய்ச் சேருவதற்கு முன் அவர் இறந்து விட்டால், அந்த ஹத்யா அனுப்பியவருக்குரியதாகும். ஹதியாவைக் கொண்டு செல்லும் தூதன் இதனை அறிந்திருந்தால் அதனைக் கொண்டுபோய்க் கொடுப்பது கூடாது. அனுப்பியவன் இறந்து விட்டால், அந்தத் தூதன், அனுப்பியவனுடைய வாரிசுக்காரர்களிடம் அதனைச் சேர்ப்பான்.

இறந்து விட்ட வலிமார்களுக்கு நேர்ச்சை செய்யும் பொழுது அது அவர்களைச் சென்றடைந்து விடுமென நாடினால் அந்த நாட்டம் வீணாகி விடும். எதையும் குறிக்காமல் நேர்ந்தால் அவர்களுடைய கப்ருகளுக்குச் செலவு ஏதேனும் தேவையானால் செய்யவாம். இல்லாவிட்டால் அங்குள்ள பணிவிடையாளர்களுக்குக் கொடுக்கும் வழக்கமிருந்தால் கொடுக்க வேண்டும்.

ஒரு பெண்ணைத் திருமணம் செய்வதற்காக அவளிடமோ அல்லது அவளைச் சார்ந்தவர்களிடமோ ஏதேனும் ஹதியாவைக் கொடுத்தான். பிறகு அத்திருமணம் நிறைவேறவில்லையானால், கொடுக்கப்பட்டவரிடமிருந்து அந்த ஹதியாவைத் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம்.

## வக்ஃபுடைய பாடம்

வக்ஃபு செய்வதற்குப் பின்வரும் ஹதீஸ் ஆதாரமாகும். "ஆதமுடைய குமாரன் (ஒரு மனிதன்) இறந்து விட்டால் மூன்றைத் தவிர மற்ற அவனுடைய எல்லாச் செயல்களும் அவனை விட்டும் துண்டித்து விடும். 1) அவனுடைய செல்வத்தால் நிரந்தரமாக நடைபெற்று வரும் தருமம் 2) மக்களுக்குப்பலன் அளிக்கும் அவருடைய கல்வி 3) அவருக்காக துஆ செய்கின்ற நல்லொழுக்கமுள்ள (முஸ்லிமான) குழந்தை" ஆகியவையாகும்.

இதுபோன்று வேறு சில காரியங்களும் நிரந்தரமான நன்மை தரக்கூடியவையாக இருக்கின்றன அவை:- ஆறு வெட்டுவது, கிணறு தோண்டுவது,

மரம் நடுவது, ஒரு கன்னிப்பெண்ணுக்கு திருமணம் செய்விப்பது, வழிதவறிய மனிதனுக்கு நேர்வழி காட்டுவது ஆகியவை போன்று. இவை எட்டு செயல்களாகும். மேலும் அவை பத்து செயல்கள் என்றும் கூறப்படுகிறது.

இஸ்லாமிய வரலாற்றில் முதன் முதலாக வக்ஃபு செய்தது ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்கள் என்று கூறப்படுகிறது. அது சம்பந்தமாக ஸஹீஹ் புஹாரி, ஸஹீஹுல் முஸ்லிம் ஆகிய கிரந்தங்களில் கீழ்க்கண்ட ஹதீஸ் எடுத்துக் கூறப்படுகிறது. அதாவது:

عَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللّٰهُ عَنْهُمَا اَنَّ عُمَرَ بْنَ الْخَطَّابِ اَصَابَ
اَرْضًا بِخَيْبَرَ فَاَتَى النَّبِيَّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ يَسْتَاْمِرُهُ
فِيْهَا. فَقَالَ يَا رَسُوْلَ اللّٰهِ اِنِّيْ اَصَبْتُ اَرْضًا بِخَيْبَرَ لَمْ اُصِبْ
مَالًا قَطُّ اَنْفَسَ عِنْدِيْ مِنْهُ فَمَا تَاْمُرُنِيْ بِهِ. قَالَ اِنْ شِئْتَ
حَبَسْتَ اَصْلَهَا وَتَصَدَّقْتَ بِهَا. قَالَ فَتَصَدَّقَ بِهَا عُمَرُ
اَنَّهُ لَا يُبَاعُ وَلَا يُوْهَبُ وَلَا يُوْرَثُ وَتَصَدَّقَ بِهَا فِي الْفُقَرَآءِ
وَفِي الْقُرْبٰى وَفِي الرِّقَابِ وَفِيْ سَبِيْلِ اللّٰهِ وَابْنِ السَّبِيْلِ
وَالضَّيْفِ. لَا جُنَاحَ عَلٰى مَنْ وَّلِيَهَا اَنْ يَّاْكُلَ مِنْهَا بِالْمَعْرُوْفِ
وَيُطْعِمَ صَدِيْقًا غَيْرَ مُتَمَوِّلٍ.

ஹஜ்ரத் அப்துல்லாஹிப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிப்பதாவது; கைபர் போரில் முஸ்லிம்களுக்கு கிடைத்த வெற்றியின் காரணமாக ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்களுக்கு கொஞ்சம் நிலம் கிடைத்தது. பெருமானார் (ஸல்) அவர்களிடத்திற்குச் சென்று அதைப்பற்றி அறிவித்தார்கள். உமர் (ரலி) அவர்கள் சொன்னார்கள்: யாரசூலல்லாஹ்! கைபர் போரில் எனக்கு கொஞ்சம் நிலம் கிடைத்தது. இதற்குமுன் அதைப் போன்ற உயர்வான சொத்து எனக்கு எப்பொழுதும் கிடைத்ததில்லை. அதை நான் என்ன செய்ய வேண்டும் என்று எனக்கு கட்டளையிடும்படி கேட்டுக் கொள்கிறேன் என்று ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள். உமரே! நீர் விரும்பினால் அதை வக்ஃபு செய்து அதிலிருந்து கிடைக்கும் வருவாயை தருமத்திற்குச் செலவு செய்வீராக என்று நபிகள் நாயகம்( ஸல்) அவர்கள் கூறினார்கள். அதன் பிறகு அந்த நிலம் விற்கப்படக் கூடாது, நன்கொடையாகவும் கொடுக்கப்படக் கூடாது, மேலும் யாரும் அந்த நிலத்திற்கு வாரிசுக்காரராக ஆக்கப்படவும் கூடாது, என்ற நிபந்தனைகளின் மீது அந்த நிலத்தை ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்கள் வக்ஃபு

செய்தார்கள். மேலும், ஏழைகளுக்காகவும், உறவினர்களுக்காகவும், அடிமைகளை விடுதலை செய்விப்பதற்காகவும், இறைவனின் பாதையில் போரிடுபவர்களுக்காகவும், வழிப்போக்கர்களுக்காவும், விருந்தினரை உபசரிப்பதற்காகவும் அந்த வருவாயை செலவு செய்யலாம் என்றும் நிபந்தனைகள் விதித்தார்கள். மேலும், அதனைப் பராமரிப்பவர் அந்த வருவாயிலிருந்து நியாயமான முறையில் செலவுக்கு எடுத்துக் கொள்ளலாமென்றும், வசதியற்ற நண்பனுக்கும் அந்த வருவாயிலிருந்து கொடுக்கலாமென்றும் நிபந்தனை விதித்து அந்த நிலத்தை வக்ஃபு செய்தார்கள். இந்த வக்ஃபுதான் இஸ்லாமிய வரலாற்றில் செய்யப்பட்ட முதல் வக்ஃபு. இதைச் செய்தவர்கள் ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்களாக இருந்தாலும் இதைச் செய்வதற்கு மூல காரணமாக இருந்து தூண்டியது நபிகள் நாயகம் (ஸல்) அவர்களாக இருப்பதால் முதன் முதலில் வக்ஃபு செய்தவர்கள் என்ற சிறப்புப் பெயர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களையே சாரும் என்றும் சிலர் கூறியுள்ளனர்.

வக்ஃபு என்பது, தனக்குச் சொந்தமான தற்சமயமோ அல்லது இனிமேலோ பலன் தரக்கூடிய, அதுவும் நிலைத்திருந்து பலன் தரக்கூடிய ஒரு குறிப்பிட்ட பொருளை ஆகுமான பாதையில் பிரயோஜனப் படுத்திக் கொள்வதற்காக நிலை நிறுத்துவதாகும். இன்னும் அந்தப் பொருள் தன்னுடைய ஆட்சியிலிருந்து மற்றொருவருடைய ஆட்சிக்குத் திரும்புவதற்குத் தகுதியானதாகவும் இருக்க வேண்டும். இதில் நின்றும் நீங்கிப் போகக்கூடிய பொருள்களாவன:

விளையாட்டுக் கருவிகள், தனக்குப் பிள்ளை பெற்றெடுத்த உம்முவலத் (சுர்ரிய்யத்) என்னும் அடிமைப் பெண், சந்தனக் குச்சி, மெழுகுவத்தி, தண்ணீர் போன்றவையாகும். தனக்குச் சொந்தமில்லாத பொருளையும், இன்னதென்று குறிப்பில்லாததையும், பிரயோஜனத்தை மட்டும், நாய், பன்றி, போன்றவற்றையும் வக்ஃபு செய்தல் கூடாது. பாவமான துறைகளும் இவ்விதம்தான். கோவில்கள் கட்டுவதற்கும், நபிமார்கள், நல்லடியார்கள் ஆகியவர்கள் அல்லாதவர்களுடைய கப்ருகளைக் கட்டுவதற்கும், கள்ளுக்கடை, சாராயக்கடை, சூது விளையாடுமிடம், வட்டிக்கடை ஆகியவை கட்டுவதற்கும் வக்பு செய்வது கூடாது.

வக்ஃபு சொத்தில் இரண்டு சட்டங்கள் பிரயோகமாகும் 1) உரியவனின் ஆட்சியை விட்டு நிரந்தரமாக நீங்கி விடுவது 2) இனி எப்பொழுதும் வேறு எவரும் ஆட்சியாக்கிக் கொள்ளாமலிருப்பது.

பள்ளிவாசல் என்பது கட்டிடமும் நிலமும் சேர்ந்ததாகும், ஒரு நிலத்தைப் பள்ளியாக வக்ஃபு செய்தால் அதில் ஜுனுபாளி (பெருந்தொடக்குக் காரர்) தரிபடுவது ஹராமாகும். அவ்விதமான வக்ஃபு செய்யப்பட்ட பள்ளியில்தான் இஃதிகாஃப் என்ற வணக்கத்தைச் செய்ய வேண்டும். அதில் செய்தால்தான் அது கூடும்.

பலருக்குச் சொந்தமான ஒரு நிலத்தில் ஒரு பங்காளி மட்டும் தன் பங்கை பள்ளிக்காக வக்ஃபு செய்தால் அதில் ஜுனுபாளி தரிபடுவது ஹராமாகும். அதில் இஃதிகாஃபும் தொழுகையும் அந்தச் சொத்தின் பிரயோஜனத்தை அனுபவிக்கக் கூடியவனின் அனுமதியின்றி கூடாது.

வம்பாக அபகரிக்கப்பட்ட அசையும் பொருள், அசையாப் பொருள் நிலம் ஆகியவற்றை வக்ஃபு செய்யலாம். பறி கொடுத்தவன் அதை மீட்டுவதை விட்டும் இயலாமையாகி விட்டாலும் சரி. அதனால் நன்மையும் கிடைக்கும்.

மேல்வீடு, கீழ்வீடு என்றிருக்கும் இரு வீடுகளில் ஒன்றை பள்ளியாக வக்பு செய்யலாம். தனக்குரியதான ஒரு பொருளைத் தன்னை விட்டு நீக்குவதே பெரிய தவமாகும்.

ஒரு பொருள் வக்ஃபுடையதாக ஆவது, இதனை நான் வக்ஃபு செய்து விட்டேன்; இதனை அல்லாஹ்வுடைய பாதையில் ஆக்கி விட்டேன் என்று கலப்பற்ற சொல்லைச் சொல்வது கொண்டுதான் உண்டாகும். இந்த இடத்தை பள்ளி வாசலாக்கிவிட்டேன் என்று சொன்னாலும் வக்ஃபாகிவிடும். ஆனால், இதைத் தொழுவதற்கு வக்ஃபாக்கினேன் என்று சொன்னால் வக்ஃபு என்பதில் கலப்பற்றதாகவும் பள்ளியென்பதில் சைக்கினையாகவும் இருக்கும். சைக்கினையில் நிய்யத்து வைத்திருக்க வேண்டும்.

ஒருவன் பள்ளிவாசலைப் போன்ற தோற்றத்தில் ஒரு கட்டிடத்தைக் கட்டி அதில் அனைவரும் தொழ அனுமதி கொடுத்தால் அதனால் அது அவனுடைய உரிமையை விட்டும் நீங்காது. அது எவ்வாறெனில் ஒரு நிலத்தில் ஜனாஸாவை அடக்குவதற்கு அனுமதி கொடுத்தால் அது தருமச் சொத்தாக ஆகி விடாது என்பது போல். ஆனால், அதில் இஃதிகாஃப் இருப்பதற்கு அனுமதி கொடுத்தால் பள்ளியாக ஆகிவிடும்; அவனுடைய உரிமையை விட்டும் நீங்கி விடும்.

ஒருவன் பாழடைந்த ஒரு பள்ளியில் தன்னுடைய சாமான்களைக் கொண்டு நிர்வாகம் செய்தால் அவன் விரும்பிய நேரத்தில் அச்சாமான்களை எடுத்துக் கொள்ளலாம். அவை இரவல் தானே தவிர பள்ளிக்கு வக்ஃபாக ஆகாது.

ஒரு தைக்கா (தக்கியா)கட்டுவதற்கோ, மடம் கட்டுவதற்கோ பொதுவான வசூல் செய்து கட்டினால் அது வக்ஃபாக ஆகிவிடும். அதனை வக்ஃபு செய்ய வேண்டுமென்ற அவசியமில்லை. இதனைச் சிலர் பலவீனமான சொல் என்றும் கூறியுள்ளனர்.

வக்பின் நிபந்தனையாகிறது: அது நிரந்தரமானதாகவும் மற்றொன்றைத் தழுவாததாகவும் இருக்க வேண்டும். எனவே, ஓர் ஆண்டிற்கு வக்பு செய்தேன் என்று சொல்வதோ, ரமலான் வந்தால் வக்பு செய்தேன் என்று செல்வதோ கூடாது. எனினும் தன் மௌத்தைக் கொண்டு கொழுகிச் சொன்னால் கூடும். உதாரணமாக: என் வீட்டை நான் மரணமடைந்தபின் ஏழைகளுக்காக வக்ஃபு செய்தேன் என்று கூறினால் அது கூடும்.

மேலும், வக்ஃபை அனுபவிக்க உரித்தானவர்கள், அதன் மீது ஆட்சி செய்து கொள்ள சாத்தியமானதாக இருக்க வேண்டும். மேலும் மேற்கூறப்பட்டவர்கள் அதைக்

கைவசப்படுத்திக் கொள்வதற்கு வக்ஃபு செய்தவனால் தடை உண்டாகாமல் இருக்க வேண்டும். உரித்தானவர்கள் என்பது குறிப்பிட்ட ஒருவராக இருந்தாலும் சரி; அல்லது குறிக்கப்படாத ஒரு கூட்டமாக இருந்தாலும் சரி.

வக்ஃபு செய்யப்படும் நேரத்தில் இல்லாதிருக்கும் ஒரு பொருளை வக்ஃபு செய்வது கூடாது. இனிமேல் கட்டப்படும் பள்ளியை வக்ஃபு செய்வதும், தனக்குக் குழந்தை இல்லாதவன் என் குழந்தையின் மீது வக்ஃபு செய்தேன் என்று சொல்வதும், அல்லது இனிமேல் எனக்குப் பிறக்கப் போகும் குழந்தையின் பேரில் வக்ஃபு செய்தேன் என்று சொல்லி பிறகு தன் குழந்தைகளில் ஏழைகளாக இருக்கப் போகின்றவர்கள் மீது வக்ஃபு செய்வேன் என்று சொல்வதும் கூடாது.

நான் இறந்த பின் என்னுடைய கப்ரின் அருகில் ஓதுகிறவனுக்கு லக்ஃபு செய்தேன் என்று ஒருவன் கூறினான். அவன் இறந்து அடக்கப்பட்டபின் அவனுடைய கப்ரு தெரியாவிட்டால் அந்த வக்ஃபு வீணாகி விட்டது என்று இப்னுஸ் ஸலாஹ் (ரஹ்) அவர்கள் தீர்ப்பளித்துள்ளார்கள்.

இப்பொழுது இருக்கும் என் குழந்தையின் மீது, பிறகு இப்பொழுது இல்லாததும் இனிமேல் பிறக்கப் போவதுமான என் (குழந்தையின் குழந்தையாகிய) பேரக்குழந்தை மீது வக்பு செய்தேன் எனக் கூறி இப்பொழுது இருப்பதைத் துயர்ந்து இப்பொழுது இல்லாததின் மீது வக்ஃபு செய்வது கூடும்.

தன்மீதே வக்ஃபு செய்து கொண்டு, அந்த வருமானத்தால் என் கடனை நிறைவேற்றுவேன் என்று நிபந்தனை செய்வது கூடாது. தான் வக்ஃபு செய்த கிதாபைப் பார்ப்பதையும், தான் தோண்டிய கிணற்றில் தண்ணீர் குடித்துக் கொள்வதையும் ஷர்த்திடுவது குற்றமில்லை.

ஏழைகளுக்காக வக்ஃபு செய்தவன் தான் ஏழையாகிவிட்டால் அதிலிருந்து பலன் பெறுவது கூடும். தன் தந்தையுடைய மக்களில் இன்ன தன்மையுடையவனின் மீது வக்ஃபு செய்தேன் என்று சொல்லி, தன்னிடமுள்ள தன்மையையே சொல்லிக் கொள்வது கூடும். இது தன்மீதே வக்ஃபு செய்து கொள்வது போன்ற தந்திரமான செயலாகும். இமாம் இப்னுர் ரிஃப்ஆ (ரஹ்) அவர்கள் இவ்வாறு கூறியதை உலமாக்கள் சரியென்று கூறியுள்ளார்கள்.

தான் வக்ஃபு செய்ததை தானே கண்காணித்து வருவதாக ஷர்த்திட்டுக் கொள்ளலாம். அதற்குரிய கூலியையும் அதிலிருந்து எடுத்துக் கொள்ளலாம். அல்லாஹ்வுக்கு மாறு செய்கிற விஷயங்களில் வக்ஃபு செய்வது கூடாது. கோயிலைப் பராமரிப்பதற்காகவும், வழிப்பறிக் கொள்ளையருக்காகவும், நபிமார்கள், நல்லடியார்கள் தவிர மற்றவர்களின் கப்ருகளைப் பராமரிப்பதற்காகவும் வக்ஃபு செய்வது கூடாது.

சிலர் தம் பெண் மக்களுக்கு அந்தச் சொத்துக் கிடைக்கக் கூடாது என்ற தப்பான எண்ணத்தில் தங்களுடைய ஆண்மக்களுக்கு மட்டும் சொத்துகளை வக்ஃபு செய்து விடுகின்றனர். இந்த வக்ஃபு பாத்திலாகும் என பலர் தீர்ப்பளித்துள்ள

போதிலும் தம்பதாவீ (ரஹ்) அவர்களும் ஷெய்குனா (ரஹ்) அவர்களும் இது கூடுமென்று தீர்ப்பளித்துள்ளனர்.

வக்ஃபுக்குரியவர்கள் அதனை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்பது ஷர்த்தல்ல. எனினும், அதனை மறுக்காமலிருக்க வேண்டும். அவர்களில் குறிப்பான ஒருவன் மறுத்தால் அவனுடைய உரிமை பாத்திலாகி விடும். குறிப்பானவன் என்பதால் உலமாக்கள், ஃபகீர்கள் என்ற குறிப்பில்லாதவர்கள் நீங்கிவிடுவார்கள். அவர்கள் அந்த வக்ஃப பிசகின்றி கபூல் செய்திருக்க வேண்டுமென்பது ஷர்த்தில்லை.

குறிப்பான இருவருக்கு வக்ஃபு, அதன் பிறகு ஃபகீர்களுக்கு வக்ஃபு என்று கூறினான்; அந்த இருவரில் ஒருவர் இறந்து விட்டால் அவருடைய பங்கையும் மற்றவருக்குக் கொடுக்க வேண்டும். அவரும் இறந்த பிறகுதான் ஃபகீர்களுக்குக் கொடுக்க வேண்டும்.

வக்ஃபு செய்யப்பட்டவர்கள் உலகத்தில் இல்லாது ஒழிந்திடுவார்களாயின் அந்த வக்ஃபின் பலனை வக்ஃபு செய்தவனின் உறவினர்களில் நெருக்கமான ஏழைகளுக்குச் செலவு செய்ய வேண்டும். உதாரணமாக: என்னுடைய மக்கள் பேரில் வக்ஃபு செய்தேன் என்று சொல்லி, மக்களுக்குப் பிறகு எவரையும் குறிப்பிடாதது போல். முடிவில்லாது ஒழியாத முறை என்பது ஃபகீர்கள், மிஸ்கீன்கள் என்று பொதுவாகச் சொல்வது போன்றாகும். மேற்சொன்ன வக்ஃபாளியின் உறவினர் என்பதில் அனந்தரக்காரர்களில் நெருக்கமானவர் முதலில் வர மாட்டார். உதாரணமாக: வாரிஸில் நெருக்கமான தம்பியின் மகனை விட குடல்வாய் உறவில் நெருக்கமான மகளின் மகன் தான் அந்த வக்ஃபின் பலனை அனுபவிக்க முதல் உரிமை பெற்றவனாவான். வக்ஃபு எப்பொழுதும் அழியாது நிலைத்திருக்கும்.

வக்ஃபு செய்தவர் ஒரு காரியத்தை நிபந்தனையிட்டு, அது மார்க்கத்திற்கு முரணானதாக இல்லையானால் அந்த நிபந்தனை செயல் படுத்தப்படும். உதாரணமாக: நான் வக்ஃபு செய்கிற கிதாபுகளை யாராவது இரவல் கேட்டால் ஈடு வாங்கிக் கொண்டு, அல்லது பிணையைக் கொண்டு கொடுக்க வேண்டும் என்று நிபந்தனையிடுவது கூடும்.

ஒரு வக்ஃபின் வருமானத்தை திருமணமாகாதவர்களுக்குக் கொடுக்க வேண்டுமென்று நிபந்தனையிடுவது மார்க்கத்திற்கு மாற்றமானதாகும். ஒருவர் தன் வக்ஃப ஹனஃபீ மத்ஹபுக்காரருக்குக் கொடுக்க வேண்டும், அல்லது காதிரிய்யா தரீக்காகாரருக்குக் கொடுக்க வேண்டுமென்று நிபந்தனையிட்டு எழுதி வைத்தால் அதனை நிறைவேற்றலாம்.

வக்ஃபு செய்தவர் யாரென்று தெரியாமலிருந்தால், அல்லது தெரிந்திருந்தும் அவர்களுக்கு நெருங்கியவர்கள் இல்லாதிருந்தால் இமாமானவர் அதனை முஸ்லிம்களுக்குத் தேவையான காரியங்களில் செலவு செய்வார்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானி'

வக்ஃபு செய்தவன் விபரம் எதையும் குறிப்பிடாமலிருந்தால், அவன் காலத்தில் வழக்கமான முறையைப் பின்பற்றி செயல்படுத்தப்படும். பின் வக்ஃபு செய்பவர்களின் கருத்துகளுக்கு இணக்கமானதைச் செய்ய வேண்டும். இதனால்தான் பாதைகளில் மக்களுக்குத் தண்ணீர்ப்பந்தல் ஏற்படுத்துவதில் அவ்விடத்தில் குடிப்பதற்குப் பயன்படுத்த வேண்டுமே தவிர, அந்தத் தண்ணீரை அந்த இடத்தை விட்டும் எடுத்துச் செல்வது (அது குடிப்பதற்காக இருந்தாலும், உளு செய்வதற்காக இருந்தாலும்) ஹராமாகும்.

வக்ஃபு செய்யப்பட்ட தண்ணீரில் எச்சில் துப்புவதும், அழுக்கைக் கழுவுவதும் ஹராம்: அது அதிகமான தண்ணீராயிருந்தாலும் சரி என்று சிலர் கூறியுள்ளனர்.

பள்ளிகளில் இருக்கும் பெரிய குடங்களில், பீப்பாய்களில் அல்லது ட்ரம்கள் போன்ற உருளை வடிவப்பாத்திரங்களில் மற்றும் ஹவுள்களிலிருக்கும் தண்ணீர், எந்தக் காரியத்திற்காக வக்ஃபு செய்யப்பட்டதென்று தெரியாமலிருந்தால் அதில் எல்லா உபயோகமும் செய்யலாம். ஆனால் எல்லோரும் அவ்விதமே செய்தால்தான். இதில் எந்த ஆலிமும் மாற்றமான அபிப்பிராயம் தெரிவிக்கவில்லை.

நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் பெயரால் வக்ஃபு அல்லது நேர்ச்சை செய்தால் அதன் வருமானத்தை அன்னாரின் ரவ்ளா ஷரீஃபிற்குரிய தேவைகளில் செலவு செய்யவேண்டும்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பெயரால் உணவு கொடுப்பதற்கு ஒருவர் வக்ஃபு செய்திருந்தால், அதனை கவனித்து வருகிறவர் அந்த நிய்யத்தில் மௌலிதுடைய மாதமல்வாததில் அவ்விடம் எவரேனும் விருந்தாளிகள் வந்தால் அவர்களுக்கு உணவு கொடுப்பது கூடுமா? கூடாதா? என்று கேட்கப்பட்ட பொழுது, கூடும் என்று நம்முடைய ஷைகு ஜம்ஜமீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். மேலும் நீதிபதியாக இருப்பவருக்குக் கொடுப்பதற்கு பைத்துல்மாலில் பொருளில்லாவிட்டாலும், அந்த வக்ஃபிலிருந்து கொடுக்கப்படுவது கூடும் என்றும் கூறியுள்ளார்கள்.

இந்த ஊராருக்கு வக்ஃபு என்று கூறியிருந்தால் அவ்வூரில் முகீமாக இருப்பவர்களுக்கும், வியாபாரம் போன்ற காரியங்களுக்காக வெளியூரிலிருக்கும் அவ்வூர்காரர்களுக்கும் செலவு செய்யப்படும்.

இன்ன மனிதன் ஒரு நாளைக்கு ஒரு ஜுஸ்வு வீதம் குர்ஆன் ஓதுவதற்காக வக்ஃபு செய்தேன் என்று ஒருவன் கூறினால்? குர்ஆனில் எந்த இடத்திலாவது ஒரு ஜுஸ்வுடைய அளவுக்கு (அது ஒரு ஜுஸ்வு அளவு பல இடங்களில் பிரிந்து பிரிந்து ஓதினாலும்) போதுமாகும். அவன் பார்த்து ஓதினாலும் சரி? பார்க்காமல் ஓதினாலும் சரி.

இந்த வக்ஃபின் வருமானத்தை ரமலான் அல்லது ஆஷூரா நாளில் செலவு செய்ய வேண்டுமென்று நிபந்தனையிட்டு வக்ஃபு செய்யப்பட்டிருப்பதில் அந்த நாளில்

செலவு செய்ய முடியாமல் போய் அந்த நாள் தவறிவிட்டால் அதற்குப் பிறகு செலவு செய்து கொள்ளலாம். அடுத்த ரமலான், ஆஷூராவரை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டியதில்லை. ஆனால், ரமலானில் நோன்பு திறப்பவர்களுக்கென்று கூறியிருந்தால் அடுத்த ரமலானை எதிர்பார்த்து அதற்காகவே செலவு செய்யப்படும்.

என் தந்தையின் கப்ரில் வெள்ளிக்கிழமை தோறும் யாஸீன் ஓதி வருபவருக்கு வக்ஃபு செய்தேன் என்று சொன்னால் அதற்கே செலவு செய்யப்படும். இது ஓத வேண்டிய நேரத்தைக் குறிப்பிட்டிருந்தால், அல்லது வருஷம் முழுவதுக்கும் இன்ன கூலி என்று கூறியிருந்தால்தான். இல்லாவிட்டால் வக்ஃபு பாத்திலாகி விடும்.

இதை இன்ன மனிதனின் மீது இன்ன வேலை செய்வதற்காக வக்ஃபு செய்தேன் என்று கூறினால், அவன் உரிமையாளனாக இருப்பதற்கும் அவன் வக்ஃபு செய்வதற்கு வஸிய்யத்தாக அது இருப்பதற்கும் சாத்தியமானதாகும். எனவே, வக்ஃபு செய்தவனின் எண்ணம் அறியப்பட்டதாக இருந்தால் அதனை நிறைவேற்ற வேண்டும். சந்தேகமானதாக இருந்தால் அவன் தகுதி பெற்றவன் என்பதைத் தடுக்கக் கூடாது.

ஒருவன் ஒரு பொருளை விருந்தாளிக்காக வக்ஃபு செய்தான்; அல்லது வஸிய்யத்துச் செய்தான். வந்த விருந்தாளிக்கு அந்தப் பொருளைக்கொண்டு - உலக வழக்கப்படி - மூன்று நாட்களுக்கு மேல் உணவளிக்கக்கூடாது. விருந்தாளி ஏழையாயிருந்தாலும் சரி, பணக்காரனாயிருந்தாலும் சரி. ஆனால், அதன் வருமானம் குறைவாக இருந்து, வந்திருக்கும் பலருக்கு உணவளிக்கப்போதாதென்றிருந்தால் ஏழைகளுக்கே முதலிடம் கொடுக்கப்படும். அதனை தானியமாகக் கொடுக்கக்கூடாது. அவ்வாறு கொடுக்கவேண்டுமென நிபந்தனை யிட்டிருந்தால் தவிர.

திக்ரு, சலவாத்து, மௌலிது போன்றவற்றை வழக்கமாகச் செய்து வருபவனுக்குக் கொடுக்கவேண்டுமென ஒரு வக்ஃபில் நிபந்தனையிடப்பட்டிருந்தால், அவன் ஒரு நாள் ஓதாமல் விட்டுவிட்டால் அன்றைய பங்கு அவனுக்குக் கிடையாது. ஆனால், அவன் தனக்குப் பகரமாக மற்றொருவனை நியமித்தால் அப்பங்கை கொடுக்கலாம். எனினும், இது பகரத்தை நியமிக்க சாத்தியமாகும் காரியங்களான இமாமத்துச் செய்தல், ஓதிக்கொடுத்தல் ஆகியவற்றில்தான். பகரம் நியமிக்க முடியாத தானே கல்வி கற்றுக்கொள்ளுதல் போன்றதாக இருந்தால் கூடாது.

வக்ஃபு செய்யப்பட்ட பொருளில் அதன் மூல ஆட்சி அல்லாஹு தஆலாவின் பக்கமே சேரும். வக்ஃபு செய்தவனைச் சேராது. மாலிக் மத்ஹபில் வக்ஃபு செய்தவனைச் சேரும் என்று கூறப்பட்டுள்ளது. வக்ஃபு செய்யப்படுகிறவரைச் சேருமென்றும், அது அவருக்கு சதக்காவைப் போலாகுமென்றும் ஹன்பலீ மத்ஹபில் கூறப்பட்டுள்ளது. இந்தக் கருத்து வேற்றுமையாகிறது, குறிப்பில்லாத வக்ஃபுகளில்தான். பள்ளி போன்ற வட்டுருக்கமான வக்ஃபுகளில் ஏகோபித்த அபிப்பிராயப் படி மனிதர்களைச் சேராது. அல்லாஹ்வையே சேரும்.

ஒரு வக்ஃபு நிறுவனத்திற்குப் பாத்தியஸ்தராயிருக்கும் ஒருவர் அதனால் எவ்வகை வருமானத்தையும் பெறலாம். மாடு போன்றதாயிருந்தால் அதனால் வரும்

கூலியும், பாலும், வக்ஃபு செய்த பிறகு ஈனுகின்ற கன்றுமாகும். ஒரு வருமானத்தை மட்டும் குறிப்பிட்டிருந்தால், அதனைத்தவிர மீதிவருமானமெல்லாம் வக்ஃபு செய்தவனுக்காயிருக்கும்.

பள்ளிவாசலின் சாமான்களை எவரேனும் உபயோகித்தால் அதற்காகக் கூலி கொடுப்பது அவசியமாகும். அதிலிருக்கும் சாமான்களை அதனுடைய மராமத்துச் செலவுகளுக்குப் பயன்படுத்த வேண்டுமே தவிர, அங்குவருகின்ற ஏழை எளியவர்களுக்குக் கொடுப்பது கூடாது. மற்றொரு சொற்படி, அந்தச் சாமான்களை வக்ஃபு செய்தவன் எந்த நோக்கத்திற்காகக் கொடுத்தானோ அதற்காக உபயோகிக்கப்படும் என்று கூறப்பட்டுள்ளது.

ஒருவன் குர்ஆன்,ஹதீஸ், மார்க்கக் கல்வி, அல்லது நஹ்வு, ஸர்ஃபு ஆகிய கல்விகளைக் கற்பதற்காக அல்லது கற்றுக் கொடுப்பதற்காக, அல்லது கேட்பதற்காக பள்ளியில் ஓரிடத்தில் முதலில் அமர்ந்திருந்து பிறகு அங்கிருந்து எழுந்து சென்று திரும்பி வரும் நேரமும் அதிகமாக வில்லையானால் அவ்விடத்தின் உரிமை அவனுக்குடையதாகவே இருக்கும். இவ்வாறே தொழுகைக்காக நேரம் வரும் முன் வந்தாலும் சரி, அல்லது திக்ருக்காக ஓரிடத்தில் இருந்து, பிறகு ஏதேனும் ஒரு தேவைக்காக அங்கிருந்து எழுந்து சென்று, நீண்ட நேரமின்றி விரைவாகத் திரும்பி வந்து விட்டால் அவ்விடத்தின் உரிமை அவனுக்கே உடையதாகும். அவன் சிறு பிள்ளையாக இருந்தாலும் சரி; ஏதேனும் ஒரு பொருளை அவ்விடத்தில் போட்டு விட்டுப் போகவில்லையானாலும் சரி, அவ்விடத்தில் அவன் உட்கார்ந்திருந்ததை அறிந்தவர் அவனுடைய அனுமதியின்றி, அல்லது அவனுடைய பொருத்தமின்றி அவ்விடத்தில் உட்காருவது ஹராமாகும். ஆனால் அவன் வெளியில் போயிருக்கும் போது ஜமாஅத்துக்கு இகாமத்து சொல்லப்பட்டுவிட்டால் அணியைச் சரி செய்வதற்காக அவ்விடத்தில் நிற்கலாம். அவன் ஏதேனும் பொருளை அவ்விடத்தில் வைத்துச் சென்றிருந்தால் அதனைக் கையாலெடுத்து அப்புறப்படுத்தி விடலாம். காலினால் அதை எடுத்து அது சேதமடைந்தால் இவன் அதற்குப் பொறுப்பாளியாகிவிடுவான். இஃதிகாஃப் இருப்பவன் இவ்வாறு வெளியில் சென்றால், அதில் இவ்வளவு நேரமென்று குறிப்பில்லாமல் இருப்பதால், அவன் தேவைக்காக வெளியில் சென்றாலும் சரி அவனுடைய உரிமை நீங்கிவிடும்.

## பள்ளியின் எல்லை விவரம்

பள்ளி வாசல்களில் சிறு குழந்தைகளை வைத்து ஓதிக்கொடுத்தல் கூடாது என்று கஃப்பால் (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். நம் நாட்டில் பள்ளியைச் சுற்றிலும் தாழ்வாரங்கள் அமைத்து அலற்றைப் பல வேலைகளுக்காகப் பயன்படுத்துவதும், ஜுனுபாளி அதில் இருப்பதும், இஃதிகாஃப் அதில் இல்லாமலிருப்பதும் நடைபெற்று வருகிறது. இதனை ஃபுகஹாக்கள் எலரும் மறுக்காத காரணத்தால் தொழுவதற்கென்றும், இஃதிகாஃப் இருப்பதற்கென்றும் உள்ள இடத்தை சுவர் வைத்துத் தடுத்துப் பள்ளியாக ஆக்கி அந்தச் சுவருக்கு வெளியில் உள்ளதை மேற்கூறப்பட்டது போல் பல வேலைகளுக்கும் லக்ஃபு செய்யப்பட்டதென்பதைத்

தெரிந்து கொள்ளலாம். வக்ஃபு செய்யப்பட்டதின் நோக்கம் இவ்வாறுதான் இருக்கும் என்று தெரிய வருகிறது.

பள்ளியிலுள்ள பாய்கள் ஏதும் பலனில்லாமல் போய் விட்ட நிலையில் அதனை விற்பதுதான் நல்லதெனத் தெரிந்தால் விற்பது கூடும். இவ்வாறே பள்ளியிலுள்ள முறிந்த மரம், தடிகள் ஆகியவற்றையும் விற்கலாம். அவற்றை விற்ற பணத்தில் வேறு பாய், மரம், தடி ஆகியவை வாங்க முடியவில்லையானால், பள்ளிக்குத் தேவையான இதர காரியங்களுக்குச் செலவு செய்யலாம். இதில் சில உலமாக்கள் கருத்து மாற்றமும் கூறியுள்ளார்கள். இந்தச் சட்டமாகிறது, அந்த பொருட்கள் பள்ளிக்கு வக்ஃபு செய்யப்பட்டவையாக இருந்தால்தான். அவை நன்கொடையாகக் கொடுக்கப்பட்டிருந்தாலோ அல்லது பள்ளிக்காக வாங்கப்பட்டவையாக இருந்தாலோ அவை பழுதாகாமல் இருந்தாலும் சரி-விற்கலாம். இவ்வாறே தேவையில்லாத விளக்குகள் போன்றவற்றையும் விற்று விட வேண்டும். ஏனெனில், எவ்விதத் தேவையுமின்றி பள்ளியை அடைத்துக் கொண்டு இட நெருக்கடியை ஏற்படுத்துமென்பதால் விற்று விட வேண்டும்.

வக்ஃபு செய்யப்பட்ட கிதாபுகளை எந்த நிலையிலும் விற்பனை செய்யக் கூடாது. வக்ஃபு செய்யப்பட்ட ஓர் இடம் போன்றது பாழடைந்தாலும் அதனை விற்பது கூடாது. ஒரு பள்ளி உடைந்து அதைச் செம்மைப்படுத்துவது சிரமமாயிருப்பினும் அதனை விற்பது கூடாது. ஏனெனில், அந்த நிலத்தில் தொழுவது சாத்தியமாயிருக்கின்ற காரணத்தால். அத்தகைய பூமியில் இஃதிகாஃப் இருப்பது கூடும்; ஜுனுபாளி தங்குவது ஹராமாகும்.

வக்ஃபு செய்யப்பட்ட பசுமையான மரம் காய்ந்து விட்டாலும் அல்லது காற்றில் விழுந்து விட்டாலும் வக்ஃபு முறிந்து விடாது. எனவே, அதனை விற்கவோ, நன்கொடைச் செய்யவோ கூடாது. எனினும், வக்ஃபுக்கு உரியவன் அதிலிருந்து பலன் பெறலாம்.

பள்ளியிலுள்ள பாய்களை வேறு இடங்களில் நடக்கும் களரிகளில் உபயோகிப்பது மிகக் கெட்ட காரியமாகும். பார்த்தவர்கள் அதனைத் தடுப்பது கடமையாகும்.

ஒரு பள்ளியின் வருவாயைக் கொண்டு பள்ளியல்லாத பொதுவான கிணறுகள், மடங்கள் ஆகியவற்றைப் பரிபாலனம் செய்வது கூடாது. பள்ளியுடைய பாய் மற்றும் பொருட்களை வேறு இடங்களில் உபயோகிப்பது கூடாது. தேவை ஏற்பட்டாலும் சரி.

பள்ளிவாசலை எந்த நிலையிலும் உடைக்கக் கூடாது, அதில் வெடிப்பு கண்டு பயந்தால் தவிர. அப்பொழுது அப்பள்ளியை மராமத்துச் செய்து உறுதிப்படுத்திக் கொள்ள முடியாது என்றிருந்தால், அப்பள்ளியினுடைய சாமான்களைக் கொண்டு வேறொரு பள்ளியைக் கட்டிக் கொள்வதை நீதிபதி நல்லதாகக் கருதினால் அவ்வாறே செய்வார். இவ்வாறு செய்வதில் அருகிலுள்ள பள்ளியாக இருப்பது நல்லது. அதைக்

கொண்டு பள்ளியல்லாத தைக்கா போன்றவற்றைக் கட்டுவதோ, பரிபாலனம் செய்வதோ கூடாது.

ஒரு பள்ளியில் பழைய பொருட்கள் இருக்கும் பொழுது, புதிய பொருட்கள் கிடைத்து அவற்றைப் புழங்க ஆரம்பித்தால் பழைய பொருட்களை வேறு பள்ளிக்குக் கொடுக்கலாமா? அல்லது அவற்றை விற்று பணத்தைப் பள்ளிக்காக வைத்துக் கொள்ளலாமா என்று ஷைகு இப்னு ஹஜர் (ரஹ்) அவர்களிடம் கேட்டதற்கு, அவற்றை வேறு பழைய பள்ளியோ புதிய பள்ளியோ எதற்கும் கொடுக்கலாமென்றும் வக்ஃபு செய்யப்பட்ட பள்ளியிலுள்ள சாமான்கள் அழிந்து விடுவதற்கு முன் அவை தேவையில்லை என்று உறுதியாய்த் தெரிந்தாலும் விற்கக் கூடாதென்றும் கூறினார்கள்.

பள்ளியில் விளக்கெரிப்பதற்காக எண்ணெய் செலவுக்காக வக்ஃபு செய்யப்பட்டால், இரவில் தொழுபவர்களிருந்தால் விடியுமளவும் விளக்கை எரிக்கலாம். மனிதர்கள் நடமாட்டமில்லாத பள்ளியாக இருந்தாலும் அதனைச் சங்கைப் படுத்துவதற்காக இரவில் இலேசாக விளக்கை எரிக்கலாம்.

பொதுப்படையான வக்ஃபு சொத்திலிருந்து முஅத்தினுக்கும் இமாமுக்கும் செலவு செய்யக் கூடாதென இமாம் நவவீ (ரஹ்) அவர்கள் ரவ்ளா என்ற கிதாபில் கூறியுள்ளார்கள். எனினும், இமாம் கஸ்ஸாலீ (ரஹ்) அவர்கள் செலவு செய்யலாம் என்று கூறியுள்ளார்கள். இதுதான் பலமான சொல்லுமாகும்.

பள்ளி வாசலிலுள்ள எண்ணெய், மெழுகுவத்தி, கல், மண், எதனையும் எடுத்துச் செல்வது ஹராமாகும். பள்ளியின் பூமியில் நடப்பட்டிருக்கும் மரங்கள், செடிகளில் காய்க்கும் காய் கனிகள் பள்ளிக்குடையவையாகும். அவற்றைப் பள்ளிக்காக நடப்பட்டிருந்தால் அவற்றைச் சாப்பிடுவது கூடாது. மரம் எதற்காக நடப்பட்டதென்பது தெரியாமலிருந்தால் அதிலிருந்து சாப்பிடுவது கூடும்.

தரும நிலமாகிய கப்ருஸ்தானில் முளைத்திருக்கும் மரங்களில் சாப்பிடுவதற்குரிய பழங்கள் கிடையாது; ஆனால், வேலைகளுக்கு உதவுகின்றவையாக இருக்கின்றன, அவற்றிற்கு பாதுகாக்க ஆளும் கிடையாது; அப்பொழுது அம்மரங்களை வெட்டி விற்று, முஸ்லிம்களுக்குரிய தேவைகளில் காளீ செலவு செய்யலாம் என தன்பதாவீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள். மரங்களில் பழங்களிருந்தால் அவற்றையும் விற்கலாம். எனினும், அவைகளை விற்று கப்ருஸ்தானிலுள்ள தேவைகளுக்காகச் செலவு செய்வது மிகச் சிறப்பானதாகும்.

பொதுவான கப்ருஸ்தானிலுள்ள மரஞ்செடி கொடிகளிலுள்ள காய் கனிகளைப் புசிப்பது ஹலாலாகும். எனினும் விற்று கப்ருஸ்தானுக்குரிய தேவைகளுக்குச் செலவு செய்வதுதான் ஏற்றம். ஒரு மக்பரா உக்கியழிந்து அடக்கிய அடையாளம் அழிந்து உபயோகமில்லாமல் போய்விட்டால் அந்த நிலத்தை விவசாயம் போன்ற வேலைகளுக்காக குத்தகைக்கு கொடுப்பது கூடாது.

வக்ஃபுடைய சொத்தைக் கண்காணித்து அதில் வரும் வருமானத்தைத் தனக்கும் தான் விரும்பியவருக்கும் கொடுக்கவேண்டுமென்று நிபந்தனையிடுவது கூடும்.

இந்த நிபந்தனையை நிறைவேற்றுவதில் வக்ஃபு செய்த நேரத்தில் கண்காணிப்பாளராக நியமிக்கப்பட்டவரைப் பின்னால் நீக்குவது சரியல்ல; அவனைவிடக் கெட்டிக்காரனாக இருந்தாலும் சரி. எவரையும் நிபந்தனையிடவில்லையானால் அதனைக் கண்காணிப்பது காளியின் பொறுப்பாகும். அந்தக் காளியே வக்ஃபு செய்தவராக இருந்தாலும் சரி, வக்ஃபு செய்யப்பட்டவராக இருந்தாலும் சரி. பொதுவான வக்ஃபில் அதனைக் கண்காணிப்பது வக்ஃபு செய்தவனுக்கும் பிறகு அவனுடைய மக்களுக்கும் உரியதாகும் என்று குவாரிஜ்மீ (ரஹ்)அவர்கள் கூறியதை பெரும்பாலான இமாம்கள் ஏற்றுக்கொள்ளவில்லை.

கண்காணிப்பாளனுக்கு நிர்ணயிக்கப்பட்ட சம்பளத்தை, காளி கண் காணிப்பாளராக ஆகும் போது எடுத்துக் கொள்வது கூடாது. இது, அவருக்கு பைத்துல் மாலிலிருந்து போதுமான வருமானம் கிடைக்குமானால் தான். எனினும், வக்ஃபு செய்தவன் காளியே கண்காணிப்பாளராக இருக்கவேண்டுமென தெளிவாகச் சொல்லியிருந்தால், சம்பளம் பெற்றுக்கொள்வது கூடும் என்று இமாம் சுபுகீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

காளி அநியாயம் செய்வார் என்று பயந்தால், எவர்வசம் வக்ஃபு இருக்குமோ அவரே அதனைப் பராமரிப்பார். அதனுடைய சட்டதிட்டங்கள் தெரியாதவராக இருந்தால் சட்டம் தெரிந்தவரிடம் அதனை ஒப்படைப்பார். அல்லது சட்டம் தெரிந்தவரிடம் கேட்டு தானே நிருவகிப்பார்.

கண்காணிப்பாளன் அவன் வக்பு செய்தவனாக இருந்தாலும் சரி, அல்லது வேறு யாராக இருந்தாலும் வக்பைப் பராமரிப்பதில் நீதியும் நேர்மையும் உடையவராக இருப்பது ஷர்த்தாகும்.

கண்காணிப்பாளனுக்கு சம்பளம் எதுவும் நிர்ணயம் செய்யாமலிருந்தால், நீதிபதி அவனுடைய செலவினங்களுக்குத் தேவையானதில் அவனைப் போன்ற வர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளத்தில் யாருக்கு மிகக் குறைவான சம்பளம் கொடுக்கப்படுகிறதோ அவ்விதமான ஒரு சம்பளத்தை கட்டளை இடுவார். நீதிபதியிடம் போகாமல் கண்காணிப்பாளன் தானே மேற்கூறிய முறைப்படி சம்பளத்தை நிர்ணயித்துக்கொள்ளலாம் என்று இப்னுஸ் ஸபாக் (ரஹ்) அவர்கள் கூறியிருக்கிறார்கள். இது அனாதையான குழந்தையைப் பராமரிக்கும் வலிகாரருக்கு நிர்ணயிப்பதைப் போலாயிருக்கும்.

கண்காணிப்பாளருக்கு நிர்ணயிக்கப்பட்ட சம்பளம் வழக்கத்திற்கு அதிகமாக இருந்தாலும் சரி எடுப்பது கூடும். கண்காணிப்பாளன் அவனே வக்ஃபு செய்தவனாக இருந்தால் வழக்கத்திற்கு அதிகமாக எடுப்பது கூடாது.

வக்ஃபு செய்யப்பட்ட கிதாபுகளிலுள்ளதைப் பார்த்து எழுதிக் கொள்வதற்காக வக்ஃபுக்குரியவர்கள் கேட்டால் கண்காணிப்பாளன் அவர்களுக்குக் கொடுப்பது வாஜிபாகும். இன்னும் வக்ஃபு செய்யப்பட்ட எந்தப் பொருளுக்குரிய மூலப்பத்திரத்தையும் வக்ஃபு செய்தவர்கள் பார்த்து நகல் எழுதித் தாங்கள் தான்

பாத்தியஸ்தர்கள் என்று ஆதாரமாக வைத்துக்கொள்வதற்குக் கேட்டால் கொடுப்பது வாஜிப்.

தான் நியமித்த கண்காணிப்பாளனை நீக்கி வேறொருவனை நியமிப்பது வக்ஃபு செய்தவனுக்கு ஆகும். எனினும், வக்ஃபு செய்யும் நேரத்தில் நியமித்தவனை நீக்குவது கூடாதென்று நிபந்தனை ஏற்படுத்தியிருந்தால் அப்படி நீக்குவது கூடாது.

## நாவினால் விண்ணப்பம் செய்தல் பற்றிய பாடம்

தன் செய்தியை அறிவிப்பதற்கு 'இஃக்பார்' إِخْبَارٌ என்பதாகவும், பிறர் செய்தியை அறிவிப்பதற்கு 'இக்ரார்' إِقْرَارٌ என்றும் சொல்லப்படும். அல்லாஹ்வைப்பற்றிய செய்தியை நாவினால் சொல்வது இக்ரார் என்று கூறப்படும். கலிமாவின் நான்கு ஷர்த்துகளில் ஒன்று இக்ரார் (நாவினால் விண்ணப்பிப்பது ) ஆகும். எனவே, சுயபுத்தியுள்ள பருவமடைந்தவன் இக்ரார் செய்வதால் சட்டப் பிரச்சினைகள் அவன் மீது சாரும். ஆனால் , சிறுபிள்ளை, பயித்தியக்காரன் ஆகியோர் உண்மையென்று எண்ணி விண்ணப்பம் செய்தின் மீதும், நிர்பந்திக்கப் பட்ட வனின் விண்ணப்பத்தாலும் பிடிப்பது கூடாது. உண்மையின் மீது நிர்பந்திக்கப் பட்டவனுடைய விண்ணப்பத்தால் பிடிப்பது உண்டு.

ஒரு விஷயத்தில் ஒருவனைச் சந்தேகித்தால் அதில் உண்மையைச் சொல்வதற்காக நிர்பந்திக்கப்பட்டவனுடைய இக்ரார் கூடும். அவனை நிர்பந்தம் செய்து அடிக்கப்படும் நேரத்திலும் அதற்குப் பின்பும் கூடும்.

ஒருவன் ஒரு விஷயத்தைப்பற்றி விண்ணப்பம் செய்தபின் சிறு பிள்ளைத் தனத்தினால் அல்லது பயித்தியத்தினால் அல்லது நிர்பந்திக்கப்பட்டதினால் கூறியதாகச் சொல்கிறான். அவ்விடத்தில் மறியலில் அடைக்கப்பட்டதற்குரிய ஆதாரமோ, அடிபட்டிருக்கும் அடையாளமோ உண்டாகி, சாட்சியினால் அல்லது நிர்பந்தம் செய்தவனின் சொல்லால் அது உறுதியானால், அல்லது வாதியைப் பிரதிவாதி சத்தியம் செய்யச்சொல்லியபோது அவன் சத்தியம் செய்ய மறுத்தால் பிரதிவாதி செய்யும் சத்தியத்தைக் கொண்டு அது உறுதியானால் அவனுடைய சொல் உண்மையாக்கப்படும். இது, அவனுக்கு மாற்றமாக சாட்சி கூறப்படாமலிருக்கும் வரைதான்.

சிறு பிள்ளை ஒருவன் தனக்கு விந்து வெளிவந்து, தான் பருவ மடைந்துவிட்டதாகக் கூறினால், அது, சாத்தியமானதாகவுமிருந்தால் சத்திய மில்லாமலேயே உண்மை யாக்கப்படும். வயதினால் பருவமடைந்து விட்டதாக வாதிட்டால் சாட்சி கொண்டுவரச் சொல்லப்படும். அவனை எவரும் அறியாதவனாயிருந்தாலும் சரி.

சாட்சி என்பது இவ்விடத்தில் இரண்டு ஆண்களாகும். ஆனால், அவன் பிறந்தது இன்ன நாளென்று நான்கு பெண்கள் சாட்சி சொன்னாலும் ஒப்புக்கொள்ளப்படும்.

இக்ராரில் உண்மையை அறிவிக்கும் சொல் நிபந்தனையாக்கப்படும்,என்மீது என்னிடத்தில் இன்னாருக்கு இன்னது உண்டு என்று சொல்வதுபோல். என்மீது அல்லது என் பொறுப்பில் என்று கூறினால் கடனைப்பற்றி விண்ணப்பம் செய்வதாகும். என்னிடத்தில் அல்லது என்னுடன் என்று கூறினால் குறிக்கப்பட்ட பொருளைப்பற்றிய விண்ணப்பமாகும். குறிப்பிடப்பட்ட பொருட்களில் அந்தஸ்தால் தாழ்ந்ததின்மீது சுமத்தாட்டப்படும்.

அதனைத் திரும்பக் கொடுத்துவிட்டேன்; அல்லது சேதமடைந்துவிட்டது என்று கூறினால் சத்தியம் செய்யச்சொல்லி உண்மையாக்கப்படும்.

எனக்கு உன்னிடமிருந்து வர வேண்டிய ஆயிரத்தை நிறைவேற்றிவிடு என்று ஒருவன் கூறினான்; அல்லது எனக்கு உன்னிடமிருந்து ஆயிரம் வரவேண்டுமென நீ சொல்லி இருக்கிறாய் என்று கூறினான். அதற்கு அவன், "ஆம்" என்றான்; அல்லது கொஞ்சம் தாமதித்திரு, நீ வழக்காடுவதை நான் மறுக்கமாட்டேன், அல்லது பணப்பையை நான் திறக்கட்டும், அல்லது சாவியை எடுக்கட்டும், நீஅதுவரை தாமதித்திரு என்று சொல்வானாகில் இந்த வாசகங்களெல்லாம் இக்ராராகக் கருதப்படும். ஆனால், இதில் தலையை அசைப்பது, சிரிப்பது, பரிகாசம் செய்வது எதுவும் இல்லாவிட்டால்தான் இது இக்ராராகும்.

இவ்வாறே எனக்கு உன்மீது இன்னது வரவேண்டியதில்லையா? என்று கேட்க, மெய்தான், உண்மை சொன்னாய் என்றான், அல்லது என்னை நீக்கி விட்டு விட்டாய் என்றான், அல்லது எனக்கு உன் மீது இன்னது உண்டுமென்றான்; அவன் ஆம் என்றான். இவையெல்லாம் இக்ராராகும்.

எனதக் கொண்டு இக்ரார் செய்யப்படுகிறதோ அப்பொருள், இக்ரார் செய்யும் நேரத்தில் அவன் சொல்வினால் தன்னுடையதென்று வராமலிருக்கவேண்டும். இது இக்ராருக்குரிய ஷர்த்தாகும். எனவே ஒருவன், என் வீடு, என் உடை, அல்லது எனக்காக வாங்கின வீடு ஜைதுக்காயிருக்கும் என்று கூறினால், அல்லது ஜைதின் மீதுள்ள என்னுடைய கடன் உமருக்காயிருக்கும் என்றால் இவையெல்லாம் வீணானவையாயிருக்கும். ஏனெனில், தன்னளவில் அப்பொருளைச் சேர்த்துப் பேசியபோதே அது அவனுடைய ஆட்சிக்குரியதாக ஆகிவிடுகிறது. எனவே, அது மற்றொருவனுடைய உடைமையாக ஆகாது.

நீ இதை எனக்கு விற்றுவிடு என்று ஒருவன் மற்றவனிடம் சொன்னால் அது அவனுடைய உடைமை என்பதை விண்ணப்பம் செய்ததாகிடும். இதை இரவல் கொடு என்றோ, இதனை கூலிக்குக் கொடு என்றோ கூறினால் அந்தப் பொருளின் பியோஜனத்திற்கு உரியவனாக்கிவிடு என்று விண்ணப்பம் செய்வதாகும். அது இன்ன விதத்தில் அவனுக்குப் பிரயோஜனமென்பதை அவன்தான் தெளிவாகச் சொல்லவேண்டும்.

ஒருவன், எனக்கு உன் பொறுப்பில் ஆயிரம் உண்டு என்று கூறினான். அவன் உனக்கு என் பொறுப்பில் ஆயிரத்தைவிட அதிகமில்லை என்று பதில் கூறினான்; அல்லது கணக்குப் பார்ப்போம் என்றான், அல்லது ஜைதுக்கு என் பொறுப்பில்

ஆயிரம் உண்டு என்று எழுதுங்கள் என்றான்; அல்லது என் பொறுப்பிலுள்ள இன்னதைக் கொண்டு சாட்சி சொல்லுங்கள் என்றான்; அல்லது இந்தச் சீட்டிலுள்ளதைப் பார்த்து சாட்சி சொல்லுங்கள் என்றான். இந்த நிலைகளிலெல்லாம் விண்ணப்பமாக (இக்ரார்) ஆகாது. ஆனால் நான் உங்களை இதற்கு சாட்சியாக்குகிறேன் என்று கூறினால் அது இக்ரார் (விண்ணப்பம்) ஆகும்.

ஒருவன் தன் மீது சாட்சி சொன்னவனைக் குறித்து அவன் சொன்ன சாட்சியில் நீதியுள்ளவன் என்று கூறினால் அது இக்ராராகும். நான் குடியிருக்கும் வீடு, உடுத்தியிருக்கும் கைலி ஜைதுடையதாயிருக்கும் என்று கூறினால் அது இக்ராராகும். ஏனெனில், குடியிருப்பதும் உடுத்தியிருப்பதும் இன்னொருவருடைய பொருளா யிருப்பது சாத்தியமுடையதாகும்.

ஒருவன், எனக்காக நான் எழுதிய கடனாகிறது, அல்லது என் பெயரைக் கொண்டு ஜைது பேரில் எழுதிய கடனாகிறது உமருக்குரியதாக இருக்கும் என்று கூறினால் அது இக்ரார்தான். எனக்கு ஜைதிடமிருந்து வர வேண்டிய கடனாகிறது உமருக்குரியதாயிருக்கும் என்று சொன்னால் இக்ரார் ஆகாது. என்மீது இந்த சீட்டில் உள்ளது இரவல் என்று சொன்னால் தவிர.

ஒருவனிடமிருக்கும் குறிப்பான ஓர் அடிமையை சுதந்திரமானவன் என்று இவன் இக்ரார் செய்தான்; அல்லது சாட்சி சொன்னான், பின்பு அவனை இவன் விலைக்கு வாங்கினால், அல்லது ஏதேனும் ஒரு விதத்தில் அவன் இவனுடைய உடைமையாகி விட்டால் உடனே அவனை, (அந்த அடிமையை) சுதந்திரமானவன் என்று தீர்ப்பளிக்கப்படும்.

நான் கடன் படாத ஒரு தொகையை கடன் பட்டதாகச்சொல்லி விண்ணப்பம் செய்வேன். அதற்கு நீங்கள் சாட்சிகளாயிருங்கள் என்று ஒருவன் சொல்லி, அவ்வாறே இன்னாருக்கு நான் இவ்வளவு கொடுக்க வேண்டுமென்று அவன் இக்ரார் செய்தால், இக்ரார் செய்தது அவன் மீது விதியாகிவிட்டது. சாட்சி வைத்ததில் எந்த பலனும் இல்லை.

மரண வியாதியின் போது தன்னுடைய அனந்தரக்காரர்களில் ஒருவனுக்கு இக்ரார் செய்வது கூடும். கடனைப்பற்றியோ, குறிப்பான பொருளைப்பற்றியோ இக்ரார் செய்யலாம். எனவே, அதனை அவனுடைய சொத்திலிருந்தே நிறை வேற்றப்படும். அனத மற்ற அனந்தரக்காரர்கள் பொய்யாக்கினாலும் சரி. ஏனெனில், அவன் இருக்கின்ற நிலைமையாகிறது, வழமையாகப் பொய்சொல்பவனும் கூட மெய் சொல்கிறவனாகவும், கெட்டவனும் தவ்பாச் செய்கிறவனாகவும் ஆகிவிடும் நேரமாக இருப்பதால் அவனுடைய இக்ரார் உண்மையாக்கப்படும். எனினும், இவ்வாறு இக்ரார் செய்ததை அதற்குரியவனுக்குக் கொடுக்கவேண்டுமென்பதற்கு அந்த உரியவனிடம் சத்தியம் கேட்டுக்கொள்வது அனந்தரக்காரனுக்குக் கூடும்.

நோயுற்றிருக்கும் ஒருவன் தான் சுகமாயிருக்கும்பொழுது ஒருவனுக்கு ஒரு பொருளை நன்கொடையளித்து அதனை அவனுக்கு உரிமையாக்கிக் கொடுத்து விட்டேன் எனக்கூறினால் அது ஏற்றுக்கொள்ளப்படும். சுகமாயிருக்கும் பொழுது

கொடுத்தது என்ற விபரத்தைச் சொல்லாமல் பொதுவாகச் சொன்னாலோ, அல்லது அவனுடைய சொந்தப் பொருளாக இருக்கும் ஒன்றை வேறொருவனுடைய பொருளென்று இக்ரார் செய்தாலோ வாரிசுகள் அதனை ஆகுமாக்கவேண்டும்.

இவ்வாறே மரண வியாதியிலிருக்கும் ஒருவன் நான் மரணவியாதியிலிருக்கும் போது கொடுத்தேன் என்று சொன்னால் அதில் வாரிசுகளின் ஆகுமாக்குதல் பொறுப்பாக்கப்படும். எனினும், பெரும்பாலான ஃபுகஹாக்கள் மேற்கூறப்பட்ட இக்ரார் ஒப்புக்கொள்ளப்படமாட்டாது என்றார்கள். ஏனெனில் அவன் சொல்வது பொய்யென்று உறுதியாகுவதால் ஒப்புக்கொள்ளக்கூடாதென்றார்கள். எனவே அல்லாஹ்வை பயந்த காளியானவரும் முஃப்தியும் இதனைச் சரியென்று ஃபத்வாக் கொடுப்பது சரியல்ல. இதில் அனந்தரக்காரர்களுக்குக் குறைவை உண்டாக்க வேண்டுமென்று இவ்வாறு அவன் செய்திருந்தால் கண்டிப்பாக அதற்கு ஃபத்வா கொடுப்பது கூடாது. அவ்வாறு அவன் இக்ரார் செய்தது ஹராமாகுமென்றும், அவ்வாறு யாரும் இக்ரார் செய்தால் செய்யப்படுகிறவன் அப்பொருளைப் பெறுவது அவனுக்கு ஹலால் அல்ல என்றும் ஒரு கூட்டத்தினர் கூறியுள்ளனர்.

நோயாக இருக்கும்போது நான் ஜைதுக்கு இன்னதைக்கொடுக்க வேண்டுமென்று சொன்னான். சுகமாக இருந்தபோது அம்ருக்கு இன்னதைக்கொடுக்க வேண்டும் என்றும் சொல்லியிருந்தான். இந்த இரண்டு இக்ராரும் சமமாயிருக்கும். ஒன்றைவிட மற்றொன்றை முற்படுத்துவது கூடாது. இரண்டு இக்ராரும் சரியானதே!

அவனுக்கு என் மீது ஒரு பொருளுண்டு என்று அறியப்படாத ஒரு பொருளை குறிப்பில்லாமல் இக்ரார் செய்வதும் கூடும். அவ்வாறு செய்தால் அதன் விபரத்தை இக்ரார் செய்தவனிடமே கேட்டுத்தெரிந்து கொள்ளவேண்டும். அவன் ஸலாமுக்கு ஜவாபு சொல்வது, அவன் நோய் விசாரிப்பது ஆகியவற்றைக் கொண்டு விபரம் கேட்கப்படும். மேலும் எந்நிலையிலும் சேமித்து வைப்பது கூடாத பன்றி, அல்லது பிரயோஜனமில்லாத நாய் ஆகியவை போன்றவை அல்லாத வேறு பொருளை அவன் விபரித்தால் அது ஏற்றுக்கொள்ளப்படும்.

அவனுக்கு என் மீது முதலுண்டு என்று சொன்னால் பெறுமதியுள்ள பொருளைக் கொண்டு அதற்கு விபரம் கூறுவதை ஏற்றுக்கொள்ளப்படும். அது கொஞ்சமாக இருந்தாலும் சரி. நஜீஸான பொருளைக்கொண்டு விபரம் கூறினால் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

வமிசத்தை விண்ணப்பம் செய்வதும் ஏற்றுக்கொள்ளப்படும். அதாவது; ஒருவன் மற்றொருவனை இவன் என்னுடைய மகன் என்று விண்ணப்பம் செய்ய அதனை அவனும் உண்மைப்படுத்துகிறான். இருவரும் தந்தையும் மகனுமாக இருப்பதற்குரிய வயதும் பொருத்தமானதாயிருந்து மார்க்கத்திலும் வழக்கத்திலும் அதனைப்பொய்யாக்குவதற்குரிய காரணங்களுமில்லாமலிருந்து அவன் வேறு எவருக்கும் மகனாக இருப்பதும் அறியப்படவில்லையெனில் அவன் சொல் உண்மையாக்கப்பட்டு வமிசம் தரிபடும். ஆஸ்தி, அனந்தரம், உரிமை, பாண்டகம்(சாமான்) ஆகிய அனைத்தும் உண்டாகும். மகனென்பவன் அவனை உண்மைப்படுத்தவில்லையானாலும், அல்லது ஏதும் சொல்லாமல் வாய்மூடி

இருந்தாலும் அவன் மகன் என்பது பின்னால் சாட்சியைக்கொண்டு மட்டும்தான் தரிபடும்.

ஒருவன் ஒரு பொருளை இது ஜைதுக்குரியது என்று சொல்லி விட்டுப்பிறகு, எனினும் இது அம்ருக்குரியது என்றும் கூறுகிறான். அல்லது இதனை ஜைதிடமிருந்து அபகரித்தேன் என்று சொல்லிவிட்டு எனினும், அம்ரிடமிருந்து அபகரித்தேன் என்றும் சொல்கிறான். இந்த நிலையில் அந்தப்பொருள் ஜைதிடத்திலேயே ஒப்படைக்கப்படும். இதில் இரண்டு வாசகங்களையும் சேர்த்துச்சொன்னாலும் சரி, பிரித்துச் சொன்னாலும் சரி, அந்தப்பொருள் ஜைதிடத்திலேயே ஒப்படைக்கப்படும். ஏனெனில், முந்திய சொல்லின் மூலம் ஜைதுக்குரியதாக அது ஆகிவிட்டதற்குப்பின் அம்ருக்குரியதாக அது எவ்வாறு ஆக முடியும்? ஆனால் அம்ருக்கு என்று இரண்டாவது வாசகத்தைச் சொல்லியதால் அது போன்று ஒரு பொருளின் அளவுக்கு அம்ருக்கு அவன் கடன்காரனாக ஆகிடுவான்.

இந்த வீடும், இதிலுள்ள பொருட்களும் இன்ன மனிதருக்கு என்று ஒருவன் சொன்னால் அச்சொல் கூடும். அந்த வீடும் அவன் இக்ரார் செய்தநேரத்தில் அந்த வீட்டிலிருந்த பொருட்களும் இக்ரார் செய்யப்பட்டவனுக்கு உரிமையாகிவிடும். பிறகு அவ்விருவருக்குமிடையே அந்தப்பொருட்களில் பிணக்கு ஏற்பட்டால், அதாவது, இக்ராருடைய நேரத்தில் இந்தப்பொருள் வீட்டில் இருந்தது என்பதிலும் இல்லை என்பதிலும் பிணக்கு ஏற்பட்டால் இக்ரார் செய்தவனுடைய சொல் சத்தியமில்லாமலேயே உண்மையாக்கப்படும். மற்றவன் சாட்சி கொண்டு வந்தால் மற்றவனின் சொல்தான் ஏற்றுக்கொள்ளப்படும்.

ஒருவன் ஒரு பொருளை விற்று விட்டதாக அல்லது நன்கொடையாகக் கொடுத்து அதை ஒப்படைத்துவிட்டதாக விண்ணப்பம் செய்தபின் அது கூடாமல் போய்விட்டதாக விதண்டாவாதம் செய்தால் அது ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. ஆனால் அவனுடைய நிலைமையின் வெளித்தோற்றம் அவன் சொல்வது உண்மையாயிருக்கும் என்பதை அறிவித்தால், அவன் ஏதும் விபரம் அறியாத மோட்டு கிராமப்புறத்து பாமரனாக இருப்பதற்காக அவனுடைய சொல் ஏற்றுக் கொள்ளப்படும்.

ஒருவன் மற்றொருவனுக்குக் கடன் கொடுக்கவேண்டுமென்பதை இக்ரார் செய்தான்; பிறகு அதனைச் செலுத்திவிட்டதாகவும் ஆனால் கொடுத்ததை மறந்து போய் இக்ரார் செய்துவிட்டதாகவும் சொன்னால் அவனுடைய சொல் விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப் படும். கடன் கொடுத்தவனிடம் தனது கடன் திருப்பித் தரப்பட்டதா இல்லையாவென்று சத்தியம் செய்யச்சொல்லப்படும். ஆனால் அவன் கொடுத்துவிட்டதாக சாட்சிகொண்டு வந்தால் அவனுடைய சொல்லே ஏற்றுக்கொள்ளப்படும். முதலில் எனக்கு சாட்சி இல்லை என்று செல்லிவிட்டு, பிறகு சாட்சியைக் கொண்டுவந்தாலும் ஏற்றுக்கொள்ளப்படும்.

ஒருவன் மற்றொருவனுக்கு ஒரு ஆயிரம் ரூபாய் கொடுக்கவேண்டுமென இக்ரார் செய்தபின், எவ்விதக்காரணமும் கூறாமல் நூறு ரூபாய்தான்

கொடுக்கவேண்டுமெனச் சொல்லுகிறான். இப்பொழுது முந்தியதில் பிந்தியது நுழைந்து விடும். முந்தியதே தீர்ப்பாக்கப்படும்.

இன்ன மனிதன் பேரில் எனக்கு எந்த பாத்தியதையும் கிடையாது என்று ஒருவன் இக்ரார் செய்தபின் பாத்தியதை உண்டு என்று சாட்சி கொண்டு வந்தால், அதை ஒப்புக்கொள்ளலதில் கருத்து வேறுபாடு கூறப்பட்டுள்ளது. அவற்றில் பலமான சொல் என்னவென்றால், நான் அறிந்தவரை, அல்லது நான் எண்ணியவரை எந்த பாத்தியதையும் கிடையாது என்று சொல்லிய பிறகு சாட்சியைக்கொண்டு வந்தால்தான் ஏற்றுக்கொள்ளப்படும். இந்தச்சொல்லைக் கூறவில்லையானால் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. ஆனால் மறதியாகச் சொல்லிவிட்டேன் என்றோ அல்லது வெளிப்படையான தவறுதலாகச் சொல்லிவிட்டேன் என்றோ அவன் மன்னிப்புத்தேடினால் தவிர.

## வஸிய்யத்தின் பாடம்

வஸிய்யத்துச் செய்லது பற்றி அல்லாஹு தஆலா குர்ஆனில் பல ஆயத்துகளில் குறிப்பிட்டுள்ளான். லுக்மானுல் ஹகீம் (அலை) அவர்களுக்குக் கொடுத்தது போல் ஹிக்மத் என்னும் ஞானத்தை அல்லாஹ் வேறு யாருக்கும் கொடுக்கவில்லை. அந்த ஹிக்மத்தினால் அவர்கள் செய்த உபதேசங்களை (வஸிய்யத்துகளைப்) போல் வேறுயாரும் செய்யவில்லை. அவர்கள் செய்த உபதேசங்களில் சில:

1) எந்த நிலையிலும் அல்லாஹுத்தஆலாவுக்கு இணைவைப்பதை நினைத்துப்பார்க்கவும் கூடாது.

2) எல்லா நேரங்களிலும் அல்லாஹ்வை நினைத்துக்கொண்டே இருக்கவேண்டும்.

3) எப்பொழுதும் மரணத்தை நினைத்துக்கொண்டே இருக்கவேண்டும்.

4) பிறருக்குச்செய்யும் உபகாரத்தை மறந்து விடவேண்டும்.

5) பிறர் உனக்குச்செய்யும் உபகாரத்தை மறக்காமலிருக்கவேண்டும்.

6) சபைகளில் நாவைப் பேணவேண்டும்.

7) உணவு விஷயத்தில் தொண்டையைப் பேணவேண்டும்.

8) பிறர் மனையிலிருந்தால் கண்ணைப் பேணவேண்டும்.

9) தொழுகையில் இதயத்தைப் பேணவேண்டும். இவ்வாறான ஏராளமான உபதேசங்களைச் செய்துள்ளார்கள்.

வஸிய்யத்து என்பதற்குப் பொருளாவது: ஒருவன் தன் உடைமையை தன்னுடைய வாழ்விற்குப் பின் எவ்வாறு செயல் படுத்துவது என்பது பற்றி

உரியவர்களிடம் கூறி தன்னுடைய உலகப்பொருட்களை மறுமையின் நன்மைக்காகப் பயன்படுத்தச்செய்வதாகும். இவ்வாறு செய்தல் நன்மையான செயலென்றும் அது தேவைதான் என்றும் குர்ஆனிலும் ஹதீஸிலும் கூறப்பட்டுள்ளது.

"குறைந்த அளவு பொருளுள்ளவரும், ஓரிரவு இரண்டு இரவுகள் உலகில் தங்குவோம் என்ற எண்ணமுள்ளவரும் தன் சொத்தை தனக்குப் பின் எவ்வாறு செயல்படுத்தவேண்டுமென்ற விபரத்தை வஸிய்யத் என்னும் மரண சாஸனமாக எழுதித் தன் தலை மாட்டில் வைத்துக்கொள்வது முஸ்லிமின் மீது கடமையாகும்" என நபி ஸல்லலல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அருளியுள்ளார்கள். ஏனெனில், தனக்கு மௌத்து எப்பொழுது வருமென்று எவரும் அறியமாட்டார். ஆகையால் எந்நேரமும் தயார் நிலையில் இருந்து கொள்ளவேண்டும்.

தன்னுடைய சொத்திலிருந்து மூன்றிலொரு பாகத்தை விட அதிகமாக வஸிய்யத்துச்செய்தல் மக்ரூஹ் ஆகும். ஆனால் தன்னுடைய வாரிசுக்காரர்களுக்குச் சொத்து கிடைக்கக்கூடாதென்ற எண்ணத்தில் இவ்வாறு செய்தால் அது ஹராமாகும்.

சுதந்திரமான, பருவ வயதடைந்த, தன் யுக்தானுசாரப்படி செய்யத் தகுதியுள்ள ஒருவன், ஹலாலான செயல்களுக்காக தன்னுடைய பொருளை வஸிய்யத்துச் செய்வது கூடும். மேற்கூறப்பட்ட நிபந்தனைகளால் சிறுபிள்ளை, பயித்தியக்காரன், அடிமை, போதையுள்ளவன், நிர்பந்திக்கப்பட்டவன் ஆகியோரின் வஸிய்யத்து செல்லுபடியாகாது. ஹலாலான காரியங்களுக்குத்தான் வஸிய்யத்துச் செய்ய வேண்டுமென்று சொல்வதில் ஷரீஅத்தில் விலக்கப்பட்ட (கோவில், தவரணை போன்ற) காரியங்களுக்கு வஸிய்யத்துச் செய்தல் கூடாது என்பது தெளிவாகிவிட்டது.

இனிமேல் கட்டப்படும் மஸ்ஜிதிற்காக வஸிய்யத்துச்செய்வதாகக் கூறினால் அந்த வஸிய்யத்து செல்லுபடியாகாது. அவ்வாறு வஸிய்யத்துச்செய்த பின் அவனுடைய மௌத்துக்கு முன் அது கட்டப்பட்டு விட்டாலும் சரி.

வஸிய்யத்துச் செய்கின்ற நேரத்தில் உறுதியாய் ஏற்பட்டிருந்த கர்பத்திற்கும் வஸிய்யத்து கூடும். எனவே வஸிய்யத்துச்செய்த பின் ஆறு மாதத்திற்குக் குறையாத காலத்துக்குள் உயிராகப்பிறந்த குழந்தைக்காகச் செய்யப்பட்ட வஸிய்யத்துக்கூடும். அல்லது வஸிய்யத்துச் செய்ததிலிருந்து நான்கு ஆண்டுகளுக்குள் மற்றொரு கணவனுக்கோ அல்லது எஜமானுக்கோ அந்தப் பெண் விரிப்பாக இருக்காமல் அவனுக்கே கர்ப்பமுண்டாகி பிறந்த குழந்தைக்கும் வஸிய்யத்துச்செய்வது கூடும். இவ்வாறு நான்கு ஆண்டுகளுக்குப்பின் குழந்தை பெறும் பெண்ணைப்பற்றித் தீய எண்ணம் கொள்வது ஹராம். ஆனால் அவள் விபச்சாரம் புரிந்ததாக மார்க்க முறையில் ஆதாரமும் சாட்சிகளும் இருந்தாலோ, அல்லது விபச்சாரம் புரிந்ததாக அவளே ஒப்புக்கொண்டாலோ அந்த வஸிய்யத்து நிறைவேற்றப்படாது.

வஸிய்யத்து என்ற வார்த்தையைக் கூறாமல் பொதுவாக 'கொடுங்கள்' என்று சொன்னாலும் கூடும். இதை இந்த இருவரில் யாராவது ஒருவருக்கு விற்றுவிடு என்று முதலாளி தன் காரியஸ்தனிடம் சொன்னால் அது கூடும். அவர்கள் இருவரில் ஒருவரை காரியஸ்தனே குறிப்பாக்கிக்கொள்வான்.

வஸிய்யத்துச்செய்யும் நாளில் உயிரோடிருக்கும் ஒருவனுக்கு இனிமேல் பிறக்கப்போகிற ஒருவனைத் தொடர்படுத்தி வைத்துச்சொனால் கூடும். உதாரணமாக; இப்பொழுது இருக்கிற ஜைதுடைய மகளுக்கும் இனிமேல் அவனுக்குப்பிறக்கும் குழந்தைகளுக்கும் என்று தொடர்படுத்தி வஸிய்யத்து செய்வது கூடும்.

வாரிசுக்காரரில் ஒருவனுக்கு வஸிய்யத்துச்செய்வது கூடும். ஆனால் வஸிய்யத்துச்செய்தவன் இறந்த பிறகு மற்ற வாரிசுக்காரர்கள் அதனை ஏற்றுக்கொண்டால்தான் கூடும். அந்த வஸிய்யத்தும் மூன்றிலொரு பங்கைவிடக் கூடுதலாகவும் இருக்கக்கூடாது. அவன் உயிருடன் இருக்கும்பொழுது வாரிசுக்காரர்கள் அதனை ஆகுமாக்கி வைப்பதென்ற பேச்சுக்கே இடமில்லை. ஏனெனில் அப்பொழுது அவர்களுக்கு அதில் எவ்வித உரிமையுமில்லை.

ஒருவன் தன் மக்களில் ஒருவனுக்கு ஒரு பொருளை வஸிய்யத்துச்செய்து அதனை மற்ற அனந்தரக்காரர்கள் ஆகுமாக்கி வைக்காமலேயே மார்க்க முறைப்படி அது செல்லுபடியாவதற்குரிய உபாயமாவது என்னவென்றால், அவன் தனக்கு வாரிசாக வரக்கூடாத மற்றொருவனுக்கு வஸிய்யத்துச்செய்து, அதில் தன் மகனுக்கு இன்னதை நன்கொடையாக நீ கொடுக்கவேண்டுமென்று நிபந்தனையிட்டு விட்டால், அவன் அதனை ஏற்றுக்கொண்டு வஸிய்யத்துச்செய்தவன் இறந்த பின் அந்த வஸிய்யத்தில் சொல்லியபடி அவனுடைய மகனுக்குக் கொடுத்தால் அந்த வஸிய்யத்துக் கூடும். அந்த மகன் அதனையும் பெற்றுக்கொண்டு வாரிசுப்பங்கையும் பெறுவான். மற்ற வாரிசுக்காரர்கள் இதனை ஒப்புக்கொண்டாலும் சரி, ஒப்புக்கொள்ளாவிட்டாலும் சரி.

வாரிசுக்காரர்களுக்கு, பின்னால் பங்காக எவ்வளவு கிடைக்குமோ அந்த அளவை வஸிய்யத்துச் செய்வது வீணாகும். ஏனெனில், அவன் வஸிய்யத்துச் செய்யாமலிருந்தாலும் அந்த அளவு அவர்களுக்குக் கிடைக்கவே செய்யும்.

ஏழைகட்கு என்று ஏதேனும் ஒன்றை வஸிய்யத்துச் செய்தால் அதிலிருந்து வாரிசுக்காரர்களுக்குச் சிறிதளவேனும் கொடுத்தல் கூடாது. அவர்கள் ஏழைகளாயிருந்தாலும் சரி.

வஸிய்யத்து என்பது நாவினால் மொழிவது கொண்டு தான் கூடும். வஸிய்யத்துச்செய்வதில் மரணத்திற்குப் பிறகு என்று சொல்லவேண்டியதில்லை. ஏனெனில், வஸிய்யத்து என்பதே அவனுடைய மரணத்திற்குப் பிறகுதான் செயல்படும் என்பது மார்க்கச்சட்டமாகும். வஸிய்யத்து என்ற வார்த்தையைச் சொல்லாமல் இன்னாருக்கு இன்னதைக்கொடுங்கள் என்று சொன்னால் அதில் மரணத்திற்குப் பின் என்று கூறுவது வஸிய்யத்துக்கு ஷர்த்தாகும்.

வஸிய்யத்தை எழுத்துமூலம் குறிப்பிடுவது சாடையாக ஆகுமே தவிர கலப்பற்ற வஸிய்யத்தாக ஆகாது. இவ்வாறே 'அவனுக்காக இதனை ஆக்கிவிட்டேன்' என்று சொல்வதும், இதனைப் பிரித்து வைத்து விட்டேன் என்று சொல்வதும் கலப்பற்ற வஸிய்யத்தாக ஆகாது. இவ்விதமான நேரத்தில் அவனோ, அவனுடைய அனந்தரக்காரனோ வஸிய்யத்தில் நினைத்ததை நாவினால் மொழிய வேண்டும். இந்தக்

கூடிதும், அல்லது அதிலுள்ளது என்னுடைய வஸிய்யத்து என்று சொல்வதும் போதாது.

வஸிய்யத்து செல்லுபடியாகுவதென்பது, அதற்கு பாத்தியதை உடைய வனாகிய வஸிய்யத்துச் செய்யப்பட்டவன் அதனை ஒப்புக் கொள்ளவேண்டும். வஸிய்யத்துச் செய்தவன் மௌத்தான பிறகு தாமதமாக ஒப்புக்கொண்டாலும் சரியே. அவனுடைய மௌத்துக்கு முன்னால் ஒப்புக்கொள்ளவும் செய்யலாம். அல்லது மறுக்கவும் செய்யலாம். அதனால் எவ்விதப் பிரயோஜனமும் இல்லை. அவனுடைய மௌத்துக்கு முன்னால் மறுத்துவிட்டு, மௌத்துக்குப் பிறகு ஒப்புக்கொண்டால் கூடும். மௌத்துக்குப் பிறகு ஒப்புக்கொண்டுவிட்டு பிறகு மறுப்பதினால் அது விடுபட்டுப்போகாது.

வஸிய்யத்துச் செய்யப்பட்டவனாகிய பாத்தியதை உடையவன் ஒப்புக்கொள்ளவேண்டுமென்பது ஷர்த்தென்று சொல்வதெல்லாம், குறிப்பான ஒருவனாக இருந்தால் தான். மாறாக, ஏழைகட்கு என்று பொதுவான வஸிய்யத்தாக இருந்தால் ஒப்புக்கொள்வது ஷர்த்தில்லை. எனினும் வஸிய்யத்தில் ஏழைகள் எத்தனை நபர்களாக இருந்தாலும் மூன்று ஏழைகளின் மீது சுருக்குதல் போதுமானதாகும். அவர்களுக்கு மத்தியில் சம அளவாகப் பங்கிட வேண்டுமென்பது அவசியமல்ல.

வஸிய்யத்துச் செய்வது அவனுடைய சொத்தில் மூன்றிலொரு பங்கைவிட அதிகமில்லாமலிருக்கவேண்டும். வாரிசுக்காரர்கள் பணக்காரர்களாயிருந்தாலும் சரி, ஏழைகளாக இருந்தாலும் சரி, தனது சொத்தில் மூன்றிலொரு பங்கை விடவும் கூடுதலாக இருக்கக்கூடாது. மூன்றிலொரு பங்கில் நின்றும் ஒரு சிறிதளவாவது குறைவாக இருப்பதே உயர்வாகும்.

வஸிய்யத்துச் செய்தவன் இறந்த பின் அதனை ஒப்புக் கொண்ட பாத்தியமுடையவனுக்கு அந்தப் பொருள் உரிமையாகி விடும். எனவே அவன் இறந்த நேரத்தில் இருந்து அப்பொருளிலிருந்து வரும் வருமானம் அவனையே சேரும். அது ஒரு பசுவாக இருந்தால் அதிலிருந்து கறக்கப்படும். பாலும் அது போடும் கன்றும் அவனுக்குரியதுதான். அவ்வாறே அதற்கு தீவனம் கொடுப்பது, அதனைப் பாதுகாப்பது போன்ற செலவுகளும் அவனைச் சேர்ந்ததுதான்.

மரண நோய் நேரத்திலோ, சுகமாக இருக்கும் போதோ செய்த வஸிய்யத்துக்காரனின் ஆமிஷத்தில் (சொத்தில்) மூன்றிலொன்றுக்கு அதிகமாக இருந்து, அந்த அதிகத்தை அனந்தரக்காரன் தடுத்து விட்டால் அந்த அதிகத்தில் வஸிய்யத்து செல்லுபடியாகாது. அனந்தரக்காரர்களில் ஒருவன் சிறு பிராயமுள்ளவனாக இருந்து, அவன் சில மாதங்களில் பருவமடைந்தவனாகி விடுவான் என்றிருந்தால் அது வரையிலும் அந்த வஸிய்யத்துச் சொத்து தடுத்து வைக்கப்படும். அவன் பருவமடைய அதிக காலமாகுமென்றிருந்தால் மூன்றில் ஒன்றுக்கு மேற்பட்ட அந்த அதிகத்தில் வஸிய்யத்து செல்லுபடியாகாது. அனந்தக்காரர்களில் ஒருவன் அதனை ஆகுமாக்கி வைத்தால் அந்த அதிகத்தில் இருந்து அவனுடைய பங்குக்கு மட்டும் செல்லுபடியாகும்.

ஒருவன் தான் சுகமாயிருக்கும்போதோ அல்லது நோயுற்றிருக்கும் போதோ தனது மரணத்தைக் கொண்டு கொழுகிய அடிமையை உரிமை விடுதல், நோயின் போது வட்டுருக்கமாக்கி வைக்கப்பட்ட வக்பு, நன்கொடை, கடன் ஆகியவற்றை விட்டும் மஹரை விட்டும் நீக்கல் ஆகியவைகளைச் செய்தால் அந்த மூன்றிலொன்றிலிருந்து தான் கணக்கிடப்படும். சுகமாயிருக்கும்போது செய்யப்பட்ட உரிமை விடுதல், நன்கொடை ஆகியவை மொத்தச் சொத்திலிருந்து தான் கணக்கிடப்படும்.

அவன் வஸிய்யத்துச் செய்தாலும் செய்யாவிட்டாலும் அவனுடைய ஃபர்ளான ஹஜ்ஜிற்குரிய செலவையும், அவனால் குழந்தை பெறத் தேடப்பட்ட சுர்ரிய்யத் என்னும் அடிமைப்பெண்ணின் விலையையும் மொத்தச் சொத்திலிருந்து நீக்கி விட வேண்டும். அவ்வாறு நீக்காமல் ஒருவனின் சொத்தை பங்கு வைத்துக் கொள்வது அனந்தரக்காரர்களின் மீது ஹராமாகும்.

இச்சட்டத்தை பலர் இக்காலத்தில் அறியாமல் ஒருவன் எவ்வளவு சொத்துக்கள் வைத்து விட்டுச் சென்றாலும், அவன் ஹஜ்ஜு செய்யாமல் இறந்து விட்டதை கவனிக்காமல், அவன் சொத்திலிருந்து அவனுக்காக ஹஜ்ஜு செய்யப்பட வேண்டுமென்பதையும் ஆர்ப்பளவும் சிந்திக்காமல் அவன் வைத்துவிட்டுச் சென்ற சொத்துக்களைப் பங்கு போட்டு அபகரித்துக் கொள்கின்றனர். குர்ஆன் கத்தம் ஆயிரக்கணக்கில் பல ஆயிரங்கள் செலவு செய்து ஓதி உணவு, ரொட்டி தயார் செய்து ஆயிரக்கணக்கானவர்களுக்குக் கொடுத்து விட்டால் அவனுக்கு சொர்க்கம் கிடைத்து விடுமென்று அறிவீனர்கள் நினைப்பதும் அதனைச் சிலர் ஏற்றுக் கொண்டு செயல்படுவதும் புதுமையிலும் புதுமையாகும்.

ஒருவன் நன்கொடையளித்தது அவன் நோயுற்றிருக்கும் பொழுதா அல்லது நோயற்ற நிலைமையிலா என்பது பற்றி நன்கொடை பெற்றவனும் இறந்தவனின் அனந்தரக்காரனும் தர்க்கம் செய்து கொண்டால், அந்த நன்கொடை வட்டுருக்கமாகச் செய்யப்பட்டிருப்பதாலும், அது நன்கொடை பெற்றவன் கைவசமிருப்பதாலும் நன்கொடை பெற்றவனைத்தான் சத்தியம் செய்வது கொண்டு உண்மையாக்கப்படும்.

அவன் நன்கொடையளித்த நேரத்தில் இருந்த வியாதியில்தான் நன்கொடையளித்தவன் இறந்தானென்று அனந்தரக்காரன் சொல்கிறான். அந்த வியாதி சுகமாகி, பிறகு மறுவியாதியில்தான் அவன் இறந்தான். அல்லது திடீர் என்று இறந்து விட்டான் என்று நன்கொடை பெற்றவன் சொல்கிறான். இப்பொழுது அந்த வியாதி பயங்கரமானதாக இருந்தால் அனந்தரக்காரன் உண்மையாக்கப்படுவான். இல்லாவிடில் நன்கொடை பெற்றவன் உண்மையாக்கப்படுவான்.

பயங்கரமான மரண வியாதி என்பது. தொடராக வயிற்றுப் போக்கு ஏற்படுவது, உணவு செறிக்காமலிருந்து வேதனையுடன் வெளிப்படுவது, ஈரல் போன்ற உள்ளுறுப்புகளில் ஒன்றிலிருந்து இரத்தம் வெளியாவது, இடைவிடாமல் காய்ச்சல் ஏற்பட்டிருப்பது, கர்ப்பமுற்றவளுக்குப் பிரசவவேதனை ஏற்படுவது, (அவள் அதிகம் பிள்ளை பெற்றவளாக இருந்தாலும் சரி) பிள்ளை பெற்றபின் நஞ்சுக் கொடி வெளிவராமலிருப்பது, இரண்டு நபர்களுக்கிடையில் அல்லது இரண்டு கூட்டங்களுக்கிடையில் சண்டை நடப்பது, கப்பலில் பயணம் செய்பவனுக்கு, காற்றும்

அலையும் சேர்ந்து கடல் கொந்தளிப்பு ஏற்படுவது. (அவன் நன்கு நீந்தத் தெரிந்தவனாகவும் கரை சமீபத்திலுள்ளதாகவும், இருந்தாலும் சரி) ஆகியவையாகும். வாந்தி பேதி, குத்து வியாதி போன்ற நோய்கள் கடினமாயிருக்கும் காலங்களில் மனிதர்கள் செய்யும் லேவாதேவியில் வஸிய்யத்துச் செய்வதும் மூன்றிலொரு பங்கிலிருந்துதான் நிறைவேற்றப்படும்.

பக்கத்து வீட்டுக்காரர்களுக்குக் கொடுக்க வேண்டுமென்று வஸிய்யத்துச் செய்திருந்தால், அவனுடைய வீட்டைச் சுற்றிலும் நான்கு பக்கங்களில் ஒவ்வொரு பக்கத்திற்கும் நாற்பது வீடுகள் வீதம் நூற்றி அறுபது வீடுகளுக்குக் கொடுக்க வேண்டும். ஒவ்வொரு வீட்டின் பங்கையும் அதில் குடியிருக்கும் நபர்களின் எண்ணிக்கையளவுக்குப் பங்கிட வேண்டும்.

இவ்வாறு வஸிய்யத்துச் செய்தவனுக்கு இரண்டு மூன்று வீடுகள் இருந்தால், எந்த வீட்டில் அவன் அதிகமாகக் குடியிருந்தானோ அந்த வீட்டைச் சுற்றிலுமுள்ள வீடுகளுக்குக் கொடுக்க வேண்டும். எல்லா வீடுகளிலும் சமமாக குடியிருந்திருந்தால் ஒவ்வொரு வீட்டைச் சுற்றிலுமுள்ள நூற்றி அறுபது வீடுகளுக்குக் கொடுக்க வேண்டும்.

உலமாக்களுக்கு என்று வஸிய்யத்துச் செய்தால் தஃப்ஸீர், ஹதீஸ், ஃபிக்ஹ் ஆகிய கல்விகளைக் கற்றவர்களுக்குக் கொடுக்கவேண்டும். இந்த மூன்று கல்விகளையும் தனித்தனியாகக் கற்றவர்களாக இருந்தால் ஒவ்வொரு பிரிவிலும் மும்மூன்று நபர்களுக்குக் கொடுப்பது போதுமாகும்.

மனிதர்களில் அதிகம் படித்தவர்களுக்கு என்று வஸிய்யத்துச் செய்திருந்தால் ஃபிக்ஹு படித்தவர்களுக்குக் கொடுக்க வேண்டும். காரீகளுக்கு என்பதாக வஸிய்யத்துச் செய்திருந்தால் குர்ஆன் முழுவதையும் பாராமல் ஓதுகிறவர்களுக்குக் கொடுக்க வேண்டும். ஃபகீர்களுக்கு என்று கூறியிருந்தால் மிஸ்கீன்களும், மிஸ்கீன்களுக்கு என்று கூறியிருந்தால் ஃபகீர்களும் அதில் சேர்ந்திடுவார்கள். ஜைதுக்கு நெருக்கமானவர்களுக்கு என்று வஸிய்யத்துச் செய்திருந்தால் அவனுடைய பந்துக்கள் அனைவரும் அதில் சேர்ந்திடுவார்கள். ஆனால் அவனுடைய தாயும் தந்தையும் மக்களும் சேரமாட்டார்கள்.

எனக்கு நெருக்கமானவர்களுக்கு என்று கூறினால் அவனுடைய வாரிசுதாரர்கள் சேரமாட்டார்கள். மனிதர்களில் பெரிய அறிவீனர்களுக்கு என்று வஸிய்யத்துச் செய்தால் முஷ்ரிக்குகளுக்குக் கொடுக்க வேண்டும். முஸ்லிம்களில் பெரிய மடையர்களுக்கு என்று கூறினால் ஸஹாபாக்களை ஏசுகின்ற ராஃபிழிய்யாக்களுக்குக் கொடுக்க வேண்டும்.

மரணத்தைக் கொண்டு தொடர்புபடுத்திய வஸிய்யத்தை அவனே மீட்டிக் கொள்வதால் வஸிய்யத்து அழிந்து விடும். நான் அதனை அழித்து விட்டேன் நீக்கி விட்டேன் என்று சொல்வதனாலும், இது என்னுடைய வாரிசுக்காரருக்கு என்று சொல்வதாலும், அதனை விற்று விடுவதாலும், அடகு வைப்பதாலும், அதில் மரங்களை நடுவதாலும் வஸிய்யத்து அழிந்து விடும். ஆனால் வயலில் பயிர் செய்வதினால் அழியாது.

ஒருவன் நூறு ரூபாயைக் கொண்டு வஸிய்யத்துச் செய்து விட்டு, பிறகு ஐம்பது ரூபாயைக் கொண்டு வஸிய்யத்துச் செய்தால் ஐம்பதுதான் கொடுக்கப்படும். பிந்திய வஸிய்யத்தைக் கொண்டு முந்தியதை ரத்து செய்ததாக ஆகிவிடும்.

நன்கொடை கொடுத்தது சுகமாக இருக்கும்போதா? நோயின் நேரத்திலா? என்று அனந்தரக்காரனும் நன்கொடை பெற்றவனும் தர்க்கம் செய்து கொண்டால் நன்கொடை பெற்றவனையே உண்மையாக்கி வைக்கப்படும். ஏனெனில், சுகமாயிருக்கும்போது அது நடந்தது என்பதுதான் அசலாகும். இருவரும் சாட்சிகளைக் கொண்டு வந்தால் நோயின் நேரத்திற்குரிய சாட்சியே முற்படுத்தப்படும்.

இறந்து விட்டவருக்காக அவருடைய வாரிசுதாரரோ மற்றவரோ தான தருமங்கள் செய்தாலும், குர்ஆன் ஓதினாலும், வக்ஃபு செய்தாலும், கிணறு வெட்டினாலும், மரம் நட்டாலும், பள்ளி கட்டினாலும், மடம், தைக்கா போன்றவற்றைக் கட்டினாலும், ஆறு, வாய்க்கால் வெட்டினாலும், அவற்றைத் திருப்பினாலும் அவற்றின் நன்மைகள் அவருக்குச் சேரும் என்பதில் எல்லா உலமாக்களும் ஏகோபித்த அபிப்பிராயம் தெரிவித்துள்ளார்கள். துஆ செய்வதும் அவ்வாறுதான்.

## நம்பி ஒப்படைக்கப்பட்டது

### (அமானிதம்) பற்றிய விவரம்

அமானத்தை நிறைவேற்றுவதுபற்றி அல்லாஹ் தஆலா குர்ஆனில் "(விசுவாசிகளே) அமானிதப் பொருள்களை அவற்றின் சொந்தக்காரர்களிடம் நீங்கள் ஒப்படைத்து விடும்படியும், மனிதர்களுக்கிடையில் நீங்கள் தீர்ப்புக் கூறினால் நீதமாகவே தீர்ப்பளிக்குமாறும் நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்குக் கட்டளை யிடுகிறான்", என்றும், "ஒருவரை நம்பினால் நம்பப்பட்டவன் தன்னிடமிருக்கும் அமானத்தைக் கொடுத்து விடவும்", என்றும் கட்டளையிட்டுள்ளான். "முனாஃபிக்குகளின் அடையாளங்கள் மூன்று. அவன் பேசினால் பொய் சொல்வான், வாக்களித்தால் மாறு செய்வான், நம்பப்பட்டால் மோசம் செய்வான்" என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நவின்றுள்ளார்கள்.

நாய், பன்றி, நஜீஸான பொருள், ஹறாமான விளையாட்டுப் பொருள் ஆகியவற்றைத் தவிர மற்ற பொருட்களை அமானிதமாக வைப்பது கூடும்.

இதனை உன்னிடம் அமானிதமாகக் கொடுத்தேன்; இதனைப் பேணுதலாக வைத்துக் கொள்ள உன்னிடம் தந்தேன் என்ற வாசகங்களைக் கொண்டும், இதனை எடுத்து வை என்று அமானிதத்தை நாடிச் சொல்வது கொண்டும் அமானிதம் உண்டாகும். அதனைப் பேண இயலாதவன் ஏற்றுக் கொள்வது ஹறாமாகும். தன்னைப் பற்றி தனக்கே நம்பிக்கை இல்லாதவன் அதனை ஏற்றுக் கொள்வது மக்ரூஹ் ஆகும்.

அமானிதத்தை ஏற்றிருப்பவன் உடையவனின் அனுமதியின்றி அப்பொருளை மற்றொருவனிடம் கொடுத்து, அது சேதமடைந்தால் அவன் பொறுப்பாளியாவான். அந்த மற்றொருவன் நீதிபதியாக இருந்தாலும் சரி.

அமானிதத்தை ஏற்றிருப்பவன் தன்னுடைய நோயை, அல்லது பிரயாணத்தைக் கருதி, அல்லது நெருப்பையோ இடம் பாழாகிப் போவதையோ பயந்து நம்பிக்கையான மற்றொருவனிடம் வைத்து அது சேதமடைந்தால் அவன் பிணையாக மாட்டான்.

பத்திரமில்லாத இடத்தில் வைப்பதாலும், அதனைச் சேதப்படுத்தும் கரையான் போன்ற பூச்சிகளை விட்டும் தடுக்காதிருப்பதாலும், காற்று தேவைப்படக்கூடிய பொருளை காற்றாட வைக்காதிருப்பதாலும், உடையவன் சொல்லிய பாதுகாப்பை விடுவதாலும், அதனைக் கேட்டு வந்த நேரத்தில் ஒப்படைக்காதிருந்ததாலும், அல்லது மறுத்ததாலும் அவன் பொறுப்பாளியாவான்.

அமானிதம் ஆடையாக இருந்தால் அதனை அணிவதினாலும், வாகனமாக இருந்தால் அதில் ஏறுவதாலும், பணப்பையாக இருந்தால் அதிலிருந்து ஒரு ரூபாயையாவது எடுப்பதாலும்-அந்தப் பையில் எவ்வளவு இருக்கிறதென்று தெரியாத நிலையில் வேறு ஒரு ரூபாயை அதில் போட்டாலும் சரி-பிணையாவான்.

உன்னுடைய பொருள் என்னிடம் அமானிதமாக இல்லை என்று மறுத்தாலும், அல்லது அது சேதப்பட்டு விட்டது, திருட்டு போய் விட்டது என்று கூறினாலும் சத்தியம் செய்யுமாறு சொல்லி உண்மையாக்கப்படும். சேதமாகி விட்டதென்று சொல்லும் பொழுது அது அடையவளைந்த நெருப்பு போன்ற பொதுவான காரணமாக இருந்தால் சத்தியமில்லாமலேயே உண்மையாக்கப்படும். ஆனால், இக்காரணத்தில் சந்தேகமில்லாமல் இருக்க வேண்டும். அமானிதம் வைத்தவனிடம் பொருளை ஒப்படைத்து விட்டதாக ஏற்றுக் கொண்டவன் கூறினால் அவனை சத்தியம் செய்யச் சொல்லி உண்மையாக்கப்படும்.

## பொய் சொல்வது பற்றி

பொய் சொல்வது ஹராம். ஆனால், சில சமயங்களில் பொய் சொல்வது வாஜிபாகவும் ஆகிவிடும். அதாவது: நம்மிடமுள்ள ஓர் அமானிதப் பொருளை அநியாயக்காரன் ஒருவன் அபகரிப்பதற்காகக் கேட்கிறான். அப்பொழுது அதை வைத்துக் கொண்டே இல்லையென்று பொய் சொல்வது வாஜிப். அதனை ஒப்புக் கொள்ளாமல் சத்தியம் செய்யச் சொல்வானேயானால் சத்தியம் செய்வதும் வாஜிப். அந்த நேரத்தில் இணக்கமான மற்றொரு பொருளை மனதில் மறைத்து வைத்துக் கொண்டு அந்தப் பொய்யைச் சொல்லலாம். அது வாஜிபும் ஆகும்.

பொய் சொல்வது எல்லோரிடத்திலும் ஹராமாகும். இது சம்பந்தமாக வந்திருக்கின்ற ஆயத்துகளும் ஹதீஸ்களும் பலவிருக்கின்றன. ஒரு ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளதாவது: "யாரசூலல்லாஹ், ஒரு முஃமின் விபச்சாரம் செய்வானா?" என்று ஸஹாபாக்களில் ஒருவர் கேட்டபோது, "செய்யமாட்டான்" என்று சொல்லிய நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள், சற்று நேரங்கழித்து, "ஒரு வேளை ஷைத்தானுடைய கலைப்பினால் செய்திடுவான்" என்று கூறினார்கள். பிறகு "ஒரு முஃமின் மது அருந்துவானா?" என்று கேட்டபோது, "அருந்த மாட்டான்" என்று சொல்லி விட்டு, ஷைத்தானுடைய ஊசாட்டத்தினால் அருந்திடுவான் என்றார்கள்.

பிறகு "ஒரு முஃமின் திருடுவானா?" என்று கேட்டதற்கும் அவ்விதமே பதில் கூறினார்கள். அதன்பிறகு ஒரு முஃமின் பொய் சொல்வானா? என்று கேட்ட போது, "சொல்ல மாட்டான், சொல்ல மாட்டான்; சொல்ல மாட்டான்" என்று கூறி,

إِنَّمَا يَفْتَرِى الْكَذِبَ الَّذِينَ لَا يُؤْمِنُونَ بِآيَاتِ اللَّهِ ۖ

وَأُولَٰئِكَ هُمُ الْكَاذِبُونَ ۝ (16:105)

"(இது) பொய் என்று இட்டுக் கட்டுவோரெல்லாம் அல்லாஹ்வுடைய வசனங்களை நம்பாதவர்கள்தாம். (உண்மையில்) இவர்கள்தாம் பொய்யர்கள். (நபியே! நீர் பொய்யரல்ல) என்ற ஆயத்தை ஓதிக் காட்டினார்கள்."

இஹ்யாவில் எழுதப்பட்டுள்ளதாவது: ஒரு நல்ல காரியம் நிறைவேறுவது பொய்யைக் கொண்டும் ஆகலாம்; மெய்யைக் கொண்டும் ஆகலாம் என்றிருந்தால், அந்த இடத்தில் பொய் சொல்வது ஹராமாகும். பொய் சொல்வது கொண்டு மட்டுமே அதனை நல்லதாக்க முடியும் என்றிருந்து அந்தக் கருமமும் நன்மையானதாக இருந்தால், அப்பொழுது பொய் சொல்வது ஆகும். உதாரணமாக: மனைவியைப் பொருத்தப்படுத்துவதற்காக, மனவருத்தமாகிப் பிரிந்து போன இரு முஸ்லிம்களை அல்லது இரு கூட்டத்தாரை சமாதானப்படுத்தி ஒற்றுமையாக்குவதற்காகப் (பொய் சொல்லாமல் இந்த காரியங்கள் நிறைவேறாது என்றிருந்தால்) பொய் சொல்வது ஆகும், அவ்வாறு செய்வது வாஜிப் என்றிருந்தால் பொய் சொல்வது வாஜிபும் ஆகும்.

மேற்குறிப்பிட்ட அமானிதத்தில்-அநியாயக்காரன் கேட்டபோது அதனைத் தடுக்க வழியிருந்தும் தடுக்காமல் அதனை அவனிடம் கொடுத்து விட்டால் அமானிதத்தைப் பெற்றவன் பொறுப்பாளியாவான்.

ஒருவனிடம் ஓர் அமானிதப் பொருளிருந்து, அதனைக் கொடுத்தவன் யாரென்று அறியாவிட்டால் அவனைத் தெரிந்து கொள்ள முயற்சித்து அறிவிப்புச் செய்வான். அப்பொழுதும் தெரியவில்லையானால் அதைத் தெரிந்து கொள்ளும் வரை அவனே அதனைப் பராமரித்து வருவான். பின் முஸ்லிம்களுக்குத் தேவையான காரியங்களில் மிக முக்கியமானதில் செலவு செய்வதில் மிக முட்டுப்பாடு உடையவர்களுக்கு முதலில் செலவு செய்வான். பள்ளி வாசல் கட்டுவது போன்ற காரியங்களுக்குச் செலவு செய்தல் கூடாது. அதனுடைய சட்டங்கள் தெரியாதவனாக இருந்தால் சட்டங்கள் தெரிந்த பேணுதலான ஆலிமிடத்தில் அதனை ஒப்படைத்து விட வேண்டும்.

அமானிதத்தில் மோசடி செய்வது பெரும் பாவமாகும். அல்லாஹு தஆலா அவனை உலகில் பல சோதனைகளுக்குள்ளாக்குவான். அவனுடைய பொருளின் மீது அவனைவிட வலியவன் ஒருவனைச் சாட்டிவிடுவான். மேலும், மறுமையில் அவனுடைய அமல்களின் நன்மைகளைப் பிடுங்கி அமானிதம் வைத்தவனுக்குக் கொடுத்திடுவான்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

### கண்டெடுக்கும் பொருள் பற்றி

தீவிரம் சேதப்பட்டுப் போகாத தங்கம், வெள்ளி, செம்பு போன்ற பொருளை ஜனங்கள் குடியிருக்கும் பகுதிகளிலோ அல்லது காடுகளிலோ எவரேனும் ஒருவர் கண்டெடுத்தால் அதனை கடைவீதிகளிலும், பள்ளிவாசல்களிலும், மக்கள் கூடுகின்ற சந்தைகளிலும், மற்றும் மனிதர் கூடும் தலங்களிலும் நின்று, மனிதர்களிடம் அதை அறிவிக்க வேண்டும். ஒரு வருஷம் வரை அறிவிப்புச் செய்ய வேண்டும். அதன்பிறகும் அதன் உடையக்காரர் எவரும் முன் வரவில்லையானால், வந்தால் கொடுத்து விடலாம் என்ற எண்ணத்தில் அதனை நான் எடுத்துக் கொள்கிறேன் என்று சொல்லிக் கொண்டு அதனை தனக்குரியதாக ஆக்கிக் கொள்வான். விரும்பினால் அதனை விற்று அப்பணத்தையும் பத்திரப்படுத்தி வைத்துக் கொள்வான்.

கண்டெடுக்கப்படும் பொருள் சொற்ப விலை பெற்ற சாதாரணமானதாக இருந்தால் சற்று நேரம் அறிவிப்பான். அது இரண்டு குன்று மணி (ஒரு மஞ்சாடி) எடையுள்ள வெள்ளி போன்றததாயிருந்தால் மூன்று தினங்களுக்கு அறிவிப்பான்.

கண்டெடுக்கப்பட்ட பொருள் சேதப்படாமல் நீடித்திராத சோறு, கீரை, பச்சை ஈத்தம் பழம் போன்றவையாக இருந்தால் உடனே அவன் அதனைச் சாப்பிடுவதற்கோ, அல்லது அதனை விற்று அப்பணத்தை பத்திரமாக வைத்துக் கொள்வதற்கோ உரிமையுடையவனாவான். விற்ற அந்தப் பெறுமதியான தொகையை உரியவனுக்குக் கொடுக்கும் வரை, தான் கடனாளியாவதற்கு சம்மதிப்பான். அதை மக்களுக்கு அறிவிக்கவும் வேண்டும்.

தன்வீட்டில் ஏதேனும் பணத்தைத் கண்டெடுத்தால், அது தன்னுடையது அல்லவென்பதும் தெரிந்தால், வீட்டுக்கு வந்தவர்களிடம் அதனை அறிவிப்பான்.

ஒரு பொருளை வழியில் கண்டு, அதனை காலால் எத்திவிட்டு அது சேதமானால் பொறுப்பாளியாக மாட்டான். வக்ஃபுடைய பாடத்தில் இதில் பொறுப்பாளியாவான் என்று கூறியதாகிறது, அவ்விடத்தில் தன் பிரயோஜனத்திற்காகவும் இவ்விடத்தில் அடுத்தவரின் பிரயோஜனத்திற்காகவும் இருப்பதால்தான். அதாவது: அப்பொருளை எடுத்து உயர்த்திக் காட்டிவிட்டுப் போட்டு விட வேண்டும்.

ஒரு திராட்சைப்பழம் போன்ற அற்பமான பொருளாக இருந்தால் அதனை அறிவிக்க வேண்டிய அவசியமில்லை. அதனைத் தானே உபயோகித்துக் கொள்ளலாம்.

வேலியடைக்கப்பட்ட தோட்டத்திற்குள் உதிர்ந்து விழும் பழங்களை உரியவரின் அனுமதியின்றி எடுப்பது ஹராம். அவ்வாறே வேலிக்கு வெளியில் விழுந்த பழங்களை பிறர் எடுப்பது வழக்கமாக இல்லாவிட்டால் அதனை எடுப்பதும் ஹராமாகும்.

வேலியடைக்கப்படாத தோட்டமாயிருந்து உரியவன் அதனைப் புறக்கணித்தாலும் அதனை எடுக்காமலிருப்பது தான் பேணுதலாகும். இவ்வித பேணுதலால் ஏராளமான நன்மைகள் கிடைத்துவிடும். இமாம் அபூஹனீஃபா (ரஹ்)

அவர்களுடைய தந்தை ஃதாபித் (ரலி) அவர்கள் ஆற்றில் மிதந்து வந்த ஒரு பழத்தைச் சாப்பிட்டபின் அதனை ஹலாலாக்குவதற்காக வேண்டி உரியவரைத் தேடி அலைந்து ஹலாலாக்கிக் கொண்டதால் அவர்களுக்கு ஏற்பட்ட நன்மையினால் இமாம் அபூஹனீஃபா (ரஹ்) அவர்கள் பிறந்து, அவர்கள் மூலமாக ஏற்பட்ட பரக்கத்துகள் எண்ணிடலங்காதவையாகும்.

## பாகப்பிரிவினைச் சட்டங்கள்

வாரிசுரிமை பெறுவதிலும் பெறாமலிருப்பதிலும் மனிதர்கள் நான்கு வகையினராகப் பிரிக்கப்படுவார்கள். முதலாவது, அவர்கள் வாரிசுகளாவார்கள்; அதே சமயத்தில் அவர்கள் வாரிசு கொள்ளப்படுபவர்களுமாவார்கள். உடன்பிறப்புகளைப் போல். இரண்டாவது, வாரிசுகளாவார்கள்; அவர்கள் வாரிசு கொள்ளப்பட மாட்டார்கள் நபிமார்களைப் போல். மூன்றாவது, வாரிசு கொள்ளப்படுவார்கள்; வாரிசுகளாக மாட்டார்கள். உரிமை விடப்பட்ட அடிமைகளைப் போல். நான்காவது, அவர்கள் வாரிசுகளாகவும் மாட்டார்கள்; வாரிசு கொள்ளப்படவும் மாட்டார்கள். இஸ்லாத்தை விட்டும் மதம் மாறிய முர்த்தத்துகளைப் போல்.

இன்னும் ஒருவர் வாரிசாக முடியாமல் நிறுத்தி வைக்கப்படுவார். அது வயிற்றிலுள்ள குழந்தையைப் போல். இவ்வாறே இருவரில் யார் முதலில் இறந்தது என்று தெரியாமலிருக்கும் போதும் நிறுத்தி வைக்கப்படும்.

"பாகப்பிரிவினை சம்பந்தமான கல்வியைக் கற்றுக் கொள்ளுங்கள்; கற்றுக் கொடுங்கள். அது இல்மில் பாதியாகும்" என்பதாகவும், "மறக்கப்படுகிற இல்மில் முந்தியது பாகப்பிரிவினை இல்மு" என்பதாகவும் ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது. ஹயாத்துக்கு மௌத்து எதிரிடையானதாக இருப்பதாலும் வணக்கங்கள் மற்றும் கொள்வினை கொடுப்பினையில் ஏற்படுகின்ற முடிவுகள் ஆகிய அனைத்தும் ஹயாத்தைக் கொண்டு தொழுகியதாகவும், ஒருவன் வைத்து விட்டுச் செல்கின்ற சொத்துக்கள் அனைத்தும் மௌத்தைக் கொண்டு தொழுகியதாகவுமிருப்பதால் பாகப்பிரிவினை சம்பந்தப்பட்ட இல்மு மொத்த இல்மில் பாதி இல்மு என்று கூறப்பட்டுள்ளது.

வாரிசுரிமை பெறுவதற்குரிய காரணங்கள் நான்கு 1)திருமணம் 2) அடிமையை உரிமைவிடுதல்; 3) வமிசம்; 4) இஸ்லாம், அதாவது, இறந்தவர் முஸ்லிமாக இருப்பது. திம்மீ காஃபிர் திம்மீ காஃபிரிலிருந்து வாரிசுரிமை பெறுவான்.

வாரிசுரிமையைத் தடுப்பதும் நான்காகும். 1)கொலை செய்தல் அல்லது அதற்குக் காரணமாயிருப்பது 2) அடிமையாயிருப்பது; 3) வாரிசு கொள்பவனோ, கொள்ளப்படுபவனோ (இருவரிலொருவர்) இஸ்லாத்தில் இல்லாமல் இருப்பது 4) முர்த்ததாகி (மதம் மாறி) விடுவது.

இறந்து விட்ட ஒருவனுக்குச் சொத்துக்கள் எதுவுமே இல்லையானால் அவனைக் கஃபனிட்டு அடக்குவதற்குரிய செலவினங்களை அவனுக்கு நெருக்கமான, வசதியான உறவினர் ஏற்றுக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் பைத்துல் மால்

நிதியிலிருந்து செய்யப்பட வேண்டும். அதுவும் இல்லாவிட்டால் அவ்வூரிலுள்ள செல்வந்தர்களின் மீது அது கடமையாகும்.

இறந்து விட்ட ஒருவனுக்கு அவனுடைய சொத்திலிருந்து முதன் முதலாக அவனை அடக்குவதற்குரிய செலவுகளைச் செய்ய வேண்டும். பிறகு அவன் கொடுக்க வேண்டிய மஹர் உட்பட உள்ள கடன்களைத் தீர்க்க வேண்டும். பிறகு மீதியுள்ள சொத்தில் மூன்றில் ஒரு பங்குடைய அளவுக்கு அவனுடைய வஸிய்யத்தை நிறைவேற்ற வேண்டும். பிறகு பின்னால் கூறப்படுகிற முறைப்படி வாரிசுதாரர்களுக்கிடையே பங்கிடப்படவேண்டும். ஆனால், அவன் சொத்தில் அவனின் ஜகாத்து போன்ற கடமையையும், அடைவைத்து வாங்கிய பணத்தையும், அவனை அடக்கம் செய்வதற்குரிய செலவை எடுப்பதற்கு முன்னரே தீர்த்துவிட வேண்டும். மையத்துடைய சொத்துப் பிரிவினையில் நடக்க வேண்டிய விஷயத்தில் சில ஏற்கனவே ஜகாத்துடைய பாடத்தில் கூறப்பட்டு விட்டது.

ஆண்களில் வாரிசுரிமை பெறுபவர்கள் பத்து நபர்களாவார்கள். 1)மகன்; 2) மகனுடைய மகன்; 3) தந்தை; 4) தந்தையின் தந்தை; 5) சகோதரன்; (இதில் தாயும் தந்தையும் ஒன்றித்தவன், தந்தை ஒன்றானவன், தாய் ஒன்றானவன், ஆகிய மூவருமே சேருவார்கள்) 6) சகோதரனுடைய மகன்; (இதில் தாய் மட்டும் ஒன்றான சகோதரனின் மகன் சேரமாட்டான். ஆனால் தகப்பன் ஒன்றான சகோதரனின் மகன் சேருவான்) 7) தந்தையின் சகோதரர்கள்; (சிறிய தந்தை, பெரிய தந்தை) 8) அவர்களின் மகன் (இதில் தாய் மட்டும் ஒன்றான சிறிய, பெரிய தந்தையின் மகன் சேரமாட்டான்) 9) கணவன்; 10) உரிமைவிட்ட எஜமான்.

பெண்களில் வாரிசுரிமை பெறுபவர்கள் ஏழுநபர்கள். 1) மகள்; 2) மகனுடைய மகள்; 3) தாய்; 4) தாயைப்பெற்ற மற்றும் தகப்பனைப் பெற்ற பாட்டி; 5)சகோதரி; 6)மனைவி; 7) உரிமை விட்ட எஜமாட்டி.

மேற்கூறப்பட்ட ஆண்கள் அனைவரும் இருந்தால் தந்தை, மகன், கணவன் ஆகிய மூவர் மட்டுமே வாரிசுரிமை பெறுவார்கள். மற்றவர்கள் தந்தையிருப்பதாலும் மகனிருப்பதாலும் தடுக்கப்பட்டவர்களாவார்கள்.

அவ்வாறே பெண்கள் அனைவரும் இருந்தால் மகள், மகனுடைய மகள், தாய், சகோதரி, மனைவி ஆகியோர் வாரிசுரிமை பெறுவார்கள்.

இவ்விரு கூட்டத்தாரும் சேகரமாய் இருந்தால், தாய், தந்தை, மகன், மகள், கணவன், மனைவி இருவரிலொருவர் ஆகியோர் அனந்தரம் பெறுவார்கள்.

வாரிசுதாரர்கள் எவருமே இல்லையானால்-ஷாஃபியீ மத்ஹபின் படி-உலுல் அர்ஹாம் என்னும் உறவினர்களை வாரிசுக்காரர்களாக ஆக்கக் கூடாது. இன்னும் அசல் ஷாஃபியீ மத்ஹபின் படி (அதாவது), ஷாஃபியீ மத்ஹப் ஆரம்ப கால பத்வாவின்படி) வாரிசுக்காரர்களுக்குப் பங்கிட்டது போக மீதி இருந்தால் மறுமுறை

கொடுக்கவும் கூடாது. (ஹனஃபி மத்ஹபின்படி இந்த இரு செயல்களும் கூடும்) இந்த நிலைகளில் சொத்துக்கள் முழுவதும் பைத்துல் மாலைச்சேர்ந்ததாகும். ஆனால், பைத்துல் மால் இல்லையானால் பின்வரும் முறைப்படி வாரிசுக்காரர்களாகிய உரிமையுடையவர்களுக்குப் பங்கிட்டது போக மீதியை கணவன், மனைவியைத் தவிர உள்ள இதர உரிமைக்காரர்களுக்கு அவரவர்களுடைய விகிதாசாரப்படி மறுமுறை பங்கிட்டுக் கொடுக்கப்படவேண்டுமென்று பின் வந்த இமாம்கள் (அதாவது ஹிஜ்ரி 400 ஆம் ஆண்டுக்குப்பின் வந்த இமாம்கள்) ஹனஃபி மத்ஹபை அனுசரித்து தீர்ப்பளித்துள்ளார்கள். (இந்த முறை அசல் ஷாஃபியீ மத்ஹபில் கிடையாது) மேற்கண்ட தீர்ப்பின் படி வாரிசுரிமைக்காரர் எவருமே இல்லையானால் மற்றுமுள்ள அர்ஹாம் என்னும் உறவின் முறையோர்களுக்கு பங்கீடு செய்து கொடுக்கப்படும்.

அர்ஹாம் என்பவர்கள் உறவினர்கள் எனப்படுவர். அவர்களில் முன்னால் கூறப்பட்டவர்கள் தவிர உள்ள நெருங்கிய உறவினர்களாவர். அவர்கள் பதினொரு கூட்டத்தினராவார்கள். 1)மகளுடைய மக்கள். 2) சகோதரியின் மக்கள். 3) சகோதரனின் மகள் 4) சிறிய, பெரிய தந்தையின் மகள். 5)தாய் ஒன்றான சிறிய பெரிய தந்தை 6) தாய் மாமன் 7) தாயுடன் பிறந்தவள் 8) தந்தையுடன் பிறந்தவள் 9) தாயுடைய தந்தை 10) தாயாருடைய தந்தையின் தாய் 11) தாய் ஒன்றான சகோதரனின் மக்கள்.

இஸ்லாத்தின் துவக்க நாட்களில் சொத்துள்ளவர்கள் இறக்கும் தருணத்தில் தன் சொத்தைப் பங்கிடும் விஷயமாக வஸிய்யத்து செய்வது ஃபர்லாக இருந்தது. அல்லாஹுதஆலா குர்ஆனில் 2-வது சூறாவின் 185-வது ஆயத்தின் மூலம் இதை ஃபர்லாக்கி இருந்தான். ஆனால், சிலர் செய்த வஸிய்யத்தில் ஷரீஅத்திற்கு மாற்றமான சில செயல்கள் ஏற்பட்டு விட்டதால் அச்சட்டத்தை 4-வது சூறா 11, 12,176 ஆயத்துக்கள் மூலம் மாற்றி அல்லாஹுதஆலா தானே வஸிய்யத்துச் செய்து குர்ஆனின் மூலம் சொத்துரிமைச் சட்டங்களைக் கூறியுள்ளான்.

குர்ஆனில் சொல்லப்பட்டுள்ள பங்குகள் ஆறு 1) மூன்றில் இரண்டு பங்கு. 2) பாதி. 3) கால் பாகம் 4) அரைக்கால் பாகம் (எட்டிலொன்று) 5) மூன்றில் ஒரு பங்கு. 6) ஆறிலொன்று.

## மூன்றிலிரண்டு பங்கிற்குரியவர்கள்:-

ஆண்மக்கள் இல்லாமல் இரண்டு பெண்மக்கள். அல்லது அதற்கு மேற்பட்டவர்கள். மகனுடைய (மகன் இல்லாத நிலையில்) பெண்மக்கள் இருவர்; அல்லது அதற்கு அதிகமானவர்கள், தந்தையும் தாயும் ஒன்றான சகோதரிகள் இருவர் அல்லது அதைவிட அதிகமானவர்கள். தந்தை ஒன்றான (தாய் வேறான) சகோதரிகள் இருவர்; அல்லது அதைவிட அதிகமானவர்கள். ஆக இந்த நான்கு வகைப் பெண்களுக்கும் மூன்றில் இரண்டு (2/3) பங்கு கிடைக்கும்.

## மூன்றிலொரு பங்கிற்குரியவர்கள்:

இறந்து விட்டவருக்குக் குழந்தை (அது ஆணாயினும், பெண்ணாயினும் சரியே) இல்லாத சமயத்திலும், அல்லது மகனின் குழந்தை; (ஆணோ, பெண்ணோ)

இல்லாத சமயத்திலும், அல்லது சகோதரர் சகோதரிகளில் இருவரோ, அதிகமோ இல்லாத சமயத்திலும் தாய்க்கு மூன்றில் ஒரு பங்கு கிடைக்கும். தாயுடைய மக்கள் அதாவது; தாய் ஒன்றான (தகப்பன் வேறான) சகோதர சகோதரிகள் இரண்டு பேர், அல்லது அதைவிட அதிகமானவர்களுக்கும் மூன்றில் ஒரு பங்கு கிடைக்கும். (ஆனால் அவர்களில் ஒருவர் மட்டுமே இருப்பின் ஆறில் ஒரு பங்கு மட்டுமே கிடைக்கும்) சில நேரங்களில் உடன்பிறப்புகளுடன் பாட்டனுக்கும் இப்பங்கு கிடைக்கும். கணவனோ மனைவியோ இருவரில் ஒருவருடன் தாயும், தந்தையும் இருந்தால் கணவனுக்கோ மனைவிக்கோ கொடுத்ததுபோக மீதியில் மூன்றிலொன்று தாய்க்குக் கொடுக்கப்படும். (தகப்பனுக்கு மூன்றில் இரண்டு கிடைக்கும்)

## பாதிக்குரியவர்கள்

முன்னால் மூன்றிலிரண்டு பங்கில் கூறப்பட்ட நான்கு வகைப்பெண்களில் ஒருத்தியாக மட்டும் (இரண்டு பேரோ அல்லது அதற்கு மேற்பட்டோ இல்லாமல்) தனித்திருக்கும்போதும், மனைவிக்குக் குழந்தை இல்லாவிடில் கணவனுக்கும் பாதி பங்கு கிடைக்கும்.

## கால் பாகத்திற்குரியவர்கள்

இறந்த மனைவிக்குக் குழந்தையிருக்கும் போது கணவனுக்கும், இறந்த கணவனுக்குக் குழந்தை இல்லாத போது மனைவிக்கும் கால் பங்கு கிடைக்கும்.

## எட்டிலொன்றுக்குரியவர்

இறந்து விட்ட கணவனுக்குக் குழந்தையிருந்தால் மனைவிக்கு எட்டில் ஒரு பங்கு கிடைக்கும்.

## ஆறிலொன்றுக்குரியவர்கள்

தாய்வழி, அல்லது தகப்பன் வழிப்பாட்டிகளுக்கும், இறந்தவருக்குக் குழந்தையிருக்கும்போது தந்தைக்கும், (தந்தையில்லாத போது பாட்டனுக்கும்) கிடைக்கும். குழந்தை அல்லது மகனுடைய குழந்தை அல்லது சகோதர, சகோதரிகளில் இருவர், அல்லது அதிகமானோர் இருக்கும்பொழுது தாய்க்கும் ஆறில் ஒன்று கிடைக்கும். மகள் ஒருத்தி இருக்கும்பொழுது மகனுடைய மகளுக்கு ஆறில் ஒன்று கிடைக்கும். தாயும் தந்தையும் ஒன்றான சகோதரி ஒருத்தி இருக்கும்பொழுது தந்தை மட்டும் ஒன்றான சகோதரி ஒருத்தி; அல்லது அதிகமானவர்களுக்கும் ஆறில் ஒன்று கிடைக்கும். தாய் ஒன்றான சகோதர சகோதரிகளில் ஒருவருக்கும் ஆறில் ஒன்று கிடைக்கும். தந்தையோ கணவன் மனைவி இருவரில் ஒருவரோ இருக்கும்பொழுது

அவர்களில் ஒருவருக்குரிய பங்குபோக மீதியிருப்பதில் மூன்றிலொன்று தாய்க்குக் கொடுக்கப்படும்.

ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிகள் - நான்குவரை - இருந்தாலும் ஒரு மனைவிக்குரிய பங்கையே எல்லோருக்கும் பகிர்ந்தளிக்கவேண்டும்.

கணவனோ மனைவியோ இருவரில் ஒருவருடன் தாயும் தந்தையும் இருக்கும்பொழுது, கணவனுக்கோ மனைவிக்கோ கொடுத்தது போக மீதியில் தாய்க்கு மூன்றில் ஒன்று கிடைக்கும் என்று கூறியது, தாயின் பங்கைப்போல் தந்தைக்கு இரு மடங்கு கிடைக்கவேண்டும் என்பதினால்தான்.

## பங்கு தடையாவது பற்றிய விளக்கம்

இறந்து விட்டவருக்கு மிக நெருக்கமானவன் தன்னைவிட தூரமானவனைத் தடுப்பான். மகன், மகனுடைய மக்களைத் தடுப்பான். தந்தைப் பாட்டனைத் தடுப்பான். தாய், அவளுடைய தாயைத் தடுப்பாள். தந்தையும், தாயும் தந்தையுடைய தாயைத் தடுப்பார்கள். மகனும் மகனுடைய மகனும் தந்தையும் சகோதரனைத் தடுப்பார்கள். மகனும் மகனுடைய மகனும் தந்தையும், தந்தையும் தாயும் ஒன்றான சகோதரனும், தந்தை மட்டும் ஒன்றான சகோதரனைத் தடுப்பார்கள். தந்தையும் பாட்டனும் மக்களும் மகனுடைய மக்களும் தாய் மட்டும் ஒன்றான சகோரதனைத் தடுப்பார்கள். தந்தையும் பாட்டனும் மகனும், மகனுடைய மகனும் தாயும் தகப்பனும் ஒன்றித்த சகோதரனும் தந்தை மட்டும் ஒன்றான சகோதரனும் சகோதரனுடைய மகனைத் தடுப்பார்கள். இவர்கள் எழுவரும் தந்தை ஒன்றான சகோதரனின் மகனைத் தடுப்பார்கள். பிறகு இவர்கள் எட்டுப்பேரும் தந்தையும் தாயும் ஒன்றான சிறிய தந்தையையும் பெரிய தந்தையையும் தடுப்பார்கள். பிறகு இந்த ஒன்பது பேரும் தந்தை ஒன்றான சிறிய, பெரிய தந்தையர்களைத் தடுப்பார்கள். இந்தப் பத்துப் பேரும் தந்தை ஒன்றான சிறிய பெரிய தந்தையரின் மகனைத் தடுப்பார்கள்.

இவ்வாறு தடை செய்வதில் பங்கு முழுவதையும் தடை செய்வதும் உண்டு. அதற்கு حَجْبُ حِرْمَانٌ என்று கூறப்படும். பங்கில் கொஞ்சத்தைத் தடை செய்வதும் உண்டு. அதற்கு حَجْبُ نُقْصَانٌ என்று கூறப்படும்.

## அஸபா ( عَصَبَةٌ ) காரர் விபரம்

நியமிக்கப்பட்ட பங்கிற்குரியவர்களின் பங்குகளைக் கொடுத்தது போக மீதியை, அல்லது பங்கிற்குரியவர்கள் எவரும் இல்லையானால் சொத்து முழுவதையும் எடுத்துக் கொள்கிறவருக்கு அஸபா (عَصَبَةٌ) காரர் என்று சொல்லப்படும்.

அவர்கள் பின்வருமாறு: மகன; மகனுடைய மகன்; தந்தை; தந்தையின் தந்தை; தகப்பனும் தாயும் ஒன்றான சகோதரன்; தந்தை மட்டும் ஒன்றான சகோதரன்; ——

அவர்களுடைய ஆண் குழந்தைகள்; தாயும் தந்தையும் ஒன்றான, அல்லது தந்தை மட்டும் ஒன்றான சிறிய, பெரிய தந்தைகள்; அவர்களின் ஆண் மக்கள் ஆகியோராவார்கள். வமிசத்துவுள்ள மேற்கூறப்பட்ட அஸபாவுக்குப் பிறகு உரிமை விட்டவன். இவனுடைய அஸபாத்தில் ஆண்கள் மட்டுமே வருவார்கள்.

தாயும் தந்தையும் ஒன்றான, அல்லது தந்தைமட்டும் ஒன்றான சகோதரி ஃபர்லுகாரர்களால் அடைய வளைந்து (முற்றிலுமாக) விழ மாட்டாள். சகோதரன் விழுந்திடுவான்.

தாய், தந்தை, மகன், மகள், கணவன், மனைவி ஆகிய ஆறு நபர்களும் எவ்விதத்திலும் தடுக்கப்பட மாட்டார்கள். சொத்து முழுவதையும் பங்கிட்டு எடுத்துக் கொள்வதற்கு அருகதை உள்ள வாரிசு உரிமையாளர்கள் என்னும் ஃபர்லுக்காரர்கள் அஸபாக்காரர்களைத் தடை செய்திடுவார்கள். உதாரணமாக: தாய், தந்தை, இரண்டு மகள்கள், மகனுடைய மகன் ஒருவன் இவர்கள் எல்லோரும் இருக்கின்ற அமைப்பில் மகனுடைய மகன் தடை செய்யப்படுவான். இந்த அமைப்பில் அடிப்படைச் சட்டமாவது; சொத்தை ஆறு பங்குகள் வைத்து, இரண்டு மகள்களுக்கு மூன்றிலிரண்டு பாகமும்–அதாவது: ஆறில் நான்கும், தாய்க்கு ஒன்றும், தந்தைக்கு ஒன்றும் கொடுக்க வேண்டும். மகனுடைய மகனுக்கு எதுவும் கிடைக்காது.

வேறு வாரிசுக்காரர்கள் யாரும் இல்லாமல் மகன் ஒருவன் மட்டுமிருந்தால் சொத்து முழுவதையும் அவனே எடுத்துக் கொள்வான். அவ்வாறே இரண்டு மகன்களோ அதற்கு மேற்பட்டவர்களோ இருந்தாலும் எல்லோரும் சமமாகப் பங்கிட்டுக் கொள்வார்கள்.

மகள் ஒருத்தி இருந்தால் சொத்தில் பாதி கிடைக்கும். ஒன்றுக்கு மேற்பட்டவர்களுக்கு மூன்றிலிரண்டு பங்கு கிடைக்கும். அவர்கள் அதனைச் சமமாகப் பங்கிட்டுக் கொள்வார்கள்.

ஆண்மக்களும் பெண்மக்களும் கலந்திருந்தால் ஆணுக்கு இரண்டு பங்குகள் பெண்ணுக்கு ஒரு பங்கு என்ற விகிதத்தில் கொடுக்கப்படும். (அதாவது இரண்டு பெண்களுக்குரிய பங்கு ஒரு ஆணுக்குக் கிடைக்கும்)

மகனுடைய மக்கள் மட்டுமிருந்தால் (வேறு வாரிசுதாரர் இல்லையானால்) மக்களைப் போன்றே பங்குகள் கொடுக்கப்படும். இதில் கருத்து வேற்றுமை இல்லை.

ஆண் பெண் மக்களும் மகனுடைய மக்களும் இருக்கும்பொழுது மக்களில் ஆண்கள் இருக்கும் பொழுது மகனுடைய மக்களுக்கு எதுவும் கிடைக்காது. ஆண் மக்கள் இல்லாமல் மகள் ஒருத்தி மட்டுமிருந்தால் அவளுக்கு பாதி பங்கு கிடைக்கும். மீதியை மகனுடைய ஆண்மக்களுக்கு சுவித்துக் கொடுக்கப்படும். மகனுடைய மக்களில் ஆண்கள் மட்டுமிருந்தால் மகளுக்கு கொடுத்தது போக மீதியைச் சமமாகப் பிரிக்கப்படும். ஆண்களும் பெண்களுமிருந்தால் ஆணுக்கு இரண்டு பாகங்கள்,

பெண்ணுக்கு ஒரு பங்கு என்ற விகிதத்தில் பிரிக்கப்படும். பெண்மக்கள் மட்டுமிருந்தால்-ஒருத்தியோ, பலரோ இருந்தாலும் அவர்களுக்கு ஆறிலொன்றை ஈவித்துக் கொடுக்கப்படும். இது, இரண்டு மகள்களோ அதிகமானவர்களோ இருக்கும் பொழுது மூன்றில் இரண்டு பங்கு கொடுத்ததைப் போன்றாகும்.

மகள்கள் இருவர் இருக்கும் போது மகனுடைய பெண்மக்களுக்கு எதுவும் கிடைக்காது. ஆனால், அப்பெண்மக்களுடன் ஆண்மக்களும் அதாவது: அவர்களுடைய சகோதரர்களும்-இருந்தால், அப்பொழுது அவர்கள் அனைவர்க்கும் கிடைக்கும். அச்சகோதரர்கள் தரஜாவில் சமமானவர்களாக (அதாவது சகோதரர்களாகவே) இருந்தாலும் சரி. அல்லது தாழ்ந்தவர்களாக (அதாவது சகோதரர்களின் ஆண் மக்களாக) இருந்தாலும் சரி. இவ்விதமான சகோதரனுக்கு —

اَخٌ مُبَارَكٌ

பரகத்தைக் கொண்டுவரும் சகோதரன் என்று சொல்லப்படும்.

இறந்தவருக்கு மகனோ, மகனுடைய மகனோ இருக்கும் பொழுது தந்தைக்கு ஃபர்ளின் முறையில் பங்கு கிடைக்கும் (ஆண், பெண்) குழந்தைகளோ, மகனுடைய குழந்தைகளோ எவரும் இல்லையானால் தந்தை அஸபாவாக ஆகிவிடுவார். அதாவது: பாகத்திற்குரியவர்களுக்கு பங்கிட்டது போக மீதி அனைத்தையும் எடுத்துக் கொள்வார்.

தந்தையுடன் வேறு வாரிசுதாரர்கள் இருந்தால் அவர்களுக்குரிய பங்குகள் போக மீதி ஃபர்லின் முறையில் தந்தைக்குக் கிடைக்கும். வாரிசுதாரர்கள் எவருமே இல்லையானால் அனைத்தையும் அவரே அஸபாவின் முறையில் அடைவார்.

தந்தையுடன் மகளோ, மகனுடைய மகளோ இருந்தால் ஃபர்லின் படி ஆறிலொன்றையும், மகளுக்குரிய பங்கு போக அஸபாவின்படி மீதியையும் பெறுவார். மேற்கூறப்பட்ட இரு நிலைகளிலும் தாய்க்கு மூன்றிலொன்று அல்லது ஆறில் ஒன்று கிடைக்கும் என்ற விபரம் முன்னால் சொல்லப்பட்டுள்ளது.

கணவனுடன், அல்லது மனைவியுடன் தாய் தந்தை இருக்கிற பொழுது கணவன், மனைவி இருவரிலொருவரின் பாகத்தைக் கொடுத்தபின் மீதியுள்ளதில் மூன்றிலொன்று தாய்க்குக் கொடுக்கப்படும். முழுவதிலும் மூன்றிலொன்று எடுக்கக் கூடாது. ஏனெனில், மீதியுள்ளதிலிருந்து மூன்றிலொன்றைத் தாய்க்குக் கொடுக்கும் பொழுதுதான் தந்தைக்கு அதைப்போல் இரண்டு பங்கு வரும். உதாரணமாக: முதல் மஸ்அலாவில், இறந்துவிட்ட ஒரு பெண்ணுக்கு தாயும் தந்தையும் கணவனும் இருந்தால், அவளுடைய சொத்தை ஆறு பாகங்களாக்கி கணவனுக்கு பாதியை (மூன்று பாகங்களை)க் கொடுத்து விட வேண்டும். மீதியுள்ள மூன்றில் தாய்க்கு மூன்றிலொரு பாகத்தையும் தந்தைக்கு மீதியுள்ள இரண்டு பாகத்தையும் கொடுக்க வேண்டும்.

இப்பொழுது தாய்க்கு கிடைத்தது,மொத்த பங்குகளிலிருந்து ஆறிலொன்றும் அல்லது மீதிப் பங்கிலிருந்து மூன்றிலொன்றும் ஆகிறது.

இரண்டாவது மஸ்அலாவில், இறந்து விட்ட ஒருவனுக்கு தாயும் தந்தையும் மனைவியும் இருந்தால், அவனுடைய சொத்தை நான்கு பங்குகளாக ஆக்கி மனைவிக்கு நாலில் ஒன்று (கால் பாகம்) கொடுத்தது போக மீதியுள்ள மூன்றில் தாய்க்கு மூன்றிலொன்றும், தந்தைக்கு மீதியுள்ளதையும் கொடுக்க வேண்டும். இப்பொழுது தாய்க்குக் கிடைத்தது மொத்தத்திலிருந்து நாலில் ஒன்று என்பதாகவும் மீதியிலிருந்து மூன்றிலொன்று என்பதாகவும் ஆகிறது.

நாம் மூன்றிலொன்று என்று இங்கு சொன்னதெல்லாம் அல்லாஹு'தஆலாவுடைய சொல்லைப் பேண வேண்டுமென்ற ஒழுக்கத்தின் காரணத்தினால்தான். அதாவது இறைவன் திருமறையில்:

فَإِن لَّمْ يَكُن لَّهُۥ وَلَدٌ وَوَرِثَهُۥٓ أَبَوَاهُ فَلِأُمِّهِ ٱلثُّلُثُ (4.11)

"இறந்தவருக்கு சந்ததியில்லாமல் இருந்து பெற்றோர் (மட்டும்) அவருக்கு அனந்தரக்காரர்களானால் அவருடைய தாய்க்கு மூன்றில் ஒரு பாகம்தான். (மற்றிரு பாகமும் தகப்பனைச் சாரும்)" என்று கூறியிருக்கின்றான்.

பாகப்பிரிவினை ( فَرَائِضُ ) என்பது யாருக்கு எவ்வளவு என்று குறிக்கப் பட்டதாகும். அஸபாக்காரன் ( عَصَبَةٌ ) என்பவன் குறிக்கப்பட்ட எந்த பங்குக்கும் உரிமை பெற்றவனாக இல்லாமலிருந்தாலும், சில வேளைகளில் மொத்தச் சொத்தையும்,மற்றும் சில வேளைகளில் வாரிசுக்காரர்களின் பங்குகளை கொடுத்து நீக்கியபின் மீதி உள்ள சொத்து முழுவதையும் எடுத்துக் கொள்வான்.

தந்தையைப் பெற்ற பாட்டன் தந்தையைப் போன்றுதான். தந்தை இருக்கும்போது மய்யித்தின் உடன் பிறந்தவர்கள் விழுந்து விடுவார்கள். ஆனால் பாட்டன் இருக்கும்போது மய்யித்தின் தாய் ஒன்றித்த உடன் பிறந்தவர்கள் மட்டும் விழுந்திடுவார்கள். மற்ற (தாய் தந்தை ஒன்றான, அல்லது தந்தை மட்டும் ஒன்றான) உடன் பிறந்தவர்கள் விழமாட்டார்கள். அவர்கள் பங்கு பிரித்துக்கொள்வதில் பாட்டனுடன் கூட்டாகிக் கொள்வார்கள்.

தந்தை தன்னுடைய தாயை விழுத்தாட்டுவான்; பாட்டன் அவளை விழுத்தாட்டமாட்டான். பாட்டி ஒருத்தியாயிருந்தாலும் இருவராயிருந்தாலும் ஆறிலொன்று என்பது முன்னால் கூறப்பட்டுள்ளது.

பாட்டிகளில் தாயுடைய தாயும் அவளுடைய தாய்களும் அனந்தரம் பெறுவார்கள். பாட்டிகள் அனந்தரம் கொள்வதில் கட்டுப்பாடாக இருக்கவேண்டும்.

கலப்பற்ற முறையில் பெண்களைக் கொண்டு நெருங்கும் பாட்டியும் (அதாவது: தாயுடைய- தாயுடைய தாயைப்போல்) கலப்பற்ற முறையில் ஆண்களைக் கொண்டு நெருங்கும் பாட்டியும், (அதாவது: தந்தையுடைய தந்தையின் தாயைப்போல்) இன்னும் கலப்பற்ற முறையில் பெண்ணைக் கொண்டு ஆண் பக்கம் நெருங்கும் பாட்டியும் (அதாவது: தந்தையுடைய தாயுடைய தாயுடைய தாயைப்போல்) அனந்தரம் பெறுவார்கள். இந்தக்கட்டுப்பாட்டை விட்டும் நீங்கிய பாட்டி அனந்தரம்பெற மாட்டாள். (அதாவது தாயுடைய தந்தையின் தாயைப்போல் இரண்டு பெண்களுக்கிடையில் ஓர் ஆணைக்கொண்டு நெருங்கியவள் அனந்தரம் பெறமாட்டாள்)

## ஃபராயிலு ஜைத்

فَـرَآئِضُ زَيْـدٍ ———— "ஃபராயிலுஜைத்" ஜைது என்பதின் பாகப்பிரிவினை என்றொரு கிதாப் உண்டு. அதில் ஜைது என்ற எழுத்துக்களுடைய எண்ணிக்கையை பாகப்பிரிவினைக் கணக்குக்குப் பொருத்தமான தாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது, அப்ஜத் கணக்குப்படி ஜைது என்பதில்

'ز' ஜேக்கு எண் 7, 'ى' யேக்கு 10, 'د' தாலுக்கு 4.

ஏழு என்பது பெண்களில் வாரிசுரிமை பெறுகிறவர்கள் ஏழு நபர்களாவார்கள். அவ்வாறே அசல் மஸ்அலா ஏழாகும். பத்து என்பது ஆண்களில் வாரிசுரிமை பெறும் பத்து நபர்களையும், அர்ஹாம் என்னும் உறவுக்காரர் பத்து பேரையும் குறிப்பதாகும். நான்கு என்பது வாரிகரிமை பெறும் காரணங்கள் நான்கை குறிப்பதாகும்.

ஜைத் என்ற மூன்றெழுத்துகளுக்குரிய கூட்டுத் தொகை இருபத்தொன்றாகும். அது ஃபர்லுக்குரியவர்கள் இருபத்தொரு நபர்களைக் குறிப்பதாகும். அதாவது: அரைப்பாகம் பெறுபவர்கள் ஐந்து நபர்கள், கால்பாகம் பெறுபவர்கள் இரண்டு நபர்கள், எட்டிலொன்று பெறுபவர் ஒருத்தி, மூன்றிலொன்று பெறுபவர்கள் இரண்டு நபர்கள், மூன்றிலிரண்டு பங்கு பெறுபவர்கள் நான்கு நபர்கள், ஆறிலொன்று பெறுபவர்கள் ஏழு நபர்கள், ஆகமொத்தம் இருபத்தொரு நபர்கள். 'அவ்ல்' என்னும் மீண்டும் வருதல் என்ற சட்டமும் இவ்வாறுதான்.

ஜே'க்குரிய எண் ஏழு. அது ஒரு புள்ளியுள்ளதாக இருப்பதால் அது பெண்ணைக்குறிக்கும். பெண்களில் பங்கு பெறுபவர்கள் ஏழு நபர்கள். 'யே' என்பதற்குரிய எண் பத்து. அது இரண்டு புள்ளியுள்ளதாக இருப்பதால் ஆணைக் குறிக்கும். ஆண்களில் பங்கு பெறுபவர்கள் பத்து நபர்கள். 'தால்' என்பது புள்ளியில்லாததால் அது ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவானதாக இருக்கும்.

சகோதர சகோதரிகள் மட்டுமிருந்தால் அவர்கள் மக்களைப்போன்றாவர். தந்தை ஒன்றான சகோதர சகோதரிகளும் அவ்வாறுதான். ஆனால், உமர் (ரலி) அவர்கள் மிம்பரின் மீது இருந்து பதில் கொடுத்த மஸ்அலாவைத் தவிர. அதாவது: இறந்து விட்டவருக்குக் கணவர் இருக்கிறார், அவருடன் தாயோ அல்லது பாட்டியோ இருக்கிறாள். அவர்களுடன் தாய் வழிச் சகோதர, சகோதரிகள் இருவரும், தாயும் தந்தையும் ஒன்றான சகோதரனும் இருக்கிறார்கள். இப்பொழுது அந்த சகோதரன் தாய் வழி மக்களை மூன்றிலொரு பங்கில் கூட்டாக்கிக்கொள்வான். அந்த சகோதரனுக்கு பதிலாக தந்தை ஒன்றான சகோதரன் இருந்தால் அவனுக்கு எவ்வித பாகமும் கிடைக்காது.

தாயும் தந்தையும் ஒன்றான அல்லது தந்தை மட்டும் ஒன்றான சிறிய பெரிய தந்தை மேற் கூறப்பட்ட தாய் தந்தை ஒன்றான அல்லது தந்தை மட்டும் ஒன்றான சகோதரனைப் போன்றுதான். தனித்திருந்தாலும் சரி, சேர்ந்திருந்தாலும் சரி. தனித்திருந்தால் முழுவதையும் எடுத்துக்கொள்வான். சேர்ந்திருந்தால், தாயும், தந்தையும் ஒன்றான சிறிய தந்தை, தந்தை மட்டும் ஒன்றான சிறிய தந்தையை விழுத்தாட்டுவான். சிறிய தந்தையுடைய மக்களின் அமைப்பும் அஸபாவின் அமைப்பும் இவ்வாறுதான்.

வமிசத்தால் அஸபாவை இழந்த அடிமைக்கு அவனை உரிமை விட்ட எஜமான் இருந்தால் அவனுடைய சொத்து முழுவதும் எஜமானுக்கே உரியவையாகும்.

அடிமைக்கு வாரிசுக்காரர்கள் இருந்தால் அவர்களுக்குரிய பங்குகள் போக மீதி எஜமானுக்குரியதாகும். உரிமை விட்டவர் ஆணாக இருந்தாலும் சரி, பெண்ணாக இருந்தாலும் சரி, உரிமை விட்டவரைக் காணவில்லையானால் அவருடைய அஸபாக்காரர்களில் நின்றும் மகன், சகோதரன் போன்ற ஆண்களுக்கு கொடுக்கவேண்டும். மகள், சகோதரி, பாட்டி, போன்ற பெண்களுக்குக் கொடுக்கக்கூடாது.

பாட்டனும் உடன் பிறந்தவர்களும் சேர்ந்து பங்கிட்டுக்கொள்வதில், அவர்களுடன் ஃபர்லுக்காரர் எவரும் இல்லாத பொழுது கூட்டாகப் பங்கிட்டுக்கொள்வதில் பாட்டனுக்கு எதில் லாபம் இருக்கிறதோ அவ்வாறே செய்வான். பாட்டனும் ஒரு சகோதரனுமிருந்தால் சமமாகப் பங்கிட்டுக்கொள்வான். அல்லது மொத்தத்தில் மூன்றிலொரு பங்கை எடுப்பதில் பாட்டனுக்கு இலாபமிருந்தால் அவ்விதமே செய்வான். உதாரணமாக: பாட்டன், இரண்டு சகோதரர்கள், ஒரு சகோதரி ஆகியோர் இருந்தால் இதில் அஸபா முறையில் பங்கு வைப்பதைவிட மூன்றிலொரு பங்கை எடுத்துக்கொள்வது பாட்டனுக்கு இலாபமாகும். அவர்களுடன் ஃபர்லுக்காரர்கள் இருந்தால், பாட்டனுக்கு மொத்தத்தில் ஆறில் ஒரு பங்கு கொடுப்பது, அல்லது ஃபர்லுக்காரர்களுக்குரிய பங்குகள் போக மீதியுள்ளதில் மூன்றிலொன்றைக் கொடுப்பது, அல்லது அஸபா முறையில் கூட்டாகப் பங்கிட்டுக்கொடுப்பது இந்த மூன்றில் எது அதிகமோ அதனைப் பாட்டன்

எடுத்துக்கொள்வான். உதாரணமாக: பாட்டனும், இரண்டு மகள்களும், இரண்டு சகோதரர்களும் இருந்தால் இதில் ஆறிலொன்று மற்ற இரண்டைக்கான அதிகமாகும். மனைவியும், தாயும், பாட்டனும், இரண்டு சகோதரர்களும் ஒரு சகோதரியும் இருந்தால், ஃபர்ழுக்காரிகளுக்குரிய பங்குகள் போக மீதியுள்ளதில் மூன்றிலொரு பங்கு கொடுப்பது அதிகமாகும். மகளும், பாட்டனும், ஒரு சகோதரனும், ஒரு சகோதரியும் இருந்தால் கூட்டாகப் பங்கை எடுப்பது அதிகமாகும்.

சில நிலைகளில் பாட்டனுக்கு எதுவும் மீதியில்லாமல் ஆகிவிடும். அப்பொழுது அவனுக்கு ஆறிலொன்று கிடைப்பதற்காக அதனுடைய அசல் மஸ்அலாவாகிய பன்னிரண்டிலிருந்து அவனுக்குக் கிடைக்கவேண்டிய இரண்டு பாகத்தை அதிகமாக்கிக்கொள்ளவேண்டும். உதாரணமாக: இரண்டு மகள்களும், தாயும், கணவனும், பாட்டனும், உடன் பிறந்தவர்களும் இருக்கிறார்கள். இப்பொழுது அசல் மஸ்அலாவின் படி உள்ள பன்னிரண்டை அவ்லின் முறையில் பதின் மூன்றாக்கி மேலும் அவ்லின் முறையில் பாட்டனுக்கு இரண்டு சேர்த்து மொத்தம் பதினைந்தாக்கிப் பங்கிட வேண்டும். அதாவது கணவனுக்கு கால்பங்கு (மூன்று) தாய்க்கு ஆறிலொன்று (இரண்டு), இரண்டு மகள்களுக்கு மூன்றில் இரண்டு பங்கு (எட்டு), பாட்டனுக்கு ஆறிலொன்று (இரண்டு). ஆக பதினைந்தானது. உடன் பிறந்தவர்கள் விழுந்துவிடுவார்கள். 'அவ்ல்' மஸ்அலாவின் விவரம் பின்னால் கூறப்படும்.

சில சமயங்களில் ஆறில் ஒன்றுக்குக் குறைவாகவும் மிஞ்சும். அப்போது அசல் மஸ்அலாவான பன்னிரண்டிலிருந்து கிடைக்கவேண்டிய இரண்டு பாகத்தையும் சேர்த்துக்கொள்ளவேண்டும். அப்போது மஸ்அலா 13 ஆக ஆகிவிடும். உதாரணமாக: இருமகள்களும், கணவனும், பாட்டனும், உடன் பிறந்தவர்களும் இருக்கிறார்கள். இப்பொழுது கணவனுக்குள்ள கால்பாகம் 3, இரண்டு மகள்களுக்குமுள்ள மூன்றில் இரண்டு பங்குக்காக 8, பாட்டனுக்குள்ள ஆறில் ஒன்று 2 ஆக பதிமூன்றாக ஆகிவிடும். உடன் பிறந்தவர்கள் விழுந்து விடுவார்கள்.

சில நிலைகளில் ஆறிலொன்று மட்டும் மீதியாகும். உதாரணமாக: இரண்டு மகள்களும், தாயும், பாட்டனும், உடன் பிறந்தவர்களும் இருப்பது போல். இதில் பாட்டனுக்கு ஆறிலொன்று கிடைக்கும். இந்த மூன்று நிலைகளிலும் உடன் பிறந்தார்கள் விழுந்துவிடுவார்கள்.

வாரிசுச் சட்டத்தில் மஸ்அலா எடுக்கும் விபரம் பின்வருமாறு: இரண்டு பாதி உள்ள மஸ்அலா. (உதாரணமாக: கணவன், தாய்-தந்தை ஒன்றித்த அல்லது தந்தை மட்டும் ஒன்றான சகோதரி இருப்பது போல்) அல்லது பாதியும் மிச்சமும் உண்டாகி இருக்கும் மஸ்அலா. (உதாரணமாக: கணவன், தாய் - தந்தை ஒன்றான அல்லது தந்தை மட்டும் ஒன்றான சகோரன் இருப்பது போல்) இவ்விரு மஸ்அலாக்களிலும் அசல் மஸ்அலா இரண்டாயிருக்கும். இதனை விபரித்துக் கூறினால் பொதுமக்கள் விளங்கிக்கொள்ள முடியாதென்பதால் விபரத்தை விட்டு விடுகிறேன்.

# பாகப்பிரிவினையில் 'அவ்ல்'(عَوْلٌ) மஸ் அலாவின் விபரம்

ஃபராயில்களுடைய அசல் மஸ்அலாக்களில் மூன்று மஸ்அலா 'அவ்ல் மஸ்அலாவாகும். அவ்ல் என்றால் பங்குகளைக் கூட்டி ஈவுகளைக் குறைப்பதாகும்.

பாகப்பிரிவினை செய்து கொள்வதில் 'அவ்ல்' عَوْلٌ முறை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்தில் ஏற்படவில்லை. பின் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்கள் காலத்திலும் ஏற்படவில்லை. அதற்குப்பின் உமர் (ரலி) அவர்களுடைய காலத்தில் அது நடைமுறைப்படுத்தப்பட்டது. அவர்கள் காலத்தில் ஒரு பெண் இறந்த பொழுது அவளுடைய கணவருக்கும், இரு சகோதரிகளுக்கும் இடையில் பாகப்பிரிவினை செய்து கொள்ளும் பொழுதுதான் இஸ்லாத்தில் முதன் முறையாக 'அவ்ல்' (عَوْلٌ) முறை நடை முறைப்படுத்தப்பட்டது.

மொத்தப்பங்குகள் ஆறாக இருப்பது பத்து வரை ஒற்றையாகவும் இரட்டையாகவும் அவ்ல் ஆகும். ஆறு, ஏழாக அவ்ல் ஆகுவதற்கு விபரம் வருமாறு: கணவன், தாய் தந்தை ஒன்றித்த அல்லது தந்தை மட்டும் ஒன்றான இரண்டு சகோதரிகள் இருப்பது போல். இதில் கணவனுக்குப் பாதியாகிய மூன்றும், இரு சகோதரிகளுக்கு மூன்றில் இரண்டு பாகமாகிய நான்கும் கிடைக்கும். எனவே, அசல் மஸ்அலா ஆறாக இருந்தது ஏழாகி விட்டது.

எட்டாக அவ்ல் ஆகுவதற்கு விபரமாவது: மேற்குறிப்பிட்ட கணவன், இரு சகோதரிகளுடன் தாயும் இருப்பதுபோல். ஒன்பதுக்கு விபரமாவது: மேற்குறிப்பிட்டவர்களுடன் தாய் மட்டும் ஒன்றான சகோதரன் இருப்பதுபோல். பத்துக்கு விபரமாவது: முன்னால் குறிப்பிட்டவர்களுடன் மேலும் ஒரு தாய் வழிச் சகோதரன் இருப்பது போல்.

சில சமயங்களில் பன்னிரண்டு பதினேழுவரை ஒற்றைப்படையாக அவ்ல் ஆகும். பன்னிரண்டு, பதிமூன்றாக அவ்ல் ஆகுவதற்கு விபரமாவது: மனைவி, தாய், தாயும் தந்தையும் ஒன்றான அல்லது தந்தை மட்டும் ஒன்றான இரண்டு சகோதரிகள் ஆகியோர் இருப்பது போல். பதினைந்தாக அவ்ல் ஆகுவதற்கு உதாரணம்: மேற்கூறப்பட்டவர்களுடன் தாய் ஒன்றான ஒரு சகோதரனும் இருப்பது போல். பதினேழாக அவ்ல் ஆகுவதற்கு உதாரணம்: மேற்குறிப்பிட்டவர்களுடன் தாய் வழிச்சகோதரன் மேலும் ஒருவன் இருப்பது போல். இன்னும் சில மஸ்அலாக்களில் இருபத்து நான்கு, இருபத்தேழாக அவ்ல் ஆகும். உதாரணமாக: இரண்டு மகள்கள், தாய், தந்தை, மனைவி ஆகியோர் இருப்பதைப் போல். இதில் அசல் மஸ்அலா இருபத்து நான்கை இருபத்தேழாக்கி இரண்டு மகள்களுக்குப் பதினாறு, தாய், தந்தை ஒவ்வொருவருக்கும் நான்கு நான்கு ஆக 8, மனைவிக்கு மூன்று ஆக இருபத்தேழு ஆனது. இந்த மஸ்அலாவுக்கு மிம்பரிய்யா என்று கூறப்படும். ஏனெனில் அலீ (ரலி) அவர்கள் கூஃபா நகரில் மிம்பரிலிருந்து குத்பா ஓதிக் கொண்டிருக்கும் பொழுது ஒருவர்

இந்த மஸ்அலாவை அன்னாரிடம் கேட்டார். அப்போழுது உடனடியாக குத்பாவுடைய வாசக அமைப்பிலேயே பதில் அளித்தார்கள். அந்த குத்பாவாகிறது:

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ يَحْكُمُ بِالْحَقِّ قَطْعًا
وَيَجْزِيْ كُلَّ نَفْسٍ بِمَا تَسْعٰى
وَاِلَيْهِ الْمَاٰبُ وَالرُّجْعٰى

என்று ஓதும் போது மேற்கண்ட கேள்விக்குரிய பதிலாக

صَارَ ثُمُنُ الْمَرْاَةِ تُسْعًا

என்று சொன்னார்கள். அதாவது, மனைவிக்கு கிடைக்க வேண்டிய எட்டில் ஒன்று அவ்லின் காரணமாக ஒன்பதில் ஒன்றாக ஆகிவிட்டது. இந்த மஸ்அலா முன்னால் விவரிக்கப்பட்டுள்ளது. அலி (ரலி) அவர்கள் சொன்ன இந்த பதிலின் மூலம் ஒரு குத்பாவின் இடையில் அன்று ஓதப்படும் குத்பாவிற்கு சம்பந்தமில்லாத ஆனால் மார்க்கத்திற்கு மாற்றமில்லாத ஒரு சிறிய வாசகத்தைச் சேர்ப்பதால் குத்பாவின் தொடர்ச்சி தப்பி விடாது என்பதற்கு ஆதாரம் ஏற்படுகிறது)

மஸ்அலாக்களில் சிறிய எண் பெரிய எண்ணுக்குள் மீதமில்லாமல் நுழைவதாக வகுக்கக் கூடியதாக இருந்தால் அதற்கு مُتَدَاخِلَانِ ஒன்று மற்றொன்றுக்குள் நுழைந்தது என்று கூறப்படும். சிறிய எண்ணையும் பெரிய எண்ணையும் மூன்றாவதான ஓர் எண் மீதமின்றி வகுக்கக்கூடியதாக இருந்தால் அதற்குப் பெயர் مُتَوَافِقَانِ ——— ஒன்று மற்றொன்றுக்கு நேர்பட்டது - என்று கூறப்படும். மேற்கூறப்பட்ட இரண்டு முறைகளுமின்றி - எந்த எண்ணினாலும் மீதமின்றி வகுக்க முடியாததாக இருந்தால் அதற்கு مُتَبَايِنَانِ ஒன்று மற்றொன்றுக்கு மாறுபட்டது - என்று கூறப்படும். இரண்டு எண்களும் சமமானதாக இருந்தால் அதற்கு مُتَمَاثِلَانِ - ——————— இரண்டும் ஒரே மாதிரியானது-என்று கூறப்படும். مُتَدَاخِلَانِ ——— என்பதை مُتَوَافِقَانِ என்றும் கூறலாம். இதற்கு மாற்றமாகக் கூறக் கூடாது. மேற்கூறப்பட்ட நான்கு வகைகள் சம்பந்தமான விபரங்களையும் மற்றுமுள்ள பல கணக்குகளையும் இங்கு குறிப்பிடவில்லை. ஆலிம்களிடம் அவற்றைக் கேட்டுத் தெரிந்து கொள்ளவும்.

முஸ்லிமும் காஃபிரும் ஒருவருக்கொருவர் அனந்தரம் கொள்ளமாட்டார்கள், முர்த்தத்து மதம் மாறியவன் - யாருக்கும் அனந்தரமாக மாட்டான். அவனுடைய பொருளும் அனந்தரங்கொள்ளப்படமாட்டாது. அவனுடைய பொருள் போரில் கைப்பற்றப்பட்ட (கொள்ளைப்) பொருளாகக் கணக்கிடப்படும்.

அடிமை அனந்தரம் பெறமாட்டான். கொஞ்சம் அடிமையாகவும் கொஞ்சம் உரிமையாகவும் இருப்பவனை அவனுடைய உரிமைத்தனத்தின் அடிப்படையில் பெற்ற பொருளை அவனுக்கு நெருங்கிய உறவினரும், பின் அவனை உரிமையிட்டவனும் அனந்தரம் கொள்வார்கள்.

கொலை செய்தவன் கொலை செய்யப்பட்டவனுக்கு அனந்தரமாகமாட்டான். கொலைக்கு காரணமாயிருந்தவனும் அவ்வாறே அனந்தரமாக மாட்டான். திருடனைப் பிடிக்கக் குழி தோண்டி வைத்திருந்தான். அதில் அவனுடைய தந்தை விழுந்துவிட்டான். இதில் அவன் கொலையாளிதான்.

அனந்தரங்கொள்ளத்தகுந்த இருவர் வீடு இடிந்து விழுந்து, அல்லது தண்ணீரில் மூழ்கி இறந்துவிட்டனர். அல்லது பரதேசியாய்ப் போனவர்கள் இருவரும் இறந்துவிட்டனர். ஆனால், யார் முன்னால் இறந்தது என்பது தெரியவில்லை. அல்லது தெரிந்தபின் மறந்துவிட்டது. இந்த நிலைகளிலெல்லாம் அவ்விருவரில் ஒருவர் மற்றொருவருக்கு அனந்தரமாகமாட்டார். எனினும் அவ்விருவரில் ஒவ்வொருவருடைய சொத்துக்கும் அவருடைய வாரிசுகள் அனந்தரமாவார்கள். முதலில் யார் இறந்தது என்பது தெரிந்து, பிறகு அனந்தரக்காரர்களுக்கு மத்தியில் பிசகுதல் ஏற்பட்டால், அது தெளிவாகும்வரை, அல்லது அவர்கள் ஒற்றுமையாகும்வரை சொத்தைப்பிரிக்காமல் வைத்திருக்கவேண்டும்.

ஒருவன் சிறைப்பிடிக்கப்பட்டு, அல்லது காணாமற்போய் அவனுடைய செய்தி எதுவும் தெரியவில்லையானால் அவனுடைய சொத்தை அப்படியே வைத்திருக்கவேண்டும். அவன் இறந்துவிட்டானென்று சாட்சி சொல்லப்பட்டால், அல்லது இதுவரை அவன் ஜீவித்திருக்கமாட்டானென்ற எண்ணம் உறுதியானால், அல்லது நீதிபதி ஆய்வு செய்து அவன் இறந்துவிட்டானென்று தீர்ப்புச் செய்தால் அப்பொழுது அவனுடைய சொத்தை அந்நேரத்தில் அவனுடைய வாரிசுகளாயிருப்பவர்களுக்கு முறைப்படிப் பங்கிட்டுக் கொடுக்கவேண்டும்.

சொத்து முழுவதையும் அனந்தரங்கொள்ளும் கர்ப்பத்தை அல்லது சிலதை அனந்தரங்கொள்ளும் கர்ப்பத்தை விட்டு விட்டு இறந்து விட்டால் அக்குழந்தை வெளியாகுமுன் அதன் விஷயத்திலும் அது அல்லாத மற்ற வாரிசுகளின் விஷயத்திலும் கவனமாகச் செயல்படவேண்டும். அவன் இறக்கும் போது மேற்சொன்ன கர்ப்பம் தரித்திருக்க சாத்தியமாயிருந்து, பிறகு அது உயிருடன் பிறந்தால் அனந்தரம் பெறும். உயிர் இல்லாமல் அனந்தரங் கொள்ள மாட்டாது.

## நிகாஹின் பாடம்

அல்லாஹுதஆலா குர்ஆனில் திருமணம் பற்றி கீழ்க்கண்ட ஆயத்தின் மூலம் விளக்கியுள்ளான். அதாவது:

وَانْكِحُوا الْأَيَامٰى مِنْكُمْ وَالصّٰلِحِيْنَ مِنْ عِبَادِكُمْ وَاِمَآئِكُمْ
اِنْ يَّكُوْنُوْا فُقَرَآءَ يُغْنِهِمُ اللّٰهُ مِنْ فَضْلِهٖ وَاللّٰهُ وَاسِعٌ
عَلِيْمٌ ۝ وَلْيَسْتَعْفِفِ الَّذِيْنَ لَا يَجِدُوْنَ نِكَاحًا حَتّٰى
يُغْنِيَهُمُ اللّٰهُ مِنْ فَضْلِهٖ

(24: 32,33)

"உங்களில் வாழ்க்கைத்துணையில்லாதவர்களுக்கு (அவர்கள் ஆணாயினும் பெண்ணாயினும்) திருமணம் செய்து வையுங்கள் (அவ்வாறே வாழ்க்கைத்துணைவர் இல்லாத) உங்கள் அடிமைகளிலுள்ள . நல்லோர்களுக்கும் (திருமணம் செய்து வையுங்கள்.) அவர்கள் ஏழைகளாக இருந்தாலும், அல்லாஹ் தன்னுடைய அருளைக் கொண்டு அவர்களைச் சீமானாக்கி வைப்பான். (கொடை கொடுப்பதில்) அல்லாஹ் மிக்க விசாலமானவனும், (மனிதர்களின் நிலைமையை) நன்கு அறிந்தவனுமாக இருக்கிறான்.

(வறுமையினால்) திருமணம் செய்து கொள்ளும் ஆற்றல் பெறாதோர், அல்லாஹ் தனது அருளைக் கொண்டு (அவர்களின் வறுமையை நீக்கி) பொருளைக் கொடுக்கும் வரையில் அவர்கள் (நோன்பு நோற்பது கொண்டு) உறுதியாக தங்களுடைய கற்பைக் காப்பாற்றிக் கொள்ளவும்."

எனவே ஆதம் அலைஹிஸ்ஸலாம் முதல் இறுதி நாள் வரை இன்னும் சுவனபதியிலும் திருமணம் இஸ்லாத்தின் நெறிமுறையாக ஆக்கப்பட்டுள்ளது.

உடலுறவு கொள்வதற்குத் தேவை ஏற்பட்டு, மஹரும், உணவு, உடை ஆகியவையும் கொடுக்க வசதிபெற்றவன் திருமணம் செய்வது சுன்னத்தாகும். திருமணம் செய்வது சுன்னத்தென்பது, தன்னுடைய ஷஹ்வத்தை (உணர்ச்சியை) அடக்கிக் கொள்ள சக்தி பெற்றவனுக்காகும். அவ்வாறு அடக்க முடியாதவனுக்கு திருமணம் செய்வது வாஜிபாகும். உடலுறவு கொள்ள இயலாதவனுக்கு மக்ரூஹ் ஆகும்.

மேற்கூறப்பட்ட செலவுகளைச் செய்து கொள்வதற்கு வசதியற்றவன் உடலுறவில் ஆசையுள்ளவனாக இருப்பின் நோன்பு நோற்பதின் மூலம் அந்த ஆசையைத் தணித்துக் கொள்ள வேண்டும்.

இதைப்பற்றி ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லாம் அவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்:

يَا مَعْشَرَ الشَّبَابِ مَنِ اسْتَطَاعَ مِنْكُمُ الْبَاءَةَ فَلْيَتَزَوَّجْ
فَإِنَّهُ أَغَضُّ لِلْبَصَرِ وَأَحْصَنُ لِلْفَرْجِ. وَمَنْ لَمْ يَسْتَطِعْ
فَعَلَيْهِ بِالصَّوْمِ فَإِنَّهُ لَهُ وِجَاءٌ.

"வாலிபர்களே! உங்களில் வசதி வாய்ப்பினைப் பெற்றவர், திருமணம் செய்து கொள்ளுங்கள். ஏனெனில் திருமணமாகிறது (பிற பெண்களை சிற்றின்ப நோக்கோடு பார்ப்பதை விட்டும்) பார்வையைத் தடுக்கக் கூடியதாகவும், மர்மஸ்தானத்தை (விபச்சாரத்தைவிட்டும்) பாதுகாக்கக் கூடியதாகவும் இருக்கிறது.வசதி வாய்ப்பினைப் பெறாதவர் நோன்பு நோற்றுக் கொள்ளவும். ஏனெனில் நோன்பு சிற்றின்ப வேட்கையைத் தணிக்கக் கூடியதாக இருக்கிறது"

மாறாக, கற்பூரம் போன்ற மருந்துகளைக் கொண்டு குறைப்பது மக்ரூஹ் ஆகும். ஏனெனில், பின்னால் அவன் வசதி பெற்றவனாக ஆகி விட்டால் தத்துவம் இழந்துவிட்ட அவன் கவலையடைய நேரிடும். மருந்துகளைக் கொண்டு இச்சையைப் போக்கிக் கொண்டால் அதனைத் திரும்பப் பெறுவது சிரமமாகும்.

சிலருக்கு நோன்பு பிடிப்பதால் இச்சை அதிகமாகும். அது ஆரம்ப நிலையில் மட்டும்தான். சில நாட்கள் தொடர்ந்து வைத்து வந்தால் குறைந்துவிடும். உணவு, உடை ஆகியவை கொடுப்பதற்குச் சக்தி பெற்றிருந்து, உடலுறவில் ஆசையில்லாதவனாக இருந்தால் அவன் திருமணம் செய்யாமல் வணக்கத்தில் ஈடுபடுவது சிறப்பாகும்.

நிகாஹ் செய்வது பற்றி பெருமானார் (ஸல்) அவர்கள் கீழ்க் கண்ட விதமாகவும் அருளியுள்ளார்கள். அதாவது:

وَمَنْ نَكَحَ فَقَدْ اَدّٰى ثُلُثَيْ دِيْنِهٖ. فَلْيَتَّقِ اللّٰهَ فِيْ بَاقِيْهِ

"திருமணம் செய்தவன் மார்க்கத்தில் மூன்றிலிரண்டு பங்குகளை நிறைவேற்றி விட்டவனாவான். மீதியில் அவன் அல்லாஹ்வை பயந்து கொள்ளவும்." என்றும்,

تَنَاكَحُوْا وَتَوَالَدُوْا وَتَكَاثَرُوْا فَاِنِّيْ اُبَاهِيْ بِكُمُ الْاُمَمَ
يَوْمَ الْقِيَامَةِ وَلَوْ بِالسِّقْطِ.

"திருமணம் செய்து குழந்தைகளை அதிகம் பெற்று எண்ணிக்கையில் பல்கிப் பெருகிக் கொள்ளுங்கள். ஒரு விழுகட்டியாக இருந்தாலும் சரி, நிச்சயமாக நான் உங்களைக் கொண்டு கியாமத் நாளில் மற்ற உம்மத்தினரிடம் பெருமை பாராட்டுவேன்" என்றும், "அதிகமாக நிகாஹ் செய்தவர்கள் நபிமார்கள்" என்றும்,

حُبِّبَ اِلَيَّ مِنْ دُنْيَاكُمْ ثَلٰثٌ اَلنِّسَاءُ وَالطِّيْبُ وَقُرَّةُ
عَيْنِيْ فِي الصَّلٰوةِ.

" உங்களுடைய இவ்வுலகில் எனக்கு 'ஹலாலான மனைவியர், நறுமணம், தொழுகையில் என் கண் குளிர்ச்சியடைவது ' ஆகிய மூன்றும் பிரியமாக்கப் பட்டுள்ளன" என்றும்,

اَلنِّكَاحُ مِنْ سُنَّتِيْ وَمَنْ رَغِبَ عَنْ سُنَّتِيْ فَلَيْسَ مِنِّيْ.

"திருமணம் என் சுன்னத்தான வழிமுறை; எவர் அதனைப் புறக்கணிக்கிறாரோ அவர் என்னை சார்ந்தவர் அல்லர்" என்றும்,

مَنْ تَرَكَ التَّزَوُّجَ مَخَافَةَ الْعَيْلَةِ فَلَيْسَ مِنَّا.

"வறுமையைப் பயந்து திருமணத்தை விட்டவர் எம்மைச் சார்ந்தவரல்லர்" என்றும்,

مَنْ كَانَ ذَا طَوْلٍ فَلْيَتَزَوَّجْ.

"வசதி பெற்றவர் திருமணம் செய்து கொள்ளட்டும்" என்றும்,

تَزَوَّجُوا فَلَيْسَ فِي الْجَنَّةِ أَعْزَبُ.

"திருமணம் செய்து கொள்ளுங்கள்; சொர்க்கத்தில் திருமணமில்லாதவர் கிடையாது" என்றும்,

وَلَا تَكُونُوا كَرُهْبَانِ النَّصَارٰى

"கிறித்துவப் பாதிரிகளைப்போன்று (பிரம்மச்சாரிகளாக) இருந்து விடாதீர்கள்" என்றும் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அருளியுள்ளார்கள்.

இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

திருமணம் செய்வதில் நிரம்ப நன்மைகளும், அவ்வாறே பல துன்பங்களும் உண்டு. எனவே, ஒருவருக்கு ஒரு கைத்தொழிலோ, வியாபாரமோ, ஹலாலான வருமானமோ, அனந்தரச் சொத்துக்களோ இல்லாவிட்டால் அவர் திருமணத்தை செய்யாமலிருப்பது நல்லதாகும். ஏனெனில், ஒரு சுன்னத்தை நிறைவேற்றுவதற்காகப் பல துன்பங்களை உண்டாக்கிக் கொள்வது கூடாது.

ஷாஃபியீ மத்ஹபில் சில இமாம்களிடத்திலும் மற்ற மூன்று மத்ஹபுகளிலும் வாழ்க்கைச் செலவினங்களுக்குக் கொடுக்கச் சக்தி பெற்றவன் உடலுறவு கொள்வதில் ஆசை கொண்டவனாக இருந்தால் திருமணம் செய்வது வாஜிபாகும். ஆனால், அவன் ஜினாவை பயந்தால் எல்லோரிடத்திலுமே வாஜிபாகும்.

திருமண நாளில் வாழ்த்துக் கூறும் முறையில் நகரா அடிப்பது, தம்பூரா வாசிப்பது, மத்தளம், தஃப் ஆகியவை அடிப்பது கூடும். நடுவில் ஒடுங்கியும் இரு ஓரங்களில் அகன்றும் இருக்கும் உடுக்கைப் போன்றதை உபயோகிப்பது கூடாது. தஃப் அடிப்பது பற்றி ஹதீஸில் வந்திருப்பதால் அது சுன்னத்தாகும். ஏனெனில் திருமணத்தைப் பலரும் அறிய விளம்பரப்படுத்த வேண்டுமென்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது. திருமணத்திற்கும் விபச்சாரத்துக்குமிடையே வித்தியாசமாகிறது முந்தியதை பகிரங்கப்படுத்துவதும், இரண்டாவதை மறைத்துக் கொள்வதுமாகும்.

## திருமணப் பேச்சு முடிவான பின் மாப்பிள்ளை, பெண் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்வது

திருமணம் செய்ய நல்லெண்ணங்கொண்டு முடிவு செய்த பிறகு மாப்பிள்ளையும் பெண்ணும் ஒருவரையொருவர் பார்த்துக்கொள்வது சுன்னத்தாகும். அதாவது, தொழுகையில் மறைக்கப்பட வேண்டிய உறுப்புகளைத் தவிர மற்றதைப் பார்த்துக் கொள்வது சுன்னத்து, எனினும், பெண்ணுக்கு மஹ்றமான ஒருவரை உடன் வைத்துக் கொள்ள வேண்டும். அவன் பார்ப்பது சாத்தியமில்லையானால் அவனுக்குச் சொந்தமான ஒரு பெண்ணை நியமித்துப் பார்த்து வரச் செய்வது சுன்னத்தாகும்.

மஹ்றம் என்பவர் ஒரு பெண்ணுக்குத் திருமணம் செய்ய ஹறாமாக்கப்பட்டவர். அவரைத் தொடுவதால் ஷாஃபியீ மத்ஹபில் உளூ முறிந்து விடாதவர்.

பருவமடைந்த ஆண் அந்நியப் பெண்ணைத் தொடுவதும், பார்ப்பதும், இச்சை கொண்டு அவளுடைய சத்தத்தைக் கேட்பதும் ஹறாமாகும். திருமண சோபனங்களில் கூட்டமாக குரவையிடுவது கூடும். ஒரு பெண் அந்நிய ஆணையும் விபச்சாரியையும் பார்ப்பது ஹறாம். அவர்களுடன் தனித்திருப்பதும் ஹறாம். இச்சை உண்டாக்காத பெண் குழந்தையைப் பார்க்கலாம். ஆனால் மர்மஸ்தானத்தைப் பார்ப்பது கூடாது. தாயும் பால் கொடுப்பவளும் தேவையானால் பார்க்கலாம்.

இரண்டு ஆண்கள், அல்லது இரண்டு பெண்கள் ஒரே விரிப்பில் ஒரே போர்வையில் படுப்பது ஹறாமாகும். பிள்ளைகள் பத்து வயதை அடைந்தால் அவர்களைப் பெற்றோரை விட்டும் சகோதரர்களை விட்டும் படுக்கையில் பிரிப்பது வாஜிபாகும்.

தாடி, மீசை முளைக்காத அழகிய வாலிபனை இச்சை கொண்டு பார்ப்பதும் தொடுவதும் ஹறாமாகும். இச்சையில்லாமல் பார்ப்பதும் ஹறாமென்று இமாம் நவவீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

ஓர் உறுப்பைப் பார்ப்பது ஹறாமென்றிருந்தால் அது உடலுடன் சேர்ந்திருந்தாலும் பிரிந்திருந்தாலும் ஹறாம்தான். களைந்த முடி, நகம் ஆகியவை போல் அதனை மறைப்பதும் வாஜிபாகும்.

மஹ்றமானவன் பாவம் செய்பவனாக இருந்தாலும், மஹ்றமான பெண்ணுடைய முழங்காலுக்கும் தொப்புளுக்கும் இடையிலுள்ளதை தவிர மற்ற உறுப்புகளைப் பார்க்கலாம். எனினும், முதுகு போன்றவற்றைத் தேவையான காரியத்துக்கல்லாமல் தொடுவது கூடாது.

மருத்துவர் மருந்து போடுவதற்கும், நாடி பார்ப்பதற்கும், சிலந்தி போன்ற புண்ணுக்குக் கட்டுப் போடுவதற்கும், உடலில் அப்பகுதியைப் பார்ப்பதும், பிள்ளை பெறும்போது மருத்துவப் பெண் மர்மஸ்தானத்தைப் பார்ப்பதும், தொடுவதும், முகம் பார்த்துப் பேச வேண்டிய வியாபாரம், கொடுக்கல் வாங்கல், சாட்சி கூறுதல்

ஆகியவற்றிற்காக முகத்தைப் பார்ப்பதும் கூடும். எனினும், இவை நிர்பந்தமான நிலையில் இருப்பது நிபந்தனையாகும்.

ஓர் ஆண் மற்றோர் ஆணுடைய தொப்புளுக்கும் முழங்காலுக்குமிடையிலுள்ள இடத்தைப் பார்ப்பது ஹராமாகும். அவ்வாறே ஒரு பெண் மற்றொரு பெண்ணுடைய அவ்விடத்தைப் பார்ப்பதும் தொடைப் பகுதியைத் திரையின்றித் தொடுவதும் ஹராமாகும்.

குழப்பத்தைப் பயப்படாதபொழுது தான் திரைக்கு மேல் தொடுவது ஆகுமாகும்.

இரு ஆண்களோ இரு பெண்களோ சந்திக்கும் பொழுது முஸாஃபஹா செய்து கொள்வது முஸ்தஹப்பு.

அந்நிய பெண்ணுடைய உருவத்தை ஒரு பெரிய கண்ணாடியிலோ, தண்ணீரிலோ பார்ப்பதும், அவள் உருவத்தை மனதில் உருவகப்படுத்துவதும் ஹராமல்ல. எனினும், அவ்வாறு செய்யாமலிருப்பது நல்லது. இவ்வாறு ஜம்உல் ஜவாமிஃ, கலாயித் ஆகிய கிரந்தங்களில் எழுதப்பட்டுள்ளது.

## அந்நிய ஆணும், பெண்ணும் ஒருவரையொருவர் பார்ப்பது

அந்நிய ஆணும், பெண்ணும் ஒருவரையொருவர் பார்ப்பது ஹராம் என்பதில் ஆண் பெண்ணைப் பார்ப்பது கடினமான ஹராமாகும். மஹ்ரமானவன் பிரபலமாகப் பாவம் செய்கிறவனாக இருந்தால் அவனைப் பார்க்காமல் திரைப் போட்டுக் கொள்வது சுன்னத்தாகும்.

தன் மனைவியைப் பிற பெண்ணாகக் கருதி உடலுறவு கொண்டால் அவன் குற்றவாளியாவான். ஆனால், உலகில் அதற்கு ஹத்து இல்லை. மறுமையில் ஜினாவை விடக் குறைந்த வேதனையுண்டு, இது கள்ளென்று நினைத்து தண்ணீரைக் குடிப்பது போன்றதாகும்.

ஒரு அந்நியப் பெண்ணை எதிர்பாராத விதமாக பார்த்ததில் இச்சை உண்டானால் உடனே தன் மனைவியுடன் கூடி அதனைத் தீர்த்துக் கொள்வது முஸ்தஹப்பு.

## திருமணம் சம்பந்தமான குத்பாக்கள் ஓதவேண்டிய சந்தர்ப்பங்கள்

பெண் பேசப் போனால் அப்பேச்சைத் தொடங்கும் முன் மாப்பிள்ளையோ அல்லது அவனுடைய வக்கீலோ ஒரு குத்பா ஓதுவதும், பிறகு வலீயானவர் சம்மதித்து வாக்கு கொடுக்கும் முன் வலீ அல்லது அவருடைய வக்கீல் ஒரு குத்பா ஓதுவதும், பின்னர் நிகாஹ் நடைபெறும் போது பெண்ணின் வலீகாரார் (அல்லது அவருடைய வக்கீல்) மாப்பிள்ளையிடம் நான் முடித்துத் தந்தேன் என்று சொல்லும் முன்

(ஈஜாபுக்கு முன்,) ஒரு குத்பா ஓதுவதும் சுன்னத்தாகும். இந்த மூன்று குத்பாக்களும் சுன்னத்தென்பதில் கருத்து வேற்றுமையில்லை.

ஒருவன் ஒரு பெண்ணைப் பேசி அதில் சம்மதம் ஏற்பட்டிருக்கும் பொழுது அதை அறிந்த வேறொருவன் அப்பெண்ணை தனக்கு பேசுவது ஹராமாகும். மாப்பிள்ளை விஷயத்திலும் அவ்வாறு தான் நடந்து கொள்ள வேண்டும். ஆனால், முந்தியவர்களுக்கு சம்மதம் கொடுக்காமலிருந்தாலோ அல்லது அந்தப் பேச்சைப் புறக்கணித்து விட்டாலோ கூடும். வியாபார விஷயங்களிலும் இவ்வாறு தான்.

மாப்பிள்ளை கேட்டு, அல்லது பெண் கேட்டுப் பேசும் பொழுதும், ஒருவனுடன் பற்று வரவு செய்ய நாடும் பொழுதும், ஒருவரைப் பற்றி விசாரித்தால் அறிந்தவர்கள் அவரைப் பற்றி கூறும் பொழுதும் அவர்களைப் பற்றியுள்ள விஷயத்தை உள்ளபடி விபரமாய்க் கூறுவது வாஜிபாகும். இதனால் புறம் பேசியதாக ஆகாது. அப்படி உண்மையைக் கூறாமல் மறைத்தால் கேட்பவருக்கு மடிப்பு (மோசம்) செய்தவராவார்.

### எவ்வித குணங்களையுடைய பெண்ணைத் திருமணம் செய்ய வேண்டும்

எவ்வித குணங்களையுடைய பெண்ணைத் திருமணம் செய்ய வேண்டுமென்பது பற்றி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கீழ்க்கண்ட விதமாகக் கூறியுள்ளார்கள்:

تُنْكَحُ الْمَرْأَةُ لِأَرْبَعٍ لِمَالِهَا وَلِحَسَبِهَا وَلِجَمَالِهَا
وَلِدِيْنِهَا فَاظْفَرْ بِذَاتِ الدِّيْنِ.

"பொருள் வசதி, கண்ணியமான குடும்பப் பின்னணி, அழகு, இஸ்லாமிய மார்க்க நெறியைக் கடைப்பிடித்தல் ஆகிய நான்கு சிறப்புகளைக் கொண்ட பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும். எனினும் மார்க்க நெறிக்கு முதலிடம் கொடுத்து அந்தப் பெண்ணை கைப் பிடித்து நீங்கள் வாழ்க்கையில் வெற்றி பெறுங்கள்."

எனவே, பெண்ணிடத்தில் தீனின் ஒழுக்கமும், நல்ல வம்சமும், அழகும் இருப்பதும், தாய், தந்தையுடன் பிறந்த மாமா, மாமி, சாச்சா, சாச்சி இவர்களின் முதல் தலைமுறை மக்களல்லாமல் இருப்பதும் அவசியமாகும்.

நல்ல குணமும், சிறந்த புத்தியும், பத்தினித்தனமும் இனப்பெருக்கமும் உடையவளாக இருப்பதும், கன்னி அழியாதவளாக இருப்பதும் சுன்னத்தாகும். மாப்பிள்ளையும் அப்படியிருப்பவராகப் பார்ப்பது சுன்னத்தாகும்.

ஹஸன், ஹுஸைன் (ரலி) இருவரின் சம்பந்தத்தை வைத்து அவ்வாறு திருமணம் செய்வது மக்ரூஹ் அல்ல என்று சொல்லக் கூடாது. அவ்வாறு செய்தால் குழந்தை மெலிந்ததாகவும் சக்தியற்றதாகவும் பிறக்குமென்று ஞானவான்களும் மருத்துவர்களும் கூறியிருக்கிறார்கள்.

சிறிதும் உறவு முறையேற்படாத அன்னியர்களுடன் சம்பந்தம் செய்வதை விட சற்று தூரமான உறவில் சம்பந்தம் செய்வது நல்லதாகும். அந்த இனத்தில் மாப்பிள்ளை அல்லது பெண் கிடைக்கவில்லையானால் அன்னியர்களுடனேயே சம்பந்தம் செய்து கொள்ளலாம்.

மெலிந்து நெட்டையானவளையும், செம்பட்டை முடியுள்ளவளையும், பூனைக் கண்ணுடையவளையும், முதல் கணவனுக்குக் குழந்தைகளிருந்து அக்குழந்தைகளுடன் வாழ்பவளையும், அதிகம் முனகுபவளையும், செய்த நன்மையை சொல்லிக் காட்டுபவளையும், முதல் கணவன் மீது அதிக ஆசையுள்ளவளையும், உலக ஆசை அதிகமாக உள்ளவளையும், அதிக மஹ்ரை விரும்புபவளையும், விபச்சாரத்தில் பிறந்தவளையும், பாவங்கள் செய்கிறவனுடைய மகளையும் திருமணம் செய்வது மக்ரூஹ் ஆகும். ஆனால், மேற் கூறப்பட்ட பெண்களில் ஒருத்தியின் மீது மையலாகி, அவளை மணம் முடிப்பதால் அவனுடைய நல்லொழுக்கம் பாதுகாக்கப் படுமென்றிருந்தால் அவளை முடிப்பதே ஏற்றம்.

## திருமணம் செய்வதற்கு ஏற்ற காலமும் இடமும்

ஷவ்வால் மாதம் முதல் வெள்ளிக்கிழமை காலை நேரம் ஜும்ஆ மஸ்ஜிதில் நல்லோர்கள் நிறைந்த கூட்டத்தில் வைத்துத் திருமணம் செய்வதும், பிறகு வலீகாரர் கை பிடித்துக் கொடுத்த பிறகு அதே மாதத்தில் உடலுறவு கொள்வதும் சுன்னத்தாகும்.

திருமணம் முடிந்தவுடன் எல்லோரும் மாப்பிள்ளையை நோக்கி,

بَارَكَ اللّٰهُ لَكُمَا وَبَارَكَ اللّٰهُ عَلَيْكُمَا وَجَمَعَ بَيْنَكُمَا فِيْ خَيْرٍ وَّعَافِيَةٍ۔

அல்லாஹ் உங்களிருவருக்கும் பரகத்துச் செய்வானாக! உங்கள் இருவர் மீதும் பரகத்துச் செய்வானாக. உங்களிருவரையும் நன்மையைக் கொண்டும், உடல் நலத்தைக் கொண்டும் உங்களிருவரையும் இணைத்து வைப்பானாக.

திருமணம் செய்வதால் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய சுன்னத்தை நிறை வேற்றுவதையும், பத்தினித் தனத்தையும், நல்லொழுக்கமுள்ள குழந்தைகள் உண்டாவதையும் நிய்யத்துச் செய்வது சுன்னத்தாகும். அப்படிச் செய்வதால் இருவரும் அந்த நிகாஹில் இருக்கும் காலமெல்லாம் நன்மையான கூலி கொடுக்கப்பட்டுக் கொண்டே இருப்பார்கள். உலகத்தின் வாழ்வையும் சுகத்தையும் நினைத்தால் அது மட்டுமே கிடைக்கும்; மறுமையில் எவ்வித நன்மையும் கிடைக்காது.

திருமணம் செய்யும் முன் இஸ்திகாரா - நன்மையைத் தேடித் தொழும் - தொழுகையைத் தொழுது திருமணம் முடிந்த பின் இருவரும் உலகப் பேச்சைப் பேசாமல் மீண்டும் தொழுகையில் ஈடுபட்டு, பிறகு ஒன்று கூடுவார்களானால், அல்லாஹுதஆலா அவர்களை ஈருலகிலும் நற்பாக்கிய முடையவர்களாக ஆக்கி நல்வாழ்வையளிப்பான். இது பரிசோதிக்கப்பட்ட விஷயமாகும்.

## திருமணத்தின் முக்கிய சட்டங்கள்

திருமணத்தின் ஃபர்லுகள் ஐந்தாகும், மனைவி, கணவன், வலீ, இரண்டு சாட்சிகள், ஈஜாப் - கபூல் வாசகம் ஆகிய ஐந்துமாகும்.

பெண்ணாகிறவள் முஸ்லிமானவளாகவும், அல்லது கலப்பற்ற வேதக்காரியாகவும்; - அவள் ஹர்பீ பெண்ணாக, அல்லது திம்மீ பெண்ணாக இருந்தாலும் சரி, இன்னும் வேறொருவருடைய மனைவியாக இல்லாமலும், இத்தாவை விட்டு நீங்கியவளாகவும், அவள் யார் என்று குறிக்கப்பட்டவளாகவும், வமிசம், பால்குடி சம்பந்தம் ஆகிய மூன்றிலும் மஹ்ரமிய்யத்தை - திருமணம் செய்ய ஹராமாயிருப்பதை - விட்டும் நீங்கியவளாகவும் இருப்பது ஷர்த்தாகும். குறிப்பில்லாமல் இருவரில் ஒருத்தியை நிகாஹ் செய்து கொடுத்தேன் என்று கூறினால் கூடாது

ஈஜாப் என்பது زَوَّجْتُكَ உனக்கு நான் மணம் முடித்துத் தந்தேன் என்று பெண்ணின் வலீகாரன் (அல்லது அவனின் வக்கீல்) சொல்வதாகும். கபூல் என்பது மாப்பிள்ளை (அல்லது அவனால் குறிக்கப்பட்ட அவனது வக்கீல்( قَبِلْتُ ) நான் ஒப்புக்கொண்டேன் என்று சொல்வதாகும்.

ஹர்பி என்றால், முஸ்லிம்களுடன் போரிட்டுக் கொண்டிருப்பவர்கள். திம்மி என்றால் முஸ்லிம் நாட்டில் முஸ்லிம்களுக்குக் கட்டுப் பட்டு வாழ்கிறவர்கள்.

குறிப்பானவளாயிருப்பது ஷர்த்தென்பது, அவளுடைய வர்ணிப்பைக் கொண்டு, அல்லது அவளின் பக்கம் சுட்டிக் காட்டுவது கொண்டு போதுமாகும். அவனுக்கு ஒரு மகள் மட்டும் இருந்தால் என் மகளைத் திருமணம் செய்து கொடுத்தேன் என்று சொன்னால் கூடும். ஒரு வீட்டில் ஒரு பெண் மட்டும் இருந்து, இந்த வீட்டிலுள்ளவளைத் திருமணம் செய்து கொடுத்தேன் என்று கூறினாலும் கூடும்.

ஒரே பெண் குழந்தை மட்டும் உள்ளவன், அவளுடைய பெயரை மாற்றமாகச் சொல்லி என்னுடைய மகளைத் திருமணம் செய்து கொடுத்தேன் என்றாலும் கூடும்.

என்னுடைய பெரிய மகளைத் திருமணம் செய்து கொடுத்தேன் என்று கூறியவன் சிறிய மகளுடைய பெயரைச் சொன்னால், பெரிய மகளுடைய நிகாஹ்தான் கூடும். ஏனெனில், 'பெரிய' என்ற தன்மை அவள் மீது தான் செல்லுபடியாகும். பெயர் என்பது அவ்விதமல்ல .

மாப்பிள்ளையாகிறவன் முஸ்லிமாகவும், குறிப்பானவனாகவும், மஹ்ரம் இல்லாதவனாகவும், இந்த நிகாஹ ுக்கு முன் நான்கு மனைவிகள் இல்லாதவனாகவும் இப்பொழுது நிகாஹ் செய்ய நாடும் பெண்ணுக்கு வமிசத்தின் மூலமோ, பால்குடி மூலமோ மஹ்ரமான அக்கா, தங்கை, மாமி, சாச்சி இவர்களில் எவரேனும் ஒருத்தி

இவனுடைய நிகாஹில் இல்லாமலும் இருப்பது ஷர்த்தாகும். எனவே, சம்பந்தத்தினால் மட்டும் உள்ள மஹ்ரமிய்யத்து இருப்பது குற்றமில்லை. அதாவது, தனது மனைவியின் முந்திய கணவனின் தாயையோ, அல்லது அவனுக்கு (முந்திய கணவனுக்கு) வேறு ஒரு மனைவியின் மூலம் பிறந்த பெண்ணையோ திருமணம் செய்து கொள்வது குற்றமில்லை.

இரண்டு சாட்சிகள் முஸ்லிமானவர்களாகவும், பார்வையும் கேள்வியும் உள்ளவர்களாகவும், சொல்லப்படும் ஈஜாப், கபூல் வாசகத்தை விளங்குகிறவர்களாகவும், நேர்மையானவர்களாகவும் இருப்பது ஷர்த்தாகும். ஒருவன் நீதியானவன் என்பது மறைமுகமானதாக இருந்தால் அவனைச் சாட்சியாக ஆக்கலாம். பாவம் செய்வதென்பது சர்வ சாதாரணமாகி எல்லோரிடத்திலும் அது இருக்கும் நிலைமையில் அத்தகையவனின் சாட்சியை ஏற்கலாம்.

ஈஜாப் கபூலின் வாசகம் விளங்காதவனையும், பெண்களையும், சிறுபிள்ளைகளையும், அடிமைகளையும், நடைபெறும் நிகாஹுக்குரிய வலீகாரனையும், பைத்தியக்காரனையும் சாட்சிகளாக ஆக்கக் கூடாது.

கண் பார்வையற்ற ஒருவன் மாப்பிள்ளை பெண் இருவரையும் தெளிவாக அறிகிறவனாக இருந்தால் அவனைச் சாட்சியாக்கலாம்.

மக்கள் கூடியிருக்கும் ஒரு சபையில் திருமணம் நடைபெறும் பொழுது சாட்சிகளைக் குறிப்பிடுவது தேவையில்லை. எனினும், இருவரைக் குறிப்பது நல்லது. மூன்று சகோதரர்களில் இருவரை சாட்சிகளாகவும், ஒருவரை வலியாகவும் ஏற்படுத்திக் கொள்ளலாம்.

"என் மகள் இந்தப் பெயருடைய பெண்ணை இத்தனை ரூபாய் மஹருக்கு உனக்கு நான் நிகாஹ் செய்து கொடுத்தேன்" என்று வலிகாரர் கூற வேண்டும். "அவளுடைய நிகாஹை நான் ஒப்புக்கொண்டேன்" என்று மாப்பிள்ளை கூற வேண்டும். ஒருவரை வக்கீலாக வைத்து நிகாஹை எழுதிக் கொள்வதும் நல்லது. அதாவது ஷேக்கா லெப்பை மகன் மீரா லெப்பை மாப்பிள்ளைக்கு என் மகள் ஆயிஷாவை நூறு களஞ்சு ஆணி, ஆணி போலுள்ள முத்து மஹருக்கு நிகாஹ் செய்து கொடுக்க உம்மை நான் வக்கீலாக்கினேன் என்று வலீகாரன் வக்கீலிடத்தில் சொல்லி நிகாஹ் எழுதச் செய்ய வேண்டும். "இன்னாருடைய வக்கீலாக இருந்து இன்னாருடைய மகளை இன்ன மஹருக்கு இன்னார்களைச் சாட்சிகளாக வைத்து உனக்கு நிக்காஹ் முடித்துத் தந்தேன் என்று அந்த வக்கீல் சொல்ல வேண்டும். நிகாஹை ஒரு வக்கீல் கபூல் செய்வதில் இன்னாருடைய வக்கீலாக இருந்து அவருக்கு கபூல் செய்தேன் என்று சொல்லவும்.

## நிகாஹில் வலீ விவரம்

வலீ என்பவர் தந்தை, தந்தை இல்லாத நேரத்தில் (அதாவது: தந்தை மரணிப்பதாலோ, அல்லது வலீயாவதற்குத் தடையாக இருக்கக் கூடிய பைத்தியம் பிடித்தல், மதம் மாறுதல் போன்ற செயல்களினாலோ தந்தை இழக்கப்பட்ட நேரத்தில்)

தந்தையுடைய தந்தை ஆகியோராவார்கள். (தந்தையுடைய தந்தை வழியில் எவ்வளவு மேலே போனாலும் சரி) இவர்களிருவரும் வயது வந்த அல்லது வயது வராத ஆனால் கன்னி அழியாத ஒரு பெண்ணை அவளுடைய அனுமதியின்றியே, மஹர் கொடுக்க வசதியுள்ள பொருத்தமான ஒரு மாப்பிள்ளைக்குத் திருமணம் செய்து கொடுக்கலாம். எனினும், வயது வந்த பெண்ணாக இருந்தால் அவளிடம் அனுமதி பெற்றுக் கொள்வது சுன்னத்தாகும்.

பெண்ணிடம் அனுமதி கேட்கும் பொழுது சப்தமிட்டாலும், கன்னத்தில் அடித்துக் கொள்ளாமல் அழுதாலும் அது அனுமதிதான். மகிழ்ச்சியினால் அழும் கண்ணீர் இனிமையாகவும், கவலையினால் அழும் கண்ணீர் கசப்பாகவும் இருக்குமென்று சொல்வது சரியல்ல. அறிவீனமாகும்.

உடலுறவினால் கன்னியழிந்தவளை அவள் பருவமடைந்தவளாக இருப்பின் அவளுடைய அனுமதியின்றி நிகாஹ் செய்து கொடுப்பது யாருக்கும் கூடாது. ஷாஃபியீ மத்ஹபின்படி பருவமடையாத பெண்ணை தந்தையோ, தந்தையை இழக்கப்பட்ட நேரத்தில், தந்தையைப் பெற்ற பாட்டனோ தவிர வேறு எவரும் திருமணம் செய்து கொடுக்கக் கூடாது. ஹனஃபீ மத்ஹபில் வேறு எவரும் செய்து கொடுக்கலாம் என்று வருவதால் முட்டுப்பாடு ஏற்படும் நேரத்தில் ஷாஃபியீ மத்ஹபுக்காரர்கள் ஹனஃபீ மத்ஹபில் திரும்பி செய்து கொடுக்கலாம். ஹனஃபீ மத்ஹபில் வலீயாகிறது அஸபாவின் ஒழுங்கு முறைக்குப்பின் தாய்க்கும் மகனுக்கும், தாய் மாமனுக்கும் உண்டு.

வலீயாகிறவன் முன்னால் பாகப்பிரிவினையில் கூறுப்பட்டுள்ள அஸபாவுடைய தர்தீபின் முறையிலாயிருக்கும். எனினும் தாயைத் திருமணம் செய்து கொடுக்க மகன் வலீயாக மாட்டான்.

உடலுறவினால் கன்னியழிந்த, பருவமடைந்த பெண்ணை வாய் மொழியின் அனுமதி கொண்டும், அவ்வாறில்லாத கன்னிப்பெண் பருவமடைந்தவளை மௌனத்தைக் கொண்டும் அஸபாக்காரர்கள் திருமணம் செய்து கொடுக்கலாம்.

அனுமதி கொடுக்க வேண்டிய ஒரு பெண்ணை, அவள் கொடுத்த அனுமதி வந்து சேரும் முன்னமே வலீகாரர் அவளைத் திருமணம் செய்து கொடுத்தால் கூடும். ஆனால், அந்த அனுமதி திருமணத்திற்குப்பின் வலீகாரன் கைக்குக் கிடைத்தாலும் அவள் அனுமதி கொடுத்தது திருமணத்திற்கு முன்னதாக இருக்க வேண்டும்.

அஸபாக்காரர்களிலுள்ள வலீ இல்லையானால் காளீயாகிறவர் தன்னுடைய அதிகாரத்திற்குட்பட்ட பகுதியிலுள்ள பருவமடைந்த பெண்ணை ஏழு நிலைகளில் திருமணம் செய்து கொடுக்கலாம். அதாவது வலீகாரன்தானே அவளைத் திருமணம் செய்து கொள்வதாயிருந்தாலும், வலீ எவரும் இல்லாத நிலையிலும் (வலீ இருந்தும் அவனிருக்கும் இடம் தெரியாத நிலையிலும்) வலீகாரன் இரண்டு நாள்களின் தூரத்திற்கு அப்பால் மறைமுகமாக இருக்கும் நிலையிலும் வேறு இடத்திலிருக்கும் வலீகாரன் வரமுடியாத சூழ்நிலையிலும், அவன் பெரும் அந்தஸ்துடையவனாக இருந்து வராமலிருந்து விட்ட நிலையிலும் பொருத்தமுள்ள மாப்பிள்ளைக்கு முடித்துக்

கொடுக்காததால் அவன் கோபித்துக் கொண்ட நிலையிலும், வலீகாரன் ஹஜ்ஜுக்கு இஹ்ராம் கட்டியிருக்கும் நிலையிலும், இந்த ஏழு நிலைகளிலும் காளீ திருமணம் செய்து கொடுப்பார்.

காளீயானவர் திருமணம் செய்து கொடுக்க பணங்காசு கேட்டு திருமணத்தைப் பிற்படுத்துவது கூடாது. வலீயாக இருப்பதற்கு அவரே குறிப்பாக்கப்பட்டிருந்தால் அறவே கூடாது.

## நீதமான காளீ இல்லாவிட்டால் முஹக்கம் (நடுவர்)

உரிய நிபந்தனைகளின்படி உள்ள காளீயானவர் இல்லாவிட்டால் நீதியான ஒரு மனிதரை நடுவராக (முஹக்கமாக) மாப்பிள்ளை பெண் இருவரும் நியமித்து அவர்மூலம் திருமணத்தை நிறைவேற்றிக் கொள்வார்கள்.

நெருங்கிய வலீகாரர் இருக்கும் பொழுது, தூரமாக உள்ள ஒரு வலீகாரர் ஏழு சந்தர்ப்பங்களில் திருமணத்தை முடித்துக் கொடுக்கலாம். நெருங்கியவர் காஃபிராகவோ, பாவம் செய்பவராகவோ, சிறு பிள்ளையாகவோ, அடிமையாகவோ, பைத்தியக்காரனாகவோ, நோட்டம் குறைந்தவனாகவோ, மடமைத்தனமுள்ளவனாகவோ இருந்தால் ஆக இந்த ஏழு சந்தர்ப்பங்களிலும் தூரத்திலுள்ளவர் வலீயாகலாம்.

வலீகாரருக்கு ஈஜாப் கபூலுடைய வாசகம் தெரிந்திருந்தாலும் அவர் தனக்கொரு வக்கீலை நியமித்து நிகாஹை நடத்துவது கூடும்.

பருவமடைந்த கன்னியழியாத பெண்ணை பொருத்தமான ஒரு மாப்பிள்ளைக்கு மணம் முடித்துக் கொடுக்க அவளுடைய தந்தையோ, பாட்டனோ நாடியபொழுது, அவள் வேறொரு பொருத்தமுள்ள மாப்பிள்ளையைக் குறிப்பிடுகிறாள். ஆனால், அவள் குறிப்பிட்ட மாப்பிள்ளைக்கு அவர்கள் அவளை மணம் முடித்துக் கொடுக்காமல் விலகிக் கொண்டால், அப்பொழுது காளீ அவளை மணம் முடித்துக் கொடுக்கக் கூடாது.

கன்னியழிந்த பருவமடைந்த பெண்ணை அவள் குறிப்பிடுகின்ற மாப்பிள்ளைக்கே அன்றி வேறு ஒருவனுக்கு தந்தையோ, பாட்டனோ மணம் முடித்துக் கொடுக்கக் கூடாது. அவ்வாறு அவர்கள் முடித்துக் கொடுக்கா விட்டால் அதை விட்டும் விலகிக் கொண்டவராவார்கள். இந்த நிலையில் அந்த நிகாஹை காளீயே முடித்து வைப்பார்.

பருவமடையாத தன்னுடைய சிறிய மகனுக்கு சரியான மஹ்ரைக் கொண்டு பொருத்தமான பெண்ணைப் பார்த்து தந்தையோ, தந்தையை இழந்த நேரத்தில் பாட்டனோ மணம் முடித்து வைக்கலாம். அதாவது, அந்தச் சிறிய பையனுக்கு பதிலாக தந்தையோ பாட்டனோ கபூல் செய்யலாம்.

வலீயானவர் சுதந்திரமானவராக, ஆணாக, நோட்டமுள்ளவராக ருவமடைந்தவராக ஹஜ்ஜுக்கு இஹ்ராம் கட்டாதவராக, நேர்மையானவராக ருப்பது ஷர்த்தாகும். மஹர் பற்றிய விபரம் பின்னால் கூறப்படும்.

நிகாஹில் மஹரைக் குறிப்பது சுன்னத்தாகும். ஆனால் மஹர் குறிக்கப் பட்டு ிட்டால் அந்தக் குறிக்கப்பட்ட மஹரைக் கொடுப்பது வாஜிபாகும். குறித்த மஹர் ார்க்கத்தில் அனுமதிக்கப்படாத மஹராக இருந்தாலும் அல்லது மஹர் றிக்கப்படாவிட்டாலும் அவள் குடும்பத்தில் வழமையான மஹர் விதியாகும்.

ஒருவன் தன்னுடைய அடிமைக்குத் தன் அடிமைப் பெண்ணைத் திருமணம் செய்து கொடுத்தால் மஹரைக் குறிப்பிடுவது சுன்னத்தல்ல.

நிகாஹ், தஜவ்வுஜ் ( تَزَوَّجُ ) என்ற அரபி சொற்களைக் கொண்டோ, அல்லது அதனுடைய பொருளான திருமணம், கல்யாணம் என்பது கொண்டோ நிகாஹ் கூடும். இந்தச் சொல்லை வலீகாரனும் மாப்பிள்ளையும் இரண்டு சாட்சிகளும் விளங்குதல் ஷர்த்தாகும். ஆனால், நிகாஹ் நடை பெறும்போது இந்தச் சொல் நிகாஹுக்காக வைக்கப்பட்டதென்று பொதுவாக இருந்தால் போதுமானது. ஊமையனுக்கு விளங்க வைக்குமளவுக்கு சாடை செய்வது கொண்டு நிகாஹ் கூடும்.

ஒன்றைச் சம்பந்தப்படுத்திக் கூறினால் நிகாஹ் கூடாது. உதாரணமாக, ரமலான் மாதம் வந்தால் உனக்கு நிகாஹ் முடித்துத் தந்தேன் என்று கூறுவது போல். இவ்வாறே ஒரு காலத்தைக் குறிப்பிட்டோ, அல்லது குறிப்பிடாமலோ நிகாஹை தொடர்பு படுத்திக் கூறினாலும் கூடாது. உதாரணமாக பத்து ஆண்டுகளுக்கு அல்லது சில ஆண்டுகளுக்கு அல்லது பத்து ஆயிரம் ஆண்டுகளுக்கு – உனக்கு நிகாஹ் செய்து கொடுத்தேன் என்று கூறுவது போல். ஆனால், நீ உயிருடனிருக்கும் காலமெல்லாம், அல்லது, அவள் உயிருடனிருக்கும் காலமெல்லாம் உனக்கு நிகாஹ் செய்து கொடுத்தேன் என்றால் கூடும்.

ஒருவன் இத்தனை காலத்திற்கு என்று நேரத்தைக் குறித்து நிகாஹை எழுதி விட்டால், அது வீணான நிகாஹ் ஆகும். எனினும் அதனால் மஹர், இத்தா, லமிசம், ஆகியவை தரிபடும். ஆனால், நடந்து விட்ட உடலுறவுக்கு தண்டனையில்லை.

### நிகாஹை ஹராமாக்கும் செயல்கள்

பெண்ணாகிறவள் முடிக்கப்போகிற மாப்பிள்ளைக்கு வமிசத்தில் திருமணம் செய்வதற்கு ஹராமானவளாக இல்லாதிருக்க வேண்டும். எனவே தந்தையுடனோ, தாயுடனோ பிறந்தவர்களுடைய மக்கள் திருமணத்திற்கு ஹலாலானவர்களாக இருக்கிறார்கள். ஆனால் இவர்கள் அல்லாத மற்ற நெருங்கிய ஆண்கள் பெண்கள் அனைவரும், ஒருவர் மற்றவருக்கு ஹராமாகும். எனவே பெற்றவரும் அவரைப் பெற்றவரும் ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் ஹராமாகும். முந்தினவர் னக்கு தாயாகவும் இரண்டாமவர் இரண்டு வழிகளில் பாட்டியுமாவார்.

மகளும் அவளுடைய சந்ததியும், தாய் தந்தையுடன் பிறந்தவர்களும், சகோதரியும், அவளுடைய மக்களும், சகோதரனின் மக்களும் ஹராமாவார்கள்.

## பால்குடி விவரம்

உனக்கு பால் கொடுத்தவளும், அவளைப் பெற்றவளும், அவளுக்கு பால் கொடுத்தவளும், உன் தாய் தந்தைக்குப் பால் கொடுத்தவளும் உனக்கு தாயாகும். அவளுடைய பாலுக்குரியவன் உனக்குத் தந்தையாகும்.

உன் மனைவியிடம் உனது பாலைக் குடித்தவன், அல்லது உன் மகனுடைய மனைவியிடம் அல்லது பால் குடி மகனுடைய மனைவியிடம் பால் குடித்தவன் உனக்கு மகனாகும்.

வமிசத்தால், அல்லது பால் குடியால் உனக்குத் தாய், தந்தையாக இருப்பவர்களின் பாலைக் குடித்தவள் உன் சகோதரியாவாள்.

உன்னுடைய சகோதரனுக்கு பால் கொடுத்தவளும் உன் மக்களுக்கு பால் கொடுத்தவளும் உன் மக்களுக்கு பால் கொடுத்தவளின் தாயும் உனக்கு ஹராமல்ல.

பால் குடி என்பது, ஒன்பது வயது அடைந்த உயிருடனுள்ள ஒரு பெண்ணின் பாலை இரண்டு வயதுக்குட்பட்ட ஒரு குழந்தை உறுதியாக ஐந்து தடவை குடிப்பதாயிருக்கும். ஒரு தடவை குடித்தது போதுமென வாயை எடுத்து மீண்டும் குடித்தால் அது இரண்டு தடவையாகும். இலேசாகப் பராக்காகுதல், அல்லது ஒருத் தூக்கத்திற்காக (இலேசாகக் கண் அயர்தலுக்காக) வாயை எடுத்து மறுபடியும் வைத்தால், அல்லது முலைக் காம்பு வாயிலிருக்கும் போதே நீண்ட நேரம் தூங்குதல், ஒரு மார்பிலிருந்து மறு மறுமார்பின் பக்கம் திரும்புதல் அல்லது திருப்புதல் ஆகிய நிலைகளெல்லாம் ஒரு தடவையாகவே கணக்கிடப்படும்.

பிள்ளை என்பது தன் விந்தின் மூலம் உண்டாவதால் அது தன்னுடைய உடலில் ஒரு பகுதியாக இருப்பது போல், பாலாகிறது உடலிலிருந்து ஓர் இறைச்சித்துண்டுக்கு ஒப்பாகிறது. ஆகையினால் தான், பால் குடியின் மூலம் நிகாஹ் ஹராமாக்கப்பட்டுள்ளது. எனவே குழந்தை தன் தந்தையின் குணமுடையதாக இருப்பது போல், பால் கொடுத்தவளுடைய குணத்தைப் பால் குடித்த குழந்தை எடுத்துக் கொள்ளும். நாயின் பாலைக் குடித்து வளர்ந்த ஒரு ஆடு நாயுடைய தன்மையுடையதாகவும், அதாவது நாயைப் போன்று கத்தக் கூடியதாகவும் அதனுடைய இறைச்சியினூடே கொழுப்பு ஊடுருவி நுழைந்திருந்ததாகவும் ஒரு நிகழ்ச்சியில் குறிப்பிடப்பட்டிருப்பதுடன் ஒரு ராஜனின் தாய் ஒரு சிப்பாயுடன் நடந்து கொண்ட கபடமான செயலினால் அந்த ராஜனிடத்தில் அந்த சிப்பாயின் குணம் மேலோங்கி இருந்ததாகவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

தந்தையுடைய அல்லது பாட்டனுடைய மனைவிகளும் மகனுடைய மனைவியும் சம்பந்தத்தினால் ஹராமாகும். மகன் வமிசத்தினால் உள்ளவனாக இருந்தாலும் சரி, பால் குடியினால் உள்ளவனாக இருந்தாலும் சரி.

மனைவியின் தாய் - வமிசத்தால் தாயானாலும் சரி, பால் குடியால் தாயானாலும் சரி - அவனுக்கு ஹராமாகும். அந்த மனைவியை உடலுறவு கொள்ளவில்லையானாலும் அவளின் தாய் ஹராமாகும். அந்த மனைவியின் மகளும் ஹராமாகும். ஆனால், அது மனைவியை உடலுறவு கொண்டிருந்தால் தான். எனவே, அந்த மனைவியை உடலுறவு கொள்ளுமுன் தலாக் சொல்லி விட்டால் அவளுடைய மகளைத் திருமணம் செய்து கொள்ளலாம். ஹராமல்ல.

வம்மிசத்தால் உள்ள தந்தையும் பாட்டனும், பால் குடியினால் உள்ள தந்தையும் பாட்டனும் சமமானவர்களே.

தந்தையுடைய மனைவியும், மகனுடைய மனைவியும் ஹராமாவார்கள். அதுபோல் மனைவியின் தாயும் ஹராமாவாள். உடலுறவு நடைபெறாமலிருந்தாலும் இவர்கள் எல்லோரும் ஹராமாவார்கள் என்பதற்கு அந்த நிகாஹ்கள் செல்லத்தக்கதாக இருக்க வேண்டுமென்பது ஷர்த்தாகும். ஆனால் உடலுறவு நடந்து விட்டால் செல்லுபடியாகாத நிகாஹாக இருந்தாலும் ஹராமாவார்கள்.

தாயின் கணவனுடைய மகளும், அந்த கணவனுடைய தாயும், தந்தையுடைய மனைவியும் தாயும், அவளுடைய மகளும், மகனுடைய மனைவியின் தாயும், அவளுடைய மகளும், வளர்ப்பு மகனின் மனைவியும், வளர்த்தவருடைய மனைவியும் அவன் இவளுடைய தாய்க்கு கணவனாகவும் இருக்கும் நிலையில் - ஹராமல்ல.

உடலுறவு கொண்ட மனைவியின் முந்திய கணவனுடைய மகளை (அவள் ஒருவனுடைய பராமரிப்பில் வளர்ந்தாலும், வளராவிட்டாலும் அப்பெண்ணை) அவன் திருமணம் செய்வது கூடாது. மனைவியை உடலுறவு கொள்ள வில்லையானால் அந்த மனைவியை தலாக் சொல்லிவிட்டு (வேறு கணவனுக்குப் பிறந்த) அந்த பெண்ணைத் திருமணம் செய்து கொள்வதில் எவ்வித குற்றமுமில்லை.

ஒருவன் ஒரு பெண்ணை விலைக்கு வாங்கி உடலுறவு கொண்டாலும், அல்லது பிசகுதலாக தன் மனைவி என்றெண்ணி உடலுறவு கொண்டாலும், அல்லது தவறுதலான நிகாஹின் மூலம் அல்லது தவறுதலான வலீயின் மூலம் நிகாஹ் செய்து ஜிமாவு செய்தாலும் அவளுடைய தாய்மாரும் மக்களும் இவனுக்கு ஹராமாயிருக்கும். அவனுடைய மக்களுக்கும் தந்தைக்கும் அப்பெண் ஹராமாவாள். விலைக்கு வாங்கி உடலுறவு கொள்வது நிகாஹுடைய அந்தஸ்துடையதாகும். பிசகுதலான உடலுறவினால் வமிசமும் இத்தாவும் தரிபடும். ஆனால் பிசகுதலாக உடலுறவு கொண்டவனுக்கு அவளுடைய தாயையும் மகளையும் தொடுவதும் பார்ப்பதும் ஹராமாகும். அவனுடைய தகப்பன்மாரும், மக்களும் அவளுக்கும் ஹராமாவார்கள்.

ஒருவனுக்கு முற்றிலும் ஹராமான ஒரு பெண், அவனுக்கு ஹலாலான ஆயிரக்கணக்கான பெண்களுடைய ஒரு கூட்டத்தில் கலந்து, அவளைப் பிரித்தறிய முடியவில்லையானால் அக்கூட்டத்தில் ஒரு பெண் நீங்கலாக மற்ற பெண்களில் நாடியவளைத் திருமணம் செய்து கொள்ளலாம். அவளை எளிதாக அறிந்து கொள்ளும் முறையில் அப்பெண்கள் சிறிய கூட்டமாக இருந்தால் அதாவது: இருபது அல்லது

அதற்கு மேல் நூறுவரை இருந்தால் அப்பெண்களில் எவரையும் அவன் நிகாஹ் செய்தல் கூடாது; ஆனால் அவளை கருப்பு சிகப்பு நொண்டி போன்ற ஒரு அடையாளத்தைக் கொண்டு தனியாகப் பிரித்து அறிந்து கொண்டால் அவள் அல்லாத மற்றவர்கள் ஹலாலாவார்கள்.

காஃபிரான கணவன் மனைவி இருவரும் ஒன்று சேர்ந்து இஸ்லாத்திற்கு வந்தால் (அல்லது அவளைத் தலாக் சொல்லி இத்தா முடியும் முன் இஸ்லாத்தில் வந்திருந்தாலும் சரி) சரியான சொற்படி குஃப்ருடைய நேரத்தில் நடந்த அவளுடைய நிகாஹ் செல்லுபடியாகும்.

ஜின் இனத்திலுள்ள பெண்ணையோ ஆணையோ திருமணம் செய்வது கூடாது. ஒரு கணவன் உருவம் மாற்றப்பட்டால் அவனுடைய மனைவிக்கு இத்தா உண்டா? இல்லையா? அப்படியானால் அது மௌத்துடைய இத்தாவா? தலாக்குடைய இத்தாவா? என்ற கேள்விக்கு இமாம் நஸ்ஸபாலீ (ரஹ்) அவர்கள், அவன் உயிரற்ற கல்சுரடாக மாற்றப் பட்டால் மௌத்துடைய இத்தாவும், உயிருள்ள ஆடு, மாடு மிருகமாக மாற்றப்பட்டால் தலாக்குடைய இத்தாவும் இருக்க வேண்டுமென்று கூறியுள்ளார்கள். அந்த இத்தா முடிந்த பிறகு தான் வேறொருவருக்கு அவள் ஹலாலாக ஆவாள்.

## மாப்பிள்ளையிலும், பெண்ணிலும் உள்ள ஷர்த்துகள்

மாப்பிள்ளையைக் குறிப்பிடுவது ஷர்த்தாகும். குறிப்பிடாமல் இந்த இருவரில் ஒருவருக்கு நிகாஹ் செய்து தந்தேன் என்று சொன்னால் கூடாது. இருவரில் ஒருவரின் பக்கம் சாடை செய்தாலும் கூடாது.

மேலும், அவனுக்கு முதலில் ஒரு மனைவி இருந்து, அவளுக்கு இவள் சகோதரி, மாமி, சாச்சி போன்ற மஹ்ரமானவளாகவும் இருக்கக் கூடாது. ஒருவன் அக்காள் தங்கை, மாமி மருமகள் போன்ற மஹ்ரமான இரண்டு பெண்களை ஒரே நேரத்தில் திருமணம் செய்தால் இரண்டுமே செல்லாததாக ஆகிவிடும். அல்லது முன் பின்னாக இரண்டு ஒப்பந்தத்தில் முடித்தால் முந்தியது செல்லுபடியாகும், பிந்தியது கூடாது.

இரண்டு சகோதரிகளை ஒன்று சேர்த்து திருமணம் செய்வது ஹராம் என அல்லாஹ் குர்ஆனில் கூறியுள்ளான். அதனுடைய விளக்கம் எவ்வாறென்றால், இரு பெண்களில் ஒருத்தியை ஆணாக பாவித்துப் பார்க்க வேண்டும். அவ்விருவருக் கிடையே திருமணம் செய்வது கூடும் என்றிருந்தால் இருவரையும் ஒருவர் திருமணம் முடிக்கலாம். அப்படித் திருமணம் கூடாது என்றிருந்தால் இருவரையும் சேர்த்து திருமணம் செய்வது கூடாது. (ஆனால் சம்பந்தத்தினால் மட்டும் மஹ்ரமியத்தான பெண்களுக்கிடையே இந்தச் சட்டம் பொருந்தாது).

இரு சகோதரர்களின் இரு மகள்களை ஒருவன் திருமணம் செய்யலாம். இரண்டு நபர்கள் ஒவ்வொருவரும் மற்றவருடைய மகளைத் திருமணம் செய்து கொள்ளலாம்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

ஒருவன் ஒரு பெண்ணைத் திருமணம் செய்யும் பொழுது அதற்கு முன் நான்கு பெண்களை அவன் திருமணம் செய்யாதவனாக இருக்க வேண்டும். அந்த நால்வரில் ஒருத்தியை ரஜ்இய்யத் என்னும் (ஒரு தலாக் இரண்டு) தலாக் உடைய இத்தாவில் இருந்தாலும் சரி. நான்கு மனைவிகளில் ஒருத்தி பாயின் தலாக் உடைய இத்தாவிலிருந்தால், அவளுக்கு மஹ்ரமானவளையோ, மற்றவளையோ, அவன் திருமணம் செய்யலாம். பாயின் தலாக் உடைய இத்தாவிலிருப்பவள் அந்நியப் பெண்ணாகி விடுவாள்.

சுதந்திரமான ஒருவன் ஒரே நிகாஹில் நான்கு பெண்களைத் திருமணம் செய்யலாம். ஒன்றன் பின் ஒன்றாக ஐந்து பெண்களைத் திருமணம் செய்தால் ஐந்தாவது பெண்ணின் திருமணம் செல்லாது. ஐந்து பெண்களையும் ஒரே தடவையில் நிகாஹ் முடித்தால் ஐந்தும் செல்லுபடியாகாது.

ஒரு பெண், தான் நிகாஹை விட்டும் இத்தாவை விட்டும் நீங்கியவள் என்று சொன்னால், அல்லது என் கணவன் என்னைத் தலாக் சொல்லி, நான் இத்தாவை முடித்து விட்டேன் என்று சொன்னால் அவளை நிகாஹ் செய்து கொடுப்பது காளீக்கு ஆகும். ஆனால், இது அவளுடைய கணவனைப் பற்றியுள்ள விபரம் காளீக்குத் தெரியாவிட்டால்தான். அவ்வாறின்றி அவளுடைய கணவனின் பெயரை, அல்லது உருவத்தைக் காளீ அறிந்திருந்தால், அல்லது அவள் சொன்னதின் மூலம் அவனை அறிந்திருந்தால் அவன் அவளைப் பிரிந்ததற்கு சாட்சி இருந்தால் தான் காளீ அவளை நிகாஹ் செய்து கொடுப்பார். அல்லது வலீகாரர் அவளுடைய சொல்லை உண்மையெனக் கண்டால் முந்திய கணவன் அவளைத் தலாக் சொன்னதற்கு சாட்சியோ அவளுடைய சத்தியமோ இல்லாமல் அவளை மணம் முடித்துக் கொடுக்கலாம். மேற் கூறப்பட்ட முறையைக் கடைப்பிடிக்க வேண்டியதெல்லாம், அவள் திருமணம் முடிக்கப் பட்டவளென்பதைத் தெரிந்து கொள்வதற்காக வேண்டித்தான். ஏனெனில், காளீ பேணுதலுடையவராயிருப்பது அவசியம். வலீகாரன் அப்படியல்ல.

வலீ முஜ்பிர் என்கிற தந்தையோ அல்லது (தந்தை இல்லாத போது) தந்தையுடைய தந்தையோ அவர்களுடைய விலாயத்திற்குரியவளை மணம் முடித்துக் கொடுப்பதற்கு அவளுடைய அனுமதியின்றியே ஒருவரை வக்கீலாக நியமிப்பது கூடும். அந்த வக்கீல் பேணுதல் உடையவராக இருப்பது வாஜிபாகும். ஆனால் தந்தை, தந்தையின் தந்தை அல்லாத மற்ற வலீகாரர்கள் அவளுடைய அனுமதி பெற்ற பின்னர்தான் வக்கீலை நியமிக்க வேண்டும்.

நிகாஹை ஒப்புக் கொள்வதற்கு (கபூல் செய்வதற்கு) மாப்பிள்ளையாகிறவன் ஒரு வக்கீலை நியமிக்கலாம். அந்த வக்கீல் , "இன்னாருக்காக உன் மகளுடைய நிகாஹை நான் ஒப்புக் கொண்டேன்" என்று சொல்ல வேண்டும். வலீகாரனுடைய வக்கீல் மாப்பிள்ளையிடம் "இன்னாருடைய வக்கீலாக நான் இந்த நிகாஹை உனக்கு முடித்துத் தந்தேன்" என்று சொல்ல வேண்டும்.

மேலே குறிப்பிட்டபடி நிகாஹை ஒப்புக் கொள்ளும் வக்கீலும், சிறுபிள்ளையுடைய நிகாஹை ஒப்புக் கொள்ளும் வலீயும் அவனுக்காக ஒப்புக் கொண்டேன் என்று சொல்ல வேண்டும். அவனுக்காக என்ற சொல்லை விட்டு விட்டால் நிகாஹ் கூடாது. அந்த மாப்பிள்ளையையும் அந்த சிறு பிள்ளையையும் நிய்யத்துச் செய்திருந்தாலும் அவனுக்காக என்று வாயால் சொல்லாவிட்டால் கூடாது.

விபச்சாரத்தினால் கர்ப்பமுற்றிருப்பவளை திருமணம் செய்வது எல்லோரிடத்திலும் கூடும். உடனே அவளை உடலுறவும் கொள்ளலாம். ஆனால், இமாம் அபூஹனீஃபா (ரஹ்) அவர்கள், அவள் குழந்தையைப் பெற்றெடுக்கும் வரை உடலுறவு கொள்வது கூடாது என்றும், திருமணம் செய்து கொள்ள நினைப்பவன் அவனே அவளுடன் விபச்சாரம் செய்தவனாக இருந்தால் கூடுமென்றும் கூறியுள்ளார்கள்.

ஹயாத்தாயிருக்கும் சுதந்திரமான ஒரு பெண்ணால் உரிமையிடப்பட்ட அடிமைபெண்ணை அவளுடைய வலீகாரன் நிகாஹ் செய்து கொடுப்பான். அவளுக்கு வமிசத்தால் வலீகாரன் இல்லாவிட்டால் அவளுடைய அனுமதி பெற்ற ஒரு வக்கீல் நிகாஹ் செய்து கொடுப்பான்.

பருவமடைந்த, புத்தி சுவாதீனமுள்ள ஒரு பெண்ணுடைய அடிமைப் பெண்ணை அந்தப் பெண்ணின் வலீகாரன் அவளுடைய அனுமதி கொண்டு மணம் முடித்துக் கொடுப்பான். அந்த அனுமதி அவளுடைய வாய்மொழியாக இருக்க வேண்டும்.

கன்னியாக உள்ள சிறிய பெண், சிறிய ஆண் ஆகியோருடைய அடிமைப் பெண்ணை அவர்களின் தந்தையோ, தந்தையுடைய தந்தையோ மணம் முடித்துக் கொடுப்பான். அதில் நஃபகா, மஹர் போன்ற பலன்களை உண்டாக்குவது இருப்பதால் அந்தச் சிறிய குழந்தைகளுடைய அடிமையை மணம் முடித்துக் கொடுப்பது கூடாது. ஏனெனில், அவனுடைய சம்பாத்தியம் இழக்கப்பட்டு விடுவதால். அடிமையும், அடிமைப்பெண்ணும் தாங்கள் உரிமை பெற்றவர்கள் என்று வாதாடினால் இரண்டு சாட்சிகள் இருந்தால் தான் அதனை ஏற்றுக் கொள்ள வேண்டும். ஒருவன், தான் அசலிலேயே சுதந்திரமானவன் என்று வாதாடினால் சத்தியம் செய்யச் சொல்லி உண்மையாக்கப்படுவான். அவன் அடிமைதானென்று ஏற்கனேவே அவன் விண்ணப்பம் செய்திருந்தாலும் அல்லது அவன் அடிமைதான் என்று சாட்சியைக் கொண்டு உறுதியானலும் அவன் சுதந்திரமானவன் என்று ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது.

## கணவன் மனைவியில் பொருத்தம் பார்ப்பது பற்றிய பாடம்

திருமணத்தில் மாப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும் பொருத்தம் பார்ப்பது, பெண்ணாகிறவள் கேவலமடையாமலிருப்பதற்காகத் தேவையானதாகும். இதற்கு அரபியில் كُفُوٌ குஃப்வு (Kufvu) என்று சொல்லப்படும். இந்த குஃப்வு நிகாஹுக்கு அவசியமான ஷர்த்தல்ல. ஏனெனில், அது பெண்ணுக்கும், வலீகாரனுக்கும் உரித்தான ஒன்றாகும். அவர்களின் விருப்பப்படி குஃப்வு பார்க்கவும் செய்யலாம், பார்க்காமலும் இருக்கலாம்.

எனவே, ஒரு சுதந்திரமான பெண்ணுக்கு, அல்லது அடிமைத்தனையிலிருந்து உரிமைபெற்ற பெண்ணுக்கு அடிமை ஒருவன் குஃப்வு ஆகமாட்டான். தகப்பன் சுதந்திரமாயிருக்க தாய் அடிமையாயிருப்பின் அவன் சுதந்திரமானவன்தான். பத்தினித்தனமுள்ள பெண்ணுக்கும், மாக்கப்பற்றுள்ள பெண்ணுக்கும் பாவம் செய்கிறவன் பொருத்தமாக மாட்டான்.

பாவம் செய்கிறவளுக்கு பாவம் செய்கிறவன் குஃப்வு ஆவான். எனவே தொழுகையை விட்டவன் தொழுகையை விட்டவளுக்கு குஃப்வு ஆவான். தொழுகையை விட்டவன் பெரும் பாவி என்பது எல்லோருக்கும் தெளிவான விஷயம். ஒரிரு நேரம் சோம்பலால் தொழுகையை விட்டவன் தௌபாச் செய்து தொழுகையைக் கடை பிடித்தால் பாவத்தை விட்டும் நீங்கியவனாக ஆகிவிடலாம்.

பொருத்தம் பார்ப்பதில் ஏழை பணக்காரன் என்பதைப் பார்க்கக்கூடாது. அவையிரண்டும் நீங்கி விடுகின்ற தன்மைகளாகும். அறிவாளிகள் அதனைப் பெரிது காணமாட்டார்கள்.

குறைஷீ, ஹாஷிமீ முத்தலிபீ கிளையார்களில் உள்ள பெண்ணுக்கு மற்ற அரபிகளோ, மற்றவர்களோ பொருத்தமாக மாட்டார்கள். கேவலமான தொழில் உடையவன் அத்தொழிலைவிட்டு நீங்கியவளுக்குப் பொருத்தமாக மாட்டான். நாவிதனாக, தெருக்கூட்டுபவனாக, இடையனாக, மீன் பிடிப்பவனாக, தோல் ஊறப்போடுகிறவனாக, காவல்காரனாக, தோட்டக்காரனாக இருப்பவன், ஒரு வியாபாரி, அல்லது ஒரு ஆலிமுடைய மகளுக்குப் பொருத்தமாக மாட்டான். நிகாஹில் சம்மதத்தைத் துரிபடுத்தும் பைத்தியம், குஷ்டம், போன்ற குறைகள் இல்லாதவளுக்கு அந்தக் குறைகள் உள்ளவன் பொருத்தமாக மாட்டான். அவளிடம் அக்குறை இருந்தாலும் குஃப்வு ஆக மாட்டான். அவனுடைய நோய் அளவுக்கு இவள் நோய்வாய்ப்பட்டு இருந்தாலும் அல்லது அதைவிட அதிகமாக இருந்தாலும் சரி பொருத்தமாக மாட்டான். ஏனெனில் பிறரிடத்தில் உள்ள அதே நோய், தன்னிடத்திலிருந்தாலும் பிறரை அதிகம் வெறுப்பதாக மனித சுபாவம் இருக்கிறது.

நிகாஹில் சம்மதத்தைத் துரிபடுத்தாத குறைகள் குஃப்வுவைத் தள்ளுபடி செய்யாது. குருடு, பரமார்த்தமென்னும் தன்னைச் சுற்றிலும் நடக்கும் உலக இயல்புகளை அறியாத்தன்மை, சப்பாணி, முன்துவாரம், பின்துவாரம் திறந்தவள்,

மலடி, கை, கால் விரல்கள் தரிக்கப்பட்டவள் முதலிய குறைகளைப் போல். இக்குறைகளெல்லாம் குஃப்வுவை நீக்கி விடாது.

பெண்ணில் சதை, எலும்பு போன்றது வளர்ந்து பெண் குறியை அடைத்தலும், மாப்பிள்ளையில் ஆண் குறியில் ஆண்மை யில்லாமல் இருப்பதும், ஆண் குறி தரிக்கப்பட்டிருப்பதும் நிகாஹிலுள்ள குறைகளாகும். கணவன், மனைவி இருவருக்குமே இக்குறைகளிருந்து ஒருவர் மற்றவரை விரும்பவில்லையானால் உடனே காளியிடம் தெரியப்படுத்தி நிகாஹை فَسْخ ஃபஸ்கு செய்து விடலாம்.

பெரும்பாடும் (மாதவிடாய் அதிகம் வருவது) வாய் நாற்றமும், அக்குள் நாற்றமும், காயத்தில் சீழ் ஒடிக்கொண்டிருப்பதும், மர்மஸ்தானம் நெருக்கடியாய் இருப்பதும் அக்குறைகளில் உள்ளவையல்ல.

நிகாஹ் ஒப்பந்தம் நடக்கும்போது பேசப்பட்ட நிபந்தனைக்கு யாரிடமாவது மாற்றம் காணப்பட்டாலும் மற்றவருக்கு நிகாஹை முறிக்க உரிமையுண்டு. அவ்வாறே நிகாஹின் போது குறைகளிருப்பதை அறியாமலிருந்து, பிறகு அது தெரிந்தால் அப்பொழுதும் உரிமையுண்டு, அதாவது: நாட்டாண்மைத்தனம், வமிசம், அழகு, சீமான்தனம், வாலிபம், குறையை விட்டும் நீங்கி இருத்தல் ஆகியவைகளை திருமணத்தின்போது நிபந்தனையிட்டு பின் மாற்றமாகக் காணப்படின் நிகாஹைப் பிரித்துக் கேட்க அவர்களுக்கு உரிமையுண்டு.

நிகாஹ் நடப்பதற்கு முன்னதாகவோ, அல்லது பிறகோ நிபந்தனையிட்டதற்கு மாற்றம் தெரியவந்தால் அப்பொழுது உரிமையில்லை. உதாரணமாக: நிகாஹ் நடைபெறும்போது வலீகாரன், நான் உனக்கு இப்பெண்ணை கன்னியழியாதவளாகத் திருமணம் செய்து கொடுத்தேன் என்று சொன்னான். பிறகு அவள் கன்னியழிந்தவளாக இருக்கக் கண்டு நிகாஹை முறிக்க அவன் நாடியபோது, "உன்னிடம் வந்த போதுதான், அல்லது உன் மூலமாகத்தான் கன்னியழிந்தது" என்று அவள் சொன்னால், ஃபஸ்கைத் தடுப்பதற்காக சத்தியம் செய்யச் சொல்லி அவள் உண்மையாக்கப்படுவாள். இந்நிலையில் அவன் அவளை உடலுறவு கொள்ளும் முன் தலாக் சொல்லி விட்டால் மஹரைப் பாதியாக ஆக்குவதற்காக அவனை சத்தியம் செய்யச் சொல்லி உண்மையாக்கப்படும்.

அரபியல்லாத சுதந்திரமான பெண்ணுக்கு அரபியான அடிமையும், பாவம் செய்கின்ற சுதந்திரமான பெண்ணுக்கு நெறி பிறழா அடிமையும் பொருத்தமாக மாட்டார்கள்.

உணவுப் பண்டங்களைத் தயாரித்து விற்பது சிறுமையான தொழிலல்ல. சிறுமையான தொழிலென இமாம்கள் குறிப்பிட்ட ஏதேனும் ஒரு தொழிலை ஓர் ஊரில் சிறுமையானதல்ல என்று கருதுவார்களானால், அந்த ஊர் வழக்கத்தை கவனிக்கக் கூடாது. இமாம்கள் சொன்னதையே கவனிக்க வேண்டும். இமாம்களால்

சொல்லப்படாத தொழிலாக இருந்தால் பெண்ணுடைய ஊரின் வழக்கத்தைக் கவனிக்க வேண்டும்.

நெசவுத் தொழில் கேவலமானதல்ல. அத்தொழிலை முதலில் நபி ஆதம் (அலை) அவர்கள் செய்து வந்தார்கள். அவர்கள் விவசாயம் செய்வதற்கு ஏர், கலப்பை ஆகிய கருவிகளையும் நெசவுக்குரிய கருவிகளையும் சொர்க்கத்திலிருந்து அல்லாஹுத்தஆலா இறக்கி வைத்தானென்று கூறப்பட்டுள்ளது. எனவே, விவசாயத்தையும் நெசவுத் தொழிலையும் குறை சொல்வது, ஆதம் (அலை) அவர்களைக் குறை சொன்னதாகும் என்று கூறப்பட்டுள்ளது.

சுதந்திரமான ஒரு பெண்ணுடைய வலீகாரன்-அவன் வமிசத்தால் உள்ளவனாக இருந்தாலும், உரிமையாலுள்ளவனாக இருந்தாலும் சரி, தன் சம்மதங்கொண்டு அவளுடைய பொருத்தத்தின் மீது குஃப்வு இல்லாதவனுக்கு மணம் முடித்துக் கொடுக்கலாம். காளீ முடித்துக் கொடுக்க மாட்டார். அவள் பொருந்திக் கொண்டாலும் சரி.

## காளீ, வலீ முஜ்பிர் ஆகியோர் நிகாஹ் முடித்துக் கொடுக்கும் விவரம்

குஃப்வுவான மாப்பிள்ளை கிடைக்காத பொழுது, குழப்பத்தை பயந்தால், அப்பொழுது காளீ அவளை முடித்துக் கொடுப்பார். வலீ எவரும் இல்லாத பொழுது குஃப்வு இல்லாதவனுக்கு மணவாழ்க்கைப் பட அவள் விரும்பினால் அப்பொழுதும் காளீ முடித்துக் கொடுப்பது கூடும்.

வலீமுஜ்பிரானவன் அவளுடைய அனுமதியின்றி அல்லது குஃப்புவுவைக் குறிக்காத பொதுப்படையான அனுமதிகொண்டு குஃப்வு அல்லாத மாப்பிள்ளைக்கு மணம் முடித்துக் கொடுத்தால் செல்லாது. அவள் ஒருவனை குஃப்வு என்பதாக நினைத்து, அவனுக்கு தன்னை முடித்துக் கொடுக்க அனுமதியளித்து மணம் முடித்தபின் அதற்கு மாற்றமாக இருந்தாலும் நிகாஹ் கூடும். ஏனெனில், ஆராய்ந்து பாராமல் அவள் அனுமதி கொடுத்தது அவளுடைய குறையாகும். எனவே அது கூடும். அவள் கொடுத்த சம்மதத்தை வாபஸ் பெற்றுக் கொள்ளும் அளவிற்கு அவனிடத்தில் ஏதும் குறையிருந்தாலும், அல்லது அவள் சுதந்திரமானவளாக இருக்க அவன் அடிமையென்று வெளியானாலும் அந்த நிகாஹை ஃபஸ்கு தேடுவதற்கு அவளுக்கு உரிமையுண்டு.

## கணவன் மனைவி கலந்துறவாடுதல்

(4:19) وَعَاشِرُوهُنَّ بِالْمَعْرُوفِ. "மேலும் அவர்களுடன் கண்ணியமான முறையில் (சகிப்புத்தன்மையுடன) நடந்து கொள்ளுங்கள்" என்று அல்லாஹுத்தஆலா கூறியுள்ளான்.

வலீகாரனால் கைப்பிடித்துக் கொடுக்கப்பட்டு முதன் முதலாக மணமக்கள் சந்திக்கும் பொழுது மாப்பிள்ளை தன் வலக்கரத்தால் பெண்ணுடைய முன் நெற்றி முடியைப் பிடித்துக் கொண்டு, இருவரும் :

بَارَكَ اللهُ لِكُلٍّ مِّنَّا فِيْ صَاحِبِهِ

"நம்மிலிருந்து ஒவ்வொருவருக்கும் மற்றவருடைய விஷயத்தில் அல்லாஹ் பரக்கத்துச் செய்வானாக! " என்று சொல்வதும், வேறு பேச்சுக்களைப் பேசுவதற்கு முன் நன்றிக்காகவும் (ஷுக்ரு شُكْرُ க்காகவும்) நன்மையைத் தேடியும் (இஸ்திகாரா إِسْتِخَارَةً வுக்காகவும்) நிய்யத்துச் செய்து இரண்டு ரக்அத் உள்ள தொழுகையைத் தொழுது கொள்வதும் சுன்னத்தாகும். பெண்ணுக்கு எவ்வித இடையூறும் இல்லையானால், மாப்பிள்ளை மகிழ்ச்சியடையும்படியான - ஆகுமான விளையாட்டுகளில் ஈடுபட இடமளிப்பது அவளுக்கு வாஜிபாகும்.

"கணவன், மனைவி இருவரும் ஒருவருக்கொருவர் தங்களின் மர்மஸ்தானங்களைத் தொட்டு சுகம் பாராட்டிக் கொள்வார்களானால், அல்லாஹ்விடத்தில் அவர்களுடைய கூலி மிக மகத்தானதாயிருக்குமென்று நான் ஆதரவு வைக்கிறேன்" என்பதாக இமாம் அபூஹனீஃபா (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். அவள் அவனுடைய மர்மஸ்தானத்தைத் தொட்டு இன்பம் அனுபவிக்கச் செய்வது மிகவும் விரும்பத்தக்கதாக இருக்கும்.

மாதவிடாய் நேரத்திலும், பின் துவாரத்திலும் உறவு கொள்வது ஹராம். அவ்வாறே நோயுற்றிருப்பவளை வேதனைப்படுத்தி உடலுறவு கொள்வதும் விரலினால் கன்னியழியும் படிச் செய்வதும் ஹராமாகும். எனினும், பின் துவாரத்தில் உறவு கொள்ளாமல் வெறும் இன்பம் அனுபவிப்பது கூடும். ஆனால், பின் துவாரத்தைத் பார்ப்பது ஹராம்.

அவளுடைய முன் துவாரத்தைத் தேவையின்றிப் பார்ப்பதும் பெண் குறியின் இரண்டு தட்டுகளுக்கிடையில் உள்ள முளைக்காம்பு போன்ற நிதம்பம் (அல்குல் بَظْر) என்னும் உறுப்பை நாவினால் சூப்புவதும் மக்ரூஹ் உடன் ஆகும். கர்ப்பமாவதைப் பயந்து விந்தை வெளியில் போகச் செய்வதும், உடல் உறவு கொள்ளும்போது பேசுவதும் மக்ரூஹ் ஆகும். கர்ப்பஸ்திரீயை, பால் கொடுப்பவளை உடலுறவு கொள்வதால் எவ்வித இடையூறும் இல்லையானால் மக்ரூஹ் இல்லை. உடலுறவின் போது நடந்த விஷயங்களை வெளியில் கூறுவது இருவருக்கும் ஹராம். உடலுறவு நடைபெறுவதை பிறர் அறிந்து கொள்ள முடியாத இடத்தைத் தேடிக் கொள்வது முஸ்தஹப்பாகும்.

பொதுவாக ஆண், பெண் அனைவரும் தேவையின்றி மர்மஸ்தானத்தைப் பார்ப்பது மக்ரூஹ் ஆகும். அது தன்னுடையதாயினும் சரியே. அதனால் கண்பார்வை கெட்டு விடுமென்று கூறப்பட்டுள்ளது. ஆனால் தனது அபத்தைத் தானே தொடுவது மக்ரூஹ் அல்ல என்று சுபுகீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். ஏனெனில், தொடுவதால் கண்ணுக்குக் கேடு ஏற்படுமென்ற பேச்சுக்கு இடமில்லை.

தன் கையினால் விந்தை வெளியாக்குவது ஹராம்; அவன் ஜினாவை பயந்தாலும் சரி. தன் மனைவியின் கையினால் வெளியாக்குவது மக்ரூஹ். ஆனால் ஹன்பலி இமாம் அவர்கள் சொற்படி இது கூடும்.

இரவின் துவக்கத்தில் உடலுறவு கொள்வது மக்ரூஹ் ஆகும். மாதத்தின் துவக்கத்திலும் நடுவிலும் கடைசியிலும் உடலுறவு கொள்வது மக்ரூஹ் என்பதாகவும், அந்த தினங்களில் உடலுறவு கொள்வதால் ஷைத்தானும் அதில் கலந்து கொள்கிறான் என்பதாகவும் அலீ, முஆவியா, அபூஹுரைரா (ரலியல்லாஹு அன்ஹும்) ஆகியோர் மூலம் அறிவிக்கப்பட்டுள்ளதாக ஙஸ்ஸாலீ (ரஹ்) அவர்கள் எழுதியுள்ளார்கள்.

இரு மனைவிகள் உள்ளவன் ஒருத்தியின் முன்னிலையில் மற்றொருத்தியை உடலுறவு கொள்வதும், ஒருத்தியுடைய விஷயத்தை மற்றொருத்தியிடம் சொல்வதும் மக்ரூஹ் ஆகும்.

சூரியனை, நிலவை முன்னோக்கியும், மேல் முகடில்லாத இடத்திலும் உறவு கொள்வது மக்ரூஹ் இல்லை. கிப்லாவை முன்னோக்கி உறவு கொள்வது மக்ரூஹ் என இஹ்யாவில் எழுதப்பட்டுள்ளது.

உடலுறவில் அவளை தனக்கு மேல் ஆக்கிக் கொள்வது மக்ரூஹ். அதிலும் விந்து வெளியாகும் பொழுது அவ்வாறு செய்வது கொடிய மக்ரூஹ் ஆகும். ஏனெனில் அது நீர்த்தாரையில் நோவை உண்டாக்கும்.

சக்தி பெற்றவன் நான்கு தினங்களுக்கு ஒரு தடவை உறவு கொள்வதும், அதிகமான ஆசையுள்ளவனுக்குத் தேவையான அளவு கொள்வதும் சுன்னத்தாகும்.

இருவரும் ஒரு போர்வையினால் மூடிக் கொள்வதும், ஒரே விரிப்பில் உறங்குவதும், உடல் உறவை நாடும் போது மணம் பூசிக் கொள்வதும், கழுத்துடன் கழுத்தைக் கட்டிப் பிடித்து முத்தமிட்டுக் கொள்வதும், இன்பம் கொடுக்கும் பேச்சுகளைப் பேசிக் கொஞ்சிக் குலாவி விளையாடுவதும், உறவு கொள்ளும் நேரத்தில் பின்வரும் துஆவை ஓதிக் கொள்வதும் சுன்னத்தாகும்:-

بِسْمِ اللّٰهِ اَللّٰهُمَّ جَنِّبْنَا الشَّيْطَانَ وَجَنِّبِ الشَّيْطَانَ مَا رَزَقْتَنَا.

"அல்லாஹ்வின் திரு நாமத்தால் யா அல்லாஹ் ஷைத்தானை எங்களை விட்டும் தூரமாக்கி வைப்பதுடன் அவனை எங்களுக்கு நீ கொடுத்திருப்பதை விட்டும் தூரமாக்கி வைப்பாயாக!"

விந்து வெளிப்படும் போது பின்வரும் ஆயத்தை மனதினால் சொல்லிக் கொள்ள வேண்டும்:-

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ خَلَقَ مِنَ الْمَآءِ بَشَرًا فَجَعَلَهُ نَسَبًا وَّصِهْرًا.

"தண்ணீரிலிருந்து (=விந்திலிருந்து) மனிதவர்க்கத்தைப் படைத்து அதை (பிறப்பைக் கொண்டு) பந்துக்களாகவும் (திருமணத்தினால்) சம்பந்திகளாகவும் ஆக்கிய அல்லாஹுத்த ஆலாவுக்கே புகழனைத்தும்!"

உடலுறவு கொள்ளும் முன் குல்ஹுவல்லாஹு சூராவை ஓதி, பிறகு பின் வரும் துஆக்களை ஓதிக் கொள்வதும் சுன்னத்து என்று இஹ்யாவில் கூறப்பட்டுள்ளது. அதாவது:

بِسْمِ اللّٰهِ الْعَلِيِّ الْعَظِيْمِ اَللّٰهُمَّ اجْعَلْهَا ذُرِّيَّةً طَيِّبَةً اِنْ كُنْتَ قَدَّرْتَ اَنْ تُخْرِجَ مِنْ صُلْبِيْ.

"மகத்தான அல்லாஹ்வின் திரு நாமத்தால் ..... யா அல்லாஹ்! என் முதுகந்தண்டிலிருந்து (குழந்தையை) நீ வெளிப்படுத்த வேண்டுமென விதித்திருந்தால் அதனை மணம் மிக்க சந்ததியாக ஆக்கிடுவாயாக!" என்று ஓதுவதுடன் கீழ்கண்ட துஆவையும் ஓதவும், அதாவது:

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ جَعَلَهُ نِكَاحًا وَلَمْ يَجْعَلْهُ سِفَاحًا. وَجَعَلَهُ سِتْرًا وَلَمْ يَجْعَلْهُ هَتْكًا. وَجَعَلَهُ حَلَالًا وَلَمْ يَجْعَلْهُ حَرَامًا. وَجَعَلَهُ فِيْ اَخْيَارٍ وَلَمْ يَجْعَلْهُ فِيْ اَشْرَارٍ

"இதனை ஜினாவாக ஆக்காமல் நிகாஹாக ஆக்கி வைத்தவனும், இதனை (மானம் மரியாதையை)க் கிழிப்பதாக ஆக்கி வைக்காமல் திரையாக ஆக்கி வைத்தவனும், இதனை ஹராமாக ஆக்கி வைக்காமல் ஹலாலாக ஆக்கி வைத்தவனும் இதனை தீய செயல்களில் ஆக்கி வைக்காமல் நல்ல செயல்களில் ஆக்கி வைத்தவனுமாகிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் உரியன."

அவனுக்கு முதலில் விந்து வெளிப்படுவதாக இருந்தால் சற்றுதாமதித்து அவளுக்கு விந்து வெளியாகும் வரை முடிந்த மட்டும் விளையாட்டில் ஈடுபட்டு அவளுடைய ஆசையை நிறைவேற்றுவது சுன்னத்தாகும். மறுமுறை உடலுறவு கொள்ள

நாடினாலும், அல்லது எதையேனும் சாப்பிட, குடிக்க விரும்பினாலும் இருவரும் தங்களுடைய மர்மஸ்தானங்களைக் கழுவி சுத்தப்படுத்தி உளு செய்து கொள்வதும் சுன்னத்தாகும்.

"கணவன், மனைவி இருவரும் உடலுறவின் போது விளையாடுவதும், எதிரிகளிடமிருந்து தற்காப்புக்காகப் பயிலும் வில், வேல், சிலம்பு போன்ற விளையாட்டுகளும் அல்லாஹ்விற்கு மிக விருப்பமானவையாகும். இவை தவிர மற்றுமுள்ள விளையாட்டுகள் அனைத்தும் பழிக்கப்பட்டவையாகும்"என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

உடலுறவின் போது வீண் பேச்சுக்களைப் பேசாமல், மனதினால் திக்ரு செய்து, அல்லாஹ்தான் உண்மையில் செயலுக்குரியவன், பொருட்களின் உருவங்களை அமைப்பவன் என்ற எண்ணங்கொள்ள வேண்டும்.

பிரயாணம் போய் விட்டுத் திரும்பி வந்த நேரத்திலும், ஸஹருடைய நேரத்திலும் உடலுறவு கொள்வது சுன்னத்தாகும். பகலில் உடலுறவு கொள்வது மக்ருஹ் ஆகும். ஆனால் வெள்ளிக்கிழமை ஜும்ஆவுக்கு முன் மக்ருஹ் அல்ல; மாறாக அது சுன்னத்தாகும்.

கடினமான பசியுடைய நேரத்திலும், வயிறு நிரம்பியிருக்கும் நேரத்திலும் உறவு கொள்வது நோயை உண்டாக்கும். ஓர் இரவில் முதலில் உடலுறவு கொள்வது ஆசையை நிறைவேற்றுதலாகும்; இரண்டாவது தடவை, இன்பமனுபவிப்பதாகும்; மூன்றாவது, பல வீனத்தை உண்டாக்குவதாகும்; நான்காவது, நோயை உண்டாக்குவதாகும்; ஐந்தாவது, அழிவை உண்டாக்குவதாகும் என்று கூறப்பட்டுள்ளது.

அந்நிய பெண் ஒருத்தியைக் கண்டு அவளுடைய அழகில் ஆசை ஏற்பட்ட நேரத்தில் தன் மனைவியுடன் உடலுறவு கொள்வது, பலனுள்ளதாகுமென ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

அதிகமாக உடலுறவு கொள்வது, முதலில் சாப்பிட்ட ஆகாரம் செமிக்கும் முன் மீண்டும் சாப்பிடுவது, உலக விஷயத்திற்காக இழிவடைவது ஆகிய இம்மூன்றும் நோயை வருத்துவதுடன் மனிதனை நாசமாக்கியும் விடும்.

கழுதை போல் நிர்வாணமாக உடலுறவு கொள்ளக்கூடாது. தமர்களைபோல் மொச்சை போடக்கூடாது என்று ஹதீஸில் அறிவிக்கப் பட்டுள்ளது. பெண்களின் விஷயங்கள் பற்றி ஆதாரமிக்க ஃபிக்ஹு கிதாபுகள் அல்லாத பலதரப்பட்ட கிதாபுகளில் ஆதாரம் சரியில்லாத பல விஷயங்கள் எழுதப்பட்டுள்ளன. அவற்றையெல்லாம் இங்கு விட்டு விடுகிறோம்.

மருத்துவர்களில் சிலருடைய சொற்படி பிறை இருபத்தேழில் உடலுறவு கொண்டால் அவளுடைய போகம் ஏழும் அழியுமென்று கூறப்பட்டுள்ளது; உறவில் பலவகைகள் இருக்கின்றன. அவற்றில், படுத்துக்கொண்டு செய்வது நிலையில் நின்று

கொண்டு செய்வதைவிடச் சிறந்தது. ஆண் குறியைக் கொண்டு பெண் குறியின் வெளிபாகத்தைத் தடவி, கையினால் முலைக் காம்பை நெருடி, காலினால் அவள் காலைத்தடவவும். இவ்விதம் செய்யும்படியாக ஹ-கமாக்களில் சிலர் கூறி இருக்கிறார்கள்.

மிருகங்களுடைய புணர்ச்சியைப்பார்ப்பது மக்ரூஹ். ஆனால், ஆசை குறைந்தவன் அவ்வாறு பார்த்தால் ஆசையுண்டாகும் என்றிருந்தால் பார்க்கலாம்.

## உடலுறவுக்கு உதவியாக இருக்கும் மருந்துகள்

உடலுறவுக்கு உதவியாக இருக்கும் மருந்தைச் சாப்பிடுவது முஸ்தஹப்பாகும். விந்து வெளியாகாமல் தடை செய்யும் மருந்துகளைச் சாப்பிடுவது இடையூறை உண்டாக்கும் என்று யூனானி மருத்துவர்கள் கூறுகிறார்கள். உடலுறவுக்கு உதவியாக - சக்தியை உண்டாக்கும் பல மருந்துகள் சொல்லப்பட்டுள்ளன. அவற்றில் இருவகை கை மருந்துகளை மட்டும் இங்கு விளக்கிச் சொல்லப்படுகிறது (1) இமாமுனா அலி (ரலி) அவர்களிடம் ஒரு காட்டரபி தனது பலவீனத்தைப்பற்றிச் சொல்லிக் காண்பித்து அதற்காக ஏதாவது மருந்து சொல்லும்படியாகக் கேட்டுக்கொண்டதில் அவர்கள் கீழ்கண்டபடி மருந்து கூட்டிச்செய்து சாப்பிடச் சொன்னார்கள். அதாவது: ஜாதிக்காய், சுக்கு, வால் மிளகு, கிராம்பு, திப்பிலி, இலவங்கப்பட்டை, சீனப்பாகு, குழல் கருவா, வெள்ளை முஸ்தக்கா இவற்றை வகைக்கு ஒரு கழஞ்சு வீதம் எடுத்து ஒன்றாகப் போட்டு இடித்துப் புடைத்துப்பின் நுரை போக்கிய சுத்தமான தேனில் குழைத்து அடுப்பிலேற்றி சிறு நெருப்பாக எரித்துக் கிண்டி பின் இறக்கி வைத்து காற்றுப்புகாத ஒரு டப்பா போன்றதில் அடைத்து வைத்து காலையில் விழித்த பின் ஏதும் தண்ணீர் அருந்துமுன் இரண்டு கழஞ்சும், இரவில் துயில் கொள்ளப்போகும் பொழுது இரண்டு கழஞ்சும் சாப்பிட்டு வரவும். அத்துடன் பசு நெய், பசும்பால், இறைச்சி சாப்பிட்டு வரவும். மருந்து சாப்பிட்டு வரும் காலத்தில் பத்தியத்தை முறிக்கும் பொருள்களைச் சாப்பிடுவதை விட்டும் தவிர்ந்து கொள்ளவும். மருந்து முடிய முடிய புதிதாய்ச்செய்து மண்டலம் ஒன்று(40 நாள்) தீருமளவும் தின்று வரவும்.

(2) இரண்டாவது வகை ஹகீம்களால் சொல்லப்பட்டது. அதாவது: ஒரு ஜாதிக்காயைத் துளைத்து அதினுள் அபினை நிரப்பி முருங்கைப் பிசினால் சீலை மண் செய்து, (மருந்துச் சட்டியின் வாயிலிருந்து காற்று வெளியேறாமல் அந்த வாயைச் சுற்றிக் கட்டும் துணியின் மேல் பூசும் மண்ணுக்குப் பகரமாக முருங்கைப் பிசினைக் கொண்டு பூசி) கஸகஸாவை நுணுக்கி, கோழி முட்டையின் வெள்ளைக் கருவை யெடுத்து அதன் மேல், நுணுக்கிய கஸகஸாவைத் தூவி, பின் இதை அந்த ஜாதிக்காயின் மேல்பூசி, பின் ஆண் அடைக்கலம் குருவியை அறுத்து குடலை நீக்கி எறிந்துவிட்டு அந்த ஜாதிக்காயை அந்தக் குருவியின் வயிற்றுக்குள் வைத்துத் தைத்து பசுநெய்யில் பொறித்து சுத்தமான தேனைவிட்டு அரைத்து ஒரு கடலையின் அளவுக்கு உருண்டையாக ஆக்கி காலையில் ஒன்றும் துயில் கொள்ளப்போகுமுன் ஒன்றும் தின்று வரவும். உடலுறவு கொள்ளும் நாளில் மீன், புளி சேர்க்காமல், உடலுறவு கொள்வதற்குச் சிறிது நேரத்திற்கு முன் இரண்டு உருண்டைகள் சாப்பிடவும். நீடித்த நேரம் உடலுறவு கொள்ள இயலும். இந்திரியம் வெளியாக வேண்டுமென்று

நினைக்கும்பொழுது எலுமிச்சைச் சாற்றைச் சாப்பிடவும். இந்திரியம் வெளியாகி விடும்.

கர்ப்பம் தரிக்க வேண்டுமென்று விரும்பினால் மாதத் தொடக்கை விட்டுத் துப்புரவாகிய மூன்றாம் இரவில் சாப்பிடாமலிருந்து அவளுக்குக் குதிரைப் பாலைக் குடிக்கச் செய்து ஒரு ஜாமத்திற்குப்பிறகு உடலுறவு கொண்டால் இன்ஷா அல்லாஹ் மலடியும் கர்ப்பமடைவாள். இந்த மருந்துகளால் ஹலாலான விஷயத்தில் உதவி தேடி அல்லாஹு தஆலாவிடம் நன்மையைப் பெற்றுக் கொள்வார்களாக! அவ்வாறு ஹலாலான முறையில் பயன்படுத்த வேண்டுமென்பதற்காகத்தான் இந்த மருந்தை பகிரங்கமான முறையில் சொல்லியுள்ளேன். எவரேனும் இதனை ஹராமான வேலைக்குப் பயன்படுத்தினால் நான் அவர்களை விட்டும் நீங்கியவனாவேன். ஷைத்தானுடைய தீங்கை விட்டும் என்னையும் உங்களையும் அல்லாஹ் காப்பாற்றுவானாக!

'இப்னு அஜாலா'என்ற கிதாபில் எழுதப்பட்டிருப்பதாவது : "தனக்கு ஹைளு வராமலிருப்பதற்காக ஏதேனும் மருந்து சாப்பிடுவது ஆகுமா"? என்று ஒரு பெண் இப்னு உமர் (ரலி) அவர்களிடம் கேட்டபோது, "ஆம்! அதனால் குற்றமில்லை " என்று சொல்லி, உகாமரத்தின் சாற்றைச் சாப்பிடுமாறு சொன்னார்கள்.

ஹைளு நின்று விடும் காலம் வருவதற்குமுன் அது நின்று விட்டால் ஹைளு வருவதற்காக மருந்து சாப்பிடலாமாவென்று கேட்டதற்கு, சாப்பிடலாம் என்று கூறினார்கள்.

சிறிய பெண் குழந்தைக்கு ஹைளு வரவேண்டுமென ஆசை கொண்டு, அவள் பருவமடைய வேண்டுமென்று மருந்து சாப்பிடலாமா என்று கேட்டதற்கு, இதில் கொஞ்சம் சிந்திக்க வேண்டுமென்றார்கள். ஏனெனில், அக் குழந்தைக்கு ஏவல், விலக்கல் விதியாகும் முன்னமே அவற்றை விதியாக்குவதை உண்டு பண்ணுவதும், பாவதோஷத்திற்கு ஆளாக்குதலும் இதில் இருக்கிறது. இன்னும் வலீ முஜ்பிர் என்பவர் இல்லாத பொழுது பருவமடையாதவளை வேறுயாரும் நிகாஹ் முடித்துக் கொடுக்க முடியாதாகையால் வலீ முஜ்பிர் இல்லாத நேரத்தில் வேறு வலீ திருமணம் செய்து கொடுப்பதற்காக அவளை பருவமடையச் செய்ய வேண்டிய தேவை இருக்கிறதென்றார்கள்.

## சுதந்திரமான மனிதன் மற்றொருவனின் அடிமைப்பெண்ணை திருமணம் செய்வது ஹராம்.

சுதந்திரமான ஒருவன் மலடனாக இருந்தாலும், பிள்ளை பெறுவதைவிட்டும் ஆசை முறிந்தவனாக இருந்தாலும் மற்றொருவனுடைய அடிமைப் பெண்ணைத் திருமணம் செய்வது ஹராம். மூன்று நிபந்தனைகள் இருந்தால் தவிர:

முதலாவது, இவனுடன் சுகம் பாராட்டுவதற்கு இணங்கிய மனைவியை விட்டும், அல்லது அடிமைப் பெண்ணை விட்டும் இவன் இயலாதவனாக ஆகி இருக்கவேண்டும். ஆனால் தன்னிடம் (தான் நிகாஹ் செய்த) உடலுறவுக்கு இணங்காத

சிறுமி, பைத்தியக்காரி, பெருவியாதிக்காரி உண்டாகி இருந்தாலும், அல்லது ஒரு காரியத்தை விலைக்கு வாங்கி வைத்துக் கொள்ள வகையில்லாதவனாக இருந்தாலும், அல்லது பண வசதி படைத்த தனது மகன் அதற்கான உதவி செய்யாதிருந்தாலும் இந்த நிலைகளில் அது ஹலாலாகும். அதற்காக கடன் கொடுப்பவனோ அல்லது நன்கொடை கொடுப்பவனோ இருந்து கொடுத்தாலும் அதை ஒப்புக் கொள்வது விதியாகாது. தனது தந்தையின் ஒழுக்கத்தைக் கட்டிக் காப்பதற்கு தனது தந்தைக்கு உறுதுணையாயிருப்பது மகனின் மீது கடமையாயிருப்பதால் ஒரு மத்தியஸ்தரைக் கொண்டாவது மகனை உதவிடச் செய்யலாம். இரண்டாவது, அவனுக்கு தக்வா குறைந்து ஜினா செய்ய வேண்டிய நிலைமை உண்டாகி விடுமோவென்று பயந்தவனாக இருக்க வேண்டும். மூன்றாவது, அந்த அடிமைப் பெண் முஸ்லிமானவளாகவும் உடலுறவுக்குத் தகுதியானவளாகவும் இருக்க வேண்டும்.

இவ்வித நிகாஹினால், அல்லது ஜினாவினால், அல்லது பிசகுதலால் சுதந்திரமான ஒருவன் மூலம் அந்த அடிமைப்பெண்ணுக்குப் பிறந்த குழந்தை அவளுடைய எஜமானுக்கு அடிமையாகும்.

முஸ்லிமான சுதந்திரமான ஒருவன், தன்னுடைய வேதக்கார அடிமைப்பெண்ணை உடலுறவு கொள்வது ஹலாலாகும். சிலை வணக்கம் செய்பவளையோ, நெருப்பை வணங்குகிறவளையோ உடலுறவு கொள்வது கூடாது.

தன்னுடைய அடிமைக்குத் தன் அடிமைப் பெண்ணைத் திருமணம் செய்து கொடுத்து மஹரைக் குறிப்பிட்டாலும் அவளுக்கு மஹர் கிடையாது.

## நிகாஹில் மஹரைக் குறிப்பிடுவது பற்றிய விபரம்

நிகாஹில் மஹரைக் குறிப்பிடுவது சுன்னத்தாகும். இதற்கு ஆதாரமாகிறது, "நீங்கள் (திருமணம் செய்து கொண்ட) பெண்களுக்கு அவர்களுடைய "மஹர்"களை மனமகிழ்வுடன் கூடிய 'வெகுமதியாகக் கொடுத்து விடுங்கள்" என்ற இறைவசனமாகும்.

(4:3) وَآتُوا النِّسَاءَ صَدُقَاتِهِنَّ نِحْلَةً ط

மஹர் வெள்ளியாயிருப்பது மற்றொரு சுன்னத்தாகும். ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய குமாரத்திகளுக்குக் கொடுக்கப்பட்ட ஐநூறு வெள்ளிக் காசுகளை (=திர்ஹம்களை) விட அதிகமாக்காமலும் பத்து வெள்ளிக்காசுகளை விடக் குறைக்காமலும் இருப்பது சுன்னத்தாகும்.

விலையாகக் கொடுக்கல் வாங்கல் செய்ய எதுவெல்லாம் இணக்க மாகுமோ அதையெல்லாம் மஹராகக் கொடுக்கலாம். விலை பெறாத கத்தரிக்காய்க் காம்பு, வெங்காயச் சருகு போன்றவற்றை மஹராகக் கொடுத்தல் கூடாது. மஹரைக்

குறிக்காமல் நிகாஹ் முடிப்பது மக்ரூஹ் ஆகும். பெண்ணாகிறவள் தன் சுய விருப்பப்படி செயல் படத் தகுதியற்றவளாயிருந்தால் மஹரைக் குறிப்பது வாஜிபாகும்.

மஹராகிறது விலை மதிப்புள்ளதாக இருப்பது ஷர்த்தாகும். மார்க்கத்தில் நஜீஸான பொருளுக்கு விலை கிடையாது. இன்னும் மதிப்பு பெற்ற பிரயோஜனம் உடையதாக இருப்பதும் ஷர்த்தாகும். உதாரணமாக இத்தனை ஆயத்து, இத்தனை சலவாத்து என்று சொல்வது கூடுமாயிருப்பதைப்போல். நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் ஹவ்வா அம்மாவுக்கு இருபது சலவாத்தை மஹராகக் கொடுத்தார்கள்.

தவணை வைக்கப்படாத மஹரைக் கைப்பற்றுவதற்காக ஒரு மனைவி, தன்னைக் கணவனை விட்டும் தடுக்கலாம். மஹருக்குத் தவணை வைத்திருந்தால் கணவனைத் தடுக்கும் உரிமையை இழந்திடுவாள். மஹரைக் கொடுத்த பிறகு அவளுக்குத் தடுக்கும் உரிமை இல்லை. ஆனால், அவள் தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்வதற்காக மூன்று நாட்கள் வரை காளியானவர் தவணை கொடுக்கலாம்.

ஹைளு, நிஃபாஸ் நீங்கி விடுவதை எதிர் பார்த்து தாமதம் கொடுக்கக்கூடாது. ஆனால், ஹைளுடைய நேரத்தில் தன்னை ஒப்புவித்தால் உடலுறவு கொண்டு விடுவான் என்பதை பயந்தால், தன்னை ஒப்புவித்து விட்டு உடலுறவுக்கு இடங்கொடுக்காமல் இருப்பது அவளுக்கு வாஜிபாகும்.

கணவனைத் தடுக்கும் உரிமை பெற்றிருக்கும் போது, தன்னைப் பூரணமாக ஒப்புவித்து உடலுறவு நடைபெற்று விட்டால் பிறகு அவள் அவனைத் தடுக்கக் கூடாது. பிறகு அவனாக மஹரைக் கொடுத்தால் பெற்றுக் கொள்ள வேண்டும்.

வலீகாரன் ஒரு சிறு பிள்ளையை, அல்லது கன்னி அழியாத ஒரு பெரியவளை அவளின் அனுமதியில்லாமல் அவள் போன்றவளின் மஹருக்குக் குறைவான மஹருக்கு நிகாஹ் செய்து கொடுத்தால், அல்லது அவள் கூறிய தொகைக்குக் குறைவாக இருந்தால் அவள் போன்றவளின் மஹரைக் கொண்டுதான் அந்த நிகாஹ் நடந்ததாகக் கருதப்படும். அதல்லாமல் திருமணத்தின் போது கூறப்பட்ட குறைந்த தொகையென்பது கட்டுப்படாததாகவும் செல்லுபடி ஆகாததாகவும் ஆகிவிடும்.

தன்னுடைய சிறிய மகனுக்கு அவன் போன்றவனின் மஹரைவிட அதிகமான மஹருக்கு நிகாஹ் செய்து கொடுத்தாலும், அவன் போன்றவனின் மஹர்தான் விதியாகும். அதுபோல் தான், மேற்கூறப்பட்ட நிகாஹும். நிபந்தனை தவறிவிட்ட நிகாஹிலும் பிசகுதலுடைய உடலுறவிலும் அதுபோன்ற மஹரே விதியாகும்.

உடலுறவுக்கு முன்னோ அல்லது பின்னோ இருவரில் ஒருவர் இறந்து விடுவதாலும், மேலும் சுத்னா அளவுவரை மறைவது கொண்டு உடலுறவு கொள்வதாலும் (இதனால் கன்னி அழியாவிட்டாலும் சரியே) இந்த இரு நிலைகளிலும் மஹர் முழுவதும் விதியாகும்.

உடலுறவுக்கு முன் ஒருவன் தலாக் சொன்னால் அரை மஹர் மட்டும்

விதியாகும். ஆனால் உடலுறவுக்குப் பின் தலாக் சொன்னால் முழு மஹரும் விதியாகும்.

உடலுறவு நடைபெறவில்லை என்று இருவரில் ஒருவர் சொன்னால் சத்தியம் செய்யச்சொல்லி அவன் உண்மையாக்கப்படுவான். ஏனெனில், நடைபெறாமல் இருப்பதுதான் அசலாகும்.

கன்னியழியாதலள் என்பதை நிபந்தனையிட்டு நிகாஹ் நடைபெற்ற பின், நான் அவளை உடலுறவு கொள்ளாதிருக்க, அவள் கன்னியழிந்தவளாயிருக்கிறாள் என்று அவன் சொன்னான். ஆனால் உன்னுடைய உடலுறவினால் தான் என் கன்னியழிந்து விட்டது என்று அவள் சொன்னாள். இந்த நிலைமையில் ஃபஸ்கைத் தடுப்பதற்காக அவளை சத்தியம் செய்யச்சொல்லி உண்மையாக்கப்படுவாள். அவன் உடலுறவுக்கு முன் தலாக் சொல்லியிருந்தால் மஹரை பாதியாக்குவதற்காக அவனை சத்தியம் செய்யச் சொல்லி உண்மையாக்கப்படும்.

உடலுறவு கொள்வதற்கு முன் அவள் மூலம் ஃபஸ்கு ஏற்பட்டாலோ, அல்லது அவள் முர்தத்தாகி விட்டாலோ, அல்லது அவன் மஹர் கொடுக்க இயலாதவனாகி விடுவதாலோ அல்லது அவளைக் கொண்டு ஏற்படுகிற காரணங்களைக் கொண்டு அவள் ஃபஸ்கு செய்தாலோ மஹர் முழுவதும் விழுந்து விடும்.

மஹருடைய தொகை எவ்வளவு என்பதில் அல்லது என்ன பொருள் என்பதில் அல்லது ரொக்கமா, தவணையா என்பதில் இருவரும் கருத்து வேற்றுமைகொண்டால், இருவருக்கும் அதுபற்றி சாட்சியும் இல்லையானால், இருவருமே தங்களுடைய சொல்லுக்கு சத்தியம் செய்தால், நிகாஹ் நடக்கும் நேரத்தில் குறிப்பிட்ட மஹரை விடுத்து, அவள் போன்றவர்களுக்கு நடைமுறையில் இருந்து வரும் மஹரை முடிவு செய்ய வேண்டும்.

மஹர் மிஃத்ல் எனப்படும் அவள் போன்றவளின் மஹர் என்பது, அவளுடைய தந்தை வழியைச் சேர்ந்த பெண்களில், வருணிப்பாலும் வமிசத்தாலும் அவளைப் போன்றவளுக்கு என்ன மஹர் கொடுக்கப் பட்டதோ அதுவாகும். தாயும் தந்தையும் ஒன்றான சகோதரி, பிறகு தந்தை ஒன்றான சகோதரி, பிறகு சகோதரனின் மகள், பிறகு அவ்விதமான மாமி ஆகியோரின் வரிசை அவள் போன்றவள் என்பவர்களாவார்கள்.

அவர்களுடைய மஹரும் தெரியாவிட்டால் அர்ஹாம் என்னும் உறவினர்களிலுள்ள பாட்டி, சிறியதாயார் போன்றவர்களின் மஹரைக் கவனிக்க வேண்டும். சிலருடைய அபிப்பிராயப்படி தாய், தாயின் மகள், பாட்டிகள், சாச்சிகள், பெரியம்மாக்கள் ஆகியோரைத்தான் மேலே குறிப்பிட்டவர்களை விட முதலில் கவனிக்க வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

தன் பொறுப்பிலுள்ள பெண்ணுக்கு கிடைக்க வேண்டிய மஹரையும் பாத்தியதைகளையும் விட்டுக் கொடுப்பது வலீகாரனுக்குக் கூடாது.

பெண்ணாகிறவள் பைத்தியக்காரியாகவோ, சிறுபிள்ளையாகவோ இருந்தால், அவளைத் தலாக் சொல்லச் செய்து அவளை மஹரை விட்டும் நீக்குவதற்குரிய உபாயமாகிறது: வலிகாரன் அக்கணவனிடம் , "என் பெண்ணை நீ தலாக் சொல்லி விடு; உனக்கு ஐநூறு ரூபாய் தருகிறேன்" என்று சொல்ல வேண்டும். அவ்வாறு அவன் தலாக் சொல்லியபிறகு, நீ எனக்குத் தரவேண்டிய ஐநூறு ரூபாயை உன் பெண்ணுடைய மஹருக்காக சாட்டி விட்டேன் என்று தலாக் சொல்லியவன் வலிகாரனிடம் சொல்லி விட வேண்டும். அப்படியானால் அவன் மஹரை விட்டும் நீங்கியவனாகி விடுவான்.

பொறுப்பையுணர்ந்த பருவமடைந்த பெண், தன் கணவன் தர வேண்டிய மஹரை வாங்காமல் நீக்கி விட வேண்டுமென்றால் மஹரை நீக்கி விட்டேன், ஹலாலாக்கினேன், விழுத்தாட்டி விட்டேன், நன்கொடையாக ஆக்கிவிட்டேன், ஆகுமாக்கினேன் என்ற வார்த்தைகளைச் சொல்வதால் அவன் மஹர் கொடுப்பதை விட்டும் நீங்கி விடுவான். அல்லாஹுதஆலா குர்ஆனில் இவ்வாறு மஹரை நீக்கி விடுவதற்குரிய சட்டத்தையும் கூறியுள்ளான்.

உடலுறவு கொள்ளப்பட்ட மனைவியை-அவள் மூலமாக ஏற்படுகின்ற காரணமின்றியும், இருவரிலொருவர் மரணமடையாத நிலையில் வேறு எவ்வகையினால் பிரிந்தாலும்-அவள் அடிமைப் பெண்ணாக இருந்தாலும் சரி-அவளுக்கு முத்ஆ(சந்தோஷக்கொடை) கொடுப்பது வாஜிபாகும்.

முத்ஆ என்பது கணவனும் மனைவியும் பொருந்திக் கொள்ளக்கூடிய பொருளாகும். அது முப்பது வெள்ளிக் காசுகளை விடக் குறையாமல் இருப்பது சுன்னத்தாகும். அதில் இருவரும் கூடுதல் குறைவாக இருப்பதில் தர்க்கம் செய்து கொண்டால் அவனுடைய பொருளாதார நிலையையும், அவளுடைய குடும்ப அந்தஸ்தையும் சீர் தூக்கிப் பார்த்து காளீ ஒரு முடிவு செய்து தீர்ப்பளிப்பார்.

மஹர் கொடுக்க முடிந்தவன் அதனைக் கொடுக்காமல் இறந்து விட்டால் ஜினாசெய்தவனைப் போன்று கியாமத்து நாளில் வருவான் என்று கூறப்பட்டுள்ளது. ஒரு பெண் தன் கணவனுடைய மஹரை வாங்காமல் நீக்கிவிட்டால், அல்லாஹுதஆலா அவளுடைய பிழையை மன்னித்து, நரகத்தை விட்டும் அவளை நீக்கிவிடப் போதுமானவன் என்றும் கூறப்பட்டுள்ளது.

நம்முடைய நாட்டில் ஒருவன் தன்னால் கொடுக்க முடியாத அளவுக்கு மஹரை ஏற்றுக் கொண்டு, அது கொடுக்கப்பட வேண்டிய கடன் என்ற கவனமில்லாமலும், மனைவியிடம் ஹலால் தேடிக் கொள்ளாமலும் இறந்து விடுவது மிகக் கெட்ட பழக்கமாகும். சிலர் ஏழையாக இருந்தாலும் அதிகமான மஹர் வைத்து நிகாஹ் செய்வதும் மிக ஆச்சரியமானதாகும்.

## வலீமா விருந்து

நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் விருந்தோம்பல் செய்தது பற்றி குர்ஆனில் பல இடங்களில் அல்லாஹுதஆலா கூறியுள்ளான். விருந்தளிப்பதின் சிறப்புகள் பற்றி பல ஹதீஸ்கள் அறிவிக்கப்பட்டுள்ளன. ஒரு விருந்தாளி பத்து ரஹ்மத்துகளைக் கொண்டு வீட்டினுள் நுழைகிறார், பத்து கவளம் உணவால்,பத்துப் பாவங்களைப் போக்கி விடுகிறார் என்றெல்லாம் அறிவிக்கப்பட்டுள்ளது

திருமணத்திற்காக விருந்தளிப்பது முக்கியமான சுன்னத்தாகும். திருமணம், கத்னா செய்தல், பிரசவ வலியிலிருந்து சுகம் பெறுதல், குழந்தைப் பிறப்பு, பிரயாணத்திலிருந்து திரும்பி வருதல், புது வீடு குடிபுகுதல், குர்ஆன் ஹிஃப்ளு முடித்தல், குர்ஆன் ஓதிமுடித்தல் ஆகிய நிகழ்ச்சிகளுக்காக ஓர் ஆட்டை அறுத்து விருந்து கொடுப்பதும், இதற்கு இயலாதவர் இயன்ற அளவு விருந்து கொடுப்பதும் சுன்னத்தாகும். இவ்விருந்துகளுக்காக அழைக்கப்பட்டவர்கள் வருவதும் சுன்னத்தாகும். பெண் குழந்தைகளுக்கு கத்னா மறைமுகமாகச் செய்ய வேண்டிய தாகையால் அதற்காக விருந்து கொடுப்பது தேவையில்லை.

இவற்றில் திருமணத்திற்குப் பின் கொடுக்கப்படும் வலீமா விருந்துக்கு அழைக்கப்பட்டால் வருகை தருவது வாஜிபாகும். இதில் விருந்தளிப்பவர் தானே அழைக்க வேண்டும்; அல்லது தனக்குப் பகரமாக அவனுடைய விசுவாசியான பிரதிநிதி, அல்லது விபரமறிந்த அவனுடைய மக்கள் வந்து அழைத்தால் தான் வாஜிபாகும்.

நிகாஹுக்கு முன் நடைபெறும் விருந்துக்கு அழைக்கப்பட்டால் செல்வது வாஜிபல்ல. அது வெறும் விருந்து என்ற முறையில் செல்வது சுன்னத்தாகும். நிகாஹும் விருந்தும் ஒரே நேரத்தில் நடை பெற்றால் அதற்கு செல்வது வாஜிபா இல்லையா வென்பதில் இமாம்களிடையே கருத்து வேற்றுமை இருக்கிறது. வலீமா விருந்தை மணமக்களின் உடலுறவு நடைபெற்ற பின் கொடுப்பது சிறப்பாகும். வலீமாவுக்கு போவது வாஜிபென்று சொல்வதெல்லாம் காளிக்கு இல்லை. அவருக்கு வாஜிபில்லை.

விருந்தில் பத்து வகைகள் உண்டு. 1) கல்யாண விருந்து 2) புது வீடு, புது நிலம், புதுக்கப்பல் போன்றவற்றை சொந்தமாக்கிக் கொண்டதற்காக விருந்து. 3) குழந்தை பிறந்த ஏழாம் நாள் அகீகா கொடுப்பது. 4) புது வீடு குடி புகுவதற்காக விருந்து 5) தலைக் குழந்தை சுகப்பிரசவத்திற்காக விருந்து. 6) பிரயாணம் செல்லும்போது விருந்து. 7) கத்னா விருந்து 8) மௌத்துடைய விருந்து. 9) குர்ஆன் முடிப்பது, ராத்திபு, திக்ரு செய்வது ஆகியவற்றிற்காக விருந்து. 10) எவ்விதக் காரணமுமின்றி விருந்து.

## விருந்துண்ணச் செல்வதற்கு ஷர்த்துகள்

விருந்துண்ணச் செல்வதானால் பதினொரு ஷர்த்துகளைக் கவனிக்க வேண்டும். 1) குறிப்பாக அவனை அழைத்திருக்க வேண்டும். 2) அவனுடைய கூட்டத்தினர், தோழர்கள் அனைவரையும் அவன் தகுதிக்குத் தகுந்தவாறு அழைத்திருக்க வேண்டும். 3) அவனுடைய பொருளின் மீது, அல்லது அவனுக்குள்ள அந்தஸ்தின் மீது ஆசை (உள்நோக்கம்) வைத்ததற்காகவோ, அல்லது அவனை பயந்ததற்காகவோ அழைக்காதிருக்க வேண்டும். 4) விருந்தளிப்பவன் அனியாயக்காரனாகவோ, பாவம் செய்பவனாகவோ இல்லாதிருக்க வேண்டும். 5) விருந்து உணவில் ஹராமான பொருள்கள் மிகைக்காதிருக்க வேண்டும். 6) விருந்து நடைபெறுமிடத்தில் ஹராமான காரியங்கள் நடைபெறாமல் இருக்கவேண்டும். 7) விருந்து நடைபெறுமிடத்தில் சுவர்களில் முகட்டில், திண்டு தலையணைகளில் உயிர்ப்பிராணிகளின் படங்கள் இல்லாதிருக்க வேண்டும். 8) பருவமடைந்த ஆண்கள் அவ்விடத்தில் தங்கம், வெள்ளி, ஐம்பொன் ஆகியவற்றையும், பட்டுத்துணியையும் அணியாதிருக்க வேண்டும். 9) அவ்விடத்திற்குச் செல்வதினால் வெளிப்படையான நோவினை எதுவும் ஏற்படாமலிருக்க வேண்டும். 10) அவ்விடத்தில் புலித்தோல், மான்தோல் போன்ற விரிப்புகளை விரிக்காதிருக்க வேண்டும். 11) அவ்விடத்தில் பொய்யையும், கெட்ட விஷயங்களையும் கூறி மக்களைச் சிரிக்க வைக்கும் விகடகவி, கோமாளி போன்ற நகைச்சுவைக்காரர்களோ, வேடமிடுபவர்களோ இல்லாதிருக்க வேண்டும்.

சாப்பிடும், குடிக்கும் பாத்திரங்களிலோ, தலையணைகளிலோ, (அதாவது:நட்டி வைக்கப்படாத தலையணைகளிலோ) விரிப்புகளிலோ உயிரில்லாத உருவப்படங்கள் இருப்பதும். உருவமில்லாத அலங்காரங்கள், மேல்கட்டி சலாத்தியில் இருப்பதும், அவ்விடத்தில் முனோதும் சொல்பவர் இருப்பதும் அங்கு செல்வதற்குத் தடையாகாது.

தவறான காரியங்கள் நடைபெறுமிடத்திற்கு இவன் செல்வதால் அக்காரியங்கள் தடை செய்யப்படும் என்றிருந்தால் அவன் அங்கு செல்வது வாஜிபாகும்.

உயிருள்ள உருவப்படங்களைச் செய்வதும், அதனைப் பொருந்திக் கொள்வதும் ஹராமாகும். சேலையால் பெண்-மாப்பிள்ளை உருவத்தில் சின்ன பொம்மைகள் செய்து பெண் குழந்தைகளிடத்தில் விளையாடக் கொடுப்பது கூடும். ஏனெனில் ஆயிஷா(ரலி) அவர்கள் இவ்வித பொம்மையைக் கொண்டு நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் முன்னிலையில் விளையாடுபவர்களாக இருந்திருக்கிறார்கள்.

ஊர் முழுவதையும் பொதுவாக விருந்துக்கு அழைத்தால் எவர் வேண்டுமானாலும் செல்லலாம். குறிப்பிட்ட சிலர் மட்டும் அழைக்கப்படும் பொழுது அழைக்கப்படாதவர் செல்வதும், அழைக்கப்பட்ட பெரிய மனிதர் ஒருவரைத் தொடர்ந்து, அழைக்கப்படாத ஒருவர் செல்வதும் ஹராமாகும்.

இருவர் விருந்துக்கு அழைத்தால், முதலில் அழைத்தவரிடத்திற்கே செல்ல வேண்டும். இருவரும் ஒரே நேரத்தில் அழைத்தால் சொந்தத்தால் நெருங்கியவரின் அழைப்பை ஏற்றுக் கொள்ள வேண்டும். இருவரும் நெருங்கியவர்களாக இருந்தால் சீட்டுப் போட்டுப் பார்க்க வேண்டும். விருந்துக்குச் செல்வது சில சமயங்களில் சுன்னத்தாகவும், சில சமயங்களில் வாஜிபாகவும் இருந்தாலும் அந்த விருந்தை உண்ணுவது எல்லா நிலைகளிலும் சுன்னத்துதான்.

விருந்தாகிறது நபி இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய வழிமுறையைச் சேர்ந்ததாகவும், ஏற்றமான சுன்னத்தான வணக்கமாகவும், அல்லாஹுத ஆலாவினால் தன் அடியார்களுக்கு சொர்க்கத்தில் விருந்தென்று பெயரிட்டு கொடுக்கப்படுவதென்று ஹதீஸ் குதுஸியில் கூறப்பட்டுள்ளதாகவும் இருப்பதால், சுன்னத்தை நாடி அதனைக் கொடுக்க வேண்டுமே தவிர முகஸ்துதிக்காகவோ பெருமையை நாடியோ கொடுப்பது ஹராமாகும்.

முன்னால் கூறப்பட்ட நிபந்தனைகளின் படி விருந்தை ஏற்றுக் கொள்வது சில சமயங்களில் சுன்னத்தாகவும். மற்றும் சில சமயங்களில் வாஜிபாகவுமிருந்தாலும் அதைவிட முக்கியமான ஜனாஸா தொழுகை, சாட்சி சொல்லுதல் போன்ற ஃபர்லான காரியங்கள் குறுக்கிடாமல் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் விருந்துக்குச் செல்ல வேண்டும்.

பெண்கள் விருந்துக்கு அழைத்தால் ஹராமான தனித்திருத்தல் உண்டாகாமலும், ஃபித்னாவை பயப்படாமலும் இருக்க வேண்டும். அவ்வாறிருந்தால் அதனை ஏற்றுக் கொள்வது ஹராம். அவ்விதம் இல்லையானால் அதை ஏற்றுக் கொள்ளலாம். ஆனால், சுஃப்யானுஸ் ஸவ்ரி (ரஹ்) போன்ற ஆணாகவும் ராபியத்துல் அதவிய்யா (ரஹ்) போன்ற பெண்ணாகவும் இருந்தால் விருந்தை ஏற்பது ஹராமுமல்ல; மக்ரூஹுமல்ல.

விருந்தாளி வீட்டினுள் சென்றதும் பெண்களிருக்கும் அறைக்கு நேராக உட்காராமல் இருப்பதும், உணவு கொண்டுவரப்படும் தலத்தைப் பார்க்காமல் இருப்பதும், சாப்பிட்ட பின் துஆச் செய்வதும் ஒழுக்கமாகும்.

## விருந்தாளியை கண்ணியப்படுத்துவது

விருந்தாளியை கண்ணியப்படுத்துவதும், விருந்தாளி வீட்டுக்கு வரும் பொழுது எதிர்கொண்டு அழைத்துவருவதும், அவர் புறப்படும் பொழுது, வீட்டின் வாசல் வரை சென்று வழியனுப்புவதும் சுன்னத்தாகும்.

விருந்தாளிக்கு உணவைக் கொண்டு வந்து வைத்தவுடன் 'பிஸ்மில்லாஹ்' என்றோ, அல்லது சாப்பிடுங்கள் என்றோ, அல்லது அது போன்ற வார்த்தைகளைக் கூறியோ சாப்பிட அனுமதியளிப்பது விருந்தளிப்பவனுக்கு முஸ்தஹப்பாகும்.

ஒருவன் மனப்பூர்வமாக விருந்துக்கு அழைக்கவில்லை என்று தெரிந்தால் அதனை ஏற்றுக் கொள்வது கூடாது. மனப்பூர்வமாக அழைப்பதாகத் தெரிந்தால் அதனை மறுப்பது கூடாது.

வேறு ஊரிலிருந்து விருந்தாளியாக வந்திருப்பவருக்கு முதலில் கிப்லா திசையை அறிவிப்பதும், மலம், ஜலம் கழிக்குமிடம், உளூ செய்யுமிடம் ஆகியவற்றைக் காட்டிக் கொடுப்பதும், தானோ அல்லது தன் மக்களில் ஒருவரோ உடனிருந்து சாப்பிடுவதும் ஒழுக்கமாகும்.

விருந்து கொடுப்பவர், எவ்வளவு உயர்வான உணவைக் கொடுத்து சிறப்பித்தாலும் தான் குறை செய்து விட்டதாக வெளிப்படுத்துவதும், விருந்து சாப்பிட்டவர், என்ன குறையிருந்தாலும் அதனைப் பெரிய மனது வைத்து ஒதுக்கிவிட்டு அந்த விருந்தை பெரியதாகக் கண்டு நன்றி செலுத்துலதும் சுன்னத்தாகும்.

விருந்தாளிக்கு மூன்று இரவு பகல்கள் விருந்தளித்து ஆதரிப்பது சுன்னத்து முஅக்கதாவாகும். மூன்று தினங்களுக்கு மேல் விருந்தாளி தங்குவது கூடாது. விருந்து உபசரிப்பவர் விரும்பிக் கேட்டுக் கொண்டால் தங்கலாம்.

ஒவ்வொருவரும் தனக்கும் தன் மனைவிக்குமாக ஒரு விரிப்பையும். விருந்தாளிக்காக வேறு ஒரு விரிப்பையும் தயார் செய்து வைத்துக் கொள்வது முஸ்தஹப்பாகும்.

உணவை முன்னால் கொண்டு வந்து வைப்பது சாப்பிடுவதற்கு அனுமதி அளித்ததாகும். ஆனால், வேறு எவரேனும் ஒருவர் சீக்கிரமாக வருவதை உடையவன் எதிர்பார்த்தால் சற்று தாமதிக்கப்படும்.

பலர் சாப்பிடும் பொழுது நல்ல உணவை ஒரு சிலர் மட்டும் தங்களுக்கென்று ஒதுக்கிக் கொள்ளுதல் மக்ரூஹ் ஆகும்.

பொதுவிருந்தில் அனுமதியளிக்கக்கட்டபின் சாப்பிட ஆரம்பிப்பது ஓர் ஊரின் வழக்கமாக இருந்தால் அவ்வழக்கத்தைப் பின்பற்ற வேண்டும்.

பெரியோர்களுக்காகத் தயார் செய்யப்பட்ட உணவை மற்றவர் சாப்பிடுவதும், வயிறு நிறைந்த பிறகு மேலும் சாப்பிடுவதும், உடனிருந்து சாப்பிடுபவருக்கு உணவு கிடைக்கக் கூடாதென்ற நோக்கத்துடன் வழமைக்கு மாற்றமான பெரும்பிடிகளாக பிடித்துச் சாப்பிடுவதும், அதை விரைவு விரைவாக சாப்பிடுவதும், உடையவனின் அனுமதியின்றி பிச்சைக்காரருக்கோ, பூனை போன்றவற்றிற்கோ உணவைப் போடுவதும் ஹராமாகும்.

விருந்து கொடுப்பவரை மகிழ்ச்சிப்படுத்துவதற்காக தன் வழக்கத்தை விடச் சற்று அதிகமாகச் சாப்பிடுவது சுன்னத்தாகும். விருந்து கொடுப்பவரை மகிழ்ச்சியுறச் செய்வதற்காகச் சாப்பிடுவது, நோன்பு வைக்க ஸஹர் உணவு சாப்பிடுவது,

அல்லாஹ்வுடைய பாதையில் செல்வதற்காகச் சாப்பிடுவது இம்மூன்று காரியங்களில் தவிர மற்ற நேரங்களில் வயிறு நிரம்பியபின் சாப்பிடுவது ஹராமாகும். மற்றொரு சொல்லில் மனைவியின் கடமையை நிறைவேற்றுவதற்காகவும் அவ்வாறு சாப்பிடலாம் என்றிருக்கிறது.

வீட்டுக்காரர் விருந்தாளியைக் கண்டவுடன் மர்ஹபா என்று வாழ்த்துக் கூறுவதும், அல்லாஹ்வைப் புகழ்வதும் சுன்னத்து. நல்லடியார்களான ஏழைகளை எதிர்பார்த்து, வந்திருப்பவர்களை சற்று தாமதப் படுத்தலாம். ஒரு பணக்காரரை எதிர்பார்த்து தாமதப் படுத்துவது கூடாது. அந்தப் பணக்காரர் மார்க்க இல்மு உடையவராக இருந்தால் தாமதப்படுத்தலாம். எவ்விதமிருந்தாலும் வந்திருப்பவர்களை வேதனைப் படுத்தும் அளவுக்கு தாமதப்படுத்துவது கூடாது.

ஒருவரை எதிர்பார்த்து ஒரு ஜமாஅத்தைப் பசியால் வாடவிடுவது புகழுக்குரியதல்ல.

## சாப்பிடும்பொழுது கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கங்கள்

சாப்பிடுவதில் ஃபர்லுகள் நான்கு, சுன்னத்துகள் நான்கு, ஒழுக்கங்கள் நான்கு உள்ளன.

ஃபர்லுகள்:- (1) பிஸ்மில்லாஹ் சொல்வது; (2) சாப்பிடப்படுவது ஹலால் என்பதை அறிந்து விளங்குவது (3) அதனைப் பொருந்திக் கொள்வது; (4) நன்றிசெலுத்துவது. இது இஹ்யாவில் கூறப்பட்டதாகும். எனவே பிஸ்மி சொல்வது ஃபர்லு என்பதெல்லாம் ஸூஃபிய்யாக்களிடத்தில் தான். மற்றவர்களுக்கு அது சுன்னத்தாகும்.

சுன்னத்துகள்:- (1) சாப்பிடுமுன் இருகைகளையும் கழுவுதல்; 2) வலது காலை நட்டு வைத்து இடது காலின் மீது உட்காருதல்; (3) மூன்று விரல்களால் சாப்பிடுதல்; (இது ரொட்டி சாப்பிடும்பொழுது தான்) (4) ஒரு கவளத்திற்கும் மற்றொரு கவளத்திற்குமிடையே பொறுமையைக் கடைபிடித்தல்.(அதாவது அவசர அவசரமாகச் சாப்பிடாமலிருப்பது.)

ஒழுக்கங்கள்:- (1) தட்டில் தனக்கு முன்னால் உள்ளதைச் சாப்பிடுதல், (2) சிறு சிறு பிடியாகப் பிடித்துச் சாப்பிடுதல், (3) நன்றாக மென்று சாப்பிடுதல், (4) பலர் சாப்பிடும் பொழுது அடுத்தவர் பாத்திரத்தைப் பார்க்காமலிருத்தல்.

உணவுண்ணும் பொழுது கடைப் பிடிக்க வேண்டிய மேலும் சில ஒழுக்கங்கள் பின் வருமாறு: சாப்பிடுவதற்கு முன்னும் சாப்பிட்ட பின்னும் இரு கைகளையும் வாயையும் கழுவுவதும், சிறிதளவு உப்பைச் சாப்பிடுவதும், ஆரம்பத்தில் பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிரஹீம் என்று இரைந்து ஓதுவதும், ஆரம்பத்தில் பிஸ்மில்லாச் சொல்ல மறந்து விட்டால் நினைவு வந்தவுடன் இடையில் பிஸ்மில்லாஹி அவ்வலஹூ வஆகிரஹூ என்று கூறுவதும் சுன்னத்து.

அடுத்தவருக்கும் உணர்வூட்டுவதற்காக பிஸ்மில்லாஹ்வைச் சப்தமிட்டு கூறுவது முஸ்தஹப்பாகும். இதனால் தான், விருந்து மஜ்லிஸில் வீட்டுக்காரர் பிஸ்மில்லாஹ் என்று சப்தமிட்டுக் கூறுவது வழக்கத்திலிருந்து வருகிறது.

பிஸ்மில்லாஹ் சொல்லிய பிறகு பின் வரும் துஆவை ஓதுவதும் சுன்னத்தாகும்:

اَللّٰهُمَّ بَارِكْ فِيْمَا رَزَقْتَنَا وَقِنَا عَذَابَ النَّارِ.

"யா அல்லாஹ் எங்களுக்கு நீ கொடுத்ததில் பரக்கத்துச் செய்வாயாக! நரக வேதனையை விட்டும் எங்களை நீ காப்பாற்றுவாயாக!"

ஒவ்வொரு பிடி உணவின் போதும் பிஸ்மில்லாஹ் என்று சொல்லுவது மிக அழகான செயலாகும். ஹைளுடையவளாய் இருந்தாலும் ஜுனுபாளியாக இருந்தாலும் சொல்லலாம்.

வீட்டுக்காரர் விருந்தாளியைக் கவனிப்பதில் முந்திக் கொள்வதும், வேலைக்காரர் நின்று கொண்டிருப்பதும், விருந்தாளியின் கையில் தண்ணீரை ஊற்றி படிக்கம் போன்றதில் கைகளைக் கழுவச் செய்வதும், சாப்பிடும் முன் கைகழுவுவதில் முதலில் குழந்தைகளையும், பிறகு வாலிபர்களையும், பிறகு பெரியவர்களையும் கைகழுவச் செய்வதும், சாப்பிட்ட பின் இந்த முறைக்கு மாற்றமாகக் கைகழுவச்செய்வதும், வலது பக்கமாக ஒழுங்காக தண்ணீரை ஊற்றுவதும், உணவின் மீது கீரை, ஊறுகாய் போன்றவற்றை வைப்பதும், போதுமென்றிருந்தால் வலக்கையின் மூன்று விரல்களால் சாப்பிடுவதும், மண்டியிட்டு இரண்டு குதிங்கால்களின் மீதிருந்து அல்லது வலது காலை நட்டு வைத்து இடது காலின் மீது உட்கார்ந்து சாப்பிடுவதும் சுன்னத்துகளாகும். இதற்கு மாற்றமான வழக்கத்தைப் பார்க்கக் கூடாது. இந்தச் செயல்களெல்லாம், ஹதீஸ்களைக் கொண்டு ஆராய்ந்து அறிவைக் கொண்டு விளங்கியவையாகும்.

பெரியவர்களை கை கழுவச் செய்து விட்டு, பின் சாப்பாடு கொடுப்பதில் சுணக்குவதும், சாப்பிட்ட பிறகு அவர்களை கை கழுவ விடாமல் தாமதிக்கச் செய்வதும் ஒழுக்கக் கேடாகும்.

زَيِّنُوْا طَعَامَكُمْ بِالْبُقُوْلِ.

"கீரையைக் கொண்டு உங்களுடைய உணவை அலங்கரியுங்கள்" என்றும்

إِدَامُ الْأَنْبِيَاءِ الْبُقُوْلُ وَإِدَامُ الْأُمَرَاءِ اللُّحُوْمُ.

"நபிமார்களின் குழம்பு கீரை; அரசர்களின் குழம்பு இறைச்சி" என்றும்.

سَيِّدُ الْإِدَامِ الْخَلُّ وَالْبَقْلُ.

"குழம்புகளில் தலைமையானது காடியும் கீரையுமாகும்" என்றும் ஹதீஸில் வந்திருப்பதால் ஊறுகாயையும் கீரையையும் முற்படுத்த வேண்டும்.

சாய்ந்து கொண்டு, கையை ஊன்றிக்கொண்டு சாப்பிடுவது மக்ரூஹ், தலையைத் திறந்து கொண்டும், குந்த வைத்தும், சம்மணமிட்டுக் கொண்டும் சாப்பிடுவது கூடாது என்று காணப்படவில்லை. பழங்களை சாப்பாட்டுக்கு முன் சாப்பிடுவதும், இறைச்சியை அதன் பிறகும் சர்க்கரை, தேன் போன்ற இனிப்புப் பொருட்களைக் கடைசியிலும் சாப்பிடுதல் அவசியம். சாப்பிடும் பொழுது ஆரம்பத்தில் ஆணம் போடாமல் மூன்று பிடி உணவைச் சாப்பிடுவதும், அதிகமான சூட்டுடன் சாப்பிடாமலிருப்பதும், வாயினால் உணவை ஊதாமலிருப்பதும் விரும்பப்பட்ட செயல்களாகும். அல்லாஹு தஆலா குர்ஆனில் சூரத்துல் வாகிஆவில், சொர்க்கவாசிகளுக்கு வழங்கப்படும் உணவில் முதலில் பழங்களையும் பிறகு பறவை இறைச்சியையும் குறிப்பிடுகிறான். அதாவது:

وَفَاكِهَةٍ مِّمَّا يَتَخَيَّرُونَ ۝ وَلَحْمِ طَيْرٍ مِّمَّا يَشْتَهُونَ ۝

"(சொர்க்கவாசிகளாகிய) இவர்கள் (பிரியப்பட்டு) தேர்ந்தெடுக்கக்கூடிய கனி (வர்க்கங்) களையும், விரும்பிய பட்சிகளின் மாமிசத்தையும் (அந்த இளைஞர்கள் சுவனபதியில் தாங்கித்திரிவர்)" (55.20,21) என்று கூறியுள்ளான். எனவே தான் பழங்களை முதலில் சாப்பிட வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

பலர் கூட்டாக உட்கார்ந்து சாப்பிடும் ஸஹனில் தனக்கு முன்பாக இருக்கும் உணவை எடுத்துச் சாப்பிடுவது சுன்னத்து. உடனிருப்பவருடைய பகுதியில் கையைப் போடுவதும், இறைச்சியைக் கத்தியினால் வெட்டிச் சாப்பிடுவதும் மக்ரூஹ் ஆகும். நின்று கொண்டு சாப்பிடுவதும் குடிப்பதும் விரும்பத்தகாத செயலாகும். உணவை அமைதியாகச் சுவைத்து மென்று விழுங்கிய பின் மறுபிடியை எடுப்பதும், உடனிருந்து சாப்பிடுபவர்களைக் கூர்ந்து பார்க்காமல் இருப்பதும், விரிப்பில் விழுந்த உணவை அது சுத்தமாக இருந்தால்-எடுத்துச் சாப்பிடுவதும், கடைசியில் தட்டையை வழித்துச் சாப்பிடுவதும், விரல்களை நன்றாகச் சூப்புவதும், விருந்தளிப்பவர் விருந்தாளிகளை நன்றாக சாப்பிடச் சொல்லுவதும் சுன்னத்துகளாகும்.

பேரீச்சம் பழச் சுளைகளில் இரண்டை ஒன்றாக எடுப்பதும், அதன் கொட்டைகளையும் இதர கனிகளின் விதைகளையும் வாயிலிருந்தே துப்புவதும், உணவுக்கருகில் நெருக்கமாக வாயைக் கொண்டு போவதும், மனிதர்கள் சாப்பிடும் போது காறுவதும் சீறுவதும், அருவருப்பான பேச்சைப் பேசுவதும். தட்டையில் கையை உதறுவதும், ரொட்டி போன்றவற்றில் கையைத் துடைப்பதும் மக்ரூஹ் ஆகும்.

கண்பார்வையற்றவருடன் சேர்ந்து சாப்பிட்டால் அவருக்குத் தெரியாதவற்றைக் காட்டிக் கொடுப்பது வாஜிபாகும்.

சாப்பிட்டு முடிந்தவுடன் பின்னால் கூறப்படுவதுபோல் சூராக்களையும் துஆவையும் ஓதி அல்லாஹ்வைப் புகழ்ந்து, பல்லைக்குத்தி சுத்தம் செய்வதும்,

மிஸ்வாக்குச் செய்வதும் சுன்னத்தாகும், இறைச்சி, மீன் சாப்பிட்டால் வாடை போகும் அளவுக்குக் கையைக் கழுவுவதும் சுன்னத்தாகும். வாடை நீங்காவிட்டால் சோப்பை உபயோகித்துக் கழுவ வேண்டும்.

"மாட்டைப் போல் வாயை மூடிக்கொண்டு சாப்பிட வேண்டாம்: கூடியிருந்து ஆகுமான பேச்சுக்களை பேசி சாப்பிடவும்" என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது. தனிமையாகச் சாப்பிட்டாலும் அல்ஹம்துலில்லாஹ், நன்றாக இருக்கிறது என்று ஏதேனும் ஒன்றையாவது பேசுவது சுன்னத்தாகும்.

மிருதுவாக இருக்கும் இனிப்புப் பதார்த்தம் எதையேனும் முதலில் சாப்பிட வேண்டுமென்று இமாம் கஸ்ஸாலி(ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். அதனால் பிறகு உணவைக் குறைவாகச் சாப்பிடக்கூடிய விரும்பத்தக்க நிலை ஏற்படும்.

பெரும் வியாதி உள்ளவர்களுடன் சேர்ந்து சாப்பிட வேண்டிய நிலை ஏற்பட்டால்

بِسْمِ اللّٰهِ وَثِقَةً بِاللّٰهِ وَتَوَكُّلًا عَلَيْهِ.

"அல்லாஹ்வின் திருநாமத்தால், அல்லாஹ்வைக் கொண்டு உறுதியாக, அவன் மீது நம்பிக்கையாக" என்று சொல்லிக் கொள்ள வேண்டும். இதனை அவனுக்குத் தெரியாமல் மெதுவாகச் சொல்ல வேண்டும்.

"பாத்திரத்தை வழித்துச் சாப்பிடுவதும் விபச்சாரம் செய்யாமலிருப்பதும் செல்வ நிலையை உண்டாக்கும்" என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது. நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் சாப்பிட்டால் விரல்கள் சிவந்து விடுமளவிற்கு அவற்றைச் சூப்புவார்கள் என்றும் கூறப்பட்டுள்ளது.

مَنْ اَكَلَ الْبَغْبَغَةَ وَقَذَفَ الْوَغْوَغَةَ وَاسْتَعْمَلَ
الْخَشَبَتَيْنِ اَمِنَ مِنَ الشُّوْصِ وَاللُّوْصِ وَالْعِلُّوْصِ.

"உணவு விரிப்பில் சிந்தியதை (அது சுத்தமாயிருந்தால்) எடுத்துச் சாப்பிட்டு பல் இடுக்கில் உள்ளதை எடுத்தெறிந்து, பல்குத்தும் குச்சி, மிஸ்வாக்கு ஆகியவற்றை உபயோகித்தால் கண்வலி, காதுவலி, வயிற்றுவலி, ஆகிய நோய்களை விட்டும் அச்சமற்றிடுவான்" என்று நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.

உணவை அல்லாஹுத்தஆலா கொடுத்ததாக நினைக்க வேண்டும். தான் சம்பாதித்ததாக, அல்லது இன்ன மனிதனால் கிடைத்தது என்று அல்லாஹ் அல்லாததை எண்ணுவது ஹராமாகும். உண்மையிலேயே தானே அதனை உண்டாக்கிக் கொண்டதாக உறுதி கொண்டால் அது குஃப்ரை உண்டாக்கும்.

உணவு சாப்பிடுவதின் மூலமாக வணக்கங்கள் செய்வதையும், மனைவி மக்களுக்கு உணவளிக்கச் சக்தி பெறுவதையும் நாட வேண்டுமே தவிர பாவங்கள் செய்யச் சக்தி பெறுவதை நாடுவது ஹறாம். உணவுப் பொருட்களை அசுத்தத்திலோ அருவருப்பான இடத்திலோ போடுவதும், நிந்தனை செய்வதும் "சீ" என்று சொல்வதும் கூடாது.

சாப்பிட்டு முடிந்தவுடன் பின்வரும் துஆவை ஓத வேண்டும்.

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ اَطْعَمَنِيْ هٰذَا الطَّعَامَ وَرَزَقَنِيْهِ مِنْ غَيْرِ حَوْلٍ مِّنِّيْ وَلَا قُوَّةٍ. اَللّٰهُمَّ كَمَا اَطْعَمْتَنِيْ طَيِّبًا فَاسْتَعْمِلْنِيْ صَالِحًا. اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ اَطْعَمَ وَسَقٰى وَسَوَّغَهُ وَجَعَلَ لَهُ مَخْرَجًا. اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ اَطْعَمَنِيْ وَاَشْبَعَنِيْ وَاَرْوَانِيْ.

"இந்த உணவை எனக்களித்தவனும் என்னிலிருந்து எவ்விதத் திரும்புதலும் எவ்விதச் சக்தியுமின்றி இதனை எனக்கு கொடுத்தவனுமாகிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். யா அல்லாஹ், மணமிக்கதாக எனக்கு நீ உணவளித்ததைப் போன்று நற்செயலுக்கும் என்னை நீ உபயோகப்படுத்துவாயாக!

உணவளித்து, நீர் புகட்டி, அதனைத் தொண்டையில் தங்கு தடையின்றி புகச் செய்து, அதற்கு வெளியாகுமிடத்தையும் அமைத்த அல்லாஹு தஆலாவுக்கே எல்லாப்புகழும்!

எனக்கு உணவளித்து, எனக்கு வயிற்றை நிரப்பி வைத்து, எனக்கு தாகம் தீர்த்து வைத்த அல்லாஹ்வுக்கே எல்லாப்புகழும்".

பிறகு "குல்ஹுவல்லாஹு" "லிஈலாஃபி" ஆகிய சூராக்களை ஓத வேண்டுமென்றும் "லிஈலாஃபி" சூராவை, சாப்பிடுவதற்கு முன்னாலும் ஓத வேண்டுமென்றும் கூறப்பட்டுள்ளது.

உணவு கெட்டு விட்டால் ஆடு, மாடுகளுக்குப் போடலாம். அதிகம்கெட்டு விட்டால் மண்ணில் புதைத்து விட வேண்டும். எந்த நிலையிலும் அதனைக் குறை சொல்லக் கூடாது. ஏனெனில், நிஃமத்தை கண்ணியப்படுத்துவது நிஃமத்தைக் கொடுத்தவனை கண்ணியப்படுத்துவதாகும்.

## குடிப்பதன் ஒழுக்கங்கள்

மூடியிருக்கும் படியான கேத்தல், கூஜா போன்றவற்றிலிருந்து அப்படியே தண்ணீரைக் குடிக்கக் கூடாது. தண்ணீரைப் பார்த்து முதலில் கொஞ்சமாக வாயில் வைத்துப் பார்த்துக் குடிக்க ஆரம்பிக்க வேண்டும்.

பாத்திரத்தினுள் மூச்சும் ஏப்பமும் விடாமல் குடிக்க வேண்டும். ஒரே மூச்சில் குடிக்காமல் மூன்று தடவை வாயை எடுத்து எடுத்து மூன்று மூச்சில் குடிக்க வேண்டும். முதல் தடவை வாயில் வைக்கும் பொழுது பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம் என்று சொல்லிக் குடித்து வாயை எடுத்தவுடன் அல்ஹம்துலில்லாஹ் என்று சொல்வதும், இரண்டாவது தடவையில் ரப்பில் ஆலமீன் என்று சொல்வதும், மூன்றாவது தடவையில் அர்ரஹ்மானிர்ரஹீம் என்று சொல்வதும் சுன்னத்தாகும்.

மேலும் முதல் மிடறு குடித்து முடிந்தவுடன் சூரத்துல் ஃபாத்திஹாவின் ஆரம்பத்திலிருந்து 'யஃமித்தீன்' வரையிலும், இரண்டாவது மிடறு குடித்து முடிந்தவுடன் 'இய்யாகவிலிருந்து நஸ்தயீன்' வரையிலும், மூன்றாவது மிடறு குடித்தபின் 'இஹ்தினாவிலிருந்து கடைசி வரையிலும் ஓதிக் குடித்தால் பல்வலியையும், மற்றுமுள்ள பல நோய்களையும் அல்லாஹு-தஆலா நீக்கிடுவான் என்று கூறப்பட்டுள்ளது.

சாப்பிட்ட பாத்திரத்திலேயே-தேவையில்லாமல்-குடிப்பதும், உடைந்த பாத்திரத்தில் குடிப்பதும், குடம், பானை போன்ற பாத்திரங்களில் மிருகத்தைப் போன்று வாயைவைத்துக் குடிப்பதும், வாயால் ஊதுவதும் மக்ரூஹ் ஆகும்.

## விருந்தோம்பல் பற்றி மேலும் சில விவரங்கள்

ஒரு மஜ்லிஸில் சாப்பிட்டு முடிந்த பிறகு விருந்தளித்தவரிடம் அனுமதி பெற்று வெளியேறுவது ஒழுக்கமாகும். விருந்தாளியிடம் துஆ ஓதும்படி விருந்து கொடுத்தவன் கேட்பதால் விருந்தின் நன்மை குறைவாகி விடும். ஆனால் கத்தம் ஃபாத்திஹா ஓதுவதற்கென்றே அழைக்கப்பட்டால், அவரும் அதனை ஏற்றுக் கொண்டு வந்தால் அதனை ஓதுவதின் மூலம்தான் கடமை நிறைவேறும். அதில் ஏதேனும் முகஸ்துதி இருந்தால் தவிர தபர்ருக், தேனீர் போன்றதை பகிர ஆரம்பிக்கும் பொழுது பெரிய மனிதர் ஒருவரைக் கொண்டு ஆரம்பித்து, அங்கிருந்து அந்த மனிதரின் வலது பக்கமாகக் கொடுத்து வருவது சுன்னத்தாகும். இடது பக்கத்திலிருப்பவர்கள் கண்ணிய மானவர்களாயிருந்தாலும் சரி, வலது பக்கத்திலிருந்தே கொடுக்க வேண்டும்

ஒரு மஜ்லிஸ் கூடியிருக்கும் பொழுது ஒருவர் வந்தால், அவருக்கு இடம் கொடுக்குமாறு கூறப்பட்டால் இயன்றவரை அவருக்கு இடமளிக்க வேண்டுமென்றும், சாப்பிட்டு முடிந்து விட்டால் அங்கிருந்து பேசிக் கொண்டிருக்காமல் உடனடியாக வெளியாகி விட வேண்டுமென்றும் அல்லாஹு-தஆலா குர்ஆனில் அருளியுள்ளான்.

## விருந்துகளில் மிகவும் மகத்தான விருந்து

உலக முழுவதிலும் முஸ்லிம்களால் நடத்தப்படும் விருந்துகளில் மிகவும் மகத்தான விருந்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மவ்லிது விருந்தாகும். ஆனால், இது நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுடைய காலத்தில் இல்லாமலிருந்ததால் முன்னால் கூறப்பட்ட பத்து விதமான விருந்துகளில் இதனை நாம் கூறவில்லை. மேலும், நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களால் சிறப்பித்துக் கூறப்பட்ட ஸஹாபாக்கள், தாபியீன், தபஉத்தாபியீன் ஆகிய மூன்று காலத்தவர்களும் சென்ற பிறகே இந்த மவ்லிதுடைய விருந்து உண்டாக்கப்பட்டிருப்பதாலும் இதனை நாம் கணக்கில் சேர்க்க வில்லை.

"எவரேனும் ஒருவர் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் மீது அன்னாரின் உண்மையான சரித்திர நிகழ்ச்சிகளைக் கூறும் மவ்லிதை ஓதினால் அவர் அந்த ஆண்டு முழுவதும் அல்லாஹுதஆலாவுடைய பாதுகாப்பில் இருப்பார்" என்று இமாம் ஜலீல் ஷம்சுத்தீன் ஜவ்ஸீ (ரஹ்) அவர்கள் கூறியதாக இப்னு ஹஜர் மக்கீ (ரஹ்) அவர்கள் தங்களுடைய நிஃமத்துல் குப்ரா என்ற கிதாபில் எழுதியுள்ளார்கள்.

மவ்லிது ஓதுவது (பித்அத் ஹஸனா) அழகிய பித்அத்து தான்; அதனை விட்டு விடக்கூடாது என்று இமாம்களான ஜலாலுத்தீன் சுயூத்தீ (ரஹ்), இப்னு ஹஜர் மக்கீ (ரஹ்) போன்றவர்கள் கூறியுள்ளார்கள்.

அதற்காக தனி கிதாபுகள் எழுதியுள்ளார்கள். இஆனத்துத்தாலிபீன் என்ற கிரந்தத்தில், வலீமா உடைய பாடத்தில் மவ்லிது ஓதி வந்தவர்களின் சிறப்புகளையும் அவர்கள் பெற்ற பலன்கள் பற்றியும் பல சம்பவங்களை எழுதியுள்ளார்கள்.

இன்னும் அவர்களுக்குப் பின்னால் வந்த ஷைகு ஸலாஹுத்தீன் போன்ற இமாம்களும் உலமாக்களும் மவ்லிது ஓதுவதினால் கிடைக்கும் பலன்களைப் பற்றியும் அதனைச் செய்து வந்தவர்களுக்குக் கிடைத்த பெறும் பேறுகளைப்பற்றியும் விளக்கியுள்ளார்கள். இதுபற்றி என்னுடைய مِنْحَةُ سَرَنْدِيبٍ فِيْ مَوْلِدِ الْحَبِيْبِ என்ற மவ்லிது நூலிலும் கூறியுள்ளேன்.

## விருந்து கொடுப்பவனுக்கு மக்ரூஹ்

விருந்து கொடுப்பவர், விருந்தாளிகளில் சிலருக்கு மட்டும் நல்ல வகை உணவுகளைக் கொடுப்பது மக்ரூஹ். பெரியோர்களுக்காக வைக்கப்பட்டிருக்கும் உணவுகளில் உடையவனின் அனுமதியின்றி சிறியவர்கள் கை இடுவது ஹராமாகும். தன் நண்பனுடைய உணவை-அவன் பொருந்திக் கொள்வான் என்றிருந்தால் எடுக்கலாம். பசியால் துயருறுபவனுக்கு உணவளித்துப் பசியாற்றுவது உணவுள்ளவன் மீது வாஜிபாகும்.

## ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிகளையுடையவன் இரவில் தங்கும் வழிமுறைகள் பற்றிய விவரம்

ஒன்றுக்குமேற்பட்ட மனைவிகள் உள்ளவன் அவர்களில் ஒருத்தியுடன் இரவில் தங்கினால் மற்றவர்களுடன் தங்குவதற்குச் சீட்டுப்போட்டுப்பார்த்து முறைப்படி தங்குதல் வாஜிபாகும். அவர்களிடம் நோய்அல்லது மாதவிடாய் போன்ற இடையூறுகள் இருந்தாலும் சரி. இந்த முறையாகிறது, அவர்கள் இவனுடன் பிணங்கிக் கொள்ளாமலும், அனைவரும் சுதந்திரமான பெண்களாகவோ அல்லது அனைவரும் அடிமைப்பெண்களாகவோ இருந்தால் தான். அவ்வாறின்றி ஒருத்தி சுதந்திரமானவளாகவும் மற்றொருத்தி அடிமையாகவும் இருந்தால் முறை வைப்பது கட்டாயமில்லை. இவ்வாறே ஒருவனுக்கு ஒரு மனைவி சுதந்திரமானவளாகவும் மற்றொருத்தி நிகாஹ் செய்யப்பட்ட அடிமைப் பெண்ணாகவும் இருந்தால் அவர்களுக்கிடையே முறை வைப்பது வாஜிபாக இருந்தாலும், இதர விஷயங்களில் அவர்களுக்கிடையில் சமமாக இருக்க வேண்டியது வாஜிபில்லை.

கணவன் மனைவி இருவரும், ஆகுமான சுகம் பெறுதலை ஒருவர் மற்றொருவரிடமிருந்து அடைவதில் துன்பமோ செலவோ ஏற்படவிடாமல் நடந்து கொள்வது வாஜிபாகும்.

ஒரு மனைவியானவள் ஜினாவில் ஈடுபட்டு விட்டது தனக்குத் தெரிய வந்தால் அவளுடன் தங்குவதையும் அவளுக்குரிய கடமைகளை நிறைவேற்றுவதையும் அவன் தடை செய்வது கூடும். ஏனெனில் அதன் மூலம் அவளாகவே முன் வந்து அவனுக்கு சண்டி மஹரைக் கொடுத்து விட்டு குல்உ ( خُلْع ) கொண்டு நிகாஹை முறித்துக் கொண்டு தொலையட்டும் என்பதற்காகத் தான் மேலே கூறிய படி நடந்து கொள்வது அவனுக்கு ஹலால் என்று கூறப்பட்டிருக்கிறது.

முறைவைத்துத் தங்கும் ஒருத்தியுடைய இரவில் ஏதும் இடைஞ்சலினிமித்தம் அவசியத் தேவைக்காக மற்றொருத்தியிடம் சென்று வரலாம். அவ்வாறே பகலிலும் சென்று விட்டு தாமதிக்காமல் உடனே வந்து விடலாம். முறை வைப்பதில் குறைந்தது ஓர் இரவும் அதைத் தொடர்ந்து வரும் அல்லது முந்திய பகலுமாகும். ஆனால் பிந்திய பகல்தான் விரும்பத்தக்கதாகும்.

ஒருவன் இரவில் தொழில் செய்பவனாக இருந்தால் அவனுக்கு முறை வைப்பதின் அசல் பகலாகும். அதனுடைய முந்திய பகலோ அல்லது பிந்திய பகலோ அதனைத் தொடர்ந்ததாகும். ஆனால், பிந்திய பகல்தான் சிறந்தது.

ஒருவன் இரவில் காவல் காப்பது போன்ற வேலை செய்பவனாக இருந்தால் அவனுக்கு பகல் அசலாகும். இரவு என்பது சூரியன் மறைந்ததிலிருந்து கிழக்கு வெளுக்கும் வரையிலாகும்.

முறை வைப்பதில் அதிகம் மூன்று இரவுகளாகும். மேலும், கன்னியழியாத புதுப்பெண்ணாக இருந்தால் விடுபடாமல் ஏழு இரவுகள் தங்கலாம். கன்னியிழந்த

புதுப்பெண்ணாக இருந்தால் மூன்று இரவுகள் தங்கலாம். தொடராக இரவும் பகலும் அவளுடனேயே தங்குவான்.

மணம் முடித்து வீடுகூடும் முதலிரவில் ஜமாஅத்துக்கும் ஜனாஸாவுக்கும் வராமலிருக்கலாம். அப்படி வராமலிருப்பது வாஜிபென்று கூட சில இமாம்கள் கூறி இருக்கிறார்கள். ஆனால், இதில் இமாம்களிடையே கருத்து வேறுபாடுகள் உண்டு.

மனைவி தன்னிடம் பிணங்கிக் கொண்டால் முதலில் அவளுக்கு உபதேசம் செய்வான். அதில் அவள் திருந்தாவிட்டால் உபதேசத்துடன் அவளைப் படுக்கையில் வெறுப்பான். ஆனால், பேசாமல் இருக்கக்கூடாது. உபதேசமோ, படுக்கையில் வெறுத்தலோ பலன் தரவில்லையானால் காயப்படாமல் அடிப்பான். இவ்வாறே அல்லாஹுதஆலா குர்ஆனில் மூன்று நிலைகளைக் கூறியுள்ளான் அதாவது:

وَالّٰتِيْ تَخَافُوْنَ نُشُوْزَهُنَّ فَعِظُوْهُنَّ وَاهْجُرُوْهُنَّ
فِى الْمَضَاجِعِ وَاضْرِبُوْهُنَّ ۚ فَاِنْ اَطَعْنَكُمْ فَلَا تَبْغُوْا
عَلَيْهِنَّ سَبِيْلًا ؕ اِنَّ اللّٰهَ كَانَ عَلِيًّا كَبِيْرًا ۝ (4:34)

"எவளும் (கணவனுக்கு) மாறு செய்வாளென்று நீங்கள் அஞ்சினால், அவளுக்கு நல்லுபதேசம் செய்யுங்கள்; (அவள் திருந்தாவிடில்) படுக்கையிலிருந்து அவளை அப்புறப்படுத்தி வையுங்கள் ; (அதிலும் அவள் சீர்திருந்தாவிடில்) அவளை (இலேசாக) அடியுங்கள். அதனால் அவள் உங்களுக்கு வழிப்பட்டுவிட்டால், அவள் மீது (வேறு குற்றங்களை சுமத்த) யாதொரு வழியையும் தேடாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ், மிக மேன்மையானவனும் மிகப்பெரியவனுமாயிக்கின்றான்" என இறைவன் அருளியுள்ளான்.

தனது மனைவியானாலும் அல்லது பொதுவாக மற்ற முஸ்லிம்களானாலும் உலக விஷயத்திற்காக மூன்று தினங்களுக்கு மேல் ஒருவரை மற்றவர் வெறுத்து பேசாமலிருப்பது ஹராமாகும். தீனுடைய காரியத்திற்காக வெறுக்கலாம். அதிலும் ஃபித்னா உண்டாவதை பயந்துல் கூடாது. குர்ஆனில் கூறப்பட்டபடி செய்த உபதேசமும் வெறுப்பும் பயனளிக்காவிடில் காயப்படுத்தாத அடியாக முகமல்லாத இடத்தில் அடிக்கலாம்.

## குல்உ( خُلْعٌ )உடைய பாடம்

குல்உ என்ற அரபிச் சொல்லுக்குக் களைதல் என்று பொருளாகும். கணவன் தன் மனைவியை ஆடையைக் களைவது போல் களைந்து பிரித்து விடுவதற்கு குல்உ என்று சொல்லப்படும். ஏனெனில்;

هُنَّ لِبَاسٌ لَّكُمْ وَاَنْتُمْ لِبَاسٌ لَّهُنَّ ؕ (2:187)

"அவர்கள் உங்களுக்கு ஆடையாகவும், நீங்கள் அவர்களுக்கு ஆடையாகவும் இருக்கிறீர்கள்" என்று இறைவன் திருமறையில் கூறுகின்றான்.

குல்உ என்பது, கணவன் மனைவியைத் தலாக் சொல்வதற்கப் பகரமாக மனைவியிடத்திலிருந்தோ, அல்லது அவள் சார்பாக வேறு யாரிடத்திலிருந்தோ ஏதேனும் பொருளைப் பெற்றுக் கொண்டு தலாக் என்ற சொல்லைக் கொண்டு, அல்லது பிரிதல் என்ற சொல்லைக் கொண்டு அவளை நீக்கி விடுவதாகும். அது சண்டிவளம் என்றும் சொல்லப்படும்.

பகரம் கொடுப்பதென்பதைப் பேசிக் கொள்ளாமல்-அவள் ஒப்புக் கொண்டுவிடுவாள் என்றெண்ணி குல்உ செய்து விட்டபின் அவள் அதனை ஏற்றுக் கொண்டால், அவள் அவனுக்குத் தன் போன்றவர்களிடையே வழக்கில் இருக்கும் மஹரைப் போன்ற தொகையைக் கொடுப்பது கட்டாயமாகும்.

"உன்னை ஆயிரத்திற்குப் பகரமாக தலாக் சொன்னேன்; அல்லது குல்உ செய்தேன்" என்று கணவனே தொகையைக் குறிப்பிட்டுச் சொன்னால், அவள் அதனை ஒப்புக் கொள்வதற்கு முன் இவன் மீண்டு கொள்ளலாம். அவள் ஒப்புக் கொள்வதானால் அந்த இடத்திலேயே உடனடியாக அவள் ஒப்புக் கொள்ள வேண்டும். உடனடியாக ஒப்புக் கொள்ளவில்லையானால் குல்உ செல்லாது.

"நான் உன்னை ஆயிரம் ரூபாய்க்குப் பகரமாக மூன்று தலாக் சொன்னேன்" என்று கூறினான். அவளோ "ஆயிரத்துக்குப் பகரமாக ஒரு தலாக்கை மட்டும் நான் ஒப்புக் கொண்டேன்" என்று சொன்னால், மூன்று தலாக் நிகழ்ந்து விட்டது. அவள் ஆயிரம் கொடுப்பதும் கடமையாகி விட்டது.

"நீ எப்பொழுது இன்ன தொகையை எனக்குத் தருகிறாயோ அப்பொழுது நீ தலாக்" என்று கணவன் மனைவி இடம் கூறுவதற்கு تَعْلِيقٌ தஃலீக் (சம்பந்தப்படுத்துதல்) என்று கூறப்படும். அவ்வாறு குறிப்பிட்ட அந்த தொகையைக் கொடுத்த பிறகுதான் அவள் தலாக் ஆவாள். அந்த சொல்லை விட்டும் அவன் மீளவும் முடியாது. இந்த தஃலீகில் அவள் அதனை உடனே ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதோ, அல்லது அவன் கேட்டதை விரைவாகக் கொடுத்துவிட வேண்டுமென்பதோ ஷர்த்தில்லை.

"நீ இன்னதைத் தந்தால் நீ தலாக்" என்று நேரத்தை சம்பந்தப்படுத்தாமல் கூறினால் உடனடியாகக் கொடுப்பது நிபந்தனையாகும். அப்படிக் கொடுத்தால் தான் தலாக் உண்டாகும். இதற்கு تَنْجِيزٌ தன்ஜீஸ், ஒன்றையும் கொழுகாமல் வட்டு ருக்கமாகப் பேசுவது என்று கூறப்படும்.

ஒருவன் மற்றொருவனிடம், "நான் என் மனைவியைத் தலாக் சொல்வதின் பேரில் நீ உன் மனைவியைத் தலாக் சொல்லி விடு" என்று கூறினான். மற்றவனும் அதை ஒப்புக் கொண்டு இருவரும் அவ்வாறே செய்தால் இரு பெண்களுக்கும் தலாக் உண்டாகி விடும். இதில் பகரம் என்பது நாடப்பட்டிருப்பதால் குல்உ முறிந்து

விடாது. எனவே, ஒவ்வொருவனும் மற்றவனுக்கு அவன் மனைவிபோன்றவளின் மஹரைக் கொடுத்திட வேண்டும்.

குல்உ உடைய விஷயத்தில் அவள் அவனுக்குக் கொடுப்பதற்கு பதிலாக அவன் அவளுக்குக் கொடுக்க வேண்டிய மஹரை நீக்கி விடுவதும் உண்டு.

خَالَعْتُ زَوْجَتِي "என் மனைவியை நிகாஹை விட்டும் உரித்து விட்டேன், நீக்கி விட்டேன் خَالَعْتُكِ அல்லது உன்னை நான் நிகாஹை விட்டும் களைந்து விட்டேன். நீக்கிவிட்டேன்" என்பவை குல்உ உடைய வாசகங்களாகும். ஒருவன் மற்றொருவனிடம், "என் மனைவி தன் மஹரை விட்டும் என்னை நீக்கி விட்டால் அவளைத் தலாக் சொல்வதற்கு நீ என்னுடைய வக்கீலாக இருந்து கொள்" என்று கூற அவ்வாறே அவளும் உடனடியாக மஹரை விட்டும் அவனை நீக்கி விட்டால் அந்த வக்கீலுக்கு தலாக் சொவ்வதற்கோ, சொல்லாமல் இருப்பதற்கோ உள்ள உரிமை உண்டு. அவன் தலாக் சொல்லி விட்டாலோ அவள்மீது ரஜ்இய்யத்தான (மனைவியை மீண்டும் சேர்த்துக் கொள்ளக்கூடிய) தலாக் நிகழும். பிரித்தலுடைய பாயின் தலாக் நிகழாது.

மனைவி தன்னுடைய மஹரை நீக்கிவிடுவதற்கு அவள் பருவமடைந்தவளாகவும், சுய விளக்கமுள்ளவளாகவும் இருக்க வேண்டும். இன்னும் கணவன், மனைவி இருவருமே மஹருடைய அளவை (பெறுமதியை) அறிந்தவர்களாகவும் இருக்க வேண்டும். மேலும் அந்த மஹரில் ஜகாத் விதியாகாமலும் இருக்க வேண்டும், ஜகாத் விதியாகி இருக்கும் நிலையில் அதனைக் கணவனை விட்டும் நீக்கினால் கூடாது. ஏனெனில், அவன் மஹர் முழுவதையும் நீக்கி விட வேண்டுமென்று நிபந்தனையிட்டிருப்பதால் கூடாது.

கணவன் மனைவியிடம் "நீ என்னை உன் மஹரை விட்டும் நீக்கி விட்டால் ஒரு மாதத்திற்குப்பின் நீ தலாக் ஆகிடுவாய்" என்று கூறினான். அவ்வாறே அவள் மஹரை நீக்கி விட்டால் அவன் நீங்கிடுவான். பிறகு அவன் ஒரு மாதம் வரை உயிருடனிருந்தால் ஒரு மாதம் முடிந்தவுடன் அவள் தலாக் ஆகிடுவாள். ஒரு மாதத்திற்கு முன் அவன் இறந்து விட்டால் அவள் தலாக் ஆக மாட்டாள். அவனுடைய சொத்திற்கு வாரிசாவாள்; இத்தாவும் இருப்பாள்.

குல்உ என்ற சொல்லைக் கூறி கணவன் மனைவியைப் பிரிவது தலாக்குடைய எண்ணிக்கையைக் குறைத்து விடும். அதாவது; ஒருதடவை குல்உ செய்வது ஒரு தலாக் ஆகும். எனவே, மூன்று தடவை குல்உ செய்து விட்டால் முத்தலாக் சொல்லப்பட்டவளாவாள். பிறகு தஹ்லீல் இல்லாமல் இவன் அவளை நிகாஹ் செய்வது கூடாது.

ஆனால் இமாம் ஷாஃபியீ (ரஹ்) அவர்களின் இரண்டு சொற்களின்படியும் தலாக்கை நாடப்படாத ஃகுல்உ என்ற சொல்லைக்கொண்டு ஏற்பட்ட பிரிவினையாகிறது ஃபஸ்குவைப்போல் எண்ணிக்கையைக் குறைக்காததாகும். அதன்படி எத்தனை தடவை குல்உ செய்தாலும் தஹ்லீல் இல்லாமல் அவளை நிகாஹ் செய்து சேர்த்துக்கொள்ளலாம். இதுதான் ஷாஃபியீ மத்ஹபின்படியுள்ள ஃபத்வாவாக இருக்கும்.

எண்ணிக்கையைக் குறைக்கும் என்பது, ஒரு கணவனுக்கு ஒரு மனைவியின் மீது மூன்று தலாக்துான் செல்லுபடியாகும். ஒரு தலாக் சொல்லிவிட்டால் ஓர் எண்ணிக்கை குறைந்து விட்டது. மூன்று தலாக் சொல்லிவிட்டால் அவனுடைய கைவசத்தில் தலாக் எதுவும் இல்லாததால் தஹ்லீல் ஆக்காமல் திரும்ப இவன் அவளை நிகாஹ் செய்வது கூடாது. தஹ்லீலின் விபரம் பின்னால் முத்தலாக்கு பற்றிய பாடத்தில் கூறப்படும்.

## தலாக் உடைய பாடம்

"ஹலாலான காரியத்தில் அல்லாஹ்வுக்கு மிகக் கோபமானது தலாக்காகும்" என்று ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது. ஆகையால், தலாக் சொல்வதில் மிக எச்சரிக்கையாக இருக்கவேண்டும்.

தலாக் சொல்வதில் வாஜிபாகச் சொல்லவேண்டியதும் உண்டு. அதாவது: "அல்லாஹ்வின் மீது ஆணையாக உன்னிடம் நான் உடலுறவு கொள்ளமாட்டேன்" என்று சத்தியம் செய்தான். அதனால் அவளிடம் உறவு கொள்ளாமல் அவளைத் துன்புறுத்துவது அநீதியானதால் அவளைத் தலாக் சொல்வது வாஜிபாகும்.

தலாக்கில் சுன்னத்தும் உண்டு. அதாவது: அவளுடைய கடமைகளை நிறைவேற்ற முடியாதவனாக இருந்தால், அல்லது அவள் பத்தினியாக இல்லாதிருந்தால், அல்லது அவளுடைய தீய குணத்தின்மீது பொறுமை செய்ய இயலாதவனாக அவன் இருந்தால், அல்லது எவ்விதக் காரணமுமின்றி இவனுடைய தாய் தந்தையர் அவளைத் தலாக் சொல்லிவிடுமாறு கூறினால் தலாக் சொல்வது சுன்னத்தாகும். ஆனால், வழக்கத்தில் பொறுமை செய்யக்கூடாத கெட்ட குணக்காரியாக இருந்தால் தலாக் சொல்வது சுன்னத்தல்ல. ஏனெனில், "பெண்களில் விட்டுக்கொடுக்கும் தன்மையுடைய பெண்ணைக் கண்டு கொள்வது இரு இறகுகள் வெண்மையாயிருக்கும் காகத்தை கண்டுகொள்வது போலாகும்" என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது. அதாவது: அவ்விதமான காகம் மிக அரிதாகவே இருக்கும். அதுபோல் நற்குணங்கள் அனைத்தும் ஒருங்கே கூடிய பெண்களும் அரிதாகவே இருப்பர்.

தலாக்கில் ஹராமும் உண்டு. அதாவது: உடலுறவு கொள்ளப்பட்ட மனைவியை அவளால் கொடுக்கப்படுகின்ற குல்உ خُلْعٌ வுக்குரிய பகரமின்றியே ஹைளுடைய நேரத்தில் தலாக் சொல்வதும், உடலுறவு கொண்ட துப்புரவில் தலாக் சொல்வதும், (எனினும் தலாக் சொல்லும் நிர்ப்பந்தம் ஏற்படின் துப்புரவான நேரத்தில் ஜிமாஉ செய்யாத நிலைமையில் சொல்லலாம்) தன்னுடைய சொத்துக்கு அனந்தரம் கொள்ளவிடாமல் தடுக்கும் நோக்கத்தில தலாக் சொல்வதும், அவளுக்குரிய முறைவண்ணத்தைக் கெடுக்கும் நோக்கத்துடன் தலாக் சொல்வதும் ஹராமாயிருக்கும்.

மூன்று தலாக்குகளையும் ஒரே தடவையில் சொல்வது ஹராமல்ல. எனினும் ஒரு தலாக்கின் மீதே நிறுத்திக் கொள்வது சுன்னத்தாகும். ஏனெனில், கோபத்தின்

மேலிட்டால் முத்தலாக்கையும் நிறைவேற்றி விட்டால் இத்தாவுக்குள் அவளை மீட்டிக் கொள்ள முடியாமல் போய் விடும் என்பதால்தான் ஒரே தலாக்கோடு நிறுத்திக் கொள்வது சுன்னத்தாக இருக்கிறது.

மேற்கூறப்பட்ட மூன்று வகை தலாக்குகளைத் தவிர மற்ற தலாக்குகள் அனைத்தும் மக்ருஹ் ஆகும்.

பருவமடைந்த, சுயபுத்தியுள்ள, அதிகமான போதையுள்ள ஒருவனுடைய தலாக், அவனால் முழுத்தொகையையும் பெறாத மனைவிக்கு நிகழ்ந்து விடும். குல்உ சொல்லப்பட்டவளுக்கும் ரஜ்இய்யத்தான (ஒரு தலாக் இரண்டு) தலாக் சொல்லி இத்தா முடிந்தவளுக்கும் மேற்கூறப்பட்ட நிலையில் உள்ளவனுடைய தலாக் நிகழாது.

சிறுபிள்ளை, பைத்திக்காரன், ஒரு பொருள் போதையுண்டு பண்ணும் என்பதை அறியாமல் சாப்பிட்டு அதனால் போதையானவன், நிர்பந்திக்கப்பட்டவன் ஆகியோருடைய தலாக் செல்லாது. நிர்பந்திக்கப்படுதல் நியாயமானதாக இருந்தால் தலாக் சொன்னது செல்லுபடியாகும். உதாரணமாக: நீ உன் மனைவியைத் தலாக் சொல், இல்லாவிட்டால் நீ என் தந்தையைக் கொலை செய்ததால் உன்னை நான் கொலை செய்து விடுவேன் என்று ஒருவன் சொல்ல, இவன் பயந்து தலாக் சொல்லிவிட்டால் (அவன் உண்மையிலேயே கொலை செய்திருந்தால்) அந்த தலாக் செல்லுபடியாகும். நிர்பந்திக்கப்படுவது உண்மையாக இருக்கும் செயல்கள் அனைத்தும் இவ்வாறுதான். அவன் கொலை செய்யாதவனாக இருந்து அநியாயமாக நிர்பந்திக்கப்பட்டால் அந்த தலாக் செல்லுபடியாகாது.

தலாக், ஃபிராக், ஸராஹ் سَرَاحٌ فِرَاقٌ طَلَاقٌ ஆகிய மூன்று அரபிச் சொற்களும் நிகாஹை விட்டு மனைவியை நீக்குவதற்காகவே குர்ஆனில் கூறப்பட்ட வார்த்தைகளாகும். எனவே, இந்த மூன்று வார்த்தைகளில் ஏதேனும் ஒன்றையோ, அல்லது அதன் மொழி பெயர்ப்பையோ உபயோகித்து தலாக் கூறினால் (நிய்யத்துச் செய்தாலும் செய்யாவிட்டாலும்) தலாக் நிகழ்ந்து விடும். நிய்யத்து ஷர்த்தில்லை.

மூன்று காரியங்கள் இருக்கின்றன. அவற்றில் மனமறிந்து கூறுவதும் விளையாட்டாகக் கூறுவதும் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படும். அவை: நிகாஹ், தலாக், உரிமை விடுதல் ஆகியவையாகும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நவின்றுள்ளார்கள். எனவே இம்மூன்று காரியங்களிலும் விளையாட்டுக்குச் சொன்னாலும் அது உண்மையாகவே ஆகிவிடும். நான் விளையாட்டுக்காக நிகாஹ் செய்தேன், தலாக் சொன்னேன், உரிமைவிட்டேன் என்று சொல்ல முடியாது. உண்மையிலேயே அது நிகழ்ந்து விடும்.

தலாக் சொல்வதில் இன்ன பெண்ணை என்று குறிப்பிடுவது ஷர்த்தாகும். அரபி எழுத்து சரியாக வராத ஒருவன் طَلَاقٌ என்பதற்கு பதிலாக تَلَاقٌ என்று எழுத்தை மாற்றி உச்சரித்து விட்டாலும் தலாக் நிகழ்ந்து விடும். எழுத்து சரியாக உச்சரிக்கப்படாததால் விவாகரத்து ஏற்படவில்லையென்று சொல்லக் கூடாது.

தலாக்குடைய வாசகத்தை அரபியில் சொல்லும் பொழுது طَلَّقْتُكِ என்று காஃபுக்கு ஜேர் கொடுத்து பெண்பாலாக உச்சரிப்பதற்கு பதிலாக ——— طَلَّقْتُكَ என்று (ஒரு ஆணைப்பார்த்துச் சொல்வது போல்) ஆண்பாலாக உச்சரித்து விட்டாலும் ஏதும் இடையூறில்லை. தலாக் நிகழ்ந்து விடும்.

தலாக் சொல்வதில் சாடையான வாசகங்கள் பலவிருக்கின்றன. அத்தகைய வாசகங்களைக் கூறும் போது ஆரம்பத்தில் தலாக்குடைய நிய்யத்தை உண்டாக்கிக் கொள்ள வேண்டும்.

மனைவியைப் பார்த்து நீ என் மீது ஹராம்; நீ ஒழிந்தவள்; நீ என்னைப் பிரிந்தவள்; நீ என் தாயைப் போல்; என் மகளே, உன்னை உரிமை விட்டுவிட்டேன்; உன்னை விட்டு விட்டேன்; உன்னை நீக்கிவிட்டேன்; நீ வேறு திருமணம் செய்து கொள்ள உன்னை ஹலாலாக்கி விட்டேன்; நீ இத்தாவில் இருந்து கொள்; உன்னுடைய நிகாஹைத் துண்டித்து விட்டேன்; உன்னிடம் எனக்குத் தேவையில்லை; உன்னுடைய தலாக்கைப் பெற்றுக் கொள்; உன் கயிற்றை உன் கழுத்திலேயே போட்டு விட்டேன். இம்மாதிரியான சயிக்கினைச் சொற்கள் இன்னும் பல இருக்கின்றன. ஆனால் உன்னை தலாக் சொல்வது குறையாகும் என்று சொல்வதும், உன்னுடைய மொழியைச் சொல்லிவிட்டேன் என்று கூறுவதும் மேற்கண்ட சயிக்கினைச் சொற்களைச் சேர்ந்தவை அல்ல. இவைகளால் தலாக் நிகழாது. சில ஊர்களில் தலாக் என்பதற்கு பதிலாக இவ்வித வாசகங்களை உபயோகிக்கின்றனர். ஆனால், இந்த வார்த்தைகளை உபயோகிப்பவன் தலாக்கை நிய்யத்துச் செய்தாலும் இந்த வாசகத்தினால் தலாக் உண்டாகாது. இந்த வாசகத்தைக் கூறிய ஒருவனிடம், "நீ உன் மனைவியைத் தலாக் சொல்லி விட்டாயா?" என்று கேட்கும் பொழுது அந்த வாசகத்தினால் தலாக் உண்டாகி விட்டதென்று அவனுடையஅறியாமையினால் எண்ணி, "ஆம்! என்று சொன்னாலும் தலாக் நிகழாது என்று இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள் தீர்ப்பளித்துள்ளார்கள்.

"என்னைத் தலாக் சொல்லிவிடு" என்று மனைவி கணவனிடம் கூற, "அவள் தலாக்" என்று அவன் சொன்னான். பிறகு வேறொருத்தியை நான் நாடினேன் என்று அவன் கூறினால் அதனை ஏற்றுக் கொள்ளக்கூடாது. ஏனெனில் அவளுடைய கேள்வி முந்தி விட்டதால் அவனுடைய சொல் அந்த கேள்விக்குரிய ஜவாபாகத்தான் கருதப்படும்.

ஒருவன் மற்றொருவனைப் பார்த்து, "நீ உன் மனைவியைத் தலாக் சொல்லி விட்டாயா?" என்று கேட்க, "மெய்தான்" என்று அவன் சொன்னால் தலாக் நிகழ்ந்து விடும். அது கலப்பற்ற சொல்லாக இருக்கும். அவ்வாறின்றி - மெய்தான் என்று சொல்லாமல் - தலாக் சொல்லி விட்டேன் என்று கூறினால், அது சாடைச் சொல்லாகத்தான் இருக்கும். எனவே, இதில் அவளை நாடியிருக்க வேண்டும். இல்லாவிட்டால் தலாக் உண்டாகாது. அதாவது: அவளைக் குறிக்கும் வார்த்தை அந்த வாசகத்தில் இல்லாததால் தலாக் உண்டாகாது.

பெண் கொடுத்த மாமியை நோக்கி, உன் மகள் தலாக் என்று சொன்னான். அவளுக்கு மற்றொரு மகள் இருந்து, அந்த மகளைத்தான் நான் நாடினேன் என்று அவன் சொன்னால், சத்தியம் செய்யச் சொல்லி உண்மையாக்கப்படுவான். இவ்வாறே தன் மனைவியும் மற்றொருத்தியும் இருக்கும்பொழுது உங்களிருவரில் ஒருத்தி தலாக் என்று சொல்லிய பின், மற்றொருத்தியை நாடினேன் என்று சொன்னால் சத்தியம் செய்யச் சொல்லி உண்மையாக்கப்படுவான்.

"உன் மனைவியை முத்தலாக் சொல்லி விட்டாயா?" என்று கேட்க, தலாக் சொன்னேன் என்று கூறி, பிறகு ஒரு தலாக்கை நாடினேன் என்று சொன்னால் அப்பொழுதும் சத்தியம் செய்யச் சொல்லி உண்மையாக்கப்படுவான்.

ஒருவனுடைய மனைவி பெயர் ஆயிஷா. ஆயிஷா தலாக் என்று அவன் சொன்னான். பிறகு நான் வேறொரு ஆயிஷாவை நாடினேன் என்று சொன்னால், வெளிப்படையில் அவன் சொல்வதை ஒப்புக் கொள்ளக் கூடாது. எனினும், அவன் உண்மை சொல்பவனாக இருந்தால் அந்தரங்கத்தில் (தியானத் என்னும்) மார்க்கத்தைப் பேணி நடந்து கொள் என்று அவனிடம் கூறப்படும். வெளிப்படையைக் கொண்டே தீர்ப்புச் செய்யப்படும். அவனுடைய சொல் உண்மையென்றும், பொய் யென்றும் அவளால் கண்டு கொள்ள முடியாத நிலையில் அவள் இருந்தால் அவனுடைய சொல்லை ஏற்றுக் கொண்டு அவனுக்கு இடமளிப்பது அவளுக்கு மக்ரூஹ் ஆகும். அவனுடைய சொல் பெரும்பாலும் பொய்யாகத்தான் இருக்குமென்று அவள் கருதினால் அந்தச் சொல்லை ஏற்று அவனுக்கு இடமளிப்பது அவளுக்கு ஹராமாகும்.

சாடையான தலாக்குடைய வாசகத்தைக் கூறியவன், நான் அதைக் கொண்டு தலாக்கை நாடவில்லை என்று கூறினால் சத்தியம் செய்யச் சொல்லி உண்மையாக்கப்படும். தலாக்கை நாடினேன் என்று சொன்னாலும் அவ்வாறே சத்தியம் செய்யச் சொல்லப்படும். அவ்வாறு சொன்னவனுடைய நிய்யத்து என்னவென்று தெரியாத நிலையில் அவன் காணாமல் போய் விட்டால் தலாக் உண்டாகிவிட்டதென்று தீர்ப்புச் செய்யக் கூடாது.

ஒருவன் லைலா என்ற பெயருடைய தன் மனைவியை நோக்கி, ஸயீதாவே நீ தலாக் என்று கூறினால் அவள் தலாக் ஆகி விடுவாள். ஏனெனில் அவளை முன்னோக்கிக் கூறியதால் அவள் மீதே அது நிகழும். பெயரை மாற்றியதால் எவ்வித இடையூறும் உண்டாகாது. தன் மனைவி அல்லாத ஒருத்தியை முன்னோக்கி மைமூனா என்ற தன் மனைவியுடைய பெயரைச் சொல்லி மைமூனாவே, நீ தலாக் என்று சொன்னால் அவனுடைய மனைவி தலாக் ஆகமாட்டாள். ஏனெனில், அவன் முன்னிலைப் படுத்தியது வேறொருத்தியாக இருப்பதால்.

ஒருவன் தன் மனதுக்குள் ஒரு தலாக்கையோ அல்லது இரண்டு தலாக்கையோ நிய்யத்துச் செய்து கொண்டு உன்னைத் தலாக் சொல்லிவிட்டேன் என்று கூறினால் அவன் எத்தனை தலாக்கை நிய்யத்து வைத்தானோ அத்தனை தலாக்கும் ஏற்பட்டு விட்டதாகக் கருதப்படும். எதனையும் நினைக்காமல் பொதுவாக தலாக் சொல்லி

விட்டேன் என்று கூறினால் ஒரு தலாக் மட்டுமே நிகழும். உன்னை ஒரு தலாக், இரண்டு தலாக் சொன்னேன் என்று கூறினால் முத்தலாக்கும் நிகழ்ந்து விடும்.

தலாக் சொல்வதற்காக ஒருவனை வக்கீலாக ஆக்குவது கூடும். அந்த வக்கீல் இன்ன பெண்ணை நான் தலாக் சொல்லி விட்டேன் என்று சொன்னால் அது நிகழ்ந்து விடும். என்னை வக்கீலாக்கியவனுக்காக என்று அவன் நிய்யத்துச் செய்யா விட்டாலும் சரி.

ஒருவன் பருவமடைந்த, சுயபுத்தியுள்ள தன் மனைவியை நோக்கி, "நீ விரும்பினால் உன்னையே நீ தலாக் சொல்லிக் கொள்" என்று எதையும் சம்பந்தப்படுத்தாமல் ( تَعْلِيْقْ செய்யாமல்) வட்டுருக்கமாய் கூறினால் அவன் அவளுக்குத் தலாக்கை உரிமையாக்கிக் கொடுத்துவிட்டான். ஆனால், அதில் தலாக் நிகழ்வதற்கு அவள் உடனடியாக "என்னை நான் தலாக் சொல்லிக் கொண்டேன்" என்று சொல்வது ஷர்த்தாகும். அதாவது: தலாக்கைச் சுருக்கமாக சொன்னால் அது நிகழ்ந்துவிடும். இதில் நீ நாடுவாயானால் என்ற வார்த்தையை தலாக்குடன் சம்பந்தப்படுத்தியது ( تَعْلِيْقْ செய்தது) அவளுடைய நாட்டத்திலேயன்றி, தலாக்கில் அல்ல. தலாக்கில் தஃலீக் ஏற்பட்டால் அது செல்லாது. உதாரணமாக: ரமலான் மாதம் வந்தால் உன்னை நீ தலாக் சொல்லிக் கொள் என்பது போல்.

தலாக்குடைய வாசகத்தை, அல்லது அதனுடைய சாடையான வாசகத்தை ஒரு தாளில் எழுதுகிறான். ஆனால், அதன் மூலம் தலாக்கை அவன் நாடவுமில்லை, தெளிவாக நாவினால் உச்சரிக்கவும் இல்லை. அப்பொழுது தலாக் நிகழாது. தாளில் எழுதியதை வாசிக்கின்றான். அதனால் தலாக்கை நாடவில்லை, எழுதப்பட்டிருப்பதை வாசித்தேன் என்று கூறினால் சத்தியம் செய்யச் சொல்லி உண்மையாக்கப்படுவான், ஏனெனில், அவன் வாசிப்பதனால் பல கருத்துக்களுக்கும் இடமுண்டு.

தலாக்குடைய வாசகங்களை ஆசிரியர் மாணவர்களுக்குக் கற்றுக் கொடுக்கும்போது அவர் மொழிவதினாலோ எழுதுவதினாலோ உதாரணங்கள் கூறி விளக்குவதினாலோ உண்மையில் தலாக் என்பது நிகழ்ந்து விடாது. உதாரணமாக:- "அல்லாஹ் வாசிறவன் ஏழை; நாங்கள் தாம் பணக்காரர்கள்" என்று காஃபிர்கள் சொன்னதை அல்லாஹுதஆலா குர்ஆனில் குறிப்பிடுகிறான். குர்ஆனுடைய அந்த வாசகத்தை நாம் சொல்வதால் அது நாம் சொல்லியதாக ஆகாது.

## முத்தலாக்கு விவரம்

ஒருவன் தன் மனைவியை நோக்கி, உன்னை முத்தலாக்குச் சொல்லிவிட்டேன் என்று சப்தமிட்டுச் சொல்லியபின், இரண்டு தலாக்கைத் தவிர என்று மெதுவாக, தனக்கு மட்டும் கேட்கும்படிக் கூறினால், அந்த நீக்குதல் செல்லும், ஒரு தலாக் மட்டுமே நிகழும். இன்ஷா அல்லாஹ் நீ தலாக் என்று ஒருவன் சொன்னால் தலாக் நிகழாது.

தலாக்கையும் உரிமைவிடுவதையும் நிபந்தனைகளைத் தொடர்பு படுத்திக்கூறலாம். எதனை நிபந்தனையிட்டானோ அத்தன்மை அதில் உண்டாவதற்கு

முன் மீண்டு விடுதல் கூடாது. அந்த நிபந்தனை உண்டாவதற்கு முன் தலாக்கும் உரிமையும் நிகழாது. உதாரணமாக, நீ வீட்டில் நுழைந்தால் தலாக் என்று நிபந்தனையிட்டுச் சொன்னால் அவள் வீட்டில் நுழைந்தால் தலாக் ஏற்பட்டுவிடும்.

ஒருவன் தலாக்குடைய வாசகத்தைச் சொன்னபின், நா உளறிச்சொல்லி விட்டேன் என்றோ, அல்லது மயக்கத்தினால், அல்லது பிறருடைய வற்புறுத்தலினால் சொன்னேன் என்றோ கூறினால், அந்த இடத்தில் அவ்வாறு சொல்வதற்குரிய சூழ்நிலை இருந்தால் சத்தியம் செய்யச் சொல்லி அவன் உண்மையாக்கப்படுவான்.

சுதந்திரமான மனிதன் மூன்று தலாக்குகளுக்கு உரியவனாவான்.

தலாக்கின் விஷயம் ஒருவனின் மீது சிற்றெறும்பு ஊர்ந்துசெல்வதை விட மிக நுணுக்கமானதாகும். ஒரு விஷயத்தை ஹலால் என்று அவன் எண்ணியிருக்க அதில் ஹராம் கலந்து விடவும் கூடும்.

"ஹலாலாகப் பிறந்த ஒரு குழந்தை உலகில் இருக்கும் வரை கியாமத்து நாள் உண்டாகாது" என்று ஒரு ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது. இந்த ஹதீஸின் கருத்து, அக்காலத்தில் எல்லோரும் ஜினாவில் பிறந்தவர்களாக இருப்பார்கள் என்பதல்ல. மாறாக, கணவன் மனைவிக்கிடையே நிகழுகின்ற நிகாஹில் அல்லது தலாக்கில் அல்லது கணவன் மனைவி கலந்துரையாடுவதில் அல்லது கலந்துறவாடுவதில் தவறான பல விஷயங்கள் ஏற்பட்டு, ஹராமை ஹலாலென்றெண்ணிச் செய்கின்ற சூழ்நிலை உண்டாகிவிடும் என்பதாகும். எது ஹலால், எது ஹராம் என்ற அறிவு இல்லாமலாகி விடும். ஹராமான சர்க்கரை கசக்காது, ஹலாலான உப்பு இனிக்காது. எனவே, இவ்விஷயத்தில் மிக்கப் பேணுதலாக இருப்பது அவசியமாகும்.

## முத்தலாக் சொல்லப்பட்டவளை சொன்னவன் மீண்டும் மனைவியாகச் சேர்த்துக்கொள்வது பற்றிய விபரம்

அல்லாஹு தஆலா குர்ஆனில்:-

فَاِنْ طَلَّقَهَا فَلَا تَحِلُّ لَهُ مِنْ بَعْدُ حَتّٰى تَنْكِحَ زَوْجًا غَيْرَهُ.

"பின்னர் அவளை அவன் (முத்) தலாக் சொல்லிவிட்டால், அவனல்லாத ஒரு கணவனை அவள் திருமணம் செய்யும் வரையில் அவள் அவனுக்கு ஹலாலாக மாட்டாள்" *(2:130)* என்று கூறியுள்ளான். இந்த ஆயத்து முத்தலாக் சொல்லப்பட்டவளுக்குரிய சட்டத்தை விளக்குகிறது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலம் முழுவதும், அதற்குப் பின் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்கள் காலத்திலும், அதற்குப் பின் உமர் (ரலி) அவர்கள் ஆட்சிகாலத்தில் இரு ஆண்டுகளும் ஒரு மனிதர் முத்தலாக்கு ஒரே தடவையில் சொன்னாலும் அதை ஒரே தலாக்காகவே கணக்கிடப்பட்டு வந்தது. பின் ஹஜரத் உமர்

(ரலி) அவர்கள் தங்கள் ஆட்சியின் மூன்றாவது ஆண்டில் ஒரு மனிதன் முத்தலாக்கை ஒரே தடவையில் சொன்னாலும் அதை மூன்று தலாக்குகளாகவே கணக்கிடவேண்டுமென்று கட்டளையிட்டார்கள். இப்படி அவர்கள் சொன்னதற்குச் சிலகாரணங்கள் அந்த நேரத்தில் இருந்தன. அதாவது அவசியமில்லாத காரணங்களுக்கெல்லாம் முத்தலாக்கென்று சொல்வதும் பிறகு மனைவியுடன் சேர்ந்து கொள்வதற்கு விருப்பம் தெரிவிப்பதுமாக தலாக்கை கேலிக்கூத்தாக ஆக்க அனேகர் தொடங்கி விட்டனர். எனவே முத்தலாக் என்று ஒரே தடவையில் சொல்லி விட்டாலும் அது மூன்று தலாக்குதான் என்று சட்டம் கொண்டு வந்தால் தான் அவசரப்பட்டு முத்தலாக்கென்று சொல்லமாட்டார்கள் என்பதற்காக அவ்வாறு சட்டத்தை உண்டு பண்ணினார்கள். ஆனால் இதை வேறு சில ஸஹாபாக்களும் இமாம்களும் ஏற்றுக்கொள்ளவில்லை. முக்கியமாக நாயகம் (ஸல்) அவர்களின் சிறிய தந்தையின் மகனும், பிக்ஹு சட்ட நுணுக்கத்தில் கை தேர்ந்த இமாமுமாகிய ஹஜரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களும், மற்றும் இக்ரிமா (ரலி) போன்ற சில ஸஹாபாக்களும் ஒரு மனிதன் ஒரு தடவையில் முத்தலாக்கென்று சொன்னாலும் அது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நடைமுறைப்படுத்தியது போல் ஒரு தலாக்காகவே கணக்கிடப்படவேண்டுமென்று கூறி இருக்கிறார்கள். இதற்கு ஆதாரம் ஸஹீஹ் முஸ்லிம் என்ற ஹதீது கிரந்தத்தில் இருக்கிறது.

மேலும் ஹஜரத் அலி (ரலி) அவர்களுடைய பேரனாரும், பிக்ஹு சட்ட இமாமுமாகிய ஹஜரத் ஜஃபர் ஸாதிக் (ரலி) அவர்களும் ஹஜரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் அபிப்பிராயப்படியே ஃபத்வா கொடுத்திருக்கிறார்கள். எனினும் ஹனஃபி, ஷாஃபிஈ, மாலிகி, ஹன்பலி ஆகிய நமது நான்கு இமாம்களும் ஒருவன் முத்தலாக்கை ஒரே தடவையில் சொன்னாலும் அவனுக்கு மூன்று தலாக்குகளும் நிகழ்ந்துவிட்டனவென்ற ஹஜரத் உமர்(ரலி) அவர்களின் நிலையையே மேற்கொண்டுள்ளனர். அந்த அடிப்படையில் ஷாஃபிஈ மத்ஹபின்படி முத்தலாக்கின் சட்டங்களைக் கவனிப்போம்.

ஒரு நிகாஹிலோ, அல்லது பல நிகாஹுகளிலோ முத்தலாக்கு சொன்ன சுதந்திரமான மனிதனுக்கு (அவன் ஓர் அடிமைப் பெண்ணைத் திருமணம் செய்திருந்தாலும் சரி) அவனால் தலாக் சொல்லப்பட்டவள் மீண்டும் அவனுக்கு ஹலாலாக வேண்டுமென்றால், அவனல்லாத வேறொருவனுக்கு சரியான நிகாஹாக நிகாஹ் செய்து கொடுக்கப்பட்டு, அவன் அவளுடைய முன் துவாரத்தில் உசும்புதலுடைய தன் ஆண்குறியை சுத்னாவரை மறையும்படி நுழையவைத்து, பிறகு அவன் அவளைத் தலாக் சொல்லி, அதற்குரிய இத்தா முடிந்த பின் முந்தியவன் அவளை மீண்டும் நிகாஹ் செய்வது கொண்டு தான் அவள் அந்த முந்திய கணவனுக்கு மீண்டும் ஹலாலாவாள். இரண்டாவது கணவனுடைய விந்து வெளிப்படவேண்டுமென்று நிபந்தனையில்லை. இதற்கு தஹ்லீல் என்று கூறப்படும்.

தஹ்லீல் நடந்ததிலும் அதன் இத்தா முடிந்து விட்டதிலும் அவளுடைய சொல்லை, சந்தர்ப்ப சூழ்நிலைகளை அறிந்து, ஒப்புக்கொள்ளப்படும். இரண்டாம்

கணவன் அவள் சொல்வதைப் பொய்யாக்கினாலும் அவளுடைய சொல்லை ஏற்று முந்திய கணவனுக்கு நிகாஹ் செய்வது ஹலாலாகும்.

தலாக் சொன்னதும், தலாக் சொன்னதாக விண்ணப்பம் செய்ததும் நீதமான சுதந்திரவான்களான இரண்டு சாட்சிகளைக் கொண்டு தரிபடும். பெண்களுடைய சாட்சியத்தால் தரிபடாது, அவர்கள் நான்கு நபர்களாயிருந்தாலும் சரி, அல்லது ஓர் ஆணுடன் சேர்ந்து சொன்னாலும் சரி. அவ்வாறே அடிமைகளின் சாட்சியத்தாலும் தரிபடாது, அவர்கள் நல்லவர்களாயிருந்தாலும் சரி, பாவம் செய்பவர்களின் சாட்சியத்தாலும் தரிபடாது. பாவம் என்பது ஃபர்லான தொழுகையை எவ்விதக்காரணமுமின்றி அதனுடைய நேரத்தில் தொழாமலிருந்தாலும் பாவம் தான். இவ்வித பாவிகளின் சாட்சியம் ஒப்புக்கொள்ளத்தக்கதல்ல.

தலாக் பற்றி சாட்சி சொல்வதற்கும் அதனை ஏற்றுக்கொள்வதற்கும், பின் வரும் நிபந்தனைகள் அவசியமாகும். தலாக் சொன்னவனைக் கண்ணால் காணவேண்டும். தலாக் சொல்லும் பொழுது அதனுடைய சப்தத்தைக் கேட்க வேண்டும். தலாக் சொன்னவனைக் கண்ணால் காணாமல் அவனுடைய சப்தத்தை மட்டும் கேட்டுச்சொல்லும் சாட்சியம் ஏற்கப்படமாட்டாது.

தலாக்குடைய சாட்சிகளில் இரண்டு பேர் "நீ இந்த வீட்டில் நுழைந்தால் தலாக்" என்று சம்பந்தப்படுத்தி சொன்னான் என்பதாகவும், வேறு இரண்டு பேர், "நீ தலாக்" என்று மட்டும் சுருக்கமாகச் சொன்னான் என்பதாகவும் கூறினால், சம்பந்தப்படுத்திச் சொன்ன சாட்சி முற்படுத்தப்படும்.

இரண்டு பேர் ஒரு பறவையைப் பார்த்து, 'அது காகமாக இருந்தால் என் மனைவி தலாக்' என்று ஒருவன் சொன்னான். மற்றவன் "அது காகமாக இல்லாவிட்டால் என் மனைவி தலாக்" என்று சொன்னான். பிறகு அப்பறவை என்னவென்று தெரியவில்லையானால் இருவருமே தத்தம் மனைவியை விட்டும் நீங்கி இருப்பதும், அந்தப் பெண் மற்றொரு கணவனை நிகாஹ் செய்து கொள்வது ஹலால் ஆவதற்காக தலாக் சொல்வதும் பேணுதலாகும்.

## ரஜ்ஈ தலாக்கின் சட்டம்

"ரஜ்ஈ தலாக் என்பது இத்தா முடிவதற்குள் மனைவியைத் திரும்ப மீட்டுக்கொள்ளும் தலாக் என்பதாகும். மீட்டுக்கொள்வது இரண்டு தடவைகளாகும். அதைப்பற்றி இறைவன் குர்ஆனில்,

اَلطَّلَاقُ مَرَّتَانِ فَاِمْسَاكٌۢ بِمَعْرُوْفٍ اَوْ تَسْرِيْحٌۢ بِاِحْسَانٍ (2:229)

(ரஜ்யிய்யாகிய திரும்ப மீட்டுக்கொள்ளக்கூடிய) தலாக்காகிறது, இரண்டு தடவைகளாயிருக்கும். (மூன்று தடவைகள் சொல்லிவிட்டால் மீட்டுக் கொள்ளக்கூடாது. அப்படி இரண்டு தலாக் சொன்னால் அவர்களை) மீட்டுக்கொண்டு முறைப்படி தடுத்து (மனைவிகளாக) வைத்துக்கொள்ளலாம். அல்லது (அவர்கள் மீது

யாதொரு குற்றமும் சுமத்தாமல் அவர்களுக்கு கொடுக்கவேண்டியதைக் கொடுத்து) நன்றியுடன் விட்டுவிடலாம்". என்று கூறியுள்ளான்.

சுதந்திரமான மனிதன் உடலுறவு கொண்ட மனைவியை ஒரு தலாக் அல்லது இரண்டு தலாக் சொன்ன பிறகும் அடிமை ஒரு தலாக் சொன்னபிறகும் எவ்விதப்பகரமுமின்றி தலாக்குடைய இத்தா முடிவடைவதற்கு முன் அவளை என்னுடைய நிகாஹின் பக்கம் மீட்டுக்கொண்டேன் என்று சொல்லி மீட்டுக் கொள்வது கொண்டு அவள் ஹலாலாகி விடுவாள். இதற்கு ரஜ்ஈ தலாக் என்று கூறப்படும்.

ஃபஸ்கினால் பிரிந்தவளையும், பகரமாக ஒரு பொருள் கொடுத்து (அதாவது குல்உ செய்து) பிரிந்தவளையும், உடலுறவு கொள்ளும் முன் பிரிந்தவளையும், தலாக் சொல்லி இத்தா முடிந்தவளையும், மீட்டுக் கொள்வது கூடாது. இந்த நால்வரையும் திரும்ப மனைவியாக்கிக்கொள்ள வேண்டுமென்றால் புதிதாக நிகாஹ் செய்யவேண்டும்; சாட்சிகளும் புதிய மஹ்ரும் ஏற்படுத்தவேண்டும். (இந்த விஷயங்களில் தஹ்லீல் தேவையில்லை)

ரஜ்இய்யத்தான ஒரு தலாக், இரண்டு தலாக் சொல்லப்பட்டவளை மீட்டிக்கொள்வதற்கு முன் தனிமையாகப் பார்ப்பதோ, அவளிடம் வேறு ஏதேனும் சுகம் பெறுவதோ ஹராமாகும். அவ்வாறு செய்தால் அதற்கு ஹத்து என்ற தண்டனை இல்லை. எனினும், அவன் கண்டிக்கப்படுவான்.

தலாக் சொன்னானா, இல்லையா என்று சந்தேகம் வந்தால் அவள் தலாக் ஆக மாட்டாள். இதில் பேணுதலாகிறது, அவளை ரஜ்ஈ தலாக் சொல்லி மீட்டிக்கொள்வதாகும். ஒரு தலாக் சொன்னோமா, அல்லது இரண்டா என்று சந்தேகம் ஏற்பட்டால் குறைந்ததுதான் உண்டாகும். மரண நோயிலிருக்கும் நிலையிலும் தன் மனைவியை முத்தலாக் சொல்லியபிறகு அவன் இறந்து விட்டால், அவள் அவனுக்கு வாரிசாக மாட்டாள்.

முத்தலாக் அல்லாமல் ஒரிரு தலாக்கைக் கொண்டு பிரிந்தவளை இத்தா முடிந்த பிறகு நிகாஹ் செய்தால் முன்னால் சொல்லிவிட்ட தலாக் போக மீதிக்கு மட்டுமே அவன் உரிமையாளனாவான். அதாவது: முன்னால் ஒரு தலாக் சொல்லியிருந்தால் இப்பொழுது இன்னம் இரண்டு தலாக்கிற்கும், முன்னால் இரண்டு தலாக் சொல்லியிருந்தால் இன்னும் ஒரு தலாக்கிற்கும் உரிமையுள்ளவனாவான். ஆகவே, ஒரு பெண்ணுக்குரியது மூன்று தலாக்குகள் மட்டுமே. அவற்றை ஒரு நிகாஹில் நிறைவேற்றினாலும் சரி, அல்லது குல்உ மற்றும் ரஜ்ஈ தலாக்குகளுக்குப்பிறகு நடைபெற்ற பல நிகாஹ்களில் நிறைவேற்றினாலும் சரி, மூன்று தலாக்குகளையும் உபயோகித்து விட்டால் தஹ்லீல் இல்லாமல் அவள் இவனுக்கு ஹலாலாக மாட்டாள். தஹ்லீலுக்குப்பின் நிகாஹ் செய்தால் அது புதிய நிகாஹைப் போன்று ஆவதால் மீண்டும் மூன்று தலாக்குகளுக்கு உரிமையுள்ளவனாவான்.

## ஈலாஉ (சத்தியம் செய்தல்) உடைய சட்டம்

"தங்களுடைய மனைவிகளுடன் உடலுறவு கொள்வதில்லையென்று சத்தியம் செய்து கொண்டவர்களுக்கு நான்கு மாதங்கள் எதிர் பார்ப்பது உண்டு."(2:226) என்று அல்லாஹு தஆலா குர்ஆனில் கூறியுள்ள ஆயத்து மனைவியிடம் சேரமாட்டேன் என்று கணவன் சத்தியம் செய்வதற்குரிய சட்டத்தை விளக்குகின்றது.

உடலுறவு கொள்ளக்கூடிய கணவன் தன் மனைவியை நோக்கி நான் உன்னை நான்கு மாதங்களுக்கு உடலுறவு கொள்ளமாட்டேன் என்று, அல்லது காலத்தைக் குறிப்பிடாமல் பொதுவாக உடலுறவு கொள்ளமாட்டேன் என்று சொன்னாலோ, அல்லது இன்ன காரியம் நடைபெறும் வரை (உதாரணமாக: இந்தத் தென்னையில் பாளை வெளியாகும் வரை) உடலுறவு கொள்ள மாட்டேன் என்று சத்தியம் செய்து சொல்லிவிட்டாலோ, பின் அது முதல் நான்கு மாதங்கள் வரை அவளுடன் சேருதல் கூடாது. நான்கு மாதங்கள் கழிந்தால்தான் அவளை உடலுறவு கொள்வது ஆகும்.

நான்கு மாதங்களுக்குப்பின்தான் அவள் அவனை உடலுறவுக்கு அழைக்கலாம். அல்லது தலாக் சொல்லுமாறு கேட்கலாம். இந்த இரண்டிலொன்றை அவன் செய்ய மறுத்தால் காளியிடம் சொல்லிவிட வேண்டும். அவர் அவளைத் தலாக் சொல்லி விடுவார்.

நான்கு மாதங்களுக்கிடையில் அவள் அவனை உடலுறவுக்கு அழைத்தால், அல்லது அவனாகவே அவளை உடலுறவு கொண்டால், அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்ததற்காக சத்தியத்தை முறித்ததற்குரிய குற்றப்பரிகாரத்தை நிறைவேற்ற வேண்டும்.

ஒரு வணக்கத்தை நிறைவேற்றுவதாக சத்தியம் செய்தால், அதனை நிறைவேற்றுவதற்கும் சத்தியத்திற்குரிய குற்றப்பரிகாரத்தை நிறைவேற்றுவதற்குமிடையே அவன் சுய விருப்பம் கொடுக்கப்பட்டவனாக ஆகிடுவான்.

மேற் கூறப்பட்ட ஈலாஉவில் தலாக்கை சம்பந்தப்படுத்தி சத்தியம் செய்திருந்தால் தலாக் நிகழ்ந்து விடும். அடிமையை உரிமை விடுதலும் இவ்வாறு தான்.

சத்தியம், அல்லாஹ்வின் மீது செய்வது கொண்டே உண்டாகும். அல்லது உன்னை நான் உடலுறவு கொண்டால் உன் சக்களத்தி தலாக், அல்லது என் அடிமை உரிமை, அல்லது நான் இத்தனை நோன்பு வைப்பேன் என்று சொல்வதைக் கொண்டெல்லாம் சத்தியத்தின் அமைப்பு உண்டாகும்.

சத்தியத்தை முறித்தால் அதற்குரிய பரிகாரமாவது, அல்லாஹு தஆலா குர்ஆனில் சொல்லியவாறு பத்து ஏழைகட்கு நடுத்தரமான உணவளிக்க வேண்டும். அல்லது பத்து ஏழைகட்கு ஆடைகள் கொடுக்கவேண்டும். அல்லது ஓர் அடிமையை உரிமைவிட வேண்டும் இம்மூன்றில் எதனையும் செய்ய இயலாவிட்டால் மூன்று நோன்புகள் வைக்கவேண்டும்.

# ளிஹார் உடைய சட்டம்

தனது மனைவியை தன் தாய் போன்ற மஹ்ரமத்தானவளுக்கு ஒப்பிட்டுப் பேசுவது பற்றிய சட்ட விளக்கம்:

அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்:

"எனவே, எவரேனும் தங்கள் மனைவிகளைத் (தம்) தாய்க்கு ஒப்பிட்டுக் கூறிய பின்னர், (தம் மனைவியர் அந்தத் தாயைப்போல் மஹ்ரம் ஆகிவிடுவார். பின்னர்) அக்கூற்றிலிருந்து திரும்பி (மீண்டும் மனைவியருடன் சேர்ந்து கொள்ள விரும்பி)னால் அவ்விருவரும் ஒருவரை ஒருவர் தொடுவதற்கு முன்னதாகவே (இவ்வாறு ஒப்பிட்டுக்கூறிய குற்றத்துக்குப்பரிகாரமாக) ஓர் அடிமையை விடுதலை செய்ய வேண்டும். (என்று) இதன்மூலம் நீங்கள் உபதேசிக்கப்படுகிறீர்கள். அல்லாஹ் நீங்கள் செய்பவைகளை நன்கறிபவனாக இருக்கின்றான்."(58:3)

இந்த ஆயத்து ளிஹாருடைய சட்டத்திற்கு அசலாகும். ளிஹார் என்பது, வமிசத்தால் அல்லது பால் குடியால் மஹ்ரமாக இருக்கின்ற ஒரு பெண்ணுக்கு தன் மனைவியை ஒப்பிட்டுக் கூறுவதாகும். மன்னவியைப் பார்த்து "நீ எனக்கு என் தாயைப் போல்" என்றோ, அல்லது, "நீ என்தாயுடைய முதுகைப்போல்" என்றோ கூறுவது, அல்லது தாயுடைய உறுப்புகளில் ஏதேனும் ஒன்றைக் கொண்டு ஒப்பிட்டுக்கூறுவது ளிஹார் ஆகும்.

ஆனால், திருமண சம்பந்தத்தால் மட்டும் மஹ்ரமாகிப்போன ஒரு பெண்ணுக்கு ஒப்பிடுவது ளிஹார் ஆகாது.

இவ்வாறு சொல்லியவன் நீ தலாக் என்றோ, உன்னைத் தலாக் சொல்லி விட்டேன் என்றோ சொல்லுகின்ற நேரத்திற்குள் அவ்வாசகத்தைச் சொல்லாவிட்டால் அவள் அவனை விட்டு நீங்கமாட்டாள். ஆனால், ளிஹாருடைய வாசகத்தை அவன் கூறியிருப்பதால் அதற்குரிய குற்றப்பரிகாரத்தை (கஃப்பாராவை) நிறைவேற்றுவது அவன் மீது வாஜிபாகும். ளிஹாருடைய வாசகத்தைக்கூறிய நேரத்திலிருந்து அதற்குரிய குற்றப்பரிகாரத்தை நிறைவேற்றும்வரை அம்மனைவியை உடலுறவு கொள்வது ஹராமாகும்.

குற்றப்பரிகாரமாகிறது, முஃமினான ஓர் அடிமையை உரிமை விடுவதாகும். அது சாத்தியப்படவில்லையானால் தொடராக இரண்டு மாதங்கள் நோன்பு பிடிப்பதாகும். அதற்கு சக்தியில்லையானால் அறுபது ஏழைகட்கு உணவளிப்பதாகும். அதாவது: அந்த ஊரில் உபயோகிக்கப்படும் அரிசிபோன்ற தானியத்தில் ஓர் ஏழைக்கு ஒரு முத்து ( مُدّ )வீதம் (இருகைகள் நிரம்பிய அளவுக்கு முத்து என்று கூறப்படும்). அறுபது நபர்களுக்குக் கொடுக்கவேண்டும்.

## தலாக்குடைய இத்தா விவரம்

திருமணமாகி, தன் மனைவியை உடலுறவு கொள்ளும் முன்னர் தலாக் சொல்லி விட்டால் இத்தா கிடையாது. உடலுறவுக்குப்பின் தலாக் சொன்னால் இத்தா இருப்பது வாஜிபாகும். கணவன், மனைவி இருவரும் சிறுவர்களாக இருந்தாலும் அல்லது இருவரும் பருவமடைந்தோராக இருந்தாலும் அல்லது ஒருவர் பருவமடைந்தவராக மற்றவர் சிறுவயதுடையவராக இருந்தாலும் இத்தா வாஜிபாகும். கணவன், மனைவி இருவரும் தனித்திருந்து, உடலுறவு நடைபெற வில்லையானால் இத்தா அவசியமில்லை. இத்தா விதியானவள் கர்ப்பவதியாக இருந்தால் குழந்தையைப்பெற்றெடுத்தவுடன் இத்தா முடிந்துவிடும். ஆனால், அதற்கு இரண்டு நிபந்தனைகளுண்டு.

முதலாவது:- வயிற்றிலுள்ள குழந்தை முழுவதும் வெளியாக வேண்டும். அது உயிருடன் பிறந்தாலும் சரி, உருவம் நிரப்பமாயிருக்கும் மய்யித்தாக வெளியானாலும் சரி, உருவம் முழுமை பெறாத சதைக் கட்டியாயிருந்தாலும் சரி. ஆனால், அது மனித உருவம்தான் என மருத்துவச்சிகள் சாட்சி சொல்ல வேண்டும். இன்னும் அந்த கர்ப்பம் இரட்டைக் குழந்தையாக இருந்தால் இரண்டு குழந்தைகளும் வெளியாக வேண்டும். ஒரு குழந்தை பிறந்து, பிறகு ஆறு மாதத்திற்குள் மற்றொரு குழந்தை பிறந்தாலும் அது இரட்டைக்குழந்தைதான். ஒரே பிரசவத்தில் நான்கு குழந்தைகளும் அதைவிட அதிகமாகவும் பிறக்கலாம். ஒரு பிரசவத்தில் ஐந்து குழந்தைகள் பிறக்கக்கண்டதாக காளி ஹுஸைன் என்பவர்கள் கூறியுள்ளார்கள்.

யமன் நாட்டைச் சேர்ந்த ஒரு பெரியவர், தனக்கு ஒரே பிரசவத்தில் ஐந்து குழந்தைகள் பிறந்ததாக என்னிடம் கூறினார் என இமாம் ஷாஃபியீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். "அன்பார் என்ற ஊரில் ஒரு பெண் ஒரு பை போன்ற ஒன்றைப் பிரசவித்தாள், அதனுள் பன்னிரண்டு குழந்தைகள் இருந்தன." என்று இப்னுல் மவ்ஜியான் என்பவர் அறிவித்துள்ளார். "பக்தாது நகரில் அரசர் ஒருவருடைய மனைவி பை போன்ற ஒன்றைப் பிரசவித்தாள். அதனுள் நாற்பது குழந்தைகள் இருந்தன. அந்த நாற்பதும் வளர்ந்து பெரியவர்களாகி குதிரைகளிலேறி தம் தந்தையுடன் போருக்குச் சென்றனர்" என்று முஹம்மது இப்னு ஹைதம் என்பவர்கள் எழுதியுள்ளார்கள்.

இரண்டாவது:- பிறக்கும் அக்குழந்தை, யாருக்காக இத்தா இருக்கிறாளோ அவன் பக்கம் சேர்க்கப்பட்டதாயிருக்கவேண்டும். ஒரு பெண் ஜினாவினால் அல்லது சந்தேகமான உடலுறவினால் கர்ப்பமாகியிருந்தால் தலாக் சொன்னவனுடைய இத்தா, அந்தக் குழந்தையைப் பிரசவிப்பதால் முடியாது.எனினும், பிரசவித்த பின்னும் தலாக் சொன்னதற்காக தனியாக இத்தா இருக்கவேண்டும். இந்தச் சட்டம் கர்ப்ப காலத்தில் ஹைளு வராமலிருந்தால் தான். ஒரு பெண்ணுக்கு கர்ப்ப காலத்திலும் ஹைளு வந்தால் அவளுக்கு மூன்று துப்புரவின் மூலம் இத்தா முடிவடையும்.

கர்ப்பம் தரித்திருப்பது (அதாவது: குழந்தை பெறுவது) குறைந்தது ஆறு மாதங்களாகும். அதிக பட்சம் நான்கு ஆண்டுகளாகும். எனவே, ஒரு கணவன் தன்

மனைவியைப் பிரிந்த நாள் தொடுத்து நான்கு ஆண்டுகளுக்குள் அவள் குழந்தையைப் பெற்றெடுத்தால், அக்குழந்தை அவனையே சேரும். ஆனால், அக்கணவனல்லாத வனுக்கு திருமணம் செய்து கொடுக்கப்பட்டு ஆறுமாதங்களுக்குப் பின் குழந்தை பெற்றால், அது முந்தியவனுக்குச்சேராது. அவ்வாறு இல்லாதிருக்கையில் (அதாவது:ஆறு மாதம் ஆவதற்கு முன்பே குழந்தையைப் பெற்றெடுத்து) அந்தக் குழந்தையை அவள் ஜினாவினால் பெற்றெடுத்தாள் என்பதற்கு சாட்சி இல்லாமலும் அது பற்றி அவளுடைய உறுதி மொழி இல்லாமலும் இருந்தால் அக்குழந்தை முந்திய கணவனையே சேரும் என்பதில் சந்தேகமில்லை. அதன் காரணத்தை அவளிடம் விசாரிப்பதோ அதைப்பற்றி தெளிவான அறிவு இல்லாமல் அதைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பதோ கூடாது.

இத்தா விதியானவள் கர்ப்பவதியாக இல்லையானால், அவள் மாதவிடாய் வருபவளாக இருந்தால் மூன்று துப்புரவைக் கொண்டு அவளுடைய இத்தா முடிவடையும். துப்புரவான நேரத்தில் தலாக் சொல்லியபின் அடுத்த நிமிடத்தில் அவளுக்கு ஹைளு வந்துவிட்டாலும் ஒரு துப்புரவு முடிந்து விட்டது. பிறகு இன்னும் இரண்டு துப்புரவுகள் ஆனவுடன் அவளுடைய இத்தா முடிந்துவிடும்.

ஹைளுடைய நேரத்தில் தலாக் சொன்னால் பிறகு மூன்று துப்புரவு ஏற்பட்டு நான்காவது ஹைளு ஏற்பட்ட நேரத்தில் தான் இத்தா முடிவடையும். முதலாவது ஹைளுக்கும் இரண்டாவது ஹைளுக்குமிடையே நீண்ட நாட்கள் இருப்பதிலோ அல்லது குறைந்த நாட்கள் இருப்பதிலோ எந்த வித்தியாசமுமில்லை.

ஹைளும் துப்புரவும் ஒன்றுக் கொன்று அடுத்து வருவதற்கு உதாரணமாகிறது: ஓரிரவு ஒரு பகல் மட்டும் ஹைளு ஏற்பட்டு பிறகு பதினைந்து நாட்கள் துப்புரவாக இருக்கும் ஒரு பெண், அந்தத் துப்புரவின் கடைசியில் தலாக் சொல்லப்பட்டால் முப்பத்திரண்டு நாட்களும் இரண்டு நிமிடங்களும் கழிந்தால் அவளுக்கு இத்தா முடிந்துவிடும். அதே பெண் ஹைளுடைய கடைசி நேரத்தில் தலாக் சொல்லப்பட்டால் நாற்பத்தேழு நாட்களும் இரண்டு நிமிடங்களும் முடிந்தவுடன் இத்தா முடிந்து விடும். இது சுதந்திரமான ஒரு பெண்ணுக்குரிய குறைந்த அளவாகும்.

ஒன்றுக்கொன்று தூரமாயிருப்பதற்கு உதாரணம்: சில பெண்களுக்குப் பதினைந்து நாட்கள் ஹைளு வரும். பிறகு ஆண்டுக்கணக்காக கூட அவர்கள் துப்புரவாக இருப்பார்கள். இத்தகைய பெண்கள் தலாக் சொல்லப்பட்டாலும் மூன்று துப்புரவுக்குப் பிறகுதான் இத்தா முடியும்.

தலாக் சொல்லப்பட்டவள் ஹைளு வராத சிறுமியாக இருந்தாலும், அல்லது ஹைளு நின்று விட்டவளாக இருந்தாலும் மூன்று மாதங்கள் இத்தா இருக்கவேண்டும். இந்தச் சட்டங்களெல்லாம் தலாக்குடைய இத்தாவைப் பற்றியவையாக இருக்கும்.

ஏதேனும் ஒரு நோயின் காரணமாகவோ, அல்லது பால் கொடுப்பதின் காரணமாகவோ, அல்லது எவ்விதக் காரணமுமின்றியோ ஹைளு வராதவளாக

இருந்தால், ஹைளு நின்று விடுகிற வயதை அடையும் வரை பொறுமையுடனிருந்து, பிறகு மூன்று மாதங்கள் இத்தா இருக்கவேண்டும்.

இத்தா விதியாவதெல்லாம் இரண்டு காரணங்களுக்காக இருக்கும். ஒன்று தலாக்; மற்றொன்று மவுத்து. எனவே, ஃபஸ்கு செய்தாலும், ஃகுல்உ ஏற்பட்டாலும், அல்லது பால்குடி, மதம் மாறுதல் போன்றவற்றால் நிகாஹ் முறிந்தாலும், சந்தேகமான உடலுறவு ஏற்பட்டாலும் மேற்கூறப்பட்ட தலாக்குடைய இத்தாவைப்போன்று தான் இத்தா இருக்கவேண்டும்.

## மௌத்துடைய இத்தா

"உங்களிலிருந்து எவர் மனைவியரை விட்டு இறந்து விடுகிறார்களோ அத்தகைய பெண்கள் நான்கு மாதங்களும், பத்து நாட்களும், எதிர்பார்க்க வேண்டும்"*(2:234)* என்று, அல்லாஹு தஆலா குர்ஆனில் அருளியுள்ள இந்த ஆயத்து மௌத்துடைய இத்தாவுக்குரிய சட்டத்தை விளக்குகிறது.

மௌத்து என்பது, உடலை விட்டும் ரூஹ் பிரிவதாகும். அது எந்த முறையிலிருந்தாலும், ரூஹ் பிரிந்தது உறுதியானவுடன் மனைவி இத்தா இருப்பது வாஜிபாகும்.

ஒரு மனிதன் "உயிரில்லாத கல், கரடு போன்று உருவம் மாற்றப்பட்டால் மௌத்துடைய இத்தாவும், ஆடு, மாடு போன்று உயிருள்ளதாக மாற்றப்பட்டால் தலாக்குடைய இத்தாவும் இருக்கவேண்டும்." என்று இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள் என்பதாக முன்னரே குறிப்பிடப்பட்டுள்ளது.

ஒரு பெண் ரஜ்யியத்தான தலாக்குடைய இத்தாவிலிருக்கும்பொழுது அந்தக் கணவன் இறந்து விடுவானேயானால் நான்கு மாதங்களும் பத்து நாட்களும் இத்தா இருக்கவேண்டும். ரஜ்இய்யத்தான இத்தாவின் நடுவிலானாலும் அவள் நான்கு மாதங்களும் பத்து நாட்களும் இத்தா இருக்க வேண்டும். அவள் ஹைளுடையவளாக இருந்தாலும் சரி; சிறு பிள்ளையாக இருந்தாலும் சரி; கிழவியாக இருந்தாலும் சரி அவள் துக்கம் காப்பது வாஜிபாகும்.

"எந்தப் பெண்ணும் தன் கணவன் இறந்து விட்டதற்காகத் தவிர வேறு எந்த மய்யித்திற்காகவும் மூன்று தினங்களுக்கு மேல் துக்கம் அனுஷ்டிப்பது கூடாது. கணவனுக்காக நான்கு மாதங்கள் பத்து நாட்கள் துக்கம் அனுஷ்டிப்பது வாஜிபாகும்" என்று ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது.

வண்ணமுள்ள உடைகள் அலங்காரம் உண்டுபண்ணுமாகையால் அவை முரட்டுத்துணியாக இருந்தாலும் இத்தா இருப்பவள் அவற்றை அணியாமல் இருப்பது வாஜிபாகும். வண்ணமில்லாத பட்டுத்துணியை அணிவது கூடும். இரவிலும் அணியலாம்.

நறுமணம் பூசாமலிருப்பதும், பகல் வேளையில் தங்கம், வெள்ளி நகைகள், மோதிரம், காதணி போன்றவற்றை அணியாமலிருப்பதும், அது உடைக் குள்ளிருந்தாலும் சரி, வாஜிபாகும். தங்கம், வெள்ளி மூலாம் பூசப்பட்டதையும் முத்து, பவளம், இரத்தினக்கற்கள் போன்றவற்றையும், அகீக் கல் போன்றவற்றையும் அணியாமல் விட்டு விடுவது வாஜிபாகும். செம்பு, பித்தளை, தந்தம், ஆகியவற்றால் நகைகள் செய்து தங்களை அலங்கரித்துக்கொள்ளும் பழக்கத்தை உடைய ஜனங்களில் உள்ளவளாக அவள் இருந்தால் அத்தகைய நகைகளைப் போடாமலிருப்பதும் அவளுக்கு வாஜிபாகும். அவ்வாறே அவள் கருப்பாக இருந்தாலும் சுருமாப்போடாமலிருப்பதும் வாஜிபாகும். ஆனால் ஏதேனும் ஒரு தேவைக்காக போடுவதில் குற்றமில்லை. கண் வலிக்காக இரவில் சுர்மாப்போட்டு பகலில் அதனைத் துடைத்து விடலாம். துடைப்பதில் ஏதேனும் சிரமம் இருந்தால் விட்டு விடலாம்.

மருதாணி இடுவதும், தலைக்கு வாசனை எண்ணெய் போடுவதும் கூடாது. வாசமில்லாத எண்ணெய்யாக இருந்தால் உடலுக்கும் உபயோகிக்கலாம். அழுக்கு, நகம், முடி ஆகியவற்றை நீக்குவது கொண்டு சுறுசுறுப்பாக இருப்பது கூடும். வெற்றிலை போடுவதும் கூடும்.

முத்தலாக்கின் மூலம், அல்லது குல்உவின் மூலம், அல்லது ஃபஸ்கு செய்ததின் மூலம் கணவனை விட்டுப் பிரிந்தவளும் மேற்கூறப்பட்டமுறையில் துக்கம் அனுஷ்டிப்பது சுன்னத்தாகும். ரஜ்இய்யத்தான ஒரு தலாக், இரண்டு தலாக் சொல்லப்பட்டவளும் இவ்வாறே துக்கம் அனுஷ்டிக்கவேண்டும் எனினும், அலங்கரித்துக்கொள்வதால் கணவன் தன்னை மீட்டிக்கொள்வான் என்று ஆசை வைத்தால் அலங்கரிப்பது சுன்னத்து.

கணவன் இறந்து விட்டதற்காகவோ, அல்லது ஃபஸ்கின் காரணமாகவோ இத்தா இருப்பவள் கணவன் பிரியும் போது இருந்த இடத்திலேயே இருப்பது வாஜிபாகும். இத்தாமுடியும் வரை நூல் விற்பதற்கோ, அரிசி, காய்கறிகள் வாங்குவதற்கோ, விறகு கொண்டு வருவதற்கோ பகலில் வெளியில் செல்லலாம். இரவில் செல்லக் கூடாது. இரவின் முன்னேரத்திலும் செல்லக் கூடாது. ஆனால், கொட்டை நூற்பது, அல்லது பேசிக்கொண்டிருப்பது போன்ற ஏதேனும் தேவைக்காக பக்கத்து வீட்டுக்கு இரவில் சென்று வரலாம். எனினும், அவ்வாறு செல்வது ஏற்கனவே அவள் செய்து கொண்டிருந்த வழக்கமாக இருப்பதும், அவளிருக்கும் வீட்டில் அவளுடன் பேசிக்கொண்டிருப்பவர்கள் யாரும் இல்லாமலிருப்பதும் ஷர்த்தாகும். சற்று நேரம் இருந்து விட்டு தன் வீட்டிற்குத் திரும்பி விடுவதும் ஷர்த்தாகும். இரவில் தன் வீட்டிலேயே தங்கவேண்டும்.

ரஜ்இய்யத்தான தலாக் பெற்றவளும், முத்தலாக் போன்றதைப் பெற்றவளும் இத்தாவுடைய காலத்தில் அவனுடைய அனுமதியின்றி வெளியேறுவது கூடாது.

கணவன் இறந்ததற்காக இத்தா இருப்பவளாயினும், அல்லது வேறு எவ்வகையில் கணவனைப் பிரிந்தவளாயினும் இத்தா தீரும்வரை அவளுக்குத்

குடியிருப்புக்கொடுப்பது வாஜிபாகும். ஆனால், அவள் இது விஷயத்தில் பிணக்கம் ஏதும் இல்லாதவளாக இருக்கவேண்டும்.

இத்தா இருப்பவள் தன் உயிருக்கோ, தன் குழந்தைகளின் உயிருக்கோ ஏதேனும் ஆபத்து ஏற்படும் என்று பயந்தால், அல்லது பொருளுக்கு, அது அமானிதமாக இருந்தாலும், கொஞ்சமாக இருந்தாலும், ஆபத்து ஏற்படும் என்று பயந்தால், அல்லது அடுத்த வீட்டுக்காரி பெரும் தொல்லை கொடுப்பவளாக இருந்தால் வீட்டை விட்டு வெளியேறலாம். வீடு இடிந்து விடுமென்று நினைத்தாலும், நெருப்பு பிடித்தாலும், கள்ளர், வம்பர் பயமிருந்தாலும் வீட்டை விட்டு வெளியேறலாம். இத்தா இருப்பவள் தன்னைப் பிரிந்த கணவனுடன் குடியிருப்பது கூடாது. அவ்வாறே அவனும் அவளுடன் வசிப்பதும், அவள் இருக்கும் வீட்டிற்குள் நுழைவதும் கூடாது, அவன் குருடனாக இருந்தாலும் சரி. ரஜ்இய்யத்தான தலாக் உடையவளாக இருந்தாலும் சரி. ஆனால் அவளுடன் அவளுக்கு மஹ்ரமானவனோ அல்லது அவனுக்கு மஹ்ரமானவளோ இருந்தால் நுழையலாம். அவ்வாறின்றி அவள் தனித்திருக்கும் நிலையில் அவளிடம் செல்வது ஹராமான தனிமையை உண்டாக்கிவிடும். அவ்வாறு அவன் தனிமையில் நுழைந்தால் அவளால் இயன்ற மட்டும் அவனைத் தடுப்பது வாஜிபாகும்.

கணவன் அவளைப் பிரியும் நேரத்தில் அவள் பிரயாணத்திலிருந்தாலும், அல்லது அவள் மற்றவருடைய வீட்டில் இருந்தாலும், அல்லது வாடகை அல்லாத ஏதோ ஒரு வீட்டிலிருந்தாலும் தன் சொந்த வீட்டிற்குத் திரும்புவது அவளுக்கு வாஜிபாகும். அவ்வாறு அவள் இருக்க வேண்டிய வீட்டில் பாம்பு, தேள் போன்ற விஷ ஜந்துக்களோ, அல்லது ஜின், ஷைத்தான் போன்றவற்றின் தொந்தரவுகளோ இருந்தால் அதில் தங்குவது வாஜிபல்ல.

அடிமைப் பெண்ணும், — பாதி அடிமை, பாதி உரிமையுடையவளாக இருந்தாலும் சரி - உரிமைச் சீட்டெழுதப்பட்டவளும், தன் எஜமானுக்குப் பிள்ளைப் பெற்றெடுத்த (உம்மு வலத் என்ப) வளும் ஆகிய இவர்களெல்லாம் மௌத்துடைய இத்தா இரண்டு மாதங்கள் ஐந்து நாட்களும் தலாக்குடைய இத்தா இரண்டு துப்புரவுகளும் இருக்க வேண்டும். சுதந்திரமானவளாக இருந்தாலும், அடிமையாக இருந்தாலும் அவள் கர்ப்பவதியாக இருந்தால் குழந்தையைப் பெற்றெடுப்பது கொண்டு வஃபாத்துடைய இத்தாவும், தலாக்குடைய இத்தாவும் முடிவடைந்து விடும். அது உருவம் முழுமையாக உள்ள சதைக்கட்டியாகப் பிறந்தாலும் சரி. ஆனால், இரத்தக் கட்டியாக வெளியானால் அதன் மூலம் இத்தா முடிவடையாது.

இத்தா இருப்பவள் மாதங்கள் அல்லாததைக் கொண்டு (ஆனால், பிள்ளைப்பேறு, ஹைளு வருதல் ஆகியவற்றைக் கொண்டு) இத்தா முடிந்து விட்டதாக வாதாடினால் அவளுடைய சொல் சாத்தியமானதாக இருந்தால் அது ஏற்றுக்கொள்ளப்படும். அது அவளுடைய வழக்கத்திற்கு மாற்றமாக இருந்தாலும் சரி.

குழந்தை பிறப்பது கொண்டு இத்தா முடிவடைவதற்கு சாத்தியமான குறைந்த

காலம், உடலுறவு நடந்த நேரத்திலிருந்து ஆறு மாதங்களும் இரண்டு வினாடிகளுமாகும். இது முழுமையான குழந்தை பிறப்பதற்குரிய குறுகிய காலமாகும்.

"தலாக் சொல்லப்பட்டவள் மூன்று قُرُوْءٍ குரூஉகள் (மூன்று கால கட்டங்கள்) எதிர் பார்க்கவும் (இத்தா இருக்கவும்)"

وَالْمُطَلَّقَاتُ يَتَرَبَّصْنَ بِأَنفُسِهِنَّ ثَلَاثَةَ قُرُوءٍ (2:228)

என்று குர்ஆனில் கூறப்பட்டுள்ளது.

قُرُوْءٍ குரூஉ என்பதற்கு கால கட்டங்கள் என்பது பொருளாகும். மூன்று கால கட்டங்கள் என்பதற்கு ஹனஃபி மத்ஹபின் படி மூன்று முறை மாதத் தீட்டுவரும் காலமென்றும், ஷாஃபிஈ மத்ஹபின் படி மூன்று முறை (மாத தீட்டை விட்டும்) துப்புறவாக இருக்கும் காலமென்றும் வியாக்கியானப் படுத்தப்பட்டுள்ளது. எனவே ஹனஃபி மத்ஹபின் படி தலாக் சொல்லப்பட்ட பெண் முழுமையாக மூன்று மாதத்தீட்டு காலத்தை கடந்து விடவேண்டும். ஷாஃபிஈ மத்ஹபின் படி தலாக் சொல்லப்பட்ட பெண் மூன்று துப்புரவுகளைக் கடந்து விடவேண்டும். அதன்படி ஒரு பெண் துப்புரவான நேரத்தில் தலாக் சொல்லப்பட்டால் அவளின் இத்தா முடிவதற்குரிய மிகக் குறுகிய காலம் 32 நாட்களும், இரண்டு வினாடிகளுமாகும். அதன் விபரமாவது: ஒருவன் தன் மனைவியை துப்புரவின் கடைசி நேரத்தில் ஒரு வினாடி இருக்கும்போது (மாதவிடாய் ஏற்படுவதற்கு ஒரு வினாடிக்கு முன்பாக) தலாக் சொன்னான். அந்த நேரம் அவளுக்கு ஒரு துப்புரவு கிடைத்து விட்டதாக கணக்கிடப்படும். பின்பு அவளுக்கு மாதவிடாய் ஏற்படுகிறது. மாதவிடாயில் குறைந்தது ஒரு பகல் ஒரு இரவு சேர்ந்த ஒரு நாளாகும். பின்பு அவள் மாதவிடாயை விட்டும் துப்புரவாகிறாள். துப்புரவில் குறைந்த காலம் பதினைந்து நாட்களாகும். அதற்குப் பிறகு அவளுக்கு மாதவிடாய் ஏற்படுகிறது. அதில் குறைந்தது ஒரு நாளாகும். பின்பு அவள் மாதவிடாயை விட்டும் துப்புரவாகிறாள். அதில் குறைந்தகாலம் பதினைந்து நாட்களாகும். அதன் பின் அவளுக்கு மாதவிடாய் ஏற்படுகிறது. அதில் ஒரு வினாடி வந்து விட்டால் போதுமாகும். எனவே அவள் இத்தா இருக்கவேண்டிய குறுகிய காலம் 32 நாட்களும், இரண்டு வினாடிகளுமாகும்.

மாதவிடாய் நேரத்தில் தலாக் சொல்லப்பட்டால் அவளின் இத்தா முடிவதற்குரிய மிகக் குறுகிய காலம் 47 நாட்களும் ஒரு வினாடியுமாகும். அதன் விபரமாவது: ஒருவன் தன் மனைவியை மாதவிடாயின் கடைசி நேரத்தில் தலாக் சொல்கிறான். பிறகு அவள் துப்புரவாகிறாள். துப்புரவில் குறைந்த காலம் பதினைந்து நாட்களாகும். பிறகு அவளுக்கு மாதவிடாய் ஏற்படுகிறது. மாதவிடாயில் குறைந்தது ஒரு நாளாகும். பிறகு அவள் துப்புரவாகிறாள். அதில் குறைந்த காலம் பதினைந்து நாட்களாகும். பிறகு மாதவிடாய் ஏற்படுகிறது. அதில் குறைந்தது ஒரு நாளாகும். பிறகு அவள் துப்புரவாகிறாள். அதில் குறைந்தகாலம் பதினைந்து நாட்களாகும். அதன் பின் அவளுக்கு மாதவிடாய் ஏற்படுகிறது. அதில் ஒரு வினாடி வந்து விட்டால் போதுமாகும். எனவே அவள் இத்தா இருக்கவேண்டிய குறுகிய காலம் 47 நாட்களும், ஒரு வினாடியுமாகும்.

ஜினாவின் மூலம் கர்ப்பமுற்றிருப்பவளை நிகாஹ் செய்யலாம். இதில் இமாம்களிடையே எவ்விதக் கருத்து வேற்றுமையுமில்லை. ஆனால், அவள் குழந்தையைப் பெற்றெடுக்குமுன் அவளுடன் உடலுறவு கொள்வதில் கருத்து வேற்றுமை இருக்கிறது.

ஜினாவில் கர்ப்பமுற்ற ஒரு பெண்ணை அவளுடைய கணவன் தலாக் சொன்னால், அவள் குழந்தை பெறுவது கொண்டு இத்தா முடிவடையாது. மாறாக, பிள்ளைப் பேற்றின் இரத்தம் நின்ற பின் இரண்டு துப்புரவு கொண்டு அவளுடைய இத்தா முடிவடையும்.

இத்தா முடிந்துவிட்டதாக சொல்லும் பெண்ணை சத்தியம் செய்யச் சொல்வது அவசியம். ஒரு பெண்ணை ஒருவனுக்கு நிகாஹ் செய்ய அவள் சம்மதித்து பிறகு நிகாஹ் செய்து வைத்த பின் அவளுடைய முந்திய கணவனுக்குரிய இத்தா முடிவடையவில்லை என்று அவள் கூறினால் அது ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

ரஜ்இய்யத்தான தலாக் சொல்லப்பட்ட பெண்ணை இத்தாவிற்குள் மீட்டிக்கொள்ளாத கணவன் அவளிடம் கலந்துறவாடுவதால் இத்தா முறிந்து விடும்.(இத்தா பாத்திலாகிவிடும்) கலந்துறவாடும் காலம் ஆண்டுக்கணக்காக நீண்டாலும் இத்தா முடிவடையாது. எனினும், இனிமேல் அவ்வாறு செய்யக்கூடாது என்றெண்ணி உறவாடுதலை விட்டு நீங்கினால் அப்படி அவன் எண்ணும் நாளைக்கு முன் அவன் அந்தப் பெண்ணுடன் எப்பொழுது கலந்துறவாடினானோ(அவன் உடலுறவு கொள்ளாவிட்டாலும்) அன்று முதல் நடந்தேறிய நாட்களைக் கணக்கில் சேர்த்துக்கொள்ளவேண்டும். அப்பொழுது துப்புரவைக் கொண்டோ மாதங்களைக் கொண்டோ இத்தா முடிந்திருந்தால் மீட்டிக்கொள்வது கூடாது.

சாதாரணமான நேரத்தில் எவரெவர் அவளைப் பார்ப்பதும் தொடுவதும் கூடுமோ அல்லது கூடாதோ அதே போன்றுதான் அவள் இத்தா இருக்கின்ற நேரத்திலும் சட்டமாகும். இத்தாவுக்கென்று இவ்விஷயத்தில் தனிச்சட்டம் கிடையாது.

நம் நாட்டில் இத்தா இருக்கும்போது மட்டும் ஒரு திரையைப் போட்டு மறைத்துக்கொண்டு உட்காருவதும், மெதுவாகப்பேசுவதும், சின்னம்மா மக்கள், பெரியம்மா மக்கள், சிறியதந்தை மக்கள், பெரிய தந்தை மக்களுக்கு அப்பொழுது மட்டும் வெட்குவதும், மற்ற நேரங்களில் அவர்களுக்கு வெட்காமலிருப்பதும், அவர்களின் அறியாமையாகும்.

இத்தா இருப்பதின் நோக்கம், அவள் கர்ப்பவதியாக இருக்கிறாளா, இல்லையா என்பதை உறுதிப்படுத்துவதாகும். அவள் கர்ப்ப முடையவளாக இல்லையென்று உறுதியாகத் தெரிந்தாலும் இத்தா இருக்கவேண்டும்.

# உணவு, உடை கொடுப்பது

உணவு கொடுப்பதற்கு " நஃபகா " نَفَقَة என்றும், உடை கொடுப்பதற்க்கு " கிஸ்வா " كِسْوَة என்றும் கூறப்படும். சுருக்கமாக நஃபகா, கிஸ்வா கொடுத்தல் என்று சொல்லப்படும்.

மனைவி, பெற்றோர், பருவமடையாத குழந்தைகள் ஆகியோருக்கு நஃபகா கிஸ்வா கொடுப்பது பற்றிய சட்டங்களைக் கவனித்துச் செயல்படவேண்டும்.

மனைவிக்கு எவ்விதத் தங்கடமும் இல்லாதபோது உடலுறவுக்கும், மற்றுமுள்ள சுகம் பெறுவதற்கும் கணவன் விரும்பிய இடத்திற்கு அவளை அழைத்துக்கொண்டு போவதற்கும், அவள் அவனுக்கு இணங்கும்பொழுதுதான் மனைவிக்கு நஃபகா, கிஸ்வா கொடுப்பது கணவன் மீது விதியாகும். அவன் விரும்பிய இடத்திற்கு அவள் போக வேண்டுமென்பதில் போகுமிடம் எவ்வித இடையூறு மில்லாததாகவும், அச்சமற்றதாகவும் இருக்கவேண்டும். கடற் பிரயாணமாக இருந்தாலும், அது பாதுகாப்பான பயணமாக இருக்கவேண்டும். இமாம் ஷாஃபியீ (ரஹ்) அவர்களுடைய பழைய சொற்படி, திருமணம் செய்துகொள்வதினால் நஃபகா, கிஸ்வா வாஜிபாகிவிடும் என்று கூறப்பட்டுள்ளது.

உடலுறவுக்கு அவள் தன்னை இணக்கமாக்கிக் கொடுப்பதுதான் நிபந்தனையாகுமே தவிர அவன் உடலுறவு கொள்ள வேண்டுமென்பது நிபந்தனையில்லை. எனவே உடலுறவுக்குத் தகுதியில்லாத சிறு பிள்ளைக்கு நஃபகா கிடையாது.

உடலுறவுக்குத் தகுதியாயிருந்தும் அவள் விலகிக்கொண்டாலும், அல்லது எவ்வித இடையூறுமின்றி அவன் அழைத்த இடத்திற்குச் செல்லாவிட்டாலும், அவனுடன் பிணங்கிக்கொண்டாலும், அன்றைய நஃபகாவும் அக்காலத்திற்குரிய உடையும் கொடுக்கவேண்டியதில்லை. அவள் நாவினால் திட்டுவதும், மனவருத்தம் உண்டு பண்ணும் பேச்சுக்களைப் பேசுவதும் பிணக்கத்திலுள்ளதல்ல.

ரஜ்இய்யத்தான தலாக் சொல்லப்பட்டவளுக்கு அவள் இத்தா முடியும் வரை நஃபகா கொடுப்பது வாஜிபாகும். மேலும், முத்தலாக்கு கொண்டு அல்லது, குல்வு, ஃபஸ்கு கொண்டு பிரிந்து கர்ப்பவதியாக இருப்பவளுக்கும் இத்தா முடியும் வரை அவளுக்கு நஃபகா கொடுப்பது வாஜிபாகும். இதில் பிணக்கம் ஏதும் (அவனுடைய நிபந்தனைக்கு மாற்றம்) ஏற்படாமலிருக்கும்போது தான் வாஜிபாகும். குல்உ, ஃபஸ்கு கொண்டு பிரிந்தவள் கர்ப்பவதியாக இல்லாவிட்டால் நஃபகா கொடுப்பது வாஜிபல்ல.

கணவன் மரணமடைந்தால் இத்தா இருக்கும் கர்ப்பவதிக்கும், சந்தேகத்தின் உடலுறவினால் இத்தா இருப்பவளுக்கும் நஃபகா கிடையாது.

எப்படியோ தலாக் நிகழ்ந்து விட்டது. ஆனால், அவன் அதனை

அறியாமலேயே அவளுக்குச் செலவுக்குக் கொடுத்து வருகிறான். பிறகு அதனை அறிந்து கொள்ளும் பொழுது கொடுத்ததை மீட்டிக்கொள்ளக்கூடாது.

நஃபகா என்பது, அவளிருக்கும் ஊரில் மிகுதம் புழக்கத்தில் இருக்கும் தானியத்தில் ஏழையாக இருப்பவன் ஒரு சிறங்கையும், (இரு கை நிறையவுள்ள அளவு) நடுத்தரமானவன் ஒன்றரைச் சிறங்கையும், வசதி படைத்தவன் இரண்டு சிறங்கைகளும் ஒவ்வொரு நாளும் சுபுஹுடைய நேரத்தில் கொடுத்திட வேண்டும். அதற்குரிய விறகு தண்ணீர், வழக்கப்படியுள்ள கறி, மசாலா, ஊறுகாய், ஆகியவையும் கொடுத்திட வேண்டும். பால், தயிர், மோர் புழங்குகின்ற ஊரில் அதனையும் கொடுப்பது வாஜிப்.

சீப்பும், வழக்கமிருந்தால் வெற்றிலைபாக்கும் கொடுப்பது வாஜிபாகும். நறுமணப்பொருள் கொடுப்பதும், அவள் வியாதியுற்றிருந்தாலும் மருந்துச்செலவும், மருத்துவர் செலவும் கொடுப்பது வாஜிபில்லை. ஆனால் நோயுற்றிருக்கும் அந்நாளில் நஃபக்கா வாஜிபாகும். இன்னும் ஹைளுடைய, நிஃபாஸுடைய குளிப்புக்குத் தண்ணீர் கொடுப்பது வாஜிபல்ல. அவன் அவளை உடலுறவு கொண்டால் தண்ணீர் கொடுப்பது வாஜிபாகும். அவன் தூங்கும்போது அவள் அவனை உடலுறவு கொண்டால் அப்பொழுது தண்ணீர் கொடுப்பது வாஜிபல்ல.

அவளுக்குத் தகுதியான வீடு கொடுப்பது வாஜிப். அவ்வீடு வாடகை வீடாக இருந்தாலும் சரி, இரவலாக இருந்தாலும் சரி, அவள் ஒரே இடத்தில் குடியாகத் தங்கியிருக்கும் வழக்கமில்லாதவளாக இருந்தாலும் சரி. ஆனால் அந்த வீடு தனக்கும் தன் பொருளுக்கும் பாதுகாப்புள்ளதாக இருப்பதுடன் மழையையும் வெய்யிலையும் விட்டுப் பாதுகாப்புத் தருவதாகவும் இருக்கவேண்டும்.

அவளுடைய சொந்த வழக்கத்தைப் பார்க்காமல் அவளுக்கு ஆணம், நெய், பாத்திரங்கள், அதாவது: பானை, சட்டி, குடம், அடுப்பு, சாப்பிடுவதற்கும் குடிப்பதற்குமுரிய பாத்திரங்கள், உரல், உலக்கை, முறம், திருகை, அம்மி, அரிவாள், பலகை, ஆகிய அனைத்தும் வழக்கப்படி கொடுப்பது வாஜிபாகும்.

வழமைப்படி இரவில் விளக்கும், தலைக்கு எண்ணெய்யும், தானாக வேலை செய்து வழக்கமில்லாதவளாக இருந்தால் வேலைக்காரியும், அந்த வேலைக்காரிக்கு நஃபகா, கிஸ்வத்தும், மனைவிக்கு ஆண்டுக்கு இரண்டு சேலைகளும், சட்டை போடுவது வழக்கமாக இருந்தால் சட்டையும், மழைக்காலத்திலும் குளிர் காலத்திலும் போர்வையும், மிதியடி வழக்கமாக இருந்தால் அதுவும், வழக்கமிருந்தால் வாரத்தில் ஒரு தடவை இறைச்சியும் வாஜிபாகும். இறைச்சியை வெள்ளிக்கிழமை கொடுப்பது ஏற்றமாகும். ஒரு வாரத்திற்கு இரண்டு தடவை இறைச்சி சாப்பிடுவது வழக்கமாயிருந்தால் வெள்ளி, செவ்வாய் ஆகிய இரண்டு தினங்களில் அதைக் கொடுப்பது நல்லது.

இரவில் வேறு உடை மாற்றும் வழக்கமுடையவளாக இருந்தால் அதுவும், படுப்பதற்குரிய பாயும், தலையணையும், சட்டை தைக்கக் கூலியும், சட்டைத்திரியும், நாடாவும் கொடுப்பது வாஜிபாகும்.

இவனை கன்னியப்படுத்துவதற்காக அவளுக்கு எவரேனும் ஒருவர் விருந்து கொடுத்தால் அந்த நாளில் நஃபகா கொடுப்பது வாஜிபில்லை. அவளுக்கு முழுக்கு வாஜிபாவதற்கு இவன் காரணமாயிருந்தால் அதற்காகத் தண்ணீர் கொடுப்பது இவன் மீது வாஜிபாகும்.

மார்க்கத்தில் கூறிய முறைப்படி நஃபகாவும், கிஸ்வாவும், வீடும் கொடுத்து வரும் கணவன் அவளை வீட்டை விட்டு வெளியேறக்கூடாதென்று தடுக்கலாம். அவளுடைய தாய் தந்தையர் இறந்து விட்டதற்காகச் செல்வதானாலும் சரி.

ஃபர்லு ஐனாக இருக்கும் இல்மை அவளுக்கு அவன் படித்துக்கொடுக்க வில்லையானால், அதனைப் படிப்பதற்காகப் போகும் போது அவளைத் தடுக்கக்கூடாது. அவ்வாறு செல்லும் காலத்தில் நஃபகாவையும் கொடுத்து வரவேண்டும்.

கீழக்கரை, காயல்பட்டணம், அதிராம்பட்டினம் போன்ற சில ஊர்களில் (வேறு எங்கும் நடை முறையில் இல்லாத விதமாக) பெண்ணுக்கு பெண்ணின் தாய், தகப்பர் வீடு கொடுக்கும் வழக்கம் இருந்து வருகிறது. அவளுக்காகக் கொடுக்கப்பட்ட அவ்வீட்டில் அவள் குடியிருந்தால் அதிலிருந்து அவள் வெளியேறக்கூடாதென்று அவன் சொல்வதற்கு மார்க்கத்தில் இடம் கிடையாது. ஆனால், அவன் தன் வீட்டுக்கு அவளை அழைக்க, அவள் அதனை மறுத்து அவளுடைய வீட்டையே தேர்ந்தெடுத்துக்கொள்ள, அவனும் அதனை சம்மதித்தால் வீட்டை விட்டு வெறியேறக்கூடாதென்று சொல்வது கூடும்.

அவளுக்குரிய வேலைக்காரி அவளுக்குத் தேவையான வேலைகளை மட்டுமே செய்வாள். அதாவது, சமையல் செய்வது, ஹைளுடைய துணி உள்பட எல்லாத் துணிகளையும் துவைப்பது ஆகியவற்றைச் செய்வாள். அவளுடைய கணவனின் வேலைகளைச் செய்வது அவ்வேலைக்காரியின் மீது கடமையல்ல.

ஒருவன் தன் மனைவிக்காகச் சில நகைகளையும், பட்டாடைகளையும் வாங்கி அணிவித்தால் அவை அவளுக்கு சொந்தமாகிவிடமாட்டாது. பின்னால் அவை ஹத்யா என்பதிலும் இரவல் என்பதிலும் இருவருக்கும் தகராறு ஏற்பட்டால் அவன் சொல்வதையே ஏற்றுக்கொள்ளப்படும்.

அவன் அவளிடம் சுகமனுபவிக்க இடம் கொடுக்க அவளால் முடியாவிட்டால் நஃபகா கொடுப்பது விதியல்ல என்று முன்னால் கூறப்பட்டுள்ளது. ஆனால், இவனுடைய ஆண் உறுப்பு பெரியதாக இருப்பதால் துன்பம் தாங்க முடியாமல் அவள் விலகிக்கொண்டாலும், அல்லது அவளுக்கு ஏதேனும் நோய் ஏற்பட்டு, அல்லது அவளுடைய உறுப்பில் (மர்ம ஸ்தானத்தில்) காயமிருந்து அல்லது ஹைளு ஏற்பட்டு விலகிக்கொண்டாலும், அல்லது தவணை குறிப்பிடாத தன்னுடைய மஹரை அவன் உடலுறவு கொள்ளுமுன் கேட்டு தன்னைத் தடுத்துக்கொண்டாலும் இவை பிணக்கமாக ஆகாது. எனவே இவற்றால் நஃபகாவைத் தடுப்பது கூடாது.

தவணை வைக்கப்பட்ட மஹரைக்கேட்டு தவணைக்குமுன் அவள் தன்னைத் தடுத்துக்கொண்டாலும் நஃபகா விழுந்து விடும். மேலும் தவணையில்லா மஹரில் அவள் பருவமடைந்த, சுய புத்தியுள்ளவளாக இருந்து முன்னால் ஒரு தடவையேனும் உடலுறவு நடைபெற்றிருக்கும் நிலையில் இப்பொழுது மஹரைக் கேட்டுத் தன்னைத் தடுத்துக்கொண்டாலும் நஃபகா கொடுப்பது கடமையாகாது.

அவனுடைய ஆண் உறுப்பு பெருத்து நீளமாக இருக்கிறது; அவளுடைய அபம் அதற்கு சக்தி பெறாது என்பது நான்கு பெண்களுடைய சாட்சியத்தைக் கொண்டு தரிபடும். அவ்வாறு அவர்கள் அறிந்து கொள்ள கணவன் மனைவி இருவரும் தங்களுடைய மர்மஸ்தானங்களைத் திறந்திருக்கும்போது, அவனுடைய ஆண்குறி உசும்புதல் உடையதாய் இருக்கும் நிலையில் அப்பெண்கள் அவ்விருவருடைய உறுப்புகளையும் பார்ப்பது கொண்டுதான் அறிய முடியும் என்றிருந்தால் சாட்சி சொல்வதற்காகப் பார்க்கலாம். ஆனால், அவ்வுறுப்புகளைத் தவிர மற்றதைப் பார்ப்பது கூடாது.

கணவனுடைய பொருத்தமில்லாமல் அவளுடைய விருப்பத்திற்கு திக்ரு மஜ்லிஸுக்கு, அல்லது பெரியோர்களைக் காணுவதற்கு, அல்லது மஹ்ரமல்லாதவரை நோய் விசாரிப்பதற்குச் செல்வது பிணக்குமும் பாவமுமாகும். ஆனால், அவ்வாறு செல்வதை அவன் போன்றவன் பொருந்திக்கொள்வான் என்ற வழக்கமிருந்தால் போகலாம் என்று இமாமுல் ஹரமைன் அபுல் மஆலி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளதை இமாம் அத்ருஈ (ரஹ்) அவர்கள் எடுத்துக்கூறியுள்ளார்கள். இவ்வாறு செல்வதால் அவன் போன்றவனை விட்டும் உறவை முறிக்கும் ரோஷம் உண்டாகாது என்றிருந்தால் கூடும் என ஷைகு இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

கணவனின் அனுமதியின்றி வீட்டை விட்டுச் சில காரியங்களுக்காக வெளியாகலாம். வீடு இடிந்து விழுவதற்குத் தயாராக இருக்கின்ற நேரத்திலும், தன் உயிருக்கோ பொருளுக்கோ ஏதேனும் ஆபத்து ஏற்படுவதைப் பயந்த நேரத்திலும், தன்னுடைய உரிமையை காளீயிடம் சொல்லிப்பெற்றுக்கொள்வதற்காகவும், கணவன் சம்பாதிக்காதவனாக இருக்கும்பொழுது வியாபாரம் செய்து அல்லது யாரிடமாவது கேட்டு பொருளைப் பெறுவதற்காகவும் வெளியாகலாம். கணவன் ஊரிலில்லாத சமயம் ஏதேனும் நிகாஹ், இறப்பு போன்றவற்றிற்கு வழக்கப்படிப்போய் வரலாம். ஆனால் கணவன் ஊரிலிருக்கும்போது இவ்வாறு செல்வதில் பிணக்கு ஏதும் உண்டாகாமலிருக்க வேண்டும். அல்லது அவன் தடுக்காமலிருக்கவேண்டும். இந்த நிலைகளில் அவள் சென்றால் நஃபகா விழாது. இன்னும் அவனுடைய அனுமதி கொண்டு அவனுடன் பிரயாணம் செல்வதாலும் நஃபகா விழாது. அது அவளுடைய தேவைக்காக இருந்தாலும் சரி; அல்லது அவனுடைய தேவைக்காக இருந்தாலும் சரி.

அவனுடைய அனுமதியின்றி பிரயாணம் சென்றால் நஃபகா விழுந்து விடும். அது அவனுடைய தேவைக்காக இருந்தாலும் சரி. அல்லது ஹஜ்ஜுப்பிரயாணமாக இருந்தாலும் சரி, அல்லது அவளுடைய தாய் தந்தையைக் காணுவதற்காக இருந்தாலும் சரி. இன்னும் அவளுடைய தேவைக்காக அல்லது மற்றவரின் தேவைக்காக கணவனின்

அனுமதி கொண்டு அவள் தனித்தவளாகப் பிரயாணம் சென்றாலும் அதாவது, கஸ்ரு தொழ விதியாகும் தூரம் சென்றால் நஃபகா விழுந்து விடும்; கொடுப்பது கடமையில்லை.

மனைவியை விட்டு வெளியூர் சென்றிருக்கும் கணவன் அவளுக்குக் கொடுக்கவேண்டிய நஃபகா இவ்வளவுதான் என்று நியமிக்கும்படி காளீயிடம் அவள் முறையிட்டால், காளீயானவர் அவளுடைய நிகாஹ் உறுதியாய் இருப்பதையும், அவனுடைய வீட்டை விட்டும் அவள் வெளியேற வில்லை என்பதையும் உறுதிப்படுத்திய பின், நஃபகாவுக்கு அவள் தகுதியானவள்தான் என்பதற்கும், அவள் அவனிடம் எதனையும் பெறவில்லை என்பதற்கும், அவளிடம் சத்தியப்பிரமாணம் வாங்கி, அவன் அவளுக்கு ஏழையுடைய நஃபகாவாகிய ஒரு சிறங்கை நஃபகாவைக் கொடுக்கவேண்டுமென்று கட்டளையிடுவார். அவன் பணக்காரனாக இருந்தால் அதற்குரிய நஃபகாவைக் கட்டளையிடுவார்.

கணவன் தூரமான பிரயாணத்தை நாடினால் ஊரில் இருக்கும் அவனது பொருளிலிருந்து அவளுக்குரிய செலவுக்குக் கொடுக்க ஒருவரைக் குறிப்பாக நியமிக்கவேண்டும். அது சாத்தியமில்லையானால் அவளைத் தலாக் சொல்லி விடுமாறு அவனிடம் கூறவேண்டும்.

## ஃபஸ்கு فَسْخ உடைய விளக்கம்

மனைவியின் சிரமத்தை நீக்குவதற்காக நிகாஹை ஃபஸ்கு செய்வது (உடைப்பது, முறிப்பது) மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டுள்ளது. (ஆனால் ஃபஸ்கு செய்வது ஹனஃபீ மத்ஹபில் அனுமதிக்கப்படவில்லை. எனவே ஹனஃபீ மத்ஹபைச் சேர்ந்தவர்கள் ஃபஸ்கு செய்ய நாடினால் ஷாஃபிஈ மத்ஹபைத் தொடர்ந்து ஃபஸ்கு செய்ய வேண்டும்)

பருவமெய்திய அறிவுள்ள மனைவி, கணவன் உடலுறவு கொள்ளும் முன் தவணை வைக்கப்படாத தன்னுடைய மஹ்ரைக் கேட்கும் பொழுது அவன் அதனைக் கொடுக்க இயலாதவனாக இருந்தால், அல்லது குடியிருக்க வீடு கொடுக்க இயலாதவனாக, அல்லது உடையில் தாழ்ந்ததையாவது கொடுக்க இயலாதவனாக, அல்லது நஃபகாவில் தாழ்ந்ததையாவது கொடுக்க இயலாதவனாக இருந்தால் அவனுடைய நிகாஹை ஃபஸ்கு செய்வது கூடும்.

பருவமடையாத, விளக்கமில்லாத சிறிய பெண்ணுடைய நிகாஹை அப்பெண்ணின் வலீகாரன் ஃபஸ்கு செய்தல் கூடாது.

மஹ்ரில் கொஞ்சத்தை வாங்கியிருந்தால் ஃபஸ்கு செய்வது கூடுமா? கூடாதா? என்பதில் கருத்து வேறுபாடு இருக்கிறது.

சிறிய பெண்ணை வலீகாரன் திருமணம் செய்து கொடுத்தபின் அவள் பருவமடைந்து விட்டால் கணவனிடம் மஹ்ரைக் கேட்டுத் தன்னை அவனை விட்டும் தடுத்துக்கொள்ளலாம். கொடுக்காவிட்டால் ஃபஸ்கு செய்யலாம்.

பருவமடைந்தவள் மனம் ஒப்பி (நிர்பந்தமின்றி) ஒரு தடவையாவது உடலுறவு கொண்டு விட்டால் ஃபஸ்கு செய்வது கூடாது. ஆனால் ஷர்த்தின் படி ஃபஸ்கு செய்ய நாடினவளை நிர்பந்தமாய் உடலுறவு கொண்டால் ஃபஸ்கு செய்யலாம். மஹரை தவணை வைத்து எழுதி அந்தத் தவணை வந்த பிறகும் அதை அவள் கேட்டும் அவன் கொடுக்காமலிருந்தால் ஃபஸ்கு செய்வது கூடும். தீவிரமாய் ஃபஸ்கு செய்து விடவேண்டும் என்ற சட்டத்தை அவள் அறிந்திருந்தும் அவள் அதைச் செய்யாமல் பிற்படுத்தினால் ஃபஸ்கு செய்தல் கூடாது. ஆனால் தீவிரமாய் ஃபஸ்கு செய்துவிடவேண்டும் என்ற சட்டம் தனக்கு தெரியாதென்று வழக்காடி அதுவும் உண்மையாயிருக்க சாத்தியமானால் அவள் ஃபஸ்கு செய்யலாம்.

கணவன் நஃபகா கொடுக்க இயலாதவன் என்பதற்கு, ஹலாலான முறையில் சம்பாதித்துக்கொடுக்கமுடியாதவன் என்பது கருத்தாகும். ஹராமான முறையில் சம்பாதிப்பவனும் இயலாமை உடையவனாகத்தான் கருதப்படுவான். எனவே, அதன் காரணத்தாலும் ஃபஸ்கு செய்யலாம்.

கணவனுடைய இல்லாத்தன்மை என்பது பல விதங்களில் தரிபடும். அவனுக்கு கஸ்ரு தொழுகையுடைய தொலைவில் பொருளிருந்து, அது கைவசம் இல்லாதிருப்பதாலும் (இதில் காளீயானவர் ஒரு தவணையை ஏற்படுத்தி, அதற்குள் அவன் கொண்டு வந்து தருவதாகச் சொன்னால் அப்பொழுது இயலாமை நீங்கிவிடும்) அல்லது அந்தத் தவணையுடைய நேரத்தில் அல்லது அதற்குப் பிறகு இவனுக்கு ஒருவனிடமிருந்து கடன் வர வேண்டியதிருப்பதாலும், அல்லது ஏழை ஒருவனிடமிருந்து இவனுக்குக் கடன் தொகை வரவேண்டியதிருந்தும் அதனைப் பெற்றுக்கொள்ள முடியாமலிருப்பதாலும் இல்லாமை உறுதியாகும். ஆனால், சென்று விட்ட காலத்தின் நஃபகாவிற்காக ஃபஸ்கு செய்வது கூடாது.

காணாமல் போய்விட்ட கணவனுடைய பொருட்களில் சில இவளிடம் அமானிதமாக இருக்கிறது. அவன் அவளுக்கு மஹர், நஃபகா, கிஸ்வா கொடுக்க வேண்டியதற்காக காளீயிடம் அறிவிக்காமல் மனைவி தானாகவே அப்பொருட்களை எடுத்துக்கொண்டபின் மஹர், நஃபகா, கிஸ்வாவுக்கு அந்தப் பொருட்கள் ஈடாக வில்லையானால், மீதிக்காக ஃபஸ்கு செய்வது கூடுமா? கூடாதா? என்று கேட்கப்பட்ட போது, காளீ ஏதாவது, (பிரதி பிரயோஜனம்) வாங்காமல் இதற்கு அனுமதி கொடுக்கமாட்டார் என்று தெரிந்தால் அவள் தானாகவே அப்பொருட்களை எடுத்துக்கொள்ளலாம். மீதி வரவேண்டியதற்காக அவன் ஏழை என்பதாகக் கூறி ஃபஸ்கை அவள் விரும்பினால் அவனுக்குப் பொருள் ஏதும் இந்த ஊரில் இருக்கிறதா? இல்லையா? என்பது எவருக்கும் தெரியாமலிருந்து, தற்சமயம் எவ்விதப் பொருளும் இல்லையென்பது உறுதியாகி, அவளிடமும், நஃபகாவிற்குரியதைக் கொடுத்துப் போகவில்லை என்பதற்கும் அவள் சத்தியம் செய்தால் ஃபஸ்கு செய்வது ஆகும் என்று இமாம்களில் சிலர் பதிலளித்தார்கள். அவனுக்குப் பொருள் ஏதேனும் இருந்ததாகத் தெரிந்தால், அது இப்பொழுது இல்லை என்பதற்குச் சாட்சி இருக்கவேண்டும் என்றும் கூறினார்கள்.

வசதியுள்ளவன் ஊரிலிருந்தாலும், அல்லது (ஊரிலோ அல்லது வெளியூரிலோ) மறைவாக இருந்தாலும், நஃபகா கொடுக்காமலிருப்பதைக் கொண்டு ஃபஸ்கு கிடையாது. எனினும் மறைவாக இருப்பவனின் தொடர்பு அற்றுப்போகாமல் இருந்தால் தான் ஃபஸ்கு கிடையாது. ஆனால் மறைவாக இருப்பவனின் தொடர்பு வரம்பாக அற்றுப்போய் இருப்பதுடன் உள்ளூரில் அவனுக்கு எவ்விதப் பொருளும் இல்லை யென்பதும் உறுதியானால் அவனை ஃபஸ்கு செய்வது கூடும்.

அவன் வசதியில்லாதவன் என்று காளீயிடம் சாட்சி சொல்வதால் அல்லது அவனுடைய விண்ணப்பத்தால் வசதியற்றவன் என்பது தரிபடுவதற்கு முன்னால்தான் ஃபஸ்கு கூடாது என்பது உண்டாகும். ஆனால், வசதியில்லாதவன் என்று சாட்சியத்தால் உறுதியாகிவிட்டால் ஃபஸ்கு கூடும்.

இந்தப் பாடத்தில் உணவு, உடை, இருப்பிடம், மஹர், ஆகியவை கொடுக்க முடியாத வசதியற்றவனுடைய நிகாஹை ஃபஸ்கு செய்வது ஆகும் என்று கூறப்பட்டிருக்கிறது; எனினும் அவன் அவளிடம் உடலுறவு கொள்ளாமலிருப்பதால் சிற்றின்ப வேட்கையால் அவளுடைய கற்பு இழக்கப்பட்டு விடுமென்று உறுதியாக பயப்படும் நிலை ஏற்பட்டால் அவள் அவனை ஃபஸ்கு செய்யலாமா செய்யக்கூடாதாவென்பதைப்பற்றி ஷாஃபியீ உலமாக்கள் ஃபிக்ஹுடைய கிதாபுகளில் திட்டவட்டமான சட்டம் என்னவென்பதைப் பற்றி எழுதாவிட்டாலும், ஹன்பலீ மத்ஹபைச் சேர்ந்த ஃபிக்ஹு கிதாபிலும், தஃப்ஸீர் "மதாரிகுத்தன்ஸீலிலும்", ஸய்யிதுனா அப்துல் காதிர் அல் ஜீலானி அல் ஹன்பலீ (ரஹ்) அவர்கள் தங்களுடைய غُنْيَةُ الطَّالِبِيْنَ (குன்யத்துத் தாலிபீன்) என்ற நூலிலும் اِيْلَاءُ (ஈலாவு) உடைய பாடத்தில் ஒருவன் நான்கு மாதங்களுக்கு மேல் உடலுறவு கொள்வதில்லை என்று சத்தியம் செய்தால் அவனைத் தலாக் சொல்லும்படி அவனிடம் கேட்பது கூடும் என்று ஹன்பலீ மத்ஹபைச் சேர்ந்த இமாம்கள் ஏகோபித்து கூறியிருப்பதாக எழுதியுள்ளார்கள். அப்படி அவன் தலாக் சொல்லாவிட்டால் அவள் ஃபஸ்கு செய்து விடலாம் என்றும் ஷைகு ஜீலானி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். (ஆனால் இதனைச் சிலர் குறை கூறியுள்ளார்கள்.)

இந்த ஃபஸ்குடைய பாடத்தில் கணவன் காணாமல் போய்விட்ட விஷயத்தில் மாலிகீ மத்ஹபையும், பத்தினித் தனத்துடைய விஷயத்தில் ஹன்பலீ மத்ஹபையும் பின்பற்றி சட்டம் சொல்லப்பட்டதாகிறது மார்க்கத்தில் சிரமம் இல்லை என்பதை எடுத்துக்காட்டுவதற்காகவும், நிர்பந்தமான நேரத்தில் மற்றொரு மத்ஹபிலுள்ள சட்டத்தைத் தனக்குச் சாதகமாக பயன்படுத்திக்கொள்ளலாம் என்பதற்காகவும் தான். இது சம்பந்தமாக இறைவன் திருமறையில்:

وَمَا جَعَلَ عَلَيْكُمْ فِي الدِّيْنِ مِنْ حَرَجٍ

"இந்த மார்க்கத்தில் (அல்லாஹ்) உங்களுக்கு எந்தவிதமான வருத்தத்தையும் ஏற்படுத்தவில்லை" (22:78) என்று கூறி இருப்பதை ஆதாரமாக வைத்து ஒரு மத்ஹபைச் சேர்ந்தவர் ஒரு நிர்பந்தமான நேரத்தில் மேலே கூறப்பட்ட விதமாக வேறு ஒரு

மத்ஹபுக்கு மாறி, தனது தேவையை நிறைவேற்றிக்கொள்ளலாமென்று இமாம்கள் ஏகோபித்து அனுமதித்திருக்கிறார்கள். இதை அடிப்படையாக வைத்துத்தான் வலி முஜ்பிரை இழக்கப்பட்ட நேரத்தில் பருவமடையாத பெண்ணைத் திருமணம் செய்து கொடுப்பதற்காக ஷாஃபியீ மத்ஹபைச் சேர்ந்த ஒருவர் ஹனஃபி மத்ஹபுக்கு மாறி அந்தக்காரியத்தை நிறைவேற்றிக்கொள்ளலாமென்று இமாம்கள் ஃபத்வா செய்திருக்கிறார்கள். மேலும் மக்கா ஹரம் ஷரீஃபில் கஃஅபாவைத் தவாஃபு செய்யும்பொழுது ஷாஃபிஈ மத்ஹபின் படி, தொட்டால் ஒளு முறியக்கூடிய பெண்களின் கை, கால்கள் ஆண்களின் மீது படாமல் தவாஃபு செய்வது என்பது அனேகமாக முடியாத செயலாக இருக்கிறது. அது போல் தொழக்கூடிய இடங்களிலும், தொழக்கூடிய மனிதர்களின் ஆடைகளின் மீதும் புறா, பறவை போன்றவற்றின் எச்சம் விழக்கூடிய வாய்ப்பு மிக அதிகம். இந்த நிலைகளில் எல்லாம் அந்த வணக்கங்கள் ஷாஃபியி மத்ஹபின் படி நிறைவேறக்கூடிய தன்று. எனவே மேற்படி வணக்கங்களில் ஈடுபடும்பொழுது ஒரு ஷாஃபியியானவர் ஹனஃபிமத்ஹபைத் தொடர்ந்து தான் அதை நிறைவேற்றும் எண்ணத்தைக் கொள்ளவேண்டும். இதைப்போலவே ஃபஸ்கு செய்யும் காரியத்திலும் இன்னும் அனேக காரியங்களிலும் ஹனஃபி மத்ஹபைச் சேர்ந்தவர்கள் ஷாஃபியி மத்ஹபைத் தொடர்ந்து செய்யவேண்டியவர்களாக இருக்கிறார்கள்.

கணவன் நான்கு மாதங்களுக்கு மேல் ஏதாவது ஒரு காரணத்தினால் (அல்லது எந்தக் காரணமு மில்லாமல்) மனைவியுடன் உடலுறவு கொள்ளவில்லையானால் சிற்றின்ப வேட்கை மேலீட்டால் அவளுடைய கற்புக்கு சிதைவு ஏற்படுவதற்குள்ள வாய்ப்பு ஏற்பட்டு விடுமென்ற கருத்தில் ஹன்பலி மத்ஹபில் ஃபஸ்கைத் தேடிக்கொள்ளும் உரிமை அவளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. திருக்குர்ஆனில் வரும் ஒரு திருவசனம் இதற்கு ஆதாரமாக எடுக்கப்படுகிறது. அதாவது:

لِلَّذِيْنَ يُؤْلُوْنَ مِنْ نِّسَآئِهِمْ تَرَبُّصُ اَرْبَعَةِ اَشْهُرٍ

"தங்கள் மனைவிகளுடன் சேருவதில்லையென்று சத்தியம் செய்து கொண்டவர்களுக்கு நான்கு மாதத்தவணையுண்டு" (2:226)இந்த ஆயத்துக்கு அனுசரணையாக செய்யிதுனா உமர் (ரலி) அவர்கள் நேரடியாகக் கண்டு கொண்ட ஒரு நிகழ்ச்சியும் மேற்கோளாக எடுத்துக்கூறப்படுகிறது. அதாவது ஹஜரத் உமருப்னுல் கத்தாப் (ரலி) அவர்கள் வழக்கம் போல் ஒரு நாளிரவு மாறு வேடத்தில் ஊரைச்சுற்றி வந்து கொண்டிருந்தபொழுது, தனது கணவனை நினைத்து ஒரு மாது ஏங்கித்தவித்தவளாக கீழ்க்காணும் பாடலைப்பாடிக்கொண்டிருந்தாள். அதாவது;

اَلَا طَالَ هٰذَا اللَّيْلُ وَازْوَرَّ جَانِبُهٗ
وَاَرَّقَنِيْ اَنْ لَا خَلِيْلَ اُلَاعِبُهٗ
فَوَاللّٰهِ لَوْلَا اللّٰهُ لَا شَيْئَ فَوْقَهٗ
لَزُعْزِعَ مِنْ هٰذَا السَّرِيْرِ جَوَانِبُهٗ

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

مَعَافَةُ رَبِّيْ وَالْحَيَاءُ يَصُدُّنِيْ ؛
وَإِكْرَامُ بَعْلِيْ أَنْ تُنَالَ مَرَاكِبُهُ ؛

இந்த இரவு எவ்வளவுதான் நீண்டு கொண்டிருக்கும். நான் கொஞ்சிக்குலாவக்கூடிய என் கணவனை நினைத்து எனக்குத்தூக்கம் வரவில்லையே. இறையச்சமும், நாணமும், என் கணவரின் மீது நான் கொண்டிருக்கும் மரியாதையும்தான் என்னைத்தடுத்துக் கொண்டிருக்கின்றன.

அந்தப் பெண்ணின் இந்தப்பாடலைக் கேட்ட கலீஃபா அவர்கள் பொழுது புலர்ந்த பின் அந்தப் பெண்ணின் குறையென்னவென்பதைக் கேட்டு வரும்படி ஒருவரை அனுப்பிவைத்தார்கள். யுத்தத்துக்காகச் சென்ற தன் கணவன் நீண்ட நாளாக மீண்டு வராததால் ஏக்கமுற்றிருக்கிறாள் என்று கலீஃபா அவர்களுக்குக் கூறப்பட்டது. உடனே கலீஃபா அவர்கள் சில பெண்களை வரும்படிச் சொல்லியனுப்பினார்கள். ஒரு பெண் தன் கணவனைப் பிரிந்து (அவனுடன் உடலுறவு கொள்ளாமல்) எவ்வளவு காலம் பொறுத்துக்கொண்டிருப்பாள் என்று அந்தப் பெண்களிடத்தில் கேட்டுவிட்டு ஒரு மாதம் வரையிலும் பொறுத்துக்கொள்ளுவாளா வென்று கலீஃபா அவர்களே அவர்களிடத்தில் கேட்டார்கள். ஆம் என்று அந்தப் பெண்கள் கூறினர். இரண்டு மாதங்கள் பொறுத்துக்கொள்வார்களா வென்று மீண்டும் கேட்க, ஆம் பொறுத்துக்கொள்வார்கள் என்று மீண்டும் அந்தப்பெண்கள் கூறினர். மூன்று மாதங்கள் பொறுத்துக் கொள்வார்களா வென்று மீண்டும் கலீஃபா அவர்கள் கேட்க ஆம் பொறுத்துக்கொள்வார்கள் என்று அந்தப் பெண்கள் கூறிவிட்டு ஆனால் அந்தப் பொறுமை மிகக் குறைந்ததாகத்தான் இருக்கும் என்று கூறினர். நான்கு மாதங்கள் வரை பொறுத்துக்கொள்வார்களா வென்று மீண்டும் அந்தப் பெண்களை நோக்கி கலீஃபா அவர்கள் கேட்க பொறுத்துக்கொள்வார்கள். ஆனால், அதுதான் (நான்குமாதம்தான்) பொறுமையின் எல்லையாகவும் இருக்குமென்று அந்தப் பெண்கள் பதிலளித்தனர். உடனே கலீஃபா அவர்கள் வெளிநாடுகளுக்கு யுத்தத்திற்காகச் சென்றிருக்கும் படைத்தளபதிகளுக்குக் கடிதம் எழுதினார்கள். நான்கு மாதத்துக்கு மேல் தங்கள் மனைவியரை விட்டும் பிரிந்திருக்கும் படை வீரர்களை உடனே தங்கள் தங்கள் ஊர்களுக்கு திருப்பியனுப்பும்படியாக அந்தக்கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்கள். இந்த சம்பவங்களையெல்லாம் ஆதாரமாக வைத்துதான் ஹன்பலீ மத்ஹபில் நான்கு மாதங்களுக்கு மேல் தனது மனைவியுடன் உடலுறவு கொள்ளாமலிருக்கும் கணவரை விட்டும் நீங்கிக்கொள்வதற்காக ஃபஸ்கைத் தேடலாமென்று கூறப்பட்டுள்ளது.

ஃபஸ்கு செய்வதற்குரிய மேற்கூறப்பட்ட காரணங்கள் நிரப்பமாக இருந்தால் காளீயானவர் கணவனுக்கு மூன்று நாள் தவணை கொடுப்பார். நான்காம் நாள் ஃபஸ்கு செய்துவிடுவார். அதாவது கணவன் மனைவி இருவரின் பெயர்களையும் குறிப்பிட்டு இவ்விருவருக்குமிடையில் உள்ள நிகாஹைப் பிரித்து விட்டேன் என்று சொல்வார். அல்லது காளீயின் அனுமதியின் பேரில் அவளே, எனக்கும் என்கணவனுக்கும் இடையிலுள்ள நிகாஹை ஃபஸ்கு செய்துவிட்டேன் என்று சொல்லுவாள்.

மேற்கூறப்பட்ட நான்காம் நாளில் ஃபஸ்கு செய்வதற்கு முன், அவன் அன்றைய நஃபகாவைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டால் ஃபஸ்கு கூடாது. முன்னதாக அவன் கொடுக்கவேண்டிய நஃபகாவெல்லாம் அவன் மீது கடனாகி விட்டதால், அவன் வசதி உள்ளவனாக இருந்தால் அவனிடமிருந்து அதனை வசூல் செய்வது கூடும். பிரத்தியேகமான ஒரு மனிதன் புண்ணியத்தை நாடி அவனுக்காக அவளுக்கு நஃபகா கொடுத்தால் அதனை அவள் ஏற்றுக்கொள்ளலாம். ஆனால் ஏற்றுக்கொள்வது வாஜிபில்லை.

ஒருவன் தவணை நாட்களில் இரண்டு தினங்கள் நஃபகா கொடுக்காமல் இருந்து, மூன்றாம் நாள் நஃபகா கொடுத்து, நான்காம் நாள் கொடுக்க இயலவில்லையானால், கொடுத்த அந்த இரண்டு தினங்களைக் கணக்கில் சேர்த்து ஐந்தாம் நாள் சுப்ஹு நேரத்தில் ஃபஸ்கு செய்திடுவான்.

கணவனுடைய ஏழ்மையைப் பொருந்திக்கொண்டிருக்கும் நாட்களிலும், ஃபஸ்குக்கு தவணை வைத்திருக்கும் நாட்களிலும் அவளுக்குரிய நஃபகாவைக் கேட்பதற்காக, அல்லது சம்பாதிப்பதற்காகப் பகலில் வீட்டை விட்டு அவள் வெளியாகலாம். அவளுக்கு வீட்டிலேயே தொழில் செய்ய இடமிருந்தாலும், அவள் பாக்கிய வாட்டியாக இருந்தாலும் சரி, அவன் அவளைத் தடுக்கக்கூடாது.

திருமணம் முடிந்து உடலுறவுக்குத் தயார் செய்யும் முன்னதாக கணவன் காணாமல் போய்விட்டால் ஃபஸ்கு கிடையாது. மாலிகீ மத்ஹபில் தன்னைத் தயார் செய்து கொடுத்தவளும், தயார் செய்து கொடுக்காதவளும் சமம்தான். அவனிடமிருந்து நஃபகாவைப்பெறுவது சிரமமாக இருந்தால், அவனைப்பற்றி ஒரு மாதம் ஆராயவேண்டும். அந்த ஒரு மாதத்தவணைக்குள் அவனைப்பற்றி தகவல் ஏதும் தெரியவில்லையானால் ஃபஸ்கு செய்துவிடலாம்.

ஒருவன் தனக்கும், தன்னுடைய மனைவி, சிறுகுழந்தைகள், அடிமை, மனைவியின் வேலைக்காரி ஆகியோருக்கும் அன்றைய ஓரிரவு பகலுக்குக் கொடுத்தது போக மீதியானால், அவன் கைத்தொழில் செய்து சம்பாதிப்பவனாக இருந்தாலும் சரி, வசதியற்றவர்களான அவனுடைய தாய், தந்தை, பாட்டன், பாட்டி, பிள்ளை, பிள்ளையுடைய பிள்ளை ஆகியோருக்குப்போதுமான அளவு உணவு,உடை அளிப்பது வாஜிபாகும். இவ்வாறே ஒரு பெண்ணின் மீதும் கடமையாகும். அவர்கள் வேறு மார்க்கம் உடையவர்களாக இருந்தாலும் சரி. ஆனால் அவர்கள் ஹர்பீ காஃபிராக இருந்தாலும், அல்லது மதம் மாறிய முர்த்தத்தாக இருந்தாலும், திருமணம் செய்யப்பட்டவர்களாக இருந்து விபச்சாரம் புரிபவர்களாக இருந்தாலும், தொழுகையைப் புறக்கணிப்பவர்களாக இருந்தாலும் கொடுப்பது வாஜிபாகாது.

தாயும் மகளும் நிகாஹ் செய்து கொள்வதின் மூலம் தங்களுக்குரிய நஃபகாவை உண்டாக்கிக்கொள்ள முடியும் என்றிருந்தாலும் அதனைக் கவனிக்காமல் இவன் கொடுக்கவேண்டியதைச் கொடுத்துவரவேண்டும். ஆனால், அவர்கள் நிகாஹ் செய்து கொண்டால் இவனுடைய கடமை விழுந்து விடும்.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

உறவினர்களுக்குக் கொடுக்கவேண்டிய வாஜிபான நஃபகா சில சமயங்களில் தவறிவிட்டால் அது அவன் மீது கடனாக ஆகிவிடாது. எனினும், இவன் காணாமல் போயிருந்த நேரத்தில் காளியானவர் கடன் பெற்று அதனைக் கொடுத்திருந்தாலும் அவன் கொடுக்கமுடியாதென்று மறுத்த நேரத்தில் அவர் கடன்வாங்கிக் கொடுத்திருந்தாலும் அதனை அவன் கொடுத்தாக வேண்டும்.

ஒருவனுக்கு தாய், தந்தை, மகன் ஆகியோர் இருந்தால் முதலில் சிறிய மகனுக்கு, பிறகு தாய்க்கு, பிறகு தந்தைக்கு, பிறகு பெரிய மகனுக்கு என்ற வரிசைப்படி நஃபகா கொடுக்கவேண்டும்.

தாயாகிறவள் தான் பெற்ற பிள்ளைக்கு ஆரம்பத்திலுள்ள கடுப்புப் பாலைச் சிறிது நேரத்திற்கு அல்லது மூன்று தினங்களுக்கு அல்லது ஏழு தினங்களுக்கு கொடுப்பது வாஜிபாகும். ஏழு தினங்களுக்குப்பின் அந்தத் தாயைத் தவிர அல்லது வேறு ஒரு பெண்ணைத் தவிர வேறு எப்பெண்ணையும் காணப்படவில்லையானால் காணப்பட்ட அப்பெண்ணின் மீது பாலூட்டுதல் வாஜிபாகும். அவளுக்குரிய பாலூட்டும் கூலியை அக்குழந்தைக்கு நஃபகா எவர் மீது விதியாகுமோ அவர் கொடுத்திட வேண்டும். தாயும் மற்றொருத்தியும் இருக்கும் நேரத்தில் தாயைமட்டும் பால் கொடுக்கும்படி நிர்பந்திக்கக்கூடாது. அவள் தந்தையுடைய நிகாஹில் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி.

தாயானவள் தன் குழந்தைக்கு கூலியைப்பெற்று பால் கொடுக்க விரும்பினாலும் அவளைத் தகப்பன் தடுக்கக் கூடாது. ஆனால், ஊர் வழக்கத்திற்கு அதிகமாகக் கூலி கேட்டால் தடுக்கலாம். வழக்கத்திலுள்ள கூலியைக்கொடுப்பது தந்தையின் மீது வாஜிப். இது, கூலி இல்லாமல் பால் கொடுப்பவள் கிடைக்காவிட்டால் தான்.

ஒருவனுக்கு தாயும் தந்தையுமிருந்தால் அவனுக்கு நஃபகா கொடுப்பது தந்தை மீது விதியாகும். அவனுக்கு தந்தையும் மகனும் இருந்தால் அவனுடைய நஃபகா மகன் மீது விதியாகும். மகன் சம்பாதிப்பவனாக இருப்பதால் அவன் மீது விதியாகிறது. பருவமடைந்த குழந்தையாக இருந்தால் தாய் தந்தை இருவரின் மீதும் விதியாகும் என்று ஒரு சொல்லில் கூறப்பட்டுள்ளது.

ஒருவனுக்கு தாய், தந்தை, மனைவி மக்கள் அனைவரும் இருக்கின்றனர், அவர்கள் அனைவரையும் ஆதரிக்கும் அளவு வசதி உள்ளவனாக அவன் இல்லையானால் முதலில் தன்னையும் பிறகு மனைவியையும் பிறகு மற்றவர்களையும் கவனிக்க வேண்டும்.

## குழந்தை பராமரிப்பு பற்றிய விபரம்

"தாய்மார்கள் தங்களுடைய குழந்தைகளுக்கு முழுமையான இரண்டு ஆண்டுகள் பால் கொடுக்கவேண்டும். இது, பால் கொடுப்பதைப் பூர்த்தியாக்க விரும்பியவருக்காகும். (பால் கொடுக்கும் தாய்மார்களாகிய) அவர்களுக்கு நியாயமான

முறையில் உணவளிப்பதும், உடையளிப்பதும் குழந்தையின் தந்தையின் மீது கடமையாகும்." என்று அல்லாஹ் தஆலா குர்ஆனில் கூறியுள்ளான்.( 2:233).

பிரித்தறியும் ஆற்றல் உண்டாகும் வரை மதலைகளை வளர்க்கின்ற முதல் பொறுப்பு வேறு கணவனைத் திருமணம் செய்துகொள்ளாத தாய்க்கு உரியதாகும். பிறகு அவளுடைய தாய்மார்கள், பிறகு அக்குழந்தையின் தந்தை, பிறகு அவனுடைய தாய்மார்களுக்கு உரியதாகும். பிறகு குழந்தையின் சகோதரி, பிறகு தாயுடன் பிறந்தவள். பிறகு சகோதரியின் மகள், பிறகு சகோதரரின் மகள், பிறகு மாமி (தந்தையின் சகோதரி) ஆகிய வரிசை முறையாகும்.

தாயும் தந்தையும் நிகாஹை விட்டுப்பிரிந்து விட்டால், குழந்தை பிரித்தறியும் வயதை அடைந்ததாக இருந்தால், அவ்விருவரில் அக்குழந்தை யாரைத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறதோ அவர்களிடம் இருக்கும்.

தகப்பனைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளும் பெண் குழந்தைகளைத் தாயிடம் போகாமல் அவன் தடுக்கலாம். ஆனால் (ஆணாகிய அல்லது பெண்ணாகிய) அக்குழந்தைகளைப் பார்க்கக்கூடாதெனத் தாயைத் தடுக்கக்கூடாது. குழந்தைகளுக்கு நோய் ஏற்பட்டால் தந்தையின் இடத்தில் வைத்தே தாய் கவனித்துக்கொள்ளவேண்டும். இதனை அவன் பொருந்திக்கொண்டால்தான். இல்லாவிட்டால் தாயிடம் இருக்கவேண்டும்.

ஆண் குழந்தை தாயைத் தேர்ந்தெடுத்துக்கொண்டால் இரவில் அவளிடமும் பகலில் தந்தையிடமும் இருக்கும் பெண்குழந்தை தாயைத் தேர்ந்தெடுத்துக்கொண்டால் எப்பொழுதும் தாயிடமே இருக்கும். வழக்கப்படி தந்தை சென்று அக்குழந்தையைப் பார்த்து வரலாம். அவனிடம் வருமாறு அழைக்கக்கூடாது. தாய், தந்தை இருவரில் எவரையும் அக்குழந்தை தேர்ந்தெடுக்கவில்லையானாலும் தாய் தான் அதனை வளர்ப்பதற்கு ஏற்றமானவள்.

இரண்டு ஆண்டுகள் நிரப்பமாகும் முன் பால் குடியை முறிக்க விரும்பினால் இரண்டு பேரும் பொருந்திக்கொண்டால் தான் முறிக்கலாம். ஒருவருடைய விருப்பத்துக்கு மட்டும் முறிக்கக் கூடாது. இரண்டு ஆண்டுகளுக்குப்பின் எவருடைய விருப்பத்திற்கும் முறிக்கலாம். தங்கடம் ஏதும் ஏற்படாதென்றிருந்தால் இரண்டு ஆண்டுகளை விட அதிகமாகப் பால் கொடுக்கலாம். ஆனால், இரண்டு ஆண்டுகள் மட்டும் கொடுப்பது சுன்னத்தாகும். தங்கடத்திற்காகக் கூடுதலாக்கலாம்.

## அடிமைகளையும் மிருகங்களையும் பராமரிப்பது

அடிமைகளுக்கு உணவும் உடையும் கொடுப்பது எஜமானின் மீது வாஜிபாகும். அவன் அதிகமாகச்சாப்பிடுகிறவனாக இருந்தாலும் சரி. உரிமைச்சீட்டு எழுதிக்கொடுக்கப்பட்ட(முகாதப்) அடிமையாக இருந்தால் கொடுப்பது வாஜிபில்லை.

சில தினங்கள் அடிமைகளுக்குச் செலவுக்குக் கொடுக்காமலிருந்தால் அது

எஜமானின் மீது கடனாக ஆகாது. மனைவி அல்லாத நெருங்கிய உறவினர்களுக்குக் கொடுக்காவிட்டால் நஃபகா விழுந்து விடுவது போல் இதுவும் விழுந்து விடும்.

அந்த ஊரில் இவன் போன்ற அடிமைகளுக்கு வழக்கமாக்கப்பட்டிருப்பது போல் அவ்ரத்தை (மறைக்கவேண்டிய பகுதியை) மட்டும் மறைக்கும் உடை போதாது. அது அவனுக்கு சிரமமில்லாமல் இருந்தாலும் சரி. ஆனால், அவ்வூரில் எல்லோரும் அவ்விதம் அணிந்தால் அவனுக்கும் அது போதுமானது.

அடிமையின் நோய்க்கு மருந்து கொடுப்பதும், மருத்துவரின் கூலி கொடுப்பதும் எஜமானின் மீது வாஜிபாகும். அடிமை சம்பாதிப்பது அனைத்தும் எஜமானுக்கே உரியன. எஜமான் சாப்பிடும் சுவையான உணவைப் போன்றும், அணியும் மிருதுவான உடைகளைப்போன்றும் அடிமைக்கும் கொடுப்பது சுன்னத்தாகும். அடிமையைச் சேர்த்துவைத்துக்கொண்டு சாப்பிடுவது சிறந்ததாகும்.

அடிமைகளுக்கும் மிருகங்களுக்கும் சக்திக்கு மீறிய வேலைகளைக் கொடுப்பது ஹராமாகும். அடிமை அந்த வேலையைப் பொருந்திக்கொண்டாலும் ஹராம்தான். ஏனெனில், தனக்கு இடையூறு செய்யும் வேலையைத் தானே ஏற்படுத்திக்கொள்வது எல்லோரின் மீதும் ஹராமாகும். "எந்த ஆத்மாவிற்கும் அதனுடைய சக்திக்குரியதைத் தவிர அல்லாஹ் சிரமம் கொடுப்பதில்லை" என்று அல்லாஹுதஆலா குர்ஆனில் கூறியுள்ளான். (2:286)

ஒருவன் தன் அடிமைக்கு சக்திக்கு மீறிய வேலையைக் கொடுத்துக் கொண்டிருந்தால், காழியானவர் அவ்வடிமையை விற்று அத்தொகையை அந்த எஜமானிடம் கொடுத்திடுவார். விற்பது தான் சிறந்த வழி என்றிருந்தால் விற்றிடுவார். இல்லாவிடில் அவனைக் கூலி வேலை செய்யச் சொல்லி அக்கூலியை அந்த எஜமானுக்குக் கொடுக்கச் செய்திடுவார்.

அடிமையிடம் எப்பொழுதாவது சில நேரங்களில் கடினமான வேலை வாங்குவது கூடும். அடிமை திருமணம் செய்தவனாக இருந்தால் மதிய வேளைகளில் அவனுக்கு ஓய்வு கொடுத்து மனைவியுடன் அவன் இருக்க வசதி செய்து கொடுக்கவேண்டும். சுன்னத்தான தொழுகை, நோன்பு ஆகியவற்றை விட்டும் அடிமையை விலக்குவது எஜமானுக்கு ஆகும். ஏனெனில் எஜமானுக்குப் பணிவிடை செய்வது வாஜிப். ஆகையால் வாஜிபுக்காக சுன்னத்தை விடுவது கூடும் என்று பொதுப்படையாக ஆலிம்கள் கூறுவது உண்மைதான். எனினும், எஜமான் தனக்குரிய பணிவிடையைச் செய்வதை விட்டும் அடிமையை நீக்கி, அவனை அல்லாஹ்விற்குமுன் பணிய வைப்பானாகில் இவனுக்கு அல்லாஹ்வுடைய பொருத்தமும் அடிமை செய்த வணக்கத்தின் நன்மை போன்றதும் கிடைத்து விடக்கூடும் என்று ஞானவான்களான உலமாக்கள் கூறியுள்ளனர்.

சங்கை செய்யப்படும் பிராணிகளுக்கு, அது வேட்டை நாயாக இருப்பினும் தீனியும் தண்ணீரும் கொடுப்பது வாஜிபாகும். அவை தானாக மேய்ந்து

தேடிக்கொள்ளும் இரை தனக்குப் போதவில்லை என்றிருந்தால் நிரப்பமாகக் கொடுப்பது வாஜிபாகும். அதுவே போதுமென்றிருந்தால் கொடுப்பது வாஜிபில்லை. கோழி,சேவல், வாத்து ஆகிய வற்றிற்குரிய சட்டமும் இவ்வாறுதான்.

ஒருவன் தன்னிடமுள்ள ஆடு, மாடு, கோழி ஆகியவற்றை மேலே குறிப்பிட்ட முறைப்படி கவனிக்கவில்லையானால் அவனுடைய உரிமையை விட்டும் அவற்றை நீக்கப்படும் என்று அவனைக் கண்டிக்கவேண்டும். அல்லது சாப்பிடப்படக்கூடிய பிராணியாக இருந்தால் அதனை அறுத்துவிடும்படி அவனை நிர்பந்திக்கவேண்டும். இவ்வாறு அவன் செய்யவில்லையானால், நீதிபதியானவர் இவ்விரு காரியங்களில் எது அவனுக்கு நல்லதோ அதைச்செய்திடுவார்.

சங்கை செய்யப்படாத பிராணிகளான காகம், பருந்து, பாம்பு, எலி, வெறிநாய் ஆகியவற்றிற்கு உணவு, தண்ணீர் கொடுப்பது வாஜிபில்லை.

"ஒருவனிடம் சாப்பிடுவதற்கு ஆகுமான பிராணியும், சாப்பிடக்கூடாத பிராணியும் இருக்கிறது, அந்த இரண்டில் ஒன்றுக்கு மட்டும் கொடுக்குமளவுக்கு உணவு அவனிடமிருக்கிறது. இப்போது சாப்பிட ஆகுமான பிராணியை அறுத்து விட்டு, மற்ற பிராணிக்கு அந்த உணவைக் கொடுப்பதா? அல்லது சாப்பிடப்படக்கூடாத அப்பிராணியை விற்று விட்டு சாப்பிடப்படக்கூடிய பிராணிக்கு அந்த உணவைக் கொடுப்பதா? அல்லது அந்த உணவை இரு பிராணிகளுக்கும் சமமாகப் பங்கிட்டுக்கொடுப்பதா? என்ற கேள்விக்கு ஷைகு அப்துஸ்ஸலாம் (ரஹ்) அவர்கள் பதில் கூறியதாவது:

மேற் கூறப்பட்ட விஷயத்தில் முதலில் கூறப்பட்ட இரண்டு சட்டங்களும் சமமானவைதான். எதை வேண்டுமானாலும் செய்யலாம். எனவே சாப்பிட ஆகுமான பிராணி ஆயிரம் வெள்ளிக்காசுகள் பெறுமானமுள்ளதாகவும், சாப்பிட ஆகாத பிராணி ஒரு வெள்ளிக்காசு பெறுமானமுள்ளதாகவும் இருந்தாலும் இரண்டுக்கும் சமமாக அந்தத் தீனியைக் கொடுப்பது தான் நல்லது.

ஆடு, மாடு போன்றவற்றில் பால் கறக்கும் பொழுது அதற்கும் அதனுடைய குட்டிக்கும் இடையூறு ஏற்படாத விதத்தில் கறக்கவேண்டும்.

ஏதேனும் ஒன்றுக்கு இடையூறு ஏற்படும் விதத்தில் பால் கறப்பது ஹராமாகும். பால் கறப்பவன் அதனைக் கடைசி வரை கறக்காமல் இருப்பதும், அவனுடைய நகத்தை வெட்டுவதும் சுன்னத்தாகும். இதற்கு முன் உணவுடைய பாடத்திலும் இது பற்றிச்சில சட்டங்கள் சொல்லப்பட்டுள்ளன.

ஏழு முழத்தை விட அதிகமான அளவில் வீடு கட்டுவது கூடாது என்று அறிவிக்கப்பட்டுள்ள ஹதீஸுக்கு,பெருமைக்காக அவ்வாறு செய்வது கூடாது என்று கருத்து கூறப்பட்டுள்ளது. வீட்டைக் கட்டி அதனைப் பாழ்படுத்துவதும், மரங்களை நட்டு அதற்குத் தண்ணீர் ஊற்றாமல் இருப்பதும், விவசாயத்திற்காக விதைத்து விட்டு தண்ணீர் பாய்ச்சாமல் இருப்பதும் மக்ரூஹ் ஆகும். ஆனால், வீட்டைக் கட்டி அதனைப் பரிபாலனம் செய்வது வாஜிபல்ல.

# பழிக்குப் பழி பற்றிய பாடம்

மனிதர்களையும் ஜின்களையும் தன்னை அறிந்து வணங்குவதற்காகவே படைத்துள்ளதாக அல்லாஹுதஆலா கூறி, தன்னை வணங்கும் முறைகளைக் கற்றும் கொடுத்திருப்பதுடன் மனிதர்களுடைய நிருவாகத்திற்குத் தேவையான பொருட்களை அவன் விதித்த கட்டளைப்படிச் சம்பாதித்து அதன் மூலம் அவர்களுடைய தேவைகளையும், ஆசைகளையும் நிறைவேற்றி, பிறகு அவர்கள் தங்களையும் தங்களுடைய பொருட்களையும் காப்பாற்றிக்கொள்ளும் முறைகளையும் அறிவித்துள்ளான். எனவே, இந்தச் செயல்களை ஃபிக்ஹு கிதாபுகளில் வணங்குதல், சம்பாதித்தல், தேவைகளை நிறைவேற்றிக்கொள்ளுதல், காப்பாற்றிக்கொள்ளுதல் என்று நான்கு பகுதிகளாகப் பிரித்து விவரித்துக்கூறப்பட்டுள்ளது.

இந்த நான்கு பகுதிகளையும் சேர்த்துத்தான் ஃபிக்ஹு என்ற சட்ட நூற்கள் இயற்றப்பட்டுள்ளன. அந்த நான்கு பகுதிகளாவன:

1) رُبُعُ الْعِبَادَاتِ வணக்கங்களின் பகுதி,

2) رُبُعُ الْبُيُوْعِ வியாபாரங்களின் பகுதி,

3. رُبُعُ النِّكَاحِ திருமணத்தின் பகுதி,

4) رُبُعُ الْجِرَاحِ குற்றம், மற்றும் பழிக்குப் பழி வாங்குதல் பற்றிய பகுதி ஆகியவைகளாகும்.

இவ்வாறு அமைக்கப்பட்டுள்ள ஃபிக்ஹுடைய ஞானத்தில் அல்லாஹுதஆலா அந்த ஃபுகஹாக்களுடைய இதயங்களை மிக விரிவாக்கி வைத்துள்ளான். அதில் அவர்கள் எழுதியுள்ள கிதாபுகளும் அவற்றிற்குரிய விரிவுரைகளும் எண்ணிலடங்காதவையாகும். ஒவ்வொரு கிதாபும் பல பாகங்களைக் கொண்டதாகவும், மனிதன் சுமக்க முடியாத பெரும் பெரும் சுமையுடையதாகவும் இருந்து வருகிறது.

ஒரு மஸ்அலாவிற்கு ஒரு கிதாபு என்ற முறையிலும் சில இமாம்கள் எழுதியுள்ளார்கள். ஜமாஅத்துடைய பாடத்திற்கு மட்டும் பன்னிரண்டாயிரம் மஸ்அலாக்களைத் தொகுத்து ஒரு தனி கிரந்தத்தை ஷெய்கு இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள் எழுதியுள்ளார்கள்.

பழிக்குப் பழி வாங்குதைப் பற்றி பல ஆயத்துகளில் அல்லாஹுதஆலா சட்டங்களைக் கூறியுள்ளான். அல்லாஹுதஆலா கூறுவதாவது:

وَكَتَبْنَا عَلَيْهِمْ فِيْهَآ اَنَّ النَّفْسَ بِالنَّفْسِ وَالْعَيْنَ بِالْعَيْنِ وَالْاَنْفَ بِالْاَنْفِ وَالْاُذُنَ بِالْاُذُنِ وَالسِّنَّ بِالسِّنِّ

وَالْجُرُوحَ قِصَاصٌ ۚ فَمَنْ تَصَدَّقَ بِهِ فَهُوَ كَفَّارَةٌ لَّهُ ۚ
وَمَنْ لَّمْ يَحْكُمْ بِمَا أَنْزَلَ اللَّهُ فَأُولَٰئِكَ هُمُ الظَّالِمُونَ (5:45)

"உயிருக்கு உயிர் என்றும், கண்ணுக்குக் கண் என்றும், மூக்குக்கு மூக்கு என்றும், காதுக்குக் காது என்றும், பல்லுக்குக்குப் பல்(லு) என்றும், மற்றும் காயங்களுக்கு (அதததற்குத் தகுந்த முறையிலு)ம் நிச்சயமாகப் பழிவாங்கப்படும் என்பதாக அவர்களுக்காக அ(வர்களுடைய வேதமாகிய தௌராத்)தில் நாம் விதித்திருந்தோம். எனினும் எவரேனும் பழி வாங்குவதை (மன்னித்து) தானமாக விட்டு விட்டால் அது அவரு(டைய தீவினை)க்குப் பரிகாரமாயிருக்கும். எவர்கள் அல்லாஹ் அருளிய வேதக் கட்டளைப் பிரகாரம் தீர்ப்பளிக்க வில்லையோ அவர்கள்தான் அக்கிரமக்காரர்கள்"

மேலும் இறைவன் கூறுகிறான்,

(2:194) فَمَنِ اعْتَدَىٰ عَلَيْكُمْ فَاعْتَدُوا عَلَيْهِ بِمِثْلِ مَا اعْتَدَىٰ عَلَيْكُمْ ۚ

"எவரேனும் (வரம்பு) மீறி உங்களின் மீது (சிறப்புற்ற மாதங்களாகிய ரஜப், துல்கஃதா, துல் ஹஜ், முஹர்ரம் ஆகிய மாதங்களில் யுத்தத்திற்கு) வந்தால் அவர் உங்கள் மீது மீறிய விதமே நீங்களும் அவர் மீது மீறி (யுத்தத்திற்கு)ச் செல்லுங்கள்"

மேலும் இறைவன் கூறுகிறான்:

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا كُتِبَ عَلَيْكُمُ الْقِصَاصُ فِي الْقَتْلَى ۖ
الْحُرُّ بِالْحُرِّ وَالْعَبْدُ بِالْعَبْدِ وَالْأُنْثَىٰ بِالْأُنْثَىٰ ۚ فَمَنْ
عُفِيَ لَهُ مِنْ أَخِيهِ شَيْءٌ فَاتِّبَاعٌ بِالْمَعْرُوفِ وَأَدَاءٌ
إِلَيْهِ بِإِحْسَانٍ ۗ ذَٰلِكَ تَخْفِيفٌ مِنْ رَبِّكُمْ وَرَحْمَةٌ ۗ
فَمَنِ اعْتَدَىٰ بَعْدَ ذَٰلِكَ فَلَهُ عَذَابٌ أَلِيمٌ (2:178)

"விசுவாசிகளே! கொலைக்காகப் பழி வாங்குவது உங்கள் மீது விதிக்கப்பட்டிருக்கிறது. (ஆகவே கொலை செய்தவன்) சுயேச்சை உடையவனாயின் அந்த சுயேச்சை உடையவனையும், அடிமையாயின் அந்த அடிமையையும், பெண்ணாயின் அந்தப் பெண்ணையும் (நீங்கள் கொலை செய்து பழிவாங்குங்கள். ஆயினும் பழிவாங்கும் விஷயத்தில்) ஓர் அளவேனும் கொலையுண்டவனுடைய சகோதரர்களால் எவரும் மன்னிக்கப்பட்டு விட்டால் மிக கண்ணியமான முறையைப் பின்பற்றி (அவனைக் கொலை செய்யாது விட்டு) விட வேண்டும். பழி வாங்குவதற்குப்

பதிலாக கொலையாளி ஒரு தொகையைத் தருவதாக ஒப்புக் கொண்டிருந்தால் அந்த நஷ்ட ஈட்டைத் தயக்கமின்றி) நன்றியோடு அவன் செலுத்தி விட வேண்டும். இது உங்கள் இறைவனின் சகாயமும் கிருபையும் ஆகும். இதற்குப் பின் எவரேனும் வரம்பு மீறி (நஷ்ட ஈடு கொடுத்த கொலையாளியைத் துன்புறுத்தினால், அல்லது நஷ்ட ஈடு கொடுக்க மறுப்பாரா)னால் அவருக்கு (மறுமையில் மிக்க) துன்புறுத்தும் வேதனையுண்டு"

மேலும் இறைவன் கூறுகிறான்:

وَلَكُمْ فِي الْقِصَاصِ حَيٰوةٌ يَّاُولِي الْاَلْبَابِ لَعَلَّكُمْ تَتَّقُوْنَ ۝ (2:179)

"அறிவாளிகளே! (கொலைக்குப்) பழி வாங்குவதில் உங்களுக்கு வாழ்க்கை உண்டு. (ஏனென்றால் பழி வாங்கிவிடுவார்கள் என்ற பயத்தால் கொலை செய்யக் கருதுபவரும், அவரால் கொலை செய்யக் கருதப்பட்டவருமாகிய) நீங்கள் தப்பித்துக் கொள்ளலாம். »

பெரும்பாலான நிலைகளில் உயிர்ச்சேதத்தை உண்டாக்கும் செயலைக் கொண்டு ஒரு சடலத்தை நாடி மனமறிந்து ( عَمَداً ) செய்யும் செயலுக்குத்தான் பழிக்குப்பழி வாங்குதல் உண்டு.

உயிர் சேதத்தை உண்டாக்காத கருவியினால் ஒருவனைத் தாக்கினால் அது (شِبْهُ الْعَمْدِ எனும்) மனமறிந்து செய்தலுக்கு ஒப்பானதேயன்றி மனமறிந்து செய்த செயலாகக் கருதப்படமாட்டாது. மேலும் தவறுதலாக ( خَطَاءً வாக)க் கொலை ஏற்பட்டு விடுவதும் உண்டு. இந்த இரண்டிலும் பழிக்குப் பழி கிடையாது.

ஒரு மனிதன் கொலையுண்டதற்கு இரண்டு மனிதர்கள் காரணமாக இருந்து அந்த இருவரிடமும் கொலையுண்டவனின் உயிரைப்போக்கும் இரண்டு செயல்கள் நடந்திருப்பதாகக் கண்டு கொள்ளப்பட்டால் அந்த இருவருமே கொலையாளிகள் தாம். அவ்விருவரின் செயல்கள் முன் பின்னாக இருந்து கொலை நடந்து இருந்தால் முந்தியவன்தான் கொலையாளி. கொலையாளியின் செயல் கொலை செய்யப்பட்டவனை அறுக்கப்பட்ட பிராணி துடிப்பதுபோன்று துடிக்கவைத்தால் அது கொலை செய்ததாகும்.

கொலைக்காகப் பழிக்குப்பழி வாங்குவதற்குரிய நிபந்தனையாகிறது, கொலை செய்தவன் பருவமெய்தியவனாவும், அறிவு உள்ளவனாகவும் இருக்க வேண்டும். கொலை செய்யப்பட்டவன் பாதுகாப்பு உடையவனாகவும் இருவரும் சமமானவர்களாகவும் இருக்க வேண்டும். எனவே, சிறு குழந்தை பயித்தியக்காரன் ஆகியோரின் மீது பழிக்குப் பழி கூடாது.

பாதுகாப்பு என்பது, ஈமான் கொள்வதும், அல்லது முஸ்லிம்களிடம் அடைக் கலம் தேடிய திம்மீ காஃபிராக இருப்பதும், அல்லது முஸ்லிம்களிடம் உடன்படிக்கை செய்து கொள்வதுமாகும். இருவரும் சமமானவர்கள் என்பது, இருவரும்

இஸ்லாமானவர்களாக இருப்பதுடன் இருவரும் அடிமைகளாக அல்லது சுதந்திரமானவர்களாக, அல்லது இருவரும் எஜமான்களாக இருப்பதாகும். தனயனைக் கொன்ற தந்தை பழிக்குப் பழி வாங்கப்படமாட்டான். ஆனால், தந்தையைக் கொன்ற மகன் பழிக்குப் பழி வாங்கப்படுவான்.

ஒரு கூட்டத்தினர் ஒருவனைக் கொன்றதற்காக அக் கூட்டத்திலுள்ள அனைவரும் பழிவாங்கப்படுவார்கள். ஒருவன் ஒரு கூட்டத்தினரை வரிசையாகக் கொன்றால் முதலாமவனுக்கு பதிலாக அவன் கொல்லப்படுவான். மற்றவர்களுக்காக நஷ்டஈடு கொடுக்கப்படும். ஒரே நேரத்தில் அனைவரையும் கொன்றிருந்தால் சீட்டுப் போட்டுப் பார்த்து அதில் வருபவனுக்காக இவன் கொல்லப்படுவான். மற்றவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்கப்படும்.

கொலை செய்யப்பட்டவனுடைய வலீகாரன் கொலை செய்தவர்களில் ஒருவனை மட்டும் மன்னிப்பது கூடும். வேண்டுமென்றே செய்த கொலைக்காகப் பழிவாங்குதலை வலீகாரன் மன்னிப்பதாலும் அல்லது கொலை செய்தவன் பழிவாங்கப்படுமுன் இறந்து விடுவதாலும்--அதாவது பழிவாங்குதல் விழுந்து விடும்பொழுது நஷ்டஈடு அதற்கு பதிலாகும். (நஷ்டஈட்டின் விவரம் பின்னால் கூறப்படுகிறது)

நஷ்டஈடாகிறது, கொலை செய்யப்பட்டவன் முஸ்லிமான சுதந்திர மனிதனாகவும், பாதுகாப்புள்ளவனாகவும் (முஸ்லிம்களிடம் பாதுகாப்புத் தேடிய திம்மீ காஃபிராகவும்) இருந்தால் நூறு ஒட்டகங்களாகும். மனமறிந்து ( عَمْدٌ ) செய்வதிலும், மனமறிந்து செய்வதற்கு ஒப்பானதாக ( شِبْهُ الْعَمْدِ ) செய்வதிலும், நூறு ஒட்டகங்கள்தாம், எனினும், அந்த நூறு ஒட்டகங்களையும் மூன்று விதமானவையாகக் கொடுக்கவேண்டும். அதாவது :
மூன்று ஆண்டுகள் நிரப்பமானவை ( حِقَّةٌ ) முப்பது ;
நான்கு ஆண்டுகள் நிரப்பமானவை ( جَذَعَةٌ ) முப்பது;
சினையுள்ளவை ( خَلِفَةٌ ) நாற்பது; இந்தவிதமாக நூறு ஒட்டகங்கள் கொடுக்கவேண்டும்.

அந்தக் கொலை தவறுதலாக நடந்திருந்தால் ஐந்து விதமான ஒட்டகங்களாகக் கொடுக்கப்படும். அதாவது :
ஓராண்டு நிரம்பிய பெண் ஒட்டகங்கள் ( بِنْتُ مَخَاضٍ ) இருபது ;
இரண்டாண்டு நிரம்பிய ஆண் ஒட்டகங்கள் ( اِبْنُ لَبُوْنٍ ) இருபது;
இரண்டு ஆண்டுகள் நிரம்பிய பெண் ஒட்டகங்கள் ( بِنْتُ لَبُوْنٍ ) இருபது;
மூன்றாண்டுகள் நிரம்பியவை ( حِقَّةٌ ) இருபது;
நான்காண்டுகள் நிரம்பியவை ( جَذَعَةٌ ) இருபது; ஆக நூறு ஒட்டகங்கள்.

ஆனால், தவறுதலாக நடந்த கொலை மக்கா நகரிலோ, அல்லது ஃபீஸபீல் ஹராமாக்கப்பட்ட சங்கைக்குரிய மாதங்களான ரஜப், துல்கஃதா, துல்ஹஜ், முஹர்ரம்

ஆகிய நான்கு மாதங்களிலோ நடந்திருந்தால், அல்லது தாய் சகோதரி போன்ற மஹ்ரமானவர்களைக் கொலை செய்திருந்தால் முந்திய மூன்று விதமாகவே நூறு ஒட்டகங்கள் கொடுக்க வேண்டும். இரண்டாவது முறைப்படி ஐந்து விதமாகக் கொடுக்கக் கூடாது.

வேண்டுமென்றே, மனமறிந்துசெய்த கொலைக்குரிய நஷ்டஈட்டை கொலை காரன் உடனடியாக செலுத்த வேண்டும். வேண்டுமென்றே செய்ததற்கு ஒப்பானதாக இருந்தாலோ, அல்லது தவறுதலாக செய்த கொலையாக இருந்தாலோ மூன்று ஆண்டுகள் தவணையில் நிறைவேற்றுவது கொலைகாரனுடைய அஸபாக்காரர்களின் மீது கடமையாகும்.

ஒட்டகங்கள் கிடைக்காவிட்டால் அதன் விலையைக் கொடுப்பது வாஜிப் ஆகும். பழிக்குப் பழி வாங்குவதில் உரிமையுடையவர்கள் அஸபாக்காரர்களாகும்.

ஹராமான கொலை தவறாக நடந்தாலும், அல்லது வேண்டுமென்றே நடந்தாலும் அதனைச் செய்தவன் அதற்குரிய கஃப்பாரா வென்னும் குற்றப்பரிகாரத்தைச் செய்திட வேண்டும். அதாவது: முஃமினான ஓர் அடிமையை உரிமைவிடுதல்; இயலாவிட்டால் தொடராக இரண்டு மாதங்கள் நோன்பு பிடித்தலாகும்.

கொலை செய்தவனைப் பழி வாங்காமல் விட்டு விட்டால், ஒருவரை ஒருவர் கொலை செய்வதற்கு அஞ்சமாட்டார்கள். அதனால் கொலைகள் அதிகமாகிவிடும். ஆனால், கொலை செய்தவனை மன்னித்து விடுதல் என்பது இக்கருத்துக்கு மாற்றமாகாது. எனினும் நஷ்ட ஈட்டைக் கொடுத்தாக வேண்டும். அதனையும் மன்னித்தால், கொலை செய்தவனை கொலை செய்யப்பட்டவனின் உறவினர்கள் பார்க்கும் போதெல்லாம் அவனைப் பழித்துக் கூறிக் கொண்டே இருப்பார்கள். மேலும், மனம் முரண்டாகச் செய்த கொலைக்கு உடனடியாகப் பரிகாரம் செய்யவும் வேண்டும். எனவேதான் அல்லாஹு தஆலா:-

وَلَكُمْ فِي الْقِصَاصِ حَيٰوةٌ يَّآاُولِي الْاَلْبَابِ (2:179)

"அறிவுடையவர்களே! பழிக்குப் பழி வாங்குவதில் உங்களுக்கு வாழ்க்கை இருக்கிறது" என்று கூறியுள்ளான்.

## விபச்சாரத்தின் பாடம்

"விபச்சாரம் புரியும் பெண் ஆண் ஒவ்வொருவருக்கும் நூறு கசையடி கொடுங்கள்" (24:2) என்பதாகவும், "விபச்சாரத்திற்கு நீங்கள் நெருங்க வேண்டாம்" (17:32) என்பதாகவும், அல்லாஹு தஆலா கூறியுள்ளான். இந்த இரண்டாவது வாசகத்தின் மூலம் ஜினாவைச் செய்யாதீர்கள் என்று சொல்லாமல் அதற்கும் மேலாக ஜினாவின் பக்கம் நீங்கள் நெருங்க வேண்டாம் என்று மிக அழுத்தமாக எச்சரிக்கை செய்துள்ளான்.

விபச்சாரத்தினால் தீனிலும், துன்யாவிலும், வாழ்க்கையின் வளத்திலும், வாழ்நாளிலும் குறைவு ஏற்படுகிறது என்பதற்கு ஆதாரமாகப் பல ஹதீஸ்களும் நிகழ்ச்சிகளும் கூறப்பட்டுள்ளன. என் கண்ணால் கண்ட ஒரு நிகழ்ச்சியை இங்கு நான் குறிப்பிடுகிறேன்.

நான் ஒரு சமயம் பம்பாயிலிருந்து கப்பல் மூலம் மால்வான் என்ற ஊருக்குப் போயிருந்தேன். அது பழத் தோட்டங்களும், வயல் வெளிகளும், மரங்களும், ஆறுகளும், குளங்களும் நிறைந்த ஊராகும். அங்கு ஜாமிஃமஸ்ஜிதிற்கு நான் சென்ற பொழுது வயது முதிர்ந்த ஒருவர் தொழ வைத்தார். தொழுகை முடிந்த பின் அவரைப்பற்றி நான் விசாரித்தேன். அவர் அவ்வூர் கதீப் என்று கூறினார். ஆனால், என்னுடைய மொழியை அவர் விளங்கவில்லை. எனினும் அவர், தன்னுடைய தந்தை இந்த மொழியை நன்கு அறிவார் என்று சாடையால் கூறினார். இவ்வளவு வயது முதிர்ந்த இவருக்குத் தந்தை இருக்க முடியாது. இறந்து விட்ட தன் தந்தையைப் பற்றி இவர் என்னிடம் வேடிக்கையாகக் கூறுகிறார் போலும் என்று நான் எண்ணினேன்.

பிறகு அவர் என்னைக் கடைத் தெருவுக்கு அழைத்தார். நான் அவருடன் சென்றேன். அங்கு ஒரு கடையில் வியாபாரம் செய்து கொண்டிருந்த ஒரு வயோதிகரைச் சுட்டிக் காண்பித்து, "இவர்தான் என் தந்தை" என்று கூறினார். அவர் நல்ல பார்வையுடையவராகவும், தெளிவாகக் கேட்கிறவராகவும், எல்லாப் பற்களும் நல்ல முறையில் இருப்பவராகவும் இருந்தார். நான் அவருக்கு ஸலாம் கூறினேன். அவர் பதில் சொல்லிய பின் அவரைப்பற்றி நான் விசாரித்தேன்.

அவர் மதறாஸைச் சேர்ந்தவர் என்பதாகக் கூறி தன்னைப் பற்றிய விபரத்தை செந்தமிழில் கூறலானார். நான் வாலிபனாக இருந்தபொழுது திப்பு சுல்தானின் தந்தை மன்னர் ஹைதர் அலீ என்னை அழைத்து தன்னுடைய பிரத்தியேகமான படையில் என்னைச் சேர்த்துக் கொண்டார். எனக்குப் பல வெகுமதிகளையும் அளித்தார்.

நான் அவரிடம் நாற்பது ஆண்டுகள் பணியாற்றினேன். அவருடன் பல போர்களில் கலந்து கொண்டேன். அல்லாஹ் பல வெற்றிகளைத் தந்தான். அவர் இறந்த பொழுது அவருடைய மகன் திப்பு சுல்தான் ஆட்சிக்கு வந்தார். அவருடைய படையிலும் நான் நாற்பது ஆண்டுகள் பணியாற்றினேன்.

பிறகு அல்லாஹுதஆலாவின் பக்கம் நான் முழுகவனம் செலுத்த வேண்டுமென எண்ணி அங்கிருந்து விடைபெற்று இங்கு வந்து சேர்ந்தேன். எனக்கு நீண்ட வயதையும் உடல் நலத்தையும் கொடுத்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் என்று கூறினார். அப்பொழுது அவருக்கு வயது நூற்று இருபது இருக்கலாம் என்பது எனது அபிப்பிராயம்.

இவ்வளவு நீண்ட ஆயுளை கொடுக்கப்பட்டிருப்பதற்குரிய காரணத்தை அவரிடம் நான் கேட்ட பொழுது அவர், "நான் என்னுடைய ஹலாலான மனைவியைத் தவிர வேறு எந்தப் பெண்ணையும் நாடியதே இல்லை. அதுதான் என்னுடைய பாக்கியத்திற்குக் காரணமென்று நான் கருதுகிறேன்" என நன்றியுடன் கூறினார்.

## நாசப்படுத்தும் ஏழு செயல்கள். (அதில் ஒன்று 'ஜினா')

"மனிதனை நாசமாக்கும் செயல்கள் ஏழு" என்பதாக ஹதீஸில் கூறப் பட்டுள்ளது. 1)பாவங்களில் மிகப் பெரியது அல்லாஹ்வுக்கு இணைவைப்பதாகும் 2) கொலை செய்தல் 3) விபச்சாரம் புரிதல் 4) பெற்றோரை நோவினை செய்தல் 5) பொய்ச் சத்தியம் செய்தல் 6) அனாதைகளின் பொருட்களை அநியாயமாகச் சாப்பிடுதல் 7) போர்க்களத்தில் புறமுதுகிட்டு ஓடுதல் ஆகியவையாகும். மற்றோர் அறிவிப்பில் விபச்சாரம் இரண்டாவதாகக் கூறப்பட்டுள்ளது.

பருவமடைந்த சுதந்திரமான ஒருவன் தன் ஆண் குறியை கத்னாவுடைய அளவுவரை எவரேனும் ஒரு ஆண் அல்லது ஒரு பெண்ணின் முன் துவாரத்திலோ அல்லது பின் துவாரத்திலோ-அது ஹராமென்று அறிந்து-நுழைய வைத்தால் நாட்டின் தலைவர் அல்லது அவரின் பிரதிநிதியான நீதிபதியானவர் அவனுடைய மேனியில் படும்படியாக நூறு கசையடி கொடுத்து, ஓராண்டுவரை இரண்டு நாள் தூரத்திலுள்ள வேறோர் ஊருக்கு நாடு கடத்தி விடுவார். இச்சட்டம் திருமணமாகி உடலுறவே கொள்ளாத விபச்சாரம் புரிந்த ஆணுக்கும், அது போன்ற ஒரு பெண்ணுக்கும் உரியதாகும்.

ஒருவனின் தொடையை மற்றொருவனின் தொடையுடன் சேர்ப்பதின் மூலமாகவோ, ஒரு பெண் மற்றொரு பெண்ணுடன் சேருவதின் மூலமோ, தன் கரத்தினால், அல்லது தன் மனைவி அல்லாதவரின் கரத்தினால் விந்தை வெளியாக்குவதின் மூலமோ இன்பம் அனுபவித்தால் மேற்கண்ட தண்டனை (ஹத்து) இல்லை. எனினும், அவர்களைக் கண்டிக்க வேண்டும். மனைவியின் கையினால் விந்தை வெளியாக்குவதும், அவள் அதற்கு இணங்குவதும் மக்ரூஹ் ஆகும்.

மிருகங்களின் மர்மஸ்தானத்திலும், மய்யித்துடைய மர்மஸ்தானத்திலும் தன் மர்மஸ்தானத்தை நுழைய வைப்பதால் ஹத்து இல்லை. புதிதாக இஸ்லாத்தில் சேர்ந்த ஒருவன், அல்லது ஹராமென்பதை அறிவதற்குரிய வாய்ப்பு ஏற்படாதவன் அதனை ஹலாலென்று விளங்கியதாக வழக்காடினால், அதுவும் சாத்தியமாக இருந்தால் அவனுக்கும் ஹத்து இல்லை. இவ்வாறே சந்தேகத்திற்குரிய நிகாஹினால் உடலுறவு நடந்திருந்தால்-அதனை ஹலாலெனச்சொன்ன இமாமைத்தொடரா விட்டாலும் ஹத்து இல்லை. உதாரணமாக: "வலீ இல்லாமல் மற்ற ஷர்த்துகளைக் கொண்டு ஹனஃபீ மத்ஹபைத் தொடராமலும், சாட்சி இல்லாமல் மற்ற ஷர்த்துகளைக் கொண்டு மாலிகீ மத்ஹபைத் தொடராமலும், நிகாஹை நடத்துவது போல். இந்த நிலைகளில் ஹத்து இல்லை.

ஸஹீஹான நிகாஹின் மூலம் உடலுறவு கொண்ட சுதந்திரவான், அல்லது உடலுறவு கொள்ளப்பட்ட சுதந்திரமான பெண், விபச்சாரம் செய்தால் இமாமானவர், அல்லது அவருடைய பிரதிநிதி அவ்விருவரையும் நிற்க வைத்துக் கல்லெறிந்து கொல்லும்படி ஜனங்களை ஏவுவார். கர்ப்பமாயிருப்பவளையும், குழந்தைக்குப் பால் கொடுப்பவளையும் அந்த செயல்களை விட்டும் அவள் நீங்கும் நாள்வரை பிற்படுத்தி

வைக்கப்படும். நோய் இருப்பதற்காகப் பிற்படுத்தக் கூடாது; அவ்வாறே கடினமான குளிர் இருக்கிறது என்றோ, உஷ்ணம் இருக்கிறது என்றோ பிற்படுத்தக் கூடாது. ஆனால், ஹத்து அடியாக இருந்தால், குளிர், உஷ்ணம், சுகத்தை எதிர்பார்க்கும் நோய், கர்ப்பம் ஆகியவற்றிற்காக பிற்படுத்தலாம்.

ஹத்து அடிப்பது பச்சை மட்டை, செருப்பு ஆகியவற்றினால் அடிக்கலாம். ஐம்பது சிறு குச்சிகளுள்ள ஒரு கட்டினால் இரண்டு தடவை அடித்தாலும் நூறு அடிகள் நிறைவேறிவிடும். ஆனால், அதிலுள்ள ஒவ்வொரு குச்சியும் அவனுடைய மேனியில் பட வேண்டும்.

விபச்சாரம் செய்தது உறுதியாவது, அவனே விண்ணப்பம் செய்வது கொண்டோ, அல்லது நான்கு ஆண்களின் சாட்சிகளைக் கொண்டோ தரிபடும். அதாவது; நான்கு ஆண்கள், அவ்விருவரும் விபச்சாரம் செய்து கொண்டிருந்ததையும், அவன் அவளுடைய மர்மஸ்தானத்தில் எவ்வாறு நுழைய வைத்தான் என்ற விபரத்தையும், அந்த இடத்தையும் நேரத்தையும் தாங்கள் நால்வரும் கண்ணால் கண்டதாகச் சாட்சி கூற வேண்டும். அப்பொழுதுதான் அது உறுதியாகும்.

விபச்சாரம் செய்தல், மது அருந்துதல், திருடுதல் போன்ற (ஹத்து என்னும்)கசையடி, கரத்தைத் துண்டித்தல் போன்ற தண்டனைகளை உண்டாக்கும் பெரும்பாவங்களில் ஏதாவது ஒரு செயலைத் தான் செய்ததாகச் சொன்னான். பிறகு அதனைச் செய்யவில்லையென்று சொல்லி மீண்டுவிடுவது ஸுன்னத்தாகும்.

مَاعِزْ மாயிஜ் என்ற ஸஹாபியும், غَمِدِيَّة காமிதிய்யா என்ற ஸஹாபி பெண்மணியும் தாங்களிருவரும் விபச்சாரம் செய்து விட்டதாக விண்ணப்பித்த பொழுது அந்தச் சொல்லிலிருந்து மீண்டு கொள்ளும்படியாக நாயகம் (ஸல்) அவர்கள் சைக்கினை செய்ததால் அப்படி மீண்டு கொள்வது சுன்னத்தாகி விட்டது. ஆனால் தான் விபச்சாரம் செய்ததாகச் சொன்ன ஒருவன், தான் அப்படிச் சொல்லவில்லையென்று மறுத்தால் அவன் ஏற்கனவே விபச்சாரம் செய்ததாகச் சொல்லும் பொழுது இரண்டு சாட்சிகள் இருந்திருப்பார்களாயின் அந்த மறுப்பை ஒப்புக்கொள்ளக் கூடாது. இரண்டு சாட்சிகள் இல்லாதிருப்பின் அவனின் மறுப்பை ஒப்புக் கொள்ளலாம். இந்த நிலையில் அவன் மீது ஹத்தும் விதியாகாது.

## அவதூறு சொல்வது பற்றிய பாடம்

وَالَّذِيْنَ يَرْمُوْنَ الْمُحْصَنَاتِ ثُمَّ لَمْ يَأْتُوْا بِاَرْبَعَةِ
شُهَدَاۤءَ فَاجْلِدُوْهُمْ ثَمَانِيْنَ جَلْدَةً وَّلَا تَقْبَلُوْا لَهُمْ
شَهَادَةً اَبَدًا ۚ وَاُولٰۤئِكَ هُمُ الْفَاسِقُوْنَ ۝ (24:4)

# மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

"பத்தினித் தனமுள்ள பெண்களை அவதூறு கூறியவர்கள், பிறகு (அதற்காக) நான்கு சாட்சிகளை அவர்கள் கொண்டு வரவில்லையானால், அவர்களை எண்பது கசையடி கொடுங்கள். இனி எப்பொழுதும் அவர்களுடைய சாட்சியை ஒப்புக் கொள்ளாதீர்கள். அவர்கள் தாம் பெரும்பாவிகள்" என்று அல்லாஹுதஆலா — குர்ஆனில் கூறியுள்ளான்.

விபச்சாரத்தில் ஈடுபடாதவனும், மனைவியின் பின்புறத்தில் தன் இச்சையை நிறைவேற்றாதவனுமான பேணுதலுள்ள ஒரு முஸ்லிமைப்பார்த்து மற்றொரு பருவவயதடைந்த, சுயபுத்தியுள்ள முஸ்லிமான ஒருவன், அல்லது திம்மீ காபிரானவன் விபச்சாரத்தைக் கொண்டு, அல்லது ஆணுடன் ஆண் சேருகின்ற ஓரினச் சேர்க்கையைக் கொண்டு அவதூறு கூறினால், (அதாவது: நீ விபச்சாரம் செய்தாய் என்றோ, நீ இன்ன ஆணுடன் சேர்ந்து ஓரினப்புணர்ச்சி செய்தாயென்றோ, ஒரு பெண்ணைப் பார்த்து "தேவடியாளே" என்றோ, அல்லது ஜைது என்ற கணவன் மூலம் அவளுக்குப் பிறந்த மகனைப்பார்த்து "நீ ஜைதுக்கு பிறந்தவனல்ல" என்றோ கூறுவது போல்) இவ்வாறு கூறியவன் சுதந்திரவானாக இருந்தால் எண்பது கசையடி கொடுக்கப்படும்.

அடிமைகளைப் பற்றி இவ்வாறு அவதூறு கூறினால் ஹத்து கிடையாது பெற்றோர் தம் மக்களை அவதூறு கூறினாலும் அவர்களை ஹத்தடிக்கக் கூடாது. நான்கு ஆண்களுக்குக் குறைவானவர்கள் சாட்சி சொன்னாலும், பெண்கள் பலர் சேர்ந்து கூட்டமாக சாட்சி சொன்னாலும், அடிமைகள் எத்தனைக் கூட்டமாகச் சேர்ந்து சாட்சி சொன்னாலும் ஏற்கப்பட மாட்டாது. மாறாக, இவர்களில் சாட்சி சொன்ன ஒவ்வொருவருக்கும் அவதூறுடைய ஹத்தடி கொடுக்கப்படும். அவதூறு சொல்லப்பட்டவனை-அவன் விபச்சாரம் செய்யவில்லையென்று-சத்தியம் செய்யச் சொல்வது கூடும். அவ்வாறு அவன் சத்தியம் செய்து விட்டால் அவதூறு சொன்னவனின் மீது ஹத்து நடத்தப்படும். ஆனால் அவதூறு சொல்லப்பட்டவன் சத்தியம் செய்யாமல் அவதூறு சொன்னவன் சத்தியம் செய்தால் அவதூறுக்குரிய ஹத்து விழுந்து விடும்.

கணவன் தன் மனைவியை அந்நிய ஆண் ஒருவனுடன் தனித்த இடத்தில் இருக்கக் கண்டால், அல்லது அவளிருக்குமிடத்திலிருந்து அந்நியன் வெளியாவதைக் கண்டால், மனிதர்களுக்கு மத்தியிலும் அவ்விருவருக்குமிடையே தொடர்புண்டு என்ற செய்தி பரவலாகி இருந்தால், அல்லது நம்பிக்கையானவன் அதனைத் தான் கண்டதாகவும், பலதடவை கண்டதாகவும் கூறினால், அது கணவனாகிய அவனுடைய மனதில் சரியானதாகப்பட்டால், பிறகு அப்பெண் ஒரு குழந்தையைப் பெற்றெடுத்தால் அதனைத் தன் குழந்தை அல்லவென்று அவன் கூறுவது வாஜிபாகும். அந்தத் தொடர்பில் குழந்தை பிறக்கவில்லையானால், அப்பொழுது அவனுக்குச் சிறந்தது என்னவென்றால், அவளுடைய அச்செயலை பகிரங்கப்படுத்தாமல் மறைத்து வைத்து அவளைத் தலாக் சொல்லி விட வேண்டும். அவ்வாறின்றி அவள் மீது அவனுக்குப் பிரியம் இருந்தால் அவளை வைத்து வாழ வேண்டும்.

ஒருவன் மற்றொருவனைத் திட்டினால் அவனை இவன் தன்னைத் திட்டியது போல் திட்டலாம். அதில் பொய், அவதூறு ஆகியவற்றையெல்லாம் கலந்து விடக்கூடாது. இன்னும் அவனுடைய தாய் தந்தையரை இழுத்து வைவதும் (ஏசுவதும்) கூடாது-ஹராம்.

ஒரு முஸ்லிமை நோக்கி, "நாயே, பன்றியே" என்று கூறுவதும் பாவமாகும். அவ்வாறு சொன்னவரைக் கண்டிக்க வேண்டும்; அவன் தவ்பாச் செய்வதும் வாஜிபாகும்.

## சபித்தல் பற்றிய விவரம்

இந்த கிதாபில் நிகாஹுடைய பாடத்துடன் வரவேண்டிய சபித்தல் பற்றிய ஒரு பாடம் விடுபட்டு விட்டது. எனவே, அந்தச் சபித்தல் என்னும் பாடம் அவதூறு என்னும் இந்தப் பாடத்துக்கு இசைவாக இருப்பதால் அதனைச் சுருக்கமாக இங்கு எழுதுகிறோம்.

ஒரு மனிதர் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து, "யாரசூலல்லாஹ், என் மனைவி தன்னைத் தொடுகிற ஆடவரின் கையைத் தட்டுவதில்லை. (அதாவது பிற ஆண்களுடன் தொடர்புள்ளவளாக இருக்கிறாள்) அவள் கர்ப்பமுற்றும் இருக்கிறாள்" என்று கூறினார். அதை அந்தப் பெண் மறுத்தாள். அதற்கு நபி (ஸல்) அவர்கள, "உனக்கு விருப்பமாக இருந்தால் அவளை வைத்துக் கொள் இல்லாவிட்டால் தலாக் சொல்லி விடு" என்று கூறினார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் கீழ்கண்ட இறைவசனம் இறங்கியது. அதாவது:

وَالَّذِيْنَ يَرْمُوْنَ اَزْوَاجَهُمْ وَلَمْ يَكُنْ لَّهُمْ شُهَدَآءُ اِلَّآ
اَنْفُسُهُمْ فَشَهَادَةُ اَحَدِهِمْ اَرْبَعُ شَهَادَاتٍ بِاللّٰهِ اِنَّهٗ
لَمِنَ الصّٰدِقِيْنَ ۝ وَالْخَامِسَةُ اَنَّ لَعْنَتَ اللّٰهِ عَلَيْهِ اِنْ كَانَ
مِنَ الْكٰذِبِيْنَ ۝ (24:6,7)

"தங்களுடைய மனைவியர்களை (விபச்சாரத்தைக் கொண்டு) அவதூறு கூறுபவர்கள் (அதற்குரிய) சாட்சிகள் அவர்களைத் தவிர வேறு எவரும் அவர்களுக்கு இல்லையானால், அவர்களில் ஒருவன் (அப்படி அவதூறு சொல்லக் கூடியவர்களில் ஒருவனாகிய அவன்) அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து தான் உண்மையாளர்களில் உள்ளவன் என்பதாக நான்கு தடவை சாட்சி சொல்வதாகும். ஐந்தாவது தடவை, தான் பொய்யர்களில் உள்ளவனாக இருந்தால் அல்லாஹ்வுடைய சாபம் தன் மீது உண்டாகட்டும் என்று கூறுவதாகும்" என்று கூறியுள்ளான் .

இவ்வாறு சத்தியம் செய்தால் அவதூறுக்குரிய ஹத்தை விட்டும்அவன் நீங்கி விடுவான். அவளுக்குக் குழந்தையிருந்தால் அதனையும் தன்னை விட்டும் நீக்கிடுவான். (குழந்தை தாயைச் சேர்ந்ததாகும்)

மேற்கண்ட விதமாக கணவன் சத்தியம் செய்வதைக் கொண்டு தன்மீது விபச்சாரத்தின் ஹத்து ஏற்படுவதைத் தடுப்பதற்காக மனைவியானவளும் இவ்வாறே நான்கு தடவை சாட்சி சொல்லி ஐந்தாவது தடவை அவன் உண்மையாளர்களில் உள்ளவனாக இருந்தால் தன் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும் என்று கூறுவாள். இது விஷயமாக அல்லாஹுதஆலா பின்வருமாறு கூறுகிறான்:

وَيَدْرَأُ عَنْهَا الْعَذَابَ اَنْ تَشْهَدَ اَرْبَعَ شَهَادَاتٍ بِاللّٰهِ
اِنَّهٗ لَمِنَ الْكَاذِبِيْنَ ۝ وَالْخَامِسَةَ اَنَّ غَضَبَ اللّٰهِ عَلَيْهَآ
اِنْ كَانَ مِنَ الصَّادِقِيْنَ ۝ (24:8,9)

"அவள் தன் மீது விதிக்கப்பட வேண்டிய தண்டனையைத் தட்டிக் கழிப்பதற்காக (அவள் அவனின் அவதூறை மறுத்து) நிச்சயமாக (த் தன்னுடைய) அ(க்கண)வன் பொய் சொல்பவர்களில் நின்றுமுள்ளவன் என்று அல்லாஹ்வைக் கொண்டு நான்கு முறை சத்தியம் செய்துக் கூறுவதுடன், ஐந்தாவது முறையாக மெய்யாகவே அவன் (இவ்விஷயத்தில்) உண்மை சொல்பவர்களில் நின்றுமுள்ளவனாக இருந்தால் தன் மீது அல்லாஹ்வின் கோபம் உண்டாவதாக என்றும் (அவள் கூற வேண்டும். இப்படிக் கூறுவதின் மூலம் அவள் மீது விதிக்கப்படவேண்டிய தண்டனை நீக்கப்பட்டு விடும்)"

இவ்வாறு சபித்துக் கொண்டால் இருவரும் பிரிந்து விடுவார்கள். இருவரும் இணைவது எப்பொழுதுமே ஹராமாகும் (மற்றொருவனுக்குத் திருமணம் செய்து கொடுத்து அவன் தலாக்கு சொல்லிய பிறகும், அதாவது: தஹ்லீல் ஆனபிறகும் முந்திய புருஷனுக்கு இவளை நிகாஹ் செய்து கொடுக்கக்கூடாது.)

## மது அருந்துவதற்குரிய தண்டனை பற்றிய பாடம்

இஸ்லாத்தின் துவக்க காலத்தில் மது அருந்தக் கூடாது என்பது பற்றி திட்டவட்டமான சட்டம் அருளப்படவில்லை. கள் சம்பந்தமாக இறைவன் பின்வருமாறு கூறுகிறான்:

وَيَسْـَٔلُوْنَكَ عَنِ الْخَمْرِ وَالْمَيْسِرِ ۗ قُلْ فِيْهِمَآ اِثْمٌ كَبِيْرٌ وَّمَنَافِعُ لِلنَّاسِ

"கள்ளைப் பற்றியும் சூதாட்டத்தைப் பற்றியும் (நபியே!) உம்மிடம் அவர்கள் கேட்கின்றனர். அவ்விரண்டிலும் மனிதர்களுக்குப் பெரியபாவமும் சில பலன்களும் உண்டு என்று கூறுவீராக!" (2:219) இவ்வாறு அல்லாஹுதஆலா கூறியதால் சிலர் குடித்தார்கள் , சிலர் குடிக்காமலிருந்தார்கள்.

பிறகு சிலர், கள் குடித்து விட்டுத் தொழுகையில் ஈடுபட்ட பொழுது தொழுகையில் தவறாக ஓதித் தொழுதனர். அப்பொழுது இறைவன் பின்வரும் திருவசனத்தை இறக்கினான்:

(4:43) يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ لَا تَقْرَبُوا۟ ٱلصَّلَوٰةَ وَأَنتُمْ سُكَٰرَىٰ

"ஈமான் கொண்டவர்களே! நீங்கள் போதையுள்ளவர்களாக இருக்கும் நிலையில் தொழுகைக்கு நெருங்க வேண்டாம்"

அதன் பிறகும் கள் சம்பந்தமாக முடிவான சட்டம் இல்லாமலே இருந்தது. இறுதியில்:

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوٓا۟ إِنَّمَا ٱلْخَمْرُ وَٱلْمَيْسِرُ وَٱلْأَنصَابُ وَٱلْأَزْلَٰمُ
رِجْسٌ مِّنْ عَمَلِ ٱلشَّيْطَٰنِ فَٱجْتَنِبُوهُ لَعَلَّكُمْ تُفْلِحُونَ (5:90)

"ஈமான் கொண்டவர்களே! மது பானமும், சூதாட்டமும், சிலை வணக்கமும், அம்பெறிந்து குறி பார்த்தலும் ஷைத்தானுடைய செயலிலுள்ள அசுத்தமானதாகும். எனவே, நீங்கள் வெற்றி பெறும் பொருட்டு அதனைத் தவிர்ந்து கொள்ளுங்கள்" என்ற ஆயத்தை அல்லாஹ் இறக்கி வைத்தான்.

ஆகையால் கள் குடிப்பது ஹராமென்பதை அறிந்து, பருவவயதையடைந்த, சுயபுத்தியுள்ள, சுதந்திரவானாகிய ஒருவன் (மருந்தல்லாததற்காக) அதனைக் குடித்தால் அவனுக்கு நாற்பது கசையடி கொடுத்திட வேண்டும். இதனை நீதிபதி அல்லது அவருடைய பிரதிநிதி நிறைவேற்றுவார். அவனுடைய மேனியில் படும்படியாக அடித்திட வேண்டும். மருந்துக்காக தேவையுள்ள அளவு மட்டும் குடிக்கலாம். அவ்வாறே மிருகங்களுக்கும் புகட்டலாம். ஒருவன் கள்ளை கள்ளென்று தெரியாமல் குடித்தால் அவனுக்கு ஹத்து இல்லை. பருவவயதையடையாத சிறுவனுக்கும், புத்தி மாறாட்டமானவனுக்கும் ஹத்து என்னும் (நாற்பது கசையடி)தண்டனை கிடையாது.

போதை தரும் பொருளனைத்தும் அது கொஞ்சமாக இருந்தாலும் மிகுதமாக இருந்தாலும் ஹராமாகும். அதனைக் குடிப்பவனைத்தான் ஹத்து என்னும் கசையடி அடிக்கப்படும். அது போதையை உண்டாக்கவில்லையானாலும் சரி. அதனை வழமையாக உபயோகித்து வருபவனுக்கு அது போதையை ஏற்படுத்தாமலிருக்கலாம். எனினும் ஹத்து நிறைவேற்றப்படும்.

திராட்சையிலிருந்து எடுக்கப்படும் சாராயத்தைத் தவிர மற்றவை ஹலால் என்று ஒருவன் சொன்னால் அவனை காஃபிரென்று சொல்லுதல் கூடாது. ஏனெனில், மற்றதில் கொஞ்சமானது ஹலாலா இல்லையா என்பதில் கருத்து வேற்றுமை இருக்கிறது. திராட்சை சாராயம் (அவிக்கப்படாத கலப்பற்றவை) ஹராமென்பதில் இமாம்களின் ஏகோபித்த அபிப்பிராயம் இருப்பதால் அதில் ஒரு சொட்டேனும் ஹலால் என்று ஒருவன் சொன்னால் அவன் காஃபிராவான். (அவிக்கப்பட்ட திராட்சை சாராயத்தில் ஷாஃபியீ மத்ஹபு அல்லாத இதர மத்ஹபுகளில் அபிப்பிராய பேதம் நடந்திருக்கிறது)

போதை தரும் பானங்களில் மட்டுமே ஹத்து விதியாகும். பானம் அல்லாத கஞ்சா, அபின், ஊமத்தை போன்ற திடப்பொருட்கள் ஹராம் என்பது தானே தவிர அவற்றில் ஹத்து விதியாகாது. இவற்றிலிருந்து நிரந்தரமாக இல்லாமல் ஏதோ ஒரு நேரத்தில் கொஞ்சம் சாப்பிடுவது மக்ரூஹ். ஆனால், மருந்துக்காக எவ்வளவும் சாப்பிடலாம். கஞ்சா, அபின் ஆகியவற்றை அதிகமாக உபயோகிப்பவனைக் கண்டிக்க வேண்டும்.

மது அருந்தியவன் தானே அதனைக் கூறுவது கொண்டும், அல்லது இரு ஆண்கள் சாட்சி கூறுவதைக் கொண்டும் ஹத்து விதியாகும். வாடையைக் கொண்டோ, போதையைக் கொண்டோ, வாந்தி எடுப்பது கொண்டோ விதியாகாது.

சாப்பிடுவது ஹராமாக்கப்பட்ட சில பொருள்களை சாப்பிடுவது சில வேளைகளில் வாஜிபாக ஆகிவிடும். உதாரணமாக: சாப்பிடும் பொழுது தொண்டையில் அடைத்து விக்கிக் கொண்ட நேரத்தில் தண்ணீர் இல்லாமல் கள் மட்டும் இருக்கிற தென்றால், அதனைக் குடித்து நிவர்த்தி செய்து கொள்வது வாஜிபாகும். இப்பொழுது அந்த ஹராமைச் செய்வது வாஜிபாக மாறிவிடுகிறது.

## திருடுதலுக்குரிய தண்டனையின் பாடம்

"திருடிய ஆணையும் பெண்ணையும்-அவ்விருவரும் செய்த (தீய) செயலுக்குக் கூலியாக அல்லாஹ்விலிருந்து உள்ள தண்டனையாக அவ்விருவருடைய கைகளையும் துண்டியுங்கள்" (5:38) என்று அல்லாஹ் குர்ஆனில் கூறியுள்ளான்.

விபச்சாரத்தில் பெண்களை முற்படுத்தியும், திருட்டில் ஆண்களை முற்படுத்தியும் இறைவன் திருமறையில் சொன்னதின் கருத்தாவது: விபச்சாரம் என்பது இச்சையின் மிகைப்பால் நிகழ்வதாகும். இச்சை பெண்களுக்கு மிகைப்பாகக் காணப்படும்.

களவு என்பது பலத்தின் மிகைப்பால் செய்யப்படுவதாகும், பலம் ஆண்களில் மிகைப்பாக இருக்கும்.

எனவே, பாதுகாக்கப்பட்ட ஓரிடத்திலிருந்து கால் தங்கக் காசை அல்லது, அதன் பெறுமானமுள்ளதை மறைமுகமாக ஒருவன் திருடினால் அவன் பருவ வயதை அடைந்தவனாகவும் சுயபுத்தியுள்ளவனாகவுமிருந்தால், திருடியது ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் வலது கையில் மணிக்கட்டுவரை நீதிபதி, அல்லது அவருடைய பிரதிநிதி துண்டிப்பது வாஜிபாகும். ஆனால், அந்தப் பொருளுக்குரியவன் அதனைத் தேடி, திருடியது சாட்சியினால் அல்லது திருடியவனின் விண்ணப்பத்தினால் நிரூபிக்கப்பட்டால் தான் கை துண்டிக்கப்படும்.

அவன் மறுபடியும் திருடினால் இடது காலை பரண்டை (கணை) க்கால் முளிவரை துண்டிக்க வேண்டும். மூன்றாவது தடவையாகத் திருடினால் இடது கையை மணிக்கட்டுவரை துண்டிக்க வேண்டும். நான்காவது தடவை திருடினால் வலது

காலை முளிவரைத் துண்டிக்க வேண்டும். பிறகும் திருடினால், அவனைக் கண்டிக்க வேண்டுமே தவிர கொல்லக் கூடாது.

வக்ஃபுடைய சொத்துக்களையும், பள்ளிவாசலுடைய உத்திரம், நிலை, கதவு போன்றவற்றையும், அலங்காரத்திற்காகத் தொங்க விடப்பட்டிருக்கும் பொருட்கள் ஆகியவற்றையும் திருடினாலும் கை துண்டிக்கப்படும்.

பள்ளிவாசலிலுள்ள பாயை, நிரந்தரமாக எரிக்கப்படும் விளக்கைத் திருடினாலும், அவன் ஜகாத்து வாங்கத் தகுதியானவனாக இருக்கின்ற நிலையில் ஒருவனுடைய ஜகாத்து பொருளிலிருந்தோ, அல்லது பைத்துல் மால் என்னும் பொது நிதியிலிருந்தோ திருடினாலும், சூதானமில்லாத (பாதுகாப்பில்லாத) இடத்திலிருந்து திருடினாலும், திருடிய பொருளிலிருந்து திருடியவனுக்குச் சேர வேண்டிய பங்கிருந்தாலும், திருடிய பொருள் பிறரிடமிருந்து அபகரிக்கப்பட்டதாக இருந்தாலும், அபகரிக்கப்பட்ட இடத்திலேயே திருடினாலும், தன்னுடைய பெற்றோர், பாட்டன், பாட்டி, தன்னுடைய பிள்ளைகள், பிள்ளையுடைய பிள்ளைகள் ஆகியோரின் பொருளைத் திருடினாலும் கையைத் துண்டிப்பது கூடாது. இந்நிலையில் திருடியவர் ஆணாயினும், பெண்ணாயினும் கையைத் துண்டிப்பது கூடாது.

கணவன், மனைவி இருவரிலொருவர் மற்றவருடைய பொருளைத் திருடுவதால் பலமான சொற்படி கை துண்டிக்கப்படும்.

இரண்டு நபர்கள் சேர்ந்து கால் தங்க நாணயத்தைக் களவெடுத்தால் இருவரில் யாருடைய கையையும் துண்டிக்கக் கூடாது.

திருட்டுத்தனம் என்பது மேற்சொன்ன முறையில் மறைவாக எவருக்கும் தெரியாமல் எடுப்பதாகும். எனவே, ஒருவனிடமிருந்து பொருளைப் பறித்துச் சென்றாலும், கொள்ளையடித்தாலும் கையைத் துண்டிக்கக்கூடாது. ஆனால், அதனை விடக்கடினமான தண்டனையை அரசாங்கத்தின் மூலம் அவனுக்குக் கொடுக்க வேண்டுமென்பது மார்க்கத்தின் சட்டமாகும்.

## வழிப்பறிக் கொள்ளையர்களுக்குரிய தண்டனையின் பாடம்

அல்லாஹு ஆலா கூறுகிறான். "......அல்லாஹ்வுடனும் அவனுடைய தூதருடனும் போர் செய்து கொண்டும், பூமியில் குழப்பம் செய்து கொண்டும் திரியக்கூடியவர்களுக்குரிய தண்டனையாகிறது. அவர்கள் கொல்லப்பட வேண்டும், அல்லது தூக்கிலிடப்பட வேண்டும், அல்லது அவர்களுடைய கைகளும் கால்களும் மாறுபட்ட முறையில் துண்டிக்கப்பட வேண்டும்; அல்லது அவர்கள் நாடு கடத்தப்பட வேண்டும். இஃது இம்மையில் அவர்களுக்கு இழிவு (தரும் தண்டனை) ஆகும். அன்றி மறுமையிலோ, மகத்தான வேதனையும், அவர்களுக்கு உண்டு *(5:33)*

மக்களின் போக்குவரத்துப்பாதையில் நின்று கொண்டு அவர்களை பயமுறுத்துகிறவர்களைப் பற்றி அரசர் அறிந்தால் அவர்களைப் பிடித்து வந்து

கடினமான தண்டனையளிப்பது வாஜிபாகும். அவர்கள் யாரையும் கொலை செய்யாவிட்டாலும் அல்லது ஒரு கால் தங்கக் காசு பெறுமதியுள்ள யாருடைய பொருளையும் கொள்ளையடிக்கா விட்டாலும் சரி, மறியலில் (சிறையில்) அடைக்கும் தண்டனையளிக்க வேண்டும். பொருளை மட்டும் கொள்ளையடித்திருந்தால் (அவன் கொலை செய்யாவிட்டாலும்) வலது கையையும் இடது காலையும் முளிவரை துண்டிக்கப்படும். கொலை செய்திருந்தால் பழிக்குப் பழியாக அவனை கொலை செய்வதும் வாஜிபாகும். கொலை செய்யப்பட்டவனின் உரிமையாளன் அதனை மன்னித்தாலும் சரி, கொல்லப்படுவான்.

அவன் கொலையும் செய்து, கால் தங்கக்காசுக்குக் குறையாத அளவுக்குக் கொள்ளையும் அடித்திருந்தால் அவனைக் கொலை செய்து, பிறகு குளிப்பாட்டி, கஃப்னிட்டு, தொழவைத்து, பிறகு மூன்று நாள்கள் வரை அவனுடைய உடலைக் கழுமரத்தில் ஏற்றி வைக்க வேண்டும். அவ்வாறு செய்வது வாஜிபாகும். மூன்று நாட்களுக்கு முன் அது நாறிவிடுமென்றிருந்தால் கீழே இறக்கி விட வேண்டும். இன்னும் ஒரு சொற்படி அது அப்படியே மடிந்து மக்கிப் போகும் வரை கழு மரத்திலேயே விட்டுவிட வேண்டும் என்றும் சொல்லப்பட்டுள்ளது. மற்றொரு சொல்லில் அவனை உயிருடனேயே தூக்கில் போட்டு அதன் பிறகு அவனை இறக்கிச் கொல்ல வேண்டுமென்று கூறப்பட்டுள்ளது.

## تَعْزِيْرُ கண்டித்தல் என்பதின் விளக்கம்

ஹத்து என்ற தண்டனையும், கஃப்ஃபாரா என்ற குற்றப்பரிகாரமும் இல்லாத குற்றத்திற்கு நீதிபதியுடைய விருப்பப்படி குற்றம் செய்தவனைக் கண்டிப்பது மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டுள்ளது. அக்குற்றம் மனிதர்களுக்குச் செய்திருந்தாலும் சரி, அல்லாஹ்விற்குரிய குற்றமாக இருந்தாலும் சரி. உதாரணமாக: அந்நியப்பெண்ணை மர்மஸ்தானம் அல்லாத வேறு இடங்களில் தொடர்பு கொள்வது, அவதூறு இல்லாது திட்டுவது, அநியாயமாக ஒருவரை அடிப்பது ஆகியவற்றைப் போல்.

சில சமயங்களில் பாவமில்லாத காரியத்திற்கும் கண்டித்தல் அவசியமாகும். உதாரணமாக: எவ்விதத் தேவையுமின்றி எப்பொழுதும் வீண் வேலைகளில் வீண் பேச்சுகளில் மூழ்கி இருப்பது போல்.

சில வேளைகளில் ஹத்தும் கஃப்ஃபாராவும் விதியாகாமலிருப்பதுடன் கண்டிப்பதும் கூடாது. உதாரணமாக கெட்டவன் என்று பெயரெடுக்காத ஒருவன் ஏதேனும் ஒரு சிறிய பாவத்தைச் சொற்பமாகச் செய்தால் கண்டிப்பது தேவை இல்லை. அதுபோல் திருமணமான ஒருவன், தன் மனைவியுடன் விபச்சாரம் செய்வதைப் பார்த்த கணவன், விபச்சாரம் செய்தவனைக் கொன்று விட்டாலும் கொன்றவனுக்கு ஹத்தும் கிடையாது, கஃப்ஃபாராவும் கிடையாது, கண்டிப்பதும் கிடையாது.

ரமலான் மாதத்தில் நோன்பு வைத்திருப்பவன் பகலில் தன் மனைவியிடம்

உடலுறவு கொண்டால் கஃப்ஃபாராவும் கொடுக்க வேண்டும். அவனைக் கண்டிக்கவும் வேண்டும்.

கண்டித்தல் என்பது குற்றத்திற்கேற்றவாறும், அந்தக் குற்றத்தைச் செய்தவனின் தன்மைக்கு ஏற்றவாறும் செய்யப்படும்.

அதாவது: சிறையில் அடைத்து வைப்பது, காயப்படுத்தாமல் அடிப்பது, கையினால் கொட்டுவது, மஜ்லிசை விட்டு வெளியேற்றுவது, ஊரை விட்டுத் துரத்துவது, அதட்டுவது ஆகிய தண்டனைகளைப் போன்றவைகளாகும்.

அடியைக் கொண்டு கண்டிப்பதானால் சுதந்திரமானவனை நாற்பது அடிகளை விடக் குறைவாகவும், அடிமைக்கு இருபது அடிகளை விடக் குறைவாகவும் அடிப்பது வாஜிபாகும். ஊரை விட்டும் வெளியேற்றுவது கொண்டு கொடுக்கப்படும் தண்டனையும் அவ்விதம் தான்.

தகப்பன் (தகப்பனுடைய தகப்பன்) மற்றும் தாய், தன் மக்களையும், ஆசிரியர் மாணவரையும், புருஷன், தகராறு செய்யக் கூடிய மனைவியையும் கண்டிக்கலாம். அதாவது: தனக்கு (புருஷனுக்கு) ஆற்ற வேண்டிய கடமைகளுக்காகவும், இறைவனுக்கு ஆற்ற வேண்டிய கடமைகளுக்காவும் மனைவியைக் கண்டிக்கலாம்.

பணம் பெற்றுக் கொண்டு கண்டிப்பதை விட்டுவிடலாமா என்பதில் கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன. சரியான சொற்படி பணம் பெறலாம். ஆனால் கண்டிப்பது என்ற சட்டம் விழுந்து விடாது என்று கூறப்பட்டுள்ளது.

ஒரு ஹதீஸில் اَقِيْلُوْا ذَوِالْهَيْئَاتِ عَثَرَاتِهِمْ

"நல்ல அந்தஸ்துடையவர்களின் சருகுதல்களைப் பொருட்படுத்தாதீர்கள்" என்று கூறப்பட்டுள்ளது. எனவே, கண்ணியவான்களின் சிறு தவறுகளை மன்னிக்க வேண்டும்.

## வரம்பு மீறி அடர்ந்தேறுபவரைத் தடுப்பது பற்றிய விவரம்

"மனிதர்களில் சிலரை சிலரைக் கொண்டு அல்லாஹ் தடுக்க வில்லையானால் இந்த பூமி குழப்பமாகிவிடும்" என்று அல்லாஹுதஆலா குர்ஆனில் கூறியுள்ளான் *(2:251)*

பாதுகாப்பளிக்கப்பட்டுள்ள உயிர், பொருள் ஆகியவற்றின் மீது அநியாயமாக அடர்ந்தேறிவரும் ஒருவனைத் தடுத்து நிறுத்துவது கூடும். அவன் காஃபிராக இருந்தாலும், முஸ்லிமாக இருந்தாலும், பருவமடைந்தவனாக இருந்தாலும், சிறுவனாக இருந்தாலும், ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் தடுப்பது கூடும்.

ஒரு பெண்ணுடைய மர்மஸ்தானத்தின் மீதும், அதற்கு முன் அவளை முத்தமிடுவது போன்றதின் மீதும் அடர்ந்தேறும் ஒருவனைத் தடுப்பது வாஜிபாகும்.

தடுப்பதில் முதலாவதாக இலேசானதைக் கொண்டு தடுக்கவேண்டும். அதில் விலகிக்கொள்ளாவிட்டால் அதை விடக் கடினமானதைக் கொண்டும், அதன் பிறகு அதைவிடக் கடினமானதைக் கொண்டும் படிப்படியாகத் தடுக்க வேண்டும்.

மிரட்டுவதினால் ஒருவன் விலகிக் கொள்வான் என்றிருந்தால் அவனை அடிப்பது கூடாது. ஒரு படித்தரமான செயலைக்கொண்டு அவனைத்தடுக்க முடியுமானால் அதைவிட மேலான செயலை செய்து அதனால் சேதம் ஏதேனும் ஏற்பட்டால் அதற்குப் பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டும்.

படிப்படியாக அவனைத் தடுப்பதற்கு முயற்சிக்கும் பொழுது அவன் வேகமாக முன்னேறி வந்தாலும், அல்லது கனமான ஆயுதத்தைத்தவிர வேறு எதுவும் கிடைக்க வில்லையானாலும் படிப்படியாகத் தடுத்தல் விழுந்து விடும்.

ஒருவருடைய இடத்தில் மற்றொருவருடைய ஆடு, மாடு, கோழி போன்றவை வந்து நுழைந்து ஏதேனும் பொருளைச் சேதப்படுத்தி விட்டால் அப்பிராணிக் குரியவன் அதற்குப் பொறுப்பேற்பான். ஆனால், அவன் அந்தப் பிராணியைத் தடுப்பதற்குப் படிப்படியாகக் கையாள வேண்டிய முறையை மீறித்தடுத்ததில் அதனுடைய கால், வால், காது, கொம்பு போன்றவலை ஒடிந்து விட்டால் நீதியாகத் தீர்ப்பு கூறும் சிலரைக் கொண்டு அந்தப் பிராணியில் ஏற்பட்ட சேதத்தின் விளைவாக ஏற்படும் நஷ்டத்தை மதிப்பிட்டு அந்தத் தொகையை இவன் அவனுக்கு கொடுக்க வேண்டும். அதாவது: கால் ஒடிவதற்கு முன் அதனுடைய விலை பத்து ரூபாய்; ஒடிந்த பின் அது எட்டு ரூபாய்தான் பெறும் என்றிருந்தால் இரண்டு ரூபாய் கொடுப்பான்.

## கத்னா செய்வதின் பாடம்

நபி இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தங்களுடைய எண்பதாவது வயதில் கத்னா செய்து கொண்டார்கள். இப்றாஹீம் (அலை) அவர்களுடைய வழிமுறையைப் பின்பற்றுமாறு நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை நோக்கி அல்லாஹுதஆலா குர்ஆனில் கூறியுள்ளான். எனவே அன்னாரைப் பின்பற்றி கத்னா செய்து கொள்வது அவசியமாகும்.

கத்னா செய்வது ஆண்களுக்கு வாஜிப், பெண்களுக்கு சுன்னத்து என்பதில் சில கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன. நபி இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு எண்பதாவது வயதில் கத்னா செய்யுமாறு அல்லாஹுதஆலா கட்டளையிட்டான். உடனே தங்களிடமிருந்த ஒரு சிறிய கோடாலியினால் தாங்களே கத்னா செய்து கொண்டார்கள்.

நபிமார்களில் கத்னா செய்யப்பட்டவர்களாகப் பிறந்தவர்கள் பதினேழுபேர் என்று ஜலாலுத்தீன் சுயூத்தி (ரஹ்) அவர்கள் ஒரு பாடலாகக் கூறியுள்ளார்கள்:-

مُحَمَّدُ ادَمُ اِدْرِيْسُ شِيْثُ وَنُوْحُ ؛
سَامُ وَهُوْدُ شُعَيْبُ يُوْسُفُ مُوْسٰى ؛
لُوْطُ سُلَيْمَانُ يَحْيٰ صَالِحُ زَكَرِيَّا ؛
وَحَنْظَلَةُ التَّرْسِيُّ مَعَ عِيْسٰى ؛

"முஹம்மது, ஆதம், இத்ரீஸ், ஷீத், நூஹ், ஸாம், ஹூது, ஷுஐபு, யூசுப், மூஸா, லூத், சுலைமான், யஹ்யா, ஸாலிஹ், ஜகரிய்யா ஹன்ளலா, ஈஸா" (அலைஹிமுஸ்ஸலாத்து வஸ்ஸலாம்) ஆகியோராவர்.

ஆண் பெண் இரு சாராரும் பருவ வயதையடைவதாலும், தன் அறிவினால் விளங்கித் தெரிந்து கொள்ளக்கூடிய ஆற்றல் ஏற்படுவதாலும் சுத்னா செய்து கொள்வது வாஜிபாகி விடும். அதற்கு முன் செய்து கொள்வது நன்மைக்குரியதாகும். விபரம் தெரிந்த குழந்தைக்கு சுத்னா செய்விப்பது அதன் வலீகாரன் மீது வாஜிபாகும், என்று இமாம் ஜர்கஷீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். ஒரு குழந்தை சுத்னா செய்யப்பட்டதைப் போல் உள்ள மர்மஸ்தானத்தோடு பிறந்தால் மறுபடி சுத்னா செய்வது விதியாகாது.

ஆணுக்கு ஆண்குறியின் முன் பகுதியை (வரையை) மூடிக் கொண்டிருக்கு[illegible] தோலை அந்த வரை முழுவதும் வெளியாகுமளவுக்குத் துண்டிப்பதாகும். பெண்[illegible] மர்மஸ்தானத்தின் மேல் பகுதியில் நீர்த் தாரைக்கு மேல் சேவலின் கொண்[illegible] இருக்கும் ( بَظْرٌ ) நிதம்பத்தின் தோலில் சிறிதளவைத் துண்டிப்பதாகும்.

குழந்தை பிறந்த நாளை நீக்கி ஏழாம் நாளன்று தத்தரமாக (வ[illegible] செய்வது சுன்னத்தாகும். அதன் பிறகு நாற்பதாம் நாள், பிறகு ஏழாம் வயதில் [illegible] சுன்னத்தாகும். தொழுகையைக் கொண்டு ஏவப்படுகிற காலமும் ஏழு [illegible] இருப்பதால் அதற்குப்பிந்தாமல் சுத்னா செய்து கொள்வது சுன்னத்தாகும்.

அகீகா கொடுப்பது பிறந்த நாளிலிருந்து ஏழாம் நாள் செய்[illegible] சுன்னத்தாகும்.

குழந்தையின் உடம்பில் முளைத்திருக்கும் உண்ணி, சுழலை ஆகியவற்றை தகப்பனோ பாட்டனோ நீக்கலாம். மற்றெவரும் நீக்கக் கூடாதென்று "கலாயித்" என்னும் நூலில் எழுதப்பட்டிருக்கிறது.

சுத்னா இல்லாமல் ஒருவர் மரணமடைந்து விட்டால் அந்த மய்யித்திற்கு சுத்னா செய்யக் கூடாது. செய்யாமலிருந்ததால் அவன் (மய்யித்து) குற்றவாளியாவான். அவனைக் குளிப்பாட்டும் பொழுது தண்ணீர் அத் தோலினுள் செல்லாவிட்டால் தயம்மும் செய்து வைக்க வேண்டும். இது விஷயம் முன்னால் கூறப்பட்டும் இருக்கிறது.

கத்னா செய்வதால் ஆபத்து ஏற்பட்டுவிடுமென்ற அளவுக்கு பிள்ளை பலவீனமாக இருந்தாலோ, அல்லது நோய் இருந்தாலோ கத்னா செய்யக் கூடாது.

ஆணின் கத்னாவைப் பிரபலப்படுத்துவதும், பெண்ணின் கத்னாவை மறைப்பதும் சுன்னத்தாகும். அக்குழந்தைக்குத் தனியாக சொத்திருந்தால் அதிலிருந்து கத்னாவுடைய செலவு செய்யப்படும்.

இல்லாவிடில் அக்குழந்தைக்கு உணவு, உடை கொடுப்பது யார்மீது பொறுப்போ அவர் அதனைச் செய்ய வேண்டும்.

கத்னா செய்வது ஷாஃபியி மத்ஹபில் வாஜிபாகும். எனினும், நம் நாட்டில் அதனை சுன்னத்துச் செய்வது என்று சொல்வதெல்லாம் சுன்னத்துக்கு மார்க்கம் என்ற பொருளில் சொல்வதாகும். அல்லது ஹனஃபீ மத்ஹபைத் தொடர்ந்து அவ்வாறு சொல்வதாகும். ஏனெனில், நம் நாட்டில் முன் அரசு நடத்திய நவாபுகளெல்லாம் ஹனபி மத்ஹபுக்காரர்களாக இருந்ததால் அந்த அரசர்களைப் பின் பற்றி ஷாஃபியி மத்ஹபைச் சேர்ந்தவர்களும் அதை சுன்னத்து என்று அழைத்துப் பழகி இருக்கலாம்.

## மூக்கு, காது குத்துவது, பிறந்த பிள்ளையின் தொப்புளை அறுப்பது

குழந்தை பிறந்தவுடனே தொப்புளைக் கட்டி பின் அதனை அறுப்பது வாஜிபாகும். பெண்ணாயினும், ஆணாயினும் மூக்குக் குத்துவது ஹராமாகும். சிறிய ஆண் குழந்தைக்குக் காது குத்துவதும் சந்தேகமற ஹராமாகும். சிறிய பெண் குழந்தைக்குக் காது குத்துவது ஆகுமா? ஆகாதா? என்பதில் கருத்து வேறுபாடு இருக்கிறது.

மாப்பிள்ளை ஆசை கொள்வார் என்பதற்காகவும் அலங்காரத்திற்காகவும் சிறிய பெண் குழந்தையின் காதைக் குத்துவது கூடும் என்று ஜர்கஷீ (ரஹ்) அவர்கள் புகாரியில் உள்ள ஒரு ஹதீஸை ஆதாரமாகக் கொண்டு கூறியுள்ளார்கள்.

ஹனஃபீ மத்ஹபின் படி பெண்களுக்குக் காது குத்துதல் குற்றமல்ல என்று பதாவா காளிகானில் கூறப்பட்டுள்ளது.

ஹன்பலீ மத்ஹபின் படி அலங்காரத்திற்காகக் கூடுமென்று 'ரிஆயா' என்ற நூலில் எழுதப்பட்டுள்ளது. இன்னும் அதில் சிறிய ஆண் குழந்தைக்குக் காது குத்துவது மக்ரூஹ் என்றும் கூறப்பட்டுள்ளது.

இமாம் இப்னு ஹஜர் (ரஹ்) அவர்களும் இதனை(சிறு பெண்குழந்தைகளுக்குக் காது குத்துவதை) ஆகுமாக்கி வைத்துள்ளார்கள். காது குத்துவது எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் பெண் குழந்தைகளுக்கு அனுமதிக்கப்பட்டதாக இருந்துள்ளது என்று கூறியுள்ளார்கள். (ஆனால் ஆண் குழந்தைகளுக்கு அது கூடாதென்றும் கூறியிருக்கிறார்கள்.) இமாம் கஸ்ஸாலீ (ரஹ்) அவர்கள் இதற்கு

மாற்றமாக அது நோவினையை உண்டாக்குதலாகும்; அதனால் கூடாது என்று கூறியுள்ளார்கள்.

## பிறரின் பொருளை சேதப்படுத்தும் கால்நடை போன்றவை பற்றிய விவரம்

ஆடு, மாடு போன்ற கால்நடை இரவிலோ, பகலிலோ எவரேனும் ஒருவருடைய பயிரையோ, அல்லது வேறு பொருட்களையோ சேதப்படுத்தி விட்டால், அக் கால்நடைக்குரியவனும் அப்பொழுது அதனுடன் இருந்தால் அச்சேதத்திற்கு அவன் பொறுப்பாளியாவான்.

உரியவன் இல்லாமல் தனியாக மேயும் கால்நடை வேளாண்மையையோ அல்லது ஏதேனும் ஒரு பொருளையோ சேதப்படுத்தி விட்டால், அது பகல் நேரத்தில் நடைபெற்றிருந்தால், உரியவன் பொறுப்பாளியாக மாட்டான்; இரவு நேரமாக இருந்தால் பொறுப்பாளியாவான். ஏனெனில், இரவில் அதனைக் கட்டி வைப்பது அவன் பொறுப்பாக இருப்பதால்.

சேதம் விளைவிக்கும் பூனை போன்றதைத் தடுத்து வைக்காமல் விட்டு, அது கோழிபோன்ற ஒரு பறவையை, அல்லது உணவுப் பொருட்களைச் சேதப்படுத்தி விட்டால் அவன் அதற்குப் பொறுப்பாளியாவான். அது இரவிலானாலும் பகலிலானாலும் சரியே.

சேதம் விளைவிக்க வரும் ஒரு பூனையை முன் "அடர்ந்தேறிவருபவனைத் தடுத்து நிறுத்துதல்" என்னும் பாடத்தில் சொன்ன முறைப்படி படிப்படியாகத் தடுப்பான். அது அமைதியாகப் போய்விட்டால் அதனைக் கொல்லுதல் கூடாது. அது மீறிவரும் பொழுது கொல்வது கூடும் என்று ஒரு கூட்டத்தினர் கூறியுள்ளனர். அவர்கள் பாம்பு, தேள், எலி, காகம், பருந்து, வெறிநாய் போன்ற சங்கை செய்யப்படாத பிராணிகளுடன் அதனையும் சேர்க்கின்றனர்.

## ஃபர்லு கிஃபாயா போன்ற பலவித நடைமுறைகளைப் பற்றிய பாடம்

ஃபர்லு கிஃபாயா பல இருக்கின்றன. அவற்றில் சில இங்கு கூறப்படுகிறது. மார்க்கத்திலுள்ள அத்தாட்சிகளைக் கொண்டு நிலை நிற்பது, மார்க்க கல்வியில் தஃப்ஸீர், ஹதீஸ், ஃபிக்ஹு ஆகியவற்றில் அதிகமான அளவு கற்பது, (குழந்தைகள், பெண்கள், நலிந்தவர்கள் போன்ற)பாதுகாப்பு அளிக்கப்பட வேண்டியவர்களுக்கு ஏற்படும் தொந்தரவுகளைத் தடுத்து நிறுத்துவது, நன்மையை ஏவுவது, தீமையைத் தடுப்பது, ஒரு விஷயத்தில் தேவையான அளவு சாட்சிகளை விட அதிகமான சாட்சி தேவையானால் அதற்கு சாட்சி கூறுவது. (அதிகமான சாட்சிகள் இல்லாவிட்டால் இவன் சாட்சி கூறுவது இவன் மீது ஃபர்லு ஐனாகி விடும். உதாரணமாக: ஒரு விஷயத்தில் சாட்சி சொல்வதற்கு மார்க்கச் சட்டப்படி இரண்டு நபர்கள்

தேவையாவார்கள். அந்த வேளையில் இவன் மூன்றாம் நபராக இருந்தால்தான் ஃபர்ளு கிஃபாயாவாக இருக்கும். ஆனால் இவனையும் சேர்த்து இரண்டு நபர்கள் மட்டும்தான் இருக்கிறார்கள் என்ற நிலை இருக்கும் பொழுது சாட்சி கூறுவது இவன் மீது ஃபர்ளு ஐனாகி விடும்) சாட்சியம் கூறும் விஷயத்தில் இறைவன் கீழ்க்கண்டவாறு திருமறையில் கூறுகிறான். அதாவது:

وَاسْتَشْهِدُوْا شَهِيْدَيْنِ مِنْ رِّجَالِكُمْ ۚ فَاِنْ لَّمْ يَكُوْنَا
رَجُلَيْنِ فَرَجُلٌ وَّامْرَاَتٰنِ مِمَّنْ تَرْضَوْنَ مِنَ الشُّهَدَآءِ
اَنْ تَضِلَّ اِحْدٰىهُمَا فَتُذَكِّرَ اِحْدٰىهُمَا الْاُخْرٰى ۚ وَ
لَا يَاْبَ الشُّهَدَآءُ اِذَا مَا دُعُوْا ۚ (2: 282)

"மேலும் உங்களின் ஆண்களில் இருவரை சாட்சியாக ஆக்கிக் கொள்ளுங்கள். அவ்வாறு இருவரும் ஆண்பாலராகக் கிடைக்காவிட்டால் ஓர் ஆணுடன், நீங்கள் சாட்சியாக அங்கீகரிக்கக்கூடிய இருபெண்களை சாட்சியாக்கிக் கொள்ளுங்கள். ஏனெனில், அவ்விரு பெண்களில் ஒருத்தி தவறிவிட்டாலும் மற்றபெண் அவளுக்கு ஞாபக மூட்டிக் கொடுக்கும் பொருட்டு. (இவ்வாறு செய்யவும்) சாட்சிகள் (அவர்களுக்குத் தெரிந்தவற்றைக் கூற) அழைக்கப்படும்போது (சாட்சி கூற) மறுக்க வேண்டாம்"

இந்த ஆயத்தின் அடிப்படையில்தான் சாட்சியம் கூறுவது சில வேளைகளில் ஃபர்லு கிஃபாயாவாகவும், மற்றும் சில வேளைகளில் ஃபர்ளு ஐனாகவும் இருக்கிறது. ஆண்டு தோறும் ஹஜ்ஜு செய்வது, உம்ராச் செய்வது, கஃபாவைப்பரிபாலனம் செய்வது, ஜனாஸாவை அடக்குவதற்குரிய ஏற்பாடுகளைச் செய்வது, ஒருவன் ஒரு கூட்டத்தினருக்குச் சொல்லிய ஸலாமுக்கு அவர்களில் ஒருவர் பதில் சொல்வது ஆகியவையெல்லாம் ஃபர்லு கிஃபாயாவாகும்.

ஊரிலுள்ள எவரேனும் ஒருவர் செய்தால் எல்லோருடைய கடமையும் நீங்கி விடுவதற்குப் பெயர் ஃபர்லு கிஃபாயாவாகும். ஆனால், அனைவரும் செய்தால் ஒவ்வொருவருக்கும் ஃபர்லுடைய நன்மை உண்டு. 'ஃபர்லு ஐன்' என்பது ஒவ்வொருவரின் மீதும் விதியானதாகும். ஐங்காலத் தொழுகைகள் போல்.

இவ்வாறே 'சுன்னத்து கிஃபாயா' என்பது ஒரு சிலர் செய்தால் அது சுன்னத்தென்பது நிறைவேறிவிடும். உதாரணமாக: ஒரு கூட்டத்தினர் உணவருந்த உட்கார்ந்திருக்கும் நேரத்தில் சாப்பிடுவதற்காக ஒருவர் மட்டும் 'பிஸ்மில்லாஹ்' சொன்னால் அந்த சுன்னத்து எல்லோரையும் விட்டு நீங்கி விடும். எனினும், எல்லோரும் செய்தால் ஒவ்வொருவருக்கும் சுன்னத்தின் நன்மை உண்டு. 'சுன்னத்து ஐன்' என்பது ஒவ்வொருவரும் செய்வது சுன்னத்தாகும். சுன்னத்தான தொழுகைகள் போல்.

ஆயுதம் வைத்துள்ள பருவமடைந்த, சுதந்திரமான சக்தியுள்ள முஸ்லிம் ஒருவன் அல்லாஹ்வின் பாதையில் ஜிஹாத் செய்வது ஃபர்லு கிஃபாயாவாகும்.

'ஃபர்லு' என்பது கட்டாயம் செய்யவேண்டிய காரியமாகும். அதனைச் செய்யாமல் குற்றம் நீங்காது. ஃபர்லுக்கு சுன்னத்தை விட அதிகமான - அளவில்லாத . நன்மைகள் உண்டு. சுன்னத்தைச் செய்தால் நன்மையுண்டு; செய்யாவிட்டால் குற்றமில்லை.

சில சுன்னத்துகள் ஃபர்லை விட அதிக நன்மைகள் உடையவையாகும். உதாரணமாக:- ஸலாம் சொல்வதும், அதற்கு பதில் சொல்வதும். முந்தியது சுன்னத்து; இரண்டாவது ஃபர்லு. இன்னும் இமாமத்து செய்வது ஃபர்லு கிஃபாயாவாகவும், பாங்கு சொல்வது சுன்னத்து கிஃபாயாவாகவும் இருப்பதைப்போல.

சில இடங்களில் ஃபர்லை வாஜிபென்றும், லாஜிமென்றும் சுன்னத்தை முஸ்தஹப்பு, நஃபில், மன்தூப், ததவ்வுஃ என்றும் சொல்லப்படும். ஒரு ஹதீஸில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸ்ஸலல்லம் அவர்கள் கூறுவதாவது:

اَدِّ فَرَائِضَ اللهِ تَكُنْ اَعْبَدَ النَّاسِ. وَاجْتَنِبْ مَحَارِمَ
اللهِ تَكُنْ اَزْهَدَ النَّاسِ.

அதாவது, "அல்லாஹ்வுடைய ஃபர்லுகளை நீ நிறைவேற்றிவிடு. மனிதர்களில் பெரிய வணக்கசாலியாக ஆகிடுவாய், அல்லாஹ்வினால் ஹராமாக்கப்பட்டவற்றைத் தவிர்ந்து கொள். மனிதர்களில் சிறந்த பற்றற்றவனாக ஆகிடுவாய்".

இதனால் சுன்னத்துகளை இலேசாக எண்ணிவிடக்கூடாது. "என்னுடைய சுன்னத்தை விட்டவன் என் உம்மத்தைச் சேர்ந்தவனல்லன்" என்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள். மேலும் இஸ்லாம் என்பதே சுன்னத்து தான் என்றும், சுன்னத்துகளைக் கொண்டேயன்றி தீனில் அழகும் சிறப்பும் இல்லை என்றும், ஃபர்லுகள் அழகு பெறுவது சுன்னத்துகளைக் கொண்டுதான் என்றும் கூறப்பட்டுள்ளது.

உதாரணமாகத் தொழுகையில் ஃபர்லை மட்டும் தொழுதால் அதனைத் தொழுகை என்றே வழக்கத்தில் சொல்வதில்லை.

## ஸலாம் கூறுவது பற்றிய பாடம்

முந்திக்கொண்டு ஸலாம் சொல்வது மிகச் சிறப்பானதாகவும், முகஸ்துதியை விட்டும் நீக்குவதாகவும் இருக்கும்.

மலம் ஜலம் கழிப்பவருக்கும், குளித்துக்கொண்டிருப்பவருக்கும், வாயில் உணவை, தண்ணீரை வைத்திருப்பவருக்கும், குர்ஆன் ஓதிக்கொண்டிருப்பவருக்கும், பாங்கு இகாமத் சொல்பவருக்கும், தொழுதுகொண்டிருப்பவர், குத்பா ஓதிக்

கொண்டிருப்பவர், தூங்குகிறவர், உடலுறவு கொண்டிருப்பவர் ஆகியோருக்கும் ஸலாம் சொல்வது சுன்னத்தல்ல. அவ்வாறு ஸலாம் சொன்னால் அவர்கள் பதில் சொல்வதும் வாஜிபல்ல.

சாப்பிடுகிறவரும், குளிப்பவரும் மற்றவருக்கு ஸலாம் சொல்வது சுன்னத்து, இருவரோ, அதைவிட அதிகமானவரோ சந்திக்கும்பொழுது பேசுவதற்கு முன் ஸலாம் கூறுவதும், வாகனத்தில் செல்பவர் நடந்து வருபவருக்கு ஸலாம் கூறுவதும், நடந்து செல்பவர் உட்கார்ந்திருப்பவருக்கு ஸலாம் சொல்வதும், வயதில் குறைந்தவர் மூத்தவருக்கு ஸலாம் சொல்வதும், குறைந்த நபர்கள் அதிகமான நபர்களுக்கு ஸலாம் சொல்வதும் சுன்னத்தாகும். ஆனால், இதற்கு மாற்றமாகச் சொல்வதும் மக்ரூஹல்ல. பெண்கள் மற்ற பெண்களுக்கும், தனக்கு மஹ்ரமான ஆண்களுக்கும் ஸலாம் சொல்வதும், ஆண்கள் ஆண்களுக்கும், தனக்கு மஹ்ரமத்தான பெண்களுக்கும் ஸலாம் சொல்வதும் சுன்னத்தாகும்.

தனித்திருக்கும் குமரிப்பெண் அந்நிய ஆண்களுக்கு ஸலாம் சொல்வதும், அவன் சொன்ன ஸலாமுக்கு அவள் பதில் சொல்வதும் ஹராமாகும்.

ஆனால் ஒரு அந்நிய ஆண் தனித்திருக்கும் குமரிப்பெண்ணிற்கு ஸலாம் சொல்வதும், அவள் சொன்ன ஸலாமிற்கு அவன் பதில் சொல்வதும் மக்ரூஹ் ஆகும்.

கூட்டமாக இருக்கும் பெண்களுக்கு, அல்லது வயோதிகமான பெண்ணுக்கு ஸலாம் சொல்வது சுன்னத்தும், அவர்களில் ஒருத்தி பதில் சொல்வது வாஜிபும் ஆகும்.

பகிரங்கமாக பித்அத்தையும், பாவத்தையும் செய்கிறவனுக்கு ஸலாம் சொல்வது சுன்னத்தல்ல. ஆனால், அவன் ஏதாவது நமக்கு இடையூறு செய்வான் என்றிருந்தால் ஸலாம் சொல்லலாம்.

காஃபிருக்கும், முர்தத்துக்கும் ஸலாம் கூறுவது ஹராம். அவ்விதமான வர்களுக்குக் கடிதம் எழுத நேர்ந்தால் :

اَلسَّلَامُ عَلٰى مَنِ اتَّبَعَ الْهُدٰى

"நேர் வழியைப் பின் பற்றியவரின் மீது சாந்தி உண்டாவதாக!" என்று எழுதுவது சுன்னத்து.

தூரமாக இருப்பவர்களுக்குத் தூதனுப்பும் பொழுது அல்லது கடிதம் எழுதும் பொழுது ஸலாம் கூறியனுப்புவது, எழுதுவது சுன்னத்தாகும். அதாவது; அஸ்ஸலாமு அலைக்கும் என்று என் ஸலாமை எத்திவை என்று சொல்லியனுப்பவேண்டும். அந்த ஸலாம் அவருக்கு எத்தியவுடன் அதற்கு அவர் மொழிவதால் பதில் கூறுவது வாஜிப். கடிதத்திற்கு பதில் எழுதும்பொழுது வாயினால் ஜவாபு சொல்வதுடன் அந்த கடிதத்தில் பதில் எழுதுவதும் வாஜிபாகும். ஆள் மூலம் சொல்லியனுப்பிய ஸலாமுக்கு "அலைக்க வஅலைஹிஸ்ஸலாம்" உன் மீதும் அவர் மீதும் ஸலாம் உண்டாவதாக!" என்று பதில் கூறுதல் வாஜிபாகும்.

மறைமுகமாக இருப்பவருக்கு ஸலாம் கூறுவது மேற்சொன்ன முறையல்லாது, அவருடைய பெயரைச் சொல்லி அலைஹிஸ்ஸலாம் என்று சொல்வது கூடாது.

நபிமார்கள், ஹவ்வா, மர்யம், லுக்மான், மலக்குகள், மஹ்தீ ஆகியோரைத் தவிர மற்றெவருடைய பெயரைக் கூறினாலும் அலைஹிஸ்ஸலாம் என்று சொல்வது அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாஅத் கொள்கைக்கு மாற்றமானதாகும். ராஃபிளிகள் அலீ அலைஹிஸ்ஸலாம் என்றும், ஃபாத்திமா அலைஹஸ்ஸலாம் என்றும் கூறுவார்கள். அவ்வாறு சொல்வது கூடாது. ஆனால் நபிமார்கள் பெயர்களை முதலில் கூறி பிறகு முஸ்லிம்களைப் பொதுப்படையாகச் சேர்த்துச் சொல்லலாம். உதாரணமாக,

اَللّٰهُمَّ صَلِّ وَسَلِّمْ عَلٰى مُحَمَّدٍ وَّاٰلِهٖ وَصَحْبِهٖ
وَعَلَى الْمُؤْمِنِيْنَ وَالْمُؤْمِنَاتِ .

என்று கூறுவது போல் மஹ்தீ அலைஹிஸ்ஸலாம் என்று கூறுவதில் அவர் இதுவரை வரவில்லை என்றாலும் அவர் பிறந்து விட்டாரா இல்லையா என்பதில் சந்தேகம் இருப்பதால் அவ்வாறு சொல்வது ஆகும். எனினும், ரலியல்லாஹு அன்ஹு என்று சொல்வதே பொருத்தமாகும்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு யாரிடமாவது ஸலாம் சொல்லியனுப்பும் போது அன்னாரின் ரவ்ளா அருகில் நின்று தன்னுடைய ஸலாமைக் கூறுமாறு சொல்லியனுப்புவது சுன்னத்து. அவ்வாறே மற்ற நபிமார்கள் பெரியவர்கள் அனைவருக்கும் ஸலாம் சொல்லியனுப்புவது சுன்னத்து.

தனித்த ஒருவருக்கு ஸலாம் சொல்லும்போது அஸ்ஸலாமு அலைக்க என்று ஒருமையாக ஸலாம் சொல்வதும், வஅலைக்கஸ்ஸலாம் என்று பதில் சொல்வதும் போதும், எனினும், அலைக்கும் என்று பன்மையாகக் கூறுவதும், அவ்வாறே ஸலாமிலும் பதிலிலும் வரஹ்மத்துல்லாஹி, வபரக்காத்துஹு வமங்ஃபிரத்துஹு என்று கூறுவதும் சிறப்பானதாகும். பலர் இருக்கும் கூட்டத்திற்கு ஸலாம் சொல்லும்போது அலைக்க என்று சொன்னால் மட்டும் போதாது. பதில் சொல்லும்போது லஅலைக்கும் என்று வாவைக் சேர்த்துச்சொல்வது சிறப்புக்குரியதாகும்.

தன் வீட்டினுள் நுழையும்போது பிஸ்மில்லாஹ் சொல்லி,

اَللّٰهُمَّ اِنِّيْٓ اَسْئَلُكَ خَيْرَ الْمَوْلَجِ وَخَيْرَ الْمَخْرَجِ بِسْمِ اللّٰهِ
وَلَجْنَا وَبِسْمِ اللّٰهِ خَرَجْنَا وَعَلَى اللّٰهِ رَبِّنَا تَوَكَّلْنَا .

"யா அல்லாஹ், சிறந்த நுழைதலையும், சிறந்த வெளியாகுதலையும் உன்னிடத்தில் நான் கேட்கிறேன். அல்லாஹ்வின் திரு நாமம் கொண்டு நாம் நுழைந்தோம். அல்லாஹ்வின் திருநாமத்தைக்கொண்டே நாம் வெளியாவோம். எங்களுடைய இரட்சகனாகிய அல்லாஹ்வின் மீதே நாங்கள் நம்பிக்கை வைத்துள்ளோம்."

இதனை ஓதிய பின் வீட்டிலுள்ளவர்களுக்கு ஸலாம் சொல்லி நுளைய வேண்டும். வீட்டில் யாரும் இல்லாவிட்டால் பின் வருமாறு கூறுவது சுன்னத்து:

اَلسَّلَامُ عَلَيْنَا وَعَلٰى عِبَادِ اللهِ الصَّالِحِيْنَ. اَلسَّلَامُ عَلَيْكُمْ اَهْلَ الْبَيْتِ وَرَحْمَةُ اللهِ وَبَرَكَاتُهُ.

## முஸாஃபஹா பற்றிய பாடம்

இரண்டு ஆண்கள், அல்லது இரண்டு பெண்கள் சந்தித்துக்கொண்டால் துஆவுடனும் நன்மாராயத்துடனும் கைகளைப் பிடித்து முஸாஃபஹாச் செய்வது சுன்னத்தாகும். கருங்குஷ்டம் உள்ளவர்களைத் தவிர்த்துக்கொள்ள வேண்டும். இளம் வயதுள்ள அழகான வாலிபனை முஸாஃபஹா செய்வது ஹராமாகும்.

சுப்ஹு, அஸர் தொழுகைகளுக்குப் பிறகு முஸாஃபஹா செய்து கொள்வது அழகிய பித்அத்தாகும். இமாம் நவவீ(ரஹ்) அவர்கள் இதனை அழகியதெனக் கூறியுள்ளார்கள். மஸ்ஜிதில் கூடியிருப்பவர்கள் தொழுகைக்கு முன்னால் முஸாஃபஹா செய்து கொள்வது கூடும். ஏனெனில் ஒருவரையொருவர் சந்திக்கும்பொழுது முஸாஃபஹா செய்வது சுன்னத்து ஆகும். தொழுகைக்கு முன்னால் கூடி இராதவர்கள் அதற்குப் பின் செய்வது முஸ்தஹப்பு என்று நாஷிர் (ரஹ்) அவர்கள் தீர்ப்பு வழங்கியுள்ளார்கள்.

முஸாஃபஹா செய்கின்ற முறை எவ்வாறென்றால், ஒருவன் தன் வலக்கரத்தினால் மற்றவரின் வலக்கரத்தையும், இடக்கரத்தினால் இடக்கரத்தையும் பிடிக்கவேண்டும். ஒருவரின் வலக்கரத்துடைய கலிமா விரலின் அடிப்பாகத்தை மற்றவரின் பெரு விரலைக்கொண்டு அழுத்திக் கையை அசைத்துக்கொள்ளவேண்டும். ஏனெனில், அவ்விரலிலுள்ள நரம்பு இதயத்துடன் தொடர்புள்ளதாக இருப்பதால் இருவருக்குமிடையே அன்பு உண்டாவதற்கு அது காரணமாகும் என்று கூறப்பட்டுள்ளது. ஆகையால்தான் அத்தஹிய்யாத்தில் இல்லல்லாஹ் என்பதிலுள்ள ஹம்ஜைக் கூறும்போது கலிமா விரலின் அடிபாகத்தில் பெருவிரலின் ஓரத்தை வைத்து அழுத்துவதால் இதயத்தில் அல்லாஹ் ஒருவனென்ற ஏகத்துவத்தை நிலைப்படுத்துவதற்குக் காரணமாகுமென்று "ஜம்உல் ஜவாமிஉ, அஷ்பாஹு ந் நளாயிர்" ஆகிய கிரந்தங்களில் கூறப்பட்டுள்ளது. மேலும் ஒருவருக்கொருவர் அன்பை உண்டாக்கிக்கொள்வதற்காகச் சந்திக்கும்போதெல்லாம் முஸாஃபஹாச் செய்வது சுன்னத்தாகும்.

இப்பொழுது நம் நாட்டில் காணப்படும் முஸாஃபஹாவின் முறை மேற் கூறப்பட்ட முறைக்கு மாற்றமாக இருப்பதால் இதனை விடுத்து இமாம்கள் கூறிய முறையைக் கடைப்பிடிப்பது சிறப்பானதாகும்.

சேர நாட்டில் முஸ்லிம்கள் ஒருவரையொருவர் சந்திக்கும்போது மரியாதைக்காக தொப்பியைக் கழற்றிக்கொள்கின்றனர். பாண்டிய நாட்டில் தோளின்

மீது போட்டிருக்கும் துண்டை எடுத்துக்கொள்கின்றனர். சோழ நாட்டில் தலையைச் சாய்க்கின்றனர். சிலோனில் தலையைச் சாய்ப்பதுடன் ஏன், ஓம் என்று கூறுகின்றனர். ஹிந்துஸ்தானில் ஒரு கையை நெற்றியில் வைக்கின்றனர். ஜாவாக்காரர்கள் இரண்டு கைகளையும் எடுத்துக் கும்பிடுவதென்னும் சும்பா போடுகின்றனர். இவையெல்லாம் இஸ்லாமிய முறைக்கு இசைவானவையல்ல. எனவே இந்த முறைகளை விட்டு விட்டு இமாம்கள் சொல்லிய முறைப்படி செய்யவேண்டும்.

தாய், தந்தைக்கு ஸலாம் சொல்லாமலிருப்பது தவறாகும். உறவினர்களில் தொட்டால் உளூ முறியக்கூடியவர்களாகிய சாச்சா மக்கள், பெரியப்பா மக்கள், சின்னம்மா மக்கள், பெரியம்மா மக்கள் ஆகியோருக்கு வெட்கப்படாமலிருப்பதும் தவறாகும். இவ்வித தவறான முறைகளை மாற்றிச் சரியான முறையில் நடப்பவரைப் பெருமைக்காரனென்று கூறுவதும் தவறாகும். இவ்வழக்கத்தை மாற்றுவது சக்தியுள்ள ஒவ்வொருவரின் மீதும் கடமையாகும்.

மார்க்க ஞானமும் நெறிமுறைகளும் உள்ளவரையும், அதிகமான குழந்தை பாக்கியமுள்ள நல்லொழுக்க சீலர்களையும் கண்டால் மரியாதைக்காக எழுந்து நிற்பதும், நல்லடியார்களுடைய கை, தலை ஆகியவற்றை முத்தமிடுவதும், யாருடைய குழந்தையாக இருந்தாலும் கன்னத்திலும் விரல்களிலும் முத்தமிடுவதும், பிரயாணத்திலிருந்து திரும்பி வருபவரை முகத்தில் முத்தமிடுவதும் கழுத்தைக்கட்டிப்பிடித்து விசாரிப்பதும் சுன்னத்தாகும்.

உலகத்தின் வாழ்வுக்காகவும் முகஸ்துதிக்காகவும் முத்தமிடுவதும், பிரயாணி அல்லாதவனை கழுத்தைக் கட்டிப்பிடித்து முத்தமிடுவதும், கொடிய மக்ரூஹ் ஆகும். மய்யித்துடைய உறவினர்களின் பதறுதலை மாற்றி, பொறுமையை உண்டாக்குவதற்காக அவர்களை விசாரிப்பது கூடும்.

ஒருவரை கண்ணியப்படுத்துவதற்காகத் தலையைக் குனிவது மக்ரூஹ். முதுகையும் வளைத்துக் குனிவது ஹராம். வரம்பு மீறாமலிருந்தால், அதுவும் மக்ரூஹ் ஆகும். பிறர் தனக்கு மரியாதை செய்வதை நாடுவதும், அதற்காக அவர் எழுந்து நிற்பதை விரும்புவதும் ஹராம். "நரகவாசியைப்பார்க்க விரும்பினால் தனக்கு எழுந்து நிற்கவேண்டுமென விரும்புகிறவரைப் பார்த்துக்கொள்ளவும்" என்று கூறப் பட்டுள்ளது,

சிரமம் ஏற்படாதென்றிருப்பின் நல்லவர்களையும், அண்டை வீட்டாரையும், உறவினர்களையும் அதிகமாகச் சந்தித்துக்கொள்வது சுன்னத்தாகும். பெருநாள் போன்ற மகிழ்ச்சியான தினங்களில் "ஈத்முபாரக்" என்பதாகவோ, "யவ்மு முபாரக்" என்பதாகவோ கூறுவதும், ஒருவர் தண்ணீர் குடிக்கக் கண்டால், ஹனீஅன் (=வாழ்த்து உண்டாவதாக) என்று கூறுவதும் அழகிய பித்அத்தாகும். அரபிகள் ஸலாம் கூறிய பின், காலை நேரத்தில் :

صَبَّحَكَ اللّٰهُ بِالْخَيْرِ

"இக்காலை நேரத்தை அல்லாஹ் உனக்கு நன்மையாக ஆக்கிவைப்பானாக!" என்றும், மாலை நேரத்தில் :

أَمْسَاكَ اللّٰهُ بِالْخَيْرِ

"இந்த மாலை நேரத்தை அல்லாஹ் உனக்கு நன்மையாக ஆக்கி வைப்பானாக!" என்றும் கூறுவார்கள். இது அழகான பித் அத்தாகும்.

## தும்முதலுக்காக இறைவனுக்கு நன்றி செலுத்துதல் பற்றிய விபரம்

தும்மியவன் தன் முகத்தில் ஒரு வஸ்துவை வைத்து இயன்ற மட்டும் மூடி சத்தத்தைத் தாழ்த்தி அல்ஹம்துலில்லாஹ் என்று கூறுவது சுன்னத்தாகும். தும்முவதால் உடலுக்கு பல சுகங்கள் கிடைப்பதால் அல்லாஹ்வைப் புகழ வேண்டுமெனக் காரணம் சொல்லப்பட்டுள்ளது. அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன் அலாகுல்லிஹால்" என்று முழுமையாகக் கூறுவது சிறப்பானதாகும். இதனைக்கேட்பவர் "யர்ஹமுகல்லாஹ்" என்று பதில் கூறுவது சுன்னத்து. தும்மியவன் செவிடனாகவோ, குருடானாகவோ இருந்தால் அவன் விளங்கிக்கொள்ளும் முறையில் சலாமுக்கு பதிலுரைப்பது போல் சாடை காண்பித்து பதில் சொல்வது சுன்னத்தாகும். தும்மியவர் குழந்தையாக இருந்தால் أَصْلَحَكَ اللّٰهُ (அஸ்லஹகல்லாஹ்) என்று துஆச் செய்வது சுன்னத்தாகும்

தும்மியவன் அல்ஹம்துலில்லாஹ் என்று சொல்லாமலிருந்தால் அவனுக்கு நினைவூட்டுவது சுன்னத்து. தனிமையிலிருப்பவன் தும்மினால் அல்ஹம்து லில்லாஹ் என்று சொல்லிய பின் அவனே يَرْحَمُنِيَ اللّٰهُ (யர்ஹமுனியல்லாஹ்) என்று பதில் சொல்லிக்கொள்வதும் சுன்னத்தாகும்.

தொடராக மூன்று தடவை வரும் தும்மலுக்கு பதில் சொல்லலாம். மூன்று தடவைக்கு அதிகமாக ஒருவன் தும்மிக் கொண்டிருந்தால் அது ஜல தோஷத்தின் அடையாளமாகும். எனவே, அப்பொழுது:

يَشْفِيكَ اللّٰهُ

"அல்லாஹ் உனக்கு சுகமளிப்பானாக!" என்று துஆச் செய்யவேண்டும்.

உடலுறவு கொள்ளும் நேரத்திலும், மலம் ஜலம் கழிக்கும் நேரத்திலும், தும்மினால் மனதிற்குள்ளாகவே ஹம்தும் பதிலும் சொல்லிக்கொள்ளவேண்டும். குர்ஆன் ஓதுகிறவனுக்கும், பாங்கு சொல்லிக்கொண்டிருப்பவனுக்கும் தும்மல் ஏற்பட்டால் அதனை நிறுத்தி விட்டு ஹம்தும் பதிலும் சொல்லவேண்டும். தும்மியவனுக்கும் ஸலாம் கூறியவனுக்கும் பதில் சொல்கிறவன் நிதானமாகக் கேட்கும் முறையில் சொல்லவேண்டும்.

தொழுகிறவன் தும்மினாலும் அல்ஹம்துலில்லாஹ் என்று சொல்லிக்கொள்ளவேண்டும். சூரத்துல் ஃபாத்திஹாவை ஆரம்பிக்கும்போது தும்மல்

வந்து அல்ஹம்து லில்லாஹ் என்று சொன்னால் மீண்டும் அல்ஹம்து லில்லாஹ் என்பதை ஓத வேண்டும். தும்மியவனுக்கு தொழுகிறவன் பதில் சொன்னால் தொழுகை முறிந்து விடும். இந்த விஷயங்கள் ஏற்கனவே கூறப்பட்டிருக்கிறது.

தும்மலுக்கு பதில் சொன்னவனுக்கு:

يَهْدِيكُمُ اللّٰهُ وَيُصْلِحُ بَالَكُمْ

"அல்லாஹ் உங்களை நேர்வழியில் செலுத்துவானாக! உங்களுடைய நிலையைச் சீராக்கி வைப்பானாக!" என்றோ அல்லது

يَغْفِرُ اللّٰهُ لَكُمْ

"அல்லாஹ் உங்களை மன்னிப்பானாக!" என்றோ தும்மியவன் துஆச் செய்வது சுன்னத்தாகும்.

தும்மியவன் அல்ஹம்து லில்லாஹ் என்று அல்லாஹ்வைப் புகழ்வானாகில் பல்வலி, காதுவலி, வயிற்றுவலி ஆகிய நோய்களை விட்டும் பாதுகாப்புப் பெறுவான் என்பதாக அலீ (ரலி) அவர்கள் கூறியுள்ளதை புஹாரி இமாம் (ரஹ்) அவர்கள் 'அதபுல் முஃப்ரத்' என்ற நூலில் கூறியுள்ளார்கள்.

## கொட்டாவி விடுவது

கொட்டாவி வந்தால் இயன்றமட்டும் பல்லைக்கடித்து அதனை அடக்குவதும், தன் இடது புறங்கையைக் கொண்டு வாயை மூடுவதும் சுன்னத்தாகும். அவன் தொழுகையிலிருந்தாலும் சரி, கொட்டாவி விடும்போது ஹா! என்று சப்தமிடுவது மக்ரூஹ் ஆகும்.

கொட்டாவி விடுவது தூக்கத்தினாலும் சோம்பலினாலும் ஏற்படுவதாகும். அது ஷைத்தானிலிருந்து ஏற்படுவதென்பது ஹதீஸில் சொல்லப்பட்டிருப்பதால் 'அஊது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்' என்று சொல்லவேண்டும்.

கூப்பிட்டவருக்கு லப்பைக்க (=இதோ இருக்கிறேன்) என்று பதில் கூறுவதும், ஏதேனும் உபகாரம் செய்தவருக்கு:

جَزَاكَ اللّٰهُ عَنَّا خَيْرًا

"அல்லாஹ் உனக்கு எம் சார்பில் நலவைப் பிரதியாகத்தருவானாக!" என்று துஆச்செய்வதும் சுன்னத்தாகும்.

தவணையில்லாக் கடன் வாங்கிய ஒருவன் அவன், சொத்துள்ளவனாக இருந்தால், கடன் கொடுத்தவனின் அனுமதியின்றியும் பொருத்தமின்றியும் பிரயாணம் செய்வது, அது குறைந்த தூரமாக இருந்தாலும் சரி, அல்லாஹ்வின் பாதையிலோ அல்லது வேறு நன்மையான காரியத்திற்காகவோ இருந்தாலும் சரி, ஹராமாகும். இன்னும் ஃபர்லு ஐனான மார்க்கக் கல்வியைத் தேடுவதற்காகப் புறப்படுவதானாலும் சரி ஹராம் தான் என்று கூறப்பட்டுள்ளது.

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஹானீ'

கடனை நிறைவேற்றுமளவுக்குச் சொத்தில்லாதவனாக இருந்தாலும் அல்லது தவணையிடப்பட்ட கடனாக இருந்தாலும், அந்தத் தவணை நெருக்கமாக இருந்தாலும் பிரயாணம் செய்வது ஹறாமல்ல.

தவணை முடிய இன்னும் சில தினங்களிருக்கும்பொழுது அவன் தன்னுடைய ஊருக்கு அருகில், அதாவது; அவன் கஸ்ரு தொழுவது ஆகுமென்ற தூரமுள்ள இடத்திற்கு வந்து விடுவான் என்ற நிபந்தனையின் படி பிரயாணம் ஹறாமல்ல.

முஸ்லிமான பெற்றோரின் அனுமதியின்றி ஜிஹாதுக்கும், சுன்னத்தான ஹஜ்ஜுக்கும் புறப்படுவது ஹறாமாகும். பாட்டன் பாட்டியுடைய அனுமதியின்றி போவதும் ஹறாம்தான். அவ்விருவரில் ஒருவர் அனுமதிக்காதபோது அவர்களைவிட நெருங்கியவர் (தகப்பன்) அனுமதித்தாலும் பிரயாணிப்பது ஹறாம்தான். ஃபர்லான காரியத்தைக் கற்றுக்கொள்ள, அவர்களின் அனுமதியின்றிச் செல்வது ஹறாமல்ல.

காஃபிர்கள் முஸ்லிம்களின் ஊரில் போர் தொடுக்க வந்தால், அங்கிருக்கும் முஸ்லிம்கள் மற்றும் அவ்வூரைச் சுற்றியுள்ள ஊர்களிலுள்ள முஸ்லிம்கள் அனைவரின் மீதும் ஜிஹாது செய்வது ஃபர்லு ஐனாகும். முஸ்லிம்களை விட காஃபிர்கள் இருமடங்கை விடக் குறைவாக இருந்தால் படையிலிருந்து புற முதுகிட்டு ஓடுவது ஹறாமாகும். மனிதனை நாசமாக்கும் ஏழு காரியங்களில் புறமுதுகிட்டு ஓடுவதையும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

தீனுடைய காரியங்களை விளக்கிக்கூறுகின்ற ஓர் ஆலிமும், உடல் நோயை அறிந்து லோச்சி (மருத்துவம்) செய்கின்ற ஒரு மருத்துவரும் இல்லாத ஊரில் குடியிருப்பது கூடாது. முஸ்லிமான வைத்தியர் இருக்க காஃபிரான மருத்துவர் மூலம் மருந்து சாப்பிடுவது கூடாது எனக் கூறப்பட்டுள்ளது. ஆனால், முஸ்லிமான மருத்துவர் இல்லாதிருந்து, காஃபிரான மருத்துவர் திறமை மிக்கவராக இருந்தால் செய்யலாம். இந்தக் காலத்தில் முஸ்லிம் அல்லாதவர்களில் திறமையான மருத்துவர்கள் இருக்கிறார்கள். இதைப் பற்றி ஷாஃபியீ இமாமவர்கள் கூறியிருப்பதாவது: உயர்வான இரண்டு கலைகள் இருக்கின்றன. அவைகளை முஸ்லிம்கள் கை விட்டு விட்டார்கள். நஸாராக்கள் அவை இரண்டையும் எடுத்துக் கொண்டார்கள். அவையானவை: மருத்துவக்கலையும், வான சாஸ்திரக்கலையுமாகும்.

### தீர்ப்பு அளிப்பது பற்றிய விளக்கம்

மார்க்க முறைப்படி எல்லாக்காரியங்களுக்கும் தீர்ப்பு வழங்குவதற்குத் தகுதியான ஆணாகவும் முஸ்லிமாகவும், சுதந்திர வானாகவும் பருவ வயதையடைந்தவனாகவும் கேட்கும் சக்தியுள்ளவனாகவும், பார்வையுள்ளவனாகவும், நீதமானவனாகவும், பேசுகிறவனாகவும், தெளிந்த அறிவுள்ளவனாகவும், குர்ஆனிலும், ஹதீஸிலும் உள்ள சட்டங்களை ஆய்வு செய்து தெரிந்து கொள்ளக்கூடியவனாகவும் இருக்கின்ற ஒருவர் தீர்ப்பளிக்கும் காளி வேலையை ஒப்புக்கொள்வது ஃபர்லு கிஃபாயாவாகும். அந்த வேலைக்குத் தகுதியாக இருப்பவர்கள் எல்லோருமே

விலகிக்கொண்டால் அனைவருமே குற்றவாளியாவார்கள். ஒரு ஊரில் ஒருவர் மட்டுமே அந்த வேலைக்குத் தகுதியானவராக இருந்தால் அந்த வேலையை ஏற்றுக்கொள்வது அவர் மீது ஃபர்ல் ஐனாகும்.

காஃபிரான மன்னனாகவோ, அல்லது அதிகாரம் உடையவர்களாகவோ இருந்தாலும் தகுதியில்லாதவரை நீதிபதியாக நியமித்தால் அது செல்லுபடியாகும். அங்கு அவரைவிட சட்ட திட்டங்களை நன்கு தெரிந்த நீதமான மற்றொருவர் இருந்தாலும் சரி, காளீ வேலைக்கு வேண்டிய ஷர்த்துக்களில் சிலதை இழந்த நீதிபதி, தனக்குத் தெரியாத விஷயங்களை வேறொரு நீதிபதியிடம் கேட்டுத் தெரிந்துகொள்வது அவசியமாகும்.

அறிமுகமான நான்கு மத்ஹபுகளில் ஏதேனும் ஒன்றைத் தொடர்ந்து நடப்பது வாஜிபாகும் ஷாஃபியீ மத்ஹபிலுள்ள ஒருவன் ஒரு மஸ்அலாவில் ஹனஃபீ மத்ஹபைத் தொடர்ந்தால் அதிலும் அது சம்பந்தப்பட்ட விஷயங்களிலும் அந்த மத்ஹபைப் பின்பற்றுவது வாஜிபாகும். உதாரணமாக; ஷாஃபிஈ ஒருவர் ஹனஃபீ மத்ஹபைத் தொடர்ந்து கிப்லாவை முன்னோக்குவதை விட்டுவிட்டு அதன் திசையை மட்டும் முன்னோக்கி தொழுதால், அவர் உளுவில் தலையில் நாலிலொரு பாகத்தை மஸ்ஹு செய்வதும், மஸ்ஹு செய்வதை முன்னெற்றி ரோமத்திலிருந்து துவக்குவதும், உளுச் செய்த பின் தன் உடலிலிருந்து இரத்தம், சீழ் வடியாமல் இருப்பதும் வாஜிபாகும். இதனை அவன் பேண வில்லையானால் இரண்டு மத்ஹபின் படியும் அவனுடைய தொழுகை வீணாகிவிடும்.

தகுதியுள்ள ஒருவர் நீதிபதியாக இருந்தாலும் இரு சாரார் சம்பந்தப்பட்ட ஒரு விவகாரத்தில் முஹக்கமாக (காளியாக அல்லது நடுவராக) தகுதியுள்ள மற்றொருவரை இருவரும் சேர்ந்து நியமித்துக்கொள்ளலாம். காளியாக இருப்பதற்குத் தகுதியுள்ள பலர் ஊரிலிருந்தால் ஒரு நீதிபதியை ஏற்படுத்துவது ஃபர்லு கிபாயா வாகும். ஒருவர் மட்டும் இருந்தால் அதை ஏற்றுக்கொள்வது அவர் மீது ஃபர்லு ஐனாகும். இவ்விஷயம் முன்னால் கூறப்பட்டுள்ளது. சங்கைக்குரிய நான்கு இமாம்களும் மற்றும் பல பெரியார்களும் அவ்வேலையை விரும்பாமலும், அக்காலத்திலுள்ள அரசர்களால் பல தொல்லைகள் கொடுக்கப்பட்டும்கூட அதனை அவர்கள் ஏற்றுக்கொள்ளாமலும் இருந்ததற்குரிய காரணம் என்ன வென்றால், அதிலுள்ள சிரமங்கள் மிக அதிகம் என்பதாலும் பெரும் சுமையும் தீனுக்குக் குறைவும் அதில் ஏற்பட்டு விடுமென்பதாலும் மறுத்துள்ளார்கள். எனினும் ஒரு ஊரில் உள்ள காளீ தகுதியில்லாத ஒருவராக இருந்தாலும் அவர் ஊரில் இல்லாத நேரத்தில்தான் முஹக்கம் ஒருவர் திருமணத்தை நிறைவேற்றி வைக்கலாம் என்று இப்னு உருஜ் (ரஹ்) அவர்கள் தீர்ப்பளித்துள்ளார்கள். தகுதி உள்ளவர் இருக்கும்பொழுது தகுதியில்லாதவரை நீதிபதியாக்குவது கூடாது. காளீ இருந்தாலும் இல்லாவிட்டாலும் நீதமில்லாதவரை முஹக்கமாக ஆக்குவது கூடாது.

காளீயும் அவருக்குப் பிரதிநிதியாக அவரால் ஏற்படுத்தப்பட்டவரும் அந்த காளீ நீங்கிவிடுவதாலும் நினைவு மாறிவிடுவதாலும் நீங்கிவிடுவார்கள். காளீக்குப்

# மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

பிரதிநிதியாக அரசரால் ஏற்படுத்தப்பட்ட ஒருவர் காளி நீங்குவதால் அவர் நீங்கமாட்டார். காளியை ஏற்படுத்திய அரசர் இறந்து விடுவதால் காளி நீங்கமாட்டார்.

ஒரு செயலாளர் தனக்குக் குறிப்பிடப்பட்ட அலுவலகம் அல்லாத இடத்திலிருந்து ஒரு விஷயத்துக்குத் தீர்ப்பளித்ததாகச் சொல்லதை ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. அவ்வாறே நீக்கப்பட்ட நீதிபதியின் சொல்லையும் ஒப்புக்கொள்ளக்கூடாது. வாதி பிரதிவாதி இருவரும் சிறப்பால் ஏற்றத்தாழ்வாக இருந்தாலும் இருவரையும் ஒன்றுபோல் மதித்து நடப்பது நீதிபதிக்கு வாஜிபாகும்.

ஒரே நேரத்தில் பல வழக்குகள் வந்தால் முந்தின வழக்கை முதலாவதாகவும், இரண்டாவது வந்த வழக்கை இரண்டாவதாகவும் முறையாக விசாரிக்கவேண்டும். இவ்வாறே தீர்ப்பு வழங்குபவர் (முஃப்தீ) தன்னிடம் தீர்ப்புக்கேட்டு வருபவர்களிடமும், உஸ்தாது தன்னிடம் ஓத வருபவர்களிடமும் ஒழுங்கு முறையுடன் நடந்து கொள்வது வாஜிபாகும். எல்லோரும் ஒரே நேரத்தில் வந்தாலும் அல்லது யார் முந்தி வந்தது என்று தெரியாவிட்டாலும் சீட்டுக்குலுக்கிப் போட்டு ஒழுங்கு படுத்தப்படும்.

நீதிபதியுடைய மஜ்லிஸ் விசாலமானதாகவும் திறந்து வைக்கப்பட்டதாகவும் இருப்பது முஸ்தஹப்பு. நீதிபதி தீர்ப்பளிப்பதும் வாதப்பிரதிவாதங்களைக் கேட்பதும் அதிக உஷ்ணமும் அதிகக்குளிரும் இல்லாத நேரத்தில் இருப்பது முஸ்தஹப்பாகும்.

வாதி பிரதிவாதிகளில் ஒருவர் நீதிபதிக்கு ஸலாம் கூறினால் அவருக்கு பதில் சொல்லாமல் மற்றொருவரும் ஸலாம் சொல்வதை எதிர்பார்ப்பார். அல்லது நீயும் ஸலாம் சொல் என்று கூறுவார். இருவருக்கும் ஒரே மாதிரி பதில் சொல்வார். முகமலர்ச்சியிலும் பேச்சு வார்த்தையிலும் இருவரையும் ஒன்று போல் காணுவார். ஏற்றத்தாழ்வு செய்யக்கூடாது.

நீதிபதி தன்னுடைய தீர்ப்பு வழங்கும் தலத்திலிருந்தால் அவர் காளியாகுவதற்கு முன் அப்படிக்கொடுக்கும் பழக்கமில்லாதலன் கொடுக்கும் அன்பளிப்பையும், இப்பொழுது நடந்து கொண்டிருக்கும் வழக்குடையவன் கொடுக்கும் அன்பளிப்பையும் ஏற்றுக்கொள்வது ஹராமாகும். அவன் வழக்கமாக அன்பளிப்புக்கொடுப்பவனாயிருந்தாலும் சரி.

"நீதிபதிகள் மூன்று வகையினராவர். இரு வகையினர் நரகம் செல்வர். ஒரு வகையினர் சொர்க்கம் செல்வர். எனவே உண்மையை அறிந்து அதன்படி தீர்ப்பளிப்பவர், சொர்க்கம் செல்வார். உண்மையை விளங்கி அதற்கு மாற்றமாக தீர்ப்பளிப்பவர், மற்றும் உண்மையை விளங்கிக்கொள்ளாமலேயே தீர்ப்பளிப்பவர் ஆகிய இரு வகையினரும் நரகம் செல்வர் என்று ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது. இந்த ஹதீஸைக்கொண்டு முப்பது காளிகளில் பத்துப் பேர் மட்டும் சொர்க்கம் செல்வார்கள் மீதி இருபது பேர் நரகம் செல்வார்கள் என்று பொருள் கொடுக்கக்கூடாது. ஏனெனில் ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளபடி நேர்மைக்கு விரோதமாக தீர்ப்பளிப்பவர்கள் மட்டும் தான் நரகம் செல்வார்கள். அவர்கள் முப்பது காளிகளில் இரண்டு காளிகளாகக்கூட இருக்கலாம். மீதி

இருபத்தி எட்டு காளிகளும் நேர்மையாக தீர்ப்பளித்து சொர்க்கம் செல்லக்கூடியவர்களாகவும் இருக்கலாம்.

நீதிபதி வேலையில் இலஞ்சம் வாங்குவதும் முகஸ்துதியும் அதிகமாக உண்டாவதாலும், அநியாக்கார அரசனுடைய அதிகாரியாக நீதிபதி இருக்க வேண்டியதாக இருப்பதாலும் முற்காலத்திலுள்ள இமாம்கள் அந்த வேலையை வெறுத்தார்கள். இந்தக்காலத்திலுள்ள அரசு நடத்தும் பதவியில் உள்ள ஒருவனை நோக்கி நீ நீதமானவன் என்று ஒருவன் சொன்னால் சொன்னவன் பொய்யனாகி விடுவான் என்று சொல்லுமளவுக்கு அரசோச்சுபவர்கள் நெறிதவறியவர்களாக இருக்கிறார்கள் என்று ஷரஹ் அய்னியில் கூறப்பட்டுள்ளது.

நீதிபதிக்காக மட்டும் பிரத்தியேகமாக விருந்து கொடுக்கப்பட்டால் அந்த விருந்தில் கலந்து கொள்வது அவருக்கு ஹராம் ஆகும். ஆனால் அவரை மட்டும் வலீமா விருந்துக்கு அழைத்தால் அதை ஒப்புக்கொள்வது மக்ரூஹ் ஆகும் என்று சிலரும், ஹராம் ஆகும் என்று வேறு சிலரும் கூறியுள்ளார்கள்.

நீதிபதி செய்த எந்தத் தீர்ப்பும் குர்ஆன்,ஹதீஸ், இஜ்மாஃ, கியாஸ் ஆகியவற்றிற்கு மாற்றமாக இருந்தால் அதனை உடைத்து நேர்மையான வேறு தீர்ப்புச்செய்வது அவர் மீது வாஜிபாகும். முன்னால் இருந்த நீதிபதியுடைய தீர்ப்பை ஆராய்ந்து அதன் படித்தான் நடக்கவேண்டு மென்பது இப்பொழுதுள்ள நீதிபதிக்குக் கட்டாயமில்லை. நீதிபதி ஒரு விஷயத்தில், தான் நேரடியாக அறிந்திருப்பதற்கு மாற்றமாகத் தீர்ப்பு வழங்குவது கூடாது. அதற்கு மாற்றமாக சாட்சி கூறப்பட்டாலும் சரி. எனினும் அல்லாஹ் விதியாக்கியுள்ள ஹத்துடைய சட்டங்களில் நீதிபதி தான் நேரில் அறிந்திருப்பதை வைத்து தீர்ப்பு வழங்குதல் கூடாது. ஏனெனில் அல்லாஹ்வுடைய ஹத்து எனும் தண்டனை விதியாகும் விபச்சாரம், திருட்டு போன்றவற்றை மறைப்பது எல்லோருக்கும் சுன்னத்தாக இருப்பதால் அந்த குற்றங்களை காளி நேரில் பார்த்து அறிந்திருந்தாலும் சட்டப்படி சாட்சிகளைக்கொண்டு நிரூபிக்கப்படாமல், தான் பார்த்ததைக்கொண்டு மட்டும் தீர்ப்புச்செய்யக்கூடாது. அது அல்லாத மனிதருடைய இதர சட்டங்களில், தான் நேரிடையாக பார்த்திருப்பதைக்கொண்டு தீர்ப்புச் செய்யலாம்.

ஒரு நீதிபதி அவரே ஒரு தவற்றைச் செய்துவிட்டால், அல்லது அவருடைய உறவினர்களில் எவரேனும் தவறு செய்து விட்டால் வேறு நீதிபதியிடம் அல்லது அரசரிடம் தீர்ப்புப்பெறவேண்டும். அந்த நீதிபதி இந்த நீதிபதியுடைய பிரதிநிதியாக இருந்தாலும் சரி. சந்தேக நிவர்த்திக்காக இவ்வாறு செய்யவேண்டும்.

ஒரு நீதிபதி தனக்கும் தன் பெற்றோர், மக்கள், அடிமைகள் ஆகியோருக்கும் சாதகமாக இருக்கின்ற தீர்ப்பைத் தானே செய்து கொள்ளக்கூடாது.

ஊரிலில்லாத பிரதிவாதி ஒருவனின் மீது தீர்ப்புச் செய்வது கூடும். அதாவது:- வாதிக்கு சாட்சி இருந்து, அந்த ஊரிலில்லாத பிரதிவாதி வழக்கிற்குரிய

பொருளை தனக்குரியதென்று விண்ணப்பம் செய்வானென்று இந்த வாதி சொல்லாமலிருந்தால் தீர்ப்புச் செய்வது கூடும். அவ்வாறின்றி "நான் இவ்வாறு சொல்லி இந்தச் சாட்சியை உறுதிப்படுத்துவது அவனுடைய விண்ணப்பத்தை மறுத்து விடுவானோ என்பதற்காகத்தான் " என்று அந்த வாதி கூறினால், அல்லது அந்த ஊரிலில்லாத பிரதிவாதி இருக்கும் வேறு ஊருடைய நீதிபதிக்கு இதனை எழுதுவதற்காகத்தான் என்று அவன் கூறினால் அந்த சாட்சியை ஏற்றுக்கொள்ளக்கூடாது.

## வழக்குகளும் ஆதாரங்களும் பற்றிய பாடம்

வாதியினுடைய சொல் வெளிப்படையான விஷயத்திற்கு மாற்றமாக இருக்கும். பிரதிவாதியினுடைய சொல் வெளிப்படையான விஷயத்திற்கு நேரானதாக இருக்கும். உதாரணமாக: ஒரு வீட்டில் ஒருவன் குடியிருக்கிறான். வழியில் செல்கின்ற ஒருவன் வந்து, "இது என்னுடைய வீடு" என்று சொல்கிறான். இவ்விருவரில் வழியில் செல்பவன் வாதி; குடியிருப்பவன் பிரதிவாதி. இதனை வழக்காளி, எதிராளி என்று கூறுவதும் உண்டு.

"சாட்சியைக் கொண்டுவருவது வாதியின் பொறுப்பாகும்; சத்தியம் செய்வது பிரதிவாதியின் செயலாகும்" என்று ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது.

கடன் வாங்கிக் கொண்டு திருப்பிக் கொடுக்காமல் நாள் கடத்தும் கடன்காரனாகிய விண்ணப்பம் செய்பவனிடமிருந்து குழப்பம் ஏற்படுவதை பயப்படாமல் இருந்தால்–தனது முதலை எடுப்பது கூடும். அதனை எடுத்து அந்த ஊரிலுள்ள நாணயத்திற்கே விற்க வேண்டும். அந்தப் பொருள் தன்னுடைய உடைமையைப் போன்றதாக இருந்தால் அதனைத் தானே வைத்துக் கொள்வான். இல்லாவிட்டல் கடனாளியின் பொருளை விற்றுத் தன் உடைமையைப் போன்றதை வாங்கி எடுத்துக் கொள்வான். பொருளை எடுப்பது ஆகுமென்றிருந்தால் கடன் காரனுடைய வீட்டுக் கதவை உடைத்து அல்லது அதில் சுரங்கமிட்டு உள்ளே நுழைந்து தன்னுடைய உரிமையை எடுக்கலாம். ஆனால் இவ்வாறு செய்தால் தான் அவனிடமிருந்து பொருளைப் பெற முடியும் என்றிருந்தால்தான் இவ்வாறு செய்யலாம். இல்லாவிட்டால் அவ்வாறு செய்வதால் ஏதேனும் பாதகங்கள் ஏற்படுமென்றிருந்தால் காளீயிடம் முறையிடுவது தான் வாஜிபாகும் திருப்பிக் கொடுப்பதற்கு காலம் கடத்தாத கடன் காரனாக இருந்தால் இவ்விதம் செய்வது ஹலாலாக மாட்டாது.

ஒரு கடன்காரன் தன் கடனைக் கொடுக்க மறுக்கிறான்; கடன் கொடுத்தவனிடம் போதுமான சாட்சி இருக்கிறது. அப்பொழுது இந்தக் கடன் காரனுக்கு வேறொருவன் கடன் கொடுக்க வேண்டியதிருந்தால் அதனை இவன் பெற முடிந்தால் பெற்றுக் கொள்ளலாம். மேலும், ஒரு கடனுக்குச் சாட்சி இருக்கிறது. அதே மனிதனுக்கு அதே நபரிடத்தில் வேறொரு கடனும் இருக்கிறது. இந்த இரண்டாவது கடனுக்கு சாட்சியில்லை. முந்திய கடனை சாட்சிகளுக்குத் தெரியாமல் இறுத்து விட்டு

இரண்டாவது கடனை வாங்கவில்லையென்று மறுக்கிறான். இந்த நிலைமையில் முந்திய கடனுக்கு சாட்சியாக இருந்தவனை இந்த இரண்டாவது கடனுக்கு சாட்சியாக ஆக்கலாம்.

நாணயமாகவோ அல்லது பொருளாகவோ கொடுத்த கடனுக்காக வழக்குத் தொடுக்கும் பொழுது அதன் இனத்தையும் வகையையும் அளவையும் குறிப்பிடுவது ஷர்த்தாகும். குறிப்பான ஒரு பொருளைப் பற்றி வழக்குத் தொடுப்பதில் அதன் விபரத்தைச் சொல்ல வேண்டும். ஒரு தோட்டத்தைப்பற்றி வழக்குத் தொடுப்பதில் அது இருக்கும் திசையையும் அதனுடைய நான்கு எல்லைகளையும் குறிப்பிட வேண்டும். திருமணத்தைப் பற்றி வழக்குத் தொடுத்தால் அதாவது ஒருத்தியை என்னுடைய மனைவி என்று ஒருவன் சொல்கிறான். அவன் என் கணவன் இல்லை என்று அவள் சொல்கிறாள். அப்போது நீதமான வலீகாரனையும் நேர்மையான இரண்டு சாட்சிகளையும் கொண்டு வருவதுடன் அவளின் பொருத்தத்தின் மீதே நிகாஹ் செய்தேன் என்று அவன் சொல்லவேண்டும். பணம் கொடுக்கல், வாங்கல் சம்பந்தமாக வழக்குத் தொடுத்தால் அது சரியான முறையில் நடந்த வியாபாரம் என்பதை நிரூபிக்க வேண்டும். ஒரு வழக்கில் சாட்சி உறுதியாகிவிட்டால் அதில் வாதியைச் சத்தியம் செய்யும்படி கூறுவது பிரதிவாதிக்குக் கூடாது. பிரதிவாதியின் மீது சாட்சி உறுதியாகி விட்டால், அந்த வழக்கைத் தள்ளுபடி செய்வதற்குரிய வேறு முகாந்திரம் கொண்டு வருவதற்குத் தவணை கேட்டால் மூன்று தினங்கள் தவணை கொடுக்கப்படும்.

ஒருவன் தன்னிடமில்லாத ஒரு சிறு குழந்தையை, அல்லது ஒரு பைத்தியக்காரனை தன்னுடைய அடிமை என்பதாகக் கூறினான். அவனை வைத்திருக்கும் மற்றவன் அதனைப் பொய் என்று சொன்னால், அந்த வாதிக்குச் சாட்சி இருந்தால் அது ஒப்புக் கொள்ளப்படும். அல்லது காளீ தன் அறிவினால் அதற்குத் தீர்ப்புக் கூறுவார். அல்லது, சத்தியம் செய்யச் சொல்லி ஒப்புக் கொள்ள வேண்டும்.

தவணை கூறப்பட்ட கடனை தவணை வரும் முன் கேட்டு வழக்குத் தொடுத்தால் அந்த வழக்கைக் கேட்கக் கூடாது.

## வழக்குக்கு மறுமொழி

பிரதிவாதி உண்மையைக் கொண்டு விண்ணப்பம் செய்தால் தீர்ப்பின்றியே அந்த உண்மை தரிபடுத்தப்படும். அவன் பதில் ஏதும் சொல்லாமல் மௌனமாக இருந்தால் பதில் கூறும்படி காளீ அவனுக்குக் கட்டளையிட வேண்டும். அப்பொழுதும் அவன் ஏதும் பேசாமலிருந்தால் அவன் அதனை மறுக்கின்றான் எனக் கருதி சத்தியம் செய்யச் சொல்ல வேண்டும். பின்னும் அவன் சத்தியம் செய்யத் தயங்கினால் வாதி சத்தியம் செய்து அந்த உடைமைக்கு உரியவனாவான். உதாரணமாக: பத்து ரூபாய்க்கு வழக்குத் தொடுத்தால் பத்தோ அல்லது அதில் சில பகுதியோ நான் கொடுக்க வேண்டியதில்லை என்று பிரதிவாதி கூற வேண்டும். சத்தியத்தையும் இவ்விதமே கூறிச் செய்ய வேண்டும்.

ஒரு காரணத்தின் பக்கம் சேர்க்கப்பட்ட பொருளை ஒருவன் வழக்காடினால், உதாரணமாக: கடனைப் போல் (அதாவது நான் உனக்கு பத்து ரூபாய் கடன் தந்தேன் என்று சொல்வது போல்). அப்பொழுது நீ என் மீது எப்பொருளுக்கும் உரியவனாக மாட்டாய் என்று கூறுவது போதுமானது. நீ எனக்கு எந்தப் பொருளையும் கடனாகத் தரவில்லையென்று சொல்ல வேண்டுமென்பது ஷர்த்தில்லை.

இரண்டு நபர்கள் மூன்றாவது ஒருவனிடமுள்ள ஒரு பொருளைப் பற்றி வழக்குத் தொடுத்து இருவரில் ஒவ்வொருவரும் அப்பொருள் தனக்குரியது தான் என்பதற்கு சாட்சியையும் கொண்டு வந்தால் இருவரின் சாட்சியமும் விழுந்து விடும். ஆனால், சாட்சியில் நாள் மாற்றமிருந்தால் முந்தியிருக்கும் நாளுக்கு முன்னுரிமை கொடுக்கப்படும். இருவரும் சாட்சிகளைக் கொண்டு வருவதற்கு முன், பொருளை வைத்திருக்கும் அந்த மூன்றாமவன் அவ்விருவரில் இன்னாருக்குரியது என்று அப்பொருளைப் பற்றி விண்ணப்பம் செய்தால் அது அவனுக்கே கொடுக்கப்படும். சாட்சிகள் வந்தபின் அவ்வாறு விண்ணப்பம் செய்தால் அவனுடைய விண்ணப்பத்தை அனுசரித்து அந்தச் சாட்சியின் சொல் ஏற்றுக் கொள்ளப்படும்.

வாதி, பிரதிவாதி இருவரில் ஒருவருடைய வசமிருக்கும் ஒரு பொருளைப் பற்றி வழக்கு ஏற்பட்டு இருவரும் சாட்சிகளைக் கொண்டு வந்தால் பொருள் யார் வசமிருக்கிறதோ அவருடைய சாட்சி முற்படுத்தப்படும். அதன் நாள் பிந்தியிருந்தாலும் சரி.

ஒரு விஷயத்திற்கு இரண்டு சாட்சிகளும் சத்தியம் செய்யும் மற்றொரு சாட்சியும் இருந்தால் இரண்டு சாட்சிகள் தான் முற்படுத்தப்படுவர். பெண்களுடைய சாட்சியத்தை ஏற்றுக் கொள்வதில் நான்கு பெண்களைவிட இரண்டு ஆண்களின் சாட்சியம் முற்படுத்தப்படும். ஒரு விஷயத்திற்கு சாட்சிகளாக இரண்டு பெண்களும் ஒரு ஆணும் இருக்கிறார்கள். அதே விஷயத்திற்கு இரண்டு ஆண்கள் மட்டுமே இருக்கிறார்கள். இந்த நிலைமையில் இரண்டு ஆண்களின் சாட்சியம் தான் முற்படுத்தப்படும். எனவே, இரண்டு பெண் சாட்சிகளை விட ஓர் ஆண் சாட்சியை முற்படுத்தப்படும். ஒரு சாராருக்குள்ள சாட்சிகளைவிட மறு சாராருக்கு அதிகமாக இருக்கிறார்கள் என்ற காரணத்திற்காக மட்டும் அதிகமாக இருந்தால், அதிகமாக இருக்கும் சாட்சிகளை முற்படுத்தக் கூடாது. ஏனெனில் மார்க்கத்தில் கூறப்பட்ட சட்டங்கள் சாட்சிகள் கூடுதலாக அல்லது குறைவாக இருப்பதைக் கொண்டு மாறுபடாது.

## சாட்சிகள் பற்றிய பாடம்

நோன்பு நோற்பதற்காக ரமலான் பிறையைப் பார்த்ததற்கு ஓர் ஆணுடைய சாட்சி வேண்டும். பெண்ணுடைய சாட்சியோ, அலியுடைய சாட்சியோ போதாது. இவ்வாறே தராவீஹ், இஃதிகாஃப் ஆகியவற்றிற்கும் ஓர் ஆணின் சாட்சி போதும். ரமலான் பிறை காண்பது கொண்டு நேர்ச்சை செய்யப்பட்ட உம்ராவுக்கு இஹ்ராம் கட்டுவதும் அவ்விதமே. ரமலானைக் கொண்டு தொழுவி வைக்கப்பட்ட தலாக், இத்தா

ஆகியவை அனைத்திற்கும் ஓர் ஆணின் சாட்சியம் போதாது. இரண்டு ஆண்களின் சாட்சியம் வேண்டும். ஒருவன் தன் மனைவியைப் பார்த்து, "ரமலான் மாதம் வந்தால் நீ தலாக்" என்று சொன்னால், பிறை கண்டதற்கு ஓர் ஆணின் சாட்சியம் போதாது.

விபச்சாரத்திற்கும், ஆணுடன் ஆண் சேரும் ஓரினப் புணர்ச்சிக்கும் சாட்சி சொல்கின்ற நான்கு ஆண்களும் சுயபுத்தியுள்ளவர்களாகவும் பருவ வயதையடைந்தவர்களாகவும் இருக்க வேண்டும். அவர்கள் இன்ன பெண்ணுடைய மர்மஸ்தானத்தில் இன்னவன் அவனுடைய மர்மஸ்தானத்தை கத்னாவரை செலுத்தியதை நாங்கள் கண்டோம் என்று சொல்ல வேண்டும். சுருமாக் கூட்டினுள் சுருமாக்குச்சியைச் செலுத்தியது போல் செலுத்தக் கண்டோம் என்று கூறுவது சுன்னத்தாகும். விபச்சாரம் செய்ததாக அவனே விண்ணப்பம் செய்வதற்கு இரண்டு சாட்சிகள் போதும்.

பொருள் சம்பந்தப்பட்ட விஷயங்கள், கடன், விற்பனை, ஈடுவைத்தல், வக்ஃபு செய்தல், பிணைசாட்டுதல், அதனை நீக்குதல், சமாதானம் செய்தல், சம்மதம் தெரிவித்தல் ஆகியவற்றிற்கெல்லாம் இரண்டு சாட்சிகள் போதும். இரண்டு ஆண்கள், அல்லது ஓர் ஆண் இரண்டு பெண்கள், அல்லது ஒரு ஆணும் ஒரு சத்தியமும் வேண்டும். இரு பெண்களும் ஒரு சத்தியமும் கொண்டு எந்த விஷயமும் தரிபடாது.

பெரும்பாலும் ஆண்களிலிருந்து உண்டாகும் நிகாஹ், தலாக், ரஜ்யீதலாக், ஃபஸ்கு, பருவமடைதல், உரிமைவிடுதல், வறுமை, வக்காலத்து, பிணை, கூட்டு, அமானிதம், வஸிய்யத்து, முர்தத்தாகுதல், இத்தாமுடிவது, ரமழான் அல்லாத மாதப் பிறை காணுவது, சாட்சிகளைப் பற்றி சாட்சி சொல்வது, (உதாரணமாக: ரமழான் பிறையைக் கண்டதாகக் கூறும் ஒருவனைப் பற்றி அவன் சொன்னான் என்று இருநபர்கள் சாட்சி சொல்ல வேண்டும்) இரண்டு ஆண்களைக் கொண்டே தவிர தரிபடாத ஒரு விஷயத்தைக் கொண்டு விண்ணப்பம் செய்தல் ஆகியவை அனைத்திற்கும் இரண்டு ஆண்கள் தான் சாட்சியாக்கப்படவேண்டும்.

பெரும்பாலும் பெண்களிலிருந்து உண்டாகின்ற பிள்ளைப் பேறு, ஹைளு, கன்னித்தன்மை அல்லது கன்னியழிதல், பால்குடி, பெண்ணின் மறைவிடத்திலுள்ள குறைகள் இவைகள் அனைத்திற்கும் நான்கு பெண்கள் அல்லது இரண்டு ஆண்கள் அல்லது ஒரு ஆண் இரண்டு பெண்கள் சாட்சி யாக்கப்படவேண்டும்.

சாட்சி சொல்பவன் முஸ்லிமாகவும், பருவமடைந்த அறிவுள்ளவனாகவும் சுதந்திரவானாகவும் ரோஷம், நீதம், விழிப்பு ஆகியவை உள்ளவனாகவும் இருக்கவேண்டும்.

إِذَا رَأَيْتَ كَالشَّمْسِ فَاشْهَدْ.

"சூரியனைப் போன்று (தெளிவானதாக ஒரு விஷயத்தை) நீ பார்த்தால் அப்பொழுது, நீ சாட்சி சொல்" என்பது சாட்சிக்குரிய இலக்கணமாகும். இவ்வாறிருக்க, அல்லாஹ்வைப் பற்றி-அவனை நாம் காணாமலேயே 'அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல்லாஹ்' என்று சாட்சி கூறுகிறோம். இதில் அவனை

நாம் காணாவிட்டாலும் வானம், பூமி அனைத்திலும் காணப்படுகின்ற பொருட்களெல்லாம் அவனைப்பற்றியே அறிவித்துக் கொண்டிருக்கின்றன. ஆகையால் சந்தேகமின்றி கண்ணால் கண்டது போன்றே நாம் சாட்சி கூற வேண்டும். எனவே, புதிதாக இஸ்லாத்தில் இணைகிற ஒருவன் 'அஷ்ஹது அன்லா இலாஹ இல்லல்லாஹ்' என்று சொல்லவில்லையானால் அவனுடைய இஸ்லாம் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது.

ஹத்து விதியாகிற காரியங்களிலும், நிகாஹிலும், தலாக்கிலும் பெண்களுடைய சாட்சியம் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது.

ஒருவனுக்கு பதினாறு வயதாகி விட்டதென்று இரண்டு ஆண்கள் சாட்சி சொல்கின்றனர். அவன் பிறந்த அதே மாதத்தில் ஒரு பெண் குழந்தை அனாதையாகப் பிறந்தது. அப்பெண்ணுக்கு ஹைளு வரவில்லையென்று நான்கு பெண்கள் சாட்சி சொல்கின்றனர். அவளுக்கு வலீமுஜ்பிர் என்னும் தகப்பனோ அல்லது தகப்பனைப் பெற்ற பாட்டனோ இல்லாத நிலையில் அவளை பாலிஃகு என்பதாகத் தீர்ப்புச் செய்து அவளுடைய அனுமதி கொண்டு அவளுக்குத் திருமணம் செய்து கொடுப்பது ஆகுமா? ஆகாதா? என்று கேட்கப்பட்டதற்கு இமாம்களில் சிலர் ஆகுமென்றார்கள். பார்ப்பதும் கேட்பதும் தேவையான விஷயங்களில் மேற் கூறப்பட்ட இரண்டு விஷயங்களும் சேரும்.

பாவிகளுடைய சாட்சியத்தை ஏற்றுக் கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டாலும் தனது செயல்களில் மனச்சாட்சிக்கு விரோதமில்லாத முறையில் காரியங்களைச் செய்பவனின் சாட்சியத்தைத் தான் ஏற்றுக்கொள்ள வேண்டும். (இந்த விஷயம் ஏற்கனவே கூறப்பட்டிருக்கிறது) நீதம் என்பது பெரும் பாவங்களை முற்றிலும் விடுவதன் மூலமும் சிறிய பாவங்களை நிரந்தரமாகச் செய்வதென்பது இல்லாமலிருப்பதின் மூலமும் ஏற்படுவதாகும். சாட்சி சொல்பவன் ஒரு சார்பாக உள்ளவன் என்ற சந்தேகமும் இல்லாமலிருக்க வேண்டும். எனவே, தன் அடிமைக்கும் தனக்குக் கடன் கொடுக்க வேண்டிய மய்யித்திற்கும், தன்னுடைய தாய் தந்தையர்க்கும், தன்னுடைய மக்களுக்கும் சாதகமாகச் சொல்லும் சாட்சியம் மறுக்கப்படும். இவர்களுக்கு பாதகமாக சாட்சியம் கூறினால் மறுக்கக் கூடாது.

ஒருவன் எந்தக் காரியத்திற்கு அதிகாரியாக இருக்கிறானோ அதில் அவன் சாட்சியாக வருவது தடை செய்யப்படும். எதிரி சொல்லும் சாட்சியையும் ஏற்கக் கூடாது. ஒருகாரியத்திற்கு ஒருவனை சாட்சியாக அழைக்காதிருக்கும் போது அவனாக சாட்சி சொல்ல முன் வந்தால் அது மறுக்கப்படும். ஆனால் அல்லாஹ்வுடைய கடமையாகிய தலாக், இத்தா, போன்றவற்றில் நன்மையைக் கருதி தானாக வருகிற சாட்சியை மறுக்கக் கூடாது.

பெரும்பாவம் செய்கிற ஒருவனுடைய சாட்சியை ஏற்றுக் கொள்ள வேண்டுமானால் அவன் தவ்பாச் செய்து திருந்த வேண்டும். அதாவது உயிர் தொண்டைக்குழியை அடைவதற்கு முன்னால், சூரியன் மேற்கே உதயமாகிவரும் நேரம்

(கியாமத்து நாள்) வருவதற்கு முன்னால் அவன் தவ்பாச் செய்து, அதனுடைய நிபந்தனைகளை நிரப்பமாக எடுத்து நடந்து, ஓராண்டு வரை அப்பாவத்தை விட்டு நீங்கி இருந்தால் பிறகு அவனுடைய சாட்சியம் ஏற்றுக் கொள்ளப்படும்.

செயலைச் சேர்ந்த காரியத்திற்கு சாட்சி சொல்வதானால் அதனைக் கண்ணால் கண்டிருப்பதும், சொல்லைச் சேர்ந்த காரியத்திற்கு காதினால் கேட்டிருப்பதும் நிபந்தனையாகும். ஊரில் யாரும் இடித்துக் கூறவில்லையானால் வழக்கத்தில் பொய் பேசுவார்களென அறியப்படாத ஒரு கூட்டத்தாரிடமிருந்து கேள்விப் படுவதைக் கொண்டு நிகாஹ், மௌத்து, வக்ஃபு, உரிமை, வமிசம் ஆகியவற்றிற்கு சாட்சி சொல்லலாம். இன்னும் அவர்களிடமிருந்து கேள்விப்படுவதைக் கொண்டு உடைமையாக்கப்பட்ட பொருள்களின் மீதும் சாட்சி சொல்லலாம். உடைமைக்காரன் நீண்ட காலமாக கை வசப்படுத்தி வைத்திருக்கும் விஷயமாகவும் சாட்சி சொல்லலாம்.

அல்லாஹ்வுடைய ஹத்து அல்லாத பொருள், திருமணம் வணிகம் போன்றவற்றில் ஏற்பட்ட ஒப்பந்தம் சம்பந்தமான விஷயங்களில் சாட்சி ஏற்றுக் கொள்ளப்பட்டு அந்த விஷயம் ருஜுவான பின் அந்தச் சாட்சிகள் மறைவாகி விட்டாலும் அல்லது அச்சாட்சிகள் இப்பொழுது வந்து சொல்வது சிரமமாக இருந்தாலும் அவர்கள் சாட்சி சொன்னதாக வேறு இருவர் சாட்சி கூறினால் அது ஏற்றுக் கொள்ளப்படும். அந்த இருவரும் சாட்சி என்ற வார்த்தையைக் கூற வேண்டும்.

இப்பொழுது மறைவாகிப் போன அந்த முதல் சாட்சிக்கு அசல் என்றும் அந்தச் சாட்சியின் சாட்சிகளாகிய இரண்டாம் சாட்சிகள் ஒவ்வொருவருக்கும் பிரிவு என்றும் சொல்லப்படும். அசல் சாட்சி சொன்னதாக சாட்சி சொல்ல பிரிவு சாட்சிகள் இரண்டு பேர் அவசியமாகும். ரமலானின் பிறையைக் கண்டதாக ஒரு சாட்சி சொன்னதைக் கேட்டதற்கு இரண்டு சாட்சிகள் வேண்டும் என்பது போல்

## சத்தியங்கள் பற்றிய விளக்கம்

சத்தியம் என்பது அல்லாஹ்வுடைய திருநாமத்தைக் கொண்டும் அவனுடைய சிஃபாத்துகளைக் கொண்டும் மட்டுமே உண்டாகும். இன்னும் குர்ஆன், தவ்ராத், இன்ஜீல், ஜபூர் ஆகிய அல்லாஹ்வுடைய வேதங்களின் மீது சத்தியம் செய்தாலும் அதுவும் கூடும். நபி, ஜிப்ரீல், மீகாயீல், கஃபா, பைத்துல் மஃமூர் ஆகியவற்றின் மீது சத்தியம் செய்தால் கூடாது. இவ்வாறான படைக்கப்பட்டவற்றில் ஏதேனும் ஒன்றின்மீது அல்லாஹ்வைப்போல் மகத்துவத்தை மனதில் கொண்டு சத்தியம் செய்வது குஃப்ரை உண்டாக்கும். இவ்வாறே தாய், தந்தை, உஸ்தாது ஆகியவர்களின் மீதும் சத்தியம் செய்தல் கூடாது. மகத்துவத்தைக் கருதாமல் அல்லாஹ் அல்லாத பொருட்களின் மீது சத்தியம் செய்தாலும் அதுவும் பாவமாகும். பெரும்பாலான உலமாக்கள் அதனை மக்ரூஹ் என்பதாகக் கூறியுள்ளனர்.

அதிகமாக சத்தியம் செய்பவருக்கு இதயம் இருளடைந்து விடும்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் எதற்கும் சத்தியம் செய்ததே இல்லை என்று கூறப்பட்டுள்ளது. "(நபியே! எடுத்ததற்கெல்லாம்) சத்தியம் செய்கின்ற எந்த நீசனையும் நீர் வழிபடாதீர்" என்று அல்லாஹ் கூறியுள்ளான். (68:10)

"நான் இன்ன வேலையைச் செய்தால் காஃபிராகிவிடுவேன்"என்று ஒருவன் கூறினால், அது சத்தியமாகாது; அவன் அதைச் செய்வதால் காஃபிராகிவிடவும் மாட்டான். ஆனால் அவன் அவ்வாறு சொல்வது ஹராமாகும். அவ்வாறு சொன்னவன் தவ்பாச் செய்வது வாஜிபாகும்.

ஒருவன் இவ்வாறான ஒன்றுடன் கொழுகிய வாசகத்தை, தன் மன திருப்தியுடன் சொன்னால் உடனே காபிராகி விடுவான். முழுமனதுடன் சொல்லாத சத்தியத்தால் அவன் காஃபிராகி விட மாட்டானென்று இருந்தாலும் அவ்வாறு சொன்னவுடன் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புத் தேடுவது சுன்னத்தாகும். அவன் நாக்கு முந்திக் கொண்டு அவ்வாறு சொல்லிவிட்டதால் அது சத்தியமாகவும் ஆகாது. கோபத்தில் அல்லது பேச்சோடு பேச்சாக (நாச் சறுகுதலாக) சத்தியமாக என்று கூறுவதுபோல். உதாரணமாக: அரபிகள் சாதாரணமாக 'வல்லாஹி' என்றும், மலை பாரிகள் 'அல்லாஹ் நே' என்றும் சொல்வது போல்.

ஃபீஸபீல் போர் சம்பந்தமான ஒப்பந்தம், நன்மையான காரியம் ஆகியவற்றிற்கும்,வழக்குகளில் உண்மையைக் கூறுவதற்கும் சத்தியம் செய்வதைத் தவிர மற்ற காரியங்களில் மக்ரூஹ் ஆகும்.

வாஜிபான காரியத்தை விடுவதற்கும் ஹராமான காரியத்தைச் செய்வதற்கும் சத்தியம் செய்தால் பாவியாவான். அந்த சத்தியத்தை முறிப்பதும் அதற்குரிய குற்றப்பரிகாரம் கொடுப்பதும் வாஜிபாகும். மக்ரூஹான காரியத்தைச் செய்வதற்கும் முஸ்தஹப்பான காரியத்தை விடுவதற்கும் சத்தியம் செய்தால் சத்தியத்தை முறிப்பது சுன்னத்து; குற்றப்பரிகாரம் கொடுப்பது வாஜிப்.

செய்வதும் கூடும் அல்லது செய்யாமலிருப்பதும் கூடும் என்ற ஒரு செயலைச் செய்வதற்கும் அல்லது அந்தச் செயலைச் செய்யாமல் இருப்பதற்கும் சத்தியம் செய்தால் அதனை முறிக்காமலிருப்பது ஏற்றமாகும்.

மற்றொரு சொல்லில், அல்லாஹ்வின் வல்லமையை தரிபாடாக்கியதற்காக அதனை முறிப்பது ஏற்றம் என்று கூறப்பட்டுள்ளது. அவ்வாறு முறித்து விட்டு குற்றப்பரிகாரம் செய்வதால் ஏழைகட்கு பலன் ஏற்படுகிறது என்பதால் முறிப்பது ஏற்றமாகும்.

நிகாஹ், தலாக், உரிமையிடுதல், ரஜ்யீ தலாக் போன்றவற்றில் வாதியானவன் பிரதி வாதியிலிருந்து சத்தியத்தை கண்ணியப்படுத்துவது சுன்னத்து. எதிரி அதனைத் தேடவில்லையானாலும் சரி. மேலும் வக்காலத்து,இருபது தங்கக் காசுகள் பெறுமான சொத்து ஆகியவற்றிலும் சத்தியத்தை கண்ணியப்படுத்துவது சுன்னத்து. இதற்குக் குறைவாக இருந்தால் சுன்னத்தல்ல.

சத்தியத்தைக் கண்ணியப்படுத்துதல் நேரம் இடம் ஆகியவற்றை கவனித்தும் செய்ய வேண்டும். அதாவது: அஸர் தொழுகைக்குப்பின் குறிப்பாக வெள்ளிக்கிழமை அஸர் தொழுகைக்குப்பின்-மிம்பரின் மீதிருந்து செய்தல் சுன்னத்தாகும். இன்னும் அல்லாஹ்வை பயந்து கொள்ளுமாறு அவனிடம் கூறி:

إِنَّ الَّذِينَ يَشْتَرُونَ بِعَهْدِ اللَّهِ وَأَيْمَانِهِمْ ثَمَنًا قَلِيلًا أُولَٰئِكَ لَا خَلَاقَ لَهُمْ فِي الْآخِرَةِ وَلَا يُكَلِّمُهُمُ اللَّهُ وَلَا يَنْظُرُ إِلَيْهِمْ يَوْمَ الْقِيَامَةِ وَلَا يُزَكِّيهِمْ وَلَهُمْ عَذَابٌ أَلِيمٌ

"எவர்கள் அல்லாஹ்விடத்தில் செய்த வாக்குறுதியையும், தங்களுடைய சத்தியங்களையும் சொற்பக்கிரயத்திற்கு விற்று விடுகின்றார்களோ அவர்களுக்கு, மறுமையில் நிச்சயமாக யாதொரு (நற்) பாக்கியமுமில்லை. அன்றி, அல்லாஹ் (மறுமை நாளில்) அவர்களுடன் (விரும்பிப்) பேசவுமாட்டான்; (அன்புடன் ) அவர்களை மறுமைநாளில் (திரும்பிப்) பார்க்கவும்மாட்டான்; அவர்களைப் புனிதப் படுத்தவுமாட்டான். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையுமுண்டு" (3:77) என்ற ஆயத்தை ஓதி விளக்கம் கூறி, குர்ஆனை அவனுடைய மடியில் வைத்து சத்தியம் செய்யச் சொல்வதும் சுன்னத்தாகும். வல்லாஹி-அல்லாஹ்வின் மீது ஆணையாக என்று சுருக்கமாகச் சொன்னாலும் போதும்.

பொய்ச்சத்தியம் செய்வது பெரும்பாவம். நீதிபதி அறியாத முறையில் தந்திரமாகப் பேசுவதினால் அப்பொய்ச் சத்தியத்தின் பாவம் நீங்கி விடாது. எதிரி இவனுக்கு அநியாயம் செய்தால் அப்பொழுது அது பாவமாகாது. அநியாயம் என்பது பல வகையுண்டு. தன்னிடம் பொருளேதும் இல்லாதிருக்கும்போது இவனைத் தொந்தரவு செய்வதும் அநியாயம்தான். அந்த நிலையில் நான் இவனுக்கு ஏதும் கொடுக்க வேண்டியது என் மீது கடமையில்லை என்று உண்மையை மறைத்து சத்தியம் செய்தால் பாவமில்லை.

மறுக்கப்பட்ட சத்தியம் அல்லது மீள வைக்கப்பட்ட சத்தியம் என்பது எதிரி விண்ணப்பம் செய்வது போன்றதாகும். அப்படி விண்ணப்பம் செய்தபின் அதற்கு மாற்றமாக அவன் சாட்சியம் கொண்டு வந்தால் அதனை ஏற்கக் கூடாது. பிரதிவாதியை சத்தியம் செய்யச் சொல்லி எடுத்துக் காட்டியபின் சத்தியம் செய்ய மாட்டேன் என்று அவன் பின் வாங்கினால் சத்தியம் செய்யும் பொறுப்பை வாதியிடம் திருப்பி விட்டு அவனைச் சத்தியம் செய்யச் சொல்வதுமாகும்.

## சத்தியத்தை முறிப்பதற்குள்ள பரிகாரம்

சத்தியத்தை முறித்தால், அதற்கு பரிகாரம் பின்வரும் மூன்று விதங்களில் முறித்தவன் விரும்பிய ஏதேனும் ஒன்றைச் செய்தால் அக்குற்றம் நீங்கிவிடும். 1)

எவ்விதக் குறையுமில்லாத முஃமினான ஓர் அடிமையை உரிமை விடுவது. 2) அல்லது அந்த ஊரில் புழக்கத்திலிருக்கும் தானியங்களைக் கொண்டு பத்து ஏழைகட்கு உணவு கொடுப்பது 3) அல்லது பத்து ஏழைகட்கு ஆடைகள் வழங்குவது. இந்த மூன்றில் ஏதேனும் ஒன்றை நிறைவேற்ற முடியவில்லையானால் மூன்று நோன்பு பிடிப்பது வாஜிபாகும்.

## உரிமை விடுதல் பற்றிய பாடம்

ஓர் அடிமையின் மீது எல்லா வித சக்தியும் பெற்றிருக்கின்ற ஓர் எஜமான் தன்னுடைய அடிமையைப் பார்த்து, "உன்னை உரிமை விட்டு விட்டேன்; உன்னை சுதந்திரவானாக்கி விட்டேன்; உன்னை விடுவித்து விட்டேன் என்று தெளிவாகவோ அல்லது உரிமை விடுவதை மனதில் எண்ணிக் கொண்டு சாடையாகவோ சொல்வதினால் உரிமை உண்டாகி விடும். சாடை என்பது, "உன் மீது எனக்கு ஆட்சி கிடையாது; என் ஆட்சியிலிருந்து உன்னை நீக்கி விட்டேன்" என்பதைப் போன்று கூறுவதாகும்.

ஒருவன் தனக்குச் சொந்தமான ஓர் அடிமைப் பெண்ணை உரிமை விட்டால் அவள் கர்ப்பமுடையவளாக இருந்தால், அந்தக்கரு அவனுக்குரியதாகவும் இருந்தால் அதுவும் உரிமையாகும். இரண்டு பேருக்குக் கூட்டாக இருக்கும் ஓர் அடிமையை ஒருவன் உரிமைவிட்டால் அவன் பங்கு மட்டும் உரிமையாகி விடும். அந்த உரிமையாகிறது இன்னொரு பங்காளியின் பங்கில் குறையை ஏற்படுத்துவதால், இவன் பொருள் வசதியுள்ளவனாக இருந்தால் அவனுடைய பங்கின் பெறுமதித் தொகையை அவனுக்குக் கொடுப்பது வாஜிபாகும்.

அடிமையை உரிமை விடுவதற்குரிய நன்மையை அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் அறிய மாட்டார்கள். "ஒரு முஸ்லிமான அடிமையை உரிமை விட்டால் அந்த அடிமையின் ஒவ்வொரு உறுப்பிற்குப் பகரமாக இவனுடைய ஒவ்வொரு உறுப்பையும் நரகத்தை விட்டும் அல்லாஹ் விடுதலை செய்திடுவான்; அவனுடைய மர்மஸ்தானத்திற்குப் பகரமாக இவனுடைய மர்மஸ்தானத்தையும்" என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது. சொர்க்கத்தைக் கொண்டு நன்மாராயம் கூறப்பட்டுள்ள அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) அவர்கள் முப்பதினாயிரம் அடிமைகளை உரிமை விட்டுள்ளார்கள் என்று கூறப்பட்டுள்ளது.

அடிமையான மனிதனை உரிமைவிடுதல் சுன்னத்தென்று சொல்லப் பட்டதால் மிருகங்களை உரிமைவிடுதல் என்பது சுன்னத்தாகாது. அவ்வாறு செய்வது முந்திய (ஜாஹிலிய்யா காலமென்னும்) அறியாமை காலத்தின் செயலாகும். அவர்கள் கோயில்களுக்காக நேர்ச்சை செய்த கோயில் காளைகளையும், ஒட்டகங்களையும், ஆடுகளையும் உரிமை விட்டு விடுவார்கள். அவற்றிற்கு புஹைரா, ஸாயிபா என்றும் பெயரிட்டுக் கொள்வார்கள் என்று கூறப்பட்டுள்ளது.

அபூதர்தா (ரலி) அவர்கள், சிறு குழந்தைகள் தங்கள் கைகளில் குருவி போன்ற பறவைகளை வைத்து விளையாடிக் கொண்டிருந்தால் அதனை விலை கொடுத்து

வாங்கி உரிமை விடுகிறேன் என்று கூறி விட்டு விடுவார்கள். இது அவர்களுடைய இரக்க சிந்தனையைக் காட்டுவதாகுமே தவிர, பிராணிகளுக்கு உரிமை விடுதல் என்பதாக ஆகாது. எனவே, பிராணிகளை உரிமை விடவேண்டுமென்பதற்கு இது ஒரு முன்னுதாரணமாக ஆகிவிடாது. அறுத்துச் சாப்பிடுவதற்கு அனுமதியளிக்கப் பட்டுள்ள பிராணிகளைத் தவிர மற்றவற்றின் மீது இரக்கங்கொள்வது அல்லாஹ்வுடைய ரஹ்மத்தை உண்டாக்கும். "பூமியிலுள்ளவர்களுக்கு நீங்கள் இரக்கங்காட்டுங்கள்; வானத்திலுள்ளவர்கள் உங்களுக்கு இரக்கங்காட்டுவார்கள்" என்று ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது.

அடிமையான தன் தாய், தந்தையரை அவர்களின் பிள்ளைகளும், அதுபோல் அடிமையான மக்களை அவர்களுடைய தாய் தந்தையரும் விலைக்கு வாங்கினால் உடனே அவர்கள் உரிமையாகி விடுவார்கள். ஒருவன் தன் அடிமையிடம், "நீ என் மரணத்திற்குப் பின் உரிமை" என்று கூறினால், அவன் இறந்தபின் அவனுடைய கடனை நீக்கி மீதியுள்ள சொத்தில் மூன்றில் ஒரு பங்கு அளவுக்கு அவன் உரிமையாகிடுவான். அவ்வாறு சொல்லிய பின் அவனை விற்று விட்டால் அந்த தத்பீர் (வஸிய்யத்து) அழிந்துவிடும். ஆனால் அவ்வாறு சொல்லிய பின் அந்த எஜமான் அந்தச் சொல்லை வாபஸ் பெற்றுக்கொள்வதாலோ, அல்லது அதனை மறுப்பதாலோ, அந்த தத்பீர் (மரணத்திற்குப்பின் உரிமையென சொல்லும் வஸிய்யத்து) அழிந்துவிடாது.

## மௌத்துக்குப் பின் உரிமை என்று சொல்வது

தன் மரணத்திற்குப் பின் உரிமை என்று சொல்லப்பட்ட அடிமைப்பெண்ணை எஜமான் உடலுறவு கொள்வது கூடும். அவள் நிகாஹின் மூலமோ, ஜினாவின் மூலமோ குழந்தையைப் பெற்றிருந்தால், அவனுடைய மரணத்திற்குப்பின் அவள் உரிமையாகிடுவாள் என்ற சட்டம் அந்தக் குழந்தைக்குப்பொருந்தாது. அக்குழந்தை அடிமையாகவே இருக்கும். தன் மரணத்திற்குப் பின் உரிமை என்று சொல்லப்பட்ட ஓர் அடிமைப்பெண் எஜமான் இறக்கும் நேரத்தில் கர்ப்பவதியாகிவிட்டால், தாயைத்தொடர்ந்து அந்தக் குழந்தையும் உரிமை பெறும். அதேபோல் கர்ப்பவதியாக இருக்கும் ஒரு பெண்ணின் குழந்தைக்கும் அதே சட்டந்தான்.

## உரிமைச் சீட்டு எழுதுவது

நீ இவ்வளவு தந்தால் உன்னை நான் உரிமைவிட்டு விடுகிறேன் என்று ஒரு எஜமானால் உரிமைச்சீட்டு எழுதிக்கொடுக்கப்பட்ட அடிமை, தன்னுடைய செலவுக்காகவும் தான் உரிமையாகுவதற்காக தன் எஜமானுக்கு கொடுக்கவேண்டிய தொகைக்காகவும் சம்பாதிப்பது சுன்னத்து. அந்த எழுத்து சரியாவதற்கு நிபந்தனையாவது, எஜமானனுடைய புறத்திலிருந்து அதனை விதியாக்கியதாகவும் அந்த அடிமையின் புறத்திலிருந்து அதனை ஒப்புக்கொண்டதாகவும் மொழிவதாகும். அதாவது; "உன்னிடம் சீட்டெழுதி வாங்கிக்கொண்டேன் என்றோ, அல்லது " நீ

உரிமைச் சீட்டெழுதப்பட்டவன்; இதனை நீ நிறைவேற்றினால் நீ உரிமையாகிடுவாய்" என்று எஜமான் சொல்வதும், இதனை நான் ஒப்புக்கொண்டேன் என்று அடிமை சொல்வதுமாயிருக்கும். இன்னும் தொகையை இரண்டு தவணைகளிலோ அல்லது அதற்கு மேற்பட்ட தவணைகளிலோ செலுத்த வேண்டுமென்றும், அதன் தொகை இவ்வளவு என்றும், அதன் தன்மை இவ்வாறிருக்கவேண்டுமென்றும் விவரிப்பதும் நிபந்தனையாகும். உரிமைச்சீட்டு எழுதப்பட்ட தொகையிலிருந்து விலைமதிப்புள்ள ஏதேனும் பொருளை தள்ளுபடி செய்வது எஜமானனுக்கு வாஜிபாகும். அவ்வாறு தள்ளுபடி செய்வது நாலிலொன்றாக, பிறகு ஏழிலொன்றாக இருப்பது ஏற்றம். அவ்வாறு தள்ளுபடி செய்வதற்கு ஆதாரம் அல்லாஹ் குர்ஆனில் கூறியுள்ள,

(24:33) وَآتُوهُمْ مِنْ مَالِ اللَّهِ الَّذِي آتَاكُمْ

"அல்லாஹ் உங்களுக்குக் கொடுத்துள்ள பொருளிலிருந்து அவர்களுக்கு நீங்கள் கொடுங்கள்" என்ற ஆயத்தாகும்

ஸல்மான் ஃபார்ஸி (ரலி) அவர்களை அடிமையாக வைத்திருந்த எஜமான், அவர்களுக்கு இவ்வாறு சீட்டெழுதிக் கொடுத்து அதில் மிகுந்த கண்டிப்பும் நிபந்தனையுமிட்டிருந்தார். அதன் தொகையும் தவணையும் மிகக்கடினமானவையாக இருந்தன. அதாவது: நானூறு பேரீச்சங்கன்றுகளை வைத்து அவை மரங்களாகி குலை தள்ளும்வரை அவற்றிற்குத் தண்ணீர் ஊற்ற வேண்டுமென்றும், நாற்பது ஊக்கியா தங்கம் தர வேண்டுமென்றும் நிபந்தனையிட்டிருந்தார். இதனைத் தெரிந்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவர்மீது இரக்கங் கொண்டு அந்த மரக்கன்றுகளுக்குத் தங்களுடைய முபாரக்கான கரங்களால் தண்ணீர் தெளித்தார்கள். அம்மரங்கள் அதே வருஷத்தில் காய்க்க ஆரம்பித்துவிட்டன. பிறகு தங்களுடைய கரங்களால் மண்ணை அள்ளி, அவர் கொடுக்கவேண்டிய அளவுக்கு அதனைத் தங்கமாக்கி அவரிடம் கொடுத்தார்கள். அவ்வாண்டிலேயே அவர் உரிமையடைந்தார்.

எழுதப்பட்ட உரிமைச்சீட்டை ரத்து செய்வது எஜமானுக்குக் கூடாது. சீட்டெழுதப்பட்டுள்ள தவணையில் அத்தொகையை அடிமை செலுத்த முடியவில்லையானாலும், அல்லது செலுத்தச் சக்தியிருந்தும் செலுத்த வில்லையானாலும், அல்லது அவன் தலைமறைவாகி விட்டாலும் ரத்து செய்யலாம். ஆனால், அந்த அடிமை தானாக அச்சீட்டை ரத்து செய்யலாம். உரிமைச் சீட்டெழுதிக்கொடுக்கப்பட்ட அடிமைப் பெண்ணை உடலுறவு கொள்ளுதல் எஜமானுக்குக் கூடாது; ஹராமாகும். உரிமைச் சீட்டெழுதப்பட்ட அடிமை தான் வியாபாரம் செய்வதற்காக அடிமைகளை வாங்கலாம். ஆனால் எஜமானுடைய அனுமதியின்றி திருமணம் செய்வதும் அடிமைப் பெண்ணை சுர்ரியத்தாக உடலுறவு கொள்வதும் சொந்தமாக ஆக்கிக்கொள்வதும் கூடாது.

## அடிமைப் பெண்ணின் மூலம் பிள்ளை பெற நினைப்பது.

சுதந்திரமான மனிதன் அடிமைப் பெண் ஒருத்தியை உடலுறவு கொள்வதின் மூலம் அவள் கர்ப்பமுற்று உயிருடனோ அல்லது இறந்ததாகவோ ஒரு குழந்தையைப் பெற்றெடுத்தால், அல்லது மனித வடிவமுள்ள ஒரு சதைக் கட்டியைப் பெற்றெடுத்தாலும், அந்த எஜமான் இறந்து விடுவது கொண்டு அவள் உரிமையாகிவிடுவாள். அவன் முழுமையாக சுதந்திரமானவனாக இருந்தாலும், அல்லது பாதி சுதந்திரமாகவும் பாதி அடிமையாகவும் இருந்தாலும் சரி. அவளை ஹலாலான முறையில் உடலுறவு கொண்டிருந்தாலும் சரி. ஹராமான முறையில் உறவு கொண்டிருந்தாலும் சரி. அவனுக்குப்பின் அவள் உரிமையாகிவிடுவாள். அதற்குப் பிறகு அவள், நிகாஹின் மூலமோ, ஜினாவின் மூலமோ பெறும் குழந்தைகளெல்லாம் உரிமையானவர்கள்தாம்.

இவ்வாறு எஜமானின் மூலம் உறவு கொள்ளப்பட்ட அடிமைப் பெண் 'உம்மு வலத்' என்று கூறப்படுவாள். அவளை உடலுறவு கொள்வதற்கும், பணிவிடைக்குப் பயன்படுத்துவதற்கும், அவளுடைய அனுமதியின்றியே அவளைத் திருமணம் செய்து கொடுப்பதற்கும் எஜமானுக்கு உரிமையுண்டு. ஆனால், அவளை விற்பதற்கும், நன்கொடையாகக் கொடுப்பதற்கும் உரிமையில்லை. எஜமான் இறந்து விடுவது கொண்டு உம்முவலத் உரிமையாகி விடுவதில் அவளுடைய பிள்ளையும் அவ்விதமேயாகும்.

ஒருவன் தன் அடிமைப் பெண்ணை உடலுறவு கொண்டதாக விண்ணப்பம் செய்து, பிறகு எதன் மூலம் அவள் உம்முவலத் ஆகிவிடுவாளோ அதில் வழக்கு ஏற்பட்டால் அவளை சத்தியம் செய்யச் சொல்லி உண்மையாக்கப்படும். எஜமான் இறந்தவுடன் உரிமையாகிவிடுவாள்.

அல்லாஹுதஆலா நம் அனைவரையும் நரகத்தைவிட்டும் விடுவித்து, நல்லோர்களின் கூட்டத்தில் சேர்த்து பொன்னுலக பதியில் நுழைவித்து தன்னுடைய பேரின்பக் காட்சியை நம்மனைவருக்கும் தந்தருள்வானாக! ஆமீன்!.

## தவ்பாவின் பாடம்

அல்லாஹுதஆலா குர்ஆனில்:

يَآ اَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا تُوْبُوْٓا اِلَى اللّٰهِ تَوْبَةً نَّصُوْحًا ؕ (66:8)

"விசுவாசிகளே! நீங்கள் கலப்பற்ற மனத்துடன் (பாவத்திலிருந்து விலகி) அல்லாஹ்வின் பால் திரும்புங்கள்." என்றும்

اَلتَّآئِبُوْنَ الْعٰبِدُوْنَ الْحٰمِدُوْنَ السَّآئِحُوْنَ الرّٰكِعُوْنَ
السّٰجِدُوْنَ الْاٰمِرُوْنَ بِالْمَعْرُوْفِ وَالنَّاهُوْنَ عَنِ الْمُنْكَرِ

وَالْحٰفِظُوْنَ لِحُدُوْدِ اللّٰهِ ۗ وَبَشِّرِ الْمُؤْمِنِيْنَ ۝ (9:112)

"பாவத்திலிருந்து விலகிக்கொண்டோரும்; (இறைவன் ஒருவனையே) வணங்குவோரும், (இரவு பகலாக அவனைத் துதி செய்து) புகழ்வோரும், (நோன்பு நோற்போரும், மார்க்கக் கல்வியைக்கற்றல், மார்க்கப் பிரச்சாரம் செய்தல் போன்ற மார்க்க விஷயத்திற்காக) பயணம் செய்வோரும், குனிந்து, சிரம் பணி (ந்து தொழு) வோரும். நன்மையான காரியங்களைச் செய்யும்படி ஏவுவோரும், பாவமான காரியங்களை விட்டும் விலக்குவோரும், அல்லாஹ்வுடைய வரம்புகளைப் பேணி நடப்போரும், ஆகிய இத்தகைய (உண்மை) விசுவாசிகளுக்கு (ச் சுவனபதி கிடைக்குமென்று நபியே!) நீர் நன்மாராயம் கூறுவீராக" என்றும்

وَتُوْبُوْٓا اِلَى اللّٰهِ جَمِيْعًا اَيُّهَ الْمُؤْمِنُوْنَ لَعَلَّكُمْ تُفْلِحُوْنَ ۝ (24:31)

"விசுவாசிகளே! (இதில் ஏதும் உங்களில் தவறு ஏற்பட்டுவிட்டால்) நீங்கள் அனைவரும் சித்தி பெறும் பொருட்டு, அல்லாஹ்வின் பக்கமே பாவ மன்னிப்பைக் கோரி (உங்கள் மனத்தை) த் திருப்புங்கள்" என்றும்,

وَمَنْ لَّمْ يَتُبْ فَاُولٰٓئِكَ هُمُ الظّٰلِمُوْنَ ۝ (49:11)

"எவர்கள் (இவைகளிலிருந்து) விலகிக்கொள்ளவில்லையோ அவர்களே (வரம்பு மீறிய) அக்கிரமக்காரர்கள் " என்றும் கூறுகிறான்.

ஹுஜ்ஜத்துல் இஸ்லாம் இமாம் கஸ்ஸாலீ (ரஹ்) அவர்கள் கூறுவதாவது; தவ்பாச் செய்வது வெற்றிபெற நாடுகிறவர்களுக்கு தன் கையிலிருக்கும் பணப்பையிலுள்ள பணமாகவும், ஹக்கை நோக்கி நடக்கிறவர்கள் அடியெடுத்து வைக்கும் கால் எட்டுகளில் முதலாவது எட்டாகவும், நம்முடைய தந்தை ஆதம்(அலை) அவர்களைத் தொடருவதாகவும் இருக்கிறது. ஆதம் (அலை) அவர்கள் ஒரு தவற்றைச் செய்த பின் அதற்காக வருந்தி தவ்பாச் செய்தார்கள். அதனால் அவர்களின் தவ்பாவை அல்லாஹ் ஏற்றுக்கொண்டான். இப்லீஸாகிறவன் பாவம் செய்த பின் தவ்பாச் செய்யாதிருந்த காரணத்தால், நரக நெருப்புக்கு இரையானான்.

ஆதம் (அலை) அவர்கள் தாங்கள் செய்த தவற்றைக் கவலை என்னும் நெருப்பினால் சுட்டுப் பொசுக்கி பரிசுத்தமானார்கள். அதனால் நரக நெருப்பிலிருந்து காக்கப்பட்டார்கள். எனவே உன் தந்தையை நீ பாவத்தில் தொடர்ந்து தவ்பாவில் தொடரவில்லையானால் வமிசம் தவறியவனாக ஆகி, இப்லீஸுடைய வமிசத்தில் உள்ளவனாக ஆகிவிடுவாய். இதனை நீ உணர வேண்டும். எனவே ஒருவர் உனது தந்தையாக இருக்கும்பொழுது உன்னுடைய, எல்லாச் செயல்களிலும் அவரைப் பின்பற்றாமல் மற்றொருவரைப் பின்பற்றுவது கூடாதல்லவா?

ஆதம் (அலை) அவர்களைப் படைத்த களிமண்ணில் நன்மையும் தீமையும் கலந்து குழைக்கப்பட்டது. அந்தத் தீமையைக் கவலை என்ற நெருப்பைக் கொண்டோ, அல்லது நரகத்தின் நெருப்பைக்கொண்டோ தான் சுட்டுக்கரித்துச் சுத்தமாக்க வேண்டும். எனவே ஆதமுடைய மகனே! இந்த உலகில் நீ எவ்வாறு நடக்கவேண்டு மென்று நினைக்கிறாயோ, அவ்வாறு நடக்க உனக்கு உரிமை கொடுக்கப்பட்டுள்ளது. உன் விருப்பப்படி நடக்கலாம். ஆனால், நீ அறிவுள்ளவனாக இருந்தால் பாவம் என்ற தீமையைக் கவலை என்ற நெருப்பினால் கரித்து நரக நெருப்பை விட்டும் நீங்கிக்கொள்வதன் மூலம் உன் தகப்பனார் ஆதம்(அலை) அவர்களுக்கு ஒப்பாகலாம். எனவே எப்பொழுதும் தவ்பாச் செய்தவனாகவே இருப்பது கடலில் செல்லும் கப்பலுக்கு சுக்கான் இருப்பது போலாகும். மரணம் எப்பொழுது வரும் என்பதை யாரும் உணர மாட்டார்கள். குர் ஆனிலும் ஹதீஸிலும் தவ்பாச் செய்வது பற்றி ஏராளமான அறிவிப்புகள் கூறப்பட்டுள்ளன.

தன் அடியான் செய்யும் தவ்பாவினால் அல்லாஹ் அதிகம் மகிழ்ச்சி யடைகிறான். அதற்கு ஓர் உதாரணத்தை ரசூலுல்லாஹி (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள். அதாவது " ஒரு மனிதன் தன் ஒட்டகத்தின் மீது உணவு, தண்ணீர் மற்றும் சாமான்களையும் ஏற்றிக்கொண்டு பிரயாணம் செல்கிறான். அவன் பாலைவனத்தின் வழியாகச் செல்லும்போது இளைப்பாறுவதற்காக ஓரிடத்தில் இறங்கி தன் ஒட்டகத்தை அங்குவிட்டு விட்டு சற்று நேரம் தூங்கிவிடுகிறான். விழித்துப்பார்க்கும்போது அவனுடைய அந்த ஒட்டகத்தைக்காணவில்லை. அது இல்லாமல் அவன் தன் பசி, தாகத்தைத் தீர்த்துக்கொள்ளவும் முடியாது. தான் போய்ச் சேரவேண்டிய இடத்தை அடையவும் முடியாது. எனவே அதைத்தேடி அலைந்ததில் அவனுக்குப்பசியும் நாவறட்சியும் மேலோங்கி மயக்கம் உண்டாகிவிட்டது. அவனுக்கு ஏற்பட்ட களைப்பினால் மீண்டும் அதே இடத்தில் படுத்து உறங்கிவிட்டான். பிறகு கண் விழித்துப்பார்த்தபொழுது அந்த ஒட்டகம் அதன் பொருட்களுடன் அவன் முன் நின்று கொண்டிருப்பதைக்கண்டு தன் பசியையும் தாகத்தையும் தீர்த்துக்கொள்கிறான்.

இந்த மனிதன் அந்த நேரத்தில் எவ்வளவு மகிழ்ச்சியடைவானோ அதைவிட அதிகமாக,தவ்பாச் செய்கிறவனைப்பார்த்து,அல்லாஹ் மகிழ்ச்சியடைகிறான்."

மேலும் தவ்பாச் செய்கிறவன் அல்லாஹ்வுடைய ஹபீப் (நேசன்) என்பதாகவும், அவன் அன்று பிறந்த பாலகனைப் போலாகி விடுகிறான் என்பதாகவும், பரிசுத்தமான தவ்பாச் செய்து நற்செயல்கள் செய்பவர்களுக்கு பாவங்கள் மன்னிக்கப்படுவதுடன் அப்பாவங்களை நன்மைகளாக அல்லாஹ் மாற்றி விடுவான் என்பதாகவும் ஙஸ்ஸாலி(ரஹ்) அவர்கள் இஹ்யாவில் கூறியிருக்கிறார்கள்.

அதிகமான பாவங்களைச் செய்து விட்டவர்களை நோக்கி, "வரம்பு மீறிவிட்ட என்னுடைய அடியார்களே, அல்லாஹ்வுடைய ரஹ்மத்தை விட்டும் நீங்கள் நிராசையாகிவிடாதீர்கள்" என்பதாகவும், "நீங்கள் பாவம் செய்தபின் மன்னிப்புத் தேடாதவர்களாக இருந்தால், உங்களை அழித்து விட்டு பாவம் செய்து, பின்னர் மன்னிப்புத்தேடுகின்ற ஒரு கூட்டத்தினரை நான் கொண்டு வருவேன்; அவர்கள்

என்னிடம் மன்னிப்புத் தேடுவார்கள். நான் அவர்களை மன்னித்து விடுவேன்" என்பதாகவும், "பாவிகள் தங்களுடைய பாவங்களை நினைத்து அழுது முனகும் ஓசையாகிறது, மலக்குகளுடைய தஸ்பீஹின் ஓசையை விட எனக்கு விருப்பமானது" என்பதாகவும் அல்லாஹ் கூறியுள்ளான் என்று அறிவிக்கப்பட்டுள்ளது. இத்தகையோர் கப்ருகளிலிருந்து முகமலர்ச்சியுடையவர்களாகவும், சிரித்தவர்களாக இருக்கும் நிலைமையிலும் எழுப்பப்படுவார்கள். பல வகை வணக்க சாலிகளுக்கும் தலைவர்களாக அவர்கள் நியமிக்கப்படுவார்கள் என்றும் கூறப்பட்டுள்ளது. இந்தச் சிறப்புகளெல்லாம் அவர்கள் கலப்பற்ற தவ்பாச் செய்ததின் காரணத்தினாலும், தவ்பாச் செய்ய வேண்டிய முறைப்படி செய்ததினாலுமேயாகும். இதில் எவ்விதச் சந்தேகமும் கொள்ளுதல் கூடாது. சூரியன் இருளைப்போக்குமென்பதில் எவ்வாறு சந்தேகப்படுவதற்கில்லையோ அவ்வாறே தவ்பா, பாவங்களைப் போக்குவதிலும் சந்தேகிக்கலாகாது என இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள். குர் ஆனிலும், ஹதீஸ் குத்ஸியிலும், மற்ற ஹதீஸ்களிலும் தவ்பாவின் சிறப்பைப்பற்றிக் கூறப்பட்டுள்ள விஷயங்கள் எழுதி முடிக்க முடியாதவையாகும்.

இந்தக் கிதாபை தவ்பாவுடைய பாடத்தைக் கொண்டு முடித்ததற்குப்பல காரணங்கள் உள்ளன. அவற்றில் ஒன்று அல்லாஹுதஆலா குர்ஆனில்:

إِنَّ اللّٰهَ يُحِبُّ التَّوَّابِيْنَ وَيُحِبُّ الْمُتَطَهِّرِيْنَ ۝ (2:222)

"நிச்சயமாக அல்லாஹ், (தாங்கள் செய்த பாவங்களை நினைத்து வருந்தி இனி அப்படிச் செய்வதில்லை என்று உறுதிபூண்டு) தவ்பாச் செய்பவர்களையும் (மீள்பவர்களையும்) தூய்மையானவர்களையும் விரும்புகிறான்" என்று கூறியுள்ளான் இதில் இரண்டு விதமான சுத்தங்களைப் பற்றி இறைவன் குறிப்பிடுகிறான்.

ஒன்று தண்ணீரைக் கொண்டு சிறு தொடக்கு, பெருந்தொடக்கு ஆகியவற்றை நீக்கி (உடலைச்) சுத்தம் செய்தல். இண்டாவது தவ்பாவைக்கொண்டு பாவத்தை நீக்கி(உள்ளத்தைச்) சுத்தம் செய்தல், முந்தியது கண்ணால் காணப்படக்கூடிய சுருபியாகவும், பிந்தியது கண்ணால் காணமுடியாத அருபியாகவும் இருக்கிறது. எனவே, ஃபிக்ஹு என்னும் மார்க்கச் சட்டங்களை விளக்கும் இந்த கிதாபை தண்ணீரினால் உடலைச்சுத்தம் செய்யும் பாடத்தை முற்படுத்தித் துவக்கினோம். அவ்வாறே தவ்பாவைக் கொண்டு உள்ளத்தைச் சுத்தம் செய்யும் பாடத்தைக்கொண்டு முடித்துள்ளோம்.

குர்ஆனையும் ஹதீஸையும் நன்கு ஆராய்ந்த ஞானவான்கள் கூறுவதாவது: கலப்பற்ற தவ்பாவுக்கு எந்த நன்மையும் நிகராக முடியாது. ஏனெனில், நற்செயல்களின் விளைவுகளெல்லலாம் பாவங்களைப் போக்குவதாகவே இருக்கும். தவ்பா, பாவங்களைப் போக்குவதுமட்டுமின்றி அவற்றை நன்மைகளாகவும் மாற்றி விடுகிறது. இதனை அல்லாஹுதஆலா குர் ஆனில் கீழே குறிப்பிட்டுள்ளபடிக் கூறியுள்ளான். அதாவது:

إِلَّا مَنْ تَابَ وَاٰمَنَ وَعَمِلَ عَمَلًا صَالِحًا فَأُولٰٓئِكَ يُبَدِّلُ
اللّٰهُ سَيِّاٰتِهِمْ حَسَنٰتٍ ؕ وَكَانَ اللّٰهُ غَفُوْرًا رَّحِيْمًا ۝ (25:70)

"ஆயினும் (அவர்களில்) எவர்கள், பாபத்திலிருந்து விலகி, (மன்னிப்புக்கோரி) விசுவாசங்கொண்டு நற்கருமங்களைச்செய்கின்றார்களோ அத்தகையோருடைய பாபங்களை, அல்லாஹ் (மன்னிப்பது மட்டுமல்ல; அதனை) நன்மையாகவும் மாற்றிவிடுகிறான்: அல்லாஹ் மிக்க மன்னிப்போனும் கிருபையுடையோனுமாக இருக்கிறான். »

இந்த வசனத்திற்கு முன்னதாக இணைவைத்தல், கொலை செய்தல், விபச்சாரம் புரிதல் ஆகிய பெரும்பாவங்களைக் குறிப்பிட்டு, பிறகு தவ்பாச் செய்யும்பொழுது அப்பாவங்களை நன்மைகளாக மாற்றிவிடுவதாகக் கூறுகிறான். மேற்கூறப்பட்ட பெரும்பாவங்களே நன்மைகளாக மாற்றப்படும்பொழுது, மற்ற பாவங்கள் எவ்வாறு நன்மைகளாக்கப்படாதிருக்க முடியும்! பாவங்கள் மன்னிக்கப்படுவது மாபெரிய ரஹ்மத்தாகும்! அவை நன்மைகளாக மாற்றப்படுவது எவ்வளவு பெரிய ரஹ்மத்தாக இருக்கும் என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

எனவே! நிச்சயமற்ற இந்த அற்ப உலகிலிருக்கும்பொழுதே கவலைப்படும் ஒரு நேரம் வந்து அந்தக் கவலையும் எவ்வித பயனும் அளிக்காமல் நமக்கு மரணம் வரு - முன் நம்முடைய மனோ இச்சையாகிய, (ஷைத்தான் தன்மையாகிய) நான் என்ற ஃபிர் அவ்னின் குணத்துக்கு இடமளிக்காமல் தவ்பா என்னும் மூஸாவின் குணங் களைப்பற்றிப்பிடித்து ஈடேற்றம் பெறுவோமாக! இன்னும் பாவங்களெனும் பெரு வெள்ளம் சூழ்ந்து கொள்ளும்போது நமது செயல்களை நினைத்து மனம் வருந்தியவர்களாக தவ்பாவெனும் நூஹுடைய கப்பலில் ஏறி கரைசேர்ந்திடுவோமாக!

தவ்பா ஏற்றுக்கொள்ளப்படுவதற்குரிய நிபந்தனைகள் நான்கு. 1) அல்லாஹ்வுடைய கட்டளைக்கு மாற்றமாக பாவம் செய்ததை நினைத்து வருந்துவது. 2) அத்தகைய பாவமான செயல் போலுள்ள எந்தச் செயலையும் இனிமேல் ஒரு போதும் செய்யமாட்டேன் என்று உறுதிகொள்வது 3) அல்லாஹ்வினால் கடமை யாக்கப்பட்டவற்றைச் செய்வது; அவனால் விலக்கப்பட்டவற்றிலிருந்து விலகிக்கொள்வது. 4) அநீதியாக எடுத்த பொருள்களையும் தன் வசம் ஒப்படைக்கப்பட்ட அமானிதப்பொருளையும் அவற்றிற்குரியவர்களிடம் ஒப்படைத்துவிடுவது. அல்லாஹ்வினால் கடமையாக்கப்பட்ட ஃபர்ளை நிறை வேற்றுதல் என்பதில் ஜகாத்தும் சேரும். ஜகாத்து அவனுக்குக் கடமையான நாள் முதல் எத்தனை ஆண்டுகளாக அவன் நிறைவேற்றவில்லையோ அத்தனை ஆண்டுகளுக்குரியதையும் நிறைவேற்றவேண்டும். மேற்கூறப்பட்ட நான்கு நிபந்தனைகள் இல்லாமல் தவ்பா ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

தவ்பாச் செய்யும் பொழுது கொடுக்கவேண்டியதை உரியவருக்குக் கொடுக்க முடியவில்லையானால் எப்பொழுது கொடுக்க வசதி ஏற்படுகிறதோ அப்பொழுது கொடுப்பதாக உறுதி செய்துகொள்ளவேண்டும். வியாபாரத்தில் தவறான முறையில் விற்றதில் தனக்குச் சேர வேண்டியதற்கு மேல் அதிகமாக வந்த பொருளையும், பொய்ச்சத்தியம், பொய்யான வழக்கு ஆகியவற்றினால் ஒருவரிடமிருந்து கிடைத்த பொருளையும், மற்றும் மார்க்கத்தில் விலக்கப்பட்ட முறையினால் சம்பாதித்த

பொருளையும் உரியவர்களிடம் சேர்ப்பித்து விடவேண்டும். பொருளுக்குரியவன் இறந்து விட்டிருந்தால் அவனுடைய வாரிசுகளிடம் சேர்ப்பிக்கவேண்டும். வாரிசுகள் எவரும் இல்லையானாலும், அல்லது அவர்கள் காணாமல் போய்த் திரும்பி வரவில்லையானாலும், அல்லது இன்னாரெனத் தெரிந்து கொள்ள முடியவில்லையானலும் காளியிடம் ஒப்படைக்கவேண்டும். காளி நம்பிக்கைக் குரியவராக இல்லாவிட்டால் தன் வசமே வைத்துக்கொண்டு, அவன் திரும்பிவரும்பொழுது கொடுத்துவிட உறுதி கொள்ளவேண்டும். அதனை நல்ல காரியங்களில் செலவிடுவதும் கூடும். பிறகு அவன் ஏழையாகிவிட்டால் அவனுக்கு வழிவகை ஏற்படும்பொழுது கொடுத்து விடுவதாக நிய்யத்துச்செய்து கொள்ளவேண்டும். அவ்வாறு வசதி ஏற்படும் முன் அவன் இறந்து விட்டால் மறுமையில் குற்றம் பிடிக்கப்படமாட்டான். கிருபையாளனாகிய அல்லாஹுதஆலா தனது கருணையினால் அந்தப் பொருளின் உரிமையாளனுக்கு மறுமையில் நல்ல பிரதிபலனையும், அவனுக்குப் பாவங்களின் மன்னிப்பையும் வழங்குவானென்று ஆதரவு வைக்கவேண்டும்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய காலத்திற்கு முன் வாழ்ந்த சமுதாயத்தினர், உடல் சுகத்துடன் இருக்கும் நிலையில் (அதாவது மரண நோய்வரும் முன்) செய்யும் தவ்பா தான் ஏற்றுக்கொள்ளப்படும் என்றும், மரணம் நெருங்கிவிட்டதாக தனக்கு உறுதியாகத் தெரிந்த பிறகு செய்யும் தவ்பா ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது என்ற நிலை இருந்தது. ஆகையால் தான் ஃபிர் அன் நீல் ஆற்றில் மூழ்கிய நேரத்தில் ஈமான் கொண்டதை அவனிடமிருந்து ஏற்றுக்கொள்ளப்படவில்லை. அதாவது:

'اٰمَنْتُ اَنَّهٗ لَاۤ اِلٰهَ اِلَّا الَّذِيْۤ اٰمَنَتْ بِهٖ بَنُوْۤا اِسْرَآءِيْلَ.

"பனூ இஸ்ராயீல் யாரைக்கொண்டு ஈமான் கொண்டனரோ அந்த ஒருவனைத் தவிர வேறு எந்த நாயனும் இல்லை என்று நான் ஈமான் கொண்டேன்" என்று அவன் கூறியதாக இறைவன் குர்ஆனில் கூறுகிறான் (10:90) எனினும், அவனுடைய ஈமான் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. ஆனால், அவன் பெரும் கொடையாளியாய் இருந்தான். கொடையாளியின் முடிவு தீயதாக ஆகாது என்ற அடிப்படையில் அவனுடைய ஈமான் ஒரு வேளை ஏற்றுக்கொள்ளப்படலாம் என்று இப்னுல் அரபி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

நம்முடைய நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அல்லாஹுதஆலாவிடம் வேண்டிக்கொண்டதின் காரணத்தால் நம்முடைய தவ்பாவாகிறது, உயிர் தொண்டைக்குழியை அடையும் நேரம் வரையிலும், சூரியன் படும் திசையாகிய மேற்கில் அது எழும்நேரம் (கியாமத்நாள்) வருவதற்கு சற்று முன்னும் ஏற்கத்தக்கதென அல்லாஹுதஆலா சலுகை வழங்கியுள்ளான். இந்த நிலையில் செய்யும் வஸிய்யத்து ஒப்புக்கொள்ளக்கூடியதில்லை என்று ஃபிக்ஹுடைய உலமாக்கள் கூறியிருந்தாலும், அந்த நிலையில் செய்யக்கூடிய தவ்பா இறைவனால் ஒப்புக்கொள்ளப்படக்கூடியதாகவே இருக்கும்.

தொழுகையும், நோன்பும் கடமையான ஆணும் பெண்ணும் அதனை எந்த முறையில் விட்டிருந்தாலும், அது மிக அதிகமாக இருந்தாலும் அவை முழுவதையும் களாச் செய்திட வேண்டும். அவ்வாறு களாச்செய்வதால் தான் அந்தக் குற்றம் நீங்கும். விரைவாகக் களாச்செய்தல் சில காரியங்களில் வாஜிப் என்ற விபரமும், நோன்பில் களாச் செய்வதுடன் உரிய நஷ்ட ஈட்டையும் கொடுக்கவேண்டு மென்ற விபரமும் முன்னால் அந்தந்த பாடத்தில் கூறப்பட்டுள்ளது.

ஒருவன் மீது சொன்ன அவதூறுக்காக தவ்பாச் செய்யும்பொழுது, தான் சொன்னது பொய்யென்றும், அதற்காக தான் வருந்துவதாகவும், இனிமேல் அக்குற்றத்தைச் செய்யமாட்டேன் என்று கூறுவதும் நிபந்தனையாகும்.

ஒருவரைப் புறம் பேசியதற்குரிய குற்றப்பரிகாரமாகிறது: யாரைப் புறம் பேசினாரோ அவருக்கு அச்செய்தி தெரியவில்லையானால் தனித்திருந்து பாவமன்னிப்புத்தேடுவதும் அவருக்காக நல்ல துஆச்செய்வதுமாகும். அப்படிச்செய்வதைக்கொண்டு அவருடைய அந்தக்குற்றம் மன்னிக்கப்படும். புறம்பேசியது அவருக்குத் தெரிந்து விட்டால், அவரிடம் நேரடியாகச்சென்று அதனை மன்னிக்கும் படிக் கேட்டுக்கொள்வது நிபந்தனையாகும். அவர் இருக்குமிடம் தெரியவில்லையானால், அல்லது இறந்துவிட்டிருந்தால் அவரைப் புறம்பேசியதற்காக வருந்துவதும், அவருக்காக துஆச் செய்வதும் போதுமானதாகும். ஒருவரின் மீது பொறாமை கொண்ட குற்றத்திற்குரிய தவ்பாவும் இவ்வாறுதான்.

ஒருவரிடமிருந்து ஏதேனும் பொருளை அபகரித்துக்கொண்டபின் அதனை உரியவனிடம் திருப்பிக்கொடுத்திட வேண்டுமென எண்ணுகிறான். ஆனால், அவ்வாறு கொடுத்தால் தன்னைத் திருடன் என்பதாகக் கூறித் தண்டித்து விடுவார்களென்று பயந்தால், எந்த முறையில் அதனை அவனிடம் சேர்க்க முடியுமோ அந்த முறையில் தந்திரமாக அதனைச் சேர்த்துவிடவேண்டும். அதனால் ஏதேனும் பொய் சொல்ல நேர்ந்தாலும் சரி. அந்தப் பொருளைப்பற்றி பயம் ஏற்பட்டிருந்தால் அதனைத் தன் பொருளுடன் கலக்காமல் இருப்பதும் அதனைப் பழுதாக்காமல் இருப்பதும் அவசியமாகும்.

ஒருவரைப் பற்றி கோள்சொல்வதால், அல்லது பொய் சாட்சி சொல்வதால் அந்த மனிதனுக்கு உடல் சம்பந்தப்பட்ட வேதனையோ பொருள் சம்பந்தப்பட்ட நஷ்டமோ உண்டாகிறதென்று இருந்தால் இயன்ற அளவு அந்த நஷ்டத்திற்கு இவன் பொறுப்பேற்றுக்கொள்ளவேண்டும். பொய் சாட்சி சொன்னதாக நிரூபிக்கப்பட்டு, அதனால் இக்காலத்தின் சட்டப்படி கடினமாக தண்டனை அரசினால் ஏற்படுவதாக இருந்தால் பொருள் சம்பந்தப்பட்ட நஷ்டத்தை உரியவனிடம் சேர்ப்பித்து விடவேண்டும். மற்ற குற்றத்தைத் தான் செய்யவில்லை என்று பொய் சொல்லியாவது உண்மையை மறைத்துக்கொள்ளலாம்.

பாலங்களுக்காக தவ்பாச் செய்வதில் நாவினால் பாவமன்னிப்பு வாசகத்தைக் கூறுதல் நிபந்தனையாகும் என்று சிலர் கூறியுள்ளனர். இமாம் புல்கீனீ (ரஹ்)

அவர்களும் அதனை உறுதிப்படுத்தியுள்ளார்கள். வேறு சிலர், அவ்வாறு கூறுவது சுன்னத்தென்று கூறியுள்ளனர்.

ஜினாவிற்காக தவ்பாச் செய்யும்பொழுது ஜினா செய்யப்பட்ட பெண்ணுடைய கணவனிடம் பொருத்தம் தேடிக்கொள்ளவேண்டுமென்று சில இமாம்கள் கூறியுள்ளார்கள். அதனால் குழப்பம் உண்டாகுமென்று பயந்தால், இவனைப்பற்றி அக்கணவன் பொருத்தமாகும் படியாக அல்லாஹுதஆலாவிடம் மனமுருகி துஆச்செய்து கொள்ளவேண்டும். வேறு சில இமாம்கள், ஜினா என்பது அடியார்கள் சம்பந்தப்பட்ட கடமையல்ல என்பதால் அவளுடைய கணவனிடம் பொருத்தம் தேட வேண்டியதில்லை என்று கூறியுள்ளார்கள்.

ஜினாவையோ, அல்லது அது போன்ற பெரிய பாவங்களையோ செய்தவன் அதனை வெளியில் சொல்லாமல் மறைத்துக்கொள்வது சுன்னத்தாகும். அதனைப் பரிகாசமாகவும், விளையாட்டாகவும் வெளியில் சொல்லித் திரிவது ஹராமாகும். ஒருவன் தான் ஜினா செய்ததாகத் தானே விண்ணப்பித்தால் பிறகு அதனை மறுத்து நான் ஜினா செய்யவில்லையென்று கூறுவது சுன்னத்தாகும். அவ்வாறே மற்ற பாவங்களைப்பற்றியும் செய்யவேண்டும். இந்த விபரங்களெல்லாம் முன்னால் கூறப்பட்டுள்ளன.

لَا صَغِيْرَةَ مَعَ الْإِصْرَارِ . وَلَا كَبِيْرَةَ مَعَ الْإِسْتِغْفَارِ

"சிறு பாவங்களை நிரந்தரமாக செய்வதனால் அது பெரும்பாவமாக ஆகிவிடும். பாவமன்னிப்புத் தேடுவதால் பெரும்பாவம் இருப்பதுமில்லை அது மன்னிக்கப்பட்டுவிடும்" என்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.

இறந்து விட்ட ஒருவனுக்கு மற்றொருவன் கடன் கொடுக்க வேண்டியதிருக்கிறது. அதனை இறந்தவனுடைய வாரிசுக்காரரிடம் ஒப்படைத்துவிட வேண்டும். அவ்வாரிசு அதனை வாங்கிக்கொள்ளவில்லையானால் மறுமையில் அந்த இறந்தவன், தன்வாரிசைக் குற்றம் பிடிப்பான் என்று ஷைகு இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

ஒருவன் கொடுக்க வேண்டிய கடனை அவனுடைய அனந்தரக்காரன் அல்லது மற்றொருவன் அவனுக்காக நிறைவேற்றிவிட்டால் மறுமையில் அவன் குற்றம் பிடிக்கப்படமாட்டான் என்றும் கூறப்பட்டுள்ளது.

அல்லாஹுதஆலா நம் அனைவருக்கும் அருள் புரிந்து நம்முடைய பாவங்களை மன்னித்து, குற்றங்களை மறைத்து, தீமைகளை நன்மைகளாக மாற்றி சுவன வாழ்வைத்தந்தருள்வானாக! ஆமீன்.

وَصَلَّى اللّٰهُ وَسَلَّمَ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِهٖ
وَصَحْبِهٖ اَجْمَعِيْنَ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ.

## ஐங்காலத் தொழுகைகளுக்குப் பின்னும் இதர நேரங்களிலும் ஓதக்கூடிய திக்ருகள், தஸ்பீஹ்கள், அவ்ராதுகள், வளீஃபாக்கள், துஆக்கள்.

எந்தத்தொழுகையையும் தொழுது முடித்தவுடன் கீழ்காணும் தஸ்பீஹை ஓதவும் :

سُبْحَانَكَ مَا عَبَدْنَاكَ حَقَّ عِبَادَتِكَ. سُبْحَانَكَ
مَا عَرَفْنَاكَ حَقَّ مَعْرِفَتِكَ. سُبْحَانَكَ مَا ذَكَرْنَاكَ
حَقَّ ذِكْرِكَ. سُبْحَانَ مَنْ لَا يَعْرِفُ قَدْرَهُ غَيْرُهُ.
وَلَا يَصِفُ الْوَاصِفُوْنَ صِفَتَهُ اِلَّا هُوَ.

மஃரிபிலும், ஸுப்ஹிலும் ஸலாம் கொடுத்து காலமடிப்பை எடுக்குமுன்:

لَا اِلٰهَ اِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ. لَهُ الْمُلْكُ
وَلَهُ الْحَمْدُ يُحْيِيْ وَيُمِيْتُ بِيَدِهِ الْخَيْرُ وَهُوَ
عَلٰى كُلِّ شَيْئٍ قَدِيْرٌ.

என்ற நான்காம் கலிமாவை *10* தடவை ஓதவும்.

மஃரிபு, ஸுப்ஹு ஆகிய இரு தொழுகைகள் தவிர மற்ற மூன்று நேரத்தொழுகைகளிலும் மேற்கண்ட கலிமாவில் بِيَدِهِ الْخَيْرُ வை விட்டு விட்டு பத்து தடவை ஓதவும். பின்பு:

اَسْتَغْفِرُ اللّٰهَ الْعَظِيْمَ

என்று மூன்று தடவை ஓதிய பின், அதைத் தொடர்ந்து

اَلَّذِيْ لَا اِلٰهَ اِلَّا هُوَ الْحَيُّ الْقَيُّوْمُ مِنْ كُلِّ ذَنْبٍ
وَّخَطِيْئَةٍ وَّاَتُوْبُ اِلَيْهِ. وَاَسْئَلُهُ التَّوْبَةَ.

اَللّٰهُمَّ اَنْتَ السَّلَامُ ۔ وَمِنْكَ السَّلَامُ ۔ وَاِلَيْكَ
يَرْجِعُ السَّلَامُ ۔ حَيِّنَا رَبَّنَا بِالسَّلَامِ ۔ وَ
اَدْخِلْنَا بِرَحْمَتِكَ دَارَ السَّلَامِ ۔ تَبَارَكْتَ
رَبَّنَا وَتَعَالَيْتَ يَا ذَا الْجَلَالِ وَالْاِكْرَامِ ۔

என்று ஓதிவிட்டு பின் கீழ்காணும் விதமாக ஓதவும்:

اَللّٰهُمَّ اِنِّيْٓ اُقَدِّمُ اِلَيْكَ بَيْنَ يَدَيَّ كُلِّ نَفَسٍ وَّ
لَمْحَةٍ وَّطَرْفَةٍ يَّطْرِفُ بِهَا اَهْلُ السَّمٰوٰتِ وَ
اَهْلُ الْاَرْضِ ۔ وَكُلِّ شَيْءٍ هُوَ كَائِنٌ فِيْ عِلْمِكَ
اَوْ قَدْ كَانَ اُقَدِّمُ بَيْنَ يَدَيَّ ذٰلِكَ كُلِّهٖ ۔

என்று ஓதிவிட்டுக் கீழ்காணும் ஆயத்துகளை ஓதவும்:

اَللّٰهُ لَآ اِلٰهَ اِلَّا هُوَ اَلْحَيُّ الْقَيُّوْمُ ۚ لَا تَاْخُذُهٗ سِنَةٌ
وَّلَا نَوْمٌ ۗ لَهٗ مَا فِي السَّمٰوٰتِ وَمَا فِي الْاَرْضِ ۗ مَنْ
ذَا الَّذِيْ يَشْفَعُ عِنْدَهٗٓ اِلَّا بِاِذْنِهٖ ۗ يَعْلَمُ مَا
بَيْنَ اَيْدِيْهِمْ وَمَا خَلْفَهُمْ ۚ وَلَا يُحِيْطُوْنَ
بِشَيْءٍ مِّنْ عِلْمِهٖٓ اِلَّا بِمَا شَآءَ ۚ وَسِعَ كُرْسِيُّهُ
السَّمٰوٰتِ وَالْاَرْضَ ۚ وَلَا يَـُٔوْدُهٗ حِفْظُهُمَا ۚ وَهُوَ
الْعَلِيُّ الْعَظِيْمُ ۝
اٰمَنَ الرَّسُوْلُ بِمَآ اُنْزِلَ اِلَيْهِ مِنْ رَّبِّهٖ وَالْمُؤْمِنُوْنَ ۗ
كُلٌّ اٰمَنَ بِاللّٰهِ وَمَلٰٓئِكَتِهٖ وَكُتُبِهٖ وَرُسُلِهٖ ۗ —

لَا نُفَرِّقُ بَيْنَ اَحَدٍ مِّنْ رُّسُلِهٖ وَقَالُوْا سَمِعْنَا وَ
اَطَعْنَا غُفْرَانَكَ رَبَّنَا وَاِلَيْكَ الْمَصِيْرُ لَا يُكَلِّفُ
اللّٰهُ نَفْسًا اِلَّا وُسْعَهَا لَهَا مَا كَسَبَتْ وَعَلَيْهَا مَا
اكْتَسَبَتْ رَبَّنَا لَا تُؤَاخِذْنَا اِنْ نَّسِيْنَا اَوْ اَخْطَاْنَا
رَبَّنَا وَلَا تَحْمِلْ عَلَيْنَا اِصْرًا كَمَا حَمَلْتَهٗ عَلَى
الَّذِيْنَ مِنْ قَبْلِنَا رَبَّنَا وَلَا تُحَمِّلْنَا مَا لَا طَاقَةَ
لَنَا بِهٖ وَاعْفُ عَنَّا وَاغْفِرْ لَنَا وَارْحَمْنَا اَنْتَ
مَوْلٰنَا فَانْصُرْنَا عَلَى الْقَوْمِ الْكٰفِرِيْنَ ۝
شَهِدَ اللّٰهُ اَنَّهٗ لَا اِلٰهَ اِلَّا هُوَ وَالْمَلٰٓئِكَةُ وَاُولُوا الْعِلْمِ
قَآئِمًا بِالْقِسْطِ لَا اِلٰهَ اِلَّا هُوَ الْعَزِيْزُ الْحَكِيْمُ اِنَّ
الدِّيْنَ عِنْدَ اللّٰهِ الْاِسْلَامُ
قُلِ اللّٰهُمَّ مٰلِكَ الْمُلْكِ تُؤْتِي الْمُلْكَ مَنْ تَشَآءُ
وَتَنْزِعُ الْمُلْكَ مِمَّنْ تَشَآءُ وَتُعِزُّ مَنْ تَشَآءُ
وَتُذِلُّ مَنْ تَشَآءُ بِيَدِكَ الْخَيْرُ اِنَّكَ عَلٰى كُلِّ
شَيْءٍ قَدِيْرٌ تُوْلِجُ الَّيْلَ فِي النَّهَارِ وَتُوْلِجُ
النَّهَارَ فِي الَّيْلِ وَتُخْرِجُ الْحَيَّ مِنَ الْمَيِّتِ وَ
تُخْرِجُ الْمَيِّتَ مِنَ الْحَيِّ وَتَرْزُقُ مَنْ تَشَآءُ
بِغَيْرِ حِسَابٍ ۝

மேற்கண்ட ஆயத்துகளை ஓதிய பின்:

فَسُبْحَانَ اللّٰهِ حِيْنَ تُمْسُوْنَ وَحِيْنَ تُصْبِحُوْنَ.

وَلَهُ الْحَمْدُ فِى السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَعَشِيًّا وَّحِيْنَ
تُظْهِرُوْنَ. يُخْرِجُ الْحَيَّ مِنَ الْمَيِّتِ وَيُخْرِجُ
الْمَيِّتَ مِنَ الْحَيِّ وَيُحْيِى الْاَرْضَ بَعْدَ مَوْتِهَا وَ
كَذٰلِكَ تُخْرَجُوْنَ ۝

என்று ஓதி பின்பு:- سُبْحَانَ اللّٰهِ 33 தடவையும், اَلْحَمْدُ لِلّٰهِ 33 தடவையும், اَللّٰهُ اَكْبَرُ 33 தடவையும் ஓதி, மூன்றும்சேர்ந்து 99 தடவையாகுவதால் அதை 100ஆக நிறப்புவதற்காக நான்காம் கலிமாவை ஓதவும். அதை ஓதும் முறையாவது:-

اَللّٰهُ اَكْبَرُ كَبِيْرًا. وَالْحَمْدُ لِلّٰهِ كَثِيْرًا. وَسُبْحَانَ
اللّٰهِ وَبِحَمْدِهٖ بُكْرَةً وَّاَصِيْلاً. لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ
وَحْدَهٗ لَا شَرِيْكَ لَهٗ. لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ
يُحْيِى وَيُمِيْتُ بِيَدِهِ الْخَيْرُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ
قَدِيْرٌ ۝

என்று ஓதி பின்பு:-

اَللّٰهُمَّ لَا مَانِعَ لِمَآ اَعْطَيْتَ. وَلَا مُعْطِيَ لِمَا -
مَنَعْتَ. وَلَا رَادَّ لِمَا قَضَيْتَ. وَلَا مُبَدِّلَ لِمَا حَكَمْتَ
وَلَا يَنْفَعُ ذَا الْجَدِّ مِنْكَ الْجَدُّ. فَاعْلَمْ اَنَّهٗ اَفْضَلُ الذِّكْرِ

என்று ஓதி பின்பு:-

لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ ١٠

என்ற கலிமாவை 10 தடவை ஓதி திக்ரு செய்த பின்:-

حَقًّا عَلَيْهَا نَحْيٰ. وَعَلَيْهَا نَمُوْتُ. وَعَلَيْهَا نُبْعَثُ
اِنْ شَآءَ اللّٰهُ غَدًا اٰمِنِيْنَ.

என்று ஓதவும். அதன் பிறகு கீழ்காணும் ஸலவாத்துகளை ஓதவும்:

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ سَيِّدِ الْكَائِنَاتِ. اَللّٰهُمَّ
صَلِّ عَلٰى مُحَمَّدٍ سَيِّدِ الْمَوْجُوْدَاتِ. اَللّٰهُمَّ صَلِّ
عَلٰى مُحَمَّدٍ سَيِّدِ اَهْلِ الْاَرْضِ وَالسَّمٰوَاتِ. اَللّٰهُمَّ
صَلِّ عَلٰى مُحَمَّدٍ سَيِّدِ الْمُتَّقِيْنَ. اَللّٰهُمَّ صَلِّ عَلٰى
مُحَمَّدٍ سَيِّدِ الْاَوَّلِيْنَ. اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ
سَيِّدِ الْاٰخِرِيْنَ. اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ سَيِّدِ
الْخَلَائِقِ اَجْمَعِيْنَ. اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ بِهٖ
كَانَ مَا كَانَ. وَبِهٖ يَكُوْنُ مَا يَكُوْنُ. جَزَى اللّٰهُ عَنَّا
نَبِيَّنَا مُحَمَّدًا صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ بِمَا هُوَ اَهْلُهٗ.
اَللّٰهُمَّ ارْضَ عَنْ سَادَاتِنَا اَبِيْ بَكْرِنِ الصِّدِّيْقِ التَّقِيِّ
وَعُمَرَ الْفَارُوْقِ النَّقِيِّ. وَعُثْمَانَ ذِي النُّوْرَيْنِ
الزَّكِيِّ. وَعَلِيِّ نِ الْمُرْتَضَى الْوَفِيِّ. وَعَنْ سَعْدٍ وَ
سَعِيْدٍ وَطَلْحَةَ وَزُبَيْرٍ وَّعَامِرٍ وَّعَبْدِ الرَّحْمٰنِ
وَعَنْ حَمْزَةَ وَالْعَبَّاسِ. وَعَنِ الْحَسَنِ وَالْحُسَيْنِ
وَعَنِ الْمُهَاجِرِيْنَ وَالْاَنْصَارِ. وَعَنْ بَقِيَّةِ اَصْحٰبِ
رَسُوْلِ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَاٰلِهٖ وَصَحْبِهٖ وَسَلَّمَ.

மேற்கண்ட ஸலவாத்துகளை ஓதிய பின் கீழ்காணும் விதமாக மூன்று தடவை ஓதவும்:

لَكَ الْحَمْدُ يَا رَبِّ يَا اَللّٰهُ - يَا اَللّٰهُ - يَا اَللّٰهُ. يَا رَحْمٰنُ
يَا رَحْمٰنُ - يَا رَحْمٰنُ. يَا رَحِيْمُ - يَا رَحِيْمُ - يَا رَحِيْمُ

اَلْاَمَانُ - اَلْاَمَانُ - اَلْاَمَانُ مِنْ زَوَالِ الْاِيْمَانِ. يَا
دَآئِمَ الْمَعْرُوْفِ. وَيَا قَدِيْمَ الْاِحْسَانِ. وَيَاهَادِى
الْمُضِلِّيْنَ اِهْدِنَا بِحَقِّ اِيَّاكَ نَعْبُدُ وَاِيَّاكَ نَسْتَعِيْنُ.

இப்படி. ஓதிவிட்டு ஸூரத்துல் ஃபாத்திஹா (அல்ஹம்து ஸூரா) ஸூரத்துல் இக்லாஸ் (குல்ஹுவல்லாஹு), ஸூரத்துல் ஃபலக் (குல் அவூது பிரப்பில் ஃபலக்), ஸூரத்துன்னாஸ் (குல் அவூது பிரப்பின்னாஸ்) ஆகிய ஸூராக்களை ஓதி பின் துஆ ஓதவும்.

**எல்லா வேளைகளுக்கும் பொதுவான துஆ கீழ்காணும் விதமாக இருக்கலாம் அதாவது;**

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ ٥
اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ. حَمْدًا يُوَافِيْ نِعَمَهُ
وَيُكَافِيْ مَزِيْدَهُ. اَللّٰهُمَّ صَلِّ وَسَلِّمْ وَبَارِكْ عَلٰى
سَيِّدِنَا مُحَمَّدٍ وَّاٰلِهٖ وَصَحْبِهٖ عَدَدَ مَا فِيْ عِلْمِ
اللّٰهِ صَلٰوةً دَآئِمَةً بِدَوَامِ مُلْكِ اللّٰهِ. اَللّٰهُمَّ
اغْفِرْلَنَا ذُنُوْبَنَا وَخَطَايَانَا كُلَّهَا. اَللّٰهُمَّ انْعَشْنَا
وَاجْبُرْنَا وَارْفَعْنَا وَارْزُقْنَا وَاهْدِنَا لِصَالِحِ الْاَعْمَالِ
وَالْاَخْلَاقِ. اِنَّهٗ لَا يَهْدِيْ لِصَالِحِهَا وَلَا يَصْرِفُ
سَيِّئَهَا اِلَّا اَنْتَ. اَللّٰهُمَّ اٰتِ اَنْفُسَنَا تَقْوٰهَا وَ
زَكِّهَا اَنْتَ خَيْرُ مَنْ زَكَّاهَا. اَنْتَ وَلِيُّهَا وَمَوْلٰهَا.
اَللّٰهُمَّ شَرِّفْنَا بِالتَّقْوٰى وَجَمِّلْنَا بِالْعَافِيَةِ وَارْزُقْنَا
الْجَنَّةَ يَارَبَّ الْعَالَمِيْنَ. اَللّٰهُمَّ اَعِنَّا عَلٰى ذِكْرِكَ
وَشُكْرِكَ وَحُسْنِ عِبَادَتِكَ وَتَوْفِيْقِ طَاعَتِكَ

وَامْتِثَالِ اَوَامِرِكَ وَاجْتِنَابِ مَنَاهِيكَ . اَللّٰهُمَّ
انْقُلْنَا مِنْ ذُلِّ مَعْصِيَتِكَ اِلٰى عِزِّ طَاعَتِكَ . اَللّٰهُمَّ
اَرِنَا الْحَقَّ حَقًّا وَّاَعِنَّا عَلٰى اِتِّبَاعِهِ وَاَرِنَا الْبَاطِلَ
بَاطِلًا وَّوَفِّقْنَا لِاجْتِنَابِهِ . اَللّٰهُمَّ اِنَّا نَسْئَلُكَ الْجَنَّةَ
وَمَا قَرَّبَ اِلَيْهَا مِنْ قَوْلٍ وَّعَمَلٍ وَّنَعُوْذُ بِكَ مِنَ
النَّارِ وَمَا قَرَّبَ اِلَيْهَا مِنْ قَوْلٍ وَّعَمَلٍ . اَللّٰهُمَّ
اِنَّا نَعُوْذُ بِكَ مِنَ الْكُفْرِ وَالْفَقْرِ وَعَذَابِ الْقَبْرِ .
اَللّٰهُمَّ اِنَّا نَعُوْذُ بِكَ مِنَ الْهَمِّ وَالْحَزَنِ . وَنَعُوْذُ بِكَ
مِنَ الْعَجْزِ وَالْكَسَلِ . وَنَعُوْذُ بِكَ مِنَ الْجُبْنِ وَالْبُخْلِ
وَنَعُوْذُ بِكَ مِنْ غَلَبَةِ الدَّيْنِ وَقَهْرِ الرِّجَالِ . اَللّٰهُمَّ
اَحْيِنَا عَلَى الْكِتَابِ وَالسُّنَّةِ وَتَوَفَّنَا مَعَ الْاِيْمَانِ
وَالتَّوْبَةِ . اَللّٰهُمَّ صَلِّ عَلٰى رَسُوْلِكَ سَيِّدِنَا مُحَمَّدٍ
وَّاٰلِهٖ وَصَحْبِهٖ وَسَلِّمْ وَافْعَلْ بِنَا ذٰلِكَ وَبِجَمِيْعِ
الْمُسْلِمِيْنَ . اَللّٰهُمَّ اغْفِرْ لَنَا وَلِوَالِدَيْنَا وَلِمَشَايِخِنَا
وَلِاَصْحٰبِنَا وَلِاَسَاتِيْذِنَا وَلِاَحْبَابِنَا وَلِعَشَائِرِنَا
وَلِقَبَائِلِنَا وَلِجِيْرَانِنَا وَلِمَنْ اَحَبَّ وَاَحْسَنَ اِلَيْنَا
وَلِمَنْ لَهُمْ حَقٌّ عَلَيْنَا وَلِجَمِيْعِ اُمَّةِ مُحَمَّدٍ صَلَّى
اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ وَقِنَا رَبَّنَا شَرَّ مَا قَضَيْتَ . رَبَّنَا
اٰتِنَا فِى الدُّنْيَا حَسَنَةً وَّفِى الْاٰخِرَةِ حَسَنَةً وَّ
قِنَا عَذَابَ النَّارِ . رَبِّ ارْحَمْهُمَا كَمَا رَبَّيَانِيْ

صَغِيْرًا وَصَلَّى اللهُ وَسَلَّمَ عَلٰى خَيْرِ خَلْقِهٖ
سَيِّدِنَا مُحَمَّدٍ وَّاٰلِهٖ وَصَحْبِهٖ اَجْمَعِيْنَ. سُبْحَانَ
رَبِّكَ رَبِّ الْعِزَّةِ عَمَّا يَصِفُوْنَ. وَسَلَامٌ عَلَى
الْمُرْسَلِيْنَ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ.

மேற்கண்ட துஆவை சந்தர்ப்பத்துக்குத் தோதாக சுருக்கியும் ஓதலாம்.

எந்த துஆவையும் பிஸ்மி, ஹம்து, ஸலவாத்துக்கொண்டு தொடங்குவதும், ஸலவாத்து, ஹம்து கொண்டு முடிப்பதும் சுன்னத்தாகும். மேலும்.

سُبْحَانَ رَبِّكَ رَبِّ الْعِزَّةِ عَمَّا يَصِفُوْنَ. وَسَلَامٌ
عَلَى الْمُرْسَلِيْنَ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ.

என்று மூன்று தடவை சொல்லி முடிப்பதில் மட்டற்ற நன்மை கிடைக்குமென்று கூறப்பட்டுள்ளது.

**சுப்ஹுத்தொழுகைக்குத் தனியான துஆ** கீழ்காணும் விதமாக இருக்கலாம்:

اَللّٰهُمَّ اِنَّا اَصْبَحْنَا مِنْكَ فِيْ نِعْمَةٍ وَّعَافِيَةٍ وَّ
سِتْرٍ فَاَتِمَّ نِعْمَتَكَ عَلَيْنَا وَعَافِيَتَكَ وَسِتْرَكَ
فِي الدِّيْنِ وَالدُّنْيَا وَالْاٰخِرَةِ اِنَّكَ عَلٰى كُلِّ شَيْءٍ
قَدِيْرٌ. وَبِالْاِجَابَةِ جَدِيْرٌ. نِعْمَ الْمَوْلٰى وَنِعْمَ
النَّصِيْرُ. اَللّٰهُمَّ اَجِرْنَا مِنَ النَّارِ وَمِنْ كُلِّ عَمَلٍ
يُقَرِّبُنَا اِلَى النَّارِ سٰلِمِيْنَ. وَاَدْخِلْنَا الْجَنَّةَ بِسَلَامٍ
اٰمِنِيْنَ. وَقِنَا رَبَّنَا شَرَّ الظَّالِمِيْنَ وَشَرَّ الْحَاسِدِيْنَ
وَشَرَّ الْمُنَافِقِيْنَ. وَشَرَّ الْفَاسِقِيْنَ. وَشَرَّ الْمَاكِرِيْنَ

وَشَرِّ الْمُتَكَبِّرِيْنَ. وَشَرِّ الْخَلَآئِقِ كُلِّهِمْ اَجْمَعِيْنَ
فَانْصُرْنَا عَلَى الْقَوْمِ الْكَافِرِيْنَ. اِلٰهَنَا اُرْزُقْنَا
النَّظْرَ اِلٰى لِقَآءِ وَجْهِكَ الْكَرِيْمِ. مَعَ لِقَـآءِ
سَيِّدِنَا مُحَمَّدٍ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَاٰلِهٖ وَصَحْبِهٖ
وَسَلَّمَ. اَللّٰهُمَّ اِنَّا نَسْئَلُكَ عِلْمًا نَّافِعًا وَّعَمَلًا
مُّتَقَبَّلًا وَّرِزْقًا طَيِّبًا وَّاسِعًا. اَللّٰهُمَّ بِكَ نُحَاوِلُ
وَبِكَ نُصَاوِلُ وَبِكَ نُقَاتِلُ. اَللّٰهُمَّ صَبِّحْنَا مِنْكَ
صَبَاحَ الرِّضَآءِ وَاكْفِنَا شَرَّ مَا فِي الْقَضَآءِ وَلَا
تُعَذِّبْنَا بِالْجَرَآئِمِ يَا كَرِيْمُ. اَللّٰهُمَّ اِنَّا نَسْئَلُكَ
خَيْرَ هٰذَا الْيَوْمِ فَتْحَهٗ وَنَصْرَهٗ وَبَرَكَتَهٗ وَ
نُوْرَهٗ وَهُدٰىهُ. وَنَعُوْذُ بِكَ مِنْ شَرِّ مَا فِيْهِ وَمِنْ
شَرِّ مَا قَبْلَهٗ وَمِنْ شَرِّ مَا بَعْدَهٗ. اَللّٰهُمَّ اجْعَلْ اَوَّلَ
يَوْمِنَا هٰذَا النَا صَلَاحًا وَّاَوْسَطَهٗ فَلَاحًا وَّاٰخِرَهٗ
نَجَاحًا وَّرَبَاحًا. اَللّٰهُمَّ اجْعَلْ صَبَاحَنَا هٰذَا صَبَاحًا
مُّبَارَكًا مِّنَ الْخَيْرِ قَرِيْبًا وَّعَنِ الشَّرِّ بَعِيْدًا لَّا
خَاسِئًا وَّلَا خَاسِرًا وَّلَا مَحْرُوْمًا. اَللّٰهُمَّ اجْعَلْ
صَبَاحَنَا هٰذَا صَبَاحَ الصَّالِحِيْنَ وَمَسَآءَنَا مَسَآءَ
الذَّاكِرِيْنَ وَقُلُوْبَنَا قُلُوْبَ الْخَاشِعِيْنَ وَاَبْدَانَنَا
اَبْدَانَ الْمُطِيْعِيْنَ. وَاَعْمَالَنَا اَعْمَالَ الْمُتَّقِيْنَ
وَاَلْسِنَتَنَا اَلْسِنَةَ الذَّاكِرِيْنَ. وَنَبِّهْنَا عَنْ نَوْمَةِ

اَلْغَافِلِيْنَ. وَشَارِكْنَا فِيْ دُعَآءِ الصَّالِحِيْنَ وَارْزُقْنَا
الْجَنَّةَ يَارَبَّ الْعَالَمِيْنَ. اَللّٰهُمَّ بِكَ اَصْبَحْنَا وَبِكَ
اَمْسَيْنَا وَبِكَ نَحْيٰى وَبِكَ نَمُوْتُ وَاِلَيْكَ الْمَصِيْرُ.

மேற்கண்ட துஆக்களெல்லாமே சுப்ஹு தொழுகைக்குப் பின் ஓதுவதற்குத் தகுந்தவையாக இருப்பினும் சந்தர்ப்பத்திற்குத் தோதாக சிலதை குறைத்தும் கொள்ளலாம்.

**ழுஹருக்கு மட்டும் தனதான துஆ** கீழ்காணும் விதமாக இருக்கலாம்:

اَللّٰهُمَّ اكْتُبْ لِكُلِّ وَاحِدٍ مِّنَّا بَرَآءَةً مِّنَ النَّارِ وَ
اَمَانًا مِّنَ الْعَذَابِ وَخَلَاصًا مِّنَ الْحِسَابِ وَجَوَازًا
عَلَى الصِّرَاطِ وَنَصِيْبًا مِّنَ الْجَنَّةِ وَنَجَاةً مِّنَ
النَّارِ وَالْعَفْوَ عِنْدَ الْحِسَابِ.

**அஸ்ரு தொழுகைக்கு மட்டும் சொந்தமான துஆ** கீழ்காணும் விதமாக இருக்கலாம்:

اَللّٰهُمَّ اِنَّا نَسْئَلُكَ سَلَامَةً فِي الدِّيْنِ وَالدُّنْيَا. وَ
عَافِيَةً فِي الْجَسَدِ وَزِيَادَةً فِي الْعِلْمِ. وَبَرَكَةً
فِي الرِّزْقِ. وَصِحَّةً فِي الْعَقْلِ. اِلٰهَنَا تَوْبَةً قَبْلَ
الْمَوْتِ. وَرَاحَةً عِنْدَ الْمَوْتِ. وَمَغْفِرَةً بَعْدَ
الْمَوْتِ. يَا سَامِعَ كُلِّ صَوْتٍ هَوِّنْ عَلَيْنَا سَكَرَاتِ
الْمَوْتِ. وَارْحَمْنَا عِنْدَ الْمَوْتِ. وَبَارِكْ لَنَا فِي
الْمَوْتِ. وَفِيْمَا بَعْدَ الْمَوْتِ.

**மஃரிபுக்கு மட்டும் சொந்தமான துஆ** கீழ்காணும் விதமாக இருக்கலாம்.

اَللّٰهُمَّ اِنَّآ اَمْسَيْنَا مِنْكَ فِيْ نِعْمَةٍ وَّعَافِيَةٍ وَّسِتْرٍ
فَاَتِمَّ نِعْمَتَكَ عَلَيْنَا وَعَافِيَتَكَ وَسِتْرَكَ فِي
الدِّيْنِ وَالدُّنْيَا وَالْاٰخِرَةِ اِنَّكَ عَلٰى كُلِّ شَيْئٍ
قَدِيْرٌ. وَبِالْاِجَابَةِ جَدِيْرٌ. نِعْمَ الْمَوْلٰى وَنِعْمَ
النَّصِيْرُ. اَللّٰهُمَّ اَجِرْنَا مِنَ النَّارِ وَمِنْ كُلِّ عَمَلٍ
يُقَرِّبُنَا اِلَى النَّارِ سَالِمِيْنَ. وَاَدْخِلْنَا الْجَنَّةَ بِسَلَامٍ
اٰمِنِيْنَ. وَقِنَا رَبَّنَا شَرَّ الظَّالِمِيْنَ وَشَرَّ الْحَاسِدِيْنَ
وَشَرَّ الْمُنَافِقِيْنَ. وَشَرَّ الْفَاسِقِيْنَ. وَشَرَّ الْمَاكِرِيْنَ
وَشَرَّ الْمُتَكَبِّرِيْنَ. وَشَرَّ الْخَلَائِقِ كُلِّهِمْ اَجْمَعِيْنَ.
فَانْصُرْنَا عَلَى الْقَوْمِ الْكَافِرِيْنَ. اِلٰهَنَا اُرْزُقْنَا
النَّظَرَ اِلٰى لِقَآءِ وَجْهِكَ الْكَرِيْمِ. مَعَ لِقَآءِ سَيِّدِنَا
مُحَمَّدٍ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَاٰلِهٖ وَصَحْبِهٖ وَسَلَّمَ.
اَللّٰهُمَّ اِنَّا نَسْئَلُكَ خَيْرَ هٰذَا اللَّيْلِ فَتْحَهُ وَنَصْرَهُ
وَبَرَكَتَهُ وَنُوْرَهُ وَهُدَاهُ. وَنَعُوْذُ بِكَ مِنْ شَرِّ
مَا فِيْهِ وَمِنْ شَرِّ مَا قَبْلَهُ وَمِنْ شَرِّ مَا بَعْدَهُ.
اَللّٰهُمَّ بِكَ اَمْسَيْنَا وَبِكَ اَصْبَحْنَا وَبِكَ نَحْيٰى
وَبِكَ نَمُوْتُ وَاِلَيْكَ النُّشُوْرُ.

**இஷாவுக்கு மட்டும் சொந்தமான துஆ** கீழ்காணும் விதமாக இருக்கலாம்:

اَللّٰهُمَّ احْفَظْنَا فِيْ ظُلْمَةِ اللَّيْلِ كَمَا حَفِظْتَنَا يَا-
رَبَّنَا فِيْ ضَوْءِ النَّهَارِ. وَاصْرِفْ عَنَّا بَلَاءَ اللَّيْلِ كَمَا
صَرَفْتَ عَنَّا بَلَاءَ النَّهَارِ. وَاحْشُرْنَا مَعَ الْاَبْرَارِ
وَاجْعَلْ مُنْقَلَبَنَا اِلٰى دَارِ الْقَرَارِ. وَنَجِّنَا مِنَ النَّارِ
وَاعْفُ عَنَّا الْاَوْزَارَ. يَا عَزِيْزُ يَا غَفَّارُ يَا رَحِيْمُ
يَا حَلِيْمُ يَا سَتَّارُ. اَللّٰهُمَّ احْفَظْنَا يَا فَيَّاضُ مِنْ
جَمِيْعِ الْبَلَايَا وَالْاَعْدَآءِ وَالْمُصِيْبَاتِ وَ---
الْاَمْرَاضِ.

ஒவ்வொரு வக்துக்கும் சொந்தமாக மேற்கண்ட துஆக்களை ஓதும்பொழுது எல்லா வக்துக்கும் பொதுவான துஆக்களில் சிலதைச் சேர்த்து ஓதலாம்.

பொதுவான துஆக்களை மேலே குறித்திருப்பது அல்லாமல் மேலும் சில பொதுவான துஆக்களைக் கீழே எழுதப்படுகிறது. அவையாவன:

اَللّٰهُمَّ يَا مَنْ اَصْلَحَ الصَّالِحِيْنَ اَصْلِحْنَا. وَيَا مَنْ
اَنْبَهَ الْغَافِلِيْنَ اَنْبِهْنَا. وَيَا مَنْ تَابَ عَلَى الْمُذْنِبِيْنَ
تُبْ عَلَيْنَا تَوْبَةً تُرْضِيْكَ عَنَّا. يَا سَيِّدَنَا وَيَا-
مَوْلٰنَا وَيَا ذَا الْجَلَالِ وَالْاِكْرَامِ.
اَللّٰهُمَّ اِنَّا نَسْئَلُكَ حُبَّكَ وَحُبَّ مَنْ يُّحِبُّكَ وَحُبَّ
عَمَلٍ يُّقَرِّبُنَا اِلٰى حُبِّكَ. وَاجْعَلْ حُبَّكَ اَحَبَّ
اِلَيْنَا مِنَ الْمَآءِ الْبَارِدِ لِلْعَطْشَانِ.

اَللّٰهُمَّ اجْعَلِ التَّوْفِيْقَ رَفِيْقَنَا وَالصِّرَاطَ الْمُسْتَقِيْمَ صِرَاطَنَا.
اَللّٰهُمَّ اَوْصِلْنَا اِلٰى مَقَاصِدِنَا بِالْخَيْرِ وَالتَّمَامِ.
وَتُبْ عَلَيْنَا اِنَّكَ اَنْتَ التَّوَّابُ الرَّحِيْمُ.
اَللّٰهُمَّ لَا تُؤَاخِذْنَا بِسُوْٓءِ اَعْمَالِنَا. وَلَا تُسَلِّطْ عَلَيْنَا بِذُنُوْبِنَا مَنْ لَّا يَرْحَمُنَا. وَكُفَّ اَيْدِيَ الْكَافِرِيْنَ وَالْمُنَافِقِيْنَ وَالظَّالِمِيْنَ وَالْحَاسِدِيْنَ وَالْبَاغِيْنَ عَنَّا يَاخَفِيَّ الْاَلْطَافِ نَجِّنَا مِمَّا نَخَافُ.
اَللّٰهُمَّ لَيِّنْ لَنَا قُلُوْبَ الْوُلَاةِ وَالْقُضَاةِ وَالسُّلْطَانِ. وَاَشْفِقْهُمْ عَلَيْنَا بِلَا ظُلْمٍ وَّلَا بَغْيٍ وَلَا عُدْوَانٍ. بَاسِطْ بِسَاطِ الْاَمْنِ وَالْاَمَانِ.

سُلْطَانُ الزَّاهِدِيْنُ ஸுல்தானுஸ் ஸாஹிதீன் இப்றாஹீம் இப்னு அத்ஹம் அவர்கள், ஸுல்தானுல் உலமா இஸ்ஸுத்தீன் இப்னு அப்துஸ்ஸலாம் அவர்கள், ஸுல்தானுல் அவ்லியா அபூயஜீதில் பிஸ்தாமி அவர்கள் ஆகியோர் போன்ற மஹாத்மாக்களெல்லாம் தங்களின் வாழ்நாளில் கடைசிகாலத்தை ஈமான் ஸலாமத்தைக்கொண்டு முடித்துத் தரவேணுமென்பதை அல்லாஹுத்த ஆலாவிடம் கெஞ்சி துஆ கேட்டவர்களாக இருந்தார்கள்.

தனது கடைசிகாலம் ஈமான் ஸலாமத்துடன் முடிய வேணுமென்று நினைக்கும் ஒரு மனிதன் பல நல்ல செயல்களைச் செய்யவேண்டும். அவ்விதமான நல்ல செயல்களிலுள்ளதுதான் தனது பெற்றோருக்கு நன்றி செலுத்தும் முறையில் நடந்து கொள்வதும்.

وَمِنَ الْاَعْمَالِ الَّتِيْ يُوْرِثُ حُسْنَ الْخَاتِمَةِ بِرُّ الْوَالِدَيْنِ. وَعُقُوْقُهُمَا يُوْرِثُ سُوْٓءَ الْمَيْتَةِ . . .
(مَيْتَةَ السُّوْٓءِ)

பெற்றோருக்கு நன்றி செலுத்தும் முறையில் நடந்து கொள்வது ஒருவனுக்கு அழகிய முடிவைக்கொண்டு வரும். அவர்களுக்கு மனவருத்தம் உண்டுபண்ணும் முறையில் நடந்து கொள்வது அவனுக்குக் கெட்ட மரணத்தைக்கொண்டு வந்துவிடும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. தனது ஆசிரியர்களுக்கு நன்றி செலுத்துவதும், வருத்தம் உண்டு பண்ணுவதும் இவ்விதம் தான். மேலும் சொன்ன வாக்கை நிறைவேற்றுவதும், வாக்கு மாறுவதும் இவ்விதம் தான். சொல்லாலும் செயலாலும் உள்ள இதுபோன்ற அனேக வணக்கங்கள் ஒரு மனிதனின் கடைசி காலத்தை ஈமான் ஸலாமத்து கொண்டு முடிக்கக்கூடியவையாக இருக்கின்றன.

ஈமான் ஸலாமத்துக்காகச் செய்யவேண்டிய அமல்களைப்பற்றியும் ஓதவேண்டிய துஆக்களைப்பற்றியும் பல பெரியார்கள் சொல்லியிருப்பதைக் கீழே எழுதப்படுகிறது.

திர்மதீ ரஹிமஹுல்லாஹு சொல்லியிருப்பதாவது; ஸுப்ஹு தொழுதபின் பொழுது உதிக்கும் முன்

يَا حَيُّ يَا قَيُّوْمُ يَا بَدِيْعَ السَّمٰوَاتِ وَالْاَرْضِ
يَا ذَا الْجَلَالِ وَالْاِكْرَامِ.

என்று மூன்று தடவை ஓதிவரவும்.

மேலும் ஸுப்ஹின் ஸுன்னத்துக்கும் ஃபர்ளுக்குமிடையில்...

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ. اَللّٰهُمَّ بِحُرْمَةِ الْحَسَنِ
وَاَخِيْهِ وَجَدِّهٖ وَاَبِيْهِ وَاُمِّهٖ وَبَنِيْهِ نَجِّنِيْ
مِنَ الْغَمِّ الَّذِيْ اَنَا فِيْهِ. يَا حَيُّ يَا قَيُّوْمُ يَا ذَا-
الْجَلَالِ وَالْاِكْرَامِ. اَسْئَلُكَ اَنْ تُحْيِيَ قَلْبِيْ بِنُوْرِ
مَعْرِفَتِكَ يَا اَللّٰهُ يَا اَللّٰهُ. يَا اَللّٰهُ يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ.

என்ற துஆவை ஒரு தடவை ஓதி வரவும்.

خَضِرٌ கிள்ரு அலைஹிஸ்ஸலாம் அவர்களைச் சில வலிமார்கள் சந்தித்துக் கேட்டதில் அவர்களுக்கு (கிள்ரு அலை ஹிஸ்ஸலாம் அவர்களுக்கு) நபிகள் நாயகம் முஹம்மது (ஸல்) அவர்கள் ஸுப்ஹு தொழுத பின் கீழ் காணும் விதமாக ஓதிவரச் சொன்னதாக சொல்லியிருக்கிறார்கள். அதாவது:

'اٰيَةُ الْكُرْسِيِّ' கடைசிவரை ஓதிய பின் 'اٰمَنَ الرَّسُوْلُ' ஸூரத்தின் கடைசி வரை ஓதவும், பின் شَهِدَ اللّٰهُ ஆரம்பித்து بِغَيْرِ حِسَابٍ வரையும் சுப்ஹு தொழுத பின் வழமையாக ஓதிவந்தால் அல்லாஹு தஆலாவை சந்திக்கும் வரையில் அவனுடைய ஈமானுக்கு பாதுகாப்பு அளிப்பானென்றும் சொல்லியதாகச் சொல்லி யிருக்கிறார்கள்.

அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: ஈமான் ஸலாமத்துக்காக என்ன அமல் செய்யவேண்டுமென்று நான் ரசூலுல்லாஹி (ஸல்) அவர்களிடம் கேட்டேன். அவர்கள் சொன்னார்கள்: மஃரிபின் ஸுன்னத்துத் தொழுகைக்குப் பின் யாதொரு பேச்சும் பேசாமல் இரண்டு ரக அத் நபில் தொழுவதில் ஒவ்வொரு ரக்அத்திலும் ஸூரத்துல் ஃபாத்திஹா ஓதியதற்குப் பிறகு — اِنَّآ اَنْزَلْنٰهُ ஒரு தரமும் قُلْ اَعُوْذُ بِرَبِّ الْفَلَقِ ஒரு தரமும் قُلْ هُوَ اللّٰهُ اَحَدٌ ஒரு தரமும் قُلْ اَعُوْذُ بِرَبِّ النَّاسِ ஒரு தரமும் ஓதி வழமையாகத் தொழுது வரும்படியாக அவர்கள் சொன்னார்கள் என்றார்கள்.

இமாம் அபூஹனீஃபா (ரஹ்) அவர்கள் ஈமான் ஸலாமத்துக்காக ஐங்காலத் தொழுகைக்குப் பிறகு ஒரு தடவை கீழ்காணும் துஆவை ஓதிவரச்சொல்லி இருக்கிறார்கள். அதாவது:

اَللّٰهُمَّ اَحْيِنِيْ عَلَى الْكِتَابِ وَالسُّنَّةِ. وَتَوَفَّنِيْ
مَعَ الْاِيْمَانِ وَالتَّوْبَةِ. اَللّٰهُمَّ صَلِّ عَلٰى رَسُوْلِكَ
سَيِّدِنَا مُحَمَّدٍ وَّاٰلِهٖ وَصَحْبِهٖ وَسَلِّمْ. وَافْعَلْ
بِنَا ذٰلِكَ وَبِجَمِيْعِ الْمُسْلِمِيْنَ.

மறுமை நாளில் எவ்வித வேதனையும் அணுகாமலிருப்பதற்காக கீழ்காணும் தஸ்பீஹை காலையில் ஒரு தடவையும் மாலையில் ஒரு தடவையும் ஓதிவரும்படியாக இமாம் அபூஹனீஃபா (ரஹ்) அவர்கள் கூறியிருக்கிறார்கள். அதாவது:

سُبْحَانَ اللّٰهِ الْاَبَدِيِّ الْاَبَدِ. سُبْحَانَ الْوَاحِدِ
الْاَحَدِ. سُبْحَانَ الْفَرْدِ الصَّمَدِ. سُبْحَانَ مَنْ رَفَعَ
السَّمَآءَ بِغَيْرِ عَمَدٍ. سُبْحَانَ مَنْ بَسَطَ الْاَرْضَ
عَلٰى مَآءٍ فَجَمُدَ. سُبْحَانَ مَنْ خَلَقَ الْخَلْقَ وَ

اَحْصَاهُمْ عَدَدًا. سُبْحَانَ مَنْ قَسَمَ الْاَرْزَاقَ وَ
لَمْ يَنْسَ اَحَدًا. سُبْحَانَ الَّذِيْ لَمْ يَتَّخِذْ صَاحِبَةً
وَّلَا وَلَدًا. سُبْحَانَ الَّذِيْ لَمْ يَلِدْ وَلَمْ يُوْلَدْ وَ
لَمْ يَكُنْ لَّهُ كُفُوًا اَحَدٌ۔

ஸையியிதுனா முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள் வழமையாக ஓதிவந்த வளீஃபாக்களில் சிலது கீழே குறிக்கப்படுகிறது:

ஸுப்ஹில் يَا حَيُّ يَا قَيُّوْمُ நூறு தரமும்,

ளுஹரில் يَا جَبَّارُ يَا مُتَكَبِّرُ நூறுதரமும்,

அஸரில் يَا شَافِيْ يَا كَافِيْ يَا غَنِيُّ يَا فَتَّاحُ நூறுதரமும்,

மஃரிபில் يَا مُبِيْنُ يَا خَبِيْرُ يَا هَادِيْ நூறு தரமும்,

இஷாவில் يَا نُوْرُ يَا بَاسِطُ يَا ظَاهِرُ நூறு தரமும், வழமையாக ஓதி வந்தால் வாழ்வில் பரக்கத்தையும், ஈமான் ஸலாமத்தையும் இறைவன் அளிப்பான் என்று கூறப்பட்டிருக்கிறது.

கீழே குறித்துள்ள ஆயத்தை காலையில் ஏழுதடவையும் மாலையில் ஏழு தடவையும் வழமையாக ஓதிவரும்படியாக ஹதீஸில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ஆயத்தாவது :

حَسْبِيَ اللّٰهُ لَآ اِلٰهَ اِلَّا هُوَ عَلَيْهِ تَوَكَّلْتُ وَهُوَ رَبُّ
الْعَرْشِ الْعَظِيْمِ. 7 தடவை.

இந்தஆயத்திற்கு 'ஹஸ்பலா' حَسْبَلَةٌ வின் ஆயத்து என்று சொல்லப்படும்.

அவ்ராதுகளில் இதை விட ஏற்றமானதும் பயன்தரக்கூடியதும் வேறொன்றும் இல்லை. சொல்லால் உள்ள அமலோ, செயலாலுள்ள அமலோ எதுவானாலும் அது ஒப்புக்கொள்ளப்படுவதற்கு கலப்பற்ற எண்ணம் اِخْلَاصْ ஷர்த்து என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இந்த ஹஸ்பாலாவின் ஆயத்தை கலப்பற்ற எண்ணமில்லாமல் ஒருவன் ஓதினாலும் அது ஒப்புக்கொள்ளப்படுமென்றும் அது போலவே ஸலவாத்துக்கும் اِخْلَاصْ ஷர்த்தில்லை என்றும், ஸலவாத்தை

إِخْلَاص இல்லாமல் ஓதினாலும் கபூல் ஆகும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த இரண்டையும் வழமையாக ஓதிவந்தால் உலக விஷயங்கள், தீனுடைய காரியங்கள், மறுமையின் காரியங்கள் ஆகிய எல்லா விஷயங்களிலும் அல்லாஹு தஆலா உதவியாக இருப்பான் என்று ஹதீஸ் ஷரீஃபில் கூறப்பட்டுள்ளது.

أَعُوذُ بِكَلِمَاتِ اللّٰهِ التَّامَّاتِ كُلِّهَا مِنْ شَرِّ مَا خَلَقَ

என்ற கலிமாவை தினசரி மூன்று தடவை ஓதி வந்தால் எல்லா வகையான தீவினைகளையும், நோவினைகளையும் விட்டும் அல்லாஹு தஆலா பாதுகாத்துக் கொள்வான்.

بِسْمِ اللّٰهِ الَّذِي لَا يَضُرُّ مَعَ اسْمِهِ شَيْءٌ فِي الْأَرْضِ
وَلَا فِي السَّمَاءِ وَهُوَ السَّمِيعُ الْعَلِيمُ.

இதையும் தினசரி மூன்று தடவை ஓதி வந்தால் முந்திய கலிமாவைப் போல் பயனளிக்கும். இதற்கு بَسْمَلَة பஸ்மலாவின் கலிமாவென்று சொல்லப்படும்.

بِسْمِ اللّٰهِ رَبِّيَ اللّٰهُ مَا شَاءَ اللّٰهُ لَا قُوَّةَ إِلَّا بِاللّٰهِ.
مَا شَاءَ اللّٰهُ كُلُّ نِعْمَةٍ مِنَ اللّٰهِ. مَا شَاءَ اللّٰهُ الْخَيْرُ
كُلُّهُ بِيَدِ اللّٰهِ. مَا شَاءَ اللّٰهُ لَا يَصْرِفُ السُّوءَ إِلَّا اللّٰهُ

இந்தக் கலிமாவை மூன்று தடவை ஓதி வரவும். இதற்கும் பஸ்மலா بَسْمَلَة வின் கலிமாவென்று சொல்லப்படும். இந்த இரண்டு பஸ்மலாவின் கலிமாக்களையும் ஓதி வருவதால், நெருப்பினாலும், தண்ணீரினாலும், காற்றினாலும், மற்றுமுள்ள படைப்புகளினாலும் ஏற்படக் கூடிய கேடுகளை விட்டும் தன்னையும் தன் கூட்டம் குடும்பத்தாரையும், தனது பொருளையும் அல்லாஹு தஆலா காப்பாற்றுவான்.

بِسْمِ اللّٰهِ رَبِّيَ اللّٰهُ. حَسْبِيَ اللّٰهُ تَوَكَّلْتُ عَلَى اللّٰهِ
اِعْتَصَمْتُ بِاللّٰهِ. وَفَوَّضْتُ أَمْرِي إِلَى اللّٰهِ مَا شَاءَ
اللّٰهُ لَا قُوَّةَ إِلَّا بِاللّٰهِ.

என்று மூன்று தடவையும், قُلْ هُوَ اللّٰهُ أَحَدٌ மூன்று தடவையும், قُلْ أَعُوذُ بِرَبِّ الْفَلَقِ மூன்று தடவையும், قُلْ أَعُوذُ بِرَبِّ النَّاسِ மூன்று தடவையும் ஓதி வரவும்.

اَللّٰهُمَّ اِنِّيْٓ اَصْبَحْتُ اُشْهِدُكَ وَاُشْهِدُ حَمَلَةَ
عَرْشِكَ وَمَلٰٓئِكَتِكَ وَجَمِيْعَ خَلْقِكَ اِنَّكَ اَنْتَ.
اَللّٰهُ. لَآاِلٰهَ اِلَّآ اَنْتَ. وَحْدَكَ لَا شَرِيْكَ لَكَ. وَاَنَّ
مُحَمَّدًا عَبْدُكَ وَرَسُوْلُكَ.

என்ற கலிமாவை காலையில் மூன்று முறையும், மஃரிபில் மூன்று முறையும் ஓதி வருவதில் மஃரிபில் ஓதும் பொழுது اَللّٰهُمَّ اِنِّيْٓ اَصْبَحْتُ என்று சொல்வதற்கு பதிலாக اَللّٰهُمَّ اِنِّيْٓ اَمْسَيْتُ என்று சொல்லி ஓதவும்.

سَيِّدُ الْاِسْتِغْفَارِ **செய்யிதுல் இஸ்திகுஃபார்** என்பது கீழே குறிக்கப் படுகிறது. அதாவது:-

اَللّٰهُمَّ اَنْتَ رَبِّيْ. لَآ اِلٰهَ اِلَّآ اَنْتَ. خَلَقْتَنِيْ اَنَا عَبْدُكَ
وَاَنَا عَلٰى عَهْدِكَ وَوَعْدِكَ مَا اسْتَطَعْتُ. وَاَعُوْذُ
بِكَ مِنْ شَرِّ مَا صَنَعْتُ. وَاَبُوْٓءُ لَكَ بِنِعْمَتِكَ عَلَيَّ
وَاَبُوْٓءُ بِذَنْبِيْ فَاغْفِرْلِيْ ذَنْبِيْ. فَاِنَّهُ لَا يَغْفِرُ
الذُّنُوْبَ اِلَّآ اَنْتَ.

மேற்கண்ட செய்யிதுல் இஸ்திகுஃபாரை தினமும் ஒரு தடவை ஓதி வர வும்.

اَبُوْ دَرْدَآء **அபூதர்தா (ரலி) அவர்களுடைய கீழ்காணும் துஆவை ஓதி வரவும்:**

اَللّٰهُمَّ اَنْتَ رَبِّيْ لَآ اِلٰهَ اِلَّآ اَنْتَ. عَلَيْكَ تَوَكَّلْتُ وَاَنْتَ
رَبُّ الْعَرْشِ الْعَظِيْمِ. مَا شَآءَ اللّٰهُ كَانَ وَمَا لَمْ
يَشَأْ لَمْ يَكُنْ. لَاحَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللّٰهِ الْعَلِيِّ الْعَظِيْمِ.
اَعْلَمُ اَنَّ اللّٰهَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ. وَاَنَّ اللّٰهَ قَدْ

اَحَاطَ بِكُلِّ شَيْئٍ عِلْمًا. اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُ بِكَ مِنْ
شَرِّ نَفْسِيْ. وَمِنْ شَرِّ كُلِّ دَآبَّةٍ اَنْتَ اٰخِذٌ بِنَاصِيَتِهَا
اِنَّ رَبِّيْ عَلٰى صِرَاطٍ مُّسْتَقِيْمٍ.

مُحَمَّدُ بْنُ وَاسِعْ முஹம்மது ப்னுவாஸிஃ (ரஹ்) அவர்களுடைய கீழ்காணும் துஆவை ஷைத்தானுடைய வஸ்வாஸ், குபாடம் ஆகியவற்றிலிருந்து பாதுகாப்புப் பெறுவதற்ககாக ஓதி வரவும் அதாவது:-

اَللّٰهُمَّ اِنَّكَ سَلَّطْتَ عَلَيْنَا شَيْطَانًا عَدُوًّا لَّنَا.
بَصِيْرًا بِعُيُوْبِنَا مُطَّلِعًا عَلٰى عَوْرَاتِنَا يَرَانَا هُوَ.
وَقَبِيْلُهُ مِنْ حَيْثُ لَا نَرَاهُمْ. اَللّٰهُمَّ فَاَيِسْهُ مِنَّا
كَمَا اٰيَسْتَهُ مِنْ رَحْمَتِكَ. وَقَنِّطْهُ مِنَّا كَمَا قَنَّطْتَهُ
مِنْ عَفْوِكَ. وَبَاعِدْ بَيْنَنَا وَبَيْنَهُ كَمَا بَاعَدْتَّهُ
مِنْ جَنَّتِكَ بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ.

மேற்கண்ட துஆக்கள், கலிமாக்களில் மிகுஜ்மும் இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களுடைய இஹ்யா உலூமுத்தீன் என்னும் கிரந்தத்திலிருந்து எடுத்து எழுதப்பட்டவையாகும்.

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ. لَا حَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا
بِاللّٰهِ الْعَلِيِّ الْعَظِيْمِ.

என்று மூன்று தடவை ஓதி வந்தால் தொண்ணூற்று ஒன்பது வகையான நோய்கள் நீங்குமென்றும், அதில் தாழ்ந்தது துக்கமாக இருக்குமென்றும் முஜர்ரபாத்துத் தைரபி مُجَرَّبَاتُ الدَّيْرَبِيْ என்ற நூலில் கூறப்பட்டிருக்கிறது.

خَضِرُ கிள்ரு (அலை) அவர்களும், اِلْيَاسْ இல்யாஸ் (அலை) அவர்களும் ஓதி வந்த விர்தாகிறது:

بِسْمِ اللّٰهِ مَا شَآءَ اللّٰهُ لَا يَسُوْقُ الْخَيْرَ اِلَّا اللّٰهُ

بِسْمِ اللّٰهِ مَاشَآءَ اللّٰهُ لَا يَصْرِفُ السُّوْٓءَ اِلَّا اللّٰهُ
بِسْمِ اللّٰهِ مَاشَآءَ اللّٰهُ وَمَا بِكُمْ مِّنْ نِّعْمَةٍ فَمِنَ اللّٰهِ
بِسْمِ اللّٰهِ مَاشَآءَ اللّٰهُ لَا حَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللّٰهِ
الْعَلِيِّ الْعَظِيْمِ. سُبْحَانَ اللّٰهِ وَبِحَمْدِهٖ.
سُبْحَانَ اللّٰهِ الْعَظِيْمِ. وَلَا حَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللّٰهِ
الْعَلِيِّ الْعَظِيْمِ. لَا اِلٰهَ اِلَّا اللّٰهُ وَحْدَهٗ لَا شَرِيْكَ
لَهٗ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ يُحْيِيْ وَيُمِيْتُ بِيَدِهِ
الْخَيْرُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ.

என்ற அவ்ராதை 100 தடவை ஓதுவது மிகவும் அதிகமான ஃதவாபு கிடைக்கக் கூடியதாக இருக்கும். மேலும்

لَا اِلٰهَ اِلَّا اللّٰهُ سُبْحَانَ اللّٰهِ وَبِحَمْدِهٖ.

என்ற விர்தையும் 100 தடவை ஓதி வந்தால் ஒருவனுடைய பாவங்கள் அனைத்தும் (அவை, கடலின் நுரையைப் போல் மிகுதமாக இருந்தாலும்) மன்னிக்கப்படுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஹதீஸில் கூறப்பட்டிருக்கிறது: இரண்டு கலிமாக்கள் உண்டும். அவை நாவினால் உச்சரிப்பதற்கு இலகுவானதாகவும், இறைவனுக்கு உகந்ததாகவும், தராஸில் நன்மையின் தட்டை முறுகச் செய்யக் கூடியதாகவும், கலன பதியின் பக்கம் இழுத்துச் செல்லக் கூடியதாகவும், நரகத்தை விட்டும் தூரமாக்கக் கூடியதாகவும் இருக்கின்றன. அவையாவன:

سُبْحَانَ اللّٰهِ وَبِحَمْدِهٖ سُبْحَانَ اللّٰهِ الْعَظِيْمِ.

என்ற இரண்டு கலிமாக்களுமாகும்.

كَلِمَةٌ طَيِّبَةٌ கலிமா தய்யிபாவின் மேன்மையும், மகத்துவமும் எல்லோரும் அறிந்ததே. அந்தக்கலிமாவுடன் மேலும் சில வர்ணிப்புகளைச் சேர்த்து ஓதும்படி ஆயிஷா(ரலி) அவர்களுக்கு நாயகம் (ஸல்) அவர்கள் சொல்லிக் கொடுத்ததாக ஹதீஸில் கூறப்பட்டிருக்கிறது. அப்படிப் படித்துக் கொடுத்த கலிமாவுக்கு جَوَامِعُ الْكَلِمِ "ஜவாமிவுல் கலிம்" எல்லாக் கலிமாக்களின்

தத்துவங்களையும் ஒன்று சேர்த்த ஒரு நிரப்பமான கலிமாவென்று இதற்குச் சொல்லப்படும். அதாவது:

اَللّٰهُمَّ اِنِّيْٓ اَسْئَلُكَ مِنَ الْخَيْرِ كُلِّهٖ عَاجِلِهٖ وَاٰجِلِهٖ
مَا عَلِمْتُ مِنْهُ وَمَا لَآ اَعْلَمُ. وَاَعُوْذُ بِكَ مِنَ
الشَّرِّ كُلِّهٖ عَاجِلِهٖ وَاٰجِلِهٖ مَا عَلِمْتُ مِنْهُ وَمَا
لَآ اَعْلَمُ. وَاَسْئَلُكَ الْجَنَّةَ وَمَا قَرَّبَ اِلَيْهَا مِنْ
قَوْلٍ وَّعَمَلٍ. وَاَعُوْذُ بِكَ مِنَ النَّارِ وَمَا قَرَّبَ
اِلَيْهَا مِنْ قَوْلٍ وَّعَمَلٍ. وَاَسْئَلُكَ مِنَ الْخَيْرِ مَا
سَئَلَكَ عَبْدُكَ وَرَسُوْلُكَ مُحَمَّدٌ صَلَّى اللّٰهُ عَلَيْهِ
وَسَلَّمَ. وَاَسْتَعِيْذُكَ مِمَّا اسْتَعَاذَكَ مِنْهُ عَبْدُكَ
وَرَسُوْلُكَ مُحَمَّدٌ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ. اَللّٰهُمَّ
وَمَا قَضَيْتَ لِيْ مِنْ اَمْرٍ فَاجْعَلْ عَاقِبَتَهٗ رُشْدًا
بِرَحْمَتِكَ يَآ اَرْحَمَ الرَّاحِمِيْنَ. اَعُوْذُ بِاللّٰهِ السَّمِيْعِ
الْعَلِيْمِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيْمِ.

என்று ஓதி பின்பு குர்ஆனின் 59வது ஸூராவாகிய "ஸூரத்துல் ஹஷ்ர்"லின் இருப
ஒன்றாவது ஆயத்திலிருந்து கடைசி வரை ஓதவும். அதாவது:-

لَوْ اَنْزَلْنَا هٰذَا الْقُرْاٰنَ عَلٰى جَبَلٍ لَّرَاَيْتَهٗ خَاشِعًا
مُّتَصَدِّعًا مِّنْ خَشْيَةِ اللّٰهِ ۗ وَتِلْكَ الْاَمْثَالُ
نَضْرِبُهَا لِلنَّاسِ لَعَلَّهُمْ يَتَفَكَّرُوْنَ ۝ هُوَ اللّٰهُ
الَّذِيْ لَآ اِلٰهَ اِلَّا هُوَ ۚ عَالِمُ الْغَيْبِ وَالشَّهَادَةِ ۚ هُوَ
الرَّحْمٰنُ الرَّحِيْمُ ۝ هُوَ اللّٰهُ الَّذِيْ لَآ اِلٰهَ اِلَّا هُوَ ۚ

اَلْمَلِكُ الْقُدُّوْسُ السَّلَامُ الْمُؤْمِنُ الْمُهَيْمِنُ
الْعَزِيْزُ الْجَبَّارُ الْمُتَكَبِّرُ سُبْحَانَ اللّٰهِ عَمَّا
يُشْرِكُوْنَ ۝ هُوَ اللّٰهُ الْخَالِقُ الْبَارِئُ الْمُصَوِّرُ لَهُ
الْاَسْمَآءُ الْحُسْنٰى يُسَبِّحُ لَهُ مَا فِي السَّمٰوٰتِ وَ
الْاَرْضِ وَهُوَ الْعَزِيْزُ الْحَكِيْمُ ۝

மேற்கண்ட கலிமாவையும், ஆயத்தையும் காலையில் ஒரு தடவையும் மாலையில் ஒரு தடவையும் வழமையாக ஒருவன் ஓதி வந்தால் அல்லாஹு தஆலா அவன் மீது எழுபதினாயிரம் மலக்குகளைக் கொண்டு ஸலவாத்துச் சொல்ல வைத்து அருள்பாலிப்பான் என்று கூறப்பட்டுள்ளது.

بِسْمِ اللّٰهِ عَلٰى نَفْسِيْ وَدِيْنِيْ وَاَهْلِيْ وَمَالِيْ.

என்ற கலிமாவை தினசரி காலையில் ஒரு தடவையும், மாலையில் ஒரு தடவையும் ஓதி வந்தால் அவனையும், அவனுடைய தீனையும், அவனுடைய குழந்தைகளையும், குடும்பத்தையும், அவனுடைய முதலையும், பொருளையும் அல்லாஹு தஆலா காப்பாற்றித் தருவான்.

ஈமான் ஸலாமத்துடன் மரணிப்பதற்கு என்ன அமல் செய்ய வேணுமென்று ஒரு பெரியார் ரஸூலுல்லாஹி (ஸல்) அவர்களிடம் கனவில் கேட்ட பொழுது கீழ்காணும் கலிமாவை தினமும் ஐங்காலத்தொழுகைக்குப் பின் - (துஆ ஓதி முடிந்தவுடன்) ஓதி வரச் சொன்னார்கள். அதாவது:

لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ الْمَوْجُوْدُ بِكُلِّ زَمَانٍ. لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ
الْمَعْبُوْدُ بِكُلِّ مَكَانٍ. لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ الْمَعْرُوْفُ
بِكُلِّ اِحْسَانٍ. لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ الْمَذْكُوْرُ بِكُلِّ لِسَانٍ.
لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ كُلَّ يَوْمٍ هُوَ فِيْ شَاْنٍ. لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ
اَلْاَمَانُ اَلْاَمَانُ اَلْاَمَانُ مِنْ زَوَالِ الْاِيْمَانِ وَمِنْ
شَرِّ الشَّيْطَانِ وَظُلْمِ السُّلْطَانِ بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ
الرَّاحِمِيْنَ.

# இந்நூலை அரபுத்தமிழில் தொகுத்தளித்த அல்லாமா மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்களின் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள்

அல்லாமா மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்கள் வ.உ.சிதம்பரனார் (பழைய திருநெல்வேலி) மாவட்டத்தில் உள்ள காயல்பட்டணத்தில் ஹிஜ்ரி 1232 முஹர்ரம் பிறை 18-ல் (கி.பி.1816) வெள்ளை அஹ்மது லெப்பை ஆலிம்—ஆமினா உம்மா தம்பதியருக்குப் பிறந்தார்கள். இவர்களுக்கு எட்டு சகோதரர்களும், நான்கு சகோதரிகளும் இருந்தனர். இவருக்கு பெற்றோர் இட்ட பெயர் செய்யிது முஹம்மது என்பதாகும்.

இவர் இரண்டு வயதுப் பாலகனாக இருக்கும் போதே இவருடைய பெற்றோர் இராமனாதபுரம் மாவட்டத்திலுள்ள கீழக்கரைக்கு குடும்பத்துடன் சென்று குடியேறினார்கள்.

இவருடைய தந்தை, தாய் இருவருமே திருக்குர்ஆனை மனனம் செய்த ஹாஃபிள்களாக இருந்தனர். அதோடு, தந்தையார் மார்க்க கல்வி கேள்விகளிற் சிறந்த ஞானம் பெற்றுத் திகழ்ந்திருந்தனர். வெள்ளை அஹ்மது லெப்பை ஆலிம், மாதிஹுர் ரஸூல் அவ்ஷ் ஷெய்கு சதக்கத்துல்லா அப்பா அவர்களின் பெண் வழித் தோன்றலாவார். அவர் தம் துணைவியார் ஆமினா அம்மையார், அம்மஹானின் ஆண் வழித் தோன்றலாவார்.

நம் ஆசிரியர் (மாப்பிள்ளை லெப்பை ஆலிம்) அவர்கள் தமது பத்தாவது வயதில் ஹாஃபிள் ஆனார்கள். தம்மைப் போலவே தம் உடன் பிறந்தோர் அனைவருமே ஹாஃபிள்களாக-விளங்கியதாக தாம் இயற்றிய ஓர் அரபிப் பாடலில் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

ஹிஜ்ரி 232-ல் எகிப்திலிருந்து அகதிகளாகக் கிளம்பி காயல் பட்டணத்தில் வந்திறங்கி அங்கேயே குடியேறிய குழுவினருக்குத் தலைமை தாங்கி வந்த முஹம்மது கில்ஜியின் வழித் தோன்றலாக இருப்பதால், இஸ்லாத்தின் முதல் கலீஃபாவாகிய செய்யிதுனா அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களின் வழித் தோன்றலாகவும் அவர் ஆகின்றார்.

காயல் பட்டணத்தில் பிறந்து, கீழக்கரை சென்று குடியேறி, பெரும் செல்வந்தர் வீட்டில் திருமணம் செய்து, கீழக்கரையிலேயே 'தைக்கா' வெனும் தவச்சாலை ஒன்றை அமைத்து, அதில் ஒரு மத்ரஸாவை (அரபி பாடசாலையை)யும் நிறுவி, நடத்தி வந்த மார்க்க மாமேதை அல்லாமா, ஹாஜி, ஹாஃபிள், "கீழக்கரை தைக்கா ஸாஹிபு" வென்று பெயர் விளங்கிய மஹான் செய்யிது அப்துல் காதிர் வலீ அவர்களின் மாணவராக நம் செய்யிது முஹம்மது அவர்கள் ஆனார்கள். குணங்குடி மஸ்தான் சாஹிபு, காயல்பட்டணம் புலவர் நாயகம் ஷெய்கு அப்துல் காதிர் நெய்னார் லெப்பை ஆலிம், 'ஸிம்துஸ் ஸிப்யான்' ஆசிரியர் அம்மாபட்டணம் அல்லாமா முஹம்மது யூசுஃப் லெப்பை, வேலூர் பாக்கியாத்துஸ் ஸாலிஹாத் மத்ரஸாவின் நிறுவனர் அப்துல் வஹ்ஹாப் ஹஜ்ரத் அவர்களின் தந்தையான ஆத்தூர் அல்லாமா அப்துல் காதிர் ஹஜ்ரத் ஆகியோர் போன்ற பெரியார்களுக்கு இவர்கள் சக மாணவராக இருந்தார்கள். பின்னர் கல்வத்து நாயகம், "கொழும்பு ஆலிம் சாஹிபு" வென்ற

# மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

செய்யிது முஹம்மது ஆலிம், "பல்லாக்கு வலியுல்லா" வென்ற ஹபீபு முஹம்மது சதக்கத்துல்லாஹ் போன்ற பல பெரியார்களுக்கு ஆசிரியராகத் திகழ்ந்திருந்தார்கள்.

கல்வி பயின்று கொண்டிருக்கும் பொழுதே இவருடைய நல்லொழுக்கமும், நற்பண்புகளும், மதி நுட்பமும் அவர்தம் ஆசிரியர் தைக்கா சாஹிபு அவர்களைப் பெரிதும் கவர்ந்தமையால், தமது நான்காவது பெண்ணான சாராவுக்கு அவரை மணாளராக எடுத்துக் கொள்ள வேண்டுமென்று அவர்களுக்கேற்பட்ட உள்ளக்கிடக்கையை தம் துணைவியாரான ஜைனபு நாச்சியாரிடம் எடுத்துரைத்தார்கள்.

தாமே ஒரு செல்வந்தர் வீட்டுப் பெண்ணாக இருப்பதுடன் தமது முதல் மூன்று பெண்களுக்கும் செல்வந்தர்கள் வீட்டில் சம்பந்தம் பண்ணியிருக்க, நான்காவது பெண்ணை மத்ரஸாவில் படிக்கும் ஓர் ஏழை மாணவனுக்கா கொடுப்பதென்று சொல்லி தம் கணவரின் நோக்கத்திற்கு இணங்கி நடக்க அவர் மனம் மறுத்துவிட்டது. கணவர் தம் மனைவியை கட்டாயப்படுத்த விரும்பவில்லை. எனினும் தமது நான்காவது பெண்ணுக்கு ஆண்டவனருளால், தாம் விரும்பிய அந்தச் சம்பந்தம் தான் நடக்கும் என்ற தமது உள்ளுணர்வைத் தமது இல்லாளிடம் சொல்லி வைத்தார்கள். ஆனால் மனைவியோ, பெரிய தனவந்தர்கள் இருவர் வீட்டில் ஒன்றன் பின் ஒன்றாக முடிவு செய்தும் இறைவனின் நாட்டம் வேறுவிதமாக இருந்ததினால்தான், அந்த முடிவு நிறைவேறவில்லையென்பதை உணர்ந்து கொண்ட ஜெய்னபு தமது கணவரின் விருப்பம் போலவே செய்யிது முஹம்மது (மாப்பிள்ளை லெப்பை ஆலிம்) என்ற மாணவருக்கே தமது நான்காவது மகள் சாராவைக் கொடுத்து விடலாமென்ற தமது உளப்பூர்வமான விருப்பத்தை தமது கணவரிடம் கூறினார். எனவே, செய்யிது முஹம்மது-ஸாரா இவர்களின் திருமணம் ஹிஜ்ரி *1253* ரபீஉல் ஆகிர் பிறை 12-ல் இனிதே நடந்தேறியது. அன்று முதல் நம் ஆசிரியர் செய்யிது முஹம்மது அவர்கள் "மாப்பிள்ளை லெப்பை ஆலிம்" என்ற பெயரில் அழைக்கப்படலாயினர்.

தமது மாமனார் தைக்கா சாஹிபு அவர்கள் இறப்பெய்தியதன் பின் தைக்கா மத்ரஸாவைத் தாமே நிர்வகித்து நடத்தி வரலாயினர். பின் அந்த மத்ரஸா 'அல் மத்ரஸத்துல் அரூஸிய்யா' என்ற பெயரில் அழைக்கப்படலாயிற்று. (அரபியில் அரூஸ் என்றால் மாப்பிள்ளை என்பது பொருளாகும்.) அன்று முதல் இன்று வரை அந்த மத்ரஸாவில் தமிழ் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும், கேரளத்திலிருந்தும், ஸ்ரீ லங்காவிலிருந்தும் மாணவர்கள் வந்து மார்க்கக் கல்வி பயின்று சென்ற வண்ணமிருக்கிறார்கள்.

கல்வத்து நாயகம் என்று நாடெங்கும் பெயர் விளங்கும் செய்யிது அப்துல் காதிர் எனும் பெரியார் மாப்பிள்ளை லெப்பை ஆலிமின் இரு ஆண் மக்களில் மூத்தவராவர். அல்லாமா, ஹாஜி ஹாஃபிஸ் ஷாஹுல் ஹமீது ஆலிம் இளைய மகனாவர். தமது மருமகனும், பல்லாக்கு வலியுல்லாவெனப் பெயர் விளங்குபவருமான • அல்லாமா ஹபீபு முஹம்மது சதக்கத்துல்லாவை அழைத்துக் கொண்டு இவர்கள் ஹஜ்ஜுக்குச் சென்று வந்தார்கள்.

இவர்கள் பல மஹான்களின் மீது மவுலிதுகள் இயற்றியிருக்கிறார்கள். எனினும், நம் பெருமானார் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மீது இயற்றிய "மின்ஹத்துஸ் ஸரன்தீப் ஃபீ மவுலிதில் ஹபீப்" எனும் மவுலிதும், ஹஸன் ஹுஸைன் (ரலி) ஆகியவர்கள் மீது இயற்றிய "மவாஹிபுஸ் ஸைன் ஃபீ மனாகிபில் ஹஸனைன்" எனும் மவுலிதும் மிகவும் பாராட்டுக்குரியவையாயிருக்கின்றன. அவற்றிலுள்ள (ஹிகாயாத்

எனும்) வசனங்கள் இலக்கியச் செறிவுடையவையாகவும், அவற்றிலுள்ள பைத்துகள் செவிக்கினியவையாவும், ஆழிய கருத்துக்கள் நிறைந்தவையாகவும் இருக்கின்றன. ஹஸன், ஹுஸைன் (ரலி) அவர்களின் மீது இனிய மவுலிது ஒன்றை இயற்றியிருப்பதால் இன்னாருக்கு "மாதிஹுஸ் ஸிப்தைன்" (பேரப் பிள்ளைகளைப் புகழ்ந்து பாடியவர்) என்ற சிறப்புப் பெயர் மக்களால் சூட்டப்பட்டது. "மராஙிபுல் மவாஹிப் ஃபீ மனாக்கிபி உலில் மதாஹிப்" எனும் அரிய நூல் நான்கு இமாம்களின் வாழ்க்கை வரலாறுகளை விவரமாக எடுத்துக் கூறக்கூடியதாக இருக்கிறது. 'ஹத்யா மாலை' எனும் அரிய தமிழ் பாமாலை பல உருக்கமான உபதேசங்களை உணர்ச்சிப் பூர்வமாக எடுத்துக் கூறுவதாக உள்ளது. " ஃபத்ஹுஸ் ஸலாம்" , " ஃபத்ஹுல் மத்தீன் , " ஃபத்ஹுத் தய்யான்" போன்ற பல ஃபிக்ஹு (மார்க்க சட்ட) நூல்களையும், "நஙீ மத்துஸ் ஸாலிகீன்" என்னும் மெஞ்ஞான நூலையும், பல கவிதை நூல்களையும், கட்டுரை நூல்களையும் அரபியிலும், அரபுத் தமிழிலும் இயற்றியுள்ளார்கள்.

போர்ச்சுகீஸியரும், அதற்குப் பின் டச்சுக்காரரும், அதற்கும் பின் ஆங்கிலேயரும் தங்கள் தங்கள் ஆட்சி அதிகாரத்தைக் கொண்டு மக்களைக் கிருஸ்துவ மதத்திற்கு கட்டாயப்படுத்தி மாற்றிக் கொண்டிருந்தபொழுது நம் அல்லாமா அவர்கள் இலங்கையிலும், தமிழ் நாட்டிலும் ஊர், ஊராகவும் கிராமம், கிராமமாகவும் சென்று முஸ்லிம்களுக்கு தைரியமூட்டி மார்க்கப் பிரச்சாரம் செய்து வந்தார்கள். பல வழிகளிலும் மக்களுக்குத் தொண்டாற்றிய நம் அல்லாமா அவர்கள் ஹிஜ்ரி 1316 (கி.பி. 1898) ரஜப்பிறை 15ல் தமது 85 ஆவது வயதில் இறப்பெய்தினார்கள்.

"மாப்பிள்ளை ஆலிமெனும் மாமதியே நாயகமே!
காப்பெனவே பற்றிக் கரம் பிடித்தேன்-கோப்பெருமை
கொண்டருளும் கோவே! என் கோதில்லா நெஞ்சத்து
நின்றருள்வீர் என்றும் நிலைத்து"

## அல்லாமா அவர்களின் வாழ்நாளில் நடந்த ருசிகரமான நிகழ்ச்சிகளிற் சில.

அல்லாமா அவர்கள் தாம் பொது வாழ்வில் ஈடுபட்ட துவக்க காலத்தில் ஊர்ஊராகச் சென்று பள்ளிவாசல்களில் மார்க்க உபன்யாசம் செய்வதும், தாம் எழுதிய நூற்களை மக்களுக்கு விற்று, அதில் கிடைக்கும் பொருளைக் கொண்டு தமது வாழ்க்கை வசதிகளை உண்டு பண்ணிக் கொள்வதுமாக இருந்தார்கள். ஸ்ரீ லங்காவில் சுற்றுப் பயணத்தில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் பொழுது களுத்துறையென்ற ஊருக்குச் சென்றார்கள். அங்கு அல்லாமா அவர்களுக்கு 'பயான்' பண்ணுவதற்கு அனுமதி கொடுக்கவுமில்லை, அவருக்கு எவ்வித உபசரிப்பு செய்யவுமில்லை. அல்லாமா அவர்கள் மனம் நொந்தவர்களாக:

**"கான, கதீமன், களித்துரை**
**அல்ஆன, ஸார, பழித்துரை"**

# மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

'பண்டு தொட்டு இந்த ஊர் களித்துறையாக (மகிழ்ச்சியின் இருப்பிடமாக) )ருந்தது. ஆனால், இன்றோ அது பழித்துறையாக (பழிப்பின் இருப்பிடமாக) யல்லவா ஆகிவிட்டது. என்று பொருள்படும் மேற்கண்ட அரபிச் செய்யுள் ஒன்றைப் னைந்து அந்த ஊர் பள்ளிவாசலின் சுவர்மீது எழுதி வைத்து விட்டு அடுத்த ஊருக்குச் சென்று விட்டார்கள்.

அதே நாளில் அந்த ஊரில் யாரோ ஒருவர் ஒரு சிறுமியைக் கொலை செய்து, அவள் அணிந்திருந்த நகைகளைக் களவாடி விட்டு அவளின் உடலை ஆற்றங்கரையில் போட்டு விட்டுச்சென்று விட்டனர். இந்தக் கொலையைப் பற்றித் துப்பறியத் துவங்கிய பொழுது, அந்தப் பள்ளியில் பணியாற்றிக்கொண்டிருந்த முஅஃத்ஃதின், அல்லாமா அவர்கள் அந்தப் பள்ளியில் தங்கியிருந்ததைப் பற்றியும், அவர்கள் அந்தப் பள்ளியை விட்டுக் கிளம்புமுன் சுவரின் மீது எழுதி வைத்ததைப் பற்றியும் சொல்லி அந்தக் கொலையைப் பற்றி அல்லாமா அவர்கள் மீது மக்களை ஐயங்கொள்ளச் செய்தார்.

அல்லாமா அவர்களைத் தேடிப்பிடித்து பள்ளி வாசலில் கொண்டு வந்து தங்கள் முன் நிறுத்தி குறுக்கு விசாரணை செய்யலாயினர் அவ்வூர் மக்கள்.

தாம் பள்ளிவாசலில் தங்கியதும், சுவரில் எழுதியதும் உண்மையேயாயினும், மக்கும், அந்தக் கொலைக்கும் எவ்வித தொடர்பும் கிடையாதென்றும், தாம் குற்றமற்றவரென்றும் அல்லாமா அவர்கள் எடுத்துச் சொன்னார்கள். அப்பொழுது அங்கிருந்தவர்களிற் சிலர், அல்லாமா அவர்களின் முகத்தோற்றத்தையும், பேச்சின் இனிமையையும் பார்த்து இந்தக் கொலைக்கும் இந்த மனிதருக்கும் எவ்வித தொடர்பும் இருக்காது என்று பேசிக்கொண்டிருக்கும் பொழுது, வேறுசிலர் அன்று காலை முஅஃத்ஃதின் ஆற்றங்கரையில் இருந்து பதற்றத்துடன் வந்ததைத் தாங்கள் பார்த்ததாகவும், அவர் மீதே தங்களுக்கு ஐயம் ஏற்படுவதாகவும் கூறி அவரை குறுக்கு விசாரணை செய்தனர். குறுக்கு விசாரணையில் உண்மையை மறைக்க முடியாமல், அவர் தம் குற்றத்தை ஒப்புக் கொண்டதுடன், அந்தச் சிறுமியின் நகைகளையும் மக்கள் முன் கொண்டு வந்து ஒப்படைத்தார். அப்பொழுது மக்கள் அல்லாமா அவர்களின் மாண்பினை உணர்ந்து தாம் எடுத்த அவசர முடிவுக்காக அன்னாரிடம் மன்னிப்புக்கோரி, அவர்களை கண்ணியப்படுத்தி உபசரித்து அனுப்பி வைத்தனர்.

அல்லாமா அவர்கள் மார்க்கப் பணிகளில் மும்முரமாக ஈடுபட்டிருந்த அதே வேளையில் தங்கள் குடும்பப் பராமரிப்புக்காக வாணிபத்திலும் ஈடுபட்டிருந்தார்கள். தங்கள் இருமக்களையும் கூட அதில் ஈடுபடுத்தினார்கள். கீழக்கரையில் 'தக்காக்கடை' என்ற பெயரில் பல்பொருள் அங்காடி ஒன்றை ஏற்படுத்தி இருந்ததுடன், மதுரையில் 'தைக்கா இரும்புக்கடை' என்ற பெயரில் இரும்பு வாணிபமும் செய்து வந்தார்கள்.

ஒரு சமயம் வியாபார நிமித்தம் தமது மூத்த புதல்வர் (கல்வத்து நாயகம் என்ற) சய்யிது அப்துல் காதிருடன் நாகப்பட்டணம் சென்று விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்த பொழுது புதுப்பட்டணம் என்ற கடலோர ஊரில் இரவுப் பொழுதைக் கழிப்பதற்காகத் தங்கினார்கள். அங்கே அல்லாமா அவர்கள் சிறு தூக்கத்தில் இருந்தபொழுது:

**"ஃப ஸாரத், பி, ஹுக்மில்லாஹி, ஸாரத்து, ஸவ்ஜத்தீ,**

**இலா, ஜன்னத்தில் ஃபிர்தௌஸி, ஜயத்த, ஜன்னத்தி"**

# மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

"இறைவனின் கட்டளைப்படி எனது மனைவி ஸாரா, ஃபிர்தௌஸ் எனும் சுவனபதியளவில் சென்று விட்டாள். அந்த சுவனத்தின் அழகே அழகு" என்ற பொருள் பொருந்திய மேற்கண்ட அரபிச் செய்யுள் அன்னாரின் வாயிலிருந்து வெளியானது. இதைச் செவிமடுத்துக் கொண்டிருந்த அன்னாரின் புதல்வர் ஓசையெழுப்பாமல் அழத்துவங்கி விட்டார்கள். புதல்வரின் கண்ணீர் தந்தையின் மேல் விழவே அன்னார் கண் விழித்துக் கொண்ட பொழுது, நடந்த விஷயத்தை தந்தைக்குத் தனயர் சொல்லிக் காண்பிக்கவே, இரவோடு இரவாக தந்தையும், தனயரும் கால் நடையாக நடந்து கீழக்கரை சென்றடைந்தனர். அப்பொழுது சாரா உம்மாவின் பூத உடல் மண்ணறையில் வைக்கப்பட்டுக் கொண்டிருந்தது.

அல்லாமா அவர்கள் ஒரு சமயம் கடுமையான நோய்வாய்பட்டிருந்தார்கள். அல்லாமா அவர்களின் கடைசி காலம் நெருங்கி விட்டதாக நினைத்த ஊர்மக்கள் அல்லாமா அவர்கள் இறப்பெய்தி விட்டால் அவர்களை எங்கே நல்லடக்கம் செய்வது என்பதை அவர்களிடமே கேட்டு முடிவு செய்யலாமென்றெண்ணி பெரிய தம்பி மரைக்காயர் என்ற பெரியாரின் தலைமையில் சில பிரமுகர்களை அனுப்பி வைத்தனர். அப்படிச் சென்ற பிரமுகர்கள் அல்லாமா அவர்களின் முகத்துக்கு முன் அமர்ந்து,லந்த விஷயத்தைச் சொல்லலானார்கள். உடனே அல்லாமா அவர்கள் தம் முகத்தை மறு பக்கம் திருப்பிக் கொண்டார்கள். வந்தவர்களும் மறுபக்கம் சென்றமர்ந்தனர். ஆனால் அல்லாமா அவர்கள் வந்தவர்களை விட்டும் மீண்டும் மறுபக்கம் திரும்பி விட்டார்கள். இவ்வாறாக மூன்று முறை தங்கள் முகத்தைத் திருப்பவே, இதற்கு மறுமொழி சொல்ல அல்லாமா அவர்கள் விரும்பவில்லையென்பதை உணர்ந்து கொண்ட ஊர் பிரமுகர்கள் வெளியேறி விட்டார்கள். சில நாட்களுக்குள் அல்லாமா அவர்கள் உடல் நலம் தேறி நடந்து திரிய ஆரம்பித்த பின் அதே பெரிய தம்பி மரைக்காயர் உடல் நலிவுற்று இறப்பும் எய்தி விட்டார். அன்னாரின் ஜனாஸாத் தொழுகையை அல்லாமா அவர்களே முன்நின்று நடத்தினார்கள். ஆண்டவனின் நாட்டத்தை யாரே அறிவர்!

# காணிக்கை

"நம்மையாளுடையான் வேத நபி திரு வசனம் - தீனோர்
சம்மதித்திடப் பாரெல்லாம் தழைக்கவே விளக்கம் செய்தோர்
இம்மையும் மறுமையும் பேறிலங்கிய",

ஷரீஅத்தைப் பேணிக்காத்த, இஸ்லாமிய மார்க்க மாமேதை
மாதிஹுர் ரஸூல்
**அஷ்ஷெய்கு சதக்கத்துல்லாஹ் அப்பா** அவர்களின்
நினைவாகவும்
அன்னாரின் நான்கு சகோதரர்களாகிய காயல் பட்டணம் **அஷ்ஷெய்கு ஷம்ஸுத்தீன்**, மஞ்சக்கொல்லை **அஷ்ஷெய்கு அஹ்மது**, காயல் பட்டணம் **அஷ்ஷெய்கு ஸாம் ஷிஹாபுத்தீன்**, நெல்லை ஏர்வாடி **அஷ்ஷெய்கு சலாஹுத்தீன்** ஆகியோரின் நினைவாகவும்.

## பொருளடக்கம்

பக்கம் எண்

பொருளடக்கம்

பக்கம் எண்

பொருளடக்கம்

பக்கம் எண்

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

பொருளடக்கம்

பக்கம் எண்

பொருளடக்கம்

பக்கம் எண்

பொருளடக்கம்

பக்கம் எண்

பொருளடக்கம்

பக்கம் எண்

பொருளடக்கம்

பக்கம் எண்

பொருளடக்கம்

பக்கம் எண்

பொருளடக்கம்

பக்கம் எண்

## மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

### பொருளடக்கம்

பக்கம் எண்

பொருளடக்கம்

பக்கம் எண்

பொருளடக்கம்

பக்கம் எண்

பொருளடக்கம்

# மார்க்க சட்டக் கருவூலம் 'மஙானீ'

பொருளடக்கம்

பக்கம் எண்

பொருளடக்கம்

பக்கம் எண்

பொருளடக்கம்

பக்கம் எண்